உ

ஸ்ரீ

கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

இரண்டாம் பகுதி

(1211—2376 செய்யுட்கள்)



KMM0325

மஹாமஹோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

அடையாறு சென்னை 20

உ

241

ஸ்ரீமத்

கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

## இரண்டாம் பகுதி

(1211—2376 செய்யுட்கள்)

SAW. GANESAN,
"KARPAKA NILAYAM",
KARAIKUDI-1. S. INDIA.

✲

சுபகிருது௵ மார்கழிமீ

✲

மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

அடையாறு] 1962 [சென்னை-20

SAW. GANESAN,
"KARPAKA NILAYAM",
KARAIKUDI-1. S. INDIA.



# முகவுரை

இங்கிலேயத்தினின்று வெளிவரும் கம்பராமாயணப் பதிப்புக் களுள் இவ்வெளியீடு யுத்தகாண்டத்தின் இரண்டாம் பகுதியாகும். இக்காண்டத்தை நான்கு பகுதிகளாக வெளியிடவும், நான்காவது பகுதியில் பதிப்புரை, நூன்முகம், அரும்பதங்கள் முதலியவற்றின் அகராதி ஆகியவற்றைப் பதிப்பிக்கவும் கருதியுள்ளோம். ஒவ் வொரு பகுதியிலும் அதனிலுள்ள பாடல்களுக்கு முதற்குறிப்பு அகராதி மட்டும் கொடுக்கப்பெறும்.

இக்காண்டத்திற்கும் அன்பர்கள் வழக்கம்போல் ஆதரவு காட்டி ஊக்கமளிக்க வேண்டுகிறோம்.

31—12—1962

# உள்ளுறை

SAW. GANESAN,
"KARPAKA NILAYAM",
KARAIKUDI-1. S. INDIA.

உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்

# சு. யுத்தகாண்டம்

## இரண்டாம் பகுதி

---

## 15. கும்பகருணன் வதைப்படலம்

இஃது, இராவணன் தம்பி கும்பகன்னனுடைய வதையைக் கூறும் படலம் என்று விரியும். சில பிரதிகளில் கும்பகர்ணப் படலம் என்றே கூறப்படுகிறது.

### இராவணன் தன் நகர்நோக்கி மீளுதல்

1211. வாரணம் பொருத மார்பும் வரையினை யெடுத்த தோளும்
ஆரண முனிவர்க் கேற்ப வருமறை பயின்ற நாவும்
தாரணி மவுலி பத்துஞ் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமுங் களத்தே விட்டு வெறுங்கையே மீண்டு போனான்.

வாரணம் பொருத மார்பும் - திசை யானைகளுடன் (நேர்நின்று) போர் புரிந்த மார்பும், வரையினை எடுத்த தோளும் - கயிலாய மலை

யினை அகழ்ந்து எடுத்த புயமும், ஆரண முனிவர்க்கு ஏற்ப - வேதங்களில் வல்ல முனிவர்களும் உவந்து ஏற்றுக்கொள்ளுமாறு, அருமறை பயின்ற நாவும் - அருமையான சாம கானம் பயின்ற நாவும், தாரணி மவுலி பத்தும்-மாலை புனைந்து நின்ற பத்து மகுடங் களும், சங்கரன் கொடுத்த வாளும் - சிவபெருமான் அளித்த சந்திர காசம் என்ற வாளும், வீரமும் - தன்னுடைய வீரப்பான்மையும் (என்ற அனைத்தையும்), களத்தேவிட்டு - போர்க்களத்திலேயே போட்டுவிட்டு, வெறுங்கையே மீண்டு போனான் - வெறுங் கையனாக ஊருக்குத் திரும்பிச் சென்றான்.

வாரணம் பொருத மார்பு : (ஆரணிய. *258, 323, 328; 557, 643, 646, 752, 848, 875* ; (சுந்தர. *666*) ; வரையினை எடுத்த தோள் (ஆரணிய. *258, 319, 327, 596, 742, 848, 889, 909*) ; மற்றும் தேவாரத்து ஆளுடைய பிள்ளையார், ஆளுடை அரசு, நம்பி இவர்களின் பாசுரங்களிலும் காண்க ; (யுத்த. மாயாசீதை. *8*) ; நாரத முனிவற் கேற்ப நயம்பட உரைத்த நாவும் என்ற பாடத்திற்கு யாழ் இசை வல்லவனாகிய நாரதனும் உவக்குமாறு சாமகானம் செய்த நாவும். என்க ; (சுந்தர. *273*). சங்கரன் கொடுத்த வாளும் ; (ஆரணிய. *322, 613, 1013*) ; (சுந்தர. *991*) ; (யுத்த. மாயாசனக. *51* ; இராவணன் வதை. *159*).

இனி முதற்போரில் அநுமன் குத்திய போழ்தில் அவன் மார்பின்கண் ஒடிந்து நின்ற திக்கு வேழங்களின் தந்தங்கள் அவன் முதுகின் வழியே உதிர்ந்ததனாலும், சத்திவேல்பட்டு மூர்ச்சித்துக் கிடந்த இலக்குவனை எடுக்க முயன்றும் எடுக்கமாட்டாமையினாலும், புயவலிமையையும், முதநாள் போரில் தோற்று நிராயுதபாணியாய் நின்றபோது, 'போர் புரிவதற்கு நாளை வா' என்று இராமபிரான் கூறுங்கால் மறுமொழி கூறமாட்டாதிருந்தமையின் நாவன்மை யையும் இழந்தான் என்று கூறப்பட்டது. இராவணனுடைய மகுடத்தை இராமபிரான் வீழ்த்தினமையின் மவுலியையும் எனப் பட்டது. மற்றும் இராவணன் விடுத்த அம்புகள் அனைத்தும் துண்டுபட்டனவாகத் தனது வாளும் அக்கதியினையே அடையுமோ என்றஞ்சி, அதனைப் பயன்படுத்தாமையின் வாளையும் போட்ட தாகக் குறிக்கப்பட்டதென்க. இனி, கட்புலனாகிய உறுப்புகளோடும் படைக் கருவிகளோடும், அருவமான வீரப்பான்மையையும் களத் திற்போட்டான் என்று அரக்கனது பரிபவத்தை விளக்கிய நயம் போற்றற்பாலது. வாளும் வீரமும் விட்டு என்றது கொண்டு,

மனத்திண்மையும், படைக் கருவிகளும் பயன்படாதொழிந்தன என்க. இஃது ஆசிரியருடைய விசேடமான கற்பனைகளில் ஒன்றென்பர் அறிஞர். தோற்றான் தன் வாளை வென்றானிடம் கொடுத்தல் ஐரோப்பிய வழக்கு.

பி - ம். 1. வலியகுன்றெடுத்த.
2. நாரத முனிவர்க் கேற்ப நயம்பட வுரைத்த; நனிமறை சிறந்த, ஆரணம் சிறந்த.
4. கனத்தேபோக்கி, போட்டு; வெறுங்கையாய், வெறுங்கையோடு; இலங்கை புக்கான். 1

இதன் பின் 'நாளொத்த' என்ற பாடல் சில பிரதிகளில் உள்ளது.

1212. கிடந்தபோர் வலியார் மாட்டே கெடாதவா னவரை [யெல்லாம்
கடந்துபோ யுலக மூன்றுங் காக்கின்ற காவ லாளன்
தொடர்ந்துபோம் பழியி னோடுந் தூங்கிய கரங்க ளோடும்
நடந்துபோய் நகரம் புக்கான் அருக்கனும் நாகம் [சேர்ந்தான்.

கிடந்த - பொருந்திய, போர் வலியார் மாட்டே - போர் புரியும் ஆற்றல் சான்றவரிடத்து, கெடாத வானவரை எல்லாம் - தோல்வியுறாத தேவர்கள் அனைவரையும், கடந்து போய் - வென்று நின்று, உலகம் மூன்றும் காக்கின்ற காவலாளன் - மூன்று புவனங்களையும் புரக்கின்ற காத்தல் தொழிலில் வல்ல இராவணன், தொடர்ந்து போம் பழியினோடும் - தன்னைப் பின்பற்றி வருகின்ற பழியினுடனும், தூங்கிய கரங்களோடும் - தொங்கவிட்ட கைகளுடனும், நடந்து போய் - பாதசாரியாய்ச் சென்று, நகரம் புக்கான் - இலங்கை நகரில் நுழைந்தான்; அருக்கனும் நாகம் சேர்ந்தான் - சூரியனும் (அத்தமனகிரியை) அடைந்தான்.

உலக மூன்றும் காக்கின்ற காவலாளன். 'உலக மூன்றும் காவலோன் பின்னை' (ஆரணிய. 258); இருகரங்களுடன்கூடிய மனிதனை வெல்லமாட்டாது சோர்ந்த கரங்கள் என்பான். 'தூங்கிய கரங்கள் எனப்பட்டது. (ஒப்பு): 'இருதோளெனச் சோம்பியோங்

கும் கல்லும் சுமந்தேன்' (அயோத்தி. நகர்நீ. 139); நாகம் - அத்த மனகிரி.

பி - ம். 1. வலியார் மாடே.
2. கடந்து போர், கடந்த பேருலகம்.
3. தூக்கிய ; கைகளோடும்.
4. சார்ந்தான்.

2

முதல் நாளை யுத்தம் மகுடபங்கப் படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் உள்ளது.

1213. மாதிர மெவையும் நோக்கான் வளநகர் நோக்கான் வந்த
காதலர் தம்மை நோக்கான் கடற்பெருஞ் சேனை நோக்கான்
தாதவிழ் கூந்தன் மாதர் தனித்தனி நோக்கத் தானோர்
பூதல மென்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்.

(இங்ஙனம் நகர் நோக்கிச் செல்கின்ற இலங்கேசன்), மாதிரம் எவையும் நோக்கான் - திசைகள் எவற்றையும் பாராமலும், வளம் நகர் நோக்கான் - செழுமை வாய்ந்த தன் நகரினைப் பாராமலும், வந்த காதலர் தம்மை நோக்கான் - உடன்வந்த அன்புக்குப் பாத்திர மான புதல்வர்களைப் பார்க்காமலும், கடல்பெரு சேனை நோக்கான் - கடல்போன்று பரந்து நின்ற சேனைகளைக் கண்ணுறாமலும், தாது அவிழ் கூந்தல் மாதர் - மகரந்தத் தூள்கள் ஒழுகப்பெற்ற மயிர் முடியினையுடைய (மண்டோதரி முதலான) தரும பத்தினியரும் பிறரும், தனித்தனி நோக்க - தனித்தனியாகப் பார்த்துக்கொண்டு நிற்க, தான் - தான்மட்டும், ஓர் பூதலம் என்னும் நங்கைதன்னையே நோக்கி புக்கான் - ஒரு பூமிதேவி என்னும் பெண்ணினையே விடாமல் பார்த்தவண்ணம் தலைநகரில் புகுந்தான். ஏகாரம் - தேற்றம்.

முன்னர் ' இந்திரன் முதலா ரிமைப்பிலா நாட்டத் தெனைவரும் உயிர்ப்பவிந்திருப்ப'ச் சென்ற அரக்கர்கோன். இப்பொழுது மாதிரம் எவையும் நோக்காமற் சென்றான் : ' முன்னர்க் கருந்தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே' (ஆரணிய. 576) திளைத்த வனும் 'மகளிர், மழைபுரை யொண்கண் செங்கடையீட்ட மார்பினும் தோளினும் வயங்கத் திகழ்ந்தவனுமான இராவணன்' (சுந்தர. 421). இப்போது மாதர் தனித்தனி நோக்க அவர்களைக் கண்ணெடுத்துப் பாராதிருந்தான் எனப்பட்டது. இனி அத்துணை மாதர் நோக்கா

நிற்கவும், ஒருத்தியைக் கூடக் கண்ணுறாமல் இருப்பின் அவனது ஆண்மை மாசுறும் அன்றே ; ஆதலின் ஒரு பெண்ணை மாத்திரம் நோக்கினன் எனப்பட்டது; அம்மங்கை, யார் எனின் 'பூதலம் என்னும் நங்கை'; பரிபவத்தால் தலை குனிந்து சென்றான் என்பது பொருள். இந்தப் பரிதாப நிலை 'நீ பயந்த சீதா தேவியால் நிகழ்ந்தது அன்றோ' எனப் பூமிப்பிராட்டியைப் பார்த்து மொழிவது போன்றிருந்தது என்க. பூதலம் இருபெயரொட்டு. தனக்குரிய மாதர்களைப் புறக்கணித்துப் பரதார கமனம் செய்யத் துணிந்து மானமிழந்த நிலையில், அவர்களைப் பார்க்கவும் நாணினன் என்க. சேனை அனைத்தையும் போரில் இழந்த இடத்துக் கடற்பெருஞ் சேனை ஏது எனின், அரக்கர்கோன் தோற்றதறியாமல் அவனை நகர் உள்ளிருந்து எதிர்கொள்வான் வந்த சேனை என்க.

பி - ம். 1. வளர் நகர்.
2. தானை.
3. கோதை மாதர் ; தனித்தனி நோக்கத் தானும், தானப்.
4. மங்கை. 3

இது முதல் கும்பகர்ணன் வதைப் படலம் என்று ஓர் பிரதியில் உள்ளது.

1214. நாளொத்த நளின மன்ன
முகத்தியர் நயன மெல்லாம்
வாளொத்த மைந்தர் வார்த்தை
யிராகவன் வாளி யொத்த
கோளொத்த சிறைவைத் தாண்ட
கொற்றவற் கற்றை நாடன்
தோளொத்த துணைமென் கொங்கை
நோக்கங்குத் தொடர் கிலாமை.

அற்றை நாள் - அந்த நாளில், ஒத்த - ஒருங்கே மலர்ந்த, நாள் நளினம் அன்ன முகத்தியர் - புதிய தாமரை மலர்போன்ற முகத்தை யுடையவரான மகளிரின், நயனம் எல்லாம் - கண்கள் எல்லாம், வாள் ஒத்த-வாளாயுதம் போன்று வருத்தத்தை யுண்டுபண்ணின ; மைந்தர் வார்த்தை - புதல்வர்கள் வழங்கும் சொற்கள் அனைத்தும், இராகவன் வாளி ஒத்த - இராமனம்பு போன்று துன்பம் செய்தன ; கோள் - ஒன்பது கிரகங்களையும், ஒத்த சிறை வைத்து ஆண்ட -

ஒருங்கே சிறையிட்டு அடிமை கொண்ட, கொற்றவற்கு - வெற்றி வீரனான இராவணனுக்கு, துணை மென் கொங்கை - இரட்டையான மெல்லிய தனங்கள், தன் நோக்கு தொடர்கிலாமை - (அங்குத்) தனது பார்வை செல்லாமல், தோள் ஒத்த-(தன்) தோளை நிகர்த்து வெறுப்பை விளைத்தன. அங்கு - அசை.

போரில் தனக்கு வெற்றி தராத நிலையில் அரக்கர்கோன் தோள்கள் வெறும் சுமையாகித் துன்புறுத்தின. அப்புயங்களில் சென்றுபடியும் துணைமென்கொங்கைளிடத்தும் விருப்பம் செய்யாமையின், அவைகளும் தோள் போல் கவர்ச்சியற்றன வாயின. நாணம் மீதூர இனிய முகத்தியரான மனைவியரின் நோக்கம் வாள் போன்றும், அருமைப் புதல்வர்களின் இனிய சொற்கள் இராகவன் வாளி போன்றும் துன்புறுத்தின; எனவே போர்க்களத்தை நீத்து நகர்க்கண் வந்த இடத்தும், வாளியும் வாளும் துயர் செய்தன என்று கூறப்பட்டது. கோளொத்த சிறை வைத்தாண்ட கொற்றவன்' ஆரணிய. 358, 558, 851; இனி, துணை மென் கொங்கை நோக்கு - என்பதற்கு வீரலட்சுமியின் நோக்கம் என்றும், இதுகாறும் இராவணன் புயத்தில் வீற்றிருந்த அவள் நோக்கு இராமனையே நாடியது எனினுமாம். 'கோள் ஒத்த சிறை வைத்தாண்ட கொற்றவன்': தனக்குக் கேடான பிராட்டியைக் காவல் வைத்த இராவணன்' என்பது பழையவுரை.

பி - ம். 2. மக்கள் வார்த்தை, வானோர் வார்த்தை.
4. நோக்கிங்குத் ; தொடர்ந்திலாமை. 4

## இராவணன் கோயிலில் இருந்து தூதரை அழைத்துவரக் கஞ்சுகியை ஏவுதல்

1215. மந்திரச் சுற்றத் தாரும் வாணுதற் சுற்றத் தாரும்
தந்திரச் சுற்றத் தாருந் தன்கிளைச் சுற்றத் தாரும்
எந்திரப் பொறியி னிற்ப யாவரு மின்றித் தானோர்
சிந்துரக் களிறு கூடம் புக்கெனக் கோயில் சேர்ந்தான்.

மந்திரம் சுற்றத்தாரும் - ஆலோசனைக்கு உதவுபவரும், வாள் நுதல் சுற்றத்தாரும் - ஒளி வாய்ந்த நெற்றியையுடைய மனைவிமார்களும், தந்திரம் சுற்றத்தாரும் - சேனைத் தலைவர்களும், தன்கிளை சுற்றத்தாரும் - தனது உறவினர்களும், எந்திரம் பொறியின் நிற்ப - எந்திரத்தின் வலிமையால் இயங்கும் இயல்பினையுடைய பாவைகள் போல (அசைவற்று) நிற்க, தான் - தான் மட்டும், யாவரும் இன்றி -

எவரும் பின்தொடரலின்றி, ஓர் - ஒரு, சிந்துரம் களிறு கூடம் புக்கென - சிந்துரப்பொடி பூசப்பெற்ற யானை ஒன்று, கொட்டா ரத்தையடைவது போன்று, கோயில் சேர்ந்தான் - அரண்மனையை அடைந்தான்.

மந்திரச் சுற்றத்தார்: ஐம்பெருங்குழு எண்பேராயம் என்ற இவைகளைச் சேர்ந்தவர்; வாணுதல் சுற்றத்தார் - மனைவிமார்கள்; 'வாணுதல் விறலியர்' (சிறுபாண் 31). தந்திரச் சுற்றத்தார். சேனைத் தலைவர்கள். இராவணனுடைய பரிபவ நிலை கண்டு தம்பித்து நின்றவர்கட்கு எந்திரப்பொறி உவமையாக்கப்பட்டது. சிந்துரம்: யானைமீது அப்பும் பொடி; சிந்துரக் களிறு இருபெய ரொட்டுமாம். கூடம் - யானை கட்டும் கொட்டாரம். புக்கால் என என்பது புக்கென எனத் தொகுத்தது; (யுந்த. 1219) காண்க. கோயில் - அரண்மனை; இது கோவில் எனவும் வழங்கும். மேனி யில் உதிரம் வடிய நின்றவன் ஆதலின் இராவணனுக்குச் சிந்துரக் களிறு உவமையாக்கப்பட்டது.

பி - ம். 3. தானே.

4. கூடம் சேர்ந்தென; சென்று சேர்ந்தான், கோயில் புக்கான். 5

1216. ஆண்டொரு செம்பொற் பீடத் திருந்துதன் வருத்த மாறி
நீண்டுயர் நினைப்ப னாகிக் கஞ்சுகி யயனின் றானை
ஈண்டுநந் தூதர் தம்மை யிவ்வழித் தருதி யென்றான்
பூண்டதோர் பணியின் வல்லை நால்வரைக் கொண்டு
[புக்கான்.

(இராவணன்) ஆண்டு - அவ்விடத்து, ஒரு செம் பொன் பீடத்து இருந்து - ஒரு செம்பொன்னால் ஆகிய ஆசனத்தமர்ந்து, தன் வருத்தம் ஆறி - தன் உள்ள வேதனை சிறிது தணியப்பெற்று, நீண்டு உயர் நினைப்பன் ஆகி - மிகவும் ஆழ்ந்த எண்ணம் உடைய வன் ஆகி, அயல் நின்றான் கஞ்சுகியை - அருகில் நின்று கொண் டிருந்த சட்டையிட்ட பிரதானியை(க் கண்ணுற்று), 'ஈண்டு - இப் பொழுதே, நம் தூதர் தம்மை - நமது தூதுவர்களை, இ வழி தருதி - இங்கு அழைத்து வருக', என்றான் - என்று கட்டளையிட்டான்; (அந்தக் கஞ்சுகியும்), பூண்டது ஓர் பணியின் - தலைமேற் கொண்ட அந்தக் கட்டளையினாலே, வல்லை - விரைவாக, நால்வரை கொண்டு புக்கான் - நான்கு பேர்களை அழைத்துக்கொண்டு, (இராவணன் அமர்ந்த இடத்தில்) நுழைந்தான்.

வருத்தம் மாறி யென்றே கோடலுமாம். பூண்டதோர் பணி - மேற்கொள்ளப்பட்ட கட்டளை. கஞ்சுகி - சட்டையிட்ட பிரதானி. நின்றனை என்ற சொற்கண் உள்ள ஐ பிரித்துக் கூட்டப்பெற்றது.

பி - ம். 1. மாற்றி.

2. நீண்டதோர், காண்டகு நிலையறகி ; காஞ்சுகி.

3. ஈண்டிய ; இவ்வழிக் கொணர்தி.

4. பணியன், பணியான். 6

## திக்குகளில் உள்ள அரக்கர் சேனையைக் கொணரச் சொல்லுதல்

1217. மனகதி வாயு வேகன் மருத்தன்மா மேக னென்றிவ்
வினையறி தொழிலர் முன்னா வாயிரர் விரவி னாரை
நினைவதன் முன்ன நீர்போய் நெடுந்திசை யெட்டு நீந்திக்
கனைகழ லரக்கர் தானை கொணருதிர் கடிதி னென்றான்.

மனகதி வாயுவேகன் மருத்தன் மாமேகன் என்று இவ் - மனகதி வாயுவேகன் மருத்தன் மாமேகன் என்ற இந்த, வினை அறி தொழிலர் முன்னா - செய்தொழிலை நன்கு செய்யவல்ல இவர்கள் முதலாக, விரவினார் ஆயிரரை - வந்து கலந்த ஆயிரக்கணக்கான தூதுவரைப் பார்த்து, (இராவணன்) 'நீர் நினைவதன் முன்னம் - நீங்கள் நினைக்கும் கால அளவைக்குள், போய் - சென்று, நெடுதிசை எட்டும் நீந்தி - பரந்த எட்டுத் திக்குக்களையும் கடந்து, கனைகழல் அரக்கர்தானை கடிதின் கொணருதிர் - ஒலிக்கின்ற வீரகண்டை யணிந்த அரக்கருடைய சேனையை வெகு விரைவில் அழைத்து வாருங்கள்', என்றான் - என்று கூறினான்.

வினை அறுதொழிலர் என்ற பாடத்துக்குக் குற்றமற்ற தொழிலையுடையர் என்க. விரவினார் ஆயிரரை என மாற்றுக. நீந்தி - அரிதிற் கடந்து.

பி - ம். 1. மருத்தன்மா முதலோர் மற்றும் ; மாமைந்தனென்றிவ்.

2. வினையறு தொழிலர் ; முன்னின் ; ஆயினர், வாயிலர், வாயிலில் ; வினவினாரை, வினையினாரை.

3. நெடுந்திசை பத்தும். 7

1218. ஏழ்பெருங் கடலுஞ் சூழ்ந்த வேழ்பெருந் தீவும் எண்ணில்
பாழியம் பொருப்புங் கீழ்பா லடுத்தபா தாளத் துள்ளும்
ஆழியங் கிரியின் மேலு மரக்கரா னவரை யெல்லாம்
தாழ்விலிர் கொணர்தி ரென்ரு னவரது தலைமேற்
[கொண்டார்.

'ஏழ் பெரு கடலும் சூழ்ந்த - ஏழு பரந்த கடல்களால் சூழப் பெற்ற, ஏழ் பெரு தீவும் - ஏழு பெரிய தீவுகளிலும், எண்ணில் - கணக்கற்ற, பாழி அம் பொருப்பும் - வலிய அழகிய மலைகளிலும், கீழ்பால் அடுத்த பாதாளத்துள்ளும் - கீழ்ப்புறத்தில் பொருந்திய பாதாள உலகத்திலும், ஆழி அம் கிரியின் மேலும் - சக்கரவாள கிரியின் மீதும் உள்ள, அரக்கர் ஆனவரை எல்லாம் - அரக்கர் எனப்பட்டவர் எல்லோரையும், தாழ்விலிர் - கால தாமதம் செய்யாமல், கொணர்திர் - அழைத்து வாருங்கள்', என்ருன் - என்று கட்டளையிட்டான்; அவர் - அந்தத் தூதுவரும், அது - அந்தக் கட்டளையை, தலைமேல் கொண்டார் - சிரமேல் கொண்டனர்.

ஏழ் பெருங்கடல்: உப்பு, கருப்பஞ்சாறு, கள், பால், தயிர், நெய், நீர்; ஏழ் பெருந்தீவுகள்: சம்பு, பிலக்ஷம், குசை, கிரவுஞ்சம், சாகம், சால்மலி, புட்கரம். பாழியம் பொருப்பு ஏழு: மகேந்திரம், கந்தமாதனம், மலயம், சக்யம், சக்திமந்தம், விந்தியம், பார்யாத்ரம். ஆழியங்கிரி - சக்கரவாளகிரி: சிறப்புப்பற்றி இதனைத் தனித்துக் கூறினர்; அட்டகுலாசலம் எனக் கூறுவதும் உண்டு. தலைமேற் கொள்ளல்; 'இப்பணி தலைமேற்கொண்டேன்' (அயோத்தி. கைகேசி. 110).

பி - ம். 1. பெருந்திசையும்; தீவு மெண்ணேன், தீவுமண்ணில்.
3. கீழ்பாரடுத்த.
3. ஆழியின்; ஆயினரையெல்லாம்.
4. தாழ்விலர். 8

இராவணன் மலரமளி சேர்ந்து வருந்தல்

1219. மூவகை யுலகு ளோரு முறையினின் றேவல் செய்வார்
பாவக மின்ன தென்று தெரிகிலர் பதைத்து விம்மத்
தூவக லாத வெவ்வா யெஃகுறத் தொளைக்க யானை
சேவகஞ் சேர்ந்த தென்னச் செறிமல ரமளி சேர்ந்தான்.

முறையில் நின்று - முறைப்படியமர்ந்து, ஏவல் செய்வார் - பணிவிடை புரிவோராகிய, மூவகை உலகுளோரும் - மூன்று திறப் பட்ட வுலகத்தவரும், பாவகம் இன்னது என்று தெரிகிலர் - (இரா வணனுடைய) உள்ளக் கருத்து இன்னது என்று உணராதவராய், பதைத்து விம்ம - நடுங்கித் துடிக்க, (இராவணன்) தூ அகலாத வை வாய் எஃகு உற - ஊன் நீங்கப்பெறாத கூரிய முனையினையுடைய வேற்படை, தொளைக்க - தன்னை நன்கு துளைத்தலால், யானை - யானை, சேவகம் சேர்ந்தது என்ன - (தான்) துயிலும் இடத்தை அடைந்தாற் போன்று, மலர் செறி அமளி சேர்ந்தான் - மலர்கள் நிறைக்கப்பெற்ற படுக்கையை அடைந்தான்.

மூவகை யுலகுளோரும் முறையினின் றேவல் செய்வார்; (ஒப்பு): 258, 261, 272, 335, 579, 752, 753, 847; (சுந்தர. 442, 443, 448, 476. பாவகம் - உட்கருத்து; 'பாவகாரிதன் பாவகம்' (சுந்தர. 1092); பகைவரை இடைவிடாது குத்திக் கொல்லுதலின் தூவக லாத வைவாயெஃகெனப்பட்டது. சேவகம் - யானை துயிலிடம்; 'சேவக மடைந்த சிறுகட்கரி' (பால. தைலமா. 12); 'மானத்தா னூன்றப்பட்ட மருமத்தான்' ஆகலின் வைவாயெஃகுற்று அமளி சேர்ந்த யானைக் குவமித்தார்.

பி-ம். 1. உலகுளாரும், உலகினுள்ளும், உலகினுள்ளார்; என்று; ஏவல் செய்யப்.
2. இன்னதென்றும்; பதைந்து விம்மிந்.
3. வைவேல்.
4. சேவகம் அமைந்தது.

1220. பண்ணிறை பவளச் செவ்வாய்ப்
பைந்தொடிச் சீதை யென்னும்
பெண்ணிறை கொண்ட நெஞ்சில்
நாணிறை கொண்ட பின்னர்க்
கண்ணிறை கோடல் செய்யான்
கையறு கவலை சுற்ற
உண்ணிறை மானந் தன்னை
யுமிழ்ந்தெரி யுயிர்ப்ப தானான்.

பண் நிறை - இசையின் தன்மை பொதிந்த, பவளம் செ வாய் பைந்தொடி சீதை என்னும் பெண் - பவளம்போன்ற செந்நிறமான

வாயினை உடைய பசிய வளையல் அணிந்த சீதை என்கின்ற பெண், இறைகொண்ட - பொருந்தியிருந்த, நெஞ்சில் - உள்ளத்திலே, நாண் நிறை கொண்ட பின்னர் - வெட்கமானது தங்கி நிறைந்த பிறகு, (இராவணன்), கை அறு கவலை சுற்ற - செயலறுதற்குக் காரண மான வருத்தம் வளைந்துகொண்டதனால், கண் இறை கோடல் செய்யான் - சிறிதும் கண் துயிலாதவனாய், உள் நிறை மானம் தன்னை உமிழ்ந்து - உள்ளே நிரம்பி நின்ற அவமானத்தை வெளிப் படுத்திக்கொண்டு, எரி உயிர்ப்பது ஆனான் - தீப்போன்று வெம்மையான பெருமூச்சுவிடலானான்.

பண்ணிறை ; 'பண்களாற் கிளவி செய்து' (யுத்த. மாயசனக. 7) என்றது காண்க. பெண் பொருந்தியிருந்த உள்ளத்திலே நாணம் நிறைந்து நின்றதென்க: பெண் நிறை கொண்ட - என்று பிரித்துப் பெண் தன் நிறையை அல்லது ஆண்மைத் தனத்தைக் கைக் கொண்ட பின்னர் என்றும் கூறுப. கண் கோடல் - கண் துயிலு தல். கையறு கவலை - செயல் அறுதற்குக் காரணமான கவலை. 'அவலக்கவலை கையா றழுங்கல்' (மணி. 4; 118) என்று கையாற் றினை செயலற்ற நிலையாகக் குறிப்பர்.

பி - ம். 1. பண்ணிய, பண்ணிறப்.
2. நிறைகொண்ட நெஞ்சன் ; பின்னைக்.
3. கையறு பழங்கண் ; கருத்திடைக் கவலை சுற்ற.
4. உமிழ்ந்தென, உமிழ்ந் துமிழ்ந்து ; உரைப்பதானான். 10

1221. வானகு மண்ணு மெல்லா நகும்நெடு வயிரத் தோளான்
தானகு பகைஞ ரெல்லா நகுவரென் றதற்கு நாணான்
வேனகு நெடுங்கட் செவ்வாய் மெல்லியன் மீதிலை வந்த
சானகி நகுவ ளென்றே நாணத்தாற் சாம்பு கின்றான்.'

'வான் நகும் - வானத்தில் உள்ளார் நகையாடுவர், மண் எல்லாமும் நகும் - பூவுலகவாசிகள் அனைவரும் பரிகசிப்பர், தான் நகு பகைஞர் எல்லாம் நகுவர் - தான் ஏளனம் செய்யக்கூடிய விரோதிகள் அனைவரும் தன்னைச் சிரிப்பர்', என்று அதற்கு நாணான் - என்பது குறித்து வெட்கம் கொள்ளாதவனாய், நெடு வயிரம் தோளான் - உயர்ந்த வன்மைசான்ற புயங்களையுடையவனான இலங்கேசன், வேல் நகு - கூர்மையான வேலையும் அவமதிக்கும்,

நெடுகண் செவ்வாய் - நீண்ட விழிகளையும் சிவந்த வாயினையும், மெல் இயல் - மெல்லிய சாயலினையும் உடைய, மிதிலை வந்த - மிதிலா நகரத்தில் தோன்றிய, சானகி நகுவள் என்றே நாணத்தால் சாம்புகின்றான் - சீதை நகையாடுவள் என்பதை நினைந்தே, நாணத்தினால் வாட்டம் அடைபவன் ஆனான்.

தன்னுடைய அவல நிலையைக் கண்டு வானவர் நகுவரே, மண்ணவர் சிரிப்பரே, தன்னால் அதுகாறும் இகழப்பட்டோர் அனைவரும் நகையாடுவரே என்பதை எண்ணி இராவணன் நாணவில்லை; சீதை தன்னுடைய வீரம் இத்துணைதானோ என்று சிரிப்பளே என்பது கருதியே வெட்கத்தாற் புழுங்கி நின்றான். தன்னை ஏளனம் செய்யக்கூடிய முற்கூறிய முத்திறத்தாரையும் மீட்டும் அவன் வென்றுகொள்ள முடியும். ஆகவே அவர்தம் நகையை அவன் பொருட்படுத்தவில்லை. பெண் நகைக்கே பெரிதும் வருந்தினன் என்க. வழுக்கிக் கீழ்வீழ்ந்த துரியோதனனைக் கண்டு துரோபதை நகைத்த நகைப்புத்தானே பாரதப் போராக முடிந்தது காண்க. தானகு பகைஞர்; இராம இலக்குவர் என்பாரும் உளர். வேல் பகைவர் உடலிற்றைத்தே வருத்தும்; மகளிர் கண்கள் உடலிற் பதியாமலே வருத்தும் ஆகலின் வேல் நகு நெடுங்கண் எனப்பட்டது.

பி - ம். 1. வானமும்; மணிவயிரத்; வயிரக்கையான்.

2. நானகு; பகைஞர் யாரும்.

3. நகுவளென்று. நகுமென்றுள்ளம். 11

## மாலியவான் உற்றது வினுதல்

1222. ஆங்கவன் றன்மு தாதை யாகிய மூப்பின் யாக்கை
வாங்கிய வரிவி லன்ன மாலிய வானென் றோதும்
பூங்கழ லரக்கன் வந்து பொலங்கழ லிலங்கை வேந்தைத்
தாங்கிய வமளி மாட்டோர் தவிசுடைப் பீடஞ் சார்ந்தான்.

ஆங்கு - அப்போது, அவன் தன் - அந்த இராவணனுடைய, முதாதை ஆகிய - பெரிய பாட்டனாகிய, மூப்பின் - வயது முதிர்ச்சியால், வாங்கிய யாக்கை-வளைந்து கூன்பட்ட உடல், வரிவில் அன்ன - கட்டமைந்த வில்லைப் போன்றிருந்த, மாலியவான் என்று ஓதும் -

மாலியவான் என்று புகழ்ந்து கூறப்படுகின்ற, பூ கழல் அரக்கன் வந்து - அழகிய வீரகண்டை அணிந்த அரக்கன் வந்து, பொலம் கழல் இலங்கை வேந்தை - பொன்னுனியன்ற வீரக்கழல் புனைந்த இலங்காதிபனுன இராவணனை, தாங்கிய அமளிமாடு - தாங்கி நின்ற படுக்கையின் அருகில், ஓர் தவிசுடை பீடம் சார்ந்தான் - ஒரு ஆதனம் அமைக்கப்பெற்ற பீடத்திலே சேர்ந்தான்.

வயது முதிர்ந்த நிலையில் உடற்கூன் நிகழ்வதுண்டாகலின் மூப்பின் யாக்கை வாங்கிய வரிவிலன்ன மாலியவான் எனப்பட்டது. 'வணங்குநோன் சிலையென வளைந்த யாக்கையன்' (சீவக. 2009); (ஒப்பு): 'மொய்த்து வளர் பேரழகு மூத்தவடிவேயோ' (பெரியபு. தடுத்தாட். 32); 'கோடி யென்றனள் உள்ளமும் கோடிய கொடியாள்' (அயோத்தி. மந்தரை. 81); மாலியவான்; யுத்த. 766. உரைக் குறிப்புப் பார்க்க. பூங்கழலரக்கன் என்பதற்கும் பொலங்கழல் இலங்கை வேந்து என்பதற்கும் உள்ள வேறுபாடுணர்க. பொலன் கழல் - அடிப்படுத்திய பகைவர் முடியிலிருந்த பொன்னினால் சமைக்கப்பட்ட வீரகண்டை, 'நீயே......கடந்தட்டவர், முடிபுனைந்த பசும் பொன்னின், அடிபொலியக் கழறைஇய, வல்லாளனே' (புறநா. 40); தவிசு: 'வண்ணப்பூந் தவிசு தன்னை ஞமலிமே லிட்ட தொக்கும்' (சீவக. 203).

பி - ம். 1. ஆங்கவன் முதியதாதை.

2. மாலிய னென்பானோர்.

4. அமளிமாடோர்; தவிசிடைப். 12

1223. இருந்தவ னிலங்கை வேந்த
னியற்கையை யெய்த நோக்கிப்
பொருந்தவந் துற்ற போரில்
தோற்றனை போலு மென்னு
வருந்தினை மனமுந் தோளும்
வாடினை நாளும் வாடாப்
பெருந்தவ முடைய வையா
வென்னுற்ற பெற்றி யென்முன்.

இருந்தவன் - (பீடத்தில்) வீற்றிருந்த மாலியவான், இலங்கை வேந்தன் இயற்கையை எய்த நோக்கி - இலங்கை மன்னனுன இரா

வணனின் அவச நிலையை நன்கு பார்த்து, 'வாடா பெருதவம் உடைய ஐயா - ஒரு பொழுதும் தளராத பெரிய தவப்பயனையுடைய ஐயனே! பொருந்த வந்து உற்ற போரில் - நெருக்கமாக வந்து நிகழ்ந்த யுத்தத்தில், தோற்றனை போலும் - தோல்வியடைந்தனை போலும், என்று - என்று நினையும்படி, வருந்தினை - வருத்தமுற்று, மனமும் தோளும் வாடினை - உள்ளமும் உடலும் தளரப் பெற்றாய்; உற்ற பெற்றி என் - நிகழ்ந்த தன்மை யாது' என்றான் - என்று கேட்டான்.

எய்த நோக்கி - நன்கு பார்த்து; 'என நினைத்தெய்த நோக்கி யிரங்குமெனுள்ளம்' (சுந்தர. 516).

பி - ம். 2. தோற்றவன் தேறினன், தோற்றனை.

3. வென்றும் வாடாய்.

4. பெருந்தவமுடைய வீரா, வீர, மன்ன. 13

## இராவணன் விடை

1224. கவையுறு நெஞ்சன் காந்திக்
கனல்கின்ற கண்ணன் பத்துச்
சிவையின்வா யென்னச் செந்தீ
யுயிர்ப்புறத் திறந்த மூக்கன்
நவையறு பாகை யன்றி
யமுதினை நக்கி னாலுஞ்
சுவையறப் புலர்ந்த நாவன்
இனையன சொல்ல லுற்றான்.

கவை உறு நெஞ்சன் - துன்பத்தால் பிளவுண்ட மனத்தினனும், காந்தி கனல்கின்ற கண்ணன் - பற்றி எரிகின்ற கண்களையுடையவனும், சிவையின் வாய் என்ன - ஊதுலைத் துருத்தியின் வாய் போன்று, செம்தீ உயிர்ப்புஉற திறந்த பத்து மூக்கன் - செந்தீ வெளிப்படுகின்ற மூச்சு வெளிப்படுமாறு விரிந்த பத்து நாசிகளையுடையவனும், நவை அறு பாகை அன்றி - குற்றமற்ற வெல்லப் பாகினையே அல்லாமல், அமுதினை நக்கினாலும் - அமுதத்தையே நக்கிடினும், சுவை அற புலர்ந்த நாவன் - சுவை உறைக்காதவாறு நீர்ப்பசை அற்று வறண்ட நாவினையுடையவனுமான இராவணன்,

இணையன சொல்லல் உற்றான் - இத்தகையவான சொற்களைக் கூறலானான்.

சிவையின் வாயென்ன : (ஒப்பு) : சுந்தர. 305. தலைகள் பத்தாகலின் பத்துச்சிவை யெனப்பட்டது. நாவினில் புனல் ஊற்றின்றேல் சுவைத்தல் இயலாதாகலின் பாகையன்றி அமுதினை நக்கினாலும் சுவையறப் புலர்ந்த நாவன் எனப்பட்டது.

பி - ம. 2. சிவையுறுவாயுவென்ன, உயிர்ப்புறச் சிவந்த முக்கண், சேந்த, சிவக்கும்.

3. நக்குமேனும்.

4. உணங்கு ; வாயான் ; நாவன் ; சோறல், மொழிகள் சொன்னான். 14

1225. சங்கம்வந் துற்ற கொற்றத் தாபதர் தம்மோ டெம்மோ
டங்கம்வந் துற்ற தாக அமரர்வந் துற்று ரன்றே
கங்கம்வந் துற்ற செய்ய களத்துநங் குலத்துக் கொவ்வாப்
பங்கம்வந் துற்ற தொன்றே பழியும்வந் துற்ற தென்றான்.

'சங்கம் வந்து உற்ற கொற்றம் - சங்கம் என்கிற பேரெண்ணிற் பொருந்திய வெற்றியினையும், தாபதர் தம்மோடு - தவக்கோலத்தையும் உடைய மனிதருக்கும், எம்மோடு-எமக்கும், அங்கம் வந்து உற்றது ஆக-போர் வந்து மூண்டதாக, அமரர் வந்துற்றார் அன்றே - தேவர்களும் (வேடிக்கை பார்க்க) வந்துவிட்டனரே ; (மற்றும்) கங்கம் வந்துற்ற - பருந்து வந்து தங்கிய, (உதிரப் பெருக்கினால்) செய்ய களத்து - சிவந்து காட்டும் போர்க்களத்து, நம் குலத்துக்கு ஒவ்வா பங்கம் வந்து உற்றது ஒன்றோ - நம்முடைய குலத்துக்கெல்லாம் சிறிதும் தகாத தோல்வி நேர்ந்தது மட்டுமோ? பழியும் வந்து உற்றது-பழிப்புரையும் வந்து சேர்ந்தது' என்றான் - என்று மொழிந்தான். அன்று ஏ - ஈற்றசையுமாம்.

சங்கம் - பேரெண்களில் ஒன்று இலட்சம் கோடி என்பர் : 'நெய்தலுங் குவளையுமாம்பலும் சங்கமும்' (பரி. 2 : 1). வெற்றியே தொடர்ந்து பெற்று வந்தமையின் 'சங்கம் வந்துற்ற கொற்றத் தாபதர்' எனப்பட்டது. தான் பொருதற்கேற்றவர் இராம இலக்குவர் அல்லர் என்பான் தாபதர் என்றான. 'இருவர் மானுடர் தாபதர்' (ஆரணிய. 365) என்றது காண்க. தேவகாரியமாக

வந்தவர் இராம இலக்குவர் என்பது 'அமரர் வந்துற்ருர்' என்ற தொடரால் அறியப்படுவது என்க. தேவர்கள் போரினைக் காண வந்தமை பல்வகை நினைவுகளை இராவணன் உள்ளத்து எழச் செய்தது என அறிக. அங்கம் - சதுரங்கத்தாலும் புரியப்படும் போரினுக்கு ஆகுபெயர். கங்கம் - கழுகு, 'கங்கமொடு காக மிடைய' (ஆரணிய. 531); உதிரத்தாற் சிவந்த களம் ஆகலின் செய்ய களம் எனப்பட்டது.

பி - ம். 1. தம்மோடேற்ற.

2. உற்றநன்றே, உற்ற காலத்து; வந்துற்ற தாற்ருர்.

3. கங்கம் வந்துற்று; வெம்போர்க்களத்து.

4. பங்கம் வந்துற்ற தன்றி; துற்ற தன்றே. 15

1226. முளையமை திங்கள் சூடும் முக்கணன் முதல்வ ராகக்
கிளையமை புவன மூன்றும் வந்துடன் கிடைத்த வேனும்
வளையமை வரிவில் வாளி மெய்யுற வழங்கு மாயின்
இளையவன் றனக்கு மாற்ரு தென்பெருஞ் சேனை நம்ப.

'நம்ப - தலைவனே! முளை அமை திங்கள் சூடும் - புதிதாகத் தோன்றிய (பிறைவடிவான) சந்திரனைச் சிரத்தின் கண் அணிந்துள்ள, முக்கணன் முதல்வர் ஆக - மூன்று விழிகளையுடைய சிவபிரான் முதலாக, கிளை அமை புவனம் மூன்றும் வந்து உடன் கிடைத்தவேனும் - மேன்மேல் வளரும் தன்மை பூண்ட, மூன்று உலகில் உள்ளவர்களும் வந்து ஒருங்கு கூடிப் பக்க பலமாக நிற்பினும், என் பெரு சேனை - என்னுடைய பரந்த சேனையானது, வளை அமை - வளைவுடன் கூடிய, வரிவில் வாளி - கட்டமைந்த வில்லினின்று வெளியேறுகின்ற அம்புகளை, மெய் உற வழங்கும் ஆயின் - உடலின் மீது தாக்குமாறு எய்வாளுயின், இளையவன் தனக்கும் ஆற்ருது - (அவ்விராமபிரானுடைய) தம்பியான இலக்குவனுக்கும் எதிர் நிற்க மாட்டாது.

இச்செய்யுளில் இளையவன் வல்லமையைக் கூறுமுகத்தான் இராமபிரானுடைய பராக்கிரமத்தையும் கூறினன் இராவணன் என்க. 'வீரரை யார் வியவாதார் (கிட்கிந்தா. 297); என்றபடி சுத்த வீரன் தனது நேர் பகைவனே எனினும் அவனைப் புகழ்ந்து பாராட்டுவது மரபு. திங்கள் சூடு முக்கணன்; ஆரணிய. 581; 688.

நண்பர் புகழும் புகழ்ச்சி அபிமானம்பற்றி எழுவது : நேர் பகைவன் புகழ்வான் எனில், அதனை முழுவதும் ஏற்கத் தகும். 'கோல மா மஞ்ஞை மீது குலவிய குமரன் தன்னை' (கந்த. சூரபன்மன்வதை. 433) எனத்தொடங்கும் செய்யுட்கண் சூரபன்மன் முருகப்பிரானை வாயாரப் புகழ்வது காண்க. சத்ரோ: ப்ரக்யாத வீர்யஸ்ய' என்பர் ஸ்ரீவான்மீகி முனிவரும்.

பி - ம். 1. முக்கணன் முதலவாக, ஆதியாக, முதல்வனாக.

2. ஒளர்ந்துடன் ; புவனமெல்லாம் ; கெழீஇயவேனும்.

3. மெய்யற வழங்கும்போது, வழங்குமேலவ், வழங்குமாகில்.

4. எம்பெருஞ்சேனை யென்னே. 16

1227. எறித்தபோ ரரக்க ராவி
யெண்ணிலா வெள்ள மெஞ்சப்
பறித்தபோ தென்னை யிந்தப்
பரிபவப் படுத்தும் பாணம்
பொறித்தபோ தன்னு னந்தக்
கூனிகூன் போக வுண்டை
தெறித்தபோ தொத்த தன்றிச்
சினமுண்மை தெரிந்த தில்லை.

'எறித்த போர் - (ஒருவர் மீது ஒருவர்) போர்க்கருவிகளை எறிந்து செய்யும் சண்டையில், எண்ணிலா வெள்ளம் அரக்கர் ஆவி-கணக்கில்லாத வெள்ளக் கணக்கினரான இராக்கதர்களின் உயிர்கள், எஞ்ச - ஒழியும்படி, பறித்தபோது - (அவ்வுயிர்களைக்) கவர்ந்த போதும், என்னை இந்த பரிபவம் படுத்தும் பாணம் - என்னை இந்த மானக்கேட்டிற்குள்ளாக்கும் வாளியை, பொறித்த போது - எய்தபோதும், அன்னான் - அந்த இராமபிரானுக்கு, அந்த கூனி கூன் போக - அந்தக் கூனியின் கூன் நீங்கும்படி, உண்டை தெறித்த போது ஒத்தது அன்றி - மண்ணுண்டையைத் தெறித்த போது காணப்பட்ட நிலைமையை நிகர்த்திருந்ததன்றி, சினம் உண்மை தெரிந்ததில்லை - கோபச்சுவடு சிறிதும் காணப்பட்டதில்லை.

எறிந்த என்றது எறித்த என எதுகை நோக்கி வலித்தது. பரிபவம் ; 'பாலகனென்று பரிபவம் செய்யேல்' (பெரியாழ். 1; 4; 7)

இராமபிரான் இளம்பிராயத்தில் கூனியின் முதுகில் விளையாட்டாக உண்டைவில் அடித்தபோது என்ன முகமலர்ச்சியுடன் விளங்கினானோ, அதே முகமலர்ச்சி அவன் பகைவர் மீது அம்புகள் எய்யும் போதும் காணப்பட்டது. அவ்வளவு அநாயாசமாகப் புரிந்தான் என்று இராமபிரான் வீரத்தை அரக்கர்கோன் வியந்தவாறு. உண்டை வில் எய்தது; பண்டை நாளிராகவன் பாணி வில்லுமிழ், உண்டையுண்டதனைத்தன் உள்ளத்துள்ளுவாள்' (அயோத்தி. மந்தரை. 41); மற்றும் (கிட்கிந்நா. 410; திருச்சந்த விருத்தம் 49-ம் காண்க. சினமுண்மை...... இல்லை (ஒப்பு): 'செயிர்ப்பினுமழகு செய்யும் திருநுதல் தன்னைத் தீர்ந்து' (யுத்த. 706); இவ்வாறு இங்கு இராமபிரானைப் புகழும் இராவணனை ஓரிடத்தில் 'வெல்வதும் தோற்றல் தானும் விளையாட்டின் விளைந்த மேனாள்' (சுந்தர. 471); என்று கூறியதும் இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

பி-ம். 1. வெள்ள மஞ்சப்.
2. பறித்த போழ்து; என்னை யந்தப்; பரிபவம் முதுகிற் பற்ற;
3. அந்நாள்.
4. தெறித்தபோழ் தொத்த தல்லால். 17

1228. மலையுறப் பெரிய ராய வாளெயிற் றரக்கர் தானை
நிலையுறச் செறிந்த வெள்ள நூற்றிரண் டெனினும் நேரே
குலையுறக் குளித்த வாளி குதிரையைக் களிற்றை ஆளைத்
தலையுறப் பட்ட தல்லா லுடல்களிற் றங்கிற் றுண்டோ.

'மலை உற பெரியர் ஆய-மலை போன்று உயர்ந்தவரான, வாள் எயிறு அரக்கர் தானை-வாள் போலும் கூர்மையான இராக்கதர்களுடைய சேனை, நிலை உற செறிந்த-நிலையாக நெருங்கிய, வெள்ளம் நூற்றிரண்டு எனினும்- நூற்றிரண்டு வெள்ளத்தை உடையதாயிருப்பினும், நேரே குலை உற-குறி தவறாமல் பகைவரின் ஈரற்குலையில் பொருந்த, குளித்த வாளி-சென்று தைத்த அம்புகள் அனைத்தும், குதிரையை களிற்றை ஆளை -குதிரைகளையும், யானைகளையும், காலாட்களையும், தலை உற பட்டது அல்லால்-தலை அறுபடுமாறு துண்டித்துக் கீழே விழும்படி செய்ததல்லது, உடல்களில் தங்கிற்று உண்டோ-எந்த உடலிலேனும் தங்கி நின்றது உண்டோ? உண்டோ-ஓ எதிர்மறை,

உற - உவம வாசகம். ஆள் என்பது காலாள். நூற்றிரண்டு - இருநூறு எனினுமாம். வாளிகள் அனைத்தும் தலைகளையே குறியாகக் கொண்டன என்க.

பி - ம். 1. பெரியவாய, பெரியரான.

2. நிலையுறச் சேர்ந்த, கோத்த ; நூற்றிரண் டதனை நேரே, நூற்றிரண் டவையும்.

3. கொலையுற ; நொக்க ; குளித்த ; ஆளின், குதிரைதேர் களிறு காலாள்.

4. தலைகளைத் தள்ளிற் றல்லால். 18

இதன்பின் 'உற்பத்தி' என்ற பாடல் சில பிரதிகளில்.

1229. போயபி னவன்கை வாளி
யுலகெலாம் புகுவ தல்லால்
ஓயுமென் றுரைக்க லாமோ
ஊழிசென் றாலு மூழித்
தீயையுந் தீய்க்கும் செல்லுந்
திசையையுந் தீய்க்கும் செப்பும்
வாயையுந் தீய்க்கும் முன்னின்
மனத்தையும் தீய்க்கும் மன்னோ.

'போயபின் - என் மார்பினை ஊடுருவிச் சென்ற பின்னர், அவன் கை வாளி உலகு எலாம் புகுவது அல்லால் - அவன் கை அம்பு உலகெல்லாம் நுழைந்து செல்வதன்றி, ஊழி சென்றாலும் - ஊழிக் காலம் போன்று பற்பல நாட்கள் கழிந்தாலும், ஓயும் என்று உரைக்கலாமோ - ஓய்ந்து விடும் என்று பகரலாமோ? (அப்பிரான் அம்புகள்), ஊழி தீயையும் தீய்க்கும் - பிரளய காலத்து வடவா முகாக்கினியையும் எரிக்கும், செல்லும் திசையையும் தீய்க்கும் - அவை செல்லுகின்ற திக்குகளையும் எரிக்கும், செப்பும் வாயையும் தீய்க்கும் - (ஏதேனும் மாறாகக் கூறுவோமாகில்) அவ்வாறு கூறுகின்ற வாயையும் எரிக்கும், முன்னின் - (அவற்றைப்பற்றி) நினையப்புகின், மனத்தையும் தீய்க்கும் - (நினைக்கும்) மனத்தையும் எரித்துவிடும். மன்னோ - அசை.

வாளி உலகெலாம் புகுவது ; (ப்பு) : (கிட்கிந்தா. 381) ; (யுத்த. இராவணன் வதை. 199) ; இராமன் அம்பு கட்புலனாவனவற்றைத்

இய்த்ததுமன்றி அருவமான மனத்தையும் இயக்கும் என்று அதன் வன்மையைக் குறித்தவாறு. (ஒப்பு) கிட்கிந்தா. 173. எண்ணுவார் எண் கொதிப்ப ........வேனில் மேவியது' (குசேலோ. 179).

பி - ம். 3. செல்லின், சொல்லும், சொல்லின்.

4. நீக்கும். 18

1230. மேருவைப் பிளக்க வேண்டில் விண்கடந் தேக வேண்டில்
பாரினை யுருவ வேண்டில் கடல்களைப் பருக வேண்டில்
ஆருமே யவற்றி னாற்றல் ஆற்றுமே லனந்த கோடி
மேருவும் விண்ணு மண்ணுங் கடல்களும் வேண்டு
[மன்றே.

'மேருவை பிளக்க வேண்டில்-மகாமேரு மலையைப் பிளந்துவிட விரும்பினாலும், விண்கடந்து ஏக வேண்டில் - ஆகாய வீதியைத் தாண்டி அப்பாற்செல்ல விழைந்தாலும், பாரினை உருவ வேண்டில்-பூமியை ஊடுருவிச் செல்ல விரும்பினாலும், கடல்களை பருக வேண்டில் - கடல்களை பருக விழையினும், அவற்றின் ஆற்றல் ஆரும் - அந்த (இராமபிரான்) அம்புகளின் வன்மைக்குப் பொருந்தியிருக்கும்; ஆற்றுமேல்-அந்த வாளிகளின் வேகத்தைப்) பொறுப்பதென்றால், (அச்சமயத்து) அனந்தகோடி மேருவும் விண்ணும் மண்ணும் கடல்களும் வேண்டும் - எல்லையற்ற கோடிக்கணக்கான மேருமலையும், ஆகாயமும், இந்தப் பூவுலகும், கடல்களும் வேண்டப்படும். ஏ - அசை. அன்றே - தேற்றம்.

1228 - 1230ல் இராமபிரான் வாளிச் சிறப்புக் கூறப்பட்டது. இச்செய்யுட் கருத்துடன் (சுந்தர. 446)-ஆம் செய்யுட் கருத்தை ஒப்பு நோக்குக. 'ஆருமே - அதனால் அம்பின் வயிறு நிறையுமோ' என்பது பழையவுரை.

பி - ம். 1. மேருவை யுருவு மென்றால், உருவ, பிளக்கும்; வென்றால், வென்னின்.

2. பாரினை யுருவ வேகும்; பவ்வத்தை; பருகும்.

3. யவற்றினலே; ஆறுமே, ஆருமேல்.

4. மண்ணும் விண்ணும். 20

1231. வரிசிலை நாணிற் கோத்து வாங்குதல் விடுத லொன்றுந்
தெரிகில ரமர ரேயும் ஆரவன் செய்கை தேர்வார்
பொருசினத் தரக்க ராவி போக்கிய போக வென்று
கருதவே யுலக மெங்குஞ் சரங்களாய்க் காட்டு மன்றே.

'வரிசிலை நாணில் கோத்து வாங்குதல்-கட்டமைந்த வில்லினை நாணி பூட்டி வளைத்தலையும், விடுதல் -(வாளிகளைத் தொடுத்து) எய்வதையும், ஒன்றும் அமரரேயும் தெரிகிலர் -ஒன்றையும் தேவர்களும் தெரிந்துகொள்ள இயலாதவராயினர்; ஆர் அவன் செய்கை தேர்வார் - மற்றும் அந்த இராமபிரானுடைய செயல் திறத்தை ஆராய்ந்துரைக்க வல்லவர் யாவர்? 'பொருசினத்து அரக்கர் ஆவி போக்கிய போக என்று -(இராமபிரான்) போர் புரியும் தன்மையுள்ள சினம் கொண்ட இராக்கதரின் உயிர் நீங்கும்படி செல்க' என்று - என்று, கருதவே -(தம் அம்புகளைக் குறித்து) நினையவே, உலகம் எங்கும் சரங்களாய் காட்டும் - உலக முழுவதும் அம்பு மயமாகவே ஆகிவிடும். அன்று. ஏ-ஈற்றசைகள்.

வரிசிலை : கட்டமைந்த வில். 'வரிசிலை வடித்த தோளான், வாளெயி றிலங்க நக்கான்' (ஆரணிய. 275). 'வாழிய வரிசிலை தம்பி' (யுத்த. 1073); இராமபிரான் வில்லினைக் கையாளும் லாகவம் இச் செய்யுட்கண் குறிக்கப்பட்டது. தேவரே காண இயலாத நிலையில் வேறு யாவரே காணவல்லார் என்றபடி. 'எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்' (பால. கார்முக. 34) என்றது காண்க. போக்கிய போக என்று கருதவே என்பது; இராமபிரான் சங்கற்பமாத்திரையில் தொழில்களை நிகழ்த்துமாற்றை விளக்கி நின்றது. (ஒப்பு). 'மறைகளே தேறத்தக்க வேதியர் வணங்கற்பால, இறையவ னிராம னென்னு நல்லற மூர்த்தி யென்னின், பிறையெயிற் றிவனைக் கோறி யென்றொரு பிறைவாய் வாளி, நிறையுற வாங்கிவிட்டான்' (யுத்த. இந்திரசித்து. 51); 'நான்முகன், பார வெம்படை வாங்கிப் பாதகன், மாரி னெய்வனென் றெண்ணி வலித்தான்' (யுத்த. இராவணன் வதை. 192). 'செந்தமிழே தீர்க்க சுவாகா'; 'குயக்கோடன் ஆவந்தம் சேர்கசுவாகா' என நக்கீரனார் பாடிய அங்கதங்களும் காண்க; (தொல். 178).

பி-ம். 1. வாங்கினன்; விடுதலென்றும்.
2. தெரிகிலது; அமர்தனுற்றல், ஆரதன், ஆதவன், ஆர்த்தனர்.
3. போகிய; போருக, போகிலார்.
4. கருதிய; உலகமெல்லாம், உலக முன்றும்.

1232. நல்லியற் கவிஞர் நாவிற் பொருள்குறித் தமர்ந்த நாமச்
சொல்லெனச் செய்யுள் கொண்ட தொடையெனத் [தொடையை நீக்கி
எல்லையில் செல்வந் தீரா விசையெனப் பழுதி லாத
பல்லலங் காரப் பண்பே காகுத்தன் பகழி மாதோ.

'காகுத்தன் பகழி-ககுத்தன் வழியில் தோன்றியவனான இராம பிரானுடைய அம்புகள், நல் இயல் கவிஞர் நாவில் - நல்ல தன்மை வாய்க்கப்பெற்ற (சிறந்த) கவிஞன் நாவினில், பொருள் குறித்து - பொருளைக் குறித்து, அமர்ந்த - பொருந்தியுள்ள, நாமம் சொல் என - புகழமைந்த சொற்கள் போலவும், செய்யுள் கொண்ட தொடை என - (அவர்கள் வாயிலிருந்து வருகின்ற) செய்யுட்களின் அமைந்த தொடை போலவும், தொடையை நீக்கி - தொடையைத் தவிர்த்து, எல்லை இல் செல்வம் தீரா - (அச்செய்யுட்களின் கண்) வரம்பில்லாத சிறப்பினின்றும் விலகாத, இசை என - இசை போல வும் (அமைந்து), பழுது இலாத பல் அலங்காரம் பண்பே - குற்ற மற்ற பலதிறப்பட்ட அலங்காரத்தின் தன்மையைக் கொண்டதே யாம். மாது, ஓ - அசைகள்.

பிறவியிலேயே கவித்துவத்தன்மை வாய்ந்த சிறந்த அறிவு வாய்ந்தவர் என்பார். 'நல்லியற் கவிஞர்' என்றார். நாமம் - புகழ். மிகச் சிறந்த உவமை; பல்திறப்பட்டு விடாது எழுவனவாய்க் கருதிய பயனை விளைத்தலின் அம்பிற்குச் சிறந்த கவிஞரின் நாவரும் சொல் உவமை. தொடை: எதுகை மோனை முரண் அளபெடை இயைபு முதலியன. இதன் விரிவினை, யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கல விருத்தி, தொல் - செய்யுளியல் முதலியவற்றிற் காண்க. தொடை - ஏகபாதம் சுழிகுளம் சக்கரபந்தம் முதலிய சொல்லணிகள் என்பாரும் உண்டு. இசை என இங்குக் கூறப் பட்டது செய்யுட் சந்தம் எனக் கொள்ளலாம் எனினும், தொனி எனவும் கொள்ளலாம். அலங்காரம் என்பது அணி. தொல்காப் பியர் உவமை என்ற ஒன்றினையே அணி எனக் கொண்டனர். 'உவமை என்னும் தவலருங் கூத்தி, பல்பெரும் கோலம் புரங்குறப் புனைந்து' என்றது காண்க. தொல் - உவமவியலும் தமிழ்மொழி வரலாறும் காணத்தகும். காகுத்தன்: ககுத்தன்

மரபில் வந்த இராமபிரான். தத்திதாந்த நாமம் (ஒப்பு). 'சிலவரைக் கரம் சிலவரைச் செவி' (யுத்த. கும்ப. 226) எனத் தொடங்கும் செய்யுளைக் காண்க. 'வித்துவான்கள் உலகத்தார் நல்ல சொல் லெனும்படி செய்யுட்கொண்டு தொகுத்ததுபோல் அந்தக்கவி அவர்கள் சொல்லிலும் அடங்காது எங்கும் பரந்தது போலவும் பெருமாள் அம்புயர்ந்தது' என்பது பழையவுரை.

பி-ம். 1. அமைந்த; ஞானச்.

2. செப்பங் கொண்ட; தொடையை நோக்கில்.

3. எல்லையிற் சென்றுந் தீரா.

4. வழுவிலாத, வழுவிலாதப். 22

1233. இந்திரன் குலிச வேலு மீசன்கை யிலைமூன் றென்னும்
மந்திர வயிலு மாயோன் வளையெஃகின் வரவுங் கண்டேன்
அந்தரம் நீளி தம்மா தாபத னம்புக் காற்று
நொந்தனன் யானே யென்று லாரவை நோக்க கிற்பார்.

'இந்திரன் குலிச வேலும் - இந்திரற்குரிய வச்சிரப்படையும், ஈசன் கை - சிவபெருமான் கரத்தில் உள்ள, மூன்று இலை என்னும் மந்திர அயிலும் - மூன்று இலை வடிவமைந்த மந்திர சத்தியுள்ள சூலப் படையும், மாயோன் - மாயையில் வல்லவனான திருமாலின், வளை எஃகின் - ஆழிப்படையும் (ஆகிய இவற்றின்), வரவும் கண் டேன் - வருகையைப் பார்த்துள்ளேன்; அந்தரம் - (அவற்றிற்கும் இராமபிரானம்பிற்கும் உள்ள) வேற்றுமை, நீளிது - மிகவும் அதிக மாக உள்ளது, தாபதன் அம்புக்கு ஆற்று - (அத்தகைய வலிய படைகள் அனைத்தும் பொறுத்து நின்று) தவசியான இந்த இராம பிரானுடைய அம்பின் விசையைத் தாங்கமாட்டாது, யானே நொந் தனன் எனின்-யானே வருந்தினேன் என்றால், ஆர் அவை நோக்க கிற்பார் - பிறர் யார்தான் அந்த அம்புகளைக் கண்கொண்டு பார்க்க வும் வல்லவர். (யாரும் இல்லை). அம்மா: வியப்பிடைச் சொல்.

குலிசவேல் - குலிசமாகிய படை என்க. இங்கு வேல், படைப் பொதுவைக் குறித்து நின்றது. மந்திர அயில் - மந்திரம் வழுத்தி எய்யப்படுதலின் மந்திர வயில் எனப்பட்டது. (ஒப்பு). 'வடிக்கணை மாமுக, நாலுங் கொண்டு நடந்தது நான்முகன், மூலமந்திரந் தன்

ளெடு மூட்டலால்' (யுத்த. இராவணன் வதை. 195); 'மந்திரம்; நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி' (தொல். செய்யுள். 178). வளை எஃகு வட்டமான ஆழிப்படை; எஃகு. ஆழிப் படை: (திவாகரம்); அந்தரம் - வேற்றுமை. 'அந்தரம் தெரிதல் தேற்றார் அருங்கவிப் புலவர் அம்மா' (யுத்த. 781); தான் நொந் தானாயினும், அந்த அம்புகளைப் பார்த்ததாகக் கூறினான்: இங்ஙனம் பார்ப்பதற்கும் இயலாது பிறர்க்கென்றவாறு.

பி - ம். 1. இலைமுன்றேற்ற.
2. மாயன் திகிரியின்.
4. நொந்தனர்; நோக்கி நிற்பார். 23

1234. பேயிருங் கணங்க ளோடு சுடுகளத் துறையும் பெற்றி
ஏயவன் றோள்க ளெட்டும் இந்திர னிரண்டு தோளும்
மாயிரு ஞால முற்றும் வயிற்றிடை வைத்த மாயன்
ஆயிரந் தோளும் அன்னான் விரலொன்றி னாற்ற லாற்ரு.

'பேய் இரு கணங்களோடு - பேய்களின் பெருங் குழுவினோடு, சுடுகளத்து உறையும் பெற்றி ஏயவன் - மயானத்திலே வாழ்கின்ற தன்மை அமைந்தவனான சிவபெருமானுடைய, எட்டு தோள்களும் - எட்டு புயங்களும், இந்திரன் இரண்டு தோளும் - இந்திரனுடைய இரண்டு புயங்களும், மா இரு ஞாலம் முற்றும் - மிகப் பெரிய நிலப் பரப்பு முழுதும், வயிறு இடை வைத்த மாயன் - தன் உதரத்தி னிடத்தே அடக்கிய திருமாலின், ஆயிரம் தோளும் - ஆயிரம் புயங் களும், அன்னான் - அந்த இராமபிரானுடைய, விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்ரு - ஒரு விரலின் வன்மைக்கும் ஈடுதரமாட்டாது.

இருமை - பெருமை. முதலடிக்கு (ஒப்பு): 'கோயில் சுடுகாடு கோல்புலித்தோல் நல்லாடை' (திருவாச. திருச்சாழல். 3); தோள் கள் எட்டு. 'எண்டோள் வீசிநின் றாடும் பிரான்றன்னைக் கண்காள் காண்மின்களோ' (தேவா. திருவங்கமாலை.); 'மாயிரு ஞாலமுற்றும் வயிற்றிடை வைத்த மாயன்'; 'மன்வ யிற்றி லடக்கிய மாயனைத் தன்வ யிற்றி னடக்கும் தவத்தினாள்' (அயோத்தி. மந்திரப்.

94); 'உண்டா யுலகேழ் முன்னமே' (திருவாய். 1, 5, 8); மாயிரு ஞாலம். 'மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கும்' (சிலப். 5, 163); 'மாயிரு ஞாலத் தரசுதலை வணக்கும்' (சிலப். கானல்வரி. 52).

பி - ம். 3. ஞாலமெல்லாம்.
4. விர லோன்றிற்கு, ஒன்றில், ஆற்றலோதான். 24

இதன்பின் 'முப்புர மொருங்க' என்ற பாடல் சில பிரதிகளில் உள்ளது.

1235. சீர்த்தவீ ரியரா யுள்ளார் செங்கண்மா லெனினு மியானக்
கார்த்தவீ ரியனை நேர்வா ருளரெனக் கருத லாற்றேன்
பார்த்தபோ தவனு மற்றத் தாபதன் தம்பி பாதத்
தார்த்ததோர் துகளுக் கொவ்வான் ஆரவற் காற்ற
[கிற்பார்.

'சீர்த்த வீரியராய் உள்ளார் - மேன்மை பொருந்திய வீரராய் உள்ளவர், செம்கண் மால் எனினும் - சிவந்த விழிகளையுடைய திருமாலாகவேயிருப்பினும், யான் அ கார்த்த வீரியனை நேர்வார் உளர் என கருதல் ஆற்றேன் - நான் அந்தக் கார்த்த வீரியார்ச்சுனனை நிகர்ப்பவர் இருக்கின்றனர் என்று நினைத்தலைச் செய்யேன்; பார்த்தபோது - ஆய்ந்து நோக்குங்கால், அவனும் - அந்தக்கார்த்த வீரியனும், அ தாபதன் தம்பி பாதத்து - அந்தத் தவசியினுடைய தம்பி பாதத்தில், ஆர்த்தது ஓர் துகளுக்கு ஒவ்வான் - ஒட்டிக் கொண்டுள்ளதான ஒரு சிறு துகளுக்கும் நிகராகான்; ஆர் அவற்கு ஆற்றகிற்பார் - (இங்ஙனமிருக்க) அந்த இராமபிரானுக்கு முன்பு நிற்க வல்லவர் யார். மற்று - அசை.

வீரியர் - 'வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்'. தாபதன் - தவசி. 'இருவர் மானிடர் தாபதர்' (ஆரணிய. 565); யுத்த. 1233-உம் காண்க. ஆற்ற கிற்பார் - கில் ஆற்றலுணர்த்தும் இடைநிலை என்பர். கார்த்த வீரியன் - சூரிய குலத்து ஹேஹய நாட்டுச் கிருத வீரியனுக்கும் சுகந்தைக்கும் பிறந்தவன். இவன் தத்தாத்ரேயரிடம் உபதேசம் பெற்று ஆயிரம் கைகள் பெற்

றவன். இராவணன் இவனிடம் தோற்ற வரலாற்றினை உத்தர காண்டத்துக் காண்க.

பி - ம். 1. வீரியனுயுள்ளான், வீரியனுயுள்ள ; மால்முதலோர் ; மற்றைச்.

2. நேர்வர்.

4. துகளும். 25

இதன் பின் 'உற்பத்தி' என்ற பாடல் சில பிரதிகளில்.

1236. முப்புர முருங்கச் செற்ற மூரிவெஞ் சிலையும் வீரன்
அற்புத வில்லுக் கைய வம்பெனக் கொளலு மாகா
ஒப்புவே றுரைக்க லாவ தொருபொரு ளில்லை வேதந்
தப்பின போதும் அன்னான் றனுவுமிழ் சரங்க டப்பா.

'ஐய - ஐயனே! முப்புரம் முருங்க செற்ற - மூன்று புரங்களும் அழியும்படி சுட்டெரித்த, மூரி வெம்சிலையும் - வன்மை வாய்ந்த கொடிய வில்லும், வீரன் - ஆண்மை மிக்க இராமபிரானுடைய, அற்புத வில்லுக்கு - வியக்கும் தன்மைகொண்ட வில்லுக்கு முன்னர், வம்பு என கொளலும் ஆகா - விநோதத்துக்காக ஏற்றற் கும் பொருந்தாது; ஒப்பு உரைக்கலாவது வேறு ஒரு பொருள் இல்லை - அதனுக்கு உவமை கூறத்தக்க வேறு எப்பொருளும் இன்று; வேதம் தப்பின போதும் - நான்மறைகள் முறை திரிந்து பிழைத்தாலும், அன்னான் - அப்பிரானுடைய, தனு உமிழ் சரங்கள் தப்பா - வில் விடுக்கின்ற அம்புகள் தவறமாட்டா.

முப்புரம் முருங்கச் செற்றது: சிவபிரான் வீரச் செயல்களில் ஒன்று; ஆரணிய. *139, 258, 458, 815, 905, 921, 999*; கிட்கிந்தா. *351, 452, 530*; சுந்தர. *139*. யுத்த. கும்ப. *36*; மூரிவெஞ்சிலை - மேருமலை. வேதம் தப்பியபோதும் என்றது வேதம் முறைபிறழாது என்றபடி (ஒப்பு): 'நால்வேத நெறி திரியினும் திரியாச் சுற்றமொடு' (புறநா. 2); 'வேலை கரையிழந்தால் வேதம் நெறிபிறழ்ந்தால், ஞால முழுதும் நடுவிழந்தால்' (நள. 222); ஒரு வில் ஒரு இல் ஒரு சொல் இராமபிராற்கென்ற உரையும் காண்க.

பி - ம். 1. முருங்கச் சுட்ட, மொருங்கச் சுட்ட.

2. அப்புதை வில்லுக்கு ; அம்மா ; ஆற்ரு. 26

1237. உற்பத்தி யயனே யொக்கும் ஓடும்போ தரியே யொக்குங்
கற்பத்தி னரனே யொக்கும் பகைஞரைக் கலந்த காலைச்
சிற்பத்தின் நம்மாற் பேசச் சிறியவோ என்னைத் தீராத்
தற்பத்தைத் துடைத்த வென்றாற் பிறிதொரு சான்று
[முண்டோ.

'உற்பத்தி அயனே ஒக்கும் - (அந்த இராமபிரானுடைய அம்புகள்) வெளிப்படும்போது (நான்கு முகங்களுடன் கூடிய) பிரமதேவனையே நிகர்த்திருக்கும், ஓடும்போது அரியே ஒக்கும் - (பகைவரை நோக்கி) ஓடுங்கால் (ஆயிரம் முகங்களையுடைய) திருமாலையே நிகர்த்து நிற்கும், பகைஞரைக் கலந்த காலை - விரோதிகளை (அழிக்குமாறு) சென்று சேர்ந்தபோது, கற்பத்தின் அரனே ஒக்கும் - ஊழிக்காலத்து எல்லாவற்றையும் அழிக்கின்ற, பிரளயகால உருத்திரனையே நிகர்த்திருக்கும், சிற்பத்தில் - (அந்த வாளிகள்) ஆற்றும் தொழிற்றிறத்தில், நம்மால் பேச சிறியவோ - நம்மால் எடுத்துரைக்கும்படி அற்பமானவையோ? என்னை - என்னைக்கூட, தீரா தற்பத்தை துடைத்த என்றால் - என்றும் நீங்காத அகங்காரத்தை அடியோடு ஒழித்த எனின், பிறிது ஒரு சான்றும் உண்டோ - வேறு ஒரு சாட்சியும் (அவற்றின் திறமைக்கு) வேண்டப்படுவதோ? ஓகாரம் - வினா; எதிர்மறைப் பொருள்.

'ஓடும்போதரியே யொக்கும்' சகச்சிர சீர்ஷா புருஷ: என்ற புருடசூக்தம் காண்க. சிற்பம்: தொழிற்றிறம். தற்பம்: வடசொல்.

பி - ம். 1. உற்பத்தில்.
2. காயும் போழ்தில்.
3. சிற்பத்தை; பேசச் சிறிதரோ; என்னுந்தீராத்.
4. தற்பத்தைத் துடைக்கும்.



1238. குடக்கதோ குணக்க தேயோ
கோணத்தின் பால தேயோ
தடத்தபே ருலகத் தேயோ
விசும்பதோ எங்குந் தானே

வடக்கதோ தெற்க தோவென்
றுணர்ந்திலென் மனிதன் வல்வில்
இடத்ததோ வலத்த தோவென்
றுணர்ந்திலே னியானு மின்னும்.

'மனிதன் வல்வில் - மானுடன் ஆன இராமபிரானுடைய வலிய வில், குடக்கதோ குணக்கதேயோ - மேற்குப் புறத்ததோ கிழக்கு புறத்ததோ, கோணத்தின் பாலதேயோ - மூலைத்திக்கின் கண் உள்ளதோ, தடத்த பேர் உலகத்தேயோ - அகன்ற பெரிய உலகத்தில்தான் உள்ளதோ, விசும்பதோ - ஆகாயத்தின்கண் உள்ளதோ? எங்கும் தானோ - எல்லாப் பக்கங்களிலுந்தான் வியாபித்துள்ளதோ' வடக்கதோ - வடக்கு புறத்துள்ளதோ, தெற்கதோ - தென்புறத்தில் உள்ளதோ? என்று உணர்ந்திலென் - என்று (நான்) அறிந்திலேன், '(அல்லாமலும் அவ்வில்) வலத்ததோ இடத்ததோ என்று - வலது பக்கத்துள்ளதோ இடது பக்கத்துள்ளதோ என்று, யானும் இன்னும் உணர்ந்திலேன் - நான்கூட இந்நேரம் வரையில் தெரிந்துகொண்டேனில்லை'.

பல திசைகளினின்றும் அம்புகளை மாரிபோன்று பொழிதலால் அவை இன்ன திசையிலிருந்து வருபவை என்றும், இராமபிரானுக்கு இடத்திலிருந்தா வலத்திலிருந்தா வருவன என்றும் இராவணன் தெளியமாட்டானாயினன் என்று அந்த அம்பு வீச்சின் சிறப்பு கூறப்பட்டது. யானும்: உம்மை உயர்வு சிறப்பு. உலகத்ததேயோ என்பது உலகத்தேயோ எனத் தொகுத்தது.

பி - ம். 3. அறிந்திலன்; மனிதன் கையில்.
4. அறிந்திலேன். 28

1239. ஏற்றமொன் றில்லை யென்ப தேழைமைப் பால தன்றே
ஆற்றல்சால் கலுழ னேதா னூற்றுமே யமரி னூற்றல்
காற்றையே மேற்கொண் டானே கனலையே கடாவி னானே
கூற்றையே யூர்கின் றானே குரங்கின்மேற் கொண்டு
[நின்றான்.

'காற்றையே மேல் கொண்டானோ - வாயுவினையே வாகனமாக ஏற்றுள்ளானோ? கனலையே கடாவினானோ - அக்கினியையே ஊர்ந்து செலுத்துகின்றானோ? கூற்றையே ஊர்கின்றானோ -

யமனையே பரியாகக் கொண்டு செல்கின்றானோ! (எனின்) - இவை யொன்றினையும் வாகனமாக ஏற்றானல்லன்), குரங்கின்மேல் கொண்டு நின்றான் - ஒரு குரங்கின் மீது தான் ஏறி நின்றான்; அமரின் ஆற்றல் - அந்த ஒரு குரங்கு போரில் புரியும் வலிய செயலை, ஆற்றல்சால் கலுழனே தான் ஆற்றுமே - வலிமை சான்ற கருடனே தான் செய்யக்கூடுமோ! (இத்தகைய வீரனைக் குறித்து), ஏற்றம் ஒன்று இல்லை என்பது - எவ்விதமான உயர்வும் இல்லை என்று மொழிவது, ஏழைமை பாலது அன்றே - அறிவின் மையின் பாற்படும் அல்லவோ?

சிறிய திருவடியான அநுமன் ஆற்றிய செயலைப் பெரிய திருவடியான கருடனும் ஆற்றற்கில்லை என வியந்தான். மற்றும் அநுமனுடைய தீவிரச் செயல்கட்குக் காற்றையும், கனலையும், கூற்றையும் உவமித்தான். வேகத்திற்குக் காற்றும், அழித்தற்குத் தீயும், உயிர் கவர்தற்குக் கூற்றும் கூறினன். இராமபிரானை அநுமன் தன் தோளின்மீது தாங்கியதை (யுத்த. 1143)-லும் காணலாம்.

பி - ம். 3. வழிக் கொண்டானோ; கனலையே மேற்கொண்டானோ.
4. கூற்றையே மேற்கொண்டானோ.

29

1240. போயினித் தெரிவ தென்னே
பொறையினு லுலகம் போற்றும்
வேயெனத் தகைய தோளி
யிராகவன் மேனி நோக்கித்
தீயெனக் கொடிய வீரச்
சேவகச் செய்கை கண்டால்
நாயெனத் தகுது மன்றே
காமனு நாமு மெல்லாம்.

'இனி போய் தெரிவது என்னே - இனி போர்க்களம் சென்று அறியவேண்டுவது என்ன இருக்கின்றது? பொறையினுல் உலகம் போற்றும் - பொறுமைப் பண்பில் நிலமகளும் புகழத்தக்க, வேய் என தகைய தோளி - மூங்கில் எனவே பகரத்தக்க தோளினை யுடைய சீதாதேவி, இராகவன் மேனி நோக்கி - இராமபிரானுடைய உடலைக் கண்ணுற்று, தீ என கொடிய வீர சேவகம் செய்கை கண்டால்-நெருப்புபபோலக் கொடுமை வாய்ந்த (அவனது) ஆண்மைத்

தொழிலேயும் கண்டிருத்தலால், காமனும் நாமும் எல்லாம் - மன்மத னும் நாமும் ஆகிய எல்லோரும், நாய் என தகுதும் அன்றே - நாயென்று கூறுதற்குத் தகுவோம் அல்லவோ?

மேனி வனப்பில் இராமனேடொப்ப நோக்கின் காமன் நாயொப் பான். வீரத்தில் நான் நாயெனத் தக்கேன் என்னநிரை நிரை யாக்கிப் பொருள் கொள்க. இங்கு 'தன்பான்மனேயாள்' (சீவக. 443) என்ற சிந்தாமணிச் செய்யுள் ஒப்பு நோக்கத்தகும். பொறையினுல் உலகம் போற்றும் தோளி; நிலத்தைப் பொறைக்கு எடுத்துக்காட் டாக்குவது மரபு. 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை யிகழ்வார்ப் பொறுத்தல் தலே' (குறள். 151); நன்னூல் பாயிரமும் காண்க. 'இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண் டேன்' (சுந்தர. 1273); 'பத்தினித் தவத்துளாளே' (யுத்த. மாயா சீதை. 49); 'தய்யலேத் துணையிலாளேத் தவத்தியை' (யுத்த. மாயாசிதை. 66); 'உற்ற நோய் நோன்றல்' தவத்தின் உருவாதல் அறிக.

பி - ம். 1. தெரிவ தென்றே; உலகம் போலும்.

2. தகைய தோளிக்கு; நோக்கில்.

3. வீரச் சேவகன், விரஞ் சேவகன்.

4. தகுவது, தகுமது; காமனும் நானும். 31

1241. வாசவன் மாயன் மற்றை மலருளோன் மழுவா ளங்கை
ஈசனென் றினைய தன்மை யிளிவரு மிவரா லன்றி
நாசம்வந் துற்ற போது நல்லதோர் பகையைப் பெற்றேன்
பூசல்வண் டுறையுந் தாரா யிதுவிங்குப் புகுந்த தென்றான்.

'பூசல் வண்டு உறையும் தாராய் - ரீங்காரம் செய்துகொண்டு வண்டுகள் தங்கும் மாலேயை உடையவனே! நாசம் வந்து உற்ற போது - எனக்கு அழிவு நேர இருக்கும் போழ்தினில், வாசவன் - இந்திரன், மாயன் - திருமால், மற்றை மலர் உளோன் - மற்றும் தாமரை மலரில் வதியும் பிரமன், மழுவாள் அம் கை ஈசன் - மழு என்னும் படையை அழகிய கையில் ஏந்திய சிவன், என்ற - என்ற, இனைய - இப்படிப்பட்ட, இளிவரும் தன்மை இவரால் அன்றி - இகழத்தக்க இயல்பினையுடைய இவர்களால் அன்றி, நல்லது ஓர்

பகையை பெற்றேன் - சிறந்ததொரு பகைவன் கிடைக்கப் பெற்றேன், இது இங்கு புகுந்தது - இதுவே இங்கு நிகழ்ந்தது', என்றான் - என்று இராவணன் மாலியவானிடம் சொன்னான்.

வாசவன் - அஷ்டவசுக்களுள் தலைவனான இந்திரன்: வாசவன் முதலானோரை யெல்லாம் தனது திக் விசயத்தில் அடிப்படுத்தவ னாதலின் அவர் அனைவரையும் ஒரு பொருட்டாகக் கருதாமல், அவர்கட்கு எல்லாம் மேலானவன் இராமபிரான் எனப் புகழ்ந் தனன் அரக்கர்கோன். 'குட்டுப்பட்டாலும் மோதிரக்கையினால் குட்டுப்பட வேண்டும்' என்ற முதுமொழிக்கேற்ப, 'நாசம் வந்துற்ற போது நல்லதோர் பகையைப் பெற்றேன்' என்றான். (ஒப்பு); (யுத்த இந்திரசித்து வதை. 9-11) காண்க. 'மாரவேள் கொதிக்கு மம்பால், பொன்றலின் இராம னம்பாற் பொன்றலே புகழுண் டன்றோ' (ஆரணிய. 757) என இராவணன் கூறியதும் காண்க. 'நல்லதோர் பகையைப் பெற்றேன்' என்றது கொண்டு, இராவணன் வைகுண் டத்தில் ஜயன் என்ற பெயருடன் காவலனாக இருந்ததும், துர்வாச முனிவன் சாபம் பெற்று மூன்று பிறப்புக்கள் திருமாலின் எதிரி யாகப் போந்து பின்னர் உய்ந்ததும் பிறவும் தெளியலாம்: இந்திர சித்தினிடம் 'என்னையே நோக்கி நானிந் நெடும் பகை தேடிக் கொண்டேன்' (யுத்த. இந்திரசித்து. 8) என்ற வரியில் என்னையே, நெடும்பகை என்ற தொடர்களின் உட்கருத்தினையும் உய்த் துணர்க. 'நோற்றோர் மன்ற நின்பகைவர்' (புறநா. 26) என்றது காண்க.

பி - ம். 1. திருமால்.
2. ஈசனென் றினையரான், யினையராய; வெறும்வலி யவரால், விழிவரு மிவரால்.
3. உற்றதேனும்.
4. வண்டறையும், வண்டரற்றும். 31

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

என்றெடுத் துரைத்தோன் பின்னு முளங்கனன் றினைய
[சொல்வான்
வன்றிறல் மனிதன் வெம்போர் எவரினும் வலிய னேனும்
பொன்றுதலில்லா வென்னைப் போர்வெலற் கெளிதோ காலம்
ஒன்றல வுகங்கள் கோடி யுடற்றினும் ஒழிவ துண்டோ?

மானிட னென்றே நாணிக் கடவுள்மாப் படைகள் யாதும்
யானெடுத் தேகல் விட்டேன் இன்றைவெஞ் சமரம் போகத்
தானம ரழிந்தே னென்னத் தக்கதோ வென்று னந்த
மானமில் அரக்கன் பின்னர் மாலிய வானுஞ் சொல்வான்.

முப்புர மெரித்தோ னாதி தேவரு முனிவர் தாமும்
தப்பற வுணர்தற் கெட்டாத் தருமமே கைவி லேந்திப்
யிப்பிறப் பிராம னென்றே யெம்மனோர் கிளையை யெல்லாம்
துப்பற முருக்க வந்தான் என்றசொல் பிழைப்ப துண்டோ?

1242. முன்னுரைத் தேனை வாளா
முனிந்தனை முனியா வும்பி
இன்னுரைப் பொருளுங் கேளா
யேதுவுண் டெனினு மோராய்
நின்னுரைக் குரைவே றுண்டோ
நெருப்புரைத் தாலு நீண்ட
மின்னுரைத் தாலு மொவ்வா
விளங்கொளி யலங்கல் வேலோய்.

(இராவணன் சொற்களைக் கேட்ட மாலியவான்), 'நெருப்பு உரைத்தாலும் நீண்ட மின் உரைத்தாலும் - நெருப்பினை உரையிட்டாலும், நீண்ட மின்னலை உரையிட்டாலும், ஒவ்வா - சிறிதும் ஒப்பாகாவாறு, விளங்கு ஒளி அலங்கல் வேலோய் - விளங்குகின்ற ஒளியினையுடைய வெற்றிமாலையணிந்த வேலைத் தாங்கியவனே! முன் உரைத்தேனை - முன்னர் (இராமபிரான் வன்மையைச்) சொன்ன என்னை, வாளா முனிந்தனை - வீணாகச் சினந்தனை; முனியா உம்பி - என்றும் சினவாத உன் தம்பி வீடணனுடைய, இன் உரை பொருளும் கேளாய் - இனிய சொற்களின் கருத்தினையும் செவியேற்றாயில்லை; ஏது உண்டு எனினும் - (நாங்கள் இவ்வாறு மொழிதற்குத்தக்க) காரணங்கள் உள்ளன எனினும், ஓராய் - நீ உணராது விடுத்தனை; நின் உரைக்கு உரை வேறு உண்டோ - உன்னுடைய வார்த்தைக்கு மறுவார்த்தை உள்ளதோ?

முன்னுரைத்ததும் இராவணன் முனிந்ததும் : முறையே யுத்த. 757-766 ; 759-இலும் காண்க, சினம் என்ற தீய பண்பில்லாதவன்

ஆதலின் வீடணன் 'முனியா வும்பி' எனப்பட்டான். உம்பி - உன் தம்பி என்பதன் மரூஉ. உம்பி இன்னுரை. யுத்த. 83-110ல் காண்க. இரணியன் வதைப்படலம் முழுவதுமே இன்னுரையின் பாற்படுவதும் அறிக. 'ஈதாகு முன்னிகழ்ந்த தெம்பெருமா னென்மாற்றம், யாதானு மாக நினையா திகழ்தியேல், தீதாய் விளைதல்நனி திண்ணமெனச் செப்பினன்' (யுத்த. 305) என்றதும் காண்க. அகந்தை மீதூர, ஏது வுண்டெனினும் உணர மாட்டான் என்பான் 'ஏது உண்டெனினும் ஓராய்' எனப்பட்டது. (ஒப்பு); 'கோபமுண் டெழுந்தும் கொல்லான் காட்டுமேற் காட்சி கொள்வான்' (யுத்த. 248) என்று இரணியனும் பிரமாணம் வேண்டி நின்றது காண்க. ஏதுக்களாலும் எடுத்துமொழியாலும், சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி' (தேவா. 1178 : 5); நீ சொல்வதற்கு மறு மாற்றம் கூறற்குண்டோ என்றான். நெருப்புரைத்தாலும், மின்னுரைத்தாலும் என்ற இடங்களில் உரைத்தல் - மாற்றறியும்படி நல்ல உலோகங்களிலும் பிறவற்றிலும் தேய்த்துப் பார்த்தல்; இதனை மச்சம் காட்டுதல் என்பர் : 'இடை தான் தளர்ந்தது மச்சமும் காட்டுவ தில்லையென்றால், மடவாள் தனத்தை அடியேனெவ் வாறு மதிப்பதுவே' (ஒருதுறைக்.); உலோகங்களின் தரமறிய உரைத்து நோக்கும் வழக்கினை ஒட்டி இங்கு நெருப்பையும் மின்னையும் உரைத்து நோக்கி வேலின் ஒளி விசேடம் காணப்பட்டது என்க. அலங்கல் வேல் - அசைந்து ஒளி விடுகின்ற வேல் என்க. வெற்றி மாலை சூடிய வேலுமாம்.

பி - ம். 1. முன்னுரைத்தோனை.
4. விளங்கொளி. 32

1243. உளைவன வெனினு மெய்ம்மை
யுற்றவர் முற்று மோர்ந்தார்
விளைவன சொன்ன போதுங்
கொள்கிலாய் விடுதல் கண்டாய்
கிளைதரு சுற்றம் வெற்றி
கேடிலாக் கல்வி செல்வம்
களைவரு தானை யோடுங்
கழிவது காண்டி யென்றான்.

'உளைவன எனினும் - வருத்தம் விளைக்கக்கூடியன வென்றா லும், மெய்ம்மை உற்றவர் - உண்மையான உறவினர், முற்றும் ஓர்ந்தார் - முடிவுபோக ஆராய்ந்தனராய், விளைவன சொன்ன போதும் - மேல் நிகழக்கூடியவற்றைப் பகர்ந்த பொழுதிலும், கொள்கிலாய் விடுதல் கண்டாய் - (அவற்றைச் செவியேற்காது) விட்டிடுதலைச் செய்தனை; (அதன் விளைவாக), கிளை தரு சுற்றம் - தொகுதியாக அமைந்த பந்துக்களும், வெற்றி - வென்றியும், கேடு இலா கல்வி செல்வம் - அழியாத கல்வியும், செல்வம் - பொருட் செல்வம் முதலிய பல செல்வங்களும், களைவரு தானையோடும் கழி வது காண்டி - களைப்பை அடைகின்ற சேனையுடனே அழிந்து ஒழி வதை நீ காண்பாய்?' என்றான் - என்று மொழிந்தான் மாலியவான்.

அழ அழச் சொல்வார் தம்மவா சிரிக்கச் சிரிக்கச் சொல்வார் பிறர் என்பது மூதுரை; (ஒப்பு): 'வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்றுரைக்கும் வீரர்' (அயோத்தி. மந்திர. 9); 'இடிப் பாரை யில்லாத வேமரா மன்னன், கெடுப்பாரை யின்றிக் கெடும்' (குறள். 448) 'இடிக்கும் துணையாரை யாள்வாரை யாரே, கெடுக்குந் தகைமையவர்' (குறள். 447); இராவணனுக்கு உறுதி கூறுத வரில்லை; யுத்த. 949. உரைக்குறிப்புக் காண்க. யுத்த. 316, 317ம் காணத்தகும். சுந்தர. 449-465ல் உள்ள சீதாதேவியின் தெளிந்த அறிவுரையும் இங்குக் காணத்தகும். நாலடி. புல்லறிவாண்மை 1, 2 செய்யுட்களை இங்கு ஒப்பு நோக்குக. மற்றும் யுத்த. 316, 317-ல் கூறப்பட்ட வீடணன் அறவுரையும்; 'உன்மேற் காதலா லுரைத்தேன்' (யுத்த. இந்திரசித்து வதை. 6) என்றதும் காண்க. காண்டி - ஏவல் வினைமுற்று.

பி - ம். 1. உற்றவா; முற்று மோர்ந்து.
3. கொள்கிலை விடுதி, கொள்கலாய் விடுதல்.
3. கிளைவரும்; கிழமைதம், கீழ்மையில்; கேண்மை நங்கல்வி.
4. களைவது; கழிவதும். 33

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஆதலின் இறைவ கேட்டி யவன் பெருந் தேவி யான
மாதினை விடுத்து வானோர் முனிவரர் வருந்தச் செய்யும்
தீதினை வெறுத்துத் தேவர் தேவனாற் சிலையி ராமன்
பாதமே பணியின் நம்பால் பகைவிடுத் தவன்போம் என்றான்,

## அப்போது மகோதரன் வந்து உறுதி கூறல்

1244. ஆயவ னுரைத்த லோடு மப்புறத் திருந்த வான்ற
மாயைகள் பலவும் வல்ல மகோதரன் கடிதின் வந்து
தீயெழ நோக்கி யென்னிச் சிறுமைநீ செப்பிற் றென்ன
ஓய்வுறு சிந்தை யானுக் குருதபே ருறுதி சொன்னான்.

ஆயவன் உரைத்தலோடும் - அந்த மாலியவான் மொழிந்த வுடனே, அ புறத்து இருந்த - அங்கு அருகில் அமர்ந்திருந்த, ஆன்ற - கல்வி கேள்விகளால் உயர்ந்தவனும், மாயைகள் பலவும் வல்ல - வஞ்சனைச் செயல்களில் பலவற்றிலும் தேர்ந்தவனுமான, மகோதரன் கடிதின் வந்து - மகோதரன் விரைந்து வந்து, தீ எழ நோக்கி - (அந்த மாலியவானைக் கண்களில்) நெருப்புப் பொறி பிறக்கும்படி பார்த்து, 'இ சிறுமை நீ செப்பிற்று என் - இவ்வாறு சிறுமையாக நீ பகர்ந்தது என்', என்ன - என்று, (அவனை ஒறுத்துப் பின்பு) ஓய்வுறு சிந்தையானுக்கு - தளர்ந்த உள்ளத்தவனான இராவணனுக்கு, உருத (அந்தக் காலத்திற்குச் சற்றும் பொருந்தாத, பேர் உறுதி - பெரிய உறுதிமொழிகளை, சொன்னான் - செப்பினான்.

மாயம் வல்லர் யுத்த. 398 காண்க. பொதுவாகவே அரக்கர் மாயைகள் பலவும் வல்ல மகோதரன்: 'தாயை யாயினுஞ் சலித்திடு வஞ்சனை தவிரா, மாயையா னுளன் மகோதர னென்றொருமறவோன்' (யுத்த. 493). 'உணர்த்துவ னின்றே நன்றொருபாயத்தினுறுதி மாயை, புணர்த்துவன்...........மருத்தனை யுருவ மாற்றி (யுத்த. மாயாசனக. 3) என மகோதரனே கூறுவதும், 'மருத்தனைச் சனக னாக்கி, வாய்திறந் தரற்றப் பற்றி மகோதரன் கடிதுவந்த' (யுத்த. மாயாசனக. 31) என்ற வரிகளும் காண்க. இராவணனைப் போர் புரியுமாறு இவன் கூறிய வீரவுரையை யுத்த. 33-38ல் காண்க. உருத உறுதி - என்றதில் முரண் தொடை காண்க. பெருவயிறு படைத்தது பற்றி மகோதரன் எனப்பட்டனன் போலும், மகா +

உதரான், வடமொழி தீர்க்கசந்தி. கூறும் உறுதியை அடுத்து வரும் ஏழு கவிகளில் காண்க.

பி - ம். 1. அப்புறத் திருந்தான் ; ஆண்ட.

2. மாய் கைகள்.

3. நீயென ; விழித்து நோக்கி, நோக்கி நீவிர், நோக்கி நீயிர், நோக்கி யித்த, நோக்கி யென்னீ ; சிறுமையென்.

4. ஒயுறு ; சொல்வான். 34

1245. நன்றியீ தென்று கொண்டால் நயத்தினை நயந்து வேறு
வென்றியே யாக மற்றுத் தோற் றுயிர் விடுத லாக
ஒன்றிலே நிற்றல் போலா முத்தமர்க் குரிய தொல்கிப்
பின்றுமே லவனுக் கன்றே பழியொடு நரகம் பின்னை.

'நயத்தினை நயந்து - இனிய தொன்றை விழைந்து, ஈது நன்று என்று கொண்டால் - 'இது நன்மை விளைப்பது' என்று ஓர் காரியத்தை மேற்கொண்டால், வேறு வென்றியே ஆக - தோல்விக்குமாறான வெற்றியே கிட்டட்டும் ; மற்று - அஃதல்லாத, தோற்று உயிர் விடுதல் ஆக - தோல்வியுற்று உயிரைவிடும் நிலைமையே நேரட்டும் ; ஒன்றிலே நிற்றல் போலாம் உத்தமர்க்கு உரியது - (தாம் எடுத்துக்கொண்ட அந்த) ஒரு செயலிலேயே உறுதியாக நிற்பதே, மேன்மக்கட்கு உரிய செயலாகும் ; ஒல்கி - மனம் சோர்ந்து, பின்றுமேல் - எடுத்துக்கொண்ட காரியத்தில் முயலாது பின்வாங்குவானாகில், அவனுக்குப் பின்பு பழியும் நரகமும் அன்றே - அங்ஙனம் புரிபவனுக்குப் பின்னர் பழியும் அதன் விளைவாக நரகமும் கிட்டுமல்லவோ?

நயம் நீதி எனினுமாம் : வெல்லினும் தோற்பினும் முனைந்த காரியத்தைக் கைவிடலாகாது என்றது காண்க. (ஒப்பு): யுத்த. 411 ; உத்தம வீரர்கள் பலபடச்சிந்தியார் : ஒருகால் தோல்வியே நேரினும், மேற்கொண்ட ஒரே துறையில் நிற்பர் எனப்பட்டது. ஹதோவா பிராப்ஸ்யஸே ஸ்வர்கம் ஜித்வாவா போக்ஷ்ய ஸேமஹீம். (பகவற்கீதை. 237).

பி - ம். 1. கொண்ட, கொண்டு, கொண்டார் ; நயந்தனை, நயக்கலை.

2. மற்றுஞ், மற்றோர், பாறுஞ், வேறு, வென்றியேயாக வாவிவிடுதலே வேறிங்.

4. பின்றுமே லவருக்கன்றே. 35

1246. திரிபுர மெரிய வாங்கோர் செஞ்சரந் துரந்த செல்வன்
ஒருவனிப் புவன மூன்று மோரடி யொடுக்கிக் கொண்டோன்
பொருதுனக் குடைந்து போனூர் மானிடர் பொருத [போர்க்கு
வெருவுதி போலும் மன்ன கயிலையை வெருவல் கண்டாய்.

'திரிபுரம் எரிய - முப்புரங்கள் தீப்படுமாறு, ஆங்கு - அங்கே, ஓர் செம்சரம் துரந்த செல்வன் - ஒப்பற்ற செவ்விய வாளியை விடுத்த சிவபெருமானும், ஒருவன் - தான் ஒருவனாக, இ புவனம் மூன்றும் - இந்த உலகங்கள் மூன்றையும், ஓர் அடி ஒடுக்கி கொண்டோன் - ஓரடியிலே அடங்குமாறு செய்த திருமாலும், பொருது - போர் புரிந்து, உனக்கு உடைந்து போனூர் - உனக்குத் தோற்றூர்கள்; மன்ன - அரசே! கயிலையை வெருவல் கண்டாய் - கயிலை மலையை அசைத்தவனே; மானுடர் பொருத போர்க்கு வெருவுதி போலும் - மனிதர்கள் செய்த போர்க்கு நீ அஞ்சுவாய் போலும்.

மானிடர் செய்கின்ற போருக்கு நீ அஞ்ச வேண்டுவதில்லை என்றான். திரிபுரம் எரித்தது. யுத்த. 1236 உரைக் குறிப்புக் காண்க. தனிச்சரம் - திருமால். நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம், பாணமென்றால் மண்தின்ற பாணமே' (தனிப்பா. இரட்டையர்.); எல்லாச் செல்வங்களும் உடைய செல்வன் - சிவன். புவனம் மூன்றும் ஓரடி யொடுக்கிக் கொண்டது; பால. வேள்விப் படலத்து மாவலி வரலாற்றிற் காண்க. 'உலகெலா முன்னடி யடக்கி யோரடிக், கலகிலா தவ்வடி' (பால. வேள்வி. 37). 'ஒரு குறளா யிருநில மூவடி மண் வேண்டி' (பெரியதிரு. 3 : 4); 'மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால், ஞால முழுதும் நயந்தளந்தான்' (திருவள்ளுவமாலை. 6). 'ஓங்கி யுலகளந்த வுத்தமன் பேர் பாடி' (திருப்பாவை. 2). மற்றும் ஆரணிய. 1014; சுந்தர. 33; கயிலையை வெருவல் கண்டது; ஆரணிய. 258, 319, 327 முதலியவற்றிற் காண்க, 'கங்கைசடை வைத்தவ னெடுங்கயிலை வெற்போர், அங்கையி னெடுத்தவென தாடெழில் மணித்தோள்' (ஆரணிய. 742); என இராவணனே கூறுதல் காண்க. போலும்: ஒப்பில் போலி. கயிலையை வெருவல் கண்ட வரலாறு; உத்தர காண்டத்துக் காண்க.

பி-ம். 1. திரிபுரம் தீய; தனிச்சரந்.
2. ஒருதனிப்; புவன மெல்லாம்: ஈரடி.
4. போலு மானக், மாலக், மேனுட்.

1247. வென்றவர் தோற்பர் தோற்றோர் வெல்குவர் எவர்க்கும் [மேலாய்
நின்றவர் தாழ்வர் தாழ்ந்தோ ருயர்குவர் நெறியு மஃதே
என்றவ ரறிஞ ரன்றே ஆற்றலுக் கெல்லை யுண்டோ
புன்றவ ரிருவர் போரைப் புகழ்தியோ புகழ்க்கு மேலோய்.

'வென்றவர் தோற்பர் - வெற்றியுற்றவர் தோல்வியுறுவர்; தோற்றோர் வெல்குவர் - தோல்வியுற்றவர் வெல்வர்; எவர்க்கும் மேலாய் நின்றவர் தாழ்வர் - எவர்க்கும் மேம்பட்டு நின்றவர் தாழ்வினை எய்துவர்; தாழ்ந்தோர் உயர்குவர் - தாழ்ந்தவர்கள் மேம்பாடுறுவர்; நெறியும் அஃதே - (உலக) நடைமுறையும் அத்தகையதே; என்றவர் அறிஞர் அன்றே - என்று கூறியவர் அறிஞர் அல்லவோ? ஆற்றலுக்கு எல்லை உண்டோ - வன்மைக்கு ஓர் வரம்புள்ளதோ? புகழ்க்கு மேலோய் - (எல்லோருடைய) புகழ்ச்சிக்கும் மேம்பட்டிருப்பவனே! புல் தவர் இருவர் போரை புகழ்தியோ - புல்லிய தவத்தையுடைய இராம இலக்குவரின் போரினைப் புகழ்ந்து பேசுகின்றனையோ? ஏ - தேற்றம். ஓ - எதிர் மறை.

தண்டிற்குச் சென்றால் இரண்டினில் ஒன்று என்பர். வென்றவர் தோற்பதும் தோற்றோர் வெல்வதும், உயர்ந்தவர் தாழ்வதும் தாழ்ந்தவர் உயர்வதும், உலகில் சாதாரண நிகழ்ச்சிகள். புகழ்க்கு மேலோய் - புகழ்க் கடங்காதவனே.

பி - ம். 2. தாழ்ந்தோ ருயருவர்; தாழ்ந்தார்; நேயம், நெறியின், மீதே, ஈதே.

3. என்றனர்.

4. புன்றொழில்; மனிதர்; புகலுதி.

37

1248. தேவியை விடுதி யாயின் திறலது தீரு மன்றே
ஆவியை விடுத லன்றி யல்லதொன் றுவ துண்டோ
தாவரும் பெருமை யம்மா நீயினித் தாழ்த்த தென்னே
காவல விடுதி யின்றிக் கையறு கவலை நோய்தின்.

'தேவியை - சீதையை, விடுதி ஆயின் - சிறை வீடு செய்வாயாகில், திறல் அது தீரும் அன்றே - (உனது) வன்மைப் புகழ் நீங்கி

விடுமல்லவோ? (அங்ஙனம் விடாமற்போனால் நிகழக்கூடியது) ஆவியை விடுதல் அன்றி அல்லது ஒன்று ஆவது உண்டோ - உயிரை விடுத்தலல்லது வேறொன்று நிகழ்வதுண்டோ? தா அரும் பெருமை - இதுகாறும் அழிதலில்லாத (உனது) பெருமையை, இனி - இப்போது, நீ தாழ்த்தது என்னே - நீ இழித்துப் பேசுவது எது பற்றி; காவல - அரசே! இகை அறு கவலை இன்று நொய்தின் விடுதி - இந்தச் செயலறுவதற்குக் காரணமான கவலையை இப்பொழுது விரைவினில் விட்டிடுவாயாக. அன்றே - அசை; தேற்றமுமாம். ஓ - வினா. அம்மா - வியப்பிடைச்சொல்.

கவலையை விட்டொழிக்குமாறு இராவணனுக்கு மகோதரன் உறுதி கூறினன். தேவியை விடுவதால் ஆண்மை மாசுபடும். விடாவிடின் முடிவாக நேரக் கூடியது மரணம் தான். உயிரிற் சிறந்தது மானம் என்றான். 'மீதெழு மொக்கு ளன்ன யாக்கையை விடுவ தல்லால், சீதையை விடுவ துண்டோ விருபது திண்டோ ளுண்டாய்' என்றும், 'விட்டனன் சீதை தன்னை யென்னலும் விண்ணோர் நண்ணிக், கட்டுவ தல்லாற் பின்னை யானெனக் கருது வாரோ, பட்டனன் என்ற போது மெளிமையிற் படுகிலேன் யான்' (யுத்த. இந்திரசித்து. 9, 11) என்றும் இராவணனே பின்னர்த்தன் துணிபுரைத்தமை காண்க. கையறு கவலை; செயலற்றேங்குவதற்குக் காரணமான கவலை. 'அவலக் கவலை கையா றழுங்கல்' (மணி. 4 : 116) என்றது காண்க. 'காணவுயிர்க்கும் கையற்றேங்கி' (மணி. 3 : 89).

பி - ம். 1. நீருமன்றிமை, நீருநின்றிறலும், நீருமன் சிறுமை; அன்றேல்.
2. விடுவதன்றி; அல்லாலன்றிமற்று.
3. பெருமையையா; நீயிங்குத், யிறை; தாழ்ந்தது.
4. காவலன்; கவற்பி.

38

1249. இனியிறை தாழ்த்தி யாயி னிலங்கையும் யாமு மெல்லாம்
கனியுடை மரங்க ளாகக் கவிக்குலங் கடக்குங் காண்டி
பனியுடை வேலைச் சின்னீர் பருகினன் பரிதி யென்னத்
துனியுழந் தயர்வ தென்னே துறத்தியாற் றுன்ப மன்னே.

'இனி இறை தாழ்த்தி ஆயின் - இனி ஒரு நொடியளவேனும் (போர் புரியாது) தாமதிப்பாயாகில், இலங்கையும் யாமும் எல்லாம்- இலங்கை நகரமும் நாங்களும் எல்லாம், கனி உடை மரங்கள் ஆக கவிகுலம் கடக்கும் காண்டி - பழங்களைக் கொண்ட மரங்களை யழிப்பதுபோன்று வானரக் குழுக்கள் வென்று அழித்து விடும்; (இதனைக்) காண் : பனி உடை வேலை சின்னீர் - குளிர்ச்சி பொருந்திய கடலின் சிறிய நீரை, பருதி பருகினன் என்ன - சூரியன் குடித்தான் என்று, துனி உழந்து - வெறுப்புக் கொண்டு, அயர்வது என்னோ - மனம் தளர்வது எதன்பொருட்டு? துன்பம் துறத்தி - துயரத்தை விட்டுவிடுவாயாக? ஆல் மன் ஓ; அசைகள். அயர்வதென்னோ; ஒகாரம் வினா.

குரங்குகள் பெரும்பாலும் அழிப்பவை கனியுடை மரங்களாகலின் உவமைப் பொருத்தம் உணர்க. நம் சேனைமிகப் பரந்தது; இராமன் சேனையால் அழிவுண்ட அரக்கர் சேனை மிகவும் குறைவு; ஆகவே கவலல் வேண்டாம் என்பது கருத்து. பரிதி என்பதில் சூரிய குலத்து இராமன் என்ற குறிப்பும் காண்க. சின்னீர்; சீவக. 2344; சின்னீர் - வற்றியரித்துச் செல்லும் நீர்; 'வகிர்படு மழைக்கண் சின்னீர்' (சீவக. 2540).

பி - ம். 1. தாழ்த்தியாகில்; இலங்கையும் அரணும் யாமும்.
2. மரங்களாலக்; மரங்களென்ன; கடத்தல்.
3. பருகினன் இரவி என்ன.
4. தயர்வதுண்டோ, தயர்வதென்னே; துறந்தியித்; என்றான். 39

1250. முன்னுனக் கிறைவ ரான மூவருந் தோற்றார் தேவர்
பின்னுனக் கேவல் செய்ய வுலகொரு மூன்றும் பெற்றாய்
புன்னுனைப் பனிநீ ரன்ன மனிசரைப் பொருளென் றுன்னி
என்னுனக் கிளைய கும்ப கருணனை யிகழ்ந்த தெந்தாய்.

'இறைவர் ஆன தேவர் மூவரும் - தலைமை பெற்றவர்களான அயன் அரி அரன் என்ற மூன்று தேவர்களும், முன் - முன்னர், உனக்கு தோற்றார் - உனக்குத் தோற்றனர்; பின் - மேலும்; உனக்கு ஏவல் செய்ய - உனக்குப் பணி புரியுமாறு, உலகு ஒரு மூன்றும் பெற்றாய் - ஒரு மூன்று உலகினையும் பெற்றுள்ளனை; எந்தாய் - என் தந்தை போன்றவனே! புல் நுனை பனி நீர் அன்ன - புல்லின் நுனியில்

ஒட்டிக் கொண்டுள்ள பனி நீரை ஒத்த, மனிசரை பொருள் என்று உன்னி - மானிடரை ஒரு பொருட்டாகக் கருதி, உனக்கு இளைய கும்பகருணனை இகழ்ந்தது - உனக்குப் பின் வந்த கும்பகன்னனை நீ இகழ்ந்தது எதுபற்றி?

இறைவரான மூவரும் தோற்றமை இராவணன் திக்விசயப் படலத்துக் காண்க. ஏவல் செய்ய உலகொரு மூன்றும் பெற்றமை; (ஒப்பு.): ஆரணிய. 261; 'விண்ணவ ரேவல் செய்ய வென்றவென் வீரம் பாராய்' (ஆரணிய. 871); மூன்றுலகுடையவன்; ஆரணிய. 258, 752, 755, 847. 'உலக மொன்றொ டிரண்டு மோம்புமென், னலகில் செல்வத் தரசியல் ஆணையில்' (சுந்தர. 433) என்பது இராவணன் கூற்று. 'உலக மூன்றும் காவலோன் பின்னை' (ஆரணிய: 258) என்பது சூர்ப்பணகை கூற்று. 'ஏவலெவ் வுலகும் செய்யச் செல்வநிற் கிசைந்த வென்றாற், பாவமோ முன்னீ செய்த தருமமோ தெரியப் பாராய்' (சுந்தர. 459) என்பது பிராட்டி கூற்று. புல் நுனியில் தங்கிய பனிநீர் சூரியன் ஒளிபட்ட அளவில் சுவறுமாதலின் நிலையாமைக் குவமை, 'புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை' (நாலடி. 29) 'மூங்கிலிலை மேலே தூங்கும் பனிபோல' என்றதும் காண்க. என் தந்தாய் என்பது எந்தாய் என மருவிற்று.

பி - ம். 3. பொருளென்றெண்ணி.
4. கும்பகன்னனை; இகழ்ந்தது.

40

1251. ஆங்கவன் தன்னைக் கூவி யேவுதி யென்னி னையய
ஓங்கலே போல்வான் மேனி காணவே யொளிப்ப ரொன்னார்
தாங்குவர் செருமு னென்னில் தாபத ருயிரைத் தானே
வாங்குமென் றினைய சொன்ன வனவனது மனத்துட்
[கொண்டான்.

'ஐய - ஐயனே! ஆங்கவன் தன்னை கூவி - ஆங்கு அந்தக் கும்பகன்னனை அழைத்து(ப் போர்புரியுமாறு), ஏவுதி என்னின் - பணிப்பா யாகில், ஓங்கலே போல்வான் மேனி காணவே ஒன்னார் ஒளிப்பர் - அந்தக் கும்பகன்னனது மலை போன்ற சரீரத்தைக் கண்ட அளவில் பகைவர் (பயந்து) ஒளிந்து கொள்வார்கள் அல்லவோ? முன் செரு தாங்குவர் என்னில் - (ஒருகால் ஒளித்

துக் கொள்ளாமல்) முன்னர் வந்து எதிர்ப்பினை மேற்கொள்வ ராயின், தாபதர் உயிரை - அந்தத் தவசிகளான இராம இலக்கு வரின் உயிரை (க் கும்பகன்னன்), தானே வாங்கும் - தான் ஒருவ னுகவே போக்கிவிடுவான்' என்று இனைய சொன்னுன் - என்று இப்படிப்பட்ட சொற்களைச் சொன்னுன்; அவன் - அந்த இரா வணன், அது - அந்தச் சொற்களை, மனத்துள் கொண்டான் - உள்ளத்தில் அமைத்துக் கொண்டான். அன்றே - அசை.

ஓங்கல்: மலைக்குக் காரணக்குறி. 'ஊழிதோ ரூங்குமவ் வோங்கல்' (திருவிளை. திருக்கயிலாய. 2); வாங்கும்: செய்யும் என் முற்று படர்க்கை ஆண்பாற்கு வந்தது. அருவமான உயிரை வாங் குதல்' 'உண்டற்குரிய வல்லாப் பொருளை யுண்டது போலக் கூறலு மரபே' (தொல். பொருள். 19) என்றதனுற் கொள்க. மனத் துட் கொள்ளுதல்; 'வள்ளலு மனத்துட் கொண்டான்' (ஆரணிய. 268).

பி - ம். 1. ஏவுதி யாகின், ஏவுதிஎயய வெய்ய.
2. ஒளிப்ப ரன்னோர்.
3. செருமு னென்னுல், செருவி லென்ருல். 41

1252. பெறுதியே யெவையுஞ் செல்வம் பேரறி வாள சீரிற்
றறிதியே யென்பால் வைத்த வன்பினுக் கவதி யுண்டோ
உறுதியே சொன்னு யென்னு வுள்ளமும் வேறு பட்டான்
இறுதியே யியைவ தானு லிடையொன்ருற் றடையுண்
[டாமோ.

(மேலே கூறிய சொற்களைச் செவியேற்ற இராவணன் மகோ தரனைப் பார்த்து), 'பேர் அறிவாள-பேரறிவுடையோய்! செல்வம் எவையும் பெறுதியே - (நீ) எல்லாச் செல்வமும் அடைதற்குரியாய்; சீரிற்று அறிதியே - சிறந்த செயலை உணர்ந்துள்ளாய்; என்பால் வைத்த அன்பினுக்கு அவதி உண்டோ - நீ என்னிடம் வைத்த அன்பிற்கு ஓர் அளவு உள்ளதோ? உறுதியே சொன்னுய்-எனக்கு நன்மை பயப்பனவற்றையே பகர்ந்தாய்'; என்னு-என்று (புகழ்ந்து), உள்ளமும் வேறுபட்டான் - (தளர்ந்திருந்த) மனம் மாறுபட்டவ னுன்; இறுதியே இயைவதானுல் இடை ஒன்ருல் தடை உண் டாமோ - அழியும் காலம் வந்து கிட்டுமானுல் இடையே பிறி தொன்றினுல் தடை அதற்கு நேருமோ? ஓகாரம் எதிர்மறை.

வேற்றுப் பொருள் வைப்பணி - 'விநாச காலே விபரீத புத்தி' என்பதை ஈற்றடி விளக்கி நின்றது. 'நன்மையுந் தீமையன்றே நாசம் வந்துற்ற நாளில்' (ஆரணிய. 756); அவதி - அறிவினுக் கவதியில்லை' (யுத்த. 410); அன்பினுக்கவதி: 'அன்பிற்குமுண்டோ வடைக்குந்தாழ்' (குறள். 7). சீரிற்று - ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர்.

பி - ம். 1. எவையுஞ் சொல்லப், சொல்லிப்; பேரறிவானர்; சீரிது.

2. அவதி யில்லை.

4. வினைவதானல், எய்துமாயின்; இடையொன்றில்; தகைவுண்டாமோ, தடையுமுண்டோ. 42

1253. நன்றிது கரும மென்று நம்பியை நணுக வோடிச்
சென்றிவட் டருதி ரென்றான் என்றலும் நால்வர் சென்றார்
தென்றிசைக் கிழவன் தூதர் தேடினர் திரிவ ரென்னக்
குன்றினு முயர்ந்த தோளான் கொற்றமாக் கோயில்
[புக்கார்.

'இது கருமம் நன்று என்று - (கும்பகன்னனைப் போருக்கு அனுப்புவதாகிய) இச்செயல் நல்லதே', என்று - என்று மொழிந்து, (தூதரைப் பார்த்து) 'ஓடி - நீங்கள் விரைந்து, நம்பியை நணுக சென்று இவண் தருதி - நம்பியைக் கிட்டிப்போய் இங்கே வந்து சேருமாறு அழைத்து வாருங்கள்', என்றான் - என்று பணித்தான்; என்றலும் - என்று பகர்ந்தவுடன், தென் திசை கிழவன் தூதர் தேடினர் செல்வார் என்ன - தென்திசைக் குரியவனான யமனுடையதூதர் தேடி அலைவதுபோல, நால்வர் சென்றார் - நான்கு தூதர்கள்போய், குன்றினும் உயர்ந்த தோளான் - குன்றினைவிட உயர்ந்த புயங்களை யுடையவனான கும்பகன்ன னுடைய, கொற்றம் மா கோயில் புக்கார் - வெற்றி பொருந்திய பெரிய அரண்மனையுட் புகுந்தார்கள்.

கும்பகன்னனை அழைக்கச் சென்றவர் தென்திசைக் கிழவன் தூதராகக் கூறப்பட்டனர்; அவனை அழைக்கச் சென்றது அவன் மரணம் எய்தும் பொருட்டே ஆகலின். என்றும் தோல்வியுறுமை

யும் பரப்பும் பெருமையும் கொண்டதாகலின் கொற்றமாக் கோயில் எனப்பட்டது.

பி-ம். 1. நம்பிபால் விரைவினண்ணி.
2. இன்றிவன்; நால்வரோடி.
3. செய்வாரென்ன, போல்வாரென்னக்.
4. நுஞ்செடம் கூடிப்புக்கார்; கோயிலைக் குறுகச் சென்றார். 43

இங்கரர் நால்வர் சென்றக் கிரியனான் கிடந்த கோயில்
மங்குல்தோய் வாயில் சார்ந்து மன்னநீ யுணர்தி யென்னத்
தங்கையி னெழுவி னாலே தலைசெவி தாக்கப் பின்னும்
வெங்கணான் துயில்கின் றானை வெகுளியா லினைய சொன்னார்.

உறங்கு கின்ற கும்ப கன்ன ! உங்கள் மாய வாழ்வெலாம்
இறங்கு கின்ற தின்று காணெ ழுந்தி ராயெ ழுந்திராய்
கறங்கு போல விற்பி டித்த கால தூதர் கையிலே
உறங்கு வாயு றங்கு வாயி னிக்கி டந்து றங்குவாய். 2

என்று மீறி லாவ ரக்க ரின்ப மாய வாழ்வெலாம்
சென்று தீய நும்மு னோன்றெ ரிந்து தீமை தேடினான்
இன்றி றத்தல் திண்ண மாக வின்னு முன்னு றக்கமே
அன்ற லைத்த செங்கை யால லைத்த லைத்து ணர்த்தினார் 3

என்றுமே மனத்தின் பின்னு மெண்ணுவா னெம்மா லீண்டு
வன்றிறற் கருணன் றன்னை யெழுப்பலாம் வகையுங் கேண்மோ
குன்றினை யனைய யானை பாய்பரி குழுவோ டேனைச்
சென்றிவட் டருதி யென்ன மகோதரற் கினைய செப்பும். 4

அன்னவ னுரைப்பக் கேளா வளையெயிற் றரக்கர் நால்வர்
சொன்னது செய்து மென்னப் படையெழச் சொல்லு [மாற்றான்
மின்னெனு மருப்பு வேழக் குழாத்துமென் முரச மேற்றி
யின்னகர் தன்னி னுள்ள படையெலா மெழுக வென்றார். 5

வேறு

ஆனைமேல் மணிமுர சேற்றி யன்னவர்
சேனையை யெழுகெனச் சென்று சாற்றலு
மேனிமிர் தூளியின் படலம் விம்மிப்போய்
வானவர் மகளிர்தங் குழன்ம றைத்ததே. 6

இன்னவா றெழுந்த சேனைப் பெருமையை யிமையோர் நோக்கி
யென்னகொ லரக்கர் தானைப் பெருமையென் றைய முற்றார்
பன்னெடுங் கால மெல்லாங் கணக்கிடை யடக்கிப் பார்க்கிற்
சொன்னதோர் பிரம னாலு முரைக்கவுந் தோன்ரு தென்ருர். 7

என்றனர் தேவ ரிப்பா லிரைத்தெழு தானை மண்டி
வன்றிற லுடைய கும்ப கருணன்றன் கோயில் வாயில்
சென்றது நோக்கி நின்ற மகோதரன் றிகைத்த நெஞ்சன்
குன்றெனத் திரண்ட தோளான் சேனையை நோக்கிக் கூறும். 8

எழுப்புமின் கருணன் றன்னை யிவ்வழி வீர ரெல்லா
முழைப்பொலி சிய மன்ன மூரிவே மூங்கள் கொண்டே
யுழக்குமி னூற்ற முள்ள படைக்கல முலப்பி லாத
தெழிப்பொடு புடைப்பு மார்ப்பின் செழுந்துயி லெழுப்பு
[மென்ருன். 9

கோடியின் மேலு மல்லர் குத்துதல் நன்றென் ரோடி
தாடையில் சந்து மார்பு தலைகளின் முதுகிற் ருக்கி
வாடிய கையராகி வலியதா தானு மோய்ந்து
நீடுவ குரங்கு போல நெடுந்துயில் கொள்வ தானுன். 10

அவ்வழி யவ்வுரை யாற்றி யழைப்பத்
தெவ்வரைச் சென்றிடல் தோன்றிய தென்ரு
ரவ்வழி சென்றுறு வன்றிற லோனை
நைவழி மற்றவன் மார்பி னடந்தார். 11

அன்னவன் மார்பினி லையிரு கோடி
துன்னிருள் தொக்கன போல்திறல் யானை
யின்ன திறத்தி லிரட்டிய தேரு
மின்னும் வயப்பரி யோடு மிடைந்தார். 12

மற்றவன் மார்பினி லேற மறைந்தா
ரெற்றுறு திண்படை யாவு மெதிர்ந்தார்
பெற்றுறு வன்படை பேரலர் பின்னுஞ்
சுற்றினர் சூழ்ந்து துகைத்தன ரார்த்தார். 13

தெழித்தன ரார்த்தனர் சங்கொடு பேரி
பொழித்தன ரூழியிற் கார்மழை போல
வெழுத்துடர் தோமரத் தண்டு முசுண்டி
மழக்கொடு மார்பினி லேற்றினர் மண்டி. 14

இன்ன வாறிவர்க ளெல்லா மேத்தியுங் குத்தி யிட்டு
மின்னென விளங்குகின்ற வெயிற்றினுன் றன்னை யாது
முன்னிய வுறக்கந் தன்னை யாவரு மொழிக்க மாட்டா
ரென்னிவர் தாமு னுடி மேலென்கொல் செய்வ தென்றுர். 15

ஆனையுந் தேரு மாவும் யாளியு மற்று முள்ள
சேனையின் பெருமை வெள்ளத் தியாவையும் பரப்பிச் சென்று
வானிமிர் வயிரக் கையான் றன்னுடை மார்பு தன்னி
லேனைய பிறவு மெண்ணி லிழித்தக வுடைய தம்மா. 16

ஒன்றவ ருரைத்து மண்டி யூழியிற் சிறந்த காலம்
வன்றிறற் கருணன் றன்மேல் நடந்துபோய் வருத்தஞ்
[செய்தார்
கன்றிய வுயிர்ப்பி னூழிக் காற்றினுற் சேனை யெல்லாஞ்
சென்றவன் வாயி னூடுஞ் செவியினும் புக்க தன்றே. 17

புக்கவ னுடலஞ் சேர்ந்து சேனையும் புறம்பொங் காற்றின்
மிக்கதோர் வேகந் தன்னுற் ருனையு மீண்டு போகி
லுக்கவே புறம்போ மென்னு முள்ளெழு மூழிக் காற்றுற்
ளுெக்குடன் புறப்பட் டோடி மீளவுந் தொக்க தன்றே. 18

இன்ன வாறினைய சேனை யெதிர்க்குவ திழிவ தாகி
மன்னிய பிறப்பி றப்பின் வகையினைக் காட்டு மாபோ
லன்னவா றரக்கர் சேனை யலைகடற் றிரையே போல
மின்னுறு படைக்கை வீரர் யாவரும் விரைவ தானுர். 19

வேறு

ஆனையின் ளுெருகுதியும் பரியின் வெள்ளமுஞ்
சேனையின் பெருமையுந் திரண்ட யாவையு
மேனிம ரரக்கன துயிர்ப்பின் வேகத்தா
லானையுங் கடந்துபோ யூசலாடு மால். 20

ஆயிடை யவர்களுமரிதி னுகத்தம்
பாயலிற் புறப்படா னென்று பார்த்தவச்
சேயிடை நெஞ்சின ரியாது நாம்புகும்
போயிட மில்லையாம் புகன்று போதுவோம். 21

ஒன்றல வரக்கர்க ளூழியிற் சிறந்த
தன்றியு மழையினு மிரட்டி யார்த்தனர்
வன்றிற லறக்கன்றன் மார்பி லேறிமேற்
குன்றின்மேல் விழுந்தன படைகள் கூட்டினூர். 22

ஆர்த்தன ரடித்தன ரசனி யேற்றினுஞ்
சீர்த்தன படைக்கலஞ் சிந்தி னூர்கடந்
தார்த்தனர் கடையுக முகிலிற் சோர்மழை
பார்த்திரைத் தனவெனப் படைகள் தூவினூர். 23

வேறு

இங்கிவ ரகன்று சென்றங் கினமணி முடிக டாங்கு
மங்கைவே லிராவ ணன்றன் னடியிணை யிறைஞ்சி யையா
யுங்கையி னெழுவி னூலே யடித்துற வெழுப்பினல் லால்
அங்கவனுறக்கம் நீங்கா னருளினிச் செய்வ தென்றூர். 24

வேறு

இனைய கூறி யானை வாசி யேற வும்மெ ழுந்திலன்
புனையு மாலை முடியி னூயி னிச்செயல் புகல்லென
வினையம் வல்ல ரல்லர் நீங்கள் மீண்டு சேனை யோடுபோ
யனைய மல்லராயிரவ ரேகு மென்ன வருளினூன் 25

என்று சொல்ல அன்னவன்னெ ழுந்தி ராமை கண்டுபோய்
மன்றல் தங்கு மாலை மார்ப வன்று யில்லெ ழுப்பலம்
அன்று கொள்கை கேண்மி னென்று மாவெ டாளி யேவினூன்
ஒன்றன் மேலொ ராயி ரம்மு ழக்கி விட்டெ ழுப்புவீர். 26

அனைய தானை யன்று செல்ல வாண்டு நின்று பேர்ந்திலன்
இனைய சேனை மீண்ட தென்றி ராவ ணற்கி யம்பலும்
வினையம் வல்ல நீங்க ளுங்கள் தானையோடு சென்மி னென்
றினைய மல்ல ராயி ராரை யேவி நின்றி யம்பினூன். 27

வேறு

சென்றனர் பத்து நூற்றுச் சீரிய வீர ரோடி
மன்றலந் தொங்க லான்றன் மனந்தனில் வருத்த மாற
இன்றிவன் முடிக்கு மென்னு வெண்ணின ரெண்ணி யீண்டக்
குன்றென வுயர்ந்த தோளான் கொற்றமாக் கோயில் புக்கார்.

1254. திண்டிறல் வீரன் வாயில் திறத்தலுஞ் சுவாத வாதம்
மண்டுற வீர ரெல்லாம் வருவது போவ தாகக்
கொண்டுறு தடக்கை பற்றிக் குலமுடை வலியி னாலே
கண்டுயி லெழுப்ப வெண்ணிக் கடிதொரு வாயில் புக்கார்.

கண் துயில் எழுப்ப எண்ணி - உறக்கத்தினின்றும் எழுப்ப நினைந்து, திண் திறல் வீரன் வாயில் திறத்தலும் - மிக்க வீரம் பொருந்திய கும்பகன்னனது அரண்மனை வாயிலைத் திறந்தவுடனே, சுவாத வாதம் - (அந்த அரக்கனுடைய) மூச்சுக் காற்று, மண்டுற - மிகவும் வீசியதால், வீரர் எல்லாம் வருவது போவது ஆக - (எழுப்பச் சென்ற) வீரர்கள் அனைவரும் வெளியே வருவதும், உள்ளே செல்லுவதுமாகி, (பிறகு) கொண்டு உறு தடகை பற்றி - வலிமையுற்று அமைந்த பெரிய கைகளைக் (கோத்துக்கொண்டு), குலம் உடை வலியினாலே - தொகுதியாக அமைந்த தமது கூட்டு வன்மையினாலே, கடிது ஒரு வாயில் புக்கார் - விரைந்து ஒப்பற்ற வாயிலினுட் புகுந்தார்கள். ஏ : அசை.

சுவாத வாதம் - உயிர்ப்புக் காற்று. மண்டுற - மிக்கெழ. குலம் தொகுதி என்ற பொருட்டது.

பி - ம். 1. வீரர் ; சுவாதவாயு.
3. கொண்டுடைத், கண்டுறு, காலுடை வலியிலேறி.
4. விண்டுயில், வேறெரு. 44

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

ஓதநீர் விரிந்த தென்ன வுறங்குவா னுசிக் காற்றாற்
கோதில மலைகள் கூடி வருவது போவ தாக
ஈதெலாங் கண்ட வீர ரேங்கினர் துணுக்க முற்றார்
போதுவா னருகு செல்லப் பயந்தனர் பொறிகொள் கண்ணார்.

பங்கயன் சங்க பாணி பசுபதி முதலா யஞ்சும்
துங்கவன் தோற்றித் தானைக் கண்டுமெய் துணுக்க முற்றே
அங்கையாற் றிண்ட வஞ்சி யாழ்செவி யதனி னுள்ளே
சங்கொடு தாரை சின்னம் சமைவுற வூத லுற்றார்.

1255. இங்கிவன் தன்னை யாமின்
றெழுப்பலாம் வகையே தென்று
துங்கவெவ் வாயு மூக்குங்
கண்டுமெய் துணுக்க முற்றார்
அங்கைகள் தீண்ட வஞ்சி
யாழ்செவி யதனி னூடு
சங்கொடு தாரை சின்னஞ்
சமைவுறச் சாற்ற லுற்றார்.

இங்கு இன்று இவன் தன்னை யாம் எழுப்பலாம் வகை ஏது - இவ்விடத்து இப்பொழுது இந்த அரக்கனை யாம் நித்திரையினின்று எழுப்புமாறு யாது?, என்று - என்று ஆராய்ந்து, துங்கம் வெ வாயும் மூக்கும் - (அவனுடைய) உயர்ந்து பிளந்த வாயும் மூக்கும், கண்டு மெய் துணுக்கம் உற்றார் - கண்ணுற்று உடல் நடுங்கினவராய், அம் கைகள் தீண்ட அஞ்சி - (அவனது) கரங்களைத் தொடுவதற்கும் பயந்து, ஆழ் செவி அதனின் ஊடு - அவனுடைய ஆழமான காதுகளின் உள்ளே, சங்கொடு தாரை சின்னம் - சங்கு, தாரை, சின்னம் என்ற துளைக்கருவிகளால், சமைவு உற சாற்றல் உற்றார் - நன்றாகப் பேரொலி விளைக்கத் தொடங்கினர்.

பி - ம். 1. யாமிங்கு, யாதென்றுப்.
2. துங்கப் பேழ் வாய மூக்கும், துளங்கித் துன்னொன்று.
3. யதனினுள்ளே.
4. சங்கொடு பேரி மத்தளந் தாக்கல். 45

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

சாற்றிய சங்கு தாரை யொலியவன் செவியிற் சார
ஆற்றலி னமைந்த கும்ப கருணனுக் கதுவுந் தாராட்
டேற்ற தொத் தனந்தல் முன்னர்க் கிரட்டிகொண் டுறங்க [மல்லர்
கூற்றமுங் குலைய நெஞ்சம் குறித்திவை புரிய லுற்றார்.

1256. கோடிகல் தண்டு கூடங் குந்தம்வல் லோர்கள் கூடித்
தோடைகள் சந்து மார்பு தலையெனு மிவற்றிற் றாக்கி
வாடிய கைய ராகி மன்னவற் குரைப்பப் பின்னும்
நீடிய பரிக ளெல்லாம் நிரப்பிடும் விரைவி னென்றான்.

கோடு இகல் தண்டு - மலைச் சிகரத்தை யொத்த கதாயுதமும், கூடம் - சம்மட்டியும், குந்தம் - ஈட்டியும் (என்று இந்தக் கருவிகளைப் பயன்படுத்தும்), வல்லோர்கள் கூடி-வன்மை வாய்ந்தவர்கள் ஒன்று சேர்ந்து, (அந்தக் கும்பகருணனுடைய), தாடைகள் சந்து மார்பு தலை எனும் இவற்றில் - தாடைகள், உடற் பூட்டுக்கள் மார்பு தலை என்ற இந்த இடங்களிலே, தாக்கி - தாக்கி, வாடிய கையர் ஆகி - சோர்ந்த கையினர் ஆகி, மன்னவற்கு உரைப்ப - அரக்கர் கோனுக்கு அறிவிக்க, (அந்த இராவணன்) பின்னும் - அதன் பிறகு, 'நீடிய பரிகள் எல்லாம் விரைவில் நிரப்பிடும் - பெரிய குதிரைகளை யெல்லாம் விரைவாக (அவன்மீது) நிறையச் செலுத் துங்கள்' என்றான் - எனறு கூறினான்.

அரக்கர்கள் இவ்வாறு ஆயுதங்கள் கொண்டும் மற்றும் பல வகையிலும் துன்புறுத்துவதை இரணியன் வதைப் படலத்து இரணியன் பிரகலாதனைத் துன்புறுத்துவதுடன ஒப்பு நோக்குக.

பி - ம். 1. கோடிகழ்தண்டு ; பிண்டிபாலம் ; கூட்டஞ் சங்கு.

2. நாடிகள் ; தலை செவி தாக்கலோடும், தலையெனு மவற்றிற்குக்கி.

3. வலியற மாண்டு நின்று.

4. நிரைத்திடும். 46

1257. கட்டுறு கவன மாவோ ராயிரங் கடிதின் வந்து
மட்டற வுறங்கு வான்தன் மார்பிடை மாலை மான
விட்டுற நடத்தி யோட்டி விரைவுள சாரி வந்தார்
தட்டுறு குறங்கு போலத் தடந்துயில் கொள்வ தானான்.

மட்டு அற உறங்குவான் தன் - அளவற்ற நித்திரையை மேற் கொண்ட அந்தக் கும்பகன்னனுடைய, மார்பிடை-மார்பினிடத்து, மாலை மான - மாலையை ஒத்திருப்ப, கட்டுறு கவனம் மா ஓர் ஆயிரம் கடிதின் வந்து-(கடிவாளம் முதலியன) பூட்டபபெற்றனவும் விரைந்து செல்வனவுமான ஓர் ஆயிரம் குதிரைகள் விரைவின் வர, (அவற்றை) விட்டு - ஏறவிட்டு, உற நடத்தி ஓட்டி - பின் பொருந்துமாறு நடத்தி (அப்பால்) ஓட்டி, விரைவு உள சாரி

வந்தார் - விரைவுடன் கூடிய சாரிகை வந்தனர்; (அவ்வாறு வந்த அளவில்), தட்டுறு குறங்கு போல தட துயில் கொள்வதானுன் - துடையில் தட்டப்பெற்றது போன்று பேருறக்கம் கொள்வதானுன்.

கட்டுறு - சேணம் அமைக்கப்பெற்ற. கவனம் - வேகம்; 'கவனமாக் குரங்கின் செயல் காட்டுவாய்' (கிட்கிந்தா. 726); 'கவன வாம்பரி (கந்தபு. படையெழு. 18), 1258-ம் காண்க. கவனம், கமனம் என்ற வடசொற்றிரிவு. மா என்பது விலங்கின் பொதுப்பெயரே னும், இங்கு இடம் நோக்கிக் குதிரையெனப்பட்டது. மட்டு - அளவு (சூடா.); மட்டற்ற மகிழ்ச்சி என்ற வழக்குக் காண்க. 'வடிவுக்கோர் மட்டுண்டாமோ' (தேவா. திருஞான.). வந்து - வர எனக்கொள்ளப் பட்டது. மான: உவமவுருபு. சாரி வருதல் - வலமிடமாக விரைந்து செல்லுதல். உறக்கம் பிடித்தற்குத் துடையில் தட்டு வதும் தைவருதலும் வழக்கு. 'தட்டுறு குறங்கு போல - துடை குத்துகிறது போன்றது' (பழையவுரை) தடம் துயில் - ஆழ்ந்த நித்திரை. தடவும் கயவும் நளியும் பெருமை; (தொல். உரி. 24). மல்லர்கள் துயில் எழுப்புவதற்காக வந்த குதிரைச்சாரிவலம், கும்பகன்னனுடைய துயிலை மிகுப்பதாயிற்று. 'தாய் தன் கையின் மெல்லத் தண்ணென் குறங்கி னெறிய' (சீவக. 930-ம்), 'குழந்தை உறங்குவதற்கு அதன் துடையைத் தட்டுவது வழக்கம்' என்ற அதன் உரைக் குறிப்பும் காண்க.

பா - ம். 2. மட்டுற; மார்பிடை வருத்தமாக, வருத்தமாற, வருத்தஞ் செய்ய.
3. சாரியின், விரைவின், விரைவொடு சாரி.
4. தட்டுறல்; தான் துயில். 47

பணியாளர் செயல்

1258. கொய்ம்மலர்த் தொங்க லான்றன்
குரைகழல் வணங்கி யைய
உய்யலாம் வகைக ளென்றங்
கெழுப்பலாம் வகையே செய்தும்
கய்யெலாம் வலியு மோய்ந்த
கவனமா காலு மோய்ந்த
செய்யலாம் வகைவே றுண்டோ
செப்புதி தெரிய வென்ருர்.

(பின்னர்ப் பணியாளர் இராவணனை அணுகி), கொய்மலர் தொங்கலான் தன் - கொய்யப் பெற்ற மலர்களாற் றொடுக்கப்பெற்ற மாலையைப் புனைந்தவனான இராவணனுடைய, குரைகழல் வணங்கி - வீரகண்டை யணிந்த பாதங்களை வணங்கி, 'ஐய - ஐயனே! உய்ய லாம் வகைகள் என்று எழுப்பலாம் வகையே செய்தும் - (பல சன்மானங்கள் பெற்று உய்யும் வழியாகும் இந்தக் கும்பகன்ன னைத் துயில் எழுப்புவது) என்று நினைந்து, (அவனை) எழுப்பக் கூடிய உபாயங்களைப் புரிந்தும், கை எலாம் வலியும் ஒய்ந்த - கைகள் அனைத்தும் வலி குன்றி விட்டன; கவனம் மா காலும் ஒய்ந்த - விரைந்து செல்லும் குதிரைகளின் கால்களும் வலி தளரப் பெற்றன; செய்யலாம் வகை வேறு உண்டோ - செய்யத்தக்க வழிகள் வேறுள்ளனவோ? தெரிய செப்புதி - (உளவாயின்) எங்கட்கு விளக்கமாகச் சொல்லுங்கள்' என்றார் - என்று பகர்ந் தனர். அங்கு - அசை.

கொய் மலர் - 'கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே' (தேவா. 1236 : 1); தொங்கல் - தொங்குவது என்று மாலைக்குக் காரணக்குறி. கை எதுகைகருதிக் கய் என நின்றது. எதிரிகளைக் கும்பகன்னன் அழித்தொழித்தல் தங்கட்கு நன்மை பயக்கும் என்பார். 'உய்யலாம் வகை' எனப்பட்டது எனினுமாம். 'உய்ய லாம் வகையே நாடி' என்பதற்கு 'அநேக சன்மானம் பெறலாம் என்று எண்ணி' என்பது பழையவுரை.

பி - ம். 1. அலங்கலான்.

2. உய்வகை நாடி நின்றே, உய்யலாம் வகைவே றுண்டோ, உய்யலாம் வகையுண்டென்றிங்கு, வகையே செய்து, வகையே நாடி, உபாயஞ் செய்து.

3. ஒய்ந்து.

4. செய்யலாம் வகைவே றில்லை, தெரியும். 48

இங்கு அதிகப்பாடல்:—

அன்னவ ருரைப்பக் கேளா வரசன்மோ தரனை நோக்கி '
மின்னெனு மெயிற்று வீர வெம்பியைக் கொணர்தி யென்ன
இன்னதே செய்வெ னென்னா வெழுந்தடி வணங்கிப் போவான்
பொன்னென விளங்கு வான்போய்த் தன்பெருங் கோயில்
[புக்கான்.

சென்றனன் கின்று விண்ணும் தேர்குவா னுருவந் திண்ட
வன்றிற லரக்கர் கோமான் கருணனை யெழுப்பும் வண்ணம்
கன்றிரு ளனைய வானை கடும்பரி யினைய மற்றும்
சென்றிவண் தாரிரென்ன மகோதரன் தெரியச் சொன்னான்.

## ஆயுதங்களை எறிந்தாகிலும் எழுப்புக என்று இராவணன் கூறுதல்

1259. இடைபேரா விளையானை இணையாழி மணிநெடுந்தேர்
படைபேரா வரும்போதும் பதையாத வுடம்பானை
மடை பேராச் சூலத்தான் மழுவாட்கொண் டெறிந்தானும்
தொடை பேராத் துயிலானைத் துயிலெழுப்பிக் கொணர்
[கென்றான்.

'இணை ஆழி-நன்கமைந்த சக்கரங்களையுடைய, மணி நெடுதேர்-அழகிய உயர்ந்த தேரும், படை - (மற்றும் யானை குதிரை முதலிய) படையும், பேரா வரும் போதும் - மேலெழுந்து (தன்மீது) வரும் காலத்தும், பதையாத உடம்பானை - சிறிதும் சலியாத உடலுடன் கூடியவனாகி, தொடை பேரா துயிலானை - தொடர்ந்திருத்தலினின்றும் நீங்காத உறக்கத்துடன் கூடியவனும், இடை பேரா இளையானை - (என்னைவிட்டு பிரியாத) என் தம்பியுமான கும்பகன்னனை, மடை பேரா சூலத்தான் - மூட்டுத்தளராத சூலப்படைகொண்டும், மழுவாள் கொண்டு - மழுப்படை கொண்டு, எறிந்தானும் - வீசியாயினும், துயில் எழுப்பி கொணர்க - நித்திரையினின்றும் எழுப்பி அழைத்து வாருங்கள்', என்றான் - என்று கட்டளையிட்டான் இராவணன்.

தன் ஆட்சியிலும் தனது ஆதரவிலும் நெடுநாள் இருந்தும் தன்னை விட்டு நீங்கி இராமனைச் சென்றடைந்தவன் போலாது தன்னிடமே தங்கியவன் ஆதலின் 'கும்பகன்னனை' இடைபேரா இளையான் என்றான்; 'பிறந்தானு முளனென்னப் பிரியாதான்' (அயோத்தி. குகப். 68) என்றதும் காண்க. பின்னர் இதே படலத்து 'நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்,

போர்க்கோலஞ் செய்துவிட்டார்க் குயிர்கொடா தங்குப் போகேன்' (யுத்த. கும்ப. 155); எனக் கும்பகன்னனே கூறுதல் இங்குக் கருதத் தகும். பேரா வருதல் - பேர்ந்து வருதல்; செய்யா என்னும் வாய்பாடு. மடை பேராச் சூலம்: 'குழலாக அடித்த உறுப்புடைச் சூலம்' பழையவுரை. மழு - எரியிட்டியென்பர். விடாது தொடரும் துயிலாகலின் தொடை பேராத் துயில் எனப்பட்டது. கொணர்க என்பது அகரவீறு தொக்கது.

பி-ம். 1. இடைபெயரா; இளயானை, மதயானை யிவுளிபொடு, இடையாளி மணிநெடுந் தேர்.

2. பதையாத மார்பானை.

3. எறிந்தாலும். 48

## கும்பகன்னன் துயிலெழுதல்

1260. என்றலுமே யடிவணங்கி யீரைஞ்ஞூற் றிராக்கதர்கள்
வன்றொழிலால் துயில்கின்ற மன்னவன்றன் மாடணுகி
நின்றிரண்டு கதுப்புமுற நெடுமுசலங் கொண்டடிப்பப்
பொன்றினவ னெழுந்தாற்போற் புடைபெயர்ந்தங்
[கெழுந்திருந்தான்.

என்றலுமே - என்று (இராவணன்) கூறியவுடன், ஈர் ஐஞ்ஞூறு இராக்கதர்கள் - ஆயிரம் அரக்கர்கள், அடி வணங்கி - பாதத்தில் வணக்கம் செய்து, துயில்கின்ற மன்னவன்தன் மாடு அணுகி - உறங்குகின்ற கும்பகன்னனிடம் நெருங்கி, வல் தொழிலால் - தமது வலிய தொழில் திறத்தால், நின்று - பக்கத்தில் நின்று கொண்டு, இரண்டு கதுப்பும் உற - இரண்டு கன்னங்களிலும் நன்கு பதியுமாறு, நெடு முசலம் கொண்டு அடிப்ப - நீண்ட உலக்கைகள் கொண்டு தாக்க, பொன்றினவன் எழுந்தாற்போல் - இறந்தவன் உயிர்த்தெழுந்தாற் போல, புடை பெயர்ந்து அங்கு எழுந்திருந்தான் - தான் துயின்ற இடத்தைவிட்டுப் புரண்டு எழுந்தான்.

வன்றொழிலால் நின்று எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்ளப்பெற்றது. துயிலுக்கு அடையாக்கலுமாம். 'ஈதென்ன பேருறக்கம்' (திருப்பாவை. 12); 'கும்பகர்ணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ' (திருப்பாவை. 10); கதுப்பு -

கன்னம். 'தும்பி தொடர் கதுப்ப' (பரிபா. 19, 30); முசலம் - வட சொல், பொன்றுதல் - இறத்தல்; 'இராமனம்பாற் பொன்றலே' (ஆரணிய. 757).

பி - ம். 1. அடியிறைஞ்சி, எண்பதினாயிர மல்லர்.

2. பன்னவன்தன் பாலனுகி.

3. நெடு முசலம் கொடுதாக்க.

4. எழுந்ததுபோர் புரண்டிருகண் விழித்தனனுல். 60

1261. மூவகை யுலகு முட்க முரண்திசைப் பணைக்கை யானை
தாவருந் திசையி னின்று சலித்திடக் கதிரு முட்கப்
பூவுளான் புணரி மேலான் பொருப்பினுன் முதல்வ ராய
ஏவருந் துணுக்குற் றேங்க வெளிதினி னெழுந்தான் வீரன்.

மூவகை உலகும் உட்க - மூன்று புவனங்களும் அஞ்சும்படியும், முரண் பணை கை திசையானை - வலிய பருத்த கைகளைக்கொண்ட, திக்கு யானைகள், தாவு அரு திசையின் நின்று - நீங்குதலில்லாத தத்தம் திசைகளிலிருந்து, சலித்திட - நிலை பெயரவும், கதிரும் உட்க - சூரியனும் அச்சுறவும், பூ உளான் புணரி மேலான் பொருப்பினுன் முதல்வர் ஆய - பிரமன் திருமால் கயிலைவாசியான சிவ பெருமான் முதலாகவுள்ள, ஏவரும் - எல்லோரும், துணுக்குற்று ஏங்க - நடுக்கங்கொண்டு மனமிரங்கவும், வீரன் - வீரனான கும்ப கன்னன், எளிதினில் எழுந்தான் - மிகவும் எளிதாக எழுந்தான்.

மூவகை உலகு - மேல் கீழ் நடு; சுவர்க்கம் மத்தியம் பாதலுமுமாம். முரண்திசை - ஒன்றோடொன்று மாறுபட்டு எதிர்ந்துள்ள திசை. தாவு அரு எனப்பிரிக்க. கதிரும் உட்க; உம்மை உயர்வு சிறப்பு. யாவரும் துணுக்குற எளிதின் எழுந்தான் என்ற இடத்து முரண் நயம் காண்க. முன் செய்யுளில் புடை பெயர்ந்தங் கெழுந் திருந்தான் என்றுகூறி இங்கு எழுந்தான் என்றது கூறியது கூறல் அன்றோ எனின்; அன்று; பேராகிருதியான உடல் ஆகலின் எழுந்திருக்கச் சில மணி நேரம் பிடிக்குமோ என்ற எண்ணத்

திற் கிடந்தாமல், பொருக்கென எழுந்தான் எனக் கூறிய தாகலின், கூறியது கூறல் அன்று.

பி-ம். 1. உலகம்; ஒக்க; பனைக்கை.

2. நிவரும்; காவல் நின்று; கவித்திட; கநிருஞ் சிந்த.

3. பூவினுன்; பொருப்புளான் முதலாயுள்ன.

4. யாவரும்; துனுக்குற்றேக. 51

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

## வேறு

### துயிலுணர்ந் தெழுந்த கும்பகன்னன் செயல்கள்

1262. விண்ணினை யிடறும் மோலி விசும்பினை நிறைக்கும் மேனி
கண்ணெனு மவையி ரண்டுங் கடல்களிற் பெரிய வாகும்
எண்ணினும் பெரிய னான விலங்கையர் வேந்தன் [பின்னேன்
மண்ணினை யளந்து நின்ற மாலென வளர்ந்து நின்றான்.

இலங்கையர் வேந்தன் பின்னோன் - இலங்கை மன்னனான இராவணனுடைய பின்தோன்றலும், எண்ணினும் பெரியன் ஆன-நீண்ட ஆலோசனைகள் வழங்குவதில் சிறந்தவனுமான கும்ப கன்னன், மண்ணினை அளந்து நின்ற மால் என - பூவுலகை(த் திரு விக்கிரமனாகி) அளந்து நின்ற திருமால்போல, வளர்ந்து நின்றான் - ஓங்கி நின்றான்; (அந்நிலையில்) மோலி - அவனுடைய சிரம், விண்ணினை இடறும் - விண்ணுலகத்தை இடறும், மேனி விசும்பினை நிறைக்கும் - உடல் ஆகாயத்தை மறைக்கும்; கண் எனும் அவை இரண்டும் கடல்களில் பெரிய ஆகும் - கண்கள் என்று சொல்லப் படுவன இரண்டும் கடல்களைப் பார்க்கிலும் அகன்றனவாகும்.

இச்செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளில் 'அவ்வழி' என்ற பாடற் குப் பின் உள்ளது. கும்பகன்னனுக்குத் திருமாலை உவமை கூறி னர். பின்னர் இக்கும்பகன்னன், இராவணனுக்கும் தம்பிவீடண னுக்கும் கூறும் உரைகளைக் கொண்டு இவனது எண்ணத்தின் பெருமை உணரலாம். 'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்' (குறள்.

596) என்றார் திருவள்ளுவர். இவனுடைய எண்ணங்கள் எவ்வளவு சிறந்தன என்பதை இவன் சீதா தேவியை விட்டு விடும்படி அண்ணனுக்குக் கூறிய அறவுரைகளைக் கொண்டும், அவன் திருந்தா தொழியவே, வீடணன் சொற்படி இராமபிரானைச் சரண் அடையாது செஞ்சோற்றுக் கடன் தீர்க்கத் துணிந்து போரிற்புக்கு மாண்டது கொண்டும் உணர்க. கண்களைக் கடலினும் பெரியவாகக் கூறுவது மரபு; 'கடலினும் பெரிய கண்கள்' (ஆரணிய. 623); தனது ஆழத்திற் பல அரிய பொருள்களை ஆழி கொண்டிருப்பது போன்று, பல கருத்துக்களைத் தம் சலிப்பினால் வெளிப்படுத்தலின் கடல் உவமை என்க. மண்ணினை அளந்து நின்ற மால்; பால காண்டம் வேள்விப் படலத்து வரலாறு காண்க. 'மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால், ஞால முழுதும் நயந்தளந்தான்' (திருவள். மாலை).

பி - ம். 1. திண்மை, மேன்மை; விசும்பினை யழிக்கு மேனி, விளங்கியல் விசயத் தோள்கள்.

3. பெரியநாக,

4. மண்ணினை அளக்க நீண்ட, அளந்து கொண்ட; மாலென எழுந்து, வந்து; இருந்தான். 52

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

வேறு

1263. உறக்க மவ்வழி நீங்கி யுணத்தகும்
வறைக்க மைந்தன வூனொடு வாக்கிய
நறைக்கு டங்கள் பெறான்கடை நக்குவான்
இறக்க நின்ற முகத்தினை யெய்துவான்.

அவ்வழி உறக்கம் நீங்கி - அப்போது நித்திரை விடுத்து, உண தகும் - உண்டற்குரியனவும், வறைக்கு அமைந்தன - வறுத்தற்குரியனவுமான, ஊனொடு - மாமிசத்துடனே, நறை வாக்கிய குடங்கள் பெறான் - கள்வார்த்த குடங்களைக் கிடைக்கப் பெறாத

வருய்; கடை நக்குவான் - கடை வாயினை நக்கிக் கொண்டு, இறக்க நின்ற முகத்தினை எய்துவான் - சாகும் தறுவாயில் காணப் படும் முகம் போன்ற முகத்தினை உடையவனுகக் காணப்பட்டான்.

உறக்கம் - தொழிற் பெயர்; ஊனெடு வாக்கிய நறை என்ன ஆற்றெழுக்காகக் கோடலுமாம். வாக்குதல் - ஊற்றுதல்; வறைக் கமைந்த ஊன் - வறுவல் 'அடற் பொற்சிகரத்தால் வாக்கி' (கலித் 51); 'துளங்கு தசும்பு வாக்கிய பசும் பொதித் தேறல்' (மலைபடு. 463). 'பல்கால் வாக்குற தரத்தர வருத்தம் வீட' (பொருந. 86-87). 'பூக்கமழ் தேறல் வாக்குற தரத்தர' (பொருந. 157); இறக்கம் நின்ற என்பதற்குப் பசியால் முகம் இறங்கி அல்லது தளர்ந்த எனினுமாம். இறக்கம் - தளர்ச்சி.

பி - ம். 1. உணத்தரும்.

2. அறைக்கு: வாங்கிய.

4. இறங்குகின்ற; முகத்தனுக்கு; எய்தினுய், எய்தினுன். 53

1264. ஆறு நூறு சகடத் தடிசிலும்
நூறு நூறு குடங்களு நுங்கினன்
ஏறு கின்ற பசியை யெழுப்பினன்
சீறு கின்ற முகத்திரு செங்கணன்.

சீறுகின்ற முகத்து - பசியான் எழுந்த சினம் மிக்குக் காணப்படும் முகத்தில், (அங்கிலைக் கேற்ப) இருசெங்கணன் - சிவந்த இரண்டு விழிகளை யுடையவன் ஆன கும்பகன்னன், ஆறு நூறு சகடத்து அடிசிலும் - அறு நூறுவண்டிச் சோற்றை யும், நூறு நூறு குடங்களும் நுங்கினன் - பல நூற்றுக்கணக்கான கட்குடங்களையும் உட்கொண்டவனுய், ஏறுகின்ற பசியை எழுப்பி னன் - மேன் மேலும் உயர்கின்ற பசியைப் பின்னும் வளரச் செய்தான்.

பேரளவினதாகலின் உணவு பானம் முதலியன வண்டிகளில் வைத்துக் கொணரப்பட்டன என்க. 'துற்ற பலகறி செற்றியமலை செய் துப்பொரிமகிரி யொப்பெனச், சுற்று மிடனற மொய்த்த

சகடிரு சக்கிரவுருளாக ளுய்க்கவே, யுற்ற மிரைமிரை பத்தி படவலி யொத்த பகடுகள் கட்டினுன்' (வி. பா. வேத்திரகீய. 50) காண்க. அடிசில் - சோறு. 'இன்னடிசில் புக்களையும் தாமரைக் கைப் பூநாறும் செய்யவாய், மக்கள்' (நள. 234); 'உண்ணடிசிலென வூட்ட' (பெரியபு. திருஞான. 68); 'அடிசிற் கினியாளே' (தனிப்பா.) நுங்குதல் - பருகுதல்; அல்லது உண்ணுதல்; எங்கும் உலகு நுங்கு தீயென' (நக்க. 701); பசித்தோர்க்குச் சிறிதுணவுதரின் முன்னிருந்த பசி அதிகரிக்கும் என்ப. 'கிடந்த பசியைக் கிள்ளி யெழுப்புவது' என்ற பழமொழியும் காண்க.

பி - ம். 2. குடங்க ளுகர்ந்தனன்.
4. மூகத்தினன். 54

1265. எருமை யேற்றையோ ரீரறு நூற்றையும்
அருமை யின்றியே தின்றிறை யாறினன்
பெருமை பெற்றது கோடுமென் றேபிறங்
குருமை யேற்றைப் பிசைந்தெரி யூதுவான்.

பிறங்கு உரும் ஏற்றை பிசைந்து எரி ஊதுவான் - விளங்கு கின்ற ஆண் இடியையும் கையினால் பிசைந்து பொறியாகப் பறக்கு மாறு ஊதவல்லவனான கும்பகன்னன், பெருமை பெற்றது கோடும் என்றே - பெருமை கொண்டதான உணவினைப் பின்னர் உட்கொள் வோம் என்று நினைந்தே ஓர் எருமை ஏற்றை ஈர் அறு நூற்றை யும் - ஒப்பற்ற ஆயிரத்திருநூறு எருமைக் கடாக்களையும், அருமை இன்றியே - உண்பதில் எந்த விதமான சிரமமும் இல்லாமலே, தின்று இறை ஆறினன் - தின்று சிறிது பசிதீர்ந்தான்.

ஏற்றை - ஆண் எருமை. 'ஏறு மேற்றையும் ஒருத்தலும் களிறும் (தொல். மரபி. 2); 'ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம், ஏற்றைக் கிளவி யுரித்தென மொழிப' (தொல். மரபு. 49) ஓர் எருமை ஏற்றை எனக்கூட்டுக. அருமை இன்றி - உண்பதில் வருத்த மின்றி. உரும் ஐ - ஏறு - என்பதில் ஐ - சாரியை. சிற்றுணவை முன்னர்க் கொண்டு இளம் பசியாறிப் பின்னர்க் கன உணவுகளை உண்ண எண்ணினன் என்பான் 'பெருமை பெற்றது கோடும்' எனப்பட்டது; (ஒப்பு): கைப்பன வெல்லாங் கடைதலை

இத்திப்ப, மெச்சும் வகையா லொழிந்த இடையாகத். துய்க்க முறைவகையா லூண்' (ஆசார. 25) உருமை ஏற்றைப் பிசைதல்; (ஒப்பு): 'ஊமத்த முண்டா லென்ன...உருமுத்தின்பான்' (யுத்த. அதிகாயன். 215).

பி-ம். 1. எருமை யேற்றைய.

2. அருமை யன்றியே, அருமை யாற்றியே; துய்த்திறை யாற்றினன்.

3. பெருமை யேறிய வகைக்கொடுமேற், ஏறிய கற்கொடுமேற், யேற்றது கோடு மென்றே.

4. உருமின். 55

## கும்பகன்னனது தோற்றம்

1266. இருந்த போது மிராவண னின்றெனத்
தெரிந்த மேனியன் திண்கட லின்றிரை
நெரிந்த தன்ன புருவத்து நெற்றியான்
சொரிந்த சோரிதன் வாய்வரத் தூங்குவான்.

திண் கடலின் திரை நெரிந்தது அன்ன - வலிய ஆழியின் அலைகள் வளைந்தாற் போன்ற, புருவத்து நெற்றியான் - புருவத்துடன் கூடிய நெற்றியை யுடையவனும், சொரிந்த சோரி - (உட்கொண்ட ஊனினின்றும்) வெளிப்பட்டு ஒழுகிய உதிரம், தன் வாய்வர தூங்குவான் - தன் கடைவாய்வழி ஒழுகப் பேருறக்கம் கொள்பவனுமான (கும்பகன்னன்), இருந்த போதும் - எழுந்து உட்கார்ந்திருந்தபோதும், இராவணன் நின்றென தெரிந்த மேனியன் - இராவணன்நின்றாற் போன்று ஓங்கிக் காணப்படும் உடலுடன் கூடியவன்.

இராவணன் நின்ற நிலையில் எங்ஙனம் காணப்படுவானோ, அவ்வண்ணமே இருந்த நிலையில் கும்பகன்னன் காணப்பட்டான் என்று அந்த அரக்கன் உடல் நிலை கூறப்பட்டது. புருவத்துக்குத் திரை உவமை; 'கோணுதற் கமைந்த கோலப் புருவம் போற் றிரையும் கூட' (யுத்த. 437).

பி-ம். 1. நின்றிடத்.

3. தெரிந்தவன்ன.

4. வாயுகத், வாயுறத். 56

1267. உதிர வாரியொடுனொ டெலும்பு தோல்
உதிர வாரி நுகர்வதோ ரூணினன்
கதிர வாள்வயி ரப்பணிக் கையினன்
கதிர வாள்வயி ரக்கழற் காலினன்.

(கும்ப கன்னன்) உதிர வாரியொடு ஊனொடு எலும்பு தோல் - இரத்தப் பெருக்கும் ஊனும் எலும்பும் தோலும், உதிர - சிந்து மாறு, வாரி - கூட்டி யெடுத்து, நுகர்வது ஓர் ஊணினன் - உட் கொள்வதாகிய ஒப்பற்ற உண்டித் தொழிலை யுடையவன்; கதிர வாள் வயிரம் பணை கையினன் - நெற் கதிரின் இயல்பினைக் கொண்ட வாளாயுதத்தினை ஏந்திய, உறுதிசான்ற பருத்த கை களையுடையவன்; கதிர வாள் வயிரம் கழல் காலினன் - சந்திர னுடைய ஒளி போன்று ஒளி செய்யும் வயிரம் இழைத்துச் செய்த வீரகண்டையணிந்த பாதங்களை உடையவன்.

வயிரம் வெண்ணிற மாகலின் அதற்குச் சந்திரன் ஒளி உவமை யாக்கப் பட்டது. மூன்று நான்காமடிகளில் முதற்கண் வரும் கதிர என்பன இரண்டும் குறிப்புப் பெயரெச்சங்கள். கதிரவாள் வயிரப்பணை எனப்பாடம் கொண்டு 'பனம்பூப் பெற்ற பணை' என்னும் பழையவுரை. *1268* முதல் *1271* வரை மடக்கு என்னும் சொல்லணி.

பி - ம். 1. ஊனு ளெலும்பு தோல்.
3. பணைக்கையினன்.

1268. இரும்ப சிக்கு மருந்தென வெஃகினொ
டிரும்ப சிக்கு மருந்து மெயிற்றினன்
வருங்க ளிற்றினைத் தின்றனன் மாலரு
அருங்க ளிற்றிரி கின்றதொ ராசையான்.

இரு பசிக்கு மருந்து என - பெரிய பசியைத் தணிக்கக் கூடிய மருந்து என்று, எஃகினொடு இரும்பு - (தன்னிட மிருந்த) எஃகினா லும் இரும்பினாலும் இயன்ற படைகளை, அருந்தும் - உட் கொண்ட

வனாய், (அவற்றாற் பயனின்மை கண்டு), அசிக்கும் எயிற்றினன் - நகையாடுகின்ற பற்களையுடையவன்; வருகளிற்றினை தின்றனன் - தன் பால் நடந்து வருகின்ற மதம் கொண்ட யானைகளைத் தின்று, மால் அரு - பசி மயக்கம் நீங்காமல், அரு களில் திரிகின்றது ஓர் ஆசையான் - (ஒழித்தற்கு) அருமையான கள்ளில், இடையறாது செல்வதாகிய ஒப்பற்ற ஆசையை உடையவன்.

இருமை - பெருமை. இரும்பசி - கோரப்பசி. உண்ணும் பொருள்களோ என எஃகு முதலியவற்றைக் கருதி அவை அங்ஙனம் ஆகாமையின், நகைத்தான் என்க. எஃகு; இரும்பு; இவை அவற்றால் ஆய படைகட்கு ஆகுபெயர்கள். அசித்தல் - சிரித்தல்; ஹசி என்னும் வடசொல் அசி என வந்தது. நான்காம் அடியில் களில் என்பது கள்ளின் தொகுத்தல். வரும் என்பது இட வழுவமைதி. 'அவற்றுள், தருசொல் வருசொ லாயிரு கிளவியுந், தன்மை முன்னிலை யாயி ரிடத்த' (தொல். சொல். கிளவி. 29) என்றது காண்க. வருங்களிற்றினை எனவே திசை எல்லைகளில் நிலைத்து நிற்கும் யானைகள் அவனால் உண்ணப்படாமல் பிழைத்தன என்க.

பி - ம். 3. அருங்களிற்றினைத் தின்று; மவாவரு. 58

1269. சூல மேகந் திருத்திய தோளினன்
சூல மேகந் திருத்திய தோற்றத்தான்
காலன் மேனிமிர் மத்தன் கழற்பொரு
காலன் மேனிமிர் செம்மயிர்க் கற்றையான்.

சூலமேகம் - சூலப்படை யொன்றினையே, ஒரே கழுத்தடியில் திருத்திய பொருந்தப்பிடித்த தோளினன் - கையினை யுடையவன்; சூலமேகம் - (நீரினைக்) கருக்கொண்ட அழகிய மேகத்தை, திருத்திய - திருத்தச் செய்த, தோற்றத்தான் - காட்சியன்; காலன் மேல் நிமிர் மத்தன் - யமன்மீது போருக்குச் செல்லவல்ல உடல் திமிரை உடையவன்; கழல் பொரு காலன் - வீரகண்டை தாக்குண்டு ஒலிக்கின்ற பாதத்தினையுடையவன்; மேல் நிமிர் செம்மயிர் கற்றையான் - மேனோக்கி வளர்ந்த செம்பட்டமயிர்த் தொகுதியினன்.

ஏகம் - ஒன்று என்னும் பொருளது. சூலமே கந்து இருத்திய தோள் எனக்கொண்டு சூலம் என்ற படையையே சிறப்பாகத் தன் கழுத்தில் வைத்துக் கொண்ட கையன் என்பாரும் உளர், சூல என்பது சூல் என்றதன அடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம் அரக்கர்கள் கருநிறமாதல் காண்க. மத்தம் - மஸ்து என்ற வடசொல் திரிபு. அரக்கர்கட்குச் செம்பட்டை உரோமம் என்பர். 'செம்பரா கம்படச் செறிந்த கூந்தலாள்' (ஆரணிய. 228) எனச் சூர்ப்பணகை கூறப்பட்டதறிக. காலன் மேல் நிமிர் மத்தன் என்பதற்கு யமன் மீதும் போர்க்குச் செல்ல நிமிர்ந்து நிற்கும் உடற் கொழுப்புடையவன் என்க. ஒன்றும் செங்குருதியன்ன செறி குஞ்சியர்' (சுந்தர. 165); (யுத்த. 1272-ம் காண்க. கழல் பொருகாலன் - வீரக்கழல் புனையும் பதத் தன். தோள், கை - எனனும் பொருளதாதலை 'தோளூற்றோர் தெய்வம்' என்ற இடத்தும் காண்க.

பி - ம். 1. நூல மேகத்நிமிர் சுடர் தேரினன்; நிருந்துயர் தோளினன்.

2. நூலி மேகம் திருந்திய, மேகமெனப் பொலி.

3. காலன் மேனி மிறைக்க; கனற் பெருங்.

4. காலநேமியிற், காலின் மேனிமிர்; முச்சுக் கடியனன். 58

1270. எயிற லைத்த கரதலத் திந்திரன்
எயிற லைத்த கரதலத் தெற்றினன்
அயிற லைத்தொட ரங்கையன் சிங்கவூன்
அயிற லைத்தொட ரங்ககல் வாயினன்.

எயிறு அலைத்த - (சினத்தால்) பற்களை மென்று எதிர்த்த, கரம் தலத்து இந்திரன் - வலிய கைகளையுடைய இந்திரனை, எயில் தலை தகர தலத்து எற்றினன் - அண்டப் பித்திகையில் மோது மாறு பூமியில் ஓங்கித் தாக்கினன்; அயில் - வேற்படையையும், தலை தொடர் - சிறந்த பாசக்கயிற்றினையும் பற்றிய, அம் கையன் - அழகிய கையை உடையவன்; ஊன் - (ஏவல்மாக்கள் தந்த) மாமிச உணவு, சிங்க - அளவிற் குறைந்தால், அயில்தலை தொடர் - உண்ணுவதைத் தொடர்ந்து, அங்கு - அந்த உணவு உட்கொள்ளும் இடத்திலேயே, அகல் வாயினன் - வாயைத் திறந்து வைத்துக் கொண்டிருப்பவன். அங்கு - அசை.

கரதலம் - வடசொற்றொடர்; 'அஞ்சலென்ற கரதலமும்'. இரண்டாம் அடியில் தகர என்ற செயவென் எச்சத்தில் வலி மிகாதது இச்செய்யுள் மடக்கு ஆகலின். தொடர் என்ற முதனிலை தொடர்ந்து என வினையெச்சப்பொருள் தந்தது. சிங்குதல் - குறைதல். திருவளித்தும் விடளித்தும் சிங்காமை' (ஆரணிய. 99); 'சிங்கலில் சிறுகூதாளி' (கிட்கிந்தா. 759); 'சிங்கலில் மறை' (பால. கடிமணப். 48). 'சிங்கா வண்புகழ்ச் சிங்கபுரத்து' (சிலப். பதி. 47); எயில் தலைத் தகர தலத் தெற்றினன்: என்பதற்கு 'கோட்டைத் தலைதகர பூமியினின்று காலின் எற்றினன்' என்பது பழையவுரை. சிங்க ஊன் என்பதற்குச் சிங்கத்தின் ஊனெனினும் ஒன்றும்.

பி-ம். 2. களிற்றொடு மெற்றினன்.
3. அயிற்றலைத்தெதிர் வந்ததோர் போரெலாம்; சிந்தலன்.
4. அகன் வாயினன். 60

1271. உடர்கி டந்துழி யும்பர்க்கு முற்றுயிர்க்
குடர்கி டந்தடங் காநெடுங் கோளினன்
கடர்கி டந்தது நின்றதன் மேற்கதழ்
படர்க டுங்கனல் போன்மயிர்ப் பங்கியான்.

உடர் கிடந்துழி - கும்பகன்னனுடைய உயிரற்ற உடல் கிடந்தாலும், உம்பர்க்கும் - (தன்னைக் காணவரும்) தேவர்க்கும், உயிர் குடர் உற்று கிடந்து அடங்கா - உயிரானது குடலில் நின்று தரியாதபடி செய்யும், நெடு கோளினன் - பெருவன்மை படைத்தவன்; கிடந்தது கடர் - படுத்திருந்ததொரு கடல் (அந்த நிலை நீங்கப்பெற்று), நின்றதன் மேல் - நின்றதன்மீது, கதழ் படர் - விரைந்து செல்லும் இயல்புள்ள, கடு கனல் போல் மயிர்ப் பங்கியான் - கொடிய வடவைக் கனல் இருப்பது போன்று விளங்கும் செம்பட்ட மயிருடன் கூடியவன்.

முதல் மூன்றடிகளின் முதற்சீர்கள் கடைப் போலிகள். இவன் போருக்கு எழ வேண்டுவதில்லை. இவனை நினைத்தாலே தேவர்கட்குக் கதிகலங்கிவிடும் எனப்பட்டது. கும்பகன்னன்

(ஒப்பு) : 'கலங்கு மாலினம் தானவர் தேவியர் கருப்பம்' (யுத்த. 513) 'வாளாற் காய்ந்தே கடந்தான் பகை வேலை' (பால. அரசியல். 5). கதழ்தல் - விரைதல்; 'கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்' (குறுந். 117); 'கதழ்வீழருவி' (குறுந். 134); மயிர் பங்கி; ஒரு பொருளன. பங்கியை ஆண்மயிர் என்ப. 'கள்ளூறக் கனிந்த பங்கி அரக்கர்' (சுந்தர. 132); தன்மைத்தற்குறிப்பேற்றவணி. குடர் உடலுக்கு இலக்கணை. 'உடர் கிடந்துழி' என்பதற்குக் கும்பகன்னனது ஆவியில்லாத உடல் கிடந்தாலும் பயந்து தேவர்கள் உயிர் குடலில் தரியாது என்பது பழையவுரை. கும்பகன்னன் மேனிக்குக் கடல் உவமை.

பி - ம். 1. உடல்; உம்பற்கு; முற்றிய.

2. குடல், கடல்.

3. கடல்; நின்றனன் மேற்கதழ், மேற்றவழ், நின்றது மேனிமிர்.

4. வடகடுங்கனல்; நெடும். 61

1272. திக்க டங்கலும் வென்றவன் சீறிட
மிக்க டங்கிய வெங்கதி ரங்கிகள்
புக்க டங்கிய மேருப் புழையெனத்
தொக்க டங்கித் துயிறரு கண்ணினன்.

திக்கு அடங்கலும் வென்றவன் சீறிட - (அன்றியும்) திசைகள் அனைத்தையும் வென்றவனான இராவணன் சினங்கொழுகையில், மிக்கு அடங்கிய வெம்கதிர் அங்கிகள் - மிகவும் அடங்கியொழுகிய வெம்மையான கிரணங்களையுடைய சூரியனும் அக்கினியும், புக்கு அடங்கிய மேருபுழை என - நுழைந்து தங்குதற்குரிய மேருகிரியின் குகை போன்று காணப்படும், தொக்கு அடங்கி துயில் தரு கண்ணினன் - (இமைத் தோல்) சுருங்கி, நித்திரை புரியும் விழிகளை யுடையவன்.

திக்கடங்கலும் வென்றவன் - 'எட்டுமோ ரிரண்டுமாய திசைகளை யெறிந்து வென்றேன்' (யுத்த. இந்திரசித். 11); 'திக்கின் மாவெலாம் தொலைத்து' (ஆரணிய. 258); 'கரிபடு திசையி னெண்ட காவலாய்' (சுந்தர. 846); வெங்கதிரும் அங்கியும்கூட இராவணற்கு அடங்கி ஒழுகியது; 'வயங்கெரிக் கடவுளும் விளக்க மாட்டவே' (ஆரணிய. 671); மற்றும் திக்குக் காவலர்கள் அரக்கன் ஏவல்வழி

நின்றமை; ஆரணிய. 567 முதல் 570 உள்ள செய்யுட்களிற் காண்க. சூரியனும் இலங்கேசற்குப் பயந்து அவன் நகர்க்கண் புகுதற்கு அஞ்சினமை இந்நூலிற் பல இடங்களிலும் காணலாம்; சுந்தர. 116 118. கதிர் அங்கிகள்: உவமைத்தொகை. சூரியனும் அங்கியும் தங்கக்கூடிய மேருப்புழை போன்றது அவன் கண் எனப்பட்டது. துயில்தரு - தரு துணைவினை; (ஒப்பு): பிலமன்னவாய் என்றதும் காண்க. தொக்கு - தோல்; த்வக் என்ற வடசொல் திரிபு. 'மடித்தபில வாய்களொடு' (ஆரணிய. 602); 'ஒற்றை வான் றொளைப் புற்றெனப் பாம்புடன், உடும்பு முட்புக் குறங்கிடு மூந்திய' (கலிங். 139).

பி-ம். 1. ரிறிடா.

3. புக்கடங்கலில். 62

1273. காம்பு றங்குங் கனவரைக் கைம்மலை
தூம்பு றங்கு முகத்தின துய்த்துடல்
ஓம்பு றும்முழை யென்றுயர் மூக்கினன்
பாம்பு றங்கும் படர்செவிப் பாழியான்.

தூம்பு உறங்கும் முகத்தின கைமலை - துளை தங்கிய முகத்தினை யுடைய யானைகள், துய்த்து - உணவுட்கொண்டு, உடல் ஓம்புறும் - உடலைக்காத்தற்குரியவான, காம்பு உறங்கும் கனம் வரை - மூங்கில் நிலைபெற்ற பெரியமலையின், முழை என்று - குகை எனப்பகருமாறு, உயர் மூக்கினன் - உயர்ந்த மூக்கை உடையவன், பாம்பு உறங்கும் படர் செவி பாழியான் - பாம்பு துயிலுமாறு விரிந்த செவித் துளை யுடன் கூடியவன்.

காம்பு - மூங்கில்; 'காம்புறழுந் தோளாளை' (ஆரணிய. 357); 'கான்சேர் காம்பு கண்டாலும்' (கிட்கிந்தா. 763); 'காம்பிணையாற் களிமாமயிலால்' (திருக். 38); கைம்மலை - வெளிப்படை; ஆரணிய. 448, 481. 'கார ளிக்கலு ழுக்கருங் கைம்மலை' (கிட்கிந்தா. 34); தூம்பு - துளை; 'தூம்புடை நெடுங்கை வேழம்' (சீவக. 232); 'தூம்புடைய வெள்ளெயிற்றுத் துத்தியழல் நாகம்' (சீவக. 2958); யானைக்கு மூங்கிற் குருத்தை உண்பதில் அதிக ஆவல் உண்டு; 'பேதை யானை சுவைத்த, கூழை மூங்கில்' (குறுந். 179); 'பைங்கண் யானை, முற்ற மூங்கில் முளை தரு பூட்டும்' (அகம். 85);

'வழுவப் பிண்ட மடப்பிடி கொழுமுளை யாரும்' (நற். 116); பாழி - புற்று; இரண்டாமடியில் 'துய்த்துயில்' எனப் பாடம் கொண்டு 'யானைகளை மலைப்பாம்பு துய்த்துத் துயில் பொருந்தும் முழை' என்று பழையவுரை கூறும்.

பி - ம். 1. கரம் பிறங்கும்.

2. மதத்தின ; துற்றிட, துற்றபின், துய்த்துயில்.

3. ஒப்புறம் ; என்றுரை, பெற்றுயர், உற்றுயர். 63

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

இனைய கும்ப கருண னிராக்கதர்
தனைமு னிந்திடி யேறெனச் சாற்றினன்
எனைநெ டுந்துயில் போக்கிய தென்னென
மனந டுங்கினன் வாய்புதைத் தோதினர்.

## கும்பகன்னன் இராவணனிடம் வருதல்

1274. கூயி னன்னுமு னென்றவர் கூறலும்
போயி னன்னகர் பொம்மென் றிரைத்தெழ
வாயில் வல்லை நுழைந்து மதிதொடுங்
கோயி லெய்தினன் குன்றன தோளினன்.

அவர் - இராவணனால் பணிக்கப்பட்ட பணியாளர், 'நும்முன் - உன் தமையன், கூயினன் - அழைத்தான்' என்று கூறலும் - என்று பகர்ந்த அளவில், குன்று அன தோளினன் - மலைபோன்ற புயத்தை யுடையவனான கும்பகன்னன், நகர் பொம் என்று இரைத்து எழ போயினன் - நகர் எங்கும் பொம்மென்று ஆரவார முண்டாகப்போய், வாயில் வல்லை நுழைந்து - வாயிலில் விரைவுடன் புகுந்து, மதி தொடும் கோயில் எய்தினன் - சந்திர மண்டலத்தைத் தீண்டும் இராவணனுடைய அரண்மனையை அடைந்தான்.

பெரும்பாலும் அரண்மனையிலேயே உறங்கிக் கிடந்து பல மாதங்களாக வெளிவராதவன் ஆகலின், நகர மக்கள் அவனைக் கண்டதும் வியப்பு மேலீட்டால் ஆர்ப்பரித்தனர் என்க. மருட்கை என்னும் மெய்ப்பாடு. 'புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு, மதிமை சாலா மருட்கை நான்கே' (தொல். மெய்ப்பாட்.) என்றது காண்க. பொம்மெனல்: ஒலிக்குறிப்பு; பொம், பொலிவுமாம். வாயில்;

இலக்கணப்போலி. மலை உயர்வுக்கும் கலங்காமைக்கும் உவமை. அண்ணன் கட்டளையாதலின் வல்லை நுழைந்து எனப்பட்டது. மதிதொடும் கோயில்: 'வன்கொண்டல் விட்டுமதி முட்டுவன மாடம்' (சுந்தர. 96). கோயில்: இச்சொல் கடவுளிருக்கையினையும் மன்னன் இருக்கையினையும் குறிக்கும். இறைவன் என்ற சொல் இருவர்க்கும் பொதுவாதல் காண்க. இச்சொல் கோயில் எனவும் கோவில் எனவும் வழங்கும் என்பது தொல்காப்பியம் கொண்டுணர்க. 'கோயிலில்லா வூரிற் குடியிருக்க வேண்டாம்' என்பது ஔவையார் வாக்கு. நுழைந்து என்ற சொல்லிற் பணிவு காணலாம்.

பி - ம். 1. கூயினனுன்றன் முன்னெனக், கூயினனுன் முன்னென்று, உளமுன்னென்று.

2. நிரைந்திட.

4. குன்றன்ன ; கோளிறன், கொள்கையான். (14

## கும்பகன்னன் இராவணனை வணங்குதல்

1275. நிலைகி டந்த நெடுமதிட் கோபுரத்
தலைகி டந்த விலங்கைய ரண்ணலைக்
கொலைகி டந்தவேற் கும்ப கருணனோர்
மலைகி டந்தது போல வணங்கினன்.

நெடு மதிள் நிலை கிடந்த கோபுரத்து - உயர்ந்த மதில்களையும் பல நிலைகளாக அமைந்த மாடங்களும் அமையப்பெற்ற கோபுரத்தினையும் உடையதான, அலை கிடந்த - ஆழி சூழக்கிடந்த, இலங்கையர் அண்ணலை - இலங்கை மக்கட்கு தலைவனான இராவணனை, கொலை கிடந்த-கொலைத்தொழில் அமைந்து கிடந்த, வேல் - வேற்படையைத் தாங்கிய, கும்பகருணன் - கும்பகன்னன், ஓர் மலை கிடந்தது போல வணங்கினன் - ஒரு மலை கீழே படுத்தது போல நிலத்தில் வீழ்ந்து பணிந்தான்.

நிலை - மாடங்களின் அடுக்கு. அலை: கடலுக்கு இலக்கணை. கும்பகருணன் - குடம்போன்ற செவியினையுடையவன். மலை கிடந்தது: (1275).

பி - ம். 1. நிலை கடந்த ; மதிற்.

3. கொலை கடந்த. 85

## இராவணன் கும்பகன்னனைத் தழுவி உணவளித்துப் போர்க்கோலம் செய்தல்

1276. வன்றுணைப்பெருந் தம்பி வணங்கலும்
தன்றி ரண்டதோ ளாரத் தழுவினன்
நின்ற குன்றென்று நீணெடுங் காலொடும்
சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான்.

வல்துணை பெருதம்பி வணங்கலும் - வன்மை வாய்ந்த நண்பனை (உருவத்தாலும், பண்பாலும், பணிவாலும்) உயர்ந்த தம்பி பணிந்த அளவில், (இராவணன்) நின்ற குன்று ஒன்று - நிலை பெற்ற ஓர் மலை, நீள்நெடு காலொடும் - மிக நீண்ட காலுடனே, சென்ற குன்றை - வந்த குன்றினை, தழிஇ அன்ன செய்கையான் - தழுவிக் கொணடாற்போன்ற தன்மையனாய், தன் திரண்ட தோள் ஆர தழுவினன் - தன்னுடைய திரண்ட தோளினால் இறுகத் தழுவிக்கொண்டான்.

உறவு பற்றியும் மகிழ்ச்சி பற்றியும் ஒருவர் ஒருவரைத் தழுவுவது மரபு. (ஒப்பு) அயோத்தி. மந்திரப். 59, 60; குகப். 32; 'தழுவினரெழுவிற்றோளார்' (யுத்த. 426); சென்ற-வந்த என்னும் பொருளது. 'செல்விருந்தோம்பி' என்ற திருக்குறளும், அதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையும் காண்க.

பி - ம். 1. தம்பியை மார்புறத்.
2. தன்றுணைப் பெருந் தோளில்
3. நீள்நெடுங் ; கால்கொடு.
4. தழுவிய செய்கை போல். 68

1277. உடனி ருத்தி யுதிரத்தொ டொள்நறைக்
குடனி ரைத்தவை யூட்டித் தசைக்கொளீஇக்
கடல்நு ரைத்துகில் சுற்றிக் கதிர்க்குழாம்
புடைநி ரைத்தொளிர் பல்கலன் பூட்டினன்.

(இராவணன் கும்பகன்னனை) உடன் இருத்தி - தன்னுடன் உட்கார வைத்துக்கொண்டு, உதிரத்தொடு - இரத்தத்துடன், ஒள் நறை - சிறந்த கள்ளையும், குடன் நிரைத்தவை ஊட்டி -

குடங்களிலே வரிசையாகத் தந்தவற்றை உண்ணச் செய்து, நசை கொளீஇ - ஊனினை ஏற்குமாறு புரிந்து, கடல் நுரை துகில் சுற்றி - கடல் நுரை போன்ற வெண்பட்டினை அரையில் உடுத்து, கதிர் குழாம் புடை நிரைத்து ஒளிர் - ஒளிக் கற்றைகளைப் பக்கங்களிலே வரிசையாக வெளிவிடுகின்ற, பல்கலன் பூட்டினான் - பல அரதன அணிகளையும் அணிவித்தான்.

உடனிருத்தல் - அருகாசனம் அளித்தல். 'அணியுங் கழற்காற் சுயோதனனுக் கருகாசனத்த ரிவரென்றார்' (வி. பா. திரௌபதிமாலை. 36). உடனிருத்தி உண்பித்தல்: அக்ரபோஜனம் என்பர் வடநூலார். இஃது ஓர் சிறப்பு மரியாதை. நறை; கள்: 'வெண்ணிற நறை' நறா நறவு எனவும் வழங்கும். 'உண்டார் கணல்ல தடுநருக் காமம் போல்' (குறள். 1090). நறவு; (கிட்கிந்தா. 640, 641); குடம் குடன் - இறுதிப்போலி. கொளீஇ: சொல்லிசை அளபெடை துகிலுக்கு நுரை; 'இன்னுரைக் கலிங்க மேற்ப' நுரை கிழித்தனைய நொய்மை நுண்டுகில். 'நுரைபோற் றிகழ் வெண்பட்டு' (சீவக. 697, 5046); உண்பித்து நல்ல உடை கொண்டு அணிவித்தான் என்க.

பி - ம். 1. ஊனினை.

2. நசைக்குடீஇத்.

3. கடனிறந்துகில்.

4. புடை நிரைத்தவை.

67

1278. பேர விட்ட பெருவலி யிந்திரன்
ஊர விட்ட களிற்றொடு மோடுநாட்
சோர விட்ட சுடர்மணி யோடையை
வீர பட்ட மெனநுதல் வீக்கினான்.

பெருவலி பேரவிட்ட - சிறந்த வன்மை நிலை பெயரச் செய்யப் பெற்ற, இந்திரன் - இந்திரன், ஊரவிட்ட களிற்றொடும் ஓடும்நாள் - (தான்) ஏறிவந்த ஐராவதம் என்னும் யானையுடன் தோல்வியுற்று ஓடும் நாளில், சோரவிட்ட - தவறி விழுமாறு விடுத்த, சுடர்மணி ஓடையை - ஒளிதங்கிய மணிகள் பதிக்கப்பெற்ற (அந்த யானையின்) நெற்றிப் பட்டத்தை, வீர பட்டம் என நுதல் வீக்கினான் - வீரப்

பட்டம் என்று (அந்தக் கும்பகன்னனுடைய நெற்றியில்) சிறக்கக் கட்டினான்.

பேரவிட்ட பெருவலி : வடமொழி நடை. போர்க்கண் அச்சத்தாற் படைகளைக் கைவிட்டு ஓடுதல் உண்டு. வீரபட்டம் : இது வீரட்டிகை எனவும்படும். வெற்றிக்குறியாக அணியப்படுவது. 'வீரபட்டத்தொடு திலகமின்னவே' (பால. கடிமணப். 54); வீக்குதல் - இறுகக் கட்டுதல். 'கச்சையும் வீக்கினன்' (சீவக. 1836).

68

1279. மெய்யெ லாமிளிர் மின்வெயில் வீசிடத்
தொய்யில் வாசத் துவர்துதைந் தாடிய
கையி னாக மெனக்கடன் மேனியில்
தெய்வ நாறுசெஞ் சாந்தமுஞ் சேர்த்தினான்.

மெய் எலாம் மிளிர் - (தனது) உடம்பெல்லாம விளங்குகின்ற, மின் வெயில் வீசிட - மின் ஒளி வீசுமாறு, வாசம் தொய்யில் - மணம் பொருந்திய சந்தனச் சேற்றினால், துவர் துதைந்து ஆடிய - செந்நிறம் மிக்குத் திகழ்ந்த, கையின் நாகம் என - துதிக்கையினையுடைய யானைபோன்று புலப்படுமாறு. கடல் மேனியில் - (அந்தக் கும்பகன்னனது) கடல் போன்ற உடலில், தெய்வம் நாறு செம் சாந்தமும் சேர்த்தினான் - தெய்வத் தன்மையாக (இயற்கையாக) நறுமணம் கமழ்கின்ற செஞ்சந்தனக் குழம்பையும் பூசினான்.

செஞ்சாந்து பூசப்பெற்ற கும்பகன்னனுக்குத் தொய்யிலாடிய வேழம் உவமை. தொய்யில் - ஆடவரும் மகளிரும் தோள் தனங்களில் பூசும் சந்தனக் குழம்பு. 'தொய்யில் பொறித்த' (மதுரைக் காஞ்சி. 416); 'புள்ளித் தொய்யிற் பொறிபடு சுணங்கின்' (அகம். 239); 'தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை' (மதுரைக். 416 வாசத்துவர் - துவர் பத்து. 'பூவந் திரிபலை புணர்செங் கருங்காலி ......துவரே' 'மாந்தளிர்......முப்பழஞ் சிர்த்த முத்தக்காசு' எனவும் கொள்க. (சிலப், கடலாடு. 76) அரும்பதவுரை.

பா - ம். 1. மின்னின.

2. வாசந் : ஆட்டிய, ஆடிடக்.

3. கடலாமெனத்.

1280. விடமெ ழுந்தது போனெடு விண்ணினைத்
தொடவு யர்ந்தவன் மார்பிடைச் சுற்றினன்
இடப முந்தும் எழிலிரு நான்குதோள்
கடவு ளீந்த கவசமுங் கட்டினன்.

விடம் எழுந்தது போல் - நஞ்சு கிளர்ந்து நின்றாற் போன்று, நெடு விண்ணினை தொட உயர்ந்தவன் - நீண்ட ஆகாயத்தைத் தீண்டும்படி நிமிர்ந்துள்ளவனான கும்பகன்னனுடைய, மார்பிடை - மார்பிலே, இடபம் உந்தும் - காளை மாட்டினை ஏறிச் செலுத்தும், எழில் இரு நான்கு தோள் - அழகிய எட்டுத் தோள்களை உடைய, கடவுள் ஈந்த கவசமும் - சிவபிரான் அளித்த கவசத்தையும், சுற்றினன் கட்டினன் - சுற்றி வந்து கட்டினன்.

கருநிறத்தனாய் உயர்ந்த மேனியுடன் கூடியவன் ஆகலின், விடமெழுந்தது போல் நெடு எனப்பட்டது. சுற்றினன்: முற்றெச்சம். உடல் பெரிதாகலின் கவசமும் அவனைச் சுற்றி வந்து கட்டினன் எனப்பட்டது. சிவபிரான் காளைவாகனன் ஆகலின இடபம் உந்தும் எனப்பட்டது. 'தோடுடைய செவியன் விடையேறி' (தேவா. 1); 'ஏறூர்ந்தான் ஏறே;' (திருமுரு. பாயிரம்); 'வெண்ணூல் பூண்டு வெள்ளை யெருதேறி' (தேவா. 266 : 1); கடவுளீந்த; பொதுவாக எல்லா அரக்கர்களுமே தவம் செய்து வரம் பெற்றவர்கள் என்பது 'பெருவரங்களும் தவங்களும் விளம்பின் அனைய பேருக மாயிரத் தளவினு மடங்கா' (யுத்த. படைக்காட்சி. 27) என்பது கொண்டு காண்க. இருநான்குதோட்கடவுள் சிவபிரான்: இவனை எண்டோளீசன் என்பர். ஈந்த:ஈதல், உயர்ந்தவன் அவனினும் தாழ்ந்தவனுக்குக் கொடுப்பது; ஈதாவெனவொரு மூன்று முறையே, இழிந்தோ னெப்போ னுயர்ந்தோ னிரப்புரை' (தொல். சொல்.); கவசமும்: உம்மை இறந்தது தழுவியது. இவன் அணிந்த கவசம் சாதாரண அம்புகளினால் பிளக்கப்படாமல், இராமபிரான் ஏவிய சங்கரன் கணையால் பிளக்கப்பட்டமை, கும்பகருணன் வதைப்படலம். 334, 335-ல் காண்க.

பி - ம். 3. உந்தும் எரிபுரை, உந்திய ஈரு நான்கு தோள்.

இங்கு அதிகப்பாடல்:—

வட்ட மின்னேயு மாதிர மெட்டையும்
கட்ட வீரங் கடற்பெருங் காவலன்
தொட்ட பல்கல னுஞ்சுடர் மவுலியும்
தெட்ட தொர்சோதி திளோப்பரென் ருரரோ.

## கும்பகன்னன் போர்க்கோலஞ் செய்த காரணம் வினுதல்

1281. அன்ன காலேயி னுயத்தம் மியாவையும்
என்ன காரணத் தாலென் றியம்பினுன்
மின்னி னன்ன புருவமும் விண்ணினேத்
துன்னு தோளு மிடந்துடி யாநின்ருன்.

(கும்பகன்னன்), மின்னின் அன்ன புருவமும்-மின்னலே யொத்த (செம்பட்ட மயிரால் நிறைந்து நெளிந்துள்ள) புருவமும், விண்ணினே துன்னு தோளும் - வானத்தை அளாவும் தோளும், இடம் துடியா நின்ருன் - இடதுபுறம் துடிக்கப் பெற்றவனுய், அன்ன காலேயில் - அந்தப் போழ்தில், 'ஆயத்தம் யாவையும் - போர்த் தயாரிப்பு எல்லாம், என்ன காரணத்தால் - என்ன காரணம் பற்றிச் செய்யப்படுகின்றன'; என்று இயம்பினுன் - என்று கேட்டான்.

கும்பகன்னன் இவ்வாறு வினவியபோது அவனுடைய இடது புருவமும் இடது தோளும் கெட்ட அறிகுறி யெனும்படி துடித்தன. ஆடவர்க்கு இடது தோளும், கண்ணும் புருவமும் துடித்தலும், பெண்டிர்க்கு வலது தோளும், கண்ணும் புருவமும் துடித்தலும் கெட்ட அறிகுறிகள் என்ப. (ஒப்பு): 'முனியொரு மிதிலேயின் முனேவன் முந்துநாள், துனியறு புருவமுந் தோளு நாட்டமும், இனியன துடித்தன'. சுந்தர. 361; 362: 363; யுத்த. மூலபல. 81 காண்க. இயம்புதல் வினவுதல் என்னும் பொருட்டது. விண்ணினேத் துன்னுதோள் என்னும் தொடர் கும்பகன்னனுடைய

உடற்பெருமையைக் காட்டிநின்றது, 'விண்ணினை யிடறு மோலி விசும்பினை நிறைக்கும் மேனி' (யுத்த. 1262).

ந - ம். 1. காலையிங் வாரம்பம், காலையிலாயத்தம்.

3. மின்னையன்ன ; விண்ணிடை ந.

4. துடிக்கின்றதால். 71

## கும்பகன்னனைப் போருக்குச் செல்லச் சொல்லுதல்

1282. வாந ரப்பெருந் தானையர் மானிடர்
கோந கர்ப்புறஞ் சுற்றினர் கொற்றமும்
ஏனை யுற்றனர் நீயவ ரின்னுயிர்
போன கத்தொழில் முற்றுதி போயென்றான்.

(இராவணன்) 'மானிடர் - மனிதர் இருவர், வாநரம் பெரு தானையர் - பெரும் குரக்குச் சேனையை உடையராய், கோ நகர் புறம் சுற்றினர் - சிறந்த (நமது) நகர்ப்புறத்தைச் சூழ்ந்தனர் ; ஏனை கொற்றமும் உற்றனர் - இதுவரை நம்மிடம் பெறாததான வெற்றியையும் பெற்றனர் ; நீ - நீ சென்று, அவர் இன் உயிர் போனகம் தொழில் முற்றுதி - அவர்களின் இனிய உயிரைப் பருகுகின்ற செயலை முடிப்பாயாக', என்றான் - என்று கூறினான்.

மானிடர் என்ற சொல்லை எள்ளற்குறியாக அடிக்கடி இராவணன் இந்நூலிற் பயன்படுத்துவது காணலாம். 'இருவர் மானிடர் தாபதர்' (ஆரணிய. 365); 'வன்மை தரித்தோர் மானுடர்' (ஆரணிய. 727) ; முதலியன காண்க. சுற்றினர் - சூழ்ந்து முற்றுதல் உயிர் போனகத் தொழில் : பகைவரின் உயிரைக் கவர்தல் ; 'உண்டற் குரிய வல்லாப் பொருளை யுண்டன போலக் கூறலும் மரபே' (தொல். பொருளி. 19). போனகம் - உணவு ; 'பரமனைப் பாடிப்பாடிப் போனகம் படைக்க வாரீர்' (நக்க. 752) ; 'அமுது செய்வித் திட்ட போனகத்து' (மீனாட்சி. பிள். 6); 'போனக மாக வமுதுசெய யாவிடிற் பூதலத்தே' (திருக்கருவை. கலித். 40) ; இனி 'நீ யவரின்னுயிர் போனகத் தொழில் முற்றுதி' என்பதற்கு நீ சென்று அவருக்கு உன் உயிரைக் கொண்டு போனகத்

தொழில் முற்றுவிப்பாய்' என ஓர் அமங்கலப் பொருளும் தொனித்தல் காணலாம்.

பி - ம். 1. தானையும், தானைய.

2. கோனகர் ; சுற்றிநங் : சுற்றினம் ; கொற்றயோடு.

3. உற்றவரோ டமரேற்று. 72

இதன்பின் 'கிட்டியதோ' என்ற பாடல் சில பிரதிகளில்,

## வேறு

### கும்பகன்னன் அதுகேட்டு வருந்தி இராவணனுக்கு அறிவுரை கூறுதல்

1283. ஆனதோ வெஞ்சமம் அலகில் கற்புடைச்
சானகி துயர்இனந் தவிர்ந்த தில்லையோ
வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்
போனதோ புகுந்ததோ பொன்றுங் காலமே

'(நான் ஐயுற்ற வண்ணமே), வெம் சமம் ஆனதோ - கொடிய போர் எழுந்ததோ? அலகு இல் கற்புடை - எல்லையில்லாத கற்பினையுடைய, சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ - சீதாதேவியின் (சிறையுறை) துன்பம் இனம் நீங்கிற்றிலதோ? வானமும் வையமும் - வானத்திலும் பூதலத்திலும், வளர்ந்த வான் புகழ் - ஓங்கி நின்ற உன்னுடைய சிறந்த கீர்த்தியானது, போனதோ - போய் விட்டதோ? பொன்றும் காலம் புகுந்ததோ - (அரக்கர்கட்கு) இறந்துபடும் காலம் வந்துவிட்டதோ! ஓ - வினா. ஏ - அசை.

ஆனதோ - வெஞ்சமம் என்று வினைமுற்று முன் வந்ததி லிருந்து, கும்பகன்னனுடைய கவலை மிகுதி புலனாகும்; கிட்டியதோ செரு என்று தொடங்கும் அடுத்த பாடலும் இதே முறையின் அவல மெய்ப்பாட்டினை உணர்த்துவ தறிக. அலகு - அளவு; 'அலகில் சோதியன்' (பெரியபு. பாயி.) ;'அலகிலாவினை யாட்டுடை யாரவர்' (பால. பாயிரம்.) துயர் : சிறைபட்டுழக்கும் துன்பம். 'வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்'; 'திக்கின் மாவெலாம் தொலைத்து வெள்ளி மலையெடுத் துலக மூன்றும் காவலோன்'

(ஆரணிய. 258) என்றது காண்க. 'இருந்தன னுலகங்க ளிரண்டு மொன்றுந்தன், அருந்தவ முடைமையின' (சுந்தர. 836); இந்தச் செய்யுள் முதல் 1317 வரை கலிவிருத்தங்கள். சில பிரதிகளில் இச்செய்யுள் 'கிட்டியதோ' என்ற செய்யுளின் பின்னர் உள்ளது.

பி - ம். 1. சமர்.
3. வையமு நிறைந்த. 73

1284. கிட்டிய தோசெரு கிளர்பொற் சீதையைச்
சுட்டிய தோமுனஞ் சொன்ன சொற்களால்
திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலை யோவிது விதியின் வன்மையே.

'செரு கிட்டியதோ - போர் நெருங்கி விட்டதோ? கிளர்பொன் சீதையை - ஒளிவிடுகின்ற (மாற்றுயர்ந்த) பொன் போன்ற சீதா தேவியை, சுட்டியதோ - நிமித்தமாகக் கொண்டதோ? முனம் - முன்னமே, சொன்ன சொற்களால் - கூறிய சொற்களையுட் கொண்டு, திட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை - கண்ணில் நஞ்சினைக் கொண்ட நாகம் போன்றவரும், கற்பினையே செல்வமாக வுடைய வருமான சீதா தேவியை, விட்டிலையோ - விட்டபாடில்லையோ? இது - இந்த உன்னுடைய செயல். விதியின் வன்மையே - விதியின் வல்லமையே' ஏ - அசை. ஓகாரம் - வினா.

பொற் சீதை - பொன் அல்லது திருமகளாகிய சீதை எனினுமாம். முனம் சொன்ன சொற்கள். இவற்றை யுத்த. 59-65 வரை காண்க. திட்டியின் விடம்; 'திட்டி விடமுணச் செல்லுயிர் போவுழி '(மணி. 11; 100)' இது நஞ்சுவிழியரவு, அழற்கணாக மெனவும் கூறப்படும். இதனைத் 'திட்டி விடமுணுஞ் செல்லுயிர் போனால் (மணி. 9, 49) 'திட்டிவிட முணச் செல்லுயிர் போயதும் (மணி. 21; 40); 'அழற்கணாக மாருயிருண்ண' (மணி. 23; 69); 'நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி' (மணி. 23 : 84) எனத் தொடங்கி எழுதப் பெறும் தக்கயாகப்பரணி 554ன் உரைக்குறிப்புக் காண்க. 'திட்டிவிடம் : பிராட்டியைப்பார்த்த கண்ணுக்கு விடம் போன்ற கற்பு' என்பது பழையவுரை. விடம் நான்குவகை, ஆசி, தந்த, திருஷ்டி, வாயு, (சித்தாரூடம்). 'விதியின் வன்மை' இது இக்காப்பியத்திற் பற்பல இடங்களிற் குறிக்கப் பெறும். காப்பியத் தலைவன் முதலாகப் பலரும் இந்த விதியின் வல்லபத்தைக் குறித்

துச் செல்வர் 'விதியின் பிழை நீ யிதற்கென்னை வெகுண்டதென்ருன்' (அயோத்தி. நகர்நீ. 133); 'விதியிது வலியினுலும்' (ஆரணிய. 639); 'இறுதியே யியைவதாருல் இடையோன்ருற் றடையுண்டாமோ' (யுத்த. 1252); 'நான்முகத் தொருவற் சூழினும், ஊழ்வினை யொருவரா லொழிக்கற் பாலதோ' (அயோத்தி. நகர்நீ. 163); 'விதிகொடுந்த விளைந்தது' (யுத்த. 737). 'விதியையார் தீர்க்ககிற்பார்' (யுத்த. கும்ப. 1375). 'ஊழிற் பெருவலி யாவுள' (குறள். 380).

இச்செய்யுளில் நந்தி, வேதவதி முதலியவர்களின் சாபங்களைப் பற்றிய குறிப்பும், அவற்றை நினைந்து சீதாதேவியைச் சிறைவிடு செய்யாதது விதியின் விளையாட்டே என்ற குறிப்பும் காணலாம். சொன்ன சொற்கள், தானும் மாலியவானும் அவனுக்கு உபதேசமாகக் கூறிய சொற்கள் மட்டுமின்றி மேலே குறித்த நந்தி வேதவதி முதலியோருடைய சாபங்களுமாம்.

பி - ம். 1. விளர்ந்த பல்படை, கெழுவும் பல்படை.

2. முன்னம் சொன்ன சொற்கேளாய்.

4. வண்ணமோ. 74

இதன்பின் 'ஆனசீதா வெஞ்சமம்' சில பிரதிகளில்.

1285. கல்லலா முலகினை வரம்பு கட்டவும்
சொல்லலாம் தொலைவிலா விராமன் தோள்களை
வெல்லலா மென்பது சீதை மேனியைப்
புல்லலா மென்பது போலு மாலையா.

'ஐயா - ஐயனே! உலகினை கல்லலாம் - உலகினை அகழ்ந் தெடுக்கலாம்; (அன்றி), உலகினை வரம்பு கட்டவும் சொல்லலாம் - இவ்வுலகம் முழுவதற்கும் எல்லை அமைக்கவும் சொல்லலாம்; (ஆனல்) தொலைவிலா இராமன் தோள்களை - அழியா இராமபிரானுடைய புயங்களை, வெல்லலாம் என்பது - வென்று விடலாம் என்பது, சீதை மேனியை புல்லலாம் என்பது போலும் - சீதாதேவியின் உடலைத் தழுவலாம் என்பது போலும்'. ஐயா - விளி. ஆல்: அசை,

உலகினை அகழ்வது அல்லது உலகிற்கு வரம்பு அமைப்பது என்ற இச்செயல்களை ஒருவன் செய்யக்கூடும் எனினும், அவனால் கற்புத் தெய்வமாகிய சீதா தேவியைத் தழுவுதல் என்பது எவ்வாறு இயலாதோ, அவ்வாறே இராமபிரானை வெல்வதென்பதும் இயலாத காரியம் என்று குறிக்கப்பட்டது. உலகினை இடைநிலை விளக்காகக்கொண்டு கல்லலாம் வரம்பு கட்டச் சொல்லலாம் என்பதோடும் இயைக்க; இச்செய்யுட் கருத்தோடும் சந்தத்தோடும், 'சொல்லலா மிருந்துழிச் சொன்ன சொற்படி, வெல்லலா மென்பது விதிக்கும் கூடுமோ, மல்லலா ளியைப்பல வளைந்து கொள்ளினும், கொல்லலா யிருக்குமோ குஞ்சரங்களால்' (வி. பா. நிரைமீட்சி. 84).

பா-ம். 1. கல்லினல், கல்லினும், கல்லலும்; கட்டினும், கட்டேனும்.

2. பெருவலி.

4. என்பதும்; பொருந்துமோமன்னு. 75

இதன்பின் 'கொடுத்தனை' என்ற பாடல் இரு பிரதிகளில் உள்ளன.

1286. புலத்தியன் வழிமுதல் வந்த பொய்யறு
குலத்தியல் பழிந்தது கொற்றம் முற்றுமோ
வலத்திய லழிவதற் கேது மையறு
நிலத்தியல் நீரிய லென்னு நீரதால்.

('நெறி தவறி நடக்கின்ற உனக்கு), கொற்றம் முற்றுமோ - வெற்றி கிட்டுமோ? (உனது செயல்) வலத்தியல் அழிவதற்கு ஏது - வென்றித்தன்மை யழிவதற்கே ஏதுவாகும்; (இது), மை அறு நிலத்துஇயல் நீர் இயல் என்னும் நீரது - குற்றமற்ற நிலத்தியல்பு நீரியல்பு என்கின்ற முறைமைக்குத்தக வுள்ளது; புலத்தியன் வழி முதல் வந்த - புலத்திய முனிவரின் வழி தொடங்கி வந்த, பொய் அறு - வஞ்சனைக் குணமற்ற, குலத்தியல்பு அழிந்தது - குலத்தின் தன்மை உன்னால் குலைவுற்றது. ஓ - வினா. ஆல் - அசை.

புலத்தியன் வழிமுதல் வந்த பொய்யறு குலம்; 'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி. (ஆரணிய. 258); 'வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன்மைந்தன்' (சுந்தர. 483). 'மகன் மகன் மைந்தன் நான்முகற்கு வாய்மையான்' (யுத்த. 348); என்பனவும் அவற்றின் உரைக்குறிப்பும் காண்க. இராவணன் குலமுறை

உத்தர திருவோலக். 17ல் காண்க. 'குலத்தியல் பழிந்த தேனும்' (யுத்த. கும்ப. 1336) எனப் பின்னர்க் கூறப்பெறுவதும் காண்க. திருக்குறள் 'பிறனில் விழையாமை' என்ற அதிகாரச் செய்யுட்களும் காணலாம். 'காணிற் குடிபபழியாம்' (நாலடி. 84); நிலத்தியல் நீரியல்: 'நிலத்தியல்பால் நீர்திறைந் தற்றாகும் மாந்தர்க், கினத் தியல்பதாவதறிவு' (குறள். 452). வலத்தியல்: வலத்தியல் தோளை நோக்கி மகிழ்கின்றேன் (யுத்த: 1536), 'வலத்தியல் அழிவதற் குக் காரணம் மழை நீரானது எந்தப் பூமியிலே விழுந்தாலும், எந் நீரிலே விழுந்தாலும் அதன்படியாவது போன்று, தம்முடைய தாய்வழியாய் விட்டதே ஒழியத் தந்தைவழி வந்ததில்லை' என்பது பழையவுரை. இங்கு 'சத்பீஜான்யபி சஸ்யானி, தூஷ்யேயுகு க்ஷேத்ர தோஷத' என்ற ச்லோகம் நினைவுகூரத்தகும்.

பி - ம். 2. குலத்தியல் பழித்தனை; முற்றுமெய், முற்றுமே.

4. நீரியல் பெண்ணு நீரதே, நீர்மையால். 76

1287. கொடுத்தனை யிந்திரற் கரசும் கொற்றமும்
கெடுத்தனை நின்பெருங் கிளையும் நின்னையும்
படுத்தனை பலவகை யமரர் தங்களை
விடுத்தனை வேறினி வீடு மில்லையால்.

'(உனது தகுதியற்ற செயலால்), இந்திரற்கு அரசும கொற்றமும் கொடுத்தனை - இந்திரனுக்கு அரசினையும் வெற்றியையும் தந்தனை; நின்பெரு கிளையும் கெடுத்தனை - உன்னுடைய பெரிய உறவினரையும் கெடுத்திட்டனை; நின்னையும்படுத்தனை - உனக்கும் அழிவுதேடிக் கொண்டனை; பலவகை அமரர் தங்களை விடுத்தனை - பலவகைப்பட்ட தேவர்களைச் சிறையி னின்றும்) விடுதலை செய்தவனானாய்; இனி வேறு வீடும் இல்லை - இனி (உனக்கு இந்தத் தீச்செயலின் விளைவினின்றும்) வீடு - விடு தலை, இல்லை - கிடையாது. ஆல் - அசை.

இந்திரற்கு அவனுடைய வாழ்வினையும், உன் கிளைஞர்க்கு அழிவினையும், கூட்டியதோடு, உன் தீச்செயலால் உனக்கும் அழிவு தேடிக் கொண்டனை என்றான். 'உன்னை முனிவுற்றான் குலத்தை முனிவுற்றாய்' (ஆரணிய. 744). கிளை உவமவாகு பெயராகச் சுற்றத்

தாரைக் குறித்தது; கொடுத்தனை, கெடுத்தனை, படுந்தனை, விடுத் தனை என்பன தெளிவு பற்றி வந்த கால வழுவமைதிகள்.

பி - ம். 1. உலகும் கொற்றமும்.

2. கெடுத்தனையும்; கிளையோடு, கிளையை; யுள்ளையும்.

3. படுத்தனை பல்பகல்.

4. விடுத்தனை நமக்கினி விடு மில்லையால். 77

1288. அறமுனக் கஞ்சியின் றொளித்த தாலதன்
திறமுன முழத்தலின் வலியுஞ் செல்வமும்
திறமுனக் களித்ததங் கதனை நீக்கிநீ
இறலினங் கியாருனை யெடுத்து நாட்டுவார்.

'இன்று - இப்பொழுது, உனக்கு அஞ்சி - உனக்குப்பயந்து, அறம் ஒளித்தது - தருமம் காந்து கொண்டது; அதன் திறம் முனம் உழத்தலின் - அந்தத் தருமத்தின் கூறுபாட்டை நீ வருந்திச் செய்ததனால், (அந்த அறமானது), வலியும் செல்வமும் உனக்கு திறம் அளித்தது - வலிமையையும் செல்வத்தையும் உனக்கு ஒரு மேம்பாட்டையும் தந்தது, அங்கு அதனை நீக்கி - அங்ஙனமுள்ள அந்தத் தருமத்தை நீக்கி, நீ இறலின் - நீ அழியும் கால், அங்கு முன் அங்கு முற்பட்டு, உனையார் எடுத்து நாட்டுவார் - யாவர் உனை உயர்த்தி நிலை பெறுத்த வல்லார்? ஆல் - அசை.

அறம அஞ்சி ஒளித்தது 8. (சுந்தர. 231) நீ முன்புரிந்த அறத்தினுலேயே அனைத்துச் செல்வமும் எய்தினை, இன்று நீ அதனைத் துறந்ததால் அழிவு எய்துகின்றாய்; இந்நிலையில் உன்னைத் தாங்க வல்லார்கள் யார்; எவரும் இல்லை என்ற படி; (ஒப்பு): 'பெற்றனை செல்வம் பின்னி திழந்தாற் பெற லாமோ' (ஆரணிய. 732); 'அறத்திற னாலே யெய்தினை யன்றோ வது நீயும், புறத்திற னாலே பின்னு மிழக்கப் புகுவாயோ' (ஆரணிய. 733); 'மற்றொரு வற்காய் மனைவாழும், தாரங்கொண்டா ரென்றிவர் தம்மைத் தருமந்தான், ஈரும் கண்டாய்' (ஆரணிய. 734): 'அறந் திறம்பின ராருள ராயினர்' (சுந்தர. 1138); தலையினிழிந்த மயிரனை

யர் மாந்தர், நிலையினிழிந்தக் கடை' (குறள். 964); என்ற திருக்குறட் கருத்து இங்கே நினைவு கொள்ளத்தகும்.

பி - ம். 1. அறமுமக்கு ; ஒளித்த தன்னநின்.

2. செய்கையின்.

3. அளித்த நிங்கிதனை ; நீக்கிய, நீக்கினய், நீக்கி நீர்.

4. இறுமுனிங்கு ; யாரினி ; யாகுமை. 78

1289. தஞ்சமுந் தருமமுந் தகவு மேயவர்
நெஞ்சமுங் கருமமு முரையு மேநெடு
வஞ்சமும் பாவமும் பொய்யும் வல்லநாம்
உஞ்சுமோ வதற்கொரு குறையுண் டாகுமோ.

'அவர் - அந்த மானிடரின், உரையும் கருமமும் நெஞ்சமும் - சொல்லும் செயலும் மனமும்; (முறையே) தஞ்சமும் தருமமும் தகவுமே - பிறர்க்கு எளியராவதும் அறம் வழங்குவதும், நடு நிலையாக நன்மை தருவதும் என்ற இவைகளேயாம்; (அவ்வாறிருப்பவும், அவருடன் பகைமை கொண்டு), நெடுவஞ்சமும் பாவமும் பொய்யும் வல்ல நாம் - மிக்க வஞ்சனையும், பாவச் செயலும், பொய்யும் வல்ல நாம், உஞ்சுமோ - பிழைப்போமோ? அதற்கு - அவர்களுடைய தருமத்துக்கு, ஒரு குறை உண்டாகுமோ - ஒரு குறைவு நேருமோ'. ஓகாரம் - வினா ; எதிர்மறைப்பொருளது.

நெஞ்சம் கருமம், உரை - இவை எதிர் நிரை நிரையாக முதலடியில் உள்ள தகவு, தருமம் தஞ்சம் என்பவற்றேடியைந்தும் முறை நிரையாக வஞ்சம் பாவம் பொய் என்பவற்றுடன் சென்றியைந்தும் இடைநிலை விளக்காக அமைந்துள்ளமை உய்த்துணர்க. உய்தும் என்பது உய்ந்தும் என்ருகிப் போலி எழுத்துப் பெற்று உய்ஞ்சும் என நின்றது. முதலடிக்கு (ஒப்பு); 'தாயென வுயிர்க்கு நல்கித் தஞ்சமும் தகவும் சார்வும், நீயெனு' (கிட்கிந்தா. 348); 'தருமமும் தகவுமிவர் தனமெனும் தகையரிவர்' (கிட்கிந்தா. 50) 'ஏயவர்' என்பது பெருமான் திருநாமம்' என்பது பழையவுரை.

பி ம். 1. தவமுமே.

2. உரையினிட்டமும்.

4. உஞ்சுபோ வதற்கொரு ; குறைவு. 79

1290. காலினிற் கருங்கடல் கடந்த காற்றது
போலவன் குரங்குள சீதை போகிலள்
வாலியை யுரங்கிழித் தேக வல்லன
கோலுள யாமுளேங் குறையுண் டாகுமோ.

'காலினில் - (தன்னுடைய) பாதங்களினால், கரு கடல் கடந்த - கரிய கடலைக் கடந்த, காற்றது போல - காற்றைப்போல், வல் குரங்கு - வன்மை வாய்ந்த குரங்கோ, உள (நம் விரோதி கட்குத் துணையாக) உள்ளது; சீதை போகிலள் - சீதா தேவியும் வெளி யேற்றப்படாதவளாய்ச் சிறைக்கண்ணே இருக்கின்றாள்; வாலியை உரம் கிழித்து ஏக வல்லன கோல் - வாலியையும் மார் பினைக் கிழித்துச்செல்லும் வல்லபம் பெற்ற அம்புகளும், உள - உள்ளன; (அவற்றை ஏற்குமாறு), யாம் உளேம் - நாமும் இருக் கின்றோம்;' குறை உண்டாகுமோ - இனி என்ன குறை உண்டாகப் போகின்றது?'' ஓ: எதிர்மறை.

நம்மைக் கொல்வான் அமைந்த கூற்றுக்கள் மூன்று - அவை அநுமன், சீதாதேவி, வாலியின் மார்பினை ஊடுருவிச் சென்ற இராமன் அம்பு; சீதை விடுதலை பெறாத நிலையில், அநுமன் துணைக்கொண்டு வாலியையும் கொன்ற அம்பு நம்மையும் உயிர் கவர்வது ஒரு தலை எனப்பட்டது. இனி என்ன குறை என்பது பிற குறிப்பு. காலினில் கருங்கடல் கடந்தது; 'கருங்கடல் கடந் தனன் காலினா லென்றான்' (சுந்தர. 585). இங்குக்கால் என்பது காற்று என்றும், இராமபிரான் திருவடிப் பலம் என்றும் பொருள் படுதல் உய்த்துணர்க. இனி கால் என்பதனைக் காற்று எனக்கொண்டு, அதனை அடக்கி லகிமா என்ற சித்தியால் விண் வழிச்சென்றதாகக் கூறினும் பொருந்தும். 'அஞ்சிலே ஒன்றாக ஆரியற்காக ஏகி' (பால. அநுமன் துதி) என்றது காண்க. முதலடி முற்றுமோனை. காற்றது போலவன் குரங்கு என்பதற்குக் காற்றின் புதல்வன் ஆதலின், அஞ்சச்சும் பாவனையும் வன்மை முதலியன வும் காற்றின் வேந்தனாகவே அமைந்த மாருதி எனினுமாம். வாலியை உரம் கிழித்தேக வல்லன கோல் (ஒப்பு). 'நீரும் நீர்தரு நெருப்பும்வன் காற்றும் கீழ் நிமிர்ந்த, பாரும் சார்வலி படைத் தவன் உரத்தையப் பகழி' (கிட்கிந்தா. 289) என்றது காண்க.

பா-ம். 1. கடப்பக், கடந்து; காற்றினைப்.
2. போல்வன குரங்குகள்; போகலன்.
3. கிழித்துருவ வல்லவன்.

1291. என்றுகொண் டினையன வியம்பி யானுனக்
கொன்றுள துணர்த்துவ துணர்ந்து கோடியேல்
நன்றது நாயக நயக்கி லாயெனிற்
பொன்றினை யாகவே கோடி போக்கிலாய்.

என்று இனையன கொண்டு இயம்பி - என்று இவ்வாருன அறிவுரைகளை எடுத்துச்சொல்லி (மேலும் கூறுபவனாய்), 'யான் உனக்கு உணர்த்துவது ஒன்று உளது - யான் உனக்கு அறிவிக்க வேண்டுவது ஒன்று இருக்கின்றது; நாயக - தலைவனே! அது உணர்ந்து கோடியேல் - அதனைத் தெரிந்து ஏற்றுக்கொள்வாயாயின், நன்று - நல்லது; நயக்கிலாய் எனில் - விரும்பாமற் போவாயெனில், போக்கிலாய் - வேறு புகலிடமில்லாதவனே! பொன்றினை யாகவே கோடி - (உன்னை) இறந்தவனாகவே நினைத்துக்கொள்.

கொண்டு: அசை எனக் கோடலுமாம். மமதையாற்றான் பிடித்ததே கொள்பவன் ஆதலின் உணர்ந்து கோடியேல் என்ருன். கோடி: கொள் தீ எனப் பிரிந்து புணரும். இராமன் அம்பால் இறுதியில் இறத்தல் உறுதியென்பான்; 'பொன்றினை யாகவே கோடி' என்ருன். பின்னரும், (1299)-ல் 'பொன்றுவன் பொன்றினல்' என்று கும்பகன்னன் கூறுவதும் காண்க. போக்கிலாய் என்பதற்கு நன்னெறியில் செல்லாதவனே எனினுமாம்.

பி - ம். 1. இனையன விளம்பி, இயம்ப.
2. உணர்த்துவான்; உவந்து; கோடியால்.
3. நயந்திலா யெனில்.
4. போகிலாய். 81

1292. தையலை விட்டவன் சரணந் தாழ்ந்துநின்
ஐயறு தம்பியோ டளவ ளாவுதல்
உய்திறம் அன்றெனி னுளத் வேறுமோர்
செய்திறம் அன்னது தெரியக் கேட்டியால்.

'தையலை விட்டு - சீதாதேவியைச் சிறைவீடு செய்து, அவன் சரணம் தாழ்ந்து - அந்த இராமபிரானுடைய திருவடிகளிலே விழ்ந்து, நின் - உன்னுடைய, ஐயறு தம்பியோடு அளவளாவுதல் - சந்தேகிக்கத்தகாத தம்பி வீடணனோடு நட்புப் பூண்டொழுகுதல், உய்திறம் - கடைத்தேறற்குரிய வழியாம்; அன்று எனின் - அங்ஙனம் செய்யாயாகில், வேறும் ஓர் செய் திறம் உளது - (முன் கூறியதற்கு) நேர்மாறாகப் புரியவேண்டிய செயல் உண்டு; அன்னது தெரிய கேட்டி - அதனை விளங்குமாறு கேட்பாயாக'. ஆல் - அசை.

அளவளாவுதல் - உபசார வழக்கால் நட்புக்கொண்டொழுகல் எனப் பொருள்படும்; ஆரணிய. 567; 'ஆய வன்பினு ரளவளா வுவார்' (கிட்கிந்தா. 110); 'அளவளா வில்லாதான் வாழ்க்கை' (குறள். 523); 'அட்டாலும் பால்சுவையிற் குன்று தளவளாய்' (மூதுரை. 4). சரணம் தாழ்தல் - புகல் புகுதல். ஐயம் அறு என்பது ஐயறு எனத் தொகுத்தது.

பி - ம். 1. சார்ந்து நின்று.

2 மையறு, ஐயுறு.

4. செய்திறம் உண்டது; தெரிந்து, தெளிந்து; கோடியால். 82

1293. பந்தியிற் பந்தியிற் படையை விட்டவை
சிந்துதல் கண்டுநீ யிருந்து தேம்புதல்
மந்திர மன்றுநம் வலியெ லாமுடன்
உந்துதல் கருமமென் றுணரக் கூறினன்.

'பந்தியில் பந்தியில் - வரிசை வரிசையாக, படையை விட்டு - சேனைகளை விடுத்து, அவை சிந்துதல் கண்டு - அவைகள் சிதறி யழிதல் கண்டு, நீ இருந்து தேம்புதல் - நீ இங்கிருந்துகொண்டு மனம் உளைதல், மந்திரம் அன்று - ஆலோசனையன்று; நம் வலி எலாம் உடன் - நமது வன்மை முழுவதையும் ஒருசேர, உந்துதல் - (பகைவர்மீது) செலுத்துதல், கருமம் - செய்தற்குரிய தொழில்', என்று - என்று, உணர கூறினன் - மனதிற் படும்படி (கும்ப கன்னன்) சொன்னான்.

பந்தியிற் பந்தியிற் படையை விட்டவை சிந்துதல்; (ஒப்பு): 'சென்றுநீர் பொருதிரென்று திறம்திறம் விடுத்துத் தேயக்,

கொன்றனை நீயே யன்றோ' (சுந்தர. 989). தேம்புதல் - வாடுதல்; 'கொழும்பதிய குடிதேம்பி' (மதுரைக். 167). சீதாதேவியை விட்டு விட மனமில்லையெனில் சேனையின், முழுவன்மையும்கொண்டு எதிர்க்க முயலாது சேனைகளை விடுதி விடுதியாக அனுப்பிச் சிதறி யழியும்படி செய்து வருந்துவது சிறந்த செயலாகாது என்றான்.

பி - ம். 1. விட்டவர்.

3. நின் வலியேலாம்; எடுத்து.

4. உந்தியே படுதியென்று; உறுதி யோதினன். 83

1294. உறுவது தெரியவன் றுன்னைக் கூயது
சிறுதொழின் மனிதரைக் கோறி சென்றெனற்
கறிவுடை யமைச்சனீ யல்லை யஞ்சினை
வெறுவிதுன் வீரமென் றிவைவி ளம்பினன்.

'உன்னை கூயது - உன்னை (இத்தருணம்) அழைத்தது, உறுவது தெரிய அன்று - இனி நிகழப்போவதை (உன்னைக் கொண்டு) அறிந்துகொள்வதற் கன்று; சென்று சிறு தொழில் மனிதரை கோறி - போய் அல்பமான செய்கையினையுடைய மனிதரைக் கொல்வாயாக, எனற்கு - என்று எனக்கு யோசனை கூறுதற்கு, நீ அறிவு உடை அமைச்சன் அல்லை - நீ சிறந்த அறிவுபெற்ற மந்திரியன்று; (இவ்வாறு கூறுவதால்), அஞ்சினை - நீ பயந்தனைபோலும்; உன் வீரம் வெறுவிது - உன் வீரம் வீணானது', என்று - என்று பகர்ந்து, இவை விளம்பினன் - பின் வருவனவற்றை மொழிந்தான். இராவணன் விளம்பியதை அடுத்துவரும் இரண்டு செய்யுட்களில் காண்க.

தன்னைப்போல் பெரும்போர் செயற்குரிய ஆற்றலிலர் என்று கருதி ஏசுவான், 'சிறுதொழில் மனிசர்' என்றான். கும்பகன்னன் உண்மையில் தம்பியே யன்றி அமைச்சன் அல்லன் ஆகலின், 'அறிவுடை அமைச்சனீ யல்லை' என்றான். வெறுவிது - குறிப்பு முற்று.

பி - ம். 1. உறுவது சொல்லவன்று.

2. சென்றெனா. 84

1295. மறங்கிளர் செருவினுக் குரிமை மாண்டனை
பிறங்கிய தசையொடு நறவும் பெற்றனை
இறங்கிய கண்முகிழ்த் திரவு மெல்லியும்
உறங்குதி போயென வுளையக் கூறினன்.

'மறம் கிளர் - வீரத்திறம் ஒளிர்கின்ற, செருவினுக்கு உரிமை மாண்டனை - போர் செய்வதற்குரிய மாண்பினை யுற்றனை; பிறங்கிய தசையொடு நறவும் பெற்றனை - நிறைந்த ஊனொடு கள்ளையும் பெற்றாய்; (இனி நீ பெறவேண்டுவது யாதுள்ளது)? இறங்கிய கண் முகிழ்த்து - உள்ளிறங்கிய கண்களை மூடிக்கொண்டு, இரவும் எல்லியும் - இரவும் பகலும், போய் உறங்குதி - சென்று நித்திரை செய்க', என - என்று, உளைய கூறினன் - (அவன்) மனம் வருந்துமாறு சொன்னான்.

கும்பகன்னன் சிறந்த போர்வீரன் என்பது, அவன் வாநரங்களுடனும் இராமபிரான் முதலானவர்களோடும் பொருதமை கொண்டுணரலாம்; 'ஊனுயர்ந்த வுரத்தினன், மேனிமிர்ந்த மிடுக்கினன்' (யுத்த. 1324); 'போக்கினன் ஆண்மையாலே புதுக்கிலுன் புகழை' (யுத்த. 1409); 'கூற்றையுந் துணுக்கங் கொண்டான்' (யுத்த. கும்ப. 1410) முதலியன காண்க. பிறக்கம் - நிறைவு; 'பிணத்தின் பிறக்கம்' (யுத்த. நாகபாசப். 156); 'இமிழ்கனிப் பிறக்கமும்' (கிட்கிந்தா. 830); 'வரையறு பிணப்பெரும் பிறக்கம்' (சுந்தர. 664). இறங்கிய கண் - சோர்ந்து உட்குழிந்த கண். கண் முகிழ்த்தல் - விழிகளை மூடுதல்; 'துயிலெனக் கண்க ளிமைத்தலு முகிழ்த்தலும் துறந்தாள்' (சுந்தர. 333); 'மகவுகண் முகிழ்ப்ப' (கல்லா. 7). எல்லி என்ற சொல் இரவு பகல் என்ற இரண்டினையும் குறித்து நிற்கும். இங்கு எல்லி பகலைக் குறித்தது. 'இரவொ டெல்லியு மேத்துவார்' (தேவாரம். ); எல்லி இரவு என்ற பொருளில் நைடதமுடையார் கூறுவர்; 'எல்லியும் பகலும் தோன்றுது' (நாட்டுப். 27); 'எல்லியில் யானவ னிரண மாளிகை' (யுத்த. 402)-ல் இரவினைக் குறித்தது. இங்ஙனம் தம்முள் நேர்மாறுய பொருளைக் குறிக்

கும் ஒரே சொல் சில தமிழில் உண்டு. நந்துதல் - தழைத்தல்; கெடுதல் என்றதும் காண்க. 'இறங்கிய கண்' (சீவக. 248) அவசர்ப்பிணி நிலையைக் கூறியது.

ஏ - ம். 1. மாவ்டதாம்.

2. நறவொடு தசையும், கறியொடு நறவும்.

3. கண்ணடைத்து; இரவு மெல்லினும்.

4. போரவென; கூறுவான். 85

1296. மானிட ரிருவரை வணங்கி மற்றுமக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட் டுய்தொழில்
ஊனுடை யும்பிக்கு முனக்கு மேகடன்
யானது புரிகிலே னெழுக போகென்ருன்.

'மானிடர் இருவரை வணங்கி - (அற்ப வலியுள்ள) மனிதர்கள் இருவரை வணங்கி, மற்றும் - மேலும், அ கூன் உடை குரங்கையும் கும்பிட்டு - அந்த உடல் வளைந்துள்ள குரங்கிற்கும் வணக்கம் செலுத்தி, உய் தொழில் - உயிர்வாழ்ந்து நிற்கும் தொழில், ஊன் உடை - தன் உடற் பாதுகாப்பினையே விரும்புதலையுடைய; உம்பிக்கும் - உன் தம்பிக்கும், உனக்குமே கடன் - உனக்குமே கடமை; யான் அது புரிகிலேன் - (மானத்தையே மதித்து ஒழுகும்) யான் அந்த (ஈனமான தொழிலைச்) செய்யமாட்டேன்; எழுகபோக - எழுந்து செல்க', என்ருன் - என்று பகர்ந்தான் இராவணன்.

போக என்ருன் என்பது தொகுத்ததாகக் கொண்டு போக எழுக என்ருன் எனினுமாம். 'ஊனுடை யுடம்புடைமை யோருவமை யில்லா' (ஆரணிய. 603). ஊன் உடை என்பது தன் சரீரத்தைப் பேணுவதிலேயே கண்ணும் கருத்துமாக உள்ள என்றே பொருள்படும். ஊன் உடை கும்பகன்னனுக்கு ஏற்றும்போது மாமிச வுணவினை உண்ணுவதிலேயே மிக்க நோக்கமுடையவன் என்க. வீடணன் அரக்கர் வழியின னுயினும் அவன் ஊனுண்ணுதவன் என்பதற்கு அநுமனே சான்று பகர்கின்ருன்; 'நிந்தனை நறவமு நெறியி லூன்களும்

தந்தன கண்டிலேன் தரும தானமும், வந்தனை நீதியும் பிறவு மாண்பமைமந்து, அந்தண ரில்லெனப் பொலிந்தது' (யுத்த. 403) என்றது காண்க. 'உயிர்க்கு நேயமும், வேதிய ருளும்நான் விரும்பிப் பெற்றனன்' (யுத்த. 327) என்று வீடணனும், 'ஆதி மூர்த்திபால் நிறைவரு நேயமும், மறையவர்க் கன்பும்........நெடுந் தவத்தி னெய்தினன்' (யுத்த. 349) என்று அனலனும் கூறி யுள்ளமை காண்க. ஆதிமூர்த்திபால் நேயமில்லாதவர்க்குச் சிவகாருண்யம் இராது; 'ஈசனுக் கன்பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார், தமக்கும் அன்பில்லார்' என்றதும் காண்க. உம்பி: உன் தம்பி என்பதன் மரூஉ.

பி - ம். 1. வாழுமக்.

2. கூனுடைக் குரங்கினை.

4. யானது நினைக்கிலேன், முடிக்கிலேன்; எழுநிபோதியால். 86

## இராவணன் போருக்குஎழ முயலுதல்

1297. தருகவென் தேர்படை சாற்றுங் கூற்றமும்
வருகமுன் வானமு மண்ணு மற்றவும்
இருகைவன் சிறுவரோ டொன்றி யென்னெடும்
பொருகவெம் போரெனப் போதன் மேயினன்.

(கும்பகன்னனிடம் மேற்கூறியவாறு மொழிந்து இராவணன்,) 'என் தேர் படை தருக - என்னுடைய தேரினையும் போர்க் கருவி களையும் கொண்டுவந்து தருக; சாற்றும் கூற்றமும் முன் வருக - புகழப்பெறும் யமனும் என்னை எதிர்க்க முன்வரட்டும், வானமும் மண்ணும் மற்றவும் - வானவரும் மண்ணவரும் மற்றும் பிற இடங் களில் உள்ளாரும், இரு கை வல் சிறுவரோடு ஒன்றி - இரண்டு கைகளையுடைய வலிய இளைஞரான இராம இலக்குவருடனே கூடி, என்னெடும் வெம் போர் பொருக - என்னுடன் கடுமையான போர் புரியட்டும்', என - என்று கூறிவிட்டு, போதல் மேயினன் - செல்லத் தொடங்கினன்.

தருக: 'வருகதேர்; தருக வென்றான்' தேர் உபலக்கணத் தால் நால்வகைப் படைகளையும் குறித்து நின்றதாகலின்,

படை என்பதற்குப் போர்க்கருவிகள் எனப் பொருள் தரப் பட்டது. வருக - வருவிக்க; பிறவினைப் பொருளில் வந்த தன்வினை. இருகை : 'இருகை வேழத் திராகவன்' (பால. பாயிரம்.); உருவச்சிறுமை கருதி இருகை என்றும், அவருடைய பெருவலிமையைக் கருதி வன்சிறுவர் எனவும் வந்தது. முதலடியில் தேரையும் படையையும் கூற்றுவனையும் தருக என்ற அமங்கலப் பொருளும் கலந்திருத்தல் உய்த்துணர்க. பெருங்காப்பியங்களில் இவ்வாறு வருதல் காணலாம்; 'அந்தரம் பார்க்கின் நன்மை யவர்க்கிலை யுனக்கே ஐயா'; 'மாகத்தோள் வீரபெற்று லெங்ஙனம் வைத்து வாழ்தி' (ஆரணிய. 628, 629); 'முடிபுனை கடிகைநாள் மொழிமின் என்றனன்' (அயோத்தி. மந்தரை. 1).

பி - ம். 1. சாற்றேன் கூற்றையும்; தானை வெள்ளமும்.
2. மண்ணு முற்றுமாங்கு.
3. இருகைவெஞ்.
4. பொருகை; போதல் மேவினன். 67

## கும்பகன்னன் அவனைத்தடுத்துப் போர்க்குச்செல்ல விடை கொள்ளுதல்

1298. அன்னது கண்டவன் தம்பி யானவன்
பொன்னடி வணங்கிநீ பொறுத்தி யாலென
வன்னெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினன்
இன்னமொன் றுரையுள தென்னக் கூறினன்.

அன்னது கண்டு - அவ்வாறு இராவணன் செல்லவிருப்ப தைப் பார்த்து, அவன் தம்பி ஆனவன் - அவன் தம்பியான கும்ப கன்னன், பொன் அடி வணங்கி - (அண்ணனுடைய) அழகிய பாதங் களில் வணக்கம் புரிந்து, 'நீ பொறுத்தி - நீ என் சொற்களைப் பொறுத்துக் கொள்வாயாக', என - என்று கேட்டுக்கொண்டு, வல் நெடு சூலத்தை வலத்து வாங்கினன் - (தனது) வலிய நீண்ட சூலத்தை வலப்பக்கத்திலே தாங்கினவனாய், 'இன்னம் ஒன்று உரையுளது - இன்னும் ஒரு வார்த்தை கூறவேண்டுவதுள்ளது', என்ன கூறினன் - என்று மேலும் பகரலானான். ஆல் - அசை.

இரண்டாமடியிலிருந்து கும்பகன்னனுக்குத் 'தன் அண்ணன் பாலிருந்த பரிவும் மரியாதையும் உணரலாம்; 'அத்தவென் பிழை பொறுத் தருளுவாய்' (யுத்த. 318) என்று வீடணன் கூறியதையும் இங்குக் குறிக்கொள்க. பொன்னடி என்பது வைணவ மரபில் பெரிதும் வழங்கப்பெறுவது காண்க. வல் நெடுஞ் சூலம்: இச்சூலப்படை சிவபிரானால் அவனுக்கு வழங்கப்பட்டமை முன்னரும் குறிக்கப்பட்டது. 'மடைபோரச் சூலத்தான்' (யுத்த. 1260); 'சூலமேகந் திருத்திய தோளினான்' (யுத்த. 1270) முதலியன காண்க. 'இன்னம் ஒன்றுரையுளதென்னக் கூறினான்' மன்னிப்புக் கேட்டுப் புறப்பட வெழுந்தவன் பின்னர் தன் தமையன்மீது வைத்த வாஞ்சை மிகுதியால் மீட்டும் சில அறவுரைகள் கூறுகின்றான்; (ஒப்பு): 'விழியெதிர் நிற்றியேல் விளிதி' என்று இராவணன்கூற, விண்ணிடை எழுந்த வீடணன், மீட்டும் வானிலிருந்துகொண்டே, 'ஒன்றல பலபல உறுதி' கூறியதும் இங்குக் காண்க.

பி-ம். 2. அன்னது கேட்டவன்; தம்பியாமவன், தம்பிபோலனா.
2. வணங்கினன்.
3. மன்னெடுஞ்; வலக்கை.
4. உளதுரை; யென்று கூறினான். 88

1299. வென்றிவண் வருவனென் றுரைக்கி லேன்விதி
யொன்றது பிடர்பிடித் துந்து கின்றது
பொன்றுவென் பொன்றினாற் பொலன்கொள் பூவையை
நன்றென நாயக விடுதி நன்றரோ.

'வென்று - வெற்றி யெய்தி, இவண் - இவ்விடத்திற்கு, வருவன் - (மீண்டு) வருவேன், என்று உரைக்கிலேன் - என்று நான் (துணிந்து) சொல்ல இயலாதவனாக இருக்கின்றேன்; (ஆயினும்), விதி ஒன்றது - விதியெனும் ஒப்பற்றதொன்று, பிடர் பிடித்து உந்துகின்றது - கழுத்தைப்பிடித்துத் தள்ளுகின்றது; (ஆகவே) பொன்றுவென் - (நான் போரில்) இறந்துபடுவேன்; பொன்றினால் - (அங்ஙனம்) இறக்கநேரின், பொலன் கொள் பூவையை - பொன்னாலாகிய அணிகளையணிந்த நாகணவாய்ப்புள்போன்ற சீதா

தேவியை, நாயக - தலைவனே ! நன்று என - சிறந்த காரியம் எனக் கருதி, விடுதி - விட்டுவிடுவாயாக ; நன்று - (அச்செயலே) மிகவும் சிறந்தது. அரோ - ஈற்றசை.

கும்ப கன்னன் ஓர் திர்க்க தரிசி எனவே எதிர் கால நிகழ்ச்சி களை அறிந்து கூறுகின்றான். அடுத்து வரும் இரண்டு கவிகளும் இதனை மேலும் விளக்கும். இவன் இராமபிரான் பராக் கிரமம் முதலியன முற்றும் உணர்ந்தவன் என்பது இவன் கீழே இராவணனுக்குக் கூறிய அறவுரைகளினின்றும் தெளியலாம். ஒன்றது ; அது பகுதிப் பொருள் விகுதி. விதி பிடர் பிடித்து உந்துதல், யுத்த. 1285-இன் குறிப்புரை காண்க. பொன்றுவன் என்று எதிர்கால நிகழ்ச்சியைக் கூறியது. பொலன் கொள் தோளி என்ற பாடத்துக்குப் பொன் போன்று அழகிய புயத்தி என்க. பூவை - நாகணவாய்ப்புள் ; மைனா எனவும் வழங்குவர் ; பூவை சீதாதேவி ; உவம வாகுபெயர் ; 'பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள்' (பால. மிதிலைக்.79).

பி - ம். 2. உந்த நின்றது.

3. பொலன் கொள் தையலை, தோளியை.

4. நன்றது, நன்றிது, நன்றினி ; விடுதல். 88

1300. என்னைவென் றுளரெனி லிலங்கை காவல
உன்னைவென் றுயருத லுண்மை யாதலால்
பின்னைநின் றெண்ணுதல் பிழையப் பெய்வளை
தன்னைநன் களிப்பது தவத்தின் பாலதே.

'இலங்கை காவல - இலங்கையைக் காவல் புரிவனே ! என்னை வென்றுளர் எனின் - என்னை வெற்றி கொள்வாரானால், உன்னை வென்று உயருதல் - (அப்பகைவர்கள்), உன்னையும் வென்று சிறத் தல், உண்மை - சத்தியம் ; ஆதலால் - ஆகையினால், பின்னை - பின்னும், நின்று எண்ணுதல் - (சீதா தேவியைச் சிறை வீடு செய் யாது) நின்று மேலும் பலவாறு கருதுதல், பிழை - தவறாகும் ;

அபெய்வளை தன்னை - அந்த வளையல் அணிந்துள்ள சீதா தேவியை, நன்கு அளிப்பது - (இராமபிரானிடம்) நல்ல முறையில் விட்டு விடுவது, தவத்தின் பாலது - தூய்மையான காரியமாகும். ஏ - அசை,

பெய்வளை - சீதை; அன்மொழித் தொகை. எந்த விதமான களங்கமு மின்றிச் சிறந்த எண்ணங்களைக் கொண்டுள்ள தன்னையே வெல்வாரெனில் மறச் செய்கைகளையே கொண்டுள்ள இராவணனை வெல்வது ஒரு தலை யாகலின், வென்றுயருதல் உண்மை என்ருன். தவம் - தூய செயல், இக்கவியும் இதன் முன் கவியும் முன் பின்னுகச் சில பிரதிகளில் உள்ளன.

பி - ம். 2. உண்மையா மென்ருல், யாமெனின்.

4. தன்னை யன்றளிப்பது, தன்னையே விடுப்பது; தவத்தினன்றரோ. 90

1301. இந்திரன் பகைஞனு மிராமன் தம்பிகை
மந்திர வம்பினுன் மடிதல் வாய்மையால்
தந்திரங் காற்றுறு சாம்பல் பின்னரும்
அந்தர முணர்ந்துனக் குறுவ தாற்றுவாய்.

'இந்திரன் பகைஞனும் - இந்திரனுடைய விரோதியான இந்திர சித்தும், இராமன் தம்பி கை மந்திரம் அம்பினுல் - இராம பிரான் தம்பியான இலக்குவனுடைய கரத்தில் உள்ள மந்திர சக்தியுடன் பொருந்திய அம்பினுல், மடிதல் வாய்மை - இறத்தல் உண்மை; தந்திரம் - (அரக்கர்) சேனையோ, காற்று உறு சாம்பல் - (பகைவர்க்கு முன்பு), காற்றினுற் ருக்கப்பட்ட சாம்பர் போலும்; (இங்ஙனம் இருத்தலின்), பின்னரும் - பின்பும், அந்தரம் உணர்ந்து உனக்கு உறுவது ஆற்றுவாய் - (உனக்கு நேர விருக்கும்), விபத்தை நன்கு அறிந்து உனக்கு உறுதியான செயலை மேற் கொண்டு புரிவாயாக. ஆல் - அசை.

இந்திரன் பகைஞன் - இந்திர சித்து. இவன் இயற்பெயர் மேகநாதன், 'இராமனே பரம்பொருளாகுல் இந்திரசித்தினைக் கொல்' என அம்பினை ஏவி இலக்குவன் இந்திர சித்தினைக் கொன்றமை. யுத்த. இந்திரசித்து வதைப்படலம். 51 கொண்டு காண்க. இங்கே மந்திரம் என்றது தாரக மந்திரத்தை என்க. அதிபலை மகாபலைகளும் ஆம். தந்திரம் - சேனை; 'தந்திரக் கடலை நீந்தி

(யுத்த. 1333) சேனை வீரர்கள் அஞ்சி வீற்று விற்றுக நிலை குலைந்து ஓடுதற்குக் காற்றுறு சாம்பல் பொருத்தமான உவமையாதல் காண்க. (ஒப்பு); 'காற்றிற் சருகென மாற்றும்பிரான்' (திருக்கருவை; கலித். அந். 60) அந்தரம் - இமை; 'என்மனை வாழும் பெண்ணால் வந்த தந்தரம்' (அயோத்தி. கைகேசி. 40); உறுவது - உயிர்க் குறுதியாக வுள்ளது. (ஒப்பு.) 'உன் வயினுதி நோக்கி யுண்மையி னுணர்த்தினேன்' (ஆரணிய. 756),

பி - ம். 2. மந்திர வலியினால், வயிலினல்.

3. தந்திரங் காலுறு; சாம்பர்ப்; பின்னுறும்.

4. மந்திரம்; உனக்குணர்ந்து; ஆற்றுவார். 91

## கும்பகன்னன் போருக்குச் செல்லல்.

1302. இற்றைநாள் வரைமுத லியான்முன் செய்தன
குற்றமு முளவெனிற் பொறுத்தி கொற்றவ
அற்றதான் முகத்தினில் விழித்தல் ஆரிய
பெற்றனன் விடையெனப் பிரிந்து போயினன்.

'கொற்றவ - வெற்றி வீரனே! முன் முதல் - முன்னை நாள் முதலாக, இற்றை நாள் வரை - இந்த நாள் வரையில், யான் செய்தன குற்றமும் உள எனில் - யான் புரிந்தனவாகிய தவறுகள் உண்டெனில், பொறுத்தி - (அவற்றைப்) பொறுத்தருள்வாயாக; முகத்தினில் விழித்தல்-(இனி) உன் முகத்தில் விழித்தல், அற்றது- இல்லாது போயிற்று; ஆரிய - சிரேட்டனே! விடை பெற்றனன்- உத்திரவு பெற்றுக் கொண்டேன்' என - என்று பகர்ந்து, பிரிந்து போயினன் - பிரிந்து சென்றான். ஆல் : அசை.

முன் முதல் இற்றை நாள்வரை யென மொழி மாற்றிப் பொருள் தரப்பட்டது. செய்தன - வினையாலணையும் பெயர்.

பி - ம். 1. இற்றையினன் முதல், இற்றையி னுள்வரை, இற்றை நாள் வரையதா.

2. உள தெனில்.

4. பரிந்து, பெயர்ந்து. 92

## கும்பகன்னன் நகர வாயிலை அடைதல்.

1303. அவ்வழி இராவண னனைத்து நாட்டமுஞ்
செவ்வழி நீரொடுங் குருதி தேக்கினன்
எவ்வழி யோர்களு மிரங்கி யேங்கினர்
இவ்வழி யவனும்போய் வாயி லெய்தினன்.

அவ்வழி - அப்போது, இராவணன் - இராவணன், அனைத்து நாட்டமும் - தன் விழிகளில் எல்லாம், செவ்வழி நீரொடும் - நேரே வழிகின்ற கண்ணீருடன், குருதி தேக்கினன் - உதிரத்தையும் நிறைத்துக் கொண்டான்; எவ்வழியோர்களும் - (கும்ப கன்னனுடைய) எவ்வழி உறவினரும், இரங்கி ஏங்கினர் - இரக்கம் மிகுந்து மனம் வருந்தினர். இ வழி அவனும் போய் வாயில் எய்தினன் - இங்ஙனம் நிகழுங்கால், அந்தக் கும்பகன்னனும் சென்று நகர வாசலை அடைந்தான்.

உடன் பிறப்புப் பாசத்தால் நேரும் மெய்ப்பாடுகளை இச் செய்யுளிற் காணலாம். அண்ணனைக் கொல்வதற்காக இராமபிரானைத் துணைக் கொண்டு வாலியை வீழ்த்திய சுக்கிரீவனே, பின்னர், 'உடன் பிறப்பென்னும் பாசத்தால்' நேசத்தாரை விடுத்தமை, கிட்கிந்தா காண்டம் 298-இல் காண்க. இரங்கி யேங்கி - 'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலா மிரங்கி யேங்கி, யுனக்கு நான் செய்வதானேன்' யுத்த. இராவணன் சோகப். 89), 'என்றழைத்திரங்கி யேங்க. (இராவணன் சோகப், 54); 'செவ்வழி நீரொடுங் குருதி தேக்கினன். (ஒப்பு). 'உள்ளநீ ரெல்லா மாறி யுதிரநீ ரொழுக விட்டான்' (யுத்த. கும்ப. 1373).

பி - ம். 1. அனைய நாட்டமும்.

4. வெவ்வழி; மேயினன். 93

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

அக்கணத் தரக்கர்கோ னளப்பில் யானைதேர்
மிக்கவான் புரவிகால் வயவர் வெள்ளமோ
டொக்கவான் படைப்பெருந் தலைவ ரொன்றறப்
புக்குமின் இளவலைப் புறத்துச் சூழ்கென்றான்.

## படைகளின் பெருக்கம்

1304. இரும்படை கடிப்பெடுத் தெற்றி யேகுக
பெரும்படை யிளவலோ டென்ற பேச்சினல்
வரும்படை வந்தது வானு ளோர்கள்தம்
சுரும்படை மலர்முடி தூளி தூர்க்கவே.

'இரு படை - பெரிய போர்க்கருவிகளையுடைய, இளவலோடு - என் தம்பியுடனே, கடிப்பு எடுத்து எற்றி - குறுந்தடி கொண்டு போர்ப்பறை முழக்கி, பெருபடை ஏகுக - பெருஞ்சேனை செல்லுக', என்ற பேச்சினல் - என்ற இராவணனுடைய கட்டளையினல், வானுளோர்கள் தம் - விண்ணுலகத்து தேவர்களின், சுரும்பு அடை மலர் முடி - வண்டுகள் மொய்க்கின்ற மலர்களை அணிந்த தலையை, தூளி தூர்க்க - தூளிகொண்டு நிறைக்குமாறு, வரு படை வந்தது - வருதற்குரிய பெருஞ்சேனை வந்தது. ஏ - அசை.

இரு படை - இருமை பெருமை, கடிப்பு - பறையடிக்கும் குறுந் தடி; 'கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்ப' (நாலடி. 100); 'முரசு கடிப்பிகுப்பவும்' (புறநா. 158); 'விழுக்கடிப் பறைந்த முழுக்குரல் முரசம்' (புறநா. 366). 'கடிப்பமைந்த, குருதிப்பலிய முரசு' (புறநா. 369); இளவல்; அல் : பெயர்விகுதி. பேச்சு - கட்டளை; மூன்று நான்காம அடிகளிலிருந்து படையின் மிகுதியையும், அதன் வரவால் எழுப்பப்பட்ட தூளி விண்ணுலகத்தும் சென்று பரந்ததையும் உணரலாம்; (ஒப்பு): 'கதிகொண்ட சேனை நடவ வெழுதுகள் ககனம் சுலாவி அகில கதியுற' (வி. பா. 16 : 73). தூளி தூர்த்தல் - புழுதி கொண்டு நிரப்புதல். வானவர் சூடிய பாரிசாதம் ஆதி மலர்களில் வண்டு மூசாதாகலின், சுரும்படை என்பது இயற்கை யடையாகக் கொள்க. வண்டு மூசாமை, 'சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்' (திருமுருகு. 43); (ஒப்பு): 'பாடுவண் டிமிரா பன்மரம் யாவையும், வாடா மாமலர் மாலைகள் தூக்கலில்; (மணி. 3; 49-50).

பி - ம். 1. இரும்பணை.
4. சுரும்படை நெடுமுடி; பூழி தூர்க்கவே.

1305. தேர்க்கொடி யானையின் பதாகை சேணுறு
தார்க்கொடி யென்றிவை தகைந்து வீங்குவ
போர்க்கொடுந் தூளிபோய்த் துறக்கம் புக்கன
ஆர்ப்பன துடைப்பன போன்ற வாடுவ.

தேர் கொடி-தேரின்மீது கட்டியிருக்கும் கொடியும், யானையின் பதாகை - யானையின்மீது அமர்ந்து பிடிக்கும் பெருங் கொடியும், தார் சேண் உறு கொடி - சேனையின் முன் அணியில் ஆகாயத்தைச் சென்று தீண்டுமாறு உயர்த்தப்பெற்ற கொடிகளும், என்றிவை - என்ற இவைகள், தகைந்து - நெருங்கி, வீங்குவ-மிக்கிருப்பவை, போர் கொடு தூளிபோய் - போர்க்களத்திலிருந்து மிக்க தூளிகள் கிளம்பி, துறக்கம் புக்கன - சுவர்க்கலோகம் புக்கனவாய், ஆர்ப்பன - நிறைந்து தங்கினவற்றை, துடைப்பன போன்ற ஆடுவ - துடைப்பன போன்றனவாய் (விண்மிசை) ஆடலாயின.

பலவன்னக் கொடிகள் ஆகாயத்தில் அசைபவை, பெருஞ் சேனையின் செறிவால் எழுப்பப்பெற்றுச் சுவர்க்கத்திற் படிந்த தூளிகளைத் துடைப்பது போலும் எனப்பட்டது. என்ற இவை என்பது என்றிவை எனத் தொகுத்தது ; (ஒப்பு): 'மாகாரின் மின் கொடி மடக்கின ரடுக்கி, மீகார மெங்கணு நறுந்துகள் விளக்கி' (சுத்தர. 98). (பால. எழுச்சிப். 52)ம் காண்க. தன்மைத் தற்குறிப் பேற்றவணி. சேண் - ஆகாயம் ; 'சேணிற் பொலிசெம்பொன மாளிகை' (திருக்கோ. 23) ; தார் - சேனையின் முன்னணி. இதனைக் கொடிப் படையென்றும் சொல்வர். 'தாரொடு பொலிந்த, புரிசை; (மலைபடு. 227), கொடும் தூளி - கொடுமை மிகுதி மேலது.

பி - ம். 1. பதாகை யாடுவ ; சேணுற, சேணுயர்.
2. தகைந்து விங்கின, விங்கிட.
3. பார்க்கொடுந் ; புக்கென, பண்புற, பம்புற, புக்கிட.
4. ஆர்ப்பது ; துடைப்பது ; போல. 95

### போரில் தோன்றிய தீப்பொறிகளின் வருணனை

1306 எண்ணுறு படைக்கல மிழுக வெற்றிட
நண்ணுறு பொறிகளும் படைக்கு நாயகர்
கண்ணுறு பொறிகளுங் கதுவக் கண்ணகல்
விண்ணுறு மழையெலாங் கரிந்து வீழ்ந்தவால்,

எண் உறு - மதிக்கப்படுகின்ற, படைக்கலம்-போர்க்கருவிகள், இழுக-எங்கும் தடவியதனல், எற்றிட - (ஒன்றோடொன்று) தாக்க, நண்ணுறு பொறிகளும் - (அத்தாக்குதலினல்) எழுந்த தீப்பொறிகளும், படைக்கு நாயகர் - படைத்தலைவர்களின், கண்ணுறு பொறிகளும்-விழிகளினின்று தெறிக்கும் தீப்பொறிகளும், கதுவ-பற்றியதால், கண் அகல் - இடம் அகன்ற, விண்ணுறு மழை எலாம் கரிந்து வீழ்ந்த; ஆகாயத்தில் உள்ள மேகங்கள் அனைத்தும் கரிந்து வீழ்ந்தன. ஆல் - அசை.

நீருண்ட கார்மேகங்களும் கரிந்து ஒழியுமாறு படைக்கலம் மோதுதலால் உற்ற தீப்பொறிகளும், செங்கண் வீரர்தம் விழிப் பொறிகளும் பறந்தன எனப்பட்டது. படைக்கு நாயகர் - சேனைத் தலைவர்; கதுவுதல் - பற்றுதல்; 'கராவதன் காலினைக் கதுவ' (பெரியதிரு. 2, 3, 9).

பி - ம். 1. விற்றிடை.

2. நன்னுறும்.

3. கண்ணுறும்; கதுவிக். 98

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

வெள்ளநூ றிரதமற் றிரட்டி வெங்கரி
துள்ளுவான் பரியதற் கிரட்டி தொக்குறும்
வெள்ளிவே லரக்கர்மற் றிரட்டி மேம்படும்
கொள்ளைவான் படைப்பெருந் தலைவர் கோடியால்.

நால்வகைச் சேனைகளின் செலவு

1307. தேர்செலக் கரிசெல நெருக்கிச் செம்முகக்
கார்செலாத் தேர்செலாப் புரவி கால்செலத்
தார்செலக் கடைசெலச் சென்ற தானையும்
பார்செலற் கரிதென விசும்பிற் பாய்ந்ததால்.

தேர் செல கரிசெல - தேர் செல்லுவதாலும், யானை செல்லுவதாலும், நெருக்கி - நெருக்குண்டு, செம் முகம் கார் செலா - சிந்தூரம் அப்பிய முகத்தையுடைய மேகம் போன்ற யானைகள் செல்ல மாட்டா; தேர் செலா - தேர்களும செல்ல மாட்டா; (இந்நிலையில்)

புரவி கால் செல - குதிரைகள் காற்றைப்போல ஓடுவதாலும், தார் செல - கொடிப்படைகள் நடப்பதாலும், கடை செல சென்ற தானையும் - பின்னணியில் செல்லுமாறு சென்ற சேனைகளும், பார் செலற்கு அரிது என விசும்பில் பாய்ந்தது. பூமியில் செல்லுதற் கியலாது என்று ஆகாய வழியில் பாய்ந்து சென்றன. ஆல் - அசை.

செம்முகம் - செம்புள்ளி பொருந்திய முகம் எனினுமாம். கார் - உவமவாகு பெயராய் யானையைக் குறிக்கும்.

பி - ம். 1. செலா நெருக்கம், செலாக்கரிக்தும்,

3. கடைசெலாத் தானையும்; கடையெனச் தடையெனச் சென்ற தானையும். 97

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

அன்னபோ திராவணற் கிளவ லாகிய
மின்னுவேற் கும்பக னென்னும் மேலையோன்
துன்னுபோ ரணிகலம் யாவுஞ் சூடியே
தன்னொரு தேரினைத் தொழுது தாவினான்.

## கும்பகன்னன் தேர் ஏறி வருதல்

1308. ஆயிரங் கோளரி யாளி யாயிரம்
ஆயிர மதகரி பூத மாயிரம்
மாயிரு ஞாலத்தைச் சுமப்ப வாங்குவ
சேயிருஞ் சுடர்மணித் தேரொன் றேறினான்.

ஆயிரம் கோளரி - ஆயிரம் சிங்கங்களும், ஆயிரம் யாளி - ஆயிரம் யாளிகளும், ஆயிரம் மதகரி - ஆயிரம் மதயானைகளும், ஆயிரம் பூதம் - ஆயிரம் பூதங்களும் (பூட்டப் பெற்று), மா இரு ஞாலத்தை சுமப்ப - மிகப்பெரிய பூமியைத் தாங்குவனவும், வாங்குவ - பின்வாங்குவதும் ஒப்ப, சேய் - சிவந்த, இருசுடர் மணிதேர் ஒன்று ஏறினன் - மிக்க ஒளி வாய்ந்த மணிகள் பதிக்கப்பெற்ற தேரொன்றின் மிசை ஏறி வந்தான் (கும்பகன்னன்).

ஞாலத்தைச் சுமப்பன எட்டு யானைகளும், எட்டு நாகங்களும் என்ப. மாயிரு, இருபெயரொட்டு.

பி - ம். 3. சுமந்துலாவுவ, சுமந்து வாங்குப.

4. ஏயிருஞ்சுடர். 98

## படைக்கலங்களுடன் சேனை செல்லுதல்

1309. தோமரஞ் சக்கரஞ் சூலங் கோல்மழு
நாமவே லுலக்கைவாள் நாஞ்சி றண்டெழு
வாமவில் வலையங்கற் பரிசை மற்றுள
சேமவெம் படையெலாஞ் சுமந்து சென்றவால்.

தோமரம் சக்கரம் சூலம் கோல் மழு - தோமரம் சக்கரம் சூலம் அம்பு மழுப்படை, நாமம் வேல் - அச்சுறுத்தும் வேற்படை, உலக்கை வாள் நாஞ்சில் - உலக்கை, வாள், கலப்பை, தண்டு - தண்டாயுதம், எழு - இருப்புலக்கை, வாமம் வில் - அழகிய வில், வலயம் - வலயம், கல் பரிசை - கல்லாணியன்ற கேடயம், மற்றுள - மற்றும் உள்ளனவான, சேமம் வெம்படை எலாம் - பாதுகாவலான கொடிய ஆயுதங்களையும், சுமந்து சென்ற - சேனைகள் தாங்கிச் சென்றன. ஆல் - அசை.

நாமவேல் - பகைவர்க்கு அச்சம் விளைக்கும் வேல்; 'நாமவேற் காளை நளனென்பான்' (நள. 3); நாஞ்சில் கலப்பை போன்ற ஓர் போர்க்கருவி. 'நாஞ்சி லொப்ப' (புறநா. 19); எழு - கணையம்; 'இருப்பெழு வமைந்த கன்மதில்' (சீவக. 81); இது மதிலின் குறுக்கே கதவிற்குப் பாதுகாவலாகப் போடப்படுவது என்பது நச் - உரை. பரிசை - கேடயம்; சீவக. 2218; உரை. சேமப்படை - இதனை வைப்புப் படை என்பர். (ஒப்பு): சேம வில்லென விசும்பு வில்வெருவு' (தக்க. 2; 14).

பி - ம். 1. கோன்மழு.

3. நாமவில் வலயங், வல்லியங் கணையம்.

4. சுமந்து பேய்செல, சென்றவே, சென்றதால். 99

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

## கும்பகன்னனுக்கு உதவ மாமிசத்தையும் மதுக் குடங்களையும் பணியாளர் கொண்டு சென்றமை

1310. நறையுடைத் தசும்பொடு நறுநெய் வெந்தவூன்
குறைவில்நற் சகடமோ ராயி ரங்கொடு
பிறையுடை யெயிற்றவன் பின்பு சென்றனர்
முறைமுறை கைக்கொடு முடுகி நீட்டுவார்.

முறை முறை முடுகி கைகொடு நீட்டுவார் - முறைமுறையே விரைந்து (ஊனையும் கள்ளையும்) கையிற் கொண்டு நீட்டுபவரான அரக்கர்கள், நறை உடை தசும்பொடு - கள்ளைத் தன்னகத்துக் கொண்ட குடங்களுடனே, நறுநெய் வெந்த ஊன் - நல்மணம் கமழும் நெய்யிடை வெந்து பக்குவமான தசையையும், குறைவு இல் நல் சகடம் ஓராயிரம் கொடு - குறைவில்லாத நல்ல ஓராயிரம் வண்டிகளிலே ஏற்றிக் கொண்டு, பிறை உடை எயிற்றவன் - பிறைமதி போன்ற வளைந்த தந்தங்களுடையவனை அந்தக் கும்பகன்னனுக்கு, பின்பு சென்றனர் - பின்னே போனார்கள்.

நறை - கள் ; நறவு ; கிட்கிந்தா. 640, 641. தசும்பு : 'தசும்புறு சயந்தனம்' (ஆரணிய. 414) ; 'தசும்புடைக்கனக நாஞ்சில்' (சுந்தர. 80).

பி - ப். 1. நறையின், நறிதின்.

2. குறைவற, நிறையுடைச் சகடமா யிரங்க ணேர்கொடு.

3. பிறையுடை யெயிற்றினர் ; பின்பு சென்றன.

4. முறையுடை ; கைதோறு, கையிடை ; முடுக. 100

இங்கு அதிகப் பாடல்கள் :—

தொண்டகந் துடிகன பேரி துந்துமி
திண்டிமம் படகமா முரசு திண்மணிக்
கண்டைகள் கடையுகத் திடிக்கு மோதையின்
எண்டிசை செவிடெறி தரச்சென் றுற்றதால். 1

எழுகருங் கடல் கரை யெறிந்திட் டுழிநாள்
முழுதுல கடங்கலு மூடுந் தன்மையின்
தழுவிய தெனத்தச முகன்ற னுணையாற்
இளர்பெரும் படைக்கடல் கெழுமிப் போந்ததால். 2

இரைக்குமும் மதம்பொழி தறுகண் யானையின்
நெருக்கமு நெடுங்கொடித் தொகையின் தேர்க்குலப்
பெருக்கமும் புரவிகள் பிறங்கும் ஈட்டமும்
அரக்கர்தம் பெருக்கமு மாய தெங்குமே. 3

## கும்பகன்னன் மதுவையும் ஊனையும் உண்ட வண்ணஞ் செல்லுதல்

1311. ஒன்றல பற்பல ருதவும் ஊனறை
பின்றரும் பிலனிடைப் பெய்யு மாறுபோல்
வன்திற லிருகரம் வழங்க மாந்தியே
சென்றன னியாவருந் திடுக்க மெய்தவே.

பற்பலர் உதவும் ஒன்றுஅல ஊன் நறை - பலபல ஏவன் மாக்கள் தருகின்ற ஒன்றல்லாத (மிகப்பலவான) ஊனையும் மதுவையும், வல்திறல் இருகரம் வழங்க - மிக்க வலிய இரண்டு கைகளும் (வாங்கித்) தர, பின்தரும் பிலனிடை பெய்யும் ஆறு போல் - (இருள்) பின்னிக் கொண்டுள்ள பிலத்துவாரத்தினுள்ளே சொரிகின்ற தன்மையொத்து, மாந்தியே - உண்டவண்ணம், யாவரும் திடுக்கம் எய்தவே சென்றனன் - யாவரும் திடுக்கிடுமாறு செல்லலுற்றான். ஏ - அசை.

ஊன் நறை: உம்மைத் தொகை. பின் தருதல் - பின்னிக் கொள்ளுதல். கும்பகன்னன் வாய் ஓர் பிலத்துவாரம் போன்றிருந்த தெனப்பட்டது. (ஒப்பு): 'மடித்தபில வாய்க டொறும்' (ஆரணிய. 602); வன்திறல்: ஒருபொருட் பன்மொழி. மாந்தி: 'பூவியல் நறவ மாந்தி' (கிட்கிந்தா. 305); 'தேறன் மாந்தினர்'

(சுந்தர. 126); 'அஞ்சொற்கள் கிள்ளைக் கெல்லா மருளினு ளமுதை மாந்தி' (பால. கோலங் 19).

பி - ம். 1. பலபல; ஊன்றசை.

2. பிலத்திடைப்.

3. வாங்கி மாந்தியே.

4. திட்கல். 101

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

## கும்பகன்னனைக் கண்டு அமரர் அஞ்சியோடுதல்

1312. கணந்தரு குரங்கொடு கழிவ தன்றிது
நிணந்தரு நெடுந்தடிக் குலகு நேருமோ
பிணந்தலைப் பட்டது பெயர்வ தெங்கினி
உணர்ந்தது கூற்றமென் றும்ப ரோடினர்.

இது - இக்கும்பகன்னனது உண்ணும் தொழில், கணம் தரு குரங்கொடு கழிவது அன்று - கூட்டமாக வுள்ள குரங்குகளோடு ஒழிவதன்று; நிணம் தரு நெடு தடிக்கு (இவன்உண்கின்ற) நிணத்துடனியைந்த பெரிய ஊனுக்கு, உலகு நேருமோ - இவ்வுலகினகனுள்ள உயிர்வர்க்கமெல்லாம் போதுமோ? பிணம் தலைப்பட்டது - எங்கும் பிணமயமாக ஆயது; கூற்றம் உணர்ந்தது - (கொல்லுந் தொழிற்குரிய யமனும்) உணர்ந்தான்; எங்கு இனி பெயர்வது என்று உம்பர் ஓடினர் - இனி எங்கு ஓடிப் பிழைப்பது என்று தேவர்களும் ஓடினர்.

உலகு : இடவாகு பெயர். தலைப்பட்டு : 'தலைப்படு சால் பினுக்குந் தளரேன் சித்தம்' (திருக்கோ. 25); தடி - ஊன்; 'தலை மிதந்தன நெடுந்தடி மிதந்தன' (ஆரணிய. 445); 'குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்' (புறநா. 74).

பி - ம். 3. பெயர்வதிங்கினி, தெங்ஙனம்.

4. கூற்றுமென்று. 102

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

நரற்படை வகைதொகை நடக்கத் தூளிகள்
மேற்பட விசும்பக மறைந்த வெண்டிரைப்
பாற்கட லெனப்பொலி கவிப்பெ ரும்படை
காற்படு கதியினிற் கரந்த தோடியே.

### இராமபிரான் கும்பகன்னனது தேரைப் பார்த்தல்

1313. பாந்தளி னெடுந்தலை வழுவிப் பாரொடும்
வேந்தென விளங்கிய மேரு மால்வரை
போந்தது போற்பொலந் தேரிற் பொங்கிய
ஏந்தலை யேந்தெழி லிராம னோக்கினன்.

பாந்தளின் நெடுதலை வழுவி - ஆதிசேடனுடைய பெரிய தலையிலிருந்து தவறி, பாரொடும் - பூமியுடன், வேந்து என விளங்கிய - மலையரசு என விளங்கிய, மேருமால்வரை - மேரு என்னும் பெரிய மலை, போந்தது போல் - வந்தது போலக் காணப்படுகின்ற, பொலம் தேரில் - பொன்னாலியன்ற தேர்மீது, பொங்கிய - கிளர்ச்சியுடன் காணப்படும், ஏந்தலை - கும்பகன்னனை, ஏந்து எழில் இராமன் நோக்கினன் - மிக்க அழகு வாய்ந்த இராமபிரான் கண்ணுற்றான்.

தேர்த்தட்டு பூமிக்கும், மேற்பகுதி மேருமலைக்கும் உவமை. பாந்தள் - பாம்பு; இங்கு உலகினைத் தாங்கும் ஆதிசேடன். மலைகட்குள் மிகவும் உயர்ந்ததும் சிறந்ததுமாகலின் 'வேந்தென விளங்கிய மேரு' எனப்பட்டது; 'மீனுருவு மேரு' (ஆரணிய. 528). 'நின்ற நெடு மேரு' (கிட்கிந்தா. 806); 'இரவி சந்திர னியங்கும் குன்றம்' (சுந்தர. 698) என்பன காண்க. ஏந்தெழில் - மிக்க வனப்பு; 'ஏந்தெழின் மிக்கா னிளையான்' (தனிப்பா.).

பி - ம். 1. வெருவப்பாருடை.
3. தேரிற் போந்திடும்.
4. ஏந்தளி.

## தேரிலிருப்பவன் யாவனென்று இராமன் எண்ணுதல்

1314. வீணையென் றுணரினஃ தன்று விண்டொடும்
சேணுயர் நெடுங்கொடி வயவெஞ் சீயமால்
காணினுங் காலின்மே லரிய காட்சியன்
பூணொளிர் மார்பின னியாவன் போலுமால்.

'விண் தொடும் சேண் உயர் நெடு கொடி - விண்ணைத் தீண்டுகின்ற மிகவும் நீண்ட கொடி, வீணை என்று உணரின் - வீணையோ என்று கருதின், அஃது அன்று - அதுவும் அன்று; வயம் வெம்சியம் - வெற்றி பொருந்திய சிங்கக் கொடியாகும்; காலின் மேல் - காற்றின் வேகத்தினும் மிக்கு, காணினும் - மனோ வேகத்துடன் பார்த்தாலும், அரிய காட்சியன் - முழுதும் காண்டற் கரிய தோற்றம் உள்ளவனுயிருக்கின்றான்; பூண் ஒளிர் மார்பினன் - ஆபரணம் ஒளி செய்கின்ற மார்பினையுடைய இவன், யாவன் போலும் - இவன் யாரோ ?' ஆல் - அசைகள்.

வீணை அன்று என்றமையின், இவன் வீணைக் கொடியனான இராவணன் அன்று என்பது விளங்கும். கும்பகன்னனது கொடி சிங்கக் கொடி, இராவணன் காந்தர்வ வேதம் கரை கண்டவன் ஆகலின் அவனுக்கு வீணைக்கொடி; 'காண்டகு நீண்ட வீணைக் கொடிபற்றி' (ஆரணிய. 911), 'பாக வீணையின் கொடி யொன்று கிடந்தது பார்மேல்' (ஆரணிய. 911); சேணுயர், மிகவும் உயர்ந்த; 'சேணுயர் திருக்காளத்தி மலைமிசை' (பெரியபு. கண்ணப்ப. 96).

பி - ம். 1. வீணை யொன்று.
2. வெஞ்சீயமாக் கொடியிது, கொடியது.
3. காணினுங் காலன்.
4. பூணொளி. 104

## இவனை இன்னனென்று தெரிவி என்று வீடணனை இராமபிரான் கேட்டல்.

1315. தோளொடு தோள்செலத் தொடர்ந்து நோக்குறின்
நாள்பல கழியுமா னடுவ ணின்றதோர்
தாளுடை மலைகொலாஞ் சமரம் வேட்டதோர்
ஆளென வுணர்கிலே னர்கோ லாமிவன்.

'தோளொடு தோள் -'(இவ்வரக்கனுடைய ஒரு) தோளுடன், (மற்றொரு) தோள்வரையில், செல தொடர்ந்து நோக்குறின் - நன்கு தொடர்ச்சியாகப் பார்ப்பதென்றால், நாள் பல கழியும் - அநேக நாள் கழிந்துவிடும்; நடுவண் நின்றது ஓர் தாள் உடை மலை கொலாம் - (பூமியின்) நடுவில் நிற்பதாகிய ஒப்பற்ற காலுடன் கூடிய மேருமலை இவ்வாறு வந்தது கொல்லோ; சமரம் வேட்டது ஓர் ஆள் என உணர்கிலேன் - போர் விரும்பி வந்த ஓர் வீரன் என்று கருதக்கூடவில்லை; இவன் ஆர் கொலாம் - இவன் யாராக இருத்தல் கூடும்? கொல் - ஐயம்.

இராமபிரானும் வியக்குமாறு பேருடலத்துடன் இருந்தான் கும்பகன்னன் என்க. செல: 'செலச் சொல்லுவார்' (குறள். 722) என்றவிடத்துப்போல என்க.

பி - ம். 1. தொடர.

2. நடுவு.

4. உணர்கிலன்; ஆர் கொலா மிது. 105

இதன்பின், 'எழுங் கதிரவன்' என்ற பாடல் சில பிரதிகளில் உள்ளது.

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

குரக்கினப் பெரும்படை குலைகு லைந்துபோய்
வெருக்கொள விசும்பிடை வெய்ய மாயையின்
அரக்கனின் றமைத்ததோ ருருக்கொ லாமின
துருக்கொடே கரியகுன் றுற்றவே கொலாம்.

1316. எழுங்கதி ரவனொளி மறைய வெங்கணும்
விழுங்கிய திருளிவன் மெய்யினல் வெரீஇப்
புழுங்குநம் பெரும்படை யிரியல் போகின்ற
தழுங்கலில் சிந்தையா யார்கொ லாமிவன்.

'எழும்-(உதயமலையினின்று உயர) எழுகின்ற, கதிரவன் ஒளி-சூரியனுடைய ஒளியானது, இவன் மெய்யினால் மறைய - இவனு

டைய உடம்பினால் மறைந்திட, எங்கணும் - எல்லா இடமும், இருள் விழுங்கியது - இருளால் விழுங்கப்பெற்றது; இவன் மெய்யினால் வெரீஇ - இவனுடைய உடலைக் கண்டு பயந்து, புழுங்கும் நம்பெரு படை - மனம் வெதும்புகின்ற நம்முடைய பெரிய சேனையானது, இரியல் போகின்றது - நிலைகெட்டு ஓடுகின்றது; அழுங்கல் இல் சிந்தையாய் - பின்வாங்குதல் இல்லாத மனமுள்ளவனே! இவன் யார் கொல் ஆம் - இவன் யாவனோ?

சூரியன் ஒளியும் நிலத்தில் விழாதபடி தடுத்தது கும்பகன்னன் பேருடலம் என்பது கருத்து. 'இவன் மெய்யினால்' என்பது இடைநிலை விளக்காக மறைய என்பதனோடும், வெரீஇ என்பத னோடும் இணையும். (ஒப்பு) 'வெய்யோனொளி' (அயோத்தி. கங்கை. 1) வெரீஇ; சொல்லிசை அளபெடை. இரியல் போதல் - வீற்று வீற்றாக நிலைகுலைந்தோடுதல், ஆரணிய. 420, 473, 886. 'எய்தின ரிருந்தவ ரிரியல் போயினார்' (கிட்கிந்தா. 945); 'சேக்கைவிட் டிரியல் போகி' (கிட்கிந்தா. 977). அழுங்கல்; வருத்த மிகுதி. 'அவலக் கவலை கையா றழுங்கல்' (மணி. 4 : 118).

இச் செய்யுள் அச்சிட்ட பிரதிகளிற் காணப்படவில்லை; சில ஏட்டுப் பிரதிகளில் உள்ளது. 106

1317 அரக்கனவ் வுருவொழித் தரியின் சேனையை
வெருக்கொளத் தோன்றுவான் கொண்ட வேடமோ
தெரிக்கிலே னிவ்வுருத் தெரியும் வண்ணம்நீ
பொருக்கென வீடண புகறியா லென்றான்.

'அரக்கன் - இராவணன், அ உருவு ஒழித்து - (தன்னுடைய) அந்த வடிவத்தை விட்டு, அரியின் சேனையை - குரக்குச் சேனை, வெரு கொள - அஞ்சுமாறு, தோன்றுவான் கொண்ட வேடமோ - காட்டும் பொருட்டுத் தரித்துக்கொண்ட வேடமோ? இ உரு தெரிக் கிலேன் - இந்த உருவம் (இன்னதென்று) உணரக் கூடவில்லை; தெரியும் வண்ணம் - நான் தெரிந்து கொள்ளுமாறு, வீடண - விடணனே, நீ பொருக்கென புகல்தி - நீ விரைந்து சொல்வாயாக' என்றான் - என்று கூறினான்' (இராமபிரான்), ஆல் - அசை, ஓ - வினா.

வெருக்கொள 'சேடனும் வெருக்கொடு சிரத்தொகை நெளித் தான்' (ஆரணிய. 599); 'வெருக் கொண்டு பதை பதைத்து' (குசேலோ. வைகுந்த. 57), பொருக்கென; விரைவுக் குறிப்பு, 'பொருக்கென வவரிடைப் பொருந்த நோக்கினான்' (சுந்தர. 391); 'பொருக்கென்று பாங்கியர்பாற் போய் விழுந்தாள் பொற் கொடியே' (குசேலோ. வைகுந்த. 57); புகல்-தி என்பது புகறி எனப்புணரும். தெரிகிலேன் என்பது எதுகை நோக்கி வல்லொற் றுப் பெற்றது.

பி-ம். 1. உருவொளித்து. 107

கும்பகன்னன் தன்மை முதலியவற்றை வீடணன் கூறல்

1318. ஆரிய னனைய கூற வடியிணை யிறைஞ்சி யைய
பேரிய லிலங்கை வேந்தன் பின்னவ னெனக்கு [முன்னோன்
காரியல் கால னன்ன கழற்கும்ப கருண னென்னுங்
கூரிய சூலத் தானென் றவனிலை கூற லுற்றான்.

ஆரியன் அனைய கூற - இராமபிரான் அவ்வாறு சொல்ல, (வீடணன் இராமபிரானுடைய), அடி இணை இறைஞ்சி - பாத விணைகளில் பணிந்து, (அவனைப் பார்த்து) 'ஐய - ஐயனே! பேர் இயல் இலங்கை வேந்தன் பின்னவன் - பெருந் தகுதி வாய்ந்த இலங்கைக்குத் தலைவனான இராவணனுக்குப்பின் பிறந்தவன்; எனக்கு முன்னோன் - எனக்குத் தமையன்; கார் இயல் - கருநிறம் கொண்ட, காலன் அன்ன - யமனை ஒத்த, கழல் கும்பகருணன் என் னும் - வீரகண்டை யணிந்த கும்பகருணன் என்று சொல்லப் பெறும், கூரிய சூலத்தான் - கூர்மை வாய்ந்த சூலப்படையையுடை யவன்' என்று - என்று தொடங்கி, அவன் நிலை கூறல் உற்றான் - அவனுடைய தன்மையைச் சொல்லத் தொடங்கினான்.

வீடணன் சுருக்கமாக இறுத்த விடை கவனிக்கற்பாலது. (ஒப்பு): 'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி' (ஆரணிய. 258) என்ற சூர்ப்பணகை கூற்றும், 'வையந் தந்த நான்முகன் மைந்தன்' (சுந்தர. 453); முதலியன காண்க. காரியல் - கும்பகன்னனுக்கு

மட்டும் அல்லாது காலனுக்கும் பொருந்தும். காலனும் கருநிறத்தன் என்பர் ஆகலின். கழற்கும்பகன்னன் என்பது அரக்கனுடைய வீரம் குறித்து நின்றது. கழல்-வீரகண்டை; வீரர்கள் ஒற்றைக் காலில் அணிவது. 'கழலுலாங் காலும் கால வேலுலாங் கையும்' (சுந்தர. 131); கும்பகன்னனுக்குச் சிறப்பான வெற்றியாயுதம் சூலம் என்ப. இது அவனுக்குச் சிவபிரானல் அளிக்கப்பட்டது. (யுத்த. கும்ப. 122) காண்க. 'சூலமே கொடு சூடினன்'. (யுத்த. கும்ப. 117). இது முதல் 13 கவிகளில் கும்பகன்னன் நிலை கூறப்படும்.

பி - ம். 1. இனைய கூற ; வணங்கி.

3. காலனன்னன். 108

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஏழுயோ சனைக்கு மேலா யுயர்ந்திடும் முடிபெற் றுள்ளான்
சூழிவெங் கரிகள் தாங்கும் திசையெலாஞ் சுமக்குந் தோளான்
தாழ்வுறு தவத்தின் மேலாஞ் சதுமுகன் வரத்தி னாலே
வீழ்பெருந் துயிலும் பெற்றான் வெங்கடுங் கூற்றின்
[வெய்யோன்.

1319. தவனுணங் கியரும் வேதத் தலைவரு முணருந் தன்மைச்
சிவனுணர்ந் தலரின் மேலைத் திசைமுக னுணருந் தேவன்
அவனுணர்ந் தெழுந்த காலத் தசுரர்கள் படுவ ரெல்லாம்
இவனுணர்ந் தெழுந்த காலத் திமையவர் படுவ
[ரெந்தாய்.

'எந்தாய் - என் தந்தை போன்றவனே! நுணங்கிய தவரும் - மிகவும் அருமையான தவத்தை யுடையவரும், வேதம் தலைவரும் - நான்மறைகளில் வல்ல முதன்மையாளருமான அந்தணர்களும், உணரும் தன்மை - அறிந்தனுபவிக்கும் தன்மை வாய்ந்த, சிவன் உணர்ந்து - சிவபெருமானுல் தியானிக்கப் பெற்று, அலரின் மேலை திசைமுகன் உணரும் - தாமரை மலரின் மீது வாழும் மிகவும் பழமையான, நான்கு முகங்களை யுடைய பிரமதேவனுலும் தியானிக்கப்படுகின்ற, தேவன் அவன் - திருமாலாகிய அவன், உணர்ந்து எழுந்த காலத்து - அறிதுயில் நீங்கி எழுந்த காலத்து, அசுரர்கள்

எல்லாம் படுவர் - அசுரர்கள் அனைவரும் இறப்பர்; இவன் - உணர்ந்து எழுந்த காலத்து - இந்தக்கும்பகன்னன் துயில் நீங்கி எழுந்த போழ்தில், இமையவர் படுவர் - தேவர்கள் இறந்துபடுவர்.

கும்பகன்னன் திருமாலையொத்த திறன் உடையவன் என்பது குறிப்பு. தவனுணங்கியவரும் என்பது நுணங்கிய தவரும் எனப் பிரித்துக் கூட்டப்பட்டது. நுணங்கிய - அதி நுட்பமான, 'நுணங்கிய கேள்வியா னுவல்வ தாயினன்' (யுத்த. 390). 'நுணங்கிய கேள்விய ரல்லார்' (குறள். 419); தவன் உணங்கியர் எனப்பிரித்துக் தவத்தால் உடல் வற்றியவர் எனினுமாம். 'உணங்கும் தவத்தர் கருத்தினும்' (திருக்கருவை அந்தாதி 22). 'ஊனெடும் என்பெழுந் தியங்கும் யாக்கையர், நன்பகற் பலவுடன் கழிந்த உண்டியர்' (திருமுருகு) என்றது காண்க. வேதத் தலைவர் - நான்மறை பயின்று தலைமை பூண்டவர். திருமால் சிவபெருமானாலும் பிரம தேவனாலும் தியானிக்கப்படுபவர் என்பது இங்குக் கூறப்பட்டது. எந்தாய் என்பது அன்பும் பணிவும் பற்றி எழுந்த விளி.

பி - ம். 1. நுணங்கினரும்.

4. படுவதெந்தாய், படுவதெல்லாம், படுவரையா. 109

## வேறு

1320. ஆழி யாயிவன் யாரெனில்
ஏழை வாழ்வுடை யெம்முனோன்
தாழ்வி லாவொரு தம்பியோன்
ஊழி நாளு முறங்குவான்.

'ஆழியாய் - ஆணைத் திகிரியுடையவனே! இவன் யார் எனில் - இந்தக் கும்பகன்னன் யாரென்றால், ஏழை வாழ்வுடை எம்முனோன் - எளிமைப்பட்ட வாழ்க்கையினையுடைய எமது அண்ணனான இராவணனுடைய, தாழ்விலா ஒரு தம்பியோன் - எந்தவிதமான தாழ்வும் இல்லாத ஒரு தம்பியாவன்; ஊழிநாளும் உறங்குவான் - இவன் ஊழிக்காலம் வரையில் நித்திரை செய்யும் தன்மையான்.

ஆழியாய் - திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் திருமால் அமிசமானவனே என்றும், சக்கரப் படையை யேந்தியவனே என்

றும் நாட்டினைப் பரதற்கிந்து வனம் போந்தபின்னரும் இராம பிரானைக் கோசல நாட்டுக்கிறைவனாகவே ஆசிரியர் பல இடங்களி லும் கூறுவர். பரதனுடைய பிரதிநிதியாகப் போந்தவன் என்று இராமபிரானே கூறியதாக வான்மீக முனிவரும் பகர்வர். 'கோசல நாடுடை வள்ளல்' (யுத்த. 1210). 'ஜயனி யயோத்தி வேந்தற் கடைக்கலமாகி' (யுத்த. கும்ப. 134); எல்லாச் செல்வமும் ஒருசேரப் பெற்றிருந்தும், காமுகனாய்த் தன் வாழ்வினைக் கெடுத்துக் கொண் டவன் இராவணன் ஆகலின் ஏழை வாழ்வு எனப்பட்டது. இங்கு அறிவிலி என்பது பொருள்.

பி-ம். 1. யிவராகுவார், யிவனுருவான்.
2. வாழ்வினன் ; எம்முனர்.
3. தாழ்விலான் ; தம்பியார்.
4. ஊழிகால முறங்குவார். 110

1321. கால னாருயிர் காலனால்
காலின் மேனிமிர் காலினான்
மாலி னார்கெட வாகையே
சூல மேகொடு சூடினான்.

'காலன் ஆருயிர் காலன் - (இவன்) யமனுடைய அருமையான உயிரையும் கொள்ளும் ஓர் யமன் போன்றவன் ; காலின் மேல் நிமிர் காலினன் - காற்றிலும் வேகமாக நடக்கும் பாதங்களை யுடையவன் ; மாலினார் கெட-இந்திரன் தோல்வியுற, சூலமே கொடு வாகையே சூடினான் - தன் சூலப்படையின் உதவி கொண்டே வெற்றிமாலை புனைந்தவன். ஆல் : அசை

மால் என்பது பல பொருள் ஒருசொல் இங்கு இந்திரனைக் குறித்து நின்றது. 'தன் திருமகளெனப் பெற்ற மால்' (குமர. முத்து. பிள்ளை ; காப்பு. 6); வாகையே, சூலமே என்ற இடங் களில் ஏகாரம் தேற்றம்.

பி-ம். 1. உயிர்க் காலனூர், காலநேர்.
2. காலன் ; மேல்வரு ; காலனும், காலனர், காலினர்.
3. மாலனர் ; வாகையோ.
4. சூடினர். 111

1322. தாங்கு கொம்பொரு நான்குகால்
ஓங்க லொன்றினை யும்பர்கோன்
வீங்கு நெஞ்சன் விழுந்திலான்
தூங்க நின்று சுழற்றினன்.

('மேலும் இவன்) தாங்கு கொம்பு ஒரு நான்கு கால்-தரிக்கின்ற ஒரு நான்கு தந்தங்களுடனே நான்கு கால்களையுமுடைய, ஓங்கல் ஒன்றினை - மலை போன்ற ஐராவதம் என்ற யானையை, உம்பர் கோன் - தேவேந்திரன், விழுந்திலான் - கீழே விழுந்து விடாமல், வீங்கு நெஞ்சன்-அச்சம் மிகுந்த மனத்தினனாய், தூங்க - தொங்கிக் கொண்டு நிற்க, நின்று சுழற்றினன் - நின்று கொண்டு சுழற்றினன்.

இந்திரன் பரியாகிய ஐராவதத்திற்குத் தந்தங்கள் நான்கு என்பர். ஓங்கல் : மலைக்குக் காரணக்குறி; ஆல் பெயர்விகுதி. உம்பர் கோன் - தேவேந்திரன். கீழ்வீழ்வமோ என்று அஞ்சி யானையைப் பற்றித் தொங்கினன் என்க. வீங்குதல் - அச்சத்தால் வீங்குதல். தூங்க - தொங்க. 'தூங்குசிறை வாவலுறை தொன் மரங்களென்ன' (சீவக. 498).

பி - ம். 1. நான்குதான்.

3. நெஞ்சினன் வீழ்ந்திலன், விழுந்திலன்.

4. தூங்கி. 112

1323. கழிந்த தீயொடு காலையும்
பிழிந்து சாறுகொள் பெற்றியான்
அழிந்து மீனுக வாழிநீர்
இழிந்து காலினி னேறுவான்.

'(மற்றும் இவன்) கழிந்த தியொடு காலையும் - மிகுந்த தீயுடன் காற்றினையும், பிழிந்து சாறுகொள் பெற்றியான் - பிழிந்து சாற்றினை உட்கொள்ளும் தன்மையன்; மீன் அழிந்து உக - மீன்கள் எல்லாம் அழிவுற்று உயிர்விடுமாறு, ஆழிநீர் இழிந்து - கடலின் நீரினின்று இழிந்து, காலினின் ஏறுவான் - காலினாலேயே கரையேறவல்லவன்.

கழி - மிகுதி; 'கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்' 'கழி கண்ணோட்டம்' என்றது காண்க. இயெர்டு காலையும் பிழிந்து சாறு கொள் என்றது. அவன் பூதங்களின் வலியையும் மாற்றவல்லன் என்று குறித்தவாறு. (ஒப்பு): 'குருதி பெற்றில ரேற்கட லேழையும் குடிப்பார்' (யுத்த. படைக்காட்சி. 19); 'தண்ணினீர் முறைதப் பிடிற்றடைக்கையாற்றடவி, விண்ணின்மேகத்தை வாரிவாய்ப்பிழிந் திடும் விடாயார்' (யுத்த. மூலபல, 9); 'ஈறில் வேலையை யிமைப்புறு மெல்லையிற் கலக்கிச், சேறுகாண்குறும்' (கிட்கிந்தா. 691); 'பிடிக்குமேற் பெருங் காற்றையும் கூற்றையும் பிடிக்கும்' குடிக்குமேற் கடலேழையும் குடங்கையிற் குடிக்கும். (கிட்கிந்தா. 709); 'உலகின் வலியுஞ் செய்கையும் வருணன்றன் கருமமு மாற்றும்' (யுத்த. 136); 'பூதங்கண்ணிய வலியெலா மொருதனி பொறுத்தான்' (யுத்த. 130); 'நீரும் நீர்தரு நெருப்பும் வன்காற்றும் கீழ் நிமிர்ந்த, பாரும் சார்வலி படைத்தவன்' (கிட்கிந்தா. 289) என்பனவும் காணத்தகும். 'ஆழி நீர் இழிந்து காலினி லேறுவான்' 'ஆழங் காணுதற்கரிய வாயகன்றபே ராழி, ஏழுந் தன்னிரு தாளள வெனக் கடந்தேறும்' (யுத்த. 132); 'நீண்ட தோள்களால் வேலையைப் புறஞ்செல நீக்கி, வேண்டு மூனெடு மகரங்கள் வாயிட்டு விழுங்கி' (யுத்த. மூலபல. 7).

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 1. ஒழிந்த.

3. அழிந்த நீருகும், அழிந்து மிதுயர்.

4. எற்றுவான். 113

அதிகப்பாடல் :—

ஒழிந்தி ராவள ரூதையைப்
பிழிந்து சாறுகொள் பெற்றியான்
அழுந்து பார்மிசை யாழிநீர்
இழிந்து காலினி லெற்றுவான்.

1324. ஊனு யர்ந்த வுரத்தினன்
மேனி மீர்ந்த மிடுக்கினன்
தானு யர்ந்த தவத்தினன்
வானு யர்ந்த வரத்தினன்.

(பின்னும் இவன்), ஊன் உயர்ந்த உரத்தினன் - உடலில் யாவரினும் மிக்க வன்மை பெற்றுள்ளவன் ; மேல் இமிர்ந்த மிடுக்கினன்-மிகவும் உயர்ந்த மனவுறுதியினை யுடையவன் ; உயர்ந்த தவத்திறல் - உயர்ந்த் தவத்தின் வலிமையால், தான் வான் உயர்ந்த வரத்தினன் - அவன் மிகவும் உயர்ந்த வரங்களைப் பெற்றவன்.

மிடுக்கு - வலி. 'வில்லாளரை வெல்லு மிடுக்கினரோ' (ஆரணிய. 802) ; ஊன் - உடலுக்கு இலக்கணை. 'மிடுக்கிலா தானை வீமனே விறல் விசயனே வில்லுக் கிவனென்று' (தேவா. 647 : 2); இவன் கடுந்தவஞ் செய்து வரம் பெற்ற வரலாற்றினை. உத்தர காண்டம், இராவணன் பிறப்புப் படலத்து 24-ஆம் செய்யுட்கண்ணும், 31 முதல் 36-ஆம் செய்யுட்களிலும் காண்க. வான் உயர்ந்த என்பதற்கு வானம் போல் உயர்ந்த எனினுமாம். 114

1325. திறங்கொள் சாரி திரிந்தநாள்
கறங்க லாது கணக்கிலான்
இறங்கு தாரவ னின்றுகா
றுறங்க லாலுல குய்ந்ததால்.

'(மேலும்) இறங்கு தாரவன் - தொங்குகின்ற மாலை புனைந்த இவன், திறம் கொள் சாரி திரிந்த நாள்-பலவகைச் சாரிகள் திரிந்த காலத்தில், கறங்கு அலாது - காற்றாடி யல்லாது, கணக்கிலான் - பிறிதொன்றின் தன்மை யெய்தாதவன் ; (இவன்), இன்று காறு உறங்கலால் உய்ந்தது - இதுவரையில் அவன் நித்திரை புரிவதால் தான் உலகம் பிழைத்துள்ளது. ஆல் - அசை.

சாரி - வட்டமாயோடித்திரிதல் : வலசாரி இடசாரி என்பன காண்க. திரிவதில் காற்றாடி போன்றவன் என்க. 'கறங்கு போல்வன (கிட்கிந்தா. 703) ; மற்றும் ஆரணிய. 50, 494, 517) ; 'பெயர்க்கும் சாரிகை கறங்கென' (சுந்தர. 803) ; தன் பெருமையும் வீரமும் குறைந்தழியும் நாள் போந்தது என்பதை இறங்குதாரவன் என்ற தொடரின் தொனி கண்டுய்த்துணர்க. மிகப்பெரும் காட்சியன் எனினும் காற்றாடி போன்று உலவ வல்லவன் என்பது முதலிரண்டடிகளின் கருத்து.

பி - ம். 2. கணக்கிலார், கணக்கிலர்.

3. இறங்கினர் புலி, இறங்குவார் புலி, இறங்கினர் முறையின்றுதான்.

1326. சூல முண்டது சூருளோர்
காலமுண்டது கைக்கொள்வான்
ஆல முண்டவ னுழிவாய்
ஞால முண்டவ நல்கினுன்.

'சூர் உளோர் காலம் உண்டது சூலம் உண்டு - தேவர்களாக உள்ளவரின் வாழ்நாட் காலத்தை உண்டதாகிய, சூலப்படை ஒன்று உண்டு; அது - அதனை, கைக்கொள்வான் - தாங்கி நிற்பான்; ஞாலம் உண்டவ - பூமிமுழுதும் பிரளயத்தில் உண்ட திருமாலின் அமிசமானவனே! ஆழிவாய் - கடலிடத்துத் தோன்றிய, ஆலம் உண்டவன் - ஆலகால விடத்தை யுண்டவனுன சிவபெருமான், (அச்சூலப் படையை) நல்கினுன் - கொடுத்தருளினுன்.

சூர்: இச்சொல் தெய்வ மகளிரையே குறிக்கும்; இங்குப் பொதுவாகத் தேவரைக் குறித்து நின்றது. ஞாலமுண்டவ: விளி. சிவபிரான் இவனுக்குச் சூலமளித்தமை இங்குக் குறிக்கப்பட்டது: சிவன் ஆலம் உண்டது; ஆரணிய. 613, 688, 694; சுந்தர. 78, 181, 317, 1180; யுத்த. 414. திருமால். ஞாலம் உண்டது; ஆரணிய. 58.

பி - ம். 2. கைக்கொள்வர்.
3. ஆல முண்டவர்; ஆழிவாழ்.
4. உண்டவர்; நல்கினர். 116

1327. மின்னி னொன்றிய விண்ணுளோர்
முன்னி லென்றமர் முற்றினு
ரென்னில் என்றுமவ் வெண்ணிலார்
வென்னி லன்றி விழித்திலான்.

'மின்னின் ஒன்றிய - மின்னல் போலும் ஒளிவாய்ந்த, விண்ணுளோர் - தேவர், 'முன் நில் - என் முன்னர் நிற்பாயாக' என்று - என்று சொல்லி, அமர் முற்றினுர் என்னில் - போர் தொடங்குவாராயின், என்றும் - எப்போதும், அ எண்ணிலார் வென்நில் அன்றி - அந்தக் கணக்கற்றவரான அவர்களின் முதுகினன்றி, விழித்திலான் - அவர்கள் முகத்தில் விழிக்கமாட்டான்.

தேவர்கட்கு இயல்பாகவே உடலில் ஓர் ஒளியுண்மையின் 'மின்னின் ஒன்றிய விண்ணுளோர்' எனப்பட்டது. பகைவருடைய முதுகு காண்பானன்றி, அவர் முகத்தைக் காணுதவன் என்று கும்பகன்னன் வெற்றித்திறம் கூறப்பட்டது; வெங்காணுதல் 'ஆரமாலரத்தாக்கித்தேரோ, டவற்புறங்காணேனுயின் (புறநா. 71); வெங் என்பது எதுகை நோக்கி றன்னகரம் பெற்றது; இச்சொல் வெரிந் என்பதன் சிதைவு: வெரிந்; முதுகு; 'யாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்' (பெரும்பாண். 86); 'வெரிநெ னிறுதி' (தொல். எழுத். 300); வெங் - முதுகு (பிங்); பிறிதினவிற்சியணி. 'மின்னின் ஒன்றிய' என்பதற்கு: அரக்கரைக் கண்டால் மின் போன்று கண்டும் காணுதும் ஒளிக்கும் தேவர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. மின்னனர்.

2. முன்னி லென்றவர்.

3. என்னி லென்றவர், என்னுமவ், என்னிலா. 117

1328. தரும மன்றிது தானிதால்
வரும்ந மக்குயிர் மாய்வெனு
உருமின் வெய்யவ னுக்குரை
இருமை மேலு மியம்பினுன்.

'இதுதான் - பிறன் மனைவியை நச்சுவதாகிய இச்செயல், தருமம் அன்று - அறச் செயலாகாது, இதால் - இதனுல், நமக்கு உயிர் மாய்வு வரும் - நமக்கு உயிரழிவு நேரும்; எனு - என்று, உருமின் உரை வெய்யவனுக்கு - இடிபோற் கொடிய சொற்களை யுடையவன் ஆன இராவணனுக்கு, உரை இருமை மேலும் இயம்பினுன் - இந்த வார்த்தையை இரு தடவைகட்கு மேலும், இவன் எடுத்துப் பகர்ந்தான். ஆல் - அசை.

இது என்றசுட்டு வரலாற்றை யொட்டிப் பரதார கமனத்தைக் குறித்து நின்றது; நமக்கு உயிர் மாய்வு வரும் எனு என்று மொழி மாற்றுக. உரையை நடுநிலை விளக்காகக் கொண்டு உரை தரப் பட்டது. உருமின் உரை: 'உருமொத்த குரலன்' (ஆரணிய. 18); 'மேகத்திடித்த வுருமொத்துரறி' (ஆரணிய. 602); 'செறிதர வுருமதிர் கின்ருர்' (சுந்தர. 769). இருமை மேலும் இவன் இயம்பியது

யுத்த. 59-64-ல் காண்க. இனி இருமை மேலும் என்பதற்கு இம்மை மறுமைகளில் எய்தத்தக்கவை குறித்து எனினுமாம்.

பி - ம். 1. தான்செயில் தருமமன்றது தானெனு,

2. மாள்வெனு. 118

1329. மறுத்த தன்முனை வாய்மையால்
ஒறுத்து மாவ துணர்த்தினன்
வெறுத்து மாள்வது மெய்யெனு
இறுத்து நின்னெதி ரெய்தினன்.

'மறுத்த-(சீதாதேவியைக் கொடுத்தற்கு) உடன்படாத, தன் முனை - தன் தமையனை இராவணனை, வாய்மையால் - தன் வாய்ச் சொற்களால், ஒறுத்தும் - கண்டித்தும், ஆவது உணர்த்தினன் - பின்னர் நிகழப் போவதையும் அறிவித்தான்; (அவ்விராவணன் எவ்வளவு சொல்லியும் செவியேற்காமையின்), வெறுத்து - (அவன்பால்) வெறுப்புக் கொண்டு, மாள்வது மெய் - (நாம்) இறந்து படுவது உண்மையே, எனு - என்று, இறுத்து - முடிவாகக் கூறி விட்டு, நின் எதிர் எய்தினன் - இப்போது உன் முன்பு வந்து சேர்ந்தான்.

இச்செய்யுட்களில் சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும் உண்மை காண்க. சமயம் வரின் இடித்துரைத்தல் உழையிருந்தார் கடனாதலினாலும், 'இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன், கெடுப்பாரை யின்றிக் கெடும்' (குறள். 448) ஆதலினாலும் ஒறுத்து மாவ துணர்த்தினன் எனப்பட்டது. ஒறுத்தும் என்ற உம்மை தொடக்கத்தில் நல்லதனமாகக் கூறிய அறிவுரையைச் சுட்டி நின்றது. ஆவது என்பதற்குத் தன்னால் இயன்றவரை யென்று கூறலுமாம்.

பி - ம். 1. தம்முனை.

3. வெறுத்து மாய்வது. 119

1330. நன்றி நன்று நமக்கெனு
ஒன்று நீதி யுணர்த்தினன்
இன்று காலன்மு னெய்தினன்
என்று சொல்லி யிறைஞ்சினன்.

'இது நமக்கு நன்று அன்று - (பிறன் மனையைச் சிறைப்படுத்தும்) இச்செயல் நமக்கு நன்மை விளைக்கும் செயல் அன்று, எனு - என்று, ஒன்றும் நீதி உணர்த்தினன் - பொருந்திய நீதியை எடுத்து மொழிந்தான், (அவன் கேளாமையால்) இன்று காலன் முன் எய்தினன் - இப்போது நமனுக்கு எதிராக வந்துள்ளான்,' என்று சொல்லி இறைஞ்சினன் - என்று கூறி வணங்கினன்.

இது நமக்கு நன்று அன்று எனு : என மொழி மாற்றுக. நீதி ஒன்று என மாற்றிக் கூறலுமாம். ஒன்று நீதி ஒப்பற்ற நீதியெனினும் ஒக்கும்.

பி - ர். 1. நன்றிதென்று.
2. உணர்த்தினள்.
3. இன்று காலமும்.

வேறு

சுக்கிரீவன் இவனை நம்முடன் சேர்த்துக்கொள்வது நலமெனல்

1331. என்றவ னுரைத்த லோடு மிரவிசே யிவனை யின்று
கொன்றொரு பயனு மில்லை கூடுமேற் கூட்டிக் கொண்டு
நின்றது புரிது மற்றிந் நிருதர்கோ னிடரு நீங்கும்
நன்றென நினைந்தே னென்றான் நாதனும் நயனி
[தென்றான்.

என்று அவன் உரைத்தலோடும் - என்று அந்த வீடணன் கூறியவுடன், இரவிசேய் - சூரியன் புதல்வனை சுக்கிரீவன், (இராம

பிரானை நோக்கி), ‘ இன்று இவனை கொன்று ஒரு பயனும் இல்லை - இன்று இந்தக் கும்பகன்னனைக் கொல்வதால் ஒருபயனும் சித்தியாது, கூடுமேல் - (இவன் நம்முடன்) சேர்வானாகில், கூட்டிக்கொண்டு - நம்முடன் சேர்த்துக்கொண்டு, நின்றது புரிதும் - மேல் செய்யவேண்டுவதைச் செய்வோம்; மற்று - மேலும், இ நிருதர் கோன் இடரும் நீங்கும் - இந்த அரக்கர் வேந்தனான வீடணனுடைய துன்பமும் ஒழியும்; நன்று என நினைந்தேன் - இதுவே நல்லது என்று கருதினேன்’, என்றான் - என்று மொழிந்தான்; நாதனும் - இராமபிரானும், ‘ஈது நயன் - இதுவே நியாயம்’, என்றான் - என்றான்.

முதலடியில் அவன் என்றது வீடணனை ‘ கைப்புகற்பாலனோ கழியற்பாலனோ’ என்ற இராமபிரான் வினவிய காலத்து மிகக் கடுமையாக வீடணனைப் பேசிச் சேர்க்கக்கூடாது என்ற சுக்கிரீவன், உலகியல் அறிவுடன் முன்னதாகவே கும்பகன்னனைச் சேர்த்துக் கொள்வது நலம் என்று கூறியது ஆராயத்தக்கது. முடிவாகத் தன் கருத்து இராமபிரான்முன் செல்லாது என்றறிந்த சுக்கிரீவன் இங்ஙனம் கூறினான். கும்பகன்னனும் அண்ணனுக்கு அறவுரை கூறினான் என வீடணன் கூறியதும் சுக்கிரீவனுடைய துணிபுக்குக் காரணமாகலாம். இச்செய்யுட்கொண்டு கம்ப நாடருடைய உலக இயல் உணர்வும், மக்கட் பண்பினை ஆயும் திறனும் நன்குணரலாம். முன்னரே இலங்கை வேந்தாக முடிசூட்டப்பெற்றவன் ஆகலின் ‘ நிருதர் கோன் ’ என்றே வீடணனைக் குறித்தான் (யுத்த. 445, 447, 450, 451) காண்க. சகோதரர்களும் அரக்கர்களும் இறந்து மடிந்தால் தான் ஒருவனாக இருத்தல் வேண்டுமாகலின், கும்பகன்னனையேனும் உயிருடன் இருக்கப்பெற்றால் வீடணன் நிம்மதிபெறக் கூடும் என்ற நினைவினால் ‘ நிருதர்கோனிடரும் நீங்கும் ’ என்றான். இச்செய்யுள் முதல் 1411 வரை அறுசீராசிரிய விருத்தங்கள்.

பி - ம். 1. இரவிசேயவனை, யிண்டு, யின்னே.

2. கோடுமேற்; கொண்டால்.

3. நின்றமர்; புரிநின்; என்றால், மற்றும்.

4. நன்றிது; நினைத்தேன்; நாயகன், நலனீதென்றான், நன்றெனவுணர்ந்தே னென்றான்.

## கும்பகன்னனை யழைக்குமாறு வீடணன் செல்லுதல்

1332. ஏகுதற் குரியா ரியாரே யென்றலு மிலங்கை வேந்தன்
ஆகின்மற் றடிய னேசென் றறிவினு லவனை யுள்ளம்
சேகறத் தெருட்டி யீண்டுச் சேருமேற் சேர்ப்பெ னென்றுன்
மேகமொப் பானு நன்று போகென்று விடையு மீந்தான்.

'ஏகுதற்கு உரியார் யார் - (கும்பகன்னனிடம்) போதற்குத் தக்கவர் யார்?' என்றலும் - என்று இராமபிரான் கேட்டலும், இலங்கை வேந்தன் - இலங்கை மன்னனுகிய வீடணன், 'ஆகின் - அப்படியானுல், மற்று - பின்னர், அடியனே சென்று - நானேபோய், அறிவினுல் - என் அறிவின் வல்லபத்தால், அவனை - அந்தக் கும்பகன்னனுடைய, உள்ளம் சேகு அற தெருட்டி - மனத்தினைக் குற்றமறத் தெளிவித்து, ஈண்டு சேருமேற் சேர்ப்பென் - இங்கு நம்முடன் வந்து கூடுவானேல் கூடச்செய்வேன்' என்றுன் - என்று பகர்ந்தான்; மேகம் ஒப்பானும் - மேகத்தை ஒத்தவனுன ஸ்ரீராம பிரானும், 'நன்று - நல்லது, போகஎன்று - செல்வாயாக என்று, விடையும் ஈந்தான் - உத்தரவுமளித்தான். ஏ - வினு.

இங்கு இராவணனிடம் தூது செல்வதற்குரியார் யார் எனக் கேட்ட அளவில் அங்கதனே தக்கவன் எனறு தடை விடைக ளுடன் கூறப்பட்ட செய்தி காண்டற்குரியது. மக்களாட்சியில் நடைபெறுவது போன்று தக்க அறிஞர்களுடன் ஆலோசித்து ஒரு காரியத்தை முடிவு செய்வது என்ற சிறந்த கொள்கையைச் சோழர் அரசியலிற் பல்லாண்டுகள் கண்டுணர்ந்த கம்பநாடர் தமது பெருங் காவியத்தில் ஆங்காங்குக் காட்டிச் செல்லுதல் அறிந்து மகிழ்தற்குரியதாகும். முன்னர் வீடணன் அடைக்கலப் படலத்தில் வீடணனை அழைத்திடுமாறு சுக்கிரீவற்கு ஆணை தந்த இராமபிரான், இங்கு ஏகுதற்குரியார் யார் என்று கேட்டதும், வீடணன் செல்லத் துணிந்ததும் உய்த்துணரத்தக்கன. அங்கு 'ஐயுறவெல்லாம் தீரும் அளவையாயனமந்த நிலையில் சுக்கிரீவன் சென்றுன். சேகு - குற்றம், 'சேகறு நோன்பினர்' (ஆரணிய. 831).

பா - ம். 1. என்னலும்.

2. மற்றடியேனைக், அறிவினுதவனை.

3. சேர்ப்பல்.

4. போகெனக் கூறிவிட்டான்.

## விடணன் கும்பகன்னனையடைந்து வணங்குதல்

1333. தந்திரக் கடலை நீந்தித் தன்பெரும் படையைச் சார்ந்தான்
வெந்திற லவனுக் கைய வீடணன் விரைவி னுன்பால்
வந்தன னென்னச் சொன்னர் வரம்பிலா வுவகை கூர்ந்து
சிந்தையாற் களிக்கின் ருன்றன் செறிகழல் சென்னி
[சேர்த்தான்.

தந்திரம் கடலை நீந்தி - (குரங்குச்) சேனையாகிய கடலைக்கடந்து, தன் பெரும்படையைச் சார்ந்தான் - தனதுபெரிய(அரக்கர் தானையை) அடைந்தான் வீடணன்; (அதுகண்ட அச்சேனையில் உள்ள ஏவன் மாக்கள்), வெம் திறல் அவனுக்கு - கொடிய வலிமை சான்ற அந்தக் கும்பகன்னனுக்கு, 'ஐய - ஐயனே! வீடணன் விரைவில் உன்பால் வந்தனன் - வீடணன் விரைவாக உன்னை நோக்கி வந்தனன்', என்ன சொனனர் - என்று பகர்ந்தார்கள், (அதுகேட்டு) வரம்பு இலா உவகை கூர்ந்து - எல்லையற்ற மகிழ்ச்சி மிகுந்தவனாய், சிந்தையால் களிக்கின்ருன் தன் - உள்ளத்தால் மகிழ்பவனான கும்பகன்னனு டைய, செறிகழல் சென்னி சேர்த்தான் - நெருங்கிய வீரக்கழ லணிந்த திருவடிகளைத் தன் தலைமேற்கொண்டான்.

தந்திரம் - சேனை; 'தந்திர வினைஞரும்' (சிலப். *26*, *41*). இலங்கை மன்னனை இராமபிரானால் முடிசூட்டப் பெற்றவன் ஆகலின் 'தன் பெரும்படை' எனப்பட்டது. வெந்திறல் என்பதற்கு கடுமையான திறலே வடிவாகவுடைய அவனுக்கு என்றும் கூறலாம். 'ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்' (கலித். *81*) என்ற இடத்துப்போல. சிந்தையாற் களிக்கின்ருன் என்பது கொண்டு கும்பகன்னனுக்குத் தம்பியிடம் இருந்த அன்பும் பரிவும் காணலாகும். செறிகழல் சென்னி சேர்த்தான் என்பது கொண்டு அடியில் விழ்ந்து பணிந்தான் வீடணன் என்பது போதரும்.

பி - ம். 1. தம்பெரும், பலத்தைச்
2. விரைவினும்பால், நின்பால்.
3. வந்தனனென்றலோடும், உவகை கூரச்.
4. இந்தையுட், சிந்தையில்; கொண்டான்.

### 'நற்சார்வு சார்ந்த நீ எங்களைச் சேர்வது தகுதியன்று' என்று கும்பகன்னன் கூறுதல்

1334. முந்திவந் திறைஞ்சி னானை
 மோந்துயி ரொன்றப் புல்லி
உய்ந்தனை யொருவை போனா
 யெனமன முவக்கின் றேன்றன்
சிந்தனை முழுதுஞ் சிந்தத்
 தெளிவிலார் போல மீள
வந்ததென் தனியே யென்றான்
 மழையினீர் வழங்கு கண்ணான்.

(அப்போது கும்பகன்னன்), மழையின் நீர் வழங்கு கண்ணான் - மழை போன்று நீரைப் பெருக்கும் விழிகளை யுடையவனாய், முந்தி வந்து இறைஞ்சினானை - தன் முன்னர் வந்து பணிந்த வீடணனை, மோந்து - உச்சி மோந்து, உயிர் ஒன்ற புல்லி - உயிர் ஒன்றுபடு மாறு தழுவியணைத்து, 'ஒருவை - ஒருவனான நீ, போனாய் உய்ந்தனை - எங்களை விடுத்து அகன்றதால் பிழைத்தனை, என மனம் உவக்கின்றேன் தன் - என்று மனம் மகிழ்கின்றவனான என்னுடைய, சிந்தனை முழுதும் சிந்த - என்னுடைய நினைவுகள் முற்றும் சிதறும் படி, தெளிவு இலார் போல - சித்தம் தெளியாதார் போன்று, மீள - திரும்பவும், தனியே வந்தது என் - தனித்து வந்ததன் காரணம் என்ன ?' என்றான் - என்று கேட்டான்.

மோத்தல் - உச்சி மோத்தல். இது அன்பினால் நிகழ்வ தொன்று. 'தனிப்புதல்வன் வந்தனை யுச்சி மோந்து' (கோயிற்பு. வியாக்கிர. 2); 'செய்ய முகத்திலணைத்துச்சிமோந்து' (கந்தர்கலி. 85); 'முறை முறை நோக்கி யுச்சி மோந்தும்' (குமரகுரு. திருவாரூர். 21, 22); 'மழலைவாய் முத்துண்டு முச்சி மோந்தும்' (குமரகுரு. முத்துக். 10); ஒரு தலையாக இராமனைச் சென்று சரணடைந்த நீ மீட்டும் அரக்கர் குழாம் நாடி வந்ததென் என்பான் (மீள) என்றும், அரக்கரை விடுத்து எதிரிடாற் சென்றவன் என்று இராவண னுடைய சேனை வீரர் ஏதேனும் தீங்கிழைக்க ஏதுவாகுமாகலின்

'தனியே' என்றும் கூறினன். மழையின் நீர் வழங்கியது அன்பு பற்றி யெழுந்த மெய்ப்பாடு. வழங்கும் கண்ணன்: 'தம்பியை யுன்னும் தோறும் தாரை நீர் வழங்கும் கண்ணன்' (சுந்தர. 985).

பி - ம். 1. முகந்துயிர்; மார்பழுந்தப் புல்லி.

2. ஒருவன் போனுய்; உளேயென, உளேயென; என்றுளம் உவக்கின்றேனென்.

4. வந்ததென் தமியே; வயங்கு, வழங்கும். 124

1335. அவயநீ பெற்ற வாறு மமரரும் பெறுத லாற்ரு
உவயலோ கத்தி லுள்ள சிறப்புங்கேட் டுவந்தே னுள்ளம்
கவிஞரி னறிவு மிக்காய் காலன்வாய்க் களிக்கின் றேம்பால்
நவையிலாய் வந்த தென்னீ யமுதுண்பாய் நஞ்சுண்
[பாயோ.

'அவயம் நீ பெற்ற ஆறும் - அபயச் சொல்லை நீ இராமபிரானிடம் பெற்றவண்ணமும், அமரரும் பெறுதல் ஆற்ரு-தேவர்களும் எய்தற்கு முடியாத, உவய லோகத்தின் உள்ள - (இம்மை மறுமை என்ற) இரண்டு உலகத்தும் உள்ள, சிறப்பும் கேட்டு உள்ளம் உவந்தேன் - பெருஞ் செல்வங்களையும் (ஒற்றராற்) செவியேற்று, நான் உள்ளம் மகிழ்ந்தேன்; கவிஞரின் அறிவு மிக்காய் - கவிஞர்களைக் காட்டிலும் அறிவு சான்றவனே! காலன்வாய் களிக்கின்றேம்பால் - யமன் வாயில் இருந்த வண்ணம் மகிழ்கின்ற எம்மிடத்து, நவையிலாய் - களங்கமற்றவனே! நீ வந்தது என் - நீ வந்த காரணம் யாது? அமுது உண்பாய் நஞ்சு உண்பாயோ - அமுதம் உண்ண வேண்டிய நீ விடத்தை உண்ணக்கடவையோ? ஓகாரம் - வினா.

அபயம், உபயம் என்பன எதுகை நோக்கி அவயம், உவயம் என நின்றன; ஒற்றர் கூறக் கேட்டவன் ஆகலின் சிறப்பும் கேட்டு எனப்பட்டது. அமுதம் - இராமபிரானை அடைந்து அடைகின்ற நல்வாழ்வு; இராமபிரானிடம் சரணம் புகுந்ததன் பலன் இம்மைச் செல்வமும், மறுமை வீடும் எய்துதல்; 'நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே. .....சென்மமு மரணமு மின்றித் திருமே' (பால. பாயிரம்) என்றது கொண்டு காண்க. அமுதம் என்பது மோட்சத்தையும், நஞ்சு - நரகத்தையும் குறிக்கும் என்றலுமாம். அமுதம் - முத்தி; (திவா.). நஞ்சு - அரக்கர்பாலிருந்து

அழிவது. கவிஞர் - சுக்கிரனுமாம்; 'கவீனும் உசநா கவி' (பகவற் கீதை) என்றது காண்க. காலன்வாய்க் களித்தல். முரண் - 'கொலைஞ ருலையேற்றித் தீமடுப்ப வாமை, நிலையறியா தந்நீர் படிந் தாடி யற்றே' (நாலடி. 331). சிறப்பு - இம்மைச் செல்வம் என்றும் உம்மை வீட்டின்பம் என்றும் பொருள்படும்; 'சிறப்பீனும் செல்வமு மீனும்' (குறள். 31); 'சிறப்பென்னுஞ் செம்பொருள்' (குறள். 358).

பி - ம். 1. அபயம், அவயம்.

2. உவய, உபய; லோகத்துள்ள, லோகத்துமுற்ற; உவந்தது, உவகை கூர்ந்தேன்.

3. கவையரில், களிக்கின் லேம்பால்.

4. நவையினில், நவையிலாய், நவையுற; வந்ததென்னை; அமுதுண் பார். 125

1336. குலத்தியல் பழிந்த தேனுங்
குமரமற் றுன்னைக் கொண்டே
புலத்தியன் மரபு மாயாப்
புண்ணியம் பொருந்திற் றென்னு
வலத்தியல் தோளை நோக்கி
மகிழ்கின்றேன் மனமும் வாயும்
உலர்த்தினை திரிய வந்தா
யுளைகின்ற துள்ள மந்தோ.

'குமர - மகனே! குலத்து இயல்பு அழிந்ததேனும் - (பிறன் பெண்டிரை நச்சிச் சிறையிட்டதால் எங்களுடைய) குலத்தின் பெருமை கெட்டதெனினும், உன்னை கொண்டே - (இராமபிரானைச் சரணடைந்த) உன் மூலமாகவே, புலத்தியன் மரபு - புலத்திய முனி வரின் கொடிவழி, மாயா புண்ணியம் பொருந்திற்று - அழியாத நற் பேற்றை எய்திற்று, என்னு - என்று, வலத்தியல் தோளை நோக்கி மகிழ்கின்றேன் - வெற்றியுடன் கூடிய புயங்களைக் கண்டு உள்ளம் பூரிக்கின்றேன்; (என்) மனமும் வாயும் - என்னுடைய மனத்தினை

யும் வாயினையும், உலர்த்தினை - ஈரப்பசையறும்படி, திரியவந்தாய்-மீண்டு வந்தனை, அந்தோ - ஐயோ, உள்ளம் உலைகின்றது - மனம் வருந்துகிறது. மற்று - அசை.

குலம் + இயல்பு; மகரவீறு ஆதலின் அத்துச் சாரியை பெற்றுப் புணர்ந்தது; (தொல். எழுத். 133). பிறன் மனைவியை விழைவோன் அடையும் பல்வேறு சிறுமைகளையும் திருக்குறள் 'பிறனில் விழையாமை' என்ற அதிகாரம் கொண்டும், 'பிறர் மனை நயவாமை' என்ற நாலடியார் அதிகாரம் கொண்டும் உணர்க. குமர - அன்புபற்றி வந்த வழுவமைதி; புலத்தியன் மரபு. 'பூவிலோன் புதல்வன் மைந்தன்' (ஆரணிய. 258) என்றது காண்க. தோள் நோக்கி மகிழ்தல். 'கோவறு மக்களுங் குளிர்ந்து தோணோக்கினர்' (சீவக. 1843); திருவாசகம் திருத்தோணோக்க மும் காண்க. 'தோணோக்க மாடாமோ', 'திண்டோள் மகிழ்ந்தன நோக்கி' (பெருங். 5-7-134). மனக்கவலை மிகின் உடல் சூடேறி வாயுலர்வது இயல்பாதலின், 'வாயை உலர்த்தினை' யென்றான். திரியவருதல் - மீண்டு வருதல்; (பாசவதை. 640). அந்தோ : இரக்கக் குறிப்பு. உலர்த்தினை என்பதில் ரகரம் குறைந்து நின்றது எதுகை நோக்கி, மற்று : வினைமாற்று. இனி, விசிரவ முனிவருடைய மகன் குபேரன்; அவன் உள்ள வரையில் புலத்தியன் மரபிற் கழிவில்லை. எனினும் புலத்தியன் மற்றொரு மனைவியான கேகசியின் வழிவந்த அனைத்திராக்கதரும் இறக்க, அவர்கட்கு எள்ளும் தண்ணீரும் ஊற்ற நீ ஒருவன் உள்ளனை ஆதலின் புலத்தியன் மரபு புண்ணியம் பண்ணிற்று என்றான் என்க. 'நானிருந்து தோள் பார்க்க நான் கிடந்து புலம்புவதோ' (ஆரணிய. சூர்ப்ப. 109); 'பல்வரிக் கூத்தினுள் ஒன்றாகிய தோள்வீச் சென்பது தோணோக்கம் என வழங்கும் (சிலப். பக். 88-89; அடியார்).

பி - ம். 2. பொருந்திற்றென்ன; என்றன், என்று, என்றேன், என்க.

4. வந்தே. 126

1337. அறப்பெருந் துணைவர் தம்மை
யபயமென் றடைந்த நின்னைத்
துறப்பது துணியார் தங்க
ளாருயிர் துறந்த போதும்

இறப்பெனும் பயத்தை விட்டா
யிராமனென் பானைப் பற்றிப்
பிறப்பெனும் புன்மை தீர்ந்தாய்
நினைந்தென்கொல் பெயர்ந்த வண்ணம்.

'அறம் பெரும் துணைவர் - அறத்திற்குப் பெரும் துணைவரான அந்த இராமபிரான், தங்கள் ஆர் உயிர் துறந்தபோதும் - தம்முடைய அருமையான உயிரைவிட நேர்ந்தபோதிலும், தம்மை அபயம் என்று அடைந்த நின்னை - தம்மை அபயம் என்று அடைந்த உன்னை, துறப்பது துணியார் - கைவிடுதற்கு மனம் துணியமாட்டார்; இறப்பெனும் பயத்தை விட்டாய் - (முன்னமே வரத்தின் வன்மையால்) இறப்பென்னும் அச்சம் தவிரப்பெற்றனை; (இப்போது), இராமன் என்பானைப்பற்றி - இராமபிரானைச் சரணமாகப் பிடித்து, பிறப்பு எனும் புன்மை தீர்ந்தாய் - (அரக்கப்) பிறப்பென்கின்ற இழிவும் நீங்கப்பெற்றனை, (இங்ஙனமாகவும் அவரை விடுத்து நீ), பெயர்ந்த வண்ணம் - திரும்பி வந்தது, என் நினைந்துகொல் - என்ன எண்ணம் கொண்டு?

அறப்பெருந் துணைவர்: சரணம் புக்கவரைப் பாதுகாப்பவர். துணைவர் என்ற சொல் இராமபிரான் இலக்குவன் என்ற இருவரையும் குறித்ததாகவும் கொள்ளலாம். அற என்பதை உரிச்சொல்லாகக்கொண்டு மிகப்பெருந் துணைவர் எனினுமாம். 'அறநெறி நின்றுளோர் ஆணி' (ஆரணிய. 938); 'அறத்தினுக் காருயிர்த் துணைவன்' (கிட்கிந்தா. 175); மற்றும், (சுந்தர. 363, 1120, 1123); 'அறநெறி நிறுத்த வந்த இறை' (கிட்கிந்தா. 360); 'அறத்தை முற்றும் காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடங் காட்டி' (யுத்த. கும்ப. 150). இரண்டாம் அடிக்கு ஒப்பு: (யுத்த. 411, 413, 415, 419, 422. இறப்பெனும் பயத்தை விட்டாய்: வீடணன் கடுந்தவம் புரிய அவன் தவத்திற்குவந்து பிரமதேவன் 'வரங்கள் எல்லாம் பெறுதி நீ யென்று மிறவா திருத்தி யென்றும்' (உத்தர. இராவணன் பிறப்பு. 30) கூறியது காண்க. மற்றும் வீடணனுக்கு இராமபிரான் சிரஞ்சிவிப் பட்டம் அளித்தது (யுத்த. 445) கொண்டும்

காண்க. பிறப்பெனும் புன்மை தீர்ந்தது (யுத்த. 444, 448) கொண்டு காண்க.

பி-ம். 1. அடைந்தாற்பின்னை, அடைந்தார் தம்மை, அமைந்தவன்னை.
2. துறப்பினை, துறப்பினுந் துறவசர் தங்கள்.
3. பதத்தை, என்பளவு மாற்றிப்.
4. புன்மையில்லை, பிறிதென்கொல், என்கொ, தன்மை.

1338. அறமென நின்ற நம்பற் கடிமைபெற் றவன்ற னாலே
மறமென நின்ற மூன்று மருங்கற மாற்றி மற்றும்
திறமென நின்ற தீமை யிம்மையே தீர்ந்த செல்வ
பிறர்மனை நோக்கு வேமை யுறவெனப் பெறுதி போலாம்.

'அறம் என நின்ற நம்பற்கு - தருமமே வடிவு எனச் சொல்லுமாறு நின்ற அவ்விராமபிரானுக்கு, அடிமை பெற்று - அடிமையாகும் பேறுபெற்று, அவன் தனாலே - அவனாலே, மறம் என நின்ற மூன்றும் - பாவத்திற்கு மூலம் என்னும்படி உள்ள (ஐயம் திரிபு அறியாமை என்ற) மூன்றினையும், மருங்கு அற - இருந்த சுவடு கூட அறிய முடியாத வண்ணம், மாற்றி - நீக்கி, மற்றும் - மேலும், திறம் என நின்ற தீமை - வன்மையே என்று கூறுமாறு நின்ற தீங்குகளை, இம்மையே தீர்ந்த செல்வ - இப்பிறப்பிலேயே அகற்றிக்கொண்ட செல்வனே! பிறர் மனை நோக்குவேமை உறவு என பெறுதி போலாம் - அயலார் மனைவியைக் காதல்கொண்டு பார்க்கும் எம்மையும் நட்பு என ஏற்பாயோ?

அறம் என நின்ற நம்பன் 'தருமமாவான்' (கிட்கிந்தா. 55, 353) 'தாயென வுயிர்க்கு நல்கித் தருமமுந் தகவுஞ் சார்வும், நீயென நின்ற நம்பி' (கிட்கிந்தா. 348) 'அருமையி னின்றுயி ரளிக்கு மாறுடைத் தருமமே தவிர்க்குமோ தன்னைத்தானரோ' (கிட்கிந்தா. 258): 'அறமூர்த்தி' (சுந்தர. 1120); 'தருமமென்றறிஞர் சொல்லும் தனிப்பொருள்' (யுத்த. வேலேற்ற. 44); நம்பன் - தலைவன். 'இளையவன் தனக்கு மாற்று தென்பெரும் சேனை நம்ப' (யுத்த. 1226) 'நம்பனடியவர்க்கு நல்காத் திரவியங்கள்' (தனிப்பா.); மூன்று - ஐயம்திரிபு அறியாமை, மருங்கற (ஒப்பு): 'ஐம்புலனைச் சுட்டறுத்து

(தாயுமான. எக்காலக்) இறுதியடிகட்கொப்பு. 'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும், செம்பொருள் காண்ப தறிவு' (குறள். 358); பொதுவாக அரக்கர் பண்பு எனத் தோற்றுமாறு 'நோக்குவேமை' எனத் தன்னையும் உளப்படுத்திக் கூறினன். மற்றும் இராவணனுடன் தான் சேர்ந்திருத்தலின் இங்ஙனம் கூறினன் எனினுமாம். போலாம் : ஒப்பில் போலி.

பி - ம். 1. நம்பர்க்கு, அவர்களாலே.

2. மாற்றி முற்றுந்.

3. இறவென, இன்மையே, செல்வம்.

4. பெறுதியோ நீ, பெறுதியே நீ. 128

1339. நீதியுந் தரும நின்ற நிலைமையும் புலமை தானும்
ஆதியங் கடவு ளாலே யருந்தவ மாற்றிப் பெற்றாய்
வேதியர் தேவன் சொல்லால் விளிவிலா வாயுப் பெற்றாய்
சாதியின் புன்மை யின்னுந் தவிர்ந்திலை போலுந் [தக்கோய்.

'தக்கோய் - தகுதி வாய்ந்தவனே! நீதியும் தருமம் நின்ற நிலைமையும் - நீதியும், அறமும் என்ற இவற்றிலே பொருந்தி நிற்கும் இயல்பினையும், புலமை தானும் - நல்லறிவையும், அருதவம் ஆற்றி - செய்தற்கருமையான தவத்தினைச் செய்து (அதன் பயனாக), ஆதி அம் கடவுளாலே - உலகின் முதற் கடவுளான பிரம தேவனாலே, பெற்றாய் - அடைந்தனை; (அல்லாமலும்), வேதியர் தேவன் சொல்லால் - அந்தணர் தலைவனான அந்த பிரமதேவனுடைய ஆசிச் சொல்லால், விளிவு இலா ஆயு பெற்றாய் - அழிவில்லாத வாழ்நாளினையும் உற்றாய்; (இவ்வாறாகவும்), சாதியின் புன்மை இன்னும் தவிர்ந்திலை போலும் - சாதியின் இழிந்த குணத்தினை இன்றும் விட்டிலை போலும்.

முதலிரண்டடிகட்கு ஒப்பு; யுத்த. 349, 358, 403; காண்க. அருந்தவம் ஆற்றியதும் அவன் பெற்ற வரமும்; 'திரிகால முணர் செய்தவத்தோர் திகைப்பவவை யாயிரத் தாண்டங், கொருகால் போல வொருகான்மண் ணூன்றி யொருகா லெடுத்துயர, எரிகாலி

ரவி மண்டிலமே நோக்கி யிருகை களுமெடுத்து, வருகா லக்கால் விடணனும் வருட மையா யிரங்கழித்தான்', 'நல்லா யறத்தைக் கைவிட்டு நடுங்கு மிடும்பை வரினுநான், பொல்லா தனசெய்யா தொழிக போரிற் பிரமா திகளென்னை, வெல்லா தொழிக விவ்வரங்கள் வேண்டு மென்ன விரிஞ்சனவை, எல்லாம் பெறுதி நீயென்று மிறவா திருத்தி யெனவுரைத்தான்' (யுத்த. இராவணன் பிறப்பு 25, 30) காண்க. அருந்தவம்: 'உற்ற நோய் நோன்றல் உயிர்க் குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு' (குறள். 261) என்றது காணக. போலும்: ஒப்பில் போலி.

பி - ம். 2. அருந்தவப் பயனும் பெற்றாய்.

3. வினிலா.

4. சாதியின் தருமம்; தன்மை. 129

1340. ஏற்றிய வில்லோ னியார்க்கு மிறையவ னிராம னின்றான்
மாற்றருந் தம்பி நின்றான் மற்றையோர் முற்று நின்றார்
கூற்றமு நின்ற தெம்மைக் கொல்லிய விதியு நின்ற
தோற்றவெம் பக்க லைய வெவ்வலி தொலைய வந்தாய்.

'எம்மைக் கொல்லிய - எங்களைக் கொல்லும் பொருட்டு, யார்க்கும் இறையவன் இராமன் - எல்லோர்க்கும் தலைவனான இராம பிரான், ஏற்றிய வில்லோன் - நாண் தொடுத்த வில்லினனாய், நின்றான் - நின்றுகொண்டுள்ளான்; மாறு அரு தம்பி - ஒப்பில்லாத அவன் தம்பி இலக்குவனும், நின்றான் - ஆயத்தமாக உள்ளான்; மற்றையோர் முற்று நின்றார் - ஏனையோராகிய வானரரும் நிறைந்து இருக்கின்றனர்; கூற்றமும் நின்றது - அவர்கட்கு உறுதுணையாய் யமனும் நின்றான்; விதியும் நின்ற - எல்லாவற்றிற்கும் மேலான ஊழும் காத்திருக்கின்றது; ஐய - ஐயனே! வெவ்வலி தொலைய - உன்னுடைய கடுமையான பராக்கிரமம் கெடுவதற்கே, தோற்ற எம் பக்கல் வந்தாய் - முறியடிக்கப் பெற்ற எம்மிடம் வந்தனை.

உனக்கு இறப்பில்லை: ஆயினும் தோல்வியுற்ற எம்மிடம் நீ போந்ததனால் உன் வீரியம் கெடும்படி யுள்ளது என்று தம்பியை நோக்கிக் கூறினன் கும்பகன்னன். பகைவரைக் கொல்ல எப்

பொழுதும் தயாராக உண்மையின் ஏற்றிய வில்லோன் என்று பெயரெச்சம் முன்னிறுத்தப் பெற்றது; (ஒப்பு): 'வில்லை யூன்றிய கையோடும்' (அயோத்தி. குகப். 42); மாற்றரும் என்பதற்கு விலக் கற்கரிய எனினுமாம். 'மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்' (தொல். புறத். 24) என்ற இடத்து மாற்றரும் என்பதற்குப் பிற ராற்றடுத்தற் கரிய கூற்றம் என உரை கூறப்பட்டமை காண்க. மாறு ஒப்பு என்று உரைக்கப்பட்டது; 'மாறிலா வள்ளி வாழ்க' (கந்தபு. வாழ்த்து.); அருமை, இன்மைமேற்று. மாற்றரும் என்ப தைக் கூற்றம், விதி என்ற இரண்டிற்கும் இயைத்துப் பொருள் கோடலுமாம். கூற்றமும் விதியும் என்ற விடங்களில் உம்மை இறந்தது தழீஇயன; உயர்வு சிறப்புமாம். கொல்லிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; தோற்ற; தெளிவு பற்றி எதிர்காலம் நிகழ்வில் வந்த காலவழுவமைதி.

பி - ம். 1. வில்லின், வில்லன்: இறைமகன்,
3. விதியும் நின்றான்.
4. ஏற்ற வெம்பக்கல்; வெவ்வழி, துணிந்து வந்தாய். 130

1341. ஐயநீ யயோத்தி வேந்தற் கடைக்கல மாகி யாங்கே
உய்கிலை யென்னின் மற்றிவ் வரக்கரா யுள்ளோ மெல்லா
எய்கணை மாரி யாலே யிறந்துபாழ் படுதும் பட்டாற்
கையினா லெண்ணீர் நல்கிக் கடன்கழிப் பாரைக் காட்டாய்.

'ஐய - ஐயனே! இ அரக்கராய் உள்ளோம் எல்லாம் - இந்த அரக்கராயுள்ள நாங்கள் எல்லோரும், எய் கணை மாரியாலே - (இராமபிரான்) விடுகின்ற அம்பு மழையினால், இறந்து பாழ்படுதும் - மரித்து வீணாக ஆவோம்; பட்டால் - அங்ஙனம் பாழ்பட்டால், நீ அயோத்தி வேந்தற்கு அடைக்கலம் ஆகி - நீ அயோத்தி மன்ன னுக்கு அடைக்கலப் பொருளாகி, ஆங்கே - அங்குத்தானே, உய்கிலை என்னின் - பிழைத்திராவிடின், கையினால் எண் நீர் நல்கி - (இறந்த எம்பொருட்டுக்) கையினால் எண்ணுடன் விரவிய நீரைக் கொடுத்து, கடன் கழிப்பாரை காட்டாய் - நீர்க்கடனைச்

செய்து முடிப்பார் யாவரிருக்கின்றனர் நீ காட்டுவாயாக. ஐய என்பது அன்பு பற்றிய வழுவமைதி. மற்று - வினைமாற்று.

பரதனுக்கு அரசினை அளித்துக் காடு போந்த நிலையினும் இராமபிரான் அயோத்தி வேந்தனாகவே இக்காப்பியத்தில் மட்டு மன்று, முதனூலிலும் கூறப்படுவது காணலாம் (ஒப்பு): 'கோசல நாடுடை வள்ளல்' (யுத்த. 1210): 'பாரி னாயகன்' (யுத்த. 348). படுதும் - தும் எதிர்காலம் காட்டும் விகுதி; 'தவ்வொ டிறபபு மெதிர்வும்' (நன்.) என்றது காண்க. எண் நீர்: திலோதகம். இறந்தார் பொருட்டும் பிதிரர் பொருட்டும் ஆற்றும் நீர்க் கடன். 'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாம்' (யுத்த. இராவணன் சோக. 39) என்று இராவணன் இறந்த தன் மகன் இந்திரசித் தினைப் பற்றிக் கூறுவது காண்க. (ஒப்பு): 'அரக்க ரென்பதோர் பெயர்படைத் தவர்க்கெலா மடுத்த, புரக்கு நன்கடன் செயவுளன் விடணன் போந்தான், கரக்கு நுந்தைக்கு நீசெயக் கடவன கடன் கள், இரக்கமுற்றுனக் கவன்செயு மென்றன னிளையோன்' (யுத்த. பிரமாத்திர. 67); படுதும் - தன்மைப் பன்மை எதிர்கால வினை முற்று. எய்கணை - வினைத்தொகை.

பா - ம். 2. மற்றிங்கு; உள்ளோர்.

3. பெய்கணை, மொய்கணை; முழுதும்.

4. கைகளால்; இறைநீர்; அள்ளி. 131

1342. வருவது மிலங்கை மூதூர்ப்
புலையெலா மாண்ட பின்னைத்
திருவுறை மார்ப னேடும்
புகுந்துபி னென்றுந் தீராப்
பொருவருஞ் செல்வந் துய்க்கப்
போதுதி விரைவி னென்றுன்
கருமமுண் டுரைப்ப தென்று
னுரையெனக் கழற லுற்றான்.

'இலங்கை மூதூர் வருவதும் - (நீ) பழமையான இலங்கை நகர்க்கு (மீண்டு) வரவேண்டிய காலமும் (இப்போது அன்று; பின் எப்போது என்றால்) புலை எலாம் மாண்ட பின்னை - இழிந்தோராகிய அரக்கர் குழுவெல்லாம் இறந்து ஒழிந்த பின்னர்; (அப்பொழுது)

திரு உறை மார்பனோடும் - இலக்குமி வாசஞ் செய்யும் மார்பினை யுடையவனான இராமபிரானுடன், புகுந்து - பிரவேசித்து, பின் என்றும் தீரா பொரு அரு செல்வம் துய்க்க - பின்னர்என்றும் முடிவடையாத ஒப்பற்ற செல்வத்தைத் துய்க்க; (ஆகும்), விரைவின் போதுதி - இப்போது விரைந்து செல்வாயாக;' என்றான் - என்று மொழிந்தான் கும்பகன்னன்; 'கருமம் உண்டு உரைப்பது- (அதுகேட்ட வீடணன் உன்பாற்) சொல்லவேண்டிய காரியம் உள்ளது' என்றான் - என்று பகர்ந்தான்; 'உரை - (கும்பகன்னன்) அந்தக் காரியம் யாது கூறுக' என - என்று கேட்க, கழறல் உற்றான் - வீடணன் கூறத் தொடங்கினான். துய்க்க - துய்ப்பாயாக எனினுமாம்.

புலை என்றது இழிவு பற்றி; பண்பாகு பெயராக இழிசினராகிய அரக்கரைச் சுட்டியது.

பா - ம். 1. வருவதுன்; இலங்கையூர்க்குப், யூர்க்கிப்.

3. புகுந்தனை, புகுந்துபின்; விரைந்தவன் போதி, விரைந்தனை போதி.

4. உரைப்ப வென்று, கழறுகின்றான். 132

வீடணன் இராமபிரானை யடையுமாறு கும்பகன்னனுக்குப் பல காரணங்காட்டிக் கூறுதல்

1343. இருளுறு சிந்தை யேற்கு மின்னருள் சுரந்த வீரன்
அருளுநீ சேரி னொன்றோ அவயமு மளிக்கு மன்றி
மருளுறு பிறவி நோய்க்கு மருந்துமாம் மாறிச் செல்லும்
உருளுறு சகட வாழ்க்கை யொழித்துவீ டளிக்கு மன்றே.

'இருள் உறு சிந்தை யேற்கும் - அஞ்ஞானம் பொருந்திய உள்ளத்தை உடையேனான என்மாட்டும், இன் அருள் சுரந்த வீரன் - இனிய அருளைப் பொழிந்த வீரனான இராமபிரான், நீ சேரின் அருளும் - நீ புகலடைய வந்தாலும் (உன்மாட்டும்) அருள் வழங்குவான்; ஒன்றோ- இஃது ஒன்று தானோ? அவயமும் அளிக்கும்- உனக்கு அபயப்பிரதானமும் செய்வான்; அன்றி - அல்லாமலும், மருள் உறு பிறவி நோய்க்கும் மருந்தும் ஆம்- அவித்தை நிறைந்த

பிறவிப் பிணிக்கும் மருந்தும் ஆவான்; மாறி செல்லும் உருள் உறு சகடம் வாழ்க்கை ஒழித்து - உருளுதல்போன்ற வண்டியின் கண் உள்ள சக்கரத்தை ஒத்து (இன்பத் துன்பங்கள்) மாறி மாறி வருதலையுடைய பூவுலக வாழ்வினை அகற்றி, வீடு அளிக்கும் - மோட்ச இன்பத்தையும் தந்தருள்வான்; அன்றே - அசை.

'இருள் சேர் இருவினை; (குறள். 5) என்ற இடத்து 'இருள் மயக்கம்'. இன்ன தன்மைத்தெனை ஒருவராலும் கூறப்படாமையின் அவிச்சை இருள்' என்று, பரிமேலழகர் உரைத்தது காண்க. 'அன்றே யுள்ள வவித்தையெனல் அஞ்ஞானம் (குசேலோ. வைகுந்த. 115) என்றது காண்க. சிந்தையேற்கும்: உம்மை இழிவு சிறப்பு. இன்னருள் சுரந்தமை; யுத்த. 429, 430, 433, 440 கொண்டு காண்க. நீ சேரின் அவயமும் அளிக்கும். ஒருவேளை இராமபிரானைச் சேர்ந்தால் இராவணன் ஒறுப்பானோ என்ற சங்கை நீங்க 'அவயமு மளிக்கும்' என்றான். அருளும்; அளிக்கும். செய்யுமென் முற்றுக் கள் ஆண்பாற்கு வந்தன. 'இதிவா இராவணஸ்வயம்' என்பது முதனூல் வாக்கியம். இராவணனுக்கும் அபயம் அளிக்க ஆயத்த மாக இருப்பவன் ஆதலின், நிரபராதியான கும்பகன்னனுக்கு அருள் செய்தல் உறுதி என்பது கூறப்பட்டது; யுத்த. 412, 430; உரைக் குறிப்புக் காண்க. மருளுறு பிறவி நோய்க்கும் மருந்து; இம்மைச் செல்வம் புகழ் மட்டும் அன்றி பிறவியின்மையும் செய்யும் எனப் பட்டது. (ஒப்பு): 'மால்தரும் பிறவி நோய்க்கு மருந்தென' (கிட்கிந்தா. 376). அவிச்சை காரணமாகவே பிறவி நிகழும். 'தானல் லுடலை யான் என்றும் தன்னோடுரிமை யல்லாமை, யீன முறுபல் பொருளனைத்தும் என்னதென்று முள நினைந்து, மான வயர் பற்றினுக்கேது மயக்கம்'; இம்மயக்கத்தால் நிகழ்வது நல்வினை தீவினைகள்; இவையே மாறி மாறி நிகழும் பிறப்பிற்குக் காரணம் என்ப. நல்வினையும் பிறப்புக் காரணம் ஆதலின் அதனையும் உடன் கூட்டிக் கூறப்பெற்றது. அவித்தை காரணமாக அகங் கார மமகாரங்களும், அவாவும், ஆசையும், சினமும் நிகழும். இவை யனைத்தும் இல்லா தொழியவே ஒருவன் வீடுபேறெய்துவன் என்ப. திருக்குறள், நிலையாமை, மெய்யுணர்தல், அவாவறுத்தல் முதலிய அதிகாரங்களையும் அவற்றின் உரைப்பகுதிகளையும் கண்டு தெளிக. மேலும் கீழுமாகச் சுற்றி வருதலின் சகடம் உவமை

யாக்கப்பட்டது. 'செல்வம் சகடக்கால் போல வரும்' (நாலடி. 2) என்றது காண்க. உருள் உறு சகடம்; (ஒப்பு): 'உருளுடைச் சகடம் பூண்ட' (அயோத்தி. கைகேசி. 109); உருளுறு என்பதன்கண் உள்ள உறு என்பதை உவம வாசகம் ஆக்குவர் ஒரு சாரார்.

பி-ம். 1. சிந்தையோர்க்கும்; சுரக்குமண்ணல், புரிந்த மன்னன், செல்வன்.
2. அருளினை; அன்றே.
3. மருந்துமாய்.
4. வாழ்க்கை; நீக்கி. 133

1344. எனக்கவன் தந்த செல்வத் திலங்கையு மரசு மெல்லாம்
நினக்குநான் தருவன் தந்துன் னேவலி னெடிதி னிற்பன்
உனக்கிதி னுறுதி யில்லை யுத்தம வுன்பின் வந்தேன்
மனக்குநோய் துடைத்து வந்த மரபையும் விளக்கு வாழி.

(மற்றும்) 'உத்தம - சிரேட்டனே! எனக்கு அவன் தந்த செல்வத்து இலங்கையும் அரசும் எல்லாம் - எனக்கு அந்த இராமபிரான் அளித்த செல்வத்தைக் கொண்டுள்ள இலங்காபுரியையும் அதன் ஆட்சியாகிய எல்லாவற்றையும், நான் நினக்கு தருவன் - உனக்கு நான் கொடுப்பேன்; தந்து - கொடுப்பதுமன்றி, உன் ஏவலின் நெடிதின் நிற்பன் - உன் கட்டளைப்படியே நீண்டகாலம் நின்று ஒழுகுவேன்; உனக்கு இதின் உறுதி இல்லை - உனக்கு இதனைப் பார்க்கிலும் நன்மை பயப்பது பிறிதொன்றில்லை; உன்பின் வந்தேன் - உனக்குப்பின் பிறந்தவனாகிய என்னுடைய, மனக்கு நோய் துடைத்து - உள்ளத்தின் கண் உள்ள பிணியினைப் போக்கி, வந்த மரபையும் விளக்கு - நாம் இருவரும் உதித்த கால்வழியினையும் விளங்குமாறு செய்க; வாழி - வாழ்வாயாக.

கீழ்க் கவியில் இராமபிரான் அருளையும் வீடு பேற்றையும் அடைதல் கூடும் என்ற வீடணன், இக்கவியில் இம்மைச் செல்வமும் அரசியலும் பெறுதல் கூடும்; ஆதலின் புரியத்தக்க உறுதி பயக்கும் காரியம் வேறு இன்று என்றான். மனக்கு நோய்- அநியாயமாக இராவணன் பக்கமிருந்து வீணாக அழியப் போகின்றானே

அண்ணன் என்ற மனேவியாதி. மனக்கு - மனத்துக்கு என்பதன் விகாரம். வந்த மரபு - புலத்திய மரபு; உத்தர காண்டம் இராவணன் பிறப்புப் படலம் காண்க. வாழி அசையுமாம்.

பி - ம். 2. நினக்கு நான் தந்துமற்று; ஏவலின் எளிநினிற்பன்.

3. உனக்கநின் ஆவதில்லே.

4. மனத்து நோய், மனத்துயர்; துடைத்து மாற்றி; நந்தம்; வளர்த்து, விளக்கி; வாழ்நி மாதோ. 134

1345. போதலோ வரிது போனற் புகலிட மில்லே வல்லே
சாதலோ சரதம் நீதி யறத்தொடுந் தழுவி நின்ருய்
ஆதலா லுளதா மாவி யனுயமே யுகுத்தென் ஐய
வேதநூன் மரபுக் கேற்ற வொழுக்கமே பிடிக்க வேண்டும்.

'அறத்தொடும் நீதி தழுவி நின்ருய் - தருமத்துடன் நீதியையும் அநுசரித்து நின்றவனே! போதலோ அரிது - (இராமபிரானைப் புகலடையாவிடின்) பிழைத்துப் போதல் அருமை; போனல் - தப்பிப் போனலும், புகலிடம் இல்லே - சரண் புகக்கூடிய இடமும் இடையாது; வல்லே சாதலோ சரதம் - சீக்கிரம் இறந்துபடுதல் நிச்சயம்; ஆதலால் - ஆதலின், உளது ஆம் ஆவி - உள்ளதான உனது உயிரை, அனுயமே உகுத்து என் - வீணுக விடுத்து என்ன பயன்? ஐய - ஐயனே! வேதம் நூல் மரபுக்கு ஏற்ற ஒழுக்கமே பிடிக்க வேண்டும் - மறைகளிற் கூறப்பெற்ற தக்க நல்லொழுக்கத்தையே (உறுதியாகக்) கடைப்பிடிக்க வேண்டும்.

புகலிடம் இராமபிரானன்றிப் பிறிதில்லே. சுந்தரகாண்டத்துப் பிராட்டி கூறிய காகாசுர வரலாற்றில், 'எந்தை நின் சரணன்றியோர் தஞ்சமு மின்ருல், வந்த வன்சரண் விழ்கென வுற்றதும் வைப்பாய்' (சுந்த. 683) காண்க. 'புகல் புகுந்திலரேற் புறத்தண்டத்தின், அகல்வ ரேனுமெ னம்பொடும் வீழ்வரால்' (ஆரணிய. 134); சரதம் - உறுதி; 'அன்னர் குறைவது சரதம் கோவே' (சுந்த. 462). 'சரதமற்றிலதென' (அயோத்தி. கிளேகண்டு. 27); நீதியும் அறத்தின்கண் அடங்குமேனும்; இது நல்லது இது தீது என்று அறுத்துவரையரை செய்யப்பட்டது அறம்; அதனை மேற்கொண்டு தகுதி என்ற நடுநிலேமையைத் தழுவி ஒழுகுவது நீதி என்க. உயிர்க்கு என்றும் அழிவின்ருகலின் உளதாம் ஆவி

எனப்பட்டது; தாற்காலிகமாக உடலாகிய கூட்டின்கண் உள்ள தான ஆவி எனினுமாம். அநயம் என்பது அநியாயம் என்ற வட சொல்லின் சிதைவு. 'பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப் பென்னும், செம்பொருள் காண்ப தறிவு' (குறள். 358) என்று ராகலின் இங்ஙனம் கூறினான் வீடணன் என்க. வேத நூல்மரபிற் கேற்ற ஒழுக்கமாவது 'சார்புணர்ந்து சார்பு கெட வொழுகல்' திருக்குறள் 359ம் அதன் உரையும் காண்க. மெய்யுணர்தல் என்ற அதிகாரம் முழுவதுமே காண்டல் தகும். 'நன்றாய் ஞானம் கடந்துபோய்' (திருவாய். 8·8:6) எனத் தொடங்கும் ஸ்ரீநம்மாழ் வார் பாசுரத்தின் கருத்தும் இங்கு உணரத்தக்கது.

பி-ம். 1. போதலே; வல்லை.

2. சாதலே.

3. உனதாம் ஆவி; அறுதமே; உருப்பதென்னே.

4. பிடித்தல். 135

1346. தீயவை செய்வ ராகிற் சிறந்தவர் பிறந்த வுற்றார்
தாயவை தந்தை மாரென் றுணர்வரோ தருமம் பார்ப்பார்
நீயவை யறிதி யன்றே நினக்குநா னுரைப்ப தென்னோ
தூயவை துணிந்த போது பழிவந்து தொடர்வ துண்டோ.

'தருமம் பார்ப்பார் - தருமத்தையே பிரதானமாகக் காண்பவர் கள், தீயவை செய்வர் ஆகில்-(ஒருவர்) கெட்ட காரியம் புரிவராயின்' சிறந்தவர் - (இவர்) அன்பு பூண்டு ஒழுகுவதில் சிறந்தவரான, பிறந்த உற்றார் - உடன் தோன்றிய உறவு நிலையில் உள்ளவர்; அவை தாய் - ஔவை எனப்படும் தாய், தந்தைமார் என்று - தந்தையர் என்று, உணர்வரோ - அறிந்து பாராட்டுவார்களோ? நீ அவை அறிதி அன்றே - நீ அச்செய்திகளைத் தெரிந்துள்ளனை அல்லவோ? நினக்கு நான் உரைப்பது என்னோ-(தெரிந்த) உனக்கு நான் சொல்ல வேண்டியது யாதுளது? தூயவை துணிந்தபோது பழி வந்து தொடர்வது உண்டோ - பரிசுத்தமான காரியங்களைச் செய்யத் துணிந்தபோது பழி வந்து பற்றுவதுண்டோ? (இல்லை) என்றபடி. ஓகாரம் எதிர்மறை.

தகுதியைப் பின்பற்றுபவர் சொந்த உடன்பிறந்தவரேனும், பெற்றோர்களேனும் தீயகாரியம் புரிவரேல் அவர்களை ஆதரியாமல்

கைவிடுவர்; இதுவே அறம். ஆதலின் இராமபிரானைச் சரணம் அடைய நீ துணிந்துவிடின் அதனால் உனக்குப் புகழே யன்றி, உடன்பிறந்தோனைத் துறந்ததாகிய பழி நிகழாது என்றான் விடணன். இரண்டாம் அடியின்கண் உள்ள அவை என்பது அவ்வை என்பதன் குறுக்கம்.

பா - ம். 2. தாயவர் தந்தையார்.

3. உரைப்ப தென்னே, என்னை. 136

1347. மக்களைக் குரவர் தம்மை மாதரை மற்று ளோரை
ஒக்குமின் னுயிரன் னாரை யுதவிசெய் தாரோ டொன்றத்
துக்கமித் தொடர்ச்சி யென்று துறப்பராற் றுணிவு [பூண்டோர்
மிக்கது நலனே யாக வீடுபே றளிக்கு மன்றே.

'இ தொடர்ச்சி துக்கம் என்று துணிவு பூண்டோர் - இந்த மனைமக்கட் பாசம் துன்பத்தையே விளைக்கும் என்று உறுதியான நினைவினை மேற்கொண்டவர், மக்களை குரவர் தம்மை மாதரை மற்றுளோரை - மக்களையும் இருமுதுகுரவராய தாய் தந்தையரையும், மனைவிமாரையும், மற்றும் உள்ள உறவினரையும், ஒக்கும் இன் உயிர் அன்னாரை - (தமது) இனிய உயிர் போன்ற நண்பரையும், உதவி செய்தாரோடு ஒன்ற - உபகாரம் செய்தவர்களையும் உள்பட, துறப்பர் - துறந்தே நிற்பர்; மிக்கது - மேம்பட்ட அந்தத் துறவானது, நலனே ஆக - நன்மை பயப்பதாக ஆகி, வீடுபேறு அளிக்கும் அன்றே - மோட்சமாகிய உறுதிப்பொருளையும் உதவும் அல்லவோ? ஆல் - அசை.

குரவர் - ஐம்பெரும் குரவருள், இருவரான தாய் தந்தையர்; ஐம்பெருங் குரவராவார்; 'அரசன் உவாத்தியான் தாய் தந்தை தம்முன்' (ஆசாரக். 16); இங்கு மாதர் என்றது மனைவிமாரை. உதவி செய்தவர் கடையில் வைக்கப்பட்டாரேனும், அவர்கள் முற்கூறப்பட்ட எல்லோரினும் சிறந்தவர் என்க துக்கமித் தொடர்ச்சி; 'பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம், பிறவா ருறுவது பெரும்

பேரின்பம், பற்றின் வருவது முன்னது பின்ன, தற்றே றுறுவ தறிக' (மணி. 2 : 64-67) என்றது காண்க. மிக்கது நலனே ஆக என்பதற்குத் துறக்கப்படாமல் எஞ்சியுள்ளது தருமமே யாதலின் என்று கூறுவர் ஒரு சாரார்.

பி - ம். 1. குருக்கள் தம்மை.

2. உதவி செய்தாரை.

3. துறவு பூண்டோர்.

4. நன்றேயாக, நலமே ஆகி; வேறளிக்குமன்றே. 137

1348. தீவினை யொருவன் செய்ய அவனொடுந் தீங்கி லாதோர்
வீவினை யுறுத லைய மேன்மையோ கீழ்மை தானோ
ஆய்வினை யுடைமை யன்றே யறத்தினை நோக்கி யீன்ற
தாய்வினை செய்ய வன்றோ கொன்றனன் தவத்தின்
[மிக்கான்.

'ஐய - ஐயனே! ஒருவன் தீவினை செய்ய - ஒருவன் (தான் இறத்தற்குக் காரணமான) கெட்ட காரியத்தைப் புரிய அவனொடும் - அவனுடனே, தீங்கு இலாதோர் - தீமை புரியாதவர் களும், வீவினை உறுதல் - அழிவினை எய்துதல், மேன்மையோ - மேம்பட்ட காரியமோ? கீழ்மைதானோ - அல்லது தாழ்மையைச் செய்யுமோ? (தகாத காரியங்களைச் செய்பவற்காக உயிர் துறப்பது கீழ்மையையே விளைக்கும் ஆதலின் அது புரியத்தக்கது அன்று); ஆய்வினை உடைமை அன்றே - நீ ஆராய்ந்து செய்யும் ஆற்றலை உடையவன் அன்றோ? ஈன்றதாய் வினை செய்ய அன்றோ - பெற் றெடுத்த அன்னை தீத்தொழிலைப் புரிந்ததன் காரணமாக அன்றோ, தவத்தின் மிக்கான் - தவத்திற் சிறந்தவனான பரசுராமன், அறத் தினை நோக்கி கொன்றனன் - தருமத்தை உணர்ந்து (அன்னையைக்) கொலை செய்தான். ஓகாரம் - வினா.

தாய் வினைசெய்ய: (வரலாறு): சமதக்கினியாரின் மனைவி ரேணுகா என்பவள் மணலையே குடமாகத் திரட்டி நீர் கொண்டு வருவது வழக்கம். ஒரு நாள் நீராடும்போது, சித்திரதன் என்ற கந்தருவனுடைய நிழல் நீரில் தோன்ற, அதனைக் கண்டு பிரமித் தாள்; பின்னர் நீர் சேந்தும்போது மணல் குடமாகப் பிடிபட

வில்லை. முனிவன் அவளுடைய மனநிகழ்ச்சியை ஞான திருஷ்டியால் உணர்ந்து தன் புதல்வர் நால்வரையும் முறையே அழைத்துக் கற்பினின்றும் வழுவிய அவர்களின் தாயினைக் கொல்லுமாறு பணித்தான். அவர்களில் மூவர் மறுத்தனர். நாலாமவனான பரசுராமன் தந்தை சொல்லைக் கடைப்பிடித்துத் தாயினைக் கொன்றான் என்பது.

பா - ம். 2. கேழ்மை போதரன்
4. தாய்வினை செய்யவன்றே ; கொன்றது, கொன்றதோர். 138

1349. கண்ணுதல் தீமை செய்யக்
கமலத்து முளைத்த தாதை
அண்ணல்தன் தலையி னொன்றை
யறுக்கவென் றமைந்தா னன்றே
புண்ணுறு புலவு வேலோய்
பழியொடும் பொருந்திப் பின்னை
எண்ணுரு நரகின் வீழ்வது
அறிஞரு மியற்று வாரோ.

'கண்ணுதல் தீமை செய்ய - நெற்றிக் கண்ணனான சிவபெருமான் (தனக்கு) ஒரு தீங்கிழைக்க, கமலத்து முளைத்த தாதை - திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றியவனான மூதாதையும், அண்ணல் தன் - பெருமைமிக்கவனுமான பிரமனுடைய தலையின் ஒன்றை - ஐந்து சிரங்களில் ஒன்றை, அறுக்க என்று அமைந்தான் அன்றே - அறுப்பதற்கு இணங்கினான் அல்லவோ? (அல்லாமலும்) புண் புலவு உறு வேலோய் - புண்ணினால் புலவு நாற்றம் வீசுகின்ற வேற்படையை யுடையவனே! பழியொடும் பொருந்தி - வசையுடன் கூடி, பின்னை - பின்னும், எண்ணுரு நரகின் - நினைத்தற்கும் ஒண்ணாத நரகத்தினிடை, வீழ்வது - படிவதற்குக் காரணமான செயலை, அறிஞரும் இயற்றுவாரோ - அறிஞரும் புரிவார்களோ? ஓ - வினா ; எதிர்மறைப் பொருளது : இயற்றமாட்டார் என்க.

முன் செய்யுளில் தாயினையும் பரசுராமன் கொலைபுரிந்ததைக் காட்டி, இச்செய்யுட்கண் தந்தையைச் சிரமறுத்ததைக் குறிப்பதாக உரை வரைவர். இது சிவபிரானுக்குத் தந்தை பிரமன் என்ற

கொள்கையைப்பற்றி எழுந்தது. இதற்கு 'நாரணன் நான்முகனை ஈன்றான், நான்முகன் தான்முகமாகி அரனுரை யீன்றான் என்ற திவ்வியப்பிரபந்தப் பாசுரத்தைக் காட்டுவர்'. சிவபிரான்போன்றே தனக்கும் முகம் ஐந்து என்று அயன் தருக்கிய நிலையில், அவன் தலையைச் சிவன் அரிந்ததாக வரலாறுஉண்டு. இவ் வீரச்செயல் திருக்கண்டியூர் என்ற சிவத்தலத்தில் நிகழ்ந்தது என்பதை, 'பூமன் சிரங்கண்டி' என்ற செய்யுளிற் காண்க. கண்ணுதல்: முன்பின்னுகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை என்பர். கமலத்து முளைத்த தாதை : திருமாலின் நாபிக்கமலத்துத் தோன்றிய பிரமன். தாதையாகிய அண்ணல் என இரு பெய ரொட்டு. புலவுவேலோய்; 'இகல் கடந்த புலவு வேலோய்' (பால. கையடைப். 7).

பி - ம். 1. செய்த ; கமலத்தின், கமலத்துள் ; முளைத்தகாதல், காவல்.

2. அறுத்தினிது, அறுத்து வேறு இட்டான்.

3. பொருந்திப் பின்னர்.

4. எண்ணுறு நரகம் ; எய்தல், எய்த, விழ. 139

1350. உடலிடைத் தோன்றிற் றொன்றை
யறுத்தத னுதிர மூற்றிச்
சுடலுறச் சுட்டு வேறோர்
மருந்தினாற் றுயரந் தீர்வர்
கடலிடைக் கோட்டந் தேய்த்துக்
கழிவது கருமமன்றால்
மடலுடை யலங்கன் மார்ப
மதியுடை யவர்க்கு மன்னே.

'மடல் உடை அலங்கன மார்ப-இதழ்களுடன் இயைந்த மலர் மாலை தரித்த மார்பனே! உடல் இடை தோன்றிற்று ஒன்றை - உடற்கண்ணே முளைத்த ஒரு கட்டிப் புண்ணை. (அதன் விட நீர் உடலில் பரவாத வண்ணம்), அறுத்து - அறுத்து, அதன் உதிரம் ஊற்றி - அதன்கணுள்ள (தூய்மையற்ற) இரத்தத்தை வெளி யேற்றி, சுடல் உற சுட்டு - காரம் பொருந்தவைத்துச் சுட்டு, வேறு ஓர் மருந்தினால் -(புண்ணை ஆற்றுதற்குரிய) பிறிதோர் மருந்தினால், துயரம் தீர்வர், (புண்ணினால் உற்ற) துன்பம் நீங்கப் பெறுவர் (உலகத்தில் உள்ளார்) ; மதி உடையவர்க்கு - அறிவுடையோர்க்கு,

கோட்டம் கடலிடை தேய்த்து கழிவது கருமம் அன்று - (நறுமண மிக்க) கோட்டத்தைக் கடலிலே தேய்த்துக் கழியுமாறுவிடுவது, ஆற்றத்தக்க செயலாகாது. ஆல், மன், ஓ - அசைகள்.

தனது உடலிலேயே தோன்றிய கட்டியாயினும் அதனை அறுத்து அசுத்தமான உதிரத்தை வெளியேற்றிக் காரமிட்டு ஒழித்தபிறகு அந்தப்புண்ணினைக் காயுமாறு செய்வதுபோன்று, தீச்செயல் செய்த இராவணனை உடன் பிறந்தவன் என்று விலக்கி, அவனை ஒழித்தல் புரியத்தக்கதன்றி, புலால் மணம் கமழும் கடலினிடத்து, நறுமணமுள்ள கோட்டத்தைத்தேய்ப்பது வீண்செயல் ஆவதுபோன்று, பாவம் புரிந்தவனான இராவண னுடைய பக்கத்திலிருந்து புண்ணியவானான நீ, அழியப் பார்ப்பது வீண்செயல் ஆகும் என்று கூறினன் வீடணன். இச் செய்யுள் பிறிது மொழிதலணி. அறுத்துச் சுடுதல் சில கொடிய நோய் கட்குத் தீர்வாதல், 'வாளால் அறுத்துச் சுடினும்' (பெருமாள். 5 : 4) என்ற பாசுரம் கொண்டுணர்க. அறுத்துச் சுடுதல்: (ஒப்பு): 'மண்ணுளே சில வியாதி மருத்துவ னருத்தி யோடும், திண்ணமா யறுத்துக் கீறித் தீர்த்திடும்' (சிவ. சித்தி. சுபக். 2 : 35). கடலிடைக் கோட்டம் தேய்த்துக் கழிவது; (பெருங்கடற் கோட்டந் தேய்வை யாயதென் னடிமைப் பெற்றி' (யுத். மாயாசீதைப். 52).

பா-ம். 1. உடன் குடைந்து ; உதிர முற்றி

2. சுடர்வுற ; மருந்தினில்

4. மதியுடையோர்க்கும். 140

1351 காக்கலா நும்முன் தன்னை யெனினது கண்ட தில்லை
ஆக்கலாம் மறத்தை வேறே யென்னினு மாவ தில்லை
தீக்கலாங் கொண்டு தேவர் சிரிக்கலாஞ் செருவி லாவி
போக்கலாம் புகலாம் பின்னை நரகன்றிப் பொருந்திற்
[றுண்டோ.

நும்முன் தன்னை காக்கலாம் எனின் - உம்முடைய தமையனை காக்கலாம் என்றால், அது கண்டது இல்லை - அதற்கு ஒரு வழியும் காணப்படவில்லை; (அன்றி அவனுடைய) மறத்தை - பாவச் செய்கையை, வேறே ஆக்கலாம் என்னினும் - வேறாக மாற்றலாம் (ஒழிக்க வழி செய்வோம்) என்றாலும், ஆவது இல்லை - (அதுவும்)

இயல்வதன்று; தி கலாம் கொண்ட தேவர் சிரிக்கலாம் செருவில் - கெட்ட கலகத்தை மனத்திற் கொண்டு தேவர்கள் நகைத்தற்குரிய போரிலே, ஆவி போக்கலாம் - நீயும் உன் உயிரை விடலாம்; பின்னை - பின்பு, நரகு புகலாம் - நரகத்துப் புகுதல் ஆகும்; அன்றி பொருந்திற்று உண்டோ - இவையன்றிப் பொருந்திய செயல் பிறிது உள்ளதோ? ஒகாரம் எதிர்மறை.

ஆக்கலாம் மறத்தை எனப் பிரிக்க. திக்கெலாம் என்று கொண்டு திக்கு என்பது நீண்டது என்பர் ஒருசாரார்.

பி - ம். 1. என்னினும்; ஆவதில்லை.

2. எனினு மாங்கு.

3. தீர்க்கலாம், திக்கெலாம்; கொண்ட; செருமுன்.

4. பின்னை நின்ற, போனபின்னை, புகலாம் பின்னர்; புகுவதுண்டோ.

1352. மறங்கிளர் செருவில் வென்று
வாழ்ந்திலை மண்ணின் மேலா
யிறங்கினை யின்று காறு
மிளமையும் வறிதே யேக
உறங்கினை யென்ப தல்லா
லுற்றதொன் றுளதோ என்னீ
அறங்கெட வுயிரை நீத்து
மேற்கோள்வா னமைந்த தையா.

'ஐயா - ஐயனே! மறம் கிளர் செருவில் - வீரம் விளங்குகின்ற போரில், வென்று மண்ணின் மேலாய் வாழ்ந்திலை - (பகைவரை) வெற்றி கொண்டு பூமியில் மேன்மையுடன் வாழ்ந்தாயில்லை; இறங்கினை - தாழ்வினையெய்தி, இன்றுகாறும் - இந்நாள் வரையில், இளமையும் வறிதே ஏக - இளம்பருவமும் வீணே கழிய, உறங்கினை என்பது அல்லால் - தூங்கினை என்பதல்லது, உற்றது ஒன்று உளதோ - நீ அடைந்த பயன் யாதேனும் உண்டோ? நீ - நீ, அறம் கெட - தருமம் குலைய, உயிரை நீத்து - (கொடியவனான இராவணற்காக) உயிரை விடுத்து, மேற்கொள்வான் அமைந்தது

என் - மேலே அடையக் கூடியதாகப் பொருந்தியது என் உள்ளது? (நரகமே யன்றோ)?

வென்று - இறந்தகால வினையெச்சம்: 'நீ போர் வாழ்க்கையையும் மேற்கொள்ளவில்லை; இளமைப் பருவத்துத் துய்க்கும் இன்பமும் துய்த்தாயில்லை; காலம் எல்லாம் உறங்கினை; மற்றும் அறத்துக்கு விரோதமாக அக்கிரமமே புரியும் அண்ணனுக்காக உயிரை விடவும் துணிந்தாய், 'நீ அடையக் கூடியது நரகம் அன்றி வேறு யாது?' என்றான் வீடணன். இளமையும் வறிதே ஏக; (ஒப்பு): 'இளமையும் பயனின்றேக' (ஆரணிய. 267). இப்படி வீணிலே காலங் கழித்த நாம் இருப்பானேன் என்றெண்ணிக் கொண்டோ சமரிலே பட்டுப் போக வந்தாய்' என்பது பழையவுரை. அல்லால்: எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம்,

பி - ம். 1. மறங்கிளர் உலகை வென்று.

2 இன்னு நாளை; வறிது; போக, செல்ல.

3. உற்றதோன்றுளதே, உளவோ; எண்ணி; என்ன, என்னை. 142

1353. திருமறு மார்பன் நல்க அனந்தருந் தீர்ந்து செல்வப்
பெருமையு மெய்தி வாழ்தி ஈறிலா நாளும் பெற்றாய்
ஒருமையே யரசு செய்வா யுரிமையு முனதே ஒன்றும்
அருமையு மிவற்றி னில்லை காலமு மடுத்த தையா.

'ஐயா - ஐயனே! திரு - திருமாலையும், மறு - ஸ்ரீவத்ஸம் என்னும் மச்சத்தையும் (உடைய), மார்பன் - மார்பினனான, திருமாலின் அவதாரமான இராமபிரான், நல்க - அருள் வழங்க, அனந்தரும் தீர்ந்து - உனக்கு இயற்கையாயமைந்த உறக்கத்தையும் விடுத்து, செல்வம் பெருமையும் எய்தி - செல்வத்தினால் உறும் பெருமையினையும் பெற்று, ஈறு இலா நாளும் பெற்றாய் வாழ்தி - முடிவில்லாத வாழ்நாளும் பெற்றவனாய் வாழ்வாய்; ஒருமையே அரசு செய்வாய் - தனித்து அரசாட்சியும் புரிகுவை; உரிமையும் உனதே - சகல உரிமையும் உன்னதே; இவற்றின் ஒன்றும் அருமையும் இல்லை - இவற்றில் செய்வதற்கு அருமையானது எதுவும் இல்லை: காலமும் அடுத்தது - அவ்வாறு புரிதற்குரிய காலமும் நெருங்கியுள்ளது.

திருமறுமார்பன் : 'திருமறு மார்ப னேவல் சென்னியிற் சேர்த்தி'. அனந்தர் - நித்திரை. 'மோகவனந்தர் முயல்வோர்க்கு' (ஞானு. 62, 23) ; உறக்கம இவனது இயற்கை என்பது இவன் கொண்ட வரத்தான் உற்றது என்பதை, உத்தர காண்டம் இராவணன் பிறப்புப் படலம், 35, 34 செய்யுட்கள் கொண்டறிக. இராமபிரானைப் புகலடைந்தால் செல்வம் முதலியன அனைத்தும் இட்டுவது உறுதியாகலின் பெற்றாய் என்றான் ; தெளிவு பற்றி எதிர்காலம் இறந்த காலமாக வந்த வழுவமைதி.

பி - ம். 1. அனந்தலும் ; நீரும் ; வானகர் திருத்தும் செல்வ.

2. எய்தி வாழி.

3. உரிமையே, உரிமையோ ; உளதே, உரிமையும் உனக்கேயென்னில்.

4. அருமையே ; இதனில். 143

1354. தேவர்க்குந் தேவன் நல்க விலங்கையிற் செல்வம் பெற்றால்
யாவர்க்குஞ் சிறியை யல்லை யாருனை நலியு மீட்டார்
மூவர்க்கு முதல்வ ரான மூர்த்தியா றத்தை முற்றுங்
காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடங் காட்டி.

'மூவர்க்கும் முதல்வர் ஆன மூர்த்தியார் - அயன் அரி அரன் என்ற மூன்று மூர்த்திகட்கும் தலைவரான மூர்த்தியும், திருமாலின் அம்சமுமான இராமபிரானே, அறத்தை முற்றும் காவற்கு - தருமத்தை முழுவதும் காத்தற்பொருட்டு, காகுத்த வேடங்காட்டி புகுந்து நின்றார் - காகுத்தன் வடிவமாக அவதாரம் செய்துள்ளார். (அத்தகைய), தேவர்க்கும் தேவன் - தேவதேவனான இராமபிரானே நல்க-அருள் வழங்க, இலங்கையின் செல்வம் பெற்றால் - இலங்கைச் செல்வத்தை நீ பெறுவாயானால், யாவர்க்கும் சிறியை அல்லை - நீ எவர்க்கும் தாழ்ந்தவனாகமாட்டாய், உனை நலியும் ஈட்டார் யார் - உன்னை துன்புறுத்தக்கூடிய வன்மை வாய்ந்தார் எவர் ?

இராமபிரானைத் திருமாலாகவே கூறுவது ஆசிரியர் வழக்கு அதுபற்றித் தேவர்க்கும் தேவன் எனப்பட்டது. 'திருமகள் தலைவன்', நெடியோன் ; (ஆரணிய. 31, 111, 159, 164, 271, 519, 774, 781) முதலியன காண்க. 'ஆழித்துயில் கடந்தயோத்தி வந்தான்' (யுத்த. 926) ; முன்னர் இராமபிரானைப் புகலடைந்தால்

இலங்கையரசினை மட்டும் அன்று, வீட்டின்பமும் பெறலாம் என்று கூறியதற்கேற்பச் 'செல்வம் பெற்றால்' என்றான். ஈடு-வலிமை 'அரக்கனு மீடழிந்தான்' (ஆரணிய. 707 ; சுந்தர. 588, 675) காண்க. மூவர்க்கும் தலைவர் ஆன மூர்த்தி, சுந்தர. 197 (ஒப்பு.) 'ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி வந்தான்' (சுந்தர. 1122). காகுத்தன்: ககுத்த மரபில் வந்தவன்; தத்திதாந்த நாமம் (ஆரணிய. 452, 873); 'கண்டுவருமென் றிருக்கும் காகுத்தன்' (சுந்தர. 322).

பா - ம். 1. பெற்றாய்.
2. எவர்க்கும்.
3. முதலேயான, மூலமான.
4. காவற்கும்; பிறந்து; வந்து; நின்றான். 144

1355. உன்மக்க ளாகி யுள்ளா ருன்னொடு மொருங்கு தோன்றும்
என்மக்க ளாகி யுள்ளா ரிக்குடிக் கிறுதி சூழ்ந்தான்
தன்மக்க ளாகி யுள்ளார் தலையொடுந் திரிவ ரன்றே
புன்மக்கட் டருமம் பூணாப் புலமக்கள் தருமம் பூண்டால்.

'நீ, புன்மக்கள் தருமம் பூணா - நீ அற்பராகிய அரக்கரின் மற வழியை மேற்கொண்டு, (இராவணனுடன்) கூடாமல், புலம் மக்கள் தருமம் பூண்டால் - அறிவுடையவரின் நல்வழியைக் கண்டு இராம பிரானுடன் கூடினால், (அங்கிலையில்) உன் மக்கள் ஆகி உள்ளார் - உன்மக்களாயிருப்பவரும், உன்னொடும் ஒருங்கு தோன்றும் - உன் னுடன் கூடப்பிறந்த, என்மக்கள் ஆகி உள்ளார் - என் மக்களாகி உள்ளவரும், இ குடிக்கு இறுதி சூழ்ந்தான் தன் - இந்த அரக்கர் குலத்துக்கே முடிவு சூழ்ந்தவனான இராவணனுடைய, மக்கள் ஆகி உள்ளார் தலையுடன் - மக்களில் தலைமை பெற்றவருடன், திரிவர் அன்றே - திரிவார்கள் அன்றோ?

நீ இராமபிரானைச் சரண் புகுந்தால், இராவணன் ஒருவன் இறந்துபடினும், இராமபிரான் கருணையால் ஏனைய அரக்கர்கள் வாழ நமது புத்திரரும் இராவணனுடைய புத்திரருடன் வாழ்தற்கு ஏது

வாகும், அரக்கர் வழி ஒழிந்தது என்பது நிகழாது என்றான் வீடணன். முதலடியில் பூணு: செய்யா என்னும் வாய்பாடு.

பி-ம். 1. உன்னொடு முதயஞ் செய்த.
2. இறுதி சூழ்ந்தார்.
3. தன்மக்க ளோடு மையா.
4. பூண்டார், தருமம் பூணர். 145

1356. முனிவருங் கருணை வைப்பர் மூன்றுல கத்துந் தோன்றி
இனிவரும் பகையு மில்லை யீறுண்டென் றிரங்க வேண்டா
துனிவருஞ் செருந ரான தேவரே துணைவ ராவர்
கனிவருங் காலத் தைய பூக்கொய்யக் கருத லாமோ.

'முனிவரும் கருணை வைப்பர் - ஸ்ரீ இராமபிரானைக் கூடின் பகைவரான முனிவரும் கருணை காட்டுவர், மூன்று உலகத்தும் தோன்றி இனிவரும் பகையும் இல்லை - மூன்று உலகங்களிலும் இனிப் பகையாக எழுந்து வருபவரும் இலராவர்; ஈறு உண்டு என்று இரங்க வேண்டா - மரணம் நிகழும் என்று வருந்தத் தேவையில்லை; துனிவரும் செருநர் ஆன தேவரே துணைவர் ஆவர் - வெறுக்கத்தக்க பகைஞர் ஆன தேவர்களே நண்பினராவர், (இங்ஙனம் நிகழவிருக்க), ஐய - ஐயனே! கனிவரும் காலத்து பூ கொய்ய கருதலாமோ - பழங்கள் தோன்றும் காலத்தில் (மரத்திடைத் தோன்றும்) மலர்களைக் கொய்தற்கு நினைத்தல் கூடுமோ? ஓகாரம் - வினா.

மலர்களைப் பாதுகாப்பின் கனிகள் கிடைக்கும்; கனிதோன்றும் பருவத்து மலர்களையே கொய்துவிடின் கனிகள் எங்ஙனம் தோன்றும்? அதுபோன்று சாதனமாகிய உடலை இராவணனுடன் கூடி விட்டு விடுவாயாகில் பின்னர் வாழ்வு எங்ஙனம் ஏற்படும்? என்றான். இச்செய்யுள் பிறிதுமொழிதல்அணி. செருநரான தேவர் என்பதற்கு வானரர்களாக வந்து பகைமைபூண்ட தேவர் எனினுமாம். வானுளோ ரனைவரும் வானரங்களா (பால. திருவவ. 21) என்றமை காண்க. இறுதியடியில் பூவை மோக்குமாறு கொய்தல் - இராவணன் சிற்றின்பம் விழைதல். கனிதுய்த்தல்: இராமபிரானை யடைந்து பேரின்பமுறல் என்றும் பொருள் கூறுவர். துனி - வெறுப்பு. 'கனிவருங் காலத்துப் பூக்கொய்தல்' பழமொழி;

(ஒப்பு): 'கனியிருப்பக் காய் கவர்ந்தற்று' (குறள். 100); 'கனியி ருப்பக் காய் கவர்ந்த கள்வனேனே' (தேவா. 697 : 1).

பி-ம். 1. மூவுலகந்தும்.

2. இனிவரும் துன்பமில்லை ; இரங்கவேண்டாம்.

4. கவிவரு ; மலர்கொய்யக். 146

1357. வேதநா யகனே யென்னைக் கருணையால் வேண்டி விட்டான்
காதலா லுன்மேல் வைத்த கருணையாற் கரும மீதே
ஆதலா லவனைக் காண வறத்தொடுந் திறம்பா தைய
போதுவாய் நீயே யென்னப் பொன்னடி யிரண்டும்
[பூண்டான்.

'வேத நாயகனே - மறைகட்கிறைவனான இராமபிரானே, கருணையால் - தன்னிடம் இயல்பாக அமைந்துள்ள அருளின் விசேடத்தாலும், காதலால் - என்மீதுள்ள அன்பாலும், (அதனை யொட்டி), உன்மேல் வைத்த கருணையால் - உன்மீது கொண்டுள்ள கருணையாலும், வேண்டி என்னை விட்டான் - (உன்னை) வேண்டிக் கொள்ளுமாறு அன்புடன் என்னை அனுப்பினன் ; கருமம் ஈதே - செய்யவேண்டிய நற்காரியமும் அவ்விராமன்பால் அடைவதே ; ஆதலால் - ஆதலின் ; ஐய - ஐயனே ! அறத்தொடும் திறம்பாது - தருமநெறியிற் பிறழாது, (இராவணன் உறவினைவிடுத்து), அவனை காண - அந்த இராமபிரானைக் காணும் பொருட்டு, நீயே போது வாய் - நீயே வருவாயாக' என்ன - என்று பகர்ந்து, பொன் அடி இரண்டும் பூண்டான் - பொன்போன்று அழகிய திருவடிகளைத் தலைமேற்கொண்டான் (வணங்கினன்).

*1343* முதல் *1357* வரையில் வீடணன் கூற்று. வேதநாயகன் - வேதத்தினல் விளக்கப்படுகின்ற தலைவன் ; வேதங்களைத் தோற்று வித்தவன் எனினுமாம். அபௌருஷேயம் என்றும் பௌருஷேயம் என்றும் வேதத்தைக் கூறுவர். பௌருஷேயம் என்ற கூற்றின்படி வேதத்தை உண்டாக்கினவன் என்ப. வேதநாயகன் : (யுத்த : *933*) இராமபிரான் ஒருக்கால் ஏற்றுக்கொள்ளாவிடின் என் செய்வது என்ற கவலை எழாதிருக்குமாறு, அப்பிரான் கட்டளைப்படியேதான் வந்ததாகக் கூறினன். யுத்த : *1332* காண்க. இராமபிரான் தன் மேல் வைத்த கருணை காரணமாக, தன் தமையனான கும்பகன்ன

னிடமும் காதல் எழுந்ததாகக் கூறினன் வீடணன். வேண்டி என்பதை வேண்ட என்னும் செயவெனச்சமாகக் கொள்க. அறத்தொடும் திறம்புதல் - இராமபிரானைச் சரண்புகாது இராவணனைக் கூடியிருத்தல். 'அறம் திறம்புமென்றையன்' அயோத்தி: நகர்நீ. 223).

பி - ம். 1. வுன்னோ.

2. ஈநலால்; தருமம்.

4. போதுவாயாக வென்று, நீயேயாக; பொலன்கழல். 147

## வீடணனைத் தழுவிக் கும்பகன்னன் சொல்லுதல்

1358. தும்பையந் தொடையல் மாலைச் சுடர்முடி படியில் தோயப்
பம்புபொற் கழல்கள் கையாற் பற்றினன் புலம்பும் [பொற்றோள்
தம்பியை யெடுத்து மார்பில் தழுவித்தன் தடங்க ணூடு
வெம்புணீர் சொரிய நின்றான் இனையன விளம்ப லுற்றான்.

தும்பை அம் தொடையல் மாலை சுடர் முடி படியில் தோய - போர்க்குரிய தும்பையாற்றொடுக்கப்பெற்ற அழகிய மாலையணிந்த ஒளி பொருந்திய முடி பூமியிற் படிய(த் தண்டனிட்டு), பம்பு பொன் கழல்கள் கையால் பற்றினன் - ஒலிக்கின்ற அழகிய கழலணிந்த திருவடிகளைக் கரத்தால் அணைத்துக்கொண்டவனாய், புலம்பும் - வருந்துகின்ற, பொன் தோள் தம்பியை எடுத்து - அழகிய புயங்களையுடைய தம்பியான வீடணனைத் தூக்கி, மார்பில் தழுவி - மார்புடன் சேர்த்தணைத்து, தன் தட கண் ஊடு - தன்னுடைய விசாலமான கண்களின் வழியே, வெம்புண் நீர் சொரிய - வெம்மை மிக்க உதிர நீர் இடையறாது வழிய, நின்றான் - நின்றவனாய், இனையன விளம்பல் உற்றான் - இவ்வாறான (பின்வரும்) சொற்களைச் சொல்லத் தொடங்கினான்.

கும்பகன்னன் கூற்றினை இதனை அடுத்துவரும் ஒன்பது கவிகளிற் காண்க. தொடையல் - மாலை; தொடையலாகிய மாலை என இரு பெயரொட்டாக்குக. தொடுக்கப்படுதலின் தொடையல்: அல்பெயர் விகுதி. தொடையலும் மாலையும் என்று கொண்டு, முன்னது கழுத்து மாலையாகவும் பின்னது முடிமாலையாகவும்

கொள்ளினும் ஏற்கும். பம்புதல் - ஒலித்தல் 'எதிர் பம்பும் ஏயமதென' (இருகு. திக்கு. 102). பற்றினன், நின்றான் முற்றெச்சங்கள். தன் தமையன் இராவணனுக்கு நிகழவிருக்கும் மரணத்தை யெண்ணி வெம்புணீர் எழுந்தது என்க. இனையன : பலவின்பால் வினையாலணையும் பெயர்.

பா - ம். 1. தும்பியந், தும்பியின் ; அடியில்.

2. பம்புபைம், மைம்மொலன் ; கையிற் ; புலம்பு, புலம்பப்.

3. தழுவினன் ; தருகனுனும், தருகன்றேடும், தருகனாடு.

4. சோர ; வினம்பலானன். 148

1359 நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்து நீங்காப்
போர்க்கோலஞ் செய்து விட்டாற் குயிர்கொடா தங்குப் [போந்தென்
தார்க்கோல மேனி மைந்த என்துயர் தவிர்த்தி யாகில்.
கார்க்கோல மேனி யானைக் கூடுதி கடிதி னேகி.

'தார்கோல மேனிமைந்த - மாலை புனைந்த அழகிய உடலினையுடைய மைந்தனே! நெடிதுநாள் வளர்த்து - வெகுகாலமாக (அருமையாக) வளர்த்து, நீங்கா போர்கோலம் செய்து விட்டாற்கு - (இன்று) என்னை மாறாத போர்க்கோலம் செய்து அமர்க்களத்துக்கு அனுப்பிய இராவணன் பொருட்டு, உயிர் கொடாது - உயிரை விடாமல், நீர் கோல வாழ்வை நச்சி - நீரில் எழுதப்பட்ட கோலத்தைப் போன்று (நிலையற்ற) வாழ்க்கையை விரும்பி, அங்கு போந்து என் - அந்த இராமபிரானிடம் செல்வதாலாவதென்; என் துயர் தவிர்த்தி ஆகில் - என்னுடைய துன்பத்தைப் போக்க நினைப்பாயாகில், கார்கோல மேனியானை கடிதின் ஏகி கூடுதி - நீல மேகம்போன்ற நிறமுள்ள திருமேனியனாகிய இராமபிரானை விரைந்து சென்று, கூடுவாயாக.

நீர்க்கோலம் : நிலையாமைக்குவமை. 'நீர்க்கோலம் கண்டாயே' (நவரத்ன ஒப்பாரி) : (ஒப்பு) நீர்மேலெழுத்து : நீர்மேலைக் கோலமெனும் நிலைமைத்தன்றே; (யுத்த. இராவணன் வதை. 204) கோலத்தார் மேனி என மொழிமாற்றிக் கோடலும் ஆம். கார்க்கோல மேனி : கம்பநாடர்க்கு இராமபிரானுடைய நீலத் திருமேனியில் பெரிதும் ஈடுபாடுண்டு என்பது அவர் இக்காப்பியத்தில் ஆங்

காங்கு அமைக்கும் சொற்றொடர் கொண்டு தெரியலாம்; ஆரணிய. 225, 702, 780, 946, 994; கிட்கிந்தா. 47: சுந்தர. 57, 336, 573, 1126 1184; அயோத்தி. கங்கை. 1; பால. மிதிலைக். 65; யுத்த. 839 காண்க. இங்கு 'ஒருரும் ஒருகுலமு மில்லா வென்னை யுங்கள் குலத்துள்ளோரில் ஒருவனுக்கி........யார்க்கினியென் னுயிரளிப்ப தியம்புவாயே' (வி. பா. 17ஆம் போர், 21). 'இன்னான் என வறியா னென்னை முடிகவித்து, மன்னர் வணங்க வரசியற்றி' (பெருந். பாரதம்.) என்ற பாடல்கள் நினைவுகூரத்தக்கன. வீடணன் கும்பகன்னன் என்ற இருவர்க்கும் தம் தமையன் இராவணன் மீது அன்புண்டு. எனினும் சிறந்த தத்துவ ஞானியாகலின், இராம பிரானுடைய உண்மை நிலையுணர்ந்து, அவனே உலகிற்குப் பெற்ற தாயும் தந்தையும் என உணர்ந்து, பிரானைப் புகலடைந் தான். தத்துவ ஞானியல்லாமையின் கும்பகன்னன் இராவணனை விடுக்க மனமியையவில்லை. உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைத் தல் கூடாது என்பதே இவன் உட்கோள் என்பது. 'நெடிது நாள் வளர்த்து என்ற தொடரால் விளங்கும். துயர் தவிர்த்தல்: இங்குத்துயர் என்றது இராவணாதிகள் மாண்டுவிடின் எள்ளும் நீரும் இறைப்பதற்கு யாரும் இல்லையாகும் என்பது. போர்க் கோலம் செய்தல். (நாய்ச்சியார் திருமொழி. 10 : 1) தம்பியை 'மைந்த' என்றது அன்புபற்றிய மரபு வழுவமைதி

பி-ம். 2. போதேன், போந்தேன்.

3. மேனியெந்தாய்; எனதுயிர் தருநியாயின்.

4. கடிதின் என்றான். 149

1360. மலரின்மே லிருந்த வள்ளல் வழுவிலா வரத்தி னால்நீ
உலைவிலாத் தருமம் பூண்டாய் உலகுள தனையு முள்ளாய்
தலைவனீ யுலகுக் கெல்லாம் உனக்கது தக்க தேயால்
புலையுறு மரண மெய்த லெனக்கிது புகழ தேயால்.

'மலரின் மேல் இருந்த வள்ளல் - தாமரை மலரின்மேல் வாழும் கருணையனாகிய பிரமனுடைய, வழுவிலா வரத்தினால் - தவறுதலில் லாத வரத்தினாலே, நீ உலைவு இலா தருமம் பூண்டாய்-நீ அழியாத அறத்தை மேற்கொண்டாய்; உலகு உள தனையும் உள்ளாய்-

உலகம் உள்ளவரையும் வாழ்வு பெற்றுள்ளாய்; நீ உலகுக்கு எல்லாம் தலைவன் - நீ உலகனைத்திற்கும் தலைவன், உனக்கு அது தக்கதே - உனக்கு (இராமபிரானைச் சேர்தல் என்ற) அது பொருந்துவதே; புலை உறு மரணம் எய்தல் இது எனக்கு புகழுதே - இழிவான சாவினையுறுவது என்னும் இது எனக்குப் புகழையே தரும். ஆல் - அசை.

தனக்குப் பல வரங்களிந்தமை கருதிப் பிரமனை வள்ளல் என்றார், பிரமன் அளித்த வரம் 'நல்லா யறத்தைக் கைவிட்டு' (உத்தர. இராவணன் பிறப்பு. 30) எனத் தொடங்கும் செய்யுளிற் காண்க. மற்றும், யுத்த. 327, 349, 358ம் காணத்தகும். உலகுள தனையும் உள்ளாய்; இதனை, 'ஆழியான் அவனை நோக்கி யருள் சுரந்து' (யுத்த. 445) எனத் தொடங்கும் செய்யுளிலும் அதன் உரைக்குறிப்பிலும் காண்க. புலையுறு மரணம், பிறர்மனை விழைந்த தீச்செயலுக்காக உயிரை விடுதல் என்க. அது புகழுததாதல் எங்ஙனம் எனின், செஞ்சோற்றுக் கடன் கழித்திறத்தலான் என்க. 'இராச ராசனுக்குச் செருமுனைச் சென்று செஞ்சோற்றுக், கடன் கழிப்பதுவே யெனக்கினிப்புகழும் கருமமும் தருமமும் என்றான்' (வி. பா. கிருட்டினன் தூது. 255) என்ற கன்னன் கூற்றினைக் காண்க. 'செஞ்சோற்று விலையும் தீர்ந்து' (தொல். புறத். 17) உரை மேற்கோள் காண்க.

பி - ம். 1. மழுவல்லான், வரத்தினாலே.
2. உலகுள வாயுப்பெற்றாய்.
4. புலையது, மரணமேனும், எமக்கது, எமக்கிது, புகழுமேயால். 150

1361. கருத்திலா விறைவன் தீமை கருதினு லதனைக் காத்துத்
திருத்தலா மாகி னன்றே திருத்தலாந் தீரா தாயின்
பொருத்துறு பொருளுன் டாமோ பொருதொழிற் குரிய ராகி
ஒருத்தரின் முன்னஞ் சாத லுண்டவர்க் குரிய தம்மா.

'கருத்து இலா இறைவன் - நல்ல ஆலோசனையற்ற தலைவன், கருதினால் - ஒரு தீய தொழிலைப் புரிய நினைந்தால், அதனைக் காத்து - அச்செயலைத் தடுத்து, திருத்தலாம் ஆகின் அன்றே திருத்தலாம் - திருத்த இயன்றாலல்லவோ திருத்தலாம்; தீராது ஆயின் - அங்ஙனம் செய்ய இயலாவிடின், பொருத்து உறு

பொருள் உண்டாமோ - அவர்கள் இயற்றற்குப் பொருத்தமான காரியம் ஒன்று உண்டோ, என்னின் (உண்டு அஃது என்னெனின்), பொரு தொழிற்கு உரியர் ஆகி ஒருத்தரின் முன்னம் சாதல் - போர்த்தொழிலை மேற்கொண்டு யாவர்க்கும் முன்னர் இறந்துபடு தலே ஆகும்; (இதுவே), உண்டவர்க்கு உரியது - இவ்வாறு படு வதே ஒருவர் சோற்றை உண்டவர்க்குப் பொருத்தமான செய லாவது. அம்மா - வியப்பிடைச்சொல்.

வேதம் ஆயிரம் வல்லான் என்று புகழப்பட்ட இராவணன், வழியல்லா வழியினை மேற்கொண்டான் ஆகலின் அவனைக் 'கருத்திலா இறைவன்' என்றான். காத்தல் தடுத்தல் என்னும் பொருளது (குறள். 29). பொருதொழிற்குரியராகி; யுத்த சன்னத்த ராகி. ஒருத்தரின் முன்னம் சாதல்: செஞ்சோற்றுக்கடன் கழித்தல்; 'செஞ்சோற்றுக் கடனீங்கி' (சீவக. 2240). 'சோறுவாய்த் தொழிந் தோர்' (முல்லைப். 72). 'புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா, டிரந்துகோட் டக்க துடைத்து' (குறள். 780). 'செஞ் சோற்றுக் கடன் கழித்திடுதல் வேண்டும்' (வி. பா. நிரைமீட்சி 97).

பா - ம். 1. கருத்திலா விரைவின்; கருத்திறல்,

2. ஆகில் அன்றே, ஆகில் ஒன்றே; திருந்துக, திருந்துதல்; திருந்தா ருயின், நீரா னென்னின்.

3. பொருத்தலாம்; பொருள் வேறுண்டோ, உண்டாமே; பொருத்துக பொருத்தானுமில், போர்த் தொழிற் குரியரான. 151

1362. தும்பையந் தொடையல் வீரன்
சுடுகணை துணிப்பச் சுற்றும்
வெம்புவெஞ் சேனை யோடும்
வேறுள கிளைஞ ரோடும்
உம்பரும் பிறரும் காண
வொருவன்மூ வுலகை யாண்டான்
தம்பியை யின்றி மாண்டு
கிடப்பனே தமையன் மண்மேல்.

'தும்பை அம் தொடையல் வீரன் - போர்க்குரிய தும்பை மலரால் தொடுக்கப்பட்ட அழகிய மாலையணிந்த வீரனை இராம பிரானுடைய, சுடுகணை துணிப்ப - சுட்டெரிக்கின்ற அம்பு துண்டு செய்ய, மூவுலகை ஆண்டான் ஒருவன் தமையன் - மூன்று உலகங் களையும் அரசு செய்த ஒருவனை என் அண்ணன், சுற்றும் வெம்பு வெம் சேனையோடும் - சுற்றிலும் மனம் புழுங்கும்படியான கொடுஞ் சேனையோடும், வேறு உள கிளைஞரோடும் - மற்றும் உள்ள உற வினர்களோடும், தம்பியை இன்றி - தம்பியும் அருகில் இல்லாமல், உம்பரும் பிறரும் காண - (பரம வைரிகளாகிய) தேவரும் மற்றும் உள்ள அசுரரும் காணுமாறு, மண்மேல் மாண்டு கிடப்பனோ - (அநாதையாகத்) தரைமீது இறந்துகிடக்கக் கடவனோ? (அல்லன்) என்றபடி.

தும்பியம் தொடையல் வீரன் என்ற பாடம் சிலர் ஏற்பர்; ஆயினும் வீரன் என்ற சொல்லுக்கேற்ப, போர் மாலையாகிய தும்பை யென்ற பாடமே தழுவப்பட்டது. இதே தொடர் 1358 இலும் வருதல் காண்க. வெம்புதல்: தம் தலைவன் துஞ்சினன் என்று மனம் புழுங்குதல்; 'வெம்பிவெந் தழியா நின்ற நெஞ்சினன். (அயோத்தி. கங்கைப். 49); மூவுலகை யாண்டான் ஒருவன் என மாற்றுக.

பா - ம். 1. தும்பி; சுடுசரம்; துரப்ப, தொலைப்ப, துடைப்ப, களிப்ப, துணிக்க.

3. பிறருங் காணு, போற்ற; மூன்றுலகை; ஆண்டு.

4. தம்பியர்; அன்றி; கிடப்பதோ. 152

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

எரிமுகப் பகழிமாரி யிலக்குவன் சிலையிற் கோலிச்
சொரிதரக் களிறு பொற்றேர் துரங்கமோ டிசைந்த காலாள்
நிருதர்க ளளப்பில் கோடி நெடும்படைத் தலைவர் வல்லே
பொருகள மீதிற் சிந்திப் பொன்றின ரென்ப மன்னோ.

1363. அணையின்றி யயர்ந்த வென்றி
யஞ்சினர் நகைசெய் தார்க்கப்
பிணையொன்று கண்ணாள் பங்கன்
பெருங்கிரி நடுங்கப் பேர்ந்த

பணையொன்று திரள்தோள் கால
பாசத்தாற் பிணிப்பக் கூசித்
துணையின்றிச் சேரல் நன்றோ
தோற்றுழல் கூற்றின் சூழல்.

'பிணை ஒன்று கண்ணாள் பங்கன் - பெட்டை மான்போன்ற விழிகளை யுடையவளான உமாதேவியை இடது பாகத்து ஏற்ற சிவபெருமானுடைய, பெரு கிரி - பெரிய மலையாகிய கைலாயத்தை, நடுங்க பேர்த்த - கம்பிக்குமாறு அகழ்ந்த, பணை ஒன்று - பெருமை வாய்ந்த, திரள் தோள் - திரண்ட தோள்கள், கால பாசத்தால் பிணிப்ப - கால பாசத்தினால் பிணிக்கப்படுகையில், அணை இன்றி அயர்ந்த வென்றி - தடையில்லாமற் செய்த வெற்றியினால், அஞ்சி னார் - (முன்பு) அஞ்சியவரான (பகைவர்), நகை செய்து ஆர்க்க - நகைத்துப் பேராரவாரம் செய்ய (தான்), கூசி - அச்சம் கொண்டு, துணை இன்றி - (தம்பியும்) இன்றி, தோற்றுழல் கூற்றின் சூழல் - (முன்பு தனக்குத்) தோற்று வருந்தும் யமனிருக்கும் இடத்தில், சேரல் நன்றோ - செல்லுதல் நல்லதோ? ஓ - வினா.

அணை - தடுப்பு, என்னும் பொருளது, அஞ்சினர் நகை செய் தார்க்க; (ஒப்பு): விண்ணோர் நண்ணிக், கட்டுவதல்லாற் பின்னை யானெனக் கருதுவாரோ? (யுத்த. இந்திரசித்து. 11); 'வானகு மண்ணுமெல்லாம் நகும்' (யுத்த. கும்ப. 1331); பிணை யொன்று கண்ணாள் பங்கன்' 'வலப்பாகம் செழும்பவளச் சோதியென்ன வாணீலச் சோதி யென்ன மற்றப்பாகம், கலப்பான திருமேனி' (வி. பா. அருச். தவநிலைச். 40). சூழல் - சுற்றுப்பக்கம், 'எய்தின ளிராகவ னிருந்த சூழல் வாய்' (ஆரணிய. 229); தோற்றுள கூற்று. யமன் இராவணனிடம் தோற்றமை; உத்தர. திக்குவிசயப் படலம். 46-77ல் காண்க. 'அணையின்றி யயர்ந்த வென்றி யஞ்சினார் நகையதாக - தடுப்பதற் கரிதாகிய இராவணன் வீரமானது அவ னுக்குப் பயந்த தேவர்கட்கு நகையாக' என்பது பழையவுரை.

பி - ம். 1. அணையன்றி; உயர்ந்த; நகையதாக.

2. கிரி நெருங்கிப்.

3. பிணிப்பத்தம் முள்.

4. தோற்றுள, தோற்றுறும்.

1364. செம்பிட்டுச் செய்த விஞ்சித்
திருநகர்ச் செல்வந் தேறி
வம்பிட்ட தெரிய லெம்மு
னுயிர்கொண்ட பகையை வாழ்த்தி
அம்பிட்டுத் துன்னங் கொண்ட
புண்ணுடை நெஞ்சோ டைய
கும்பிட்டு வாழ்கி லேனியான்
கூற்றையு மாடல் கொண்டேன்.

'ஐய - ஐயனே! கூற்றையும் ஆடல் கொண்டேன் யான் - யமனையும் வலியடக்கியவனாகிய நான், செப்பு இட்டு செய்த இஞ்சி - செம்பினால் இயன்ற மதிலினையுடைய, திருநகர் செல்வம் தேறி - அழகிய இலங்காபுரியின் செல்வத்தை (நிலைபேறுடையதென்று) தெளிந்து, வம்பிட்ட தெரியல் - நறுமணம் ஊட்டப்பெற்ற மாலையைப் புனைந்துள்ள, என் முன் உயிர் கொண்ட பகையை வாழ்த்தி - என் அண்ணனுடைய உயிரைப் போக்கிய பகைவனை ஏத்திக் கொண்டு, அம்பு இட்டு துன்னம் கொண்ட - அம்பு படுதலாலே துளைக்கப்பட்ட, புண் உடை நெஞ்சோடு - புண் பட்ட மனத்துடன், கும்பிட்டு வாழ்கிலேன் - கைகூப்பி நின்று வாழ்தற்கு ஒருப்படேன்.

செம்பிட்டுச் செய்த இஞ்சி: 'செம்பு கொண்டன்ன இஞ்சி' (சீவக. 439). மதுரைக். 485; நெடுநல். 112; அகநா. 375; புறநா. 37, 201; 'செம்படுத்த செழும்புரிசை' (தேவா. திருஞான. தெளிச்சேரி. 3). இஞ்சி - மதில்; சுந்தர. 177, 251, 261. துன்னம் - துளை; துன்னம் ஊசித்துளை என்பது பிங்கலம்; 'ஊசித்துன்ன மூசிய வாடை' (சீவக. 2929). துன்னம் - தையலுமாம் 'ஈக்கடித்த புண்ணுக்கு இழை மூட்டுதல்' என்பது பழமொழி. இராவணன் முன்னர் இறக்க நேரினும், அந்நிலையிலும் தான் இராமபிரானைச் சேர்வது பிழை என்று கூறினன் கும்பகன்னன்.

பி - ம். 2. தெரியலெம்முன்.
4. வாழ்கிலேனைக்; வாழ்கிலேன் நான்.

1365. அனுமனை வாலி சேயை யருக்கன்சேய் தன்னை யம்பொன்
தனுவுடை யவரை வேறோர் நீலனைச் சாம்பன் றன்னைக்
கனிதொடர் குரங்கின் சேனைக் கடலையுங் கடந்து மூடும்
பனிதுடைத் துலகஞ் சுற்றும் பரிதியிற் றிரிவன் பார்த்தி.

'அநுமனை - அநுமனையும், வாலி சேயை - வாலி குமாரனை அங்கதனையும், அருக்கன் சேய் தன்னை - சூரியன் புதல்வனை சுக்கிரிவன் தன்னையும், அம்பொன் தனு உடை அவரை - அழகிய பொன்னணியன்ற விற்களையுடைய இராம இலக்குவரையும், வேறு ஓர் நீலனை - வேறுபட்ட தன்மையுடைய ஒப்பற்ற நீலனையும், சாம்பன் தன்னை - சாம்பவன் தன்னையும், கனி தொடர் குரங்கின் சேனை - பழங்களை நோக்கி அவற்றைக் கைக்கொள்ளுதற்குச் செல்கின்ற குரங்குகளின் சேனைக்கடலையும், கடந்து - வெற்றி கொண்டு (பின்னர்), மூடும் பனி துடைத்து - உலகினைப் போர்த்து நின்ற பனியை அகற்றி, உலகம் சுற்றும் பரிதியில் திரிவன் - உலகத்தைச் சுற்றிவருகின்ற சூரியன்போன்று சுற்றுவேன், பார்த்தி - காண்பாயாக'.

கும்பகன்னனுடைய போர் முழக்கத்தை இது முதல் மூன்று செய்யுட்களிற் காணலாம். கனி தொடர் குரங்கு என்பதற்குச் சூரியனைக் கனியென்று தொடர்ந்த அநுமன் எனினுமாம். மூடும் பனி என்பது உலகினைத் துன்புறுத்தும் அரக்கர் குழுவை என்க. (ஒப்பு): அநுமன் வீர வாசகம்; கிட்கிந்தா. 993; வானரத்தானையுடன் அநுமன் முதலானோரை வெற்றி கொண்டு திரியும் கும்பகன்னனுக்குப் பனியைப் போக்கி உலகை வலம்வரும் சூரியன் உவமை என்க.

பி - ம். 1. அருக்கன் சேயவனை.
2. தநுவுடையவனை.
3. தோடர்குரங்கு; காலக் கடலோடும்; கடந்துமற்றப்.
4. கதிரேளந் திரிவன். 155

1366. ஆலங்கண் டஞ்சி யோடு
மமரர்போ லரிக ளோடச்
சூலங்கொண் டோடி வேலை
தொடர்வதோர் தோற்றந் தோன்ற

நீலங்கொள் கடலு மோடக்
காலொடு நெருப்பு மோடக்
காலங்கொண் டுலகு மோடக்
கறங்கெனத் திரிவன் காண்டி.

'ஆலம் கண்டு அஞ்சி ஓடும் அமரர் போல் - ஆலகால விஷத்தினைக் கண்ணுற்றுப் பயந்து ஓடிய தேவரைப் போன்று, அரிகள் ஓட - (என்னைக் கண்டு) குரங்குகள் ஓடவும், வேலை - கடலானது, சூலம்கொண்டு ஓடி தொடர்வது ஓர் தோற்றம் தோன்ற - சூலத்தை யேந்திப் (பிறிதொரு கடலை) பின்பற்றுவது போன்று ஒரு காட்சி நிகழவும், நீலம் கொள் கடலும் ஓட - நீல நிறம்கொண்ட கடலும் தன் இடம்விட்டுப் பெயர்ந்து அப்பாற் செல்லவும், காலொடு நெருப்பும் ஓட - காற்றொடு அக்கினியும் (தமபரிசு குலைந்து) ஓடவும், காலம்கொண்டு உலகும் ஓட - ஊழிக்காலத்துப் போன்று உலகமும் ஓடவும், கறங்கு என திரிவன் காண்டி - காற்றாடி ஒப்பச் சஞ்சரிப்பேன் காண்பாயாக.

ஆலம் - பாற்கடல் கடைந்த போழ்தில் அதனின்றும் போந்த கொடிய விடம். 'ஆலம் உண்டவற் கண்டிலீரோ' (யுத்த. 414); 'ஆலமோ விழுங்க வென்கை யயில்முகப் பகழி' (யுத்த. 770); 'ஆலம்பார்த்துண்டவர் போல்' (சுந்தர. 317); சூலம் கொண் டோடி வேலை தொடர்வது; இல்பொருளுவமையணி. நிறங்கொள் கடல். 'நீலங்கொள் மேனி மயில் மீதே' (திருப்புகழ்.); கடல் காற்று நெருப்பு நிலம் என்ற நான்கும் கும்பகன்னனது போர்முனைப்பால் நிலைகெட்டோடும் என்க. (ஒப்பு). யுத்த. 130, 132, 136ல் காண்க. காலங்கொண்டு என்ற தொடரில், கொண்டு என்பதை உவம வாசகமாகக் கொள்க. கறங்கு - காற்றாடி; (ஆரணிய. 494); (சுந்தர. 494, 517). காண்டி - முன்னிலை அசையுமாம்.

பி - ம். 2. தோற்றம், தோற்றி.

3. நெருப்போடு காலுமோட.

4. காலங் கொளுலகம், கொளுடலும். 156

1367. செருவிடை யஞ்சார் வந்தென் கண்ணெதிர் சேர்வ ரேலக்
கருவரை கனகக் குன்ற மென்னலாங் காட்சி தந்த
இருவரு நிற்க மற்றிங் கியாருள ரவரை யெல்லாம்
ஒருவருந் திரிய வொட்டே னுயிர்சுமந் துலகி னென்றான்.

'செரு இடை அஞ்சார் - போரிடத்து எனக்குப் பயப்படாதவராய், என் கண் எதிர் வந்து சேர்வரேல் - என் விழிகளின் முன்னர் வந்து அடைவாரானால், அ கருவரை கனகம் குன்றம் என்னலாம் காட்சி தந்த - அந்தக் கரிய மலையும் பொன் மலையும் என்னும்படி தோற்றம் அளிக்கும், இருவரும் நிற்க - இராம இலக்குவர் நிற்க, மற்று இங்கு யார் உளர் - வேறு இங்கு வந்தடைவார் யாவரிருக்கின்றனர்? அவரை எல்லாம் - அவர்களை எல்லாம், ஒருவரும் - ஒருவரையும், உயிர் சுமந்து உலகின் திரிய ஒட்டேன் - உயிர் தாங்கிக்கொண்டு உலகத்துத் திரியும்படி விடேன்', என்றான் - என்று கூறினான் கும்பகன்னன்.

கருவரைக் கனகக் குன்றம்; (ஒப்பு): செம்பொற் பருவரையும் நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள் என்று இலக்குவ சத்துருக்கனரைக் கூறியது காண்க. பின் நிகழவிருக்கும் தனது தோல்வியை உணர்ந்தவன் ஆதலின் 'இருவரும் நிற்க' என்றான். 'வென்றிவண் வருவெனென் றுரைத்திலேன்' (யுத்த. 1299) என்று இவனே முன்னர்க்கூறியது காண்க. கருவரை; இராமபிரான்; கனகக்குன்றம்: இலக்குவன். 'கருமலை செம்மலை யன்ன காட்சியர்' (ஆரணிய. 191)

பி - ம். 1. செருவரை; அரிகள்; சேர்வராகில்.

2. காட்சிந்தாய, காட்சியோராம், காட்சி தந்தாய்.

3. இருவரை; மற்றிங்கார்; இவரை.

4. ஒருவரைத், ஒருவரும் நிற்கவொட்டேன். 157

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

அரக்கன்மனம் கொதித்தாண்டகை யமலன்றனக் கிளையோன்
துரக்கும்படல விசிகம்துகள் படநூறின னதுகண்
டருக்கன்குல மருமானழி காலத்திடை யெழுகார்
நெருக்கும்படி சர தாரையி னெடுமாமழை சொரிந்தான்.

## கும்பகன்னன் இராமனைச் சேருமாறு விடணனுக்கு மீண்டுங் கூறுதல்

1368. தாழ்க்கிற்பா யல்லை யென்சொல்
தலைக்கொளத் தக்க தென்று
கேட்கிற்பா யாகி னெய்தி
யவரொடுங் கெழீஇய நட்பை
வேட்கிற்பா யினியோர் மாற்றம்
விளம்பினல் விளைவுண் டென்று
சூழ்க்கிற்பா யல்லை யாருந்
தொழநிற்பா யென்னச் சொன்னன்.

'யாரும் தொழ நிற்பாய் - எவரும் வணங்கத்தக்க தன்மை வாய்ந்தவனே! என் சொல் தலை கொள தக்கது என்று - என் உரை சிரமேற் கொள்ளத் தகுந்தது என்று எண்ணி, கேட்கிற்பாய் ஆகின் - (நான் புகல்வதைக்) கேட்பாயாகில், தாழ்க்கிற்பாய் அல்லை எய்தி - சிறிதும் காலதாமதம் செய்யாமல் சென்று, அவரொடும் கெழீஇய நட்பை - அந்த இராம இலக்குவரொடு அமைந்த நட்பினையே, வேட்கிற்பாய் - விழைவாயாக; இனி ஓர் மாற்றம் விளம்பினல் - இனி என்னுடன் ஏதேனும் ஒரு வார்த்தை பேசினல், விளைவு உண்டு என்று - நன்மை உண்டாகுமோ என்று, சூழ்க்கிற்பாய் அல்லை - கருதுதற்கு நீ உரியவனல்ல', என்ன சொன்னன் - என்றும் புகன்றான்.

முதற்சீர்கள் நான்கிலும் கில் ஆற்றலை யுணர்த்தும் இடைநிலை. தலைக்கொளல் - 'இப்பணிதலை மேற்கொண்டேன்' அயோத்தி. கைகேசி. 110); கெழீஇய - பொருந்திய; 'பயிலியது கெழீஇய நட்பின்' (குறுந். 2) தொழ நிற்பாய் - வணங்கும்படி நிற்பாய் என்று முற்றாக்கினுமாம். மாற்றம் - வார்த்தை; 'நம்பி நடந்தில னென்னு மாற்றம் சொல்லலும்' (அயோத்தி. தைலமாட்டு. 59),

பா - ம். 1. இல்லை; தலைக்கொள்ளத்; தக்கவென்று.

2. யாகியேகி, யாகிலேகி.

3. விளையுண்டென்று.

4. தொழுகிற்பாா், தொழுகிற்பாய்.

## இராமனிடம் நீ செல்வது எமக்கு நன்மை என்று கும்பகன்னன் விடணனுக்கு எடுத்துக் காட்டுதல்

1369. போதுநீ யைய பின்னைப் பொன்றினர்க் கெல்லா நின்ற
வேதியர் தேவன் றன்னை வேண்டினை பெற்று மெய்ம்மை
ஆதிநூன் மரபி னாலே கடன்களு மாற்றி யேற்ற
மாதுயர் நரக நண்ணு வண்ணமுங் காத்தி மன்னு.

'ஐய - ஐயனே! மன்னு - அரசே, நீ போது - நீ (இங்கிருந்து இராமபிரானிடம்) செல்க; பின்னை - பிறகு, நின்ற வேதியர் தேவன் தன்னை-(போர் புரிதற்காக) நின்றுள்ள வேதியர் தலைவனான இராம பிரான் தன்னை, வேண்டினை - வேண்டி, பெற்று - அவன் உத்திரவு பெற்று, மெய்ம்மை ஆதி நூல் மரபினாலே - சத்தியமான பழமை யாகிய நூல்களிற் கூறியவண்ணமே, பொன்றினர்க்கு எல்லாம் - போரில் மடிந்தவர்கள் அனைவோர்க்கும், கடன்களும் ஆற்றி - நீர்க் கடன் தீக்கடன்களைச் செய்து, ஏற்ற - அவர்கள் அடைவதாக உள்ள, மா துயர் நரகம் நண்ணு வண்ணமும் காத்தி - பெருந் துன்பத்தைத் தரும் நரகத்தையும் அடையாத வண்ணம் காத் தருள்க.

பொன்றுதல் - இறத்தல்; 'பொன்றுதல் ஒரு காலத்தும் தவிருமோ' (யுத்த. இந்திரசித்து. 10); 'பொன்றலே புகழுண் டன்றோ' (ஆரணிய. 757). ஈமக்கடன் செய்யப் பெறாதோர் பிண மாகவே கிடந்து வருத்தம் உறுவர் என்பது நூற்கொள்கை யாக லின், 'கடன்களு மாற்றி யேற்ற மாதுயர் நரகம் நண்ணு வண்ணம் காத்தி' என்றான். 'தென்புலம் வாழ்நர்க் கருங்கடனிறுக்கும் பொன்போற் புதல்வர்ப் பெறாதீரும்' (புறநா. 9) என்றது காண்க. துயர் நரகம் - துயரத்தைத் தரும் நரகம் என்க, வேதங்களில் கரும காண்டத்திலேயே இக்கடன்கள் கூறப்படுதலின் ஆதிநூல் மரபினாலே எனப்பட்டது. 'தம்பொரு ளென்பதம் மக்க ளவர் பொருடந் தம் வினையான் வரும்' (குறள். 63) இங்கே காணத்தகும்.

முன்னரே இலங்கை மன்னனாக இராமபிரான் முடிசூட்டப்பெற்றது குறித்து விடணனை 'மன்ன' என்றான்.

பி - ம். 1. போநி; பின்னர்; நின்று.

2. வேண்டியே; பெற்றும்; மேன்மை.

3. கடன்மையும், கடமையும்; ஏற்றி, ஆண்ட, ஆன்ற.

4. காத்தி மன்றே. 159

## நமக்காக வருந்த வேண்டா என்று கும்பகன்னன் விடணனைத் தேற்றுதல்

1370. ஆகுவ தாகுங் காலத் தழிவது மழிந்து சிந்திப்
போகுவ தயலே நின்று போற்றினும் போதல் செய்யுஞ்
சேகறத் தெளிந்தோர் நின்னி லியாருளர் வருத்தஞ் செய்யா
தேகுதி யெம்மை நோக்கி யிரங்கலை யென்று முள்ளாய்.

'என்றும் உள்ளாய் - சிரஞ்சிவியே! காலத்து ஆகுவது ஆகும் - காலம் வாய்த்தபோது, உண்டாக வேண்டியது உண்டாகும்; அழிவதும் அழிந்து சிந்தி போகுவது - அழிய வேண்டியதும் அழிந்து சிதறிக் கழிவதாய், அயலே நின்று போற்றினும் போதல் செய்யும் - அண்மையில் நின்றுகொண்டு பாதுகாப்பினும் அழிந்தே தீரும்; சேகு அற தெளிந்தோர் நின்னில் யார் உளர் - குற்றமறப் பொருள்களைத் தெளிவாக அறிந்தவர்கள் உன்னைக்காட்டிலும் யார் இருக்கின்றனர்? வருத்தம் செய்யாது ஏகுதி - நீயும் வருததம் கொள்ளாது, எனக்கும் வருத்தம் விளைக்காது, செல்வாயாக! எம்மை நோக்கி இரங்கலை - எமக்காக இரங்க வேண்டுவதில்லை'.

முதலடிக்கு: 'ஆம்போதாகு மதுவன்றி, யாய பொருள்களம் முறையே போம்போதனைத்தும் போம்' (வி. பா. கிருட்டினன். 230). 'ஆங்கால மெய்வருந்த வேண்டா மஃது, தேங்காய்க் இளநீர்போற் சேருமே. 'ஆம் பொருள்களாகுமவை' (சீவக. 848);

மற்றும், பாகவதம் 7 : 2 : 12. இரங்கலை முன்னிலை ; யொருமை எதிர்மறை முற்று.

பி . ம். 1. ஆகுவது ; ஆவதும்.

2. போவதும் ; போதல் இன்னம்.

3. வுணர்ந்தோர் ; வருத்தல், வருந்தல் செய்யா. 160

கும்பகன்னன் வீடணனைத் தழுவி இன்றோடு உடன் பிறப்பு ஒழிந்தது என்ன அவன் பாதத்து வீடணன் வணங்கல்

1371. என்றவன் றன்னை மீட்டு மெடுத்துமார் பிறுகப் புல்லி
நின்றுநின் றிரங்கி யேங்கி நிறைகணு னெடிது நோக்கி
இன்றொடுந் தவிர்ந்த தன்றே யுடன்பிறப் பென்று [விட்டான்
வென்றிவெந் திறலி னானு மவனடித் தலத்து விழ்ந்தான்.

என்று - என்று புகன்று, (கும்பகன்னன்), அவன் தன்னை - அந்த வீடணனை, மீட்டும் - திரும்பவும், எடுத்து மார்பு இறுக புல்லி - உயர்த்து மார்புற நன்கு அணைத்து, நின்று நின்று இரங்கி ஏங்கி - விட்டுவிட்டு அழுது ஏக்கமுற்று, நிறைகணுல் நெடிது நோக்கி - (நீர்) ததும்பும் விழிகளால் வெகுநேரம் பார்த்து, 'உடன் பிறப்பு இன்றொடும் தவிர்ந்தது அன்றே - (நம்முடைய) சகோதரத் தொடர்பு இன்றோடும் கழிந்தது அன்றோ' என்று - என்று பகர்ந்து, விட்டான் - தழுவுதலை விடுத்தான் ; வென்றி வெம்திறலினானும் - வெற்றியும் கடுமையான ஆற்றலும் உடையவன் ஆன வீடணனும், அவன் அடிதலத்து வீழ்ந்தான் - அந்தக் கும்பகன்னனுடைய பாதத்தில் வீழ்ந்தான்.

ஒருவர் ஒருவரைப் புல்லுவது அன்புக்குறி, (பால. எதிர்கோட். 17 ; 24 ; (அயோத்தி. மந்திரப். 60 ; குகப். 32 ; நிறைகண். வினைத் தொகை. 'இன்றுடன் தவிர்ந்ததன்றே யுடன்பிறப்பு' உடன் பிறப்புப் பாசம் யாவரும் விடுதற் கியலாது ஆகலின், இங்ஙனம் இரங்கிக் கூறினன் கும்பகன்னன். 'உடன் பிறப்பாற் றோள்வலி

போம்' (தனிப்பா.); என்றது காண்க. 'உடன் பிறப்பென்னுமப் பாசத்தாற் பிணிப்புண்டவத் தம்பியும் பசுங்கண், நேசத் தாரைகள் சொரிதர' (கிட்கிந்தா. 298) என்ற கவியினையும் அதன் உரையினை யும் நோக்குக. (ஒப்பு): 'அற்றதான் முகத்தினில் விழித்தல் ஆரிய' (யுத்த. 1302); 'நிறைகணல் நெடிது நோக்கி; (ஒப்பு): 'அவ்வழி யிராவண னனைத்து நாட்டமுஞ், செவ்வழி நீரொடுங் குருதி தேக்கி னுன்' (யுத்த. 1303). வென்றி வெந்திறல்; வீடணனுடைய போர்த் திறனன்று சூழ்ச்சித் திறன் என்க. 'வீடணன் தந்த வெற்றி' (யுத்த. இந்திரசித்து வதைப், 71) என இராமபிரான் பின்னர்க் கூறுதல் காண்க. கும்பகன்னன் வீடணனை வரவேற்றபோது தழுவியது போன்றே, விடையளித்த போதும் தழுவினன் என்றது காண்க; வரவேற்ற போழ்து தழுவியது (யுத்த. 1334).

பி - ம். 1. என்றிசைத்தவனை மீட்டும்.

2. நீர்பொழி கண்ணினேக்கி, நீர்க்கணு னெடிதுநோக்கி.

3. என்பதென்றுன், என்பதென்ன, என்று நைந்தான்.

4. தலத்தின் வீழ்ந்தான். 161

## வீடணன் செல்லுதல்

1372. வணங்கினன் வணங்கிக் கண்ணும்
வதனமும் மனமும் வாயும்
உணங்கினன் வயிர யாக்கை
யொடுங்கின னுரைசெய் தின்னும்
பிணங்கின லாவ தில்லைப்
பெயர்வெனென் றெழுந்து போந்தான்
குணங்களா லுயர்ந்தான் சேனைக்
கடலெலாங் கரங்கள் கூப்ப.

வணங்கினன் - பணிந்தவனான வீடணன், வணங்கி - பணிந்து, கண்ணும் வதனமும் மனமும் வாயும் உணங்கினன - விழிகளும் முகமும் உள்ளமும் வாயும் புலரப்பெற்றான்; வயிர யாக்கை ஒடுங்கினன் - வயிரம்போன்ற திண்ணிய உடலும் ஒடுங்கப்

பெற்ருன் ; 'இன்னும் உரை செய்து பிணங்கிஞல் ஆவது இல்லை- மேலும் பேசி அவனுடன் தர்க்கம் செய்வதால் நிகழக்கூடிய நன்மை ஒன்றும் இல்லை ; பெயர்வென் - அகல்வென் !' என்று - என்று நினைந்தவனுய், குணங்களால் உயர்ந்தான் - நற்குணங் களால் மேலிட்டு ஒளிரும் வீடணன், சேனை கடல் எலாம் கரங்கள் கூப்ப - கடல் போன்ற பரந்த சேனை முழுதும் கைகூப்பி நிற்ப, எழுந்து பேர்ந்தான் - எழுந்து அகன்ருன்.

தான் மேற்கொண்ட காரியம் பலிக்கவில்லை யென்றும், அநியாயமாகக் கும்பகன்னன் பொருது மரிக்க நேருமே யென்றும் நினைந்ததனுல் எழுந்த சோகம் காரணமாக வதனம் முதலிய புலர்ந்தன எனப்பட்டது. யாக்கை : எழுவகைத் தாதுக்களால் கட்டப்பட்டது என உடலுக்குக் காரணக்குறி. பிணங்குதல் - கருத்துமாறுபடுதல். (ஆரணிய. 483 : 'பிணங்கும் சமயம் பலபல வாக்கி' (சடகோபர் : அந். 10) : குணங்களாலுயர்ந்தான் : கும்பகன்னன் எனக்கொண்டு அவன் தன் சேனைகரம் கூப்ப எனினும் ஒன்றும். 3-ஆம் அடியில் மோனையைக் கருதிப் பேர்ந் தான் என்ற பாடமே தழுவப்பட்டது.

பி - ம். 2. உணங்கிஞன் உயிரோடு யாக்கை ; வயிரவாக்கை.

3. பெயர்வது ; உணர்ந்து ; போஞன். 162

## வீடணன் செல்லக் கும்பகன்னன் கண்ணில் உதிரநீர் பெருகுதல்

1373\. கள்ளநீர் வாழ்க்கை யேமைக் கைவிட்டுக் காலும் [விட்டான்
பிள்ளைமை துறந்தா னென்னப் பேதுறு மனத்த ஞகி
வெள்ளநீர் வேலை தன்னில் வீழ்ந்தநீர் வீழ வெங்கண்
உள்ளநீ ரெல்லாம் மாறி யுதிரநீ ரோழுக நின்ருன்.

'கள்ளம் நீர் வாழ்க்கையேமை - வஞ்சனைத் தன்மை வாய்ந்த வாழ்க்கையுடன் கூடிய எங்களை, கை விட்டு - நீங்கி, காலும் விட் டான் - (தான் தோன்றிய அரக்கர்) வழியையும் உதறி யெறிந்த

இந்த விடணன், பிள்ளைமை துறந்தான் - இளம்பிள்ளைத் தன்மையை விடுத்தான் (பெரியவர் போன்று நல்ல மதியுடையவன் ஆயினன்)' என்ன - என்று நினைந்து, பேதுறும் மனத்தன் ஆகி - (அவனைப் பிரிந்த தன் காரணமாக) உள்ளம் மாறுபட்டவனாகி, (கும்பகன்னன்) வெள்ளம் நீர் வேலை தன்னில் வீழ்ந்த நீர் - மிகுதியான நீரைக்கொண்ட கடலிற் சென்று வீழ்வதான ஆற்றுப்புனல், விழ - உவமை யாகாமற் பின்னிட, வெம் கண் உள்ள நீர் எல்லாம் மாறி - தனது வெப்பமிக்க விழிகளில் உள்ள நீரெலாம் வற்றி, உதிர நீர் ஒழுக நின்றான் - இரத்தநீராகப் பெருகுமாறு நின்றான்.

கால் : வழி, அல்லது மரபு ; 'கைவிட்டுக் காலும் விட்டான்' என்ற தொடரில் முரண்தொடை காண்க. காலும் விட்டது ; 'பிறந்தவென் னுறுதிநீ பிடிக்கலாயெனாத், துறந்தனன்' (யுத்த. 323) : 'மறவினை நீக்கலில்லா மாயமும் மாய வாழ்க்கைப், பிறவியும் பெயர்த்தேன்' (யுத்த. 432): 'மினமினி யொளியின் மாயும் பிறவியை வேரின் வாங்க' ((யுத்த. 441). 'அழிந்தது பிறவியென்னும் அகத்தியல் முகத்திற் காட்ட' (யுத்த, 444) ; 'களவிய லரக்கன் பின்னே தோன்றிய கடன்மை திர. இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி' (யுத்த. 448) என்பன காண்க. கால் விட்டான் - சென்றான் என்பது பழையவுரை. பேதுறுதல் ; மயங்கி வருந்துதல் (சுந்தர. 487) உள்ளக் கொதிப்பால் கண் கொதிப்பும் நிகழும் ஆகலின் வெங்கண் எனப்பட்டது. உதிர நீர் என்பதற்கு இரத்தத் தொடர்பாகிய சகோதர பாசம் எனினுமாம் ; ஒழுக - அந்தப்பற்றுவிட என்க. இந்தக் கவி கும்பகன்னன் கூற்று.

பா - ம். 1. வாழ்க்கையோரை, வாழ்க்கையோமை ; காலும் விட்டு.
2. பிள்ளைமை தொடர்ந்தான் ; பேதுறு நிலையனாகி.
3. வேலை தன்னுள்.
4. ஒழுகா நின்றான். 163

## கும்பகன்னன் கருத்தை இராமனுக்கு வீடணன் தெரிவித்தல்

1374. எய்திய நிருதர் கோனு மிராமனை யிறைஞ்சி யெந்தாய்
உய்திற முடையார்க் கன்றே வறன்வழி யொழுகு முள்ளம்
பெய்திற னெல்லாம் பெய்து பேசினேன் பெயருந் தன்மை
செய்திலன் குலத்து மானந் தீர்ந்திலன் சிறிது மென்றான்.

எய்திய நிருதர் கோனும்-வந்தடைந்த அரக்கர் தலைவனான விடணனும், இராமனை இறைஞ்சி - இராமபிரானை வணங்கி, ‘எந்தாய் - என் தந்தையே! உய்திறம் உடையார்க்கு அன்றே - தீமையினின்று பிழைக்கும் தகுதியுடையார்க் கல்லவோ, உள்ளம் அறன் வழி ஒழுகும் - மனமானது தரும நெறியிலே செல்லும்; பெய்திறன் எல்லாம் பெய்து பேசினென் - என் பேச்சாற்றல் எல்லாம் செலுத்திக் கும்பகன்னனிடம் உரையாடிப் பார்த்தேன்; பெயரும் தன்மை செய்திலன் - (தன் மனம்) மாறும் இயல்பினை மேற்கொண்டானில்லை; குலத்துமானம் சிறிதும் தீர்ந்திலன் - குலத்தில் உள்ள அபிமானம் அணுவளவும் குறையப் பெற்றானில்லை’, என்றான் - என்று மொழிந்தான்.

பெயருந் தன்மை: இராவணன் பக்கத்தை விடுத்து நமது பக்கம் வந்து சேர்கை.

பி - ம். 1. இராமனை எய்தி.

2. அறனெறி; யொழுக்கமுண்டாம், வழுக்குண்டாய், ‘ஒழுக்கமுண்டாய், ஒழுக்கமுண்மை.

4. தீர்ந்தில. 164

## அதுகேட்ட இராமன் விதிவலிது எனல்

1375. கொய்திறச் சடையின் கற்றைக்
கொந்தளக் கோலக் கொண்டல்
நொய்தினிற் றுளக்கி யைய
நுன்னெதிர் நும்மு னோனை
எய்திறத் துணித்து வீழ்த்த
லினிதன்றென் றிரங்கிச் சொன்னேன்
செய்திற னினிவே றுண்டோ
விதியையார் தீர்க்க கிற்பார்.

கொய்திறம் சடையின் - கொய்யும் இயல்பினதான சடையின், கற்றை - தொகுதியான, கொந்தளம் கோலம் கொண்டல் - மயிர் முடியையுடைய அழகிய மேகம் நிகர்த்தவனான இராமபிரான், நொய்

தினில் துளக்கி - சிறிது தலையினை அசைத்து, 'ஐய - ஐயனே! நுன் எதிர் - உன் கண் முன்பாக, நும் முனைனை - உன் தமையனை, எய்து - அம்பெய்து, இற - (உடல்) பிளந்துற, துணித்து வீழ்த்தல் - அறுத்து வீழ்த்துதல், இனிது அன்று என்று இரங்கி சொன்னேன் - இன்பம் தருவதொன்றன்று என்று மனமுருகிப் பகர்ந்தேன்: இனி செய்திறன் வேறு உண்டோ - இனிச் செய்யக் கூடிய காரியம் வேறு ஒன்று உள்ளதோ? விதியை தீர்க்ககிற்பார் யார் - விதியை நீக்குதற்குரியார் யாவர்?' ஓ வினா எதிர்மறைக் குறிப்பு.

கொந்தளம் - கூந்தல் முடி (பிங்) குந்தளம் என்ற வடசொற்றிரிபு 'மழைக்கொந்தளக் கலப மயில் (குமரகுரு முத்துக்குமார. 2) புயலுண்டிருண்ட கொந்தளமும் (குமரகுரு. முத்துக்குமார: 5) 'படர் துஞ்சின் கருங்குஞ்சி கொந்தளமாகப் பரப்பி (பெரியபு. சிறுத். 26); சுகந்த குந்தளாம்பாள் என்பது திருச்சிராப்பள்ளியிற் கோயில் கொண்டுள்ள அம்பிகையின் திருநாமம். சடையின் கொந்தளக் கற்றை துளக்கி; (ஒப்பு). 'மண்டிலச் சடை முடி துளக்கி' (யுத்த. 354): நுன்னெதிர் பழம்பகை' (சீவக. 324): கொண்டல் இராமபிரானுக்கு உருவுவமை; பயனுவையுமாம். விதியை யார் தீர்க்ககிற்பார்; விதியின் வன்மை இக்காப்பியத்திற் பல விடங்களிலும் பேசப்படும் 'விதியின் பிழை நீ யிதற்கென்னை வெகுண்டது' (அயோத்தி. நகர்நீ. 133):

பி - ம். 1. கொய்திறத்; தளிர்ச்; கொந்தளர்; காலக்.

2. நொய்துறத்; நின்னெதிர்; நுன்முன்னோனை.

3. எய்திறத்; விழ்க்கை.

4. இனிவேறில்லை; யார் தொத்தச் செய்வார், தீர்க்க வல்லார். 165

## இராக்கத சேனை வானர சேனையை வளைத்தல்

1376. எனவினி துரைக்கும் வேலை யிராக்கதர் சேனை யென்னும்
கனைகடல் கவியின் தானைக் கழியினை வளைந்து கட்டி
முனைதொழின் முயன்ற தாக மூவகை யுலகுமுற்றத்
தனிநெடுந் தூளி யார்க்க வார்த்தில பரவை தள்ளி.

என இனிது உரைக்கும் வேலை - என இனிதாகக் கூறும் போழ்தில், இராக்கதர் சேனை என்னும் கனைகடல் - அரக்கர் படையாகிய ஒலிக்கின்ற கடல், கவியின் தானை கழியினை வளைந்து கட்டி - குரக்குச் சேனையாகிய உப்பங்கழியினைச் சூழ்ந்து அணைத்து, முனை தொழில் முயன்றதாக - போர்த் தொழிலிலே முயன்றதாக, மூவகை உலகும் முற்ற - மூன்று திறமான உலகங்களும் முடிவடையுமாறு, தனி நெடு தூளி ஆர்க்க - ஒப்பற்ற மிக்க புழுதி நிறையவே, பரவை - ஆழியும், தள்ளி ஆர்த்தில - (தன் மீது படிந்த அந்தத் துகளை) விலக்கி ஆரவாரம் செய்தில.

தூளிகள் மிகப்படிதலால் சமுத்திரமும் வாயோய்ந்து ஆரவாரம் செய்தில என்பது தொடர்புயர்புவிற்சியணி. அலைகள் புரள இடமிருந்தாலன்றோ ஒலியெழும்; தூளிகள் புரளாமற் செய்யவே கடல் ஆர்த்தில என்க. வீடணன் கும்பகன்னனைக் காணுமாறு செய்தது இராமபிரான் கருணையான் எழுந்ததாகலின் 'இனிதுரைக்கும் வேலை' எனப்பட்டது. அரக்கர் சேனையினைக் கடலாகவும் குரக்குச் சேனையைக் கழியாகவும் கூறியது முறையே அவற்றின் மிகுதியையும் குறைவினையும் குறிக்க வென்க. முனைப்போர்: 'கடுநெறி முனையகன் பெரும்பாழ்' (பதிற்றுப். 25, 9); பரவை - பரந்திருப்பது என்று கடலுக்குக் காரணக்குறி.

பா - ம். 1. உரைக்குங்காலை; இராக்கத
2. கவியின் சேனை; கடலினை; வளைந்துமுடி
3. முனை தொழின் முயன்றான்; உலகு முற்றும்
4. தூளியாலே; ஆர்த்தது, தகைவுற்ற. 166

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

சிலபொழி பகழி வேல்வாள் செறிசுடர்க் குலிச மீட்டி
பலவகைப் படைகள் வாங்கி நிருதர்கள் பல்போர் செய்தார்
மலையொடு மரங்க ளோச்சி வயிரத்தோள் கொண்டு மாறாக்
கொலையம ரெடுத்து வாகைக் குரங்குகள் மலைந்த வம்மா.

1377. ஓடின புரவி வேழ மோடின வுருளைத் திண்டேர்
ஓடின மலைக ளோட வோடின வுதிரப் பேரா
றோடின கவந்த பந்த மாடின வலகை மேல்மேல்
ஆடின பதாகை யோங்கி யாடின பறவை யம்மா.

புரவி ஓடின - குதிரைகள் விரைந்தன ; வேழம் ஓடின - யானைகள் ஓடின ; உருளை திண்தேர் ஓடின - சக்கரங்களையுடைய வலிய தேர்கள் ஓடின ; மலைகள் ஓட - வீரரால் எறியப்பட்ட மலைகள் விரையுமாறு, உதிரம் பேர் ஆறு ஓடின - பெரிய இரத்த ஆறுகள் ஓடின ; கவந்த பந்தம் ஆடின - உடற்குறைத் தொகுதிகள் ஆடின ; அலகை மேல்மேல் ஆடின - பேய்கள் (இரை கிடைக்கும் என்று) மேல்மேல் கூத்தாடின ; பதாகை ஓங்கி ஆடின - பெருங் கொடிகள் (ஆகாயத்தில்) உயர்ந்து ஆடின ; பறவை ஆடின - பருந்து கழுகு முதலிய பறவைகள் (இறந்தவர் ஊன் நுகருமாறு) வட்டமிட்டு நின்றன. அம்மா : வியப்பிடைச் சொல்.

நால்வகைப் படைகளின் நிலைகுலைவு கூறப்பட்டது. கவந்த பந்தம் : காலாட் படைகள் துணிந்து நின்றதைக் குறிக்கும். சொற்பொருட் பின்வரு நிலையணி.

ப - ம். 2. ஓடின உதிர நித்தம்.

3. ஓடின வலகை.

167

1378. மூளையுந் தசையு மென்புங் குருதியும் நிணமு மூரி
வாளொடுங் குழம்பு பட்டார் வாளெயிற் றரக்கர் மற்றவ்
வாளிருங் குருதி வெள்ளத் தழுந்தின கவிக ளம்பொன்
தோளொடு மரனுங் கல்லுஞ் சூலமும் வேலுந் தாக்க.

மூளையும் தசையும் என்பும் குருதியும் நிணமும் - மூளையும் சதையும் எலும்பும் உதிரமும் கொழுப்பும் என்பவற்றில், மூரி வாளொடும் - (தாம் கையில் பிடித்த) வலிய வாளாயுதத்துடனே, வாள் எயிறு அரக்கர் - வாள் போன்ற பற்களையுடைய இராக்கதர், மரனும் கல்லும் தாக்க - (குரங்குகள் வீசிய) மரங்களும் கற்களும் தாக்கவே, குழம்பு பட்டார் - குழம்பாக ஆயினர் ; மற்று அ கவி

கள் - மற்றும் அந்தக் குரங்குகள், சூலமும் வேலும் தாக்க - (அரக்கர்கள்) விட்ட சூலப்படையும் வேலும் தாக்கவே, அம்பொன் தோளொடு - அழகிய பொன்னிறமான தோள்களுடனே, ஆள் இரு குருதி வெள்ளத்து அழுந்தின - அரக்கர்களுடைய ஒளிமிக்க உதிரப்பெருக்கில் ஆழ்ந்தன.

மூளை முதலியன உடற்றுதுக்கள். மரனும் கல்லும் குரங்குகளின் ஆயுதங்கள், சூலமும் வேலும் அரக்கர்களின் ஆயுதங்கள் என்று காண்க. மரம் - மரன் : இறுதிப் போலி.

பி - ம். 2. வாளெயிற்றரக்கரிற்றர், மற்ற.

3. அழுந்திய, அழுங்கின.

4. தோளெழு. 188

அரக்கர் வாநரர் போர்

1379. எய்தனர் நிருதர் கல்லா லெறிந்தனர் கவிக ளேந்திப்
பெய்தன ரரக்கர் கையாற் பிசைந்தன ரரிகள் பின்று
வைதனர் யாது தானர் வலித்தனர் வான ரேசர்
செய்தனர் பிறவும் வெம்போர் திகைத்தனர் தேவ
[ரெல்லாம்.

நிருதர் எய்தனர் - அரக்கர்கள் (அம்புகொண்டு) எய்தார்கள்; கவிகள் கல்லால் எறிந்தனர் - குரக்கு வீரர் (அரக்கர்கள்மேல்) மலைகளைக் கொண்டு வீசினர் ; ஏந்தி அரக்கர் பெய்தனர் - அவைகளைக் கைகளால் தாங்கி (மீண்டும்) வாநரர்மீது எறிந்தனர் ; அரிகள் கையாற் பிசைந்தனர்' - குரக்கு வீரர் அவற்றைக் கரத்தினுற் பிசைந்தார்கள்; யாது தானர் பின்று வைதனர் - அரக்கர்கள் பின்வாங்காமல் வசை பொழிந்தனர்; வானர ஈசர் - குரக்கு வீரர்கள், வலித்தனர் - (அரக்கரைப் பற்றி) இழுத்தனர் ; செய்தனர் - (இவ்வாறு) போர் புரிந்தவர்களின், பிறவும் - பிற செயல்களையும், வெம்போர் - கடுமையான போரினையும் கண்டு, தேவர் எல்லாம் திகைத்தனர் - தேவர்கள் அனைவரும் மலைத்தனர்.

எய்தனர் என்ற வினை கொண்டு அம்புகள் என்று கூறப்பட்டது. செய்தனர் முற்றெச்சம். யாது தானர்; அரக்கர். வானர + ஈசர்: வானரேசர். (வடமொழிச் சந்தி). இதன்பின் ஒரு பாடல் என்றது ஐயர் குறிப்பு.

பி - ம். 1. எறிந்தன.
2. பெய்தன; பின்னுர்.
3. வைதன; யாதுந்தாழா; வலிந்தனர், வதைத்தனர்.
4. தேவரென்பார். 109

## கும்பகன்னன் தேரினைச் செலுத்தி வருதல்

1380 நீரினை யோட்டுங் காற்றுங் காற்றெதிர் நிற்கு நீரும்
போரிணை யாக வேன்று பொருகின்ற பூசல் நோக்கித்
தேரினை யோட்டி வந்தான் திருவினைத் தேவர் தங்கள்
ஊரினை நோக்கா வண்ண முதிரவேல் நோக்கி யுள்ளான்.

நீரினை ஓட்டும் காற்றும் - (புயலில்) மழைநீரைத் துரத்துகின்ற காற்றும், காற்று எதிர் நிற்கும் நீரும் - காற்று எதிராக நிற்கின்ற மழை நீரும், போர் இணையாக - தம் போருக்கு உவமையாக, ஏன்று பொருகின்ற - அரக்கரும் வானரரும் ஏற்றுப் போர் புரிகின்ற, பூசல் நோக்கி - போரினைக் கண்ணுற்று, திருவினை - திருமகளை, தேவர் தங்கள் ஊரினை நோக்கா வண்ணம் - தேவர்களின் ஊரிற் தன் பார்வையைச் செலுத்தாதபடி, உதிரம் வேல் நோக்கி உள்ளான் - (தனது) இரத்தம் படிந்த வேலினைப் பார்த்துக் கொண்டிருப்பவனான கும்பகன்னன், தேரினை ஓட்டி வந்தான் - (தன்) இரதத்தை (அங்கும்) ஓட்டிக்கொண்டு வந்தான்.

புயல் என்பது காற்றும் மழையும், புயல் வீசுங்கால் காற்றும் மழையும் தம்முள் எதிர்த்து நிற்கும். இந்த எதிர்ப்பே இங்கு அரக்கர் வானரரின் போருக்கு ஏற்ற உவமையாகக் கூறப்பட்டது. கும்பகன்னன் தனது பேராற்றலாலும் போர் வன்மையாலும் தேவ சம்பத்தினைத் தனதாக்கிக் கொண்டவன் என்பதை விளக்கத் 'திருமகள் தேவர் உலகிற் பார்வை செலுத்தா வண்ணம்' என்று கூறப்

பட்டது. போர்வன்மை சான்றவன் என்பது உதிரவேல் நோக்கி யுள்ளான் என்ற தொடராற் பெறப்படும். திருவினைத் தேவர் என்பதற்குச் செல்வமுடைய தேவர் என்பது பழையவுரை.

பி-ம். 1. காற்றெதிர் செல்லும்.

2. போரினை வேட்டவென்று. போரினை யாவமென்னப், போரினை யாய வென்னை, போரினை யாயவென்ன, போரினை யாயவென்று, போரினை யாகவென்று, போரினை வாகவென்று.

4. உதிரவே நோக்கியுள்ளான். 170

1381. ஊழியிற் பட்ட காலி னுலகங்கள் பட்டா லொப்பப்
பூழியிற் பட்டுச் செந்நீர்ப் புணரியிற் பட்டுப் பொங்குஞ்
சூழியிற் பட்ட நெற்றிக் களிற்றொடுந் துரந்த தேரின்
ஆழியிற் பட்ட வன்றே யவனியிற் பட்ட வெல்லாம்.

அவனியில் பட்ட எல்லாம் - பூமியிற் பொருந்திய குரங்குகள் அனைத்தும், ஊழியில் பட்ட காலின் - ஊழி யிறுதியில் ,வீசும் காற்றில், உலகங்கள் பட்டால் ஒப்ப - உலகங்கள் சிக்கினதை ஒப்ப, பூழியில் பட்டு - புழுதியில் அகப்பட்டும், செந்நீர் புணரியில் பட்டு - இரத்தக் கடலில் அகப்பட்டும், பொங்கும் சூழியில் பட்ட நெற்றி களிற்றொடும் - ஒளி மிளிரும் ஓடையுடன் பட்டமும் கட்டிய நெற்றியையுடைய யானைகளிலும், துரந்த தேரின் ஆழியில் - செலுத்தப் பட்ட தேர்களின் உருளைகளிலும், பட்ட - அகப்பட்டு இறந்தன. அன்றே - ஈற்றசை.

வானரங்கள் இறந்துபட்ட நிலை ஊழிக்காலத்துப் பெருங்காற்றால் உலகுபட்ட நிலைமையை ஒத்தது எனப்பட்டது. சூழி - யானையின் முகவணி; இதனை ஓடை என்பர். ஓடையும் நெற்றிப் பட்டமும் போர் வேழங்கட்கு அணிவது வழக்கம். பொங்குதல் - ஒளி மிகுதல்.

பி-ம். 1. பட்ட காலந்து.

2. பூழியிற்பட்ட ; போங்கச்.

3. தொடர்ந்த.

4. பட்டதெல்லாம். 171

இங்கு அதிகப்பாடல்கள் :—

1. பற்றின வசந்தன்றன்னைப் பனைத்தடங் கைக ளாலே
யெற்றின னிவனை மீள விடவொண்ணு தென்று சொல்லிக்
கொற்றமு முடைய னென்னுக் குழம்பெழப் பிசைந்து [கொண்டு
நெற்றியிற் றிலத மாக விட்டன னிகரி லாதான்.

2, அளப்பில்வெங் கரிகள் பூத மாளிவெம் பரிகள் பூண்டாங்
கிழுப்ப வந்துடைய தேர்விட் டிருநிலத் திழிந்து வெம் [போர்க்
களப்படக் கவியின் சேனைக் கடல்வறந் துலையக் கையாற்
குளப்படு கென்று வெய்யோன் குறித்துளங் கனன்று [புக்கான்.

3. நிகரறு கவியின் சேனை நிலைகெடச் சிலவர் தம்மைத்
துகளெழக் கயக்கி யூதும் சிலவரைத் துகைக்குங் காலின்
தகர்படச் சிலவர் தம்மைத் தாக்கிடுந் தடக்கை தன்னுற்
புகலிடும் சிலவர் தம்மை விசும்பிடைப் போக வெய்யோன்.

4. வலதினிற் சிலவர் தம்மை வன்கையாற் பற்றிப் பற்றித்
தலையொடு தலையைத் தாக்கும் சிலவரைத் தனது தாளால்
நிலமதிற் புதைய வூன்றி மிதித்திடுஞ் சிலவர் நெஞ்சைக்
கொலைநகப் படையிற் கிறிக் குருதிவாய் மடுத்துக் [கொள்ளும்.

5. கடும்பிணக் குவையி னூடே சிலவரைப் புதைக்கும் [கண்ணைப்
பிடுங்குறுஞ் சிலவர் தம்மைச் சிலவரைப் பிடித்து வெய்தின்
கொடுங்கொலை மறலி யூரிற் போய்விழக் குறித்து வீசும்
நெடும்பெரு வாலிற் பற்றிச் சிலவரைச் சுழற்றி நீக்கும்.

6. பரிதிமண் டிலத்திற் போகச் சிலவரைப் பற்றி வீசும்
குருதிவாய் பொழியக் குத்திச் சிலவரைக் குமைக்கும் கூவித்
திரிதரத் தேவர் நாட்டிற் சேர்த்திடும் சிலவர் தம்மை
நெரிதரச் சிலவர் தம்மைக் கொடுங்கையி னெருக்கு மன்றே.

1382. குன்றுகொண் டெறியும் பாரிற்
குதிக்கும்வெங் கூலம் பற்றி
ஒன்றுகொண் டொன்றை யெற்று
முதைக்கும்விட் டுழக்கும் வாரித்
தின்றுதின் றுமிழும் பற்றிச்
சிரங்களைத் திருகுந் தேய்க்கும்
மென்றுமென் றிழிச்சும் விண்ணில்
வீசுமேற் பிசைந்து பூசும்.

(அப்போது கும்பகன்னன்), குன்று கொண்டு எறியும் - மலை கொண்டு வீசுவனவும், பாரில் குதிக்கும் - தேர்த்தட்டில் வந்து குதிப்பனவுமான (குரங்குகளின்), வெம் கூலம் பற்றி - கொடிய வாலைக் கரங்களாற் பிடித்து, ஒன்று கொண்டு ஒன்றை எற்றும் - ஒன்றோடொன்றை மோதுவான்; உதைக்கும் - (சிலவற்றைக்) காலினால் உதைப்பான்; விட்டு உழக்கும் - (சிலவற்றைப் போகவிட்டு)க் காலினால் தேய்ப்பான்; வாரி தின்று தின்று உமிழும் - (சிலவற்றை) வாரித் தின்று தின்று உமிழ்வான்; சிரங்களை பற்றி திருகும் - சிலவற்றை தலைகளைப் பிடித்துத் திருகுவான்; தேய்க்கும் - தேய்ப்பான்; மென்று மென்று இழிச்சும் - சிலவற்றை மென்று மென்று (நிலத்தில்) வீழ்த்துவான்; விண்ணில் வீசும் - (சிலவற்றை) ஆகாயத்தில் வீசியெறிவான்; பிசைந்து மேல் பூசும் - (சிலவற்றைப்) பிசைந்து சந்தனம் போன்று உடலின் அவற்றின் உதிரத்தைப் பூசிக் கொள்வான்.

கூலம் - வால். (திவா.) லாங்கூலம் என்ற வடசொல்லின் குறுக்கம். இதனை 'நாமைகதேசம்' என்பர் வடமொழி வல்லுநர்.

பி - ம். 1. குன்றின் மிதெறியும்; பாரிற் புடைக்கும்; குரங்கை.
3. தின்று தின்றுமியும்; அள்ளிச்.
4. மென்று மென்றுமிழும்; வீரவசத்தனை யிழிச்சும்; விசிடும்; மெய்யிற் பூசும். 172

1383. வாரியி னமுக்குங் கையான் மண்ணிடைத் தேய்க்கும் வாரி
நீரிடைக் குமிழி யூட்டு நெருப்பிடை நிமிர வீசும்
தேரிடை யெற்று மெட்டுத் திசையினுஞ் செல்லச் சிந்தும்
தூரிடை மரத்து மோது மலைகளிற் புடைக்குஞ் சுற்றி.

(பின்னும் கும்பகன்னன்) வாரியின் அமுக்கும் - (சில குரங்கு களைச) சமுத்திரத்தில் முழுக்குவான்; கையான் மண்ணிடை தேய்க்கும் - கைகளினல் எடுத்துப் பூமியில் தேய்ப்பான்; வாரி நீரிடைகுமிழி ஊட்டும்-சிலரை ஆழிநீரில் குமிழி எழும்படி அமுக்கு வான்; நெருப்பிடை நிமிர வீசும் - (சிலரை) நெருப்பினில் நேராக நீட்டி வீசுவான்; தேரிடை எற்றும் - சிலரைத் தேரிடத்து மோது வான்; எட்டு திசையினும் செல்ல சிந்தும் - சிலரை எட்டுத் திக்கு களிலும் சிதறுமாறு இறைப்பான்; தூரிடை மரத்து மோதும் - சிலரைப் புதர்களிலும் மரங்களிலும் தாக்குவான்; சுற்றி மலைகளில் புடைக்கும் - (சிலரைச்) சுழற்றி மலைகளில் ஓங்கி அடிப்பான்.

அமுக்கும்: 'ஆழவமுக்கி முக்கினும்' (மூதுரை. 19).

பா - ம். 1. வாரினன்; வாரியை; முகக்கும், முக்கும்; யடிக்கும்.
2. நீரிடைக் குவிக்கு மப்பால் நெருப்பிடைச் சுரிக்க நீட்டும்; குவிக்குமப் பால்; நெருப்பெழ.
3. திசைகளும்.
4. தூருடை; மரத்தின். 173

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஆயிர கோடி மேலு மடற்குரங் கதனை வாரி
வாயிடைப் பெய்து மூட வயிற்றிடைப் புகுந்து வல்லே
கூயுளங் திகைத்துப் பின்னும் கொடியவன் செவியி னூடே
போயது வெளியில் மீண்டும் புற்றிடைப் பறவை யென்றே.

1384. பறந்தன ரமர ரஞ்சிப் பல்பெரும் பிணத்தைப் புல்லி
நிறைந்தன பறவை யெல்லா நெடுந்திசை நான்கு நான்கும்
மறைந்தன பெருமை தீர்ந்த மலைக்குலம் வற்றி வற்றிக்
குறைந்தன குரக்கு வெள்ளங் கொன்றனன் கூற்றுங் கூச.

அமரர் அஞ்சி பறந்தனர் - அதைக் கண்ணுற்ற தேவர்கள் பயந்து பெயர்ந்தனர்; பல் பெரும் பிணத்தை புல்லி பறவை எல்லாம் நிறைந்தன - பலவாகிய பெரிய பிணத்தைத் தழுவிப் பறவைகள் யாவும் நிறைந்தன; நெடு திசை நான்கும் நான்கும் மறைந்தன - பெரிய திசைகள் எட்டும் மறையலாயின; மலைகுலம் பெருமை தீர்ந்த - மலைத்தொகுதிகள் பெருமை யிழந்தனவாய்,

வற்றி வற்றி குறைந்தன - (அளவில்) தேய்ந்து தேய்ந்து குறைந்தன, கூற்றும் கூச - யமனும் அச்சுறுமாறு, குரக்கு வெள்ளம் கொன்றனன் - (கும்பகன்னன்) குரக்கு வெள்ளத்தைக் கொலை புரிந்தான்.

பிணத்தைத் தின்பதற்குப் பறவைகள் நிறையவே திசைகள் மறைந்தன. நெடு திசை நான்கும் நான்கும்: பெரிய திசைகள் நான்கும் கோணத் திசைகள் நான்கும். பிணக் குவியல்கள் மலைகளிலும் உயர்ந்து நின்றமை பற்றி, ஓங்கல் என்று காரணப் பெயர் படைத்த மலைகளும் தம் பெருமை குறையப் பெற்றன என்க. மலைக்குலத்தைக் குலமலை என மாற்றி எட்டுக்குல மலைகள் என்றுமாம். இனி, போரில் இரு திறத்து வீரரும் பெயர்த்து எறிவதனுல் வற்றிக் குறைந்தன என்று மலைக்குலத்துக்கேற்றியும் கூறலாம்.

பி-ம். 1. மறைந்தனர்; பறைந்தனர்; பிணத்தின் பம்மல்.

2. நிசையணைத்துமுடி.

3. ஆன்ற மலைக்குலம் வாங்கி யெற்ற, பெருமை குன்ற.

4. கூற்றம். 174

வானரர்களின் செயலற்றநிலை

1385. மற்றினி யொருவர் மேலோர் மரனெடுங் கற்கள் வீசப்
பெற்றில மாது மன்றே யின்றெடும் பெறுவ தாதும்
அற்றன தீங்கு மென்னு வரிக்குலத் தலைவர் பற்றி
எற்றின வெறிந்த வெல்லா மிணைநெடுந் தோளி னேற்றுன்.

'மற்று இனி-இனிமேல், ஒருவர் மேல் வீச ஓர் மரனெடும் கற்கள் வீச பெற்றிலம் ஆதும்-ஒப்பற்ற கும்பகன்னன் மீது வீசற்கு ஒரு மரமேனும் கற்களேனும் பெருதவராவோம்; மன்றே-இது நிச்சயம்; இன்றெடும் பெறுவது ஆதும்-இன்றே எதையும் (வெற்றியையும்) பெறுவோம்; தீங்கும் அற்றன-தீமைகளும் இல்லாவாயின', என்னு-என்று மொழிந்து, அரிகுல தலைவர் பற்றி-

வில் வாள் முதலிய கருவிகள் இன்மையின் குரங்குகள் கல் மரம் வேர் கட்டை முதலியவற்றை விசின என்க. சுற்றும் எற்றுவ இல்லை என மொழி மாற்றுக. முட்டி: கும்பகன்னன்மீது மோதி.

பி - ம். 1. காலிற் றண்டும்.

2. பிறவு மென்னப்.

3. சுற்றும்; என்றுப்.

4. பல்லொடும் பல்லை. 176

1387. குன்றின்விழ் குரீஇக் குழாத்திற் குழாங்கொடு குதித்துக் [கூடிச்
சென்றுமேல் விழுந்து பற்றிக் கைத்தலந் தேயக் குத்தி
வன்றிற லெயிற்றாற் கவ்வி வள்ளுகிர் ஊன்றிக் கீளா
ஒன்றுமா கின்ற தில்லை யென்றிழிந் தோடிப் போன.

(சில வானரங்கள்), குன்றின் வீழ் குரீஇ குழாத்தில் - மலையின் மீது படிகின்ற குருவிக்கூட்டங்கள்போன்று, குழாம் கொடு கூடி குதித்து - கூட்டமாகக் கூடிக் குதித்துக்கொண்டு, சென்று மேல் விழுந்து - (கும்பகன்னன்) மீது விழுந்து, பற்றி - அவனைப் பிடித்துக்கொண்டு, கை தலம் தேய குத்தி - தமது கைகள் காய்ச்சிப்போகுமாறு குத்தியும், வல் திறல் எயிற்றால் கவ்வி - வலிய ஆற்றல்வாய்ந்த பற்களினாற் கவ்வியும், வள் உகிர் ஊன்றி கீளா - கூரிய நகங்களைப் பதித்துக் கிறியும், 'ஒன்றும் ஆகின்றது இல்லை - தம்மால் ஆகக்கூடியது யாதும் இல்லை' என்று - என்று உணர்ந்து, இழிந்து ஓடி போன - (அவன் உடலினின்றும் இறங்கி) ஓடிப்போவனவாயின.

கும்பகன்னனுடைய பேருடலிற் குரங்குகள் மொத்தியதற்கு குன்றின்வீழ் குரீஇக் குழாம் ஏற்ற உவமையாதல் காண்க; (ஒப்பு): 'குன்று முட்டிய குரீஇ' (சிவஞானபாடியம்). கைத்தலம் - கையாகிய இடம்; 'கைத்தலத் துவரி நீரைக் கலக்கினன் பயந்த காளை; (கிட்கிந்தா. 567); 'கைத்தல நிறைகனி' (திருப்புகழ்.) கரதலம் என்றாற்போல என்க. வல்திறல்: ஒருபொருட் பன்

மொழி; முன்னது இயற்கைத் திண்மையையும், பின்னது பிற வற்றைக் கவ்விக் கடிக்கும் ஆற்றலையும் குறித்தது எனினுமாம். 'வன்றிறல் வாலிசேயும் வாளெயி றிலங்க நக்கான்' (யுத்த. 932). வள்ளுகிர்: 'வள்ளுகிர் வயிர மார்பன்' (யுத்த. 281). கிளா-கிண்டு; செய்யா என்னும் வாய்பாடு. ஒன்றும் - சிறிதும் எனினுமாம்.

பி - ம். 1. குருவியென்னக், அருவிபோலக்; குழாங்கொளக், குழாங்கொண்டு, கொளக் குறித்து; கூடர்.

3. மடியவள்ளி; வள்ளுகிரதனற்கீறி, நூறி, ஊன்றி.

4. யென்றிரிந் தோடிப்போன. 177

1388. மூலமே மண்ணின் மூழ்கிக்
கிடந்ததோர் பொருப்பை முற்றும்
காலமே லெழுந்த கால்போற்
கையினாற் கடிதின் வாங்கி
நீலன்மே னிமிர்ந்த தாங்கோர்
நெருப்பெனத் திரித்து விட்டான்
சூலமே கொண்டு நூறி
முறுவலுந் தோன்ற நின்றான்.

(அப்போது), நீலன் - நீலன் என்னும் வானரவீரன், மூலமே மண்ணில் மூழ்கி கிடந்தது - அடிப்பாகம் தரையில் மூழ்கிக்கிடந்த தான, ஓர் பொருப்பை - ஒரு மலையை, முற்றும் காலம் - உலகம் முடிவுபெறும் காலத்து, மேல் எழுந்த கால்போல் - மேல் ஓங்கி வீசிய ஊழிக்காற்றுப்போல, கையினால் கடிதின் வாங்கி - கரத்தினால் வேகமாகப் பெயர்த்து, மேல் நிமிர்ந்தது ஆங்கு ஓர் நெருப்பு என திரித்து விட்டான் - ஆகாயத்தில் ஓங்கியதான ஒரு நெருப்புப்போல (வெம்மை உண்டாகும்படி) சுழற்றி வீசினான்; (கும்பகன்னனும்) சூலமே கொண்டு நூறி முறுவலும் தோன்ற நின்றான் - தன் சூலப்படையினைக்கொண்டு அதனைத் தூளாக்கிப் புன்னகை வெளிப்பட நின்றான்.

மூலம் - மலையின் அடிப்பாகம்; சமூலம் என்ற வழக்குக் காண்க. பொருப்பு - மலை; 'பொருப்புறழ் வயிரத் திண்டோள்'

(கிட்கிந்நா. 934); 'ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி வந்தான்' (சுந்தர. 1123). நீலன்: கிட்கிந்தா. 696 உரைக்குறிப்புக் காண்க. நூறுதல் - சிறு தூளாக்குதல்; 'நுண் பொடிபட நூறினன்' (ஆரணிய. 541); 'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி' (நாலடி. 156). முறுவலும் என்ற உம்மை வீரமும் விளங்க நின்றான் என்பதைக் குறித்து நின்றது. போரின் கடுமையால் கடுமையன்றி வீரநகை தோன்றுவதும் வீரர்க் கியல்பு; இங்கு எழுந்த முறுவலும் வெகுளி நகை; (ஒப்பு): 'வீரனுஞ் சிறிதுமென்முறுவல்வெண்ணிலவுக' (ஆரணிய. 23). 'மூலமே மண்ணில் மூழ்கியது', 'இந்திரன் சிறகு அரியப்பயந்து ஒளித்தது' என்பது பழையவுரை.

பி - ம். 1. மூழ்கி மண்ணில்.

2. காலமே; கையிறந் கல்லி வாங்கி, வாங்கி நின்று.

3. நீலனு மரக்கன்மேலே நெருப்பெழச்; சுழற்றி, திருப்பி.

4. தோற்றி, தோவ்றி. 178

1389. பெயர்ந்தொரு சிகரந் தேடி னச்சமாம் பிறர்க்கு மென்னுப்
புயங்களே படைக ளாகத் தேரெதி ரோடிப் புக்கான்
இயங்களுங் கடலு மேகத் திடிகளு மொழிய யாரும்
பயங்கொளக் கரங்க ளோச்சிக் குத்தின னுதைத்தான்
[பல்கால்

'பெயர்ந்து ஒரு சிகரம் தேடின் - இடம்விட்டு நீங்கிப் பிறி தொரு மலையை நாடித்திரிந்தால்; (அப்போது), பிறர்க்கும் - ஏனைய குரங்குகட்கும், அச்சம் ஆம் - பயம் நிகழும்', என்னு - என்று நினைந்து, புயங்களே படைகள் ஆக - தன் தோள்களே போர்க் கருவிகளாக(க் கும்பகன்னனுடைய), தேர் எதிர் ஓடி புக்கான் - தேருக்கெதிரே விரைந்து புகுந்து (நீலன்), இயங்களும் கடலும் மேகத்து இடிகளும் ஒழிய - இசைக்கருவிகளும் கடலும் மேகத்திடி களும் பின்னடையுமாறு (பேரொலி யுண்டாக), யாரும் பயம் கொள - யாவரும் அச்சமடையும்படி, கரங்கள் ஓச்சி குத்தினன் கைகளையுயர்த்திக் குத்தினன்; பல்கால் உதைத்தான்-பலதடவை கால்களால் உதைத்தான்.

சிகரம் - மலையுச்சி; மலைக்குச் சினையாகுபெயர். தேர்: கும்பகன்னன் தேர். இயம் - இசைக்கருவி; 'முந்தியம் பலகறங்கிட' (சுந்தர. 879). பல்கால் என்பதைக் குத்தினான் என்றதற்கு ஏற்றலுமாம். புயங்களே படைகளாக என்பதுகொண்டு நீலன் புரிந்தது மற்போர் என்று உணரப்படும். இயங்களும் கடல் இரைச்சலும் இடிகளும் நீலன் குத்திய குத்துக்களின் ஓசைக்குப் பின்னிடைந்தன எனப்பட்டது தொடர்புயர்வுநவிற்சியணி.

பி - ம். 1. அச்சமாய்ப் பிறக்கும்.

2. புக்கவன் தேரிற் பாய்ந்தே; தேரிடை.

3. இயங்களு மொழிய மேகத், மேகத்திடிகளும்; இடிய யாரும், யாருமெய்ப்ப, இழிய யாரும்.

4. கரங்கள் வீசிக்; பற்றி. 179

## நீலன் தோற்றல்

1390. கைத்தலஞ் சலித்துக் காலுங்
குலைந்துதன் கருத்து முற்றான்
நெய்த்தலை யழலிற் காந்தி
யெரிகின்ற நீலன் தன்னை
எய்த்துயிர் பதைப்ப வன்னா
னெற்றினா னிடது கையால்
முத்தலைச் சூல மோச்சான்
வெறுங்கையா னென்று முன்பன்.

கைத்தலம் சலித்து - கைகள் தளர்ந்து, காலும் குலைந்து - காலும் நிலைதடுமாறி, தன் கருத்து முற்றான் - தன் எண்ணம் கைகூடப்பெறாமல், நெய்த்தலை அழலில் காந்தி - நெய்யைத் தன்னிடத்துப் பெய்யப்பெற்ற தீப்போன்று மனம் கொதித்து, எரிகின்ற நீலன் தன்னை - எரியா நின்ற நீலன் என்னும் குரங்கு வீரனை, உயிர் எய்த்து பதைப்ப - உயிரானது இளைத்துத் தவிக்குமாறு, அன்னான் - அந்தக் கும்பகன்னன், இடது கையால்

எற்றினன் - தனது இடது கரத்தால் அடித்தான்; (எனினும்), வெறும் கையான் என்று - ஆயுதம் இல்லாத வெறுங்கையினை உடையவன் என்று எண்ணி, முன்பன் - வலியோன் ஆன கும்ப கன்னன், முத்தலை சூலம் ஓச்சான் - மூன்று கவடாகவுள்ள சூலப் படையை உயர்த்தி எறியாதவன் ஆயினன்.

சலித்து: 'சலித்த காலையில்' (யுத்த. 1141). முற்ருன்: முற்றெச்சம். நெய்த்தலை அழலிற் காந்தி: 'காய் கனற்றலை நெய் சொரிந் தெனக்கதம் கனற்ற' (அயோத்தி. மந்தரை. 63); 'நெய் பெய்தீயின்' (குறுந். 106); 'நெருப்பழற் சேர்ந்தக்கா னெய்போல் வதூஉம், எரிப்பச்சுட் டெவ்வநோ யொக்கும்' (நாலடி. 124). அலட்சியமாகச் செய்தான் என்பது தோன்ற இடதுகையால் எற்றினன் எனப்பட்டது. வெறுங்கையான் என்று முன்பன்; இங்கு, தொல்காப்பியம் புறத்திணையியல் 10 சூத்திரம் நச்சினார்க் கினியருரை காணத்தகும். முன்பு - வலிமை; முன்பன் ஆதலின் ஓச்சான் எனப்பட்டது.

பி - ம். 1. சலிக்கக்; காலு மோய்ந்து; கரும முற்ருன், கருத்து முற்றி.
2. அனலிற்.
3. கைத்துயிர் குடிப்ப லென்று, எரீருயிர் குடிப்பல்; இடத்துச்.
4. மெய்த்தலைச்; என்று வெள்கி, என்று முன்னி. 180

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

நிலனை யரக்கன் தேரா நெடுநிலத் திழியத் தள்ளிச்
சூலமங் கொருகை சுற்றித் தொடர்ந்திடும் பகைஞ ராவி
காலனார் தன்னி லேற்றிக் கடிதிலென் தமைய னெஞ்சிற்
கோலிய துயரும் தீர்ப்பெ னெனக்கொதித் தமரி னேற்ருன்.

## அங்கதன் மலையைப் பிடுங்கி யெறியக், கும்பகன்னன் அதைத் தன்தோளினு லேற்றல்

1391. ஆண்டது நோக்கி நின்ற வங்கத னுழி தன்னுள்
நீண்டதோர் நெடுந்திண் குன்ற நிலமுது காற்ற நீக்கி
மாண்டன வரக்கன் தம்பி யென்றுல கேழும் வாழ்த்தத்
தூண்டின னதனை யன்னு னெருதனித் தோளி னேற்ருன்.

ஆண்டு - அப்போது, அது நோக்கி நின்ற - அதனைக் கண்ணுற்றிருந்த, அங்கதன் - அங்கதன், ஆழி தன்னுள் - கடலின் உட்புறத்துள்ள, நீண்டது ஓர் நெடுதிண் குன்றம் - நீண்டதாகிய ஒரு பெரிய வலிய மலையை, நிலம் முதுகு ஆற்ற நீக்கி-பூமகள் தன் முதுகினைப்பாறுமாறு பெயர்த்து; 'அரக்கன் தம்பி மாண்டனன் - அரக்கனான இராவணன் தம்பி இறந்தான்' என்று - என்று, உலகு ஏழும் வாழ்த்த - ஏழுலகத்தவரும் ஏத்தித் துதிக்குமாறு, தூண்டினன் - செலுத்தினன்; அதனை - அந்த மலையை, அன்னான் - அந்தக் கும்பகன்னன், தனி ஒரு தோளில் ஏற்றான் - ஒப்பற்ற (தன்னுடைய) ஒரு தோளிலேயே தாங்கிக் கொண்டான்.

சால: மிகுதி குறிக்கும் உரிச்சொல். நீண்ட நெடு என்பது கொண்டு மிகவும் நீண்ட குன்றம் எனக் கொள்க. முதுகாற்றுதல் - முதுகுவலி தீர்ந்து இருத்தல். தூண்டினன் - செலுத்தினான் உலகேழு - அவற்றில் உள்ளார்க்கு இடவாகுபெயர்.

பி - ம். 1. அங்கதனுண்டு சால

2. நெடிய குன்றம்; வயிரக் குன்றம்; நிலமுதுகாற்றி வாங்கி 181

1392. ஏற்றபோ தனைய குன்ற மெண்ணருந் துகள தாகி
வீற்றுவீற் றாகி யோடி விழுதலும் கவியின் வெள்ளம்
ஊற்றமே தெமக்கென் றெண்ணி யுடைந்தது குமர னுற்ற
சீற்றமும் தானு நின்றான் பெயர்ந்திலன் சென்ற பாதம்.

ஏற்றபோது - (அவ்வாறு கும்பகன்னன் அம்மலையைத் தாங்கியபோது), அனைய குன்றம் - அம்மலையானது, எண் அரும் துகளது ஆகி-எண்ணமுடியாத பல துகள்களாகி, வீற்று வீற்றாகி ஓடி விழுதலும் - வெவ்வேறாகச் சிதறி விழ்தலும், கவியின் வெள்ளம்-குரங்குச் சேனை, 'எமக்கு ஊற்றம் ஏது என்று-எமக்கு வன்மை தருவது யாது உளது (யாதுமில்லை)', என்று எண்ணி உடைந்தது- என்று நினைத்து நிலைதடுமாறியது; குமரன் - அங்கதனோ, சென்ற பாதம் பெயர்ந்திலன் - முன்னிட்ட காலைப் பின்னிடாமல், உற்ற சீற்றமும் தானும் நின்றான் - பொருந்திய ஆறாத சினமும் தானும் ஆக நின்றான்.

வீற்றுவீற்றாக ஓடி: 'வீற்றுவீற்றோடு மயிலினம்போல்' (களவழி. 29); ஊற்றம்-வன்மை; ஊன்றுகோல் எனினும் ஒன்றும்.

(குறள். 415); 'ஊற்ற மில்லவன் ஓடினன்' (யுத்த. 163); 'தனியும் தானுமத்தையனுமாயினான்' (பால. மிதிலைக். 139).

பி - ம். 2. விற்றுவிற்குக

3. எமக்கென்றஞ்சி ; குமரனேற்ற ; ஏற்றார்

4. பெயர்த்திலன் ; பிறிதும் பாதம். 182

1393. இடக்கையா லரக்க னாங்கோ ரெழுமுனை வயிரத் தண்டு
தடுக்கலாந் தரத்த தல்லா வலியது தருக்கின் வாங்கி
மடக்குவா யுயிரை யென்னா வீசின னதனை மைந்தன்
தடக்கையாற் பிடித்துக்கொண்டான் வானவர் தன்னை
[வாழ்த்த.

(அப்போது) அரக்கன் - கும்பகன்னன், ஆங்கு - அந்தப் போர்க்களத்திலே, ஓர் - ஒரு, எழுமுனை - இருப்புத் தூணைப்போன்ற நுனியினையுடையதும், தடுக்கலாம் தரத்தது அல்லா வலியது - தடுக்கும் தன்மையில்லாதபடி வன்மையுடையதுமான, வயிர தண்டு - ஒரு வயிரக்கம்பத்தை, இடகையால் தருக்கின் வாங்கி - (அலட்சியமாக) இடது கரத்தால் பெருமிதத்துடன் எடுத்து, 'உயிரை மடக்குவாய் என்னா - (இந்த அங்கதன்) உயிரை ஒழிப்பாய்' என்று சொல்லி, வீசினன் - எறிந்தான் ; அதனை - அதனை, வானவர் தன்னை வாழ்த்த - தேவர்கள் அவனை வாழ்த்துதல் செய்ய, தடகையால் பிடித்து கொண்டான் - பெரிய கரத்தாற் பற்றிக்கொண்டான் (அங்கதன்).

இடக்கையால் எடுத்தது : முன்னர் 1390 இலும் வந்தது. வயிரத்தண்டு இருகைகளாலும் எடுத்தோச்சவல்லவன் என்று அரக்கனுடைய வல்லபம் கூறினதுமாம். இரு கரத்தாலும் அம் பெய்ய வல்லவன் (சவ்வியசாசி) எனப் பார்த்தன் புகழப்படுதல் காண்க. எழுமுனை என்பதைச் சிலர் வினைத்தொகையாக்குவர். இங்கு எழுவினைப் போன்ற முனையெனப் பொருள் தரப்பட்டது. 'எழுவினுமுயர்ந்த தோளாய் எய்திய தென்னை (அயோத்தி. குகப்.

33) வானவர் வாழ்த்தியது அரக்கன் எறிந்த தண்டால் அங்கதனுக்கு அபாயம் நேராதிருக்குமாறு என்க; (ஒப்பு): சுந்தர. *1169.*

பி-ம். 1. ஆண்டோர்; முனை வயிரத்தண்டு
2. கடக்கலாஞ்; தரத்தன்றும்; கடக்கலாந் தரத்ததன்று; கடிதின்; வலியினுற்கடிது
3. மடக்குவாயாளி. 183

1394. பிடித்தது சுழற்றி மற்றப் பெருவலி யரக்கன் தன்னை
இடித்துரு மேறு குன்றத் தெரிமடுத் தியங்கு மாபோல்
அடித்துயிர் குடிப்ப னென்னு வனல்விழித் தார்த்து மண்டிக்
கொடித்தடந் தேரின் முன்னர்க் குதித்தெதிர் குறுகி [நின்றான்.

பிடித்தது - கையிற் பற்றிய தண்டாயுதத்தினை, சுழற்றி - சுழற்றிக்கொண்டே, மற்று - பின்பு, 'அ பெருவலி அரக்கன் தன்னை - அந்த மிக்க வலிமை படைத்த இராக்கதனை, அடித்து - இந்தத் தண்டாயுதத்தால் அடித்து, உயிர் குடிப்பன் - உயிரைப் பருகுவேன்' என்னு - என்று சொல்லி, ஆர்த்து - ஆர்ப்பரித்து, அனல் விழித்து - நெருப்புப் பொறிபறக்குமாறு விழித்து, மண்டி - (கோபம்) மூண்டு, (அங்கதன்), கொடி தட தேரின் முன்னர் - கொடி கட்டிய தேர் முன்பாக, இடித்து - முழங்கிக் கொண்டு, உரும் ஏறு குன்றத்து எரிமடுத்து இயங்குமாபோல் - இடியானது மலையின்கண் தீப்பரப்பிக்கொண்டுழல்வது போன்று, குதித்து எதிர் குறுகி நின்றான் - குதித்து அந்த அரக்கன் எதிரில் நெருங்கி நின்றான்.

பி-ம். 1. சுழற்றிமாற்றி
2. குன்றை; மடுத்திறுக்கும்
4. தேரின்மிது. 184

## கும்பகன்னனும் அங்கதனும் உரையாடல்

1395. நின்றவன் றன்னை யன்னு னெருப்பெழ நிமிர நோக்கிப்
பொன்றவந் தடைந்த தானைப் புரவல னொருவன் றானே
அன்றவன் மகனே வெம்மூ ரனள்மடுத் தரக்கர் மாள
வென்றவன் றானே யாரோ விளம்புதி விரைவி னென்றான்.

நின்றவன் தன்னை - (தன் முன்னர் வந்து) நின்றவனான அங்கதனை, அன்னான் - அந்தக் கும்பகன்னன், நெருப்பு எழ நிமிர நோக்கி - விழிகளில் தீப்பொறி பிறக்க (முகத்தை ஏறெடுத்துப் பார்த்து, 'பொன்ற வந்து அடைந்ததானை புரவலன் ஒருவன் தானோ - (நீ) இறந்தொழியுமாறு என்னை எதிர்க்க வந்து சேர்ந்த சேனைத் தலைவனான சுக்கிரீவன் தானோ?, அன்று அவன் மகனோ - அல்லாமல் அவன் புதல்வனான அங்கதனோ? (அன்றெனில்), எம் ஊர் அனல் மடுத்து-எங்களுடைய இலங்காபுரியைத் தீயில் இட்டு, அரக்கர் மாள வென்றவன் தானோ - அரக்கர்கள் இறந்துபட வெற்றி கொண்டவனான அநுமன்தானோ? யாரோ - இவர்களில் எவனோ, விரைவின் விளம்புதி - தாமதமின்றிச் சொல்வாயாக', என்றான் - என்று வினவினான் கும்பகன்னன்.

யாரோ : ஓகாரம் வினா. இங்கெழுந்த வினாவிற்கு (ஒப்பு) சுந்தர. *1112*, *1113*, *1114* காண்க. முதலடி யுத்த. *932* இலும் வருதலைக் காண்க.

ப் - ம். 1. நோக்கி நெருப்புக விழித்து நிமிர்ப் ; அன்னானெருப்புற நோக்கி.

3. அழல்மடுத்து ; அரக்கர் தம்மை

4. சொல்லுதி ; செப்புதி. 185

1396. நும்முனை வாலிற் சுற்றி நோன்றிசை நான்குந் தாவி
மும்முனை நெடுவே லண்ணல் முளரியஞ் சரணந் தாழ்ந்த
வெம்முனை வீரன் மைந்த னின்னையென் வாலின் வீக்கித்
தெம்முனை யிராமன் பாதம் வணங்கிடச் செல்வெ
[னென்றான்.

' நும்முனை - உன் தமையனான இராவணனை, வாலில் சுற்றி - வாலினால் கட்டிப் பிணைத்து, நோன் திசை நான்கும் தாவி - வலிமை சான்ற நான்கு திக்குகளிலும் தாவி (ச் சென்று), மும்முனை நெடு வேல் அண்ணல் - மூன்று முனையைக்கொண்ட நீண்ட வேலாயுதத்தை ஏந்திய சிவபெருமானுடைய, முளரி அம் சரணம் தாழ்ந்த - தாமரை மலர்போன்ற அழகிய அடியிணைப் பணிந்த, வெம்முனை வீரன் மைந்தன் - கொடிய போர்புரிய வல்ல வீரனான

வாலியின் புதல்வன் (யான்); நின்னை - உன்னை, என் வாலின் விக்கி - எனது வாலினாற் பிணித்து, தெவ்முனை 'இராமன் பாதம் - போர்முனையில் நின்றுள்ள இராமபிரானுடைய திருவடிகளை, வணங்கிட செல்வென் - பணிந்தருளுமாறு செல்வென்', என்றான் - என்று விடையிறுத்தான்.

நும்முனை வாலிற் சுற்றி: கிட்கிந்தா. 1?5: சுந்தர. 518, 580: 'இராவண னென்பான் றன்னைச், சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றி' (யுந்ந. 936); உத்தரகாண்டம் வாலி வாலாற் கட்டுண்ட படலமும் காண்க. 'என் தந்தை உன் தமையனை வாலிற் பிணித்தான் நான் உன்னைப் பிணிப்பான் வந்தேன்' என்றான் அங்கதன். முளரி: தாமரை: இதனைக் காரண இடுகுறி என்பர் இலக்கணம் வல்லார். தெவ் + முனை: தெம்முனை. 'வாலி சிவ பூசை செய்தான்; நான் விஷ்ணு பூசை பண்ணுகிறேன் என்பது கருத்து' என்பது பழையவுரை.

பி - ம். 1. நாளும் பாய்ந்த
2. சரணஞ் சார்ந்த
3. வாலி மைந்தன்; நின்னையும். 188

1397. உந்தையை மறைந்தோ ரம்பா
லுயிருண்ட வுதவி யோற்குப்
பந்தனைப் பகையைச் செற்றுக்
கொடுக்கிலை யென்னிற் பாரோர்
நிந்தனை நின்னைச் செய்வர்
நல்லது நினைந்தாய் நேரே
வந்தனை புரிவ ரன்றே
வீரராய் வசையிற் றீர்ந்தார்.

'மறைந்து - ஒளித்து நின்று, உந்தையை - உன் தந்தையை, ஓர் அம்பால் - ஒரு அம்பினால், உயிர் உண்ட உதவியோற்கு - உயிர் கொண்ட உபகாரிக்கு, பந்தனை பகையை - உறுதியான பகையை, செற்று - அழித்து, கொடுக்கிலை என்னில் - கொடாது விடுத்தனையென்றால், பாரோர் - உலகில் உள்ளார், நின்னை நிந்தனை செய்வர் - உன்னைப் பழித்துரைப்பர்; நல்லது நினைந்தாய் - நல்ல காரியத்தை இயற்ற எண்ணினை, வீரராய் வசையில் தீர்ந்

தார் - சுத்த வீரர்களாகிக் குற்றமற்றவர்கள், நேரே வந்தனை புரி வர் அன்றே - உன்னை நேரே கண்டு வணங்குவார் அன்றோ?

உதவியோற்கு: பிறகுறிப்பு. இதனை வஞ்சப் புகழ்ச்சியென் றும் கூறுவர். சிறந்த கடமையுணர்ச்சியை மேற்கொண்டோன் என்று நகையாடிப் பேசினன் கும்பகன்னன். இச்செய்யுட்கு (ஒப்பு): 'நிகரன் புதல்வன் கொல்லாம் நெடும்பகை நிமிர வந்தாய் ஆயது கடனே யன்றோ வாண்பிறந் தமைந்தார்க் கைய, ஏயது சொன்னு யென்று ளிசையினுக் கிசைந்த தோளான்' (யுத்த. மகரக் கண்ணன். 16).

பி - ம். 2. பகையையவென்று; காட்டலை.

3. நின்னைச் சொல்வார், வேறே.

4. வந்தனை புரிவருன்னை; நீர்ந்தேர். 187

1398. இத்தலை வந்த தென்னை யிராமன்பால் வாலி னீர்த்து
வைத்தலை நுதலி யன்று வானவர் மார்பிற் றைத்த
முத்தலை யயிலி னுச்சி முதுகுற மூரி வால்போல்
கைத்தலங் காலுந் தூங்கக் கிடத்தலைக் கருதி யென்றான்.

'இ தலை வந்தது-(நீ) இங்கே போந்துள்ளது, என்னை-என்னை, வாலின் ஈர்த்து -(உன்) வாலிற் பிணித்திழுத்து, இராமன் பால் வைத்தலை நுதலி அன்று - இராமபிரானிடம் கொண்டு சேர்த் தலைக் கருதியன்று; வானவர் மார்பில் - தேவர்களின் மார்பிடத்து, தைத்த - சென்று பதிந்த, மு தலை அயிலின் உச்சி முதுகு உற - மூன்று கவடாக உள்ள சூலப்படையின் நுனியானது முதுகின் புற மாக வெளிப்படுமாறு, மூரி வால்போல் - (அது) வலிய வால்போன் றிருக்க, (அதிலே) கைதலம் காலும் தூங்க கிடத்தலை - (உன்னு டைய கைகளும் கால்களும் தொங்கியிருத்தலை, கருதி-எண்ணியே' என்றான் - என்று மொழிந்தான் கும்பகன்னன்.

கைத்தலம் யுத்த. 1390.

பி - ம். 1. வந்த என்னை; வாலின் விக்கி.

2. வைத்தலைக் கருதியென்றல்; மார்பிற்றீர்ந்த.

3. முத்தலைவேலி; மூரிவாலிற்.

4. அவையு நல்கிக். 188

அங்கதன் வயிரத்தண்டு கும்பகன்னன் மீது தாக்கிப் பல துண்டமாதல்.

1399. அற்றவ னுரைத்த லோடு மனல்விழித் தசனி குன்றத்
துற்றது போலு மென்னு மொலிபட வுலக முட்கப்
பொற்றடந் தோளின் வீசிப் புடைத்தனன் பொறியிற் சிந்தி
இற்றது நூறு கூறு யெழுமுனை வயிரத் தண்டு.

அற்று - அவ்வாறு, அவன் உரைத்தலோடும் - அவன் சொன்னவுடனே, (அந்தக் கும்பகன்னன்) அனல்விழித்து - நெருப்பெழ விழித்து, அசனி குன்றத்து உற்றதுபோலும் என்னும் ஒலி பட-இடி மலைமீது தாக்கியது போலும் என்னுமாறு பேரொலி எழவும், உலகம் உட்க-உலகினுள்ளார் அஞ்சவும், பொன் தட தோளின் வீசி புடைத்தனன் - பொன் ஆபரணமணிந்த (தனது) பெரிய கரத்தால் வீசி அடிக்கலானான்; எழுமுனை வயிரம் தண்டு - இரும்புத்தூண் போன்ற நுதியினையுடைய (அங்கதனுடைய) வயிரத்தண்டு, பொறியில் சிந்தி - தீப்பொறி போன்று சிதறுண்டு, நூறு கூறாய் இற்றது - நூறு பகுதியாக ஒடிந்து அழிந்தது.

உட்குதல் - அஞ்சுதல்; 'உட்கப்படாஅரொளியிழப்பர்' (குறள். 921). எழுமுனை வயிரத்தண்டு : (1393).

பி - ம். 2. போலுமென்ன.

3. வீசிப்புடைத்தன ; பொறிகள் சிந்தி. 189

அங்கதன் தோற்கையில் அநுமான் வந்து எதிர்த்தல்.

1400. தண்டிறத் தடக்கை யோச்சித் தழுவிய தறுக ணனைக்
கொண்டிறப் புறுவ னென்னுத் தலையுறக் குனிக்குங் காலை
புண்டிறப் புறவ லாளன் கையினுற் புகைந்து குத்த
மண்டிறப் பெய்த வீழ்ந்தான் மாருதி யிமைப்பின்
[வந்தான்.

தண்டு இற - தண்டாயுதம் ஒடிய, (அங்கதன்) தடகை ஓச்சி - (தன்) பெரிய கரங்களை உயர உயர்த்திக்கொண்டு, தழுவிய -

போர்க்கு வந்துள்ள, தறுகணனை - அஞ்சாத அரக்கனான கும்ப கன்னனை, கொண்டு - பற்றிக்கொண்டு, ' இறப்புறுவன் - கடந்து செல்வேன்', என்னு - என்று மொழிந்து, தலை உற குனிக்கும் காலை - (அவனைப் பிடித்துக்கொள்ளும்பொருட்டு) தலையை நன்கு வளைத்து நின்றபோது, வலாளன் - வல்லவனான அந்த அரக்கன், புகைத்து - மனம் கொதித்து, புண் திறப்புற கையினால் குத்த - புண்கள் தோன்றுமாறு கரத்தினால் தாக்க, (அதனைப் பொறுக்கமாட்டா மல்) மண் திறப்பு எய்த வீழ்ந்தான் - பூமி பிளக்குமாறு கீழ் வீழ்ந் தான் (அங்கதன்); மாருதி இமைப்பின் வந்தான் - அநுமன் ஓர் கண்ணிமைப்பொழுதில் அங்கு வந்து சேர்ந்தான்.

பா - ம். 1. நடக்கை கொண்டு ; தழுவியத்.

2. தரையினிற் குனிக்கின்றனைப், தலையுறக் குத்தும் காலை, தரைமிசைக் குதிக்கின்றன்.

3. புண்டிறப் போர்வன்யாக்கை, புண்டிறப் புறுவல்யாக்கை.

4. மண்டுறப்பெய்து. 190

1401. மறித்தவ னவனைத் தன்கை வயிரவாட் சூல மார்பில்
குறித்துற வெறிய லுற்ற காலையிற் குன்ற மொன்று
பறித்தவ னெற்றி முற்றப் பரப்பிடைப் பாக முள்ளே
செறித்தெனச் சுரிக்க வீசித் தீர்த்தனை வாழ்த்தி
[யார்த்தான்.

அவன் - அந்தக் கும்பகன்னன், மறித்து - மீட்டும், அவனை - அந்த அங்கதனை, தன் கை வயிர வாள் சூலம் - தன் கரத்தி லிருந்த உறுதிவாய்ந்த கூர்மையான சூலப்படையை, மார்பில் உற குறித்து - மார்பின்கண் பொருந்துமாறு குறிப்பிட்டு, எறியல் உற்ற காலையில் - வீசத்தொடங்கிய போழ்தில், (அநுமன் குறுக் கிட்டு), குன்றம் ஒன்று பறித்து - ஒரு மலையைப் பெயர்த்து, அவன் நெற்றி முற்ற - அவன் நெற்றி முழுவதும், பரப்பிடை பாகம் உள்ளே - பரந்த இடத்தையுடைய அந்தப் பகுதியின் அகத்தே, செறித்து என - அடங்கியுள்ளதென்னுமாறு, சுரிக்க -

புதையும்படி, வீசி - எறிந்து, இர்த்நனை வாழ்த்தி ஆர்த்தான் - தூய்மைமிக்க இராமபிரானைத் துதித்து ஆர்ப்பரித்தான்.

தன்கைச் சூலப்படையை அங்கதன் மார்பிற் செலுத்தக் கும்பகன்னன் முயன்றபோழ்தில் ஓர் மலையைப்பறித்து அவன் உடலிற் பதியுமாறு வீசி எறிந்தான் அநுமன்.

பி - ப். 1. தன்னைத் தன்கை ; வயிரவான்.

3. பார்ப்பிடை ; பாதியுள்ளே, பாகமுள்ளே.

4. செறித்தனன், செறித்தன. 191

1402. தலையினிற் றைத்து வேறோர் தலையென நின்ற தன்ன
மலையினைக் கையின் வாங்கி மாருதி வயிர மார்பின்
உலையுற வெந்த பொன்செய் கம்மியர் கூட மொப்பக்
குலையுறு பொறிகள் சிந்த வீசித்தோள் கொட்டி
[யார்த்தான்.

தலையினில் தைத்து - தலையிலே பதிந்து, வேறு ஓர் தலை என - (பிறிது ஓர் தலை கும்பகன்னனுக்கு முளைத்துள்ளது) என்று (கண்டவர்) கருதுமாறு, நின்றது அன்ன - நின்றதுபோன்ற, மலையினை - அந்த மலையை ; (கும்பகன்னன), கையின் வாங்கி - (தன்) கரத்தால் ஏற்று, மாருதி வயிரம் மார்பின் - அநுமனது வயிரம் ஒத்து உறுதியான மார்பின்கண், உலை உற வெந்த பொன் செய் - உலையிலே பொருந்தியதால் வெந்த பொன்னைப் பணிசெய்கின்ற, கம்மியர் கூடம் ஒப்ப - இருப்புக் கொல்லரின் சம்மட்டியை ஒப்ப, குலை உறு பொறிகள் சிந்த - ஈரக்குலையினின்றும தீப்பொறிகள் சிதறும்படி, வீசி - எறிந்து, தோள் கொட்டி ஆர்த்தான் - புயங்களைத் தட்டிக்கொண்டு முழங்கினான்.

அநுமன் எறிந்த மலை கும்பகன்னன் சிரத்தில் தைத்தது அவ்விராக்கதனுக்கு மற்றோர் தலை முளைத்து நின்றாற்போன்றிருந்தது எனப்பட்டது. தற்குறிப்பேற்றம். பொன் - இங்கே கரும்பொன். கரும்பொன் அல்லது இரும்பினைக் கம்மியர் சம்மட்டி கொண்டு அடிக்குங்கால் தீப்பொறிகள் சிந்துவதுபோன்று, மாருதி வயிர மார்பிலும் தீப்பொறி பறக்க எனப்பட்டது. தோள்

கொட்டி ஆர்த்தது: வீரம்பற்றி எழுந்தது. குலையுறு என்பதற்குத் தொகுதியாகப் பொருந்திய எனினுமாம்.

பி - ம். 1. நின்றதன்னா, நின்ற வந்த, நின்ற தம்மா.
3. வெந்துமிக்க விரும்பின் வீற்கூடம்; வெந்த பொன்மேற்.
4. கோலையுறு. 192

அங்கதனை வாநரவீரர் தூக்கிச்செல்ல, அநுமன் கும்பகன்னன்மீது எறிய வேறோர் மலையைக் கொள்ளுதல்

1403. அவ்வழி வாலி சேயை யரிகுல வீர ரஞ்சார்
வவ்வினர் கொண்டு போனுர் மாருதி வானை முற்றும்
கவ்விய தனைய தாங்கோர் நெடுவரை கடிதின் வாங்கி
எவ்வமி லாற்ற லானை நோக்கிநின் றினைய சொன்னுன்.

அப்பொழுது - அந்தச்சமயத்தில், அரிகுல வீரர் அஞ்சார் - வாநரக்குலத்து வீரர்கள் பயமிலராய், வாலி சேயை வவ்வினர் கொண்டு போனுர் - அங்கதனைப்பற்றித் தூக்கிக்கொண்டு சென்றிட, மாருதி - அநுமன், வானை முற்றும் கவ்வியது அனையது ஓர் நெடு வரை - விண் அடங்கலும் கௌவிக்கொண்டதுபோன்று காணப் பெற்ற ஓர் பெரிய மலையை, ஆங்கு - அங்கே, கடிதின் வாங்கி - விரைவுடன் பெயர்த்து, எவ்வம் இல் ஆற்றலானை நோக்கி நின்று இனைய சொன்னுன் - களங்கமற்ற வன்மை சான்ற கும்பகன்னனைப் பார்த்து நின்று, இனைய சொன்னுன் - இவ்வாருன வார்த்தைகளை மொழிந்தான்; கூறியதை அடுத்த கவியிற் காண்க.

அஞ்சார், வவ்வினர்: முற்றெச்சங்கள். வௌவிய, கௌவிய என்பன வவ்விய கவ்விய என நின்றவை போலிகள். எவ்வமில் ஆற்றலானை என்பது உண்மையிற் புகழ்ந்தது; வஞ்சப்புகழ்ச்சியன்று. 'வீரரையார் வியவாதார்' (கிட்கிந்தா. 297); 'இளையவன்றனக்குமாற்ரு தென்பெருஞ் சேனை நம்ப' (யுத்த. 1226).

பி - ம். 1. அவ்வயின்.
2. போந்தார்.
3. மராமரங் கடிதின் வாங்கி, கையின் வாங்கி.
4. சொல்வான். 193

## அனுமனுக்கும் கும்பகன்னனுக்கும் வீரவாதம்

1404. எறிகுவ னிதனை நின்மே லிமைப்புறு மளவி லாற்றல்
மறிகுவ தன்றி வல்லாய் மாற்றினை யென்னின் வன்மை
அறிகுவ ரெவரும் பின்னை யானுன்னோ டமருஞ் செய்யேன்
பிறிகுவ னுலகில் வல்லோய் பெரும்புகழ் பெறுதி
[யென்றான்.

(அக்காலையில் அநுமன் கும்பகன்னனைப் பார்த்து), ‘ நின்மேல் இதனை எறிகுவன் - உன்மீது இந்த மலையை எறியப் போகின்றேன்; (இதனால்), இமைப்புறும் அளவில் - கண்ணிமைப் பொழுதினில், ஆற்றல் மறிகுவது - உனது வல்லபம் அழிவது ஆகும்; அன்றி - அவ்வாறன்றி, வல்லாய் மாற்றினை என்னின் - (அங்ஙனம் அழியாமல்), வல்லவனே! நீ தடுத்து விடுவாயாகில், எவரும் வன்மை அறிகுவர் - யாரும் உன் வல்லமையை உணர்வர்; பின்னை- அதன் பிறகு, யான் உன்னோடு அமரும் செய்யேன் - நான் உன்னுடன் போர்புரியமாட்டேன்; பிறிகுவன் - அப்பாற் சென்று விடுவேன்; வல்லவனே - சாமர்த்தியசாலியே! உலகில் பெரும புகழ் பெறுதி - உலகில் மிக்க புகழை நீ பெறுவாய்’ என்றான் - என்று பகர்ந்தான் அநுமன்.

இங்கு அநுமன் கூறிய வஞ்சினம் காண்க. பிரிகுவன் என்பது எதுகை நோக்கிப் பிறிகுவன் என வந்தது.

பா - ம். 1. இமைப்புறு மளவும் ; ஆற்றாய்.

2. மறிகுவை யன்றி ; வல்லை, அல்லால் மாற்றிநின் றூற்றில்.

3. பின்னர் ; அமர் நின்னோடு ; அமர்தல், அமைதல்.

4. உலகில் நீயோர், நீயோ, நீயே. 194

## அதற்குக் கும்பகன்னன் விடை

1405. மாற்றமஃ துரைப்பக் கேளா
மலைமுழை திறந்த தென்னக்
கூற்றுறழ் பகுவாய் விள்ள
நகைத்து நீ கொணர்ந்த குன்றை

ஏற்றன னேற்ற காலத்
திறையதற் கொற்க மெய்தின்
தோற்றன னுனக்கென் வன்மை
சுருங்குமென் றரக்கன் சொன்னான்.

மாற்றம் அஃது உரைப்ப கேளா - (அநுமன்) கூறிய அந்த வார்த்தைகளைச் செவியேற்று, மலைமுழை திறந்தது என்ன - மலைக் குகை பிளந்தாற் போன்று காணப்படுமாறு, கூற்று உறழ் பகுவாய் விள்ள - யமனது பிறந்த வாயை ஒத்த தன் வாய் திறப்ப, நகைத்து - சிரித்து, (அநுமனைப் பார்த்து) 'நீ கொணர்ந்த குன்றை - நீ பெயர்த்து வந்த மலையினை, ஏற்றனன் - பொறுத்தவனாய், ஏற்ற காலத்து - தக்க சமயத்திலே, அதற்கு இறை ஒற்கம் எய்தின் - அதனால் சிறிதேனும் தளர்ச்சி யுறுவேனாகில், தோற்றனன் - நான் தோல்வியுற்றவன் ஆவேன்; உனக்கு என் வன்மை சுருங்கும் - உன் ஆற்றற்கு என் ஆற்றல் குறைந்ததாகும்' என்று அரக்கன் சொன்னான் - என்று கும்பகன்னன் பகர்ந்தான்.

மாற்றம் - செய்தி. 'மாற்ற மஃதுரை செய மங்கை யுள்ளமும்' (அயோத்தி. மந்தரை. 51). கேளா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். மலை முழை திறந்ததென்ன; (ஒப்பு): 'மேருப் புழையென' (யுத்த. 1272). 'கைம்மலை ஓம்புறும் முழை' (யுத்த. 1273); 'மின்திகழ் பிறம்பற் கூற்றம் விலாப்புடை வீங்க உண்ணத்' திறக்கும் வாய் போன்ற வாயாதலின், கூற்றுறழ் பகுவாய் எனப் பட்டது. நகைத்து; நகை இங்கு வெகுளிநகை; எள்ளல் எனினு மாம். இறை: ஒரு சிறிய கால அளவு; 'இனியிறை தாழ்த்தி யாயின்' (யுத்த. 1298); ஒற்கம் - தளர்வு; 'ஒற்கத்தி னூற்றாந் துணை' (குறள். 416); இறுதியடியில் உனக்கு என்பதை இடைநிலை விளக்காக்கித் தோற்றனன் வன்மை என்ற இரண்டுடன் கூட்டலு மாம்.

பி - ம். 1. உரைத்தலோடும்.
2. ஏரிந்துநி.
3. அதற்கிடைவறுகில்.
4. உனக்கே வன்மை. 195

## மலை பொடிப் பொடியாய்ப் போதல்

1406. மாருதி வல்லை யாகில்
நில்லடா மாட்டா யாகில்
பேருதி யுயிர்கொண் டென்று
பெருங்கையா னெருங்க விட்ட
காருதிர் வயிரக் குன்றைக்
காத்திலன் றோண்மே லேற்றான்
ஓருதிர் நூறு கூறா
யுக்கதெவ் வுலகு முட்க.

மாருதி - அநுமன், 'அடா! வல்லை யாகில் நில் - நீ வல்லவனா இல் நில், மாட்டாய் ஆகில் - நிற்க வன்மையற்றவனாயின், உயிர் கொண்டு பேருதி - உயிர் பிழைத்து அப்பாற் செல்', என்று - என்று மொழிந்து, பெருகையால் - (தனது) பெரிய கரத்தினால், நெருங்கிவிட்ட - (அரக்கனை) அணுகுமாறு விடுத்ததும், கார் உதிர் - மேகங்களும சிதறுதற்குக் காரணமானதுமான, வயிரம் குன்றை - உறுதியான அம்மலையை, காத்திலன் - தடுத்திலன்; தோள்மேல் ஏற்றான் - தோளின்மீது தாங்கினான்; (அங்ஙிலையில் அம்மலை) எ உலகும் உட்க - எந்த உலகமும் பயன்படுமாறு, ஓர் உதிர் - ஒரு முறை உதிர்கையில், நூறு கூறாய் உக்கது - நூறு பகுதியாகச் சிதறி விட்டது.

மேகத்தையும் சிதறவல்லது என்று அம்மலையின் திறம் கூறப் பெற்றது. பெருங்கையா னெருங்க விட்ட என்பதில் இணையெதுகை காண்க. காத்தல் - தடுத்தல். 'வெகுளி, கணமேயுங் காத்த லரிது' (குறள். 29); 'செல்லிடத்துக் காப்பான் சினங் காப்பான்' (குறள். 301).

பா - ம். 2. உயிர்கொண்டென்ன, நெருங்கி.

3. காருறு, காத்தினன், கரந்திலன், தோளில்.

4. உக்கதப் கெவருமுட்க.

## கும்பகன்னன் வலிமை கண்டு மாருதி அப்பாற்போதல்

1407. இளக்கமொன் றின்றி நின்ற வியற்கைபார்த் திவன [தாற்றல்
அளக்குறற் பாலு மாகா குலவரை யமரி னூற்ற
துளக்குறு நிலைய னல்லன் சுந்தரத் தோளன் வாளி
பிளக்குமேற் பிளக்கு மென்னு மாருதி பெயர்ந்து போனான்.

இளக்கம் ஒன்று இன்றி நின்ற - (தான் வீசிய மலை தாக்கப் பெற்றும்), சிறிதும் சோர்வு இல்லாது நின்ற, இயற்கை பார்த்து - தன்மையைக் கண்டு, மாருதி - அநுமன், 'இவனது ஆற்றல் அளக்குறற் பாலும் ஆகா - இவனது வல்லபம் (இத்துணைய தென்று) அளவிட்டுரைக்க வியலாதது ஒன்று; குலவரை - எட்டுக் குலமலைகளுமே, அமரின் ஆற்றா - (இவனுடைய) வன்மையைப் பொறுக்கமாட்டா; துளக்குறு நிலையன் அல்லன் - யாரும் அசைக்கக்கூடிய தன்மை யுடையவன் அல்லன் (இவன்); (இவனை), சுந்தரம் தோளன் - அழகிய தோள்களை யுடையவன் ஆன இராம பிரானுடைய, வாளி பிளக்குமேல் பிளக்கும் - அம்புகள் பிளக்கு மானால் பிளக்கும்' என்னு - என்று பகர்ந்து, பெயர்ந்து போனான் - அப்பாற் சென்றான்.

இளக்கம் - தளர்வு; 'இளக்கமில் கடற்படை' (சுந்தர. 166); குலவரை ; கயிலை; இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஹேமகூடம், கந்தமாதனம் முதலியன. கிட்கிந்தா. 174; உரைக்குறிப்புக் காண்க. துளக்குதல் - அசைத்தல் ; சுந்தர. 411 ; 'துளக்கலாகா' (நன்.).

பி - ம். 1. அமரினூற்றல், ஆற்ற, ஆற்றுத்.
3. நிலையான்.
4. பெயரப், பிழைத்து. 197

இங்கு அதிகப் பாடல்கள் :—

மாருதிபோத லோடும் வயம்படைத் தலைவர் மற்றோர்
மாருத மென்னப் பொங்கி வரையொடு மரங்கள் வாரிப்
போரெதிர் புகக்கண் டன்னோர் அனைவரும் புரண்டு போரிற்
சோர்தரப் படைகள் வாரிச் சொரிந்தட லரக்க னார்த்தான். 1

மழுவோடு கணிச்சி சூலம் வாள்மணிக் குசை மீட்டி
யெழுவயி லெஃகமென்றிப் படைமுத லெவையும் வாரி
மழையெனப் பொழிந்து நூறு யோசனை வரைப்பில் மேவும்
அளவறு கவியின் சேனை யறுத்தொரு கணத்தில் வந்தான்.

## கும்பகன்னன் வலிமை கண்டு தேவர்கள் நடுங்குதல்

1408. எழுபது வெள்ளத் துள்ளா ரிறந்தவ ரொழிய யாரும்
முழுமுதன் மாள்வ ரின்றே யிவன்வலத் தமைந்த முச்சூல்
கழுவினி லென்று வானோர் கலங்கினர் நடுங்கி னரால்
பொழுதினி னுலக மூன்றுந் திரியுமென் றுள்ளம் பொங்கி.

'எழுபது வெள்ளத்து உள்ளார் - எழுபது வெள்ளமாக அமைந்த சேனை வீரரில், இறந்தவர் ஒழிய - மரித்தவர் நீங்க, யாரும் - எஞ்சியிருந்த யாவரும், இவன் வலத்து அமைந்த மு சூல் கழுவினில் - இவனது வலது கையில் பொருந்திய முத்தலை சூல மாகிய கழுவினில், இன்றே - இத்தினத்திலேயே, முழுமுதல் மாள் வர் - அடியோடு இறந்தொழிவர்', என்று - என்று கவன்று, வானோர் கலங்கினர் - தேவர்கள் மனக்கலக்கம் எய்தினர்; (அஃதன்றியும் இவனால்). 'பொழுதினின் - சிறிதுகால அளவிலேயே, உலகம் மூன்றும் திரியும் - மூன்று உலகங்களும் நிலை மாறுபடும்', என்று உள்ளம் பொங்கி - என்று மனம் கொதித்து, நடுங்கினர் - நடுக்க மெய்தினர். ஏ : ஆல் - அசை.

வானர சேனை எழுபது வெள்ளம் என்று பல இடங்களிலும் இக்காப்பியத்திற் குறிக்கப் பெற்றுளமை காணலாம். (கிட்கிந்தா. 724 : சுந்தர. 520, 605; முழுமுதல் : வேருடன் என்க. (யுத்த. 427) சூல் - சூலம் என்பதன் விகாரம். வலத்தமைந்த என்பதற்கு வன்மை யுடன் கூடிய எனினுமாம். உலகம் மூன்றும் திரியும் என்பதற்கு 'எல்லாரையும் கொன்று இந்த உலகங்களிலும் வந்து கொல்வான்' என்பது பழையவுரை. முச்சூற் கழு - சூலப்படை.

பி - ம். 2. முழுவதும்; மாய்வரென்ன.

3. கழுவினி லென்ன; நடுங்கி யிற்றை.

4. பொழுதினின்று; உலகமெங்கும். 198

1409. தாக்கினார் தாக்கி னார்தங் கைந்தலஞ் சலித்த தன்றி
நூக்கினா ரில்லை யொன்றும் நோவுசெய் தாரு மில்லை
ஆக்கினான் களத்தி னாங்கோர் குரங்கின தடியு மின்றிப்
போக்கினா னாண்மை யாலே புதுக்கினான் புகழை யன்னான்.

தாக்கினார் - (கும்பகன்னனை வானர வீரர்) எதிர்த்தார்கள்; தாக்கினார் தம் கைதலம் சலித்தது அன்றி - (அங்ஙனம்) தாக்கினவரின் கைகள் ஓய்ந்தன வல்லாமல், நூக்கினார் இல்லை - அவனை அசைத்துத் தள்ளியவர் எவரும் இல்லை; ஒன்றும் நோவு செய்தாரும் இல்லை - (அவனுக்கு) வருத்தம் எழச் செய்தவரும் இல்லை; ஆக்கினான் - (போரை எழுப்பியவனான) கும்பகன்னன், ஆங்கு - அங்கே, களத்தின் - போர்க்களத்தில், ஓர் குரங்கினது அடியும் இன்றி-ஒரு குரங்கினது அடிச்சுவடுகூட இல்லாமல், போக்கினான் - அழித்தவனாய், அன்னான் - அவ்வரக்கன், ஆண்மையாலே புகழை புதுக்கினான் - தன் வீரத்தாலே புகழைப் புதுப்பித்தான்.

தாக்கினார் தாக்கினார் என்று அடுக்காகக் கொண்டு, விடாது தாக்கிய வானர வீரர் எனினுமாம். நூக்குதல் - அசைத்தல்; 'நூக்கிப் புறந்திரு போகென்னு மின்னாச்சொல்' (நாலடி. 326); 'நூக்கலாகாத காதல்' (ஆரணிய. 643); மற்றும் சுந்தர. 53, 91; அடி: அடிச்சுவடு.

பா - ம். 1. சலிந்ததல்லால்.
2. இல்லை யாரும்.
3. ஆக்கினார்.
4. போக்கினான் வலந்திலே, ஆண்மையோடும்; புகழை யம்மா. 189

கும்பகன்னன் அறைகூவல்

1410. சங்கத்தார் குரங்கு சாயத்
தாபத ரென்னத் தக்கார்
இங்குற்றா ரல்ல ரோதான்
வேறுமோ ரிலங்கை யுண்டோ
எங்குற்றா ரெங்குற் றாரென்
றெடுத்தழைத் திமையோ ரஞ்சத்
துங்கத்தோள் கொட்டி யார்த்தான்
கூற்றையுந் துணுக்கங் கொண்டான்.

கூற்றையும் துணுக்கம் கொண்டான் - யமனையும் அச்சுறுத்து மாறு செய்தவனை கும்பகன்னன், 'சங்கத்து ஆர் - கும்பலாக நிறைந்த, குரங்கு சாய - குரங்குகள் இறந்தொழிந்தனவாகவும், தாபதர் என்ன தக்கார் - தவத்தோர் என்று புகழத்தக்க இராம இலக்குவர், (கண்ணிற் பட்டாரில்லையே அவர்கள்) இங்கு உற்றார் அல்லரோ - இங்கு வந்திலரோ? வேறும் ஓர் இலங்கை உண்டோ - (அவர்கள் முற்றுகை யிட்டதாகக் கூறுமாறு இந்த இலங்கையே யன்றிப் பிறிதொரு இலங்கையும் உள்ளதோ? எங்கு உற்றார் எங்கு உற்றார் - (அந்தத் தாபதர்கள்) எங்குள்ளனர் எங்குள் ளனர்', என்று - என்று எடுத்து அழைத்து - குரலை யுயர்த்தி அறைகூவி, இமையோர் அஞ்ச - தேவர்கள் அச்சம் உறுமாறு, துங்கம் தோள் கொட்டி ஆர்த்தான் - உயர்ந்த தன் புயங்களைத் தட்டிக் கொண்டு வீர முழக்கம் செய்தான். ஓகாரம் ஐயவினா. தான : அசை.

சங்கம் : ஓர் பேரெண் ; அநேக சங்குகள் கூடினது ஓர் வெள்ளம் என்ப. தாபதர் - தவத்தர். 'இருவர் மானுடர் தாபதர்,' (ஆரணிய, 365); வீரரல்லர் என்ற குறிப்பு. 'எடுத்தழைத்தல் எடுத்தொருவாரண மழைப்ப நீயோவன் றேனென்றாய்' (ஆரணிய. 49) ; கூற்றையும் துணுக்கம் கொண்டது உத்தர காண்டத்துக் காண்க.

பி - ம். 1. சங்கொத்த ; தானை தாங்கும்.
2. இங்குந்தான்.
3. எங்குத்தானுற்ற ரென்றென்று. 200

உதிரப்பெருக்கின் வருணனை

1411. பறந்தலை யதனின் வந்த பலபெருங் கவியின் பண்ணை
இறந்தது கிடக்க நின்ற விரிதலை யியாரு மின்றி
வறந்தது சோரி பாய வளர்ந்தது மகர வேலை
குறைந்தது உவாவுற் றேதங் கிளர்ந்துமீக் கொண்ட
[தென்ன.

பறந்தலை - பரந்த போர்க்களம், அதனின் வந்த - அத னிடத்து வந்த, பல பெரு கவியின் பண்ணை - பல பருத்த குரங்கு

களின் தொகுதி, இறந்தது கிடக்க நின்ற - இறந்தன ஒழிய நின்ற வாநரக்கூட்டம், இரிதலின் - நிலைகுலைந்து ஓடியதனால், யாரும் இன்றி வறந்தது - எவருமின்றி வெறிதாயிற்று; குறைந்தது மகர வேலை - (அளவும் ஒலியும்) குறைந்து நின்ற ஆழி; உவா உற்று ஓதம் கிளர்ந்து மீ கொண்டது என்ன - உவா நாளில் பூரண சந்திரனைப் பொருந்தி பெருக்கு எழுந்து மேலே பொங்குவது என்னுமாறு, சோரி பாய வளர்ந்தது - இரத்தம் வந்து வீழ்தலின் அளவின் மிக்கு விளங்கிற்று.

பறந்தலை - போர்க்களம்: 'கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை' (புறநா. 19). 'களிற்றுக் கணம்பொருத கண்ணகன் பறந்தலை' (புறநா. 35). 'வேந்து புறங்கொடுத்த வியந்துகு பறந்தலை' (புறநா. 375); பண்ணை - தொகுதி: 'ஒலித்தான் முரசின் பண்ணை' (யுத்த. மகரக்கண். 9): 'விண்ணவர் பண்ணையார்ப்ப' (ஆரணிய. 927): 'பணைத்த பண்ணையில்' (ஆரணிய. 1148). சோரி: உதிரம் சொரிதல் என்ற காரணக்குறி. மகர வேலை கடல்: பூரண மதிகண்டு கடல் பொங்குவது இங்குக் குறிப்பிடப் பட்டது. 'உவவின நாண்மதி' (திருக்கோ. 108); (ஒப்பு): (யுத்த. அதிகாயன். 276). ஓதம் - பெருக்கு: 'ஓதங்கொள் கடலன்றி' (ஆரணிய. 48).

பி - ம். 2. நின்ற நிரிதலால்.
3. வலந்தது நோக்கினைந்து.
5. குறைந்தன, வளர்ந்தன, குறைந்துளது, குறைந்ததவ். 201

வேறு

இலக்குவன் பொருதல்

1412. குன்றுங் கற்களு மரங்களுங் குறைந்தன குரங்கின்
வென்றி யம்பெருஞ் சேனையோர் பாதியின் மேலும்
அன்று தேய்ந்ததென் றுரைத்தன ரமரர்கன் றுவப்பச்
சென்றி தாக்கின னெருதவிச் சுமித்திரை சிங்கம்.

'குன்றும் கற்களும் மரங்களும் குறைந்தன - மலைகளும் கற்களும் மரங்களும் (பயன்படுத்தியதனால்) அளவிற் குறுகின:

குரங்கின் - குரங்கினுடைய, வென்றி அம்பெரு சேனை - வெற்றி மிக்க அந்தச் சேனையானது, அன்று ஓர் பாதியின்மேலும் - அன்று ஓர் பாதிக்கு மேலாக, தேய்ந்து - அழிந்து ;' என்று உரைத்தனர் - என்று கூறினர், (வானரர்கள்); (அந்நிலையில்) அமரர் - தேவர்களும், கண்டு உவப்ப - கண்ணுற்று மகிழும்படி, ஒரு தனி சுமித்திரை சிங்கம் - மிகவும் ஒப்பற்ற சுமித்திரையின் சிங்கம்போன்ற புதல்வனான இலக்குவன், சென்று - (அக்கும்பகன்னனிருக்கும் இடத்தை) அடைந்து, தாக்கினன் - எதிர்த்தான்.

உரைத்தனர் : முற்றெச்சம். சுமித்திரை சிங்கம்: இலக்குவன்; (ஒப்பு): 'சுமித்திரா நந்த வர்த்நந' (முதநூல்). சிங்கம் உவமையாகுபெயர் ; வீரியத்திலும் தலைமையிலும் கம்பீரத்திலும் முன் பின்னோக்கி பொருவதிலும் நடப்பதிலும் உவமை என்க. 'சுமித்திரை சிங்கத்தைத் தொடர்' (யுத்த. 1451). 'திருவினயகனுரை செயச் சுமித்திரைச் சிங்கம்' (ஆரணிய. 982). நெறிதிறம்பாத் தன் மெய்யை நிற்பதாக்கி, இறந்தான் தன் னிளங்தேவி யாவர்க்கும் தொழுகுலமாம் இராமன் பின்பு, பிறந்தானும் உளனென்னப் பிரியாதான் தனைப்பயந்த பெரியாள்' (அயோத்தி. குகப். 68) இச் சுமித்திரை.

பி - ம். 3. இன்று ; உரைத்தலும் : அமரும். 202

1413. நாணெ றிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற்
பூணெ றிந்தனர் படியிடை யிடிபொடித் தென்னச்
சேணெ டிந்தெழு திசைசெவி டெறிந்தன வலகை
தூணெ றிந்தன கையெடுத் தாடின துணங்கை.

சிலையினை நாண் எறிந்தனன் - (இலக்குவன்) தனது வில்லினது நாணினைக் குணத்தொனி செய்தான் ; அரக்கியர் நகு பொன் பூண் படியிடை எறிந்தனர் - (அதனால் பல அரக்கர் மரிக்கவே) அவர்களுடைய மனைவிமாரான அரக்கியர்கள் விளங்குகின்ற பொற் பூணை (பொற்றாலியை)க் கழற்றித் தரையில் வீசினர் ; படி இடை இடி பொடித்து என்ன - பூமியினிடத்தே இடி தோன்றினாற் போன்று, சேண் எறிந்து எழு - வெகுதூரம் நெறிப்பட்டும் காணப்படும், திசை செவிடு எறிந்தன - திக்குகள் செவிடுபட்டன ; அலகை - பேய்கள், தூண் எறிந்தன - தூண்களை வீசினாற் போன்ற, கையெடுத்து துணங்கை ஆடின - கைகளைக் கோத்துக் கொண்டு துணங்கைக் கூத்தயர்ந்தன.

இலக்குவன் பேர்த்திறம் இங்கு நன்கு குறிக்கப்பட்டது. நாண் எறிந்தனன் என்று கூறி, அம்பு எய்தான் என்றே, அது பட்டுப் பல அரக்கர்கள் இறந்துபட்டார் என்றே கூருது, அவர்கள் இறந்ததன் விளைவாக அவர்தம் மனைவியர் தமது மங்கல நாளினைக் கழற்றியெறிந்தனர் என்று குறித்த திறம் அறிந்து மகிழத்தக்கது. (ஒப்பு): எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார். (பால. கார்முக. 34): பொற்பூண்; பொன்னுபரணமாகிய மங்கல நாண்; இந்நூல் நிலையத்துப் பதிப்பான கிட்கிந்தா காண்டம். 603-ஆம் செய்யுளின் உரைக் குறிப்புக் காண்க. துணங்கை: 'துணங் கையயர்ந்து' (சீவக. 3069): 'பழுப்புடையிருகை முடக்கியடிக்கத் துடக்கிய நடையது துணங்கையாகும்' (திருமுரு. 56: உரை): 'முடங்கிய விருகை பழுப்புடை யெற்றத், துடக்கிய நடையது துணங்கையாகும்' (திவா: பிங்களம்). பொடித்தல் - தோன்றுதல்; 'ஊன்றலைப் பொடித்தாங் கணையசெஞ் சூட்டின்' (சீவக. 2105). சேண் எறிதல்; வெகுதூரம் தாக்குதல் எனினுமாம். படியிடை என்பதை இடைநிலை விளக்காக எறிந்தனர், இடிபொடித்தென்ன என்ற இரண்டினெடும் கூட்டுக.

பி - ம். 1. பூணெறிந்தன.

4. கையெடுத்துறைந்தன துணங்கை. 203

1414. இலக்கு வன்கடி தேவின விரைபெரு திரைப்ப
சிலைக்க டுங்கணை நெடுங்கணஞ் சிறையுடன் செல்ல
உலைக்கொ டுங்கனல் வெதும்பிட வாயெறிந் தோடிக்
குலக்க யங்களிற் குளித்தன குடித்தன குருதி.

இலக்குவன் கடிது ஏவின - இலக்குவன் (நாண் எறிந்தபின்) விரைவாக விடுத்தனவும், இரைபெருது இரைப்ப - இரை பெருமையின் சீறுகின்றனவுமான அம்புகளின், சிலை கடு கணை - வில்லினது கொடிய அம்புகளின், நெடு கணம் - பெருந்தொகுதிகள், சிறையுடன் செல்ல - சிறகுகளுடன் சென்றதனுல், உலை கொடுகனல் வெதும்பிட - உலைக்களத்தின்கணுள்ள கொடிய தழல் வெப்புறுமாறு, வாய் எறிந்து ஓடி - வாயினுல் நெருப்பினை உமிழ்ந்துகொண்டு விரைந்து, குலம் கயங்களில் குளித்தன - எட்டுத் திக்குகளிலும் உள்ள யானைகளின் குடர்களில் மூழ்கினவாய், குருதி குடித்தன - அவற்றின் இரத்தத்தைப் பருகின.

அம்புகள் வாயெறிந்தோடிக் குறுதி குடித்தன என்க. அம்பின் இரை என்பது அம்பினால் தாக்கப்படும் பொருள். உண்டற் குரியதல்லாப் பொருளை யுண்டது போன்று கூறியது. 'இரை பெருதிரைப்ப' என்ற இடத்துப் பிராசம் காண்க. இரைத்தல்: சிறுதல் ஆதல்: 'இறைக்கின்ற பாம்பினை' என்ற இடத்தும் காண்க. 'இரைத்தநெடும் படையரக்கர்' (ஆரணிய. 554) 'இரைத்த மறை நாலினோடு' (ஆரணிய. 160). கடுங்கனை நெடுங்கணம் என்ற தொடரில் பிராசம் காண்க. இச் செய்யுட்கண் கடிது, கடுங்கனை, கொடுங்கனல், வெதும்பிட, எரிந்து என்ற கடுமையான பல சொற்கள் அம்புகள் இழைத்த அரிய செயலின் கடுமையைக் குறித்தன. குலக்கயங்கள் எட்டுதிக்கு யானைகள், கயங்கள் யானைகள் என்று பொருள் படுவதோடு, குளித்தன என்பதற்கேற்பக் குளங்கள் என்றும் பொருள்படும். சிலேடை நயம் ஓர்க. 'குலக்கயம் கூட்டமான யானை' என்பது பழையவுரை, எரிதீண்டப் பெற்றூர் அடுத்து அதற்கு மாற்ருகக் குளித்தல் உண்டாதலின் 'எரிந்தோடிக் கயங்களிற் குளித்தன' என்ற கூறிய நயம் காண்க.

பா-ம். 1. ஏளியது ; பொருது.

2. இடைச் செல்லா.

3. உலைக்கடுங்கனல், உலக்கவெங்கனை ; வெதும்பின். 204

1415. அலைப டைத்தவா ளரக்கரைச் சிலகழுத் தரிவ
சிலசி ரத்தினைத் துணித்தவை திசைகொண்டு செல்லக்
கொலைப டைத்தவெங் களத்திடை விழாக்கொடு போவ
தலைவ டைத்தன போன்றன வால்நெடுஞ் சரங்கள்.

சில - சிலஅம்புகள், அலை படைத்த வாள் அரக்கரை கழுத்து அரிவ - கடல் நிறம் படைத்த கொடிய அரக்கரைக் கழுத்தரிவன வாயின; சில நெடு சரங்கள் - சில நீண்ட அம்புகள், சிரத்தினை துணித்தவை - தலைகளைவெட்டி, கொலைபடைத்த வெம்களத்திடை - கொலைத் தொழில் நிறைந்த கொடிய களத்தினில், விழா - விழாத படி, கொடுபோவ - (அத்தலைகளைக்) கொண்டு போவனவாகி, திசைகொண்டு செல்ல - திக்கெல்லையி லெடுத்துச் செல்வதனால் தலைபடைத்தன போன்ற - தலைபடைத்தவற்றை நிகர்த்தன. ஆல்: அசை.

சில நெடிய அம்புகள் சிரத்தினை வெட்டி அச்சிரங்கள் போர்க் களத்து விழாதபடி கொண்டு செல்வனவாகித் தலை பெற்றன போன்றன எனப்பட்டது. தற்குறிப்பேற்றவணி. வாள் அரக்கர் - வாளேந்திய அரக்கருமாம். விழாக்கொடு போவ என்பதற்குப் பகைவரை வெற்றி கொண்டு அவர்தம் தலைகளைத் துணித்தோம் என்று விழாக்கொண்டாடின எனினுமாம். இங்கு விழா; திருவிழா.

பி - ம். 1. அரியச்.

2. சில கழுத்தினிற் றைத்தனவை, கொண்டு செல்வ.

3. களத்தினில்; விழுந்தலைக் கொடியோர், விரைகொண்டு குளிப்ப, குழாங் கொண்டு விரையிற்.

4. போன்றன; இலக்குவன் சரங்கள். 205

1416. உருப்ப தங்களை யொப்பன சிலகணை யோடைப்
பொருப்ப தங்களை யுருவிமற் றப்புறம் போன
செருப்ப தம்பெரு வரக்கர்தந் தலைபல சிந்திப்
பருப்ப தங்கள்புக் கொளிப்பன முழைபுகு பாம்பின்.

உரு பதங்களை ஒப்பன சில கணை - (தமது) உருவம் சூரியனை நிகர்ப்பனவான சில அம்புகள், ஓடை பொருப்பு-முகபடாமணிந்த மலைபோன்ற யானைகளையும், அதங்களை - மரங்களையும், உருவி - துளைத்து, மற்று - பின், அப்புறம் போன - அப்பாற் சென்றனவாய், செரு பதம் பெறு அரக்கர் தம் பலதலை சிந்தி - போரில் (நிலைத்து) அடிவைக்கப்பெறாத அரக்கரின் பல தலைகளைச் சிதறி, முழைபுகு பாம்பின் - குகையில் நுழையும் பாம்புகள் போன்று பருப்பதங்கள் புக்கு ஒளிப்பன - மலைகளிலே நுழைந்து மறைவனவாயின.

பதங்கன் - சூரியன. (திவா) ஓடை: 'உம்பருக்கரசன்மால் கரியினோடை' (ஆரணிய. 13). 'திலகமு மோடையு மிலகுறு நெற்றியது' (வி. பா. 16, 8). போர்க்கண் கசன்று பொருதிறப்பவர் வீரசொர்க்கம் உறுவராகலின், செருப்பதம் பெற எனப்பட்டது. செரு பதம் - போரின்கண் இறந்து அடையும் பதவியான வீர சொர்க்கம். பரம பதம் என்பது காண்க. 'வீரனுடெற்றுயோ' (யுத்த. இராவணன் வதை. 224); அதம் - அத்தி. (தொல். எழுத்து. 203. உரை); செருபதம் பெறு அரக்கர்: போரிற் சென்று பொரும்

பதவியைப் பெருத அரக்கர் எனினுமாம். பொருப்பு உவமவாகு பெயராக யானையைச் சுட்டியது. பருப்பதம்: மலை. 'பருவரையு முயர் வெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்' (பால. குலமுறை. 22).

பி - ம். 2. உப்புறம் போவ.

3. செருப்பதம் பெற, பொரும், பொருது, தலைசிந்திடலாம்.

4. ஒளித்தன. 206

1417. மின்புகுந்தன பல்குழு வாமென மிளிர்வ
பொன்புகுந்தொளிர் வடிம்பின கடுங்கணை போவ
முன்பு நின்றனர் முகத்திற்குங் கடைக்குழை முதுகின்
பின்பு நின்றவர் பிடர்க்குமிவ் விசையொக்கும் பிறழா.

பல் குழு மின் புகுந்தன ஆம் என - பல தொகுதிகளாகிய மின்னல்கள் புக்கன என்று கூறும்படி, மிளிர்வ - ஒளிர்வனவும், பொன்புகுந்து ஒளிர் வடிம்பின - பொன் அமைந்து விளங்குகின்ற, கூர் முனையைப் பெற்றனவுமான, கடு கணை போவ - கொடிய அம்புகள் செல்வனவாய், முன்பு நின்றவர் முகத்திற்கும் - சேனையின் முன்னணியில் நின்றவரின் முகத்திலும், கடை குழை முதுகின் பின்பு நின்றவர் பிடர்க்கும் - பின்னணிப் படையின் பின்புறத்து நிற்பவரின் பிடரிலும், இவ்விசை - இந்த வேகத்தில், பிறழா ஒக்கும் - மாறுபடாமல் ஒத்திருப்பனவாயின.

பல்குழுவாம் மின். கடுங்கணைகள் ஒக்கும் என்க. அம்புகட்கு மின்னல் தொகுதிகள் ஒளியிலும் விரைவிலும் பிறரைத் தாக்குதலிலும் உவமை. அம்புகள் தூசிப் படையினை உருவிக் கடைக்கூழை வரைச் சென்று அதற்குப் பின்னர் நின்றவனுடைய பிடரையும் உருவிச்சென்ற போழ்திலும் அவற்றின் வேகம் குறைந்திலது என்பது கருத்து. கூழை, குழை எனக் குறுகியது. பிறழா: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். பிடர்: கழுத்தின் புறம் 'விதி பிட்ர்பிடித் துந்துகின்றது' (யுத்த. 1299).

பி - ம். 1. மிளிரும்.

2. புகுந்தன, போவ.

3. முன்புகுந்தவர், குழை முதுகிற்.

4. பிடற்றிற்கும். 207

1418. போர்த்த பேரியின் கண்ணன காளத்தின் பொகுட்ட
ஆர்த்த வாயன கையன வானையின் கழுத்த
ஈர்த்த தேரன விவுளியின் தலையன வெவர்க்கும்
பார்த்த நோக்கின கலந்தன விலக்குவன் பகழி.

இலக்குவன் பகழி - இலக்குவன் விடுத்த அம்புகள், போர்த்த பேரியின் கண்ணன் - (தோலால்) மூடப்பெற்ற பேரியின் கண்ணிடத்திற்றுக்குவனவும், காளத்தின் பொகுட்ட ஆர்த்த - காளம் என்ற துளைக்கருவியிலே திரண்ட வடிவாய் ஊதுகின்ற, வாயன - வாயினிற்பாய்வனவும், ஆனையின் கழுத்த-யானைகளின் கழுத்திற் பாய்வனவும், ஈர்த்த தேரன-(குதிரைகளால்) இழுக்கப்பட்ட தேரிற் பாய்வனவும், இவுளியின் தலையன - குதிரைகளின் தலைகளிற் பாய்வனவும், எவர்க்கும்-யாவராயினும் (பார்ப்பின்), பார்த்த நோக்கின - பார்த்த விழிகளிற் சென்று பொருந்துவனவுமாகி, கலந்தன - எங்கும் விரவின.

தோல்கொண்டு போர்த்தப்படுதலின் போர்த்த பேரி எனப் பட்டது. பேரியின் கண், அதாவது குணில் கொண்டடிக்கப்படும் இடம். பொகுட்டு - கொட்டை, இது துளைக்கருவியூதும்போது கொப்பளித்து நிற்கும் வாயினுக்கு இலக்கணை. வாயன கையன - வாயனவும் கைய்னவும் என்க. இக்கருவிகள் வீரர்கட்குத் தமது ஒலியால் மன எழுச்சி தரவியலாத் வண்ணம் அவற்றின் மீது அம்புகள் பாய்ந்தன.

பி - ம். 2. ஆர்த்தவாயின, ஆனையின் முகத்த.
3. ஈர்ந்த தேரின ; தலையின.
4. பார்த்த கண்ணன, நோக்கினும், நோக்கன, தலத்தன. 208

1419. மருப்பி ழந்தன களிறெலாம் வாய்செவி யிழந்த
நெருப்பு குங்கண்க ளிழந்தன நெடுங்கரந் துணிந்த
செருப்பு குங்கடுங் காத்திர மிழந்தன சிகரப்
பொருப்பு ருண்டன வாமெனத் தலத்திடைப் புரண்ட.

களிறு எலாம் - (இலக்குவன் விடுத்த அம்புகளால்) யானைகள் எல்லாம், மருப்பு இழந்தன - தந்தங்கள் இழக்கப்பெற்றனவும்,

வால் செவி இழந்த - வால்களும் செவிகளும் இழந்தனவும், நெருப்பு உகும் கண்கள் இழந்தன - தீப்பொறிகளைக் கக்குகின்ற விழிகளை யிழந்தனவும், நெடுகரம் துணிந்த - பெரிய துதிக்கைகள் அறுபட்டனவும், செரு புகும் கடு காத்திரம் இழந்தன - போரிற் செல்லற் குரிய முன் கால்களை இழந்தனவும் ஆகி, சிகரம் பொருப்பு உருண்டன ஆம் என - மலைச்சிகரம் கீழ் உருண்டது என்னுமாறு, தலத்திடை புரண்ட - பூமியிற் புரண்டன.

இச்செய்யுள் யானைகள் இறந்தமை கூறிற்று. நெருப்பு உகுதல் - வீராவேசத்தின் என்க. காலையிழந்து புரண்டவேழங் கட்குச் சிகரப் பொருப்பு உருளுதல் ஏற்ற உவமை.

பி - ம். 1. வாலுறி யிழந்த.
2. நெடுங்கர மிழந்த, கரந் துமிந்த.
3. செருப்புகுங் கொடுங் காற்திரள், கடுங் காற்றுரம்; சிந்தின. 209

1420. நிரந்த ரந்தொடை நெகிழ்த்தலிற் றிசையெங்கு நிறைந்த
சரந்த லைத்தலைப் படப்பட மயங்கின சாய்ந்த
உரந்த லத்துற வுழைத்தலாற் பிழைத்ததொன் றில்லைக்
குரந்த லத்தினும் விசும்பினு மிதித்திலாக் குதிரை.

தலத்தினும் விசும்பினும் குரம் மிதித்திலா குதிரை - பூமியிலும் ஆகாயத்திலும் தமது ஒற்றைக் குளம்பினால் மிதித்துச் செல்லாத குதிரைகள், நிரந்தரம் - இடையீடின்றி, தொடை நெகிழ்த்தலில் - தொடுத்தலைச் செய்து (இலக்குவன்) விடுதலால், திசை எங்கும் நிறைந்த சரம் - எல்லாத் திக்குகளிலும் சென்று நிறைந்த அம்புகள், தலை தலைப்பட பட - தனித்தனியாக (ஒவ்வொன்றின் மீதும்) விடாது தாக்குதலால், மயங்கின சாய்ந்த - மயக்கமுற்று வீழ்ந்தனவாகி, உரம் - தமது மார்பு, தலத்து உற உழைத்தலால் - தரையிற் படியுமாறு வருத்தமுற்றதனால், பிழைத்தது ஒன்று இல்லை - தப்பிப் பிழைத்தது எதுவும் இல்லை.

குதிரை கண் பட்டமை கூறிற்று. தலத்தினும் விசும்பினும் மிதித்திலா குதிரை என்று குதிரைகளின் அபூர்வமான கதியைக் கூறினர். நிரந்தரம் - எப்பொழுதும்; வடசொல்; 'புலவர் யாரையும் நிரந்தர நோக்குவென்' (ஆரணிய. 188); 'நிர்

நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்' (சுந்தர. 335); தலைத்தலை - ஒவ்வொன்றின் மீதும். (ஒப்பு): ஐங்குறு. 33. இடந்தோறும் எனினுமாம்: (பரிபா. 16, 10). உழைத்தல் - வருந்துதல்; 'குலையிற் பட்டுழைக்கின்றேற்கு' (திவ். திருமாலை. 36); குரம் - குளம்பு: 'குரங்கள் அழுந்தின' (மதுரைக். 390: உரை). 'குரத் துரங்கமும் வெய்ய காலும்' (தக்க. 256).

வி - ம். 1. நிரந்து விற்சூடை; நிறையும்.

2. தலைப்படத் தலைம்பட; மயங்கினர்.

3. உழைத்தலாற்; பிழைத்தலவொருபொற்.

4. மிதித்தில குதிரை. 210

1421. பல்ல வப்படை படப்படு புரவிய பல்கால்
வில்லு டைத்தலை யாளொடு சூதரை வீழ்த்த
எல்லை யற்றசெங் குருதியி னீர்ப்புண்ட வல்லால்
செல்ல கிற்றில நின்றில கொடிநெடுந் தேர்கள்.

பல்லவம் படை - அம்புகளாகிய அந்தப் போர்க் கருவிகள், பட - (தம்மீது) தாக்க, படு புரவிய - இறந்த குதிரைகளை யுடையனவும், பலகால் - பலமுறை, (அந்த அம்புகளால்), வில் உடை தலை ஆளொடு - வில்லினைக் கரத்திற் கொண்ட தலைமகனுடனே, சூதரை வீழ்த்த - பாகரும் கொன்று வீழ்த்தப்பட்டனவுமான, கொடி நெடு தேர்கள் - கொடிகள் கட்டப்பெற்ற பெரிய தேர்கள், எல்லை அற்ற - அளவில்லாத, செம்குருதியின் ஈர்ப்புண்ட அல்லால் - சிவந்த உதிர வெள்ளத்தால் இழுக்கப்பட்டனவேயன்றி, செல்லகிற்றில நின்றில - செல்ல மாட்டாதனவாகித் தேர்கள் நிற்கின்றில.

இது முதல் ஆறு கவிகள் போர்க்கள வருணனை. தேரிற் பூட்டிய குதிரைகளும், தேர் வீரனும் பாகனும் இலக்குவன் அம்புகளால் இறந்துபட்ட வளவில் நடமாட்டமற்ற தேர்கள், உதிர வெள்ளத்தால் இழுத்துச் செல்லப்படுதலின் நில்லாமல் ஓடின என்க. தலையாள் என்றது தேர்மீது அமர்ந்த போர் வீரன். சூதர் - தேர்ப்பாகர்; 'சூதருமுடுகித் தூண்ட' (யுத்த. இராவணன் வதை. 19); பல்லவம் - அம்பு 'கூர்ப்புறு பல்லவங் கொண்ட தூணி (கந்தபு. மூன்று. யுத். 13) பல்லவக்கணை என்ற பாடத்துக்கு மாந்தளிர் போன்ற முனையுடைய கணை என்பது பழையவுரை.

மற்றும் பல்லவக் கணை என்பதற்குப் பல்லவமாகிய கணை என இருபெயரொட்டாக்குக.

பி - ம். 1. பல்லவக்கணை ; படப்படப் ; புரவிகள்.
2. வாளொடும் ; சூதர்கள் வீழ்ந்த.
3. எல்லையுற்ற ; வெங் ; ஈர்ப்புண்டது.
4. மணிநெடுந். 211

1422. பேழை யொத்தகல் வாயன பேய்க்கண முகக்கும்
மூழை யொத்தன கழுத்தற விழ்ந்தன முறைசால்
ஊழை யொத்தன யொருகணை தைத்தன வுதிரத்
தாழி யொத்தவெங் குருதியின் மிதப்பன தலைகள்.

முறைசால் - (பயனைத் தவறாது விளைக்கும்) முறைமை அமைந்த, ஊழை ஒத்தன - ஊழ்வினையை நிகர்த்தனவான, ஒரு கணை - (இலக்குவனுடைய) நிகரற்ற அம்புகள், தைத்தன - தைக்கப் பெற்றனவும், கழுத்து அற விழ்ந்தன - கழுத்துத் துணிக்கப்பட்டதால் விழ்ந்தனவும், பேழை ஒத்து அகல் வாயன - (திறந்த) பெட்டியை யொத்துப் பெரிய வாயினை யுடையனவும், வெம் குருதியின் மிதப்பன - வெம்மையான உதிரத்தில் மிதப்பனவுமான, தலைகள் - தலைகள், பேய் கணம் முகக்கும் மூழை ஒத்தன - பேய்க் கூட்டங்கள் முகக்கும் அகப்பையை நிகர்த்தன ; (அன்றியும்), உதிரம் தாழி ஒத்த - குருதியில் மிதக்கும் பானையையும் ஒத்தன.

பேழை - பெட்டி. 'அணிகலப் பேழை யகந்திறந் தன்ன' (பெருங். இலாவாண. 14 ; 10) : 'யவனப் பேழை' பெருங். 22; 213; முகக்கும் ; 'நாழி முகவாது நானாழி' (மூதுரை. 14); மூழை - அகப்பை ; 'குனுங்கர்நாய் பாற் சோற்றின், மூழை சுவையுணரா தாங்கு' (நாலடி. 32); வாயன, விழ்ந்தன, தைத்தன, மிதப்பன ; வினையாலணையும் பெயர்கள். உதிரத்து ஆழியொத்த எனப் பிரித்துப் பொருள் கோடலுமாம். தலைகள் மூழையினையும் பானையையும் ஒத்தன என்க. தாழி - பானை ; 'வெண்ணெய் திரண்டு வரும் போது தாழி யுடைந்தாற் போன்று' என்பது பழமொழி. 'கண்ணகன் தாழி' (புறநா. 228) 'கவிசெந்தாழிக் குவிபுறத்தி ருந்த'

(புறநா. 238). தற்குறிப்பேற்றவணி. உதிரத்தாழி யொத்த தலைகள் என இயைத்தலும் ஆம். கணைக்கு ஊழ் : தவறுமற் பாய்தற்கு.

பி - ம். 1. வாயின, வாயன்ன.
3. ஒரு கணை தைத்திட, தைந்நவின்.
4. ஒத்த பேருதியின். 212

1423. ஒட்டிநாயகன் வென்றிநாள் குறித்தொளிர் முளைகள்
அட்டி வைத்தன பாலிகை நிகர்த்தன வழிந்து
நட்ட வாமென வீழ்ந்தன துடிகளி னடுவண்
வட்ட வாய்களில் வயங்கிய வருணசா மரைகள்.

அழிந்து - நிலைகுலைந்து, நட்டவாம் என - செங்குத்தாக நட்டாற் போன்று, வீழ்ந்தன - வீழ்ந்தனவான, துடிகளின் நடுவண் - துடிகள் என்னும் பறைகளின் நடுவில், வட்டம் வாய்களில் - வட்ட வடிவான வாய்களில் (அடிக்கப்படும் இடங்களில்) துளைத்துக் கொண்டு, வயங்கிய - பொருந்தினவாகிய, வருணம் சாமரைகள் - பலவன்னங் கொண்ட சாமரைகள், ஒட்டி - அண்மையில் நிகழ இருக்கின்ற, நாயகன் - இராமபிரானுடைய, வென்றி நாள் குறித்து - வெற்றித் தினத்தைக் கருதி, பாலிகை அட்டி வைத்தன ஒளிர் முளைகள நிகர்த்தன - பாலிகைகளில் தோன்றியுள்ள விளங்குகின்ற முளைகளை ஒத்தன.

செங்குத்தாக வீழ்ந்த துடிகளில். அம்புகளால் கிழிக்கப் பட்ட வாய்களில் சாமரைகள் பதிந்து நிற்பவை இராமபிரானுடைய வெற்றி நாளில் திருவிழாவினைக் கொண்டாடுவதற்கு அங்குரார்ப் பணம் செய்தாற்போல் காணப்பட்டது; தற்குறிப்பேற்றவணி. குத்தாக வீழ்ந்த துடிகள் பாலிகைத்தட்டு; அவைகளில் காணப்பட்ட வருண சாமரைகள் அத்தட்டுக்களில் வைத்த முளைகள். இறுதியடி முற்று மோனை.

பி - ம். 1. வென்ற நாள்.
3. வீழ்ந்துநற் ; நவைநிர்.
4. வான்களில், வதிந்தன ; கவரி, தருண சாமரைகள். 213

1424. எரிந்த வெங்கணை நெற்றியிற் படுதலி னியானை
அரிந்த வங்குசத் தங்கையின் கல்வியி னமையா
திரிந்த வேகத்த பாகர்கள் தீர்ந்தன செருவிற்
புரிந்த வாநரத் தானையிற் புக்கன புயலின்.

எரிந்த வெங்கணை -(இலக்குவன் விடுத்த) எரியும் தன்மையுள்ள கொடிய அம்புகள், நெற்றியில் படுதலின்-நெற்றியில் தீண்டுதலால், அங்குசத்து கல்வியின் அமையா - அங்குசத்துக் கற்பனைக்கு அடங்காமல், அரிந்த அங்கையின் - துணிக்கப்பட்ட அழகிய துதிக்கையினவாய், பாகர்கள் தீர்ந்தன -(தம்மைச் செலுத்தும்) பாகர்களை விடுத்தனவாய், திரிந்த வேகத்த - மாறுபட்ட விசையினவாய், செருவில் புரிந்த - போரினை விரும்பிய, வாநரம் தானையில் - குரக்குச் சேனையிலே, புயலின் புக்கன - மேகங்கள் போன்று நுழைந்தன.

எரிந்த வெங்கணை அக்கினியாத்திரமுமாம். வெங்கணை படுதலின் அரிந்த என்க. அங்குசத்துக் கல்வி - அங்குசத்தைப் பிரயோகிக்கும் கல்வித்திறம்; 'கதையினால் வதையின் கல்வி' என்றது காண்க. வீரம் அல்லது வெறிகொண்ட யானைகள் மாவுத்தனை மீறித் தள்ளிச்செல்வது இயல்பு. வேகத்த, தீர்ந்தன என்பன வினையாலணையும் பெயர்கள். புயலின் - மேகம் போன்று. கருநிறத்தால் யானைகட்குப் புயல் உவமை. புரிதல் - விரும்புதல்; 'புகுமுகம் புரிதல்' (தொல். பொ. 261); 'அம்பினாலே நொந்து, வெட்டும் அங்குசத் தடங்காமல் பாகனையும் கொன்று வாநரத் தானையிலே சென்ற யானைகள், வாநரங்கள் வெயிலிலே அடிபடாமல் மேகம் சென்று வளைந்த தொத்தது என்பது பழையவுரை.

பா-ம். 1. படுதோறும், படுதலும்.

2. அங்கையன்; அமையாத்.

3. வேகத்தின்; பாரங்கண்டீர்த்தன, பாரங்கள்டீர்ந்தன, செருநேர்.

4. புரிந்து; புயல் போல். 214

1425. வேனி லானன்ன விலக்குவன் விடுங்கணை விலக்க
மான வெள்ளெயிற் றரக்கர்தம் படைக்கல வாரி
போன போனவன் திசைதொறும் பொறிக்குலம் பொடிப்ப
மீனெ லாமுடன் விசும்பினின் றுதிர்ந்தென வீழ்ந்த.

வேனிலான் அன்ன இலக்குவன்-வசந்தகால மன்னன்போன்ற இலக்குவனுடைய, விடுகணை விலக்க - விடுத்த அம்புகள் தடுத்த தால், மானம் - அபிமானமும், வெள் எயிறு - வெள்ளிய பற்களையும் உடைய, அரக்கர் தம் படைக்கல வாரி - இராக்கதருடைய ஆயுதத் தொகுதிகள், போன போன வல் திசைதொறும் பொறி குலம் பொடிப்ப -(தாங்கள்) சென்ற சென்ற வலிய திக்குகளில் எல்லாம், தீப்பொறித் திரள்கள் தோன்ற, மீன் எலாம் - உடுக்கள் எல்லாம், உடன் - ஒருங்கே, விசும்பினின்று உதிர்ந்தென வீழ்ந்த - விண்ணி னின்றும் சிதறினபோன்று வீழ்ந்தன.

வேனிலான் : வசந்தன் : இவன் போன்ற பேரழகன் இலக்குவன் என்க. 'வேனிலான் விழைந்த சேரி' (சீவக. 111); 'வேனிலான் வருநெறி வெண்முள் வித்தினர்' (சீவக. 2635); வாரி - கடல் ; இங்கு இலக்கணையாற் றிரள். பொடிப்ப - தோன்ற ; 'பொங்கியே பொடிப்ப நோக்கி' (கிட்கிந்தா. 304).

பி-ம். 1. வேனலான் ; கடுங்கணை ; விலக்கா.
2. வாளெயிறு.
3. போன போயின.
4. மீனெலாநெடும். 215

1426. கரங்கு டைந்தன தொடர்ந்துபோய்க் கொய்யுளைக்
[கடுமாக்
குரங்கு டைந்தன வெரிநுறக் கொடிநெடுங் கொற்றத்
தரங்கு டைந்தன தமனியத் தேர்க்குலந் தகர்த்த
அரங்கு டைந்தன வயினெடு வாளிக ளம்மா.

அரம் குடைந்தன அயில் நெடு வாளிகள் - அரத்தினால் அரா வப்பட்டனவாய்க் கூர்மை மிக்க நீண்ட அம்புகள், கரம் குடைந்தன- கையினால் (வில்லிற்) பூட்டப்பட்டவை, தொடர்ந்து போய்-(குதிரைப்

படைகளின்மீது) விடாது சென்று, கொய் உளை - பிடரி மயிரை யுடைய, கடுமா குரம் குடைந்தன - விரைவாகச் செல்கின்ற குதிரைகளினுடைய குளம்புகளைத் துளைத்து, வெரிந்உற - (அந்தக் குதிரை வீரர்) முதுகிட்டு ஓட, நெடுகொடி கொற்றம் தரம் குடைந்தன - (அவர் கொண்டுள்ள) நீண்ட கொடிகளின் வெற்றித்தகவினை அழித்தனவாய், தமனியம் தேர்குலம் தகர்த்த - பொன்னாலியன்ற தேர்த்தொகுதிகளையும் அழித்தன. அம்மா : வியப்பிடைச்சொல்.

இலக்குவனுடைய அம்புகள் குதிரைகளின் குளம்புகளைத் துளைத்துத் தேர்களையும் துளை செய்தன என்பது. கொய்யுளை - பிடரிமயிர் 'கொய்யுளைப் பரியிற' (நைடத. அன்னத்தைக். 23).

பி - ம். 1. தொடர்ந்துயர். நொலைந்து போய்.
3. தரம் குடைந்தென ; அணிநெடுந். அளித்த ; குடைந்த.
4. வாய் நெடும் வாளிகள் ; அனுப்ப. 216

அரக்கர் வீரசுவர்க்கம் அடைந்தமை

1427. துரக்கு மெய்யுணர் விருவினை களையெனுஞ் சொல்லிற்
கரக்கும் வீரதை தீமையை யெனுமிது கண்டோம்
இரக்க நீங்கின ரறத்தொடு திறம்பின ரெனினும்
அரக்க ராக்கையை யரம்பையர் தழுவினர் விருப்பி.

மெய்யுணர்வு - தத்துவ ஞானமானது, இருவினைகளை துரக்கும் - இருவினைகளை ஒழிக்கும், எனும் சொல்லில் - என்ற சொல்லில், வீரதை - வீரப்பண்பானது, தீமையை கரக்கும் - பாவத்தை ஒழிக்கும், எனும் இது கண்டோம் - என்னும் இவ்வுண்மையை உணர்ந்தோம்; (இது எங்ஙனம் எனில்) இரக்கம் நீங்கினர் - இரக்கம் நீங்கப் பெற்றவராய், அறத்தொடு திறம்பினர் எனினும் - தரும மார்க்கத்தினின்று பிறழ்ந்தவராயினும், அரக்கர்- அந்த அரக்கர்கள், (போரில் இறந்து வீரருலகம் புக்கபின் அவர்களின்), ஆக்கையை அரம்பையர் விரும்பி தழுவினர் - அவர்கள் உடலை அரம்பையர்கள் விருப்பமுடன் அணைந்தனர்.

அரக்கர் தீயரே எனினும் அவருடைய வீரச்செயலால் வீரர் உலகம் புகவே அமர மாதர்கள் அவர்களின் உடலைத் தழுவினர் ;

எனவே பாவம் புரிந்தவர்கள் துறக்கம் புகாரெனினும், அவர்களின் வீரமானது அவர்கட்கு அந்த உலகை யளித்தது என்க. மெய்யுணர்வு: பிறப்பு விடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீதவையங்களாலன்றி உண்மையாக உணர்தல். அவ்விபரீத உணர்வானது மறுபிறப்பும், இருவினைப் பயனும் கடவுளுமில்லையெனவும், மற்றுமித் தன்மையனவும் சொல்லும் மயக்க நூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல், இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதல்' என (குறள். 351)ல் பரிமேலழகர் வரைதல் காண்க.

பி - ம். 1. சொல்லும்.

2. விரத்தை, விரங்கள் ; நிமையே. 217

1428. மறக்கொ டுந்தொழி லரக்கர்கள் மறுக்கிலா மழைபோல்
நிறக்கொ டுங்கணை நெருப்பொடு நிகர்வன நிமிர
இறக்க மெய்தினர் யாவரு மெய்தின ரெனினத்
துறக்க மென்பதிற் பெரியதொன் றுளதெனச் சொல்லேம்.

மறம் கொடு தொழில் அரக்கர்கள் - பாவத்துடன் இயைந்த கொடிய செயலைப் புரியும் இராக்கதர்கள், மறுக்கிலா மழை போல் - தவிர்க்க முடியாத மாரிபோற் பொழிந்த, (இலக்குவனுடைய) நிறம் கொடு கணை - ஒளி வாய்ந்த கொடிய அம்புகள், நெருப்பொடு நிகர்வன - தீக்குச் சமமாகி, நிமிர - உயர்ந்து தம்மிது தைத்ததனால், இறக்கம் எய்தினர் யாவரும் - சாவினை யடைந்தவர் எல்லோரும்; எய்தினர் எனின் - (வீரருலகினை) அடைந்தனர் என்றால், அ துறக்கம் என்பதில் பெரியது ஒன்று உளது என சொல்லேம் - அந்த சொர்க்க உலகினைக்காட்டிலும் பெருமை மிக்கது ஒன்று உண்டு எனக்கூறத் துணியமாட்டேம்.

பி - ம். 1. அரக்கர்கள் மறுக்கிலர் ; அரக்கரு ளளப்பில, அரக்கரு மறக்கிலா ; மறப்பால்.

2. காலென நிகர்வன.

3. இறக்க மெய்தின ; எய்தின ரென்னிற், எய்தவு மிடமார். 218

## இலக்குவனம்புகளின் வருணனை

1429. ஒருவ ரைக்கர மொருவரைச் சிரமற் றங்கொருவர்
குரைக முற்றுணை தோளிணை பிறமற்றுங் கொளலால்
விரவ லர்ப்பெரு வெறுமைய வாயின வெவ்வே
றிரவு கற்றன போன்றன விலக்குவன் பகழி.

இலக்குவன் பகழி - இலக்குவன் விடுத்த அம்புகள், ஒருவரை கரம் ஒருவரை சிரம் - ஒருவரைக் கையையும் ஒருவரைத் தலையையும், மற்று - பின்னும், அங்கு - அங்கு, ஒருவர் குரைகழல் துணை - ஒருவரின் ஒலிக்கின்ற வீரக்கழல் புனைந்த இரண்டு கால்களையும் தோளிணை - (மற்றும் ஒருவரை) இரு தோள்களையும், மற்றும் பிற கொளலால் - மற்றும் கிடைப்பனவற்றையும் கவர்ந்து விட்டதால், விரவலர் பெரு வெறுமைய ஆயின - பகைவரைக் கிடைக்கப் பெருத வறுமையை யுற்றனவாகி, வெவ்வேறு இரவு கற்றன போன்றன - வேறு வேறு பொருளை இரத்தலைக் கற்றனபோன்று அலைந்தன.

பகைவர்கள் அனைவரையும் அவர்களின் ஒவ்வோர் உறுப்பினைத் துணித்து நின்ற இலக்குவன் அம்புகள் மற்றும் துணிப்பதற்குப் பகைவரைப் பெருது வாளா திரிந்தன என்பது கருத்து. இனி இலக்குவன் பகழிக்கு இலக்கு ஒன்றும் இல்லாத நிலையில் அப்பகழி, தான் வேண்டும் பொருள் கிடையாதபோது, கிடைத்த பொருளை இரந்து பெறும் பொருளாக ஏற்பவர் போலாயின என்றும் உரைப்பர்.

பி - ம். 2. தாளிணை, தாளினை ; பிவைமுற்றுங்.
3. வறுமைய, வறுமையை. 218

1430. சிலவ ரைக்கரஞ் சிலவ ரைச்செவி சிலர்நாசி
சிலவ ரைக்கழல் சிலவரைக் கண்கொளுஞ் செயலால்
நிலவ ரைத்தரு பொருள்வழித் தண்டமிழ் நிரப்பும்
புலவர் சொற்றுறை புரிந்தவும் போன்றன புங்கம்.

புங்கம் - (இலக்குவன்) கணைகள், சிலவரை கரம் சிலவரை செவி - சிலரைக் கையையும் சிலவரை காதினையும், சிலர் நாசி - சிலரை மூக்கினையும், சிலவரை கழல் - சிலரைப் பாதத்தையும்,

சிலவரை கண் - சிலரை விழிகளையும், கொளும் செயலால் - கவர்கின்ற செய்கையால், நில வரை - நில எல்லையில், தரு பொருள் வழி - கொடுக்கின்ற பொருளின் நிலைமைக்குத்தக, தண் தமிழ் நிரப்பும் - இனிய தமிழ்க் கவிகளை இயற்றுகின்ற, புலவர் சொல்துறை புரிந்தவும் போன்றன - கவிகளின் சொல்லின் துறையை விரும்பினவற்றையும் நிகர்த்திருந்தன.

சரங்கள் நிகர்த்திருந்தன என்க. வள்ளல்கள் தமக்கு அளிக்கின்ற பொருளளவுக்கு ஏற்ப, கவிகள் இயற்றுவதை, பகைவர்களின் ஒவ்வோருறுப்பினையே கொள்ளும் இலக்குவன் அம்புகட்கு உவமையாக்கினர். பொருள் கிட்டிய அளவிற்குக் கவிகள் அமைத்தல் போன்று உறுப்புகள் கிட்டிய அளவிற்கேற்பக் கணைகள் தம் அறுத்தல் தொழிலைச்செய்தன. புலவர் செயல், கவி இயற்றுவது; கணைகளின் செயல் அறுப்பது என்க.

பி - ம். 1. சிலவரைச் சிரம், சிலவரைத் தொடை.
2. சிலவரைக் கரம் ; கொளலுறுஞ்.
3. பொருள் கொண்டு ;
4. புரிந்தன ; சரங்கள். 220

இங்கு அதிகப்பாடல்கள் :—

இலக்கு வன்கொடு மரத்திடை யெரியும் வெம்பகழி
கலக்க முற்றிடும் அரக்கர்தம் கரங்களைக் கடிந்தே
முயக்க வட்டவர் கன்னியர் முன்றிலி னெறிய
வியக்க ரும்விற லாளிகண் டவருயிர் விளிந்தார். 1

வடிசு டர்ப்பெரும் பகழிகள் ஏற்றின வதனத்
தடல ரக்கரும் சிலருள ரவர்தலை யறுத்தாங்
குடனெ டுத்தவர் மணையினுக் குரியகன் னியர்பால்
இடவு வப்பொடும் புழுங்கினர் ஊனிடை யறியார். 2

## அரக்கர் நிலைகெட்டோடுதல்

1431. அறத்தி னின்னுயி ரனையவன் கணைபட வரக்கர்
இறத்து மிங்கிறை நிற்பினென் றிரியலின் மயங்கித்
திறத்தி றம்படத் திசைதொறுந் திசைதொறுஞ் சிந்திப்
புறத்தி னோடினர் பொன்றினர் குருதியே போல.

அரக்கர் - இராக்கதர்கள், ' இங்கு இறை நிற்பின் - இவ்விடத்தில் ஒரு சிறிது காலமேனும் நின்றால், அறத்தின் இன் உயிர் அனையவன் கணைபட - அறக் கடவுளின் இனிய உயிரே போன்றவன் ஆன, இலக்குவனுடைய அம்புகள் தைக்க, இறத்தும்-இறந்தொழிவோம்', என்று - என்று அஞ்சி, இரியலின் - ஓடுகையில், மயங்கி - திகைத்து, திறம் திறம்பட திசைதொறும் திசைதொறும் சிந்தி - பல கூறுகளாகத் திக்குகள் தோறும் சிதறுண்டு, பொன்றினர் குருதியே போல - இறந்துபட்டவரின் உதிர வெள்ளமே போன்று, புறத்தில் ஓடினர் - வெளியே ஓடினர்.

அரக்கர் ஓடினர் என்க.

பி - ம். 3. திசைதொறு மஞ்சி.

4. புறத்தி னோடினர் ஓடின. 221

இங்கு அதிகப்பாடல்கள் :—

குஞ்சரத்தொகை தேர்த்தொகை குதிரையின் தொகைமேல்
விஞ்சு வாளெயிற் றரக்கர்தம் தொகையெனும் வெள்ளம்
பஞ்சி னிற்படு மெரியென விலக்குவன் பகழி
அஞ்சனப்படு கணத்தவை யனைத்தையு மழித்த. 1

வந்தவம் மாப்படை யளப்பில வெள்ளங்கள் கடிய
அந்தி வானெனச் சிவந்ததம் படுகள மமரில்
சிந்தி யோடிய வாக்கரில் சிலர்தச முகனுக்
கிந்த வற்புத முரைத்துமென் றோடின ரிப்பால். 2

## கும்பகன்னன் இலக்குவனது வில்திறமையைப் புகழ்ந்து பொர வருதல்

1432 செருவின் மாண்டவர் பெருமையு மிலக்குவன் செய்த
பொருவி லாண்மையு நோக்கிய புலத்தியன் மருமான்
திரிபு ரஞ்செற்ற தேவனு மிவனுமே செருவின்
ஒருவி லாளரேன் றுயிரங் காலெடுத் துரைத்தான்.

செருவில் மாண்டவர் பெருமையும் - போரில் இறந்துபட்டவர்களின் மிகுதியையும், இலக்குவன் செய்த பொருவில் ஆண்மையும்-

இலக்குவன் காட்டிய ஒப்பற்ற ஆண்மையையும், நோக்கிய - நேரில் கண்ட, புலத்தியன் மருமான் - புலத்திய முனிவரின் வழித்தோன்ற லான கும்பகன்னன், 'திரிபுரம் செற்ற தேவனும் - முப்புரங்களை எரித்த சிவபெருமானும், இவனுமே - இந்த இலக்குவனுமே, செரு வில் ஒரு விலாளர் - போரில் ஒப்பற்ற வில்வீரர்' என்று - என்று, ஆயிரம் கால் எடுத்து உரைத்தான் - ஆயிரம் முறை எடுத்து மொழிந்தான்.

வீரத்தினை வியந்தானாகலின் பன்முறை எடுத்து மொழிந் தான். பொருவில் ஆண்மை: பொருதற்குரிய வில்லாண்மை யெனினுமாம். புலத்தியன் மருமான்: புலத்திய விருடியின் வழித் தோன்றல்; உத்தரகாண்டம் இராவணன் பிறப்புப்படலம் காண்க. புலத்தியர் - புதல்வர் விச்ரவஸ்; விச்ரவஸ்ஸின் மகன் கும்ப கன்னன். ஆரணிய. 258 உரைக்குறிப்புக் காண்க. திரிபுரம் செற்ற தேவன் சிவபெருமான்; புன்னகையால் புரமெரித்தான் என்பது வரலாறு; ஆரணிய. 458 உரை காண்க.

பி - ம். 1. சிறுமையும்
2. வரிவிலாண்மையும்
3. இவனெடுந்திறலில், இவனுமேபுவியில். 222

இங்கு அதிகப்பாடல்:—

உரைத்து நெஞ்சழன் றுருகணைத் திவனுயிர் குடித்துக்
கருத்து முற்றுவன் எனச்சினம் கதுவிடக் கடுந்தேர்
பசித்த திண்டிறற் பாகரைப் பகைவனுக் கெதிரே
பொருத்து மென்றடற் கும்பகன் பொருக்கெனப் புகன்றான்.

1433. படர்நெ டுந்தடந் தட்டிடைத் திசைதொறும் பாகர்
கடவு கின்றது காற்றினு மனத்தினுங் கடிய
நடல்வ யங்கொள்வெஞ் சீயநின் றூர்க்கின்ற தம்பொன்
வடபெ ருங்கிரி பொருவுதே ரோட்டினன் வந்தான்.

படர் நெடுதட தட்டிடை பாகர் - பரந்த உயர்ந்த அகன்ற தேர்த்தட்டிலமர்ந்து நின்ற பாகரால், திசைதொறும் கடவு கின்றது - திக்குகள்தோறும் செலுத்தப்படுவதும், காற்றினு

மனத்தினும் கடியது - காற்று மனம் என்றவற்லும் வேகமுடைய தும், அடல் வயம் கொள் வெம் சியம் நின்று ஆர்க்கின்றது - வன் மையையும் வெற்றியும் கொண்ட சிங்கம் இருந்து ஆர்ப்பரிக்கின்ற தும், அம்பொன் வடபெரு கிரி பொருவுதேர் - அழகிய பொன் மயமான, வடக்கில் உள்ள பெரிய பெருமலையை ஒப்பதுமாகிய தேரினை, ஓட்டினன் வந்தான் - செலுத்திக்கொண்டு வந்து சேர்ந் தான் (கும்பகன்னன்).

படர் நெடு தட என்ற அடைமொழிகள் தேர்த்தட்டின் நீள அகல உயரங்களைக் குறித்து நின்றன. வலவனேவா ஊர்திகளும் உளவாகலின் 'பாகர் கடவுகின்றது' எனப்பட்டது. பாகர் - தேர்ப் பாகர். காற்றினும் மனத்தினும் கடியது: 'வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ, மானுரு வாகநின் மனம்பூட் டினையோ' (அகநா. 384) என்றது காண்க, சிங்கத்தின் கடுமையான ஆர்ப்பினைக் குறிப்பான், அடல் வயம் வெம் என்ற அடை மொழிகள் தரப் பட்டன. அம்பொன் வட பெருங்கிரி: பெருமலை.

பா - ம். 1. பரிர் நெடுங்கொடி ; தேரொன்று ; பகரக்.

2. காலினும்.

3. ஆர்க்கின்ற வம்பொன்.

4. வட நெடுமுங்கிரி, போல்வதோர், புரைவதொன்று, போல்வதொன்று போப்பதொன்று, கலந்தான். 223

## அநுமன் தோள்மீதேறி இலக்குவன் பொருதல்

1434. தொலைகொள் வானுகச் சுடர்நெடுந் தேர்மிசைத் தோன்றி
வலைகொள் வெள்ளெயிற் றரக்கன்வெஞ் செருத்தொழின் [மலையக்
கிலைகோ ளாதிக லென்றெண்ணி மாருதி கிடைத்தே
இலைய வள்ளலே யேறுதி தோள்மிசை யென்றுன்.

வலைகொள் வெள் எயிறு அரக்கன் - வளைவாகப் பொருந்திய வெண்ணிறமான பற்களைக் கொண்ட கும்பகன்னன், தொலை கொள் - துளை பொருந்திய, வான் நுகம் - பெரிய நுகத்தினையுடைய, சுடர் நெடு தேர்மிசை தோன்றி - ஒளி வாய்ந்த உயர்ந்த தேர் மீது

காட்சி தந்து. வெம் செரு தொழில் மலைய - கொடிய போர்த் தொழிலைப் புரிகையில் (தரையிலிருந்து கொண்டே, இலக்குவன் செய்யும்) இகல் - போரானது, 'கிளை கொளாது-இனவொற்றுமைப் பட்டதாகாது', என்று எண்ணி - என்று ஆலோசித்து, மாருதி கிடைத்தே - அநுமன் (இலக்குவனை) அணுகியவனாய், (அவனைப் பார்த்து), 'இளைய வள்ளலே - வாலிபனான வண்மையனே, தோண்மிசை ஏறுதி - எனது புயங்களின் மீது ஏறிக் கொள்க' என்றான் - என்றிரந்தான்.

வான் நுகம் : 'வளைபயில் கீழ்கட லின்றிட மேற்கடல் வானு கத்தின் (திருக்கோ. 5); 'தொளை கொள்' என்பது நுகத்திற்கு இயற்கை அடைமொழி 'தூம்புடை நெடுங்கை வேழம' குருதிக் கோட்டுக் குஞ்சர நகரம்' (சீவக. 232 ; 2182) என்ற விடங்களிற் போன்று. பொன் மயமான தேராதலின் சுடர் நெடுந் தேர் எனப்பட்டது. வளைகொள் எயிறு - கோர தந்தம், கிளை - இனம், இங்கே பொருத்தமான ஒரே வகைப் போராகாது; ஏற்றத் தாழ் வுடையதாகும் என்க. கிடைத்தல் - கிட்டுதல், 'கிடந்தானைக் கிடைத்திரு தடங்கை கூப்பினன்' (கிட்கிந்தா. 575) வாலிபம் பற்றி இளைய என்றும், தன் வேண்டுகோளை இலக்குவன் என்றும் மறுத்தலின் வள்ளலே என்றும் விளித்தான்; சிறிய திருவடி யாகலின் திருமாலின் அமிசமான இலக்குவற்கு வாகனமாதற் பொருத்தம் உய்த்துணர்க.

பி - ம். 1. வானுகச்சுடர், வானுகத்தொடர்.

2. அரக்கனும் செருத்தொழில், சிலைத்தொழில், தொழின் மறையச்.

3. என்றனன், என்றடல், என்றென்ன. கிடைத்தான்.

4. வண்மையலே. 224

1435. ஏறி னானிளங் கோளரி யிமையவ ராசி
கூறி னாரெடுத் தார்த்தது வாநரக் குழுவும்
நூறு பத்துடைப் பத்தியி னேறிற்பரி பூண்ட
ஆறு தேரினு மகன்றதவ் வநுமன்றன் றடந்தோள்.

இளசோளரி - இளஞ் சிங்க மொத்த இலக்குவன், ஏறினன் - அநுமன் தோள் மிசை அமர்ந்தான்; இமையவர் ஆசி கூறினார் -

தேவர்கள் வாழ்த்துரை வழங்கினர்; வாநரர் குழுவும் - குரங்குக் கூட்டமும், எடுத்து ஆர்த்தது - (வெல்க வெல்க) என ஆர்ப்பரித்தது; பத்தியின் - வரிசையாக, நொறில்பரி பூண்ட - விரைந்து செல்லும் குதிரைகள், நூறுபத்துடை - ஆயிரங்களையுடையதான, தேர் ஆறினும் - அரக்கன் ஏறியதேர்கள் ஆறினைக் காட்டிலும், அ அநுமன் தன் தட தோள் அகன்றது - அந்த அநுமனுடைய பெரிய தோள்கள் விரிந்து காட்டின.

இளங்கோளரி : சுமித்திரைச் சிங்கம் என வருதல் காண்க. எப்பொழுதும் தம் காரியத்திலேயும் நன்மையிலேயும் கண்ணும் கருத்துமாயிருப்பவர் ஆகலின் ' இமையவர் ஆசி கூறினர் எனப் பட்டது. 'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்' (திருவாசகம்.); என்றது காண்க. நொறில்பரி - விரைந்து செல் லும் குதிரைகள். இறுதி யடிக்குக் கும்பகன்னன் ஏறிய தேரினைப் போன்று ஆறு தேர் அகலம் கொண்டு காணப்பட்டது அநுமன் தோள் என்க. மற்றும் பேராண்மை வாய்ந்த இலக்குவன் ஏறியமர்ந்த நிலையில் அநுமன் மூச்சடக்கி நிற்ப அவன் தேகம் விரிந்து காட்டியது எனினுமாம்.

பி - ம். 3. நோல்பரி ;

4. அகன்றன, அகன்றன். 225

1436. தன்னி னேர்பிறர் தானலா தில்லவன் றோண்மேல்
துன்னு பேரொளி யிலக்குவன் றோன்றிய தோற்றம்
பொன்னின் மால்வரை வெள்ளிமால் வரைமிசைப்
[பொலிந்த
தென்னுமா றன்றிப் பிறிதெடுத் தியம்புவ தியாதோ.

தன்னின்நேர் தானலாது பிறர் இல்லவன் தோள்மேல் - தனக்கு ஒப்புத்தானே அல்லாது பிறர் எவரும் இருக்கப் பெறாத அநும னுடைய தோள்மீது, துன்னுபேர் ஒளி இலக்குவன் - பொருந்திய பெரிய ஒளியினையுடைய இளைய பெருமான், தோன்றிய தோற்றம் - காணப்பட்ட காட்சி, பொன்னின் மால்வரை - பொன் மயமான மேருகிரி, வெள்ளிமால் வரை மிசை - வெள்ளி மயமான கயிலாய மலை மீது, பொலிந்தது - திகழ்ந்தது, என்னுமாறு அன்றி - என்று சொல்லும் வகை அன்றி, பிறிது - மற்றொன்று (உவமையாக)

எடுத்து இயம்புவது யாது - எடுத்து மொழிவதற்கு எது இருக்கின்றது? ஓகாரம் வினா: எதிர்மறைப்பொருள்.

தற்குறிப்பேற்றவணி. தன்னின் நேர் பிறர் தானலா தில்லவன்; இதனைப் பொது நீங்குவமை என்றும், தானே தனக்குவமை என்றும் வழங்குவர் (ஒப்பு): 'தன் துணை யொருவரும் தன்னில் வேறிலான்' (கிட்கிந்தா. 260); 'தன்னிற்றானலா தொப்பிலாதான்' (கிட்கிந்தா. 52); 'தனக்குவமை யில்லாதான்' (குறள். 7); 'தன்னொப்பாரில்லப்பன்' (திருவாய். 6 · 3 · 9); இலக்குவன் பொன்னிறம், அநுமன் வெண்மை; ஆகவே பொன்னின் மால்வரையும் வெள்ளி மால் வரையும் உவமைகளாயின. துன்னு பேர் ஒளி இலக்குவன் - தேவாம்சம் ஆகலின் இலக்குவனைச் சூழ்ந்து நின்ற இந்த ஒளி கூறப்பட்டது. தேவர் என்ற சொல்லே ஒளி செய்பவர் என்னும் பொருள் தரும்; 'திவ்' என்ற வடசொல்லினின்று எழுந்தது என்பர்.

பி - ம். 1. அலது.

3. வெள்ளியங் கிரியிடைப், அங்கிரியின்மேற்.

4. என்னலாமன்றிப், என்னுமாறின்றிப். 226

1437. ஆங்கு வீரனோ டமர்செய்வா னமைந்தவா ளரக்கன்
தாங்கு பல்கணைப் புட்டிலுந் தகைபெறக் கட்டி
வீங்கு தோள்வலிக் கேயது விசும்பில்வில் வெள்க
வாங்கி னனெடு வடவரை புரைவதோர் வரிவில்.

ஆங்கு - அப்பொழுது, வீரனோடு - இலக்குவனோடு, அமர் செய்வான் அமைந்த வாள் அரக்கன் - போர் செய்வதற்காகப் பொருந்திய கொடிய இராக்கதன், பல்கணை தாங்கு புட்டிலும் - பல அம்புகளைத் தரித்த அம்பறாத் தூணியையும், தகைபெற கட்டி - அழகு எழத் (தோளிலே) பிணித்து, வீங்கு தோள் வலிக்கு ஏயது - பருத்த தன்னுடைய) புயவன்மைக் கேற்றவாகி, நெடு வடவரை புரைவது ஓர் வரிவில் - உயர்ந்த மேருமலையையே தனக்கு ஒப்பாக ஏற்கக் கூடிய ஒப்பற்ற கட்டமைந்த வில்லினை, விசும்பில் வில் வெள்க - வான வில்லும் நாணுமாறு, வாங்கினன் - வளைத்தான்.

ஆங்கு: அவ்விடத்து எனினுமாம் விசும்பில் வில்- 'இந்திர தனு' 'வானிடு வில்லின் வரவறியா' (நாலடி. கடவுள்). இங்கு அதிகப் பாடல்:—

நாண் தெரித்தனன் பகிரண்டப் பரப்பொடு நவைபொய்
மாண்ட விண்ணவர் மணித்தலை துளங்கிட வயப்போர்
பூண்ட வாநரம் நின்றதும் புவியிடை மறியத்
தூண்டி மற்றவன் இலக்குவன் றனக்கிவை சொல்வான்.

பி-ம். 1. அமர்போர, அமர்செய.

3. வலிக்கேய்வது, கெய்ந்தது, கேற்றது.

4. வரை யனையதோர். 227

## கும்பகன்ன இலக்குவரின் வீரவாதம்

1438. இராமன் தம்பிநீ யிராவணன் தம்பிநா னிருவேம்
பொராநின் றேமிது காணிய வந்தனர் புலவோர்
பராவுந் தொல்செரு முறைவலிக் குரியன பகர்ந்து
விராவு நல்லமர் விளைக்குது மியாமென விளம்பா.

'நீ இராமன் தம்பி - நீ இராமபிரானுக்கு இளவல்: நான் இராவணன் தம்பி - நான் இராவணனுடைய இளவல், இருவேம் பொராநின்றேம் - இரண்டு பேரும் (இப்போது) போரேற்று நின்றுள்ளோம்; இது காணிய புலவோர் வந்தனர் - இந்த (நமது போரினை) காணும் பொருட்டுத் தேவர்கள் வந்துள்ளனர்; பராவும் - யாவரும் புகழத்தக்க, தொல் - பழமையான, செருமுறை - போராற்றும் முறைமையில், வலிக்கு உரியன பகர்ந்து-வலிமைக்குப் பொருந்தியவற்றைக் கூறிக்கொண்டு, யாம் - நாமிருவரும், விராவும் நல்அமர் விளைக்குதும் - கலந்து புரியும் சிறந்த போரினை நிகழ்த்துவோம்', என விளம்பா - என்று கூறி; என்றான் என்ற அடுத்த செய்யுளுடன் தொடர்ந்து முடியும்.

போருக்கு அழைத்த இவ்வழைப்புச் செய்யுள் மிகவும் சுவையுற அமைந்தமை அதனைப் படித்து அறிக. போர் புரிதற்குப்பல பொருத்தங்கள் இருவருக்கும் உளவென்றும், முறையே இராமபிரானுக்கும் இராவணனுக்கும் தம்பியர் என்ற சாமியமும் இங்கே

கூறப்பட்டது. சிறந்த போராகலின் தேவர்களும் காணப்போந்த னர் என்றான். செருமுறை வலிக்குரியன. வீரவாசகங்கள். விராவுதல்: இருதிறத்தாரும் கலத்தல்; 'விராவிய புலிக்கெலாம் வேதமேயன' (அயோத்தி. மந்தரை 47). விளம்பா: செய்யா என் னும் வாய்பாடு.

பி-ம். 2. கண்டிடப் புகுந்தனர்; புலவர்.

4. விராவு வெஞ்சமர்; விளைக்குவம்; நாம்; விளம்பும். 228

1439. பெய்த வத்தினே ரோர்பெண்கொடி யெம்முடன் பிறந்தாள்
செய்த குற்றமொன் றில்லவள் நாசிவெஞ் சினத்தாற்
கொய்த கொற்றவ மற்றவள் கூந்தல்தொட் டீர்த்த
கைத லத்திடைக் கிடத்துவென் காக்குதி யென்றான்.

'பெய்தவத்தின் எம் உடன் பிறந்தாள் - செய்த தவத்தின் பயனாக எம்முடன் தோன்றிய, ஓர் பெண் கொடி - ஒரு பெண் கொடிபோன்ற, செய்த குற்றம் ஒன்று இல்லவள் - புரிந்த பிழை ஒன்றுமில்லாதவளான, (சூர்ப்பணகையின்) நாசி - மூக்கினை, வெம் சினத்தால் கொய்த கொற்றவ - கடுங் கோபத்தால் அறுத்த வெற்றி வீரனே! அவள் கூந்தல் தொட்டு ஈர்த்த கை - அவள் கூந்தலைப்பற்றி இழுத்த உன் கரத்தை, தலத்திடை - தரையிலே, கிடத்துவென் - வீழ்த்தப்போகின்றேன்; காக்குதி (வல்லமை யுடையையாயின்) தடுத்துக்கொள்வாயாக', என்றான் - என்று வீர முழக்கம் செய்தான் (கும்பகன்னன்).

மற்று: வினைமாற்று. பெய்து அவத்தின் என்ற அமங்கலப் பொருள் தொனிப்பதும் காண்க. நாசி கொய்தமை, கூந்தல் தொட்டீர்த்தமை, இச்செயல்கள் முறைமாற்றி இங்குக் கூறப் பட்டன. 'விரிந்த சில்லலோதியை சிக்குறச் செங்கையாற் பற்றி'; 'மூக்குங் காதும் வெம்முரண்முலைக் கண்களும் முறையாற்போக்கி' (ஆரணிய. 311, 312)ம் அவற்றின் உரைக்குறிப்புக்களும் காண்க. 'கொய்த கொற்றவ' என்பது பிறகுறிப்பு. பெண்ணின் உறுப்புக் களையரிந்த வீரனே என்று ஏசியதும், செய்த குற்றமில்லாதவள் என்று கும்பகன்னன் பரிவதும் ஆய்தற்குரியன. அசுர இராக்கத மணங்கள் அக்காலத்து வழக்கிலிருந்தன என்பது தொல்காப்பியம்

பொருளதிகாரத்தால் அறியலாகும். சீதாதேவியை தொடர்ந்தேன் என்று இராமபிரான் வினவிய போழ்து, சூர்ப்பணகை கூறிய 'எற்றவளை' (ஆரணிய. 340). என்ற செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். அச்செய்யுட்கண் வரும் 'மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனமென்றாள்' என்பதை நோக்குக.

இக்கவியும் இதனையடுத்துள்ள 'அல்லினுற் செய்த' என்ற கவியும் சில பிரதிகளில் முன்பின்னுக உள்ளன. கூந்தல் தொட்டு மகளிரை ஈர்த்தல் ஓர் கொடுஞ்செயல். மகளிர் கூந்தலைத் தொடற்குரியவர் அவர்தம் மணுளரே யாவர். பிறரில்லை, இதனை 'யாரிவன் எங்கூந்தல் கொள்வான்' (கலித். 89) 'குறுந்தொடி மகளிர், நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே' (புறநா.113): 'கூந்தலணை கொடுப்பேம்யாம்' (கலித். 101): 'தோடேந்து பூங்கோதை வேண்டேங் கூந்தல் தொடேல்' (சீவக. 1227).

பா - ம். 1. பெய்தவத்தி ; எம்முன்பு ; எங்கவிற்

4. காணுதியேன்றுன், 223

1440. அல்லி னுற்செய்த நிறத்தவ னனையது பகர
மல்லி னுற்செய்த தோளினன் மாற்றங்கள் நும்பால்
வில்லி னுற் சொல்லி னல்லது வெந்திறல் வெள்கச்
சொல்லி னுற்சொலக் கற்றில மியாமெனச் சொன்னுன்.

அல்லினுல் செய்த நிறத்தவன் - இருள்கொண்டு வகுத்தாற் போன்ற கருநிறம் உள்ள அரக்கன், அனையதுபகர - அவ்வாருன மொழிகளைப்பகர, மல்லினுற் செய்த தோளினன் - மற்போர் புரிதற்கென்றே வருவிக்கப்பட்ட தோள்களையுடைய இலக்குவன், 'நும்பால் - நும்மிடத்து, மாற்றங்கள் - மறு மொழிகளை, வில்லினுல் சொல்லின் அல்லது - வில்லினுற் சொல்லலாமே யன்றி, வெம்திறல் வெள்க - கொடிய வீரப்பான்மைக்குக் குறைவுண்டாகுமாறு, சொல்லினுல் சொல - சொற்களினுல் விடையிறுப்பதற்கு, யாம் கற்றிலம் - யாம் கற்றேமில்லை', என - என்று, சொன்னுன் - பகர்ந்தான்.

அல்லினுற் செய்த நிறத்தவன்: கும்பகன்னன். இத்தொடர்க்கும் 'அல்லையாண்டமைந்த மேனியழகன்' என்று இராம

பிராணைக்கூறும் தொடர்க்கும் உள்ள வேறுபாடுய்த்துணர்க. மல்லினால் என்பது உருபுமயக்கமாக மற்போரின் பொருட்டு எனப் பொருள் செய்யப்பெற்றது. மாற்றங்கள் நும்பால் வில்லினாற் சொல்லின் அல்லது'; 'வாளினாற் பேசினல்லால் வாயினாற் பேசல் தேற்றேன்' (சீவக. 257). 'மற்றெலா நும்மைப்போல வாயினாற் சொல்லமாட்டேன். (யுந்த. நிகும்பலை. 83).

பி - ம். 1. ஆங்கது; செப்ப.

2 புயத்தவன், புயத்திறன்; உன்பால்; மாற்றங்களுரைப்பான்.

3. சொல்வதல்லது; திறல் விற்கர்.

4. பாமென்று. 229

## இலக்குவ கும்பகன்னர் போர்

1441. விண்ணி ரண்டுகூ றுயது பிளந்தது வெற்பு
மண்ணி ரண்டுறக் கிழிந்ததென் றிமையவர் மறுகக்
கண்ணி ரண்டினுந் தீயுகக் கதிர்முகப் பகழி
எண்ணி ரண்டினே டிரண்டொரு தொடைதொடுத்
[தெய்தான்.

கண் இரண்டினும் தீ உக - (அப்போது கும்பகன்னனுடைய இரண்டு விழிகளிலும் நெருப்புச் சிந்த, 'விண் இரண்டு கூறு ஆயது - ஆகாயம் இரண்டுபட்டது; வெற்பு பிளந்தது - மலைபிளந்தது; மண் இரண்டு உற கிழிந்தது-பூமி இரு துண்டாகக் கிழிந்தது', என்று இமையவர் மறுக - என்று அஞ்சித் தேவர்கள் மனம் வருந்த, கதிர் முகம் பகழி எண் இரண்டினேடு இரண்டு ஒரு தொடை தொடுத்து எய்தான் - அக்கினிமுக அம்புகள் பதினெட்டினை ஒரே தொடுப்பினில் தொடுத்து விடுத்தான் (கும்பகன்னன்).

இக்கவிகட்கு, (ஒப்பு): கிட்கிந்தா. 276. 'வெடிக்கின்றன திசை யாவையும் விழுகின்றன விடிவந்து' (யுத்த. நிகும்பலை. 109).

பி - ம். 1. கூருகியே.

4. இரண்டுகோத்தொரு. 230

1442. கொப்பு நான்குடைக் குலக்கரி கும்பத்திற் குளித்த
உம்ப ராற்றலை யொடுக்கிய வுருமெனச் செல்வ
வெம்பு வெஞ்சினத் திராவணற் கிளையவன் விட்ட
அம்பு பத்தினோ டெட்டையும் நான்கினு லறுத்தான்.

நான்கு கொம்புடை குலகரி - நான்கு தந்தங்களையுடைய சிறந்த ஐராவதம் என்ற யானையின், கும்பத்தில் குளித்த - மத்தகத்தில் முழுகினவும், உம்பர் ஆற்றலை ஒடுக்கிய - தேவர்களின் வலிமையை அடக்கினவும், உரும் என செல்வ - இடிபோன்ற செயலினையுடையவையுமாகி, வெம்பு வெம் சினத்து - புழுங்குகின்ற கடுஞ்சினத்தையுடைய, இராவணற்கு இளையவன் விட்ட - இராவணனுக்குத் தம்பியான அரக்கன் எவிய, அம்பு பத்தினோடு எட்டையும் நான்கினுல் அறுத்தான் - பதினெட்டு அம்புகளையும், (இலக்குவன்) நான்கு அம்புகளினுல் துணித்தான்.

18 அம்பு : இதன் முன் கவியில் 'எண்ணிரண்டினோடிரண்டு' என்று வந்தது காண்க. கொம்பு நாலுடைக் குலக்கரி : இந்திரன் வாகனமாகிய ஐராவதம்: 'கொம்பொத்தன நாலொளிர் கோள் வயிரக், கம்பக்கரி நின்றது' (ஆரணிய. 95). 'ஈரிரு மருப்புடைய வாரணம்' (கலிங்கத்துப். 245). 'நாற்கோட்டு வெண்ணிறத்தகுஞ்சரமும்' (திருவிளை. வெள்ளையானை. 15). கரிகும்பத்திற் குளித்தது; இராவணனுடைய திக்விஜய காலத்து, 'திக்கின் மாவெலாம் தொலைத்து' (ஆரணிய. 258).

பி - ம். 1. நாலுடை ; குலக்கிரி, கொலைக்கிரி ; பொறிர்த்துடன் குத்த.
2. ஒதுக்கிய ; உருமினிற் ; செல்ல.
3. இராவணன் தம்பியே, விசிகமேல்.
4. பத்தினேடெட்டையும் நான்கினுற். 231

1443. அறுத்த காலையி னரக்கனு மமரரை நெடுநாள்
ஒறுத்த தாயிர முருவது திசைமுக னுதவப்
பொறுத்த தாங்கொரு புகர்முகக் கடுங்கணை புத்தேள்
இறுத்து மாற்றிது வல்லையே லென்றுகோத் தெய்தான்.

அறுத்த காலையில் - (அங்ஙனம் இலக்குவன் தான் விடுத்த அம்புகளைத்) துணித்து வீழ்த்த அளவில், அரக்கனும் - கும்ப கன்னனும், நெடுநாள் அமரரை ஒறுத்தது - பல காலமாகத் தேவரை அடக்கியதும், ஆயிரம் உருவது - ஆயிரம் உருவத்தை யுடையதும், புத்தேள் திசைமுகன் உதவ பொறுத்தது - தேவனாகிய பிரமன் அளிப்பத்தான் பெற்றுவைத்துக் கொண்டதுமான ; ஒரு புகர்முக கடுகணை - ஒரு ஒளிவாய்ந்த கடுமையான அம்பினை, ஆங்கு கோத்து - அப்போது வில்லில் தொடுத்து, 'வல்லையேல் இது இறுத்து மாற்று - ஆற்றல் உண்டெனின் இதனை ஒடித்து ஒழிப்பாயாக', என்று எய்தான் - என்று விடுத்தான்.

கணைக்குரிய மந்திரத்தை ஓதிக் கும்பகன்னன் அம்பினை விடுத்தான் என்க. தேவர்களை விடாமல் வருத்தியது, ஆயிரமாக உருக் கொள்ளவல்லது, பிரமன் உதவியது என்று கும்பகன்னனுடைய அம்பின் பெருமை கூறப்பட்டது. சரத்துக்கு ஆயிரம் உரு என்பது அடுத்த கவியிலும் வருதல் காண்க ; (ஒப்பு) : 'உற்பத்தி யயனே டொக்கும் ஓடும்போ தரியே ஒக்கும், கற்பத்தி னரனே யொக்கும் பகைவரைக் கலந்த காலை' (யுந்த. 1237) என்ற செய்யுள் காண்க. 'புத்தேள் இறுத்து' என்று உள்ளவாறே கொண்டு தெய்வத்தைத் தங்கச் செய்து என்று பொருள் கொண்டாரும் உளர்.

பா - ம். 2. உருவின.

4. இறுத்தி ; மற்றிது. 232

1444. புரிந்து நோக்கிய திசைதொறும் பகழியின் புயலால்
எரிந்து செல்வதை நோக்கிய விராகவற் கிளையான்
தெரிந்து மற்றது தன்னையோர் தெய்வவெங் கணையால்
அரிந்து வீழ்த்தலு மாயிர வுருச்சர மற்ற.

புரிந்து நோக்கிய திசைதொறும் - விரும்பிக் கண்ணுற்ற திக்குகள் தோறும், பகழியின் புயலால் - அம்பு மாரியால், எரிந்து செல்வதை நோக்கிய இராகவற்கு இளையான் - எரிந்து கழிவதைக் கண்ட இலக்குவன், தெரிந்து - ஆராய்ந்து, மற்று - பின்பு, அது தன்னை - அந்த அம்பினை, ஓர் தெய்வம் வெங்கணையால் - ஒரு கொடிய தெய்

வக்கணையால், அரிந்து விழ்த்தலும் - துணிந்து விழச் செய்த அளவில், ஆயிரம் உருசரம் அற்ற-ஆயிரம் வடிவுகொண்ட அந்தக் கணை அறுபட்டழிந்தது.

புரிதல் - விரும்புதல்; 'புகுமுகம் புரிதல்' (தொல். பொ. 261); ஆயிர உருச்சரம்: இதனைச் சகச்சிரமுகாஸ்திரம் என்பர் வட நூலார். தெய்வ வெம்கணைகள்; ஒவ்வொரு கணைக்கும் அதி தேவதையும் உச்சாடன மந்திரமும் உண்டு. ஆக்கினேயாஸ்திரம், வாருணாஸ்திரம், பிரமாஸ்திரம், வாயுவாஸ்திரம் முதலியன கூறப் படுதல் காண்க. (ஒப்பு): 'தேவர்தம் கணைகள் செப்ப' (பால. வேள்வி. 3).

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

அதுகண் டாரடல் வானவ ராசிகள் கூறித்
துதிகொண் டாரட லரக்கனும் துணைவிழி சிவந்தாங்
கிதுகண் டேனினிக் கழிந்ததுன் னுயிரெனக் கனன்றே
கொதிகண் டானடற் சிலையினைக் குழைவுற வளைத்தான்.

பி - ம். 2. எரிந்து செல்வகை; இராமனுக்கு; இளையோன்.
3. தெய்வ வெம்படையால்.
4. அரிந்து நீக்கலும்; ஆயிரம் சரங்களும் அற்ற. 233

1445. ஆறி ரண்டுவெங் கடுங்கணை யனுமன்மே லழுத்தி
வேறு வெஞ்சர மிரண்டிளங் குமரன்மே லேவி
நூறு மைம்பது மொருதொடை தொடுத்தொரு நொடியில்
மாறு திக்கையும் விசும்பையு மறைத்தனன் கொடியோன்.

(அப்போது) கொடியோன் - தீயவன் ஆன கும்பகன்னன், வெம்கடு கணை ஆறிரண்டு - கொடுமையும் கடுமையும் உடைய பன்னிரண்டு அம்புகளை, அநுமன் மேல் அழுத்தி - அநுமன் உடலிற் பதியுமாறு விடுத்தும், வேறு வெம் சரம் - வேறு கொடிய கணைகள், இரண்டு - இரண்டினை, இள குமரன் மேல் ஏவி - இலக்கு வன் மீது செலுத்தியும், ஒரு தொடை - ஒரு தொடுப்பில், நூறும் ஐம்பதும் தொடுத்து - நூறும் ஐம்பதுமாக உய்த்தும், ஒரு நொடி

யில் - ஒரு நொடிப்பொழுதில், மாறு - ஒன்றற்கொன்று மாறுபட்டுள்ள, திக்கையும் - திசைகளையும், விசும்பையும் - ஆகாயத்தையும், மறைத்தனன் - அம்புகளால் மறைத்து நின்றான்.

கணை அநுமன் மேல் அழுத்தி என்றும், இரண்டு இளம் குமரன் மேல் ஏற்றி என்றும் சொற்களை அமைத்ததன் கருத்து உய்த்துணர்க. மாறுதிக்கு - ஒன்றற்கொன்று எதிர் எதிராக நின்று மாறுபட்ட திசைகள். கூறுதிக்கு என்ற பாடத்திற்குச் சிறப்பாக எடுத்துக் கூறப்படும் திக்கு என்க. ஏறு வெம் சரம் என்ற பாடத்துக்குப பகைவர் உடலில் ஊன்றித் தைக்கும் சரம் எனப் பொருள் உரைக்க.

பி - ம். 1. கடுங்கணை.

2. ஏறுவெம்சரம்.

3. ஓர் தொடை.

4. கூறுதிக்கையும்; நிலத்தையு மண்ணையும்; வாளியால் மறைத்தான்.

1446. மறைத்த வாளிக ளெவற்றையு மவற்றினுன் மாற்றித்
துறைத்த லந்தொறும் தலந்தொறும் நின்றுதேர் சுமக்கும்
பொறைக்க மைந்தவெங் கரிபரி யாளிமாப் பூதந்
திறந்தி றம்படத் துணித்தவன் தேரையுஞ் சிதைத்தான்.

மறைத்த வாளிகள் எவற்றையும் - (இலக்குவன்) இவ்வாறு (ஆகாயம் திசைகள் என்ற இவற்றையெல்லாம்) மறைத்து நின்ற கும்பகன்னனது வாளிகள் அனைத்தையும், அவற்றினுல் மாற்றி - அவற்றிற்கேற்ற அம்புகளால் அழித்து, துறைதலம் தொறும் தலம் தொறும் - பூட்டற்குரிய இடங்கள்தோறும் இடங்கள் தோறும், நின்று - நிலைத்து, தேர் சுமக்கும் - தேரினை இழுக்கும், பொறைக்கு அமைந்த - சுமத்தற்கு ஏய்ந்த, வெம்கரி பரி யாளி மா பூதம் - கொடிய யானை, குதிரை, யாளி, பெரிய பூதங்கள் ஆகிய இவற்றை, திறம் திறம்பட துணித்து - கூறு கூறாக அழித்து, அவன் தேரையும் சிதைத்தான் - அவன் தேரின் பல உறுப்புக்களையும் உருக் குலையச் செய்தான் (இலக்குவன்).

மறைத்த வாளிகள் : திக்கு விசும்பு முதலியவற்றை மறைத்த கும்பகன்னனுடைய அம்புகள் எவற்றையும் ; அவற்றினால் மாற்றி என்பதற்கு, கும்பகன்னன் விடுத்த அக்கினி யத்திரம், வாயு அத்திரம் முதலியவற்றை, அந்தந்த அத்திரங்களால் அழித்து என்றேனும், அவற்றை அழிக்கக்கூடியதும் அவைகட்கு எதிரானதுமான அத்திரங்களால் கெடுத்து என்றேனும் கொள்க. உதாரணமாக வருணாத்திரத்தை அக்கினியத்திரத்தால் அழித்தல் என்று கொள்க. பொறைக் கமைந்த-பெருஞ் சுமைகளை இழுத்தற் கமைந்த, இங்குத் தேரிழுப்பனவான என்க.

பி - ம். 2. தலந்தொறு நிலந்தொறும்.
3. கரியரி ; பாளி வெம்பூதம்.
4. துணிந்தான். 235

1447. தேர ழிந்தது செங்கதிர்ச் செல்வனைச் சேர்ந்த
ஊர ழிந்தது போற்றுரந் தூர்பவ ருலந்தார்
நீர ழிந்திலா நெடுமழைக் குழாத்திடை நிமிர்ந்த
பார வெஞ்சிலை யழிந்தெனத் துமிந்ததப் பருவில்.

செம் கதிர் செல்வனை சேர்ந்த - சிவந்த ஒளிக் கிரணங்களைக் கொண்ட கதிரவனைச் சூழ்ந்திருந்த, ஊர் அழிந்தது போல் - ஊர் கோள் குறைந்தது போல, தேர் அழிந்தது - தேர் சிதைந்தது ; துரந்து ஊர்பவர் உலந்தார் - (அத்தேரிற் பூட்டிய குதிரை முதலியவற்றைச்) செலுத்தி நடத்தும் பாகர் இறந்தனர் ; நீர் அழிந்திலா - நீர் வற்றப்பெறாத, நெடு மழை குழாத்திடை நிமிர்ந்த - மிக்க மேகக் குழுவிடத்து உயர்ந்து விளங்கிய, பாரம் வெம்சிலை அழிந்தென - பெரிய கொடிய இந்திரவில் அழிவது போன்று, அ பருவில் துமிந்தது - அந்தக் (கும்பகன்னனுடைய) பருத்த வில் ஒடிந்தது.

தலைவனுக்குக் கதிரவனும் தேர்க்கு ஊர்கோளும் உவமைகள். செங்கதிர்ச் செல்வன் - சிவந்த கதிர்களையே தனக்குச் செல்வமாக உடையவன். ஊர் - ஊர்கோள்; சந்திர சூரியரைச் சூழும் பரிவேடம்; 'செங்கதிர் தங்குவதோ ரூருற்றிது' (ஆரணிய. 'ஊரினொடு கோள் கதுவு தாதையையும் ஒத்தான்' (யுத்த. 852); 'ஊரிழந்தகதிர்'

(யுத்த. 1028); 'வரொடும் பொருந்தித் தோன்றுமிளையவன்' (யுத்த. மாயாசனக. 76). துரந்தூர்பவர்; தலைவர்கள். பார வெஞ்சிலை; 'பாரவெஞ்சிலை வீரம் பழிப்பதே' (கிட்கிந்தா. 319); மழைக்குழாத் திடை நிமிர்ந்த பார வெஞ்சிலை; இந்திர வில் என்ற வானவில். நீரழிந்திலா என்றமையின் சூல் கொண்டு நீர் நிறைந்த மேகம் என்க.

(3-ம். 1. அழிந்துகச் சூழ்ந்த.

2. நுறந்தூர்பவர், துரந்துய்ப்பவர், உழந்தார்.

3. நீரழிந்திடா.

4. நுமிந்தநுபரு, துணிந்தது; வசிவில். 236

1448. செய்த போரினை நோக்கியித் தேரிடைச் சேர்ந்த
கொய்யு ளைகடுங் கோளரி முதலிய குழுவை
எய்து கொன்றன னேநெடு மந்திர மியம்பி
வைது கொன்றன னேவென வானவர் மயர்ந்தார்.

செய்த போரினை நோக்கி - (அப்போது) இலக்குவன் புரிந்த சண்டையினைக் கண்ணுற்று, 'இ தேரிடை சேர்ந்த - இந்தக் (கும்ப கன்னனுடைய) தேரிற்பூட்டிய, கொய் உளை - பிடரிமயிரினையுடைய குதிரை, கடு கோளரி - கொடிய சிங்கம், முதலிய குழுவை - முதலிய வற்றின் கூட்டங்களை, எய்து கொன்றனனே - (இலக்குவன்) அம்புகளை விடுத்துக் கொன்றானே? நெடு மந்திரம் இயம்பி - உயர்ந்த மந்திரத்தை உச்சரித்து, வைது கொன்றனனே - சபித்துக் கொன்றானே?' என - என்று, வானவர் மயர்ந்தார் - தேவர்கள் (சொல்லிக் கொண்டு) திகைத்தனர்.

கொய்யுளை வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகக் குதிரையைக் குறித்தது; யுத்த. 1426. மந்திரம் இயம்பிக் கொல்வதும் வழக்கு, 'சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்' (பால. தாடகை. 73); 'வைதவைவில் மராமர மேழ்துளை செய்தவன்' (பால. பாயிரம்.) முதலியனகாண்க. 'ஆரியம் நன்று

தமிழ்நீ தெனவுரைத்த, காரியத்தாற் காலக்கோட் பட்டானை' என்று நக்கீரர் வசைப்பாடலாகக் கூறப்பெறும் பாடலும், 'தீயினாற் சுட்ட புண் உள்ளாறு மாறாதே, நாவினாற் சுட்ட வடு' (குறள். 29) என்ற குறளும் இங்கு ஒப்பு நோக்கத்தகும். மயர்தல் - மயங்கித் திகைத்தல்; 'மயர் சிந்தனைக்குரிய பொருள்' (கிட்கிந்தா. 49); 'மயர்வற' மதிநல மருளினன் எவன்' (திருவாய். 1).

பா - ம். 1. தேரிடைச் சிறந்த.
2. கொடுங்கோளரி.
3. மந்திர மியற்றி.
4. பகிழ்ந்தவர்.

237

## இருவரும் தரையினின்று பொருதல்

1449. ஊன்று தேரொடு சிலையிலன் கடல்கிளர்ந் தொப்பான்
ஏன்று மற்றவ னின்னுயிர் குடிப்பெனென் றுலகம்
மூன்றும் வென்றமைக் கிடுகுறி யென்னமுச் சிகைத்தாய்த்
தோன்றும் வெஞ்சுடர்ச் சூலவெங் கூற்றினைத் தொட்டான்.

ஊன்று தேரொடு - நிலத்தில் ஆழியால் தாங்கப்பட்டுச் செல்லும் தேருடன், சிலை இலன் - வில்லும் இழக்கப்பெற்றவனாய்க் கும்பகன்னன், கடல் கிளர்ந் தொப்பான் - ஆழி பொங்கினாற் போன்று, 'மற்றவன் இன்னுயிர் குடிப்பென் - அந்த இலக்குவனுடைய இனிய உயிரைப்பருகுவேன்'. என்று - என்று சொல்லி, ஏன்று - எதிர்த்து நின்று, உலகம் மூன்றும் - மூவுலகங்களையும், வென்றமைக்கு - தான் வெற்றி கொண்டதற்கு, இடு குறி என்ன - அடையாளம் என்னும்படி, மு சிகைத்தாய் - மூன்று கிளையினைப் பெற்றதாய், தோன்றும் - விளங்கும், வெம் சுடர் சூல வெம் கூற்றினை - கொடிய ஒளி செய்கின்ற சூலம் என்னும் கடுமையான யமனை, தொட்டான் - கையிற் பிடித்தான்.

கிளர்ந்தது ஒப்பான் என்பது தொகுத்தது. இன்னுயிர் குடிப்பனென்று ஏன்று என மொழி மாற்றாகக் கொள்ளப்பட்டது. உயிர் குடித்தல்; மரபு வழுவமைதி; சூலத்தின் முச்சிகையும், கும்பகன்னன் மூன்றுலகத்தையும் வென்றதன் அடையாளம்

எனப்பட்டது. சிகை - நுனி, உயிர்கவரும் ஒற்றுமை பற்றிச் சூலத்தைக் கூற்றென்றார். சூலவெங்கூற்று ; (ஒப்பு) : சீவக. 283.

பி - ம். 2. இன்னுயிர் முடிப்பனென்று.

3. இடுகுறிக்கென்னும், இடுகுறிக்கென்றும்.

4. வெங்கதிர்ச். 230

1450. இழியப் பாய்ந்தன னிருநிலம் பிளந்திரு கூறுக்
கிழியப் பாய்புனல் கிளர்ந்தெனக் கிளர்சினத் தரக்கன்
பழியப் பாலிவன் பதாதியென் றனுமன்றன் படர்தோள்
ஒழியப் பார்மிசை யிழிந்துசென் றிளவலு முற்றான்.

பாய் புனல் கிளர்ந்தென - பாயும் இயல்பமைந்த நீர் வடிவான கடல் பொங்கி எழுந்தாற்போல், கிளர் - பொங்கி யெழுகின்ற, சினத்து அரக்கன் - கோபமிக்க கும்பகன்னன், இருநிலம் - பெரிய பூமியானது, பிளந்து இரு கூறு கிழிய - பிளவுபட்டு இரண்டு பகுதியாகக் கிழிய, இழிய பாய்ந்தனன் - கீழ்நோக்கிப் பாய்ந்தான் ; இவன் பதாதி - இவன் நடந்து பொருகின்றான ; (ஆதலின் நாம் அநுமன் புயத்தின மீதமர்ந்து போர் செய்தல்), அப்பால் பழி - பிறகு பழி விளைப்பதாம்' என்று - என்று எண்ணி, இளவலும் - இலக்குவனும், அநுமன் தன் படர்தோள் ஒழிய - அநுமனுடைய விசாலமான தோளை விடுத்து, பார்மிசை இழிந்து சென்று உற்றான் - பூமியின் மிது குதித்துப் போய்ப் (போர் புரிய) அமைந்தான்.

அப்பால் பழி என்க. பதாதி - காலாள் ; தரையில் நின்று போர் புரிபவன்.

பி - ம். 1. குழியப் ; கூறுய்க்.

2. கிளர்ந்தெழக் ; கடுஞ்சினத்தரக்கன்.

3. இவன் பகருமென்.

4. இளவலு மிழிந்துசென் றுற்றான் ; சென்றெதிரேற்றான். 230

1451. உற்ற காலையி னிராவணன் றம்பிமா டுதவ
இற்ற தானையி னிருமடி யிகற்படை யேவ
முற்றி யன்னது முழங்குமுந் நீரென முடுகிச்
சுற்றி யார்த்தது சுமித்திரை சிங்கத்தைத் தொடர்ந்து.

உற்ற காலையின் - (இலக்குவன்) தரையில் வந்து நின்றபோது, இராவணன் - இலங்கேசன், தம்பிமாடு உதவ - தம்பியாகிய கும்பகன்னனுக்குத் துணைபுரியுமாறு (சென்று), இற்றதானையின் இருமடி - இறந்துபட்ட சேனையினும் இருமடங்கு, இகல்படை ஏவ - வலிசான்ற படைகளைச் செலுத்த, அன்னது - அந்தச் சேனை, முற்றி முழங்கு முந்நீரென முடுகி - நிரம்பி ஆரவாரிக்கின்ற ஆழியென்னுமாறு விரைந்து, சுமித்திரை சிங்கத்தை தொடர்ந்து சுற்றி ஆர்த்தது - சுமித்திரை பெற்ற சிங்கம் ஒத்த இலக்குவனை விடாமற் சூழ்ந்து முழங்கிற்று.

இருமடி: ஒருமடி, இருமடி யாகுபெயர்கள் என்றது காண்க. இகற்படை - மாறுபட்டுப் பொருகின்ற படையுமாம். முந்நீர் நிலத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று நீர்மையையுடைய கடல் என்பர் நச்சினார்க்கினியர் (மதுரைக்காஞ்சி. 75, 76) முந்நீர் - கடல் ஆகுபெயர்; ஆற்று நீர் ஊற்றுநீர் மேனீரென இவை என்பார்க்கு அற்றன்று; ஆற்றுநீர் மேனீராகலானும் இவ்விரண்டுமில்வழி ஊற்று நீரும் இன்றாம் ஆதலானும், இவற்றை முந்நீர் என்றல் பொருந்தியதன்று; மூதிய நீரெனின் 'நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும்' என்றதனால் அதுவும் மேனீரின்றியமையாமையின் ஆகாது; ஆனால் மும்முறை நீர் என்பதன் பொருள் யாதோ எனின் முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பது' (பெரும்பாண். 441-442) உரை; (அதிகாயன். 21); சிலப். 172 வரி 3 அடியார்; புறநா. 9, விரிவுரை. சுமித்திரை சிங்கம்; (ஒப்பு): 'யசோதை இளஞ்சிங்கம்' (திருப்பாவை.).

பி - ம். 1. மாட்டுதவ, மாடணுகி.
2. இருமடி கடற்படை. !
3. அன்னவை.
4. சுற்றியார்த்தன; தொடர.



1452. இரிந்து வானர மிரியலின் மயங்கின வெங்குஞ்
சொரிந்த வெம்படை துனித்திடத் தடுப்பருந் தொழிலால்
பரிந்த வன்னலும் பரிவில னெருபுடை படரப்
புரிந்த வந்நெடுஞ் சேனையங் கருங்கடல் புக்கான்.

(அது கண்டு), இரிந்து - நிலைகுலைந்து, வாநரம் இரியலின் - குரங்குகள் ஓடுதலினால், மயங்கின - (தம்முள்) தடுமாறின; எங்கும் - எல்லாப் பக்கங்களிலும், (போந்த சேனை), சொரிந்த வெம்படை - விழ்த்த கொடிய ஆயுதங்களை, துணித்திட - அறுத்திடுமாறு, தடுப்பு அரு தொழிலால் - விலக்கற் கருமையான தொழிலினோடு, பரிந்த அண்ணலும் - விரைந்து சென்ற இலக்குவனும், பரிவு இலன் - மனவிரக்கம் அற்றவனாய், ஒருபுடை படர - (வந்த சேனை எல்லாம்) ஒருபுறமாகச் செல்லுங்கால், புரிந்த - போரினை விரும்பி நின்ற, அ நெடு சேனை ஆம் கரு கடல் புக்கான் - அந்தப் பரந்த சேனையாகிய அழகிய கரிய கடலிடை நுழைந்தான்.

இரிந்து நிலைகுலைந்து என்றும், இரியலின் ஓடுதலின் என்றும் பொருள் செய்யப்பட்டது; பரிதல் - விரைந்து செல்லுதல். 'மாவே பரிதலின்' (புறநா. 97); பரிந்த அண்ணலும் பரிவிலன் என்ற இடத்து முரண் காண்க. படரப்புரிந்த என்பதை படர்ந்த என ஒரு சொல்லாகக் கோடலுமாம். அரக்கர் கருநிறத்தவர் ஆகலின் கருங் கடற் குவமையாக்கப்பட்டனர்.

பி - ம். 1. இரிந்த; வானவர்; இரியல் போய்; மயங்கிட, மயங்கினர்.

3. பரிவினில், பரிவில நெருவனும்; படர்ந்து.

4. கடலிடைப். 241

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

புக்க போதிலங் கிலக்குவன் பொருக்கெனத் துயர்தீர்ந்
தக்க ணந்தனில் அரக்கர்தம் பெரும்படை யவிய
மிக்க வார்சிலை வளைத்துரு மேறுடு விசும்பும்
உட்க நாணொலி துகமுடி வெனச்சரம் பொழிந்தான்.

## படுகளச் சிறப்பு

1453 முருக்கி னுண்மலர் முகைவிரிந் தாலன முரட்கண்
அரக்கர் செம்மயிர்க் கருந்தலை யடுக்கிய வனைகள்
பெருக்கி னற்பெருங் கடலிடைப் பெய்துபெய் தெருவை
உருக்கி னலன்ன குருதிநீ ராறுக ளொதுங்க.

முருக்கின் - கலியாணமுருக்கு மரத்தின், நாண்மலர் முகை - அன்றலரும் இயல்புவாய்ந்த மலர்முகைப் போதுகள், விரிந்தாலன - மலர்ந்தாற்போல, முரண்கண் - மாறுபாட்டினை உணர்த்துகின்ற விழிகளையுடைய, அரக்கர் - இராக்கதருடைய, செம்மயிர் கருதலை - செம்பட்ட மயிரைக் கொண்ட கருந் தலைகள், அடுக்கிய அணைகள் - ஒன்றன் மேலொன்ருக அடுக்கப்பட்ட அணைகளின் வழியாக, எருவை உருக்கினுல் அன்ன - செம்பினை உருக்கினுற்போன்ற, குருதி நீர் ஆறுகள் - இரத்தப் புனலாகிய நதிகள், பெருக்கினுல் - வெள்ள மிகுதியால், பெரு கடலிடை - அகன்ற கடலிடத்து, பெய்து பெய்து ஒதுங்க - சேர்ந்து சேர்ந்து ஒதுங்கா நிற்க; கடந்தில நீத்தம் என்று வருங்கவியுடன் இயைக்க.

அரக்கர் விழிகட்கு முருக்குமலர் உவமை; முருக்கு; பலாசமரம். இதனைச் செம்மைக்கு எடுத்துக் காட்டுவர். முருக்கின் நாண்மலர் போன்ற கண்கள் என்பர் ஒருசாரார். எருவை - செம்பு; யுத்த. கும்ப. 264. செம்மயிர்க் கருந்தலை என்பதில் முரண் காண்க.

பி - ம். 1. முருக்கு ; முகிழ்.
2. அடுக்கலினணைகள்.
3. பெருக்கினுன் ; கனலிடைப் ; உருவம். உருக.
4. உருக்கும் செம்பென ; ஓட. 242

1454 கரியின் கைகளும் புரவியின் கால்களுங் காலின்
திரியுந் தேர்களின் சில்லியு மரக்கர்தஞ் சிரமும்
சொரியுஞ் சோரியின் துறைதோறுந் துறைதொறுஞ் சுழிப்ப
நெரியும் பல்பிணப் பெருங்கரை கடந்தில நீத்தம்.

கரியின் கைகளும் - வேழத்தின் துதிக்கைகளும், புரவியின் கால்களும் - குதிரையின் கால்களும், காலின் திரியும் தேர்களின் சில்லியும் - காற்றுப் போன்று (வேகமாகச் செல்கின்ற) இரதங்களின் சக்கரங்களும், அரக்கர்தம் சிரமும் - இராக்கதரின் தலைகளும், சொரியும் சோரியின் - (துணிபட்ட உறுப்புகளினின்றும்) இடைவிடாது வழிகின்ற உதிரங்கள் நிறைந்துள்ள, துறைதொறும் துறைதொறும் - இடந்தோறும் இடந்தோறும், சுழிப்ப - சுழன்று

கொண்டிருப்ப, நீத்தம் - உதிரப்பெருக்கு, நெரியும் - அடர்ந்து நின்ற, பல் பிணம் பெருகரை கடந்தில - பலவாகிய பிணங்களாலாய பெருங்கரையைத் தாண்டி அப்பாற் செல்லமாட்டாவாயின.

கரிக்குச் சிறப்புறுப்புக்கை, புரவிக்குக்கால், தேர்கட்குச் சில்லி ஆகலின் அவையறுபட்டன எனப்பட்டது. சொரியும் சோரி என்ற தொடரில் சோரியின் இலக்கணம் காண்க. பிணக் குவியல் கள் அணை போன்று தடுத்து நின்றமையின் உதிரவெள்ளம் ஓடா மல் தேங்கி நின்றன என்பது கருத்து. நெரிதல் - நெருங்குதல்; 'நெரிந்து பார்மகள் நெளிவுற' (ஆரணிய. 447). நீத்தம்: 'மொய் புணிர், நீத்தமோடி நெடுந்திசை நேருற, (ஆரணிய. 550).

பா - ம். 1. காலில்.

2. தேர்களின் சிகரமும்.

3. சொரியுஞ் சோரியும்; துறைமடுத் : உறைதொறும்.

4. பெருங்கடல் சார்ந்தென. 243

1455. கொற்ற வாளெழுத் தண்டுவேல் கோன்மழுக் குலிசம்
மற்றும் வேறுள படைக்கல மிலக்குவன் வாளி
சுற்று மோடுவ தொடர்ந்திடை துணித்திடத் தொகையால்
அற்ற துண்டங்கள் படப்படத் துணிந்தன வனந்தம்.

கொற்றம் - (அரக்கர்கட்கு வெற்றியைத் தந்த), வாள் எழு தண்டு வேல் கோல் மழு குலிசம் - வாள் இருப்புலக்கை கதை வேல் அம்பு எரியிட்டி வயிரப்படை, மற்றும் சுற்றும் ஓடுவ வேறு உள படைக்கலம் - பின்னும் சுற்றிப் படர்வனவான வேறாக உள்ள போர்க்கருவிகள ஆனவற்றை, இலக்குவன் வாளி - இலக்குவ னுடைய அம்பானது, தொடர்ந்து இடை துணித்திட - விடாது சென்று நடுவே அறுத்ததனுல், தொகையால் - தொகுதியாக, அற்ற துண்டங்கள் - அறுபட்ட துணுக்குகள், படபட - படுந்தொறும் படுந் தொறும், துணிந்தன அனந்தம் - அறுபட்டன மிகப்பல.

இச்செய்யுள் அரக்கர்களின் பல்வேறு படைக்கலங்கள் இலக் குவன் வாளியால் அறுபட்டு விழ, அவைகள் விழவிழ மற்றும்

துணிபட்டு விழ்ந்தனவும் பல என்று கூறிற்று. அனந்தன் - முடிவற்றது எனப் பொருள்படும் வடசொல்: ந + அந்தம் எனப் பிரிந்து புணரும்.

பா - ம். 1. வான்பழு ; கோல்முதல்.

2. இலக்குவன் பகழி.

3. தோகைபோல், தோகையர, தோகைபோய்.

4. துணிந்தன ரநேகர், சாய்ந்தன ரநேகர். 244

1456. குண்ட லங்களும் மவுலியு மாரமுங் கோவை
தண்டை தோள்வளை கடகமென் றினையன தறுகண்
கண்ட கண்டங்க ளொடுங்கணை துரந்தன கதிர்சூழ்
மண்ட லங்களை மாறுகொண் டிமைத்தன வானில்.

தறுகண் - அஞ்சாமையுடன், துரந்தன கணை - (இலக்குவன்) விடுத்த அம்புகள், கண்ட - துண்டம் கண்ட, கண்டங்களொடும் - துணுக்குக்களோடும், குண்டலங்களும் - குண்டலங்களும், மவுலியும் - மகுடங்களும், ஆரமும் - மாலைகளும், கோவை - மணிமாலைகளும், தண்டை - தண்டை என்ற காலணியும், தோள்வளை - வாகுவலயமும், கடகம் - கடகமும், என்று இனையன - என்ற இத்தகைய அணிகள், கதிர்சூழ் மண்டலங்களை மாறுகொண்டு வானில் இமைத்தன - ஒளியமைந்த மண்டலங்கள் என்ற இவற்றுடன் மாறுகொண்டு ஆகாயத்தில் ஒளி செய்தன.

அம்பினால் துண்டிக்கப் பட்ட பல்வகை அணிகள் கதிர்சூழ் மண்டலங்களை மாறு கொண்டு இமைத்தன என்க. மவுலி 'வசிட்டனே புனைந்தான் மவுலி' தண்டை - காலணி. மாறு கொண்டு : 'சிந்துரத்தை மாறுகொள்ள' (சுந்தர. 312).

பா - ம். 1. மோலியும்.

2. இனையவும், தயங்கக்.

3. கண்டர் ; கொடுஞ்சரம், ஒடுங்கடுங்கணை ; துறந்தன, துணிந்தன, தூர்ந்தன, துணிந்திடக்.

4. இமைப்பனவானின், அமைத்தன ; வானி. 245

1457. பரந்த வெண்குடை சாமரை நெடுங்கொடி பதாகை
சரந்த ருஞ்சிலை கேடகம் பிச்சமொய் சரங்கள்
துரந்து செல்வன குருதிநீ ராறுகள் தோறும்
நிரந்த பேய்க்கணங் கரைதொறுங் குவித்தன நீந்தி.

பரந்த வெண்குடை - விரிந்த வெண்ணிறக் குடையும், சாமரை நெடுகொடி பதாகை - சாமரையும் உயர்ந்த பெருங்கொடியும், சரம்தரு சிலை - அம்புகளைக் கக்குகின்ற விற்களும், கேடகம் - கேடகமும், பிச்சம்-பிலிக் குடைகளும், மொய்சரங்கள் - நெருங்கிய அம்புகளும், குருதி நீர் ஆறுகள் தோறும் - உதிர நீர் கொண்ட ஆறுகள் தோறும், துரந்து செல்வன - (வெள்ளத்தாற்) உந்தப் பட்டுச் செல்வனவற்றை, நிரந்த பேய்கணம் - வரிசையாக நிறைந்த பேய்க் குழுக்கள், நீந்தி கரை தொறும் குவித்தன - அரிதிற் கடந்து கரைகளில் எம்மருங்கும் நிறைத்தன.

பரந்த என்பதற்கு மூவுலகங்களிலும் புகழ் பரவப்பெற்ற எனினுமாம். சாமரை - கவரி. பதாகை - பெருங்கொடி. துரந்து: 'கணை துரந்தவை' (1456); செல்வன; வினையாலணையும் பெயர். நிரத்தல் முறை அல்லது வரிசையாக நிற்றல்; 'நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்' (குறள். 648); நீத்தல்: அரிதிற் கடத்தல் என்பர்.

பி - ம். 2. தண்டமென்றினைய, தண்டு வேறெந்தம்; பிச்சமெய்,
4. செறிந்துடன் குவித்தன. 246

## கும்பகன்னன் சுக்கிரீவனோடு பொருதல்

1458. ஈண்டு வெஞ்செரு வினையன நிகழ்வுழி யெவர்க்கும்
நீண்ட வெள்ளெயிற் றரக்கன்மற் றொருதிசை நின்றான்
பூண்ட வெஞ்செரு விரவிகான் முனையொடு பொருதான்
காண்ட கும்மென விமையவர் குழுக்கொண்டு கண்டார்.

ஈண்டு - இவ்விடத்து, வெம்செரு - கொடிய போர், எவர்க்கும் இனையன நிகழ்வுழி - யாவர்க்கும் இவ்வாறு நடைபெறுகையில், நீண்ட வெள் எயிறு அரக்கன் - நெடிய வெள்ளிய கோரப்பற்களை யுடைய கும்பகன்னன், மற்றொரு திசை நின்றான் - பிறிதொரு

திசையில் நின்றவனாய், வெம்செரு பூண்ட-கொடுமையான போரினை மேற்கொண்ட, இரவிகால் முளையொடு பொருதான் - சூரிய புத்திரனை சுக்கிரீவனோடும் போர் புரிந்தான்; '(இப்போர்), காண்தகும் - கண்ணுறுதற்குரியது', என - என்று, இமையவர் குழுக்கொண்டு கண்டார் - தேவர்கள் கூட்டமாகக்கூடிப் பார்த்தார்கள்.

ஈண்டுதல் - நெருங்கி வருதலுமாம். நின்றான்: முற்றெச்சம். கான்முளை - புதல்வன், 'பின்னர்க் கான்முளை மன்னுதலிலரே' (ஞாநு. 21, 12); போர் நிகழ்ச்சிகளைக் கண்டு அமரர்க்கு உவகையும் அச்சமும் மாறிமாறி நிகழ்வதை இக்காப்பியத்திற் பல்லிடங்களிலும் காணலாம். யுந்த. *1379, 1393, 1408, 1410, 1412, 1438, 1441, 1446, 1462* முதலியன காண்க. தேவகாரியமாகவே இராமபிரான் அவதரித்தவன் ஆகலின் தங்களுக்கு எய்தக் கூடிய இன்பத் துன்பங்களை அவ்வப்பொழுது கண்காணித்து வந்தனர் இமையோர் என்க.

பி - ம். 1. ஆண்டு; நிகழ்வுறுமளவில்.
2. மற்றெருதனி நின்றான்.
3. பூண்ட வெஞ்சமர்.
4. கண்டு கொண்டார். 247

வேறு

1459. பொறிந்தெழு கண்ணினன் புகையும் வாயினன்
செறிந்தெழு கதிரவன் சிறுவன் சீறினன்
முறிந்தன வரக்கன்மா முரட்டின் டோளென
எறிந்தனன் விசும்பின்மா மலையொன் றேந்தியே.

செறிந்து எழு - நெருங்கி எழுகின்ற கிரணங்களையுடைய, கதிரவன் சிறுவன் - சூரியன் புதல்வனான சுக்கிரீவன், பொறிந்து எழு கண்ணினன் - தீப்பொறி தோன்றி எழுகின்ற விழிகளை யுடையவனும், புகையும் வாயினன் - புகை புறப்படுகின்ற வாயினை உடையவனுமாக, சீறினன் - சீறினவனாய், 'அரக்கன் மா

முரண் திண்தோள் முறிந்தன - அரக்கனுடைய பெரிய மாறுபட்ட வலிய தோள்கள் இற்றன', என - என்று பார்த்தோர் கருதுமாறு, மா மலை ஒன்று ஏந்தி - பெரிய மலையொன்றை உயர்த்தி, விசும்பின் எறிந்தனன் - வானத்தினின்று (அந்தக் கும்பகன்னன்மேல்) வீசினன்; ஏ - அசை.

பொறித்தல் - தீப்பொறி பறத்தல்; முன்னிரண்டடிகளில் வெகுளியின் மெய்ப்பாடு காண்க. கதிரவன் சிறுவன்: சுக்கிரீவன். அரக்கனுடைய அளவு கடந்த புயவன்மையைத் தெரிப்பான், 'மா முரண்திண்' என்ற அடைமொழிகள் தோளுக்குக் கொடுக்கப் பட்டது. மாமலை ஒன்று ஏந்தி விசும்பின் எறிந்தனன் என இயைக்க.

பி - ம். 2. ஏறியே.

4. விசும்பிவர், விசும்புயர். 240

1460. அம்மலை நின்றுவந் தவனி யெய்திய
செம்மலை யனையவெங் களிறுஞ் சேனையின்
வெம்மலை வேழமும் பொருத வேறினி
எம்மலை யுளதவற் கெடுக்கொ ணாதகே.

அ மலை நின்று வந்து அவனி எய்திய - அந்த மலையினின்று வந்து பூமியைச் சேர்ந்த, செ மலை அனைய வெம் களிறும் - செய்ய மலை போன்ற கொடிய வேழங்களும், சேனையின் - அரக்கர் தானையிலிருந்த, வெம்மலை வேழமும் - கொடிய மலையொத்த யானையும், பொருத - தம்முட் பொருதன; (இத்தகைய பெரிய மலையையே யெடுத்து வீசிய), அவற்கு - அந்தச் சுக்கிரீவனுக்கு, இனி வேறு எடுக்க ஒணாதது எ மலை உளது - பெயர்க்க இயலாததாய் வேறு எம்மலை உள்ளது? ஏ - அசை.

எடுக்க ஒணாதது என்பது தொகுத்து எடுக்கொணாதது என்றாயது. எம்மலையையும் பெயர்த்தெடுக்க வல்லவன் சுக்கிரீவன் என்று, அவனதேற்றம் கூறினார். முன்னடிகளில் கூறப்பட்ட

செம்மலையினையுகளிறுகள்; சுக்கிரீவன் பெயர்த்து வீசிய மலைக்கண் வதிந்த யானைகள். வெம்மலை வேழம் என்பதற்குக் கடுமையான மலைகின்ற வேழம் எனக் கோடலுமாம்.

பி-ம். 1. நின்றும்.

2. செம்மலைஆன.

3. வெம்முலை.

4. உளவவற்; கெடுக்கொளுதன. 243

இங்கு அதிகப்பாடல்கள் :—

அவ்வரை யிழிந்துவந் தழுந்து மாசுணம்
கவ்வின நிருதர்தம் களிறு கட்டற
விவ்வகை மலையினை யேந்தி யங்கையால்
வெவ்வின னரக்கன்வா ளவுணர் வாழ்த்தவே.

இக்கவியே சிறிது மாறுபாட்டுடன் :—

மைவரை நெடுவரை வீழ்ந்த மாசுணம்
கவ்வின யிரிதரக் களிறு கட்டற
விவ்வகை மலைகளை யேற்றொ ரங்கையால்
வல்விரைந் தரக்கன்வா ளவுணர் வாழ்த்தினன்.

1461. இவ்வகை நெடுமலை யிழிந்த மாசுணம்
கவ்விய நிருதர்தங் களிறுங் கட்டற
அவ்வகை மலையினை யேற்றொ ரங்கையால்
வவ்வின னரக்கன்வா ளவுணர் வாழ்த்தினர்.

இ வகை நெடுமலை இழிந்த மாசுணம்-இவ்வகையான உயர்ந்த மலையிலிருந்து இறங்கிய மலைப்பாம்புகள், நிருதர்தம் களிறும் கட்டற-அரக்கரின் யானைகளும் வன்மையறும்படி, கவ்விய-(அவற்றை) வாயாற் பற்றின; அவ்வகை மலையினை - அப்படிப்பட்ட மலையினை, அரக்கன் - கும்பகன்னன, ஏற்று - ஏற்று, ஓர் அங்கையால் வவ்வினன்-ஓர் உள்ளங்கையினுற் பற்றினன்; வாள் அவுணர் வாழ்த்தினர்-கொடிய அரக்கர் எல்லோரும் (அவனை) வாழ்த்தினர்.

முன் செய்யுளில் சுக்கிரீவன் எறிந்த மலைக்கண்ணிருந்த வேழங்கள் பொருதமை கூறினர். இச்செய்யுளில் அம்மலையிலிருந்த

பாம்புகள் அரக்கர் யானைகளைக் கவ்வின என்றார். கட்டு அற - உடற்கட்டு அல்லது வலி ஒழிய. 'தேகக்கட்டு விட்டது' என்ற வழக்குக் காண்க. அந்த மலையினையும் அரக்கன் கைப்பற்றினன். இங்கு வாழ்த்தவேண்டியவர் அவுணர் ஆகலின் 'அவுணர் வாழ்த்தினர்' எனப்பட்டது; (ஒப்பு): 'ஆடாடென்ப வொருசாரோரே, வாடன்றென்ப ரொருசாரோரே' (புறநா. 85). என வருதல் காண்க.

பி - ம். 1. அவ்வரையிழிந்துவந் தழுந்த.

2. கவ்வின; களிறு; திருதருங்களிறும்.

3. இவ்வகை; ஏந்தி. 250

1462. ஏற்றொரு கையினு லிதுகொல் நீயடா
ஆற்றிய குன்றமென் றளவி லாற்றலான்
நீற்றினு நுணுகுறப் பிசைந்து நீங்கெனுத்
தூற்றின னிமையவர் துணுக்க மெய்தினர்.

அளவில் ஆற்றலான் - வரம்பில்லாத வன்மைவாய்ந்த அரக்கன், ஒரு கையினுல் ஏற்று - ஒருகரத்தால் அம்மலையைத் தாங்கி, 'அடா - அடா, நீ ஆற்றிய குன்றம் - நீ எறிந்த மலை, இது கொல் - இதுதானே?' என்று - என்று சொல்லி, நீற்றினும் நுணுகுற - நீற்றினைக்காட்டிலும் நுண்ணிதாக, பிசைந்து - பிசைந்து, 'நீங்கு எனு - செல்க என்று', தூற்றினன் - கூறித் தூற்றிவிட்டான்; இமையவர் - (அதுகண்ட) அமரர், துணுக்கம் எய்தினர் - அச்சம் கொண்டனர்.

தூற்றுதல்: வாரியிறைத்தல்: 'தென்றல் தூற்றும் குறுந்துவலை' (யுத்த. 5). துணுக்கம் - அச்சம்: ஆரணிய. 413, 537 'கொண்டனன் துணுக்கமெய் திண்டக் கூசுவான்' (சுந்தர. 510). அத்துணைப் பெரிய மலையினையும் நீறுக்கி விட்ட இவன், இன்னும் என்ன என்ன செய்வானே என்ற துணுக்கம் என்க.

பி - ம். 1. எடா.

2. அளவிலாற்றலான்.

3. நீற்றியல்: நுணுகிறப். 251

1463. செல்வனோ நெடுங்கிரி யின்னுந் தேர்ந்தென
எல்லவன் கான்முளை யுணரு மேல்வையில்
கொல்லென வெறிந்தனன் குறைவி னோன்பினோர்
சொல்லெனப் பிழைப்பிலாச் சூலஞ் சோர்விலான்.

எல்லவன் கான்முளை - சூரியன் வழித்தோன்றலான சுக்கிரீவன், 'இன்னும் நெடுகிரி தேர்ந்து செல்வனோ - இன்னும் ஒரு உயர்ந்த மலையைத் தேடிக்கொணருமாறு செல்வானோ? (பிறிது ஓர் பெரிய மலையைத் தேடிப்போவதிற் பயனின்று)' என உணரும் எல்வையில் - என்று ஆலோசிக்கும் தருணத்தில், சோர்விலான் - சிறிதும் தளர்ச்சியின்றியிருந்த கும்பகன்னன், 'கொல் - கொலை புரிவாயாக' என - எனச்சொல்லி, குறைவில் நோன்பினோர் சொல் என - குறைவில்லாத விரதங்களையுடையவர்தம் சாபமொழி போன்று, பிழைப்பு இலா - தவறுதல் இல்லாத, சூலம் எறிந்தனன் - சூலப்படையினை வீசினான்.

எல்லவன் கான் முளை: சுக்கிரீவன்: 'இரவிகான் முளை' (1458) என்றது காண்க. கான் முளை காரணக்குறி. எல்வை - தருணம், 'வந்துபோர் விளைக்கு மேல்வை' (கிட்கிந்தா. 236): 'மென்னகையவன் விளம்புமேல்வையில்' (சுந்தர. 1170): நோன்பினோர் சொல் (ஒப்பு): 'வய்தெனக் கொல்லும் விற்கை மானுடர்' (யுத்த. 751): 'நல்லியல் நவையறு கவிஞர் நாவரு சொல்லென' தாடகை: (யுத்த. 1069). 'வைதாலென வைதாவின' (யுத்த. 1113). 'சொல்லொக்கும் கடிய வேகச்சுடுசரம்' (பால. தாடகை: 73): 'வைதவைவில்' (பால. பாயிரம்); 'புலவர் சொற்றுறை புரிந்தவும் போன்றன புங்கம்' (யுத்த. 1430) சோர்விலான் எறிந்தனன் என்க.

வி - ம். 1. செல்வனோர், செல்லவோர்; செலுத்தவென்று; தேர்ந்தளவு.
2. எல்லையுட்.
3. விடுத்தனன்; குறைவில் மெய்ம்பினன். 252

கும்பகன்னன் அநுமன் திறமையை வியந்துகூறல்

1464. பட்டனன் பட்டன னென்று பார்த்தவர்
விட்டுலம் பிடநெடு விசும்பிற் சேறலும்
எட்டின னதுபிடித் திறுத்து நீக்கினன்
ஒட்டுமோ மாருதி யறத்தை யோம்புவான்.

'பட்டனன் பட்டனன் என்று - (சுக்கிரீவன்) இறந்தான் இறந்தான்' என்று பதறி பார்த்தவர் விட்டு உலம்பிட - கண்ணுற்றவர் வாய் விட்டுப் புலம்புமாறு, (அந்தச் சூலம்), நெடு விசும்பில் சேரலும்-விரிந்த ஆகாயத்தைப் பொருந்திய அளவில், (அநுமன்) அது - அந்தச் சூலத்தை, எட்டினன் - தாவி, பிடித்து இறுத்து நீக்கினான் - கைப்பற்றி ஒடித்துப் போக்கினான்; அறத்தை ஓம்புவான் மாருதி - தருமத்தைப் பாதுகாக்கும் அநுமன், ஒட்டுமோ - (தன் அரசனான) சுக்கிரீவன் மேல் அது தாக்கக்கண்டு மனம் அமைவானோ? ஓ - எதிர்மறை யுணர்த்திற்று.

உலம்புதல் - முழங்குதல்; 'கருவரையுலம்பி' (சீவக. 1749); 'உலம்பு முரசங்கொட்டி' (சீவக. 2205); எட்டினன் - தாவிப்பிடித்து; முற்றெச்சம். அறத்தை ஓம்புவான் மாருதி ஒட்டுமோ என அன்வயிக்க. அறத்தை ஓம்புவான்; அநுமன்; இங்கு அறம் என்றது பிறர் உயிரைக்காப்பாற்றுதல். (ஒப்பு) 'செவ்வழியுள்ளத்தான்' (கிட்கிந்தா. 57, 63); 'அறத்துக்காங்கொரு தனித்துணையாகின்ற அநுமன்' (சுந்தர. 1041); 'உலகுக்கெல்லா மறப்பொருளிரப்பும் அண்ணல்' (சுந்தர. 28); 'நல்லற வீரன்' (சுந்தர. 803). ஒட்டுதல் - சம்மதித்தல். 'ஒட்டே னரசொ டொழிப்பேன் மதுரையும்' (சிலப். 21, 37); 'இங்கிருக்க வென்று லெமனொட்டான்' (தனிப்பா.); ஓம்புதல் பாதுகாத்தல். 'ஓம்பினேன் கூட்டைவாளா' (தேவா. 1105: 1); 'வருந்தித்தாங் கற்றன ஓம்பாது' (நீதிநெறி. 9).

பி - ம். 1. பட்டதுபட்டது, பட்டனபட்டன.
2. விட்டழைத்திட; விசும்பிற் பாய்ந்துடன்.
3. ஈர்த்து நோக்கினான். 263

1465. சித்திர வனமுலைச் சீதை செவ்வியால்
முத்தனார் மிதிலையூ ரறிவு முற்றிய
பித்தன்வெஞ் சிலையினை யிறுத்த பேரொலி
யொத்தது சூலமன் றிற்ற வோசையே.

அன்று சூலம் இற்ற ஓசை - அன்று சூலப்படை (அநுமனால்) ஒடிக்கப்பட்டபோதில் எழுந்த ஒலியானது, சித்திரம் வனமுலை சீதை செவ்வியால் - பலவண்ண வரிகள் அமையத் தொய்யில் எழுதப்பெற்ற அழகுவாய்ந்த தனங்களையுடைய சீதாதேவியின்

எழிலினால், முத்தனார் - எல்லா வினைகளினின்றும் விடுபட்டவனான இராமபிரான், மிதிலையூர் - மிதிலை நகரில், அறிவு முற்றிய - அறிவு நிறைந்த, பித்தன் - பித்தன் என்ற ஓர் திருநாமம் பூண்ட சிவ பிரானுடைய, வெம் சிலையினை இறுத்த பேர் ஒலி - கொடிய வில்லினை ஒடித்தபோது எழுந்த பெரிய ஒலியினை, ஒத்தது - நிகர்த்தது. ஏ : அசை.

முத்தன் - வினையின் நீங்கிவிளங்கிய அறிவன். முக்தன் என்ற வடசொற் சிதைவு. மிதிலையூர் : மிதிலையாகிய ஊர். அறிவு முற்றிய பித்தன் ; சொல் முரண். பித்தன் : சிவபெருமான் ; சமயாசாரியருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தியின் திருமணத்தைத் தடுக்கச் சென்றபோது, அந்த நாவலூரர் பெருமானை வெகுண்டு வைத பெயர். சிலையினை இறுத்த வரலாறு பாலகாண்டத்துக் காண்க. பித்தன் வில் : சீதையின் சுயம்வரத்தில் பணயமாக வைத்த வில். 'வேதனை தருகின்ற வில்' (பால. கார்முக : 11). வன முலை - வனப்பு முலை என்பது வனமுலை என வந்தது.

பி - ம். 1. சீதை செய்நியால் ; கேள்வனார்.
2. முருந்நனர் மிதிலை முற்றுபு.
3. பித்தனர் வெஞ்சிலை.
4. நூலமின்றிற்ற. 254

## கும்பகன்னன் விசியவேலை அநுமன் முறித்தெறிதல்

1466. நிருதனு மனையவ னிலைமை நோக்கியே
கருதவு மியம்பவு மரிதுன் கைவலி
அரியன முடிப்பதற் கனைத்து நாட்டினும்
ஒருதனி யுளையிதற் குவமை யாதென்றான்.

நிருதனும் - அரக்கனும், அனையவன் நிலைமை நோக்கி - அத் தகைய அநுமன் வன்மையைக் கண்ணுற்று, 'உன்கைவலி கருத வும் இயம்பவும் அரிது - உனது கையின்வன்மை நினைக்கவும் பகர வும் இயலாதது ; அரியன முடிப்பதற்கு - அரிய செயல்களை நிறை வேற்றுவதற்கு, அனைத்து நாட்டினும் - எல்லா நாட்டினுள்ளும், ஒரு தனி உளை - ஒரு தனிப்பட்டவனாக நீ உள்ளனை ; இதற்கு

உவமை யாது - (இந்த உன் ஆற்றற்கு)க் கூறத்தக்கதான உப யானம் யாது' என்றான் - என்று வியந்து கூறினான். ஏ - அசை.

நிருதன் - நிருதி என்ற தென்மேற்குத்திசைக் காவலனாகிய அரக்கன் வழிவந்தவன். அனையவன் - அநுமன். நினைந்த பின்னரே சொல் எழும் ஆதலின் கருதவும் இயம்பவும் அரிது எனப்பட்டது. வீரரை வீரர் வியப்பது மரபாதலின் இங்ஙனம் புகழ்ந்தான் என்க. இராவணன் இராம இலக்குவரைப் புகழ்ந்தமை கும்பகன்னன் வதைப்படலம் (யுத்த. 1226, 1241)-லும், இந்திரசித்து வதைப் படலம் 4 - 6 லும் காண்க. மற்றும் முருகப் பிரானுடைய உண்மை நிலையுணர்ந்து தெளிந்த சூரபன்மன் அப் பெருமானை வியந்து புகழ்ந்ததைக் கந்தபுராணம் சூரபன்மன் வதைப்படலம் 433 - 448-ல் காண்க.

பி - ம். 1. இளையவன்.
2. கருதவும் விளம்பவும்; ஆவதுன்கைவலி.
3. அளாந்து காட்டினும்.
4. உவமம்; யார்கொலோ, உவமைதானின்றால். 256

## அநுமனைக் கும்பகன்னன் அறைகூவ அநுமன் மறுத்தல்

1467. என்னொடு பொருதியே லின்னு நீயமர்
சொன்னன புரிவலென் றரக்கன் சொல்லலும்
முன்னினி யெதிர்க்கிலே னென்று முற்றிய
பின்னிகல் பழுதெனப் பெயர்ந்து போயினான்.

(பின்னும் அநுமனை நோக்கி), அரக்கன் - கும்பகன்னன், 'என்னொடு பொருதியேல் - நீ என்னுடன் போர் புரிவாயாகில், இன்னும் - மேலும், அமர் - போரில், நீ சொன்னன புரிவல் - (நீ) சொன்னவற்றைச் (சொன்னவாறே) செய்வன்', என்று சொல்லலும் - என்று பகர்ந்த அளவில், (அநுமன்), 'முன் - முன்பு, இனி - இனி மேல், எதிர்க்கிலேன் - பொருதல் செய்யேன், என்று - என்று, முற்றியபின் - போரினை முடித்த பின்னர், இகல் பழுது - போர் புரிதல் தவறாகும்', என - என்று சொல்லி, பெயர்ந்து போயினான் - நீங்கிச் சென்றான்.

சமமான ஆற்றல் சான்றவன் என மகிழ்ந்து அநுமனைப் போருக்கழைக்க, அநுமன் முன்தான் கூறிய சூளுறவினைச் சுட்டிப் பொருதற்கு மறுக்கின்றான். முன்செய்த சூளுறவு : யுத்த. 1404-ல் காண்க. இகல் - போர் அல்லது இகலுதல் என்பதன் முதனிலையுமாம்.

பி - ம். 1. அநுமயான்.

2. சொன்னது ; புரிதும், புரிவன் ; சொல்கிறேன், உன்னோடும்.

3. முன்சொன்னேன் ; எதிர்கிலேன் ; என்ன ; ஒழினேன். 256

## போரில் சுக்கிரிவன் உணர்வு நீங்குதல்

1468. அற்றது காலையி னரக்க னாயுதம்
பெற்றிலன் பெயர்ந்தில னனைய பெற்றியிற்
பற்றினன் பாய்ந்தெதிர் பருதி கான்முளை
எற்றினன் குத்தின னெறும்வெங் கைகளால்.

அது அற்ற காலையின் - அந்தச் சூலப்படை இற்ற பொழுதில், அரக்கன் - கும்பகன்னன், ஆயுதம் பெற்றிலன் - பிறிதோர் படைக் கலம் பெறாதவனாயிருந்தும், பெயர்ந்திலன் - இடத்தை விட்டு நீங்கினானில்லை ; அனைய பெற்றியில் - அச்சமயத்தில், பருதிகான் முளை - சூரியன் புதல்வனான சுக்கிரீவன், எதிர் பாய்ந்து - எதிரே தாவி, பற்றினன் - (கும்பகன்னனைப்) பற்றி, எறும் வெங்கைகளால் - மிக்க வன்மை வாய்ந்த கடிய தனது கரங்களால், எற்றினன் குத்தினன் - தாக்கிக் குத்தினான்.

சூலப்படையிற்று வேறு ஆயுதம் இன்றியிருந்த போதும் கும்பகன்னன் பின்னிடாது நின்றது அவனுடைய துணிவினைக் காட்டும்.

பி - ம். 2. பெற்றியின்.

4. எரியும், எறியும் ; கன்னிறன். 257

இதன்பின் 'திரிந்தன' என்ற பாடல் ஓர் பிரதியில்,

1469. அரக்கனு நன்றுநின் னுண்மை யாயினும்
தருக்கினி யின்றொடு சமையுந் தானென
நெருக்கினன் பற்றின னீங்கொ ணுவகை
யுருக்கிய செம்பன வுதிரக் கண்ணினுன்.

உருக்கிய செம்பு அன உதிரம் கண்ணினுன் - உருக்கிய செம்பொத்த இரத்தம் பொருந்திய விழிகளையுடையவனுன, அரக்கனும் - கும்பகன்னனும், 'நின் ஆண்மை நன்று - நினது வீரம் பெரிது: ஆயினும் - ஆனுலும், இனி தருக்கு - இப்பொழுது நீ எய்தியுள்ள செருக்கு, இன்ரொடு சமையும் - இன்றுடன் அழிந்து விடும்', என - என்று பகர்ந்து, நெருக்கினன் - நெருக்கி, நீங்கொணு வகை (அப்பாற்) போக முடியாதபடி, பற்றினன் - (இறுகப்) பிடித்துக் கொண்டான். தான் : அசை.

நன்று பெரிதாகும் (தொல். உரி. 47); தருக்கு-செருக்கு. 'தருக்கினர் கெடுவ ரென்றல்' (ஆரணிய. 755); வலிமையுமாம். நெருக்கினன் : முற்றெச்சம். நீங்கொணுத என்பது ஈறு குறைந்தது. உருக்கிய செம்பன உதிரம்; 'உலைக்குவட்டுருகும் செம்பொத்துதிர நீர் வழங்குங் கண்ணுன்' (யுத்த. அதிகாயன். 267); 'உருக்கு செம்பெனக் கண்ணினன்' (யுத்த. பிரமாத்திர. 175); 'எருவை உருக்கினுலன்ன குருதி நீர்' (யுத்த. 1453).

பி - ம். 1. நன்றுனது.
3. நீங்குரு, நீங்கலா.
4. செம்பென ; உதிரச் செங்கணுன். 258

1470. திரிந்தனர் சாரிகை தேவர் கண்டிலர்
புரிந்தனர் நெடுஞ்செருப் புகையும் போர்த்தெழ
எரிந்தன வுருமெலா மிருவர் வாய்களும்
சொரிந்தன குருதிதா மிறையுஞ் சோர்ந்திலார்.

நெடு செரு புரிந்தனர் - (இருவரும்) பெரும் போரைச் செய்பவர்களாய், சாரிகை திரிந்தனர் - வலசாரி இடசாரி சுற்றி வந்தார்

கள் ; தேவர் கண்டிலர் - (இன்னாரின்னார் என்று) தேவர்களும் அறிந்திலர் ; புகையும் போர்த்து எழ-(அவர்கள் சாரி சென்ற வேகத்திற் பிறந்த தீயினால்) புகையும் (திசைகளையெல்லாம்) மூடி மேலெழ, உரும் எலாம் எரிந்தன - இடிகள் எல்லாம்எரிவன ஆயின ; இருவர் வாய்களும் குருதி சொரிந்தன ; இருவருடைய வாய்களும் உதிரம் கக்கின ; தாம் இறையும் சோர்ந்திலார் - (அவ்வாறிருந்தும்) அவர்கள் இருவரும் தளர்ந்தாரில்லை.

இறையும் - சிறிதளவும் ; 'இனியிறை தாழ்த்தி யாயின்'.

பி - ம். 1. சாரியை.

3. உரு.

4. சொரிந்தனர். 259

1471. உறுக்கின ரொருவரை யொருவ ருற்றிகல்
முறுக்கினர் முறைமுறை யரக்கன் மொய்ம்பினால்
பொறுக்கிலா வகைநெடும் புயங்க ளாற்பிடித்
திறுக்கின னிவன்சிறி துணர்வு மெஞ்சினான்.

ஒருவரை ஒருவர் உற்று உறுக்கினர் - (இருவரும்) ஒருவரை ஒருவர் கிட்டி அதட்டினர் ; முறைமுறை இகல் முறுக்கினர் - முறை முறையாகப் போரை உக்கிரமாகச் செய்தார்கள் ; அரக்கன் - கும்பகன்னன், மொய்ம்பினால் - வலிமையுடன், பொறுக்கிலா வகை - தாங்க முடியாதபடி, நெடு புயங்களால்பிடித்து இறுக்கினன் - நீண்ட கரங்களால் (வானரேசனை)ப் பற்றி அழுத்தினான் ; இவன் - இந்தச் சுக்கிரீவனும், உணர்வும் சிறிது எஞ்சினான் - சிறிது அறிவும் நீங்கப் பெற்றான் (மூர்ச்சை யுற்றான்).

அரக்கன் கடிதாக அழுத்தவே சுக்கிரீவன் சிறிது அயர்ந்தான் என்க. உறுக்குதல் - அதட்டுதல். 'தஞ்சொலாற்றின் வந்திடா விடி லுறுக்கி' (சி. சி. 2·16).

பி - ம். 1. ஒறுக்கிலர் ; ஒற்று.

2. முனைபொழு தரக்கன்.

3. பொறுக்கலா ; பிணித்து.

4. இறுக்கின னவன். 260

## கும்பகன்னன் சுக்கிரீவனைத் தூக்கிக் கொண்டு செல்ல வானரரும் வானவரும் வருந்துதல்

1472. மண்டம ரின்றொடு மடங்கு மானிடர்
திண்டிறற் பெரும்படை சிந்துந் தக்கதோர்
எண்டரு கருமமற் றிதனி னில்லெனக்
கொண்டனன் போயின னிருதர் கோநகர்.

நிருதர் கோ - அரக்கர் தலைவனாகிய கும்பகன்னன், 'மண்டமர் இன்றொடும் அடங்கும்-(நான் இவனைத் தூக்கிச் சென்றால்) மிக்குச் செல்கின்ற போர் இன்றொடும் ஒய்ந்துவிடும்; மானிடர் திண்திறல் பெருபடை-இராம இலக்குவருடைய உறுதியான வன்மை வாய்ந்த வானரப் பெருஞ்சேனை, சிந்தும் - சிதறிப் போகும்; (ஆதலின்) எண் தரு தக்கது ஓர் கருமம் - எண்ணிச் செய்யத்தக்க பொருத்தமான ஓர் செயல், இதனின் இல் - இதனைக் காட்டிலும் இல்லை', என - என்று ஆலோசித்து, கொண்டனன் நகர் போயினன் - (அந்த வானரேசனைத் தூக்கிக் கொண்டு இலங்காபுரி நோக்கிச் செல்லலாயினன். மற்று: வினைமாற்று.

இன்றொடும் மடங்கும் எனினும் ஒன்றும். கொண்டனன் - முற்றெச்சம்.

பி - ம். 1. மன்னவர்.
2. தண்டலில்; சிந்தத் தக்கதே, இரிந்து சிந்திடும்.
4. கோநகர். 261

1473. உரற்றின பறவையை யூறு கொண்டெழச்
சிரற்றின பார்ப்பினிற் சிந்தை சிந்திட
விரற்றுறு கைத்தல நெரித்து வெய்துயிர்த்
தரற்றின கவிக்குல மரக்க ரார்த்தனர்.

உரற்றின பறவையை - கதறிக் கொண்டிருந்த (தாய்ப்) பறவையை, ஊறு கொண்டு எழ - வல்லூறு தூக்கிச் செல்ல, சிரற்றின பார்ப்பினில் - வெகுண்டு அலறி நின்ற குஞ்சுகள் போன்று, (சுக்கிரீவனை அரக்கன் தூக்கிச் சென்றபோது), கவிகுலம் - குரங்குக் கூட்டங்கள், சிந்தை சிந்திட - (தங்கள்) உள்ளம்

குலைய, விரல் துறு கை தலம் நெரித்து - விரல்கள் நெருங்கிய கையினை அழுத்திப் பொருத்திக் கொண்டு, வெய்து உயிர்த்து - சூடு எழப் பெருமூச்சு விட்டுக் கொண்டு, அரற்றின - வாய்விட்டுக் கூவின ; அரக்கர் ஆர்த்தனர் - இராக்கதர்கள் (உவகையால்) ஆர்ப் பரித்தனர்.

பறவை உரற்றியது வல்லூறு கண்டு. உரற்றிய வோசை யன்று (ஆரணிய. 1108) ; 'அவனும்வா யிடியினின் றுரறினன்' (கிட்கிந்தா. 188) : மற்றும் ஆரணிய. 24, 602 ; ஊறு - வல்லூறு ; நாமைக தேசமுமாம். பிற பறவைகளுக்கு இடையூறு விளைப் பதால் எழுந்த பெயர். 'விண்பட்ட கொக்குவல் லூறுகண் டென்ன விலவிலப்ப' (தனிப்பா. ஒட்டக்கூத்தர்.) ; சிரற்றுதல் - வெகுண்டலறுதல் ; 'சிறிய வன்போற் செயிர்த்த நோக்கம்' (பொருந. 124) ; பார்ப்பு - பறவைக் குஞ்சு ; 'பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை' (தொல். மரபு. 4); 'பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்' (ஆரணிய. 219) ; சிரற்றினப் பறவை எனப் பாடம் கொண்டு மீன்கொத்திப் பறவை என்பர் ஒரு சாரார். சிரல் : சிச்சிலி. சிந்துதல் - சிதறி நிலைகுலைதல். 'சிந்திப்போம் இருவினைகள் சிந்திப்போமே' ; துறுதல் - நெருங்குதல். 'துறுநீர்க் கடம்பின் துணையார் கோதை' (சிறுபாண். 69). நெரித்து ; 'நிரை வளை தளிர்க்கரம் நெரித்து நோக்கினர்' (ஆரணிய. 588). 'கையொடு கையை நெரிக்கும்' (பால. நகர் நீங்கு. 11) மகளிர் துக்கத்திலும் வெகுளியிலும் கைவிரல்களைக் கோத்து அழுத்துதல்.

பி - ம். 1. உரற்றினப், உரத்தினன்.
2. பார்ப்பினை ; பறவையிற் ; நொந்திடா.
3. கைத்தலத் தடித்து.
4. வாநரம். 262

1474. நடுங்கின ரமரரு நாவு லர்ந்துவேர்த்
தொடுங்கினர் வாநரத் தலைவ ருண்முகிழ்த்
திடுங்கின கண்ணின ரெரிந்த நெஞ்சினர்
மடங்கின வாமுயிர்ப் பென்னு மாண்பினர்.

அமரரும் - தேவரும், நடுங்கினர் - நடுக்கமுற்றனர் ; வேர்த்து - (உடல்) வியர்த்து, நா உலர்ந்து - நா வறண்டு, ஒடுங்கினர் - அடங்

இனர் ; வானரர் தலைவர் - குரங்குத் தலைவரும், உண்முகிழ்த்து - உள மகிழ்ச்சி குறைந்து, இடுங்கின கண்ணினர் - இடுங்கின விழிகளை யுடையவரும், எரிந்த நெஞ்சினர் - வெந்த நெஞ்சினை யுடையவரு மாகி, உயிர்ப்பு மடங்கின ஆம் என்னும் மாண்பினர் - (இவர்களின்) மூச்சும் அடங்கிற்று என்று பார்ப்பவர் நினையுமாறு, (தம் அரச னிடத்துள்ள அன்பு) சிறந்த பெருமைதர நின்றனர்.

அச்சம் துயரம் இவற்றால் நிகழும் மெய்ப்பாடுகள் இங்குக் குறிக்கப்பட்டன. உண் முகிழ்த்தல் - உள்ளம் மலராது குவிதல். இடுங்கின கண்ணினர் - இடுக்கண் உற்றவர் ; இடுக்கண் என்ப தற்கு இடுங்கிய கண் என்று உறுப்புப் பொருள் கூறுவர். இடுங்கின கண், எரிந்த நெஞ்சு வடமொழி நடை. உயிர்ப்பு - மடங்கியது தங்களுடைய தலைவற்குற்ற பெருந்துன்பத்தாலாகலின், அவர்கள் மாண்பினர் எனப்பட்டார். 'நிலமக்கள் சால வுடைத் தெனினுந்தானை, தலைமக்க ளில்வழியில்' (குறள். 770) என்றாராக லின் தலைவற்கு வருந்தினர் என்க.

பி - ம். 1. நடுங்கினன் மாருதி, நடுங்கின மாருதி ; நாவும் வேர்த்துலர்ந்து.
2. உண்ணெகிழ்ந்து.
3. இடுங்கனற் கண்ணினர், எரியும்.
4. என்று மண்பினர். 263

அரக்கன் தூக்கிச்செல்லும் சுக்கிரீவன் தோற்றம்

1475. புழுங்கிய வெஞ்சினத் தரக்கன் பொங்குவான்
அழுங்கலில் கோண்முகத் தரவ மாயினன்
எழுங்கதி ரிரவிதன் புதல்வ னெண்ணுற
விழுங்கிய மதியென மெலிந்து தோன்றினன்.

புழுங்கிய வெஞ்சினத்து பொங்குவான் அரக்கன் - மனப்புழுக்க முற்ற கடும் கோபத்துடன் கொதித்தெழுந்த கும்பகன்னன், அழுங்கல் இல் - வருந்துதல் இல்லாது (எளிதாகக்), கோள் முகத்து அரவம் ஆயினன் - பற்றும் தன்மை கொண்ட வாயினை யுடைய இராகு என்னும் பாம்புபோலாயினன் ; எழும் கதிர் இரவி தன் - எழுகின்ற கிரணங்களையுடைய சூரியனுடைய, புதல்வன் - மகனான சுக்கிரீவன், எண்ணுற - யாவரும் நினைந்து வருந்த,

விழுங்கிய மதிஎன - (அந்த அரவத்தால்) விழுங்கப்பட்ட சந்திரனை ஒத்து, மெலிந்து தோன்றினன் - மெலிந்து காணப்பட்டான்.

அழுங்கல்: 'ஆவிசால நொந்துநொந் தழுங்குவானு மாயினன்' (ஆரணிய. 645). கோள் முகம் - கொள்கின்ற வாய்; முகம் வடமொழியில் வாய் என்று பொருள்படும். கோள்: கொள் என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். அரவம்: இராகு. எண்ணுற - சுக்கிரீவன் பல எண்ணங்கள் கொள்ள; 'பாம்பின் வாய்த் தேரை போலப் பலபல நினைகின்றேனை' (தேவா. 1105:1): இரவிதன் புதல்வன் மதியென மெலிந்து என்ற தொடர்க்கண் உள்ள நயம் ஓர்க. அரவம் கதிர்களை 'வெளவுதல்' ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை மல்லல்மா ஞாலம் விளக்குறூஉம்' (நாலடி. 148) என்றது கொண்டு காண்க. 'மதியை யமைய வாயிற் பெய்து மிழ்கின்ற வயிலெயிற்றரவிற்' (சுந்த. 389).

பா - ம். 1. வெம்சமத்து; போருவான்.

2. விண்ணகத்து.

3. எழுங்கதிர்த் தலைமகன், புங்கவன்; என்னன, எனாற, என்னாரா. 264

1476. திக்குற விளக்குவான் சிறுவன் தீயவன்
மைக்கரு நிறத்திடை மறைந்த தன்னுரு
மிக்கதுங் குறைந்தது மாக மேகத்துட்
புக்கதும் புறத்துமா மதியும் போன்றனன்.

திக்கு உற விளக்குவான் சிறுவன் - திசைகள் எல்லாம் நன்கு விளங்குமாறு தோன்றுபவனான சூரியன் புதல்வனான சுக்கிரீவன், தீயவன்-கொடியவனான கும்பகன்னனுடைய, மை கரு நிறத்திடை மறைந்த தன் உரு-மேகம் போன்று கருத்த உருவத்திலே மறைந்த தன் உடலம், மிக்கதும் குறைந்ததும் ஆக - ஒருகால் மிகுந்தும் ஒருகால் குறைந்தும் காணப்பட்டு, மேகத்துள் புக்கதும் புறத்துமாம் மதியும் போன்றனன் - மேகத்தில் நுழைந்ததும் நுழையாததுமான சந்திரனையும் ஒத்து விளங்கினன்.

மேகத்தில் நுழைந்ததும் நுழையாததுமான மதி இங்கு பொருத்தமான உவமை. மேகம் அரக்கனுக் குவமை; அரக்கன்

வெளவிய சுக்கிரீவன் இடையிடையே நீண்டும் குறைந்தும் தோன்று வதற்கு மேகத்தில் சிக்கிய மதி இடையிடையே சிறிதும் பெரிது மாகத் தோன்றுவது உவமை.

பி - ம். 1. விளங்குவாள்.

2. மறையத் தன்னுரு; தேக்கரு.

4. புக்கது புறந்தரா. 285

## அநுமன் கும்பகன்னனேடு எதிர்த்துப் போர்செய்யாது அவன் பின்னே கைபிசைந்து செல்லுதல்

1477. ஒருங்கமர் புரிகிலே னுன்னெ டியானென
நெருங்கிய வுரையினை நினைந்து நேர்கிலன்
கருங்கடல் கடந்தவக் காலன் காலின்சேய்
பெருங்கரம் பிசைந்தவன் பின்பு சென்றனன்.

கரு கடல் கடந்த அ காலன் - கரிய கடலைக் கடந்த அழகிய காலை யுடையவனும், காலின் சேய் - வாயுவின் புதல்வனும் ஆன அநுமன், 'யான் - நான், ஒருங்கமர் - ஒன்றாகப் பொருந்திப் போரினை, உன்னெடு - உன்னுடன், புரிகிலேன் - செய்யேன்', என நெருங்கிய உரையினை - என்று அண்மையிற் பகர்ந்த சொல்லினை, நினைந்து - நினைவு கூர்ந்து, நேர்கிலன் - எதிர்க்காத வனாய், பெருகரம் பிசைந்து-பெரிய கரங்களைப் பிசைந்து கொண்டு, அவன் பின்பு சென்றனன் - அந்தக் கும்பகன்னன் பின்னர்ப் போயினான்.

செயல் ஒன்றும் புரிய இயலாத நிலையில் கைபிசைதல் பெரு வழக்கு. காதலொடு கேட்டமுது கைபிசைய (உலா) நெருங்கிய உரை: அண்மையில் உரைத்த சூளுறவு; யுத்த. *1404, 1467* காண்க. கருங்கடல் கடந்த வக்காலன்; 'கருங்கடல் கடந்தனன் காலினா லென்றான்' (சுந்தர. *585*); 'ஓதநீர் கடந்து பகை கடிந்து' (யுத்த. *408*); 'அருங்கடல் கடந்திவ்வூரை யள்ளெரிமடுத்து' (யுத்த. மாயாசிதை. *52*). 'தாயினான் வேலையோடு மயிந்திரப் பரவை

தானே, (யுத்த. பிரமாத்திர. 155); உரையினை நினைந்து நேர்கிலன் என்பது கொண்டு அநுமன் சத்தியவான் என்பது விளங்கும்; நீதியினின்றிர் வாய்மை யமைந்தீர் (கிட்கிந்தா. 992); காலன் காலின் சேய் என்ற தொடரில் பிராசம் காண்க.

பி - ம். 1. புரிகலன், புரிகிலன்.

3. காலன் காலன்வாழ்; காலின் காதலன். 266

## சுக்கிரீவனைக் கும்பகன்னன் தூக்கிச்சென்ற செய்தியை வாநரர் இராமபிரானுக்குத் தெரிவித்தல்

1478. ஆயிரம் பெயரவ னடியில் வீழ்ந்தனர்
நாயக ரெமக்கினி யாவர் நாட்டினிற்
காய்கதிர்ச் சிறுவனைப் பிணித்த கையினன்
போயின னரக்கனென் றிசைத்த பூசலார்.

(அப்போது வாநரர்கள் இராமபிரானிடம் சென்று), 'காய்கதிர் சிறுவனை - எரிக்கின்ற கிரணங்களையுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவனை, பிணித்த கையினன் - கட்டிய கையையுடையவனாய், அரக்கன் போயினன் - கும்பகன்னன் சென்றான்; எமக்கு நாட்டினில் இனி நாயகர் யாவர் - எங்களுக்கு நாட்டினில் இனிமேல் தலைவர் யார் உள்ளார்', என்று இசைத்த பூசலார் - என்று கூக்குரலிட்டவராய், ஆயிரம் பெயரவன் அடியில் வீழ்ந்தனர் - ஆயிரம் பெயர் பூண்ட இராமபிரான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர்.

ஆயிரம் பெயரவன்: 'பேராயிரமுடையான்' (யுத்த. கும் 103); 'ஆயிரம் பெயரவ னறியுமுன்பவன்' (யுத்த. 1507); 'ஆயிரம் நாமத் தண்ணல்' (யுத்த. பிரமாத்திர. 157). 'காய்கதிர்ச் சிறுவன் மைந்தன்' (சுந்தர. 517).

பி - ம். 1. பேரவன்.

2. நாட்டிடை.

3. புதல்வனை.

4. உரைக்கும். 267

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

காய்கதிர்ச் சிறுவனைப் பிணித்த கையினன்
போயின னரக்கனென் றுரைத்த போழ்தின்வாய்
நாயகன் பொருக்கென வெழுந்து நஞ்சுமிழ்
தீயன வெகுளிய வினைய செய்தனன்.

## இராமன் சினங்கொண்டு இலங்கைவாயிலை யடைதல்

1479. தீயினு முதிர்வுறச் சிவந்த கண்ணினன்
காய்கணை சிலையொடுங் கவர்ந்த கையினன்
ஏயெனு மாத்திரத் திலங்கை மாநகர்
வாயில்சென் றெய்தினன் மழையின் மேனியான்.

மழையின் மேனியான் - மேகம் போன்ற திருமேனியுடையவனான இராமபிரான், தீயினும் - தீயினைக்காட்டிலும், முதிர்வு உற சிவந்த கண்ணினன் - மிகுத்துக் காட்டும் சிவப்பேறிய விழிகளையுடையவனும், காய்கணை சிலையொடும் கவர்ந்த கையினன் - சுடவல்ல அம்புகளை வில்லுடனே பற்றிய கையினை யுடையவனுமாகி, ஏ எனும் மாத்திரத்து - ஒரு நொடிப்பொழுதில், இலங்கை மாநகர் வாயில் சென்று எய்தினன் - இலங்கைப் பெருநகரத்தின வாயிலைச் சென்றடைந்தான்.

எப்பொழுதுமே அன்றலர்ந்த செந்தாமரைபோன்ற கண்கள் இப்பொழுது சினத்தால் தீயினும் சிவந்து காட்டின என்க. காய் கணை - வினைத்தொகை. ஏ எனுமளவு : 'வந்த கிங்கர ரேயெனு மாத்திரை மடிந்தார்' (சுந்தர. 805); 'ஏயெனு மளவிற் பற்றி' (சுந்தர. 992). மழையின் மேனியான் ; 'மறி கடலோ மழை முகிலோ'. (அயோத்தி. கங்கை. 1).

பி - ம். 1. சிவந்த செங்கணன்.
2. தொடுக்கும் கையினன்.
3. ஏயெனு மளவினில், மளவையின்,
4. வாயில்னெய்தினன்.

## இராமன் சரக்கூடங்கட்டிக் கும்பகன்னன் செல்லும் வழியைத் தடுத்தல்

1480. உடைப்பெருந் துணைவனை யுயிரிற் கொண்டுபோய்க்
கிடைப்பருங் கொடிநக ரடையிற் கேடெனத்
தொடைப்பரும் பகழியின் மாரி தூர்த்துற
அடைப்பெனென் றடைத்தனன் விசும்பி னுறெலாம்.

'கிடைப்பரும் - எளிதில் பெறுதற்கரிய, உடை பெரு துணைவனை - என்னுடைய பெரிய நண்பனான சுக்கிரீவனை, உயிரில் கொண்டு போய் - என்னுயிரைக் கொண்டு போவதுபோற் கொண்டு சென்று, கொடிநகர் அடையில் கேடு என - நகரை அடைந்திடில் கெடுதி நேரும்', என - என்று எண்ணி, 'தொடை - தொடுத்தற் பொருந்திய, பரு பகழியின் - பெரிய அம்புகளின், மாரி தூர்த்து - மழையினால் நிரப்பி, உற அடைப்பென் - நன்கு அடைப்பேன்' என்று விசும்பின் ஆறு எலாம் அடைத்தனன் - என்று சொல்லிக் கொண்டு, ஆகாய வழியை யெல்லாம் அடைத்தான்.

இங்ஙனம் பகழியாற் கட்டுவதைச் சரக்கூடங்கட்டிப் பகைவனை அப்பாற் செல்லாது தடுத்தல் என்ப. 'மாயா சரகூடம் வளைத்திடலால், வலையுட் படுவீர மடங்கலென' (வி. பா. 17-ஆம் போர். 203); துணைவனை உயிரிற் கொண்டு போய்; 'ஒன்றிய வுணர்வே யாய வோருயிர்த் துணைவ' (யுத்த. 860) என்று இராமபிரானே கூறுதல் காண்க. 'ஆவியொன்றாக நட்டான்' (சுந்தர. 1128).

பி - ம். 2. கிடைப்பெருங்; கடிநகர்.
3. தொடைப்பெரும்; தூர்த்திறை; தூர்த்துராய். 269

1481. மாதிர மறைந்தன வயங்கு வெய்யவன்
சோதியின் கிளர்நிலை தொடர்த லோவின
யாதும்வின் படர்கில வியங்கு கார்மழை
மீதுநின் றகன்றது விசும்பு தூர்த்தலால்.

விசும்பு தூர்த்தலால் - (அம்புகள்) ஆகாய வழியை நிரப்பியதால், மாதிரம் மறைந்தன - திக்குகள் எல்லாம் மறைந்தன; வயந்த வெய்யவன் - ஒளி விடுகின்ற சூரியனுடைய, கிளர் சோதி

யின் நிலை - மேலெழுகின்ற கிரணங்களின் நிலையும், தொடர்தல் ஓவின - (பூமியில்) தொடர்ந்து ஒளிவிடுதல் நீங்கிற்று; யாதும் விண்படர்கில - எதுவும் வானத்திற் செல்ல வியலா தொழிந்தன; இயங்கு கார்மழை - வானத்தில் உலாவுகின்ற கருநிறமுள்ள மேகம், மீது நின்று அகன்றது - மேற்புறத்தினின்று விலகியது.

மாதிரம் - திக்குகள். 'மாதிர மெவையு நோக்கான்' (யுத்த. 1213). ஓவுதல் - ஒழிதல்; 'ஓவுநா ளுணர்வழியு நாள்' (தேவா. 927 : 3); சூரியன் ஒளி தரையில் படராமலும் எதுவும் வானத்திற் செல்ல முடியாமலும் செய்தது பகழி மழை.

பி - ம். 2. சோதியும்; தொடர்தலாயின.

3. விலங்கு, கான் மழை.

4. அகன்றன; தூர்ந்ததால், தூர்த்ததால். 270

1482. மனத்தினுங் கடியதோர் விசையின் வான்செல்வான்
இனக்கொடும் பகழியின் மதிலை யெய்தினன்
நினைத்தவை நீக்குத லருமை யின்றெனச்
சினக்கொடுந் திறலவன் திரிந்து நோக்கினன்.

மனத்தினும் கடியது ஓர் விசையின் வான்செல்வான் - மனத்தைக் காட்டிலும் விரைந்து செல்வதான ஓர் விரைவுடன் ஆகாய வழியே செல்பவனாய், சினம் கொடு திறலவன் - சினத்துடன் கடுமையான வன்மையையுமுடைய கும்பகன்னன், இனம் - தொகுதியாகவுள்ள, கொடும் பகழியின் மதிலை - கொடிய (இராம) பாணத்தினாலாகிய மதிலை, எய்தினன் - அணுகினவனாய், நினைத்து - ஆலோசித்து, 'இன்று - இப்பொழுது, அவை நீக்குதல் அருமை - அவற்றை விலக்குதற்கில்லை', என - என்று கருதி, திரிந்து நோக்கினன் - திரும்பிப் பார்த்தான்.

விசைக்கு மனத்தை உவமையாக்குவது கவிமரபு: 'காற்றினு மனத்தினுங் கடியது' (யுத்த. 1433); (அகநா. 384)ம் காண்க.

பி - ம். 1. விசும்பின்.

2. எய்துமேல்.

3. நினைத்தனன்; நீங்குதல்; நின்றென்ச், நின்றெனச்.

4. கொடுந் தொழிலவன். 271

1483. கண்டனன் வதனம்வாய் கண்கை காலெனப்
புண்டரீ கத்தடம் பூத்துப் பொற்சிலை
மண்டலந் தொடர்ந்துமண் வயங்க வந்ததோர்
கொண்டலிற் பொலிதரு கோலத் தானையே.

புண்டரிகம் தடம் - தாமரைக் குளம்போன்று, வதனம் வாய் கண்கைகால் என - முகம் வாய் கண் கை கால் என்னுமாறு, பூத்து - (தாமரை மலர்கள் தன்னிடம்) மலரப் பெற்று, பொன் சிலை மண்டலம் தொடர்ந்து - அழகிய வில்வட்டம் தொடரப்பட்டு, மண் வயங்க - பூமியில் விளங்குமாறு, வந்தது ஓர் கொண்டலில் - வந்துள்ளதொரு மேகம்போல், பொலிதரு - விளங்குகின்ற, கோலத்தான் தனை - அழகிய திருமேனியை யுடையவனான இராம பிரானை, கண்டனன் - தரிசித்தான்.

வில் வளைவுடன்கூடிய காளமேகம், முகம் முதலிய உறுப்புக்களாகிய தாமரைகளைக்கொண்டு பூமியில் தோன்றியதுபோல, இராமபிரான் தோன்றினன்; அவனைக் கும்பகன்னன் கண்டான். இல்பொருள் உவமை. புண்டரிகத் தடம்பூத்த: 'கருமுகில் தாமரைக் காடுபூத்து' (பால. திருவவ. 13); 'அமலத்திண் கரமும் காலும் வதனமும் கண்ணு மான, கமலத்தின காடுபூத்த காளமா மேக மொத்தான்' (யுத்த. இலங்கைகாண். 28); 'கண்ணுற்றான் வாலி நீலக் கார்முகில் கமலம் பூத்து, மண்ணுற்று வரிவி லேந்தி வருவதே போலு மாலை' (கிட்கிந்தா. 304). கொண்டல் இராமபிரானுக்கு உவமையாக இக்காப்பியத்திற் பல இடங்களிலும் காணலாம்; கொண்டல் மெய்யுவமையோடு பயனுவமையுமாம்.

பி - ம். 1. காலினப்.
2. பூத்தொவ்வர், பூத்தபோற்.
3. தொடர்ந்து வான், மின், பின். 272

கும்பகன்னன் கடுமொழி

1484. மடித்தவாய் கொழும்புகை வழங்க மாறிதழ்
துடித்தன புருவங்கள் சுறுக்கொண் டேறிடப்
பொடித்ததீ நயனங்கள் பொறுக்க லாமையால்
இடித்தவான் றெழிப்பினு லிடிந்த குன்றெலாம்.

மடித்த வாய் கொழு புகை வழங்க - (அப்போது கும்பகன்ன னுடைய) மடித்த வாயானது கொழுவிய புகையை வெளிப்படுத்த, மாறு - மாறுபாட்டுடனே, இதழ் துடித்தன - வாயிதழ்கள் துடித்தன; புருவங்கள் சுறு கொண்டு ஏறிட - புருவங்கள் சினக்குறி கொண்டு நெரிந்துயர, நயனங்கள் தீ பொடித்த - விழிகள் நெருப்புப் பொறியைக் கக்கின; இடித்தவான் தெழிப்பினுல் - அவன் முழங்கிய வீர முழக்கத்தால், பொறுக்கலாமையால் - வேகம் பொருமல், குன்று எலாம் இடிந்த - குன்றுகள் எல்லாம் உதிர்ந்தன.

இச்செய்யுளிலும் வெகுளியின் மெய்ப்பாட்டினைக் காணலாம். 'வீரச்சுவை யவிநயம் விளம்புங் காலை, முரிந்த புருவமும் சிவந்த கண்ணும், பிடித்த வாளும் கடித்த வெயிறும், மடித்த வுதடும் சுருட்டிய நுதலும், திண்ணென வுற்ற சொல்லும்' (சிலப். அரங் கேற்று காதை.) காண்க. சுறுக்கொள; 'துடித்த தொடர் மீசைகள் சுறுக்கொள' (ஆரணிய. 602); பொடித்தல் - தோற்றுவித்தல். 'பொடித்தெழப் பொறிப்ப நோக்கி' (கிட்கிந்தா. 304); நயனம்: வடசொல். தெழிப்பு; 'தெழித்தன ளுரப்பினள் சிறுக்கண் டீயுக விழித்தனள்' (அயோத்தி. மந்தரை 53).

பி - ம். 1. மடித்து, வடித்து; கொடும்புகை வயங்க.

2. துடித்தபசர்; புருவங்கள்; சுறுட்.

3. பொடித்தன. 273

1485. மாக்கவந் தனும்வலி தொலைந்த வாலியாம்
பூக்கவர்ந் துண்ணியும் போலு மென்றெனைத்
தாக்கவந் தனையிவன் றன்னை யின்னுயிர்
காக்கவந் தனையிது காணத் தக்கதால்.

'மா கவந்தனும் - பெரிய கவந்தனும, வலி தொலைந்த - வலியழிந்த, வாலியாம் பூ கவர்ந்து உண்ணியும் போலும் - பூவினைப்பற்றி உண்ணும் தன்மையுள்ள குரங்கும் போல்வான், என்று - என்று கருதி, இவன் இன்உயிர் தன்னை காக்க வந்தனை - இந்தச் சுக்கிரிவனுடைய இனிய உயிரைக் காக்குமாறு, வந்தனை - வந்து, எனை தாக்க வந்தனை - என்னை எதிர்க்க வந்தாய்; இது காண தக்கது - இந்த உன்செயல் காணத்தக்கது'. ஆல்: அசை.

சுக்கிரீவனை மீட்பதென்பது இயலாத காரியம்; இயலுமேல் செய்து காட்டுக என்றான் கும்பகன்னன். மாகவந்தன்: பிற குறிப்பு. இராவணன்பட்ட பரிபவத்தை உணர்ந்திருந்தும் வாலியைப் பூக்கவர்ந்துண்ணும் குரங்கென்றான்; (ஒப்பு): 'ஊன வில்லிறுத் தோட்டைமா மரத்துளம் போட்டிக், கூனி சூழ்ச்சியால் அரசிழந்து' (யுத்த. 120). இச்செய்யுட்கு 'நாஹம் விராதோ விஞ்ஞேய; நகபந்த; கரோநச, நவாலி, நசமாரீச; கும்பகர்ணேஹ மாகத;' என்ற முதனூல் சுலோகத்தினை ஒப்பிடுக.

பி - ம். 2. இன்றெனைத்.

3. இவன்றனை.

4. எனக்கழறன் மேயினன். 274

1486. உம்பியை முனிந்திலே னவனுக் கூர்தியாம்
தும்பியை முனிந்திலேன் றொடர்ந்த வாலிதன்
தம்பியை முனிந்திலேன் சமரந் தன்னிலியான்
அம்பியல் சிலையினாய் புகழன் றாதலால்.

'அம்பு இயல் சிலையினாய் - அம்புடன் இயங்கும் வில்லேந்திய வனே! புகழ அன்று ஆதலால் - புகழத்தக்க செயலாகாது ஆகலின், சமரம் தன்னில் - போரின்கண், யான் - நான், உம்பியை முனிந்திலேன் - உன் தம்பி மீது சினங் கொண்டேனில்லை; அவனுக்கு ஊர்தி ஆம் தும்பியை முனிந்திலேன் - அவனுக்கு வாகனமாக அமைந்த யானையைப் போன்ற அநுமன் மீதும் சினம் கொண்டேனில்லை; தொடர்ந்த வாலி தன் தம்பியை முனிந் திலேன் - (என்னைப் பின்பற்றிவந்த) வாலியின் தம்பியான சுக்கிரீ வனையும் சினந்தேனில்லை'.

உம்பி: உன் தம்பி என்பதன் மரூஉ. ஊர்தி-வாகனம்; 'யாளி யூர்தி' (அரிச். பு. பாயிரம்.). தும்பி - யானை: 'சொல்லுவன் தும்பிக் கொம்பை' (கிட்கிந்தா. 762). சமரம்: சமர் என்ற வடசொல் அம் பெற்று வந்தது. சமத்துவமில்லாத அல்லது ஒத்த படையெடாத வனைப் பொருது வெல்வது இகழ்வினை விளைக்கும் ஆதலின், அவர் களை முனிந்திலேன் என்றான; (ஒப்பு): (தொல். புறத். 65 உரை). 'நீயெனி லாண்டோ ரொன்பதிற றிரட்டில் நெடுஞ்சிறைக் கலுழன்மு னெறிக்கொள், ஈயென ஓடி மதுரைவிட் டாழியெயிற்று

வாரகைப்பதி புகுந்தாய், நோயென வசுரர்க் குடைந்துபொற் காவி னுழைதரு நாறுமா மகத்தோன்; சேயெனி லிளையன் வீமனை விசும்பிற் சேர்த்துவ னெனவிழி சிவவா' (வி. பா. இராசசூய. 21).

பி - ம். 2 நம்பியை; தொடர்ந்து, தோற்ற, நயக்கும்.

4. புகழின்று, அழகன்று. 275

1487. தேடினென் திரிந்தனெ னின்னைத் திக்கிறந்
தோடிய துன்படை யும்பி யோய்ந்தொரு
பாடுற நடந்தன னனுமன் பாறினன்
ஈடுறு மிவனைக்கொண் டெளிதி னெய்தினேன்.

'நின்னை தேடினென் திரிந்தனென் - உன்னைத் தேடி யலைந்தேன்; உன் படை திக்கு இறந்து ஓடியது-உன் சேனை திசைகளைத் தாண்டி ஓடியது; உம்பி - உன் தம்பி, ஓய்ந்து - வலி குன்றி, ஒரு பாடுற நடந்தனன் - ஒரு பக்கமாகப் பொருந்த ஒதுங்கிச் சென்றான்; அநுமன் பாறினன் - அநுமன் வலி சிதைந்தான்; ஈடு உறும் இவனை கொண்டு எளிதின் எய்தினேன் - வலியடங்கிய (இந்தச்) சுக்கிரிவனைத் தூக்கிக் கொண்டு எளிதாக வந்தேன்.

தேடினன்: முற்றெச்சம். ஓடிய துன்படை; யுத்த. 1387-ல் காண்க. பாடு - பக்கம். பாறுதல் - சிதறி யோடுதல்; 'புள்ளினம் பாறவே' (சுந்தர. 721); 'ஈடுண்டாய்' (கிட்கிந்தா.); தான் கொண்ட சூளுறவால் பொருதற்குமுன் வந்திலாத அநுமனை, அஞ்சி வலி சிதைந்ததாகக் கூறினன். (யுத்த. 1467) பார்க்க. எவ்விதமான முயற்சியும் இன்றித் தூக்கி வந்ததாகக் கூறுவான் 'எளிதின் எய்தினேன்' என்றான் யுத்த. 1472. காண்க.

பி - ம். 1. திக்கறிந்து.

2. ஓடின, ஓடினது; ஓர்ந்து, நேர்ந்து.

3. பாடுற மறைந்தனன்.

4. இலங்கை யெய்தினேன், இனிதின். 276

1488. காக்கிய வந்தனை யென்னிற் கண்டவென்
பாக்கியந் தந்தது நின்னைப் பன்முறை
ஆக்கிய செருவெலா மாக்கி யெம்முனைப்
போக்குவென் மனத்துறு காதற் புன்கணோய்.

'காக்கிய வந்தனை என்னின்-(நீ இந்தச் சுக்கிரீவனைக்) காக்கும் நிமித்தம் வந்தா யென்றால், கண்ட என் பாக்கியம் நின்னை தந்தது - நேர்ந்த எனது நல்லூழ் நின்னைக் கொடுத்தது (என்ன வேண்டும்); பன்முறை ஆக்கிய செரு எலாம் ஆக்கி -(நான் முன்பு) பலதடவை களில் ஆற்றியுள்ள போரை எல்லாம் (இப்போது) புரிந்து, எம் முனை - எமது அண்ணனுடைய, மனத்து உறு - உள்ளத்தின்கண் உள்ள, புன்கண் காதல் நோய் - வருத்தம் தரவல்ல காம நோயினை, போக்குவென் - அகற்றுவன்.

இராமபிரான் தன்னை எதிர்க்க வந்தது தான் செய்த பாக்கியம் என்றும், அவனுடன் பலவகையிலும் பொருது சீதையைத் தன் அண்ணன் எய்துமாறு புரிந்து அவனுடைய ஆசை நோயைத் தீர்ப்பதாகவும் கூறினன். புன்கண் நோய்-துன்பத்திற்குக் காரண மான காதற்பிணி. காக்கிய : செய்யிய என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். பாக்கியம் : 'பாக்கியம் பெரும் பித்தும் பயக்குமோ' (யுத்த. மீட்சி. 26); 'பாக்கியம் பலித்த திந்நாள்' புன்கணோயுடன் எம்முனைப் போக்குவன் என்ற இடத்து அமங்கலப் பொருள் தொனித்தல் காண்க. இவ்வாறு பாடுவது உயர்ந்த கவிகளின் மரபு. சூர்ப்பணகை இராவணனிடம் கூறிய செய்யுட்கள் ஆரணிய. 628, 629, 630ல் காண்க. 'முடிபுனை கடிகை நாள் மொழியின் என்றனன்' (அயோத்தி. மந்தரை. 1); 'உத்தம னங்கக ரொழியப் போயினான்' (யுத்த 318)ம் காணலாம். 'எம்முனாகிய இராவணனைத் தேவரீர் தெய்வாதீனமாக எழுந்தருளியபோதே மூன்று பிறப்பிற் சத்துருவாக வருகிறோம் என்றபடி போர் செய்து, அடியேனும் இராவணனும் மடிந்து எங்கள் மனோதுக்கம் தீர்ப்போம் என்பது உள்ளுறை பொருள்' என்பது பழையவுரை.

பி - ம். 3. எம்முன்னை.
4. நோக்குவன் ; மனத்துயர்க்.

1489. ஏதிவெந் திறலினே யிமைப்பி லாரெதிர்
பேதுறு குரங்கையான் பிணித்த கைப்பிணி
கோதைவெஞ் சிலையினற் கோடி வீடெனில்
சீதையும் பெயர்ந்தனள் சிறைநின் றுமென்றான்.

'ஏதி வெம் திறலினேய் - வாள் முதலிய கருவிகளால் போர் புரியும் ஆற்றல் சான்றவனே! இமைப்பிலார் எதிர் - தேவர்களின் முன்பு, பேதுறு குரங்கை - உள்ளம் கலங்கிய குரங்கினை (சுக்கிரீவனை), யான் பிணித்த கைபிணி - நான் அகப்படுத்திய கைப்பிடிப்பினை, கோதை வெம் சிலையினால் - (நாணியால் தழும்பேறுதபடி தரிக்கப் பட்ட) தோலுறையுடன இயைந்த கடுமையான வில்லினால், வீடு கோடி எனில் - விடுதலை செய்வாயாகில், சீதையும் சிறை நின்று பெயர்ந்தனள் ஆம் - சீதா தேவியும் சிறையினின்று விடுதலை யடைந்தவள் ஆவள்', என்றான் - என்று பகர்ந்தான்.

ஏதி - வாள்: 'ஏதியாவதுமின்றி' (ஆரணிய. 22); மற்றும்; சுந்தர. 209, 231. இமைப்பிலார்: தான்புரியும் கடும்போரினைக் கண் இமையாது நோக்கும் தேவர் எனினுமாம். கோதை - நாண். இறுதி இரண்டடிகட்கு (ஒப்பு): 'இராமன் தோள்களை, வெல்லலா மென்பது சீதை மேனியைப் புல்லலா மென்பது போலும்' (யுத்த. 1285). கோடி: கொள் + தி: வீடு: விடுதல் என்றதின் முதனிலை திரிந்த தொழிற் பெயர்: எனில் என்றது இராமபிரானு லியலாது என்ற இகழ்ச்சிக் குறிப்பினது. சீதையும்; உம்மை இழிவு சிறப்பு.

பா - ம். 1. ஏதில் வெந்திறலினல்; இமைப்பிலர் கண்முன்.
2. பிடித்த கைப்பிணி.
3. கோடில்; சிலையினேய் கோள்விட் டேனெனில், கொளவிட்டே னெனில்.
4. போந்தனன், பேர்ந்தனன். 278

இராமபிரான் வஞ்சினம்கூறி அம்பெய்தல்

1490 என்றலு முறுவலித் திராம னியானுடை
இன்றுணை யொருவனை யெடுத்த தோளெனும்
குன்றினை யரிந்தியான் குறைக்கி லேனெனிற்
பின்றின னுனக்குவிற் பிடிக்கி லேனென்றான்.

என்றலும் - என்று கும்பகன்னன் மொழிந்தவுடன், இராமன முறுவலித்து - இராமபிரான் புன்னகை செய்து, 'யான் உடை இன் துணை ஒருவனை எடுத்த தோள் எனும் குன்றினை - யான் பெற்றுள்ள இனிய ஆருயிர்ச் சகோதரனை ஒருத்தனை (சுக்கிரீவனை) தூக்கிச் சென்ற (உன்னுடைய) தோள் என்னும் மலையினை, யான் அரிந்து குறைக்கிலேன் எனில் - நான் அறுத்துத் துண்டித்து வீழ்த்தாமற்போனல், உனக்கு பின் றினன் - உனக்குப் பின்வாங்கியவனுய் (ப் பின்பு), வில் பிடிக்கிலேன் - வில்லைக் கைப் பற்றுவதில்லை' என்றான் - என்று மொழிந்தான்.

முறுவல் - எள்ளல் நகை. வீரத்தெழுந்த வெகுளி நகையுமாம். 'என்றலு முறுவலித்து'; நைடத. நகர் நீங்கு. துணை - துணைவன் என்றும் தம்பி யென்றும் பொருள்படும். அரிந்து குறைத்தல் - அறுத்துத் துண்டுபடுத்தல்.

பா - ம். 2. தோளினை, தோளினை.

3. குன்றினுமுயர்ந்தன. குன்றினுமுயரிய.

4. பின்றுவன். 279

1491. மீட்டவன் கரங்களால் விலங்க லாரையை
முட்டற நீக்குவான் முயலும் வேலையில்
வாட்டலைப் பிடர்த்தலை வயங்கு வாளிகள்
சேட்டக னெற்றியி னிரண்டு சேர்த்தினன்.

அவன் - அந்தக் கும்பகன்னன், மீட்டு - மீளவும், விலங்கல் ஆரையை - குறுக்காக அமைந்த அம்புமதிலை, கரங்களால் - கைகளால், முட்டு அற நீக்குவான் - பிணிப்பு நீக்கும்பொருட்டு, முயலும் வேலையில் - முயற்சி புரியும் போழ்தினில், (இராமபிரான்) பிடர் தலை - பிடரியிடத்திலே, (அம்பருத் தூணியில்), வயங்கு வாள் தலை வாளிகள் - ஒளிர்கின்ற வாளின் தலையொத்த அம்புகள், இரண்டு - இரண்டினை, சேடு அகன் நெற்றியின் சேர்த்தினன் - உயர்ந்த விசாலமான நெற்றிமீது தைக்குமாறு எய்தான்.

'பன்முறை ஆக்கிய செருவெலாம் ஆக்கி எம்முனைப் போக்குவன்' (1488) என்று வஞ்சினம் கூறிய கும்பகன்னன் மீளவும் முயலும் வேலையில் எனக்கூட்டி அறிக. ஆரை - மதில். 'கன்னி

யாரையி னுயர்ச்சி கண்டு' 'ஆண்டகை ராரையொரு வாயிலக லாமுன்' (சுந்தர. 116, 55ப). மூட்டு-கட்டு அல்லது பிணிப்பு. நீக்குவான்: வானீற்று வினையெச்சம். வாளிகளின் கூர்மை தெரிப்பான் வாட்டலை வாளி எனப்பட்டது. பிடர்த்தலை என்றதனால் அதன் கண் தூங்கும் ஆவம் எனப்பொருள் தரப்பட்டது. சேடு-பெருமை 'சேடுறு நறுமுகை' (கிட்கிந்தா. 545).

பி-ம். 1. சரங்களாம், சுரங்களாம்; விலங்கலானையே, விலங்கலாரலே.
3. விடர்த்தலை; வயங்க.
4. சேட்டகம்; நெற்றிமேல். 280

இராமனம்பாலடிபட்ட கும்பகன்னன் வருணனை

1492. சுற்றிய குருதியின் செக்கர் சூழ்ந்தெழ
நெற்றியி னெடுங்கணை யொளிர நின்றவன்
முற்றிய கதிரவன் முளைக்கு முந்துவந்
துற்றெழு மருணன துதயம் போன்றனன்.

சுற்றிய - சூழ்ந்த, குருதியின் - உதிரத்தால், செக்கர் சூழ்ந்து எழ - செவ்வானம் சுற்றிலும் தலைப்பட, நெற்றியின் நெடு கணை ஒளிர நின்றவன் - நெற்றிமீது நீண்ட அம்புகள் விளங்கநின்ற அரக்கன், முற்றிய - முதிர்ந்த, கதிரவன் - கிரணங்களை உடைய வனான சூரியன், முளைக்கும் முந்து வந்து உற்று எழும் - உதிக்கு முன்னர் வந்து பொருந்தி எழுகின்ற, அருணனது உதயம் போன்றனன் - அருணனுடைய உதயத்தை ஒத்தான்.

குருதிப் பரப்புக்குச் செவ்வானம். நெற்றியின் நெடுங்கணை; இராமபிரான் எய்தவை (1491); முற்றிய - நிறைந்த எனினுமாம். உதிரம் படிந்து நின்ற அரக்கன் அருக்கோதயத்தின் முன்னர்க் காணப்படும் அருணன் போன்றனன் என்க.

பி-ம். 1. செற்றிய.
3. முற்றிய வெய்யவன்; முளைப்பின், புனைக்க; முன்புவந்து.
4. உற்றெழு காலையில். 281

## சுக்கிரீவன் உணர்ச்சிபெறக் கும்பகன்னன் மூர்ச்சை யடைதல்

1493. குன்றின்வீ ழருவியிற் குதித்துக் கோத்திழி
புன்றலைக் குருதிநீர் முகத்தைப் போர்த்தலும்
இன்றுயி லெழுந்தென வுணர்ச்சி யெய்தினன்
வன்றிறல் றேற்றிலான் மயக்க மெய்தினன்.

குன்றின்வீழ் அருவியில் - மலையினின்று வீழும் அருவிபோல, புல் தலை - (அரக்கனுடைய) புல்லிய தலையினின்று, குதித்து கோத்துஇழி - குதித்துக் கொண்டு கோத்து இழிகின்ற, குருதிநீர் - உதிரம், முகத்தை போர்த்தலும்-அவன் முகத்தைச் சுற்றி நிறைத்தலும், இன் துயில் எழுந்தென உணர்ச்சி எய்தினன் - இனிய தூக்கத்தினின்று விழித்தெழுந்தாற் போன்று தன்னினைவு வரப் பெற்றான்; வல் திறல் தோற்றிலான் - அதுவரையில் தனது வலிய தன்மை முறியடிக்கப் பெறாத கும்பகன்னன், மயக்கம் எய்தினன் - மயக்கத்தை அடைந்தான்.

குன்றின் வீழருவி: ஐந்தாம் வேற்றுமை நீக்கப் பொருள். 'வாசத்தாரவன் மார்பெனு மலைவழங் கருவி, ஓசைச் சோரியை நோக்கினன்' (கிட்கிந்தா. 298). எழுந்ததுஎன என்பது எழுந்தென என நின்றது; புன்றலை - புல் போன்ற மயிரினை உடைய தலை யெனினுமாம்; 'புன்றலைக் குரங்கொடு புணரும் நட்பனே' (கிட்கிந்தா. 260). வன்றிறல்: 'வன்றிறல் வாலி சேயும்' (யுத்த. 932).

பி - ம். 1. அருவிபோல்; கோத்துறு.
3. உணர்ந்தென, எழுந்தன. 282

## உணர்வுபெற்ற சுக்கிரீவன் இராமபிரானைக் காணுதல்

1494. நெற்றியி னின்றெளி நெடிதி மைப்பன
கொற்றவன் சரமெனக் குறிப்பி னுன்னினன்
சுற்றுற நோக்கினன் தொழுது வாழ்த்தினன்
முற்றிய பொருட்கெலா முடிவு ளான்றனை.

நெற்றியின் நின்று நெடிது ஒளி இமைப்பன - (கும்பகன்னன்) நெற்றியிற் பதியப்பெற்று மிகவும் ஒளி விடுவனவற்றை, கொற்றவன் சரம் என குறிப்பின் உன்னினுன் - வெற்றிவீரனுன இராமபிரானுடைய அம்பு என்று மனத்திற் கருதினவனுய், (சுக்கிரீவன்) சுற்றுற நோக்கினன்-சுற்று முற்றும் பார்த்து, முற்றிய பொருட்கு எலாம முடிவுளான் தனே - உலகத்து நிறைந்துள்ள பொருள்கட்கெலாம் இறுதியில் அடைதற்குரிய பரம்பொருளின் ஓர் கூருன இராமபிரானேக் கண்டு, தொழுது வாழ்த்தினுன் - வணங்கி வழுத்தினுன்.

தொழுது வாழ்த்தினவன் சுக்கிரீவன்.

பி - ம். 1. நின்றவை ; இமைப்பதை

2. எண்ணினன்

3. நோக்கினுந் ; தொழுது நோக்கினன்

4. முற்றுறு ; முடிவிலான்றனே. 283

சுக்கிரீவன் கும்பகன்னனது மூக்கையும் காதையும் கடித்து ஏகுதல்

1495. கண்டன னயகன் றன்னேக் கண்ணுருத்
தண்டலின் மானமு நாணுந் தாங்கினுன்
விண்டவ னசியுஞ் செவியுங் வேரொடும்
கொண்டன னெழுந்துபோய்த் தமரைக் கூடினுன்.

நாயகன் தன்னே கண்டனன் - (சுக்கிரீவன்) தலைவனுகிய இராமபிரானேக் கண்ணுற்ருன் ; கண்ணுரு - பார்த்து, தண்டல் இல் மானமும் நாணும் தாங்கினுன் - நீங்குதல் இல்லாத அபிமானமும் வெட்கமும் பொறுத்தவனுகி, விண்டவன் - மாற்ருனுன கும்பகன்னனுடைய, நாசியும் செவியும் - மூக்கினேயும் செவியையும், வேரொடும் கொண்டனன - வேரோடும் கொண்டு, எழுந்துபோய் - எழுந்து சென்று, தமரை கூடினுன் - தம்மவருடன் சேர்ந்தான்.

கண்ணுரு : செய்யா என்னும் வாய்பாடு, தண்டல்-நீங்குதல் ; (ஆரணிய. 715) விண்டவன் ; 'விண்டவர் நம்புகல் மருவி வீழ்வரோ'

(யுத்த. 393); 'தந்தை தாய் தமர் தாரம்' (நாயு. தேசோ. 3). 'நல்ல செய்வார்க்குத் தமர்' (நாலடி. 77); கொண்டனன்; முற்றெச்சம். ரோசமும் நாணும் தான் பகைவன் கையிற் சிக்கியதால் என்க. இனி விண்டு அவன் எனப்பிரித்து, அவன் நாசியும் செவியும் விண்டு எனினுமாம்.

பி-ம். 1. கண்களால்

2. கூட்டினன்

4. கொண்டவன். 284

வாநரம் முதலியன மகிழ்ச்சியாலாரவாரித்தல்

1496. வானர மார்த்தன மறையு மார்த்தன
தானர மகளிருந் தவரு மார்த்தனர்
மீனரல் வேலையும் வெற்பு மார்த்தன
வானவ ரோடுநின் றறமு மார்த்ததே.

(இவ்வாறு சுக்கிரீவன் திரும்பிவந்து தமருடன் கூடியது கண்டு), வாநரம் ஆர்த்தன - குரங்குகள் ஆரவாரம் செய்தன; மறையும் ஆர்த்தன - வேதங்களும் கோஷித்தன; அர மகளிரும் தவரும் ஆர்த்தனர் - தேவ மகளிரும் தவத்தோரும் ஆரவாரித்தனர்; மின் நரல் வேலையும் வெற்பும் ஆர்த்தன - மீன்கள் ஒலி செய்கின்ற ஆழியும் மலையும் சத்தம் செய்தன; வானவரோடு நின்று அறமும் ஆர்த்தது - தேவர்களுடன் ஒன்றுகூடி நின்று தருமதேவதையும் ஆர்ப்பரித்தது. ஏ, தான் - அசைகள்.

இவ்வாறு அனைத்தும் ஒன்றுகூடி ஆர்த்த இடங்கள் இக் காப்பியத்திற் பலவிடங்களிற் காணலாம். 'பனிக்கற் சிலையும்' (சுந்தர. 514) என்ற செய்யுளையும், 'வில்லாளரானார்க்கெல்லாம்' (யுத்த. இந்திரசித்து 56) என்ற செய்யுளையும் காண்க; யுத்த. மருத்துமலை 106ம் காணலாம். முதலடி முற்றுமோனை.

பி-ம். 1. மறையு மார்த்தன

2. தவமுமார்த்தன

3. மீனற, மீனவர்; விண்ணும்

4. வானவர் தம்மொடும்; ஆர்த்தவே, ஆர்த்தன. 285

## இராமபிரான் மகிழ்ச்சி

1497. காந்திக லரக்கன்வெங் கரத்துள் நீங்கிய
ஏந்தலை யகமகிழ்ந் தெய்த நோக்கிய
வேந்தனுஞ் சானகி யிலங்கை வெஞ்சிறைப்
போந்தன ளாமெனப் பொருமல் நீங்கினன்.

காந்து - வெகுளும் தன்மையுள்ள, இகல் அரக்கன் - மாறுபட்ட அரக்கனாகிய கும்பகன்னனுடைய, வெம் கரத்துள் நீங்கிய - கொடிய கையினின்று வெளியேறிய, ஏந்தலை - வானர அரசனாகிய சுக்கிரீவனைக் (கண்ணுற்று), அகம் மகிழ்ந்து - மனமுவந்து, எய்த நோக்கிய - (அவனை) நன்றாகப் பார்த்த, வேந்தனும் - அரசனான இராமபிரானும், சானகி - (தன் மனைவியாகிய) சீதாப்பிராட்டியார், இலங்கை - இலங்காபுரியின்கண் அடைபட்டிருந்த, வெம் சிறை போந்தனள் ஆம் என - கொடிய சிறையினின்று மீண்டனள் என்னுமாறு, பொருமல் நீங்கினன் - துயரம் நீங்கப்பெற்றான்.

காந்துதல் - கோபித்தல்; 'காந்தி மலைக்குத்து மால்யானை' (திருவள்ளுவமா. 11) இராமபிரான் சுக்கிரீவனிடம் வைத்திருந்த பேரன்பினை இங்குக் காணலாம்; மற்றும் 'குரங்கையான் பிணித்த கைப்பிணி, சிலையினாற் கோடி வீடெனில், சீதையும் பெயர்ந்தனள் சிறை' (யுத்த. 1489); என்ற கும்பகன்னன் கூற்று இங்கு நோக்கத் தக்கது. அரக்கன் கரத்திற்குப் பிராட்டியிருந்த இலங்கைச்சிறை உவமிக்கப்பட்டது. சுக்கிரீவனை ஏந்தல் என்றும், இராமபிரானை வேந்தன் என்றும் கூறியது காணத்தகும். அரசினைத் தம்பி பரதற்களித்துக் காடு போந்த நிலையிலும் அயோத்தியின் உரிமை வேந்தன் இராமபிரானே ஆகலின், அவனே வேந்தன் எனப்பட்டான்; (ஒப்பு): 'கோசல நாடுடை வள்ளல்' (யுத்த. 1210); 'ஐயநீ அயோத்தி வேந்தற் கடைக்கல மாகி' (யுத்த. 1341); 'புன்கணார் புன்கலிக்கும் புரவலன்' (யுத்த. 716); 'நீர் சூழ்ந்த புவிக்கு நாயகன்' (யுத்த. 933). எய்த நோக்கிய; 'என நினைந் தெய்த நோக்கி' (சுந்தர).

பி - ம். 1. காந்திய.

## கவிக்கூற்று

1498. மத்தகம் பிளந்துவா யுதிரம் வாரவே
வித்தகன் சரந்தொட மெலிவு தோன்றிய
சித்திரம் பெறுதலிற் செவியு மூக்குங்கொண்
டத்திசை போயின னல்ல தொண்ணுமோ.

மத்தகம் பிளந்து - நெற்றி பிளக்கப் பெற்று, வாய் உதிரம் வார - வாய் வழியாக இரத்தம் அருவி போன்றொழுகுமாறு, வித்தகன் சரம் தொட - வியக்கும் தன்மையனான இராமபிரான் அம்புகளைத் தொடுத்ததனால், மெலிவு தோன்றிய சித்திரம் பெறுதலில் - கும்பகன்னன் தளர்ச்சியுற்றுக் காணப்பட்டதான பலக் குறைவு கண்டு, (அவனுடைய) செவியும் மூக்கும் கொண்டு அத் திசை போயினன் - காதினையும் மூக்கினையும் கொண்டு அந்தத் தமரிருந்த இடத்திற்குச் சென்றனன் - (சுக்கிரீவன்) ; அல்லது - அந்தத் தளர்ந்த சமயம் கிடைத்திராவிடில், ஒண்ணுமோ - இவ்வாறு செய்திருக்க வியலுமோ? இயன்றிராது. ஏ - அசை. ஓ - எதிர்மறை.

மத்தகம் - நெற்றி; 'மத்தகஞ் சேர் தனி நோக்கினன்' (திருக்கோ. 106); வித்தகன்: 'பத்துடை யடியவர்க் கெளியவன், பிறர்க்கரிய வித்தகன்' (திருவாய். 1, 3, 1); 'வித்தகனே இராமாவோ' (பெரியாழ்வார். 3 : 10 : 6). சித்திரம் - குறைவு; இங்கே தளர்வுற்று மெலிந்த குறை. செவியும் மூக்கும் கொண்டது; யுத்த. 1495 அத்திசை: இராமபிரானிருந்த திசை. சித்திரம் - சமயம் என்பர் சிலர்.

பி - ம். 1. உதிரம்வாழ்ந்தெழ, உதிரம் வார்பில.

2. சரம்பட, சிரந்தெற ; தோன்றியச்.

4. அத்தலை, இத்திசை ; பெயர்ந்தனன் ; அலாத தேயுமோ.

மூர்ச்சை தெளிந்த கும்பகன்னன் தனக்குற்ற
பரிபவம் உணர்தல்

1499. அக்கணத் தறிவுவந் தணுக வங்கைநின்
றுக்கனன் கவியர சென்னு முண்மையும்
மிக்குயர் நாசியுஞ் செவியும் வேறிடம்
புக்கது முணர்ந்தன னுதிரப் போர்வையான்.

அக்கணத்து - அப்போது, உதிரம் போர்வையான் - இரத்தத்தாற் மூடப்பட்டவனான கும்பகன்னன், அறிவு வந்து அணுக - உணர்வு வந்து தோன்ற, கவி அரசு - குரக்கு மன்னனான சுக்கிரிவன், அங்கை நின்று - தன் உள்ளங்கையினின்று, உக்கனன் - நழுவினன், என்னும் உண்மையும் - என்ற உண்மை நிகழ்ச்சியையும், மிக்கு உயர் நாசியும் செவியும் - மிகவும் எடுப்பாக உயர்ந்த மூக்கும் காதும், வேறு இடம் புக்கதும் உணர்ந்தனன் - (அறுபட்டு) இடம் பெயர்ந்தமையும் அறிந்தான்.

அகம் கை - அங்கை; 'அகமுனர்ச் செவிகை வரினிடையனகெடும்' (நன். 222). உகுதல் - நழுவுதல். மிக்குயர் நாசியும் செவியும்: 'ஓம்பு றும்முழை யென்றுயர் மூக்கினன், பாம்பு றங்கும் படர்செவிப் பாழியான்' (யுத்த. 1273). துண்டாக்கப்பட்டன என்னாது நாசியும் செவியும் வேறிடம் புக்கது என்பதன் நயம் உணர்க. இதனை வஞ்சப் புகழ்ச்சியில் அடக்கலாம். உண்மையும் புக்கதும் உணர்ந்தனன் என்க.

பி - ம். 3. மிக்குயர் மூக்கொடு ; வேற்றிடம்.
4. புக்கவும். 288

உதிரம் ஒழுகப்பெற்ற கும்பகன்னன் வருணனை

1500. சாதுரா கத்தடங் குன்றந் தாரைசால்
கூதிர்கால் நெடுமழை சொரியக் கோத்திழி
ஊதையோ டருவிக ளுமிழ்வ தொத்தனன்
மீதுறு குருதியா றொழுகு மேனியான்.

மீது உறு - நெற்றியில் பொருந்திய, குருதி ஆறு ஒழுகும் மேனியான் - இரத்தவெள்ளம் ஒழுகப்பெற்ற உடலை யுடையவனை கும்பகன்னன், சாதுராகம் தட குன்றம் - சாதி லிங்கம்போன்று சிவப்பு நிறம் கொண்ட பெரிய மலையானது, தாரை சால் - தாரையாக மிக்க, கூதிர் கால் - குளிர்ச்சியை வெளிப் படுத்துகின்ற, நெடு மழை சொரிய - பெரு மாரி பொழிய, கோத்து இழி - தொடர்ச்சியாகப் பொருந்தி இழிகின்ற, அருவிகள் - சிற் ருறுகளை, ஊதையோடு உமிழ்வது ஒத்தனன் - ஊதைபோன்ற மூச்சுக்காற்றுடன் வெளிவிடுவதை நிகர்த்தான்.

பேருயிர்ப்புடன் உதிரம் பெருகப்பெற்ற கரிய உடலினைக் கொண்ட கும்பகன்னனுக்கு, ஊதையோடு அருவி இழியப்பெற்ற சாதுராகத் தடங்குன்றம் உவமை. சாதுராகக் குன்றத் தருவி - செங்கலங்கற் புதுவெள்ளம் என்க. சாதுராகம் - சாதிலிங்கம்; வடசொல். இது இங்குலிகம் எனவும் வழங்கும்; (ஒப்பு): 'அஞ்சனக் குன்றேய்க்கும் யானை அமருழக்கி, இங்குலிகக் குன்றேபோல் தோன்றும்' (களவழி. 7). ராகம் - சிவப்பு. ஊதை - வாடைக்காற்று; 'ஊதை யூதின'; 'உலைவுறு முளமென வுலாய தூதையே'; 'ஊதைபோல் விசையின்' (கிட்கிந்தா. 442, 443, 893). மீது - நெற்றிமீது; 'மத்தகம் பிளந்துமா டுருவ' (யுத்த. 1498) என்றது காண்க.

பி - ம். 1. சாதுராகந்; குன்றந்.
2. கூதிர் வாவெடு; கோத்துழி.
3. ஒத்தன.
4. மேனியே. 289

கும்பகன்னன் சினங்கொள்ளுதல்

1501. என்னுடைத் தன்மைய னினைய வெண்ணிலாப்
பெண்ணுடைத் தன்மைய தாய பீடையால்
புண்ணுடைச் செவியொடு மூக்கும் போன்றலால்
கண்ணுடைச் சுழிகளுங் குருதி கால்வன.

எண்ணுடை தன்மையன் - ஆராய்தலையுடைய இயல்பினன் ஆன கும்பகன்னன், இனைய எண்ணிலா - இத்தகைய நிலைமை

யினை எண்ணுதலின்றி, பெண் உடை தன்மையதாய பீடையால் - (இராவணன்) பிராட்டியைக் கவர்ந்துகொண்ட தன்மையாகிய துன்பத்தை இழைத்தமையால், புண் உடை செவியொடு மூக்கும் பொன்றலால் - (நிகழ்ந்த போரில் தனது) புண்பட்ட செவியுடனே மூக்கும் அழிதலின், (அக்கும்பகன்னனுடைய) கண் உடை சுழிகளும் குருதி கால்வன - விழிவட்டங்களும் உதிரத்தை யொழுக்குவன வாயின.

பின்வரும் பழியினைச் சிறிதும் கருதாமல் ஓர் பெண்ணைக் கவர்ந்த அரக்கனால் போர் நிகழ, அந்நிகழ்ச்சியில் கும்பகன்னன் மூக்கும் காதும் இழக்க நேர்ந்தது; அந்தப் பரிபவத்தை நினையவே, கும்பகன்னனுடைய கண்களில் அவமானத்தால் குருதி வெளிப்பட்டது எனப்பட்டது. அறுபட்ட உறுப்புக்களுடன், கண்களும் ஒப்புரவுபற்றிக் குருதி கான்றன என்றதன் நயம் ஓர்ந்துணர்க; (ஒப்பு): குறள். 1171, 1172, 1173. கண் குருதி கான்றது, மூக்கிற்கும் செவிக்கும் உற்றது தனக்கும் நேருமோ என்று கருதி யெனினுமாம்.

பி - ம். 1. தன்னிலை யினைய, தன்மையவாய, தன்மையதாவ.

3. செவிநெடு; போனவாய்ப், போனவன்.

4. குழிகளும்; துணைநெடுங்; கான்றவே, காலவே. 280

## கும்பகன்னன் அப்போது அடைந்த நிலை

1502. ஏசியுற் றெழும்விசும் பினரைப் பார்க்குந்தன்
நாசியைப் பார்க்குமுன் னடந்த நாளுடை
வாசியைப் பார்க்குமிம் மண்ணைப் பார்க்குமால்
சீசியுற் றதுவெனத் தீயுஞ் சிந்தையான்.

உற்றது - (தனக்கு) நேர்ந்தது கருதி, சீசி என - சீசி என்று மொழிந்து, தீயும் சிந்தையான் - கொதிக்கின்ற உள்ளத்தனான கும்பகன்னன், ஏசி உற்று எழும் விசும்பினரை - பழித்துக் கொண்டு எழுகின்ற விண்ணோரை, பார்க்கும் - நோக்குவான்; தன் நாசியை பார்க்கும் - தன் மூக்கினைக் கண்ணுறுவான்; முன் நடந்த நாள் உடை வாசியை பார்க்கும் - முன்னர் நிகழ்ந்த நாளின் வாசியை நோக்குவான்; இ மண்ணை பார்க்கும் - இந்தப் பூமியை பார்ப்பான். ஆல் - அசை.

இச்செய்யுட்கு ஒப்பு: 'வானகு மண்ணுமெல்லாம் நகும்' (யுந்த. *122*). தனக்குப் பரம்பரை விரோதிகளாய் இப்பொழுது தனக்கு நேர்ந்த அவமானத்தையுன்னி ஏசிய விசும்பினரைப் பார்த்தது வெகுளியாலும், நாசியைப் பார்த்தது தன் இழிவினுக் கிரங்கியும், நாளுடை வாசியை நோக்கியது தனக்குற்ற போதாத காலத்தினை நினைந்தும், மண்ணைப் பார்த்தது, நாணத்தாலும் என்க. சிசி - இகழ்ச்சிக் குறிப்பு. ஏசுதல்: 'ஏழைமைவேட னிறந்திலனென்றெனை யேசாரோ' (அயோத்தி. குகப். *15*); 'கள்வ னார் இருந்தவ னிவனென வேச நிற்பனே' (சுந்தர. *507*); 'ஏசி யிடலி னிடாமையே நன்று' (தனிப்பா. ஔவை.) மண்ணைப் பார்த்தல்: 'பூதலமென்னு நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்' (யுந்த. *1213*).

பி-ம். 2. நாளுடை.
3. பார்க்கும்பின்.
4. ஏசி யுற்றனதெனத்; நீயு நெஞ்சிறைஞ். 201

## கும்பகன்னன் கேடகமும் வாளுங்கொண்டு போர்க்கெழுதல்

1503. என்முகங் காண்பதன் முன்ன மியானவன்
தன்முகங் காண்பது சரதம் நன்றெனப்
பொன்முகங் காண்பதோர் தோலும் போரிடை
வன்முகங் காண்பதோர் வாளும் வாங்கினன்.

'என் முகம்-என் முகத்தினை, காண்பதன் முன்னம் - (இராமன்) காண்பதன் முன்னரே, யான் அவன் தன் முகம் காண்பது சரதம் ஒன்று - யான் அந்த இராமபிரான் முகத்தைப் பார்ப்பது' (இவ் வாறுக மூக்கும் காதும் அற்றதாகக்) காண்பது நிச்சயமாக நல்லது, என - என்று நினைந்து, பொன் முகம் காண்பது ஓர் தோலும் - பொன்போன்ற முகத்தினைக்கொண்ட ஓர் கேடகத்தையும், போர் இடை வன்முகம் காண்பது ஓர் வாளும் வாங்கினன் - போர்க்களத் தில் வலிய முகங்காட்டிப் பொருதற்குதவும் ஒருவாளினையும் எடுத் துக் கொண்டான்.

சரதம்-சத்தியம்; 'சரதமிப் புவி எலாம்' (அயோத்தி. மந்தரை. *57*). என் முகம் காண்பதன் முன்னம் யானவன், தன்முகம் காண்

பது சரதம்; (ஒப்பு): 'என்முன்னே யவற் காண்பேன் யானே' (அயோத்தி. 27). தோல் - இடுகு.

பி - ம். 1. யாவிவன்.

2. காண்பதே; சாதமேயெனு, நானெனப். 282

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

வீசினன் கேடகம் விசும்பின் மீனெலாம்
கூசின வமரரும் குடர்கு மும்பினர்
காய்சின வரக்கனுங் கனன்ற போதவன்
நாசியுஞ் செவியும்வெங் குருதி நான்றவே.

1504. ஆயிரம் பேய்சுமந் தளித்த தாங்கொரு
மாயிருங் கேடக மிடத்து வாங்கினன்
பேயிரண் டாயிரஞ் சுமந்து பேர்வதோர்
காயெரி வயிரவாள் பிடித்த கையினன்.

இரண்டு ஆயிரம் பேய் சுமந்து பேர்வதோர் - இரண்டாயிரம் பேய்கள் தாங்கிச் செல்வதாகிய ஒரு, காய் எரி - எரிக்கும் ஒளியினையுடைய, வயிரம் வாள் பிடித்த கையினன் - வயிர வாளைப் பற்றிய கரத்தினனான கும்பகன்னன், ஆயிரம் பேய் சுமந்து ஆங்கு அளித்தது - ஆயிரம் பேய்கள் தாங்கிவந்து அவ்விடத்துக் கொடுத்ததாகிய, ஒரு மா இரு கேடகம் இடத்து வாங்கினன் - ஒப்பற்ற மிகப்பெரிய கிடுகினை இடது பக்கத்தால் வாங்கினன்.

கேடகத்தின் கனமும் பெருமையும் கூறப்பட்டது. வயிரவாள்: வயிரத்தாற் செய்யப்பட்டது அல்லது மிக வலிய வாள் என்க. கும்பகன்னனுடைய பேராகிருதிக்கும் பேராற்றலுக்கும் ஏற்ப அமைந்ததாகலின் ஆயிரம் பேய்கள் அதனைத் தாங்கவேண்டியதாயிற்று. இராமபிரான் கன்யாசுல்கமாக இறுத்த சிவதனுசை அறுபதினாயிரம் கிங்கரர்கள் தாங்கிவந்ததாகக் கம்ப நாடரும், ஐயாயிரம் பேர்கள் சுமந்து வந்ததாக வான்மீகரும் கூறுதல் அறிக. 'அறுபதி னாயிர மளவி லாற்றலர், தறிமடுத் திடையிடை தண்டிற் றூங்கினர்' (பால. கார்முகப். 3) என்றது காண்க.

பி - ம். 1. ஆயிரம் பேய் சுமந்த தன்னவன்

2. கேடகமெடுத்து, மிடக்கை

௩. காயெரி. 283

1505. விதிர்த்தனன் வீசினன் விசும்பின் மீனெலாம்
உதிர்த்தன னுலகினை யனந்த னுச்சியோ
டதிர்த்தன னார்த்தன னுயி ரம்பெருங்
கதிர்த்தலஞ் சூழ்வட வரையின் காட்சியான்.

ஆயிரம் பெரு கதிர் தலம் சூழ் - ஆயிரம் என்கின்ற மிக்க ஒளிக்கிரணங்களைக் கொண்ட சூரிய மண்டலம் வலம் வருகின்ற, வடவரையின் காட்சியான் - வடக்கின்கண் உள்ள மேருமலை போன்ற தோற்றமுடையன் ஆன கும்பகன்னன், (கேடகத்தை) விதிர்த்தனன் வீசினன் - அசைத்து மேல் வீசி, விசும்பின் மீன் எலாம் உதிர்த்தனன் - ஆகாயத்தின்கண் உள்ள நட்சத்திரங்களை எல்லாம் கீழே உதிர்ந்துவிழச் செய்தான்; (அன்றியும்), அனந்தன் உச்சியோடு - ஆதிசேடனுடைய உச்சியுடன், உலகினை அதிர்த்தனன் - பூவுலகினை அதிரச் செய்தான்; ஆர்த்தனன் - பெரு முழக்கம் செய்தான்.

சூரியன் மேருமலையைச் சுற்றி வருவதாகக் கூறுவது கவிமரபு. 'இரவி சந்திரனியங்கும், குன்றமிகு தோளணைய தன்னுருவு கொண்டான்' (சுந்தர. 698); விதிர்த்தல்: அசைத்தல்; 'கையிற் றிருவாழியை விதிர்த்தான்' (ஈடு. 2, 4, 9). அனந்தன்: ஆதி சேடன், 'அனந்தன் உச்சிகிழிந்திலது' (சுந்தர. 1277). ஆயிரம் கதிர் என்றது அளவற்ற கதிர் என்க. முன் செய்யுட்கண் கேடகமும் வாளும் ஏற்றான் எனப்பட்டது; எனவே வாள் விதிர்த்து உடுக்களை யுதிர்த்தான்; கிடுகினை வீசி உலகை யசைத்தான் என்க.

பி - ம். 4. வரை யனைய. 294

1506 வீசின கேடக முகத்து விங்குகால்
கூசின குரக்குவெங் குழுவைக் கொண்டெழுந்
தாசைகள் தோறும்விட் டெறிய வார்த்தெழும்
ஓசையோன் கடலையும் திடர்செய் தோடுமால்.

வீசின கேடகம் முகத்து - (இங்ஙனம்) கும்பகன்னன் வீசிய கேடகத்தின் முகத்திலிருந்து, விங்குகால் - பெருகியெழுந்த காற்றானது, கூசின - அஞ்சிய, வெம்குரக்கு குழுவை - கொடிய குரங்குக்

கூட்டத்தினை, கொண்டு எழுந்து - வாரிக்கொண்டு கிளம்பி, ஆசைகள் தோறும் விட்டு எறிய - திக்குகளில் எல்லாம் விட்டெறிய (அந்த வானரத் தொகுதிகள்), ஆர்த்து எழும் ஓசை - ஆரவாரித்து எழும் ஓசையைக்கொண்ட, ஒள் கடலையும் - ஒள்ளிய கடலையும், திடர் செய்து ஓடும் - திட்டாகச் செய்துவிட்டு ஓடின. ஆல் - அசை.

கேடகமுகம் என்பது கேடகத்தின் பக்கம். கூசுதல் 'கூசின வல்லபேச நாணிலா குயில்கள் எல்லாம' (பால. பூக்கொய்: 6). வெங்குரங்கு ; கும்பகன்னன் செயலைக்கண்டு மனம் கொதித்த குரங்கு என்க. ஆசை: திசை 'ஆசைகள் சுமந்தபேரமரி யானைகள்' (ஆரணிய. 848).

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை. இதன்பின் ஓர் பாடல் இருத்தல் வேண்டும் என்பது ஐயர் குறிப்பு.

பி - ம். 1. விரினன், விரிய

3. விட்டகலு மார்ந்தெழும், ஆர்த்தெழுந்து

4. ஓசைவெங். 285

இங்கு அதிகப்பாடல்கள் :—

கும்பகன் கொடுமையுங் குலைகு லைந்துபோர்
வெம்புவெஞ் சேனையின் மெலிவும் நோக்கிய
நம்பனு மரக்கன்கை நடுவண் பூட்டுறும்
செமபொன் கேடகம் சிதைத்து வீழ்த்தினன். 1

ஆயிரம் பெயரவ னறுத்து மாற்றுறப்
போயின கேடகம் புரிந்து நோக்கினன்
பேயிரண் டாயிரம் சுமக்கப் பெற்றுடை-
மாயிருங் கேடகம் கடிதின் வாங்கினன். 2

1507. போயின கேடகம் போகப் போக்கினன்
ஆயிரம் பெயரவ னறியு முன்பவன்
பேயிரண் டாயிரம் பேணுங் கேடகம்
ஏயெனு மளவினி லெய்தச் சென்றதால்.

ஆயிரம் பெயரவன் - ஆயிரம் திருநாமம் பூண்டவனும், அறியு மூன்பவன் - பிறர் அறிந்து பாராட்டும் வலியுடையவனுமான இராமபிரான், போயின கேடகம் - (விண்வழியே) சென்ற கேடகத்தினை, போக போக்கினன் - (தன் விற்றிறனால்) விலகச் செய்தான், இரண்டு ஆயிரம் பேய் பேணும் கேடகம் - இரண்டாயிரம் பேய்கள் தாங்கிக்கொண்டு வந்த (மற்றொரு) கேடகமானது, ஏ எனும் அளவினில் - ஏ யெனும் மாத்திரத்திற்குள், எய்த சென்றது - அந்த அரக்கனை அணுக வந்தது. ஆல் - அசை.

ஆயிரம் பெயரவன்; 'ஓராயிரமாயுலகேழளிக்கும், பேராயிரங் கொண்டதோர் பீடுடையன்' (திருவாய். 9; 3; 1). இராமபிரான் அம்பினால் அப்புறப்படுத்தப்பெற்ற கேடகம் ஆயிரம் பேய்கள் தாங்கிக்கொணர்ந்தது; அஃது போக்கப்பட, அதனைவிடப் பளுவாகியதும் இரண்டாயிரம் பேய்கள் தாங்கி வந்ததுமான கேடகம் அரக்கன் கைக்கு வந்தது என்க. கரனுடன் செய்த போரினில் இராமபிரானுடைய வில் அறுபட்ட நிலையில், வருணன் மற்றொரு சேமவில்லினை விரைந்துதவியது, இங்கு ஒப்பு நோக்கத் தகும். ஆரணிய. 538, 639 காண்க. அறியுமுன்பு என்பதற்குப் பகைவர் தெரிந்துகொள்ளும் முன்பே எனினுமாம். ஏயெனு மளவினில்: (யுத்த. 1479).

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 1. நோக்கினன்

2. அறிந்தோரம்பிறால்

3. ஆயிரம் சுமக்கப் பெற்றுடை. 298

1508. தோலிடைத் துரக்கவுந் துகைக்க வுஞ்சுடர்
வேலுடைக் கூற்றினுற் றுணிய விசவும்
காலுடைக் கடலெனச் சிந்திக் கைகெட
வாலுடை நெடும்படை யிரிந்து மாய்ந்ததால்.

தோல் இடை துரக்கவும் - கேடகத்தினை (கும்பகன்னன்) இடையே விரையச் செலுத்துதலாலும், துகைக்கவும் - (தன்காலி

னால்) மிதித்துழக்குதலாலும், சுடர் வேல் உடை கூற்றினால் - ஒளியினையுடைய வேலின் உருக்கொண்ட யமனால், துணிய விசவும் - துண்டுபட விசுவதாலும், கால் உடை கடல் என - பெருங்காற்றினால் உடையப்பெற்ற கடலலைபோல, வால் உடை நெடுபடை - வாலையுடைய மிக்க குரங்குச் சேனை, சிந்தி - சிதறி, கைகெட - தம்முடைய ஆற்றல் அற, இரிந்து மாய்ந்தது - நிலை குலைந்து ஒழிந்தது. ஆல் : அசை.

தோல் : கேடகம். காலுடைக் கடல் - ஊழிக்காலத்துப் பெரு வளிவீசக் கொந்தளிக்கும் கடல். கை கெட : கை - ஆற்றல்; 'ஆரிடம் உன் கையைக் காட்டுகின்றாய்' என்ற வழக்குக் காண்க. ஒரு சாமர்த்தியசாலியைக் கைகாரன் என்பர். காலுடை கைகெட என்ற இடத்து முரண் தொடை காண்க. வாலுடை நெடும்படை : வாநரப்படை.

பா - ம். 1. துறைந்த வெஞ்சுடர்
2. விச விசவும்
3. காலிடைக் கடலென ; கைக்கெடா, கை மிக ; கலங்கியெங்கணும்
4. வாலுடைக் கவிப்படை, 207

1509. ஏறுபட் டதுமிடை யெதிர்ந்து ளோரெலாம்
கூறுபட் டதுங்கொழுங் குருதிகோத் திழிந்
தாறுபட் டதுநில மனந்த னுச்சியும்
சேறுபட் டதுமொரு கணத்திற் றீர்ந்தவால்.

ஏறுபட்டதும் - (ஆயுதம்) விசப்பட்டதும், இடை எதிர்ந் துளோர் எலாம் - அதனால் நடுவே எதிர்த்து நின்றவர் அனைவரும், கூறுபட்டதும் - துணிக்கப்பட்டதும், கொழு குருதி கோத்து இழிந்து - மிக்க இரத்தம் (வெள்ளமாகக்) கோத்துக்கொண்டு பெருகி, ஆறுபட்டதும் - ஆறுகள் தோன்றியதும், நிலம் அனந் தன் உச்சியும் சேறுபட்டதும் - நிலந்தாங்கி நின்ற ஆதிசேடன் தலையும் சேறுபட்டதும், (ஆகிய அனைத்து நிகழ்ச்சிகளும்), ஒரு கணத்தில் தீர்ந்த - ஒரே கணப்பொழுதில் நடந்தேறின.

ஏறு - ஆயுதம்; விட்டேறு என்றது காண்க. படுதல்-நிகழ்தல்; தொடர்புயர் நவிற்சியணி.

பி - ம். 1. மிடைந்து
2. கோத்தெழுந்து
3. அளந்த னுச்சியில்
4. நீர்ந்ததால். 203

## அப்போது சாம்பவான் இராமபிரானிடம் கும்பகன்னனை எளிதாகக் கருதலாகாதெனல்

1510. இடுக்கிலை யெதிரினி யிவனை யிவ்வழித்
தடுக்கிலை யாமெனிற் குரங்கின் தானையை
ஒடுக்கினை யரக்கரை யுயர்த்தி னையென
முடுக்கின னிராமனைச் சாம்பன் முன்பினன்.

'இனி எதிர் இடுக்கு இலை-(இனி) இதனைக் காட்டிலும் நேரக் கூடிய தக்க வாய்ப்பு நிகழ்தற்கில்லை; இ வழி - இப்போது, இவனை தடுக்கிலை ஆம் எனில்-இவனைத் தடுக்காமல் விடுவாயாகில், குரங்கின் தானையை ஒடுக்கினை - குரங்கின் படையை அளவிற் குறையச் செய்வதுடன், அரக்கரை உயர்த்தினை-அரக்கர் திறலைப் பெருகச் செய்தவனுவாய்' என - எனறு பகர்ந்து, இராமனை - இராமபிரானை, முன்பினன் சாம்பன் - வலிய சாம்பவன், முடுக்கினன் - (பொருமாறு) தூண்டினன்.

இடுக்கு - சந்தர்ப்பம். எதிர் இடுக்கு; நேரக் கூடிய தக்க தருணம்; ஒடுக்கினை : முற்றெச்சம்.

பி - ம். 1. இடுக்கினி; எதிரிலை, யின்றுயிர்.
3. அரக்கரை.
4. முன்னியே. 209

## இராமபிரான் சென்று கும்பகன்னனெடு பொருதல்

1511. அன்னலுந் தானையி னழிவு மாங்கவன்
தின்னெடுங் கொற்றமும் வலியுஞ் சிந்தியா
நன்னின னடந்தெதிர் நமனை யின்றிவன்
கன்னிடை நிறுத்துவே னென்னுங் கற்பினன்.

அண்ணலும் - பெருந்தகையான இராமபிரானும், தானையின் அழிவும் - குரங்குப் படையின் அழிவினையும், ஆங்கு - அப்போது, அவன் - அந்தக் கும்பகன்னனுக்கு உண்டான, திண்நெடு கொற்றமும் - உறுதியான மிக்க வெற்றியையும், வலியும் - வன்மையையும், சிந்தியா-கருதி, ' (இதுகாறும் அஞ்சி ஒளிந்து நின்ற) நமனை-யமனை, இன்று இவன் கண் இடை நிறுத்துவென் - இன்று இவன் கண் முன்பு நிற்கச் செய்து காட்டுவேன்' என்னும் கற்பினன் - என்ற எண்ணத்தினனாய், எதிர் நடந்து நண்ணினன் - (கும்பகன்னனுக்கு) நேராக நடந்து அவனைக் கிட்டினன்.

சிந்தியா - சிந்தித்து. கற்பு - கருத்து ; 'சிறுபிழை யிழைக்குங் கற்பால்' (சுந்தர. 934). இவனை யமனுக் கிரையாக்குவேன் என்பது மூன்று நான்காம் அடிகளின் கருத்து. நமன்-யமன் ; 'எற்றுக்கோ நம னாலிட ருண்பதே' (தேவா. 1205 : 6).

பி - ம். 4 கண்ணெதிர : கற்பினல், காட்சியால். 300

1512. ஆறிரண் டேழுகோ லசனி யேறென
ஈறிலா விசையன விராம னெய்தனன்
பாறுகு சிறையென விசும்பிற் பாறிட
நூறினன் வாளினன் நுணங்கு கல்வியான்.

ஆறிரண்டு ஏழுகோல் - பதின்மூன்று வாளிகள், அசனி ஏறு என - பேரிடி போன்று, ஈறு இலா விசையன - முடிவில்லாத வேகத்துடன் கூடியவற்றை, இராமன் எய்தனன் - இராமபிரான் விடுத்தான் ; நுணங்கு கல்வியான் - நுட்பமான (போர்க்) கல்வியில் தேர்ந்தவனான கும்பகன்னன், பாறு உகு சிறை என - பருந்து உதறுகின்ற இறகு போன்று, விசும்பில் பாறிட - விண்ணில் சிதறிடும்படி, வாளினன் நூறினன் - (அவற்றைத் தன்) வாளினால் துகள் செய்தான்.

பாறு - பருந்து ; பாறு என்ற சொல் பெயராகவும் வினையாகவும் பொருள் தந்து நின்றது. நூறுதல் - துணுக்காகச் செய்தல். 'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி' (நாலடி. 156). நுணங்கு கல்வி - நுணுக்கமாக ஆராய்ந்து கற்கும் கல்வி ; (ஒப்பு) நுணங்கிய

கேள்வியான்' (யுத்த. 290). 'நுணங்கிய கேள்விய ரல்லார்' (குறள். 419); 'நுணங்கு கெள்வி யாயொக்கும்' (பால அரசியல். 4).

பி - ம். 1. ஆறிரேடாறு கோல்.
2. விரையொடு; எய்திட, எய்தன.
4. கல்வியன். 301

1513. ஆடவர்க் கரசனு மணுகி வவ்வழிக்
கோடையிற் கதிரெனக் கொடிய கூர்ங்கணை
ஈடுறத் துரந்தன னவையு மிற்றுகக்
கேடகப் புறத்தினுற் கிழியச் சிந்தினுன்.

ஆடவர்க்கு அரசனும் - புருடோத்தமனுகிய இராமபிரானும், அணுகி - (கும்பகன்னனைக்) கிட்டி, அவழி - அப்போது, கோடையில் கதிர் என - வேனிற் காலத்துச் சூரியன் போல், கொடிய கூர் கணை - கொடுமையும் கூர்மையும் கொண்ட அம்புகளை, ஈடுஉற துரந்தனன் - வன்மை பொருந்த விடுத்தனன்; அவையும் இற்று உக - அவைகளும் முறிந்து விழும்படிக்கும், கிழிய - கிழியும்படிக்தும், கேடகம் புறத்தினல் - பரிசையின் பின்புறத்தால், சிந்தினுன் - (கும்பகன்னன்) சிதறச் செய்தான்.

ஆடவர்க்கு அரசன்; (ஒப்பு): 'ஆடவர் பெண்மையை அவாவும் தோளினுய்; (பால. தாடகை. 24); கோடையில் கதிர்: வேனிற் காலத்துக் கதிரவன். ஈடு - வலிமை. சிந்தினுன் - சிந்துவித்தான். கோடையிற் கதிரினை இராமபிரானுக்கு ஏற்றிக் கூறுவர் சிலர்.

பி - ம். 1. அரசனுந் தொடர.
3. ஊடுற.
4. விசினுன். 302

1514 சிறுத்ததோர் முறுவலுந் தெரியச் செங்கனுன்
மறித்தொரு வடிக்கணை தொடுக்க மற்றவன்
ஒறுத்தொளிர் வாளேனு முரவு நாகத்தை
அறுத்தது கலுழனி னமர ரார்க்கவே.

செங்கணன் - செந்தாமரை போன்ற சிவந்த விழிகளையுடைய இராமபிரான், சிறுத்தது ஓர் முறுவலும் தெரிய - சிறியதாகிய புன்னகையும் வெளிப்பட, மறித்து ஒரு வடிகணை தொடுக்க - மீட்டும் ஓர் கூரிய அம்பினை ஏவ, (அது), அவன் - அந்த அரக்கனுடைய, ஒளிர் வாள் எனும் உரவு நாகத்தை - விளங்குகின்ற வாள் என்று கூறும் வலிய அராவினை, அமரர் ஆர்க்க - தேவர்கள் மகிழ்ந்து ஆரவாரிக்க, கலுழனின் - கருடனைப் போல, அறுத்து அறுத்தது - வெட்டித் துண்டு செய்தது. ஏ - அசை. மற்று - வினைமாற்று.

சிறுத்ததோர் முறுவல்: 'சிறியதோர் முறுவல் செய்தான்' (ஆரணிய. 224); வாள், உரவு நாகத்துக்கும் கலுழன் இராம பாணத்துக்கும் உவமை.

பி - ம். 2. மறுத்து; தொடுத்து; மற்றதவ்.
3. உறுத்தொளிர் வயிரவாளுருமி னகத்தை.
4. அறுத்ததக்; ஆர்த்தெழ, பார்க்கவே. 303

1515. அற்றது தடக்கைவா ளற்ற தில்லென
மற்றொரு வயிரவாள் கடிதின் வாங்கினன்
முற்றினன் முற்றின னென்று முன்புவந்
துற்றன னூழித்தீ யவிய வூதுவான்.

ஊழித்தீ அவிய ஊதுவான் - ஊழிக் காலத்தீயும் அணையும்படி பெருமூச்சு விடுபவனாகிய கும்பகன்னன், தடகை வாள் அற்றது - பெரிய கரத்திடைக் கொண்ட வாள் துணிந்தும், அற்றது இல்என - அறுபடவில்லை என்று கண்டோர் மயங்குமாறு, மற்றொரு வயிரம் வாள் - வேறொரு வயிர வாளினை, கடிதின் வாங்கினன் - விரைந்து கைக்கொண்டு, 'முற்றினன் முற்றினன் - (யாவரையும்) முடித்து விட்டேன் முடித்துவிட்டேன்', என்று - என்று முழங்கிக் கொண்டு, முன்பு வந்து உற்றனன் - முன்னர் வந்து நின்றான்.

ஒருவாள் இற்றது கூடப் பிறர் உணராமல் அத்துணை விரைவில் மற்றொரு வாளினை ஏந்தினன் என்பது கருத்து. இனி அற்றது இல்லென என்பதற்கு அதுபோன்றது இல்லை என்றும் உரைவரைவர். கரனுடன் நிகழ்ந்த போரில் தன் வில்நாண் துணிய

அங்கிலேயில் . வருணன் கொணர்ந்து தர இராமபிரான் வில் பெற்றது இங்கே உணரத்தக்கது.

பி - ம். 2. வயிரவாட்.

3. மூற்றினன் என்ன, முந்துவந்து. 304

1516. அந்நெடு வாளையுந் துணித்த வாண்டகை
பொன்னெடுங் கேடகம் புரட்டிப் போர்த்ததோர்
கன்னெடுங் கவசத்து நாம வெங்கணை
மின்னெடு நிகர்ப்பன பலவும் வீசினான்.

அ நெடு வாளையும் துணித்த ஆண் தகை - அந்த நீண்ட வாளினையும் வெட்டிய ஆடவனான இராமபிரான், பொன் நெடு கேடகம் புரட்டி - (அவனுடைய) பொன்னாலாகிய அகன்ற கேடகத்தையும் விழச்செய்து, போர்த்தது ஓர் கல்நெடு கவசத்து - (அவன் மேனியை) மூடிக்கொண்டிருந்த ஒரு கல்போன்று வலிய பெரிய கவசத்தில், நாமம் - அச்சத்தைத் தரக்கூடியதும், மின்னெடு நிகர்ப்பன - மின்னலை யொப்பனவும் ஆன, வெம் கணை பலவும் வீசினான் - கொடிய அம்புகள் பலவற்றையும் வாரியிறைத்தான்.

ஆண்டகை: 'ஆண்டகைய ரவ்வயி னடைந்தமை யறிந்தான்' (ஆரணிய. 153). நாமம் - அச்சம்; 'பேநா முருமென வரூஉங்கிளவி, யாமுறை மூன்று மச்சப்பொருள' (தொல். சொல். 69); 'நலிஞ்சு தின்னு நாமவேல்' (ஆரணிய. 68); 'நாமவேற் காளை நளனென்டான்' (நளவெண்பா. 13). கவசத்தின் திண்மையும் அகலமும், கன்னெடும் என்ற தொடராற் குறிக்கப்பெற்றன.

பி - ம். 2. புரட்டிப் போர்த்தொழில், போந்தபோர்.

3. நாடி வெங்கணை.

4. மின்னென மிளிர்வன ; பலவும் விழ்த்தினன். 305

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஆலமுண் டவன்முத லளித்த தன்னவன்
சூலமுண் டளப்பில கோடி பேய்சுமந்
தோலமிட் டமரர்கள் ஓட வூழியிற்
காலனைத் தவன்கரத் தளித்த தக்கணம்.

## அப்போது உதவிப்படை வருதல்

1517. அந்தர மன்னது நிகழு மவ்வழி
இந்திரன் தமரொடு மிரிய லெய்திடச்
சிந்துவுந் தன்னிலை குலையச் சேணுற
வந்தது தசமுகன் விடுத்த மாப்படை.

அன்னது அந்தரம் நிகழும் அ வழி - அத்தகைய கேடு நேர்கின்ற அத்தருணத்தில், இந்திரன் தமரொடும் இரியல் எய்திட - இந்திரனும் தன் சுற்றத்துடன் நிலைகுலைந்து ஓடவும், சிந்துவும் தன் நிலை குலைய - கடலும் தன் நிலைகுலையவும், தசமுகன் விடுத்த மா படை சேணுற வந்தது - இராவணன் அனுப்பிய பெரிய இராக்கதசேனை வெகுதூரத்தினின்று அணுக வந்தது.

அந்தரம் - கேடு; 'அந்தரம் புகுந்த துன்டென' (சுந்தர. 410); 'என்மனை வாழும் பெண்ணால் வந்த தந்தரம்' (அயோத்தி. கைகேசி. 40). சிந்து - கடல், வடசொல்; 'தேர்மிசைச் சென்ற தோர் சிந்து' (அயோத்தி. ஆற்றுப். 32). சேணுற: 'சேணுற நீண்டு' (ஆரணிய. 265); சேணுற - வானத்திலுற வெனினுமாம். சேண் - ஆகாயம்.

பி - ம். 1. அவ்வயின், வேலையில்.
2. இரியல் போயிடச்.
3. சிந்தூரம்; நாணச் சேணுற, நாணத் தீதே. 306

1518. வில்வினை யொருவனு மிவனை வீட்டுதற்
கொல்வினை யிதுவெனக் கருதி யூன்றினன்
வல்வினை தீயன வந்த போதொரு
நல்வினை யொத்தது நடந்த தானையே.

வில்வினை ஒருவனும் - விற்றொழிலில் நிகரற்றவனான இராம பிரானும், 'இவனை வீட்டுதற்கு - இந்தக் கும்பகன்னனை அழித்தற்கு, ஒல்வினை இது - தக்க காலம் இது', என - என்று, கருதி ஊன்றினன் - மனத்தால் ஆழ்ந்து சிந்தித்தான்; நடந்த தானை - (அப்போது) நடந்து வந்தடைந்த சேனையானது, வல் தீயன வினை - வலிய கொடிய வினை, வந்தபோது - நேர்ந்த காலத்து, ஒரு

நல்வினை ஒத்தது - (அதனை அகற்றத்தக்க) ஒரு நல்வினை நிகர்த்தது. ஏ : அசை.

இராவணன் உய்த்த சேனைக்கு நல்வினை உவமை; உவமையணி. வல்வினை - பாவம். நல்வினை - புண்ணியம். தீயென என்ற பாடத்துக்குத் தீயொப்ப வந்த தீவினைக்கு மாற்றாக நீர்போன்ற ஓர் நல்வினை வந்தது எனினுமாம். 'தீமுரணிய நீரும்' என்றபடி தீக்குநீர் விரோதியாகலின். ஏ : அசை

பி - ம். 1. வில்வினை ; விடுநற்கு.

2. நல்வினை யிதுவென நலத்தி னான்றிறன்.

3. பல்வினை ; நீயென ; பரந்த. 507

## வந்த சேனையை இராமபிரான் கடிது வருகவெனல்

1519. கோத்தது புடைதொறுங் குதிரை தேரொடாள்
பூத்திழி மதமலை மிடைந்த போர்ப்படை
காத்தது கருணனைக் கண்டு மாயமாக்
கூத்தனும் வருகெனக் கடிது கூவினன்.

குதிரை தேரொடு ஆள் - குதிரையும் தேரும் கால் ஆளும், பூத்து இழி மதமலை - தோன்றிப் பெருகுகின்ற மதநீரைக்கொண்ட யானையும் ஆகிய, மிடைந்த - நெருங்கிய, போர்ப்படை - போர்ச் சேனை, புடைதொறும் கோத்தது - பக்கங்களில் சூழ்ந்ததாகி, கருணனை காத்தது - கும்பகன்னனைக் காக்க முன்வந்தது; கண்டு - அது நோக்கி, மாயமா கூத்தனும் - மாயையில் வல்ல கூத்தனான இராமபிரானும், 'கடிது வருகென கூவினன் - விரைந்து வருக' என்று, (அத்தானையை) விளித்தான்.

நால்வகைப் படையும் கூறப்பட்டது. மதமலை - வெளிப்படை; இதனை அடையடுத்த உவமவாகுபெயர் என்ப. அகடிதகடனா சாமர்த்தியமுடையவன் ஆகலின் மாயமாக் கூத்தன் எனப் பட்டது. கருணன் - கும்பகருணன்; நாமைகதேசம் ; 'அவ்வழிக் கருணன்செய்த பேரெழி லாண்மை யெல்லாம்' (யுத்த. 1567).

வருக என என்பது வருகென தொக்கது. 'மாயமாக் கூத்தன்' (திருவாய்).

பி - ம். .1 போர்த்தொழில் மதுமலை யென்ன.
3. கன்னலைக், கண்ணலைக் ; கண்ட.
4. கூற்றினும் ; கூறினன், கூடினன். 308

இராமபிரான் எதிர்ப்பு

1520. சூழிவெங் கடகரி புரவி தூண்டுமால்
ஆழியந் தேரொடு மிடைந்த வார்கலி
ஏழிரு கோடிவந் தெய்திற் றென்பரால்
ஊழியி னொருவனு மெதிர்சென் றூன்றினன்.

சூழி வெம் கடகரி - முகபடாம் புனைந்த கொடிய மதசலம் ஒழுகப்பெற்ற யானையும், புரவி - குதிரையும், தூண்டும் - செலுத்தப்படுகின்ற, மால் - பெரிய, ஆழி அம் தேரொடு - சக்கரத்தினைக் கொண்ட அழகிய தேருடன், மிடைந்த - நெருங்கிய, ஏழு இருகோடி ஆர்கலி - பதினான்குகோடி சமுத்திரம் சேனை, வந்து எய்திற்று - வந்து சேர்ந்தது ; ஊழியின் ஒருவனும் - ஊழிக்காலத்தும் அழிவின்றி நிலைபெறுபவனான இராமபிரானும், எதிர் சென்று - அச் சேனைக்கு நேராகச்சென்று, ஊன்றினன் - பொருதற்கு நின்றான். என்பர் ; ஆல் - அசை.

சூழி - யானையின் முகபடாம் ; 'சூழியானை துகைத்தது சோபனம்' (யுத்த. மீட்சி : 17). ஆர்கலி - கடல்போன்ற சேனை. ஆர்கலி சமுத்திரத்துக்குப் பரியாயம் ; சமுத்திரம் ஓர் பேரெண். இனி, சமுத்திரம்போன்ற பெருஞ்சேனையுமாம்.

பி - ம். 1. தூண்டுதேர்.
2. ஆழிய பெரும்படை, ஆழிவெம் பெரும்படை. 309

கும்பகன்னன் சூலப்படைகொண்டு பொர வருதல்

1521. காலமுங் காலனுங் கணக்கில் தீமையும்
மூலமுன் றிலையென வகுத்து முற்றிய
ஞாலமும் நாகமும் விசும்பு நக்குறும்
சூலமொன் றரக்கனும் வாங்கித் தோன்றினன்,

காலமும் - ஆயுட்கால அளவும், காலனும் - யமனும், கணக்கில் தீமையும் - கணித்தற்கரிய தீங்கும் என்ற, மூலம் மூன்று இலை என வகுத்து - இந்த மூலகாரணம் மூன்று இலைகளாக அமையப்பெற்று, முற்றிய - நன்கு உருவம் முற்றப்பெற்றுள்ளதும், ஞாலமும் நாகமும் விசும்பும் - பூமியும் பாதாளமும் ஆகாயமும் என்ற மூன்றினையும், நக்குறும் - உண்டு அழிக்கவல்லதும் ஆன' சூலம் ஒன்று அரக்கனும் வாங்கி தோன்றினன் - சூலம் ஒன்றை அக்கும்பகன்னனும் கையில் ஏந்தியவனாய்க் காணப்பட்டான்.

சூலத்தின் மூவிலைகளுங் காலம் முதலிய மூன்றும் போன்றன என்றார்; தற்குறிப்பேற்றவணி. மேலும், இந்த மூன்று இலைகளும் மேல் கீழ் நடு என்ற மூவுலகங்களையும் முறையே அழிக்கக்கூடிய ஆற்றல் சான்றன எனப்பட்டது. நரகம் - நாகர் வாழிடம்; பாதலம். சூலம் ஒன்று முன்னர் அநுமனால் துணிபட்டதாகக் கூறப்பட்டது, யுத்த. 1464 காண்க. இந்தச் சூலம் பிறிதொன்று போலும்; 'வாங்கித் தோன்றினன்' என்று கூறப்பட்டிருப்பதும் உணர்க. நக்கல் - உண்டல்; (அரு. நி.); இங்கு அழித்தல் என்னும் பொருளது. கணக்கில் தீமை: 'கைதவ மியற்றி நாளும் கணிப்பருங் கணக்கில் தீமை' (கிட்கிந்தா. 362).

பி - ம். 2. மூலமுமிலை, மூலமுமிலை.
3. நாகரும்.
4. ஏந்தி.

310

இங்கு அதிகப்பாடல்கள் :—

பிடித்தனன் வலக்கையிற் சூலம் பெட்பொடு
முடித்தனன் பூசனை மனத்தின் முன்னியே
விடுத்தனன் பகைவனை வென்று மீள்கெனத்
தடுப்பரி தெனத்தளர்ந் தமர ரோடினர்.

சூலமங் கதுவருந் துணிவை நோக்கியே
ஞாலநா யகனரிக் கடவு ளேந்திய
காலவெங் கனற்படை கடிதி னேவியச்
சூலமற் றிரண்டெனத் துணித்து வீழ்த்தினன்.

அழிந்தது குலமங் கமரர் யாவரும்
தொழுந்தகை யமலனைப் புகழ்ந்து துள்ளியே
கழிந்ததெம் மனத்துய ரென்று கண்ணன்மேற்
பொழிந்தன ரவன்பெயர் புகன்று பூமழை.

வேறு

இராமபிரானுடைய அம்பின் அருஞ்செயல்

1522. அரங்கி டந்தன வறுகுறை நடிப்பன
வல்லவென் றிமையோரும்
மரங்கி டந்தன மலைக்குவை கிடந்தன
வாமென மாருடிக்
கரங்கி டந்தன காத்திரங் கிடந்தன
கறைபடும் படிகவ்விச்
சிரங்கி டந்தன கண்டனர் கண்டில
ருயிர்கொடு திரிவாரை.

இமையோரும் - வானவரும், 'அரங்கு - போர்க்களத்தில், இடந்தன - துண்டிக்கப்பட்டு விழ்ந்த, அறுகுறை - தலை யறுக்கப்பட்ட உடற்குறைகள், நடிப்பன அல்ல - கூத்தாடுவன அல்ல' என்று - என்றும், மரம் கிடந்தன மலைகுவை கிடந்தனவாம் என - மரத் துண்டுகள் கிடந்தனவென்றும் மலைக் குவியல்கள் கிடந்தனவென்றும், மாருடி - மாருடிக் கூறும்படி, கரங் கிடந்தன காத்திரம் கிடந்தன - கைகளோடு பொருந்திக் கிடந்தனவான (வீரர்களின்) உடல்கள் கிடந்தனவற்றையும், கறைபடும்படி - (உதிரக்) கறை படுமாறு, கவ்வி - மண்ணைக் கவ்விக் கொண்டு, சிரம் கிடந்தன கண்டனர் - (அரக்கர்களின்) தலைகள் கிடந்தவற்றையும் பார்த்தார்கள்; (ஆனால்) உயிர் கொடு திரிவாரை கண்டிலர் - உயிருடன் திரிபவர்களைக் காண மாட்டாதவராயினர்.

அரங்கு: போர்க்களம்; இராமபிரான் வாளியால் துண்டுபட்டுக் கூத்தாடுபவான குறை முண்டங்கள், அறுபட்ட அடிமரமோ அல்லது மலைக்குவியலோ என அமரர்களும் மருளும்படி நிற்க, அவர்களுடைய தலைகளும் மண்ணைக் கவ்விக் கொண்டு இரத்தக் கறையுடன் காணப்பட்டன என்க. கரங் கிடந்தன என்ற தொடர்

காத்திரத்துக்கு அடையாகக் கொள்க. இச்செய்யுள் முதலாக 1557 வரை அறுசீராசிரிய விருத்தங்கள்.

பி - ம். 1. அரங்கிடஞ் செகம்; அரங்கிடஞ் செய; அல்லதோன்று.
2. கிடந்தென.
4. உயிரொடுந். 311

1523. இற்ற வல்லவு மீர்ப்புண்ட வல்லவு
மிடையிடை முறிந்தெங்கும்
துற்ற வல்லவுந் துணிபட்ட வல்லவுஞ்
சுடுபொறித் தொகைதூவி
வெற்ற வெம்பொடி யாயின வல்லவும்
வேறொன்று நூறுகி
அற்ற வல்லவுங் கண்டிலர் படைக்கல
மடுகளந் திடராக.

அடுகளம் திடர் ஆக - கொலைக்களம் மேடுபடுமாறு, இற்ற அல்லவும் - முறிந்தன வல்லாதனவும், ஈர்ப்புண்ட அல்லவும் - (உதிர வெள்ளத்தால்) அடித்துக் கொண்டு போகப்பட்டன வல்லாதனவும், இடைஇடை முறிந்து - இடையிடையே துணிபட்டு, எங்கும் - எல்லா இடங்களையும், துற்ற அல்லவும் - தூர்த்தன அல்லாதனவும், துணிபட்ட அல்லவும் - அறுபட்டன அல்லாதனவும், சுடு பொறி தொகை தூவி - சுடுகின்ற தீப்பொறித் தொகுதிகளைச் சிதறிய வண்ணம், வெற்ற - வெறுமையாக, வெம்பொடி ஆயின அல்லவும் - வெவ்விய துகளாகிக் கழிந்தன அல்லாதனவும், வேறு ஒன்று நூறுகி - மற்றும் ஒன்று நூறுகி, அற்ற அல்லவும் - அற்றொழிந்தன வல்லாதனவுமான, படைக்கலம் - போர்க்கருவிகளை, கண்டிலர் - காணாதவராயினர்.

இராமபிரான் எய்த பாணத்தால் அரக்கர் படைக்கலங்கள் அனைத்தும் உருக்குலைந்து குவிந்து அடுகளத்தையே பெருமேடாகச் செய்தன என்பது கருத்து. வெற்ற - வெறுமையாக. 'வெற்றவே வடியாரடி மிசைவிழும் விருப்பிலன்' (தேவா. 868 : 2).

பி - ம். 1. இடைமுறிந்தெங்கெங்கும்.
2. துணிபட.
4. இற்ற; திடராகி. 312

1524. படர்ந்த கும்பத்துப் பாய்ந்தன பகழிகள்
பாகரைப் பறிந்தோடிக்
குடைந்து வையகம் புக்குறத் தேக்கிய
குருதியாற் குடர்சோரத்
தொடர்ந்து நோயொடுந் துணைமருப் பிழந்துதங்
காத்திரந் துணியாகிக்
கிடந்த வல்லது நடந்தன கண்டிலர்
கிளர்மதக் கிரியெங்கும்.

படர்ந்த - விரிந்த, கும்பத்து பாய்ந்தன பகழிகள் குடைந்து - (தமது) கும்பத்தில் பாய்ந்தனவான இராம பாணங்கள் குடைதலினாலே, பாகரை பறிந்து ஓடி - பாகரைக் கடந்து ஓடி, வையகம் புக்கு உற தேக்கிய குருதியால் - பூமியிற் புகுந்து தேங்குமாறு பெருகிய உதிரத்தால், குடர்சோர - குடல் நிலைகுலைந்து தளர, நோயொடும் தொடர்ந்து - மரண நோயுடன் தொடரப்பெற்று, துணை மருப்பு இழந்து - இருதந்தங்களையும் இழந்து, தம் காத்திரம் துணி ஆகி கிடந்த அல்லது - தமது உடலும் துண்டுபட்டுக் கிடந்தனவேயன்றி, நடந்தன - (உயிருடன்) நடந்தனவான, கிளர் மதகிரி - மிக்க மதநீர் பாயப்பெற்ற யானைகளை, எங்கும் கண்டிலர் - எவ்விடத்தும் காணாராயினர்.

கும்பகன்னன் படைக்கண்ணிருந்த யானைகள் இறந்துபட்டமை இதில் குறிக்கப்பட்டது. குடல் - குடர்; பொலி, நோய் இங்கே மரண நோய். மதகிரி - யானை.

பி - ம். 1. பரந்தது; பகழிகள் அபரத்தை, பாதத்தை, பாகத்தை, பானத்தை.
2. தாக்கிய; குருதிய, குருதிகள்.
3. தொடர்ந்த கையொடும்; துணை மருப்பிளவொடும்.
4. கிடந்த வல்லவும்; நடந்தது; மதகரி, மதக்கரி, மதகிரி; எல்லாம்.

1525. விழ்ந்த வாயின விவிவுற்ற பதாகைய
வெயிலுமி முயிலம்பு
போழ்ந்த பன்னெடும் புரவிய முறைமுறை
யச்சொடும் பொறியற்றுத்

தாழ்ந்த வெண்ணிணந் தயங்குவெங் குழம்பிடைத்
தலைத்தலை மாருடி
ஆழ்ந்த வல்லது பெயர்ந்தன கண்டில
ரதிர்குரன் மணித்தேர்கள்.

அதிர் குரல் மணி தேர்கள்-அதிர்கின்ற பேரொலியினையுடைய அழகிய தேர்கள், விழ்ந்த வாயின - விழ்ந்த வாயினையுடையனவும், விளிவு உற்ற பதாகைய - அழிவுற்ற பெருங் கொடிகளையுடையன வும், வெயில் உமிழ் அயில் அம்பு - ஒளியை வெளிவிடுகின்ற கூரிய அம்புகளால், போழ்ந்த - துணிக்கப்பட்ட, பல்நெடும் புரவிய - பல நீண்ட குதிரைகளை யுடையனவுமாய், முறைமுறை - படிப்படியாக, அச்சொடும் பொறி அற்று - அச்சுடனே இயந்திரமும் அற்று, தாழ்ந்த - இழிவான, வெள்நிணம் தயங்கு - வெள்நிணத்துடனே விளங்குகின்ற, வெம்குழம்பிடை - வெய்ய (உதிரக்) குழம்பிடத்து, தலைதலை மாருடி - தனித்தனியாக மாருடி, ஆழ்ந்த அல்லது - அழிந்தன அல்லது, பெயர்ந்தன கண்டிலர் - நல்ல நிலைமையுடன் செல்வனவற்றைக் காணுதவராயினர்.

பதாகை - பெருங்கொடி; வெள்நிணம் - வெண்ணிறக் கொழுப்பு. தேர்கள் அழிக்கப்பட்டமை கூறிற்று.

பி - ம். 1. விழ்ந்த வாயன, வாழிய, வாளன, வாளின; விரைவுற்ற, வளிவுறப் விரைவுற்ற, பாகரை, பாகர்மேல்.

2. புல்லிடும், புண்ணெடும்; புரவியை, புரவியும்; அச்சோடும் பொறி யாகத்.

3. தயங்கு செங்; தலைதடுமாருடி. 314

1526. ஆடல் தீர்ந்தன வளைகழுத் தற்றன
வதிர்பெருங் குரல்நீத்த
தாடு ணிந்தன தறுகண்வெங் கரிநிரை
தாங்கிய பிணத்தோங்கல்
கோட மைந்தவெங் குருதிநீ ராறுகள்
சுழிதொறுங் கொணர்ந்துந்தி
ஓட லன்றிநின் றுகள்வன கண்டில
ருருகெழு பரியெல்லாம்.

உரு கெழு பரி எல்லாம் - எழிலுடன் விளங்கும் குதிரைகள் எல்லாம், ஆடல் தீர்ந்தன - வலிமை யழியப் பெற்றனவும், வளை கழுத்து அற்றன - வளைந்த கழுத்து அறப் பெற்றனவும், அதிர் பெரு குரல் நீத்த - ஒலித்துக் கனைக்கின்ற பெரிய குரலைத் தவிர்ந் தனவும், தாள் துணிந்தன - கால்கள் துணிக்கப்பட்டனவும் ஆகி, தறுகண் - அஞ்சாமையையுடைய, வெம்கரி நிரைதாங்கிய - கொடிய யானைத்திரளால் உண்டான, பிணத்து ஓங்கல் கோடு அமைந்த - பிணமலைகளை இருகரைகளாகக் கொண்ட, வெம் குருதி நீர் ஆறு கள் - வெப்பமிக்க உதிரநீர் ஆறுகளால், சுழிதொறும் கொணர்ந்து உந்தி ஓடல் அன்றி - நீர்ச் சுழிகள் தோறும் கொண்டுவந்து தள் ளப்பட்டு ஓடுவனவன்றி, நின்று உகள்வன கண்டிலர் - உயிர் தரித்து நின்று துள்ளித் திரிவனவற்றைக் காண்கிலர்.

அடல்: வலி; ஆடல் என நீண்டது. ஓங்கல்: மலை; காரணக் குறி. பிணத்தோங்கல் கோடு: பிணமலைகளாகிய கரை என்க. குருதியை ஆருகவும் பிணமலைகளைக் கரைகளாகவும் உருவகம் செய்தார். கோடு — கரை; 'குளவளாக், கோடின்றி நீர் நிறைந் தற்று' (குறள். 523).

பி - ம். 1. ஆடல் அற்றன; குரநீத்த.

2. தாடுமிந்தன.

3. குருதி நீராற்றகள், நீரார்த்தன; குரைத்துந்தி.

4. ஒலிகௌர், உயர்கெழு. 316

1527. வேத நாயகன் வெங்கணை வேகத்தின்
மிகுதியை வெவ்வேறிட்
டோதுகின்றதெ னும்பரு மரக்கர்வெங்
களத்துவந் துற்றாரைக்
காதல் விண்ணிடைக் கண்டன ரல்லது
கணவர்த முடல்நாடும்
மாதர் வெள்ளமே கண்டனர் கண்டிலர்
மலையெனும் பெரியாரை.

வேத நாயகன் - வேதங்களாற் போற்றப்பட்ட தலைவனான இராமபிரான், வெம் கணை வேகத்தின் மிகுதியை - கொடிய அம்பு

களுடைய வேகத்தின் பெருமையை, வெவ்வேறிட்டு ஓதுகின்றது என் - வெவ்வேறாக வகுத்துக் கூறவேண்டியது எதற்கு? (சுருங்கச் சொல்லுமிடத்து), உம்பரும் - தேவரும், வெம் களத்து வந்து உற்றார் அரக்கரை - கொடிய போர்க்களத்து வந்து அடைந்தவரான அரக்கரை, காதல் விண் இடை கண்டனர் அல்லது - அன்புடன் வான் உலகத்துக் கண்ணுற்றனர் அல்லாமல், மலை எனும் பெரியாரை - (உருவத்தால்) மலையெனத்தக்க அந்த அரக்கரை, கண்டிலர் - (உயிருடன் அக்களத்துக்) காண இயலாதவராயினர்; கணவர் தம் உடல் நாடும் மாதர் வெள்ளமே கண்டனர் - தத்தம் கணவருடைய உடலைத் தேடித் துருவுகின்ற பெண்கள் கூட்டத்தையே கண்டார்கள்.

வேத நாயகன்: யுத்த. 933. தேவர்கள் தாமிருக்கும் உலகத்திலேயே இறந்த அரக்கர்களின் ஆவிகளைக் கண்டனர் எனப்பட்டது, போர்க்களத்தில் பொருது இறந்துபடுபவர் வீரசுவர்க்கம் புகுவர் ஆதலின். கணவர்தமுடல் நாடும் மாதர்: 'தன்னுயிர் கொண் டவனுயிர் தேடினள்போல்' (சிலப். 25: 85).

பி - ம். 1. வழக்கத்தின்.

2. களத்திடை யுற்றாரை.

3. கண்டவர்; கண்டக ருடனுடும், கணவர்த முடல்தோறும்.

4. வெள்ளமே கண்டது, மலையினும். 316

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

இரண்டு பத்துநா றெனும்படை வெள்ளமற்
றின்றொடுமுடி வெய்திப்
புரண்டு தத்துறப் பொழிந்தன ரிருவர்தம்
பொருசிலைக் கணைமாரி
யிருண்ட தெத்திசை மருங்கினும் பறவையி
னினம்பல படிமூடித்
திரண்ட வச்சிரக் கதைகரத் தெடுத்தனன்
கும்பகன் சினமூள.

## இராமபிரான் தனிப்பட்ட கும்பகன்னனை நோக்கிக் கூறலுறுதல்

1528. பனிப்பட் டாலெனக் கதிர்வரப் படுவது
பட்டதப் படைபற்ருர்
துனிப்பட் டாரெனத் துலங்கின ரிமையவ
ரியாவர்க்குந் தோலாதான்
இனிப்பட் டானென விங்கின வரக்கரு
மேங்கின ரிவனந்தோ
தனிப்பட் டானென வவன்முக நோக்கியோ
ருரைத்தனன் தனிநாதன்.

கதிர் வர - சூரியன் தோன்றுகையில், பனி பட்டால் என - பனி ஒழிந்தாற்போல், அ படை படுவது பட்டது - அந்த அரக்கர் சேனை அழிதலைப் பொருந்தியது; பற்ருர் - பகைவர், துனி பட்டார் என இமையவர் துலங்கினர் - அச்சமுற்ருர் என்று தேவர்கள் முகமகிழ்ச்சியுடன் விளங்கினர்; யாவர்க்கும் தோலாதான் - எவராலும் முறியடிக்கப்பெருத கும்பகன்னன், இனி பட்டான் என - இனி இறந்துபடுவது உறுதி என்று கருதி, விங்கின அரக்கரும் ஏங்கினர் - இதுகாறும் மகிழ்ச்சிமிக்கிருந்த அரக்கரும் ஏக்கமுற்றனர்; அந்தோ-ஐயகோ! இவன் தனி பட்டான் இந்தக் கருணன் தனிப்பட்டனன் என - என்று, அவன் முகம் நோக்கி - அவன் முகத்தை நோக்கி, தனி நாதன் - ஒப்பற்ற தலைவன் ஆன இராமபிரான், ஒன்று உரைத்தனன் - பின வருமாறு பகரலானன்.

பி - ம். 1. பனிப்பட்டாலது; கதிரின் வாய்ப்.
2. துளங்கினர்.
3. விங்கின வாநாம், வேதிவியிலன், அரக்கரு மேங்கினரிவி. 317

1529. ஏதி யோடெதிர் பெருந்துணை யிழந்தனை
யெதிரொரு தனிநின்ருய்
நீதி யோனுடன் பிறந்தனை யாதலின்
நின்னுயிர் நினக்கீவன்

போதி யோபின்றை வருதியோ வன்றெனிற்
போர்புரிந் திப்போதே
சாதி யோவுனக் குறுவது சொல்லுதி
சமைவுறத் தெரிந்தம்மா.

'அம்மா - கேள்! ஏதியோடு - வாள் முதலிய கருவிகளுடன், எதிர்பெரு துணை இழந்தனை - எதிர்க்கும் வன்மைவாய்ந்த பெருந் துணையான படையையும் இழந்தனை; எதிர் - என் எதிரே, ஒரு தனி நின்றாய் - தன்னந் தனியனாக நின்றனை; நீதியோன் உடன் பிறந்தனை ஆதலின் நின் உயிர் நினக்கு ஈவன் - நீதிமானாகிய விடணனுடன் தோன்றினை ஆதலால் உன் உயிரை உனக்கு அளிப்பன்; (உன்னைக் கொல்லேன்), போதியோ - (இப்போது) நகர்க்குச் செல்கின்றாயா? பின்றை வருதியோ - (சென்று) மீட்டும் வருகின்றாயா? அன்று எனில் - அல்லாமற்போனால், போர் புரிந்து இப்போதே சாதியோ - சண்டைசெய்து இப்போதே இறந்துபடுகின்றாயா? உனக்கு உறுவது தெரிவுற சமைந்து சொல்லுதி - உனக்குப் பொருத்தமானதை நன்கு ஆலோசித்துத் தெளிவாகக் கூறுக.

பி - ம். 1. ஏதியோடுடன்; பொருந்.

2. பிறந்துனை யாதலின்.

3. நாளை வருதியோ. 310

1530. இழைத்த தீவினை யிற்றில தாகலி
னியானுனை யிளையோனல்
அழைத்த போதினும் வந்திலை யந்தக
னுணையின் வழிநின்றாய்
பிழைத்த தாலுனக் கருந்திரு நாளொடு
பெருந்துயி னெடுங்காலம்
உழைத்து வீடுவ தாயினை யென்னுனக்
குறுவதொன் றுரையென்றான்.

'இழைத்த தீவினை இற்றிலது ஆகலின் - நீ முன்பு புரிந்துள்ள பாவச்செய்கைகள் அகன்றில ஆதலால், யான் - நான், இளையோனல் - உன் தம்பி விடணனைக் கொண்டு, உனை அழைத்த போதினும் - உன்னை அழைத்தபோதிலும், வந்திலை - வாராமல், அந்தகன்

ஆணையின் வழி நின்றாய் - யமன் ஆணைக்குள்ளாகி நின்றனை; நாளொடு - வாழ்நாளுடன், அரு திரு - அருமையான செல்வமும், உனக்கு பிழைத்தது - உனக்கில்லாமல் போயிற்று; பெரு துயில் நெடு காலம் உழைத்து - மிக்க உறக்கத்தை நெடுங்காலம் மேற்கொண்டு, வீடுவதாயினை - சாதற்கு அமைந்து நின்றனை; உனக்கு உறுவது ஒன்று என் உரை - உன் மனத்தில் பொருந்திய எண்ணம் அதனைச் சொல்வாய்'. என்றான் - என்று மொழிந்தான் இராமபிரான். ஆல் - அசை.

பி-ம். 4. உற்றனவுரை. 318

## கும்பகன்னன் விடை

1531. மற்றெ லாநிற்க வாசியு மானமு
மறத்துறை வழுவாத
கொற்ற நீதியுங் குலமுதற் றருமமு
மென்றிவை குடியாகப்
பெற்ற நுங்களா லெங்களைப் பிரிந்துதன்
பெருஞ்செவி மூக்கோடும்
அற்ற வெங்கைபோ லென்முகங் காட்டிநின்
றுற்றல னுயிரம்மா.

'அம்மா - கேள்! மற்றெலாம் நிற்க - நீ யுரைத்த பிறவெல்லாம் இருக்கட்டும்; வாசியும் மானமும் - தகுதியும் அபிமானமும், மறம் துறை வழுவாத கொற்றம் நீதியும் - வீரத்துறையினின்றும் தவறாத வெற்றியோடியைந்த நீதியும், குலம் முதல் தருமமும் - குலத்திற்கு முதல்வன் மேற்கொண்ட நல்லறமும், என்றிவை - என்ற இவை, குடியாக பெற்ற - குடியிருக்கும் இடமாகப்பெற்ற, நுங்களால் - உங்களாலே, எங்களை பிரிந்து தன் பெரு செவி மூக்கோடும் அற்ற - எங்களைப் பிரிந்துபோய்த் தன்னுடைய பெரிய செவிகள் மூக்குடன் அறுபட்ட, எங்கைபோல் - என் தங்கைபோல, என் முகம் காட்டி நின்று உயிர் ஆற்றலன் - எனது பின்னப்பட்ட முகம் செவிகளுடன் பூமியில் உயிர் தரித்திருக்கச் சகியேன்'.

வாசி - தகுதி, சிறப்புமாம்; 'ஏறினு னவ்வாசியை வாசியாக' (திருவாலவா. 28, 45). கொற்றமும் நீதியும் என்க. குலமுதல்

தருமம் - குலமுதல்வன் கடைப்பிடித்து ஒழுகிய அறத்துறை; 'குணமுமில்லை குலமுதற் கொத்தன' (கிட்கிந்தா. 334). (அயோத்தி. மந்திரப். 6) குடியாகப் பெறுதல் - நிலவரமாகத் தங்கப்பெறுதல்.

பி - ம். 3. பெற்ற நுங்கள்பால், உங்களால்.

4. ஆர்க்கினி காட்டுவது, காட்டிநின் ருற்றுவன்; உரையையா, உரையம்மா. 320

1532. நோக்கி ழந்தனர் வானவ ரெங்களா
லவ்வகை நிலைநோக்கித்
தாக்க ணங்கனை யவள்பிறர் மனையெனத்
தடுத்தனென் தக்கோர்முன்
வாக்கி ழந்ததென் றயர்வுறு வேன்செவி
தன்னொடு மாற்றாரால்
மூக்கி ழந்தபின் மீளலென் றாலது
முடியுமோ முடியாதாய்.

'முடியாதாய் - அழிவற்றவனே! வானவர் - அமரர்கள், எங்களால் நோக்கு இழந்தனர் - எங்களால் வலியிழக்கப் பெற்றார்கள்; அவ்வகை நிலைநோக்கி - அத்தகைய நிலையினைப் பார்த்துவிட்டு; தாக்கணங்கு அனையவள் பிறர்மனை - தாக்கி வருத்துமியல்புள்ள தெய்வப் பெண் போன்றவளான சீதை பிறர் மனைவி; என - என்று சொல்லி, தடுத்தனென் - தடுத்தேன்; (அவன் என் சொற்களைக் கேளாமையினால்) தக்கோர் முன் - தகுதி வாய்ந்தவர்க்கு முன்னர்), வாக்கு இழந்தது என்று அயர்வுறுவேன் - (பேசும்) வாக்குப் பிழைத்து விட்டது என்று துயர்ப்படும் யான், மாற்றார் ரால் - பகைவர்களால், செவிதன்னொடு மூக்கு இழந்தபின் - செவியுடன் மூக்கினை இழந்தபின், மீளல் என்றால் - நகர்க்குத் திரும்பிச் செல்வதெனின், அது முடியுமோ - அது நிகழக்கூடிய காரியமாகுமோ?' ஆகாதே.

தாக்கணங்கு: 'தாக்கணங்குதானைக் கொண்டன்ன துடைத்து' (குறள். 1082) பிறர்மனையெனத் தடுத்தது. யுத்த .59, 60, 61, 62, 63, 64, 1283, 1284, 1285, 1286, 1292 காண்க. தகுதியாளர் முன்பு உரையாடுதற்கு இடமில்லை என்பது நினைந்து வாக்கிழந்ததாகக் கூறினன். மூக்கிழத்தல் என்பதே வழக்கில், அவமானப்படுதல்

எனப் பொருள்படுதல் காண்க. ஆதிமத்தியாந்தரகிதன் ஆதலின் 'முடியாதாய்' என விளித்தான்.

பி - ம். 1. உலகையினேக்கேயால்; அதுபகை நோக்கேயாய்.

2. அனையாள்; பிறன் மனைவியை, தடுத்தனனெனத்தக்கோர்; தக்கோன், தக்கோய்.

3. மற்றுமமரிடை, மறச்செருவிடை.

4. மீள்வன்; முடியுமோ முடியாதால். 321

1533. உங்கள் தோள்தலை வாள்கொண்டு துணித்துயிர்
குடித்தெம்மு னுவந்தெய்த
நங்கை நன்னலங் கொடுக்கிய வந்தநான்
வானவர் நகைசெய்யச்
செங்கை தாங்கிய சிரத்தொடுங் கண்ணினீர்
குருதியி னெடுதேக்கி
எங்கை போலெடுத் தழைத்துநான் வீழ்வனே
விராவண னெதிரம்மா.

'உங்கள் தோள் தலை - உங்களுடைய தோளையும் தலையையும், வாள்கொண்டு துணித்து - வாளினால் வெட்டி, உயிர் குடித்து - உயிரினைப்பருகி, எம்முன் உவந்து எய்த - எம் தமையன் மகிழ்ந்தடையுமாறு, நங்கை நல் நலம் கொடுக்கிய வந்த நான் - சீதையின் அழகிய நலத்தை (அவனுக்குக்) கொடுக்கும்படி (போர்க்கு) வந்த யான், வானவர் நகை செய்ய - தேவர்கள் நகையாட, செம்கை தாங்கிய சிரத்தொடும் - செவ்விய கரத்தைத் தாங்கிய தலையுடன், (தலையில் கைவைத்த வண்ணம்), கண்ணின் நீர் குருதியினொடு தேக்கி - கண்ணீரை இரத்தத்துடனே தேங்கச் செய்து, எங்கை போல் - என் தங்கைபோன்று, எடுத்து அழைத்து - கூவியழைத்தழுது, நான் இராவணன் எதிர் வீழ்வனே - நான் இராவணன் முன்பு வீழ்தற்குரியேனே?' அம்மா -(தன் பரிபவநிலையை எண்ணி வந்த) வியப்புச்சொல்.

உயிர் குடித்தல்: 'உண்டற்குரிய வல்லாப்பொருளை உண்டது போலக்' கூறியது. கொடுக்கிய: செய்பிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்'. பரம்பரை வைரிகள் ஆதலின் வானவர் நகையினைக் குறிக்கின்றான், எங்கை: என் தங்கை என்பதன் மரூஉ. செங்கை

தாங்கிய சிரம்: துன்பக்குறி. 'கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி' (திருவாச. திருச்சதகம் 1) என்றது காண்க.

பி-ம். 3. தாங்கிய பிரத்தினன்
4. நான் செல்வனே. 322

1534. ஒருத்த னீதனி யுலகொரு மூன்றிற்கு
மாயினும் பழியோரும்
கருத்தி னல்வருஞ் சேவக னல்லையோ
சேவகர் கடனோராய்
செருத்திண் வாளினுற் றிறத்திற னுங்களை
யமர்த்துறைச் சிரங்கொய்து
பொருத்தி னலது பொருந்துமோ தக்கது
புகன்றிலை போலென்ருன்.

'நீ தனி உலகு ஒரு மூன்றிற்கும் - நீ ஒப்பற்ற உலகம் ஒரு மூன்றினுக்கும், ஒருத்தன் ஆயினும் - ஒப்பற்ற ஒரு தலைவனாயினும், பழி ஓரும் கருத்தினால் வரு சேவகன் அல்லையோ - பழியினை ஆராய்ந்து உணரும் உளத்தொடும் வருகின்றவீரனல்லவோ? சேவகர் கடன் ஓராய் - சுத்த வீரன் கடமையுணராதவன் போல் உரையாடுகின்றனை; செரு - போரில், திண்வாளினால் - உறுதியான வாட்கொண்டு, திறம்திறன் - கூறுகூருக, உங்களை - உங்களை, அமர் துறை சிரம் கொய்து - போர் அரங்கில் தலையைத் துணித்துவிட்டு, பொருத்தினால் அது பொருந்துமோ - ஒட்டவைத்தால் அஃது ஒட்டுமோ? தக்கது புகன்றிலை - தகுதியான உரைகளை வழங்கினையல்லை' என்ருன் - என்று மொழிந்தான் கும்பகன்னன். போல்; அசை.

ஒருத்தன்: ஒப்பற்றவன்: பழிபாவங்களைச் செவ்வனே ஆராயும் திறன் உடையவன் பிறழ்வது தகாது என்று சுட்டிக் காட்டுகின்ருன்.

பி-ம். 1. ஒருத்தனே; அவனுலகொரு, உலகொருங்கொரு.
2. சேவகரல்லரோ, சேவகனல்ல நீ; நேர் யார்; ஓர்வார்.
3. செருக்கின், மறத்துறச், அறுத்துறச். 323

## கும்பகன்னன் குன்றொன்றை யெடுத்து இராமபிரான்மேல் எறிதல்

1535. என்று தன்னெடுஞ் சூலத்தை யிடக்கையின்
மாற்றினன் வலக்கையால்
குன்று நின்றது பேர்த்தெடுத் திருநிலக்
குடர்கவர்ந் தெனக்கொண்டான்
சென்று விண்ணொடும் பொறியொடுந் தீச்செலச்
சேவகன் சொனிநேரே
வென்று தீர்கென விட்டன னதுவந்து
பட்டது மேலென்ன.

என்று - என்றுபகர்ந்து: தன்நெடுசூலம் - தனது (வலக் கையிலேயிருந்த) சூலப்படையை, இட கையில் மாற்றினன் - இடதுகையிலே மாற்றிக்கொண்டு, வலம் கையால் - (தன்) வலக் கரத்தால், இரு நிலம் குடர் கவர்ந்தென - பெரிய பூமியின் குடலைப் பிடுங்கினாற் போன்று, நின்றது குன்று பேர்த்து எடுத்து - நின்ற தொரு மலையினைப் பெயர்த்து எடுத்து, கொண்டான் - கையிற் ஏற்றவனாய், விண்ணொடும் சென்று - வானத்திடைச் சென்று, 'பொறியொடும் தீ செல - தீபபொறிகளுடன் தீயும் வெளிப்பட, சேவகன் - வீரனான இராமபிரானுடைய, செனி நேரே - தலைக்கு எதிராக, வென்று தீர்க - வெற்றியோடு முற்றுக', என விட் டனன் - என்று எறிந்தான்; அது வந்து மேல்பட்டது என்ன - அது வந்து இராமபிரான்மீது பட்டது என்னுமாறு அனுக; நூறிய புரவலன் சிந்தினன்' என அடுத்த கவியுடன் முடிவு கொள்ளும்.

பெரிய மலையைப் பேர்த்தவுடன் அந்த இடம் பெரும் பள்ள மாகியிருக்கும் ஆதலின், நிலத்தின் குடர் கவர்ந்தாலென எனப் பட்டது. சென்னி என்பது செனி எனக் குறுகிற்று, தீர்க என - என்பது அகர ஈறு கெட்டது. இச்செய்யுள் குளகம்.

பி - ம். 1. என்று நன்னெடுஞ்; மாற்றித்தன்
2. கோத்தெடுத்து; நிலங்குடர்.
3. விண்ணொடும், திசையொடும்; மேற்சென்றே.
4. வென்றி; தீர்க்கென; பட்டதுபட்டது. 324

## இராமபிரான் மலையை நீருக்கி அவன் கைச்சூலத்தையுந் துணித்தல்

1536. அனைய குன்றெனு மசனியை யாவர்க்கு
மறிவருந் தனிமேனி
புனையு நன்னெடு நீறென நூறிய
புரவலன் போர்வென்று
நினையு மாத்திரத் தொருகைநின் றொருகையி
னிமிர்கின்ற நெடுவேலைத்
தினையின் மாத்திரைத் துணிபட வரன்முறை
சிந்தினன் சரஞ்சிந்தி.

அனைய - அத்தகைய, குன்று எனும் அசனியை - குன்றென்று பேர்பூண்ட அந்த இடியினை, யாவர்க்கும் அறிவரு தனி மேனி - எவர்க்கும் உணர்தற்கு அரிதான சிவபெருமான் திரு மேனியை, புனையும் நல் நெடு நீறு என - அணிசெய்யும் நல்ல சிறந்த திருநீற்றுப்பொடி என்னுமாறு, நூறிய - பொடிசெய்த, புரவலன் - இராமபிரான், போர் வென்று - போரில் வெற்றிபெற்று, நினையும் மாத்திரத்து - நினைக்கும் அளவில், ஒருகை நின்று ஒரு கையின் நிமிர்கின்ற நெடு வேலை - ஒரு கரத்தினின்று பிறிதொரு கரத்தில் உயர்ந்து காணப்படுகின்ற நீண்ட வேற்படையை, தினையின் மாத்திரை - சிறுபொழுதிற்குள்ளாக, துணிபட - துண்டு பட, வரன்முறை சரம் சிந்தி - போர்வீரர் பொரவேண்டிய முறையின்படி அம்புகளைப்பொழிந்து, சிந்தினன் - அழித்தான்.

யாவர்க்கும் அறிவருந் திருமேனி - சிவபிரான். மேனியைத் திருநீறணி செய்தல் போன்று, சூலத்தின் நுண்ணிய தூள் அலங்கரித்தது என்க. இங்குக் 'கரிய மேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்' (திருவாய். 4:5:6); என்றது காண்க. ஆழ்வார் பாசுரம் குறிக்கொடு திருமால் அவதாரமான இராமபிராற்கே ஏற்றிக்கூறலுமாம். தினை ஓர் சிறிய அளவு; 'தினையனைத்தே யாயினும் செய்தநன்றுண்டாற்' (நாலடி. 344); 'தினைத்துணை நன்றிசெயினும்' (குறள். 104).

## இராமபிரானம்புகள் கும்பகன்னனது கவசத்தைப் பிளக்கமாட்டாமை

1537. அண்ணல் விற்கொடுங் கால்விசைத் துதைந்தன
வலைகடல் வறளாக
உண்ண கிற்பன வுருமையுஞ் சுடுவன
மேருவை யுருவிப்போய்
விண்ண கத்தையுங் கடப்பன பிழைப்பிலா
வெய்யவன் மேற்சென்று
கண்ணு தற்பெருங் கடவுள்தன் கவசத்தைக்
கடந்தில கதிர்வாளி.

அண்ணல் - பெருந்தகையான இராமபிரான், வில் கொடு கால் - வில்லினது வளைந்த காலினின்று, விசைத்து உதைந்தன - வேகமுடன் செல்லும்படி ஏவினவும், அலைகடல் வறள் ஆக - அலைகடல் வற்றினதாகுமாறு, உண்ண கிற்பன - (அதன் புனலைப்) பருகவல்லனவும், உருமையும் சுடுவன - இடியையும் சுடக்கூடியனவும், மேருவை உருவி போய் விண் அகத்தையும் கடப்பன - மேருமலையையும் துளைத்துச்சென்று வானத்திடத்தை யும் கடந்து செல்வனவும், பிழைப்பு இலா - குறி தவறாதனவும் ஆன, கதிர் வாளி - ஒளியுடன்கூடிய அம்புகள், வெய்யவன் மேல் சென்று - கொடியவனான அரக்கன்மேற் பாய்ந்து, கண்ணுதல் பெரு கடவுள் தன் கவசத்தை கடந்தில - நெற்றிக்கண்ணனான சிவபெருமான் அளித்த (கும்பகன்னன் அணிந்த) கவசத்தைத் துளைக்கவியலாதனவாயின.

இராமபிரான் அம்பின் திறம் இங்கும் கூறப்பட்டது. முன்னர், 'வைதலான்ன வாளிகள்'; 'வெய்யதன், சக்கரத்திற் றகை வரி தாயதோர், செக்கர் மேனிப் பகழி' (ஆரணிய. 736, 800) என்று கூறப்பட்டமையும், மற்றும், கிட்கிந்தா. 351; சுந்தர. 446; யுத்த. 1228, 1229, 1230, 1231, 1232, 1233, 1236, 1237, 1238; இராவணன் வதை. 198, 199-உம் காண்க. மெய்யன என்பதற்குக் கும்பகன்னன்மீது தைத்தன வென்றும் கொள்வர். கண்ணுதல்: முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை என்பர்; 'கண்ணுதற் பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து' (திருவிளை. பாயிரம்). கடவுள் தன் கவசம் - சிவபிரான் அளித்தது;

இதனைச் சிவபிரானது கணையினாலேயே இராமபிரான் துணித்ததை, யுத்த. 1538, 1539-இல் காண்க.

பி-ம். 1. கால்விசைத் தெழுந்தன; உதைத்தனன், உதைத்தன. அளருக.
2. உன்ன நிற்பன;
3. வில்லனைத்தையும்; பிழைப்பில; மெய்யன; மேற்சேர்ந்த. 326

## இராமன் சங்கரன் கணையால் அறுத்துத்தள்ளக் கும்பகன்னனது கவசம் அறுந்துவிழுதல்

1538. தாக்கு கின்றன நுழைகில தலையது
தாமரைத் தடங்கண்ணன்
நோக்கி யிங்கிது சங்கரன் கவசமென்
றுணர்வுற நுனித்துன்னி
ஆக்கி யங்கவ னடுபடை தொடுத்துவிட்
டறுத்தன னதுசிந்தி
வீக்கி ழந்தது வீழ்ந்தது வரைசூழல்
விரிசுடர் வீழ்ந்தென்ன.

தாக்குகின்றன நுழைகில-(எய்த அம்புகள் கவசத்தினை) மோதுகின்றனவாய்த் துளைக்கமாட்டாவாயின; தாமரை தட கண்ணன்-தாமரை மலர்போன்ற விழிகளையுடைய இராமபிரான், தலையது-மிகச் சிறந்ததான அந்தக் கவசத்தை, நோக்கி-கண்ணுற்று; 'இங்கு-இவ்விடத்து, இது சங்கரன் கவசம் என்று உணர்வு உற நுனித்துஉன்னி-இது சிவபெருமான் உதவிய கவசம்' என்பதனை ஆராய்ந்து தெளிந்து, ஆக்கி-அதனை ஏவுவதற்குள்ள மந்திரம் முதலியவற்றை அபிமந்திரித்து, அங்கு அவன் அடுபடைதொடுத்து விட்டு-அப்பொழுது அந்தச் சிவபெருமானுடைய கொல்லத்தக்க அம்பினை ஏவி, அறுத்தனன்-அந்தக் கும்பகன்னனுடைய கவசப்படையைத் துணித்தான்; அது சிந்தி-அது அறுபட்டு, வீக்கு இழந்தது-கட்டுக்குலையப்பெற்று, வரைசூழல்-மேருகிரியைச் சுற்றிவருகின்ற, விரிசுடர் வீழ்ந்தென்ன-பரந்த ஒளிக்கதிர்களையுடைய சூரியன் (தரையில்) வீழ்ந்தாற் போன்று, வீழ்ந்தது-விழுந்தது.

அம்புகள் அக்கவசத்தைத் துளைக்கமாட்டாதுபோக, அது சிவபெருமான் தந்தது என்று ஓர்ந்து. சங்கரன் கணையினாலேயே அதனைத் துண்டித்தான் என்பது கருத்து. ஆக்குதல் - அம்பினை ஏவற்காவன செய்தல். அங்கு அவன்; அவன்; சிவபெருமான். வீக்கு - கட்டு அல்லது பிணிப்பு. வரைசுழல் விரிசுடர்; (ஒப்பு): 'வந்து மேருவினை நாடொறும் வலஞ்செய் துழலும், இந்து சூரியர்' (ஆரணிய. 37).

பி - ம். 1. தாக்குகின்றில நுழைகில, தாக்குகின்றன னுழைகிலது; அனையது.

3. அன்னவன், ஆங்கவன்; தன்படை.

4. வடநெடுவரை, தொடர் சுடரிடை வடவரை சுடரோடும். 327

## கும்பகன்னன் தண்டாயுதங்கொண்டு வாநரப்படையை யரைத்தல்

1539. காந்து வெஞ்சுடர்க் கவசமற் றுகுதலுங்
கண்டொறுங் கனல்சிந்தி
ஏந்து வன்னெடுந் தோள்புடைத் தார்த்தங்கொ
ரெழுமுனை வயிரப்போர்
வாய்ந்த வன்னெடுந் தண்டுகைப் பற்றினன்
வாநரப் படைமுற்றும்
சாந்து செய்குவ னாமென முறைமுறை
யரைத்தனன் தரையோடும்.

காந்தும் - ஒளிவிடுகின்ற, வெம் சுடர் கவசம் - வெவ்விய கதிரவன்போன்ற கவசம், அற்று உகுதலும் - துணிபட்டு உதிர்ந்த அளவில், கண்தொறும் கனல் சிந்தி - விழிகள்தோறும் நெருப்பினைக் கக்கி, ஏந்து - உயர்ந்த, வல் நெடு தோள் புடைத்து ஆர்த்து - வலிய நீண்ட புயங்களைத் தட்டிக்கொண்டு முழங்கி, அங்கு - அப்பொழுது, ஓர் - ஒரு, எழு முனை - இருப்பு முனையுடையதும், வயிரம் - உறுதிபடைத்ததும், போர் வாய்ந்த - போர்க்கு நன்கு பொருத்தமானதும் ஆன, வல் நெடு தண்டு கை பற்றினன் - வலிய நீண்ட கதையினைக் கைக்கொண்டவனாய், 'வாநர படை முற்றும் சாந்து செய்குவன் ஆம் - குரக்குச்சேனை முழுதினையும் சாந்துபோன்று குழைத்திடுவன்', என - என்று, முறைமுறை -

விடாமல், தரையோடும் அரைத்தனன் - பூமியிலிட்டுத் தேய்க்கத் தொடங்கினன்.

வீர மெய்ப்பாடுகள் இங்கு குறிக்கப்பெறுதல் காண்க. தண்டினது கூர்மையும் உறுதியும் தவறாது தாக்கும் வன்மையும், நீட்சியும், 'எழுமுனை வயிரப்போர் வாய்ந்த வல்நெடுந் தண்டு' என்ற தொடராற் குறிக்கப்பெற்றமை காண்க. தரையுடன் அரைத்தல்; (ஒப்பு): சுந்தர. 968; 'சாந்தெனப் புதல்வன் றன்னைத் தரையிடைத் தேய்த்து' (யுத்த. 946).

பி-ம். 1. கனல் சிந்த.
2. எழுமுனை.
3. போர்ப்பாந்தள்.
4. சாந்து செய்தனன்; அரைத்தனன் முறைமுறை. 328

## இராமபிரான் சரமழையைப் பொழிகையிலும் கும்பகன்னன் இலட்சியஞ் செய்யாது தண்டுகொண்டு சாரிதிரிதல்

1540. பறப்ப வாயிரம் படுவன வாயிரம்
பகட்டெழி லகன்மார்பம்
திறப்ப வாயிரந் திரிவன வாயிரஞ்
சென்றுபுக் குருவாது
மறைப்ப வாயிரம் வருவன வாயிரம்
வடிக்கணை யென்றாலும்
பிறப்ப வாயிடைத் தெழித்துறத் திரிந்தனன்
கறங்கெனப் பெருஞ்சாரி.

பறப்ப ஆயிரம் - (ஆகாயத்தில்) பறப்பவை ஆயிரமும், படுவன ஆயிரம் - (பகைவர்மீது) தைப்பன ஆயிரமும்; பகடு எழில் அகல் மார்பம் திறப்ப ஆயிரம் - (அவனுடைய) பெருமையும் அழகும் அகற்சியும் கொண்ட மார்பினைப் பிளப்பன ஆயிரமும், திரிவன ஆயிரம் - (எல்லாப் பக்கங்களிலும்) அலைவன ஆயிரமும், சென்று புக்கு உருவாது மறைப்ப ஆயிரம் - போய் உள் நுழைந்து துளைத்திடாமல் (மேலே) மறைப்பன ஆயிரமும்; வருவன

ஆயிரம் - வில்லினின்று வெளிவருவன ஆயிரமும்; (என இவ்வாறு), வடி கணை என்றாலும் - இராமபிரானுடைய கூரிய அம்புகள் உள்ளன எனினும், பிறப்ப - ஒலி எழ, ஆயிடை - அங்கே (தண்டாயுதத்துடன்), தெழித்துற - முழங்கிக்கொண்டு, கறங்கு என பெரு சாரி திரிந்தனன் - காற்றாடிபோன்று பெரிய வலசாரி இட சாரியை மேற்கொண்டு திரிந்தனன் (கும்பகன்னன்).

பகடு - பெருமை; பகட்டா வீன்றகொடு நடைக்குழவி' (பெரும்பாண். 243). வடிக்கணை - கூர்ங்கணை; தெழித்தல் - முழக்குதல்; 'தெழித்தன ளுரப்பினள்' (அயோத்தி. மந்தரை. 53). கறங்கு - காற்றாடி; 'கறங்குபோன் றுளது' (ஆரணிய. 517).

பி - ம். 1. வரைமார்பை, அவன் மார்பைத்.

2. நீர்வன; புக்குரு வெல்லாம்.

4. சிறப்ப; ஆயிரம்; தெழிந்திடை, தெளித்துரை. 329

## இராமபிரான் தண்டாயுதத்தைத் துணித்துவிட, கும்பகன்னன் வாளையும் கேடகத்தையும் எடுத்துக்கொள்ளுதல்

1541. தண்டு கைத்தலத் துளதெனி னுளதன்று
தானையென் றதுசாயக்
கொண்ட லொத்தவன் கொடுங்கணை பத்தொரு
தொடையினிற் கோத்தெய்தான்
கண்ட முற்றது மற்றது கருங்கழ
லரக்கனுங் கனன்றாங்கோர்
மண்ட லச்சுட ராடகக் கேடகம்
வாங்கினன் வாளோடும்.

'தண்டு கைதலத்து உளது எனில் - கதையானது (இவ்வரக்கன்) கரத்தில் இருக்குமாயின், தானை உளது அன்று - வானரப்படை உயிர் தரித்திருப்பதாகாது', என்று - என்று நினைந்து, அது சாய - அந்தத்தண்டாயுதம் துணிபட்டு வீழ, கொண்டல் ஒத்தவன் - நீல மேகத்தை ஒத்தவனான இராமபிரான், கொடுகணை பத்து - கொடிய

பத்து அம்புகளை, ஒரு தொடையினில் கோத்து எய்தான் - ஒரு தொடுப்பில் இணைத்து விடுத்தான்; (அதனால்) அது கண்டம் உற்றது - அந்தத் தண்டாயுதம் துண்டுபட்டு விட்டது; கருகழல் அரக்கனும் - வலிய கழலிணையணிந்த கும்பகன்னனும் கனன்று - மனம் கொதித்து, ஆங்கு - அவ்விடத்து, வாளோடும் - வாளுடன், மண்டலம் ஓர் சுடர் - பூமியில் ஒளிர்கின்ற ஒப்பற்ற சூரியன் போன்ற, ஆடகம் கேடகம் வாங்கினன் - பொன்னாலியன்ற கேடகத்தையும் கைக்கொண்டான். மற்று: அசை.

தானை உளதன்று என மொழி மாற்றுக. தானை - வானரப் படை; கண்டமுறுதல் - துண்டுபடுதல். 'வலக்கர மெனக் கரன் கண்டமுற்றனரோ' (ஆரணிய. 546). கொண்டல் - நீரைக்கொள்வது; மேகம்; அல் பெயர்விகுதி. கருங் கழல்: கருமை; வலிமை. 'கருங்கை வினைஞர்' (பெரும்பாண். 223). ஆடகக் கேடகம் என்ற இடத்துப் பிராசம் காண்க.

பி - ம். 1. தானை யென்றவர்; சாற்றக்.
2. கொலைக்கணை; தொடுத்தெய்தான்.
3. கண்ட முற்றன; கண்டது, தண்டது; கனைகழல்.
4. சுடாராமெனக். 330

## கும்பகன்னன் வாட்படையெடுத்தலும், இராமன் அவன் கையைத் துண்டிக்கச் சரம் விடுதல்

1542. வாளெ டுத்தலும் வானர வீரர்கள்
மறுகினர் வழிதேடித்
தாளெ டுத்தனர் சமழ்த்தனர் வானவர்
தலையெடுத் திலர்தாழ்ந்தார்
கோளெ டுத்தது மீளவென் றுரைத்தலுங்
கொற்றவன் குன்றொத்த
தோளெ டுத்தது துணித்தியென் றொருசரந்
துரந்தனன் சுரர்வாழ்த்த.

'வாள் எடுத்தலும் - (கும்பகன்னன்) வாட்படை கைக்கொண்ட வுடன், வானர வீரர்கள் மறுகினர் - குரக்கு வீரர்கள் மனம் குழம்பி,

வழிதேடி - தப்பும் வழிநாடி, தாள் எடுத்தனர்-கால்விசை கொண்ட வராய், சமழ்த்தனர் - வருந்தினர்; வானவர் தலையெடுத்திலர் தாழ்ந்தார் - தேவர்கள் நிமிர்வதைவிட்டுத் தலைகவிழ்ந்தார்கள்; மீள கோள் எடுத்தது - திரும்பவும் உயிர்க் கொலை தொடங்கி விட்டது', என்று உரைத்தலும்-என்று தூணவர் கூறிய அளவில், கொற்றவன் - வெற்றிவீரனாகிய இராமபிரான், 'எடுத்தது குன்று ஒத்த தோள் - வாளையுயர்த்திய கும்பகன்னனுடைய மலை நிகர்த்த தோள்களை, துணித்தி - வெட்டுவாயாக', என்று ஒரு சரம் சுரர் வாழ்த்த துரந்தனன் - என்று ஓர் வாளியை அமரர்கள் துதிசெய்ய விடுத்தனன்.

வழிதொறும் தாள் எடுத்தல் - செல்லும் வழிதொறும் கால் விரைதல். என்ன நிகழுமோ என்ற அச்சத்தால் அமரர்கள் தலை கவிழ்ந்தனர். தலையெடுத்தல்; 'என் தலை யெடுக்கலானேன்' (யுத்த. இந்திரசித்து 62). கொள்: கோள் என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

பி - ம். 1. மயங்கினர்; வழிதோறும்.

2. கழிந்தனர். 331

## அரக்கரின் கலக்கம்

1543. அலக்க ணுற்றது தீவினை நல்வினை
யார்த்தெழுந் ததுவேர்த்துக்
கலக்க முற்றன ரிராக்கதர் காலவெங்
கருங்கடற் றிரைபோலும்
வலக்கை யற்றது வாளொடுங் கோளுடை
வானமா மதிபோலும்
இலக்கை யற்றதவ் விலங்கைக்கு மிராவணன்
தனக்குமென் றெழுந்தோடி.

(அரக்கன் கை அறுபட்ட அளவில்) 'தீவினை அலக்கண் உற்றது - தீவினை துன்பமுற்றது; நல்வினை ஆர்த்து எழுந்தது - புண்ணியமானது (உவகையினால்) ஆர்ப்பரித்து எழுந்தது; இராக் கதர் - அரக்கர் அனைவரும், காலம் வெம் கருகடல் திரை போலும் - ஊழிக்காலத்துப் பொங்கி எழுகின்ற வெப்பமிக்க கரிய கடலின்

அலேயினைப் போலும், வலம்கை - வலக்கையானது, கோள் உடை வானம் மா மதிபோலும் - இராகுவினுற் கொள்ளப்பட்ட விண்ணினியங்கும் பெரிய சந்திரன் போன்ற, வாளொடும்-வாட்படையுடன், அற்றது - துணிபட்டது, (அதனுல்), அவ் இலங்கைக்கும் இராவணன் தனக்கும் - அழகிய இலங்கை நகர்க்கும், இராவணனுக்கும், இலக்கை அற்றது-(இனிப்) பாதுகரவல் ஒழிந்தது,' என்று-என்று புலம்பிய வண்ணம், எழுந்து ஓடி வேர்த்து கலக்கம் உற்றனர் - எழுந்து விரைந்து உடல் வியர்த்து மனக்குழப்பம் எய்தினர்.

அலக்கண் - துன்பம் ; (பிங்.). 'ஆண்டுற்ற வலக்க ணேக்கின்' (ஆரணிய. 870) ; 'ஆவா வலக்க ணுறுவாள்' (ஆரணிய. 959); தீவினை அலக்க ணுற்றது (ஒப்பு) : 'தீவினை தியநோற்று' (ஆரணிய. 260) ; 'இடுக்க ணிடுக்கட்படும்' (குறள். 625) ; இராக்கதர் எழுந்தோடி வேர்த்துக் கலக்கமுற்றனர் எனக்கொண்டு கூட்டுக. காலம்: ஊழிக்காலம். கருங்கடல் திரை அவர்கள் கைக்குவமை. இராகுவினுற் பற்றப்பட்ட மதியம் வாளினுல் அறுபட்ட மதிக்குவமை. இலக்கை : ரக்ஷா என்ற வடமொழித்திரிபு. பாதுகாப்பு என்னும் பொருளது.

பி - ம். 3. கோளொடும் தோளொடும் ; வானவிர்மதி, வானவர்பதி.

4. உற்றவங், உற்றதவ் ; தலேக்குமென்றெழுந்து, தலேக்குமேலெழுந்து ஓட. 332

## கும்பகன்னன் அற்ற கையை இடக்கையாலெடுத்து மோத வாநரர் மடிதல்

1544. மற்றும் வீரர்க ளுளரேனற் கெளிதரோ
மறத்தொழி லிவன்மாடு
பெற்று நீங்கின ராமெனி னல்லது
பேரெழிற் றேளோடும்
அற்று வீழ்ந்தகை யருதவெங் கையினு
லெடுத்தவ னுர்த்தோடி
எற்ற வீழ்ந்தன வெயிறிளித் தோடின
வாநரக் குலமெல்லாம்.

பேர் எழில் தோளோடும் அற்று - பெரிய அழகிய தோளுடன் துணிபட்டு, வீழ்ந்த - கீழ் விழுந்த, கை - கரத்தினை, அவன் - அந்த

அரக்கன், அருத வெம் கையினுல் எடுத்து - துணிபடாத கொடிய கரத்திஞல் தாங்கிக்கொண்டு, ஆர்த்து ஓடி எற்ற - ஆர்ப்பரித்துக் கொண்டு ஓடி மோதின அளவில், எயிறு இளித்து ஓடின வாநர குலம் எல்லாம் வீழ்ந்தன - பல்லேத் திறந்து கொண்டு ஓடிய குரக்குக் கூட்டங்கள் எல்லாம் (உயிர் நீங்கி) வீழ்ந்தன ; (இவ்வாருன வீரத்தினேக் கும்பகன்னன் காட்டியதனுல்), மறம் தொழில் இவன் மாடு - வீரச்செயல் பொருந்திய இவன்பால், பெற்று - உயிரை இரந்து பெற்று, நீங்கினர் ஆம் எனில் அல்லது - நீங்கி உய்ந்தவர் இருத்தல் இயலுமன்றி, மற்றும் - பிறிதும், மறம் தொழில் வீரர்கள் உளர் எனற்கு எளிதரோ - (இவனேப் பார்க்கிலும்) போர்த்தொழில் மிக்க வீரர் உள்ளனர் என்று பகர்தல் எளிமையானதோ ?

வீரர் எனப்பட்டவர் பிழைத்துய்தல் வேண்டின் இவனிடம் உயிரினே இரந்து பெறுதல் வேண்டும் என்று உலக நவிற்சியணியாக அரக்கனுடைய வீரத்தைப் போற்றினர். (ஒப்பு) : 'மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி, யீயென விரக்குவ ராயிற் சீருடை, முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்.' இன்னுயிராயினுங் கொடுக்குவெ னிந்நிலத், தாற்றலுடையோர் ராற்றல் போற்ருதென், உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதிற், றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல, உய்ந்தனன் போதலோ அரிதே' '(புறநா. 73) ; மறத் தொழில் இவன்மாடு பெற்று' என்பதற்கு இவன் மாடு வீரத்தை யிரந்து பெற்று என்று பொருள் கூறுவர் ஒருசாரார். இவன் மாடு பெற்று - நீங்கினராமெனில் அல்லது மற்றும் மறத்தொழில் வீரர்கள் உளரெனற் கெளிதரோ என அந்வயித்துப் பொருள் கொள்ளப்பெற்றது. எத்தகைய வீரரும் இவனிடம் உயிர்ப்பிச்சை கேட்டால் பிழைத்தல் கூடும் அன்றி, வேறுவகையில் பிழைப்பதரிது என்பது கருத்து. - எளிதரோ - எளிது என்றதன்பின் அர்சாரியை ; ஓகாரம் வினு.

'வீரத்தொழிலுக்குக் கும்பகன்னன் கீழே படித்துயர்ந்த பெயரல்லாமல் பின்னும் வீரருண்டோ' என்பது பழையவுரை.

பி - ம். 1. மறத்தொழிலவன்.

2. நீங்கினதாமெனின்.

3. அற்று விழ்ந்தன.

4. எயிறிரிந்து, எயிறிரிந்து ; ஓடினர் ; குழு. 333

## கும்பகன்னனது வீரங்கண்ட உலகோரின் அச்சம்

1545. வள்ளல் காத்துட னிற்கவும் வாநரத்
தானையை மறக்கூற்றம்
கொள்ளை கொண்டிடத் தண்டினின் மும்மடி
குமைக்கின்ற படிநோக்கி
வெள்ள மின்றொடும் வீய்ந்தறு மென்பதோர்
விம்மலுற் றுயிர்வெம்ப
உள்ள கையினு மற்றவெங் கரத்தையே
யஞ்சின வுலகெல்லாம்.

வள்ளல் - கருணாநிதியாகிய இராமபிரான், வானரர் தானையை காத்து உடன் நிற்கவும் - குரங்குப்படையைப் பாதுகாத்து நிற்கவும், மறம் கூற்றம் - கொடுமை வாய்ந்த யமன், கொள்ளை கொண்டிட - கொள்ளை கொள்ளுமாறு, தண்டினின் மும்மடி குமைக்கின்றபடி நோக்கி - கதை அழித்ததைவிட மும்மடங்கு அதிகமாக (க்கும்ப கன்னன்) அழிக்கின்ற தன்மையை நோக்கி, உலகு எல்லாம் - உலகோர் எல்லாம், 'வெள்ளம் இன்றொடும் வீய்ந்து அறும் - குரங்குப் பெருஞ்சேனை இன்றொரு நாளிலேயே அழிந்துபோம்', என்பது ஓர் விம்மல் உற்று - என்று நினைவதால் ஆன ஏக்கத்தை யடைந்து, உயிர் வெம்ப - உயிர் வாட, உள்ள கையினும் - துணி படாமல் உள்ள கரத்தினைக் காட்டிலும், (கும்பகன்னனுடைய) மற்ற வெம்கரத்தையே - துணிபட்ட கொடிய கையினையே, அஞ்சின - மிகவும் அஞ்சினார்கள்.

துணிபட்ட வலக்கரத்தினை இடது கரத்திலே தாக்கி அடிக் கும்கால் பலவும் இறக்குமாறு புரிவது துணிபட்ட கரமேயாதலின், அறாத கையைவிட அற்ற கையினையே உலகினர் அஞ்சினர் என்பது கருத்து. இதனை விபாவனை அணி என்பர். பிரசித்த மான காரணமின்றியே காரியம் பிறந்ததாகச் சொல்லும் அணி விபாவனை அணியென்பர். (தண்டி. 50); மும்மடி - மூன்று மடங்கு; 'பதாதி மும்மடி சேனா முகமே' (பிங். 6, 540); இருமடி மும்மடி ஆகுபெயர் என்பதும் காண்க. குமைக்கின்ற: 'கூற்றைக் குமை

கழலாலன்று குமைத்தார்போலும்' (தேவா. 46, 6); விம்மல் உற்று-ஏங்கி 'விம்மலுற்றனையான் ஏவ' (கிட்கிந்தா. 59). உலகு இட வாகுபெயராக உலகின் உள்ளோரைக் குறித்து நின்றது.

பி - ம். 1. நிற்பவும்.

2. பண்டையின்; குறிநோக்கி.

3. விந்தனும், வீந்தன.

4. கையையே, 334

### கும்பகன்னன் இராமபிரானைக் குறித்து வான்வழியாக ஓடல்

1546. மாறு வானரப் பெருங்கட லோடத்தன்
தோள்நின்று வார்சோரி
யாறு விண்தொடும் பிணஞ்சுமந் தோடமே
லமரரு மிரிந்தோடக்
கூறு கூறுபட் டிலங்கையும் விலங்கலும்
பறவையுங் குலைந்தோட
ஏறு சேவகன் மேலெழுந் தோடினன்
மழைக்குல மிரிந்தோட.

மாறு வானரர் பெருகடல் ஓட-பகையான குரங்குப் பெருஞ் சேனைக்கடல் ஓடவும், தன் தோள் நின்று வார் சோரி ஆறு-தன் புயத்தினின்று ஒழுகும் இரத்த நதி, விண்தொடும்-ஆகாயத்தைத் தீண்டுமாறு, பிணம் சுமந்து ஓட - பிணங்களைத் தாங்கிக் கொண்டு பாயவும், மேல் அமரரும் - வானகத்துள்ள தேவரும், இரிந்து ஓட - நிலைகுலைந்தோடவும், இலங்கையும் விலங்கலும் - இலங்கை நகரும் அந்நகரினை அடக்கி நின்ற திரிகூட மலையும், பறவையும் கூறு கூறுபட்டு குலைந்து ஓட - பட்சிகளும் வீற்று வீற்றாக நிலைகெட்டு ஓடவும், (கும்பகன்னன்), மழை குலம் இரிந்து ஓட - மேகத்தொகுதி நிலைதிரிந்து படரவும், மேல் எழுந்து-வான வழியாக எழுந்து (பிணக்குவியலின் மீது ஏறி), ஏறு சேவகன் ஓடினன் - வீரர்கட்குள் சிங்கம் எனும்படியான வீரனை இராமபிரானை நோக்கி ஓடினன்.

விண்தொடு பிணம் சுமந்து - ஆகாயத்தினைத் தீண்டும்படி பிணக்குவியல்கள் உயர்ந்திருந்தன. அந்தக் குவியலின்மீது ஏறி அரக்கன் இராமனைக் கருதிச்சென்றான் என்பது கருத்து. ஓட ஓட என்று பல இடங்களில் வருவது சொற்பொருட்பின் வருநிலை. 'ஏறு சேவகன்' (அயோத்தி. தைல மாட்டு. 42); ஆரணிய. விராதன் 32 ; சுந்தர. 625 ; யுத்த. 1553.

பி-ம். 1. பெரும்படை ; வருசோரி, வளர்.

2. யாரும், ஆணையின் ; பிணக்குவை கொண்டு.

3. கூறுபட்டன விலங்கலு மிலங்கையும் ; பரவையும் யாவையும்.

4. வேலையிலிட்டனன். 335

## இராமபிரான் கும்பகன்னனது மற்றைக் கையை யறுத்து வீழ்த்துதல் கூறும்

1547. ஈற்றுக் கையையு மிக்கணத் தரிதியென்
றிமையவர் தொழுதேத்தத்
தோற்றுக் கையகன் றொழிந்தவ னளவை
தொலையவுந் தோன்றாத
கூற்றுக் கையமு மச்சமுங் கெடநெடுங்
கொற்றவன் கொலையம்பால்
வேற்றுக் கையையும் வேலையி லிட்டனன்
வேறுமோ ரணியாக.

'ஈற்று கையையும் இக்கணத்து அரிதி - இறுதியாக எஞ்சியுள்ள கரத்தினையும் இதே கணத்தினில் துணித்திடுக', என்று இமையவர் தொழுது ஏத்த - தேவர்கள் வணங்கித் துதிக்க, தோற்று - வலிமையிழந்து, கை அகன்று ஒழிந்தவன் - வலக்கரம் இழக்கப்பெற்றவனான அந்த அரக்கனுடைய, நாள் அவை தொலையவும் - வாழ்நாட்கள் இறுமாறும், தோன்றாத- (இதுகாறும் அரக்கர் வழிகட்குக்) காணப்பெறாத, கூற்றுக்கு - யமனுக்கு, ஐயமும் அச்சமும் கெட - சந்தேகமும் பயமும் நீங்கவும், நெடு கொற்றவன் - பெரும் வெற்றி வீரனான இராமபிரான், கொலை அம்பால் - கொல்லும் வன்மையுள்ள தனது அம்பினால், வேறு கையையும் - மற்றொரு கரத்தினையும் (துணித்து), வேறு ஓர் அணியாக வேலையில்

இட்டனன் - மற்ருெரு அணைபோன்று காணப்படுமாறு கடலில் வீழ்த்தினுன்.

ஈற்றுக்கை - இறுதியாக எஞ்சி நின்ற கரம்; நாள் : வாழ்நாள். தோன்ருத கூற்று ; இவ்வரக்கன் தன்னை என் செய்வானே என்று சந்தேகமும் பயமும் கொண்டு அதுகாறும் கட்புலனுகாத யமன் ; 'கூற்றுக் கண்ணேடிய வெருவரு பறந்தலை' (புறநா. 19); (ஒப்பு) முன்னர் வானர வீரர்களிட்ட அணையினும் வேருன அணையெனும்படி என்க.

பி - ம். 1. ஏற்றுக் ; கனத்தினில் ; அரியும்.

2. கையதன் ஹழிந்தவனுடைய நாள், கையொழிந் தொழித்தவனுளவை

3. கொலை பயிலயில்.

4. ஆன. 338

## கடலில் வீழ்ந்த கும்பகன்னன் தோளின் வர்ணனை

1548. சந்தி ரப்பெருந் தூணெடுஞ் சார்த்திய
தகிலொன்றுந் தவருகா
தந்த ரத்தவ ரலைகட லமுதெழக்
கடைவுறு மந்நாளில்
சுந்த ரத்தடந் தோள்வளை மாசுணஞ்
சுற்றிய தொழில்காட்ட
மந்த ரத்தையுங் கடுத்தது மற்றவன்
மணியணி வயிரத்தோள்.

சுந்தரம் தடதோள்வளை மாசுணம் சுற்றிய தொழில் காட்ட - அழகிய பெரிய தோளில் தரித்த வளையானது அரவம் சுற்றிய தன்மையைக்காட்ட, அவன் மணி அணி வயிரம் தோள் - அந்தக் கும்பகன்னனுடைய அரதன வணிகள் தரித்த வயிரத்தோள்கள், சந்திரன்பெரு தூணெடுஞ் சார்த்தியது - சந்திரனுகிய பெரிய தூணெடும் நாட்டியதாய், அதில் - (கடைகின்ற) அந்த மத்தின் தன்மையில், ஒன்றும் - சிறிதும், தவறு ஆகாது - பிழைபடாது, அந்தரத்தவர் - வானவர், அலைகடல் அமுது எழ - அலையும்

தன்மையுள்ள பாற்கடலினின்று அமிழ்து வெளிப்படுமாறு, கடைவுறும் அநாளில் - கடைகின்ற அந்நாளில், மந்தரத்தையும் கடுத்தது - மந்தர மலையினையும் ஒத்து நின்றது. மற்று : அசை.

அலைகடல் கடைந்த வரலாறு இங்குக் குறிக்கப் பெற்றது. சுந்தரத் தடந்தோள்வளை மாசுணம் சுற்றிய தொழில் ; (ஒப்பு) 'சுந்தரத் தோளணி வலயந் தொல்லை நாள், மந்தரஞ் சுற்றிய வரவை மானுமே' (பால. கடிமணப். 56); கடலில் வீழ்ந்த அரக்கனுடைய கரம், பாற்கடலிடையே நாட்டப்பெற்று, வாசுகி என்ற பாம்பாகிய கடைகயிற்றாற் சுற்றப்பட்ட மந்தர மலைபோன்ற தென்க. (ஒப்பு) மந்தர மனையதோள் வள்ளல் பேர்சொல' (நைடத. சுயம்வர.).

பி - ம். 1. சாத்தியது, சாத்தியே ; ஈதென ; தவிராமல், தவிராதால்.

3. தோளிணை.

4. மந்தரத்தையும் ஒத்தது. 337

1549. சிவண வண்ணவான் கருங்கடற் கொண்டுய்த்த
செயலினுஞ் செறிகற்றைச்
சுவண வண்ணவெஞ் சிறையுடைக் கடுவிசை
முடுகிய தொழிலாலும்
அவண வண்ணல தேவலி னியற்றிய
வமைவினு மயில்வாளி
உவண வண்ணலை யொத்தது மந்தர
மொத்ததவ் வுயர்பொற்றோள்.

சிவண - (தன்னைத்தானே) நிகர்ந்து நிற்க, வண்ணம் - அழகிய, வான் கருகடல் கொண்டு உய்த்த செயலினும் - மிகப் பெரிய கடலிலேகொண்டு செலுத்திய செய்கையினாலும், செறி கற்றை - அடர்ந்த தொகுதியையும், சுவணம் வண்ணம் - பொன் னிறத்தினையும் கொண்ட, வெம் - விழையத்தக்க, சிறையுடை - சிறகும் உடைய, கடுவிசை முடுகிய தொழிலாலும் - மிக்க வேக முடன் விரைந்து சென்ற செயலினாலும், அவண - அந்த இடத்தில் உள்ள, அண்ணலது - பெருமையாளனான இராமபிரானுடைய, ஏவலின் இயற்றிய அமைவினும் - கட்டளையின்படி ஏவிய தொழி

லைப் புரிந்த அமைதியானும், அயில்வாளி - (இராமபிரானுடைய) கூர்மையான அம்பு, உவண அண்ணலை ஒத்தது - கருடப் பெருமானை ஒத்தது; அவ் உயர் பொன் தோள் மந்தரம் ஒத்தது - (கும்பகன்னனுடைய) உயர்வான பொன் அணியணிந்த புயம், (கருடன் கொண்டுவந்த) மந்தரத்தினை நிகர்த்தது.

இச்செய்யுட்கொண்டு, கருடபகவான், திருமாலின் ஏவலால் பாற்கடலைக் கடையும் பொருட்டு, மந்தர கிரியைப் பாற்கடலில் இட்டதாக ஓர் வரலாறு இருப்பதாகத் தெரிகிறது. இதற்கு ஆதாரம் தேடற்குரியது. திருமால் கட்டளையை மேற்கொண்டு அநந்தன் என்னும் நாகராசன் மந்தர பர்வதத்தை அகழ்ந்து எடுத்துத்தர, அம்மலைகொண்டு அமரர்கள் பாற்கடலைக்கடைந்ததாக மகாபாரதம் கூறும். சுவண வண்ணன்; கருடன்; விராதன் வதை; உவண அண்ணல்; ஸுபர்ணன் என்ற வடசொற்றிபு உவணன் என்பது.

பி - ம். 1. வன்கருங்கடல்; கொடுவந்த; செறிதாரை.

2. சிறையிடை; முடுக்கிய.

3. அவண வண்ண னன்று; அளவினும்.

4. ஒத்தன, நிகர்ந்தன. 330

## இருகையும் அற்ற கும்பகன்னன் வாநரக் கடலைக் கலக்குதல்

1550. பழக்க நாள்வரு மேருவை யுள்ளுறத்
தொளைத்தொரு பணையாக்கி
வழக்கி னுலுல களந்தவ னமைத்ததோர்
வன்குணில் வலத்தேந்தி
முழக்கி னுலென முழங்குபே ரார்ப்பினன்
வாநர முந்நீரை
உழக்கி னுன்தசை தோலெலும் பெனுமிவை
குருதியோ டொன்றாக.

பழக்கம் நாளவரு மேருவை - வழக்கமாகச் சூரியன் (வலமாக) வருகின்ற மேருமலையினை, உள்உற தொளைத்து - உள்ளே நன்கு

துளைத்து, ஒரு பணை ஆக்கி-ஒரு பறையாகச் செய்து, வழக்கினால் - முறையினால், உலகு அளந்தவன் - உலகினை அளந்தவனான திரு விக்கிரமப் பெருமாள், அமைத்தது ஓர் - (அந்த மேருகிரியாகிய பறைக்குத்தகப்) பொருத்தியதாகிய, வன்குணில்-வலிய குறுந்தடி யொன்றினை, வலத்து ஏந்தி - வலத்தேயேந்தி, முழக்கினால் என - முழக்கினாற் போன்று, முழங்கு பேர் ஆர்ப்பினான் - முழங்குகின்ற பேரார்ப்பினை யுடையவனான, கும்பகன்னன், தசை தோல் எலும்பு எனும் இவை குருதியோடு ஒன்று ஆக - சதை தோல் எலும்பு என்று சொல்லப்படும் இவையனைத்தும் உதிரத்துடன் கலந்து படுமாறு, வாநர முந்நீரை உழக்கினான்-குரங்குக் கடலைக் (காலாற்) கலக்கினான்.

நாள் - நாட்களைச் செய்யும் சூரியன்; பெருந் தோற்றத்தன் ஆன கும்பகன்னனுடைய பெருமுழக்கிற்கு மேருமலையைப் பறையைக் கொண்டு முழக்குவதை உவமையாக்கினர். இல்பொருள் உவமை: கலக்கியது வலக்காலினால் என்பது அடுத்த செய்யுட்கொண்டு அறியப்படும். குணில்; முரசடிக்கும் குறுந்தடி; 'குணில் பாய் முரசிரங்கு மருவி' (புறநா. 143).

பி - ம். 1. பறை.
2. வான்குணில்.
3. முழக்கினனென்ன.
4. தோன் மயிரென்பொடு. 338

## இராமன் கும்பகன்னனுடைய வலக்காலை அம்புகளா லறுத்தல்

1551. நீலத்த கால்கனல் புனல்விசும் பிவைமுற்று
நிருதன துருவாகிக்
கொலத் தகாததோர் வடிவுகொண் டாலென
வுயிர்களைக் குடிப்பானைச்
சலத்த காலனைத் தறுகணர்க் கரசனைத்
தருக்கினிற் பெரியானை
வலத்த காலையும் வடித்தவெங் கணையினாற்
றடிந்தனன் தனுவல்லான்.

நிலத்த - நிலத்துடனியைந்த, கால்கனல் புனல் விசும்பு இவை முற்றும் - காற்று நெருப்பு நீர் ஆகாயம் என்ற இவை முழுதும், நிருதனது உருவாகி - அரக்கனுடைய உருப்பெற்று, கொலதகாதது ஓர் வடிவு கொண்டால் என - கொல்ல முடியாததொரு வடிவு ஏற்றால் ஒப்ப, (த்தோன்றி), உயிர்களை குடிப்பானை - உயிர்களைப் பருகுபவனும், சலத்த காலனை தறுகணர்க்கு அரசனை தருக்கினில் பெரியானை - சினம்மிக்க யமனைப் போன்றவனும், அஞ்சாமை மிக்கோரில் தலைவனும், தருக்கினில் பெரியானை - செருக்கினில் மிக்கவனுமாகிய கும்பகன்னனுடைய, வலத்த காலையும் - வலக்காலையும், வடித்த வெம்கணையினால் தனுவல்லான் தடிந்தனன் - கூரிய கொடிய அம்பினால் வில்லின் வல்லவனான இராமபிரான், அறுத்தனன் -

உலகில் உள்ள பல பொருள்களும் பஞ்ச பூதங்களால் ஆயின என்று நூல்கள் கூறும். கும்பகன்னனுடைய உடல், இவ்வுலகின் கணுள்ள ஐம்பெரும் பூதங்கள் எவ்வளவோ அவ்வளவும் கூடி இயைந்ததென்பது முதலடியின் கருத்து. தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. எனவிவை, எனுமிவை, உருவாக்கி.
2. கொலத் தகாதென : கொண்டான், கொண்டன ; உயிரினைக்.
3. சலத்த காலனோர். 349

## கும்பகன்னன் நொண்டியபடி பொரவருதல்

1552. பந்தி பந்தியின் பற்குல மீன்குலம்
பாகுபா டுறப்பாகத்
திந்து வெள்ளெயி றிமைத்திடக் குருதியா
றொழுக்கல்கொண் டெழுசெக்கர்
அந்தி வந்தென வகனெடு வாய்விரித்
தடியொன்று கடிதோட்டிக்
குந்தி வந்தன னெடுநிலங் குழிபடக்
குரைகடல் கோத்தேற.

பந்தி பந்தியின் - வரிசை வரிசையாகவுள்ள, பல்குலம் - பற்களின் தொகுதி, மீன்குலம் பாகுபாடு உற - நட்சத்திரத் தொகுதி

போன்ற பாகுபாட்டைப் பெறவும், பாகத்து இந்து வெள்எயிறு இமைத்திட - பிறைமதி போன்ற வெண்ணிறக் கோரப் பற்கள ஒளிரவும், குருதி ஆறு ஒழுக்கல் கொண்டு எழு - இரத்த நதியின் ஒழுக்கத்தினுல் எழுகின்ற, செக்கர் அந்தி வந்தென - செவ்வானம் ஒளிரும் அந்திப்போது வந்தாற் போன்று, அகல் நெடுவாய் விரித்து - விசாலமான நீண்ட வாயினைத் திறந்து, நெடுநிலம் குழி பட - நீண்ட பூமி குழிபடவும், குரை கடல் கோத்து ஏற - ஒளிர் கின்ற கடல் (பூமி அழுந்துவதால்) வெள்ளப் பெருக்கினைக் கொண்டு நிலத்தின் மீது பரவவும், அடி ஒன்று - ஒற்றைப் பாதத்தை, கடிது ஓட்டி குந்தி வந்தனன் - வேகமாகச் செலுத்திக் கொண்டு நொண்டியடித்த வண்ணம் வந்தான்.

பி - ம். 1. பந்தியிற் ; மின்குலப் ; பாடுபாடுறப், பாடுபாடுறு, பாகத்தின், பாதந்து.

2. எள்ளிநின்று ; குருதியா மெக்கர்.

3. அடியொன்றில் ; கடிதோடிக்.

4. கொதித்தெற. 341

## கும்பகன்னனது மற்ருெரு காலையும் இராமபிரா னறுத்தல்

1553. மாறு காலின்றி வானுற நிமிர்ந்துமா
டுளவெலாங் கடித்தேந்திச்
சூறை மாருத மாமெனச் சுழித்துமேற்
ருெடர்கின்ற தொழிலானை
ஏறு சேவக னெரிமுகப் பகழியா
லிருநிலம் பொறை நீங்க
வேறு காலையுந் துணித்தன னறத்தொடு
வேதங்கள் கூத்தாட.

மாறு கால் இன்றி - மற்ருெரு கால் இல்லாமல், வான் உற நிமிர்ந்து - வானத்தைத் தீண்டும்படி உயர்ந்து, மாடு உள எலாம் கடித்து ஏந்தி - அருகில் உள்ள அனைத்தையும் கடித்து ஏந்திய வண்ணம், சூறை மாருதம் ஆம் என சுழித்து - சுழல் காற்றுப்போல வட்டமிட்டு, மேல் தொடர்கின்ற தொழிலானை - மேலே தொடர் கின்ற தொழிலை உடையவன் ஆன கும்பகன்னனை, ஏறு சேவகன் -

இராமபிரான், எரிமுகம் பகழியால்-நெருப்பினை நுனியிற் கொண்ட அம்பினால், இரு நிலம் பொறை நீங்க-பெரிய பூமியின் பாரம் ஒழியும்படியும், அறத்தொடு வேதங்கள் கூத்தாட-தருமத்துடன் நான்மறைகள் கூத்தாடவும், வேறு காலையும் துணித்தனன்-மற்றொரு காலையும் வெட்டினான்.

இங்கு 'நீபார ரதவமரில் யாவரையு நீருக்கிப், பூபாரந் தீர்க்கப் பிறந்தாய் புயல்வண்ணா' (வி. பா. கிருட்டிணன். 34); 'பரித்ராணாய சாதூநாம் விநாசயச துஷ்கிருதாம், தர்ம சம்ஸ்தாப னார்த்தாய, சம்பவாமி' (பகவற்கீதை.) என்ற இவை ஒப்பு நோக்கத்தகும். அறத்தொடு வேதங்கள் கூத்தாட; 'பனிக்கற் சிலையும்' (சுந்தர. 544) என்ற செய்யுள் இங்குக் காணத்தகும்.

பா-ம். 1. வானுறப் பாய்ந்து ; உளதெலாம்'; பறித்தேந்தி, வளைத்து.
2 சூழியின்மேற் றூரக்கின்ற.
3. எரிமுகப் பகழிகள் ; இறைநிலம்.
4. வேறுதானுள ; காலையும் ; துமித்தனன். 342

## கும்பகன்னனுக்குச் சீற்றம் மிகுதல்

1554. கையி ரண்டொடு கால்களுந்
துணிந்தன கருவரை பொருவுந்தன்
மெய்யி ரண்டுநூ றுயிரம்
பகழியால் வெரிநுறத் தொளைபோன
செய்ய கண்பொழி தீச்சிகை
யிருமடி சிறந்தது தெழிப்போடும்
பெய்யும் வானிடை யிடியினும்
பெருத்தது வளர்ந்தது பெருஞ்சீற்றம்.

கை இரண்டொடு கால்களும் துணிந்தன - இரண்டு கரங்களுடனே இரண்டு கால்களும் அறுபட்டன; கருவரை பொருவும்-பெரியமலையினை நிகர்த்த, தன் மெய் - தன்னுடல், இரண்டு நூறு யிரம் பகழியால்-இரண்டு லக்ஷம் அம்புகளால், வெரிந் உற தொளை போன - முதுகுவழியே வெளிப்படத் துளைபட்டது; செய்ய - சிவப்பேறிய, கண்பொழி தீசிகை - கண்களிலிருந்து வெளிப்பட்ட

அக்கினிச்சுவாலை, இருமடி சிறந்தது - இருமடங்கு மிக்கது; பெரும் சீற்றம் - பெருஞ்சினம், தெழிப்போடும் - ஆர்ப்புடனும், பெய்யும் - எழுகின்ற, வான் இடை இடியினும் - வானத்திற் றோன்றுகின்ற இடியினைக் காட்டிலும், பெருத்தது வளர்ந்தது - மிக்கு வளர்ந்தது.

பி - ம். 1. கனவரை.

3. இருமடி சிறந்தன, சிந்தின.

4. வையம்; வானிடி மழையினும், வானிடை மழையினும்; பெருத்தன.

### கும்பகன்னன் வாயால் ஒரு மலையையொடித்தெறிதல்

1555. பாதங் கைகளோ டிழந்தனன் படியிடை
யிருந்துதன் பகுவாயால்
காத நீளிய மலைகளைக் கடித்திறுத்
தெடுத்துவெங் கனல்பொங்கி
மீது மீதுதன் னகத்தெழு காற்றினல்
விசைகொடு திசைசெல்ல
ஊத வூதப்பட் டுலந்தன வாநர
முருமின்வீ ழுயிரென்ன.

பாதம் கைகளோடு இழந்தனன் - கைகளுடன் கால்களையும் இழந்தவனாகிய கும்பகன்னன், படி இடை இருந்து - பூமியிலிருந்து, தன் பகுவாயால் - தன்னுடைய பிளவுபட்ட (பெரிய) வாயினாலே, காதம் நீளிய மலைகளை - காததூரம் நீண்டிருந்த மலைகளை, கடித்து இறுத்து எடுத்து-கடித்து ஒடித்து எடுத்து, வெம்கனல் பொங்கி- கொடிய (சினத்) தீ மிகுந்து, மீதுமீது - மென்மேலும், தன் அகத்து எழு காற்றினல் - தன் உள்ளிருந்து வெளியேறுகின்ற காற்றினல், விசைகொடு - விரைவுகொண்டு, திசை செல்ல - திக்குகளிற் செல்லுமாறு, ஊத ஊத - ஊதும்தோறும, வாநரம் - குரங்குப் படைகள், உருமின் வீழ் உயிர் என்ன பட்டு உலந்தன - இடியினல் உயிரிழக்கும் பிராணிகள்போன்று இறந்து அழிந்தன.

பி - ம். 1. பதியிடை; வான், வன்.

2. கனல் பொங்க.

3. மீது தன்னகத் தெழுங்கடுஞ்.

4. உலர்ந்தன, அலந்தன, உருண்டன; உருமு.

## கும்பகன்னனது செயல் கண்டு இராமன் கைவிதிர்ப்புறல்

1556. தீயி னுற்செய்த கண்ணுடை யானெழுஞ்
சிகையினுற் றிசைதீய
வேயி னுற்றிணி வெற்பொன்று நாவினுல்
விசும்புற வளைத்தேந்திப்
பேயி னுர்ப்புடைப் பெருங்கள மெரிந்தெழப்
பிலந்திறந் ததுபோலும்
வாயி னுற்செல வூதினன் வள்ளலு
மலர்க்கரம் விதிர்ப்புற்ருன்.

*தீயினுல் செய்த - நெருப்பினுல் செய்யப்பட்டாற் போன்ற, கண் உடையான் - விழிகளையுடைய கும்பகன்னன், எழும் சிகை யினுல் - (தன்னிடத்தினின்று) கிளம்புகின்ற தீச்சிகையினுல், திசை தீய - நாற்றிசையும் கருகுமாறு, வேயினுல் திணி வெற்பு ஒன்று - மூங்கில்கள் செறிந்த மலை ஒன்றை, நாவினுல் விசும்புற வளைத்து ஏந்தி - நாவினுல் ஆகாயத்தைப் பொருந்த வளைத்து ஏந்தி, பேயின் ஆர்ப்புடை பெருகளம் எரிந்து எழ - பேய்களின் ஆரவாரத்தைக்கொண்ட பெரிய போர்க்களம் தீய்ந்துபட, பிலம் திறந்தது போலும் வாயினுல் - குகை திறந்ததுபோன்ற வாயின் வன்மையால், செல ஊதினன் - வெகுதூரம் செல்லுமாறு ஊதினன்; (அதுகண்ட) வள்ளலும் - இராமபிரானும், மலர்கரம் விதிர்ப்பு உற்ருன் - தன் தாமரைக்கை நடுக்க மெய்தப்பெற்ருன்.*

*இங்கு அதிகப்பாடல் :—*

*இனைய திண்டிற லரக்கனுக் கவ்வழி யிதயத்திற் பெருஞான*
*நினைவெ ழுந்ததிங் கிவன்பெருங் கடவுள்மற் றிவன்பத*
*[நிழல்காண*
*வினையறுந்தது வேறினிப் பிறப்பிலை யென்றுதன் மனவேகம்*
*தனை மறந்தனன் மறுத்தவன் தன்மையை நினைந்தனன்*
*[கருத்தோடும்.*

பி - ம். 2. வேயினுல்தெரி.
3. பெருகளம் ; இரிந்தெழ.
4. வீசினன்.

## அப்போது கும்பகன்னன் தன் மனத்தினுள் உணர்வு தோன்றத் துயருறுதல்

1557. ஐயன் விற்றொழிற் காயிர மிராவண
ரமைவில ரந்தோயான்
கையுங் கால்களு மிழந்தனென் வேறினி
யுதவலாந் துணைகாணேன்
மையல் நோய்கொடு முடிந்தவென் முன்னவன்
வரம்பின்றி வாழ்வானுக்
குய்யு மாறரி தென்றுத னுள்ளத்தி
னுணர்ந்தொரு துயருற்றான்.

'ஐயன் வில் தொழிற்கு - தலைமகனாகிய இராமபிரானுடைய வில் தொழிற்கருதின், ஆயிரம் இராவணர் அமைவு இலர் - ஆயிரம் இராவணர்கள் எனினும் (எதிர்த்தற்கேற்ற) ஆற்றல் இலராவர்; அந்தோ - ஐயோ! யான் கையும்கால்களும் இழந்தனென் - யான் கரமும் கால்களும் இழக்கப்பெற்றேன்; இனி வேறு உதவலாம் துணை காணேன் - இனி வேறே உதவக்கூடிய துணைவரையும் காண் கிலேன்; (இங்கிலையில் யான் செய்வது என்); மையல் நோய் கொடு - ஆசைப்பிணி கொண்டு, முடிந்த என் முன்னவன் - முடிவினை எய்துமாறுள்ளவனும், வரம்பின்றி வாழ்வானுக்கு - எக்காலத்தும் முடிவின்றி வாழவேண்டியவனும் ஆன இராவணனுக்கு, உய்யு மாறு அரிது - பிழைக்கும் வகையில்லை,' என்று - என்று, தன் உள்ளத்தின் உணர்ந்து - தன் மனத்துள்ளே யெண்ணி, ஒரு துயர் உற்றான் - ஒப்பற்ற துன்பம் அடைந்தான்.

கும்பகன்னன் இராமபிரான் வில் வன்மையைப் புகழ்ந்து இராவணனுக்கு நேரவிருக்கும் அவகேட்டிற்கு இரங்குகின்றான்.

பி - ம். 1. அமைகிலர்.
2. உதவலன்.
3. நோயோடு; முடிந்தவனெனென்று, முடித்துவாதாளென்றும், முடிந்தவாளுளென்று; வாழ்ந்தானுக்கு.

## வேறு

### கும்பகன்னன் இராமபிரானிடத்துச் சில கூறத்தொடங்குதல்

**1558.** சிந்துரச்செம் பசுங்குருதி திசைகள்தொறுந் திரையாரு
எந்திரத்தேர் கரிபரியா ளீர்த்தோடப் பார்த்திருந்த
கந்தரப்பொற் கிரியாண்மைக் களிற்றனையான் கண்ணின்ற
சுந்தரப்பொற் றோளானை முகநோக்கி யிவைசொல்வான்.

சிந்துரம் செம் பசு குருதி - சிந்துரப் பொடிபோன்ற சிவந்த புதிய இரத்தம், திசைகள் தொறும் திரை ஆரு - திக்குகள் தோறும் அலைகளுடன் கூடிய ஆறாகி, எந்திரம் தேர் கரி பரி ஆள் ஈர்த்து ஓட பார்த்து இருந்த - எந்திரம் அமையப்பெற்ற தேர் யானை குதிரை காலாள் என்ற இவைகளை இழுத்து விரையக் கண்ணுற்றிருந்தவனும், கந்தரம் பொன் கிரி-குகையைக் கொண்ட பொன்மலையான மேருவினையும், ஆண்மை களிறு - வீரம் செறிந்த ஆண் யானையினையும், அனையான் - நிகர்த்தவனுமான கும்பகன்னன், கண்நின்ற - தன் விழியெதிரே நின்ற, சுந்தரம் பொன் தோளானை - அழகிய பொன்னணி புனைந்த புயங்களுடையவனான இராமபிரானை, முகம் நோக்கி - நேரே பார்த்து, இவை சொல்வான் - பின்வரும் வார்த்தைகளை யுரைக்கலானான். இவ்வார்த்தைகளை அடுத்துவரும் ஐந்து கவிகளிற் காண்க.

சிந்துரம்: 'சிந்துரத்தைத மாறுகொள்ள' (சுந்தர. 312). பசுமை - புதுமை. கந்தரம் - குகை; வடசொல். 'கந்தரத்தினி லிருள்' (சிவப். பிரபந். சோணசைல. 15); ஈர்த்தோடப் பார்த்திருந்த என்பதில் இணையெதுகை காண்க. பொற்கிரியனையான் களிறு அனையான் எனத் தனித்தனிக் கூட்டுக. இச்செய்யுள் முதல் 1566 வரையுள்ளவை, அளவடி நான்கு கொண்ட கலி விருத்தங்கள்.

பி - ம். 1. சிறையாறும், சிறையாரு.

3. பொற்களியாடல், தனியாண்மை; கிரியனையான்.

## வீடணன் பொருட்டுக் கும்பகன்னன் இராமபிரானை வேண்டுதல்

1559. புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
மைக்கடங்கார் மதயானை வாள்வேந்தன் வழிவந்தீர்
இக்கடன்க ளுடையீர்நீ ரெம்வினைதீர்த் தும்முடைய
கைக்கடைந்தா னுயிர்காக்கக் கடவீரென்
[கடைக்கூட்டால்.

'புக்கு அடைந்த - தன்னைச் சரணமாகப் புகுந்த, புறவு ஒன்றின் பொருட்டாக - ஒரு புருவின் நிமித்தமாக, துலைபுக்க - தராசுத் தட்டில் அமர்ந்தவனும், மைகடம்கார் மத யானை - கறுத்த மத நீரை மேகம் போன்று பொழிகின்ற மதயானையினையும், வாள்-வாட் படையினையுமுடைய, வேந்தன் - சிபி மன்னனுடைய, வழி வந்தீர் - வமிசத்தில் தோன்றியவரே, இகடன்கள் உடையீர் நீர் - (அந்தப் பேரரசன் போன்று) அன்பினால் இயற்றக்கூடிய கடமைகளை மேற்கொண்ட நீங்கள், என் கடை கூட்டால் - என்னுடைய இறுதிப் பிரார்த்தனையைச் செவிக்கொண்டு, எம் வினை தீர்த்து - எங்களுடன் தோன்றி நின்றதால் நிகழ்ந்த தீவினையைப் போக்கி, உம்முடைய கைக்கு அடைந்தான் - உமது பக்கத்தைச் சார்ந்துள்ள வீடணனுடைய, உயிர் காக்க கடவீர் - உயிரையும் பாதுகாக்கக் கடவீராக.

புறவிற்காகத் துலைபுக்கது; சிலப். 20; 52. உரைக் குறிப்பு. புறநா. 37. குறள் 72 உரை. எங்களைக் கட்டால் என்ற பாடம் கொண்டு 'உம்முடைய கைக்கடைந்தான் வீடணன் எங்கள் உயிரைக் காக்கும்படி அவனுக்குப் புத்தி அருளிச்செய்யும்' என்பது பழையவுரை. அடுத்த செய்யுட்களில் இராவணனுடைய சினத்திற்குப் பாத்திரமாகாமல் வீடணனைக் காக்க வேண்டும் என்ற கும்பகன்னன் வேண்டுவதை நோக்கின் இப்பாடம் சிறவாது என்று துணியப்படும். கடைக்கூட்டு - இறுதியில் கூட்டியுரைக்கும் சொற்கள் என்க. கடைக்கூற்றால் என இருப்பின் சிறக்கும்.

பி-ம். 2. மைக்கடங்கா; மதவானை-
4. கைக்கடந்தான், எங்களைக் கட்டால்.

1560. **நீதியால் வந்ததொரு நெடுந்தரும நெறியல்லால்**
**சாதியால் வந்தசிறு நெறியறியா னென்தம்பி**
**ஆதியா யுனையடைந்தா னரசருருக் கொண்டமைந்த**
**வேதியா வின்னமுனக் கடைக்கலமியான் வேண்டினேன்.**

'ஆதியாய் - எல்லாவற்றிற்கும் முதற்பொருளே!, அரசர் உரு கொண்டு அமைந்த வேதியா - அரச வடிவுகொண்டு பொருந்தி, வேதத்தினுல் விளக்கப்பெறுகின்ற பெருமானே!, நீதியால் வந்தது ஒரு - முறையாக அமைந்த ஒப்பற்ற, நெடுதரும நெறி அல்லால் - உயர்ந்த அற நூல் வழியினுல் அல்லாமல், சாதியால் வந்த - சாதிப் பிறப்பினுல் உண்டான, சிறு நெறி அறியான் என்தம்பி - அறமல்லாத மறநெறி யறியாதவனுன என் தம்பி வீடணன், உனை அடைந்தான் - உன்னைப் புகலாகச் சார்ந்துள்ளான்; இன்னம் - மீண்டும் (அவனை), உனக்கு அடைக்கலம் - உனக்கு அடைக்கலப் பொருளாகவே (உன்னுற் காக்கப்படுவதை), யான் வேண்டினேன் - யான் விரும்பினேன்'.

முன் இரண்டடிகட்கு: 'பொய்யும் களவும் பாதகமும் பொல்லா வொழுக்கு மவை கடிந்து, மெய்யுந் தயாவுந் தருமமுடன் விளங்கும் பொறையு மிவைபூண்டு செய்யுஞ் செயல்க ளவையெல்லாஞ் சிட்டர் செய்யுஞ் செயலாகி, அய்யன் புகழ்வீ டணன்மறைக ளறிந்து தவத்தின் வழிநின்றுன், (உத்தர. இராவணன் பிறப்பு. 20). யுத்த. 23, 325, 326, 327-ம் காண்க. தருமநெறியல்லாமல் சிறு நெறி யறியான்; 'தகவுறு சிந்தையன் தரும நீதியன்' 'அறநிலை வழாமையு மாதிமூர்த்தி பால், நிறைபெரு நேயமும் நின்ற வாய்மையும், மறையவர்க் கன்புமென் றினைய மாமலர், இறையவன் றரநெடுந் தவத்தின் எய்தினுன்; (யுத்த. 348, 349). என்பன அனலன் கூற்று. நீதியால் வந்த நெடுந்தரும நெறி யுத்த. 400, 401 காண்க. 'அறமென நின்றநம்பற் கடிமைபெற் றவன்றனுலே, மறமென நின்ற மூன்று மருங்கற மாற்றி மற்றுந், திறமென நின்றதீமை யிம்மையே தீர்ந்த செல்வ;' 'நீதியுந் தரும நின்ற நிலைமையும் புலமை தானும், ஆதியங் கடவு ளாலே யருந்தவ மாற்றிப் பெற்றுய்' (யுத்த. 1338, 1339) என்பன கும்பகன்னன் கூற்று. அரசருருக்

கொண்டமைந்த வேதியா; (ஒப்பு) 'ஆழித்துயில்கடந்தயோத்தி வந்தான்' (யுத்த. 926), 'ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும் விட் டயோத்தி வந்தான்' (சுந்தர. 1122). 'அறந்திறம்பு மென்றை யன யோத்தியிற் பிறந்தபின்பும்' (அயோத்தி. நகர்நீ. 223). 'அறத்தை முற்றுங் காவற்குப் புகுந்து நின்றூர் காகுத்த வேடங்காட்டி' (யுத்த. 1354). 'துணிபொருடுணிவில் தூக்கி, யறநெறி நிறுத்த வந்த விறை' (கிட்கிந்தா. 360). வேதியன் அரசருருக் கொண் டமைந்தது என்று கூறிய நயம் உணர்க.

பி-ம். 3. ஆதியானுனே.

4. அடைக்கலந்தான். 349

1561. வெல்லுமா நினைக்கின்ற வேலரக்கன் வேரோடும்
கல்லுமா முயல்கின்ரு னிவனென்னுங் கறுவுடையான்
ஒல்லுமா றியலுமே லுடன்பிறப்பின் பயனோரான்
கொல்லுமா லவனிவனைக் குறிக்கோடி கோடாதாய்.

'கோடாதாய் - அறநெறியினின்றும் பிறழாதவனே! வெல் லுமா நினைக்கின்ற வேல் அரக்கன் - வெற்றி கொள்ளுமாறு கருது கின்ற வேற்படையினையுடைய இராவணன், 'இவன் - இந்த வீட ணன், வேரோடும் கல்லுமா முயல்கின்ருன் என்னும் கறு உடை யான் - (தன்னை) அடியோடு ஒழிக்குமாறு முயல்கிருன்' என்று (இவன்பால்) கறுக்கொண்டுள்ளான்; உடன் பிறப்பின் பயன் ஓரான் - உடன் பிறப்பின் பயனை அறியாதவனான அவ்வரக்கன், ஒல்லுமாறு இயலுமேல் - கைகூடும்படி நேருமாகில், அவன் கொல்லும் - அவன் கொலைபுரிவான்; (ஆதலின்), இவனை குறி கோடி-இவனை நன்கு கவனித்துப் பாதுகாப்பாயாக. ஆல் - அசை.

வெல்லுமா: 'வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கடியேன்' (திருத்தொண்டத் தொகை). கல்லுதல் - அகழ்தல்: 'கல்லலாம் உலகினை' (யுத்த. 1285), 'கல்லூற்றுழி' (நாலடி. 185); கறுவு: 'கறுவு கைம்மிக' (சுந்தர. 1263); 'கறுவுற்ற பொருளுக்கென்னே' (கிட்கிந்தா. 631); ஒல்லுதல் - இயலுதல்: 'ஒல்லுவ தொல்லு மென் றலும்' (புறநா. 196); 'ஒல்லும் வகையா னறவினை யோவாதே' (குறள். 33); உடன் பிறப்பின் பயனோரான்; 'உடன் பிறப்பாற் ேருள்வலிபோம்' (தனிப்பா.); 'உடன்பிறப் பாக்கலாகா' 'தந்து தேசம் நபச்யாமி, யத்ரப்ராதா சகோதர' (வான்மீகம்), 'எமபியை

யீங்குப் பெற்றே னென்னெனக் கரியதென்ருன்' (சீவக. 1760); 'தம்பியுடையான் பகையஞ்சான் னென்னுமாற்றம் தந்தனையால்' (யுத்த. இந்திரசித்து. 69). 'எம்பிரீயுனே யாவதே வலி' (ஆரணிய. 117); மற்றும், கந்த. வள்ளி. 254 காண்க. கொள் - தீ; கோடி. குறிக்கொள்ளுதல் - கவனித்துப் பாதுகாத்தல்; பறவை யரையா வுறகல் பள்ளியறை குறிக்கொணமின்' (பெரியாழ். திருமொழி. 5:2:9). கோடாதாய்: 'கோடாத வேதனுக்கியான் செய்த குற்ற மென்' (கந்தரலங்காரம்.).

பி-ம். 2. இவன் எனலும்.

4. குறிக்கொணி; கோவிந்தா, கோவேந்தர். 350

1562. தம்பியென நினைந்திரங்கித் தவிரானத் தகவில்லான்
நம்பியிவன் றனைக்காணிற் கொல்லுமிறை நல்கானுல்
உம்பியைத்தா னுன்னைத்தா னனுமனைத்தா
[னெருபொழுதும்
எம்பிபிரி யானுக வருளுதியான் வேண்டினேன்.

'அ தகவு இல்லான் - நற்பண்புகள் அற்ற அந்த இராவணன், தம்பி என நினைந்து இரங்கி - தம்பிதானே என்று மனத்துள் இரக்கம் கொண்டு, தவிரான் - (இவனைக் கொல்லாமல்) விடான்; நம்பி- பெருமானே; இவன் தனைக் காணில் கொல்லும் - இவனைக் கண்டால் கொன்றே விடுவன்; இறை நல்கான் - சிறிதும் கருணை செய்யான்; (ஆதலால்) உம்பியை தான், உன்னை தான், அநுமனை தான் ஒருபொழுதும் எம்பி பிரியான் ஆக அருளுதி - உன் தம்பியான இலக்குவனையும், உன்னையும், அநுமனையும் எந்த நேரத்திலும் என் தம்பி வீடணன் பிரியாதிருக்கும் வண்ணம் அருள் செய்வாயாக; யான் வேண்டினேன் - என் வேண்டுகோள் இது.' ஆல்: அசை.

முன் செய்யுளில் ஒல்லுமேற் கொல்லும் என்றவன், இச் செய்யுளில் அதனையே பின்பற்றி முன்னர்க் குறிக்கோடி என மொழிந்ததை, இன்ன வண்ணம் கவனித்துப் பாதுகாத்தல் வேண்டும் என்று கூறுகின்ருன். நம்பி - அண்மை விளி; தம்பிமேல் வைத்த பாசத்தால் அவனைப் புரந்தருளும்படி வேண்டி நின்ற கும்பகன்னனுடைய சிறந்த இயல்பினை இங்கு அறியலாம். இராவணனுக்குப்பல நல்லுரைகள் கூறியும் அவன்

வழிப்படாமைகண்டு, உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைத்தல் தவறென்றுன்னிச், செஞ்சோற்றுக் கடன் கழித்து உயிர் துறந்த கும்பகன்னன் செயல் மிகவும் போற்றத்தக்கது. இங்குப் பாரதப் போரில் கன்னன் சேஞ்சோற்றுக் கடன் கழித்தற்காகப் பொருது, துரியோதனற்காக உயிர் விடுத்தமை குறிக்கொள்ளல் தகும். இராமபிரான் துணையை நாடித் தன்னைக் கொல்வித்த தம்பியான சுக்கிரீவனுக்காகவும் அநுமனுக்காகவும் பரிந்து, சாகும்தறுவாயில் 'தீவினை யியற்றுமேனு மெம்பியைச் சீறி யென்மேல், ஏவிய பகழி யென்னும் கூற்றினை யேவல்' (கிட்கிந்தா. 355) என்றும், எம்பியை யும்பிமார்கள், தன்முனைக் கொல்வித் தானென் றிகழ்வரேற்றடுத்தி' என்றும், 'அநுமனென் பவனை யாழி யையநீ செய்ய செங்கைத் தனுவென நினைதி மற்றென் றம்பிநின் றம்பியாக, நினைதியோர் துணைவ ரின்னோரனையவரில்லை' என்றும் வாலி கூறிய அருமையான சொற்கள் இங்கே கருதத் தகும். இவை கொண்டு எத்தகைய கொடிய செயல்கள் உள்ளாரிடத்தும், சிற்சில உயர்ந்த பண்புகள் இல்லாமற் போகாது என்பதுணரப்படும். தான் என்ற அடுக்கு ஒவ்வொருவருடைய தனித்த பெருமையை உணர்த்தும்.

பி-ம். 1. இரங்கல்; தவிராதான்.
4. பிரியலறுக; யால், யான் வேண்ட. 351

## கும்பகன்னன் தன் கழுத்தை யறுத்துக் கடலிலிட வேண்டுதல்

1563. மூக்கிலா முகமென்று முனிவர்களு மமரர்களும்
நோக்குவார் நோக்காமே நோன்கணையா லென்கழுத்தை
நீக்குவாய் நீக்கியபி னெடுந்தலையைக் கருங்கடலுட்
போக்குவா யிதுநின்னை வேண்டுகின்ற பொருளென்றான்.

'முனிவர்களும் அமரர்களும் - முனிவர்களும் தேவர்களும், மூக்கு இலா முகம் என்று நோக்குவார் - நாசியிழந்த முகம் என்று காண்பவர், நோக்காமே - (அங்ஙனம்) காண இடமின்றி, நோன் கணையால் - (உனது) வலிய அம்பினால், என் கழுத்தை நீக்குவாய் - என் கழுத்தை அறுத்திடுக; நீக்கிய பின் - போக்கிய பின், நெடு தலையை கருகடலுள் போக்குவாய் - பெரிய சிரத்தினைக் கரிய ஆழியுள் வீழ்ந்து மறையும்படி போக்குவாயாக; நின்னை

வேண்டுகின்ற பொருள் இது - உன்னை யான் வேண்டிக் கேட்கும் பொருள் இதுவே' என்ருன் - என்று கூறி முடித்தான் (கும்பகன்னன்).

மூக்கிழந்து நிற்றல் அவமானத்திற்கேது என்று பல தேயத்தாராலும் கருதப்படுவதொன்று, 'நகையாலே மூக்கிழந்து நாணமிலா நான்பட்ட வசை' (ஆரணிய. 528) என்பது சூர்ப்பணகை கூறியது. நோக்குவார் நோக்காமை என்பதில் முரண் காண்க. நோக்காமை என்பதை நீக்குவாய் போக்குவாய் என்ற இரண்டினுடன் தனித்தனி இயைக்க.

பி - ம். 1. முகம் வந்து.

2. நோக்கலால்; நோக்கா முன்னெரு, நோக்காமை நுன்கணையால்.

4. இது எனக்கு. 352

## இராமன் கும்பகன்னன் வேண்டுகோட் கிணங்கல்

1564. வரங்கொண்டா னினிமறுத்தல் வழக்கன்றென் ருெருவாளி
உரங்கொண்ட தடஞ்சிலையி னுயர்நெடுநா ணுட்கொளுவாச்
சிரங்கொண்டான் கொண்டதனைத் திண்காற்றின்
[கடும்படையால்
அரங்கொண்ட கருங்கடலு ளழுவத்து ளழுத்தினன்.

(இராமபிரான்), வரம் கொண்டான் - '(இவன்) வரம் வேண்டினன்; இனி மறுத்தல் வழக்கு அன்று - இனி மறுப்பது முறையன்று', என்று - என்று மொழிந்து, உரம் கொண்ட தட சிலையின் - வலிமை வாய்ந்த ஒரு பெரிய வில்லில், உயர் நெடு நாண் உள் கொளுவா - உயர்ந்த நீண்ட நாண் கயிற்றை உள்ளே பூட்டி, ஒரு வாளி - ஓரம்பினுல், சிரம் கொண்டான் - (கும்பகன்னனுடைய தலையைக் கொய்தான்; (பின்னர்) கொண்டதனை - கொய்தவதனை, திண் - கடிய, காற்றின் கடுபடையால் - வாயு அத்திரத்தினுல், அரம் கொண்ட கருகடலுள் அழுவத்துள் அழுத்தினன் - பாதாளம் வரையில் ஆழ்ந்துள்ள கரிய ஆழியின் நடுவில் வீழ்த்தி அழுந்தச் செய்தான்.

கொளுவா - செய்யா என்னும் வாய்பாடு; காற்றின் கடும்படை - வாயு அத்திரம். அரம் - பாதாளம். 'அரமேவி வெம்

பின பணி’ (இரகு. யாகப். 81). அழுவம்-பரப்பு; ‘நீரழுவ நிவப் புக் குறித்து’ (புறநா. 14). ‘அரவங் கொண்ட என்பது எதுகை நோக்கி அரங் கொண்ட எனவந்தது’ என்பது பழையவுரை. அரவம்-பேரொலி.

பி-ம். 1. இதுமறுத்தல்.

2. நெடுஞ்சிலையின்; உற, உயிர்; ஞாண்; உடன்கொண்டான்.

4. நெடுங்கடலுள். 353

## கடலினுள் கும்பகன்னன் முகம் மூழ்குதல்

1565. மாக்கூடு படர்வேலை மறிமகரத் திரைவாங்கி
மேக்கூடு கிழக்கூடு மிக்கிரண்டு திக்கூடு
போக்கூடு தவிர்த்திருகண் புகையோடு புகையுயிர்க்க
மூக்கூடு புகப்புக்கு மூழ்கியதம் முகக்குன்றம்.

மா கூடு-விலங்குகள் குழுமியுள்ள, படர்-பரவிய, மகரம் வேலை-ஆழியில், மறி திரை வாங்கி-கரைக்கண் மோதி மடங்கு கின்ற அலைகளைப் புறம் தள்ளி, மேக்கு ஊடு கிழக்கு ஊடுமிக் இரண்டு திக்கு ஊடு-மேற்கிலும் கிழக்கிலும் மிக்குள்ள இரண்டு திசைக் கண்ணும், போக்கூடு தவிர்த்து-போதலை விலக்கி, இரு கண் புகையோடு புகை யுயிர்க்க-இரு கண்களின் புகையுடன் அம்பின் புகையும் வெளிப்பட. அ முக குன்றம்-அந்த முகமாகிய மலையானது, மூக்கு ஊடு-(அறுபட்ட) நாசியின் வழியாக, புக-நீர் நுழைய, புக்கு மூழ்கியது-அழுந்தி மூழ்கியது.

கூடு என்பது பல இடங்களில் வந்தது சொற்பொருட்பின் வரு நிலையணி. மகர வேலை எனக் கூட்டப்பட்டது. மகரம் என்ற மீன் களின் இருப்பிடம் ஆதலின், ஆழிக்கு மகர வேலை என்றும் மகரா லயம் என்றும் பெயர். மலை போன்ற முகம் வீழ்ந்த அளவில் கடல் நீர் அதன் அதிர்ச்சியால் நாற்புறத்தும் விலக, அம்முகம் அறு பட்ட மூக்கின் துளை வழியே நீர் உட்புகுதப் பெற்றுப் பின்னர்க் கடலில் அழுந்தியது என்க.

பி-ம். 3. போக்கூடு கவித்து; செவியூடும்; புகை யுயிர்க்கும்.

4. மூழ்கியதால், மூழ்கியது. 354

## தேவர்கள் மகிழ்வும், அரக்கர் அச்செய்தியை இராவணனுக்கு உணர்த்தச் செல்லுதலும்

1566. ஆடினர் வானவர்க ளரமகளி ரமுதவிசை
பாடினர் மாதவரும் வேதியரும் பயந்தீர்ந்தார்
கூடினர் படைத்தலைவர் கொற்றவனைக் குடர்கலங்கி
ஓடினு ரடலரக்க ரிராவணனுக் குணர்த்துவான்.

வானவர்கள் ஆடினர் - அமரர்கள் ஆடினர்; அர மகளிர் - தேவமாதர், அமுதம் இசை பாடினர் - இனிய இசையைப் பாடினர்; மாதவரும் வேதியரும் பயம் தீர்ந்தார் - தவத்தோரும் அந்தணரும் அச்சம் நீங்கினர்; படை தலைவர் கொற்றவனை கூடினர் - படைத் தலைவர்களாகிய வாநர வீரர்கள் வெற்றிவீரனான இராமபிரானைச் சென்றடைந்தார்கள்; அடல் அரக்கர் - வலிமை சான்ற இராக்கதர் கள், குடர் கலங்கி - குடர் குழம்ப, இராவணனுக்கு உணர்த்து வான் ஓடினர் - இராவணனுக்கு இச்செய்தியை அறிவிக்கும் பொருட்டு ஓடினர்கள்.

முதலிரண்டடிகட்கு; (ஒப்பு): 'ஆர்க்கின்ற வானவரு மந்தணரு முனிவர்களு மாசி கூறித், தூர்க்கின்ற வலர்மாரி' (யுத்த. இராவணன் வதை. 199): 'தேவர், எல்லாருந் தூசு நீக்கி யேறிட வார்த்த போது, கொல்லாத விரதத் தார்தங் கடவுளர் கூட்ட மொத்தார்' (யுத்த. இந்திரசித்து. 56). 'பனிக் கற்சுரத்து' (சுந்தர. 544) என்ற பாடலும் இங்குக் காணத்தகும். படைத் தலைவர்; நீலன் முதலானோர்.

பி - ம். 1. வானவர்கள் மகளிக்களும், அரம்பையர்கள்.
2. வேதியரு மாதவரும்.
3. குடர்கலங்க.
4. உணர்த்துவார். 3:5

கும்பகன்னன் வதைப்படலம் முற்றும்.

———

## இதைப்பற்றிய முதனூற் குறிப்பு :—

முதல் நாள் போரில் தோல்வியுற்ற இராவணன் தருக்கழிந்து நின்ற நிலையில் கும்பகன்னனை எழுப்பிக் கொணருமாறு பணிக்கின்றான். பல கிங்கரர்கள் ஆயுதங்களாலும், பல இசைக் கருவிகளை ஒரு சேர முழக்கியும் அவனை எழுப்ப முயன்றும், எழுப்ப முடியவில்லை. இறுதியாக ஆயிரம் யானைகளை அவன்மீது ஏற்றுகின்றனர். உடனே அரக்கன் துயில் எழுந்து, பேருணவுட்கொண்டு, இராவணனைக் காணச் சென்று, சில அறவுரை பகர்கின்றான். இராவணன் அவற்றை ஏற்காது வெகுளவே, அவன் போருக்குச் சித்தமாகின்றான். பல தீ நிமித்தங்கள் தோன்றுகின்றன. அவற்றைப் பொருட்படுத்தாமல் மேற்செல்கின்றான். வானரர்கள் அஞ்சி ஓட அங்கதன் அவர்களைத் தேற்றுகின்றான். பின்னாக் கும்பகன்னனுக்கும் வானர வீரர்கட்கும் பெரும் போர் நிகழ்கின்றது. அநுமன் தீவிரமாய் எதிர்த்துக் கும்பகன்னன் வேலினால் அடிப்பட்டு மூர்ச்சையடைகின்றான். அடுத்து நீலன் ஓர் மலைச்சிகரத்தினை அரக்கன்மீது எறிகின்றான். மற்றும் பல வானர வீரர்கள் எதிர்த்து முறியடிக்கப்பட்டு இராமபிரானைச் சரணம் புகுகின்றனர். இடைநடுவில் அங்கதனுக்கும் கும்பகன்னனுக்கும் பெரும்போர் நிகழ்கின்றது. அரக்கன் குத்திய குத்தினால் அங்கதன் உணர்விழந்து வீழ்கின்றான். இந்நிலையில் சுக்கிரீவனுக்கும் கும்பகன்னனுக்கும் போர் நிகழ்கின்றது. அரக்கன் சூலப் படையை வானரேந்திரன்மீது எறிய, அதனை அநுமன் கைப்பற்றி முறிக்கின்றான். சூலம் முறிந்ததுகண்டு அரக்கன் ஓர் பெரிய மலைச் சிகரத்தாற்றாக்கச், சுக்கிரீவன் அறிவிழந்து வீழ்கின்றான். அதனைக் கண்ணுற்ற அநுமன் அவனைக் காப்பாற்றுவதற்காக உடனே விரையாமல், சுக்கிரீவன் தன்னைத்தானே விடுவித்துக் கொள்ளும் ஆற்றல் உள்ளவன் ஆதலாலும் தான் உதவிக்குச் சென்றால் தன்னை ஒருசமயம் அவன் வெகுளக்கூடுமாதலாலும், செல்லத் துணியவில்லை. அரக்கனால் தூக்கிச் செல்லப்பெற்ற சுக்கிரீவன் சிறிது சிறிதாக உணர்வு வரப்பெற்றுத் தனது கூரிய நகங்களால் உடலைப் பீறியும் பற்களால் மூக்கினைக் கடித்துவிட்டுத்

தன்னை விடுவித்துக்கொண்டு இராமபிரானிடம் செல்கின்றான். வெறிகொண்ட அரக்கன் பல வானர வீரர்களைப் புசிக்கின்றான். அதைக்கண்டு இலக்குவன் ஏழு அம்புகளை ஏவ, அவற்றை விலக்கிக்கொண்டு, அரக்கன் இராமபிரானிடம் சென்று, தன்னை விராதன் என்றோ, கவந்தன் என்றோ, மாரீசன் என்றோ எண்ணவேண்டாம் என்றும், தான் கும்பகன்னன் என்றும் வீரவாதம் பேசி, இராமபிரான் விட்ட அம்புகளைத் தனது முத்கரம் என்ற படைகொண்டு அறுக்கின்றான். இந்நிலையில் இராமபிரான் ஓர் வாளினால் அவன் கையைத் துணிக்கின்றான். முடிவில் இரகுராமன் ஐந்திராத்திரத்தை விடுத்துக் கும்பகன்னனுடைய தலையை வெட்டுகின்றான். அவன் சிரம் கடலில் வீழ்கின்றது. அரக்கர் துயருற அமரர் மகிழ்வுறுகின்றனர். விரிவாகக் கூறப்பெற்ற கும்பகன்ன வீடணரின் உரையாட்டு முதல் நூலில் இல்லை. சாகுந்தறுவாயில் மூக்கு முதலியன இழந்து கும்பகன்னன் வீடணற்காகப் பரிந்து பேசும் நல்லுரையும், மூக்கிழந்த முகத்தைத் தேவர்கள் காண்பதன் முன்னர்க் கடலில் வீழ்த்தும்படி அவன் இராமபிரானை வேண்டியதும், முதனூலில் கூறப்படவில்லை.

---

# 16. மாயாசனகப் படலம்

இஃது, மாயையினுலுண்டாகிய சனகனைச் சீதைக்குக் காட்டியதைத் தெரிவிக்கும் படலம் என விரியும்.

வேறு

1567. அவ்வழிக் கருணன் செய்த பேரெழி
லாண்மை யெல்லாம்
செவ்வழி யுணர்வு தோன்றச் செப்பினஞ்
சிறுமை தீரா
வெவ்வழி மாயை யொன்று வேறிருந்
தெண்ணி வேட்கை
இவ்வழி யிலங்கை வேந்த னியற்றிய
தியம்ப லுற்றும்.

அ வழி - அந்தப் போர்க்களத்தில், செ வழி - நேர்மையான வழியிலே, கருணன் செய்த - கும்பகன்னன் ஆற்றிய, பேர் எழில் ஆண்மை எல்லாம் - பெருமைசான்ற அழகிய வீரச் செயல்களை எல்லாம், உணர்வு தோன்ற - கருத்திலே படுமாறு, செப்பினம் - (கீழ்ப்படலத்தில்) கூறினேம்; இவழி - இந்தப் படலத்தில், இலங்கை வேந்தன் - இலங்கையரசனுன இராவணன், வேட்கை - சீதையின்மேலிருந்த காதலினுலே, வெவழி - கொடிய வழியாகிய, சிறுமை தீரா - தீமையினின்று நீங்காத, ஒன்று மாயை - ஒப்பற்ற மாயையை, வேறு இருந்து எண்ணி - வேருகத்தனியே யிருந்து ஆலோசித்து, இயற்றியது - செய்ததை, இயம்பல் உற்றும் - பகரத் தொடங்கினேம்.

கருணன் ; கும்பகன்னன் ; நாமைகதேசம். இனி நிகழ்வன வஞ்ச நிகழ்ச்சிகள் ஆகலின் கும்பகன்னனுடைய போர்த்திறம், செவ்வழி யாண்மை எனப்பட்டது. உணர்வு தோன்றுதல்; நன்கு கருத்திற்பதிதல். இப்படலம் கம்பன் படைப்பு; முதனூலில் இல்லை. ஆயினும் அந்நூல் 64ஆம் சர்க்கத்தில் மகோதரன்

இராவணனை நோக்கித்தானும் சிலவீரரும் இராமபிரானை எதிர்க்கச் செல்வதாக விளம்பரம் செய்து, இராமபிரானுடைய பெயர் இட்டப் பெற்ற கூரிய அம்புகளால் தங்கள் உடலைப் புண்படுத்திக்கொண்டும், உதிரத்தைப் பூசிக்கொண்டும் இராம இலக்குவர்களைத் தாங்கள் விழுங்கிவிட்டதாகக் கூறுவதாகவும், அந்த அரிய செயலுக்குச் சன்மானம் அரக்கர்கோன் செய்யவே, அச்செய்தி கேட்டுச் சீதை வருந்தியதாகவும் கூறப்பட்டதன்றி, அரக்கனைச் சனகனாக மாற்றியது கூறப்படவில்லை. முனிவர் சீதா தேவியின் மனம் பேதிக்குமாறு இராமபிரானுடைய மாயச் சிரசைக் காட்டியது முன்னர்க் கூறப்பட்டது. இவற்றை அடிப்படையாகக் கொண்டே கம்பநாடர், இந்த மாயா சனகப் படலத்தைப் புகுத்தினர் என்க.

பா - ம். 1. போரெழில்.
2. உணர்ந்து.
3. மாயையாலே, மாயை செய்வேனென்றிருந்தெண்ணி.
4. உற்றேன். 1

## ஆலோசனை மண்டபத்துக்கு வந்த மகோதரனை நோக்கி இராவணன் சீதையை அடையும் உபாயங் கேட்டல்

1568 மாதிரங் கடந்த தோளான் மந்திர விருக்கை வந்த
மோதர னென்னு நாமத் தொருவனை முறையி னோக்கிச்
சீதையை யெய்தி யுள்ளஞ் சிறுமையிற் றிருஞ் செய்கை
யாதெனக் குணர்த்தி யின்றென் னின்னுயி ரீதி யென்றான்.

மாதிரம் கடந்த தோளான் - திக்குகள் அனைத்தையும் வென்ற புயவன்மை யுடையவனான இலங்காதிபன், மந்திர இருக்கை வந்த - ஆலோசனை மண்டபத்துக்கு வந்த, மோதரன் என்னும் நாமத்து ஒருவனை - மகோதரன் என்னும் பெயர் தரித்த ஓர் அரக்கனை, முறையின் நோக்கி - நேராகப் பார்த்து, '(நான்) சீதையை எய்தி - சீதையை அடைந்து, உள்ளம் சிறுமையில் திரும் செய்கை - என் மனத்துன்பத்தினின்றும் விடுதலை யடையும் செயல், யாது எனக்கு உணர்த்தி - இன்னது என எனக்கு அறிவித்து, இன்று-

இப்பொழுது, 'என் இன் உயிர் ஈதி - என்னுடைய இனிமையான உயிரைத்தருக' என்ருன் - என்று வேண்டினுன்.

மாதிரம் கடந்த தோளான் : உயர்வு நவிற்சியாக அவனுடைய பெருந்தோற்றத்தைக் குறித்தது எனினுமாம். மந்திர இருக்கை: அரசிருக்கை மண்டபம். மோதரன் - மகோதரன் என்ற வட சொற்றிரிபு ; பெருவயிறன் எனப் பொருள்படும். இவன் இராவண னுக்கு மிகவும் விருப்பமான ஓர் அமைச்சன்; சேனுதிபதியுமாவன். யுத்த. 35-39 ; 493, 903 ; 1244-1251. உரைக்குறிப்புக் காண்க. சிறுமை - துன்பம் ; 'சிறுமை பல செய்து சீரழிக்கும் சூது' (குறள். 934); என்னிலாரும் - எனக்கினியாரிலே (252 ; 1) என்று கூறப் படுவதால் 'என் இன்னுயிர்' என்ருன், (தொல்) ஈதி : 'ஈதா கொடு'; 'ஈயென்கிளவி யிழிந்தோன் கூற்றே' (தொல்). என்னும் சூத்திரங்களின்படி இராவணன் தனது பணியாளனிடம் ஈதி என்று கூறற்கில்லையெனினும், பரிவுமிகுதியால் அவ்வாறு சொல்லி வேண்டினன் என்க.

பி - ம். 1. வந்து, புக்கு.

3. உள்ளச், உள்ள ; சிறுமையை ; சிறுமைதான் ; வண்ணம்.

4. நீநியை ; உரைத்துநீயே. 2

### மகோதரன் கூறும் உபாயம்

1569. உணர்த்துவென் னின்றே நன்ருே ருபாயத்தி
னுறுதி மாயை
புணர்த்துவென் சீதை தானே புணர்வதோர்
வினையம் போற்றிக்
கணத்துவன் சனகன் றன்னைக் கட்டினென்
கொணர்ந்து காட்டின்
மனத்தொழில் புரியுமன்றே மருத்தனை
யுருவ மாற்றி.

'இன்றே - இப்பொழுதே, நன்று ஓர் உபாயத்தின் - நல்ல தொரு தந்திரத்தினுலே, உறுதி உணர்த்துவென் - உறுதி பயக் கும் ஓர் வழியைக் கூறுவேன் ; சீதை தானே புணர்வது ஓர் மாயை புணர்த்துவென் - சீதை தானுகவே (உன்னைக்) கூடுவதாகிய ஓர்

வஞ்சக வழியை (யூகித்துப்) புரிவேன்; வினையம் போற்றி - சூழ்ச்சியை ஆதரித்து, மருத்தனை கணத்து உருவம் மாற்றி - மருத்தன் என்னும் அரக்கனை ஓர் நொடிக்குள்ளாக (அரக்கன் வடிவொழித்துச் சனகனுடைய) உருவமாக மாறும்படி புரிந்து, வன் சனகன் தன்னை - அந்த வலிய சனகனை, கட்டினென் கொணர்ந்து காட்டின் - பிணித்துக்கொண்டு வந்து காட்டிடின், மணம் தொழில் அன்றே புரியும்-(அவனை அந்தப் பிணிப்பினின்று விடுவிக்குமாறு வேண்டிச் சீதை உன்னை) அன்றே திருமணம் புரிகுவள்'.

வினையம் - தந்திரம்; 'வினையமீதல்ல தில்லை' (ஆரணிய. 249); மாயையினால் உருமாறியவன் ஆதலின் 'வன்சனகன்' எனப் பட்டான். பரம ஞானியாகிய சனகனினின்று வேறுபடுத்தற்கு, அமைத்த அடைமொழியுமாம். கட்டினன்: கட்டி, முற்றெச்சம். அன்றே: ஈற்றசையுமாம். இங்குச் செவியாறலாக வழங்கும் ஓர் கதையும் உண்டு. இராவணன் வினவியபோது, மகோதரன் இலங் கேசனை இராமபிரான் போன்று உருவமாறிச் சீதைபாற் செல்லு மாறு சொல்லி, அவளை ஏமாற்றியணையுமாறு கூறினன் என்றும், அப்போது இராவணன் தான் முதன்முதல் மேற்கொண்டது அந்த உபாயம்தானென்றும், அது பலிக்கவில்லை என்றும், இராம பிரான் வேடம் புனைந்த அளவில், காணும் மகளிர் அனைவரும் தங்கையாகவும் தாயாகவுமே தனக்குப் புலப்பட்டார்கள் என்றும் கூறினான் என்ப. ஏகதார விரதன் ஆன இராமபிரான் வேடத்திற்கே அத்தகைய ஆற்றல் இருந்ததாக, இராவணனே குறிப்பிட்டது இங்கே காணத்தகும்.

பி - ம். 1. இன்று, அன்றே, நன்றென்று.
2. வினையம் போக்கிக், நோக்கி.
3. காட்டினன்.
4. முடியும். 5

### மகோதரனை மெச்சி, இராவணன் சீதை யிருக்குமிடம் போதல்

1570. எனவவ னுரைத்த லோடு மெழுந்துமார்
பிறுகப் புல்லி
அனையவன் றன்னைக் கொண்டாங் கனுகுதி
யன்ப வென்னுப்

புனைமலர்ச் சரளச் சோலை நோக்கின
னெழுந்து போனான்
வினைகளைக் கற்பின் வென்ற விளக்கினை
வெருவல் காண்பான்.

என அவன் உரைத்தலோடும் - என்று அந்த மகோதரன் மொழிந்த அளவில், எழுந்து - (இராவணன் தன் இருக்கையினின்றும்) எழுந்து, மார்பு இறுக புல்லி - (அந்த அரக்கனை) மார்புற வணைத்து, (அவனை நோக்கி) 'அன்ப - அன்பனே! அனையவன் தன்னைகொண்டு ஆங்கு அணுகுதி - அந்த மருத்தனை (மாயா சனகனாக மாற்றி) அந்தச் சீதையிருக்குமிடம் செல்வாயாக,' என்னா - என்று கூறி, வினைகளை கற்பின் வென்ற விளக்கினை - (விரோதிகளின்) வஞ்சனைச் செயல்களைத் தனது கற்பின் திறத்தினாலேயே வெற்றிகொண்ட தீபம் போன்றவளான சீதாதேவியை, வெருவல் காண்பான் - அச்சுறுத்தும் வண்ணம், மலர்புனை சரளம் சோலை - மலர்களால் அலங்கரிக்கப்பெற்ற இனிய அசோகவனத்தினை, நோக்கினன் எழுந்து போனான் - குறித்து எழுந்து சென்றான்.

தனக்குப்பிரியமான செயல்களைச் சொல்லினும் செய்யினும் ஒருவர்க்கு மகிழ்ச்சி எய்தும் ஆதலின் 'எழுந்து மார்பிறுகப் புல்லி' எனப்பட்டது; முடிவாகத் தனது சொற்கிணங்கி மானுருவம் கொள்ளஇயைந்த மாரீசனை, இலங்கேசன் புல்லியதும் இங்கேகாணத் தகும். 'என்றலு மெழுந்து புல்லி' (ஆரணிய. 757). ஆங்கு-அசோக வனம். சரளம்: இனிமை: 'வேரியஞ் சரளச் சோலை' (ஆரணிய. 716); தேனுகு சரளச் சோலை' (சுந்தர. 199); வினைகளைக் கற்பின் வென்ற விளக்கு; தவக்கோலத்தில் வந்து வஞ்சனையியற்ற வந்த இடத்தும், பின்னர், சுந்தரகாண்டத்துக் காட்சிப் படலத்தும், அடுத்து மாயாசனகப்படலத்தும், இராவணனை ஓர்துரும்பாக மதித்துக்கடுஞ்சொற்கள் கூறி, அவனுடன வாதாடி வென்றமை கொண்டு பிராட்டியின் கற்பின் திறம் காண்க. 'பொங்கெரிப் புனிதரீயும், அவியை நாய்வேட்டதென்ன வென்சொனாயரக்க வென்னா' (ஆரணிய 873); 'வெஞ்சரம் விரவாமுன்னம், உன்னுயிர்க் குறுதி நோக்கி யொளித்தியால் ஓடி என்றாள்' (ஆரணிய. 874); 'அறிவிலாதாய் சிரியவல்ல சொல்லித் தலைபத்தும் சிந்துவாயோ' (சுந்தர. 446); 'நயறிந் திலேயோ நீதி நெறியறிந் திலாத நீசா' (சுந்தர. 464). 'புலவர் கோமான், கைத்திருச் சரங்கள் உன்றன் மார்பிடைக் கலக்கற் பால'

(யுத்த. மாயாசனகப். 55) முதலியன கண்டுதெளிக. 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந், திண்மையுண்டாகப்பெறின்' (குறள். 54)-ம் இங்கு நோக்கத்தகும்.

பி - ம். 1. இசைத்தலோடும்; மார்பழந்தப்.
2. அன்பவென்று, என்றான்.
3. கனகச் சோலை, அரக்கன், அசோகச், தரளச், கானச்.
4. வினையினை; விளக்கினல்; நரகில் வீழ்வான். 4

## சீதையை இராவணன் கண்டு பேசுதல்

1571. பண்களாற் கிளவி செய்து பவளத்தா
லதர மாக்கிப்
பெண்களா ஞர்க்குள் நல்ல வுறுப்பெலாம்
பெருக்கி யீட்டி
யெண்களா லளவா மானக் குணந்தொகுத்
தியற்றி னுளைக்
கண்களா லரக்கன் கண்டா னவளையோர்
கலக்கங் காண்பான்.

கிளவி பண்களால் செய்து - சொற்களை இசைகொண்டு இயற்றுவித்தும், அதரம் பவளத்தால் ஆக்கி - உதடுகளைப் பவளம் கொண்டு பண்ணியும், பெண்கள் ஆனார்க்குள் நல்ல உறுப்பு எலாம் - பெண்பிறப்பெடுத்தவர்களிடம் (அமைந்த) சிறந்த அவயவங்களையெல்லாம், பெருக்கி ஈட்டி - அமையுமாறு ஒன்று கூட்டி, எண்களால் அளவா மானம் - எண்ணிக்கையால் அளக்க வியலாத பேரளவினவான, குணம் தொகுத்து இயற்றினுளை - குணங்களைக் கூட்டி இயற்றப்பெற்றவளான, அவளை - அந்தச் சீதாதேவியை, ஓர் கலக்கம் காண்பான் - கலங்கச் செய்து காணும் பொருட்டு, கண்களால் அரக்கன் கண்டான் - கண்களாலே இராவணன் சந்தித்தான்.

சீதாதேவியின் உருவமும் இனிய மொழியும் அழகுபெறச் சித்திரிக்கப் பெற்றன. பண்களால் கிளவி செய்து முதலிய அடிகட்கு (ஒப்பு); 'மின்வயின் மருங்குல் கொண்டாள் வேய்வயின் மென்றோள் கொண்டாள், பொன்வயின் மேனி கொண்டாள்'

(ஆரணிய. 620); 'ஆதரித் தமுதிற் கோரேய்த் தவையவ மமைக்குந் தன்மை யாதெனத் திகைக்கு மல்லால் மதனற்கு மெழுத வொண்ணுச் சீதை' (பால. மிதிலைக். 4); 'துப்பினுற் செய்த கையொடு' (சுந்தர. 337); 'தேவுதெண் கட லமிழ்துகொண் டனங்கவேள் செய்த ஓவியம்' (சுந்தர. 340); 'பளிதமும் பாலும் ஒழுகிய தேனுமா ரமுதும், குயிலினிற் குரலும் கிளியினின் மொழியும் குழலும் யாழும் குழைத்திழைத்து, மயிலியற் சாயல் வாணுத றனக்கு மலரயன் வகுத்ததென் மொழியாள்' (அரிச். பு); 'வடிவமை நூலிற் சொல்லும் வனப்பெலாம் அமைத்து வேதன், கடிமலர்ச் செங்கை வண்ணம் காட்டிய வுருவுகொல்லோ' (நைடத. நளன் தூது. 89); 'மடலவிழ் கமலப் புத்தேள் வடிவினை யமைத்து வெய்ய, தடமுலை யமைப்ப மாதி னுறுப்பலாற் றரமின் றென்று, விடையினுக் கமைத்த கூற்றை யெடுத்தெடுத் தமைத்த லாலோ, கொடியெனத் தேய்ந்து தேய்ந்து குறைந்தது மருங்குருனே' (நைடத. நளன் தூது. 95); 'பாலேறிப் பாய்ந்திடத் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண், டாலே யெருவிட முப்பழச் சாற்றி னமுதவயல், மேலே முளைத்த கரும்போ விம் மாதுக்கு மெய்யெங்குமே' (தனிப்பா.); பிராட்டியின் கூந்தல் வருணனையும் (சுந்தர. 778). இங்குக் காணத்தகும். கிளவிக்கு 'குழல் படைத் தியாழைச் செய்து குயிலொடு கிளியும் கூட்டி, மழலையும் பிறவும் தந்து வடித்தகைம் மலரின் மேலான், இழைபொரு மிடையி னுடை னின்சொற்க ளியையச் செய்தான்' (கிட்கிந்தா. 779)' கிட்கிந்தா. 778-ம் காணத்தகும். மானக்குணம் - பெருமை சான்ற பண்புகளுமாம். இயற்றினளை - இயற்றப்பட்டவளை. அத்தகைய பேரழகியான பிராட்டியை இருபது கண்கள் கொண்டு காணும் பேறுபெற்றான் என்பான் 'கண்களால்' என்றான். 'நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும், கொம்பினைக் காணும் தோறும் குரிசிற்கும் அன்னதேயாம்.' அவள் மனம் கலங்குமாறு இருபது கண்களாற் கண்டான் எனினுமாம்.

பி - ம். 1. பவனத்தால் தாமமாக்கி.
2. பெருகநீட்டி.
3. அளவில்.
4. கண்களாலாரக் கண்டான். 5

1572. மின்னெளிர் மகுட கோடி யிளவெயில் விரித்து வீசத்
துன்னிரு ளிரிந்து தோற்பச் சுடர்மணித் தோளிற்
[றோன்றும்
பொன்னரி மாலை நீல வரையின்வீ ழருவி பொற்ப
நன்னெடுங் களிமா லியானை நாணுற நடந்து வந்தான்.

மின் ஒளிர் மகுடம் கோடி - இராவணனுடைய ஒளி விளங்குகின்ற கிரீடங்களின் நுனியானது, இள வெயில் விரித்து வீச - காலை மாலை இளவெயிலைப் பரப்பி எரித்தலினால், துன் இருள் - அடர்ந்த இருட்டானது, தோற்று இரிய - தோற்று நிலைகுலையவும், சுடர் மணி தோளில் தோன்றும் - ஒளிவாய்ந்த அரதன ஆபரணங்களைப் புனைந்த புயத்தின் மேல் தோன்றும், பொன் அரிமாலை - பொன்னரிமாலை, நீல வரையின் வீழ் அருவி பொற்ப - நீல மலையினின்று இழிகின்ற நீரருவிபோன்று பொலியவும், நல் நெடு களி மால் யானை நாண் உற - நல்ல அங்க இலக்கணங்களாற் சிறந்த உயர்ந்த மதங்கொண்ட பெரியயானையானது இவன் நடையினைக் கண்டு) நாணுமாறு, நடந்து வந்தான் - நடந்து வந்தான்.

இள வெயில் படுகையில் நீரருவி பொன்னிறமாகக்காணப்படும் ஆதலின் 'வரையின் வீழருவிபொற்ப' எனப்பட்டது. பொன் அரிமாலை - மலராற் செய்தது போன்றே பொன்னாற் செய்த மாலை என்ப. இரிந்து தோற்ப - தோற்று இரிய என விகுதி பிரித்துக் கூட்டப்பெற்றது. 'மாலையருவி; மாலை வெள்ளருவி சூடி' (சீவக. 1232); 'இலங்கு மாலை வெள்ளருவிய' (சீவக. 2378); நல்யானை; சிறந்த உறுப்பிலக்கணங்கள் அமையப் பெற்ற யானை. யானையின் சிறப்புறுப் பிலக்கணங்களை, (வி. பாரதம். 16ஆம் போர் 7-10 என்ற செய்யுட்கள் கொண்டு காண்க. யானைநடைக்கு நாணுதல் 'நாகமு நாகமு நாண நடந்தான்' (பால. கார்முக. 32).

பி - ம். 1. வெயிலொளி, நெடுவெயில்; எரித்து, விரிந்து.
2. துரந்த தெய்வச், துரந்து தேயச், இரந்து பாரச்.
3. மலையின் விழ்; போர்ப்ப.
4. நாணுவ; சென்றான்.

**1573.** விளக்கொரு விளக்கந் தாங்கி மின்னனி கலாபம் சுற்றி
யிளைப்புறு மருங்கு னோவ முலைசுமந் தியங்கு மாபோல்
முளைப்பிறை நெற்றி வான மடந்தையர் முன்னும் பின்னும்
வளைத்தனர் வந்து சூழ வந்திகர் வாழ்த்த வந்தான்.

முளை பிறை - முளைக்கின்ற பிறைமதியை நிகர்த்த, நெற்றி - நெற்றியினையுடைய, வானம் மடந்தையர் - தேவமாதர், விளக்கு ஒரு விளக்கம் தாங்கி - விளக்கு ஒரு விளக்கினைத்தாங்கிக்கொண்டு, மின் அணி கலாபம் - மின்னுகின்ற அழகிய கலாபத்தை, சுற்றி - இடையிற் சுற்றி, இளைப்பு உறு மருங்குல் நோவ - இளைக்கல் உற்ற இடை வருந்தும்படி, முலை சுமந்து இயங்குமா போல் - முலையைத் தாங்கிக்கொண்டு உலவுவது போன்று, முன்னும் பின்னும் - தனக்கு முன்பும் புறத்தும்; வளைத்தனர் வந்து சூழ - வளைந்தவராய் வந்து சுற்றவும், வந்திகர் வாழ்த்த - மங்கல பாடகர் துதித்து ஏத்தவும், வந்தான் - வரலானான்.

மங்கையரை விளக்காகவும் அவ்விளக்குகள் விளக்கேந்திவந்த தாகவும் கூறப்பட்டது. 'வினைகளைக் கற்பின் வென்ற விளக்கு' (யுத்த. 1570); என முன்னர் வந்தது காண்க, 'வில்லி வாங்கிய சிலை யெனப் பொலிநுதல் விளக்கே' (அயோத்தி. சித்திரகூட 13); 'வீறு பஞ்சின்றி யமுதநெய் மாட்டிய விளக்கே' (அயோத்தி. சித்திரகூட. 15); என்பன இராமபிரான் கூற்று. விளக்கொரு விளக்கம் தாங்க என்பதற்குத் 'தூண்டா விளக்கு, பெண்ணுருவெடுத்தது போன்ற அரம்பையர்' என்பது பழையவுரை. அரவு: உவமவாகுபெயராய் இடையினைக் குறித்தது, இளைப்புறு மருங்குல் நோவ; 'வன முலை டொறைசுமந் திளைத்ததோ' (அரிச். பு.); வளைத்தனர்: முற்றெச்சம்; வந்திகர்; வாழ்த்துப் பாடுவோர்; சூதர் வந்திகர் என்ற பாகுபாடுகள் காண்க. இவர்களில் நின்றேத்துவாரும் இருந்தேத்துவாரும் எனப் பலர் உளர்; விளக்கம்: மகளிர் விளக்கமேந்தி அரசர் முன் வருகின்ற மரபும் உண்டு; 'நான நெய் விளக்க நாலிரு கோடி நங்கைய ரங்கை யாலெடுப்ப' (சுந்தர. 409).

பி - ம். 1. விளக்கைந்; மின்னணிந்தரவு சுற்ற; மின்னணியரவிற் சுற்றி.
2. பருங்கு; மலைசுமந்து; இயங்குமென்ன.
4. பரந்துசூழ; வனிதையர் வாழ்த்த.

1574. இட்டதோ ரிரண பீடத் தமரரை யிருக்கை நின்றும்
கட்டதோட் கானஞ் சுற்றக் கழலொன்று கவானிற் காண
வட்டவெண் கவிகை யோங்கச் சாமரை மருங்கு வீசத்
தொட்டதோர் சுரிகை யாள னிருந்தன னினைய
[சொன்னான்.

அமரரை இருக்கை நின்றும் கட்ட தோள் கானம் சுற்ற - தேவர்களை அவர்களுடைய இருப்பிடத்தினின்றும் ஒழித்ததோள்களின் தொகுதி சூழவும், கழல் ஒன்று கவானில் காண-ஒரு பாதம் துடையில் காணப்படவும், வட்டம் வெண்கவிகை ஓங்க - வட்ட வடிவமான ஒற்றை வெண்கொற்றக் குடை (தலை மிசை) பிடிக்கப் படவும், சாமரை மருங்கு வீச - வெண் சாமரங்கள் இருபக்கங்களிலும் வீசப்படவும், தொட்டது ஓர் சுரிகை ஆளன்-(இடையிற்) செருகிய ஒரு உடைவாளினை யுடையவனாய், (இராவணன்) இட்டது ஓர் இரணம் பீடத்து-அமைக்கப்பட்டிருந்த ஒரு பொன்னாலியன்ற ஆசனத்தில், இருந்தனன் - வீற்றிருந்து, இனைய சொன்னான்-இவ் வார்த்தைகளை மொழியலானான்.

இரணம்: ஹிரணம் என்ற வடசொல்லின் தமிழாக்கம், கட்டல் - ஒழித்தல்; 'களைகட்டதனோடு நேர்' (குறள். 550); தோள் மிகுதியைக் கானம் என்றார்; 'தாமரைக்காடு' என்றாற்போல என்க. கழல் கருவியாகுபெயராகப் பாதத்தினைச் சுட்டியது. கவான் - துடை; 'கவானரசன்னமும் பெடையும்' (கிட்கிந்தா. 4); 'கரும்பையுங் கடந்த சொல்லாள் கவாற்கிது கருது கண்டாய்' (கிட்கிந்தா. 755); 'கழுமிய வுவகையிற் கவாற் கொண்டிருந்து' (மணி. பரி. 27) : வட்ட வெண் கவிகை-அரசச் சின்னமாகிய குடை; 'குழைக்கின்ற கவரியின்றிக் கொற்ற வெண் குடையுமின்றி' (நகர நீ. 2); என்றது காண்க. கவித்தல் காரணமாகக் கவிகை எனப் பெற்றது. சாமரை - கவரி. இருந்தனன் முற்றெச்சம். தொட்டதோர் சுரிகையாளன்; உடைவாளினைக் கைபபற்றியவன் எனினுமாம். சுரிகை - உடைவாள். 'கோலகணை நேமி குலிசஞ் சுரிகை'

(சுந்தர. 164); 'சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடை' (பெரும்பாண். 73).

பி - ம். 1. அரிணை; அமரர்தமிருக்கை வென்று.

2. கழலோன்ரேர்; காலிற் காண, காலிற்ரேன்ற.

3. வட்டவோன்; ஏந்த.

4. தொட்டவன்; சுரிகைவாளன், சுரிகைவாளி; இருந்தவன்; சொல்வான். 8

1575. என்றுதா னடிய னேனுக் கிரங்குவ திந்து வென்பான்
என்றுதா னிரவி யோடும் வேற்றுமை தெரிவ தென்பால்
என்றுதா னனங்க வாளிக் கிலக்கிலா திருக்க லாவ'
தென்றுதா னுற்ற தெல்லா மியம்புவா னெடுத்துக்
[கொண்டான்.

'அடியனேனுக்கு - அடியேனுகிய என் பொருட்டு, இரங்குவது என்றுதான் - (நீர் உள்ளத்தில்) பரிவுகொள்வது என்றைக்கோ? என்பால் - என்னிடத்து, இரவியோடும் இந்து என்பான் வேற்றுமை தெரிவது என்று தான் - என்மாட்டு (வெவ்விய) சூரியனுடனே (தண்ணிய) சந்திரன் வேறுபாடு அறியப்படுவது என்றைக்கோ? அனங்க வாளிக்கு இலக்கு இலாது இருக்கல் ஆவது என்றுதான் - (நான்) மாரன் வாளிகட்கு இலக்கு ஆகாமல் இருக்க இயல்வது என்றுதானே?' என்று - என்று, தான் உற்றது எல்லாம் இயம்புவான் எடுத்து கொண்டான் - தான் அடைந்துள்ள துன்பங்களனைத்தையும் சொல்லுமாறு தொடங்கினன் (இராவணன்).

ரவி: வடசொல். அது ரவ்விற்கம்முதலாமுக்குறிலும் என்றபடி இகரம் பெற்றுவந்தது. அனங்கன் - ந அங்கன் எனப்பிரியும் வடசொல். உருவிலி என்பது தமிழ்; இலக்கு - எய்யுங்குறி. 'இலக்குவனெனும் பெயருனக் கியைவதே யென்ன, இலக்குவன் கணைக் காக்குவன்' (யுத்த. பிரமாத்திர. 64); இலக்கு என்ற சொல் அம்சாரியை பெற்று இலக்கம் எனவும் வரும்; 'இலக்கமுடம்பிடும்பைக் கென்று' (குறள். 627); இயம்புவான்; வானீற்று வினையெச்சம். காமம் எவ்வகைப்பட்ட பெருமையனையும் இழிநிலையெய்துமாறு செய்யும் என்ற உண்மையை, வணங்காமுடியனை

இராவணனின் இச்செயல் கொண்டுணர்க. 'அறம்புகழ் கேண்மை பெருமையிந்நான்கும், பிறன் தாரம் நச்சுவார்ச் சேரா' (நாலடி. 82); சுந்தரகாண்டம் காட்சிப் படலத்து இராவணன் சீதாதேவி முன்பு தருக்கிப்பேசுவதும், இங்குத் தருக்கவிந்து பேசுவதும் ஒப்பிட்டு அறிக. தான்என மூன்றடிகளிலும் வருவது அசை. உற்ற தெல்லாம் ; ஒருமைப்பன்மை மயக்கம்.

பி - ம். 2. தெரிப்பது ; ஒழிவதென்பான், தெரியாதென்பால்.

4. பட்டதெல்லாம் ; எழுந்து. 8

1576 வஞ்சனே னெனக்கு நானே மாதரார் வடிவு கொண்ட
நஞ்சுதோ யமுத முண்பா னச்சினே னுளுந் தேய்ந்த
நெஞ்சுநேர்ந் தும்மை நாயேன் நினைப்புவிட் டாவி நீக்க
வஞ்சினே னடிய னேனு மடைக்கல மமுதின் வந்தீர்.

'வஞ்சனேன் - வஞ்சகனாகிய நான், எனக்கு நானே - என் பொருட்டு நானாகவே, மாதரார் வடிவுகொண்ட-பெண் உருவேற்ற, நஞ்சுதோய் அமுதம் உண்பான் நச்சினேன்-விடம் கலந்த அமுதத் தினையுட்கொள்ள விழைந்தேன் ; நாளும் தேய்ந்த - தினந்தோறும் மெலிந்து வரும், நெஞ்சு நேர்ந்து - மனமார, நாயேன் - அடியேன், உம்மை நினைப்புவிட்டு ஆவிநீக்க - உம்மை நினைப்பதை விடுத்து, உயிர் விடுதற்கு, அஞ்சினேன் - பயந்தேன் ; அமுதின் வந்தீர் - அமுதத்துடன் தோன்றினீர் ; அடியனேன் உம் அடைக்கலம் - அடியவனான நான் உனது அடைக்கலப் பொருள் ஆவேன்.

அடைக்கலம் புக்கவன் உயிரைப் புரத்தல் அடைக்கலம் புகப்பெற்றவர் செயல் ஆகலின், 'அடியனேன் நின் அடைக்கலம்' என்றான். மாதரார் வடிவு கொண்ட நஞ்சு' இங்கு அறந்திறம்பு மென் றையன் அயோத்தியிற் பிறந்த பின்பும் பிரிவிலளாய்ப் பூவினை விடுத்தரசர் பொன்மனையில்' 'இராவணனை ஒழித்தற்கே மகளுருவம் கொண்டு வந்தவள் பிராட்டி என்ற குறிப்பும் காண லாம். நஞ்சு : 'வெவ்விடத்தை யமுதென வேண்டுவான்'. அமுதின் வந்தீர் : 'அமிழ்தின் வந்த தேவியை' (கிட்கிந்தா. 370); 'ஆயிடையமுதின் வந்த வருந்ததிக் கற்பின்' (ஆரணிய. 284);

'உவரிவாயன்றிப் பாற்கடலுதவிய வமுதே' (அயோத்தி. சித்திரகூட 5); இனி 'அமுதின் வந்தீர் என்று இங்கு இராவணன் விளித்தது சீதாதேவியைத் திருமகளாகக் கருதியன்று என்பர் சிலர். பிராட்டியைத் திருமகள் அவதாரமாகவே கூறப்பெற்ற இடங்கள் இக்காவியத்திற் பல. 'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்'. (பால. கோலம். 35): 'அல்லி மலர்புல்லும், மங்கையிவளாமென வசிட்டன மகிழ்வுற்றான்' (பால. கோலம். 32); 'மையறு மலரினீங்கி யான் செய் மாதவத்தின் வந்து, செய்யவளிருந்தாள் என்று' (பால. மிதிலைக். 1): என்ற இடங்களைக் காண்க. வசிட்டர் முதலியோர் பிராட்டி திருமகள் அவதாரம் என்று துணிந்தே கூறினர் ஆவர். இராவணனும் தனது உள்ளுடை யுணர்ச்சியால் அவ்வாறு கூறியிருத்தலும் கூடும்.' பின்னர் இந்திரசித்து, பிராட்டியை விட்டுவிடுமாறு இராவணனிடம் கூறியபோது, இலங்காதிபன், 'என்னையே நோக்கி யானிந் நெடும்பகை தேடிக்கொண்டேன்' (யுத்த. இந்திரசித்து. 8); 'என்று மொழிந்தது இங்குக் கருதத்தகும். 'என்னை நோக்கி' என்றும் 'நெடும்பகை' என்றும் வந்துள்ளமை காண்க. நெடும்பகை - நெடுங்காலமாகத் தொடர்ந்துவரும் பகை; திருவிக்கிரமனாக விசுவரூபம்கொண்டு நீண்ட திருமாலாகிய பகை எனினுமாம். 'வஞ்சனேன் எனக்கு நானே' என்ற இச்செய்யுட்கண் உள்ள தொடரும் குறிக்கொள்ளத்தகும். வைகுண்டத்தில் ஐயன் என்ற வாயில் காவலனாக இருந்து முனிவர் சாபத்தால் மூன்று பிறப்புக்களில் பகைவனாக ஆகி, மீட்டும் உரிய பதவிக்கு வருமாறு, திருமாலால் இராவணன பணிக்கப்பட்ட செய்தியும் அறிக. மற்றும், திருமகள் என்றறிந்தும் சீதாதேவியைக் காதலித்திருத்தல் கூடுமோ எனின், அக்காதல் அவனுடைய இராசத குணத்தினாலும், பின் நிகழவேண்டிய நிகழ்ச்சிகளின் பொருட்டும் நிகழ்ந்ததென்க. பிராட்டியை இவன் கவர்ந்து வந்ததே திருமால் இவனைச சங்கரிக்கும் பொருட்டுச் செய்வித்த செயல் என்றோர்க. 'தியமந்தரை யிவ்வுரை செப்பலும் தேவி, தூய வுள்ளமும் திரிந்தது சூழ்ச்சியி னிடையோர், மாயையும் மவர்பெற்ற நல்வர முண்மையாலும், ஆய வந்தண ரியற்றிய வருந்தவத் தாலும்' (அயோத்தி. மந்தரை. 77); 'அரக்கர் பாவமு மல்லவரியற்றிய வறமும், தூரக்க நல்லறம் துறந்தனள் தூமொழி மடமான்' (அயோத்தி. மந்தரை. 78) எனக் கைகேயிதன் தூய

உள்ளம் திரிந்ததன் காரணமும், 'தேவர்செய் தவத்தினுற் செம்ம லேகினன்' (ஆரணிய. 825) எனக் காவல் செய்வதைத் தவிர்ந்து பிராட்டியை இலக்குவன் தணந்து சென்றதன் காரணமும் இங்கு மனங்கொள்ளத்தக்கவை. மற்றும், மாலியவான் கும்ப கன்னன் என்ற இவர்களின் அறிவுரையாலும், சீதாதேவி திருமகளே என்று பேரரக்கன் உணர்ந்திருத்தலும் கூடும்; இவற் றுடன், 'காந்தை யருக் கணியனைய சானகியார் பேரழகு மவர்தங் கற்பும், ஏந்துபுயத் திராவணனுர் காதலுமச் சூர்ப்பணகை யிழந்த மூக்கும், வேந்தர்பிரான் தயரதனுர் பணியினல் வெங்கானில் விரதம்பூண்டு, போந்ததுவும் கடைமுறையே புரந்தரனுர் பெருந் தவமாய்ப் போயிற்றம்மா' (யுத்த. இராவணன்வதை. 241) என்ற செய்யுளையும் கூட்டி உய்த்துணர்க. மாதர்: அர் - அசை; ஆர் - மரியாதைப்பன்மை.

பி - ம். 1. வடிவம்.
2. தோய்ந்த நாளும்.
3. நெஞ்சில்; நேர்ந்துண்மையாக, ஓர்ந்தும்மை நாயேன், நேரான உம்மை, நும்மை, நெஞ்சுநோந் நும்மை யிங்ஙன். 10

1577. தோற்பித்தீர் மதிக்கு மேனி சுடுவித்தீர் தென்றல் தூற்ற
வேர்ப்பித்தீர் வயிரத் தோளை மெலிவித்தீர் வேனில் வேளை
ஆர்ப்பித்தீ ரென்னை யின்ன லறிவித்தீ ரமர ரச்சந்
தீர்ப்பித்தீ ரின்ன மென்னென் செய்வித்துத் தீர்தி ரம்மா.

'தோற்பித்திர் - (யார்க்கும் தோலாத என்னை நுமக்குத்) தோற்குமாறு செய்தீர்; மதிக்கு மேனி சுடுவித்தீர் - சந்திரிகை யால் என் மேனி கொதிக்குமாறு செய்திட்டீர்; தென்றல் தூற்ற வேர்ப்பித்தீர் - தென்றல் காற்றானது நீர்த்துளிகளுடன் வீச (அதனல் வெப்புற்ற உடலை) வேர்க்குமாறு புரிந்தீர்; வயிரம் தோளை மெலிவித்தீர்-வயிரம்போன்று வலிய (என்)தோள்களைமெலி வுறச் செய்தீர்; வேனில் வேளை ஆர்ப்பித்தீர்-வசந்தகாலத்துக்குரிய மன்மதனை ஆர்ப்பரவம் செய்யுமாறு செய்தீர்; என்னை இன்னல் அறிவித்தீர் - (இதுகாறும் துன்பம் என்பது இன்னது என்று அறியாதிருந்த) என்னை துன்பம் உணரும்படி புரிந்தீர்; அமரர் அச்சம் தீர்ப்பித்தீர் - தேவர்களின் பயத்தை ஒழித்துவிட்டீர்;

இன்னம் - இன்னமும், என் என் செய்வித்து - என்ன என்ன (கொடுமைகளைப்) புரிவித்து, தீர்திர் - (உமது மனவயிரம்) தீர்த்துக்கொள்ளப்போகின்றிரோ. அம்மா - வியப்பிடைச்சொல்.

யாவையும் பொருட்படுத்தாத தன்னை, 'நான் உன் அடைக்கலம்' என்னுமாறு செய்வித்ததனால், 'தோற்பித்தீர்' என்றும், காமத்தை மேலும் மேலும் வளர்ப்பவன் ஆகலின், 'மதிக்கு மேனி சுடுவித்தீர்' என்றும், குளிர் தென்றலும் காமுகனுக்கு வெம்மை விளைக்குமாகலின், 'தென்றல் தூற்ற வேர்ப்பித்தீர்' என்றும், திண்ணிய தோள்களும் மெலியச் செய்ததால், 'வயிரத்தோளை மெலிவித்தீர்' என்றும், உருவிலியான மாரன் தன்னுடைய அவச நிலைகண்டு மலரம்பினை ஏவுமாறு செய்துவிட்டமையின் வேளை ஆர்ப்பித்தீர் என்றும் கூறினன் இராவணன். காமத்தாற் கன்றினர்க்கு: 'முத்துங் களபமும் தண்பனி நீரும் முயங்குமலர்த், தொத்துங் குளிரியும் தூய்மலப்பாயலும் சூழ்ந்துபுறங், கத்துங் கடலுங் கதலியு மாலியுங் கங்குலுமிப், பத்தும் பெரும் பகை, (இரத்தினச் சுருக்கம். 3). 'ஆர்கலி யழுவந்தந்த வமிழ்தென வொருவ ராவி, தீரினு முதவற் கொத்த தென்றல்' (ஆரணிய. 716) இங்கு இவ்வரக்கர்களது உடற்கண் வேர் எழச்செய்தது சமய பேதத்தால் என்க. 'தென்றலைப் பகையாச் செய்த சீதையைத் தருதி' (ஆரணிய. 757) என்று முன்னர் இராவணன் மாரீசனிடம் கூறியது காண்க. 'மன்மதன் வாளிதூவி நலிவதோர் வலத்த ஞன், வன்மையை மாற்று மாற்றல் காமத்தே வதிந்த தன்றே' (ஆரணிய. 646) என்ற கவிக்கூற்று இங்கு நோக்கத்தகும். 'மாரன், வாளிபோல மல்லிகைத், தென்றல்வந் தெதிர்த்தபோது சீறுவானு மாயினன்' (ஆரணிய. 647); 'தண்மதி யுதித்த தோற்றம், அரா வணைத் துயிலு மண்ணல் காலமோர்ந்தற்ற நோக்கி, யிராவண னுயிர்மே லுய்த்த திகிரியு மென்னலான' (ஆரணிய. 661); 'நிலாச்சுடர் பனிபென் கற்றை நெரிவுறு புருவச்செங்க, ணரக்கற்கு நெருப்பி னுப்பண், உருகிய வெள்ளி யள்ளி வீசினு லொத்தது' (ஆரணிய. 662). தோற்பித்தீர்; (ஒப்பு): 'திருமகள் செவ்விகேளா, நன்னலந் தொலைக்துசோரு மரக்கனை நாளும் தோலாத், துன்னல ஞெருவன் பெற்ற புகழெனச் சுட்டது' (ஆரணிய. 663). என்னை யின்னல் அறிவித்தீர்: 'அன்னமும் துயர்க்கடல் அடிவைத்தா

ளரோ' (அயோத்தி. கிளைகண்டு. 1928); 'அழக்கண்டு மறிந்திலா தாள்' (யுத்த. 1928).

பி - ம். 1. தூர்த்த.
2. தோள்கள்.
4. இன்னுமென்ன ; நீர்த்திர், நீர்நிமின்னே. 11

1578. பெண்ணெலா நீரே யாக்கிப் பேரெலா முமதே யாக்கிக்
கண்ணெலா நுங்க ணுக்கிக் காமவே ளென்னு நாமத்
தண்ணலெய் வானு மாக்கி யைங்கணைக் கரியத் தக்க
புண்ணெலா மெனக்கே யாக்கி விபரீதம் புணர்த்து
[விட்டீர்.

'பெண் எலாம் நீரே ஆக்கி-(எனக்கு விருப்பமான) மகளிர் எல்லாம் நீர் ஒருவரேயாக்கியும், பேர் எலாம் உமதே ஆக்கி - நான் விழைந்தழைக்கின்ற பெயர்கள் அனைத்தும் உம்முடைய பெயராகச்செய்தும், கண் எலாம் நும் கண் ஆக்கி-(எனது) இருபது விழிகளும் உம்மையே நோக்குமாறு செய்தும், காமம் வேள் என்னும் நாமத்து அண்ணல் - காமவேள் என்னும் பேர் கொண்ட மன்மதனை, எய்வானும் ஆக்கி-(என்மீது) மலர் அம்பு களைத் தொடுப்பவனாக்கியும், (அந்த மாரன்) ஐ கணைக்கு அரிய தக்க புண் எலாம்-ஐந்து சரங்களாலே அறுக்கத்தக்க புண் எலாம், எனக்கே ஆக்கி-என்னிடமே பொருந்துமாறுசெய்தும், விபரீதம் புணர்த்து விட்டீர்-பிரதிகூலமான அவசநிலையை ஆக்கிவிட்டீர்.

பெண்ணெலாம் நீரே யாக்கி ; (ஒப்பு): 'பூவைசானகி யுருவொடும் ஒருமுகம் பொருந்த' (யுத்த. 1092); 'ஏக நாயகன் தேவியை யெதிர்ந்ததற் பின்னை, மாகர் வாழ்விட முதலென நான்முகன் வைகும், நாகர் வாழ்விட மீறென நளிர்கடல் வைகும், தோகை மாதர்கண் மைந்தரிற் றேன்றினர் சுற்ற' (சுந்தர. 1087); 'காடும் செடியு மவளாகத் தோன்றுமென் கண்களுக்கே' (தனிப்பா.). காமவேள் : இருபெயரொட்டு. சிற்றிடைச் சீதையென்னும் நாமமும் சிந்தை தானும், உற்றுடன் ஒன்றாய் நின்றால் ஒன்றை விட்டொன்றை யுன்ன, மற்றொரு மனமும் உண்டோ மறக்கலாம் வகை மற்றியாதோ' (ஆரணிய. 637) என்றபடி எவரை யழைக்க

எண்ணினும் சீதையின் பெயரே தன் வாயில் வருகின்றது என்பது 'பேரெலாம் உமதே ஆக்கி' என்பதன் குறிப்பு. ஐங் கணை : அரவிந்தம், மாம்பூ, அசோகு, முல்லை, நீலம் என்பன,

பி - ம். 1. பெயரெலாம் ; நுமவே.

3. எப்பவனும் ; ஐங்கணை.

4. எமக்கே, எனதே ; புணர்ந்தி, புணைந்து. 12

1579. ஈசனே முதலா மற்றை மானிட ரிறுதி யாரும்
கூசமூன் றுலகுங் காக்குங் கொற்றத்தேன் வீரக் கோட்டி
பேசுவா ரொருவற் காவி தோற்றிலென் பெண்பால் வைத்த
ஆசைநோய் கொன்ற் தென்று லாண்மைமா சுண்
[ணுதோ தான்.

'ஈசனே முதலாம் - சிவபிரான் ஆதியாக, மற்றை மானிடர் இறுதி - வேருகக் கூறப்படும் மனிதர் வரையில் உள்ள, யாரும் - அனைவரும், கூச - பயங் கொள்ளுமாறு, மூன்று உலகும் காக்கும் கொற்றத்தேன் - மூன்று புவனங்களையும் புரக்கும் வெற்றி வீரனுகிய யான், வீரம் கோட்டி - வீரருடைய வரிசைக் கண், பேசுவார் - சிறப்பித்துப் பேசப்படுபவர், ஒருவற்கு ஆவி தோற்றிலென் - ஒருவர்க்கு உயிர் தோற்றேனில்லை ; (அத்தகைய என்னை) பெண்பால் வைத்த ஆசை நோய் கொன்றது என்ருல்-ஒரு பெண் மேல் கொண்ட காதற்பிணி கொன்றது எனின், ஆண்மை மாசு உண்ணுதோ - (என்னுடைய) வீரப்பான்மை களங்கம் எய் தாதோ ? ஓ : வினு : எதிர்மறைப் பொருள். தான் : அசை.

ஈசன்: அஷ்டைச்வர்யங்கள் உள்ளவனுன சிவபெருமான்;'ஈசற்கு யான் வைத்த வன்பினகன்று' (திருக்கோ. 109); ஈசனுண்டிருந்த பேரிலங்கு மால்வரை' (ஆரணிய. 848); கூசுதல்: கூசிக் கூசி யினையன கூறுவான்' (சுந்தர. 431) கோட்டி - வரிசை: குழுவு மாம்; 'புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி' (நாலடி. 155): 'கோட்டியுள் மங்கை குவிமுலை நோக்குவான் ஒட்டை மறவ னுரமிலி' கோட்டி - ஒருவரோடு சேர்ந்திருக்கும் இடம்' என்பது சிவக சிந்தாமணி 1035 உரைக் குறிப்பு. 'வேந்தனிருந்த வந்தக் கோட்டியுள்' (பெருங். 1 : 54 : 91 - 92) : பேசுவார் - பேசப்படுவார். 'ஆசைநோய் கொல்லுதல்' 'ஆசையா லழிந்து வெந்தா னநங்

கனவ் வுருவமம்மா' (ஆரணிய. 624); ஆசை அல்லது காதலை நோயென்பது: குறள். 1102: 'காம நோய்போல (குறள். 1159); 'காம நோய் செய்த வென்கண்' (குறள். 1175) காதல் நோயினல் நான் இறந்துபடாவண்ணம் காத்தருள வேண்டும் என்பது குறிப்பு இறுதி யிரண்டடிகட்கு: ஒண்ணுதற் கோஒ வுடைந் ததே ஞாட்பினுள், நண்ணாரு முட்குமென்பீடு (குறள். 1088).

பி-ம். 1. முதலினோர்கள்; இறுதியாகக்.

2. உலகுங்காத்த, கொண்ட; தோற்றத்தென், கொற்றந்தோள், கொற்றத்தென்.

3. ஒருவர்க்காக்கி, ஒருவர்க்காண்மை.

4. நோய் கொண்டேன்; என்று; மாநுறுதன்றே. 13

1580. நோயினை நுகர வேயு நுணங்கிநின் றுணங்கு மாவி
நாயுயி ராகு மன்றே நாள்பல கழிந்த காலைப்
பாயிர முணர்ந்த நூலோர் காமத்துப் பகுத்த பத்தி
யாயிர மல்ல பொன்னே வையிரண் டென்பர் பொய்யே.

'பொன்னே; திருமகள் போன்றவளே! 'நுணங்கி நின்று உணங்கும் ஆவி - நுணுகி நின்று வாடுகின்ற (என்) உயிரானது, நோயினை நுகரவேயும் - காம நோயினைத் துய்த்திருக்கும்போதும், நாள் பல கழிந்த காலை - (இங்ஙனமே) பன்னாள் கழிந்து இறந்த காலத்து, நாய் உயிர் ஆகும் அன்றே - நாய்ப்பிறவி யல்லவோ எனக்குக் கிடைக்கும்; பாயிரம் உணர்ந்த நூலோர் - முறையாக ஆதியோடந்தமாக ஆராய்ந்து தெளிந்த காம சாத்திர அறிஞர், காமத்து பகுத்த பத்தி - காமத்திலே அமைத்துக் கூறிய (அவத்தையின்) வரிசை, பொய்யே - பொய்யாக, ஐயிரண்டு என்பர் - பத்து என்று பகர்வர்; ஆயிரம் அல்ல - அவை ஆயிரம் என்றும் சொல்வதற்கில்லை, (அந்த எண்ணிக்கையும் கடந் துள்ளன).

அறிஞர் காம அவத்தை பத்து என்பர். ஆயினும் தான் படும் அவத்தையைக் கருதுங்கால் அந்த அவத்தை ஆயிரத்துக்கு மேலும் உள்ளன என்று தெரிகின்றது. இவ்வளவு அவத்தையில்

தான் இறந்துபடக் கூடுமாதலின், அவ்வாறு நிகழாமல் காத்தருள வேண்டுகின்றான் இராவணன்; இங்குக் கூறப்பட்ட அவத்தை இறுதியவத்தையான சாக்காடெனக. அவத்தைகள் பத்தாவன; 'வேட்கை யொருதலை யுள்ளுதல் மெலிதல், ஆக்கம்செப்பல் நாணு வரை யிறத்தல், நோக்குவவெல்லா மவையே போறல், மறத்தல் மயக்கம் சாக்காடு'; தொல். களவி: 9); வடமொழியிலும் இந்தப் பத்து அவத்தைகள் கூறப்பெற்றுள்ளன. அணி நூலோர் இவ் வவத்தை பன்னிரண்டு என்பர். இவ்வவத்தையின் இலக்கணங் களைத் தொல்காப்பியம், நம்பியகப் பொருள், இலக்கண விளக்கம் முதலிய நூல்கள்கொண்டுணர்க. பத்தி: வரிசை. ஐயிரண்டு என்பர் (அது) பொய்யே எனப்பொருள் கோடலுமாம்.

பி - ம். 1. நோயிடை; நச்பி; நாளும்.

2. கழிந்த.

3. உணர்ந்து, முதல, முதலா; பதித்த பத்தி.

4. அல்லவோநான்; அல்ல போன, போதா. 14

1581. அறந்தரும் செல்வ மன்னீ ரமுதினு மினியீ ரென்னைப்
பிறந்தில னுக்க வந்தீர் பேரெழின் மானங் கொல்ல
மறந்தன பெரிய போன வருமெனு மருந்து தன்னால்
இறந்திறந் துய்கின் றேன்யான் யாரிது தெரியு மீட்டார்.

'அறம்தரும் செல்வம் அன்னீர் - தருமநெறியாற் கிடைத்த செல்வம் போன்றவரே! அமுதினும் இனியீர் - அமுதத்தினைக் காட்டிலும் இனிமை வாய்ந்தவரே! என்னை - (என்பால் அநுதாப மின்மையால்) என்னை, பிறந்திலன் ஆக்க வந்தீர் - பிறவாத வனாகச் செய்ய வந்தீர்; பேர் எழில் மானம் கொல்ல - (உம் முடைய) பேரழகானது (எனது) மானத்தைக் கெடுக்க, பெரிய மறந்தன போன - (யான்செய்த) பெருஞ்செயல்கள் மறக்கப்பட்டுக் கழிந்தன; யான் இறந்து இறந்து - (உம்பால் வைத்த பெருங் காதலினால்) நான் செத்துச் செத்து; (மற்றும்) வரும் எனும் மருந்து தன்னால் உய்கின்றேன் - உனது அனுதாபம் என்பால் நிகழும் என்ற அமுதம்போன்ற நினைவினால் பிழைத்தவன் ஆகின்றேன்; இது தெரியும் ஈட்டார் யார் - இந்த என் தன்மையை அறியக்கூடிய ஆற்றலுடையவர் (உன்னையன்றி) எவருள்ளனர்?

நிலே பேறுள்ளதான பயன் தருவதாதலின் 'அறம் தரும் செல்வம் அன்னீர்' என்றான். பிரிந்த உயிரையும் மீட்கும் ஆற்றல் அவள்பாலுண்டென்று புகழ்வான் 'அமுதினி மினியீர்' என்றான். பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை, தன்னோய்க்குத் தானே மருந்து (குறள்: 1102); என்றது காண்க. சீதையைக் கைப்பற்றாத நாட்கள் பிறவா நாளாகும் என்னும் கருத்தால் 'பிறந்திலன் ஆக்க வந்தீர்' என்றான். 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' (தேவா. 12 : 1). சீதையின் பேர் எழிலே தனது கௌரவத்தின் குலைவுக்கு ஏது என்பான். 'பேர் எழில் மானம் கொல்லப் பெரிய மறந்தன போன என்றான், 'ஒன்னாரு முட்கும் அவர் பீடு, ஒண்ணுதற் குடைந்ததாகலின்; இனி மூன்றாம் அடியில் 'வரம் எனும் மருந்து' என்ற பாடம் கொண்டு, 'எக்கோடியெவராலும் வெலப் படானெனக் கொடுத்த வரம்' என்னும் மருந்தினால் என்றும் கூறுவர். பெரிய: குறிப்பு வினையாலணையும் பெயர்; இனி, 'என்னுடைய மானமானது என்னைக் கொல்ல, நான் உன்னை மறந்தது போலப் போய் இறந்த உயிரானது, பிழைப்பிக்கத்தக்க சஞ்சீவி மருந்தான உன்னால். எப்போதும் இறந்தும் பிழைத்தும் வருகின்ற என்னுடைய அருமையை, இங்கே அறியத்தக்கவர்கள் யாரிருக்கின்றார்கள்' என்பது உரைநடைக்காரர் வரைவது.

பா-ம். 2. பேரெழிற் காமம், எழிற் காமன்.

3. மறந்தனன்; என்னைத் தானே. உணர்வு நும்மை, பெரியோர் வந்து, பெரியோர் சொன்ன, போயபோன, பெரிய பொன்னே; வரமெனும்.

4. உய்கின்றேனல், உய்கின்றேனே; யாரது. 15

1582. அந்தர முணரின் மேனா ளகலிகை யென்பாள் காதல்
இந்திர னுணர்த்த நல்கி யெய்தின ளிழுக்குற் றாளோ
மந்திர மில்லை வேறோர் மருந்தில்லை மையல் நோய்க்குச்
சுந்தரக் குமுதச் செவ்வா யமுதலா லமுதச் சொல்லீர்.

'அமுதம் சொல்லீர் - அமுதம் ஒத்த மொழியினை உடையவரே! அந்தரம் உணரின் - நடுவு நிலைமையுடன் ஒத்து நோக்கினால், மேல் நாள் - முன்னாளில், அகலிகை என்பாள் - அகலிகை என்பவள், காதல் - தனது காதலை, இந்திரன் உணர்த்த நல்கி -

இந்திரன் தெரிவிக்க இணங்கி, எய்தினள் - அவனைப் பொருந்தினள்; (அதனால்) இழுக்கு உற்றாளோ - குற்றம் எய்தினளோ? மையல் நோய்க்கு - என்னுடைய (காம) மயக்கத்தாலான இந்தப் பிணிக்கு, சுந்தரம் குமுதம் செவ்வாய் - அழகிய ஆம்பல் மலர் போன்ற சிவந்த வாயினின்று பெருகும் (வாலெயிற்றுநீராகிய), அமுது அலால் - அமுதமன்றி, வேறு ஓர் மருந்து இல்லை - பிறிது ஒரு மருந்தில்லை; மந்திரம் இல்லை - அதனை மாற்றும் மந்திரமுமில்லை.

அகலிகை வரலாற்றின் விரிவினைப் பாலகாண்டம் அகலிகைப் படலத்தில் காண்க. இந்திரன், அகலிகை கணவன் உருக்கொண்டு காம இச்சையினைத் தெரிவித்தான் ஆகலின் உணர்த்த நல்கி எனப்பட்டது- 'நெஞ்சினுற் பிழைப்பிலாளை' என்றும், 'கற்பின் மிக்க அணங்கினை' (பால. அகலிகை. 85, 86) என்றும், முன்கூறப் பட்டிருத்தலின் 'உணர்த்த நல்கி' என்ற பாடம் தழுவப்பட்டது. 'உரத்தைப் புல்லி' என்றதும் பாடம். 'மையல் நோய்க்குச் செவ்வாயமுதம் மருந்து' (ஒப்பு): 'அணியிழை தன்னோய்க்குத் தானே மருந்து' (குறள். 1102); பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும், பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக் கண்களே' (திருக்கோ, 5) (குறுந். 68). 'மருந்திற்றீராது' (குறுந்.); இனிய சொல்லமுதால் இணக்கமும், வாயமுதால் நோய்த் தீர்வும் வேண்டுவான்' செவ்வாயமுதலால் அமுதச் சொல்லீர்' என்றான்; சீதாப்பிராட்டி 'அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக் கொண்டவள்' (ஆரணிய. 623) எனக் கூறப்பட்டிருத்தல் காண்க. 'மொழிந்த சொல்லமுத மன்னாள்' (யுத்த. 453).

பி - ம். 1. உணரான், உணரீர்.
2. உரத்தைப்புல்கி.
4. சுந்தரப் பவளச் செவ்வாய். 16

## இராவணன் சீதையை வணங்குதல்

1583. என்றுரைத் தெழுந்து சென்றங் கிருபதென் றுரைக்கு நீலக்
குன்றுரைத் தாலு நேராக் குவவுத்தோள் நிலத்தைக் கூட
மின்றிரைத் தருக்கன் றன்னை விரித்துமீன் தொகுத்த [போலும்
நின்றிமைக் கின்ற தன்ன முடிபடி நெடிதின் வைத்தான்.

என்று உரைத்து - என்று (பல்வாறு) கூறி, அங்கு - அவ்விடத்து, எழுந்து சென்று - (இராவணன்) எழுந்து சீதையின் பக்கல் சென்று, இருபது என்று உரைக்கும் நீலம் குன்று உரைத்தாலும் நேரா - இருபது என்று கூறப்பெறும் நீலவண்ணமுள்ள மலையை உவமையாகப் பகர்ந்தாலும், (தமக்கு) உவமையாகாதனவான, குவவு தோள் நிலத்தை கூட - திரண்ட தோள்கள் பூமியிற் பொருந்த, மின் திரைத்து - மின்னலைத் திரட்டி, அருக்கன் தன்னை - (அதன்மீது) சூரியன் தன்னை, விரித்து - ஒளி பரவுமாறு வைத்து, மீன் தொகுத்த போலும் நின்று இமைக்கின்றது அன்ன - நட்சத்திரங்களின் தொகுதி அதனிடை நின்று ஒளி செய்கின்றது போன்ற, முடி - மகுடத்தை, படி நெடிதின் வைத்தான் - பூமியின் மீது நெடுநேரம் வைத்து (வணங்கினான்).

இராவணன் பிராட்டியை அட்டாங்க வணக்கம் புரிந்தான். புரியுங்கால், அவன் இருபது கரங்களும் கிரீடமும் பூமியிற் படிந்தன எனப்பட்டது. முடிபடி நெடிதின் வைத்தான் என்றமையின்; அவள் இரங்கியருளுமாறு பாடு கிடந்தான் என்ற தொனியும் காணலாம். கிரீடம் வளைந்திருத்தலின் 'மின்திரைத்தன்ன' என்றும், அதினின்று எழும் ஒளி கதிரவன் வெயில்போறலின் 'அருக்கன் தன்னை விரித்து' என்றும், அம்மகுடத்தில் பதிந்திருந்த அரதனங்கள் உடுக்கள் ஒப்ப ஒளிவிடுதலின், மீன் தொக்கதொன்று நின்றிமைக்கின்றதன்ன' என்றும் கூறப்பட்டன. தொக்கது - தொகுதி. முடிபடி நெடிதின் வைத்தான்; முன்னர் 'வணங்கினனுலகந்தாங்கு மலையினும் வலிய தோளான்' (ஆரணிய. 876). 'முடியின் மீது முகிழ்த்துயர் கையினன், படியின் மேற்படிந்தான பழிபார்க்கலான்' (சுந்தர. 443); என்றமை காண்க. முடிகள் பத்தாகலின் தரைமிசை நீளப் பரப்பினன் எனினுமாம். 1575 முதல் 1582 வரை இராவணன் கூற்று.

பி - ப். 1. சென்றவ்; நிசைத்த, நிசைக்கும்.

2. தோளெலாம் நிலந்திற் கூட்டி, நிலத்துக் கூட.

3. விரித்துப்பின், முன்; உகுத்த போலும் தொகுத்துத் தோன்றி.

4. இமைக்கின்ற தன்மை, இமைக்கின்றதென்ன, இமைக்கின்ற தன்போன்.

## சீதை கூறத்தொடங்குதல்

1584. வல்லிய மருங்கு கண்ட மானென மறுக்க முற்ற
மெல்லிய லாக்கை முற்று நடுங்கினள் விம்மு கின்றுள்
கொல்லிய வரினு முள்ளங் கூறுவென் தெரிய வென்னுப்
புல்லிய கிடந்த தொன்றை நோக்கினள் புகல்வ தானுள்.

வல்லியம் மருங்கு கண்ட மான் என - புலி தன் அருகில் வரக் கண்ட மான் என்னுமாறு, மறுக்கம் உற்ற - மனக்கலக்கம் எய்திய, மெல்லியல் - மென்மையான தன்மை வாய்ந்த பிராட்டி, ஆக்கை முற்றும் நடுங்கினள் - உடல் முழுதும் நடுக்கமுற்று, விம்முகின்றுள் - புலம்புவாளாய் (ச் சிறிது தேறி), ‘கொல்லியவரினும் - (என்னைக்) கொல்லுமாறு வந்தாலும், உள்ளம் தெரிய கூறுவென் - என் மனக் கருத்தை அவன் உணரும் வண்ணம் நன்கு புகல்வேன்’ என்னு - என்று, கிடந்தது - தரையிலே கிடந்த தான, புல்லிய ஒன்றை - அற்பமான ஒரு துரும்பினை, நோக்கினள் புகல்வது ஆனுள் - பார்த்தவண்ணம் கூறலானுள்.

வல்லியம் - புலி; ‘வல்லியம் பலதிரி வனத்து மானென’ (ஆரணிய. 130); மெல்லியல் - அன்மொழித் தொகை. கொல்லிய - செய்யிய என்னும் வாய்பாடு; உள்ளம் - உள்ளக் கருத்து. புல்லியது ஒன்றை நோக்கியது; கற்புடை மகளிர் பிற ஆடவனை நேராகக் கண்டு பேசுதற்கில்லை யாகலின், அவனைத் துரும்பாகக் கருதி அங்ஙனம் நோக்கினுள் எனினுமாம். நோக்கினள்: முற்றெச்சம். கிடந்த புல்லியது ஒன்றை எனப் பிரித்துக் கூட்டலுமாம். முன்னர்த் துரும்பென நோக்கிச் சொல்வாள்’ (சுந்தர. 445) என்று வந்தது காண்க. ‘த்ரணமந்தரத் யக்ருத்வா’ என்பது முதனூல்.

பி - ம். 1. மறுக்கமுற்ற, முற்றுல்.
4. புல்லியல்; நோக்கினன்; புகலலுற்றுள். 18

## சீதை கூறுவன

1585. பழியிது பாவ மென்று
பார்க்கிலை பகரத் தக்க
மொழியிவை யல்ல வென்ப
துணர்கிலை முறைமை நோக்காய்

கிழிகிலை நெஞ்சம் வஞ்சக்
　　கிளையொடு மின்று காறும்
அழிகிலை யென்ற போதென்
　　கற்பென்னும் அறந்தா னென்னும்.

'இது - நீ விழைந்த இச்செயல், பழி - (இம்மையில் எவரும்) பழிக்கத்தக்கது, பாவம் - (மறுமையினும் நரகம் தரக்கூடிய) பாவத்தை 'விளைப்பதாகும்; என்று பார்க்கிலை - என்று கருதினை யில்லை; பகர தக்க மொழி இவை அல்ல என்பது உணர்கிலை - (நீ பகர்ந்த இச்சொற்கள்) சொல்லத்தக்க சொற்கள் அல்ல என்றும் ஆராய்ந்தாயில்லை; முறைமை நோக்காய் - (யார் யாரிடம் எவ்வாறு ஒழுக வேண்டும் என்ற) ஒழுக்க நெறியையும் உணர்ந்தாயில்லை. (இங்ஙனம் அக்கிரமம் புரிந்த உன் நெஞ்சம் பிளந்திருக்க வேண்டும், ஆனால்) நெஞ்சம் கிழிகிலை - ஆயினும் நெஞ்சம் பிளக்கப் பெற்றா யில்லை; வஞ்சம் கிளையொடும் - வஞ்சகரான உன் சுற்றத்தாருடன், இன்று காறும் அழிகிலை - இதுவரையில் அழிவுற்றாயிலலை; என்ற போது கற்பு என்னும் அறம் தான் என்னும் - என்ற இடத்து (உன் நெஞ்சினைப் பிளந்தும், உன்னை உன் உறவினருடன் கொல்லாமலும் உள்ள) என் கற்பினால் யாது பயன்; தருமம் தானிருந்து என்ன பயன்?

நீ நெஞ்சம் கிழிகிலை : சினைவினை முதல் வினையோடு முடிந்தது. அழிகிலை : 'நீ இன்னும் குலத்தோடு முடிந்தாயில்லை யென்று கேட்டபோது, இப்படிப் பொறுப்பானேன் என்று என் கற்பும் அறமும் என்னை வெறுத்துக் கோபிக்கின்றன அது அறிகிரு யில்லை' என்பது பழையவுரை.

ப - ம். 2. மொழியிவை யல்லதென்று.
3. இன்று நாளை.
4. கழிகிலை; என்ற போது கற்பெனும். 16

1586. வானுள மறத்திற் றேன்றுஞ் சொல்வழி வாழு மண்ணின்
ஊனுள வுடம்புக் கெல்லா முயிருள வுணர்வு முண்டால்
தானுள பத்துப் பேழ்வாய் தகாதன வுரைக்கத் தக்க
யானுளன் கேட்க வென்று லென்சொல்லாய் யாது
[செய்யாய்

'வான் உள - விண்ணையும் அளாவியுள்ள, மறத்தில் தோன்றும் - கொடுமையுடன் காணப்படும், சொல்வழி வாழும் மண்ணின் - சொல்லின்படியே வாழுமாறு இந்நிலவுலகத்துள்ள, ஊன் உள உடம்புக்கு எல்லாம் - மாமிசமயமான உடலைப்பெற்ற உயிர்கட்கெல்லாம், உயிர் உள - உயிருள்ளன; உணர்வும் உண்டு - உணர்ச்சியும் உளது; தகாதன உரைக்கத்தக்க பத்து பேழ்வாய் உள - பொருத்தமற்ற சொற்களைப் பகர்தற்கு ஏற்ப, பிளவுபட்ட பத்து வாய்கள் (உனக்கு) உள்ளன; கேட்க - நீ (பிதற்றுவன யாவும்) கேட்பதற்கு, யான் உளன் என்றல் - நான் ஒருத்தியிருக்கின்றேன் எனின், என் சொல்லாய் யாது செய்யாய் - நீ எதைத்தான் சொல்லமாட்டாய்? எதைத்தான் செய்யமாட்டாய்?

ஊனுள உடம்புக்கெல்லாம் உயிரும் உணர்வும் உண்டு எனினும் இத்தகைய முறையற்ற சொற்களை அவையொன்றும் சொல்லவில்லை; நல்லுணர்வினையுமிழக்கவில்லை. ஆல்: அசை. தான்: அசை.

பி - ம். 1. வானுற; வானுறை; வரத்தில், அறத்தில்; தேறும், தோற்றும், தோற்றுன்; சொல்லுள; வாழ்வு, வழுவா, வழாத; மன்னும்.

2. உடம்பிற்கொல்லா; உணவும்; உன்டே.

3. உரைக்க விங்கே, தக்காய்.

4. ஏது செய்யாய். 20

1587. வாசவன் மலரின் மேலான் மழுவலான்
மைந்தன் மற்றைக்
கேசவன் சிவனென் றிந்தத் தன்மையோர்
தன்மை கேளாய்
பூசலி னெதிர்ந்தே னென்றாய் போர்க்களம்
புக்க போதென்
ஆசையின் கனியைக் கண்ணீற் கண்டிலை
போலு மஞ்சி.

'வாசவன் - இந்திரனும், மலரின் மேலான் - மலரின்மீது வீற்றிருப்பவனான பிரமதேவனும், மழுவலான் மைந்தன் - மழுப்படை தாங்கும சிவபெருமானுடைய புதல்வனான முருகப்பிரானும், மற்றை - பின்னும், கேசவன் சிவன் என்று இந்த தன்மையோர் -

திருமால் சிவன் என்ற இத்தகைய பெருமை பெற்றவர்களின், தன்மை கேளாய் - நிலையினைச் செவிக்கொள்ளாமல், பூசலின் எதிர்ந்தேன் என்றாய் - போரில் எதிர்த்து வெற்றிகொண்டேன் என்று வீரம் பேசுகின்றனை ; (இங்ஙனம் பேசும் நீ), என் ஆசையின் கனியை - என்னுடைய ஆசை முற்றிப் பழுத்தாற்போன்ற கணவனை, போர்க்களம் புக்கு போது - யுத்தகளத்தில் புகுந்து நிற்கும் (இந்த) வேளையில், அஞ்சி - பயந்து, கண்ணில் கண்டிலை போலும் - கண்ணால் காணவில்லைபோலும்.

வாசவன் - அட்டவசுக்களின் தலைவனான இந்திரன். கேசவன் - கேசி என்ற அசுரனைக்கொன்ற திருமால். நேரில் கண்டிருந்தால் கண்ட அக்கணமே திகைத்துச் செயலற்றிருப்பான் என்பான் ‘கண்ணிற் கண்டிலை’ என்றாள். கண்டிலைபோலும் அஞ்சி : ‘அஞ்சினை யாதலாலே யாண்டகை யற்ற நோக்கி, வஞ்சனை மானொன்றேவி மாயையால் மறைந்து வந்தாய்’ (சுந்தர. 447) ; ‘நன்றியென் பதம் வஞ்சித்த நாய்களின், நின்ற வஞ்சனை’ (சுந்தர. 620). போலும்- ஒப்பில்போலி.

பி - ம். 1. மழுவலானேடு.

2. கேசவன் என்னநின்ற, சிறுவனென்றிது, சிறுவனென்றித், சிறுவரென்ற, அமைநியோர் ; தம்மைக் கேளாய், கிட்டிக் கண்டாய், கேண்மை கண்டாய்.

3. எதிர்ந்த தென்றாய், எதிர்ந்து நின்றாய்.

4. போலுமென்றாள். 21

1588. ஊணிலா யாக்கை பேணி யுயர்புகழ்
சூடா துன்முன்
நாணிலா திருந்தே னல்லே னவையறு
குணங்க ளென்னும்
பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய
மூர்த்தி தன்னைக்
காணலா மின்னு மென்னுங் காதலா
லிருந்தேன் கண்டாய்.

‘ஊண் இலா யாக்கை பேணி - உணவின்றிக் கிடக்கின்ற இவ்வுடம்பைப் போற்றி, உயர் புகழ் சூடாது - உயர்ந்த புகழை மேற்கொள்ளாமலும், உன் முன் - உனது முன்பாக, நாண் இலாது

இருந்தேன் அல்லேன் - வெட்கமில்லாமலும் இருந்தேன் அல்லேன்; நவை அறு குணங்கள் என்னும் பூண் எலாம் பொறுத்த மேனி - குற்றமற்ற குணங்கள் என்னும் அணிகலன் களை எல்லாம் தாங்கிய திருமேனியினையுடைய, புண்ணிய மூர்த்தி தன்னை - புண்ணியமூர்த்தியாகிய அந்த இராமபிரானை, இன்னும் காணலாம் என்னும் காதலால் இருந்தேன் - இன்னும் காண்டல் கூடும் என்னும் ஆசையால் உயிருடன் இருக்கின்றேன். கண் டாய் - முன்னிலையசை.

தான் உயிர்தரித்திருப்பது உயிரின்மீது வைத்த ஆசையா லன்று, இராமபிரானை எப்படியும் காணலாம் என்ற நினைவால் என்றாள் பிராட்டி. நவையறு குணங்க ளென்னும் பூண்எலாம் பொறுத்த மேனி; (ஒப்பு): 'குணங்களை யென்கூறுவது கொம் பினைச் சேர்ந்தவை யுய்யப், பிணங்குவன வழகிவளைத் தவஞ்செய்து பெற்றது காண்' (பால. கார்முகப். *18*); 'இற்பிறப் பென்ப தொன்று மிரும்பொறை யென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக்கண்டேன்' (சுந்தர. *1273*). குணக் கடல்: (பால. பாயிரம். *111, 567*; அயோத்தி. *1040, 1206*; சுந்தர. *2, 60* என்றமை காண்க. 'ஊண் நிலா யாக்கை' என்பதற்கு, உணவினால் நின்று விளங்கும் யாக்கை என்பர் ஒரு சாரார். காணலாம் இன்னம் என்னும் காதல்: 'பொறையிருந் தாற்றியென் னுயிரும் போற்றினேன், அறையிருங் கழலவற் காணு மாசையால்' (சுந்தர. *499*).

பி - ம். 1. உயிர் செகாதுளதே யுன்முன், உயிர் புகழ்கெடவே யுன்முன்.
2. பொறுக்கும்.
4. மென்னுமந்த. 22

1589. சென்றுசென் றழியுமாவி திரிக்குமாற்
செருவிற் செம்பொன்
குன்றுநின் றனைய தம்பி புறக்கொடை
காத்து நிற்பக்
கொன்றுநின் றலைகள் சிந்தி யரக்கர்தங்
குலத்தை முற்றும்
வென்றுநின் றருளுங் கோலங் காணிய
கிடந்த வேட்கை.

'செருவில் - போர்க்களத்தில், செம் பொன் குன்று நின்றனைய தம்பி - செம்பொன்னாலாய மேருகிரி நின்றாற்போன்ற தம்பியான இலக்குவன், புறம் கொடை காத்து நிற்ப - நீ முதுகு காட்டி ஓடுவதைத் தடுத்து நிற்க, கொன்று - (உன்னைக்) கொலை புரிந்து, நின் தலைகள் சிந்தி - உன் தலைகளைத் தரையில் வீழச் செய்து, அரக்கர் தம் குலத்தை முற்றும் வென்று - அரக்கருடைய வருக்கம் முழுதும் வெற்றிகொண்டு, நின்று அருளும் - நிற்க விருக்கின்ற, கோலம் - ஸ்ரீ இராமபிரானுடைய திருமேனியின் அழகை, காணிய கிடந்த வேட்கை - காணவேண்டி என் உள்ளத்தும் பொருந்தியுள்ள ஆசையானது, சென்று சென்று அழியும் ஆவி - (வருத்தமிகுதியால் உடலை) விடுத்து மறைகின்ற என் உயிரினை, திரிக்கும் - திரும்புமாறு பண்ணும். ஆல் - அசை.

இது முன் செய்யுளிற் கூறிய கருத்தையே அனுவதித்தது. புண்ணியமூர்த்தி தன்னைக் காணக்கூடும் என்ற நினைவால் உயிர் தரித்திருந்தேன் என்றது அவனைக் காணவேண்டும் என்னும் ஆசை தன் உயிரை நீங்காமற் செய்யும் என்றவாறு. திரிக்கும் - திரும்பச்செய்யும். சென்றுசென் றழியும்: 'இறந்திறந் துய்கின்றேன்' என்றாற் போன்றது. செம்பொன் குன்று: 'செம்பொற், பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்' (பால. குலமுறை. 22); 'கருமலை செம்மலை யன்ன காட்சியர்' (ஆரணிய. 191); 'பொன்னொளிர் மேனியான்' (கிட்கிந்தா. 566). புறக்கொடை - முதுகு காட்டல்; 'அழிகுநர் புறக்கொடை' (பு. வெ. மா.) காத்து நிற்க - தடுத்து நிற்க; 'வெகுளி கணமேயுங் காத்த லரிது;' (குறள். 29). இச்செய்யுள் பூட்டுவிற் பொருள்கோள். 'சென்று நின் றழியும்என் ஆவியை, உன்னைக்கொன்று பெருமாள் வருகிற கோலம் காணவேணுமென்கிற ஆசை பிடித்துக் கொண்டிருக்கிறது' என்பது பழையவுரை.

பி - ம். 1. நின்றழியும்; திரியும், தெரிக்கும், தரிக்கும்; சேமக்.
2. கன்று; தனிக்குடை, பிறர்குடை, புறக்கடை.
4. நின்றனைய; காலங்; கிடக்க. 23

1590. எனக்குயிர் பிறிது மொன்றுண் டென்னலை லிரக்க மல்லால்
தனக்குயிர் வேறின் றாகித் தாமரைக் கண்ண தாகிக்
கனக்கரு மேக மொன்று கார்முகந் தாங்கி யார்க்கும்
மனக்கினி தாகி நிற்கு மஃதன்றி வரம்பி லாதாய்.

'வரம்பு இலாதாய் - நீ திவரம்பு ஒன்றும் இல்லாதவனே! இரக்கம் அல்லால் தனக்கு உயிர் வேறு இன்றாகி - கருணையென்பதன்றித் தனக்குத் தனிப்பட்ட உயிர் வேறு இல்லாமலும், தாமரை கண்ணது ஆகி - தாமரைபோன்ற கண்களை யுடையதாகியும், கனம் - நிறைந்து கனத்துள்ள, கருமேகம் ஒன்று கார்முகம் தாங்கி - கருமேகம் ஒன்று வில்லினைத் தரித்து, யார்க்கும் - யார்க்கும், மனக்கு இனிதாகி - மனத்தில் இன்பம் அளிப்பதாகி, நிற்கும் - நிற்கின்ற, அஃது அன்றி - அதுவல்லாமல், எனக்கு பிறிதும் உயிர் ஒன்று உண்டு என்று எண்ணலை - எனக்கு வேறாக உயிர் ஒன்று உண்டு என்று எண்ணியிராதே'.

உயிர் வேறின்றாகி: 'ஈண்டுநீ யிருக்க வாண்டவ் வெவ்வுயிர் விடுமிராமன்' (சுந்தர. 525). மூன்றாமடிக்கு: 'கண்ணுற்றான் வாலி நீலக் கார்முகில் கமலம் பூத்து, மண்ணுற்று வரிவில் லேந்தி வருவதே போலுமாலை' (கிட்கிந்தா; 404): 'கண்டனன் வதனம் வாய் கண்கை காலெனப், புண்டரீ கத்தடம் பூத்துப் பொற்சிலை, மண்டலம் தொடர்ந்துமண் வயங்க வந்ததோர், கொண்டலிற் பொலிதரு கோலத்தான்தனை' (யுத்த. 1438). மனக்கினிது - தொகுத்தல்.

பி - ம். 1. பிறிதுமுண்டோ, ஒன்றுண்டென்றிரேல்; எனக்கும் அல்லால்.
2. கண்ணவாகி, கண்ணனென்னும்.
4. மனத்துளதாகி; வரியிலாதாய். 24

## இராவணன் சினம்

1591. என்றன ளென்ற லோடு மெரியுறு கண்ணன் றன்னைக்
கொன்றென மானந் தோன்றக் கூற்றெனச் சீற்றங் [கொண்டான்
வென்றெனை யிராம னுன்னை மீட்டபி னவனே டாவி
யொன்றென வாழ்தி போலென் றிடியுரு மொக்க நக்கான்.

என்றனள் - என்றுரைத்தாள் சீதாதேவி; என்றலோடும் - என்று அவள் மொழிந்த அளவில்; (இராவணன்), எரி உறு கண்ணன் - நெருப்பு நிறைந்த விழிகளை யுடையவனும், தன்னை கொன்றென மானம் தோன்ற - தன்னைக்கொல்லப் புகுந்தாற் போன்ற பெருமிதம் எழ, கூற்று என சீற்றம் கொண்டான் -

யமன்போன்று சினம் கொண்டவனாகி (சீதாதேவியைப் பார்த்து), 'எனை வென்று - என்னை வெற்றிகொண்டு, இராமன் உன்னை மீட்டபின் - இராமன் உன்னை மீட்ட பின்னர், அவனோடு - அந்த இராமனோடு, ஆவி ஒன்று என வாழ்திபோல் - (இருவர்க்கும்) உயிர் ஒன்றேயெனத் தோன்றுமாறு (ஒன்றுபட்டு) வாழ்வாய் போலும்' என்று உரும் இடி ஒக்க நக்கான் - என்று பேரிடிபோன்று முழங்கிச் சிரித்தான்.

நிகழக்கூடாத செயலை நினைந்து மனப்பால் குடிப்பதாக நகையாடிக் கூறினன் இராவணன். மானம் - பௌருஷம். நகை - எள்ளல் நகை; பிறரை எள்ளி நக்கது. போல் - ஒப்பில்போலி; அசையுமாம். இடி உரும் : ஒருபொருட் பன்மொழி.

பி - ம். 1. என்னவளோடு ; எரியுரு, எரிபுகு.

2. தோன்றிக் ; கூற்றன.

4. வாழ்த்தியே ; புருமிடி ; இடிக்க, உட்க, உக்க. 25

## இராவணன் மனவுறுதி

1592. இனத்துளா ருலகத் துள்ளா ரிமையவர் முதலி னாரென்
சினத்துளா ரியாவர் தீர்ந்தார் தயரதன் சிறுவன் றன்னைப்
புனத்துழாய் மாலை யானென் றுவக்கின்ற வொருவன் [புக்குன்
மனத்துளா னெனினுங் கொல்வென் வாழுதி பின்னை [மன்னோ.

'உலகத்து உள்ளார் - இவ்வுலகில் உறைபவரான மனிதரும், இமையவர் இனத்துளார் முதலினார் - தேவர்கள் வர்க்கத்திலுள்ளவர் முதலாயினாரும், என் சினத்துளார் - என் கோபத்துக்குள்ளானவர்களில், யாவர் தீர்ந்தார் - யாவர் விலகிப் பிழைத்தார்கள் ; (நீ) புனம்துழாய் மாலையான் என்று உவக்கின்ற ஒருவன் - நந்தவனத்தில் முளைக்கின்ற திருத்துழாய் மாலை புனைந்தவனாகிய திருமாலே என்று எண்ணி மகிழ்கின்ற ஒருத்தன், உன் மனத்து புக்கு உளான் எனினும் - உன் நெஞ்சிற் புகுந்து கொண்டு இருக்கின்றான் என்றாலும், தயரதன் சிறுவன் தன்னை - அந்தத் தயரதன் குமாரனான இராமன் தன்னை, கொல்வேன் (யான்) கொலை

புரிந்தே தருவேன், பின்னை வாழுதி - பின்னை நீ நல் வாழ்வு வாழ்வாய்; மன், ஓ: அசைகள்.

இமையவர் இனத்துளார் எனப் பிரித்துக் கூட்டப் பெற்றது. உலகத்துள்ளார் இனத்துளார் என்று இணைத்து, உலகத்துள்ளாராய்த் தன் இனமாகிய அரக்கர் குலத்தைச் சேர்ந்த வீடணன் போன்றவர் எனினுமாம். தயரதன் சிறுவன் என்றது இகழ்ச்சி, புனத்துழாய்; 'புனத்துழாய்க் கண்ணியண்ணல்' (குசேலோ. 1 : 99); உன் மனத்துட்புக்குள்ளான் என்க. வாழுதி பின்னை; பிறகுறிப்பு.

பி - ம். 1. எனைத்துளார்

2. யாரே; சிறுவனீயப், சிறுவனீயிப்.

4. பின்னும். 26

1593. வளைத்தன மதிலை வேலை வகுத்தன வரம்பு வாயால்
உளைத்தன குரங்கு பல்கா லென்றக முவந்த துண்டேல்
இளைத்தநுண் மருங்குல் நங்கா யென்னெதி ரெய்திற்
[றெல்லாம்
விளக்கெதிர் வீழ்ந்த விட்டிற் பான்மைய வியக்க வேண்டா.

'இளைத்த நுண் மருங்குல் நங்காய்-மெலிந்த நுட்பமான இடையையுடைய பெண்ணே! '(இராமபிரான் படையான) குரங்கு-வாநரங்கள், வேலை வரம்பு வகுத்தன - ஆழிக்கு அணைகட்டின; மதிலை வளைத்தன - (பின்பு) இலங்கா புரியின் மதிலை வளைத்தன; வாயால் பல்கால் உளைத்தன - வாயினால் பல தடவைகள் கூச்சலிட்டன'; என்று அகம் உவந்தது உண்டேல்-என்று உன் உள்ளம் மகிழ்வுகொண்டிருக்குமாயின், வியக்கவேண்டா - (அச்செயல்களைக் குறித்து) ஆச்சரியப்படவேண்டா; என் எதிர் எய்திற்று எல்லாம்-என் எதிர்ப்பட்ட அந்தக் குரங்குகள் அனைத்தும், விளக்கு எதிர் வீழ்ந்த விட்டில் பான்மைய - விளக்கு முன்னே வந்து படிந்த விட்டில் பூச்சியின் தன்மையனவேயாம்.

மதிலை வளைத்தல்: முற்றுதல்: 'நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி (கலித்.) என்பது உத்தம மகளிரின் இலக்கணமாதலின இளைத்தநுண் மருங்குல் எனப்பட்டது. புருடோத்தமனைப் பிரிந்துறைந்தமையின் இளைத்த மருங்குல் எனினுமாம்.

'மென் மருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்' (சுந்தர. 332): விளக்கெதிர் வீழ்ந்த விட்டில்; 'எரியிடை வீழ்ந்த விட்டிலல் லரேர' (யுத்த. மாயாசனக 68) 'விளக்கின் வீழ் விட்டிலன்ன' (யுத்த. மாயாசீதை. 73); 'பதங்க மாரழல் விளக்கினில் வீழ்ந்தென' (மூலபல. 180); 'செழிகின்ற தீப்புகுவிட்டிலிற் சின்மொழி யாரிற் பன்னாள், விழுகின்ற வென்னை' (திருவாசக. நீத்தல். 5);

பி - ம். 1. வளைத்தனர்; வகுத்தனர்.
2. என்று நீ; என்று கொண்டு; உண்டால்.
3. மருங்கு; மங்காய்; யென்னுட னெதிர்ந்தோ ரெல்லாம்.
4. எதிர்வந்த; பான்மையே; வேண்டாம். 27

### இராவணன் அயோத்தி மிதிலைகட்கும் வீரரைப் போக்கியதாகக் கூறுதல்

1594. கொற்றவா ளரக்கர் தம்மை
யயோத்தியர் குலத்தை முற்றும்
பற்றிநீர் தருதி ரன்றேற்
பசுந்தலை கொணர்திர் பாரித்
துற்றதொன் றியற்று வீரென்
றுந்தினே னுந்தை மேலும்
வெற்றியர் தம்மைச் செல்லச்
சொல்லினன் விரைவி னென்றான்.

'அயோத்தியர் குலத்தை முற்றும் பற்றி நீர் தருதிர் - அயோத்தி மன்னரின் குலம் முழுவதையும் பிடித்து நீங்கள் கொண்டு வாருங்கள்; அன்றேல் - அல்லாவிடில், பசு தலை கொணர்திர் - (வெட்டிக்கொன்ற அந்த அயோத்தி நகர் வாசிகளின்) புதிய தலைகளைக் கொண்டு வாருங்கள்; பாரித்து - விடா முயற்சி யுடன், உற்றது ஒன்று இயற்றுவீர் - (இவ்விரண்டினுள்) பொருந் திய ஓர் செயலைச் செய்யுங்கள்; என்று - என்று ஆணையிட்டு, கொற்றம் வாள் அரக்கர் தம்மை - வெற்றி பொருந்திய வாளேந் திய அரக்கர்களை, உந்தினேன் - அயோத்தியில் செலுத்தியுள் ளேன்; உந்தை மேலும் - உன் தந்தை மேலும், வெற்றியர் தம்மை விரைவின் செல்ல சொல்லினன் - வெற்றி வீரரை வேகமாக ஏகு மாறு சொல்லினன்,' என்றான் - என்று பகர்ந்தான்.

அயோத்தியர் - இராமனைச் சேர்ந்த பரதன் சத்துருக்கன் முதலியோர்.

பா-ம். 2. பற்றினீர்; கொணர்ந்து; அன்றே; பாரில்.
3. உற்ற; இயற்றுவிரே மிதிலையன்.
4. சாரச். 28

## இராவணனது சொல்லைக் கேட்ட சீதையின் வருத்தம்

1595. என்றவ னுரைத்த காலை
யென்னையிம் மாயஞ் செய்தாற்
கொன்றுமிங் கரிய தில்லை
யென்பதோர் துணுக்க முந்த
நின்றுநின் றுயிர்த்து நெஞ்சம்
வெதும்பினுள் நெருப்பை மீளத்
தின்றுதின் றுமிழ்கின் றாரிற்
றுயருக்கே சேக்கை யானுள்.

என்று அவன் உரைத்த காலை - என்று அவ்விராவணன் சொன்னபோது, 'என்னை இ மாயம் செய்தாற்கு - என்னை இவ்வாறு வஞ்சித்துக் சிறையிட்ட இராவணனுக்கு, இங்கு அரியது ஒன்றும் இல்லை - இப்போது (செய்தற்கு) அருமையான செயல் ஒன்றும் இல்லை' என்பது ஓர் துணுக்கம் முந்த - என்பதான ஓர் அச்சம் முற்பட, நின்று நின்று உயிர்த்து - விட்டு விட்டுப் பெருமூச் செறிந்து, நெஞ்சம் வெதும்பினுள் - மனம் வெம்பினவளாய், நெருப்பை மீள - தீயினை மீளவும், தின்று தின்று உமிழ்கின்றாரில் - மென்று மென்று வெளிப்படுத்துவார்போல், துயருக்கே சேக்கை ஆனுள் - துன்பத்திற்கே இருப்பிடமானுள்.

துணுக்கம் உந்த என்றும் பிரிக்கலாம். 'இந்தக் கவி முதலாகப் பிராட்டி எடுத்த கோலத்துக்காக அருளிச் செய்தது' என்பது பழையவுரைக் குறிப்பு.

பா-ம். 1. இசைத்த; உசைத்ததோடும்; அம்மாயம்;
2. ஒன்றுமங்கு
3. விம்மினுள்.
4. தின்றுமிழ்கின்றதென்ன. 29

1596. இத்தலை யின்ன செய்த விதியினு
றென்னை யின்னும்
அத்தலை யன்ன செய்யச் சிறியரோ
வலிய ரம்மா
பொய்த்தலை யுடைய தெல்லாந் தருமமே
போலு மென்னுக்
கைத்தன ளுள்ளம் வெள்ளக் கண்ணினீர்க்
கரை யிலாதாள்.

கண்ணின் வெள்ளம் நீர் கரை இலாதாள் - விழிகளினின்று வெள்ளமாகப் பெருகும் நீருக்கு ஓர் அளவு காணாத சீதாதேவி, 'என்னை - என்னை, இதலை - இவ்விடத்து, இன்ன - இத்தகைய செயலை (இராமபிரானிடமிருந்து பிரிந்து வருந்துமாறு), செய்த- புரிந்த, விதியினார் - விதியானது, இன்னும் - மேலும், அதலை - (அயோத்தி மிதிலை என்ற) அந்நகர்களில், அன்ன - இராவணன் சொன்ன அச் செயல்களை, செய்ய சிறியரோ-இயற்ற வன்மையற்ற அற்பர்களோ?, வலியர் - வினை (எல்லாம் இயற்ற) வல்லரே; பொய்த்தலை உடையது எல்லாம் தருமமே போலும் - பொய்க்கும் தன்மையினை உள்ளஅனைத்தும் (இப்போது) தருமந்தான் என்று புலப்படுகிறது', என்னு - என்று எண்ணி, உள்ளம் கைத்தனள்- மனத்துக்கசந்து கொண்டாள்.

முதலிரண்டடிகளில் தலை ஏழன் உருபு. விதியினார் - இகழ்ச்சி. சிறியரோ : ஓ எதிர்மறை. அன்ன செய்ய ; 1594 காண்க. அம்மா : வியப்பிடைச் சொல். பொய்த்தல் - தொழிற்பெயர். போலும் : ஒப்பில் போலி. விதியின் கொடுமையைக் கூறி வெறுப்புற்றாள். தன்வாயினால் அக்கொடுமைகளைக் கூறவும் அஞ்சி, அன்ன என்றாள்.

பி - ம். 1. இன்னல் ; இன்ன மென்னை.

2. அலியர், அலியன்.

4. கலுழ்வதானுள்.

1597. ஆயதோர் காலத் தாங்கண் மருத்தனைச் சனக னாக்கி
வாய்திறந் தரற்றப் பற்றி மகோதரன் கடிதின் வந்து
காயெரி யனையான் முன்னர்க் காட்டினன் வணங்கக்
[கண்டாள்
தாயெரி வீழக் கண்ட பார்ப்பெனத் தரிக்கி லாதாள்.

மகோதரன் - மகோதரன் என்னும் அரக்கன், ஆயது ஓர் காலத்து ஆங்கண் - பொருத்தமான ஒரு காலத்து அங்கே, மருத்தனை சனகன் ஆக்கி - மருத்தன் என்னும் அரக்கனைச் சனக னாக உருமாற்றி, வாய்திறந்து அரற்ற பற்றி - (அவ்வரக்கன்) வாய் திறந்து கதறிக்கொண்டிருக்க, அவனைக் கைப்பற்றிக்கொண்டு, கடிதின் வந்து - விரைந்துவந்து, காய் எரி அனையான் முன்னர் - விட்டெரிகின்ற நெருப்பினை நிகர்த்தவனான இராவணன் முன்பாக, காட்டினன் - காட்டி, வணங்க கண்டாள் - இராவணனை வணங்கக் கண்ட சீதை, தாய் எரிவீழ கண்ட பார்ப்பு என - தன் தாய்ப் பறவை நெருப்பில் வீழ்வதனைக் கண்ட குஞ்சுபோன்று, தரிக்கிலா தாள் - மனம் பொறாதவளாயினள்.

காட்டினன் : மிதிலையினின்று சிறைப்படுத்திக் கொணர்ந்த தாகக் காட்டினன் ; 1594இல் 'உந்தையர் மேலும் வெற்றியர் தம்மைச் செல்லச் சொல்லினன்' என்றது காண்க. வாய்திறந் தரற்ற : 'வாய்திறந் தரற்றலுற்றாள்' (யுத்த. 1602); கண்டாள் : முற்றெச்சம். பார்ப்பு - பறவைக் குஞ்சு ; 'பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்றிளமை' (தொல். மரபி.); 'பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான' (ஆரணிய. 219); சுந்தர : 1247. இவ் வுவமையே, 'பாவி வேடன்கைப் பார்ப்புற வெய்துறும், தாவி யன்னம்' (சுந்தர. 1073); என்று மாற்றியுரைக்கப் பெற்றுள்ளமை ஓர்க. தரிக்கிலாதாள் ; 'தரிக்கிலேன் மாய வாழ்க்கை' (திருவாச. திருச்சதகம் : 61).

பி - ம். 1. ஆயின, ஆயது ; ஆங்கோர், ஆங்கே ; அரக்கனை.

2. வாயழிந்து, யிழிந்து ; இரங்கப் பற்றி ; வந்தான்.

3. வணக்கம், வணங்கிக்.

4. தரிப்பிலாதாள்.

### மாயாசனகனைக்கண்ட சீதையின் துயரம்

1598. கைகளை நெரித்தாள் கண்ணின் மோதினாள்
கமலக் கால்கள்
நெய்யெரி மிதித்தா லென்ன நிலத்திடைப்
பதைத்தாள் நெஞ்சம்
மெய்யென வெரிந்தா ளேங்கி விம்மினாள்
நடுங்கி வீழ்ந்தாள்
பொய்யென வுணரா ளன்பாற் புரண்டரும்
பூச லிட்டாள்.

(சனகன் மகோதரனால் கொணரப்பட்டு வந்தது) பொய் என உணராள் - பொய் என்று தேருதவளான சீதாதேவி, அன்பால் கைகளை நெரித்தாள் - அன்பினால் கைகளை நெரித்தாள்; கண்ணில் மோதினாள் - (துன்பத்தால்) கண்களில் அறைந்து கொண்டாள்; கமலம் கால்கள் - (தனது) தாமரைபோன்ற பாதங்கள் நெய் எரி - நெய் ஊற்றப்பட்டு எரிகின்ற தீயினை, மிதித்தால் என்ன - மிதித்தாற் போன்று, நிலத்திடை பதைத்தாள் - பூமியில் நிலைகொள்ளாமல் துடித்தாள்; மெய் என நெஞ்சம் எரிந்தாள் - உண்மையென்று எண்ணி மனம் கொதிக்கப்பெற்றாள்; ஏங்கி விம்மினாள் - ஏக்கம்கொண்டு தேம்பித் தேம்பியழுதாள்; நடுங்கி வீழ்ந்தாள் - நடுங்கித் தரையில் வீழ்ந்தாள்; புரண்டு - புரண்டு, அரு பூசல் இட்டாள் - அரிய பேரொலியுண்டாக அரற்றினாள்.

அவலச் சுவை மெய்ப்பாடுகள் பல இச் செய்யுட்கண் காண்க. நெஞ்சம் மெய் என என்பதற்கு உடல்போன்று நெஞ்சமும் எனினுமாம். இம்மெய்ப்பாடுகளை 'விழுதல் விம்முதல்' (சுந்தர. 334), எனத்தொடங்கும் செய்யுளிலும் நன்கு காணலாம்; திருமகள் அவதாரமேயாயினும் பொய் என உணராமை தான் எடுத்த கோலத்துக்கேற்ப நடித்த வண்ணம் என்க,

பி - ம். 1. கண்ணை.
3. இருந்தாள்; வீங்கினு ளேங்கி.
4. புரண்டனள்,

1599. தெய்வமே யென்னு மெய்ம்மை
சிதைந்ததோ வென்னுந் தீய
வைவலோ வுலகை யென்னும்
வஞ்சமோ வலிய தென்னும்
உய்வலோ வின்ன மென்னு
மொன்றல துயர முற்றுள்
தையலோ தரும மேயோ
யாரவள் தன்மை தேர்வார்.

'தெய்வமே என்னும் - தெய்வமே என்று விளிப்பாள்; மெய்ம்மை சிதைந்ததோ என்னும் - உண்மை நிலைகுலைந்ததோ என்பாள்; உலகை தீய வைவலோ என்னும் - உலகினை எரிந்து ஒழியுமாறு சாபம் விடுக்கட்டுமோ என்பாள்; வஞ்சமோ - மாயச் செயலோ, வலியது - வன்மை வாய்ந்தது, என்னும் - என்பாள்! இன்னம் உய்வலோ என்னும் - இன்னும் பிழைத்திருக்கக்கடவனோ என்பாள். ஒன்று அல துயரம் உற்றுள் - ஒன்றல்லாத பலபடியான துன்பம் எய்தினள்; (அங்ஙனம் துன்பமெய்தியவள்), தையலோ - ஒரு பெண்தானோ? (அல்லது), தருமமேயோ - தரும தேவதையே தானோ?, அவள் தன்மை தேர்வார்யார் - அந்தப் பிராட்டியின் இயல்பினை ஆராய்ந்து அறிபவர் யார்? எவருமில்லை.

ஈற்றடி கவிக்கூற்று: தரும தேவதையின் வடிவான சீதா தேவிக்கும் இங்ஙனம் துன்பம் உற்றதே என்று கவி இரங்கியதாகக் கொள்க. கவிஞன் இவ்வாறு பாத்திரங்களின் இன்ப துன்ப நிகழ்ச்சிகட்கு இரங்குவது எக்காப்பியத்திலும் காணலாம்; 'எங்ஙனம் எழுந்ததுள்ளம்' (சீவக. 1359); என்ற இடத்து, 'பிரிவிற்குத் தேவர் இரங்கினர்' என உரையாசிரியர் எழுதுவது காண்க. இராமபிரானுடைய எழில் வாய்ந்த நீல நிறத்தில் ஈடுபட்டு, 'ஐயோவிவன் அழகென்பதென் அழியாஅழ குடையான' (அயோத்தி. கங்கைப்: 1) என்றதும் காண்க. 'அயிலும் அமுதும் சுவை நீத்த, மொழியைப் பிரிந்தா லழியானோ?, (ஆரணிய. 1058). 'இப்படிப் பொறுத்தருளிச் செய்கின்ற பிராட்டி ஒரு பெண்ணோ, தருமசொரூபமோ' என்பது கவிக் கருத்து.

பி - ம். 1. தெய்வமோ; சிதைந்தவோ.
2. வைவனோ; வலிதே.
3. உய்வனோ, உய்வனே; ஒன்றலாத்.
4. ஐயவோ துன்பமேயோ, ஐயவோ துயரமேயோ; ஆரதன் தன்மை யோர்வார்.

1600. எந்தையே யெந்தை யேயென்
 பொருட்டினு லுனக்கு மிக்கோள்
வந்ததே யென்னைப் பெற்று
 வாழ்ந்தவா றிதுவோ மண்ணோர்
தந்தையே தாயே செய்த
 தருமமே தவமே யென்னும்
வெந்துயர் வீங்கித் தீவிழ்
 விறகென வெந்து வீழ்வாள்.

'எந்தையே எந்தையே - என் தந்தையே! என் தந்தையே! உனக்கும் - (மகா உத்தமனும் பிரம நிஷ்டனும் ஆன) உனக்கும், என்பொருட்டினுல் - என் காரணமாக, இகோள் வந்ததே - (பகைவர் வசம் அகப்பட்டு வருந்துவதாகிய) இத்தீமை நிகழ்ந்ததே; என்னை பெற்று வாழ்ந்த ஆறு இதுவோ - என்னை மகளாகப் பெற்று நீ வாழ்ச்சியுற்ற விதம் இவ்வாறோ? மணணோர் தந்தையே - பூமியில் உள்ளார் அனைவர்க்கும் தந்தையொப்பவனே! தாயே - அன்னை போன்றவனே! செய்த தருமமே - செய்யப்பட்ட தருமம் ஒத்தவனே; தவமே - நற்பயன் தருவதில் தவம் போன்றவனே!' என்னும் - என்பாளாய், வெம் துயர் வீங்கி - கொடிய துயரம் மிக்கு, தீவிழ் விறகு என - நெருப்பினுல் (விழுங்கப்பட்டுச்) சாய்கின்ற விறதுபோன்று, வெந்து வீழ்வாள் - மனம் கொதித்துத் தரையில் வீழ்வாள்.

எந்தை: மரூஉ. உனக்கும் என்பது 'வெம்மை தண்மை யிடைச் சமம் கொண்டாற்போன்று வாழ்க்கையில், நிர்விகல்ப்சமாதியினை எய்திய பிரமஞானியாகிய உனக்கும் என்றவாறு. உண்மைச் சனகன் இன்னுமையை இன்பம் எனக்கொளும் பரம ஞானி; இந்தப் போலிச் சனகன் 'வாய்திறந்தரற்றி' (1587) நின்றுன். ஆகலின் உனக்கும் என்றுள். கோள்: தீங்கு (திவா). மண்ணோர் தந்தையே ............தவமே; இங்கு 'தாயொக்கு மன்பில் தவம் ஒக்கும் நலம் பயப்பில், சேயொக்கு முன்னின்ஞெருசெல்கதியுய்க்கு நீரால்' (பால. அரசியல். 4) என்ற செய்யுளைக் காண்க. 'வெண்

குடை, ஓதநீருலகொப்ப நிழற்றலாற், ருதையேயவன்' (சீவக. 159). சோகத்தீயினால் எரிக்கப்பட்டுக் கீழ்வீழ்ந்த பிராட்டிக்கு, தீயினால் தாக்கப்பட்டுச் சாய்ந்த விறகினை உவமித்தார்.

பி - ம். 1. எந்தையோ வெந்தையோ ; இன்றென்பொருட்டு.
3. தந்தையே தயாவேயென்னும் ; தகவே.
4. வெந்துயரென்னும் ; நீங்கித், ஏங்கித் ; நியில் ; விழ்ந்தாள். 34

1601. இட்டுண்டா யறங்கள் செய்தா
யெதிர்ந்துளோ ரிருக்கை யெல்லாம்
சுட்டுண்டா யுயர்ந்த வேள்வித்
துறையெலாங் கரையுங் கண்டாய்
மட்டுண்டார் மனிசர்த் தின்ற
வஞ்சரால் வயிரத் திண்டோள்
கட்டுண்டா யென்னே யானுங்
காண்கின்றேன் போலுங் கண்ணால்.

'இட்டு உண்டாய் - (விருந்தினர்க்கு முதற்கண் உணவு) தந்து, (பிறகு நீயும்) உணவுண்டாய்; அறங்கள் செய்தாய் - தருமங்கள் பல செய்தனை ; எதிர்ந்துளோர் இருக்கை எல்லாம் சுட்டு உண்டாய் - (உன்னுடன்) மாறுபட்டு எதிர்த்தவர்களின் ஊர்களை எல்லாம் தீயிட்டாய்; உயர்ந்த வேள்வித்துறை எலாம் கரையும் கண்டாய் - உயர்வான யாகத்துறைகள் எல்லாவற்றையும் இயற்றி ஓர் எல்லையும் கண்டாய்; (அத்தகைய மேன்மை வாய்ந்திருந்தும்), மட்டுண்டார் - கள் பருகுவாராகி, மனிசர் தின்ற - நரமாமிசம் உண்பவரான, வஞ்சரால் - வஞ்சகரால், வயிரம் திண்தோள் கட்டுண்டாய் - வன்மை வாய்ந்த உறுதியான புயங்கள் பிணிக்கப்பட்டுள்ளாய் ; யானும் - (உன் மகளாகிய) யானும் (உன் பெருமைகளைக் கண்ணுறவேண்டிய) கண்ணால் - கண்களால், காண்கின்றேன் போலும் - (உன் அவல நிலையைக் கண்ணுறுகின்றேன் போலும்' என்னே - இது என்ன நிலை?

இட்டுண்டாய்; இல்வாழ்வானுடைய முதற் கடமை. இதனைத் திருக்குறள் 'விருந்தோம்பல்' என்ற அதிகாரம் கொண்டுணர்க. 'ஐயமிட்டுண்' (ஔவை.) ; 'எமக் கென்னென்றிட் டுண்டிரும்' (நல்வழி. 10) ; என்பன இங்குக் காணத்தக்கன. 'அறங்கள் செய்தாய்' (ஒப்பு) 'மொய்யார் கலிசூழ் முதுபாரின் முகந்துதானக்

கையார் புனலா னணையாதன கையுமில்லை' (பால. அரசியல் : 3); சனகன் வேள்வித்துறை கரைகண்டமை; 'மறைவேள்விமுற்றி' (பால. மிதிலைக். 156); 'செய்யாத யாக மிவன்செய்து மறந்த மாதோ' (பால. அரசியல். 3). போலும்: ஒப்பில்போலி; அசையு மாம். உண்: துணைவினை.

பி - ம். 1. எதிருளோர்.

2. கட்டுண்டாட் டயர்ந்தாய், கட்டுண்டாய் மறையோர்; தொலைவு கண்டாய்.

3. நின்றூர்; வயிரத்தோள்கள்.

4. கட்டுண்டாய் போலும், யென்னே, நீயே, நியும், என்னோ, கொடிய கன்றூல். 35

1602. என்றின பலவும் பன்னி
யெழுந்துவீழ்ந் திடரிற் றேய்ந்தாள்
பொன்றினள் போலு மென்னப்
பொறியழிந் துயிர்ப்புப் போவாள்
மின்தனி நிலத்து வீழ்ந்து
புரள்கின்ற தனைய மெய்யாள்
அன்றிலம் பேடை போல
வாய்திறந் தரற்ற லுற்றுள்.

என்று இன பலவும் பன்னி - என்று இத்தகைய சொற்களை விரித்துக்கூறி, எழுந்து - கிளம்பி, வீழ்ந்து - (துன்பமிக்கையால் மீட்டும்) வீழ்ந்து, இடரில் தோய்ந்தாள் - துன்பத்தில் மூழ்கி, பொன்றினள் போலும் என்ன - (இவள்) உயிர் நீங்கினளோ என்று கண்டோர் கருதுமாறு, பொறி அழிந்து - புலனுணர்ச்சி கெட்டு, உயிர்ப்பு போவாள் - மூச்சு நீங்கப் பெற்றவள் போல்பவளாய், (பிராட்டி), மின் - மின்னலானது, நிலத்து தனி வீழ்ந்து - நிலத்துத் தனிப்பட்டு வீழ்ந்து, புரள்கின்றது அனைய மெய்யாள் - புரள்வதை ஒத்த உடம்பினையுடையவளாய், அன்றில் அம்பேடை போல - அழகிய அன்றிற் பறவை போன்று, வாய் திறந்து அரற்றல் உற்றுள் - வாய்விட்டுப் புலம்பத் தொடங்கினுள். இவற்றை அடுத்து வரும் பதினேருகவிகளிற் காண்க.

பொறை - பொறுக்கும் தன்மை. மின்நிலத்து வீழ்ந்து புரளு தல்; (ஒப்பு): 'மின்னெனத் துவளுமெய்யாள்' (கிட்கிந்தா. 383);

பிரிந்தால் இறந்துபடும் தன்மை வாய்ந்தது. அன்றில: 'ஒன்றில் காலை யன்றில் போல' (நற்.) என்றது காண்க.

பி-ம். 1. என்றனன்; இடமுற்று; ஒய்ந்தாள், ஒழிந்து.
2. பொன்றினள் ஆகும்; பொறை; உயிர்ப்பும்.
3. மின்திணி; நீசாள்.
4. பேடையே போல். 36

## சனகராசனைக் குறித்துச் சீதை அரற்றுதல்

1603. பிறையுடை நுதலார்க் கேற்ற பிறந்தவிற் கடன்கள் [செய்ய
இறையுடை யிருக்கை மூதா ரென்றும்வந் திருக்க லாதீர்
சிறையிடைக் காண நீருஞ் சிறையிடைச் சேர்ந்த வாரே
மறையுடை வரம்பு நீங்கா வழிவந்த மன்னர் நீரே.

'மறைஉடை வரம்பு நீங்கா - வேதத்தில் அடங்கியுள்ள வான் முறையினின்றும் வழுவாது (நித்ய கன்மங்களை ஆற்றிவரும்)' மன்னர் நீரே - மன்னராகிய நீர், பிறைஉடை நுதலார்க்கு ஏற்ற - பிறை மதியொத்த நெற்றியினையுடைய மகளிர்க்குத் தக்க, பிறந்த இல் கடன்கள் செய்ய - பிறந்த வீட்டார் ஆற்றும் கடமைகளைச் செய்தற்காகவும், இறைஉடை இருக்கை மூதூர் என்றும் வந்து இருக்கலாதிர் - (எமது) தலைவர் (இராமபிரானுடைய) இருப்பிடமாகிய, தொன்மையான ஊருக்கு - என்றும் வந்து தங்காதிருப்பவர் ஆனீர்; நீரும் - (அத்தகைய) நீரும், சிறை இடை காண சிறையிடை சேர்ந்த ஆறே - சிறையிடத்து (என்னைக் காண்பதற்காக) நான் வதியும் சிறையிடத்து வந்த வகையோ? (இது).

மூதூர் என்றும் வந்திருக்கலாதிர்; ஆஹிதாக்கினி என்று சொல்லக்கூடிய வகையில், ஆகவனீயம் காருகபத்தியம் தக்ஷிணக்கினி என்ற முத்தீயும் போற்றி, நித்ய கன்மங்களைத்தவறுமற் செய்பவன் ஆதலின், பிறவிடங்கட்குச் செல்பவன் அல்லன் சனகன் என்பது இங்குக் குறிக்கப்பெற்றது. 'தொன்னியமத் துறை முடித்து' (பால. மிதிலைக். 155) காண்க. 'முறையாலே மறை

வேள்வி முற்றி' (பால. மிதிலைக். 156). பிறையுடை நுதலார்; பெருந் தடங்கண் பிறை நுதலார்க்கெலாம்' (பால. நாட்டு: 36); பெற்றவன், வாழ்க்கைப்படுத்தப்பட்டதன் மகளின் பொருட்டு ஆங்காங்குப் பல பிரமேயங்களில் செய்யவேண்டிய பல கடமைகள் உண்டு. அவை களைச்செய்தற்குக்கூடத்தன் நகரை விடுத்தவன் அல்லன் ஜனகன்; அத்தகையவன், ஒரு தீயவன் நகரில் சிறையாக வர நேர்ந்ததே என்று புலம்புகின்றாள். தன்னைத் தன் கணவன் நகரில் மாளிகையில் காணவேண்டிய மன்னன், அவள் சிறைப்பட்ட நிலையிலே தானும் சிறைப்படுத்தப்பட்டு வரும்படி ஆயிற்றே, என்பது 'சிறையிடைச் சேர்ந்தவாறு' என்றதன் குறிப்பு.

பி - ம். 1. பிறந்தவிக், வக் ; பெற்ற.

2. இருந்தலாகிர், இறுத்திலாநிர் ; இருந்தலாநிர்.

3. சேர்ந்த தெவ்வாறு வேறேர், தெவ்வாறு செப்பும், சிறையொடும் சேர்ந்தவண்ணம்.

4. மறையிடை ; மன்னநிரே, மன்னனிரே. 67

1604. வன்சிறைப் பறவை யூரும் வானவன் வரம்பின் மாயப்
புன்சிறைப் பொறையைத் தீர்ப்பா னுளனெனப் புலவர் [நின்றார்
என்சிறை நீக்கு வாரைக் காண்கிலே னென்னில் வந்த
உன்சிறை விடுக்க வல்லா ரியாருள ருலகத் துள்ளார்.

'வல் சிறை பறவை ஊரும் வானவன் - வலிய சிறகினையுடைய கருடப்புள்ளினை யேறிச்செலுத்தும் திருமாலோ, வரம்பில் - எல்லையற்ற, மாயம் - மாயையின் காரியமான, புல்சிறை பொறையை தீர்ப்பான் - அற்பமான சிறை என்னும் (சமுசாரக் கட்டாகிய) பாசத்தினை அகற்றும் பொருட்டு, உளன் - இருக்கின்றான்' என - என்று மொழிந்த வண்ணம், புலவர் நின்றார் - அறிவுமிக்கவர்கள் மனம் கொண்டு நின்றார்கள் ; (அஃதன்றி) என் சிறை நீக்குவாரை காண்கிலேன் - என்னுடைய சிறை வாழ்க்கையை நீக்க வல்லவரைக் கண்டிலேன் ; என்னில் வந்த - என் பொருட்டால் உனக்கு நேர்ந்துள்ள, உன் சிறை - உன்னுடைய சிறையை, விடுக்க வல்லார் உலகத்து உள்ளார் யார் உளர் - நீக்க வல்லமையுள்ளவர் இவ்வுலகத்துள்ளவரில் யார் இருக்கின்றார்கள்?.

'மாயையின் விளைவாக எழுவது பாசத்தளை; அதனைத் தீர்க்கவல்லவர் திருமால் என்பது அறிஞர் கூற்று. அந்தத் திருமாலின் அமிசம்தான் இராமபிரான்; என்னை இச்சிறையினின்று மீட்பது அவனுக்கு ஓர் பெருங்காரியமன்று; ஆயினும் என்ன காரணத்தாலோ அவன் என்னை மீட்க வந்திலன். இவ்வாறு என் சிறையைப் போக்குவாரில்லையாயின், என் பொருட்டாகச் சிறைப் பட்ட உன்னை மீட்கக் கூடியவர்கள் யார்' என்று வருந்துகின்றாள் பிராட்டி: மாயை அநாதியாகலின் அதன் வரம்பு கண்டார் யாருமில்லை எனப்பட்டது.

பி-ம். 1. ஊரும் மாயவன் வரம்பின், ஊர்தி மழுவலான்; மலரோன்.
2. பிறவி, சிறையைத்; தீரார்; உளர்பிறர், உளரெனப்.
3. தீர்க்குவாரை.
4. விடுக்கற்பாலார், நீக்கற்பாலார், தீர்க்கவல்லார். 30

1605. பண்பெற்று ரோடு கூடாப்
பகைபெற்றாய் பகழி பாய
விண்பெற்று யெனினு நன்றால்
வேந்தரா யுயர்ந்த மேலோர்
எண்பெற்றாய் பழியும் பெற்றாய்
இதுநின்னாற் பெற்ற தன்றால்
பெண்பெற்று யதனாற் பெற்று
யாவர்நின் பேறு பெற்றார்.

'பண்பெற்றாரோடு கூடாபகை பெற்றாய்-நற்பண்பு கொண்டவரோடு உறவு கொள்ளாத பகைவனையுற்றீர்; பகழிபாய விண்பெற்றாய் எனினும் நன்று-(மாற்றான் கைப்பட்டுச் சிறையில் இருத்தலைக் காட்டிலும் மாற்றானுடைய) அம்பு தைத்து வீரர் உலகம் அடைந்தாய் என்றாலும் இனிதாகும்; வேந்தராய் உயர்ந்த மேலோர் எண்பெற்றாய்-மன்னராக வாழ்ந்து உயர்வுற்ற பெரியோர் வரிசையில் எண்ணத்தக்க பெருமை யுற்றீர்; (இப்போது எதிரிகள் கைப்பட்டதனால்) பழியும் பெற்றாய்-பழியும் உற்றீர்; இது-இந்த அவலநிலை, நின்னால் பெற்றது அன்று-நீரே தேடியடைந்த தன்று; பெண்பெற்றாய்-(என்னை) மகளாகப் பெற்றீர், அதனால் பெற்றாய்-அவ்வழியாகப் பெற்றீர்; நின்பேறு யாவர் பெற்றார்-நீ அடைந்துள்ள இந்த பேற்றினை உன்போல் யாவர் பெற்றுள்ளனர்?. ஆல்-அசை.

மானமழிந்தபின் வாழாமை முன்னினிதே' என்றது காண்க. மேலோர் எண்பெற்றாய், மேலோரால் எண்ணப் பெற்றாய் எனினுமாம். இம்மாதிரியான அவலமில்லை உன்னைப்போல் யாவர் பெற்றார் என்பாள் 'யாவர் நின்பேறு பெற்றார்' என்றாள். 'பெண்பெறுகை போலிந்தப் பெரியதுயர் தானுண்டோ பேசுங்காலே' (உத்தர. இராவணன் பிறப்பு. 61).

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 1. பண்பற்றாரோடு; கூடப்பகை பெற்று.

2. வந்தோர்.

3. என்பற்றாய், பெற்றார்; பெற்றதென்றால்.

4. யாரிந்த, யாரின்ன. 30

1606. சுற்றுண்ட பாச நாஞ்சிற் சுமையொடுஞ் சூடுண் டாற்ற
எற்றுண்டு மளற்று நீங்கா வுழுசிறு குண்டை யென்னப்
பற்றுண்ட நாளே மாளாப் பாவியே னும்மை யெல்லாம்
விற்றுண்டே னெனக்கு மீளும் விதியுண்டோ நரகில்
[வீழ்ந்தால்.

'பாசம் சுற்றுண்ட நாஞ்சில் - கயிற்றினால் பிணிப்புண்ட கலப்பையிலே, சுமையொடும் - (நுகத்தின்) பாரத்துடனே, சூடுண்டு - சூடேறப்பெற்றும், ஆற்ற எற்றுண்டும் - மிகவும் அடியுண்டும். அளற்றுநீங்கா - சேறு நிறைந்த வயலினை விட்டு நீங்காமல் (அதிலே), உழு - உழுகின்ற, சிறு குண்டை என்ன - சிறிய காளையைப்போல. பற்றுண்ட நாளே - பகைவனால் கைப் பற்றப்பட்ட நாளிலேயே, மாளா - உயிரை விடாமற்போன, பாவியேன் - தீவினையாட்டியாகிய நான், உம்மை எல்லாம் விற்றுண்டேன் - உங்களை எல்லாம் விலைப்படுத்திவிட்டேன்; நரகில் வீழ்ந்தால் - (இதன் காரணமாக) நான் நரகத்தில் வீழ்ந்தால், எனக்கு மீளும் விதியுண்டோ - எனக்கு (அந்த நரகத்தினின்று) திரும்பும் வகை உள்ளதா?

பாசம் - சூடேற்றிய இருப்புச் சலாகை; சண்டிமாடுகளை உழும்போது குத்தும் கருவி; இங்கு இராவணன் கைப்பட்டுப்

பலர் பழிக்கும் உள்ளாகிச் சிறைப்பட்டு நடைப்பிணமாக உள்ள தன்னைப் பிராட்டி, குத்துண்டு சேற்றிலே உழமாட்டாது அதன் கண்ணே வீழும் எருதாகக் கூறினாள். சனகன் சிறைப் பட்டது, தன் பொருட்டென்று நினைப்பவளாதலின் 'உம்மை எல் லாம் விற்றுண்டேனே' என்றாள். சனகனைப்போன்று, அயோத்தியி லுள்ளவரும் பிறரும் இவ்வண்ணம் சிறைப்படுத்தப்பட்டிருப்பார் களோ என்ற எண்ணத்தால், உம்மையும் எனப் பன்மையாற் கூறினாள். அரக்கன் கைப்பற்றியபோதே இறந்திருப்பின் இத் தகைய நிகழ்ச்சிகளுக்கு இடமில்லையென்றும், தன் பொருட்டுப் பலரும் சிறைப்படுத்தப்பட்டதால் தனக்கு நரகம் உறுதி என்றும், அதனின்றும் மீளும் வகை உண்டோ என்றும் இரங்கு கின்றாள் சீதாதேவி. குண்டை; இள எருது 'வையம்பூண் கல்லா சிறு குண்டை' (நாலடி. 350);

பி - ம். 1. சுற்றுண்டாய; பாசநான்ற, ஆற்றுது.

2. என்று நீங்கா, அளற்று நீங்காது; விழு.

3. பாவியான்.

4. மீளா விதியுண்டே; விழ்ந்தால். 40

1607. இருந்துநான் பகையை யெல்லா மீறுகண்
டளவி லின்பம்
பொருந்தினே னல்லே னெங்கோன் திருவடி
புனைந்தே னல்லேன்
வருந்தினே னெடுநா ளும்மை வழியொடு
முடித்தேன் வாயால்
அருந்தினே னயோத்தி வந்த வரசர்தம்
புகழை யம்மா.

'நான் - நான், இருந்து - (பகைவனிட்ட சிறையிலே) தங்கி, பகையை எல்லாம் ஈறுகண்டு - பகைஞர் எல்லோருடைய முடி வினைக் கண்டு, அளவு இல் இன்பம் பொருந்தினேன் அல்லேன் - எல்லையற்ற இன்பத்தை அடைந்தேனில்லை; எங்கோன் திருவடி புனைந்தேன் அல்லேன் - எம் தலைவனை இராமபிரானுடைய அழகிய சேவடியைச் சிரமிசைச் சூடினேனில்லை; நெடுநாள் வருந்தி னேன் - பத்து மாத காலமாகத் துன்புற்றேன்; உம்மை வழி

யொடும் முடித்தேன் - உம்மை வமிசத்தோடு அழித்தேன்; அயோத்தி வந்த அரசர் தம் புகழை வாயால் அருந்தினேன் - அயோத்தி நகரில் தோன்றி நின்ற மன்னர்களுடைய கீர்த்தியை (என்) வாயினால் உண்டு கழித்தேன். அம்மா-வியப்பிடைச் சொல்.

'அரக்கன் என்னைச் சிறைப்படுத்திய பொழுதே நான் இறந்து பட்டிருத்தல் வேண்டும். இறவாதிருந்தது, பகைவர் அனைவரையும் அழித்து எம்பிரானுடைய திருவடிகளைக் காணலாம் என்ற நினைவினாலேயே; இப்போது உன் வமிசத்தின் அழிவுக்கு மட்டும் அல்ல, அயோத்தி மன்னர்களின் நாசத்திற்கும் காரணம் ஆனேன்' என்று வருந்துகின்றாள் பிராட்டி. வாயால் அருந்தினேன் என்பதில் மானைப்பற்றித் தருமாறு இராமபிரானிடம் வற்புறுத்தி, இத்தகைய கேடுகள் நிகழுமாறு செய்தேன் என்ற தொனியும் காணலாம். வாயால்; மானைப் பிடித்துக்கொண்டு வரச் சொன்ன அந்தப் பொல்லாத வாக்கினால்.

முதலிரண்டடிகட்கு; பொறையிருந் தாற்றியென் உயிரும் போற்றினேன், அறையிருங் கழலவற் காணும் ஆசையால்' (சுந்தர. 499); ஊணிலா யாக்கை பேணி யுயர்புகழ் சூடா துன் முன், நாணிலா திருந்தே னல்லேன், நவையறு குணங்கள் என்னும், பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி தன்னைக், காணலா மின்னு மென்னும் காதலா லிருந்தேன் கண்டாய்' (யுத்த. 1588) என்பன காண்க.

பி - ம். 1. இருந்தயான், இருந்நான்; படையையேவ, பதைத்தது; இறுதி.

3. பழ்யொடும்.

4. புகழை யந்தோ, ஐயா. 41

1608. கொல்லெனக் கணவற் காங்கோர் கொடும்பகை
கொடுத்தே னெந்தை
கல்லெனத் திரண்ட தோளைப் பாசத்தாற்
கட்டக் கண்டேன்
இல்லெனச் சிறந்து நின்ற விரண்டுக்கு
மின்னல் சூழ்ந்தேன்
அல்லனே வெளிய னேயா னலியற்றே
விறக்க லாதேன்.

'கணவற்கு - என்னுடைய பிராண நாயகற்கு, கொல் என - கொல்லுங்கள் என்று, ஓர் - ஒரு, கொடுபகை கொடுத்தேன் - ஒரு கொடிய பகையை ஆக்கித் தந்தேன்; (இப்போது) எந்தை கல் என திரண்ட தோளே - என் தந்தையினுடைய மலையெனும்படி திரண்டதோள்களை, பாசத்தால் கட்ட கண்டேன் - கயிற்றினால் பிணித்திருக்கக்கண்டும், (அதனை விடுவிக்கும் வழியை நாடாமல்), இல் என சிறந்து நின்ற இரண்டுக்கும் இன்னல் சூழ்ந்தேன் அல்லனோ - அகம் என்று சொல்லும் சிறப்புப்பொருந்திய பிறந்தகம் புக்ககம் என்ற இரண்டிடத்திற்கும் துன்பம் விளைக்கும் வழியை எண்ணினவள் ஆகேனோ?, யான் எளியனோ - இவ்வளவு கேடுகளைச் சாதித்த நான் அற்பமானவளோ?, இறக்கலாதேன் - இந்நிலைமையிலும் உயிர் துறவாதிருக்கின்ற நான், அளியற்றேன் - சிறிதும் இரக்கமற்றவள் ஆயினேன். ஆங்கு - அசை.

மாயமானைப் பிடித்துத் தருமாறு மன்றாடியதே பிரிவு என்னும் பெருந்துன்பத்துக்குக் காரணமாகலின், அச் சொல்லையே 'கொல்லெனக் கணவற்காங்கோர் கொடும்பகை கொடுத்தேன்' என்றாள் பிராட்டி யெனினுமாம். இராவணன் கொல்லவும் துணிவானாதலின் இங்ஙனம் கூறினாள் என்க. ஓர் அரக்கனை இராமனாக மாற்றி அவன் தலையைத் துணித்துப் பிராட்டியை மயங்கச்செய்ததாக முதனூல் கூறுவதும் காண்க. 'இல்லெனச் சிறந்து நின்ற இரண்டு; சந்திரவங்கிசமான பிறந்த அகமும் சூரிய வங்கிசமான புக்க அகமும்' என்பது பழையவுரை. 'சூரிய வம்ச குலே ஜாதா சந்த்ர வமிச குலொத்பவா' என்ற அநுமன் வாக்கும் காண்க.

பி - ம். 1. ஈங்கு, இங்கு; நெடும்.

2. கல்லெனத் தடந்தோளிரத்துப்; சிறந்த திண்டோள்; பாசத்தாற் பிணிப்ப.

3. இறுதி சூழ்ந்தேன்.

4. எளியளோ; அளியத்தேன்; நிற்கலாமோ, இருக்கலாமோ, அயர்க்கலாமோ.



1609. இணையறு வேள்வி மேனா ளியற்றியின் றெடுத்த வெந்தை
புணையுறு திரடோள் யாத்துப் பூழியிற் புரளக் கண்டேன்
மணவினை முடித்தென் கையை மந்திர மரபிற் றொட்ட
துணைவனை யினைய கண்டா லல்லது கழிகின் றேனோ.

'மேல் நாள் - முன்னாளிலே, இணை அறு வேள்வி இயற்றி - ஒப்பற்ற யாகத்தைச் செய்து, ஈன்று எடுத்த எந்தை - என்னைப் பெற்றெடுத்த தந்தையாகிய சனகராசனது, புணை உறு திரள் தோள் யாத்து - தெப்பம் போன்ற திரண்ட புயங்கள் கயிற்றாற் பிணிக்கப்பட்டு, பூழியில் புரள கண்டேன் - புழுதியில் புரளும் நிலையைக் கண்டேன்; மணம் வினை முடித்து - திருமணச் சடங்கினைச் செய்து முடித்து, என் கையை மந்திர மரபில் தொட்ட - என் வலது கரத்தை வேத மந்திரங்களிற் கூறியபடி பிடித்த, கணவனை - என் நாயகனையும், இனைய கண்டால் அல்லது - இத்தகைய செயலை (புழுதியிற் கிடத்தலை)க் கண்டாலன்றி, கழிகின்றேனோ - என் உயிர் நீங்கப் பெறுவேனோ?

சனகராசன் வேள்வி செய்யும்போது யாக குண்டத்தில் அயோநிசையாகப் பிறந்தவள் சீதாதேவி என்ற வரலாறு இங்குக் குறிக்கப்பெற்றது, இணையறு வேள்வியியற்றி ஈன்றெடுத்த தந்தை; 'வரம்பின் மணிப்பொற் கலப்பை வயிரத்திண் கொழுமடுத்திட், டுரம் பொருவி னிலம்வேள்விக் கலகில்பல சாலுழுதேம்' (பால. கார்முகப். 16); 'உழுகின்ற கொழுமுகத்தி னுதிக்கின்ற கதிரொளி போல்......பெண்ணரசி தோன்றினாள்' (பால. கார்முகப். 17) என்று வருவன காண்க. சீதை என்ற பதத்திற்கே: சீத் (கலப்பை நுனி) யிலிருந்தும் தோன்றியவள் என உறுப்புப் பொருள் கூறப்படுவதும் உணர்க. பின்னர் மீட்சிப் படலத்து இராமபிரான் பிராட்டியைக் கடிந்து கூறுங்கால், 'குலத்தினிற் பிறந்திலை கோளில் கீடம் போல், நிலத்தினிற் பிறந்தமை நிரப்பினாய்' (யுத்த. மீட்சி. 65) என்றதும் காணத்தகும். மற்றும் இராகவன் கடுஞ்சொற் பொருளாய் சீதாதேவி, 'புனக்கா யாம்பூ நிறத்தானை யன்றி மற்றோர் பூமனையான், மனத்தால் வாக்கா னினையேனேல் வழிதா வெனக்கு மண்மகளே'; 'வருந்தியே பயந்த நீ மற்றென் கற்புமங், கருந்ததிக் கற்புமொன் றூன தென்றிடின், பெருந்துதி மாநிலம் பிளத்தியென் றனள், இருந்துதி யமரரு மேத்துங் கற்பினாள்' (உத்தர. அசுவமேத. 296, 297)ம் காண்க. புணையுறு தோள்: தன்னை அடைந்தாருடைய் வறுமைக்கடற்கு ஓர் தெப்பமாக விளங்கிய தோள் என்க. 'ஈந்தே கடந்தானிரப்போர் கடல்' (பால. அரசியல். 5) என்று தயரதன் புகழப்படுதல் காண்க. மணவினை முடித்தென் கையை மந்திர மரபிற்றொட்ட; 'வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்' (சுந்தர.

640); பண்டுள மறை நெறி பரவிச் செய்தனள்' (பால. கடிமணப். 85); 'மையறு மந்திர முற்றும் வழங்க, நெய்யமை யாகுதி யாவையு நேர்ந்தான், தையறளிர்க்கை தடக்கை பிடித்தான் (பால. கடிமணப். 90). என்று வருவன நோக்குக. ஆசிரியர் முதனூலினின்றும் மாறுபட்டுத் தலைவனை இராமபிரானும் தலைவியும் காந்தருவ மண முறையை மேற்கொண்டதாகக் கூறினும், பின்னர்ப் பல்லோ ரறியக் கரணச் சடங்குகளின்படியே அவர்கள் மணமக்களாயினர் என்று கூறுவர்; கந்தருவ மணமும் பின்னர்க் கரணத்தால் உறுதிப்படும் என்று நூல்கள் கூறுமாகலின்.

பி-ம். 2. புனையறு; தடந்தோள்; ஆர்த்துப், ஆரப்; புரட்டக்.

3. மந்திர விதியால்.

4. இன்னல், வினையேன், இளையேன்; காண்டலின்றியே! கழிகின் றேனே, கழிக்கின்றேனே. 43

1610. அன்னைமீ ரையன் மீரே யாருயிர்த் தங்கை மீரே
என்னையீன் றெடுத்த வெந்தைக் கெய்திய தியாது [மொன்று
முன்னநீ ருணர்ந்தி லீரோ வுமக்கும்வே றுற்ற துண்டோ
துன்னரு நெறியின் வந்து தொடர்ந்திலீர் துஞ்சி னீரோ.

'அன்னை மீர் - தாய்மார்களே! ஐயன்மீரே - பெரியோர்களே! ஆர் உயிர் தங்கைமீரே - என்னுடைய அரிய உயிர் போன்ற தங்கைமார்களே? என்னை ஈன்று எடுத்த எந்தைக்கு எய்தியது யாதும் ஒன்றும் - என்னைப் பெற்றெடுத்த என் தந்தைக்கு நேர்ந் துள்ள (அவல) நிலையினை ஒரு சிறிதும், முன்னம் நீர் உணர்ந்தி லீரோ - நீர் மனத்தால் நினைந்து அறிந்தீரில்லையோ? (அல்லது) உமக்கும் வேறு உற்றது உண்டோ - உங்கட்கும் (என் தந்தைக்கு நேர்ந்தது போன்றே), மற்றும் நிகழ்ந்த கேடு ஏதேனும் உள்ளதோ? துன் அரு நெறியில் வந்து தொடர்ந்திலீர் - (நீங்கள் அனைவரும்) நெருங்குவதற்கு அருமையான வழியிலே வந்து தொடர்ந்தீரில் லையே; துஞ்சினீரோ-ஒருக்கால் நீங்களும் இறந்து போனீர்களோ? ஓகாரங்கள் : வினா.

இங்கு 'அன்னை மீர்' என்றது சனகன் மனைவி முதலானோரை யும், 'ஐயன்மீர்' என்றது சனகன் தம்பியான குசத்துவசன்,

புரோகிதரான சதாநந்தன் முதலாஞேரையும் என்க. 'ஆருயிர்த் தங்கைமீர்' என்றது பரதன் மனைவி மாண்டவி, இலக்குவன் மனைவியான ஊர்மிளை. சத்துருக்கன் மனைவியான சுருதகீர்த்தி என்பவர்களை. துஞ்சுதல்: மங்கலம், முன்னம் - மனக்குறிப்பு. 'முன்னத்தினுணரும் கிளவியும் உளவே' (தொல். சொல். 459); என்னை ஈன்றெடுத்த என்பது அபிமானம் பற்றியெழுந்த சொற்கள்; பிராட்டியை நிலத்தினின்றே பெற்றெடுத்தான் சனகன் ஆதலின்; 'பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே' என்றது காண்க.

பி-ம். 1. அன்னேயே, உன்னேயே; ஐயன்மீரென்.
2. எய்திய துயரமேதும்.
3. முன்னிவீர், உன்னலிர், முன்னுநீ. 44

1611. மேருவிற் கும்பர்ச் சேர்ந்து விண்ணினை மீக்கொண் டாலும்
நீருடைக் காவன் மூதூ ரெய்தலா நெறியிற் றன்ருல்
போரிடைக் கொண்டா ரேனும் வஞ்சனை புணர்த்தா [ரேனும்
ஆருமக் கறையற் பாலா ரனுமனு முளனே நும்பால்.

'மேருவிற்கு உம்பர் சேர்ந்து - மேருவின் மேலிடத்தையுற்று, விண்ணினை மீ கொண்டாலும் - விண்ணுலகத்தைக் கைப்பற்றினாலும், நீர் உடை காவல் மூதூர் - நீரினால் சூழப்பட்ட காவல் அரண் அமையப்பெற்ற தொன்மையான இந்த இலங்காபுரியானது, எய்தலாம் நெறியிற்று அன்று - (பிறரால்) அடைதற்கு ஏற்ற வழியினை யுடையது அன்று, போர் இடை கொண்டார் ஏனும் - நம் பகைவர் (உம்மைச் சேர்ந்தோரின் உயிரைப்) போரிலே கொண்டாராஞலும், வஞ்சனை புணர்த்தார் ஏனும் - மாயச் செய்கையைச் செய்தார் ஆனாலும், உமக்கு அறையற் பாலார் ஆர் - உமக்கு (நிகழ்ந்துள்ளதைச்) சொல்ல வல்லவர்கள் யாவருள்ளனர்? நும்பால் அநுமனும் உளனே - உம்மிடத்து அநுமனும் இருக்கின்ருனே? ஆல்: அசை.

'முன்னர் அநுமனைக்கொண்டே இலங்கைச் செய்திகளை அறிந்தான் இராமபிரான்; அவ்வண்ணம் சனகனுக்கு உற்ற துயரினை அறிவித்தற்கு அநுமனைப் போன்று ஒருத்தர் இல்லாமையின்

யாரும் செய்தியறிய முடியாமல், வராமலிருக்கின்றனர் போலும் என்பது கருத்து. நீர் உடை - நீங்கள் சிறைப்பட்டுள்ள எனினு மாம். நீர் : சலதுர்க்கம் பழையவுரை.

பா - ம். 1. மேருவின்.

2. எய்துவர் ; அன்றே.

3. கண்டார்.

4. உரைக்கற், அறியற் ; உம்பால். 45

இதன்பின் 'பண்பெற்ருர்' என்ற பாடல் சில பிரதிகளில்.

1612. சரதமற் றிவனைத் தந்தார் தவம்புரிந் தாற்றல் தாழ்ந்த
பரதனைக் கொணர்தற் கேது மையுற வில்லைப் பன்னுள்
வரதனும் வாழ்வா னல்லன் தம்பியு மனையன் வாழான்
விரதமுற் றறத்தி னின்ருர்க் கிவைகொலாம் விளைவ
[மென்மேல்.

'இவனை தந்தார் - இந்த சனக மன்னனைப் பிணித்துக்கொண்டு வந்த பகைஞர், தவம் புரிந்து ஆற்றல் தாழ்ந்த - தவமியற்றி வலி குன்றிய, பரதனை கொணர்தற்கு ஏதும் ஐயுறவு இல்லை - பரதனைக் கைப்பற்றிக் கொண்டு வருதற்கு எந்தவிதமான சந்தேகமுமில்லை; சரதம் - இது உறுதி; வரதனும் பன்னுள் வாழ்வான் அல்லன் - (பரதன் விரோதிகள் கையில் சிக்கியபின்பு) இராமபிரானும் பல்நாள் உயிர் வாழ்தல் செய்யான்; தம்பியும் - அவனுடைய தம்பியான இலக்குவனும், அனையன் - அந்த இராமபிரானையே போன்றவனாய், வாழான் - உயிர் தரித்திரான்; விரதம் உற்று அறத்தில் நின்ருர்க்கு இவை கொலாம் மென்மேல் விளைவ - விரத நெறியைக் கைக் கொண்டு அறவழியிலே மனம் ஊன்றியிருக்குமிவர்க்கு, மேன் மேலும் நிகழக் கூடியவை இவை தாமோ? மற்று : வினைமாற்று.

சரதம் - 'சரதமிப்புவியெலாம் தம்பி யோடுமிவ், வரதனே காக்குமேல்' (அயோத்தி. மந்தரை. 57). 'தவம்புரிந்தாற்றல் தாழ்ந்த'; 'வற்கலையி னுடையானை' (அயோத்தி. குகப். 29) எனத் தொடங்கும் செய்யுளையும்; அயோத்தி. கிளைகண்டு. 48ஆம் செய்யுளையும். 'விரதம்பூண் டுயிரினேடுந் தன்னுடை மீட்சி நோக்கும், பரதன் என்ற' (யுத்த.இந்திரசித்து.64) ஆம் செய்யுளையும் காண்க, வரதன் -

அன்பர்கள் வேட்ட வரம் அனைத்தும் அளிப்பவன். அறத்தி னின்றூர் : 'தெவ்வடு சிலையரென் சிறுவர் செவ்வியர், அவ்வவர் துறைதொறு மறம் திறம்பலர்' (அயோத்தி. மந்தரை. 46); தம்பி - சத்துருக்கனுமாம்.

பி - ம். 1. தவம்புரி ; சான்ற.

3. அனைய வாழ்வான், அனையன் வாழா.

4. மேன்மேல். 46

1613. அடைத்தது கடலை மேல்வந் தடைந்தது
மதிலை யாவி
துடைத்தது பகையைச் சேனை யெனச்சிலர்
சொல்லச் சொல்லப்
படைத்ததோ ருவகை தன்னை வேறொரு
வினயம் பண்ணி
யுடைத்தது விதியே யென்றென் றுளைந்தன
ளுணர்வு சோர்வாள்.

'சேனை - குரக்குச் சேனையானது, கடலை அடைத்தது - கடலுக்கு அணைவகுத்தது; மதிலை - இலங்கா நகரத்தின் மதிலை, மேல்வந்து அடைந்தது - எதிர்த்துவந்து சேர்ந்தது, பகையை ஆவி துடைத்தது - விரோதிகளின் உயிரை அழித்தது'; என சிலர் சொல்ல சொல்ல - என்று சிலர் சொல்லும் தோறும் சொல்லும் தோறும், படைத்தது ஓர் உவகை தன்னை - நான் அடைந்த ஒப்பற்ற மகிழ்ச்சியை, விதியே - ஊழ்வினையே, வேறு ஒரு வினயம் பண்ணி உடைத்தது - பிறிது ஓர் சூழ்ச்சி செய்து போக்கியது', என்று என்று - என்று விடாமற் கூறி, உளைந்தனள் - நொந்தவளாய், உணர்வு சோர்வாள் - அறிவு தளரலானாள்.

வினயம் - சூழ்ச்சி ; வினையமீதல்லதில்லை விண்ணு நின் ஆட்சியாக்கி (ஆரணிய. 274). விதி வேறு ஒரு வினயம் பண்ணி யுடைத்தது ; 'ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று, சூழினுந்தான் முந்துறும். (குறள். 380).

பி - ம். 1. அடர்த்தது ; பதியை.

4. உளைத்தனள், உயிர்த்தனள், உரைத்தனள் ; உரையும் ; தீர்ந்தாள், ஓய்ந்தாள். 47

## வேண்டிக் கொண்டால், சீதை வசமாவாள் எனக் கருதி இராவணன் கூறத் தொடங்குதல்

1614. ஏங்குவா ளினைய பன்ன விமையவ ரேற்ற மெல்லாம்
வாங்குவா ளரக்க னாற்ற மனமகிழ்ந் தினிதி னோக்கித்
தாங்குவா ளல்லள் துன்ப மிவனையுந் தாங்கித் தானும்
ஓங்குவா ளென்ன வுன்னி யினையன வுரைக்க லுற்றான்.

ஏங்குவாள் - இரங்குவாளாய், இனையபன்ன - இத்தகைய சொற்களைச் சொல்ல, இமையவர் ஏற்றம் எல்லாம்-தேவர்களுடைய உயர்வினையெல்லாம், வாங்குவாள் அரக்கன் - வாங்கிய வாட்படையையுடைய இராவணன், ஆற்ற மனம் மகிழ்ந்து இனிதின் - மிகவும் மனமுவந்து இனிதாகி, நோக்கி-கண்டு, துன்பம் தாங்குவாள் அல்லள்-(இந்த சீதாதேவி), துன்பம் பொறுக்கமாட்டாள்; (ஆதலின் இப்போது இவள் மனம் கொள்ளப் பேசினால்) இவனையும் தாங்கி-இந்தச் சனகனையும் காத்து, தானும் ஓங்குவாள் - தானும் துயர் அகன்று நிமிர்வாள்; என்ன உன்னி - என்று நினைந்து, இனையன உரைக்கல் உற்றான்- இவ்வாறான சொற்களைச் சொல்லத் தொடங்கினான். இவற்றை மேல் ஆறு செய்யுட்களிற் காண்க.

வாள் : சந்திரகாசம். சிவபிரான் ஈந்தது.

பி-ம். 1. பன்னி; மாற்றம்.
3. என்னையும், இவனையும்.
4. ஓங்குவான்; உணர்த்தல். 48

1615. காரிகை நின்னை யெய்துங் காதலாற் கருத லாகாப்
பேரிட ரியற்ற லுற்றேன் பிழையிது பொறுத்தி யின்னும்
வேரற மிதிலை யோரை விளிகிலேன் விளிந்த போதும்
ஆருயி ரிவனை யுண்ணே னஞ்சலை யன்ன மன்னாய்.

'காரிகை - எழில்வாய்ந்த பெண்ணே! அன்னம் அன்னாய் - நடையால் அன்னம் ஒத்தவளே? நின்னை எய்தும் காதலால் - உன்னைப் பெறவேண்டும் என்கிற விருப்பத்தால், கருதல் ஆகா - நினைத்தற்கும் அடாத, பேர் இடர் இயற்றல் உற்றேன் - பெரிய துன்பத்தினை விளைக்கத்தொடங்கினேன்; இது பிழை பொறுத்தி -

இந்த என் பிழையினைப் பொறுத்துக்கொள்வாயாக; இன்னும் - மேலும், மிதிலையோரை வேர் அற விளிகிலேன் - மிதிலையிலிருப் பவரைவேரொடும் அழியச் செய்யேன்; விளிந்தபோதும் - எனக்குச் சாவு நேர்ந்தபோதிலும், இவன் ஆருயிரை உண்ணேன் - இந்தச் சனகனுடைய அரிய உயிரை நான் கொல்லமாட்டேன்; அஞ்சலை - பயப்படாதே'.

காரிகை: அண்மைவிளி. இது முதலில் அழகு என்ற பண் பினைக் குறித்துப் பின்னர் அழகினையுடைய மாதர்க்காயிற்று. காதல் எனும் பொருள்படும் மாதர் என்பது நாளடைவில் காதற் குரிய பெண்களைக் குறித்ததுபோலும். அருமை + உயிர்: ஆருயிர்; தையலார் வலையிற் பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ' (திருவிளை. இந்திரன் பழி: 4) என்றபடி தையலார் காதல், அறிவைக் கெடுக்கு மாதலின், செய்யத்தக்கது என்னதென்று உணராமற் செய்து விட்டதாகக் கூறி, மன்னிப்புக் கேட்கின்றான். விளிகிலேன் - விளிக் கிலேன்; பிறவினைப்பொருளில் வந்தது.

பி - ம். 1. ஆகப்.
2. பிழையது; பின்னை.
3. வெறுத்தபோதும்.



1616. இமையவ ருலக மேதா னிவ்வுல கேழு மேதான்
அமைவரும் புவன மூன்றி லென்னுடை யாட்சி யேதான்
சமைவுறத் தருவென் மற்றித் தாரணி மன்னற் கின்னல்
சுமையுடைக் காம வெந்நோய் துடைத்தியேற் றொழுது
[வாழ்வேன்.

'இன்னல் சுமை உடை காமம் வெம் நோய் - துன்பம் தருவதும் சுமையாகக் காண்பதும் ஆன இக்கொடிய காதல் பிணியினை, துடைத்தியேல் - போக்குவாயாகில்; (அப்போது), இ தார் அணி மன்னற்கு - இந்த மாலை அணிந்த (விதேக நாட்டுக்கு) வேந்தாகிய சனகனுக்கு, இமையவர் உலகமே தான் - தேவருலகம் வேண்டும் எனினும் சரி, இ ஏழு உலகமே தான் - ஏழு புவனங்கள் வேண்டும் எனினும் சரி, அமைவரும் - பொருந்திய, புவனம் மூன்றில் - மூன்று உலகங்களிலுமுள்ள, என்னுடை ஆட்சியேதான் - என்

னுடைய அரசாட்சி யெனினும் சரி, சமைவு உற தருவென் - சர்வ சுதந்தரமாகும்படி தருவேன் ; (அன்றியும்), தொழுது வாழ்வேன் - அவனைத் தொழுது வாழ்தலும் செய்வேன்.

தொழுது - சீதாதேவியைத் தொழுது எனினுமாம். தாரணி - பூமியுமாம். மற்று : வினைமாற்றுப்பொருளில் வந்தது ; 'மற்றறிவாம் நல்வினை யாம்இளையம் என்னாது' (நாலடி. 19) என்ற இடத்துப்போல, 'தொழுது வாழ்வேன்' என்பதற்குத் 'துவாரபாலகனாக வாழ்வேன் ; என்பது பழையவுரைக் குறிப்பு.

பி - ம். 1. உலகமோதான்.
2. புவன மூன்றும்.
3. பற்றித் ; மன்னற்கே நான். 50

1617. இலங்கையூ ரிவனுக் கீந்து வேறிடத்
திருந்து வாழ்வேன்
நலங்கிளர் நிதிமும் மூன்றும் நல்குவெ
னுமத் தெய்வப்
பொலங்கிளர் மானந் தானே பொதுவறக்
கொடுப்பென் புத்தேள்
வலங்கிளர் வாளும் வேண்டில் வழங்குவெ
னியாது மாற்றேன்.

'வேண்டில் - (நீ) வேண்டிடின், இலங்கை ஊர் இவனுக்கு ஈந்து - இலங்கையாகிய நகரை இந்தச் சனகனுக்குக் கொடுத்து, வேறிடத்து இருந்து வாழ்வேன் - பிறிதோரிடத்திலிருந்து உயிர் வாழ்வேன், நலம் கிளர் நிதி மும்மூன்றும் நல்குவென் - நன்மை மிக்க ஒன்பது நிதிகளையும் (இவனுக்குக்) கொடுப்பேன், நாமம் தெய்வம் பொலம் கிளர் மானம் தானே - புகழ்பெற்ற தெய்வத் தன்மை வாய்ந்த அழகு ஒளிர்கின்ற புட்பகம் என்ற விமானத்தையும், பொது அற கொடுப்பென் - (பலர்க்கும் பொதுவாகவன்றி) இவனுக்கே சிறப்புரிமை யெய்துமாறு அளிப்பேன் ; புத்தேள் - சிவபிரானென தேவன் (தந்த), வலம் கிளர் வாளும் - வெற்றி பொருந்திய சந்திரகாசம் என்னும் வாளையும், வழங்குவென்-

தருவேன்; யாதும் மாற்றேன் - யாதொன்றிலும் (கொடுக்கவியலா தென்று) தவறமாட்டேன்.

நிதி மும்மூன்று - குபேரனுடைய ஒன்பது நிதிகள். மானம்: விமானம் என்பதன் முதற்குறை; வலவனேவா வானமூர்தி என்ப. புத்தேள்: 'புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே' (குறள். 213); 'புத்தேளுலகம் புதல்வரும் தாரார்' (மணி. 22 : 137); 'பத்தினி யில்லோர் பலவறம் செய்யினும், புத்தே ளுலகம் புகாஅ ரென்பது' (22 : 117-118); 'பொருவரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்' (ஆரணிய. 57). வாளும் வேண்டில்: உம்மை உயர்வுசிறப்பு. யாதும் ஆற்றேன் என்று கொண்டு ஒன்றும் செய்யப் போவதில்லை என்ற தொனியும் காண்க. முதலடியில் அமங்கலப் பொருள் அமைந்திருத்தல் உய்த்துணர்க.

பி - ம். 1. ஈந்தேன்; இருந்தியானும், இருப்பனீறில்.
2. நிதிய மூன்றும், நிதி யிரண்டும்.
3. விமானம்; உறக்.
4. நல்குவன்; யாவும்; மாறேன். 51

1618. இந்திரன் கவிக்க மௌலி யிமையவ ரிறைஞ்சி யேத்த
மந்திர மரபிற் சூட்டி வானவர் மகளி ரியாரும்
பந்தரி னுரிமை செய்ய யானிவன் பணியி னிற்பன்
சுந்தரப் பவள வாயா லொருமொழி சிறிது சொல்லின்.

'சுந்தரம் பவளம் வாயால் - (சீதையே)! அழகிய பவளம்போன்ற உனது வாயினால், ஒருமொழி சிறிது சொல்லின் - ஒரு பேச்சைச் சிறிது சொல்வாயானால்; (பிறகு), இந்திரன் மௌலி கவிக்க - தேவேந்திரன் (தலையின்மீது) மகுடத்தை வைக்க, இமையவர் இறைஞ்சி ஏத்த - தேவர்கள் வணங்கித் துதிக்குமாறு, மந்திரம் மரபில் சூட்டி - வேதமந்திரத்துடன் (முன்னோர்க்கணிந்த) முறைப் படியே (இந்தச் சனகனுக்குச்) சூட்டி, வானவர் மகளிர் யாரும் - தேவமகளிர் எல்லாம், பந்தரின் உரிமை செய்ய - (முடிசூட்டிற்காக அமைத்த) பந்தரிடத்தில் உரிய பணிகளைப் புரிய, யான் இவன் பணியின் நிற்டன் - யான் இந்தச் சனகனது ஏவல்வழி நிற்பேன்.

இந்த இலங்கை நகர் ஆட்சிமட்டும் அன்று, தேவேந்திரப் பட்டம் வேண்டினும் இவனுக்கு எய்துமாறு செய்யக்கூடும்

என்கின்ருன் இராவணன். கவித்த மௌலி: 'இளையவற் கவித்த மௌலி' (யுத்த. 445). மந்திரம் மரபு: மகுடம் சூட்டும் போது நிகழும் வேதமந்திர நிகழ்ச்சிகள். மகளிரி யாரும்: குற்றிய லிகரம். தேவேந்திரனே தன் கரங்களால் அணிவிக்க என்பான், கவிக்க என்ருன். இந்தக் கவி விற்பூட்டு.

பி-ம். 1. கவிந்த.

3. யானவன்.

4. பவளவாயோர், வாயிர், வாயாய்; அருள்மொழி; சொல்லிர். 52

1619. எந்தைதன் தந்தை தாதை யிவ்வுல கீன்ற முன்னேன்
வந்திவன் தானே வேட்ட வரமெலாம் வழங்கும் மற்றை
அந்தக னடியார் செய்கை யாற்றுமா லமிழ்தின் வந்த
செந்திரு நீரல் லீரே லவளும்வந் தேவல் செய்யும்.

'(நீர்மட்டும் இணங்குவீரானல்); எந்தை தன் தந்தை தாதை-எனது தந்தையான விச்சிரவ முனிவனுடைய தந்தையான புலத்திய முனிவனின் தகப்பனும், இஉலகு ஈன்ற முன்னேன் தானே வந்து- இந்தப் புவனத்தைப் படைத்த பழமையானவனுமான பிரமன் தானே வந்து, இவன் வேட்ட வரம் எலாம் வழங்கும்- இவன் விழைந்த வரமனைத்தும் ஈவன்; மற்றை-மேலும், அந்தகன்- யமனும், அடியார் செய்கை ஆற்றும்- அடியவர் புரியும் குற்றேவல்களைச் செய்வான்; (பாற் கடல் கடையும் கால்) அமிழ்தின் வந்த- அமுதத்துடன் எழுந்த, செந் திரு நீர் அல்லீரேல்- அந்தத் திருமகள் நீர் அல்லாமற் போனல், அவளும் வந்து ஏவல் செய்யும்- அந்தத்திருமகளும் வந்து ஏவல் தொழில் புரிவாள். ஆல்- அசை.

சொந்தத் தம்பி கும்பகன்னன் கூற்ருலும்; மாலியவான் கூற்ருலும், இராவணன், சீதாதேவி திருமகளே என்னக் கேட்டிருந்தும், முழு நம்பிக்கை ஏற்படவில்லை; ஆகலின் 'செந்திரு நீர் அல்லீரேல்' என்ருன். 1576 உரைக் குறிப்புக்காண்க. 'எந்தை தன் தந்தை தாதை' 'வையம் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்' (சுந்தர. 483); 'தானே கேட்ட வரமெலாம்

வழங்கும்' 'வேதங்கண்ணிய பொருளெலாம் விரிஞ்சனே யீந்தான்' (யுந்த. 130); அந்தகன் அடியார் செய்கை யாற்றுதல்; 'சூலமே முதலிய துறந்து சுற்றிய, சேலையாற் செய்யவாய் புதைத்த செங்கையன், தோலுடை நெடும்பணை துவைக்குந் தோறெலாம், காலனின்றிசைக்கு நாட்கடிகை கூறவே' (ஆரணிய. 570). காண்க.

பி - ம். 1. ஈன்று னெள்முன்.

2. வந்திவண்; கேட்ட, விட்ட; வழங்கி; ஆற்றல்.

3. அந்தமில்; ஆற்றுவேன்.

4. நீரிலிர். 53

1620. தேவரே முதலா மற்றைத் திண்டிறல் நாகர் மண்ணோர்
யாவரும் வந்து நுந்தை யடிதொழு தேவல் செய்வார்
பாவைநீ யிவனின் வந்த பயன்பழு தாவ தன்றால்
மூவுல காளுஞ் செல்வங் கொடுத்தது முடித்தி யென்றான்.

'தேவரே முதலா - அமரர்கள் முதலாக, மற்றை - மற்றுமுள்ள, திண் திறல் நாகர் - மிக்க வன்மை வாய்ந்த பாதாளவுலகத்தினரும்) மண்ணோர் - பூமியில் உள்ளவரும், யாவரும் வந்து - எல்லோரும் வந்து, நுந்தை அடிதொழுது ஏவல் செய்வார் - உன் தந்தையாகிய சனகனுடைய பாதங்களை வணங்கிப் பணிகளை ஆற்றுவார்கள்; பாவை - சித்திரப் பாவை போன்றவளே! நீ இவனின் வந்தபயன் - நீ இந்தச் சனகனிடத்திற் பிறந்ததனால் பெறலாகும் நன்மை, பழுதாவது அன்று - பழுதுபடாது; மூஉலகு ஆளும் செல்வம் கொடுத்து அது முடித்தி - மூன்று உலகங்களையும் ஆட்சிபுரியும் செல்வத்தை (இந்தச் சனகனுக்குத்) தந்து, (நீ இவனுக்கு மகளாகப் பிறந்த) அந்தப் பயனைப் பூர்த்தி செய்வாயாக', என்றான் - என்றுகூறி முடித்தான். ஆல்:அசை.

அது - என்பது இராவணன் விடுத்த வேண்டுகோள். 'தன்னைப் பெற்றதன் காரணமாகத்தான் சனகராசன் பகைவர் கைப்பட நேர்ந்தது' என்று சீதாதேவி எண்ணியிருந்தது கருதி,

'நீ இவனின் வந்த பயன் பழுது ஆவதின்று' என்றான். பாவை: உவமவாகுபெயர்.

பி.ம். 1. முதலினோர்கள்; சிறியநா விறுநியாரோர், சிறுநர சிறுநியாரோர், செறுநரிற் சிறுசியாரோர், அறிஞருஞ் சிறியோர்கள்.

2. ஏவரும்; உன்றந்தை; செய்யப்.

3. இதனில் வந்த; பழுதாகா வண்ணம்.

4. கொடுத்தனன். 54

## இராவணன் சொற்களைக் கேட்ட சீதையின் சினமொழி

1621. இத்திருப் பெறுகிற் பானு மிந்திர
விலங்கை நுங்கள்
பொய்த்திருப் பெறுகிற் பானும் வீடணன்
புலவர் கோமான்
கைத்திருச் சரங்க ளுன்றன் மார்பிடைக்
கலக்கற் பால
மைத்திரு நிறத்தான் தாளென் தலைமிசை
வைக்கற் பால.

'இதிரு பெறுகிற்பானும் இந்திரன் - (மூவுலகும் ஆள்வதான) இந்தச் செல்வத்தைப் பெறவிருப்பவனும் இந்திரனேயாவன்; இலங்கை நுங்கள் பொய்திரு - (என் தந்தைக்குத் தரக் கருதிய) இலங்கையுடன் கூடிய உங்களுடைய பொய்ம்மை மிக்க செல்வத்தை, பெறுகிற்பானும் - அடைய இருப்பவனும், புலவர் கோமான் - அறிஞர்க்கரசாகிய, வீடணன் - வீடணன் ஆவான்; உன்தன் மார்பிடை கலக்கற்பால - உன்னுடைய மார்பின்கண் வந்து கூடுதற்குரியன, மைதிரு நிறத்தான் கைதிரு சரங்கள் - மேகம்போன்ற அழகிய நிறத்தையுடைய இராமபிரான் கையினின்று வெளியேறும் வாளிகள்; (அப்பிரானுடைய தேவியல்லள்); என் தலை மிசை வைக்கல் பால - என தலைமேல் கொள்ளற்குரியவை, மைதிரு நிறத்தான் தாள் - மேகம்போன்று அழகிய நிறத்தையுடையவனுடைய திருப்பாதங்கள்.

நீ இராம பாணத்தால் இறப்பதும், இலங்கையை வீடணன் அடைவதும் மூன்றுலக ஆட்சியினை இந்திரன் பெறுவதுமே இனி

நிகழ்தற்குரியன. எனக்கும் இராமபிரானுடைய திருப்பாத சேவை கிட்டும். 'மைத்திரு நிறத்தான் என்பது இடைநிலை விளக்காக்கப் பட்டது. புலவர் கோமான் வீடணன் எனக்கூட்டப் பெற்றது. 'புலவர் கோமான்'; 'கல்விக்கண்மிக்கோன்' (யுத்த. 74); 'மூதுணர்வின் மிக்கானடல் வீடணன்' (யுத்த. அதிகாயன் : 87);

பி - ம். 2. பொய்த்திருப் புணர்கிற்பானும்.
3. மார்பினில், மார்பொடுங். 55

1622. நகுவன நின்னோ டைய நாயக நாம வாளி
புகுவன போழ்ந்துன் மார்பிற் றிறந்தன புண்க ளெல்லாம்
தகுவன வினிய சொல்லத் தக்கன சாப நாணின்
உகுவன மலைக ளெஞ்சப் பிறப்பன வொலிக ளம்மா.

'ஐயன் நாயகன் நாமவாளி - அழகிய தலைவனான இராம பிரானுடைய பெயர் பொறிக்கப்பட்ட அம்புகள், நின்னோடு நகுவன - உன்னுடன் சிரிப்பனவாய், போழ்ந்து - பிளந்துகொண்டு, உன் மார்பில் - உனது மார்பின் கண், புகுவன - நுழைவனவாய், புண்கள் எல்லாம் - புண்களையெல்லாம், திறந்தன -வெளிப்படுமாறு செய்து, தகுவன - தக்கவான, இனிய-இனிமை விளைக்கக்கூடிய வற்றை, சொல்ல தக்கன - கூறத்தகுதியுடையனவாகும்; உகுவன மலைகள் எஞ்ச - கீழே சாய்வனவான மலைகளும் பின்வாங்குமாறு, சாபம் நாணின் -(அப்பெருமானுடைய) வில் நாணிலிருந்து, ஒலிகள் பிறப்பன-ஒலிகள் பிறக்கப் போகின்றனவாகும். அம்மா : வியப் பிடைச்சொல்.

இராமபிரானுடைய அம்புகள் உன் மார்பினைத் துளைக்கும் போதுதான் உனக்கு நன்மதியுண்டாகப் போகின்றது; நாம வாளி - அச்சம் தரும் வாளியும் ஆம். சாபம் : வில் : வடசொல். 'சாபமே சபித்தல் வில்லாம்' (நிகண்டு).

பி - ம். 1. ஐய நாயகன்.
2. போழ்ந்தபோதுன் மார்பினிற் றிர்ந்த புண்கள், போழ்ந்துன் மார்பிற் புரிவன புண்கள் எல்லாம்.
3. தகுவன வினைய.
4. மலைகள் என்னப் ; பிலப்பன ; ஒளிகள். 56

1623. சொல்லுவ மதுர மாற்றந் துண்டத்தா லுண்டுன் கண்ணைக்
கல்லுவ காகம் வந்து கலப்பன கமலக் கண்ணன்
வில்லுமிழ் பகழி பின்னர் விலங்கெழி லலங்கன் மார்பம்
புல்லுவ களிப்புக் கூர்ந்து புலவுநா றலகை யெல்லாம்.

'கமலம் கண்ணன் - தாமரைபோன்ற விழிகளையுடைய இராமபிரானது, வில் உமிழ் பகழி - வில்லினின்று வெளியேறும் அம்புகள், எழில் விலங்கு அலங்கன் மார்பம் வந்து - அழகுடையதும் குறுக்காக அகன்றதுமான மாலையணிந்த மார்பத்தை வந்து, கலப்பன - கலக்கப்போகின்றன; காகம் - காகங்கள், மதுரம் மாற்றம் சொல்லுவ - இனிய பேச்சுக்களைச் சொல்லுவனவாய், உன் கண்ணை - உன்னுடைய கண்களை, துண்டத்தால் - தம் அலகினால், உண்டு - உண்பதற்காக, கல்லுவ - அகழப் போகின்றன; பின்னர் - அதன்பின், புலவு நாறு அலகை எல்லாம் - புலால் நாற்றம் வீசும் பேய்க்கணங்கள் யாவும், களிப்பு கூர்ந்து புல்லுவ - மகிழ்ச்சி பெருகி உன் மார்பினைத் தழுவப் போகின்றன.

'என்னைத் தழுவ எண்ணி மனப்பால் குடிக்கின்றனை; அது நிகழ்வதன்று. உன் மார்பினைக் காக்கையும் பேயும் தழுவி யுண்ணப் போகின்றன' என்றாள். காகம் மதுர மாற்றம் சொல்லுவ என்பது பிற குறிப்பு; துண்டம்; வடசொல்; அலகு எனப் பொருள்படும். விலங்கெழில் அலங்கல் மார்பம் என்பது இகழ்ச்சி; இத்தொடரை இடை நிலை விளக்காக்கி, பகழி புல்லுவ, அலகை புல்லுவ எனத் தனித் தனி இயைக்கவும் ஆம்.

பி - ம். 1. துண்டத்தாற் கொத்தி; உண்டே, உண்டு, உன்றன்.
2. கணைகள்; வந்துன், உன்றன்.
3. விலங்கலின்.
4. கூர்வ, கூரப், சால்ப், கூர்ந்த; அலகை போலாம், போல. 57

1624. விரும்பிநான் கேட்ப துண்டால்
நின்னுழை வார்த்தை வீரன்
இரும்பியல் வயிர வாளி
யிடறிட வெயிற்றுப் பேழ்வாய்ப்

பெரும்பியல் தலைகள் சிந்திப்
பிழைப்பிலை முடிந்தா யென்ன
அரும்பியல் துளவப் பைந்தா
ரனுமன்வந் தழைத்த வந்நாள்.

'வீரன் - ஆண்மை மிக்க இராமபிரானுடைய, இரும்பு இயல் வயிரம் வாளி இடறிட - இரும்பின் தன்மையைக் கொண்ட உறுதி மிக்க அம்பு தள்ளுவதனால், எயிறு பேழ்வாய் - கோரப்பற்களைக் கொண்ட பிளந்த வாயுடன் கூடிய, பெரு பியல் தலைகள் சிந்தி - பெருத்த கழுத்திலே பொருந்தியுள்ள தலைகள் சிதறப்பட்டு, 'பிழைப்பு இலை முடிந்தாய் என்ன - இனிப்பிழைத்தற்கு வழியில்லை இறுதியுற்றாய்' என்று (நீ மடிந்ததைக் கூறித் தனது), அரும்பு இயல் துளவப் பைதார் அநுமன் - அரும்பும் தன்மை கொண்ட துளவமாலை யணிந்த அநுமன், வந்து - வந்து, அழைத்த அந்நாள் - (இராமபிரானிடம்) அழைத்துச் செல்கின்ற அந்த நாளிலே, நின் உழைவார்த்தை - உன்னைப் பற்றிய அந்த வார்த்தையை, நான் விரும்பி கேட்பது உண்டு - யான் ஆசை யுடன் கேட்கப்போவதுண்டு: ஆல்: அசை.

இராம பக்தன் ஆதலின் துளவப்பைந்தார் குறிக்கப்பெற்றது. அரும்பியல் - என்பதற்குப் அருமையான கழுத்து என்பர் சிலர்; ஆயினும் மூன்றும் அடியில் பியல் என்றே எடுத்துப் பொருள் செய்ய வேண்டுதலின். அரும்பு இயல் என்றே கொள்ளப்பட்டது. நின் உழைவார்த்தை என்றது: இராமபிரான் வாளிகளால், உன் தலைகள் சின்னுபின்னப்பட்டுச் சிதறி, நீயும் மாண்டுபோனாய் என்ற செய்தி, 'ஆழியான வரக்கனை யாரியச், சூழியானை துகைத்தது சோபனம்' (யுத்த. மீட்சி: 17).

பி - ம். 1. விரும்பிய ; நின்னுடை, உன்னுடை.
2. இரும்பிகல்.
3. பெரும்பெயர்த், பெரும்புயத் ; சிந்த ; பிழைப்பில.
4. தரளப், ஆரப், சரளப் ; அளித்த, அளிக்கும். 58

1625. புன்மக கேட்டி கேட்டற் கினியன புகுந்த போரின்
உன்மக னுயிரை யெம்மோய் சுமித்திரை யுய்ய வீன்ற
நன்மகன் வாளி நக்க நாயவ னுடலை நக்க
என்மக னிறந்தா னென்ன நீயெடுத் தரற்ற லென்றாள்.

'புன்மக - அற்ப பிராணியே! கேட்டற்கு இனியன கேட்டி - (மேலும் யான்) கேட்பதற்கு இனிமை விளைப்பனவற்றைக் கேட்பாயாக; (அவை) புகுந்த போரில் - இப்பொழுது விளைந்துள்ள யுத்தத்தில், உன் மகன் உயிரை - உனது புதல்வனான இந்திரசித்தின் உயிரை, எம் ஓய் - எமது அன்னையான, சுமித்திரை - சுமத்திராதேவி, உய்ய ஈன்ற - (நல்வாழ்வினைப் பெறுமாறு) பெற்றருளிய, நன்மகன் - சிறந்த மகனான இலக்குவனுடைய, வாளி - வாளிகள், நக்க - தீண்டி ஒழித்தலின், அவன் உடலை நாய் நக்க - அவனது உடலை நாய்நக்கும் கால், என் மகன் இறந்தான் - என் மகன் உயிர் நீத்தான் என்ன - என்று சொல்லி, நீ எடுத்து அரற்றல் - நீ குரலை உயர்த்திக் கதறுதலேயாம்'. என்றாள் - என்று கூறினாள்.

சீரிய ஒழுக்கமின்மை பற்றிப் 'புன்மக' என விளித்தாள். எம் ஓய் - எம்முடைய தாய்: ஓய் - தாய்; 'ஆரண மறையோனெந்தை யருந்ததிக் கற்பினெம்மோய்' (ஆரணிய. 269); 'என்னினிச் செய்வதெம்மோய் (சுந்தர. 1272); 'நும்மோய்மார்களுந் தம்மின் மகளிரும்' (பெருங். 2, 10, 50). 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும் திண்மை யுண்டாகப்பெறின்' (குறள். 54). என்ற வள்ளுவர் குறள் கூறியாங்கு, இத்தகைய கடுமையான சொற்களைப் பிரதாப லங்கேசுவரன் முன்பு கூறும்படி செய்தது பிராட்டியின் திண்ணியகற்பே என்பது காண்க. 'சொல்லினாற் சுடுவேனது தூயவன், வில்லினாற்றற்கு மாசென்று வீசினேன்' (சுந்தர. 624) என்று பிராட்டி கூறுதல் காண்க. நக்குதல் - தீண்டுதல், நாவினாற் சுவைத்தல் என்ற இருபொருள்களில் வந்தமை காண்க. கேட்டற் கினியன நீ யெடுத்தரற்றல் என இயைக்க. அரற்றல் - தொழிற்பெயர்.

பா - ம். 1. மகன்; உரியன, உரியது.

2. எம்மை; என்ன.

3. நரியவ னுடலம் நக்க, நாய்களவ் வுடலை; உன்ன.

4. என்றெடுத் தெடுத்தரற்றல், என்னநீ யெடுத்தழைப்பது.

## இராவணன் சினந்தெழ மகோதரன் தடுத்தல்

1626. வெய்யவ னனைய கேளா வெயிலுக விழித்து வீரக்
கைபல பிசைந்து பேழ்வா யெயிறுற வழுந்தக் கவ்வித்
தையன்மே லோட லோடு மகோதரன் தடுத்தா னீன்ற
மொய்கழற் றாதை வேண்ட விசையுநீ முனிய லென்றான்.

வெய்யவன் - தீயவனான இராவணன், அனைய கேளா - அத் தகைய சொற்களைச் செவியேற்று, வெயில் உக - வெம்மையான தீப்பொறி சிந்த, விழித்து - நோக்கி, வீரம்கை பலபிசைந்து - வீரம் செறிந்த தனது கைகள் இருபதையும் பிசைந்து, பேழ்வாய் - பிளந்தவாயினை, எயிறு - கோரப்பற்கள், உற - நன்கு பொருந்த, அழுந்த கவ்வி - நன்கு அழுந்துமாறு கடித்துக்கொண்டு, தையல் மேல் ஓடலோடும் - சீதாதேவியை நோக்கி ஓடும் அளவில், மகோ தரன் - மகோதரன், தடுத்தான் - (அவன்) செல்வதை விலக்கி, 'ஈன்ற - இவளைப்பெற்ற, மொய் கழல் தாதை வேண்ட - வலிய வீரகண்டை புனைந்த தந்தையாகிய சனகன் வேண்டிக்கொண்டா னாகில், இசையும் - இவள் இணங்குவாள்; நீ முனியல் - நீ அவள் மீது சினவாதே', என்றான் - என்று சொன்னான்.

கேளா - செய்யா என்னும் வாய்பாடு. முன் இரண்டடிகளில் வெகுளியின் மெய்ப்பாட்டினைக் காண்க. வெகுளியால் தேவியைக் கொல்வதற்கு எண்ணி மேலோடினன் என்க. வஞ்சனையாக உருப் புனைந்து வந்த சனகன் உரையாடுதற்கு, நாடகமுறையில் இடம் அமைக்குமாறு மகோதரன் தடுத்ததாகக் கூறிய நயம் உணர்க.

பி - ம். 1. இனைய, இன்ன.
2. கைகளைப் பிசைந்து; எயிறுபுக்.
3. தடுந்துத் தான்றன்.
4. இசைவனீ. 60

1627. என்றவன் தகைப்ப மீண்டா னுசனத் திருக்க வாவி
பொன்றின னுகு மென்னத் தரைமிசைக் கிடந்த [பொய்யோன்
இன்றிது நேரா யென்னி னென்னையுன் குலத்தி னேடும்
கொன்றனை யாதி யென்னு வினையன கூற லுற்றான்.

என்று - என்று கூறி, அவன் - அந்த மகோதரன், தகைப்படுத்த அளவில், மீண்டான் - திரும்பியவனை அரக்கன், ஆசனத்து இருக்க - (தன்னுடைய) ஆதனத்திலே அமர, ஆவி பொன்றினன் ஆகும் என்ன - (இவன்) இறந்தான் போலும் என்னுமாறு, தரைமிசை கிடந்த பொய்யோன் - பூமிமேல் வீழ்ந்து கிடந்த பொய்யனான மாயச்சனகன், 'இன்று இது நேராய் என்னின் - இப்பொழுது நீ (இந்த இலங்காதிபன் வேண்டுகோட்கு) இணங்காவிடில், என்னை உன் குலத்தினோடும் கொன்றனை ஆதி - '(என்னை), உன் குலத்தினரோடும் அழித்தனை ஆவை', என்னா - என்று, இனையன கூறல் உற்றான் - பின்வரும் சொற்களைப் பேசத் தொடங்கினான். இதனை அடுத்த இரண்டு செய்யுட்களில் காண்க.

ஆசனம் : வடசொல் ; 'அருகாசனத்தர் இவரென்றார்' (வி.பா. திரௌபதி. 36) ; இச்சொல் ஆதனம் எனவும் திரிந்து வழங்கும். நேர்தல் - உடன்படுதல். இது என்றது, மேலே இராவணன் அவள்பால் வேண்டிப் பகர்ந்த சொற்கள். என்னை என் குலத்தினோடும் என்ற பாடத்தைவிடப் பிராட்டியை உளப்படுத்திக்கூறும் உன் என்ற பாடம் சிறந்ததாதல் காண்க. என் குலத்தினோடும் எனின் மருத்தன் குலமாகவே முடிதல் காண்க.

பி - ம். 1. அன்றவன் ; விலக்க ; மீண்டாண்டு.
2. தரையிடைக்.
3. இன்றிது நீராய் ; நேராயாகில் ; என்னையென். 61

1628. பூவின்மே லிருந்த தெய்வத் தையலும் பொதுமை [யுற்றாள்
பாவியான் பயந்த நங்கை நின்பொருட் டாகப் பட்டேன்
ஆவிபோ யழிதல் நன்றோ வமரர்க்கு மரச னுவான்
தேவியா யிருத்தல் தீதோ சிறையிடைத் தேம்பு கின்றாய்.

'பூவின்மேல் இருந்த தெய்வம் தையலும் பொதுமை உற்றாள் - தாமரை மலர்மேல் தங்கியுள்ள தெய்வத்தன்மை பொருந்திய பெண்ணாகிய இலக்குமியும் (பலர்க்கும்) பொதுவாகிய தன்மையைப் பெற்றாள்; பாவியான் பயந்த நங்கை - பாவம் செய்தவனாகிய நான் பெற்ற மகளே! நின்பொருட்டாக பட்டேன் - (நீ இணங்க மறுத்தமையின்) உன் காரணமாகவே யான் சிறைப்பட்டேன் ; (இனியும் நீ

இணங்காவிடில் என் உயிர்க்கு இறுதி நேரும்); ஆவி போய் அழிதல் நன்றோ - அவ்வாறு ஆவி நீங்கிக் கழிதல் மேலானதா? சிறை இடை தேம்புகின்றாய்-சிறையிலிருந்து கொண்டு வருந்துகின்றனே; அமரர்க்கும் அரசன் ஆவான் தேவியாய் இருத்தல் தீதோ-தேவர் கட்கும் இறைவனான இராவணனுக்கு மனைவியா யிருத்தல் தீதாகுமா?

நிதியின் தெய்வமான திருமகள், திருமாலிடத்து மட்டுமன்றிச் செல்வமுள்ளவர் யாவரிடத்தும் வாசம் செய்கின்றமையின் 'பொதுமையுற்றாள்' என்றான். 'கிழவரின்னோ ரென்னாது பொருடான் பழவினை மருங்கிற் பெயர்புபெயர் புறையும்' (கலித். 21); 'எல்லோரிடமும் தங்குகின்றமையால் திருமகளைப் பொதுப்பெண் என்றார்' (சீவக. 150 உரை) 'தாமரைப் பொன்மல, ரெல்லையாகும் பொதுப்பெண்' (சீவக. 1150). 'திரு, வடிவிற்கும் நல்வினையோரிடத்து ஏகும் துணையும் பொதுவாயிருத்தற்கும்' (சீவக. 183. உரை); மற்றும், பழமொழி. 205; மணி. 18; 21-2; பெருங். 1-35. இணங்காவிடின் உன்னைக் கொன்றுவிடுவான், அவனாற் கொல்லப்பட்டு உன் உயிர் நீங்கப் பெறுதல் நல்லதோ என்றான் எனினுமாம்; இராவணன் வெகுண்டு அவள் மேற்சென்றதை அவன் பார்த்திருந்தான் அன்றோ! தேம்புதல்: 'தீய சொற்கள் செவி சுடத் தேம்புவாள்' (அயோத். நகர்நீ. 222).

பி ம். 1. புதுமை.

2. பாவியேன்; நங்காய்.

3. ஆவிபோய் அழிய, அழிகை; நன்றே; அரசாவான்றன், அரசனானன்.

4. இருக்கை; நீதே; தேம்புகின்றீர். 62

1629. என்னையுன் குலத்தி னோடு மின்னுயிர்
தாங்கி யீண்டு
நன்னெடுஞ் செல்வந் துய்ப்பே னுக்கினை
நல்கி நாளும்
உன்னைவெஞ் சிறையி னீக்கி யின்பத்து
ளுய்ப்பா யென்னைப்
பொன்னடி மருங்கு வீழ்ந்தா னுருமுகப்
பொருமு கின்றான்.

உரும்உக பொருமுகின்றான் - இடியும் சிதறும்படியாக அலறி யரற்றுகின்றவனான அந்த மாயாசனகன், 'நல்கி - கருணைகாட்டி, என்னை - என்னை, உன் குலத்தினோடும் - உன் குலத்தினோடும், இன் உயிர் தாங்கி - இனிய உயிரைத் தாங்கி, ஈண்டு - இவ்வுலகில், நல் நெடு செல்வம் - சிறந்த நீண்ட நாள் நிற்கக்கூடிய செல்வத்தை, துய்ப்பேன் ஆக்கினை - அநுபவிப்பவனாகச் செய்து, உன்னை - உன்னையும், வெம்சிறையின் நீக்கி - கொடிய சிறையினின்றும் வெளியேறச் செய்து கொண்டு, நாளும் இனபத்துள் உய்ப்பாய் - என்றும் இன்பத்துறையுட் செலுத்துவாயாக', என்று - என்று பகர்ந்து, பொன்அடி மருங்கு வீழ்ந்தான் - சீதாதேவியின் திருவடிக்கண் வீழ்ந்து வேண்டினான்.

ஆக்கினை : முற்றெச்சம்.

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 1. என்னையென்பும் ; யாண்டும்.

2. துய்ப்பான் ; ஆக்கியே ; நல்கில்.

3. ஓசைதந்தவிப்பாய், இன்பத்தொடவிப்பாய்.

4. பொன்னடியருகு ; உயிருக்கே. 63

## சீதை மாயமென்று கருதிச் சினந்து மீண்டும் கூறத்தொடங்குதல்

1630 அவ்வுரை கேட்ட நங்கை செவிகளை யமையப் பொத்தி
வெவ்வுயிர்த் தாவி தள்ளி வீங்கினள் வெகுளி பொங்கி
இவ்வுரை யெந்தை கூறு னின்னுயிர் வாழ்க்கை பேணிச்
செவ்வுரை யன்றி தென்னச் சீறின ளுளையச் செப்பும்.

அ உரை கேட்ட நங்கை - அந்தச் சொற்களைச் செவிக்கொண்ட சீதாதேவி, செவிகளை அமைய பொத்தி - (தன்) காதுகளை இறுக மூடிக்கொண்டு, வெவ் உயிர்த்து - வெப்பம் உண்டாகப் பெருமூச்செறிந்து, ஆவி தள்ளி - உயிர் வெளியேறுமாறு (மூர்ச்சித்துப்) பிறகு தெளிவெய்தி, வெகுளி பொங்கி வீங்கினள் - சினம் மிகக் கிளர்ந்து ஓங்கப்பெற்று, 'எந்தை - என்னையீன்றவன், இன் உயிர் வாழ்க்கை பேணி - தன்னுடைய இனிய

உயிரைப் பொருட்படுத்தி, இ உரை கூறுன் - இத்தகைய சொற்களைச் சொல்லத் துணியான்; இது செ உரை அன்று - இது சிரிய சொல் அன்று; (போலியாக வந்த ஓர் அரக்கன் உரை)', என்று - என்று கருதி, சிறிளள்-வெகுண்டவளாய், உளைய - (சனகன் உருக்கொண்டு வந்தவனுடைய மனம் புண்பட), செப்பும் - பின்வருமாறு பகரலானாள். அதனை அடுத்துவரும் ஐந்து கவிகளிற் காண்க.

தகாத வார்த்தைகளைக் கேட்கநேரின் செவிகளைப் பொத்திக் கொள்வது இயல்பு; 'செவிகளைத் தளிர்க்கையாலே சிக்குறச் சேமஞ் செய்தாள்' (ஆரணிய. 873). வெகுளி வீங்கிப் பொங்கினள் என மொழி மாற்றுக. இன் உரை வாழ்க்கைபேணி இவ்வுரை கூறுன்: 'மானமழிந்தபின் வாழாமை முன்னினிதே' (இனியவை நாற்பது: 4); 'மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந் தகைமை, பீடழிய வந்த விடத்து' (குறள். 968) என்பன காண்க.

பா - ம். 1. போற்றி.

2. தள்ள, துள்ள, துள்ளி; பொங்க.

4. சிறிய கிளியிற் கூறும். 64

1631 அறங்கெட வழக்கு நீங்க வரசர்த மரபிற் கான்ற
மறங்கெட மெய்ம்மை தேய வசைவர மறைக ளோதும்
திறங்கெட வொழுக்கங் குன்றத் தேவரும் பேணத் தக்க
நிறங்கெட வினைய சொன்னாய் சனகன்கொல் நினையி
[னையா.

'அறம் கெட - தருமம் நிலைகுலையவும், வழக்கு நீங்க - (தொன்மைதொட்டு நடைமுறையில் இருந்துவந்த), வரலாற்று முறை கெடவும், அரசர் தம் மரபிற்கு ஆன்ற மறம் கெட - மன்னர்களுடைய கால்வழிக்குச் சிறந்த வீரம் அழியவும், மெய்ம்மை தேய - சத்தியம் வன்மை குறையவும், வசை வர - பழி பெருகவும், மறைகள் ஓதும் திறம் கெட - வேதங்கள் வகுத்துள்ள அறக் கூறுபாடுகள் நீங்கவும், ஒழுக்கம் குன்ற - நல்லொழுக்கம் அருகவும், தேவரும் பேண தக்க - தேவர்களும் ஆதரிக்கத் தகுந்த, நிறம் கெட - மேன்மை ஒழியவும், இனைய சொன்னாய் - இத்தகைய அடாத சொற்களைப் பகர்ந்தனை; நினையின் - ஆய்ந்து கருதுமிடத்து, ஐயா - ஐயனே!, சனகன் கொல் - நீ சனகன் தானோ?

அறம் - ஒருவனுக்கு ஒருத்தி என்ற தரும நெறியும், பிறனை விழைதல் கூடாது என்ற கற்பு நெறியும். வழக்கு - தகாத நெறியை வற்புறுத்தலாகாது என்பது. அரசர் தம் மரபிற் கான்ற மறம் - உயிருக்கஞ்சித் தகாத சொற்களைச் சொல்லாமை. மெய்ம்மை - உண்மையான கற்புநெறி. வசை - கற்புநிலை தவிர்ந்து பிறனைக் கூடுமாறு கூறுவதால் உண்டாகும் பழி. மறைகள் ஓதும் திறம்: எந்நாளும் இனிய மக்களைப் பயந்து கற்புநிலை கலங்காது கணவனைப் பின்பற்றி நிற்கும் நெறி. தேவரும் பேணத் தக்க நிறம்: 'தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத், தெய்வந் தொழுந்தகைமை திண்ணமால்' (சிலப். 23 கட்டுரை வெண்பா) என்பது போன்ற சிறப்புரைகள். முன் கவியில், 'இவ் வுரை எந்தை கூறுன்' என்ற தொடரை அநுவதித்து, இனைய சொன்னயாதலின் நீ சனகன்கொல் என்று ஐயுற்றுக் கூறினுள் என்க. 'மறனிழுக்கா மானமுடைய தரசு' (குறள். 385) என்றது காண்க.

பி - ம். 1. மரபுக்கு, அமைவுக்கு.
2. வன்மை, மென்மை.
4. நீகொலாம்; சனகனென்பாள்; நீயுமையா. 65

1632. வழிகெட வரினுந் தத்தம் வாழ்க்கைதேய்ந்
திறினு மார்பம்
கிழிபட வயில்வேல் வந்து கிழிப்பினுஞ்
சான்றோர் கேட்கும்
மொழிகோடு வாழ்வ தல்லான் முறைகெடப்
புறநின் றூர்க்கும்
பழிபட வாழ்கிற் பாரும் பார்த்திப
ருளரோ பாவம்.

'வழி கெட வரினும் - (தம்முடைய) கால்வழியே அழிய நேர்ந்தாலும், தம்தம் வாழ்க்கை தேய்ந்து இறினும் - தங்கள் தங்களுடைய வாழ்வே கழிய நேர்ந்தாலும், மார்பம் கிழிபட அயில் வேல் வந்து கிழிப்பினும் - மார்பு பிளக்கும்படி கூரிய வேல் புகுந்து கிழித்தாலும், சான்றோர் கேட்கும் மொழி கொடு வாழ்வது அல்லால் - சால்புடைய பேரறிஞர் (செவி தந்து) கேட்டற்குரிய

புகழ் உரையை எய்தி வாழ்தல் அன்றி, முறை கெட - நீதிமுறை குலைய, புறம் நின்று ஆர்க்கும் - பின்னின்று (பலரும்) ஆர்ப்பரித்துத் தூற்றும்படியாக, பழி பட - வசை நிகழ, வாழ்கிற்பார் பார்த்திபரும் உளரோ - உயிர் வாழ்பவரான மன்னர்களும் (உன்னையல்லாது) இருக்கின்றனரோ? பாவம்: இரக்கம்.

வழி - சால்வழி (சந்ததி). அயில்வேல்: இருபெயரொட்டுமாம். சான்றோர் - சால்பு மிக்கோர்; 'அன்புநாணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ, டைந்துசால் பூன்றிய தூண்' (குறள். 983) என்றபடி இந்த ஐந்து பண்புகளும் அமையப்பெற்றவர் என்க. இங்கு, 'திங்கள் மறுவாற்றும் சான்றோர் அஃதாற்றார், தெருமந்து, தேய்வர் ஒருமா சுறின்' (நாலடி. 151); 'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர்நீப்பர் மானம் வரின்' (குறள். 969) என்பன காணத் தகும். புறம் நின்றார்த்தல் - புறம்பழித்து நிற்றல். முன்னர்ச் சனகன் கொல் என அயிர்த்தாள் எனினும், சனகனுக்கும் அங்குக் காணப்பட்டவனுக்கும் சிறிதும் வேற்றுமை புலப்படாமையின், தந்தையாகவே மனம்கொண்டு கூறுகின்றாள் எனக் கொள்க. மற்றும், இச்செய்யுள் இராவணனைப் பார்த்துச் சீதாதேவி கூறியதுமாம்.

பி - ம். 1. தந்தம்; தேய்ந்திடினும்; மாரும்.
2. கிடைப்பினும், கிடைக்கினும்; ஆன்றோர் கூறும்.
3. மொழிபட.
4. வாழுகின்றோர், வாழுகின்ற, வாழ்தல் செய்யும். 66

1633. நீயுநின் கிளையு மற்றிந் நெடுநில வரைப்பு நேரே
மாயினு முறைமை குன்ற வாழ்வெனோ வயிரத் திண்டோள்
ஆயிர நாமத் தாழி யரியினுக் கடிமை செய்வேன்
நாயினை நோக்கு வேனோ நாண்டுறந் தாவி நச்சி.

'நீயும் - நீயும், நின் கிளையும் - உன் உறவினர்களும், மற்றும் - பின்னும், இ நெடு நிலம் வரைப்பும் - இந்த நீண்ட தரைப்பரப்பில் உள்ளவரும், நேரே மாயினும் - (என்) விழியெதிரில் தானே இறந்துபடினும்; (நான் ஒழுக்கத்தைக் கைவிடுதலால் அவர்கள் அனைவரையும் வாழ்விக்கக்கூடும் எனினும்), முறைமை குன்ற வாழ்

வெனே - ஒழுக்கநெறி வழுவும்படி வாழ விழைவனே ? வயிரம் திண் தோள் - வயிரம்போன்று வலிய புயங்களையுடையவனும், ஆயிரம் நாமத்து - ஆயிரம் பெயர்களைக் கொண்டவனும், ஆழி- சக்கரப்படையைக் கொண்டவனுமான, அரியினுக்கு அடிமை செய்வேன் - திருமாலின் அமிசமான இராமபிரானுக்கு ஏவல் புரியும் நான், ஆவி நச்சி - உயிரினை விரும்பி, நாண் துறந்து - வெட் கத்தை விட்டு, நாயினை நோக்குவேனே - நாயினை ஏறெடுத்தும் பார்ப்பேனே ? ஓ - எதிர்மறை.

கிளை - உவமவாகுபெயராக உறவினரைக் குறித்தது. வரைப்பு - இடவாகுபெயராக, பூமி வரைப்பில் வாழ்வோரைக் குறித்து நின்றது. முறைமை குன்ற வாழ்வெனே: 'ஒழுக்கம் விழுப்பம் தரலா லொழுக்கம், உயிரினு ஓம்பப் படும்' (குறள். 131); சுந்தர. 494 ; (ஒருசார் ஒப்பு): 'இழித்தக்க செய்தொருவன் ஆரவுண லின், பழித்தக்க செய்யான் பசித்தல் தவறேு, விழித்திமைக்கு மாத்திரை யன்றேு வொருவன், அழித்துப் பிறக்கும் பிறப்பு' (நாலடி. 502); 'உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும், குடிப் பிறப் பாளர்தம் கொள்கையிற் குன்ருர்' (நாலடி. 141); 'நாணு லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டு, நாண்டுறவார் நாணுள் பவர்' (குறள். 1017). இராவணனை நாய் என்று இழித்துக் கூறுகின்ருள் சீதாதேவி; 'பொங்கெரிப் புனித ரீயும் அவியைநாய் வேட்ட தென்ன' (ஆரணிய. 873). இனிச் சனகன் குணம் மாறியதுபற்றி அவனை நாயென்ருள் எனினுமாம்; 'நாயினும் கடைப்பட்டோனே' என (1634)ல் வருவதும் காண்க. இச்செய்யுளும் இராவணனை நோக்கிச் சீதாதேவி கூறியது என்ப. பிராட்டி இராமபிரானைத் திரு மாலாகவே நினைக்கின்ருள் என்பது மூன்ரும் அடிகொண்டு அறிய லாம்; (ஒப்பு): 'நாராயணனே தனி நாயகனே'; 'ஆயிரம் பெயரவன்' (யுந்த. கும்ப. 303); 'ஆயிரம் பெயரினுனும்' (யுத்த. நாகபாசப். 214); 'ஆயிர நாமத் தண்ணல்' (யுத்த. நாகபாசப். 218)' 'பேரா யிர முடையான்' (யுந்த. நிகும்பலை. 101) என்பனவும் காண்க.

பி - ம். 1. மற்ற ; வரைப்பின்.

2. வாழ்வனே.

3. ஆழியையனுக்கு ; செய்தேன்.

4. நச்சுவேனே, நீண்டுவேனே ; உயிரை.

1634. வரிசிலை யொருவ னல்லான் மைந்தரென்
மருங்கு வந்தார்
எரியிடை வீழ்ந்த விட்டி லல்லரோ
வரசுக் கேற்ற
அரியொடும் வாழ்ந்த பேடை யங்கணத்
தழுக்குத் தின்னும்
நரியொடும் வாழ்வ துண்டோ நாயினுங்
கடைப்பட் டோனே.

'நாயினும் கடைப்பட்டோனே - நாயினும் இழிந்தவனே! வரிசிலை ஒருவன் அல்லால் - கட்டமைந்த வில்லேற்ற இராமபிரானே யன்றி, என் மருங்கு வந்தார் மைந்தர் - என்னை அணுக வந்தவரான (பிற) வீரர்கள், எரி இடை வீழ்ந்த வீட்டில் அல்லரோ - இச்சுடரில் (சென்று) படிந்திருந்த விட்டிற் பூச்சிகள் அல்லரோ? அரசுக்கு ஏற்ற - (விலங்குகட்கெல்லாம்) தலைமையாதற்குத் தக்க, அரியொடும் - ஆண்சிங்கத்துடன்; வாழ்ந்த பேடை - கூடி நின்ற பெண் சிங்கம், அங்கணத்து அழுக்குதின்னும் - சாக்கடையில் உள்ள அழுக்குப் பொருளைத் தின்னும், நரியொடும் வாழ்வது உண்டோ - நரியுடனே வாழ்வது எங்கேனும் நடைபெறக்கூடியதா? ஓ - எதிர்மறை.

வரிசிலை: 'வரிசிலை வடித்த தோளான்' (ஆரணிய. 276.); மைந்து - வலிமை; ஆதலின் மைந்தர் வலியர் எனப்பட்டது. மருங்கு வந்தார் என்பதனால், ஆராயாது தன்னை எதிர்த்து வந்தவர் என்க. எரியிடை வீழ்ந்த விட்டில் இந்த உவமையை அடிக்கடி கையாள்வர் ஆசிரியர்; 1493 உரைக்குறிப்புக்காண்க. கடையிரண்டடிக்கு (ஒப்பு): (ஆரணிய. 873). இதே உவமையை இராவணன் கூறுதலும் காண்க. (1543). இங்கு அரி இராமபிரானுக்கும் நரி இராவணனுக்கும் உவமை. வஞ்சனையாற் பிராட்டியைக் கவர்ந்து வந்தநிலையில் நரி பொருத்தமான உவமை. இலங்கேசனை நாய் எனக் கூறுமாறு பிராட்டியின் கற்பூற்றம் இருந்தவாறு: நாயினும் கடைப்பட்டோனே என்றது மாயா சனகனை.

பி - ம். 1. வந்தால்.
2. அல்லவோ.
3. வாழும்பேடு.

1635. அல்லையே யெந்தை யானு யாகத்தா னலங்கல் வீரன்
வில்லையே வாழ்த்தி மீட்கின் மீளுதி மீட்சி யென்ப
தில்லையே லிறந்து தீர்தி யிதுவலா லியம்ப லாகாச்
சொல்லையே யுரைத்தா யென்றும் பழிகொண்டா
[யென்னச் சொன்னுள்.

'எந்தையே அல்லை - (நீ இங்ஙனம் பொருந்தாக் கூற்றுப் புகன்றதால்) நீ என் தந்தையல்லை என்பது தெளிவு; எந்தை ஆனுய் ஆக - (நீ நற்பண்புகள் மிக்க) என் தந்தையாகவே இருப்பின், அலங்கல் வீரன் - வெற்றிமாலை புனைந்த ஆண்டகையான இராமபிரானுடைய, வில்லையே வாழ்த்தி - வில்லையே வாழ்த்திச் சொல்லி, மீட்கின் - (அவன்) மீட்டால், மீளுதி - பகைவர் பிணிப்பினின்றும்) விடுபடுவாய்; மீட்சி என்பது இல்லையேல் - அவனுல் மீட்கப்படுதல் என்பது இன்ருனுல், இறந்து தீர்தி - உயிர் துறந்தொழிவாயாக; இது அலால் இயம்பல் ஆகா - இதுவன்றி வேருென்றும் சொல்வதற்கில்லை'; இயம்பல் ஆகா சொல்லையே உரைத்தாய் - பகரத்தகாத வார்த்தைகளையே பேசி, என்றும் பழி கொண்டாய் - என்றும் (நீங்காத) பழியைப் பெற்ருய்' என்ன சொன்னுள் - என்று கூறினுள். தான் - அசை.

அல்லையே: ஏகாரம் தேற்றம். தன் தந்தையல்லன் என்று முன்கருதியிருந்தும் மீண்டும் ஒருகால் சனகனுயிருந்தால் என் செய்வது என்ற ஐயம் கொண்டு, 'எந்தை ஆனுய் ஆக' என்ருள். வில்லையே வாழ்த்தி: பிறிதெதனையும் வாழ்த்தாது எனப் பொருள் தருதலின் ஏகாரம் பிரிநிலை: உண்மைச் சனகன் ஆயின் மீட்பன், இன்றேல் கொல்வன் இராமபிரானுதலின் 'மீட்சி' தீர்தி என முறைப்படுத்தினுள். எந்தை என்பதும், இயம்பல் ஆகா என்பதும் இடைநிலை விளக்காக முன்னும் பின்னும் இணைத்துப் பொருள் செய்யப்பட்டன. 'இயம்பலாகாச் சொல் உரைத்துப் பழி கொள்ளுதல்' 'பழியிது பாவமென்று பார்க்கிலை பகரத்தக்க மொழியிவை யல்லவென்ப துணர்கிலை. (1585) என முன்னர் வந்தது காண்க. மீட்டுமீட்டும் சொன்னதையே சொன்னுன் ஆகலின் 'சொல்லையே யுரைத்தாய்' என்ருள். இராமபிரான் மீட்காமற் போனுல், மானஃழிந்தபின் உயிர் வாழ்தல் நன்றன்ருகலின்

'இறந்து தீர்தி' என்றாள். 'மீளுதும்' என்ற பாடத்துக்குப் பிராட்டி, சனகனை உளப்படுத்திக் கூறியதாகக் கொள்க; உண்மைச் சனகனுகவேயிருந்து மீட்சியுண்டானல் இருவரும் சிறையினின்று மீளுவோம் என்றது கருத்தாகக் கொள்க.

பா - ம். 1. அல்லையேல்; ஆகத்தால்; யாக்கஹன்.
2. தொழுது வாழ்த்தி, வாழ்த்தி மீளின்; மீள்வது, மீள்வதும்.
3. நீர்தும், இயப்பலாத, நீய சொல்லே.
4. என்னும். (9)

## அதுகேட்ட இராவணன் செயல்

1636. வன்றிற லரக்க னன்ன வாசக மனத்துக் கொள்ளா
நின்றது நிற்க மேன்மே னிகழ்ந்தவா நிகழ்க நின்றான்
இன்றிவ னல்லன் போலா மென்றனை கணத்தின் கண்ணே
கொன்றுயிர் குடிப்ப னென்னுச் சுரிகைவா ளுருவிக்
[கொண்டான்.

வல்திறல் அரக்கன் - கொடிய வன்மைவாய்ந்த இராவணன், அன்ன வாசகம் (சீதாதேவி பகர்ந்த) அந்த வார்த்தைகளை, மனத்து கொள்ளா - நெஞ்சிற் கொண்டு, 'நின்றது நிற்க - (நின் உள்ளத்து) நிலைபெற்றது இருக்கட்டும்; மேன்மேல் நிகழ்ந்தவா நிகழ்க - மேன்மேலும் நடந்தபடி நடக்கட்டும்; இன்று - இப் போது, நின்றான் இவன் - (உன்முன்பு) நிற்கும் இவன், அல்லன் போலாம் என்றனை - தந்தை அல்லன் போலும் என்று சங்கை கொண்டுரைத்தாய்; (இந்தச் சனகனை) கணத்தின் கண்ணே - இந்தக் கணத்தில் தானே, கொன்று உயிர் குடிப்பன் - கொன்று அவன் உயிரைப் பருகுவேன்' என்னு - என்று சொல்லி, சுரிகை வாள் உருவிகொண்டான் - சுரிகை என்ற தனது உடைவாளை உறையினின்றும் உருவியெடுத்துக் கொண்டான்.

நிகழ்ந்தவா: நிகழ்ந்தவாறு: ஈறுகுறைந்தது. 'தொட்ட தோர் சுரிகையாளன்' (1574): சுரிகையினைச் சுற்றுவாள் என்றும் கூறுவர்; ஆடையிற் செருகி வைத்திருக்கும் சிறுவாள் 'சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடை' (பெரும்பாண். 73; முல்லைப். 46-47); இதனைக் குற்றுவாள், உடைவாள் என்றும் கூறுப. 'சுரிகை

பத்திரம் என்னும் ஒருவகை வாள்' (சீவக. முத்தி. 2764 உரைக் குறிப்பு); 'சுரிகையம் பூங்கச்சிடைக் கோத்து வாங்கி' (சீவக. 698); மற்றும் (பெருங். 1 : 137 ; 2 : 5 ; 143-46.

பி - ம். 1. கொள்ளான்.
2. மண்மேல்; நின்முன்.
3. நின்றவன்; இன்னே, நின்முன், முன்னே.
4. நடக்கை; உரிஇக் கொண்டானல். 70

### அதுகண்டு சீதாதேவியின் உறுதி

1637. என்னையுங் கொல்லா யின்னே யிவனையுங்
கொல்லா யின்னும்
உன்னையுங் கொல்லாய் மற்றிவ் வுலகையுங்
கொல்லா யானே
இன்னலு நீங்கி யென்றுங் கெடாப்புக
ழெய்து கின்றேன்
பின்னையு மெங்கோ னம்பிற் கிளையொடும்
பிழையா யென்ருள்.

'என்னையும் கொல்லாய் - (நீ) என்னையும் கொல்வாயல்லை; இன்னே - இப்போது, இவனையும் கொல்லாய் - இவனையும் கொல்ல மாட்டாய்; இன்னும் - மேலும், உன்னையும் கொல்லாய் - (என்மீது உனக்குள்ள ஆசை காரணமாக) நீ தற்கொலையும் செய்துகொள் ளாய்; மற்று - அல்லாமலும், இ உலகையும் கொல்லாய் - இந்த உலகத்தவரையும் கொல்லாய்; பின்னையும் - பின்னும், எம் கோன் அம்பின் - எமது தலைவனாகிய இராமபிரானுடைய வாளியால், கிளையொடும் பிழையாய் - சுற்றத்தொடும் உயிர் வாழப்பெருய்; யான் - நான்; (அப்போது), இன்னலும் நீங்கி - துன்பமும் ஒழியப் பெற்று, என்றும் கெடா புகழ் எய்துகின்றேன் - எக்காலும் அழியாததான புகழைப் பெறுவேன்', என்ருள் - என்று மொழிந் தாள். ஓ - அசை.

'வீண்வார்த்தை வேண்டாம; என்னைக் கொல்வதோ இந்தச் சனகனைக் கொல்வதோ உன்னால் இயைவதன்று. ஆயினும்,

உன்னை நீயே தற்கொலை செய்துகொள்ளக்கூடும் எனில் அதுவும் உன் ஆசை என் மீதுள்ளளவும் செய்யவும் துணியாய்' என்றாள் சீதாதேவி. உன்னையும் கொல்லாய்: 'உன்னை யான் பிசைந்து தின்ன, வெண்ணுவ னெண்ணிப் பின்னை பெண்ணுயி ரிழப்பென்' (ஆரணிய. 871) என்றதும் 'உம்மை நினைப்புலிட்டாவி நீக்க அஞ்சினேன்' (யுத்த. 1576) என்பதும் இங்கு ஒப்பு நோக்குக. உலகு: இடவாகுபெயர். இன் அல் - இனிமையல்லாதது எனவே துன்பம் என்று பொருள்படும். அல்: பெயர்விகுதி.

பா - ம். 1. இன்னம்.
2. உன்னையே; கொல்ல; முற்றிவ்.
3. இன்னுயிர்; ஏந்தி நின்றேன்.
4. அம்பால். 71

## இராவணன் சனகனைக் கொல்வதை மகோதரன் விலக்கல்.

1638. இரந்தனன் வேண்டிற் றல்லா லிவன்பிழை
யிழைத்த துண்டோ
புரந்தரன் செல்வத் தைய கொல்கையோர்
பொருளிற் றேதான்
பரந்தவெம் பகையை வென்றா னின்வழிப்
படரு நங்கை
யரந்தைய ளாகு மன்றே தந்தையை
நினைவ தானல்.

'புரந்தரன் செல்வத்து ஐய - இந்திர திருவினையுடைய தலைவனே!, இவன் இரந்தனன் வேண்டிற்று அல்லால் - இந்தச் சனகன் (தன் மகளிடத்து) இரந்து (உன் எண்ணத்திற்கு இணங்கும்வண்ணம்) வேண்டியதன்றி, இழைத்தது பிழை உண்டோ - (இவன்) உனக்குச்செய்த தவறு ஏதேனும் உண்டோ? கொல்கை ஓர் பொருளிற்றோ - கொல்வது ஓர் பெருஞ்செய லாகுமோ? பரந்த வெம் பகையை வென்றால் - பரவிய கொடிய பகைவனை (நீ) வெற்றிகொண்டால், நின் வழி படரும் நங்கை -

உனதுவசத்தில் வந்தடைபவளான (இந்தச் சீதாதேவியாகிய) பெண், தந்தையை நினைவது ஆனால் - (அப்போது) தன் தந்தையைக் குறித்து நினைக்க நேருமாயின், அரந்தையள் ஆகும் அன்றே - துன்பப்படுபவள் ஆவள் அல்லவோ?' ஓகாரம் - எதிர்மறை; இழைக்கவில்லை என்க. தான் : அசை.

இரந்தனன் : முற்றெச்சம். இன்னமும் சனகனாக வந்தவன் உண்மைச் சனகன் என்ற எண்ணமே பிராட்டி மனங்கொள்ளும் பொருட்டாக, 'தந்தையை நினைவதானால் அரந்தையள் ஆகும்' என்றது கொண்டு அவன் சூழ்ச்சியின் முடிந்தநிலை இங்கு புலனாகும். அரந்தை - துன்பம்; 'அரந்தைவெம் பிறவி யென்னேய்க் கருமருந் தனைய ஐயா' (கிட்கிந்தா. 349).

பா - ம். 1. இயற்றிற்று, இயம்பிற்று.
2. சொல்கையோ பொருந்திற்றேதான்.
3. இவள் வழிப், அவள்.
4. தாதையை; நினைப்பது, நலிவது. 72

## கும்பகன்னன் இறந்தது கண்ட தேவர்களின் முழக்கமும் வாநரர்களின் ஆர்ப்பும் இராவணன் காதில் விழுதலும் அவன் சிந்தனையும்

1639. என்றவன் விலக்க மீட்டாண் டிருந்ததோ ரிறுதி யின்கட்
குன்றென நீண்ட கும்ப கருணனை இராமன் கொல்ல
வன்றிறற் குரங்கின் தானை வானுற வார்த்த வோதை
சென்றன செவியி னூடு தேவர்க ளார்ப்புஞ் செல்ல.

என்று - என்று கூறி, அவன் - அந்த மகோதரன், விலக்க - விலக்கிய அளவில், மீட்டு - (இராவணன்) அதனைச் செய்தனின்றும் மனத்தைத்திருப்பி, ஆண்டு - அவ்விடத்தில், இருந்தது ஓர் இறுதியின் கண் - வீற்றிருந்த ஒரு சமயத்தில், குன்று என நீண்ட - மலை போன்றுயர்ந்துள்ள, கும்பகருணனை இராமன் கொல்ல - கும்பகன்னனை இராமபிரான் கொன்றுவிட்டதால், வல் திறல் குரங்கின் தானை - திறல்வாய்ந்த வாநரச்சேனையானது, வான் உற ஆர்த்த ஓதை - விண்ணினைச்சென்று எட்டும்படி ஆரவாரித்த ஒலியுடன்,

தேவர்கள் ஆர்ப்பும் செல்ல - தேவர்கள் செய்த பெருமுழக்கமும் உடன்சென்றதால், செவியின் ஊடு சென்றன-(இராவணனுடைய) காதில் விழுந்தன.

மீண்டு - பிறவினையாகக்கொள்ளப்பட்டது, இறுதியின்கண் சென்றன என இயைக்க. மாயாசனகப் படலம் கம்பன் படைப்பு; முதனூலில் இவ்வரலாறு இல்லை. முன்னர் இலக்குவன் போன்று ஓர் மாய உருவத்தை உண்டாக்கி அதனைத் துணித்ததும், பிராட்டி புலம்பியதும், திரிசடை அது மாயம் எனச் சொல்லி அவளைத் தேற்றியதும் கண்டோம். முதனூல் இராமனையும் அங்ஙனம் செய்ததாகக் கூறும். கபடநாடக சூத்திரதாரியான மாயையில் வல்ல இராமபிரானிடம், அரக்கன் மாயை பலியாதென்பதை உணர்ந்தும், பொய்யாகக்கூட இராமன் தலை துணிக்கப்படுதல் கவியரசின் இராமபத்திக்கு முரணுதலான், அச்செய்தியைக் கம்பநாடர் குறித்தாரில்லை. மேற்கண்ட வரலாற்றை உளத்திற்கொண்டே இந்த மாயாசனகனை இங்குப் புகுத்தினர் ஆசிரியர். மாயா சீதையை வெட்டுவதை இருநூல்களிலும் ஒருங்கே காணலாம்.

இனி, கம்பன் கவிதை ஓர் நாடகம் என்பர் அறிஞர். அகந்தை மிக்கு இன்பத்தை விழைந்து, தான் இயற்றிய மாயச் செய்தியில் ஈடுபட்டு மகிழ்ந்த அரக்கனுக்குத் திடீரெனப் பெருந் துக்கம் விளைக்கும் ஓர் சம்பவத்தைத் தெரிவித்து, அவன் மனக் கிளர்ச்சியைக் குறைக்கும் இப்படலம் நாடகமுறையில் அமைக்கப் பட்டிருத்தல் உய்த்துணர்க. தேவகாரியமாகவே இராமபிரான் அவதரித்த செய்தியை வற்புறுத்த, ஆங்காங்கு அத்தேவர்களுடைய மகிழ்ச்சியையும் தளர்ச்சியையும் ஆசிரியர் கூறுவது காப்பியத்தை நன்கு கற்றூர்க்குப் புலனாகும். இமையோர் அஞ்சியது 1379, 1440, 1442, 1448, 1462 என்பன காண்க. அமரர் உவந்தது : 1412, 1458, 1496, 1566.

பி - ம். 1. என்றவன் ; மீண்டு.
2 குன்றென நின்ற.
3. வாரா.
4. சென்றது ; தேவர்தம் ; சேர.

1640. உகுந்திற லமரர் நாடும் வாநர
        யூகத் தோரும்
    மிகுந்திறம் வேறொன் றில்லா விருவர்நா
        ணொலியும் விஞ்ச
    தகுந்திற னினைந்தே னெம்பிக் கமரிடைத்
        தனிமைப் பாடு
    புகுந்துள துண்டென் றுள்ளம் பொருமல்வந்
        துற்ற போழ்தின்.

மிகும் திறம் வேறு ஒன்று இல்லா - (ஒலிசெய்வதில்) மிகைப் படும்தன்மை பிறிதொன்றற்கில்லாத (எல்லாவற்றிலும் மிக்கதான), இருவர் நாண் ஒலியும் - (இராம இலக்குவர் என்ற) இருவருடைய நாணின் ஒலியையும், திறல் உகும் - வலிமை குன்றியுள்ள, அமரர் - தேவரும், நாடும் - (போர்புரிய) நாடுகின்ற, வாநர யூகத்தோரும்-வாநரச்சேனையில் உள்ளோரும், விஞ்ச - மிஞ்சி மேலோங்குதற்கு, தகும் திறம் நினைந்தேன் - தக்க காரணத்தை ஆராய்ந்து எண்ணினேன்; எம்பிக்கு - என் தம்பியாகிய கும்பகன்னனுக்கு, அமர் இடை - போர்க்களத்தில் (சேனையெல்லாம் ஒழிந்ததனால்), தனிமைப்பாடு புகுந்து உளது உண்டு - தனிமைப்படுதல் என்பது நிகழ்ந்துளதுபோலும்; என்று - என்று, உள்ளம் - இராவணன் உள்ளத்தில், பொருமல் வந்து உற்ற போழ்தின் - துன்பம் வந்து பொருந்திய போழ்தில். தூதர்...............என்றார் என அடுத்த கவியுடன் முடியும்.

தேவரும் வாநரரும் செய்த பேராரவாரம், இராம இலக்குவரின் வில் நாண் ஒலியையும் விஞ்சியதுணர்ந்து கும்பகன்னன் கொண்ட சங்கை இங்கு குறிக்கப்பட்டது. இவ்வாறு ஐயங்கொண்டதில் இராம இலக்குவர் வில்லாற்றலை இராவணன் புகழ்ந்ததும் தெளியப்படும்; 1226-1238; இந்திரசித்து. 4-உம் காண்க. இந்த அவல நிலையிலும் கும்பகன்னன் தனித்தான் போலும் என்று நினைந்தான் அன்றி, அவன் மரித்திருக்கக்கூடும் என்று அவன் கருதவில்லை.

பி-ம். 1. வாயவர்; ஒகைக்காரும், ஒதத்தோரும், யோகத்தோரும்.
2. நகுந்திறல்; தம்மின்; மாய்த்த, வியத்த.
3. நினைத்தேன்; எம்பி; பாடும்; தனிப்பாடுற்று.
4. புகுந்துளதென்று நெஞ்சம்; புகுந்திறலுன் டென்றுள்ளம்.

## கும்பகன்னன் இறந்தமையைத் தூதுவர் கூற இராவணன் அரற்றுதல்

1641. புறந்தரு சேனை முந்நீ ரருஞ்சிறைப் போக்கிப் போதப்
பறந்தன ரனைய தூதர் செவிமருங் கெய்திப் பையத்
திறந்திற மாக நின்ற கவிப்பெருங் கடலைச் சிந்தி
இறந்தன னும்பி யம்பிற் கொன்றன னிராம னென்றார்.

புறந்தரும் சேனை முந்நீர் - காக்கின்ற சேனைக்கடலாகிய, அரு சிறை போக்கி - அரிய காவலைக்கடந்து, போத-மிகவும், பறந்தனர்- விரைந்து வந்தவராகிய, அனைய தூதர் - அந்தத் தூதுவர்கள், (இராவணனுடைய), செவி மருங்கு எய்தி - காதினிடத்து நெருங்கி, 'திறம் திறமாக நின்ற கவி பெரு கடலை - கும்பல் கும்பலாக இருந்த வானரப் பெருங்கடலை, சிந்தி - சிதற அடித்து, உம்பி இறந்தனன் - உன் தம்பியான கும்பகன்னன் இறந்தான்; இராமன் அம்பில் கொன்றனன் - இராமன் தனது வாளியால் கொன்று விட்டான்', என்றார் பைய - என்று கூறினர் மெதுவாக.

புறந்தருதல்: 'ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே' (புறநா. 312); 'ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள்' (அகநா. 35). முந்நீர்: 'ஆற்றுநீர் ஊற்றுநீர் மழைநீர் அன்று, படைத்தல் காத்தல் அழித்தலாகிய மூன்று நீர்மையைக் கொண்ட கடல் என்பர்' (சிலப். ஆய்ச்சியர். 31 உரைக்குறிப்பு). மரித்த செய்தி யாதலின் அதனைக்கொண்டு சென்ற வீரர் போதப்பறந்தனர் எனப்பட்டது; போத - மிகுதி குறித்து வந்தது; 'போதத்தன் செவியிரு கைகளாற் பொத்தி' (யுத்த. 151). செவிமருங் கெய்தி - காதோடு காதுவைத்தாற்போன்ற என்ற உலக வழக்கும் காண்க. இனி, தூதர் எய்திச் செவிமருங்கு என்றார் எனினும் ஒன்றும். பைய: இந்தச் சொல் திருநெல்வேலிச் சீமையில் பெருவழக்கில் உள்ளது; 'பையவே சென்று பாண்டியர்க் காகவே' (தேவா. 861: 1); 'பைய நுழைந்து பவமீட்டும் பாய்த்திக் கெடுக்க வல்ல தவா' (குசேலோ. 3: 119). திறம் திறம் - கூறு கூறாக; 'திறந்

திறம் விடுத்துத் தேயச் சொன்றனை நீயே யன்றோ' (சுந்தர. 989).

பி - ம். 1. முன்னிச் ; இருந் ; நிறை ; போரப்.

2. பறந்தனனைய தூதன், பறந்தனவனைய தூதன்.

3. திறந்திறமாகி ; சேனை ; நீந்தி.

4. என்ருன். 75

1642. ஊரொடும் பொருந்தித் தோன்று மொளியவ
னென்ன வொண்பொன்
தாரொடு புனைந்த மௌலி தரையொடும்
பொருந்தத் தள்ளிப்
பாரொடும் பொருந்தி நின்ற மராமரம்
பணைக ளோடும்
வேரொடும் பறிந்து மண்மேல் வீழ்வதே
போல வீழ்ந்தான்.

ஊரொடும் பொருந்தி தோன்றும் - ஊர்கோளுடனே இயைந்து காணப்படுகின்ற, ஒளியவன் என்ன - சூரியன்போன்று, ஒள் பொன் தாரொடு புனைந்த - அழகிய பொன் மாலையினால் புனையப் பெற்ற, மௌலி - (தன்) மகுடமானது, தரையொடும் பொருந்த - பூமியிலே படியும்படி, தள்ளி - தள்ளப்பட்டு, பாரொடும் பொருந்தி நின்ற - பூமியிடத்துப் பொருந்தியுள்ள, மராமரம் - மராமரம், வேரொடும் பறிந்து - வேருடன் அகழப்பட்டு, பணைகளோடும் - கிளைகளோடும், மண்மேல் வீழ்வதேபோல வீழ்ந்தான் - பூமியின் மீது வீழ்வதையொப்ப விழுந்தான்.

பொன் மலையுடன் இயைந்த மோலிக்கு ஊர்கோளுடன் கூடிய சூரியன் உவமை. இராவணன் இருபது கைளுடன் வீழ்ந்தது மராமரம் கிளைகளோடு வீழ்ந்ததுபோலும் எனப்பட்டது, உவமையணி ; யுத்த. 852 ; அதிகாயன். 210.

பி - ம். 2. பொலிந்த மௌலி ; தள்ளப், தாழப்.

3. பணையினேடும்.

4. விழ்ந்ததே. 76

1643. பிறிவெனும் பீழை தாங்கள் பிறந்தநாள்
தொடங்கி யென்றும்
உறுவதொன் றின்றி யாவி யொன்றென
நினைந்து நின்ருன்
எறிவரு மமரிற் றம்பி தன்பொருட்
டிறந்தா னென்ன
அறிவழிந் தவச ஞகி யரற்றின
னண்ட முற்ற.

தாங்கள் பிறந்த நாள் தொடங்கி - தாங்கள் தோன்றிய நாள் தொட்டு, பிறிவு எனும் பீழை - பிரிவு எனப்படுகின்ற துன்பம், ஒன்று என்றும் உறுவது இன்றி - ஒன்று எப்போதும் நிகழ்வ தில்லாமல் (நிகழாமையின்), ஆவி ஒன்று என நினைந்து நின்ருன் - (இருவர்க்கும்) உயிர் ஒன்றே என்று கருதி நின்ற இராவணன், 'எறிவரும் அமரில் - (போர்க்கருவிகள்) வீச வருகின்ற போரிலே, தம்பி - தம்பியாகிய கும்பகன்னன், தன் பொருட்டு இறந்தான் - தன் காரணமாக மரித்தான்' என்ன - என்று (தூதர் உரைக்கக் கேட்டு), அறிவு அழிந்து - அறிவுகெட்டு, அவசன் ஆகி - தன் வசம் தவறப்பெற்றவனய், அண்டம் முற்ற அரற்றினன் - அண்டத்தின்மேல்வரம்புவரையில் குரல் எட்டும்படி வாய்விட்டுக் கதறினன். இவன் அரற்றியதை அடுத்து வருகின்ற ஒன்பது செய்யுட்களில் காண்க.

பிரிவு, பிறிவு இரண்டும் செய்யுட்கண் வழக்குண்டு ; எதுகை நோக்கி வந்ததுமாம். பீழை - பீடை.

இங்கு, மாயாசனகப் படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் காணப்படுகிறது.

பி - ம். 1. பீழைதங்கள், பொருளதொன்றும் ; பீழையா நான்.

2. ஒன்றின்மை, அறியான், உரைத்து, நினைத்து.

3. எறிபெருஞ் ; சமரில்.

## வேறு

1644. தம்பியோ வானவராந் தாமரையின் காடுழக்கும்
தும்பியோ நான்முகத்தோன் சேய்மதலை தோன்றலோ
நம்பியோ விந்திரனை நாமப் பொறிதுடைத்த
எம்பியோ யானுன்னை யிவ்வுரையுங் கேட்டேனே.

'தம்பியோ - தம்பியே! வானவராம் தாமரையின் காடு உழக்கும் - அமரர்களாகிய தாமரைக்காட்டைக் குலைக்கும், தும்பியோ - யானைபோல்வோனே!, நான்முகத்தோன் சேய் மதலை தோன்றலோ - பிரமதேவனுடைய மகன் மகனுக்கு மகனாகப் பிறந்தவனே!, நம்பியோ - ஆடவரிற் சிறந்தவனே!, இந்திரனை நாமம் பொறி துடைத்த - இந்திரனுடைய பெயரடையாளத்தினையும் அழித்துநின்ற, எம்பியோ - என் தம்பியே!, உன்னை - உன்னைப் பற்றி, இ உரையும் - இந்த அவலம் தரும் சொல்லையும், யான் கேட்டேனே - நான் கேட்கும்படி நேர்ந்ததே? ஓகாரம் - இரக்கக் குறிப்பு.

தம்பியோ, தும்பியோ என்பன விளியாதலின் ஓகாரம் பெற்று வந்தன. நாமம் பொறி துடைத்த: பொறி - பொறிக்கப்பட்ட அடையாளம். நாமம் பொறிதுடைத்தல் - பெயரும் காணப்படுதலின்றி அவன் புகழையழித்தல். இவ்வுரை; ஒரு நரனாற் கொல்லப் பட்டா யென்னும் சொல். வானவரை நாமம் பொறிதுடைத்த என்றும் பாடம் உண்டு; ஆயினும், இந்திரன் பெயரை அழிக்கவே அவனுக்குட்பட்ட வானவரும் அழிவது ஒருதலையாகலின் இந்திரன் என்ற சொல்லே கொள்ளப்பட்டது. நான்முகத்தோன் தொன்மரபின் என்ற பாடம் உண்டெனினும் முன்னர், 'வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்', 'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி', 'மகன்மகன் நான்முகற்கு வாய்மையான்' என்று முறையே இராவணனையும், சூர்ப்பணகையையும், வீடணனையும் ஆசிரியர் கூற விழைதலின் சேய்மதலை என்ற பாடம் தழுவப்பட்டது.

பி - ம். 1. கானுழக்கும்.
2. தொன்மரபின்.
3. வானவரை.
4. கேட்டேனோ.

1645. மின்னிலைய வேலோனே யானுன் விழிகாணேன்
நின்னிலை யாதென்னே னுயிர்பேணி நிற்கின்றேன்
உன்னிலைமை யீதாயி னோடை களிறுந்திப்
பொன்னுலக மீளப் புகாரோ புரந்தரனார்.

'மின் இலைய வேலோனே - ஒளிவாய்ந்த இலைத்தொழிலையுடைய வேற்படையை யுடையவனே! உன் விழி காணேன் - (நீ சாகும்போது) உன் பார்வைக்குப் புலப்படாமலும், நின் நிலை யாது என்னேன் - உன் நிலை எங்ஙனம் உள்ளது என்று கேளாதவனாகவும் இருந்து, யான் உயிர் பேணி நிற்கின்றேன் - நான் என் உயிரைப்போற்றி நின்றுள்ளேன்; உன் நிலைமை ஈது ஆயின் - மகாவீரனான உன் நிலையே இவ்வாறென்றால், ஓடை களிறு உந்தி - சூழியென்ற முகபடாம் அணிந்துள்ள ஐராவதம் என்னும் ஆண் யானையைச் செலுத்தி, புரந்தரனார் - இந்திரன், பொன் உலகம் மீள புகாரோ - அவனுடைய அமராவதி நகர்க்குத் திரும்பவும் சென்றிடாரோ?

விழி காணேன் - இறக்கும் தறுவாயில் உள்ளவரைக் காணவியலாத நிலையில், 'முகமுழிகூடக் கிடைக்கவில்லை' என்ற உலகு வழக்குக் காண்க. உனக்கு விபத்து நிகழ்ந்த காலத்து உடனிருந்துதவியாற்றாமல் உயிர்தரித்துள்ளேனே என்று இரங்குகின்றான் இராவணன். புரந்தரனார்: இழிவுபற்றி யெழுந்த பால் வழுவமைதி.

பா - ம். 2. என்னிலையான் றேனுமுயிர் பேணி நிற்கிலேன்; என்னிலைமையின்றே நிலைபேணி நிற்கிலேன், என்னிலைமை யின்றைனுயிர் பேணி நிற்கிலேன், நின்னிலென வின்றேனுயிர் பேணி நிற்கிலேன், நின்னிலை யூதென்றே யுயிர்பேணி நிற்கின்றேன்.

3. யீதேற்ற.

4. ஆளப், துற்ற. 79

1646. வன்னெஞ்சி னென்னைநீ நீத்துப்போய் வானடைந்தால்
இன்னஞ் சிலரோ டொருவயிற்றி னியார்பிறப்பார்
மின்னஞ்சு வேலோய் விழியஞ்சி வாழ்கின்றார்
தந்நெஞ்சந் தாமே தடவாரோ தானவர்கள்.

'மின் அஞ்சும் வேலோய்-(ஒளியினைக்கண்டு) மின்னும் அச்சம் உறுகின்ற வேற்படையை யுடையவனே! நீ வல் நெஞ்சின் என்னை-நீ வலிய மனத்தவனாய என்னை, நீத்து போய்-விடுத்துச் சென்று, வான் அடைந்தால்-வீரர் உலகு புகின், இன்னம் சிலரோடு-இன்னும் சிலருடனே, ஒரு வயிற்றின் யார் பிறப்பார்-ஒருவயிற்றில் யார் பிறக்க விரும்புவார்? விழி அஞ்சி வாழ்கின்றார்-நீ விழித்து நோக்குவதற்குப் பயந்து வாழ்கின்றவரான, தானவர்கள்-(தனு வழிவந்த) அரக்கர்கள், தம் நெஞ்சம் தாமே தடவாரோ-(நீ இறந்தது கண்டு), தமது மார்பினைத் தாமே தடவி (வீரராக முழங்கிக்) கொண்டு, வரமாட்டார்களா?.

முன்னவனாக உடன் பிறந்தோன் இருக்க இளையவன் சாவது என்பது நிகழின், உடன்பிறப்பு வேண்டும் என்ற நினைவே புவிக்கண் இல்லாது ஒழியுமே என்பது முன் அடிகளின் கருத்து. வன்நெஞ்சின் என்னை என்று இராவணன் தன்னையே கூறியதாகக் கோடலுமாம். விழி அஞ்சுதல் - விழி முன்னிற்க அஞ்சுதல்; விழி: விழித்தலின் முதனிலைத் தொழிற்பெயர்,

பி-ம். 1. வன்னெஞ்ச நீ, வன்னெஞ்சன், வன்னெஞ்சாய் நீ; வானடைந்த.

3. விழியஞ்ச.

4. தன்னெஞ்சு தன்னை, தன்னெஞ்சு தானே. 80

1647. கல்லன்றே நீராடுங் காலத்துன் கால்தேய்க்கும்
மல்லொன்று தோளாய் வடமேரு மானுடவன்
வில்லொன்று நின்னை விளிவித் துளதென்னும்
சொல்லன்றே வென்னைச் சுடுகின் றதுதோன்றல்.

'மல் ஒன்று தோளாய் - மற்போர்க்குப் பொருந்திய புயத்தினை யுடையவனே! வடமேரு - வடக்கே உள்ள மேரு மலையானது, நீராடும் காலத்து - நீ நீராடும் போதில், உன் கால் தேய்க்கும் கல் அன்றே-உன் குதிகாலை (அழுக்கு நீங்கத்) தேய்ப்பதற் குதவும் கல் அல்லவோ? தோன்றல்-பெருமை மிக்கோய்! நின்னை (அத்தகைய) உன்னை, மானுடவன் வில் ஒன்று - ஒரு மனிதனுடைய வில்லாற் றொடுத்த அம்பு, விளிவித்து உளது - இறக்குமாறு செய்தது,

என்னும் சொல் அன்ரோ - என்று பேசப்பெறும் சொல்லல்லவோ, என்னை சுடுகின்றது - எனக்கு மனக்கொதிப்பினைத் தருகின்றது ?

கல்லன்றோ நீராடும் காலத்து: இங்கு இரணியனுடைய பல்வேறு பராக்கிரமங்களை ஒப்பிடுக. யுத்த. 132-136. வில் என்பதற்கு வில்லினின்று விடுக்கும் அம்பு என்க.

பி - ம். 1. காலத்துட் ; கால்தேய்க்க.

2. மானிடர்கை.

3. ஒன்ருனென்னை, ஒன்றினின்னை ; உளன்.

4. சுடுவித்தது ; தோன்றல். 81

1648. மாண்டனவாஞ் சூலமுஞ் சக்கரமும் வச்சிரமும்
தீண்டினவா வொன்றுஞ் செயலற்ற வாதெறித்து
மீண்டனவா மானிடவன் மெல்லம்பு மெய்யுருவ
நீண்டனவாந் தாமின்ன நின்ருராந் தோள்நோக்கி.

'சூலமும் - சிவபிரானுடைய சூலாயுதமும், சக்கரமும - திருமாலுக்குரிய ஆழிப்படையும், வச்சிரமும் - இந்திரனுடைய வயிரப் படையும், என்ற இவைகள், தீண்டினவா - முற்காலத்தில் உன் மீதில் எறியப்பட்டு உன் உடலைத் தொட்டதாக, (அவை) ஒன்றும் செயல் அற்றவா - ஒன்றும் செய்ய இயலாமல், மாண்டன ஆம் - உயிரற்றனவாய், தெறித்து மீண்டன ஆம் - தெறித்து அப்பாற் சென்றனவாம்; (அங்ஙனமாகவும்), மானிடவன் மேல் அம்பு-ஒரு நரனுடைய மெல்லிய அம்பு, மெய் உருவ - உன் உடலை ஊடுருவும்படி, நீண்டன ஆம் - நீண்டு எழுந்தனவாம் ; (இந்நிலையைக் கண்டும்) தாம் - இராவணன், தோள்நோக்கி நின்ருராம் - தோளைப்பார்த்துக் கொண்டு நின்ருராம். (இது மிகவும் நன்ருக உள்ளது).

மாளுதல் - மழுங்கி வலியறுதல். தோள் நோக்கி: புயவலியைப் பார்த்துக்கொண்டு, 'உடன்பிறப்பாற் ருேள்வலி போம்' 'ஓதினுடன், வந்தோன் மரித்துவிடில் வாகுவலிபோம்' (நீதிவெண்பா. 61) ; என்பர். இவ்வாறு உடன்பிறந்தான் இறந்தும் தன் தோளை நோக்கி நிற்கின்ருன் என்றவாறு (ஒப்பு): 'நாளுமுள தோளுமுள நானுமுள னன்ருே' (ஆரணிய. 615);। 'தோளெனச் சோம்பி யோங்கும் கல்லும் சுமந்தேன்' (அயோத்தி. நகர்நீ. 138);

இப்பாடலில் அவலச் சுவை காண்க. உன்னைக்கொன்ற மானுடனை உடனே சென்று கொல்லாது தாங்கும் தோள்களை யான் பார்த்துக் கொண்டிருத்தலால், யாதுபயன் என்கின்றான் அரக்கர் கோன். தாம்: தன்னைப் படர்க்கையாகக் கூறியது. நின்றாராம்: 'நின்றேனு நின்றேன் நெடுமரம்போ னின்றேனே' (ஆரணிய. 989).

பி - ம். 1. வன்மழுவும்.

2. ஒவொன்றும், ஏயல்லால், போழ்தெல்லாஞ்; செயல் இற்றதோ, ஆற்றுவாந், ஆற்றுதாந்.

3. மீண்டனவோ; மாறிடவர்.

4. என்கின்றாரந்தோ நின். 82

1649. நோக்கறவு மெம்பியர்கள் மாளவுமிந் நொய்திலங்கை
போக்கறவு மாதுலனார் பொன்றவுமென் பின்பிறந்தாள்
மூக்கறவும் வாழ்ந்தே னொருத்தி முலைக்கிடந்த
ஏக்கறவா லின்ன மிரேனோ வுனையிழந்தும்.

'எம்பியர்கள் நோக்கு அறவும் மாளவும் - எனது தம்பிமார் காண்பதற்கு இல்லாமல் இறந்தொழியவும், இ இலங்கை நொய்து போக்கு அறவும் - இந்த இலங்கைத் தலைநகர் எளிதாகப் (பகைவர்கள்) கைப்பட்டுவிடவும், மாதுலனார் பொன்றவும் - என் மாமனான மாரீசன் இறந்துபடவும், என்பின் பிறந்தாள் மூக்கு அறவும் - என் தங்கையான சூர்ப்பணகை மூக்குத் துணிக்கப்படவும், ஒருத்தி முலை கிடந்த ஏக்கறவால் வாழ்ந்தேன் - ஒரு பெண்ணினுடைய முலையினிடத்துப் படிந்த ஆசையினால் (மானமின்றி) உயிர் தரித்தேன்; உனை இழந்தும் இன்னம் இரேனோ - உன்னை இழக்கப் பெற்றும் இன்னும் வாழேனோ?.

நோக்கறவும் மாளவும் என்பதை நோக்கறுமாறு இறக்கவும் என்க. எம்பியர்கள் என்றது கரன் தூடணன் திரிசிரன் முதலியோரை. மாதுலன்: மாரீசன். கரதூடணாதியர் இராவணன் தம்பியர் என்ப. 'இகல்வேலுன், மருகரிறந்தார் ஒருவன் மலைந்தான் வரிவில்லால்' (ஆரணிய. 728) என்று இராவணன் கூறுதல் கொண்டு உணர்க. என்பின் பிறந்தாள்: 'உலக மூன்றும் காவலோன் பின்னை' (ஆரணிய. 258); எனச் சூர்ப்பணகை கூறுதல் காண்க. ஏக்கறவு - இச்சை. மூக்கறுதல்: இங்கு ஏனைய உறுப்

புக்களுக்கு உபலக்கணம். மூக்கறுதல் பேரவமானம்: வழக்கில் கூட மூக்கறுந்ததா என்று வருதல் காண்க.

பி - ம். 1. எய்பியர்தாம், எம்பிமார்; மாளவும் போய், மாளவுமே.

2. பொன்றிடவும்.

4. இழந்து. 83

1650. தன்னைத்தான் தம்பியைத்தான் தானைத் தலைவனைத்தான்
மன்னைத்தான் மைந்தனைத்தான் மாருதத்தின் [காதலைத்தான்
பின்னைக் கரடிக் கிறையைத்தான் பேர்மாய்த்தாய்
என்னத்தான் கேட்டிலே னென்னுன வாறிதுவே.

'தன்னை தான் - இராமனையும், தம்பியை தான் - அவன் தம்பியான இலக்குவனையும், தானை தலைவனை தான் - சேனைத் தலைவனுன நீலனையும், மன்னை தான் - (குரங்குகட்கெல்லாம் தலைவனுன சுக்கிரீவனையும்), மைந்தனை தான் - அவன் புதல்வனுன அங்கதனையும், மாருதத்தின் காதலை தான் - வாயுவின் அன்புக்குப் பாத்திரமான அநுமனையும், பின்னை - மற்றும், கரடிக்கு இறையை தான் - கரடிகட்குத் தலைவனுன சாம்பவனையும், பேர் மாய்த்தாய் - பேரும் மறையுமாறு நீ கொன்றனை, என்ன தான் கேட்டிலேன் - என்ன சொல்லக் கேட்கப் பெற்றிலேன்; (அங்ஙனமிருக்க) இது ஆன ஆறு என் - இந்த உனது மரணம் நிகழ்ந்தவாறு என்னே? ஏ: அசை.

தான் என்று அடிக்கடி அமைத்தது, கூறப்பட்ட இராமபிரான் முதலானேருடைய பெருமையும் வீரமும் தொனிக்க என்க, மைந்தன் - அங்கதன்; சுக்கிரீவன் அங்கதனை அண்ணன் மகன் என்று இல்லாது தன் மகனுகக் கூறியுள்ளமை காண்க. 'இவன் சிறுதாதை யென்னு, மூலமே தந்த நுந்தை யாமென முறையினிற்றி' (கிட்கிந்தா. 424); 'பொன்னின் வார்கழற் ருதையிற் போயினுன' (கிட்கிந்தா. 569); 'எந்தை கேளவ் விராமற் கிளையவன்' (கிட்கிந்தா. 576); அங்கதன் கூற்று, 'அந்தரத்தில் வந்தன்னை தன் கோயிலை' (கிட்கிந்தா. 579); என்பன அங்கதன் கூற்று. பேரு மாய்த்தல்; 'வானரப், பேருமாளும் எனும் பொருள் பேசுவாய்:

(கிட்கிந்தா. 558)-ம் அதன் உரைக் குறிப்பும் காண்க. காதல்' மகன் : (யுத்த. பிரமாத்திர : 164). காதல் : ஆகுபெயர்.

பி - ம். 1. தலைவரைத்.

3. பேர்தொலைந்தாய், பேர் முடிந்தாய்.

4. பெற்றிலனே ; இதுவோ, இதுதான். 74

1651. ஏழை மகளி ரடிவருட வீர்ந்தென்றல்
வாழு மணியரங்கிற் பூம்பள்ளி வைகுவாய்
சூழு மலகை துணங்கைப் பறைதுவைப்பப்
பூழி யணைமேல் துயின்றனையோ போர்க்களத்தே.

'ஏழைமகளிர் - பேதையரான பெண்கள், அடிவருட - கால் பிடிக்க, ஈர்ந்தென்றல் - குளிர்ந்த தென்றல் காற்று, வாழும் - தங்கி வீசுகின்ற, மணிஅரங்கில் - அழகிய நிருத்த சாலையில், பூம் பள்ளி வைகுவாய் - மலரமளியில் படுத்திருப்பவனே ! போர் களத்து - யுத்த களத்தை, சூழும் அலகை - சூழ்ந்துள்ள பேய்கள், துணங்கை பறை துவைப்ப - துணங்கைக் கூத்துப்பறை அடிப் பது போன்ற ஒலிசெய்ய, பூழி அணைமேல் துயின்றனையோ - புழுதிப் படுக்கையில் உறங்குகின்றனையோ. ஏ - அசை.

உறவுபற்றியெழுந்த அவலச்சுவை மிகுந்த பாடல். ஏழை - அறிவின்மை யன்று, பேதைமை என்க. இதனை மடம் என்றும், கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை என்றும் கூறுவர். அடிவருடல் : உறக்கம் வருமாறு காலைத் தடவிப் பிடித்தல்; 'திரைக்கையால் அடி வருடப் பள்ளி கொள்ளும்' (பெருமான். திரு. 1); 'அடிவருடிப்பின் றூங்கி முன் எழுந்த பேதை' (தனிப் பாடல்); வாழ்தல் - உலாவுதல். கும்பகன்னனுடைய முன்னிருந்த உயர்ந்த நிலையும், இப்பொழுதுள்ள அவல நிலையும் குறித்துக் காட்டப்பெற்றன. போர்க்களத்தில் பிணங்களைத் தின்று உதிரம் பருகற்குப் பேய்கள் சூழ்வது குறிப்பிடப்பெற்றது. அலகை துணங்கை யாடுதல் : கலிங்கத்துப் பரணி, தக்கயாகப்பரணிகளில் பேய் பாடிய பகுதியிற் காண்க. அலகை : 'அலகையின் குழுவும் அஞ்ச' (சுந்தர. 1280); 'வையத் தலகையா வைக்கப்படும்' (குறள். 850); துணங்கை: ஒருவகைக் கூத்து; சிங்கிக் கூத்தென்பர்; 'முழப் புடை யிருகை முடக்கியடிக்கத் தொடங்கிய நடையது துணங்கை

யாகும்' பூழி அணை : 'புழுதியே பாயலாகப் புரண்ட நாள்' (யுத்த. நிகும்பலை. 170),

பா - ம். 3. அலகைத் ; துளங்கப், துவைக்கப், துகைப்பத்.

4. கிடந்தனையோ. 85

இது, சில பிரதிகளில் இல்லை.

1652. செந்தேன் பருகித் திசைதிசையு நீவாழ
உய்ந்தே னினியின்று நானு முனக்காவி
தந்தேன் பிரியேன் தனிபோகத் தாழ்க்கிலேன்
வந்தேன் தொடர மதக்களிறே வந்தேனால்.

'செ தேன் பருகி - செந்நிறம் கொண்ட கள்ளினைக் குடித்து, திசை திசையும் நீ வாழ - எல்லாத் திக்குகளிலும் நீ வாழ்வுற்றுத் திகழ, உய்ந்தேன் - நான் இன்ப வாழ்வுற்றிருந்தேன் ; இனி - (நீ இறந்த) இனிமேல், இன்று - இப்போது, நானும் உனக்கு ஆவி தந்தேன் - நானும் உனக்காக உயிரை விடுத்தவனாகி, தனிபோக - (நீ) தனி வழியே செல்ல, தாழ்க்கிலேன் - கால தாமதம் செய்யாது, பிரியேன் - பிரியாமல், தொடர வந்தேன் - (உன்னைப்) பின்தொடருமாறு வந்துவிட்டேன் ; மதம் களிறே - மதயானை போன்றவனே ! வந்தேன் - வந்துவிட்டேன்'; ஆல் - அசை ; தேற்றமுமாம்.

ஆவி தந்தேன், வந்தேன் என்பன விரைவு பற்றி எழுந்த காலவழுவமைதிகள் : இராவணன் கூறுவது பின் அடுத்து நிகழப் போவதால் இதனை உண்மையுரையாகவே காணலாம். 'என்னை வென்றுளரெனில் இலங்கை காவல, உன்னைவென்றுயருதல் உண்மையாதலால்' (யுத்த. 1360) என்ற தீர்க்கதரிசி கும்பகன்னனுடைய சொற்களைக் காண்க, அவலச் சுவையில் அமைந்த இதேசந்தம். ஆரணிய. 986 - 994-ல் காண்க. தமிழ் நாட்டில் பலாக்கணம் என இறந்தாரை நோக்கிப் புலம்பும் பகுதி இது போன்றமைந் திருத்தலும் காணலாம். (ஒப்பு) : 'ஆச்சாவயிரமே அறுபதடிக் கம்பமே' (நவரத்தின ஒப்பாரி).

பா - ம். 1. திசைகடோறுந் நீவாழ்வு, திசையுந்நித் நீவாழ, திசையுந்நித் நீ வாழ்வு, திசைகடோறுந் நீவாழ.

2. நந்தேன் ; நனியென்றும்.

3. நொந்தேன் ; பிழையேன் ; தாழ்கிலேன்.

4. வந்தேனே. 86

## இராவணன் கதறச் சீதை மகிழ்தல்

1653. அண்டத் தளவு மினைய பகர்ந்தழைத்துப்
பண்டைத்தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்
தொண்டைக் கனிவாய் துடிப்ப மயிர்பொடிப்பக்
கெண்டைத் தடங்கண்ணு ளுள்ளே கிளுகிளுத்தாள்.

(இராவணன்) இனைய பகர்ந்து - இவ்வாறாகச் சொல்லி, அண்டத்து அளவும் - வானமுகடு வரையில், அழைத்து - (குரல் எட்டுமாறு) கதறி, பண்டை - பழமையான, தன் நாமத்தின் காரணத்தை - தன்னுடைய பேரின் காரணத்தை, பாரித்தான் - பலருமறியச் செய்தான்; கெண்டை தடம் கண்ணாள் - சேல்மீன் போன்ற நீண்ட விழிகளையுடைய சீதாதேவி, தொண்டை கனி வாய் துடிப்ப - கொவ்வைப்பழம் போன்றவாய் துடிக்கவும், மயிர் பொடிப்ப - மயிர்குச்செறியவும், உள்ளே கிளு கிளுத்தாள் - தன் மனத்திற்குள்ளாகவே குறு மகிழ்ச்சி கொண்டாள்.

நாமத்தின் காரணம்; இராவணன் என்ற சொல்லுக்கு அழுதவன், பிறரை அழச் செய்தவன் என்ற இரு பொருள் உண்டென்பர். முன்னது அவன் கைலை மலையின் அடியில் இருந்து கதறியதைக் குறிக்கும்; பாரித்தல்; இவணலம் பாரித்திட்ட விந்நகர்' (சீவக. 706); தொண்டை வாய்க்கனி; 'தொண்டை வாய்க் கேகயன்தோகை' (அயோத்தி· மந்தரை: 41); அதுகாறும் என்னவென்ன நிகழுமோ என்று கூம்பிச் சாம்பி யிருந்த விழிகள் மகிழ்ச்சியால் விரிந்து விளங்கின என்பார், தடங்கண்ணாள் என்றார்; மகிழ்ச்சியை வெளிப்படையாகக் காட்டின் அருகிற்காவலாயிருந்த அரக்கியரும் பிறரும் தன்னை என்ன செய்வார்களோ என்ற அச்சத்தால், உள்ளே கிளுகிளுத்தாள் எனப்பட்டது' துயருறுவார்க்கு எதிரே தனது மகிழ்ச்சியைக் காட்டுதல் கருணைக்கழகன்றாகலின் உள்ளே கிளுகிளுத்தாள் என்றதாகச் சிலர் கூறுவர்; எனினும் கிளுகிளுத்தல் மகிழ்ச்சிக்குறியே யென்றறிக. வாய் துடித்தல், மயிர் பொடித்தல் என்ற இவை மகிழ்ச்சிக் குறிகளாகக் கூறப்படுதலும் காண்க, (ஒப்பு): 'தேவரு

மழுதனர் களிக்கும் சிந்தையார்' (சுந்தர. 980); இரு இருத்தாள் என்ற சொல் சேலம் ஜில்லா வழக்கு என்பது ஐயர் அவர்கள் குறிப்பு.

பி - ம். 1. பகர்ந்தழைப்ப.

2. பாலிந்தான், பாவித்தான்.

3. தடங்கண்ணி. 87

1654. வீங்கினுள் கொங்கை மெலிந்த மெலிவகல
ஓங்கினு ளுள்ள முவந்தா ளுயிருயிர்த்தாள்
தீங்கிலாக் கற்பிற் றிருமடந்தை சேடியாம்
பாங்கினு ளுற்றதனை யாரே பகர்கிற்பார்.

கொங்கை வீங்கினுள்-சீதாதேவி) மகிழ்ச்சியினால் தனம் பூரித்தாள்; மெலிந்த மெலிவு அகல ஓங்கினுள் - (உடல்) இளைத்த இளைப்பு முழுதும் நீங்கிடப் பருத்தாள்; உள்ளம் உவந்தாள் - மனத்து மகிழ்ச்சிகொண்டாள்; உயிர் உயிர்த்தாள் - உயிருண்டு என்னுமாறு மூச்சு விட்டாள்; தீங்கிலாக் கற்பின் திருமடந்தை சேடியாம் பாங்கினுள் - பழுதற்ற கற்பு நிலையுடன் கூடிய திருமகளும் சேடியாகிப் பணியாற்றற்குரிய, அழகைப்படைத்த அப்பிராட்டி, உற்றதனை - அடைந்த தன்மையை, பகர்கிற்பார் யார் - சொல்லக் கூடியவர்கள் எவர்? ஏ : வினா.

பிராட்டிக்கு இங்கு உற்ற மகிழ்ச்சி, மேலே நிகழ்ந்தவை மாய நிகழ்ச்சிகள் என்றும், இராமபிரானே முடிவில் வெற்றி யெய்தப் போகின்றான் என்றும் கருதியதால் ஏற்பட்டவை; மெலிவு, இராவணன் சொற்களாலும் மாயாசனகன் கூறிய அடாத சொற்களாலும் நிகழ்ந்தது என்க. உயிர் புகுந்தாள்; என்றும் பாடம். தீங்கிலாக் கற்பு; பிறர்க்குத் தீங்கு விளைக்காத கற்பு; எனவே அறக்கற்பு. இதன் மறுதலை மறக் கற்பு என்ப; தமயந்தி வேடனை எரித்ததும், கண்ணகி மதுரையை எரித்ததும் மறக்கற்பு. திருமடந்தை சேடியாம் பாங்கு; (ஒப்பு): 'செந்திரு நீரல்லீரேல் அவளும்வந் தேவல் செய்யும் (யுத்த. 1619); 'அமுதோ டெழுந்

தவளு மிழிந்தொதுங்க' பால. கார்முகப். 17; 'திருவின் முகத்துத் திருவன்னுள்' (சுந்தர. 601).

பி - ம். 1. உயிர் புகுந்தாள்.
3. நீங்கில்லாப் ; செங்கமலே, செங்கமலேப். 88

இதன்பின் ஓர் பாடல் என்பது ஐயர் குறிப்பு.

1655. கண்டாள் கருணனைத்தன் கண்கடந்த தோளானைக்
கொண்டா ளொருதுனுக்க மன்னவனைக் கொற்றவனுர்
தண்டாத வாளி தடிந்த தனிவார்த்தை
உண்டா ளுடல்தடித்தாள் வேருெருத்தி யொக்கின்ருள்.

தன் கண் கடந்த தோளானை கருணனை-தன் விழிகட்கு அடங்காது விரிந்ததோளையுடையவனுன கருணனை (முன்னர்), கண்டாள்-பார்த்து, ஒரு துனுக்கம் கொண்டாள்-ஒப்பற்ற அச்சம் கொண்டவளான சீதாதேவி, அன்னவனை - அந்தக் கும்பகன்னனை, கொற்றவனுர்-வெற்றி வீரனுன இராமபிரானுடைய, தண்டாத வாளி - தவருமல்அழிக்கவல்ல அம்பு, தடிந்த - துணித்த, தனி வார்த்தை-ஒப்பற்ற வார்த்தையை, உண்டாள் (செவிவாயிலாகக்) கேட்டு, உடல் தடித்தாள் - உடம்பு பூரித்து, வேறு ஒருத்தி ஒக்கின்ருள் - பிறள் ஒருத்தி போன்று காணப்பட்டாள்.

முன்பு கருணனைக் கண்டு அஞ்சியது, அவனுடைய பேராகிருதியினுலும், அவனுல் தன் கணவற்கு என்ன தீங்கு நேருமோ என்பது கொண்டு, இப்பொழுது மகிழ்ந்தது அந்த அரக்கனை இராமபிரான் கொன்றது பற்றி என்க. அவலச் சுவை மாறி உவகை எழுந்தது காண்க.

பி - ம். 1. சண்டாளக் கன்னனைத் தன்கண், கண்டாள் கருணனைக் கன்.
2. அன்றவனைச், அவன்றனைக்.
3. தனிப்புழுதி. 89

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

அந்தா மரையின் அணங்கதுவே யாகியுற
நொந்தாங் கரக்கன்மிக நோனு வுளத்தினனுய்ச்
சிந்தா குலமும் சிலநாளும் தன்கருத்தின்
உந்தா வுளங்கொதித்தாங் கொருவா சகமுரைத்தான்,

## இராவணன் சீறுதல்

1656. தாவரிய பேருலகத் தின்றென் சரங்கோலி
யாவரையுங் கொன்றடக்கி யென்றும் இறவாத
மூவரையு மேலைநாண் மூவா மருந்துண்ட
தேவரையும் வைப்பேன் சிறையென்னச் சீறினன்.

'தா அரிய - அழிதலில்லாத, பேர் உலகத்து - பெரிய இந்த உலகத்திலே, இன்று என் சரம் கோலி - இன்று என் அம்பினை வளைத்துச் செலுத்தி, யாவரையும் கொன்று அடக்கி - (என் தம்பி இறந்து படுவதைத் தவிர்க்காத) எல்லோரையும் கொலை புரிந் தடக்கம் செய்து, என்றும் இறவாத மூவரையும் - எக்காலத்தும் அழிவெய்தாத (பிரமன் திருமால் சிவன்) என்ற மூவரையும், மேலை நாள்-முற்காலத்தில், மூவா மருந்து உண்ட-சாவாமைக்குக் காரண மாகிய அமுதினைப் பருகிய, தேவரையும் - தேவர்களையும், சிறை வைப்பேன் - சிறைப்படுத்துவேன்' என்ன சீறினன் - என்று சொல்லி வெகுண்டான் (இராவணன்).

இராவணன் அந்தச் சீற்றத்திலும் தன் ஆற்றல் உணர்ந்தே பேசுகின்றான். மண்ணுலகத்தோரையும், போரில் வன்மை காட்டாத அரக்கர்களையும் கொல்வதாகக் கூறி, மும்மூர்த்திகள் என்றும் அழியாதவராதலாலும், தேவர்களுக்கும் அமுதம் உண்டதால் சாவின்மை கூறப்படுவதாலும், அவர்களைக் கொல் வதாகக் கூறாது சிறைவைப்பதாக மொழிந்தான். மூவா மருந்து - மூவாமைக்கு அல்லது அழியாமைக்குக் காரணமாய மருந்து, எனவே அமுதம்: இதனைச் சாவா மருந்தென்றும் கூறுவர்; 'ஏவா மக்கள் மூவா மருந்து' (ஔவை.); 'சாவா மருந்தெனி னும்' (குறள். காண்க). மூவா - முதுமை யெய்தாத: 'மூவா முதலா' (சீவக. வாழ்த்து) காண்க.

பி - ம். 1. எம்பி சவத்தோடும்.
2. கொன்றடுக்கி; பிறவாத.
3. மற்றுள்ள முப்பத்து முக்கோடி.

1657. அக்கணத்து மந்திரிய ராற்றச் சிறிதாறி
இக்கணத்து மானிடவ ரீரக் குருதியால்
முக்கைப் புனலுகுப்பெ னெம்பிக் கெனமுனியாத்
திக்கனைத்தும் போர்கடந்தான் போயினுன் தீவிழியான்.

திக்கு அனைத்தும் போர் கடந்தான் - எல்லாத் திசைகளிலும் சென்று போரில் வென்றவனுன இராவணன், அ கணத்து - அப்போது, மந்திரியர் ஆற்ற - அமைச்சர்கள் ஆறுதல் கூற, சிறிது ஆறி - சற்றுத் தணிந்து, 'இ கணத்து மானிடவர் ஈரம் குருதியால் - இதே நிமிடத்தில் இந் நரகர்களின் புலராத உதிரத்தால், எம்பிக்கு - (இறந்துபட்ட) என் தம்பிக்கு, முகை புனல் உகுப்பென்- மூன்று முறை கையால் இறைப்பதாகிய தருப் பணத்தைச் செய்வேன்'. என முனியா - என்று சொல்லி வெகுண்டு, தீவிழியான் போயினுன் - தீ எழ விழிக்கின்றவனுய், (சீதாதேவியிருந்த இடத்தைவிட்டு அப்பாற்) சென்றனன்.

ஈரக்குருதி - சிந்தப்பட்டு ஈரம் புலராத உதிரம். பச்சிரத்தம் என்பர். முனியா - செய்யா என்னும் வாய்பாடு. 'இறந்து பாழ் படுதும் பட்டாற், கையினுல் எண்ணீர் நல்கிக் கடன் கழிபபாரைக் காட்டாய்' (யுத்த. 1341) என்பது கும்பகன்னன் கூற்று. 'ஆதி நூன் மரபினுலே கடன்களு மாற்றி யேற்ற, மாதுயர் நரக நண்ணு வண்ணமும் காத்திமன்னே' (யுத்த. 1369); நீர்க்கடனில் ஒரு பகுதி முக்கைப் புனலிறைப்பதென ஓர்க. தொன்று தொட்டு - இவ் வழக்கம் தமிழ் நாட்டுள்ள தென்பதை, 'தென்புலம் வாழ்நர்க் கருங் கட னிறுக்கும், பொன்போற் புதல்வர்ப் பெருதீரும்' (புறநா. 9); என்பது கொண்டறிக. 'எனக்கு நீசெய்யத் தக்க கடனெலாம் இரங்கி யேங்கி, யுனக்கியான செய்வதானேன்' (யுத்த. இராவணன் சோகம். 39). என்று இராவணன் கூறுதலும் காண்க. மகோதரன் ஒருவனே அருகில் நிற்ப, மந்திரியர் என்றது வெகுட்சிபற்றி என்க.

பி - ம். 1. மந்திரிமார்.

2. மானிடர்கள்; குருதியினுல்.

3. என்ன முனிந்தெழா.

4. விழிப்பான், விழியா.

### மகோதரன் போதல்

**1658.** கூறேம் இனிநா மக்கும்ப கருணனார்
பாறாடு வெங்களத்துப் பட்டா ரெனப்பதையா
வேறோர் சிறையிவளை வைம்மின் விரைந்தென்ன
மாறோர் திசைநோக்கிப் போனார் மகோதரனார்.

'இனி நாம் கூறேம் - இங்கு நாம் ஒன்றும் பேசமாட்டோம்; (ஏனென்றால்), அ கும்பகருணனார் - அந்தக் கும்பகன்னன் என்பவன், பாறு ஆடு வெம்களத்து பட்டார் - பருந்துகள் வட்ட மிடுகின்ற கொடிய போர்க்களத்து இறந்தார்', என பதையா - என்று மனம் பதைத்து, (அருகில் இருந்த பணிமாக்களை நோக்கி), வேறு ஓர் சிறையிவளை விரைந்து வைம்மின் - சீதையைச் சிறையிட்டது போன்று, மற்றோர் சிறையில் இந்தச் சனகனை காலம் தாழ்க்காமல். அடையுங்கள்;' என்ன - என்று ஆணையிட்டு, மகோதரனார் - மகோதரன் மாறு ஓர் திசைநோக்கி போனார் - இராவணன் சென்ற திசைக்கு எதிராகப் பிறிதொரு திக்கு நோக்கிச் சென்றான்.

மகோதரனார்: பன்மை இகழ்வு பற்றியது,

பி-ம். 1. கூறே; இனி நமக்கோர், இனி நமக்காய்க், இனி நமக்கே, இனி நமக்கு, நமக்கினியார்; கும்பஞ்செய் கன்னனார்.
2. செங்களத்தே; பதைத்தான், பதைப்பார், பறைந்தார்.
3. என விளம்பா, என விளம்பி. 92

வேறு

### திரிசடை தேற்றச்சீதை துயரம் நீங்குதல்

**1659.** வரிசடை நறுமலர் வண்டு பாடிலாத்
துரிசடை புரிகுழற் சும்மை சூற்றிய
ஒருசடை யுடையவட் குடைய வன்பினாள்
திரிசடை தெருட்டுவா ளினைய செப்புவாள்.

வரிசடை - கோடுகள் செறிந்த சிறகுகளை யுடையனவும், நறுமலர் - மணமுள்ள மலர்களில் மொய்ப்பனவுமான, வண்டு - வண்டுகள், பாடு இலா - தங்குதலில்லாத, துரிசு அடை - அழுக்கு அடைந்த, புரி குழல் சும்மை - முறுக்குள்ள கூந்தலின் சுமையை,

ஒருசடை சுற்றிய - ஒரு சடையாகச் சுற்றி வைத்துள்ள, உடைய வட்கு - சீதாதேவியினிடத்து, உடைய அன்பினுள்-அன்பு வைத்த வளான, திரிசடை-திரிசடை என்பவள், தெருட்டுவாள் - தேறுதல் கூறுவாளாய், இனைய செப்புவாள் - பின்வரும் வார்த்தைகளைக் கூறினள்.

குழற்சும்மை சுற்றிய ஒரு சடை - 'அயிலெயிற்றரவிற், குமை யுறத்திரண் டொருசடையாகிய குழலாள்' (சுந்தர. 339); இவ்வாறு கூந்தல் சடையாயினது, நெய்தடவி வாரி வகிராமையால் என்க. வான்மீக முனிவரும் 'ஏகவேணி' என்பர். இச்செய்யுள் திரிபு என்னும் சொல்லணி. கம்பர் பெருங்கவியாதலின் எந்தக் கடுமையான பெயரையும் எதுகையின் அமைப்பர். இங்கும் திரி சடை என்றதற்கேற்ப அமைத்தமை காண்க. அகம்பன் (யுத்த. 480); அதிகாயன்' (யுத்த. 1668); என்ற பெயர்களும் இங்ஙனம் எதுகையில் அமைத்தமை காண்க. ஆருயிர்த்தோழி: 'தாயினும் இனியவள்' (சுந்தர. 360); வீடணன் கன்னி; வாடிய பிராட்டியைப் பல இடங்களில் தேற்றியவள; யுத்த. பிராட்டிகளங். 21-28. உடையவட்கு: உருபு மயக்கம்.

பி - ம். 1. பரிசுடை; மாடிலாத்.
2. உரிய; அன்பினல்.
4. செப்பினள். 93

## திரிசடை சீதையைத் தேற்றும் மொழி

1660. உந்தையென் றுனக்கெதி ருருவ மாற்றியே
வந்தவன் மருத்தனென் றுளனோர் மாயையான்
அந்தமில் கொடுந்தொழி லரக்க னுமெனுச்
சிந்தையி லுணர்த்தின ளமுதின் செய்கையாள்.

'உந்தை என்று - உன் தந்தை என்று சொல்லிக்கொண்டு, உனக்கு எதிர் - உன் முன்பாக, உருவம் மாற்றியே - (தனது அரக்கன்) உருவத்தை மாற்றிக் கொண்டு, வந்தவன் - வந்தவன், மருத்தன் என்று உளன் - மருத்தன் என்ற பெயர் உள்ளவனும், ஓர் - ஒப்பற்றவனும், மாயையான் - மாயை வல்லவனும், அந்தம் இல்கொடு தொழில் அரக்கன் ஆம்-எல்லையற்ற தீச்செயலை யுடைய வனுமான, அரக்கன் ஆவன்', என - என்று, அமுதின் செய்கை யாள் - அமுதம் போன்ற பண்பும் செயலும் உடையவளான

திரிசடை, சிந்தையில் உணர்த்தினள் - அந்தப் பிராட்டியின் உள்ளத்திற் பதியுமாறு அறிவித்தாள்.

வந்தவன் மருத்தன்: (யுத்த. 1569) காண்க. சீதை சோகத்தால் உயிர் துறக்கும் தறுவாயில் தேற்றி உயிர் காத்தவளாகலின், அமுதின் செய்கையாள் எனப்பட்டது. அமுதம், பிரிந்த உயிரையும் தரவல்லது; 'இறுதியி லுயிர்தந் தீயு மருந்தொத்த தனைய தெந்தாய்' (சுந்தர. 1285).

பி - ம். 1. உன்னெதிர் ! மாற்றினன்.
2. வந்தனன்.
4. செம்மையாள. 94

## கவிக்கூற்று ; இராவணன் செய்ததை இனிச் சொல்வோமெனல்

1661. நங்கையு மவளுரை நாளுந் தேறுவாள்
சங்கையு மின்னலுந் துயருந் தள்ளினள்
இங்குநின் றேகிய விலங்கைக் காவலன்
அங்குநின் றியற்றிய தறைகு வாமரோ.

அவள் உரை நாளும் தேறுவாள் நங்கையும் - அந்தத் திரிசடையின் சொல்லை எப்போதும் நம்புபவளான பிராட்டியும், சங்கையும் இன்னலும் - (தன் மனத்திருந்த) ஐயத்தையும் இடரினையும், துயரும் - உடலிற் காணப்படும் அவலக் குறிகளையும், தள்ளினள் - போக்கினள்; இங்கு நின்று ஏகிய - (பிராட்டியிருந்த) இடத்தினின்றும் சென்ற, இலங்கை காவலன் - இலங்கை வேந்தனாகிய இராவணன், அங்கு நின்று இயற்றியது அறைகுவாம்-அங்கிருந்து புரிந்ததை இனிக் கூறுவோம். அரோ:ஈற்றிசை.

இன்னலும் துயரும் - துன்பமும் அதன் விளைவாக உடற்கண் தோன்றும் மெய்ப்பாடுகளான கண்ணீர்ப் பெருக்கம், உடல் நடுக்கமும் முதலியன. 'நின்ற சங்கை யிடரொடு நீங்கினள்' (சுந்தர. 633);

பி - ம். 3. எய்தியது. 95

மாயாசனகப் படலம் முற்றும்.

---

இப்படலம் கம்ப நாடர் புதுப்படைப்பு; வான்மீகத்தில் இல்லை. அரக்கர்கள் காம ரூபிகள் ஆகலின் பிராட்டியை அச்சுறுத்துமாறு மருத்தன் என்னும் அரக்கனைச் சனகனை உருமாற்றியதும், அவனைக் கொல்வது போன்று காட்டிச் சீதாதேவியை அச்சுறுத்தித் தன்வயமாக்க இராவணன் முயன்றதும், கற்புநிலையினின்று வழுவாத தேவி, அவனை ஓர் துரும்பாக மதித்து உரையாடியதும், தன்முன் வந்து அரக்கனுக்கு இணங்குமாறு தனக்குரைத்த மாயாசனகன் தன் தந்தையில்லை என்று தெரிந்ததும் இந்நிலையில் கும்பகன்னன் இறந்த செய்தியைப் புகவிட்டு இராவணன் சோகிக்கச் செய்ததுமான வரலாறுகளை நாடக முறையில் கம்ப நாடர் சித்திரித்திருக்கும் சிறப்பினை ஓர்ந்துணர்க.

---

# 17. அதிகாயன் வதைப் படலம்

இஃது, அதிகாயன் வதையைக் கூறும் படலம் என விரியும்.

1662. கொழுந்துவிட் டழன்றெரி மடங்கல் கூட்டற
எழுந்தெரி வெகுளியா னிரும ருங்கினும்
தொழுந்தகை யமைச்சரைச் சுளித்து நோக்குரு
மொழிந்தன னிடியொடு முகிலுஞ் சிந்தவே.

கொழுந்து விட்டு அழன்று - (உக்கிரமாகக்) கொழுந்துவிட்டுக் கனிந்து, மடங்கல் எரி கூட்டு அற - ஊழித்தீயும் ஒப்பாகாதவாறு, எழுந்து எரி வெகுளியான் - மேற் கிளம்பி எரிகின்ற கோபம் உடையவனான இராவணன், இரு மருங்கினும் - இரு புறத்திலும், தொழும் தகை அமைச்சரை - (தன்னை) வணங்கும்படியான மந்திரி மார்களை, சுளித்து நோக்குரு - வெகுண்டு பார்த்து, இடியொடு முகிலும் சிந்த - இடியொடு மேகமும் சிதறும்படி, மொழிந்தனன் - கூறலானான். ஏ - அசை.

மடங்கல் எரி - ஊழித்தீ. கூட்டு அற - ஒப்பு நீங்குமாறு. தொழுந்தகை - பல பண்புகளாலும் தொழுந் தன்மையுடைய எனினுமாம். சுளித்தல் - வெகுளல்: 'சுளிகிலையாமெனத் தொழு கின்றார் சிலர்' (சுந்தர. 1053); 'மற்றவன் சுளியு மென்றலால்' (கிட்கிந்தா. 122); இடியொடு முகிலும் சிந்தும் மொழி; 'உரு மிடித்தன்ன குரலினர்' (திருமுரு. 172); 'இடியன்னபெருங் குரலாள்' (நகடுர்.). அதிகாயன் இராவணனுக்குத் தான்யமாலி யிடம் பிறந்தவன்.

பி - ம். 2. வெகுளியின்.

3. சுளிந்து, சுழிந்து.

4. முகிலு மிஞ்சவே.



இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை. சில பிரதிகளில் 'நதிகாய் என்ற பாடல் முதலாக இப்படலம் தொடங்குகின்றது.

1663. ஏகுதி ரெம்முகத் தெவரு மென்னுடை
யோகவெஞ் சேனையு முடற்று மும்முடைச்
சாகரத் தானையுந் தழுவச் சார்ந்தவர்
வேகவெஞ் சிலைத்தொழில் விலக்கி மீள்கிலீர்.

'என் உடை யோக வெம் சேனையும் - என்னுடைய தந்திரம் வல்ல வெம்மையான படையும், உம் உடை உடற்றும் - உம்முடைய பகையை அழிக்கக் கூடிய, சாகரம் தானையும் - கடல்போல் பரந்த சேனையும், தழுவ சார்ந்து - தழுவும்படி ஒன்று கூடி, அவர் வேகம் வெம்சிலை தொழில் விலக்கி - அந்தப் பகைவர்களுடைய விரைவு மிக்க வெவ்விய வில்லின் தொழிலைத் தடுத்து, மீள்கிலீர் - மீளு மாற்றல் இல்லாதவராயினீர்; (ஆதலின்) என் முகத்து - எனது முன்னிலையினின்று, எவரும் ஏகுதிர் - யாவரும் (அப்பாற்) செல்லுங்கள்.

எம்முகத்து - எம்முன்பு, யோகம் - உபாயம்; 'கைகண்ட யோகம்' நாய்ச்சியார் திருமொழி: (12: 5: வியா); சாகரம் - கடல். வடசொல்; சாகரஸ் ஸாகரோபமம்; யோகம்; அரைப்பட்டிகை என்பது உரைக் குறிப்பு; உம்முடைச் சேனை என்றலின் அமைச் சர்க்கும் தனிப்பட்ட சேனையுண்டு போலும்.

பி-ம். 1. ஏகுதிரெங்ஙனம், உம்முடை, எம்முடை என்னுடை.

2. மோக, ஓசை; உதவ வும்முடைச்; முதல வெம்முடைச், முதலவும் முடைச், முதலவும் படை;

3. சார்ந்தயர்.

4. செருந்தொழில்; விலக்க; விட்டிரால், மீண்டிரோ, மீட்டிரால். 2

1664. எடுத்தவ ரிருந்துழி யெய்தி யாரையும்
படுத்திவண் மீடுமென் றுரைத்த பண்பினீர்
தடுத்திலீ ரெம்பியைத் தாங்க கிற்றிலீர்
கொடுத்திலீ ரும்முயிர் வீரக் கோட்டியீர்.

'எடுத்தவர் - போர் தொடுத்தவரான. இராம இலக்குவர், இருந்துழி எய்தி - இருந்த இடத்திலேயே சென்று, யாரையும் படுத்து இவண் மீடும் - எல்லோரையும் கொன்றுவிட்டு இங்கே

மீள்வோம், என்று உரைத்த பண்பினீர் - என்று வீர வார்த்தை பேசிய பண்புடையீர்! எம்பியை தடுத்திலீர் - என் தம்பி கும்ப கன்னனைத் தனியே போருக்கு ஏகவேண்டாம் என்று விலக்கினீரில்லை; தாங்ககிற்றிலீர் - (போரில் உடனிருந்து அவனுக்குத் தீங்கு வராதபடி) ஆதரிக்கும் வல்லமையுமற்றீர்; உம் உயிர் கொடுத்திலீர் - உம்முடைய உயிரையாவது போரில் துறந்திருக்கலாம் அதுவும் செய்திலீர்; வீரம் கோட்டியீர் - நீங்களும் வீரர் வரிசையில் சேர்ந்து நிற்கின்றீர்.

எடுத்தல்: போரெடுத்தல். இருந்த உழி என்பது தொகுத்து, இருந்துழி என நின்றது, 'வீரக்கோட்டியீர் இகழ்ச்சி: கோட்டி: கோஷ்டி வடசொல்', வரிசை 'மெய்ஞ்ஞானக் கோட்டி' (நாலடி. 311); 'கோட்டியுள் மங்கை குவிமுலை நோக்குவான், ஒட்டை மறவன் உரமிலி'.

பி - ம். 1. இரிந்துழி.

பி - ம். 2. படுத்தவன், படுத்தன.

3. தடுக்கிலீர்; தாங்குகிற்றிலீர்.

4. கொடுக்கிலீர்; நும்முயிர். 8

1665. உம்மையி னின்றுநா னுலக மூன்றுமென்
வெம்மையி னுண்டது நீரென் வென்றியால்
இம்மையி னெடுந்திரு வெய்தி னீரினிச்
செம்மையி னின்றுயிர் துறந்து தீர்திரால்.

'உம்மையின் நின்று - மேனுளில் இருந்து, நான் - நான், உலகம் மூன்றும் - மூன்றுலகத்தையும், ஆண்டது - ஆட்சி புரிந்தது, என் வெம்மையின் - என்னுடைய கடும் வீரத்தினாலாகும்; என் வென்றியால் - எனது வெற்றியினுல் தான், நீர் - நீங்கள், இம்மையில் நெடு திரு எய்தினீர் - இந்தப் பிறவியில் பெருஞ் செல்வத்தினை அடைந்தீர்கள்; இனி - இனியேனும், செம்மையின் நின்று - நேர்மையான வீரப் பான்மையை மேற்கொண்டு, உயிர் துறந்து - உமது உயிரைக் கொடுத்தாவது, தீர்திர் - உங்களுடைய கடனை நிறைவேற்றுங்கள்; ஆல்: அசை.

உம்மை - முன்னுள் ; 'உங்கள் வாழ்விற்கு என் வென்றியே காரணமாயிருக்க, நீர் உமது கடனைச் செய்யத் தவறினீர்' என்று கூறுகின்றான். செம்மை - நேர்மை, நடுவு நிலையுமாம் ; 'உம்மையின் அன்று' என்பதற்குப் 'போன சன்மத்தில் செய்த பாக்கியத்தான் அன்று' என்பது பழையவுரை.

பா - ம். 1. உம் வயினன்று, உம்மையும் நன்று, உம்மையினன்றி, உம் வயினுண்ட நான்.

2. வெற்றியால்.

3. இன்மையின்.

4. இன்னுயிர் ; நீர்ந்து ; நீர்கிலிர். 4

1666. ஆற்றலெ மென்றிரே லென்மின் யானவர்
தோற்றலம் வந்துகத் துரந்து தொன்னெடும்
கூற்றல மரவுயிர் குடித்துக் கூர்த்தவென்
வேற்றலை மானுடர் வெரிநிற் காண்பெனல்.

'ஆற்றலெம் என்றிரேல் - (அவருடன் எதிர்த்துப் போர்புரிய) வல்லமையுள்ளோம் அல்லோம் என்று கூறுவீராயின், என்மின் - அங்ஙனமே கூறுங்கள் ; யான் - நான், அவர் - அந்தப் பகைவர், தோற்று - முறியடிக்கப்பட்டு, அலம் வந்து - வருந்தி ; உக - வலிகெட, தொல் நெடு கூற்று அலமர - பழைய நெடிய யமனும் மனம் சுழல, உயிர் குடித்து - உயிரைப் பருகி, கூர்த்த - கூர்மை யான, என் - என்னுடைய, வேல் தலை துரந்து - வேலின் நுனியைச் செலுத்தி, மானுடர் வெரிநில் காண்பென் - அந்த நரருடைய முதுகில் ஊடுருவக் காண்பேன். ஆல் : அசை.

ஆற்றலம் : அம் மீற்றுத் தன்மைப் பன்மை வினைமுற்று. என்றிரேல் எனின் அமையும் ; மேலும் என்மின் என்றது வெகுளி பற்றி யெழுந்த அநுவாதம் ; சொல்லுகிறாயா சொல்லு என்றாற் போல என்க. அலம் வரல் : அலம் துன்பம் ; இஃது அலமால் எனவும் வரும். 'அலமரல் உலமரல் ஆயிரண்டும் சுழற்சி' (தொல்.) அலமர என்று மூன்றும் அடியில் வந்ததும் காண்க 'அலமரல் யானை யுருமென முழங்கவும்' (புறநா. 44). கூர்த்த - கூர்மையான' 'கூர்த்த நாய் கௌவிக் கொளல் கண்டும்' (நாலடி. 70) ; வெரிந் ; முதுகு ; 'வெரிநென் னிறுதி' (தொல். எழுத். 300) ; 'குன்றம்

வெரி நுற நெரியும் வேலை' (சுந்தர. 7); 'வெரிநுறு முகத்தினர்' (சுந்தர. 388): 'வெரிநுற விளங்க' (சுந்தர. 871):

பி-ம். 1. என்றிலெனினும்.

2. தோற்றல மந்துற, அலமந்துக, அலக்கலுறை ; துரந்து.

3. கூற்றல மரவுயிர், கூற்றல மெனவுயிர், கூற்றில மெனவுயிர் ; குடிந்துக் ; கூற்றென.

4. வேற்றலம் ; காண்பிரால். 5

**1667.** அல்லது முண்டுமக் குரைப்ப தாரமர்
வெல்லுது மென்றிரேன் மேற்செல் வீரினி
வல்லது மடிதலே யென்னின் மாறுதிர்
சொல்லுநுங் கருத்தென முனிந்து சொல்லினன்.

'அல்லதும் - அல்லாமலும், உமக்கு உரைப்பது உண்டு - உமக்கு மொழிய வேண்டுவதுளது, ஆர் அமர் - அரிய போரில், வெல்லுதும் என்றிரேல் - வெற்றி பெறுவோம் என்று கூறுவீராயின், மேல் செல்வீர் - போருக்குச் செல்லுங்கள் ; இனி மடிதலே வல்லது என்னின் - இனி இறந்தொழிதலே (உம்மால்) ஆகக்கூடியது என்றல், மாறுதிர்-போர்ச் செலவுக்கு மாறாகத் திரும்பிச் செல்லுங்கள் ; நும் கருத்து துணிந்து சொல்லும் - (இவ்விரண்டில்) உமது எண்ணம் யாது தெளிவாகக் கூறுங்கள்' என - என்று, முனிந்து சொல்லினன் - வெருண்டு மொழிந்தான்.

ஆரமர் : அருமை அமர் ; இங்கே வெல்லற் கருமை. 'ஆரமரலறத்தாக்கி' (புறநா. 71); மேற் செல்லுதல் ; படையெடுத்தேகுதல்.

பி-ம். 1. தோரமர்.

2. வெல்லினும்.

3. அல்லது ; மடிநிரேல், மறிநிரேல் ; எனினும் ; மாறுவீர்.

4. துணிந்து ; சொல்லென்றான். 6

இங்கு மாயாசனகப் படலம் முற்றும் என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது.

மற்றும் இராவணனுநுகூலப்படலம் முற்றும் என்றும் ஒரு குறிப்புள்ளது.

## வேறு

### அதிகாயன் கூற்று

1668. நதிகாய்நெடு மானமு நாணுமுரு
மதீகாய்குடை மன்னனை வைதுரையா
விதிகாயினும் வீரம் வெலற்கரியான்
அதிகாய னெனும்பெய ரானறைவான்.

'விதிகாயினும் - ஊழ்வினையே சினந்தாலும், வீரம் வெலற்கு அரியான் - வெல்லுதற்கு முடியாத வீரத்தை யுடையவனான, நதி காய் நெடு மானமும் நாணும் உரு - ஆற்று நீரினையும் கொதிக்கச் செய்யும்படியான மிக்க சினமும், நாணமும் உற்று, மதிகாய் குடை மன்னனை - முழுமதியையும் வெற்றிகொள்ளும் ஒற்றை வெண் கொற்றக் குடையையுடைய இராவணனை, வைது உரையா - வசைச் சொற்பேசி, அதிகாயன் எனும் பெயரான் அறைவான் - அதிகாயன் என்பவன் (பின்வருமாறு) பகரலானான்.

இச் செய்யுளையும் இதனையடுத்து இப்படலம் 88 வரையுள்ள செய்யுட்களையும் இவ்வாறு வஞ்சிவிருத்தமாக அலகிடாமல், நதி காய் நெடுமா னமுநா ணமுரு என அளவடி நான்கு கொண்ட கலி விருத்தமாக அலகிடுதலும் அமையும். அருணகிரிநாதர் அருளிய கந்தரனுபூதிச் செய்யுட்களைக் காண்க. முழுவட்டத்தில் பூரண மதியையும் வென்றது இராவணன் குடை என்க. 'தலங்கண் மூன்றிற்கும் பிறிதொரு மதி தழைத்தென்ன' (சுந்தர. 1080), விதி: பிரமனுமாம். ஊழையும் வெல்லுதல்: 'ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித், தாழா துஞற்று பவர்' (குறள். 620); 'விதிக்கும் விதியாகுமென் விற்றொழிற் காண்டி' (அயோத்தி. நகர்நீ. 134) அதிகாயன் என்ற பெயர்க் கேற்ப எதுகையமைக்கப் பட்ட நயம் காண்க.

பா-ம். 1. நாணம்.
2. மதிகால்.

1669. வானஞ்சுக வையக மஞ்சுகமா
லானஞ்சு முகத்தவ னஞ்சுகமேல்
நானஞ்சினெ னென்றுனை நாணுகபோர்
யானஞ்சினெ னென்று மியம்புவதோ.

'வான் அஞ்சுக - வானத்தில் உள்ளார் அஞ்சட்டும்; வையகம் அஞ்சுக - பூமியினுள்ளார் அஞ்சட்டும், மாலான் அஞ்சு முகத்தவன் அஞ்சுக - திருமாலும் ஐந்து முகத்தவனான சிவபெருமானும் அஞ்சட்டும்; மேல் - பின்னர், நான் போர் அஞ்சினென் - நான் போருக்குப் பயந்தேன், என்று உனை நாணுக - என்று உன்னைக் குறித்து (நீயே) வெட்கமுறுக; யான் அஞ்சினென் என்றும் இயம்புவதோ - (என்னளவில்), நான் (போருக்குப்) பயந்தேன் என்று புகல்வது தகுமோ? ஓ-வினா.

அஞ்சுவார் அஞ்சுக, நான் போருக்கு அஞ்சேன் என்கின்றான். அதிகாயன். மேலே பொதுப்படப் பயங்காளியென்று இராவணன் கூறியதையுட்கொண்டு அதிகாயன் இங்ஙனம் கூறினன் ஆகும்.

பி - ம். 1. மால்தா னஞ்சுக சங்கர னஞ்சுக போர்.
3. நானஞ்சினனேல், அஞ்சுவென்று, அஞ்சின நன்று; உரை நாணுக நாள், உரை நாணுகதான், உரை மேலுக நாள், நாணுக போய்.
4. இயம்புமதோ. 8

1670. வெம்மைப்பொரு தானவர் மெய்வலியோர்
தம்மைத்தளை யிற்கொடு தந்திலனோ
மும்மைக்குலை யப்பொரு உம்பரையும்
கொம்மைக் குயவட்டணை கொண்டிலனோ.

'வெம்மை பொருதானவர் - கடுமையாகப் போர் புரிகின்ற அசுரர்களில், மெய் வலியோர் தம்மை - உடல் வன்மை பெற்றவரை, தளையில் கொடுதந்திலெனோ - பிணித்துக் கொண்டு வந்து (உம்மிடம்) கொடுத்திலனோ? மும்மை குலைய பொரும் உம்பரையும் - மூன்றுமுறை போர் புரிந்த தேவர்களையும், நடுங்குமாறு கொம்மை - பருத்த, குயம் வட்டணை கொண்டிலனோ - மார்பில் சுற்றுத் தாளமிடுதலைச் செய்திலனோ?

தலையில் கொடு; பிணித்துக்கொண்டு, வட்டணை - தாளம் போடுதல் (பிங்): மெய்வலி - உண்மையான வலிமையுமாம். குய வட்டணை : குயவன் திரிகை எனினுமொன்றும்.

பி - ம். 1. மெல்வலியோர் ; வலியார்.
மும்மைக் குலைய.
வட்டனை. 0

1671. காய்ப்புண்ட நெடும்படை கையுளதாத்
தேய்ப்புண்ட வனுஞ்சில சில்கணையால்
ஆய்ப்புண்டவ னும்மவர் சொல்வலதால்
ஏய்ப்புண்டவ னும்மென வெண்ணினையோ.

'காய்ப்பு உண்ட - நன்கு காய்ச்சி வடித்த, நெடுபடை - நீண்ட ஆயுதம், கை உளதா - தன் கரத்திலேயிருக்க, தேய்ப்பு உண்டவனும் - தரையில் தேய்க்கப்பட்ட அக்க குமாரனும், சில சில்கணையால் - சிற்சில அம்புகளால், ஆய்ப்பு உண்டவனும் - உயிரடங்கி ஒழிந்தவனான கும்பகன்னனும், அவர் சொல்வலதால் - அந்த இராம இலக்குவருடைய புகழின் வலத்தால், ஏய்ப்பு உண்டவனும் என - ஏமாற்றப்பட்டவனான வீடணன் என்றும், எண்ணினையோ - என்னைக் கருதினையோ? ஓ : வினா.

காய்ப்புண்ட : உண்ட துணைவினை. உளதாக என்பது, ஈறு குறைந்து உளதா என நின்றது. தேய்ப்புண்டவன் : அக்க குமாரன் ; இராவணன் மகன். வண்டோதரியிடம் பிறந்தவன் ; சுந்தர. *968* ; யுத்த. *964*. காண்க. ஆய்ப்புண்ணுதல் - தேய்த்து இளைத்தல் : 'ஒய்தல் ஆய்தல் நிழற்றல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம். வலது - வன்மை. ஏய்ப்புண்ணுதல் - ஏமாற்றப்படுதல். இராம இலக்குவரின் புகழைக் கேட்டு ஏமாந்தவன் வீடணன் என்றான்.

பி - ம். 1. கையுளதாய், உளதால்.
2. கணைமால்ர.
3. எண்ணினையே; என்னுநியோ. 10

## அதிகாயன் வீரமொழிகள்

1672. உம்பிக்குயி ரீறுசெய் தானெருவன்
தம்பிக்குயி ரீறு சமைத்தவனைக்
கம்பிப்பதொர் வன்துயர் கண்டிலனேல்
நம்பிக்கொரு நன்மக னேவினிநான்.

'உம்பிக்கு - உன் தம்பியின், உயிர் ஈறு செய்தான் ஒருவன் - உயிர்க்கு இறுதி யிழைத்தவனான ஒப்பற்ற (இராமபிரானுடைய), தம்பிக்கு - தம்பியான இலக்குவனுக்கு, உயிர் ஈறு சமைத்து - உயிர் இறுதி செய்து, அவனை - அந்த இராமபிரானை, கம்பிப்பது ஓர் - நடுங்கும்படி செய்யவல்ல ஒப்பற்ற, வல்துயர் கண்டிலனேல் - கடுமையான துன்பத்தைச் செய்யாது ஒழிவேனாயின், இனி - இனி மேல், நான் - நான், நம்பிக்கு ஒரு நல் மகனோ - சிறந்த வீரனாகிய உனக்கு ஒரு சிறந்த மகன் என்று சொல்லப்பெறும் தகுதி யுள்ளவன் ஆவேனோ?

உம்பி என்றது கும்பகன்னனை; ஒருவன் தம்பி: இலக்குவன்; கம்பிப்பது - நடுக்கஞ்செய்வது. கம்பம் என்ற வட சொல்லில் எழுந்த வினைச்சொல். 'கம்பிக் கும்மென் னெஞ்சவ னென்றே கவல்கின்றேன்' (ஆரணிய. 740). நம்பிக்கு : முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி.

பி - ம். 1. செய்வான்.
3. கம்பித்தது; வன்றிறல்; கண்டிலனல். 11

1673. கிட்டிப்பொரு தக்கிளர் சேனையெலாம்
மட்டித்துயர் வானரர் வன்றலையை
வெட்டித்தரை யிட்டிரு வில்லினரைக்
கட்டித்தரு வென்னிது காணுதியால்.

'கிட்டி - நெருங்கி, பொருது - போர்புரிந்து, அ கிளர் சேனை எலாம் - மனவெழுச்சி கொண்டுள்ள அந்த வானரப்படைகள் அனைத்தையும், மட்டித்து - அழித்து, உயர் வானரர் வல்தலையை வெட்டி - தலைமைபெற்ற வானரங்களின் வலிய சிரங்களைக் கொய்து, தரை

இட்டு - மண்ணில் வீழ்த்தி, இரு வில்லினரை - இரண்டு வில்லி களான இராம இலக்குவரை, கட்டி தருவென் - பிணித்து உன் முன் கொணர்வேன் ; இது - (இந்த என் ஆற்றலை) காணுதி - பார்ப்பாயாக. ஆல் : அசை.

கிளர்தல் - மன உற்சாகம் கொள்ளுதல். மட்டித்தல் - அழித் தல் ; 'மணிகொள் குட்டிம மட்டித்து'; 'மாங்கனிப்பனை மட்டித்து மாற்றியே' (சுந்தர. 714, 715) ; 3, 4-ஆம் வரிகள் வகையுளி என் பது ஐயர் குறிப்பு.

பி - ம். 2. வாநர வன்றலையை, வன்றலையான்.
3. தரையிட்டிகல். 12

## அதிகாயன் விடை வேண்டுதல்

1674. சேனைக்கட லோடிடை செல்கெனினும்
யானிப்பொழு தேதனி யேகெனினும்
தானொத்தது சொல்லுதி தாவிடையென்
றுனித்திற முன்னி யரக்கர்பிரான்.

'சேனை கடலோடு இடை செல்க எனினும் - சேனைக் கட லுடனே போர்க்கு ஏகுக எனக் கட்டளையிட்டாலும், (அன்றி) தனியே ஏகு - (சேனை தொடர்தலின்றித்) தனிப்பட்டுச் செல்க, எனினும் - என்றாலும், யான் இப்பொழுதே - நான் இப்போதே செய்வேன் ; தான் ஒத்தது சொல்லுதி - (இவ்விரண்டனுள்) உனக்குச் சம்மதம் எதுவோ அதனைச் சொல்லுக, 'விடைதா - விடையீவாயாக', என்றான் - என்று கூறி நின்றான் ; இதிறம் உன்னி - இவ்வாறு மகன் கூறியதை நன்கு ஆராய்ந்து, அரக்கர் பிரான் - அரக்கர் தலைவனான இராவணன் 'ஏவினனால்' (1676) என்பதனோடு சென்று முடியும்.

இடை என்றது போர்க்களத்திடை என்க. செல்க என்பது அகர ஈறு குறைந்தது, ஒத்ததுதான் சொல்லுதி எனினுமாம். தான் அசையென்பாரும் உளர். வன்மையில் நேரொத்தவனாகலின் ஈ என்றோ கொடு என்றோ கூறாது தாவிடை என்றான். 'ஈதா

கொடு வெனு மூன்று முறையே, இழிந்தோன் ஒப்போனுயர்ந்தோன் இரப்புரை' (நன்.) என்றது காண்க.

பா - ம். 2. இப்பொழுதே யிடையேயெகிடினும், கடிதேசெனினும்.
3. தானெத்தன ; என்ருனோத், என்ருனத்
4. தானத்திற. 13

## இராவணன் உவந்து விடை தந்து கூறுதல்

1675. சொன்னுயிது நன்று துணிந்தனை நீ
அன்னனுயிர் தந்தனை யாமெனின்யான்
பின்னுள விராம னெனும்பெயரான்
தன்னருயிர் கொண்டு சமைக்குவெனல்.

'நீ நன்று துணிந்தனை இது சொன்னுய் - நீ செம்மையாகத் தெளிந்து இச்சொற்களைப் பகர்ந்தனை ; அன்னன் உயிர் தந்தனை ஆம் எனின் - அந்த இலக்குவனுடைய உயிரை நீ தந்தாயாகில், யான் - நான், பின்னுள் - அதனை அடுத்த நாளில், அவ் இராமன் எனும் பெயரான் தன் - அந்த இராமன் என்ற பெயர் தரித்தவனுடைய, ஆர் உயிர் கொண்டு சமைக்குவென் - அருமையான உயிரைக் கொண்டு முடிப்பேன்.

துணிந்தனை - தெளிந்தனை ; மனத்துணிவுமாம். அருமை + உயிர் : ஆருயிர்.

பா - ம். 1. துணித்தனை.
3: பெயரோன்.
4. தன்னுருயிருண்டு, கொன்று, சமிக்குவனல், செமிக்குவனல். 14

1676. போவா யிதுபோது பொலங்கழலோய்
மூவாயிர கோடிய ரோடுமுரண்
காவார்கரி தேர்பரி காவலினென்
றேவாதன யாவையு மேவினனல்.

'பொலம் கழலோய் - பொன்னாற் செய்த வீரகண்டை யணிந்தவனே ! மூவாயிர கோடியரோடு - மூவாயிரம் கோடி காலாட்களோடு, முரண் - மாறுபடும் தன்மையை, கா ஆர் - காத்தல் பொருந்திய, கரிதேர் பரி - யானையும் தேரும் குதிரையும், காவலின்-

என்ற இவற்றின் பாதுகாப்பிலே, இதுபோது போவாய் என்று - இப்போது செல்வாயாக என்று, ஏவாதன யாவையும் ஏவினன் - (இதுகாறும்) ஏவாத பலவகைச் சேனைகளையும், (அந்த அதிகாய னுடன் செல்லுமாறு) கட்டளையிட்டான் (இராவணன்). ஆல் - அசை.

இதுபோது ஏவாதன என்று கொண்டு இதுவரையிலும் ஏவப் பெறாத என்க. ஏவாதன ஏவினன் என்ற முரண்தொடை காண்க. ஏவாதன - அந்தரங்கமான சேனை யெனினுமாம்.

பி - ம். 1. பொலங் கழலோர்.

2. கோடிமுரட் படையார், கோடிகுமாரர் முதல்.

3. பரிக்காவலனின் ; தேரொடு செல்லுநியால். 15

இதன்பின் 'ஓரேறு' என்ற பாடல் ஓர் பிரதியில்.

1677. கும்பக்கொடி யோனு நிகும்பனும்வே
றம்பொற்கழல் வீர னகம்பனொடும்
செம்பொற்பொலி தேரயல் செல்குவரால்
உம்பர்க்கும் வெலற்கரி யாருரவோர்.

'உம்பர்க்கும் வெலற்கு அரியார் - தேவர்கட்கும் வெல்ல அருமையானவரும், உரவோர் - வன்மை வாய்ந்தவருமான, கும்பன் கொடியோனும் - கும்பன் என்ற கொடுமையானவனும், நிகும்ப னும் - நிகும்பன் என்றவனும், வேறு - இவர்களின் வேறான, அம் பொன் கழல் வீரன் அகம்பனொடும் - அழகிய பொன்னாலாகிய கழல் அணிந்த வீரனான அகம்பனும், உன் - உன்னுடைய, செம்பொன் பொலி தேர் அயல் - சிவந்த பொன் மயமாக ஒளிர்கின்ற தேரின் அயலே, செல்குவர் - (உனக்குக் காவலாக) ஏகுவர். ஆல் - அசை.

கும்பன். யுத்த. 492 காண்க. நிகும்பன் ; யுத்த. 49 ; உரைக் குறிப்புக் காண்க. அகம்பன் யுத்த. 490 காண்க.

பி - ம். 2. கழல்விர.

3. செல்குநியால், செய்குவரால்.

4. இலக்கரியா முரவோர், வெலற்கரிதா முரவோய். 16

இதன்பின் 'ஆமத்தனை' என்ற பாடல் சில பிரதிகளில்,

1678. ஓரேறு சிவற்குள தொப்புளவாம்
வாரேறு வயப்பரி யாயிரம்வன்
போரேறிட வேறுவ பூணுறுதிண்
தேரேறுதி தந்தனன் வெந்திறலோய்.

'வெம் திறலோய் - கடுமையான வன்மை வாய்ந்தவனே! வல் போர் ஏறிட - வலிய போர் மும்முரமாக நடைபெறுங்கால், ஏறுவ - (போர் அரங்கில்) முன்னணியிற் செல்வனவும்; சிவற்கு உளது ஓர் ஏறு ஒப்புளவாம் - சிவபெருமானுக்குரிய ஒரு காளையை நிகராகக் கொண்டனவுமான, வார் ஏறு - கடிவாளம் பூண்ட, வயம்பரி ஆயிரம் - வெற்றிமிக்க குதிரைகள் ஆயிரம், பூணுறு - பூட்டப் பெற்ற, திண் - உறுதியான, தேர் தந்தனன் - தேரை உனக்களித் தேன்; ஏறுதி - (அதில்) ஏறுவாயாக.

வெற்றிமிக்க பரிக்ள் சிவபிரரன் வாகனமான ஏற்றினை ஒக்கும் எனப்பட்டது. பிரமன் இராவணற்குதவிய தேர் ஆதலின் திண் தேர் எனப்பட்டது. 17, 18-ஆம் பாடல்கள் பின்முன்னாகச் சில பிரதிகளில் உள்ளன.

பி - ம். 1. ஒப்பதுவாய்.

3. போரேறிடின், ஏறிடி.

இது சில பிரதிகளில் 'ஆமத்தனை' என்ற அடுத்த பாடலின் பின்.

1679. ஆமத்தனை மாவுடை யத்தனைதேர்
சேமத்தன பின்புடை செல்லவடும்
கோமத்த நெடுங்கரி கோடியொடும்
போமத்தனை வெம்புர விக்கடலே.

'ஆம் - பெரருந்திய, அத்தனை மாஉடை அத்தனை சேமத்தன தேர் - அவ்வளவு (ஆயிரம்) குதிரைகளையுடைய அத்தனை சேமத் தேர்கள், பின் புடை செல்ல - பின்னும் பக்கங்களிலும் செல்ல, அடும் - (பகைவரைக்) கொல்லும் ஆற்றல் சான்ற, மத்த - மதம் செறிந்த, கோடி கோநெடுகரி - கோடிக்கணக்கான தலைமைபெற்ற உயர்ந்த அரசுவாக்களுடன், அத்தனை வெம் புரவிகடல் - அவ்

வளவு வெம்மை வாய்ந்த குதிரைத் தொகுதியும். போம் - உன் உடன் வரும்'. ஏ - அசை.

அத்தனை, நான்கடிகளிலும் வந்தது சொற் பொருட்பின் வரு நிலையணி. பின்புடை - உம்மைத் தொகை. புடைபின் செல எனினுமாம். கோநெடுகரி என இணைக்கப்பட்டது. குதிரைகளின் மிகுதி குறித்துக் கடல் எனப்பட்டது; புரவிகளின் செலவுக்குக் கடலலைகளை உவமை கூறுவது உண்டு. சேமத்தன பின்புடை செல்ல: தேருருளையைக் காத்துச் செல்வோர்: (பெரும்பாண்.). கோமத்த நெடுங்கரி: 'மூர்த்தா விசேஷமான யானை' என்பது பழைய குறிப்பு.

பி - ம். 1. தேருடையத்தனையோ, தேருடையத்தனைமா, வரசியசைத்திடுநேர்.
2. சேமந்தன பின்பிடை ; செல்ல நெடுங்.
3. மதக்கரி.
4. போர்மந்தநெடும், போமத்தநெடும் ; புடை.செல், கடலீர். 10

## அதிகாயன் விடைபெறுதல்

1680. என்றேவிடை நல்க விறைஞ்சியெழா
வன்றுள்வயி ரச்சிலை கைக்கொடுவாள்
பொன்றாழ்கவ சம்புகு தாமுகிலின்
நின்றானிமை யோர்கள் நெளிந்தனரால்.

என்றே - என்று மொழிந்து, விடை நல்க - விடைதர, இறைஞ்சி எழா - (அதிகாயன் அந்த இராவணனைப்) பணிந்து எழுந்து, வல்தாள் - வலிய தண்டினையுடைய, வயிரம் சிலை - உறுதியான வில்லினை, கைகொடு - கரத்தில் ஏற்று, வாள் - ஒளி வாய்ந்த, பொன்தாழ் கவசம் - பொன் புகுத்திச் செய்யப்பெற்ற கவசத்தில், புகுதா - புகுந்து; முகிலின் நின்றான் - மேகம்போன்று நின்றான்; இமையோர்கள் நெளிந்தனர் - (அதுகண்டு) தேவர்களும் உடல் நலிவும் உள்ளத்தச்சமும் கொண்டனர். ஆல் - அசை.

எழா: செய்யா என்னும் வாய்பாடு; வன் தாள்சிலை: 'வன் றாட் சிலையேந்தி வாளிக்கடல் சுமந்து' (ஆரணிய. 985); தாள் -

வில்லின் அடிப்பாகம். 'வன்றாள் வயிரச் சிலை' (யுத்த. நாகபாசப் 15); தாளினைக் கால் என்றும் கூறுவதுண்டு; 'காணு நெடுஞ் சிலை கால்வலி தென்பர்' (பால. கார்முகப்: 28); பொன்தாழ்: தாழ்தல்: தாங்குதல்; பொன்னுள்ளிட்டுச் செய்த என்க. வில் லேந்திக் கருநிறமாகலின் முகிலின் நின்றான் எனப்பட்டது) நெளிந்தனர்; (ஒப்பு): 'நிலமகள் முதுகிற' (திருவிளை. திருமணப். 76). இமையோர் நெளிந்தனர் எனவே ஏனையோர் நெளிந்தமை கூறவேண்டுவதின்று

பி-ம். 3. கவசம்புக்கு.

4. நெளிந்தனரால். 19

## அதிகாயன் போர்க்களம் நோக்கிச் செல்லுதல்

1681. பல்வேறு படைக்கலம் வெம்பகலோன்
எல்வேறு தெரிப்பகொ டேகினனால்
சொல்வேறு தெழிக்குநர் சுற்றுறமா
வில்வேறு தெரிக்கரு மேகமனான்.

மாவில் வேறு தெரிக்கரு மேனியனான் - யானையைக் காட்டிலும் வேறென்று சொலற்கரிய பேருடலைப் பெற்ற, மேகம் அனான் - மேகம் போன்ற நிறத்தினையுடையவனான அதிகாயன், சொல்வேறு தெழிக்குநர் - (தமது) உரையால் (வேறாக) அதட்டுகின்ற வீரர், சுற்றுற - சூழ்ந்துவர, வெம்பகலோன் வேறு எல் தெரிப்ப-வெப்ப மிக்க கதிரவனைக் காட்டிலும் வேறாக ஒளி வீசுபவான, பல்வேறு படைக்கலம் - பலவாக வேறுபட்ட போர்க்கருவிகளை, கொடு ஏகினன் - கைக்கொண்டு சென்றான். ஆல் - அசை.

சூரியன் ஒளிபோன்றே படைக்கலங்கள் ஒளிசெய்ய, யானையோ என்று பலர் மருள அதிகாயன், படைவீரர் சூழ்வரச் சென்றான். பல்வேறு படைக்கலம்: எறிவன ஈர்ப்பன எற்றுவன குத்துவன என்க. 'எறிந்த வெய்தன வெற்றின குத்தின வீர்த்தன' (யுத்த. 212); தெழித்தல் - அழுத்தமாகப் பேசுதல்; 'தெழித்தனள் உரப்பினள்' (அயோத்தி. மந்தரை: 53); 'மாவில்வேறு தெரிப்பரு மேனியினான்' எனறு பாடங்கொண்டு வீர இலக்குமி யிவன்

முகத்தைவிட்டு வேறுவீடு தேடுவோம் என்னும்படி மூதேவி மூடினாள்' என்பது பழையவுரை.

பி-ம். 1. படைக்கலமும் பகலோன்.

2. எல்வேறு தெரிப்பதொரு.

3. சுற்றினரால், சுற்றுநரால், சுற்றுறவும், சுற்றமுமா.

4. தெரிப்புறு, மேனியினான், மேனியினார், மேகமனார். 20

இங்கு அதிகப்பாடல்கள் :—

முதிர்போருறு மொய்ம்பன் முனைத்தலையில்
கதிரேறிய தானை தழைத்திடவுங்
கெதிர்தேரிடை யேறினன் மற்றொருவெங்
கதிரோனிகல் கண்டிட வேகினனால். 1

தேர்வெள்ள மளப்பில திண்புரவித்
தார்வெள்ள மளப்பில தந்தியினக்
கார்வெள்ள மளப்பில கண்டகராம்
பேர்வெள்ள மளப்பில பெற்றதுவால். 2

## களிறு முதலியவற்றின் ஒலி

1682. இழையஞ்சன மால்களி றெண்ணிலரி
முழையஞ்ச முழங்கின மும்முறைநீர்
குழையஞ்ச முழங்கின நாணொலிகோள்
மழையஞ்ச முழங்கின மாமுரசே.

இழை - (ஓடை முதலிய) அணிகளைத் தரித்தனவும், அஞ்சனம் மால்களிறு - அஞ்சனமைபோன்றனவுமான கரிய ஆண் யானைகள், எண்ணில் அரி - கணக்கற்ற சிங்கங்கள், முழை அஞ்ச - தத்தம் முழைகளில் ஒடுங்கிப் பயங்கொள்ளுமாறு, முழங்கின - பிளிறின; நாண் ஒலி - வில்லின் குணத்தொனியானது, மும்முறை நீர் - மூன்று முறைகளை ஏற்றுள்ள கடல், குழை அஞ்ச - குழைந்து அச்சுறும்படி, முழங்கின - பேரொலி விளைத்தன; மாமுரசு - பெரிய முரசுகள். கோள்மழை அஞ்ச முழங்கின - நீரைப்பருகி யுட்கொள்ளுகின்ற மேகமும் அச்சுற முழங்கின. ஏ: அசை.

இழை: இழைத்துச் செய்யப்பெறுவது என்று அணிகட்குக் காரணக்குறி. மால் களிறு - கரிய யானை; பெரிய களிறு எனினுமாம். முழை அஞ்ச - முழையினின்று அஞ்ச என்க. மும்முறை நீர் - மூன்று தன்மை வாய்ந்த நீர் எனவே, முந்நீர் எனும் கடல்; மூன்று தன்மையாவன. படைத்தல், காத்தல், அழித்தல் என்ப. பெரும்பாண். *441 - 42* உரைக் குறிப்புக் காண்க. கோள்: கொள்ளுதல்; இழை அஞ்சனக் களிறு: கலித். *86 : 1*; புறநா. *153 : 2*; *151 : 3-4.* கார்கோள் என்று கடலைக் கூறுவது காண்க. முரசு: அரசர்க்குரிய: வெற்றி முரசு, மணமுரசு, கொடை முரசென்பர். இங்கே வீரம் அல்லது வெற்றி முரசு.

பி - ம். 1. களிறென்னரிவாழ், களிசேனரிவாழ்.

2. மும்முறைநீர்க்.

3. உழையஞ்ச; ஞாஞெழிகொள். 21

## சேனைகளின் வருணனை

1683. ஆர்த்தார் நெடுவான நடுங்கவடிப்
பேர்த்தார் நிலமாமகள் பேர்வளெனத்
தூர்த்தார் நெடுவேலைகள் தூளியினல்
வேர்த்தா ரதுகண்டு விசும்புறைவோர்

நெடுவானம் நடுங்க - அகன்ற ஆகாயமும் கிடுகிடுக்குமாறு, ஆர்த்தார் - (வீரர்கள்) ஆர்ப்பரித்தனர்; நிலமாமகள் பேர்வள் என அடி பேர்த்தார் - பூமகளும் இடம்விட்டுப் பெயர்ந்தாள் என்னும்படி, காலை மாறி மாறி வைத்தனர்; நெடு வேலைகள் - நீண்ட கடல்களை, தூளியினல் தூர்த்தார் - (செல்லும் விசையால் கிளப்பிய) புழுதிகொண்டு நிரப்பினர்; அது கண்டு - அச் செயலைக் கண்ணுற்று, விசும்பு உறைவோர் வேர்த்தார் - விண்ணுறுவோர் வியர்த்தனர்.

நில மாமகள் பேர்வளென அடி பேர்த்தார். 'பெயருமேல் நெடும் பூதங்களைந்தொடும் பெயரும்' (யுத்த. *142*); 'பேரடா நின்ற தாளோ டுலகெலாம் பெயரப் போவான்' (யுத்த. *258*); (ஒப்பு): 'மேருவேமுதற் கிரிகள் வேரொடும, பேருமேயவன் பேருமேல்' (கிட்கிந்தா. *119*); 'திரிவ ரேல்உடல் திரிதரு நெடுநிலம் செவ்வே,

வருவ ரேனுடன் கடல்களும் தொடர்ந்துபின் வருமால் (யுத்த. மூலபல: 12). வேர்த்தல்: அச்சத்தின் மெய்ப்பாடு.

பி - ம். 1. நடுவானம், அரல்வானம்; வானகமஞ்ச.

2. போவதெனை, பேர்வதெனத்.

3. நிரைவேலைகள், அலைவேலை.

4. உறைவார். 22

1684. அடியோடு மதக்களி யானைகளின்
பிடியோடு நிகர்த்தன பின்புறமின்
தடியோடு துடக்கிய தாரையவெண்
கொடியோடு துடக்கிய கொண்முவெலாம்.

மின் தடியோடு துடக்கிய தாரைய-(தம்மிடத்து) மின்னலுடன் இணைந்த ஒழுங்கினையுடையனவும், வெண்கொடியோடு துடக்கிய கொண்மு எலாம் - (வேழங்களின் மிசையிருந்து பிடிக்கப்படும்) வெண்ணிறக் கொடியுடன் இணைந்து செல்வனவுமான மேகம் அனைத்தும், அடியோடும் - முன்னர் (தமது) காலின் விசையில் ஓடுகின்ற, மதம்களி யானைகளின் - மதக்களிப்புக் கொண்ட யானைகளின், பின்புறம் பிடியோடு நிகர்த்தன - பின்னர்ச் செல்லும் பெண் யானைகளோடு ஒத்து விளங்கின.

அடி ஒடும் - அடியினால் ஓடும் என்க. யானைகளின் மீதிருந்து அந்த யானைகளின் பின் படர்கின்ற மேகங்கள், மதம் கொண்ட வேழங்களின்பின் விரைகின்ற பெண்யானைகளைப் போன்ற என்பது கருத்து. தற்குறிப்பேற்றம்: மேகம் பெண் யானைபோன்றதாக, மின்னல் பெண் யானை மீது ஏறிச்செல்லும் களிற்றை ஒக்கும். 'பொன்னணி புணர்முலைப் புரிமென் கூந்தலார், மின்னென மடப்பிடி மேகம் போன்றவே' (பால. எழுச்சி: 15); தடி : மின்னல்; தடித்த: வட சொல். கொண்மூ - கொண்மு, குறைத்தல்; இச்சொல் நீரை யுட்கொள்ளுதல் என்று முகிலுக்குக் காரணக்குறி. 'அடியோடு மதம் : கால்வழி சொரி மதம' என்பது பழையவுரை.

பி - ம். 1. விசைக்களி.

2. பின்பிற; மூன்றடியோடு.

3. தொடங்கிய, நிகர்த்தன; தாரையவம். 23

1685. தாருடின மால்கரி யின்புடைதாழ்
மாருடின மாமத மண்டுதலால்
ஆருடின பாய்பரி யானைகளும்
சேருடின சேணெறி சென்றவெலாம்.

தாறு ஆடின மால் கரியின் புடைதாழ் - அங்குசத்தால் குத்துண்ட மதக்களி கொண்ட வேழங்களுடைய, க்வுளின் இரு பக்கங்களிலும், மாருடின தாழ்-மாறுபட்டனவாய்த் தங்கியுள்ள, மாமதம்-மிக்க மதநீர், மண்டுதலால் - மிக்கு நிறைத்தலால், (உண்டாகிய) ஆறு - ஆற்றிலே, பாய்பரி - தாவிச் செல்கின்ற குதிரைகளும், யானைகளும் - யானைகளும், ஆடின - மூழ்கின, (அதனுல்) சேனைகள் சென்ற சேண் நெறி எலாம் சேருடின-படைகள் சென்ற நெடுந் தூரமெல்லாம, சேருடின - சேறு பட்டன.

தாறு - தாற்றுக்கோல்; இங்கே அங்குசம்: மதநீர் ஆருகப் பெருக, அதில் பரியும் கரியும் ஆடின என்று மிகுதி கூறினர்.

பி - ப். 1. தாருடியில், புடைதாள்.
2. வார்மதம்.
3. ஆள்களுடன், யானைகளின், யாளிகளும்.
4. சேருடின சென்றன. 24

1686. தேர்சென்றன செங்கதி ரோனெடுசேர்
ஊர்சென்றன போலொளி யோடைகளின்
கார்சென்றன கார்நிரை சென்றனபோற்
பார்சென்றில சென்றன பாய்பரியே

செங்கதிரோனெடு - சிவந்த கிரணங்களையுடைய சூரியனுடன், சேர் - சேர்ந்து, ஊர் சென்றன போல் - ஊர்கோள் சென்றன போன்று, தேர் சென்றன - (இந்த அதிகாயன் இரதத்தைத் தொடர்ந்து) பல தேர்கள் சென்றன ; கார் நிரை சென்றன போல்- மேகத்தின் வரிசை சென்ருற் போல, ஒளி ஓடைகளின் கார் சென்றன. - ஒளிவாய்ந்த நெற்றிப் பட்டங்களுடன் கூடிய யானைகள்

சென்றன ; சென்றன பாய்பரி - (சேனைகளின் நடுவிற்) சென்றன வான பாயும் இயல்புள்ள குதிரைகள், பார் சென்றில - (கால்கள் தரையிற் பாவாமையின், பூமியிற் சென்றில.

மிகவும் நெருக்கமாகச் சென்றதற்குச் சூரியனும் ஊர் கோளும் உவமைகள். ஊர் - ஊர் கோள். குதிரைகள் நான்கு காற் பாய்ச்சலாக விரையும்போது கால்கள் நிலத்திற்படியா வாகலின் 'பார் 'சென்றில' எனப்பட்டது. 'பார் சென்றன சென்றில - பாரில் நடந்தும் அடிதெரியவில்லை குதிரை விசை' என்பது பழையவுரை.

பி - ம். 1. ஒளிர், ஒளி தேர்.
2. ஊர்சென்றன சென்றில, சென்றன சென்றன.
4. பார் சென்றன சென்றில. 26

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

மல்லேறிய திண்புய மள்ளர்கரத்
தெல்லேறிய வாளெழு வல்முசலங்
வில்லோடயில் வெங்கதை வேல் முதலாம்
பல்லாயுத பத்தி பரித்துடையார்.

## அதிகாயன் போர்க்களத்திடைப்புக்கு மனம் நொந்து கும்பகன்னனது குறை உடல் கண்டு வருந்துதல்

1687. மேருத்தனை வெற்பின மொய்த்துநெடும்
பாரிற்செலு மாறுப டப்படரும்
தேர்சுற்றிட வேகொடு சென்றுமுரட்
போர்முற்று களத்திடை புக்கனனுல்.

மேருதனை வெற்பினம் - மேருவின் அளவுள்ள மலைகளின் தொகுதி, மொய்த்து - நெருங்கி, நெடு பாரில் செலும் ஆறுபட படரும் - பரந்த பூமியில் செல்லும் தகவு போன்று செல்கின்ற, தேர் சுற்றிட - தேர்கள் சூழ, முரண் கொடு சென்று போர் முற்றும் களத்து இடை - மாறுபாடு கொண்டுபோய், போர் முதிர் கின்ற யுத்தகளத்திலே, புக்கனன் - அதிகாயன் சென்று சேர்ந்தான். ஆல், ஏ - அசை.

திணை அளவு: 'திணைத்துணை நன்றி செயினும்' (குறள். 104); மேருமலை தேர்கட்குவமை; உயரத்தாலும் திண்மையாலும் கம்பீரத்தாலும் என்க. செலும் ஆறு எனப் பிரிக்க.

பி-ம். 1. மேரத்தனை, மேருத்தனி; ஒத்து.
4. புக்கனரால். 26

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

1688. கண்டான வி்ராமனெ னுங்களிமா
உண்டாடிய வெங்கள னூடுருவப்
புண்டானுறு நெஞ்சு புழுக்கமுறத்
திண்டாடினன் வந்த சினத்திறலோன்.

அவ் இராமன் எனும் களிமா உண்டு ஆடிய - அந்த இராம பிரான் என்னும் மதயானை (அரக்கர்படையை எல்லாம்) அழித்துண்டு விளையாடிய, வெம்களன் ஊடுஉருவ கண்டான் - கடுமையான போரரங்கினை முற்றும் கண்டு, புண்தான் உறு நெஞ்சு புழுக்கம் உற - மிக வருத்தமடைந்த தன்மனம் உளைய, வந்த சினம் திறலோன் - பெருகியெழுந்த கோபத்தினையுடைய வன்மையனான அதிகாயன், திண்டாடினன் - எண்ணம் தடுமாறினன்.

போர்க்களத்தில் எண்ணிறந்த அரக்கர்கள் கொலையுண்டு கிடப்பதைக் கண்டு மனம் உளைந்தான் அதிகாயன். ஊடுருவப் பார்த்தல் - நன்கு கவனித்து உருமுற்றும் கவனித்தல். 'நீயுருவ நோக்கையா' (பால). திண்டாடுதல்; 'திண்டாட வெட்டி விழவிடுவேன்' (கந்தரலங்.).

பி-ம். 2. உண்டாடிய செங்களன்; தாதையுடன் பொருவ. 27

1689. மலைகண்டன போல்வரு தோளொடுதாள்
கலைகண்ட கருங்கடல் கண்டுமல்வான்
நிலைகண்டன கண்டொரு தாதைநெடுந்
தலைகண்டில னென்று சலித்தனனால்.

மலைகண்டன போல்வரு - மலையை நோக்கினாற் போன்று (காட்சி) பொருந்திய, தோளொடு - தோளுடனே, தாள் கலைகண்ட -

பாதமும் கலைதல் பொருந்திய, (துணியப் பெற்ற), கருகடல் - கரிய கடலை (கும்பகன்னனை)க், கண்டு உழல்வான் - கண்ணுற்று மைபவுறுன அதிகாயன், நிலை கண்டன கண்டு - (அந்த அரக்கனுக்கு உற்றனவான) அவல நிலையை உள்ளத்தால் நினைந்து, 'ஒரு - ஒப்பற்ற, தாதை - அந்தத் தாதையினுடைய, நெடுதலை கண்டிலன் - நீண்ட தலையை காணப்பெற்றேனில்லையே', என்று சலித்தனன் - என்று மனம் தளர்ந்தான். ஆல் : அசை.

மலைகண்டன போல்; 'கோயிலெய்தினன் குன்றன்ன கொள்கையான்' (யுத்த. 1274); 'மலைகிடந்தது போல வணங்கினுன்' (யுத்த. 1275); 'நின்ற குன்றொன்று நீணெடுங் காலொடுஞ், சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான்' (யுத்த. ) ; 'தாளொடு மலைகொலாம் சமரம் வேட்டது' (யுத்த. 1276) ; என முன்வந்துள்ளமை காண்க. தாதை : சிற்றப்பன். 'கலைகண்ட கருங்கடல் : நாலினுல் அளவிடுங் கடலிலே மலைபோற் கரமற்றுக் கிடக்கக் கண்டான்' என்பது பழையவுரை.

பி - ம். 1. அலைகண்டன ; போல்வன ; வாளொடு ; நாளொடுதோள்.
2. கண்டுளவாம், கண்டுடலின்.
4. தலைகண்டில வின்று. 28

1690. மிடலொன்று சரத்தொடு மீதுயர்வான்
திடலன்று திசைக்களி றன்றெருதிண்
கடலன்றிதெ னெந்தை கடக்கரியான்
உடலென் றுயிரோடு முருத்தனனல்.

'இது - இது, மிடல் ஒன்று சரத்தொடு - வன்மை வாய்ந்த வாளியுடன், வான் மீது உயர்திடல் அன்று - ஆகாயம் அளாவ உயர்ந்துள்ள பெரும் கற்குவியல் அன்று; திசை களிறு அன்று - திக்கு யானையின் உடலும் அன்று, திண்கடல் அன்று - வலிய கடலும் அன்று ; இது கடக்கரியான் எந்தை - இது எளிதில் பிறரால் வெல்லமுடியாத என் தந்தையான கும்பகன்னனுடைய உடல் - உடலம் ஆகும்', என்று - என்றுகூறி, உயிரோடும் உருத்தனன் - பெருமூச்சுடன் சினந்தான். ஆல் - அசை.

மீதுயர் வான்திடல் என்றே கொள்ளலும் ஆம். முதற்கண் உயர்ந்து விளங்கும் வானைக் கூறிப், பின்னர் வான்சணுள்ள திசை

யினைக் கூறிப், பின்னர் தரைக்கண் உள்ள கடலினைக் கூறி, இறுதியில் உடலைக் கூறிய முறை உணர்க. திடல்: இது திடர் எனவும் வழங்கும். 'திடலிடைச் செய்த கோயில்' (தேவா. 893 ; 3). திடல் அன்று - அம்புக் கூட்டமும் அன்று எனினுமாம். கடக்கரி என்பதை மதயானை என்றே கொண்டு உரை கூறுவர் சிலர்; இரண்டாம் அடியில் திசைக்களிறு என்று வந்துள்ளமையின், கடக்க அரியான் என்று கொள்ளப்பட்டது. கடக்கரியான்: அகர ஈறு தொக்கது. உயிரோடு - நெட்டுயிர்ப்புடன். உயிரோடு முருத்தனன்: போன உயிரோடும் தன்னுயிரோடும் கோபித்தான்.

பி-ம். 2. நின்றதிசை.

3. கடலன்றிது வெந்தை.

4. உருத்தனனுல், உயிராலவுயிர்த்தனனுல். 29

1691. எல்லேயிவை காணிய வெய்தினெனே
வல்லே யுளராயின மானிடரைக்
கொல்லேனொரு நானுயிர் கோணெறியில்
செல்லேனெனி னிவ்விடர் தீர்குவெனே.

'எல்லே - ஐயா! இவை காணிய எய்தினெனே - இத்தகைய அவலக் காட்சியைப் பார்க்கத்தான் இங்கு வந்தேனோ? வல்லே - விரைவாக, ஒருநான் - தனிப்பட்டவனான நான், உளர் ஆயின மானிடரை - இன்னும் உயிருடன் வாழ்கின்ற இந்த நரரை, கொல்லேன் - கொல்லாதவனும், உயிர்கோள் நெறியில் - என் உயிரைக் காத்துக் கொள்ளும் வழியில். செல்லேன் எனில் - புகாதவனுமாக நிற்பேனாகில், இவ் இடர் தீர்குவெனோ - இந்த வருத்தம் நீங்கப் பெறுவேனோ?' ஓ - வினா; எதிர்மறைப் பொருள் தந்தது.

எல்லே: இச்சொல் சங்க காலத்தில் தோழியை முன்னிலைப் படுத்தி விளிக்கும் சொல்லாக இருந்தது; 'எஞ்சா தெல்லா கொடுமை நுவலாதி' (கலித். 42 : 25); 'எல்லே இளங்கிளியே' (திருப்பாவை. 15).

பி-ம். 1. இதுகாணிய; எய்தினையான்.

2. உளதாகிய, உளராகிய.

3. கொல்லேனெனின்னுயிர், கொல்லேனெனினுனுயிர், கொல்லேனுயிர் நானொரு.

4. உயிர் கொன்னெறியில். 30

## அதிகாயன் தூதுவனை நோக்கிக் கூறுவன

1692. என்னு முனியாவி திழைத்துளவன்
பின்னுனையு மிப்படிச் செய்துபெயர்ந்
தன்னுனிடர் கண்டிட ராறுவெனென்
றுன்னு வொருவற்கி துணர்த்தினனுல்.

என்னு முனியா - என்று கூறி வெகுண்டு, 'இது இழைத் துளவன் - (என் தந்தையின் தலை ஒழிய உடல் மட்டும் காணப்படும்) இந்நிலையைச் செய்தவனுன இராமபிரானுடைய, பின்னுனையும் - தம்பியையும், இப்படி செய்து - இவ்வாருகுமாறு செய்து, பெயர்ந்து - திரும்பிச் சென்று, அன்னுன் இடர் கண்டு - அன்னவன் (இராம பிரான்படும்) துன்பத்தைக் கண்ணுற்று, இடர் ஆறுவென் - (பின்னர்) என் துன்பம் தணியப் பெறுவேன்', என்று உன்னு - என்று உளத்தே நினைந்து, ஒருவற்கு - ஒரு தூதனிடத்து, இது உணர்த்தினன் - பின்வருவதை அறிவிக்கலானுன்; ஆல் - அசை.

இழைத்துளவன் : வினையாலணையும் பெயர். இப்படிச் செய்து என்றது; தலை நீங்க உடலை மட்டும் கிடக்கச் செய்வது. அன்னு னிடர் - தான் சிறிய தந்தையின் கோர நிலையைக் கண்டு அவலிப்பது போன்று, இராமபிரான் இலக்குவன் மரித்தற்கு வருந்துவது; பேரிடர்க்குள்ளாவோர் பிறர் துயர்கண்டு தமது துன்பம் சிறிது நீங்கப்பெறுவது உலகியல் ஆதலின், ஆறுவென் என்று கூறப் பெற்றது. முனியா உன்னு : செய்யாவென்னும் வாய்பாடு. ஒருவன் - மயிடன்.

பி - ம். 2. பின்னுனையுமப்படி.
3. இடர் ஆற்றுவனென்றயல்வேறு, கண்டிட ராற்று வதென்றே.
4. துரைத்தனனுல்.



1693. வாநீமயி டன்னெரு வல்விசையில்
போநீய விலக்குவ னிற்புகல்வாய்
நானீது துணிந்தனெ னண்ணினெனுல்
மேனீதி யுணர்ந்து விளம்பிடுவாய்.

'மயிடன் நீவா - மயிடனே நீ வா, ஒருவல் விசையில் போ - ஒப்பற்ற மிக்க வேகத்தில் செல், (சென்று), நீ - நீ, அவ் இலக்கு

வனில் புகல்வாய் - அந்த இலக்குவனிடம் கூறுவாயாக ; நான் ஈது துணிந்தனென் - நான் (இவனிடம் இலக்குவனைத் தலையற்ற முண்டமாகச் செய்வதாகிய) இச் செயலைத் துணிந்து, நண்ணினென் - வந்துள்ளேன் ; மேல் இது - சிறந்த நியாயமாகிய இதனை, நீ உன்னி விளம்பிடுவாய் - நன்கு ஆராய்ந்து சொல்க' ஆல் : அசை.

அவ்விலக்குவனிற் புகல்வாய் எனறு கூறின் அமையும்: பின்னும் நாளிது துணிந்தனென் விளம்பிடுவாய் என்று அநுவதித்தது, வீராவேசத்தில் வந்த அநுவாதம்; தன் துணிவைத்திடமாகக் கூறவேண்டி வற்புறுத்த வந்ததுமாம். தந்தைக்கு ஊறிழைத்தவற்குத் தானும் பிரதியாக ஊறிழைப்பது போர் வீரன் மேற்கொள்ளும் நீதி முறையாகலின், மேல் நீதியெனப்பட்டது. நான் மேல் நீதியையுன்ன இது துணிந்தனன் எனினுமாம். 'சேவகன் தெரியக்கேட்டான், நீகரன் புதல்வன் கொல்லோ நெடும்பகை நிமிர வந்தாய், ஆயது கடனே யன்றோ, வாண்பிறந் தமைந்தார்க் கைய, ஏயது சொன்னாய்' (யுத்த. மகரக்கண்ணன் : *16*) என இராமபிரான் கூறுவதும் இங்குக் காணத்தகும். இங்கு (வி. பா. *13* ஆம் போர் : *179—184*-ல் கூறப்பெறும் அருச்சுனன் சபதம் காண்க.

பி - ம். 1. வானீள் ; மயிடாநெடு.

2. போய் ; புகலாய், புகுவாய்.

3. நண்ணின்னேல்.

4. மேனீதியையுன்னி. 32

1694. அந்தாரிள வற்கயர் வெய்தியழும்
தந்தாதை மனத்திடர் தள்ளிடுவான்
உந்தார் துயரோடு முருத்தெரிவான்
வந்தானென முற்சொல் வழங்குதியால்.

உந்து ஆர் துயரோடும் - எளிதில் தவிர்த்தற்கரிய துன்பத்துடன், உருத்து எரிவான் - சினந்து மனம் கொதிப்பவனான அதிகாயன், 'அம்தார் - அழகிய மாலை புனைந்த, இளவற்கு-தன் தம்பியின் பொருட்டு, (தம்பி மரித்ததன் நிமித்தம்), அயர்வு எய்தி அழும் - மனத் தளர்ச்சியுற்று அழுகின்ற, தம்தாதை மனத்து இடர் தள்ளிடுவான் - தம் தந்தையான இராவணனுடைய துன்பத்

தைப் போக்குதற்காக, வந்தான் - வந்தனன், என - என்ற, முன் சொல் வழங்குதி - முதற்கண் சொல்ல வேண்டிய சொல்லாகப் புகல்வாயாக. ஆல் : அசை.

அழும்தாதை : 'அண்டத் தளவு மனைய பகர்ந்தழைத்துப், பண்டைத்தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்' (யுத்த.1653) என முன்னர் வந்துள்ளமை காண்க. இராவணன் அழுது யாரும் கண்டதில்லை. இதனைப் பின்னர்க் 'காட்டாதன காட்டியதாதை' (யுத்த. நாகபாசப் : 3) என்ற இடத்துக் காண்க. உந்து ஆர் துயர் என்பதற்குத் தள்ளுகின்ற அரிய துயர் எனினுமாம். சொல்லும்படி பகர்ந்த சொற்களிலும் முன்பின் அறிந்து முறைமைப்படச் சொல்லுதல் தூதன் கடமை யாகலின்', முற்சொல் என்றான்.

பி - ம். 1. அதிகாயனமர்ந்தலையில்.

2. தந்தாதை மனத்துயர்.

3. உந்தாரியரோடும், உந்தாதுயிரோடும்; உருத்தெதிர்வான்.

4. வந்தானென முன்சொல். 33

1695. கோளுற்றவ னெஞ்சு சுடக்குழைவான்
நாளுற்ற விருக்கையில் நானொருவன்
தாளற்றுரு ளக்கணை தள்ளிடுவான்
சூளுற்றது முண்டது சொல்லுதியால்.

'கோள் உற்றவன் - (வருத்தத்தால்) கொள்ளப் பெற்றவனாய், நெஞ்சு சுட குழைவான் - உள்ளம் வெம்பத் தளர்பவனான இராவணனுடைய, நாள் உற்ற இருக்கையில் - நாளோலக்கத்தில், ஒருவன் தான் அற்று உருள கணை தள்ளிடுவான் - ஒப்பற்ற இலக்குவனுடைய பாதம் அறுபட்டு உருளும் வண்ணம் அம்பினை விடும்படி, நான் - (அதிகாயனாகிய நான்), சூள் உற்றதும் உண்டு - வஞ்சினம் கூறியதும் உண்டு ; அது சொல்லுதி - அதனை உரைப்பாயாக. ஆல் : அசை.

தந்தை மனத்துயரைத் தள்ளிடுவதற்காகப் போந்ததை முதற்கண் கூறி : தள்ளுமாறு தான் மேற்கொண்ட சூளினை அடுத்துக் கூறினன். தள்ளிடுவான் என்று இருசெய்யுட்களிலும்

ஒன்றைத்தள்ள மற்றொன்றைத் தள்ளுதல் என்று நயம் பெற வந்தமை காண்க. அம்பினை விடவே தந்தை துயரும் விடும் என்க. தள்ளுதல்; அநாயாசமாக எய்தல் என்க. சூளுற்றது : (ஒப்பு : வி. பா. 13 ஆம்போர் : 179 - 184 காண்க.

பி - ம். 1. உற்றவ.

2. இருக்கையி லன்கொருதன், இருக்கையினங்கொருதன், இருக்கையிலாறெருதன், இருக்கையிலாவொருவன்.

3. தாளிற்று, தாளுற்று ; தந்துசெய்வான், தலைதள்ளிடுவான்.

4. உண்டிது. 34

1696. தீதென்றது சிந்தனை செய்திலெனுல்
ஈதென்றிற மன்னெறி யாமெனநீ
தூதென்றிக ழாதுன சொல்வலியால்
போதென்றுட னேகொடு போதுதியால்.

'அது - (நான் செயலாற்ற நினைந்த) அது, தீது என்று சிந்தனை செய்திலென் - தீமைவிளைப்பது என்பதைப் பற்றி ஆலோசியேன் ; ஈதுஎன் திறம் - இது என் இயற்கைப்பண்பு ; மன் நெறி ஆம் - அரச குலத்தில் பிறந்தவனுன எனது தருமமுமாம் ; என - என்று மொழிந்து, தூதுஎன்று இகழாது-(நீ) நாம் கூறப்போவது தூதுரைகள் தாமே, எனப் பழிக்காமல், உன சொல் வலியால்-உன்னுடைய பேசும் திறத்தால், போது என்று - வருவாயாக என்று இலக்குவனிடம் சொல்லி, உடனே கொடு போதுதி - உன்னுடனே அழைத்து வருவாயாக.' ஆல் - அசை.

அது என்பது மேலே (31—34)-இல் கூறப்பட்டது. ஈதென் திறம், என்றது க்ஷத்திரிய தர்மம். என் என்ன காரணம் என்று வினவாமலும், தலைவன் ஆணைப்படிப் போர்க்குச் செல்வது நல்லதா கெட்டதா என ஆராயாது போர்புரிந்து இறந்துபடுதலும், போர்வீரன் இயற்கைப் பண்பு எனப்பட்டது. தன் தமையன் நடைமுறை தவறு என்றறிந்தும், கும்பகன்னன் செஞ்சோற்றுக்கடன் கழிக்க முற்பட்டு இறந்துபட்டதே, இதற்கு ஓர் சிறந்த உதாரணம். 'யாதுகொற்றவ னேவிய ததுசெய லன்றோ, நீதிபொற்கு' (அயோத்தி. மந்திர: 70); என்றது காண்க. ஒரு சமயம்

தன்னுடைய ஆற்றலைக் கண்டு அஞ்சிப் போர்க்கெழப் பின் வாங்குவனோ இலக்குவன் என்று நினைந்து 'சொல் வலியால், உடன்கொடு போதுதி' என்றான்; சொல்வலியால் - கடுஞ் சொற் சொல்லி அவனுக்கு ரோஷம் பிறக்குமாறு செய்து எனினுமாம். இங்கு அங்கதன் தூதாகிச் சென்று இராவணற் குரைத்த வற்றை ஒப்பு நோக்குக. (யுத்த. 943-950).

பா - ம். 1. நிதோன்றது. நிதென்றிவை ; செய்கிலனுல்.

2. ஈதன்றறம், ஈதோன்றறம், ஈதென்றறம்; யானெனநி, யானெனநின், யானெநிர்நி.

3. இகழாய் ; உளசொல்வலதால். முறைசொல்வதலால், நின் சொல் வலியால். 35

## அதிகாயன் அறைகூவல்

1697. செருவாசையி னார்புகழ் தேடுறுவார்
இருவோரையு நீவலை யுற்றெதிரே
பொருவோர்நம னார்பதி புக்குறைவோர்
வருவோரை யெலாம்வரு கென்னுதியால்.

'செரு ஆசையினார் -,போர்புரிய விரும்புபவர்களும், புகழ் தேடுறுவார் - புகழை நாடுபவரும் ஆன, இருவோரையும் - (இராம இலக்குவர் என்ற) இருவர்களையும், நீ வலை உற்று - நீ விரைவாக அடைந்து, 'எதிரே பொருவோர் - எதிராக வந்து போர்புரிபவர், நமனார்பதி புக்கு உறைவோர் - யமனார் புரத்தில் புகுந்து தங்குபவராவர்; வருவோரை எல்லாம் வருக என்னுதி - (இந்த நிலையுணர்ந்தும்) போர்க்கு வருபவர் வருக' என்று மொழிவாயாக. ஆல் - அசை,

வல்லை என்பது வலையெனத் தொக்கது. நமனார் பதிபுக்குறைதல் - எச்சரிக்கை செய்தவாறு; (ஒப்பு): 'எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்' (புறநா. 9); 'துஞ்சுபுலி யிடறிய சிதடன் போல, உய்ந்தனன் பெயர்தலோ வரிதே' (புறநா. 73); 'என்னை முன்னில்லன்மின் தெவ்விர் பலரென்னை, முன்னின்று கன்னின்

றவர்' (குறள். 771). நமனுர் பதி - இறந்தவர் சென்றடையும் தென்றிசைக் கிழவன் உலகம்.

பி - ம். 1. புகழ்தேடுவசால் ; தேடிடுவார்.

2. ஒருவோரையு நீயலது, இருவோரையு நிவலி, ஒருவாரையு நீயுற.

3. நமனுர் சிறை புக்குறைவான் ; வரலென்னுறுதியால். 36

## அதிகாயன் வீரவுரை

1698. சிந்தாகுல மெந்தை திரித்திடுவான்
வந்தானென வென்னெதி ரேமதியோய்
தந்தாயெனின் யானல தியார்தருவார்
உந்தாரிய வுள்ள வுயர்ந்தவெலாம்.

'மதியோய் - அறிஞனே! எந்தை சிந்தாகுலம் திரித்திடுவான் - என் தந்தையின் உள்ளக் கவலையை மாற்றவேண்டி, வந்தான் - இலக்குவன் வந்தனன்', என - என்று, என் எதிரே தந்தாய் எனின் - என் முன்னர் அழைத்து வருவாயானுல், உந்த அரிய உள்ள உயர்ந்த எலாம் - எளிதில் தள்ளிவிட முடியாத உயர்ந்த பொருள் அனைத்தும் (தருவேன்); யான் அலது யார் தருவார் - (உனக்கு) என்னையன்றி வேறு யார் கொடுக்க வல்லவர்?'

சிந்தாகுலம்: வடமொழி. 'சிந்தாகுல முற்றென்னுே டென்னை வாட்டம் திருத்துவதே' (திருக்கோ. 12); தூதுவனை மதியோய் என்றது வெறும் புகழ்ச்சியன்று; திருவள்ளுவர் கூறும் தூதிலக்கணம் காண்க. குறள். 69-ஆம் அதிகாரம். உந்த - அரிய என்பது உந்தாரிய என்ருயிற்று 'உந்தாரிய வல்ல - உனக்குத் தக்கன வல்ல' என்பது பழையவுரை. தாரி - வழி: கன்னடம்; (யுத்த. 247).

பி - ம். 1. திரிந்திடுவான், திருந்திடுவான்.

2. வந்தானெனநின், வந்நானலனென். வந்நாலவன்.

3. எனில் யானலதார்.

4. உந்தாரியல்பல்ல, உந்தார் நிருவல்ல; உவந்தவெலாம். 37

1699. வேறேய விலக்குவ னென்னவிளம்
பேறேவரு மேலிமை யோரெதிரே
கூறேபல செய்துயிர் கொண்டுனையும்
மாறேயொரு மன்னென வைக்குவெனல்.

'அ இலக்குவன் என்ன - அந்த இலக்குவன் என்று, வேறே விளம்பு - தனித்த முறையில் புகழ்ந்து கூறப்பட்ட, ஏறே வரு மேல் - ஆண்சிங்கம் (நீ அழைக்கப்) போர்புரிய வருமானால், இமையோர் எதிரே - (நமக்கு பிறவிப் பகைவரான) தேவர்களுக்கு முன்பாகவே, பலகூறே செய்து - பல பாகங்களாக வெட்டி, உயிர் கொண்டு - அவன் உயிரைப் பருகி, உனையும் - உன்னையும், மாறே - (நீ புரிந்த உதவிக்குக் கைம்மாறாக), ஒரு மன்என வைக்குவென் - ஓர் அரசனாகச் செய்வேன்', ஆல் - அசை. கூறே, மாறே: ஏகாரம் தேற்றம்; அசையுமாம்.

ஏறு: உவமவாகு பெயராக இலக்குவனைக் குறிக்கும்; உடையான் அரசருள் ஏறு' (குறள். 581); மாறு - கைம்மாறு; 'வழக்கொடுமாறு கொளன்று; (இயற்பா. பெரியதிருவக். 13).

பி - ம். 3. பலசெய்தி கொடுத்துனையும்.
4. மாறேயு மோர்மன்னென.



1700. விண்ணுடியர் விஞ்சைய ரஞ்சொலினர்
பெண்ணுரமு தன்னவர் பெய்தெவரும்
உண்ணுதன கூர்நற வுண்டதசும்
பெண்ணுயிர மாயினு மீகுவெனல்.

'விண்ணுடியர் - வானுலகத்தவரும், விஞ்சையர் - வித்தியாதராருமாகிய, அம் சொலினர் - அழகிய மொழியினையுடைய மகளிருள், அமுது அன்னவர் பெண்ணார் எவரும் - அமுதம் ஒத்தவரான எந்த மாதர்களும், பெய்து உண்ணுதன - வார்த்து உண்ணுதன வான, கூர் நறவு உண்ட தசும்பு - மிகவும் புளிப்பேறிய மதுவினை அடக்கிய குடம், எண்ணாயிரம் ஆயினும் ஈகுவன் - எண்ணாயிரம் வேண்டும் எனினும் தருவேன்.

விண்ணுடியர் : வான நாடியர் போன்றது. விஞ்சையர்: வித்தியாதரர் என்ற சொல்லின் சிதைவு. அமுதன்னவர் எனவே சொற் சுவையும் பெறப்படுதலின் அஞ்சொலினர் எனப்பட்டது. 'அஞ்சொற்கள் அமுதிலள்ளிக்கொண்டவள்' (ஆரணிய. 623); என்றது காண்க. கூர் நறவு; புளிங்காடி, 'பாம்பு வெகுண்டன்ன தேறல்' (சிறுபாண். 257); தேட் கடுப்பன்ன நாட்படு தேறல்' (392) என்பன காண்க.

பி - ம். 1. இன்சொலினர், மென்சொலினர்.

2. உண்ணூரமுது ; பெய்தவரும்.

4. என்னுயிர, மெண்ணன. 38

1701. உறைதந்தன செங்கதி ரோனுருவிற்
பொறைதந்தன காசொளிர் பூணிமையோர்
திறைதந்தன தெய்வ நிதிக்கிழவன்
முறைதந்தன தந்து முடிக்குவெனல்.

'செம் கதிரோன் உருவில் - சிவந்த ஒளித்தொகுதியை யுடைய சூரியன் உருவினைப் போன்று, உறை தந்தன - அமைந்தனவும், பொறை தந்தன - பளு உடையனவும், இமையோர் திறை தந்தன - அமரர்கள் திறைப் பொருளாக இறுத்தனவும், தெய்வம் நிதி கிழவன் - தெய்வத் தன்மை வாய்ந்த (நவ) நிதிகட்குத் தலைவனை குபேரன், முறை தந்தன - முறைமை பற்றிக் கொடுத்தனவுமான, காசு ஒளிர் பூண் - அரதனங்கள் ஒளி விடுகின்ற அணிகளை, தந்து முடிக்குவென் - தந்து நான் செய்யக் கூடியதைச் செய்து முடிப்பேன். ஆல் : அசை.

உறை தந்தன : தா துணைவினை. அளிக்கப் போகின்ற அணிகளின் ஒளி, கனம் முதலியவற்றைப் பகர்ந்தான். இமையோர் திறை தந்தது இராவணன் திசை வெற்றியின்போது. நிதிக்கிழவன் : குபேரன் : வடதிசைக் கதிபன் : திக்குபாலகர்களுள் ஒருவன் ஆகலின் தெய்வக் கிழவன் எனப் பட்டான், தெய்வ நிதி ; சங்க நிதி பதும நிதி எனினுமாம். முறை : தோற்றவன் வென்றவனுக்குத் திறையளக்க வேண்டிய முறை என்க; 'உறு பொருளும் உல்கு பொருளும் ஒன்னார், தருபொருளும் வேந்தன் பொருள்' (குறள். 756);

பி - ம். 2. காசோளி, சேரணி.

3. நிறிக்கிறைவன். 40

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

1702. மாருமத வாரிய வண்டினெடும்
பாருடு முகத்தன பல்பகலும்
தேருதன செங்களி வெங்கதமா
நூருயிர மாயினு நுந்துவெனல்.

'மாரு மதம் வாரிய - இடையருத மதப் பெருக்கை யுடையனவும், வண்டினெடும் பாறு ஆடு முகத்தன - வண்டுகளோடு பருந்துகளும் பறக்கின்ற முன்புறத்தினை யுடையனவும், பல்பகலும தேருதன - பல நாளும் தெளியாதனவும், (களி கொண்டிருப்பனவும்), செம் களி - செம்மையான மதக் களிப்புடனே, வெம் கதம்மா - கடுமையான சினத்தை யுடையனவுமான விலங்காகிய யானை, நூறு ஆயிரம் ஆயினும் நுந்துவென் - இலட்சமாயினும் தருவேன்! ஆல் - அசை.

வண்டும் பாறும் ஆடுவது : மத ஜலத்தைப் பருகுமாறு. பகல் : பகற் கூறன்று, நாள் : 'ஒல்வ கொடாதொழிந்த பகலும்' (நாலடி. 169).

பி - ம். 1. முகத்தின, முகத்தொடு.

2. செங்கண வெங்களிமா, வெங்களி செங்கதமா. 41

1703 செம்பொன்னி னமைந்து சமைந்தனதேர்
உம்பர்நெடு வானினு மொப்புறமூாப்
பம்பும்மணி தாரணி பாய்பரிமா
இம்பர் நடவாதன வீகுவெனல்.

(மேலும்), 'செம்பொன்னின் அமைந்து - செம்பொன்னாற் செய்யப்பெற்று, சமைந்தனதேர் - நன்கு கட்டப்பட்ட தேர்களும், உம்பர் நெடுவானினும் - மேலே யுள்ள நீண்ட வானுலகினும், ஒப்பு உறமூா - ஒத்த பொருளைப்பெருமல், பம்பும் - பரந்த, மணி தார் அணி - நவ மணிகள் நெருங்கியிட்டு, இம்பர் நடவாதன - இவ்

வுலகத்தில் நடவாதனவாகி, பாய்மரிமா - தாவிச் செல்லும் இயல்புள்ள குதிரைகளும், ஈகுவென் - தருவேன். ஆல் : அசை.

சமைதல் - நன்கு தொழிற்படுதல், மணிகட்கு ஒப்பு இவ்வுலகில் மட்டும் அன்று, தேவர் உலகத்திலும் இன்றென்று அதன் அருமை கூறப்பட்டது. தாவிச்செல்லும் விசையால் இம்பர் நடவாதன என்றார்: 'பார் சென்றில சென்றன பாய்பரியே' (யுத்த. 1686); இம்பர்; இவ்வுலகு; 'இம்பர் நாட்டுச் செல்வ மெல்லாம்' (கம்ப. பாயிரம்); 'இம்பர்வீ டளிக்கும் தெய்வம் மகளிரே' (திருவிளை. தருமிக்கு: 14).

பி - ம். 1. சமைந்துளதேர்.
2. ஒப்பிலவால், ஒப்புறமா, ஒப்பலவால்.
3. மணியாரணி. 42

1704. நிதியின்னிரை குப்பை நிறைந்தனவும்
பொதியின்மிளிர் காசு பொறுத்தனவும்
மதியின்னொளிர் தூசு வகுத்தனவும்
அதிகஞ்சக டாயிர மீகுவெனல்.

'நிதியின் நிரை குப்பை நிறைந்தனவும் - நிதிகளின் தொகுதி, குப்பை போல் நிறைந்தனவும், பொதியின மிளிர் - பெருந் தொகுதியாக ஒளிர்கின்ற, காசு பொறுத்தனவும் - அரதனங்களைத் தாங்கியனவும், மதியின் ஒளிர் - சந்திரன் போல் ஒளி விடுகின்ற, தூசு வகுத்தனவும் - பட்டினால் செய்யப்பட்ட ஆடைகள் பல திறப்பட்டனவற்றை ஏற்றி வந்தனவுமான, சகடு ஆயிரம் அதிகம் ஈகுவல் - பண்டிகளை ஆயிரத்தினும மிகத் தருவேன்.

குப்பை - குவியல்: 'பளிக்காய்க் குப்பையும்' (பெருங். 2,2,72); 'இரத்தினக் குப்பையும்' (பெருங். 2, 4, 69); 'கலையின் குப்பையும்' (சீவக.); அதிகம் ஈகுவனல் என இணைக்க. சகடு; வண்டி; 'பெருஞ்சகடு தேர்காட்ட' பெரிய பு. திருநா, 6) இச்சொல் சகடம் என அம்சாரியை பெற்றும், சாகாடு என நீண்டும், இலக்கியங்களில் வரும்; 'செல்வம் சகடக்கால் போல வரும்' (நாலடி. 2); 'பீலிபெய் சாகாடு மச்சிறும்' (குறள். 475). பொதி : மூடை.

பி - ம். 1. நிதியென்பன ; நிறைகுப்பை ; நெறிதொகு ; நிறைத்தன, நிரைந்தன
4. கஞ்சுகமாயிரம். 43

## அதிகாயன் விடை கொடுத்தனுப்ப மயிட னேகுதல்

1705. மற்றுமொரு தீதின் மணிப்பணிதந்
துற்றுன்னினை வியாவையு முந்துவெனுல்
பொற்றின்கழ லாய்நனி போவெனலோ
டெற்றுந்திரள் தோளவ னேகினனுல்.

'பொன் திண் கழலாய் - பொன்னுலியன்ற உறுதியான வீரக் கழலணிந்தவனே', மற்றும் - பின்னும், ஒரு - ஒப்பற்ற, தீது இல் - குற்றம் நீர்ந்த, மணி பணி தந்து - நவமணிகளிழைத்துச் செய்யப் பெற்ற ஆபரணங்களைத் தந்து, உன் நினைவு உற்று - உன மனத்தில் நீ எண்ணியனவாய் அமைந்த, யாவையும் உந்துவென் - எல்லாவற்றையும் தருவேன், நனி போ - மிக விரைந்து செல்வாயாக' எனலோடு - என்று கட்டளையிட்டவுடனே, எற்றும் திரள் தோளவன் ஏகினன் - பகைவரைத் தாக்குகின்ற திரண்ட தோளையுடையவன் ஆன மயிடன் சென்றான். ஆல்: அசை.

நினைவு - எண்ணத்தில் உள்ளன.

பி - ம். 1. மற்றும் போதி, மணித்திரடந்து, மணிக்கணி தந்து, மனனுக் கினிதாய்.

2. உற்றுன்னுழையாவையும், உற்றின்னனயாவையும், உற்றந்துணையாவையும், உற்றுந்துணையாவையும்.

3. போகெனலும். 44

## மயிடனை வாநரர் பற்றுதல்

1706. ஏகித்தனிச் சென்றெதி ரெய்தலுறும்
காகுத்தனை யெய்திய காலையின்வாய்
வேகத்தொடு வீரர் விடைத்தெழலும்
ஓகைப்பொரு ளுண்டெடன வோதினனுல்.

ஏகி - (மயிடன்) அங்கிருந்தும் புறப்பட்டு, தனிசென்று - தனியாகவே போய், எதிர் எய்தல் உறும் - எதிரே வந்துகொண்டிருந்த, காகுத்தனை எய்திய காலையின் வாய் - காகுத்தனை அடைந்தபொழுதில், வீரர் - குரங்கு வீரர்கள், வேகத்தொடு விடைத்து எழலும் - விரைவுடன் (அவனைக் கைப்பற்றுமாறு)

வெகுண்டு எழுதலும், ஓகை பொருள் உண்டு என - (உங்கட்கு மகிழ்ச்சியளிக்கக்கூடிய விஷயம் ஒன்று (இப்பொழுது மொழிய வேண்டுவது), உண்டு - இருக்கின்றது', என ஓதினன் - என்று சொல்லி (மேலும்) சொல்லலானான். ஆல் : அசை.

இந்தத் தூதுவன் வந்தது ஓர் பெரிய வீரன் போர்புரிய வருகின்றான் என்பதற்கு அறிகுறியாகலின் 'ஓகைப் பொருள் உண்டு என்றான்'. 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன திண்டோளினரும், போரெனிற் புகலும் பொருகழல் வீரரும்' ஆகலின், ஓகை விளக்கக்கூடிய பொருள் என்றான். 'கொலைக்களம், விழாக்களம போல மெய்ப்பமலி யுவகையர்' (தொல். புறத். 72, உரைமேற்கோள்) காண்க. விடைத்தல் - சினத்தல். 'வெங்கணெரியப் புருவ மீதுற விடைத்தான்' (ஆரணிய. 742).

பி - ம். 1. எய்துதலும்.

2. காலையினல்

3. விசைத்தெழுலும். 45

இராமபிரான் தூதுவனை விட்டிடுங்களெனல்

1707. போதம் முதல் வாய்மொழியேபுகல்வோன்
ஏதும்மறி யான்வறி தேகினனல்
தூதன்னிவ னைச்சுளி யன்மினென
வேதம்முதல் நாதன் விலக்கினனல்.

போதம் முதல் - உணர்விற்கு முதலாய், வேதம் முதல் நாதன் - நான்மறைகட்குத் தலைமைப் பொருளாய், நாதன் - முதன்மை கொண்டுள்ளவனான இராமபிரான், (பற்ற எழுந்த குரக்கு வீரர்களைப் பார்த்து), 'இவன் தூதன் - (இவன்) தூதாக வந்தவன், வாய்மொழியே புகல்வோன் - (இவன் தன்னுடைய தலைவன் கூறிய சொற்களையே சொல்லுபவன், ஏதும் அறியான் - அதற்கு மேலாக ஏதும் சொல்லத் தெரியாதவன், வறிது ஏகினன் - (படைக்கலம் ஏதுமின்றி) வறுங்கையனாய் வந்துள்ளான், இவனை சுளியன்மின் - இவனைச் சினவாதீர்', என - என்று சொல்லி, விலக்கினன் - (வீரர்களைத்) தடுத்தான். ஆல் : அசை.

போதமுதலும் வேத முதலுமான நாதன் என்க. உயர் வேதமும் போதமும் காண்கிலாதான்' (சுந்தர. 578) என்று இவ்வாசிரியரே பிறிதோரிடத்துக் கூறுதல் காண்க. வேதம் அநாதி என்றும் ஒரு மகா புருஷனுல் ஆக்கப்பட்டது என்றும் கூறப்படுவது. இங்கு வேத முதல் என்றது பிற்பட்ட கருத்தைத் தழுவியது. என்க. வேதத்தைப் பௌருஷேயம் என்னும் அபௌருஷேயம் என்றும் கூறுவர் வடநூலார். 'போதமும் பொருந்தும் வேள்விப் புரையறு பயனும்.... யாதவனினைந்தான் அன்ன பயத்தன' (சுந்தர. 1120) என்றதனுல் போத முதல் எனப்பட்டது. வாய்மொழி தலைவன் கூறும்படியுரைத்த வாய்ச்சொற்கள். இவ்வாறு சொன்னதைச் சொல்பவன் தூதன்; மற்றும் கூட்டியும் குறைத்தும் ஏற்ற பெற்றி இயம்புபவன் ஒற்றன் என்பதறிக. தூதன் னிவனைச் சுளியின்மின் எனத்தடுத்தது; (ஒப்பு): சுந்தர. 1152—1157; யுத்த. 400—401; திருக்குறளிற் கூறப்பெற்ற தூது, ஒற்றுடல் என்ற அதிகாரங்கள் இங்கே நோக்கத்தகும். ஏகுதல் - வருதல் என்ற பொருளில் வந்தது; 'செல்விருந்தோம்பி' (குறள். 86) என்ற இடத்துச் செல்லுதல் வருதல் என்று பொருள்படுதல் காண்க. வேதமுதல்: 'என்ருன் வேதமுதல்' (ஆரணிய. 257). சுளியன் மின் - அல் எதிர்மறை இடைநிலை.

பி - ம். 1. பொய்புகலான், பொய் புகழ்வான்.
2. ஏதம்; மதியான்.
3. தூதன் அவனே. 46

### நீ வந்தது யாது கருதி? என்று இராமன் வினவ, மயிடன் இலக்குவனிடமே சொல்லவேண்டுமெனல்

1708. என்வந்த குறிப்ப தியம்பெனலும்
மின்வந்த வெயிற்றவன் வில்வலநின்
பின்வந்தவ னேயறி பெற்றியதால்
மன்வந்த கருத்தென மன்னர்பிரான்.

வந்த குறிப்பது என் - (இராமபிரான் நீ) 'வந்த கருத்து யாது குறித்து, இயம்பு - சொல்வாயாக', எனலும் - என்று வினவ, மின் வந்த எயிற்றவன் - ஒளி செறிந்த பற்களையுடைய அந்த மயிடன், (இராமபிரானை நோக்கி) 'வில்வல - வில்லாற்றலில் வல்லவனே!

மன்னர் பிரான் - அரசர்கட்குத் தலைவனே! மன்வந்த கருத்து - அரசனுடைய உள்ளெழுந்த கருத்து, நின் - உனக்கு, பின்வந்தவனே அறி பெற்றியது - உன்பின் தோன்றிய இலக்குவனே அறிய வேண்டுவது', என - என்ன; (அதுகேட்டு) நிகழ்த்தினன் என்ற அடுத்த கவியொடு முடியும். ஆல்: அசை.

இலக்குவனிடமே கூற வேண்டுவது என்று அதிகாயன் கூறினன் ஆதலின், 'பின்வந்தவனே அறி பெற்றியது' என்றான். இக்கவி விற்பூட்டு.

பி - ம். 2. வில்வலி, நின்.

3. எறிபெற்றியெனு. 

## தூதன் தான்வந்த காரியத்தை இலக்குவனிடம் கூறல்

1709. சொல்லாயது சொல்லிடு சொல்லிடெனு
வில்லாள னிளங்கிளை யோன்வினவப்
பல்லாயிர கோடி படைக்கடன்முன்
நில்லாயென நின்று நிகழ்த்தினனால்.

வில்லாளன் இள கிளையோன் - வில்லாளனான இராமபிரானுடைய தம்பி என்ற உறவினன் ஆன இலக்குவன், 'அது சொல்லாய் - (நீ வந்த) அந்தக் கருத்தைப் பகர்வாயாக; சொல்லிடு சொல்லிடு - சொல்லுக சொல்லுக', எனு வினவ - என்ற அடுத்தடுத்து வினவ; 'பல் ஆயிரம் கோடி படைக்கடல் முன் - பல ஆயிரம் கோடிக் கணக்குள்ள (அதிகாயனுடைய) சேனைக்கடல் முன்னர், நில்லாய் - போர் செய்யுமாறு நிற்பாயாக', என - என்று, நின்று - நிதானித்து, நிகழ்த்தினன் - சொன்னான். ஆல் - அசை.

அவற்றை அடுத்த மூன்று செய்யுட்களில் காண்க. சொல்லிடு என்ற அடுக்கு அவனுக்குப் போர்மீதிருந்த பேரார்வத்தைக் குறித்து நின்றது. இளங்கிளையோன் - இளவல் என்ற உறவு முறையில் நின்றவன்,

பி - ப். 2. வில்லாளன் விளங்கிளையோன், இலங்கிளையோன்.

3. படைத்தலை, படைக்கலம்.

4. நில்லாதவனின்று. 

1710. உன்மே லதிகாய னுருத்துளனய்
நன்மேருவி னின்றன னுடியவன்
தன்மே லெதிரும்வலி தக்குளையேற்
பொன்மேனிய வென்னெடு போதுதியால்.

'உன்மேல் - உன்மீது, அதிகாயன் உருத்துளனய்-அதிகாயன் சினந்தவனாகி, நாடி நல் மேருவில் நின்றனன் - (உன்னைத்) தேடிச் சிறந்த மேருகிரிபோன்று நின்றான்; அவன் தன்மேல் எதிரும் வலி தக்குளையேல் - அவனைத் தாக்கிப் பொருவதற்கு உரிய வன்மை வாய்ந்தவனாகில், பொன்மேனிய - பொன்போன்ற மேனியனே! என்னெடு போதுதி - என்னுடன் வருவாயாக. ஆல் - அசை.

இலக்குவன் பொன்னிறமாதலின் மேரு உவமை, ஆரணிய. 38, 114 காண்க. 'செம்பொன் பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்' (பால. குலமுறை. 22) என்றதும் காண்க.

பி - ம். 1. உருத் தெதிர்வான்.
3. தன்னேர், தன்றெடு ; தாக்குளையேல்.
4. என்றெடு. 40

1711. சையப்படி வந்தொரு தந்தையைமுன்
மெய்யெப்படி செய்தன னுன்முன்விரைந்
தையப்பட லப்படி யிப்படியிற்
செய்யப் படுகிற்றி தெரித்தனனல்.

'சையம் படிவத்து ஒரு தந்தையை - மலைபோன்ற உருவத்தை யுடைய ஒப்பற்ற தந்தையின், (கும்பகன்னனுடைய), மெய்-உடலை, உன்முன் - உன் அண்ணன், முன் - முன்பு, எப்படி செய்தனன் - எந்தவிதமாகச் செய்தானே, அப்படி - அதேவிதமாக, இ படியில் - இந்தத் தரையில், விரைந்து செய்யப்படுகிற்றி - விரைந்து (நீ) செய்யப்படுவாய்; ஐயம்படல் - சங்கை கொள்ளாதே; தெரித்தனன் - (உனக்கு) நான் உணர்த்திவிட்டேன். ஆல் - அசை.

சையம்; மலை; வடசொல். இப்படி - இந்தப்பூமி. எப்பொருள்களும் படிதற்கிடமாவது என்ற காரணக்குறி; படியின் மேல் படிந்தான் பழிபார்க்கலான்' (சுந்தர. 443). இக்கவியிற் சொற்

சுருக்கம் காண்க. 'தொகச் சொல்லித் தூவாத நீக்கிக் (குறள். 685); கூறுவது தூதன் மரபு ஆகலின்.

பி - ம். 2. மெய்யைப்படி செய்தனன்.

3. எய்யப்படல்.

4. செய்யப்படுநிற்றி, நிந்தை ; தெரிந்தனமால், தெரிந்தனனால். 50

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

எனவந்த நிசாசரன் இவ்வுரையைத்
தனுவல்லவனோடெதிர் சாற்றுதலும்
சனகன்மகடன்னொரு நாயகனும்
அனகன்னது கேட்டி தறைந்திடுவான்.

1712. கொன்றானொழி யக்கொலை கோளறியா
நின்றானொடு நின்றதெ னேடியெனிற்
தன்றாதை படுந்துயர் தந்தையைமுன்
வென்றானை யியற்றுறும் வேட்கையினால்.

'கொன்றான் ஒழிய - (கும்பகன்னனைக்) கொலை செய்தவன் நிற்க, கொலை கோள் அறியா - கொலைத் தொழிலை மேற்கொண்டறியாமல், நின்றானொடு - நின்றவனை, (இலக்குவனை), நேடி நின்றது என் எனில் - (அவ்வதிகாயன்) தேடி நின்றது எதுபற்றியென்றால், தன் தாதை படுதுயர் - தன் தந்தையான இராவணன் துய்க்கின்ற வருத்தத்தை, தந்தையை முன் வென்றானை - தன் சிறிய தந்தையை (கும்பகன்னனை) முன்பு வெற்றிகொண்டவனை, இயற்றுறும் வேட்கையினால் - (அந்த இராமபிரான்) அநுபவிக்கச் செய்ய வேண்டும் என்ற விருப்பத்தால்' என்று 'சொல்லி முடித்தான் தூதுவன்.

கொன்றான் : இராமபிரான். கொலைகோள் ; 'தண்டித் தனிப் பகைகோள்' போல என்க ; கொள் முதனிலை நீண்டது. கோளறியா நின்றான் : இலக்குவன். இக்கவியில் சொற்சுருக்கமும் பொருட் செறிவும் காண்க. இராவணன் தம்பியை இழந்து படும்துயர் போன்று, இராமபிரானும் இலக்குவனை யிழந்து துயருறுமாறு

புரிதல் என்பது இயற்றும் என்ற சொல்லால் குறிக்கப்பெற்றது. நின்றுனெடு என்பது உருபு மயக்கம்.

பி - ம். 1. கோளரியான்.

2. நின்றநெறே நெடியோன்.

4. வேட்கையிறன், வேட்கையென. 51

## இராமன் தன் உடன்பாட்டைத் தெரிவித்தல்

1713. வானோர்களு மண்ணினு ளோர்களுமற்
றேனோர்களு மிவ்வுரை கேண்மினிவன்
தானேபொரு வானய லேதமர்வந்
தானேரு முடன்பொரு வானமைவான்.

'வானோர்களும் - விண்ணுலகத்தினரும். மண்ணின் உளோர்களும் - இப்பூமியில் உள்ளவர்களும், மற்று ஏனோர்களும் - பின்னும் ஏனையோரும், இஉரை கேண்மின் - இந்த வார்த்தைகளைக் கேளுங்கள் ; இவன் தானே - இந்த இலக்குவன் தானே, பொருவான் - (அதிகாயனுடன்) போர்புரியப் போகின்றான் : அயலே - பக்கவுதவியாக, வந்து - வந்த, தமர் ஆனேருடனும் - அவனைச் சேர்ந்தவர்களுடனும், பொருவான் அமைவான்-போர் செயற்கும் இயைவான்.

இலக்குவன் தன்னந்தனியாகவே அதிகாயனுடன் பொரச் செல்வதற்கு இராமன் உடன்பட்டமை இங்குக் குறிக்கப்பட்டது. வந்து - வந்த என்று பெயரெச்சமாக்கப்பட்டது. ஆனேரும் உடன் - ஆனெருடனும் என்று விகுதி பிரித்துக்கூட்டப்பெற்றது.

பி - ம். 1. வானிலுளோர்.

2: கேண்மினவன்

3. பொருவானவனே

4. ஆறனுமுடன், தானேவுடனே 52

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

என்றேயுல கேழினொ டேழினையும்
தன் தாமரை போலிரு தாளளவா
நின்றானுரை செய்ய நிசாசரனும்
பின்றவுரை யொன்று பிதற்றினனால்.

## இலக்குவன் போர்க்குச் செல்ல இராமபிரான் விடை தருதல்

1714. எழுவாயினி யென்னுட னென்றெரியும்
மழுவாய்நிகர் வெஞ்சொல் வழங்குதலும்
தழுவா வுடனேகுதி தாழலெனத்
தொழுவார் தொழுதாளரி சொல்லுதலும்.

'இனி என்னுடன் எழுவாய்-இப்போதே என்னுடனே எழுக,' என்று - என்று, எரியும் மழுவாய் நிகர் - எரியும் மழுவின் வாயை ஒத்த, வெம் சொல் - கடுஞ்சொற்களை, வழங்குதலும் - (மயிடன்) கூறியவுடன், தொழுவார் தொழுதாள் அரி-பணிவார் பணியத்தக்க, திருவடிகளையுடைய இராமபிரான், தழுவா - தம்பியை அணைத்துக் கொண்டு, 'உடன் ஏகுதி - உடனே செல்வாயாக; தாழல் - காலதாமதம் செய்யாதே;' என சொல்லுதலும் - என்று அருளிச் செய்த அளவில்; வீடணன் சொல்லாடினன் என்று அடுத்த கவியுடன் இயைந்து பொருள் முடிவுகொள்ளும்.

தழுவா : செய்யா என்னும் வாய்பாடு. தொழுவார் தொழுதாள் அரி : வணங்குவார் தொழத்தக்க தாள் என்று திருவடியின் தகுதியைக் குறித்து நின்றது. இம்மை மறுமை வீடு என்ற அனைத்தையும் ஒரு சேரத் தரவல்ல செம்பொற்பாதமாகலின் தொழுதாள் எனப்பட்டதென்க. இனி அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' (திருவாச. அகவல்.); என்றிருத்தலின் இறைவன் அருள்பெற்றுத் தொழவேண்டும் என்று நல்லெண்ணம் கொண்டு தொழுகின்ற தாளினையுடைய அரியெனினும் ஆம். மற்றும் தொழுவார் தொழுதாள் என்பதற்கு நித்திய சூரிகளாய் ஸ்ரீவைகுண்டத்தில் இருந்து சேவிப்பவர் சேவிக்கும் தாள் எனலுமாம்; அடுத்து அரி என்ற சொற் பிரயோகம் காண்க. இனி, 'கற்பார் இராமபிரானை யன்றி மற்றும் கற்பரோ' (பால. பாயிரம்.); என்றவாறு, தொழ வெண்டும் என்று நினைபவர் மறந்தும் புறந்தொழாது தொழுகின்ற தாளையுடையவன் எனினும் ஒன்றும். 'வாயவனை யல்லாது வாழ்த்தாது கையுலகம், தாயவனை யல்லாது தாம் தொழா' (முதற்றிரு. 11); திருமாலையல்லது தெய்வமென்றேத் தேன்' (முதற்றிரு. 64); 'ஒண் தாமரையாள் கேள்வன், ஒருவனையே

நோக்கும் உணர்வு' (முதற்றிரு. 67); 'நாடிலும் நின்னடியே நாடு வன் நாள்தோறும், பாடினும் நின்புகழே பாடுவேன்' (முதற்றிரு. 88) என்பன காண்க. நான்காமடிக்கு ஒப்பு: 'தேடுவார் தேடகின்ற' (யுத்த. 456).

பி-ம். 1. என்றிடலும்.

2. மழுவாளிகள்.

3. தானெனவே; தாழ்கலென. 53

## கவிக்கூற்று: வீடணன் அப்போது கூறியதை இனிக் கூறுவோமெனல்

1715. எல்லாமுட னெய்திய பின்னிவனே
வில்லாளொடு போர்செய வேண்டுமெனு
நல்லாறுடை வீடண னாரணன்முன்
சொல்லாடின னன்னவை சொல்லுதுமால்.

நல்லாறுடை வீடணன் - சன்மார்க்கத்திலேயே நிற்றலை யுடைய வீடணன், 'எல்லாம் உடன் எய்தியபின் -(நாம்) அனைவரும் உடன் சென்ற பின்பு, இவனே வில்லாளொடு போர் செய வேண்டும் - இந்த இலக்குவனே விற்போர் வல்ல அதிகாயனொடு போர் செய்யட்டும்' என்று நாரணன் முன் - என்று நாராயண னுடைய அவதாரமாகிய இராமபிரானிடம், சொல் ஆடினன் - (அந்த அதிகாயனைக் குறித்துச் சில) விஷயங்களைப் பேசினன்: அவை சொல்லுதும் - அவற்றைப் பகர்வோம்; ஆல் அசை.

அதிகாயனுடன் இலக்குவன் தனித்தே சென்று போர் நிகழ்த் தட்டும் என்று கூறிச், சமயத்தில் அவனுக்கு வேண்டிய உதவியும் புரியவேண்டும் என்று வீடணன் கூறத்தொடங்கினன். நல்லாறு - சன்மார்க்கம்: (குறள். 222) இதுவே அந்தமில் வீட்டின்பம் அளிக்க வல்ல ஞானநெறி; இங்கு நாரணன் என்ற சொல் வந்துள்ளமை உய்த்துணரத்தகும். இச்சொல்லை சிற்சில இடங்களில்தான் ஆசிரி யர் அமைப்பர். 'நாராயணனே தனிநாயகனே' (சுந்தர. 494) என்பது பிராட்டி கூறியது. திருமாலின் அவதாரமே இராமபிரான் என்று குறிக்கும் சொல். 'நாராயண நரரின்றிவருளராய் நமக்கெல்லாம்,

வேராய் முழுமுதற் காரணப் பொருளாய்' (யுத்த. நிகும்பலை. 139)-ம் காண்க.

பி - ம். 1. எல்லோம், எல்லேம்; பின்னவனே.

3. நல்லோனெடு.

4. சொல்லோதின னல்லது. 54

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

வாரே று கழற்சின வாளரியெம்
போரேறொடு போர்புரி வானமையா
தேரே று சினக்கடு வெந்தறுகண்
காரே றெனவந்த கதத் தொழிலோன்.

## அதிகாயன் வரலாற்றை வீடணன் கூறுதல்

1716. வாரேறுக ழற்சின வாளரியெம்
போரேறொடு போர்புரி வானமையாத்
தேரேறு சினக்கடு வெந்தறுகண்
காரேறென வந்த கதத்தொழிலோன்.

(இவ்வதிகாயன்) 'வார் ஏறு - கச்சினாற் பிணித்த, கழல் - வீர கண்டையினைப் புனைந்தவனும், சினம் வாள் அரி - சீற்றம் கொண்ட கொடிய சிங்கம் நிகர்த்தவனுமான, எம் போர் ஏறொடு - போர் புரியும் ஆற்றலொடு புணர்ந்த எமது இலக்குவனுடன், போர் புரிவான் அமையா - போர் நிகழ்த்தற்கு உடன்பட்டு, சினம் கடு வெம் தறுகண் - கோபத்தையும் மிகக் கொடிய அஞ்சாமைப் பண் பினையும் உடையவனாய், தேர் ஏறு - தேர் ஏறியுள்ள, கார் ஏறு என வந்த - பெரிய மேகம் என வந்த, கதம் தொழிலோன், சினத் தொழிலுடன் பொருந்தியவன்.

போர் ஏறு: 'புனைந்த சடை முடி துளக்கிப் போரேற்றின் முகம் பார்த்தான்' (பால. கார்முக. 25) தறுகண் - அஞ்சாமை; 'பேராண்மை யென்ப தறுகண்' (குறள். 773) என்னுமிடத்துத் தறுகண், பகைவர் மேற்கண்ணோடாது செய்யும் மறம் என்பர் பரிமேலழகர்; எதிலும் வலியது அல்லது சிறந்ததனை ஏறு

என்னும் வழக்குப்பற்றிப் போர் ஏறு, கார் ஏறென வந்தன. இடி யேறு முதலியனவும் காண்க. இனி, கார் ஏறு - யமன் ஊர்தி யான கரிய எருமைக் கடா வெனினுமாம்; தறுகண்மையும் கதத் தொழிலும் உடையவன் தென்றிசைக் கோனாகலின்; மற்றும் போரில் பலர் உயிரிழத்தற்கு இவன் காரணமாதலின் உவமைப் பொருத்தமும் உணர்க. எருமைக்கடா, கதத்தான் மட்டும் அன்றி உருக்குறித்து வந்த உவமையும் ஆம். இது முதல் 21 கவிகள் அதிகாயன் வரலாறு. 55

இச்செய்யுள் பல பிரதிகளில் இல்லை.

1717. ஓவாநெடு மாதவ மொன்றுடையான்
தேவாசுர ராதியர் செய்செருவில்
சாவானிறை யுஞ்சலி யாவலியான்
மூவாமுத னான்முக னார்மொழியால்

'ஓவாநெடு மாதவம் ஒன்றுடையான் - இடையறாத பெரிதும் உயர்ந்த தவம் ஒன்றை யுடையவன், மூவா முதல் நான் முகனார் மொழியால் - என்றும் மூப்பில்லாத மூர்த்தியான பிரமதேவன் தந்த வரத்தினாலே, தேவ அசுரர் செய் செருவில் - தேவர்கள், அசுரர் கள் முதலானவர்கள் நிகழ்த்திய சண்டையில், சாவான் - இறந்து படாமல், சலியா - சிறிதும் மனம் தளராத, வலியான் - உடல் வன்மையுடன் கூடியவன்.

ஓவா: 'ஒல்லும் வகையான் அறவினை யோவாதே' (குறள். 33); 'ஓவா திரண்டுவவு மட்டமியும் பட்டினிவிட்டொழுக்கம் காத்தல்' (சீவக. 1547): தேவாசுரர்: வடமொழி தீர்க்கசந்தி, செரு - போர்: 'செருக்களத் துருத்தெய்தாதே' (கிட்கிந்தா. 345); 'சலியர்: 'சலித்த காலையி னிமையவ ருலகெலாஞ் சலித்த (யுத்த. 1141); மூவா முதன்; 'மூவா முதலர்' (சீவக. கடவுள் வாழ்த்து.). மாதவம் மட்டும் உடையவனன்றி அதற்கேற்ற ஒழுக்கமில் லாதவன் என்பான் ஒன்றுடையான் எனப்பட்டது. 56

பி - ம். 1. ஓவாததில்.

1718. கடமேய் கயிலைக்கிரி கண்ணுதலோ
டிடமேல வெடுத்தவ னேயிவனைத்
திடமேயுல கிற்பல தேவரொடும்
வடமேரு வெடுக்க வளர்த்தனனால்.

'கடம் ஏய் கயிலை கிரி - காடுகள் செறிந்த கயிலைமலையை, கண்ணுதலோடு - நெற்றிக் கண்ணனான சிவபிரானுடனே, இடம் ஏல எடுத்தவனே - நின்ற இடத்தினின்று முன்னாளில் பெயர்த்து உயர்த்தவனான இராவணனே, உலகில் பல தேவரொடும் - உலகில் பல தேவர்களுடனே, வடமேரு எடுக்க - வட மேருவை அகழ்ந்து எடுக்க வேண்டி, (அதற்கேற்ப) இவனை திடமே வளர்த்தனன் - இவனை நன்கு வன்மையுறுமாறு போற்றி வளர்த்தான். ஆல்: அசை.

கடம்: காடு. கண்ணுதல்: நுதற், கண் என்பது முன் பின்னாகத் தொக்கது. ஏல - முன்னாளில்; 'பிரளயம் வரும் என்று ஏலக்கோலி' (ஈடு. 2, 8, 7); இனி ஏல, மிக என்ற பொருளும் உடைத்தாகலின், மிகவும் நன்றாக, அஃதாவது அடியோடு எனினுமாம். ஆற்றல் அமைதிக்கேற்ப, கண்ணுதலொடு கைலையைப் பெயர்த்த இராவணன், அவர்க்கும் கீழ்நிலையில் உள்ள தேவரோடும் வடமேருவை எடுக்க எனப்பட்டமை காண்க. இனி ஒரு தேவனைக்கொண்ட ஓர் மலையை எடுத்த இராவணன், பல தேவர்களைக்கொண்ட வடமேருவை உயர்த்துமாறு இவனை வளர்த்தனன் எனினுமாம்.

பி - ம். 1. கடமே.

2. எடுத்தனமின்று, எடுத்தனனென்று.

3. திடமேல். 57

1719 மாலாரொடு மந்தர மாசுணமும்
மேலாகிய தேவரும் வேண்டுமெனு
தாலாலமு மாரமிழ் தும்மமையக்
காலால்நெடு வேலை கலக்கிடுமால்

'மாலாரொடு - திருமாலும், மந்தரம் - மந்தர மலையும், மாசுணமும் - வாசுகியென்னும் அரவும், மேலாகிய தேவரும் - மேன்மையர்

ஆன தேவரும், (கடைதற்கு உதவ) வேண்டும் எனாது - வேண்டும் என்னாமல், ஆலாலமும் - ஆலகால விடமும், ஆர் அமிழ்தும் - அரிய அமுதமும், அமைய - தோன்ற, காலால் நெடுவேலை கலக்கிடும் - தன் காலினாலேயே பெரிய பாற்கடலைக் கலக்கும் திறல் வாய்ந்தவன். ஆல் : அசை.

மாலார் : உயர்வு குறிக்கும் பன்மை. பாற்கடல் கடைந்தது : கிட்கிந்தா. 367, 372 ; மேலாகிய : விண் மேலினராகியவர் எனினுமாம். ஆலகாலம் : ஆலாலம என வந்தது ; இது ஹால காலம் என்ற வடசொற்றிரிபு. 'ஆலகால விடத்தையு நம்பலாம்' (விவேக); 'அங்கார தாரைபிறி தாலால மன்னான்' (சுந்தர. 76); இஃது ஆலம் என்றும் வழங்கும். 'ஆலமுண்டவற் கண்டிலிரோ' (யுத்த. 414); 'ஆலம் பார்த்துண்டவன் போல்' (சுந்தர. 317); வாலிவேலையை வாலாற் கலக்கினான் அதிகாயன் காலாற் கலக்குவன் என்றது காண்க. கலக்கும் : செய்யும் என்னும் முற்று ஆண்பாற்கு வந்தது. 'பல்லோர் படர்க்கை முன்னிலைத் தன்மையிற், செல்லாதாகும் செய்யும் என் முற்றே' (நன். வினை: 29); உரைகொண்டுணர்க. (ஒப்பு); 'குடிக்கு மேற்கட லேழையும் குடங்கையிற் குடிக்கும்' (கிட்கிந்தா. 709). ஆல் : அசை.

பி - ம். 1. மாலார் நெடு.

2. மேலாயின ; வேனுமெனா ; என.

4. கலக்கினனா. 58

1720. ஊழிக்கு முயர்ந்தன நாளொடும்வாழ்
பாழித்திசை நின்று சுமந்தபணைச்
சூழிக்கரி தள்ளுதல் தோள்வலியோ
ஆழிக்கிரி தள்ளுமோ ரங்கையினால்.

'ஊழிக்கும் உயர்ந்தன நாளொடும் வாழ் - ஊழிக்காலத்திலும் (அழியாமல்) வதிகின்ற, பாழிதிசை நின்று - வலிய திக்குகளினின்று, சுமந்த - தாங்கினவும், பணை - பருத்தனவும், சூழி - ஓடை என்ற பட்டம் அணிந்தனவுமான, கரி - யானையை, ஆழி கிரி தள்ளும் ஓர் அம்கையினால் - சக்கரவாளகிரியைத் தள்ளவல்ல அழகிய கையினால், தள்ளுதல் தோள் வலியோ - வென்றுதள்ளுதல் தோள் வலியாகுமோ?

அதிகாயன் சக்கரவாள கிரியையே கையினால் தள்ளினன்; அத்தகையவன் வன்மை, வலிய திக்கயங்களை அவற்றினிடத்தினின்றும் தள்ளிய இராவணன் வலிக்குக் குறைந்ததாகுமோ? என்பது கருத்து. இராவணனைக் காட்டிலும் வன்மை வாய்ந்தவன் அதிகாயன் எனப்பட்டது. ஊழிக்கும் உயர்ந்தன; (ஒப்பு): 'ஊழியோர் பகலாயோது நாளெலாம்' (சுந்தர. 561); சூழி - யானையின் நெற்றியில் அணியும் ஓடை: 'சூழியானை துகைத்தது சோபனம்' (மீட்சி. 17).

பி-ம். 1. ஊழிக்குமுயர்ந்துள; நாளொருவன்.

2. திசை நின்ற.

3. சூழிக்கிரி. 59

1721 காலங்கள் கணக்கிற கண்ணிமையா
ஆலங்கொள் மிடற்றவ னாரழல்வாய்
வேலங்கெறி யக்கொடு விட்டதுநீ
சூலங்கொ லெனப்பகர் சொல்லுடையான்.

'காலங்கள் கணக்கு இற - எண்ணிறந்த காலங்கள் கழியினும், கண் இமையா - கண் கொட்டுதல் இல்லாத, ஆலம் கொள் மிடற்றவன் - விட முண்ட கண்டனாகிய சிவபெருமான், ஆர் அழல்வாய்- நிரம்பிய அழலைத்தன் நுதியினிற் கொண்ட, வேல் அங்கு எறிய - சூலத்தைப் போரில், (இவன்மீது) வீச, (அதனைக் கையிற்) கொடு - ஏற்றுக்கொண்டு, 'நீ விட்டது சூலம் கொல் என - நீ எறிந்தது சூலப்படைதானோ', எனபகர் சொல் உடையான் - என்று பகடியாகப் பேசுகின்ற சொல்லுடன் கூடியவன்.

முதலிரண்டடி சிவபெருமானுடைய அழியாத தன்மையைக் கூறியது. ஆலம்: ஆலகாலவிடம் (1719). அங்கு - அப்போரில், சிவ பிரானையும் எதிர்க்கும் ஆற்றல் சான்றவன் அதிகாயன் என்பது குறிக்கப்பட்டது. 'வேலங் கெறியக் கொடுவிட்டது - சிவனேவினவேல் தன்கையிலே யகப்பட்டதனாலே, பின்னும்

விட்ட ஆயுதங்களைத் தன்கையிற் சூலத்தையே பருகச்சொல்லும் உரையினன்.' என்பது பழையவுரை.

பா - ம். 1. கன்னிமையான்.

2. மிடற்றிவன். மிடற்றவர்.

3. வேலங்கொழிய, இரிய; நீள். 60

1722. பகையாடிய வானவர் பல்வகையூர்
புகையாடிய நாள்புனை வாகையினன்
மிகையாருயி ருண்ணென வீசியவெந்
தகையாழி தகைந்த தனுத்தொழிலான்.

'பகை ஆடிய வானவர் - இவன் தன்னுடன் பகை பாராட்டிய, வானவரின், பல்வகை ஊர் - பலதிறப்பட்ட ஊர்களை, புகை ஆடிய நாள் - சுட்டெறித்த காலத்தில் (இவனை வெற்றிகொள்ள எண்ணி) வாகையினன் - (எங்கும்) வெற்றிமாலையே புனைந்த திருமால், மிகை ஆர் உயிர் உண் - (இவனுடைய) குற்றம் நிறைந்த அருமையான உயிரை உண்பாய்', என - என்றுசொல்லி, வீசிய - எறிந்த, வெம்தகை - கொடுந்தன்மை வாய்ந்த, ஆழி - சக்கரப்படையை, தகைத்த - தடுத்த, தனு தொழிலான் - விற்றொழிலை யுடையவன்.

முன்னர்ச் சிவபெருமான் சூலப்படையை நகையாடியதாகக் கூறினர். இங்குக் காப்புக்கடவுளான திருமாலின் ஆழிப்படையையும்தடுக்கும் வன்மையன் எனப்பட்டது. புகையாடுதல்: எரிமுகப் படைகொண்டு எரியுண்ணச் செய்தல்; 'வாடுக விறைவநின் கண்ணி யொன்னார், நாடுசுடு கமழ்புகை யெறித்தலானே' (புறநா. 6:21-22). மிகை - குற்றம். சுந்தர. 296. 'மிகை சிறுபு' (சீவக. 281).

பா - ம். 1. பல்பகை.

2. மாலையினன்.

3. தழைத்த. 61

1723. உயிரோப்புறு பல்படை யுள்ளவெலாம்
செயிரோப்புறு மிந்திரர் சிந்தியநாள்
அயிரோப்பன நுண்டுகள் செய்தவர்தம்
வயிரப்படை தள்ளிய வாளியினன்.

'உயிர் ஒப்புறு - உயிர்க்கு நிகரான, பல்படை உள்ள எலாம் - பலதிறப்பட்ட படையாக உள்ளன யாவற்றையும், செயிர் ஒப்புறும் இந்திரர் - சினம் அமைந்துள்ள தேவர்கள், சிந்திய நாள் -(தன்மீது) எறிந்த காலத்தில்; (அவற்றை இவன்), அயிர் ஒப்பன நுண் துகள் செய்து - மணல் போன்ற நுட்பமான பொடியாக்கி, அவர்தம் - அந்தத் தேவர்களுடைய, வயிரப்படை - வஜ்ஜிராயுதத்தினையும், தள்ளிய - புறங்கண்ட, வாளியினான் - அம்பினையுடையவன்.

படையே உயிரைக் காத்துக்கொள்ளும் சாதனம் ஆகலின் உயிர் ஒப்புறுபடை எனப்பட்டது. செயிர் ஒப்புறு - ஒப்புறுதல் இங்கே செறிதல் என்ற பொருளது. இந்திரர் என்ற பன்மை தேவர்களைக் குறிக்கும். 'இந்திரரமிழ்தம்' (புறநா. 182) என்றது காண்க. இந்திரர் - தேவர் என்பது ஜயினர் கொள்கை. அயிர் - நுண்மணல்; 'அயிர் கிடக்கும் கடல் உலகத்து' (ஆரணிய. 199); மற்றும், முல்லைப். 92.

பி - ம். 1. உள்ளதெளாம்.

2. செயிரொப்புற.

3. சிந்திய. 62

1724. கற்றான்மறை நூலொடு கண்ணுதல்பால்
முற்றாதன தேவர் முரட்படைதாம்
மற்றாரும் வழங்க வலா ரிலவும்
பெற்றானெடி தாண்மை பிறந்துடையான்.

(மேலும் இவன்). 'மறை - தனுர் வேதத்தின் உள்ளுறைகளை, நூலொடு - (அதற்குரிய) சாத்திரங்களுடன், கண்ணுதல்பால் கற்றான் - நெற்றிக்கண்ணனான சிவபிரானிடம் கற்றறிந்தான்; (அவ்வாறு கற்குங்கால்), தேவர் முற்றாதன - தேவர்கள் முடிவு போகக் கல்லாதனவும், வழங்க வலார் - (படைகளைச்) செலுத்தும் வன்மை சான்றவர்; மற்று ஆரும் இலவும் - பிறர் யாரும் இருக்கப் பெறாதனவுமான, முரண்படை - வலிமையுள்ள படைகளைப் பெற்றான்; (அது காரணமாகவும்( நெடிது ஆண்மை செறியப் பெற்றுள்ளான். தாம் : அசை.

வேதங்கண்ணிய பொருள் எலாம் விரிஞ்சனே யிந்தான்' (யுத்த. 130) என்று இரணியனைப்பற்றிக் கூறும்போது சொல்லப் பட்டது. இங்கு சிவபெருமானே தனுர்வேதம் கற்பித்ததாகக் கூறப்பட்டது. முற்றுதல் : கற்றுமுதிர்தல் ; 'வழங்கவல்லாரில வும்' ; தன் பேரிலே ஒருவர் ஏவாதபடியும்' என்பது பழையவுரை.

பி - ம். 1. கண்ணுதல்மால்.

2. முரட்டைதான்.

3. வல்லார் ; இயல்பும். 63

1725. அறனல்லது அல்லது மாறறியான்
மறனல்லது பல்பணி மற்றறியான்
திறனல்லதொ ராருயி ருஞ்சிதையான்
உறனல்லது பேரிசை யொன்றுணர்வான்.

'(இவன்) அறன் அல்லது அல்லது அன்றி - அறன் அல்லாதது அன்றி, மாறு அறியான் - பிறிது ஒன்றும் அறியான்; மறன் அல்லது - வீரம் அல்லாது, மற்று - மாறுன, பல்பணி அணியான் - பலவான எந்த அணியையும் அணிய மாட்டான்; திறன் அல்லது ஓர் ஆர் உயிரும் சிதையான் - வலிமையற்றதாய் பொருந்திய உயிர் ஒன்றினையும் கொல்லமாட் டான்; பேர் இசை - உயர்ந்த புகழை, உறல் நல்லது என்று உணர் வான் - அடைதல் நல்லது என்று நன்கு அறிவரன்.

அறன் அல்லது அல்லது; அறன் அல்லாத மறநெறியே அறிந்து ஒழுகுபவன், 'அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகி வேறமைந்த, மறத்திந்தப்பூண்டுவெம் பாவத்தை மணம்புணர் மணு ளர்' (யுத்த. மூலபல. 6) ; (ஒப்பு) : 'பாவம் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்' (யுத்த. படைக். 23) ; 'பாவகாரிதன் பாவ கம் ஒருமுகம் பயில' (யுத்த. 1092) ; அறன் மறன் திறன் ; இறுதிப் போலிகள். திறன் அல்லது ஆருயிர் சிதையான் எனவே இவ னுடைய ஆண்மை தெளியப்படும். பேரிசை உறல் நல்லது ; 'தோன்றிற் புகழொடு தோன்றுக' (குறள் 236) ; 'வசையென்ப வையத்தார்க்கெல்லாம் இசையென்னும், எச்சம் பெறுஅவிடின்'

(குறள். 238); 'ஈதலிசைபட வாழ்த லதன்றி, யூதியமில்லை யுயிர்க்கு' (குறள். 231): பல்பணி மற்றறியான்: வீரச்செயல்களே புரிபவன் எனினுமாம். பணி: ஆபரணம். செயல் என்ற இரு பொருட்கண் வந்தமை காண்க. 'கெடுநீரார் காமக்கலன்' (குறள். 605) என்ற இடத்துப்போல.

பி - ம். 1. அறனல்லது நல்லது; மற்றறியான்.

2. பல்லணி, மாறணியான், மாற்றறியான், மாறறியான், மற்றணியான்.

4. உறநல்லது; ஒன்று; உணரான், உடையான். 64

1726. காயத்துயி ரேவிடு காலையினும்
மாயத்தவர் கூடி மலைந்திடினும்
தேயத்தவர் செய்குதல் செய்திடினும்
மாயத்தொழில் செய்ய மதித்திலனால்.

'(இந்த அதிகாயன் போர்க்கண்), காயத்து உயிரே விடு காலையினும் - உடற்கண் உள்ள உயிரை விடநேர்ந்த காலம்வரினும், மாயத்தவர் கூடி - மாயையில் வல்லவர் சேர்ந்து, மலைந்திடினும் - (தன்னுடன்) பொருதாலும், தேயத்தவர் - தேயத்தில் உள்ளார் அனைவருமே, செய்குதல் செய்திடினும் - விஷமச் செயல்கள் புரிந்த போதும், மாயம் தொழில் செய்ய மதித்திலன் - அவற்றிற்குமாறாக எந்தவிதமான வஞ்சனைச் செயலையும் புரியமாட்டான், ஆல்: அசை.

நேராகத் தனது ஆண்மை காட்டிப் பொருவானேயன்றி, வஞ்சனையால் வெற்றிபெற நினையான் என்றபடி; இங்கு இந்திரசித்துக்கும் இவனுக்கும் உள்ள வேற்றுமை அறிக. இவ்வதிகாயனை மாயம் உணர்ந்தவன் என்று முதனூல் கூறும். எனவே மாயம் தெரியாதவனல்லன் ஆயினும் அதனைத் தொழிற்படுத்தான் என்றவாறு.

பி - ம். 2. மலைந்திடினும்.

3. சேயத்தவர் செய்குதல், தேயத்தவர் செய்தது, தேயத்தவர் செய்யல, தேயத்தர ரெய்குதல்.

4. மாயத்திறல், மதிக்கிலனால். 65

1727. மதுகைடவ ரென்பவர் வானவர்தம்
பதிகைகொடு கட்டவர் பண்டொருநாள்
அதிகைதவ ராழி யனந்தனையும்
விதிகைம்மிக முட்டிய வெம்மையினர்.

'அதிகைதவர் மதுகைடவர் - மிகவும் வஞ்சகரான மதுகைடவர் என்ற (இரு) தானவர்கள், வானவர் தம் பதிகை கொடு - தேவர்களின் ஊரை அகப்படுத்திக்கொண்டு, கட்டவர் - (அவர்களை) அழித்தவராய், பண்டு ஒரு நாள் - முன்னொரு காலத்தில், விதிகை மிக - ஊழ்வினை உருத்து எழ, ஆழி அனந்தனையும் - திருப்பாற்கடற் கண் உள்ள அழிவற்ற பரம்பொருளான திருமாலையும், முட்டிய வெம்மையினர் - தாக்கிய கொடுமையுடையராயினர்.

மதுகைடவர் இருவரேயாயினும் ஒருங்கே செயல்புரிந்து வந்தமையின் ஒருவர் போலவே கருதப்பட்டனர். அவ்விருவர்களும் பிரமனிடமிருந்து நான்மறைகளைக் கைப்பற்றிக்கொண்டு கடலுள் மறைய, அந்த நான்முகனது வேண்டுகோட்கிணங்கித், திருமால் ஹயக்ரீவ அவதாரம் எடுத்து அவர்களை அழித்தனர். இவர்களுள் மது கும்பகன்னனாகவும். கைடவன் அதிகாயனாகவும் தோன்றி, முறையே இராமனாலும் இலக்குவனாலும் அழியுண்டனர். (சுந்தர. 77) காண்க. இவர்களுடைய பூர்வ வரலாற்றை இப்படலம் 67, 74-ல் காண்க. கட்டல்: அழித்தல் 'களைகட்டதனொடு நேர்' (குறள். 550). கைதவம்; கைதவ மியற்றி' (கிட்கிந்தா. 362). அநந்தன் - ந + அந்தம், முடிவு அல்லது அழிவில்லாதவன். கைம்மிகுதல் - பெருகுதல், 'செய்வினை கைம்மிக' (குறுந். 63).

பா - ம். 1. மதுகையிடவாரென, மதுகையிடரென்றுளர்.
2. கைகொடு தொட்டவர்.
3. அதுகைதவர்.
4. விதிகைமுக; வேட்கையினர், வெம்மையினன். 66

1728. நீராழி யிழிந்து நெடுந்தகையைத்
தாராய்அம ரென்றனர் தாமொருநாள்
ஆராழிய வண்ணலும் அஃதிசையா
வாராவமர் செய்கென வந்தனனால்.

'தாம் - அந்த மதுகைடவர், நீர் ஆழி இழிந்து - பாற்கடலிலே இறங்கி, ஒருகால் - ஒருசமயம், 'நெடு தகையை - பெருந்தன்மை வாய்ந்த திருமாலைப் பார்த்து, அமர் தாராய் - போர் தருக,' என்றனர் - என்று கூறினர், ஆர் ஆழிய அண்ணலும் - அரிய சக்ராயுதத்தையுடைய சிறந்த திருமாலும், அஃது இசையா - அதற்கு உடன்பட்டு, 'வாரா அமர் செய்க - இதுவரையில் (நடைபெற்றிராத போரினைப்புரிக', என - என்று பகர்ந்து கொண்டு, வந்தனன் - வந்தான். ஆல் : அசை.

நீர் திரவம் என்ற கருத்துப்படப் பாலினைக் குறித்தது, திருமால் அறிதுயில் கொள்வது பாற்கடல் மீதாகலின். தாம் என்பது மதுகைடவரை. அருமை ஆழி - அருமையான திகிரிப்படை. இங்கே அருமை வெல்லற்கருமை. இசையா : செய்யா என்னும் வாய்பாடு வாரா : அதுகாறும் நிகழ்ந்திராத.

பி - ம். 2. தாமொருநாள்.

3. அஃதிசைய.

4. வாராய் ; வந்தனரால். 67

1729. வல்லாருரு வாயிர மாய்வரினும்
நல்லார் முறைவீசி நகுந்திறலார்
மல்லா லிளகாது மலைந்தனன்மால்
அல்லாயிர மாயிர மஃகினவால்.

வல்லார் - வன்மையுடையார், ஆயிரம் உருவராய்வரினும் - ஆயிரம் உருக்கொண்டு வந்தாலும், (அவரை) நல்லார் முறை - சிறந்த வீரர்கள் மேற்கொள்ளும் போர் முறையால், வீசி - சிதறச் செய்து, நகும் திறலார் - நகையாடும் திறமை வாய்ந்தவரான அந்த மதுகைடவருடனே, மால் - திருமால், இளகாது - தளராமல், மல்லால் - மற்போரில், மலைந்தனன் - போர் செய்தான், (அவ்வாறு பொருங்கால்) ஆயிரம் ஆயிரம் அல் அஃகின - பல்லாயிரம் நாட்கள் கழிந்தன. ஆல் : அசை.

நல்லார் முறை - சிறந்த வீரர்கள் மேற்கொள்ளும் போர்முறை. 'ஆவும் ஆனியற்' (புறநா. 9) என்றது காண்க; (ஒப்பு): யுத்த. 1725).

பி - ம். 1. வல்லார் கரமாயிரமாய்; எல்லார் படையாயிரமே, எல்லார் கரமாயிரமே.

2. நல்லான்; விச; தொழிலார்.

3. மலைத்தனன் மாறு, மலைத்தனன் மற்று, மலைந்தனராண்டு.

4. ஆகினைவால், அஃகினரால், அஃகினனல். 68

1730. தன்போல்பவ ராரு மிலாததனிப்
பொன்போலொளிர் மேனிய னைப்புகழோய்
என்போல்பவர் சொல்லுவ தெண்ணுடையார்
உன்போல்பவ ரியாருள ரென்றுரையா.

தன்போல்பவர் ஆரும் இலாத - தன்னை நிகர்ப்பவர் எவரையும் பெற்றிராத, தனி பொன்போல் ஒளிர் - பிற உலோகங்கள் கலக்கப்பெறாத பொன் போன்று, ஒளிர் மேனியனை - பிரகாசிக்கின்ற திருமேனியன் ஆன அந்தத் திருமாலை முன்னிலைப்படுத்தி, (மதுகைடவர்) 'புகழோய்-கீர்த்தியனே! என்போல்பவர் சொல்லுவது - என்னைப் போல்பவர் புகலுதற்குரியது (என்னவெனில்), எண் உடையார் - போற்றற்குரிய வன்மை வாய்ந்தவரில், உன் போல்பவர் யார் உளர் - உன்னை யொப்பவர் எவர் இருக்கின்றனர்', (என்பது) என்று உரையா - என்று மொழிந்து.

முதலடிக்கு: 'தன் துணை யொருவரும் தன்னில் வேறிலான்' (கிட்கிந்தா. 260); 'தன்னொப்பா ரில்லப்பன்' (திருவாய்மொழி); தனிப்பொன்: சாம்பூநதம் போன்று கலப்பற்று மாற்றுயர்ந்த பொன். உவமை ஒளியைப் பொறுத்ததாகலின் பொன்போல் ஒளிர் மேனியன் எனப்பட்டது. உரையா செய்யா என்னும் வாய்பாடு. உரையா என்ற சொல் 72-ஆம் கவிக்கண் உள்ள 'சொல்லுதலும்' என்றதனோடு இயையும்.

பி - ம். 1. தம்; தானலாதாருமிலரர், தாமுமிலாததனிப், தானுமிலாததனிப்.

2. புகழா.

3. என்போல்பவபோலுவ, என்போர்பல சொல்லுவ; என்னுடையார்.

4. உன்போலியரார். 69

1731. ஒருவோ முலகேழையு முண்டுமிழ்வோம்
இருவோமொடு நீதனி யித்தனை நாள்
பொருவோமொடு நேர்பொரு தாய்புகழோய்
தருவோம்நின் மனத்தது தந்தனமால்.

'ஒருவோம் - (நாங்கள்) ஒருத்தராகவே, உலகு ஏழையும் உண்டு உமிழ்வோம் - ஏழு உலகங்களையும் உண்டு வெளியிடத்தக்க வன்மை வாய்ந்துள்ளோம்; இருவோமொடு - (அத்தகைய ஆற்றல் சான்ற) எங்கள் இருவரோடும், நீ தனி இத்தனை நாள் போர் புரிந்தாய் - நீ ஒருவனாக இவ்வளவு நாட்கள் சண்டையிட்டனை; புகழோய் - புகழ் மிக்கவனே! நின்மனத்தது தருவோம் தந்தனம்-உன் உள்ளத்து நீங்கள் கருதுவதாகிய வரத்தை அளிப்போம்; தந்தே விட்டோம்; ஆல் - அசை:

அடுத்தடுத்து 70, 71-ஆம் செய்யுட்களில் புகழோய் என்றது அகந்தை மிகுதியால் திருமாலுக்கு ரோஷம் பிறப்பிக்குமாறு கூறப்பட்டது; 'வயப்புலியை வாலுருவி விடுவது போலும்' என்க. உலகேழையும் உண்டு உமிழும் திருமால் முன்னர்த்தாம் உண்டுமிழ்வதாகக் கூறியமை காண்க. அவருடைய அகந்தை உடன் அழிவதும் காணலாம். தருவோம் தந்தனம்; (ஒப்பு): சூர்ப்பணகை மூவுலக ஆட்சியும் இராமபிரானுக்கு அளிப்பதாகக் கூறியது. (ஆரணிய. 274).

பி-ம். 1. உமிழ்வோய்.

3. பொருவோமெனவே, பொருவோமொடு நீ.

4. மனத்தனர் தானெனலும். 70

1732. ஒல்லும்படி நல்ல துனக்குதவச்
சொல்லும்படி என்றவர் சொல்லுதலும்
வெல்லும்படி நும்மை விளம்புகெனக்
கொல்லும்படி யாலரி கூறுதலும்.

'சொல்லும்படி - '(நீ வரமாக எங்களிடம்) கேட்கும்விதம், ஒல்லும்படி - இயன்றவாறு, உனக்கு நல்லது உதவ - உனக்கு நல்ல

வற்றைத் தரும்பொருட்டே', என்று அவர் சொல்லுதலும்-என்று அவர் கூறுதலும், நும்மை வெல்லும்படி விளம்புக - உங்களை வெல்லுமாற்றைச் சொல்லுக', என - என்று, கொல்லும்படியால் அரி கூறுதலும் - அவர்களைக் கொல்வது கருதித் திருமால் சொன்னவுடன்; நல்குதலும் என அடுத்த கவியுடன் தொடரும்.

ஒல்லுதல் - இயைதல்; 'ஒல்லும் வகையால் அறவினை' (குறள். 33); 'ஒல்லுவதொல்லும் என்றலும்' (புறநா. 196). விளம்புக என்பது அகர ஈறு குறைந்தது.

பி - ம். 1. நல்ல.

2. அவர் சோறலுமே.

3. விளம்புமென.

4. கொல்லும்படியும். 71

1733. இடையிற்படு கிற்கிலம் யாமொருநின்
துடையிற்படு கிற்று மெனத்துணியா
அடையச்செய கிற்றிய தாணையென
நடையிற்படு நீதியர் நல்குதலும்.

'யாம் ஒரு நின் துடையில் படுகிற்றும் - நாங்கள் ஒப்பற்ற உனது தொடையிலே மரிக்க வல்லோம்'; இடையில் படுகிற்கிலம்-பிறிதோரிடத்துச் சாகமாட்டோம்; என - என்று சொல்லி, துணியா - உயிர் விடுதலைத் துணிந்து, 'அடைய செயகிற்றி - (உன் தொடைக்குள்ளே) நாங்கள் அடையும் வண்ணம் செய்து உன் வன்மையைக் காட்டுக; அது ஆணை - அதுவே எங்கள் கட்டளை, என - என்று, நடையில் படு நீதியர் - நல்லொழுக்கத்திலே பொருந்தி நின்ற அந்த நீதிமான்களான மதுகைடவர்கள், நல்குதலும் - கூறியருளிய அளவில்.

கில்: ஆற்றலை யுணர்த்தும் இடைநிலை. துடை - தொடை. உடற்பாகத்துடன் தொடுத்திருப்பது என்று காரணக்குறி.

துணியா : துணிந்து. நடை - நீதிமார்க்கம். 'நால்வரும் பொருவி றுன்மறை யெனும் நடையினர்' (பால. எதிர்கோள். 28). இடையில் - பிறிதோராயுதத்தானும் எனினுமாம்.

பி - ம். 3. அடையிற் படகிற்றி, அடையப்படுகிற்றி, அடையப்படர்கிற்றி.

4. நடையிற்பட, நடையிற்போலி, நடையிற்போலம்; நல்கினரால். 72

1734. விட்டா னுலகியாவையு மேலொடுகீழ்
எட்டா வொருவன்ற விடத்துடையை
ஒட்டாதவ ரொன்றின ரூழ்வலியால்
பட்டாரிது பட்டது பண்டொருநாள்.

'எட்டா ஒருவன் - (திரிகரணங்கட்கும்) எட்டாத ஒப்பற்ற திருமால், மேலொடு கீழ் உலகு யாவையும் - மேலும் கீழும் உள்ள எல்லா உலகங்களையும் (கவருமாறு), தன் இடதொடையை விட்டான் - தனது இடது தொடையை நீளவிட்டான்; ஒட்டாதவர் - விரோதிகளான மதுகைடவர்கள், ஊழ்வலியால் ஒன்றினர் - ஊழின் வன்மையால் ஒருப்பட்டவராய், பட்டார் - (அத்தொடையில்) சிக்கிக் கொண்டனர்; இது பண்டு ஒருநாள் பட்டது - இது முன் ஒரு காலத்து நிகழ்ந்தது.

ஒட்டாதவர் ஒன்றினர் என்ற இடத்து முரண்தொடை காண்க. ஒட்டுதல் - பொருந்துதல், எனவே ஒட்டாதவர் என்றது பொருந்தாதவராகிய பகைவரைக் குறித்தது. 'ஒட்டாரை ஒட்டிக் கொளல்' (குறள். 679); ஊழ்வலியாற்பட்டார்; 'கலங்காத வீரியராலும் போகின்ற காலம் வந்தால், நலங்காமலேவெல்ல மாட்டுவரோவிந்த நானிலத்தில், சலம் காவல் யந்திரம் மதிலேழ் தலைபத்துத் தானிருந்தும், இலங்கா புரிநின்ற தோவெள்ளை நாவல் இருப்பவனே' (தனிப்பா.); இதுபட்டது என்றது. (67-74)ல் மேலே கூறப்பட்ட மதுகைடவர் வரலாறு, 'விட்டான் - ஒருபற்றிலாத நாரணன்' என்பது பழையவுரை. 'நுணலும் தன் வாயாற் கெடும்' என்ற பழமொழி இங்கு நினைக.

பி - ம். 1. உலகேழையும்.

2. இடத்தொடையில், தொடையால்.

3. ஏறினர்; ஊழ்வினையில். 73

1735. தனிநாயகன் வன்கதை தன்கைகொளா
நனிசாட விழுந்தனர் நாளுலவாப்
பனியாமது மேதை படப்படர்மே
தினியானது பூவுல கெங்கணுமே.

'தனி நாயகன் - தன்னிகரற்ற தலைவனாகிய திருமால், வன் கதை தன்கை கொளா - வலிய தண்டாயுதத்தினை தன் கையிற் கொண்டு, நனி சாட - நன்றாகத் தாக்க, (அந்த மதுகைடவர்கள்) நாள் உலவா விழுந்தனர் - வாழ்நாள் அற்று இறந்துபட்டனர்; படர் பூவுலகு எங்கணும் - விரிந்த இந்த நானிலம் முழுவதும், பனியா - பனித்தல் அல்லது நடுங்குதல் என்பது இல்லாத, மது மேதை பட - மது என்பானது மேதசு (கொழுப்பு) பட்டதனால், மேதினி ஆனது - மேதினி என்ற பெயருடையதாயிற்று. ஏ : அசை.

தனிநாயகன் 'நாராயணனே தனி நாயகனே' (சுந்தர. 494); கதை: கௌமோதகி என்னும் திருமாலின் பஞ்சாயுதங்களில் ஒன்று. சாடுதல் - தாக்குதல். 'சாடுந்தனி யானை சகோதரனே' (கந்தரநுபூதி); 'சாடிக் கொன்றனன் சிலவரை' (சுந்தர. 786); கொளா, உலவா: செய்யா என்னும் வாய்பாடு. உலத்தல்: 'உலவாக் காலந் தவமெய்தி' (திருவாச. திருச்சத. 54); 'மிடைந் தவர் உலப்பிலர்' (சுந்தர. 511): பனித்தல்: நடுங்குதல். 'சுட்டினும் பனிக்குஞ் சுரந்தவப்பலவே' (மலைபடு. 397); 'மடத்தகை மாமயில் பனிக்குமென்றருளி' (புறநா. 145); பனியா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மேதினி என்று பூமிக்கு பெயர் வந்த காரணம் இங்குக் குறிக்கப்பெற்றது. மேதை: மேதஸ் என்ற வடசொல். மேதினி: வகையுளி.

பி - ம். 3. பனியாயது; மேதையினிற்பட. 74

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

1736. விதியாலி வுகந்தனின் மெய்வலியான்
மதுவானவ னெம்முன் மடிந்தனனாற்
கதிர்தாவிகர் கைடவ விக்கதிர்வேல்
அதிகாய விதாக வறைந்தனனால்.

'இஉகந்தனில் -, இந்த யுகத்தில் மெய்வலியான் மது ஆனவன்- உண்மையான வலி படைத்த மது என்பவனுை, எம்முன் - எமது தமையன் (கும்பகன்னன்), விதியால் முடிந்தனன் - ஊழ்வலியால் இறந்தான்; மதிதான் நிகர் - சூரியனையே ஒப்பான, கைடவன் - கைடவன் என்பவனே, இ கதிர் வேல் அதிகாயன் - இந்த ஒளி தங்கிய வேற்படை தாங்கிய அதிகாயன் என்பவன்; இது ஆக அறைந்தனன் - இந்த வரலாற்றினை உன் உளம் கொள்ளுமாறு மொழிந்தேன்' என்றான் வீடணன்; ஆல் இரண்டும் அசை. தான்: அசை.

இவ்வுகம் என்பது சந்தம் நோக்கி இவுகம் என நின்றது. மெய்வலி: உடல் வலியுமாம்; கும்பகன்னன் மதுவாகவும் அதிகாயன் கைடவன் ஆகவும் முன்னர்ப் பிறந்தனர் என்ற வரலாறு இங்குக் குறிக்கப்பட்டது. கதிர் அதிகாயன் கதிர் போன்ற அதிகாயன் அல்லது அதிகாயனாகிய கதிர் என்க. அதிகாயன் என்பது மகாகாயன் என்றது போன்ற மேனியில் பெருந்தோற்றம் குறித்து வந்த பெயர். இச்சொற்கே கம்ப நாடர் பின்னோர் சிறந்த காரணம் கூறுவார். 'பின்னொரிந்திர னிலாமையாற் பெயரதிகாயன்' (யுத்த.).

பி - ம். 1. விதியாலுலகந்தனில், விதியாளிவுகந்தனின்; மெய்வலிசால்.
3. கதமேநிகர்; கதிகாளிவர், கதிகாணிமிர்.
4. அதாகவலிந்தனனல்; இதாகவறிந் தனனல், எனுமுனறைந்தனனல்.75

1737. என்றன விராவண னுக்கிளையான்
நன்றுகுக வென்றொரு நாயகனும்
மின்றானுமிழ் வெண்ணகை வேறுசெயா
நின்றானிது கூற நிகழ்த்தினனல்.

அ இராவணனுக்கு இளையான் என்றான் - அந்த இராவணன் தம்பியான வீடணன் என்று பகர்ந்தான், 'நன்று ஆகுக - நல்லது ஆகட்டும்', என்று - என்று மொழிந்து, ஒரு நாயகனும் - ஒப்பற்றவனான இராமபிரானும், மின் தான் உமிழ் - மின்னல் போலும் ஒளியை வெளி விடுகின்ற. வெள் நகை-வெள்ளைச் சிரிப்பை, வேறு

செயா - தனித்துச் செய்துகொண்டு, நின்றான் - நின்று, இது கூற நிகழ்த்தினன் - இதனைச் சொல்லத் தொடங்கினான். இதனை அடுத்துவரும் ஒன்பது செய்யுட்களில் காண்க. ஆல் - அசை.

நன்றாகுக என்பது வீடணன் கூறியதை ஏற்றமையைப் புலப் படுத்தும். மின் தான்: தான் அசை. வெண்ணகை: புன்னகை. துறவியாதலின் பாகு இலை முதலியன உட்கொள்ளாமை குறித்து நின்றது. வெண்ணகை அதிகாயன் ஆற்றல் இலக்குவற்குமுன் எம்மாத்திரம் என்று எழுந்த நினைவின் விளைவு என்க.

பி - ம். 1. நன்றாகவிது.
3. முன்னுவிரிச்.
4. கூறி. 76

1738 எண்ணாயிர கோடி யிராவணரும்
விண்ணாடரும் வேறுல கத்தெவரும்
நண்ணாவொரு மூவரு நண்ணிடினும்
கண்ணாலிவன் விற்றொழில் காணுதியால்.

எண்ணாயிரம் கோடி இராவணரும் - எண்ணாயிரம் கோடி இராவணர்களும், விண்ணாடரும் - விண்ணுலகத்தவரும், வேறு உலகத்து எவரும் - வேறு உலகத்துள்ள எவரும், நண்ணா ஒரு மூவரும் - யாவரும் கிட்டுதற்கியலாத மும்மூர்த்திகளும், நண்ணிடினும் - (எதிர்த்தற்குக்) கிட்டினும், (அவர்கள் அனைவரையும் எதிர்க்கின்ற), இவன் - இந்த இலக்குவனுடைய, வில் தொழில் - வில் தொழிலை, கண்ணால் - நேரில். காணுதி - காண்பாய். ஆல்: அசை.

எண்ணாயிர கோடி என்பது அளவின்மை குறித்து நின்றது. வேறு உலகம்: அதலம் விதலம் முதலியனவும், பூலோகம் புவர்லோகம் முதலியனவும் ஆம். மூவர், அரி அயன் அரன்; மூவர் மூர்த்திகளையுமே எதிர்த்து வெல்லக்கூடியவன் என இலக்குவனைப் புகழ்ந்தமை காண்க, முன்னர் இராமபிரான் 'சூர் அறுத்தவனும் சுடர் நேமியும், ஊர் அறுத்த ஒருவனும் ஓம்பினும், ஆர் அறத்தினொடு அன்றி நின்றார், வேர் அறுப்பன் வெருவன்மின் நீர் என்றான்' (ஆரணிய. 139); என்று திருமாலினும் வேறாகத் தன்னைப் பிரித்துக்கொண்டு முனிவர்க்கு அடயம் அளித்தமை இங்குக் காணத்தகும். 'செங்கண்மால் நான்

முகன் சிவனென்றேகொலோ, எங்கணுயகணேயு நினைந்ததேழை நீ' (சுந்தர. 455); என்ற பிராட்டி கூற்றும் இங்குக் காணத்தகும். இங்ஙனம் கூறும் கருத்து இராமபிரான் முத்தேவரினும் மேலான பரம்பொருள் என்பது; 'முத்தேவரின் மூல முதற்பொருளாம்' (ஆரணிய. 904); 'முன்னவற் கிதுவென் றெண்ண லாவதோர் மூல மில்லான்' (ஆரணிய. 1180); இங்ஙனம் கூறும் கம்பநாடர் கருத்து உய்த்துணரத்தக்கது. மூன்றுமடியில் நண்ணு, நண்ணிடின் என்ற முரண் காண்க.

பி-ம். 2. உலகத்தவரும்.

4. கன்றலவன். 77

1739. வானென்பதென் வையக மென்பதென்மால்
தானென்பதென் வேறு தனிச்சிலையோர்
யானென்பதென் ஈசனென் வானவர்தம்
கோனெள்பதென் எம்பி கொதித்திடுமேல்.

'எம்பி கொதித்திடுமேல்-என் தம்பி சினந்தால் (அக்காலத்து), வான் என்பது என் - விண்ணுலகத்தவர் என்று சொல்லுவது என்?, வையகம் என்பது என்-பூமியில் உள்ளவர்கள் என்பது என்?, மால்தான் என்பது என் - திருமால் என்பதுதான் என்?, வேறு - வேறான, தனி சிலையோர் என்பது என் - தனிப்பட்ட வில்லாளிகள் என்பது என்?, யான் என்பது என் - நான் என்பதுதான் என்? ஈசன் என் - சிவபெருமான் என்பது என்?, வானவர் தம் கோன் என்பது என் - தேவர் தலைவனான இந்திரன் என்பது என்?.

வான் வையம்: இடவாகு பெயராக விண்ணோரையும் மண்ணோரையும் குறித்து நின்றன. மால்தான் என்பது என், 1738 உரைக் குறிப்புக் காண்க. ஈசன்: சிவபெருமான். சர்வ ஐச்வரியமும் உள்ளவன் எனப் பொருள்படும். 'ஈசனுண் டிருந்தபே ரிலங்கு மால்வரை' (ஆரணிய. 848); தனிச்சிலையோர் என்பதென், யான் என்பதென் எனத் தனித்தனி கூட்டப்பெற்றது. எம்பி: என் தம்பி என்பதன் மரூஉ. 'எம்பியை யீங்குப் பெற்றேன் என் எனக்கரியதென்

ருன்' (சீவக. 1760); யான் என்பது என்: என்று தன்னையும் உளப்படுத்தினன், தன்னைவிடச்சிற்றத்தால் மிக்கவன் என்பதுபட.

பி - ம். 2. தனிச்சிலையோன்.
3. இங்கிமையோர்.
4. கொதித்திடுமால், கோதித்திடலே. 78

1740. தெய்வப்படை யுஞ்சின முந்திறனும்
மையற்றொழி மாதவ மற்றுமெலாம்
எய்தற்குள வோவிவ னிச்சிலையில்
கைவைப்பள வேயிறல் காணுதியால்.

'தெய்வம் படையும் - தெய்வத்தன்மை வாய்ந்த போர்க் கருவிகளும், சினமும் - சீற்றமும், திறனும் - வல்லபமும், மை அற்று ஒழி மாதவம் - குற்றம் இல்லாது ஒழிந்த பெருந்தவமும். மற்றும் எலாம் - வேறுள்ளன எல்லாமும், எய்தற்கு உளவோ - (இவன் முன்பு) வந்து அடைதற்கு உரியனவோ? இவன் - இந்த இலக்குவன், இ சிலையில் - இந்த வில்லில், கைவைப்பு அளவே - கைவைக்கும் அளவில், இறல் காணுதி - (இவை) இற்றுக்கழிதலைக் காண்பாய்'. ஆல்: அசை,

எதிரிகளின் எவ்வகைப் பலமும் இவன் வில்லாற்றலின் முன் நில்லாது என்பது கருத்து. (ஒப்பு): 'பெற்றுடையபெரு வரமும் பிறந்துடைய வஞ்சனையும் பிறவு முன்கை, விற்றொடையின் விடு கணையால் வெந்தொழியும் எனக்கருதி' (யுத்த. 405); 'முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமு முதல்வன் முன்னாள், எக்கோடியாராலும் வெலப்படா யெனக் கொடுத்த வரமு மேனை - ......மார்பிற் புக்கோடி யுயிர் பருகிப் புறம் போயிற் றிராகவன் தன் புனித வாளி' (யுத்த. இராவணன் வதை: 198); இறல்: தொழிற்பெயர்; எய்தற் குளவோ: 'இளைய பெருமாள் அம்பு எய்யு மட்டும் தெய்வப் படை முதலானவை நிற்குமோ' என்பது பழையவுரை.

பி - ம். 1. திறலும் சினமும்.
2. மையுற்றெழு மாயமும், மையற்றொழில் மாதவம்.
4. இது காணுதியால். 97

1741. என்றேவியை வஞ்சனை செய்தெழுவான்
அன்றேமுடி வானிவ னன்னவள்சொல்
குன்றேனென வேகிய கொள்கையினல்
நின்ருனுள ஞகி நெடுந்தகையாய்.

'நெடுந்தகையாய் - மிக்க பெருந்தன்மை வாய்ந்த வீடண! என் தேவியை - என் மனைவியை, வஞ்சனை செய்து எழுவான் - வஞ்சித்துக் கவர்ந்து சென்றவனாகிய இராவணன், அன்றே முடிவான் - அன்றைக்கே இறுதி யெய்தி யிருப்பான்; இவன் - இவ்விலக்குவன், 'அன்னவள் சொல் குன்றேன் - அப்பிராட்டியின் சொல்லை மீற மாட்டேன்' என - என்று, (தான் காத்திருந்த இடத்தை விடுத்து நான் தங்கிய இடத்துக்கு) ஏகிய கொள்கையினல் - வந்த செயலால், உளன் ஆகி நின்ருன் - (அந்த அரக்கன், இதுகாறும்) உயிருடன் நிலை பெற்றுள்ளான்.

தேவியை வஞ்சனை செய்தது; (ஆரணிய. 878): 'நன்றியென் பதம் வஞ்சித்த நாய்களின் நின்ற வஞ்சனை' (சுந்தர. 620) 'அஞ்சினை யாதலாலே யாண்டகை யற்ற நோக்கி, வஞ்சனை மானென் றேவி மாயையால் மறைந்து வந்தாய்' (சுந்தர. 447); குன்றேனென ஏகிய கொள்கை: இங்கு 'தேவர்செய் தவத்தினற் செம்மல் ஏகினன்' (ஆரணிய. 825); என்றது காணத்தகும்.

பி-ம். 3. எய்திய.
4. ஆய நெடுந்தகையான். 30

வீடணனுக்கு இராமபிரான் விடை கொடுத்தனுப்பியது

1742. ஏகாயுட னீயும் எதிர்ந்துளனும்
மாகாய னெடுந்தலை வாளியொடும்
ஆகாய மளந்து விழுந்ததனை
காகாதிக னுங்குதல் காணுதியால்.

'நீயும் உடன் ஏகாய் - நீயும் இவனுடனே போவாயாக; எதிர்ந்துளனும் - (இவனை) எதிர்ப்பவனாகிய, மாகாயன் - அதிகாயனுடைய, நெடுதலை - பெரியதலை, வாளியொடும் - (ஏவப் பெற்ற) அம்புடனே, ஆகாயம் அளந்து - விண்ணை யளந்து, விழுந்ததனை - (தரையில்)

விழுந்ததனை, காகாதிகள் நுங்குதல் காணுதி - காகம் ஆதியான பறவைகள் கொத்தி விழுங்கப்போவதனைக் காண்பாய். ஆல்: அசை.

காகாதிகள்: வடமொழி தீர்க்க சந்தி. நுங்குதல்-விழுங்குதல்; 'மகரவாய் நுங்கிய சிகழிகை' (கலித். 54); ஆகாயமளந்து வீழ்ந்தமை; (யுத்த. அதிகாயன் 206).

பி - ம். 1. எதிர்ந்துளவன்.
2. மாகாயநெடுந்.
4. காகாதிய; நுங்குவ. 81

இஃது 'ஒன்றுயிர வெள்ளம்' என்ற செய்யுளின் பின் உள்ளது.

1743. நீரைக்கொடு நீரெதிர் நிற்கொணுமே
தீரக்கொடி யாரோடு தேவர்பொரும்
போரைக்கொடு வந்து புகுந்ததுநாம்
ஆரைக்கொடு வந்த தறிந்திலையோ.

'நீரைகொடு - நீரினை உதவியாகக் கொண்டு, நீர் எதிர் நிற்கொணுமே - நீரினை எதிர்த்து நிற்க இயலுமா? தீர கொடியாரொடு - முற்றும் வெய்யவரான அரக்கருடன், தேவர் பொரும் போரை - விண்ணவர்க்காகப் புரியும் போரை, கொடு வந்து - மேற்கொண்டு வந்து, நாம் புகுந்தது - நாம் புகுந்தது, ஆரைகொடு வந்து - ஆரைத் துணையாக ஏற்று, அது அறிந்திலையோ - அதனை தெரிந்ததில்லையோ? ஏ, ஓ : வினா.

நீரை எதிர்க்க வேண்டும் எனின் அதனை வற்றுமாறு செய்யக்கூடிய அதற்கு எதிரிடையான ஒன்றையல்லவோ நாடவேண்டும்; அதனை விடுத்து அந்நீரோடு பிறிதொரு நீர்த்தொகுதியை முட்ட விட்டால் ஏதாவது ஆகுமோ? அதுபோன்று, இந்த அறவிரோதிகளான அரக்கரைத் தொலைப்பதற்கு தருமசொரூபனான இலக்குவனையொத்தவான்றி ஏனையோரால் இயலுமோ? இயலாது. (ஒப்பு): 'திரைசெய் நீர்விழும் சிலையினைப் புணையன்றிச் சிலை கரை யேற்று

தால், புரை செய் பாவத்தின் அழுந்தினர் தமைப்புரை யொழிந்த வர் தாமன்றி, நிரை செய்மேற்கதி செலுத்தவல்லாரலர்' (விநாயகபு.) இனி இச்செய்யுட்கு: ஒரு நீர்த்தொகுதியுடன் பிறிதொரு நீர்த்தொகுதி ஒன்று சேராமலிருக்குமோ? அதுபோன்று தருமத்துடன் தருமமே சேரும். இந்த அரக்கர்களை வெல்வதற்கு நாம் போர் ஏற்று வந்தது தருமத்தின் உதவி கொண்டன்றி வேறன்று என்றும் பொருள் செய்யலாம். 'நீருடன் நீர் கலந்தாற் போன்று' என்பது பழமொழி. மறம் வெல்வதற்கு அறமே தேவை' என்பது கருத்து. திரக்கொடியார்: 'திரத்தறைந்த தலையும்'. தலைப்பட்டார் தீரத்துறந்தார்' (குறள். 348).

பி - ம். 1. நிற்கினுமே, நிற்கோனுமேற்.

2. வீரைக்; வெருவும்.

3. நால்.

4. நீயாது, நீயும்; அயர்ந்தனையோ. 82

1744. சிவனல்ல னெனில்திரு வின்பெருமான்
அவனல்ல னெனிற்புவி தந்தருளும்
தவன்அல்ல னெனில்தனி யேவலியோன்
இவனல்ல னெனிற்பிற ரியாருளரோ.

('இந்த அதிகாயனை வெல்லும் ஆற்றலுடையவன்), சிவன் - சிவபெருமான், அல்லன் எனில் - அவனின்றேல், திருவின் பெருமான் - திருமகளின் கணவனாகிய திருமால்; அவன் அல்லன் எனில் - அவனல்லாவிடின், புவி தந்து அருளும் தவன் - நானிலத்தைப் படைக்கும் தவத்தனாகிய பிரமதேவன்; அல்லன் எனில் - அவன் அல்லாவிடின், தனிவலியோனே - ஒப்பற்ற திறல் வாய்ந்தவன் ஆன இந்த இலக்குவனே; இவன் அல்லன் எனில் - இவனும் அல்லாவிடின், பிறர் யார் உளர் - வேறு எவர் இருக்கின்றனர்? ஏ - அசை.

சர்வசங்காரக் கடவுளாகிய உருத்திரன் ஆதலின், அழிக்கும் ஆற்றல்பற்றிச் சிவனை முற்கூறினன். தவன்; 'விரைக் கமலத்தோன் மாலும் மேவலான் மேவினோர்கள், புரைத்ததிகார சத்தி புண்ணிய நண்ணலாலே' (சிவ. சித்தி. 1; 34); தனியே என்பதில் உள்ள ஏகாரம் இவன் என்பதுடன் சேர்த்துப் பொருள் செய்யப்

பெற்றது. தனிவலியோன் என்றே கொண்டு ஏயினை அசையாக் கலுமாம். திருவின் பெருமான் அவனல்லன் எனில்: இங்கு இராம பிரான் திருமாலை வேறுபடுத்திக் கூறினன். 'சூராறுத்தவனும் சுடர் நேமியும், ஊராறுத்த ஒருவனும்' (ஆரணிய. 139) என்றதும் காண்க. 'செங்கண்மால்நான்முகன் ...எங்க ணாயகனை யிகழ்ந்த தேழைமீ' (சுந்தர. 455).

பி-ம். 4. யாருளரே. 83

1745. ஒன்றுயிர வெள்ள மொருங்குளவாம்
வன்றானையர் வந்து வளைந்தவெலாம்
கொன்றானிவ னல்லது கொண்டுடனே
நின்றார்பிற ரின்மை நினைந்திலையோ

'ஒன்று ஆயிரம் வெள்ளம் ஒருங்குஉள ஆம்-ஓராயிர வெள்ள மாக ஒருசேர உள்ளனவாகிய, வல்தானையர்-வலிய படைவீரர் களாய் (க் கும்பகன்னனுடன்), வந்து வளைந்த எலாம்-வந்து சூழ்ந்த எல்லோரையும், கொன்றான்-கொன்றவன், இவன் அல்லது-இவனேயன்றி, (எதிர்த்து), கொண்டு உடனே நின்றார்-இவனுக்குத் துணையாக நின்றவர், பிறர் இன்மை நினைந்திலையோ-பிறரில்லாமையைக் கருதினையல்லையோ?

எலாம் என்றது நால்வகைப் படையினை; அசகாய சூரனாக இவன் ஆற்றிய அருஞ்செயலை நினைகிலைபோலும் என்றான்.

பி-ம். 1. உளதாம்.
2. தானையின், தானைகள்; மலைந்த.
3. கொன்றுடனே.
4. உண்மை நினைந்திலையோ. 84

1746. கொல்வானு மிவன்கொடி யோரையெலாம்
வெல்வானு மிவன்அடல் விண்டுவென
ஒல்வானு மிவன்னுட னேயொருநீ
செல்வாயென வேவுதல் செய்தனனால்.

'கொடியோரை எலாம்-தீயவர் அனைவோரையும், கொல் வானும் இவன்-கொல்லப் போகிறவனும் இவனே; (அங்ஙனம்

கொன்று) வெல்வானும் இவன் - வெற்றிபெறப் போகின்றவனும் இவனே; அடல் விண்டு என - வலிமை வாய்ந்த திருமால் போன்று, ஒல்வானும் இவன் - எதிர்த்துப் பொரக்கூடியவனும் இவனே; (ஆதலின்); ஒரு நீ - நிகரற்ற நீ, உடனே செல்வாய் - இவனுடனேசெல்க' என ஏவுதல் செய்தனன் - என்று (அந்த வீடணனை) ஏவினன். ஆல் - அசை.

விண்டு: விஷ்ணு என்ற சொல்லின் திரிபு, சர்வவியாபி என்பது பொருள் என்பர். ஒல்லுதல் - இயலுதல்; இவன் அடல் விண்டு வென: இராமபிரான் இலக்குவனை விண்டு என்றமை காண்க.

பி - ம். 1. கோடியோனே.

2. முதல்விண்டுவென. 85

### இராமபிரானை வணங்கி இலக்குவன் பொரச் செல்லல்

1747. அக்காலையி லக்குவ னாரியனை
முக்காலும் வலங்கொடு மூதுணர்வின்
மிக்கானடல் வீடணன் மெய்தொடரப்
புக்கானவன் வந்து புகுந்தகளம்.

அக்காலை - அப்போது, இலக்குவன் - இலக்குவன், ஆரியனை முக்காலும் வலம் கொடு - இராமபிரானை மும்முறை வலமாகச் சுற்றி வந்து, மூதுணர்வின் மிக்கான் - பேருணர்வு மிகுந்தவனாய், அடல் வீடணன் மெய் தொடர - வலிமைசான்ற வீடணன் தன்பின்தொடர, அவன் வந்து புகுந்த களம் - அந்த அதிகாயன் வந்து புகுந்த போர்க்களத்திலே, புக்கான் - புகுந்தான்.

ஆரியன் - சிரேட்டன். மும்முறை வலம் வருதல் அடிப்பட்ட வழக்கு. முதுமை உணர்வு: மூதுணர்வு.

பி - ம். 3. பறி விடணன், நெடு. 86

## இருவர் சேனையும் கைகலத்தல்

1748. சேனைக்கடல் சென்றது தென்கடல்மேல்
ஏனைக்கடல் வந்த தெழுந்ததென
ஆனைக்கடல் தேர்ப்பரி யாள்மிடையும்
தானைக்கட லோடு தலைப்படலும்.

தென் கடல்மேல் - தென் கடல் மீது, ஏனை கடல் வந்து எழுந்ததுஎன - பிற கடல்கள் போர்க்குக் கிளம்பிற்று என்னுமாறு, ஆனை கடல் - கடல் போன்ற ஆனைத்தொகுதியும், தேர்பரிஆள் மிடையும் - தேர் குதிரை காலாட்கள் என்ற இவையும் நெருங்கி நின்ற, தானை கடல் - இராக்கத சேனைக் கடலோடு, சென்றது - (இலக்குவனுடன்) சென்றதாகிய, சேனைகடல் தலைப்படலும் - வானர சேனைக்கடல் போர் செய்யத் தொடங்குதலும்; விரிந்த தூளி விசும்பையும் கடந்தது என்று அடுத்த கவியுடன் முடியும்.

ஆள் : காலாள். தலைப்படல்-தொடங்குதல்; ' அக்காரியத்தை செய்யத் தலைப்பட்டான். (வழக்கு).

பி - ம். 1. நின்கடல்.

2. எழுந்த. 67

வேறு

## அப்போது விசும்பில் தூளிபரத்தல்

1749. பசும்படு குருதியிற் பண்டு சேறுபட்
டசும்புற வுருகிய வுலக மார்த்தெழக்
குசும்பையி னறுமலர்ச் சுண்ணக் குப்பையின்
விசும்பையுங் கடந்தது விரிந்த தூளியே.

பசும்படு குருதியில் - பச்சை உதிரத்தினால், அசும்பு உற - நீர்ச்சிதைவு உண்டாக, பண்டு சேறுபட்டு - முன்பு சேறாகி, உருகிய - குழைந்த, உலகம் - போர் உலகத்தில் (களத்தில்), ஆர்த்து எழ - (இப்போது சேனைகள்) ஆர்ப்பரித்துக் கொண்டு கிளப்புதலால், விரிந்த தூளி-பரந்த புழுதியானது, குசும்பையின்-

குசும்பை என்ற நறுமலரின், சுண்ணம் குப்பையின் - சுண்ணத் தொகுதி போன்று, விசும்பையும் கடந்தது-விண்ணையும் கடந்தது.

அசும்பு - கசிவு ; 'அசும்பிவர் சாரல்' (சீவக. 522) ; உலகம் - போர் அரங்கம் ; குசும்பை மலர் : செந்துருக்க மலர். சுண்ணம் : சூர்ணம் என்ற வடசொற் சிதைவு. 'சுண்ணமார்த்தன தூளியு மார்த்தவே' (பால. எழுச்சி. 54). 'குசையுறு பரியுந் தேரும் வீரரும் குழுமியெங்கும், விசையொடு கடுகப் பொங்கி வீங்கிய தூளி விம்மிப், பசையுறு துளியின் தாரைப் பசுந்தொளையடைத்த மேகம் திசைதொறு நின்ற யானை மதத்தொளை செம்மிற்றன்றே' (பால. எழுச்சி. 52),

பி - ம். 2. அசும்பற ; ஆர்ப்பெழக்.

3. நறுமலர்.

4. கடந்தன. 80

## பலவகை யோசை

1750. தாமிடித் தெழும்பணை முழக்குஞ் சங்கினம்
ஆமிடிக் குமுறலு மார்ப்பி னோதையும்
ஏமுடைக் கொடுஞ்சிலை யிடிப்பு மஞ்சித்தம்
வாய்மடித் தொடுங்கின மகர வேலையே.

தாம் இடித்து - தாம் அடிக்கப்பட்டு, எழும்பணை முழக்கும் - (எங்கும்) பரவும் பறைகளின் ஒலியும், சங்கினம் ஆம் இடி குமுறலும் - சங்குத் தொகுதிகளினின்று எழுகின்ற இடிபோன்ற ஓசையும், ஆர்ப்பின் ஓதையும் - வீரர்களின் ஆரவாரச் சத்தமும், ஏம் உடை - பாதுகாவலாகக் கொள்கின்ற, கொடுசிலை இடிப்பும் - கொடிய வில்லின் குணத்தொனியும், அஞ்சி - (ஆகிய இவற் றிற்குப் பயந்து), மகரம் வேலை - மகர மீனைக்கொண்ட கடல், தம் வாய் மடித்து ஒடுங்கின - தமது வாயினை மூடிக்கொண்டு அடங்கின.

பணை : முரசு. ஏமம் உடை என்பது ஏமுடை என நின்றது. வாய்மடித்து ; 'வாய்மடித்துருத்து நக்கான்' (சுந்தர. 985) ; போர்க் களத்து ஓசை கடலோசையினும் மிக்கிருந்தது என்பது கருத்து.

பி - ம். 3. இடியுமஞ்சித்தம், இடிக்குமெஞ்சித்தன், எறியுமஞ்சித்தன்.
4. வாய்மடுத்து. 89

1751. உலைதொறுங் குருதிநீ ரருவி யொத்துக
இலைதுறு மரமெனக் கொடிக ளிற்றுக
மலைதொறும் பாய்ந்தென மான யானையின்
தலைதொறும் பாய்ந்தன குரங்கு தாவியே

உலைதொறும் - (பாகரான அரக்கர்கள்) அழியும்போதெல் லாம், (அவர்கள் உடலினின்று) குருதிநீர் அருவி ஒத்து உக - இரத்த நீர் அருவி நீரை நிகர்த்து ஒழுக, இலை துறு மரம் என - இலைகள் செறிந்த மரம்போன்று, (தோன்றக் காரணமான), கொடி கள்-கொடிகள், இற்று உக - (கொடிக் கம்பத்தினின்று) அறுபட்டு விழுந்துகொண்டிருக்க, குரங்கு - குரங்குகள், மலைதொறும் பாய்ந் தென - மலைதோறும் பாய்ந்தாலொப்ப, மானம் யானையின் தலை தொறும் தாவி பாய்ந்தன - பெருமை மிக்க யானைகளின் தலைமீது தாவிப்பாய்ந்தன. ஏ - அசை.

தற்குறிப்பேற்றவணி. அரக்கனுடைய யானைப் படையில் பாக ராயமர்ந்தவர், கொலையுண்ணும் தொறும் உதிரத்தைக் கக்க, அது யானைமேலிருந்து பெருகுவது, மலையிலிருந்து செந்நிற அருவிநீர் வீழ்வதுபோன்றும், யானைகளின்மேல் குரங்குகள் பாய்ந்தது, மலைமீது பாய்ந்தாற் போன்றும் இருந்தது என்க. துவசங்கட்கு மரம் உவமை.

பி - ம். 1. அருவியோடுவ.
2. இற்றன.
3. படர்ந்தன, பாய்ந்தன.
4. பரந்தன. 90

1751. கிட்டின கிளைநெடுங் கோட்ட கீழுகு
மட்டின வருவியின் மதத்த வாநரம்
விட்டன நெடுவரை வேழம் வேழத்தை
முட்டின வொத்தன முகத்தின் வீழ்வன.

கிட்டின கிளை - அண்மையிற் பொருந்திய கிளைகளினாலே, நெடு கோட்ட - நீண்ட தந்தங்களைப் பெற்றனவும், கீழ் உகு - கீழே சிந்துகின்ற, மட்டு இன அருவியின் - தேன் தொகுதிகளாகிய அருவியினால், மதத்த - மதம் கொண்டனவுமாகி, வாநரம் - குரங்குகள், விட்டன நெடுவரை - (அரக்கரின் யானைப் படைமீது) வீசினவான உயர்ந்த மலைகள், வேழம் வேழத்தை முட்டின ஒத்தன - யானை யானையைத் தாக்கியதை நிகர்த்தனவாய், முகத்தின் வீழ்வன - போர் முகத்தில் வீழ்வனவாயின.

தற்குறிப்பேற்றவணி. கோடு - மரக்கிளை. 'கோடு சங்கூதும் கொம்பு மரக்கொம்பு' (நிகண்டு) மட்டு - தேன். விடுதல் - எறிதல்.

பா - ம். 1. சில ; கோட்டம் கோடு ; கீழுக.

2. மட்டின, வரும்பின, மத்த.

3. வெம்மை.

4. முட்டின ; போன்றன. 61

1753. இடித்தன வுறுக்கின விறுக்கி யேய்ந்தன
தடித்தன வெயிற்றினாற் றலைகள் சந்தறக்
கடித்தன கவிக்குலங் கால்கண் மேற்படத்
துடித்தன குருதியில் துரக ராசியே.

கவிகுலம் - குரங்குக் கூட்டங்கள், (அரக்கரின் சில குதிரைகளை) இடித்தன - தாக்கின ; உறுக்கின - (சிலவற்றைச்) சினந்தன ; இறுக்கி ஏய்ந்தன - (சிலவற்றை) கெட்டியாகப் பற்றின; தடித்தன - (சிலவற்றை) துண்டித்தன ; எயிற்றினால் தலைகள் சந்துஅற - பற்களால் தலைகளின் மூட்டுக்கள் விடும்படி, கடித்தன - கடித்தன; (இவ்வாறு துன்புறுத்தவே), துரகராசி - குதிரைக் கூட்டங்கள்

கால்கள் மேல்பட குருதியில் துடித்தன - கால்கள் மேற்புறமாகக் கிளப்பியவண்ணம், உதிர வெள்ளத்தில் துடிதுடித்தன. ஏ : அசை.

இரண்டாம் அடியில் தடிந்தன என்பது எதுகை நோக்கி வலித்தது. சந்து - முட்டு. ராசி - கூட்டம், வடசொல்.

பி - ம். 1. ஏற்றின, ஏந்தின. 62

1754. அடைந்தன கவிக்குல மெற்ற வற்றன
குடைந்தெறி கால்பொரப் பூட்கைக் குப்பைகள்
இடைந்தன முகிற்குல மிரிந்து சாய்ந்தென
உடைந்தன குலமருப் புகுத்த முத்தமே.

அடைந்தன கவிகுலம் - சுற்றிச் சூழ்ந்தனவான குரங்குக் குழாங்கள், எற்ற - தாக்குவதனால், அற்றன - வலிமையிழக்கப் பெற்ற, பூட்கை குப்பைகள் - யானைத் தொகுதிகள், குடைந்து எறி கால் பொர - குடைந்துகொண்டு வீசுகின்ற காற்று மோதுவதனால், முகில்குலம் இடைந்தன இரிந்து சாய்ந்தென - மேகத் தொகுதிகள் தடைப்பட்டு நிலைகுலைந்து சாய்ந்தாற்போன்று, உடைந்தன - சிதறலாயின; (ஆகவே), மருப்பு குல முத்தம் உகுத்த - (அவற்றின்) தந்தங்கள் நல்ல சாதி முத்துக்களைச் சிந்தின. ஏ : அசை.

அடைந்தன - வினையாலணையும் பெயர். குடைதல் - ஊடுருவுதல்; 'குடைந் துலகனைத்தையும் நாடும் கொட்பினல்' (சுந்தர. 511); பூட்கை - துதிக்கையையுடைய யானைகள்; சுந்தர. 851, 871, 874, 938. போராற்றுது வலியிழந்தன ஆகலின் இளிவரலாகக் குப்பைகள் எனப்பட்டது. குப்பை சிறந்த பொருளிலேயே முன் வழங்கி வந்தது. நாளடைவில் இழிந்த பொருளைப் பெற்றது. 'பவழக்குப்பை' (சீவக. 114); 'குப்பை கிளைப்போவாக் கோழிபோல்' (நாலடி. 341); என்று முறையே காண்க. இரிதல்-நிலை பெயர்தல். குலம் முத்தத்துக்கு அடையாக்கப்பட்டது. முத்தம் பிறக்கும்

இடங்களில் யானை மருப்பு ஒன்று. 'மருப்பினுட்பிறந்த மண்ணு முத்தம்' (பெருங். *1-51 ; 23*).

பி - ம். 2. குடைந்தன ; பூபக், பூனை, பூழைக் ; குப்பையின்.
3. இடைந்தென, மிடைந்தென ; சூற்குலம், சூல்குலம் ; சாய்ந்தன.
4. கரி, கரம். 93

1755. தோல்படத் துதைந்தெழு வயிரத் தூணிகர்
கால்படக் கைபடக் கால பாசம்போல்
வால்படப் புரண்டனர் நிருதர் மற்றவர்
வேல்படப் புரண்டனர் கவியின் வீரரே.

தோல் பட - யானைகளும் மரிக்கும்படி, துதைந்து எழு - விரைந்து எழுகின்ற, வயிரம் தூண் நிகர் - வயிரத்தூணை ஒத்த, கால் பட - (வாநரர்களின்) கால்கள் தீண்டுவதாலும், கை பட - கரங்கள் தீண்டுவதாலும், காலம் பாசம்போல் வால் பட - யமனுடைய பாசக்கயிறுபோன்ற வால்கள் தீண்டுவதாலும், நிருதர் புரண்டனர் - இராக்கதர்கள் புரண்டார்கள் ; அவர் வேல் பட கவியின் வீரர் புரண்டனர் - அந்த அரக்கரின் வேல் தீண்டக் குரங்கு வீரர்கள் தரையில் உருண்டார்கள். ஏ, மற்று - அசைகள்.

தோல் - யானை ; 'தோலுரிந்து கழன்றன தோலெலாம்' (சுந்தர. *1188*) ; 'புரைத்தோல் வரைப்பின்' (மலைபடு. *88*). கால் பாசம் - யமன் சீவர்களை இறுதிக்காலத்திற் கட்டி இழுக்கும் கயிறு ; 'கொடுங்கால பாசத்தை வீசிக் கொதித்து' (திருக்கருவை. கலித். அந். *30*) ; 'கால படர்நரகுக், கிழுக்கக் கழுத்திற் கயிறிடும் போதுமற் றென்செய்வரே' (திருக்கருவை. கலித். அந். *87*) ; 'கால பாசத்திற் காட்டிக் கொடாமலே காப்பாற் றிடுமையே' (நந்தன் சரித்திரம்).

பி - ம். 1. தோலடைத் துதைந்தெழு, தோல்படப் புனைந்தெழு, தோல்படப் புனைந்தன, தோல்படத் துகைத்தெழு ; தூணைனி. 94

1756. மரவமுஞ் சிலையொடு மலையும் வாளெயிற்
றரவமுங் கரிகளும் பரியு மல்லவும்
விரவின கவிக்குலம் வீச விம்மலால்
உரவருங் கானெனப் பொலிந்த தும்பரே.

விரவின கவி குலம் - ஒன்றுகூடிக் கலந்த குரங்குத்திரள்கள், மரவமும் - மரவம், சிலையொடு மலையும் - கற்களுடன்கூடிய மலை, வாள் எயிறு அரவமும் - வாள்போன்று கூரிய தந்தங்களையுடைய பாம்புகள், கரிகளும் - யானைகள், பரியும் - குதிரைகள் (என்ற இவற்றையும்), அல்லவும் - இவையல்லாத பிறவற்றையும், வீச - நிருதர்மீது எறிய, (இவைகள்) விம்மலால் - மிகுத்தலின், உம்பர் - மேலிடமானது, உரவு - வன்மைவாய்ந்த, அரு கான் என பொலிந்தது - புகற்கரிய காடுபோன்று விளங்கிற்று. ஏ - அசை.

மரவம் - குங்கும மரம்; 'மரவங்கிளர் கோங்கொளிர் வாச வனம்' (ஆரணிய. 74). விம்முதல் - நிறைதல்; 'விம்மகிற் புகை யின் மேவி' (சீவக. 2667). உரவு - வன்மை; காட்டிற்கு வன்மை யாவது எளிதிற் கடத்தற்கருமை; 'ஊரங் கணநீர் உரவுநீர் சேர்ந்தக்கால்' (நாலடி. 175). 'மரவம் - தேர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. மரநெடுஞ்; கிலைகளும். 95

1757. தடவரை கவிக்குலத் தலைவர் தாங்கின
அடல்வலி நிருதர்த மனிக ராசிமேல்
விடவிட விசும்பிடை மிடைந்து வீழ்வன
படர்கட லினமழை படிவ போன்றவே.

கவி குலம் தலைவர் - குரங்குக் கூட்டத்தின் தலைவர்கள், தாங்கின தடவரை - தாம் சுமந்த பெரிய மலைகளை, அடல் வலி நிருதர் தம் அனிக ராசிமேல் - மிக்க வன்மைவாய்ந்த அரக்கர்களின் சேனைத்தொகுதியின்மீது, விடவிட - விடுந்தோறும்; (அவைகள்), விசும்பிடை - ஆகாயத்தினிடத்து, மிடைந்து - செறிந்து, வீழ்வன - வீழ்வனவாகி, படர் கடல் - பரந்த கடலில், இனம் மழை படிவ போன்ற - மேகத்தொகுதிகள் படிவன போன்றன. ஏ - அசை.

கவிக்குலத் தலைவர் தாங்கின தடவரை எனக் கூட்டுக. அடல்வலி: ஒருபொருட் பன்மொழி. அனிகம் - சேனை, வட

சொல்; ஆரணிய. 392, 548 காண்க. அனிக ராசியில் மழைகள் விழுந்தமை கடலின் மழைபடிந்த தொத்தது.

பி - ம். 1. கவிக்குலத்தரசர்.

3. விழ்ந்தன.

4. படர்தலின்; போன்றதே. 96

1758. இழுக்கின ரடிகளி னிங்கு மங்குமாய்
மழுக்களு மயில்களும் வாளுந் தோள்களும்
முழுக்கின ருழக்கினர் மூரி யாக்கையை
ஒழுக்கினர் நிருதரை யுதிர வாற்றினே.

இங்கும் அங்குமாய் - இங்கும் அங்குமாக (ஓடி), அடிகளின் இழுக்கினர் நிருதரை - கால்கள் வழுக்கி வீழ்ந்த அரக்கர்களை; (வானரர்கள்), மழுக்களும் அயில்களும் வாளும் - மழுப்படைகளும் வேல்களும் வாள்களும், தோள்களும் - (இவற்றைச் சுமந்த) புயங் களும் என்றவற்றை, முழுக்கினர் - முழுகச்செய்து, மூரி யாக்கையை உழக்கினர் - (அவர்களின்) வலிய உடலைக் கலக்கி, உதிர ஆற்றின் ஒழுக்கினர் - இரத்தவெள்ளத்தில் செலுத்தினர். .ஏ - அசை.

இழுக்குதல் - வழுக்குதல்; 'இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே' (குறள். 415). முழுக்குதல் - அகப்படச்செய்தல். மூரி - வன்மை; சுந்தர. 906, 1178. யாக்கை - எழுவகைத் தாதுக் களால் யாக்கப்பட்டது என்று உடற்குக் காரணக்குறி.

பி - ம். 1. அடிகளின்று; அங்குமா.

2. வாழும்.

3. மூரி யானையை.

4. ஒழுக்கின; நிருதர்தம். 97

1759. மிடலுடைக் கவிக்குலங் குருதி வெள்ளநீர்
இடையிடை நீந்தின வியைந்த யானையின்
திடரிடைச் சென்றவை யொழுக்கச் சேர்ந்தன
கடலிடைப் புக்கன கரையுங் காண்கில.

மிடல் உடை கவிகுலம் - வன்மைவாய்ந்த குரங்குக்கூட்டம், வெள்ளம் குருதி நீர் - வெள்ளம்போன்ற உதிர நீரில், இடை இடை நீந்தின - இடையிடையிலே நீந்தினவாய், இயைந்த யானையின் - அங்குப் பொருந்திக்கிடந்த யானையாகிய, திடர் இடை சென்று - திட்டினை யடைந்து, அவை ஒழுக்க - அவை வெள்ளத்தால் ஈர்க்கப்பட்டுச் செல்ல, சேர்ந்தன - சேர்ந்தனவாகி, கடல் இடை புக்கன - கடல் நடுவிற் புகுந்து, கரையும் காண்கில - கரைகாண மாட்டாதன வாயின.

இறந்துபட்ட யானைகள் பெரும் திடர்கள்போன்றிருக்கக் குரங்குகள் அவற்றினை யடைந்து, எல்லாம் உதிரவெள்ளத்தால் செலுத்தப்பட்டுக் கடலை அடைந்தன என்பது.

பி - ம். 1. கவிக்குலக்குருதி.

2. எய்த, எய்த்த.

3. ஒழுக்கி, ஒழுகி. 98

1760. கால்பிடித் தீர்த்திழி குருதிக் கண்ணகட்
சேல்பிடித் தெழுதிரை யாற்றிற் றிண்ணெடும்
கோல்பிடித் தொழுகுறு குருடர் கூட்டம்போல்
வால்பிடித் தொழுகின கவியின் மாலையே.

கவியின் மாலை - குரங்கின் தொகுதிகள், கால் பிடித்து ஈர்த்து இழி குருதி கண்ண - காலைப்பற்றி இழுத்துக்கொண்டு பெருகு கின்ற இரத்த வெள்ளத்தினிடத்தவாகி, கண் சேல் பிடித்து எழு திரை ஆற்றில் - கண்ணை நிகர்த்துள்ள கெண்டை மீனைக்கொண்டு மேலெழுகின்ற அலைகளைக்கொண்ட ஆற்றில், திண் நெடு கோல் பிடித்து - வலிய நீண்ட கோலைப்பற்றிக்கொண்டு, ஒழுகுறு - செல்கின்ற, குருடர் கூட்டம்போல் - குருடர்களின் கூட்டம் போன்று, வால் பிடித்து ஒழுகின - ஒன்றன் வாலை யொன்று பிடித்துக்கொண்டு சென்றன. ஏ - அசை.

கண்சேல் - கண்ணை ஒக்கின்ற சேல்; இங்கு எதிர்நிலையணி. இச்செய்யுள் உவமையணி. மாலை - வரிசை; 'மன்னர் மாலையில்

என்னுறப் பிறந்திலன்' (அயோத்தி. மந்தரை. 58). யானையின் வாலைப்பிடித்து ஒழுகின எனினுமாம். வாநரங்கள், கலங்கிய கண்ணர்க்கு வழிகாட்டுதல்; அயோத்தி. சித்திரகூட. 30 காண்க.

பி - ம். 1. கண்ணகன்.

3. ஒழுகிய, எழுகுறு.

4. குரங்கின். 99

1761. பாய்ந்தது நிருதர்தம் பரவை பன்முறை
காய்ந்தது கடும்படை கலக்கிக் கைதொறும்
தேய்ந்தது சிதைந்தது சிந்திச் சேணுறச்
சாய்ந்தது தகைப்பெருங் கவியின் தானையே.

நிருதர் தம் பரவை - அரக்கர் கடலானது, பல்முறை பாய்ந்து - பலதடவை பாய்ந்து, கடுபடை கலக்கி காய்ந்தது - (குரங்குகளின்) கடுமையான சேனையை உழக்கி வெகுண்டது; (அப்பொழுது) தகைபெரு கவியின் தானை - தகுதிசான்ற பரந்த குரங்குப் படை, கைதொறும் - அணிதோறும், தேய்ந்தது சிந்தி சிதைந்தது - வலிமை குறையப்பெற்றுச் சிதறி நிலைகுலைந்ததாகி, சேண் உற சாய்ந்தது - வீர சுவர்க்கத்தில் சென்று சேருமாறு மடிந்தது, ஏ : அசை.

பரவை - கடல்போன்ற குரங்குச் சேனை ; உவம ஆகுபெயர். கை - அணிவகுப்பு. சேண் - வீரர் உலகு. தகுதியும் பெருமையும் வாய்ந்தன ஆதலின் சேண் உற்றதென்க.

பி - ம். 2. காய்ந்தனர் ; விலக்கி.

4. தகைப்படும். 100

1762. அத்துணை யிலக்குவ னஞ்ச லஞ்சலென்
றெத்துணை மொழிகளு மியம்பி யேற்றினன்
கைத்துணை வில்லினைக் காலன் வாழ்வினை
மொய்த்துணை நாணினை முழங்கத் தாக்கினன்.

அத்துணை - அச்சமயத்தில், இலக்குவன் - இளைய பெருமாள், 'அஞ்சல் அஞ்சல் - பயப்படாதே பயப்படாதே', என்று - என்று,

எத்துணை மொழிகளும் இயம்பி ஏற்றினன் - எவ்வளவோ தேறுதல் மொழிகளைக் கூறிக் (குரங்குப் படைக்கு) ஊக்கம் எழச் செய்து, காலன் வாழ்வினை - யமன் நல்வாழ்வுறுதற்கு, மொய் துணை - வலிய உதவியாயுள்ள, கைதுணை வில்லினை - கையில் எப்போதும் துணையாகக்கொண்டுள்ள வில்லினுடைய, நாணினை முழங்க தாக்கினன் - நாணியைத் தொனிக்குமாறு தெறித்தான்.

அஞ்சல் அஞ்சல் : அபயம் கூறுதல். ஏற்றுதல் - மனக் கிளர்ச்சியுண்டுபண்ணுதல், கைதுணை வில் 'வில்லையூன்றிய கையோடும்' (அயோத்தி. குகப். 42); 'வில்லும் சுமக்கப் பிறந்தேன்' (அயோத்தி. நகர்நீ. 138); வில்லினை நாணினை இரண்டு செயப்படுபொருள் வந்தது, யானையை முழங்காலை வெட்டினன் என்ற இடத்துப்போல. முழங்க என்றமையின் நாணி தெறித்த ஓசை மிகவும் பெரிதென்க.

பி - ம். 2. ஏற்றத்தன், ஏற்றனன், ஏற்றதன்.
3. கால வாழ்வினை.
4. மொய்த்தெழு, மொய்த்துணர், நாணினை, நாணொலி. 101

1763. நூன்மறைந் தொளிப்பினும் நுவன்ற பூதங்கள்
மேன்மறைந் தொளிப்பினும் விரிஞ்சன் வீயினும்
கான்மறைந் தொளிப்பிலாக் கடையிற் கண்ணகல்
நான்மறை யார்ப்பென நடந்த தவ்வொலி.

நூல் மறைந்து ஒளிப்பினும் - சாத்திரங்கள் அனைத்தும் மறைந்து ஒளிந்து கொண்டாலும், நுவன்ற பூதங்கள் - புகழ்ந்து கூறப்படும் ஐம்பெரும் பூதங்களும், மேல் மறைந்து ஒளிப்பினும் - தமது காரணமாகிய மூலப்பகுதியில் அடங்கிக் (அவையும்) கட்புலனாகாதொழியினும், விரிஞ்சன் வீயினும் - (உலகத்தை ஆக்கும்) பிரமனும் அழிவுறினும், கால் கடையில் - ஊழி முடிவுக்காலத்தில், மறைந்து ஒளிப்பு இலா - மறைந்து கரத்தல் இல்லாத, கண் அகல் - இடம் அகன்ற, நான் மறை ஆர்ப்பு என அ ஒலி நடந்தது - நான்கு வேதங்களின் பெருமுழக்குப்போன்று அந்த ஒலி பரவிற்று.

இஃது நல்ல கருத்து அடங்கிய ஓர் பாடல், மூலப்பிரகிருதியில் இருந்துதான் ஐம்பெரும் பூதங்கள் தோன்றும், ஆகாசாத் வாயு, வாயோர் அக்கினி, அக்கினி ஆப: ஆபோ பிரிதிவி என்பது

வேதம். இங்குத் தோன்றிய முறைப்படியே உலகம் ஒடுங்கும்போது இப்பெரும் பூதங்களும் ஒன்றில் ஒன்று அடங்கும். அதாவது, பூமி புனலிலும், புனல் அதற்குக்காரணமான அங்கியிலும், அங்கி அதனைத் தோற்றுவித்த வாயுவிலும், வாயு ஆகாயத்திலும், ஆகாயம் மூலப்பகுதியிலும், மூலப்பிரகிருதி அவ்யக்தத்திலும் அடங்கும் என்ப. இதனையே கைவல்யம் ஆதி வேதாந்த நூல்கள் அபவாதம் என்று கூறும். இங்கே 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு' (குறள். 355) என்ற இடத்துப் பரிமேலழகர் கூறுவது காணத்தகும். நல்லவர்களும் நான்மறைகளும் வாழவே, இராம இலக்குவர் அவதாரம் ஆகலின் நான்மறை ஆர்ப்பு எனப்பட்டது. எல்லாம் அழிந்த இடத்தும் பிரகிருதி வடிவான பரமேச்சுரனை அழியாத வேதங்கள் துதித்து முழங்கும் என்பது வரலாறு. கால்: தமிழ் உபசருக்கம் என்றும் கூறுவர்.

பி - ம். 2. வீசினும்.
3. மறைந்தொளிப்பினுங், ஒளிக்கிலாக், கண்ணுதல்.
4. தானடைந் தார்த்தென. 102

இங்கு அதிகப் பாடல்கள் :—

வெங்கொலை மதகரி வெள்ள மாயிரம்
துங்கநீள் வரைப்புயத் தரக்கர் தூண்டினார்
வெங்கணை யிலக்குவன் வெகுண்டு காந்தத்தில்
பொங்கிய மாரியிற் பொழிதல் மேயினான். 1

முடிவுறு முகம்பொழி மாரி மும்மையின்
விடுகணை மழைநெடுந் தாரை வெம்மதக்
கடகளி றடங்கலும் கழியக் கால்கரம்
குடரனை குறைத்தமை கூறல் ஆவதோ. 2

அறுந்தன தலைகழுத் தறுந்த தாள்கரம்
அறுந்தன செவிமுகம் அறுந்த வால்மருப்
பறுந்தன குடலுடல் அறுந்த வாய்விழி
அறுந்தன கடகளி றுய நாமமே. 3

அறுத்தன சிலகணை அறுத்த கூறுகள்
செறுத்தன சிலகணை சின்ன பின்னமாய்
ஒறுத்தன சிலகணை யும்ப ரூர்புகத்
தெறித்தன சிலகணை செப்ப லாவதோ. 4

மதகரி வெள்ளமா யிரமு மாண்டுற
முதிர்சினத் திலக்குவன் கடிகை மூன்றினில்
கொதிகொள்வெஞ் சரமழை கொழிப்பக் கண்டுதாள்
அதிர்வுறு பொலன்கழல் அரக்க ரண்மினர். 5

அடுத்தனர் ஆனைதேர் புரவி ஆழியைத்
தொடுத்தன ரணிபடச் சூழ்ந்து வள்ளல்மேல்
விடுத்தனர் படைக்கலம் வெகுண்டு வீரனும்
தடுத்தனன் ஒருதனித் தனுவின் வன்மையால். 6

பெருங்கடை யுகமழை பிறழத் தன்னொரு
கரம்படு சிலையினின் கான்ற மாரியின்
சரம்படச் சரம்படத் தாக்கி ராக்கதர்
கருங்கடல் வறந்தது கழற லாகுமோ. 7

1764. துரந்தன சுடுசரந் துரந்த தோன்றல
கரந்தன நிருதர்தங் கரையில் யாக்கையின்
நிரந்தர நெடும்பிணம் விசும்பின் நெஞ்சுறப்
பரந்தன குருதியப் பள்ள வெள்ளத்தின்.

துரந்தன சுடுசரம் - (இலக்குவனுடைய) சுடுகின்ற அம்புகள் ஏவப்பட்டன, (அங்ஙனம்) துரந்த-விடுக்கப்பட்டவை, தோன்றல-புலனாகாமல், நிருதர் தம் கரை இல் யாக்கையில் கரந்தன - அரக்கர்களுடைய எண்ணிறந்த உடல்களில் ஒளித்தன; (அப்போது) நெடுபிணம் - அரக்கரின் மிக்க பிணங்கள், நிரந்தரம் - இடையீடின்றி, விசும்பின் நெஞ்சுற-ஆகாயத்தின் நடுவிடத்திற் பொருந்த, (அவ்வுடலினின்று பெருகிய) குருதி - உதிரம், அபள்ள வெள்ளத்தில் பரந்தன - அந்தப் பள்ளமான கடலில்பரவின.

சுடுசரம்: வினைத்தொகை. 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடு சரம்' (பால. தாடகை. 73); கரை இல் யாக்கை-எண்ணிறந்த உடல்

கள். வெள்ளத்தின் பரந்தன : கடல் போன்று பரந்தன எனினு மாம். இங்கு இன் ஒப்புப் பொருள் என்க.

பி - ம், 1. நுரந்தனன், துரந்தது ; துரந்த வொன்றல.
2. கரந்தனன், கடையில் ; ஆக்கைகள்.
3. நிரந்தன.
4. குருதியம், குருதியிற் ; வெள்ளத்தே. 103

1765. யானையின் கரந்துரந் திரத வீரர்தம்
வானுயர் முடித்தலை தடிந்து வாசியின்
கானிரை யறுத்துவெங் கனற்கண் மொய்ம்பரை
ஊனுடை யுடல்பிளந் தோடு மம்புகள்.

அம்புகள் - (இலக்குவன் ஏவிய) வாளிகள், யானையின் கரம் துரந்து - வேழங்களின் துதிக்கைகளை அப்புறப்படுத்தியும், இரத வீரர்தம் - தேர்வீரர்களுடைய, வான் உயர் - மிகவும் உயர்ந்த, முடி தலை - மகுடம் அணிந்த தலைகளை, தடிந்து - வெட்டியும், வாசியின் கான் நிரை அறுத்து - குதிரைகளின் கால்வரிசைகளைத் துணித்தும், வெம் கனல் கண் மொய்ம்பரை - கொடுமைவாய்ந்த தீப்போன்ற கண்ணினரான வீரர்களின், ஊன் உடை - தசையைக் கொண்ட, உடல் பிளந்து ஓடும் - உடலைப் பகிர்ந்துகொண்டு விரைவனவாயின.

அம்புகள் ஏககாலத்தில் நாற்படைகளையும் துளைத்துச் சென்றன என்று இலக்குவன் அம்பினது ஆற்றல் கூறியவாறு; (ஒப்பு) : கிட்கிந்தா. 173, 174. கறை - குருதிக்கறை.

பி - ம். 1. துணிந்தெதிர்ந்த, துமிந்தார்த்த, துமித்தார்த்த.
2. தானுயர்.
3. கறைக்கண் ; கரைக்கண் ; முன்பரை உம்பலை. 104

1766. வில்லிடை யறுத்துவேல் துணித்து வீரர்தம்
எல்லிடு கவசமு மார்பு மீர்ந்தெறி
கல்லிடை யறுத்துமாக் கடிந்து தேரழீஇக்
கொல்லிய லியானையைக் கொல்லுங் கூற்றினே.

(மற்றும் அந்த அம்புகள்), வில் இடை அறுத்து - விற்களை இடையிலே அறுத்தும், வீரர் தம் - வீரர்களுடைய, வேல் துணித்தும் - வேற்படைகளைச் சேதித்தும், எல் இடு கவசமும் - ஒளி விடுகின்ற கவசமும், மார்பும் - (அவற்றைத் தரித்த) மார்பும், என்ற இவற்றை, ஈர்ந்து - பிளந்தும், எறி கல் இடை அறுத்தும் - வீசப்படுகின்ற மலைகளை இடையிலே துண்டுபண்ணியும், மா கடிந்து - குதிரைகளை வெட்டியும், தேர் அழி இ-தேரை அழித்தும், கொல் இயல் யானையை - கொல்லும் இயல்புள்ள வேழங்களை, கூற்றின் கொல்லும் - யமன்போன்று கொல்வன ஆயின. ஏ : அசை.

இச்செய்யுளிலும் மேலைப்பாட்டைப்போன்ற நால்வகைப்படைகளை அழித்தமை கூறப்பட்டது

பி - ம். 1. துணிந்த.

2. ஆர்ப்பும் ; ஈர்த்தெறி.

3. நுறுக்கி யாடடிந்து, நுறுக்கி மாத்தடிந்து ; தேர்கழிஇச்.

4. கொல்லிய ; கோல்களே, கூற்றமே, கூற்றென. 105

## போர்க்கள வருணனை

1767. வெற்றிவெங் கரிகளின் வளைந்த வெண்மருப்
பற்றெழு விசைகளி னும்ப ரண்மின
முற்றரு முப்பகற் றிங்கள் வெண்முளை
உற்றன விசும்பிடை பலவு மொத்தன.

வெற்றி - வெற்றி பொருந்திய, வெம் கரிகளின் - கொடிய யானைகளின், வளைந்த வெண் மருப்பு - வளைந்த வெண்ணிறமான தந்தங்கள், அற்று - அறுபட்டு, எழு விசைகளின் - மேல் எழுகின்ற விசைகளினால், உம்பர் அண்மின - விண்ணை அணுகினவாய், முற்று அரு - முழுமை வடிவில்லாத, மு பகல் - மூன்றாவதான திருதியைத் திதியில் காணப்படும். வெண்முளை திங்கள் - வெள்ளிய பிறைச் சந்திரன், பலவும் - பலவும், விசும்பிடை உற்றன ஒத்தன - ஆகாயத்தில் பொருந்தி யிருந்தவற்றை நிகர்த்தன.

தற்குறிப்பேற்றவணி. வளர் பிறையில் இருதியையில் காணப்படும் சந்திரன், இங்கு வெண் மருப்பிற்குவமையாக்கப்பட்டது. அறு பட்ட யானைக்கொம்பு மூன்றும் பிறை யொத்தது.

பா-ம். 1. வளைந்த, விளைந்த.

௨. அற்றது ; அன்னவின, வானமீன்.

3. முற்றிரு முப்பதிற்.

4. ஒந்ததே. 106

இறு முதல் ஐந்து கவிகள் ஒரு பிரதியில் இல்லை.

1768. கண்டகர் நெடுந்தலை கனலுங் கண்ணன
துண்டவெண் பிறைத்துணை கவ்வித் தூக்கிய
குண்டல மீன்குலந் தழுவிக் கோண்மதி
மண்டலம் விழுந்தன போன்ற மண்ணினே.

கனலும் கண்ணன கண்டகர் நெடுதலை - (இலக்குவனால் வீழ்த்தப்பட்ட) நெருப்புப் போலும் ஒளிர்கின்ற கனல் விழிகளை யுடையவரான கொடிய இராக்கதர்களின் நீண்ட தலைகள், துண்டம் துணை வெள்பிறை - துண்டு பட்ட இரண்டு வெண் பிறைச் சந்திரரை, கவ்வி - கவ்விக் கொண்டு, தூக்கிய-செவிகளில் தொங்கவிட்டுக் கொண்ட, குண்டலம் - குண்டலங்களாகிய, மீன் குலம் தழுவி - நட்சத்திரத் தொகுதிகளைக் கூட்டிக்கொண்டு, கோள் மதி மண்டலம் - கிரகங்களைத் தன்னகத்துக் கொண்ட, மதிக்கத் தக்க வான மண்டலம், மண்ணின் விழுந்தன போன்றன - பூமியில் வீழ்ந்தன போன்றன. ஏ : அசை.

இலக்குவன் வாளிகளால் வெட்டப்பட்டுத் தரையில் வீழ்ந்த இராக்கதர்களின் கரிய தலைகள், குண்டலங்கள் செவியில் ஒளிரச், சினம் தோன்ற, உதட்டினைக் கோரப் பற்களால் கவ்விய வண்ணம் காணப்படுதலின், வானமண் டலமே தரைக்கண் வீழ்ந்ததாகக் குறிக்கப்பட்டது. தற்குறிப்பேற்றவணி. வெட்டுண்டு வீழ்ந்த தலைகள் பல ஆதலின் வான மண்டலத்தைப் பன்மையாக, விழுந்தன என்றார். 'ஒரு பூரண சந்திரன், கனல் விழியும் ஒரு பிறை கவ்விய

வாயும் உடுக்கணமும் தோன்ற விழுந்த தொத்தன அறுபட்ட தலைகள் : குண்டல மின் ; திருமுருகு : 86 - 88.

பி - ம். 1. கன்னின், கன்னகன்.

2. பிறைத்துணி ; தாங்கிய.

3. தழுவக்.

4. விழ்வன, விழுவன ; மன்னின்மேல். 107

1769. கூர்மருப் பிணையன குறைந்த கையன
கார்மதக் கனவரை கவிழ்ந்து வீழ்வன
போர்முகக் குருதியின் புணரி புக்கன
பாரெடுக் குறுநெடும் பன்றி போன்றன.

கூர் மருப்பு இணையன - கூர்மையான இணை மருப்புக்களை யுடையனவும், குறைந்தகையன - துணிக்கப்பட்ட கையையுடையனவுமான, மதம் கார் கனவரை - மதங்கொண்ட கரிய பெரிய மலை போன்ற யானைகள், கவிழ்ந்து வீழ்வன - குப்புற வீழ்பவை, போர் முகம் - போர் முனையில், குருதியின் புணரி புக்கன - உதிரக் கடலிற் புகுந்தனவாய், (பெருங்கடலில் முழுகிய) பார் எடுக்குறும் நெடு பன்றி போன்றன - பூமியை எடுக்கும் மகாவராக மூர்த்தியைப் போன்றன,

கூரிய மருப்பினாலும், குறுகிய கையினாலும் கரிய பெரிய மலை போன்ற உருவத்தானும் யானை வராகமூர்த்திக்கு உவமை; வராகா வதாரச்செய்தி: (சுந்தர. 935); காண்க. இரணியாக்கன் என்னும் அசுரன் பூமியைச் சுருட்டி எடுத்துப் பாதாளத்திற்புக, தேவர்கள் வேண்டுகோட் கிணங்கித் திருமால் வராகவுருவெடுத்துச் சென்று, அந்த அரக்கனைக் கொன்று, புவியைத் தம் மருப்பில் ஏந்தி எடுத்து, முன்போல் நிலை பெறுத்தினர் என்பது வரலாறு. கிட்கிந்தா. 126 காண்க. தன்மைத் தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 2. கனக்கிரி, கனகரி.

3. போர் முதற்.

4. பார்மிசை ; எடுப்புறும். 108

1770. புண்ணுற வுயிருகும் புரவி பூட்டறக்
கண்ணகன் தேர்க்குலம் மறிந்த காட்சிய
எண்ணுறு பெரும்பதம் வினையி னெஞ்சிட
மண்ணுற விண்ணின்வீழ் மானம் போன்றன.

புண் உற - புண் உற்றதனால், உயிர் உகும் புரவி பூட்டு அற - உயிர் ஒழிந்த குதிரைகள் பூட்டினின்று நீங்க, கண் அகல் - இடம் அகன்ற, தேர் குலம் - தேர்த் தொகுதிகள், மறிந்த காட்சிய - தலை கவிழ்ந்து விழுந்த தோற்றத்தனவாய், எண் உறு பெருபதம் - மதிக்கத்தக்க பெரிய நிலை, எஞ்சிட - நீங்க, வினையின் - ஊழ்வினைப் பயனால், விண்ணின் மண் உற வீழ் மானம் போன்றன - விண்ணின்று மண்ணிடத்து வீழ்கின்ற விமானங்களை நிகர்த்தன.

பூட்டறுதல் - பிளக்கப்பெற்ற தேரினின்றும் விலகுதல். மறிதல் - தலைகீழாக விழுதல்; ஆன்மாக்கள் புண்ணிய மிகுதியால் தேவர் உலகில் வாழ்வார்; புண்ணியம் அற்ற நிலையில் இறந்து பிறக்கும் இவ்வுலகத்து மீண்டும் வருவர், எஞ்சிய கன்மம் துய்த்தே கழித்தல் வேண்டுதலின்; (க்ஷீணே புண்யே மிருத்யுலோகம் விசந்தி' (பகவந்கீதை.); பதம்: பதமுத்திகளும் ஆம். மானம்: விமானம் முதற் குறை, விண்ணினின்று மண் உற என இயைக்க.

பி - ம். 3. என்றுவ.
4. விமானம்; போன்றதே. 109

1771. அடக்கருங் கவந்தம்நின் ருடு கின்றன
விடற்கரும் வினையறச் சிந்தி மெய்யுயிர்
கடக்கருந் துறக்கமே கலந்த வாமென
உடற்பொறை யுவகையிற் குனிப்ப வொத்தன.

(இலக்குவனது அம்புகள்), அட - அட்டதனால், கரு கவந்தம் - கரு நிறமுள்ள உடற் குறைகள், நின்று ஆடுகின்றன - நின்றாடு பவை, விடற்கு அரு - நீக்கற்கு முடியாத, வினை அற - இருவினை கள் தீரும்படி, சிந்தி - (அவற்றை)ப் போக்கி, மெய் உயிர் - உடலில் இருந்த உயிர்கள், கடக்க அரு - கடத்தற்கு அருமையான, துறக்கமே கலந்த ஆம் என - முத்தி உலகத்தை அடைந்து

விட்டன என்று கருதி, உவகையில் - மகிழ்ச்சியினால், உடல் பொறை குனிப்ப ஒத்தன - உடற் குறைகள் கூத்தாடுவனவற்றை நிகர்த்தன.

கவந்தம் ஆடுதல்: 'பேரொத்த வாயிரம் பேர் மடிந்தாற் பிறக்குங் கவந்தம், நேரொத்த ஆடும்' என்றார் பிள்ளைப் பெருமாளை யங்கார்; இங்கு இலக்குவன் ஆற்றிய போரில் குறையுடலம் ஆடிய தற்கு, தம்முயிர்கள் வினை நீங்கப் பெற்றுத் துறக்கம் புக்கன என்று எழுந்த மகிழ்வே காரணம் என்று குறிக்கப் பெற்றது. வினை ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம் என்ப. நல்வினை தீவினை களுமாம். நில வுலகில் இறைவன் அருளத் தனுகரணம் புவன போகங்களைப் பெற்று வாழுங்கால் துய்ப்பது பிராரத்தம், இது யாவரும் துய்த்தே தீரவேண்டும் என்பர். இவ்வினையைத் துய்க்கும் போதே, மேலும் சில வினைகள் புரிதல் கூடும்; அவை இப்பிறப்பிற் பயன் தராமல், பிறிதொரு பிறவியில் பயன் அளிக்கும். அவற்றை ஆகாமியம் என்பர். வினைகள் ஓர் தொகுதியாகச் சூக்கும உருவில் திகழ்ந்து, ஆன்மாக்கள் பிறக்கும்போது அவற்றைத் தொடா இருப்பது சஞ்சிதம்; இந்த வினைகள் அறவே நீங்கப் பெற்று, இருவினை யொப்பும் மலபரி பாகமும் உற்ற நிலையில், சத்தினி பாதம் உற்று, உயிர்கள் கிரமமாகப் பதமுத்திகளையோ பரமுத்தியையோ பெறும். பதமுத்திகளாவன சாலோகம் சாமீப்யம் சாரூப்யம் என்ப. வினை உள்ளளவும் பிறவியெடுத்தே ஆகவேண்டும்: 'வினைப்போகமே ஒரு தேகம் கண்டாய்' என்றார் பட்டினத்தார்; இங்குக் குறிக்கப்பெற்ற துறக்கம்; வீரசுவர்க்கம். கடக்க அரும் என்றது தொகுத்துக் கடக்கரும் என்றாயது. குனித்தல்; கூத்தாடுதல்: 'கவந்தப் படையும் பல் பேயும், குனிக்கக் குனித்த புருவத்துக் குவமை நீயே கோடியால்' (சுந்தர. 544); ஏதுத்தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. அடற்.

2. இடர்ப்படர்; எம்முயிர், வெவ்வுயிர்.

3. கலந்த வாறென.

4. குனிப்பவொத்தவே, குனித்த தொத்ததே.

1772. ஆடுவ கவந்தமொன் றாறெண் ணுயிரம்
வீடிய பொழுதெனும் பனுவன் மெய்யதேல்
கோடியின் மேலுள குனித்த கொற்றவன்
பாடினி யொருவராற் பகரற் பாலதோ.

ஆறு எண்ணுயிரம் - நாற்பத்தெண்ணுயிரம் பேர், வீடிய பொழுது - மரித்த போழ்தில், கவந்தம் ஒன்று ஆடுவ - ஒரு கவந்தம் கூத்தாடும், எனும் - என்ற, பனுவல் - நூற்கொள்கை, மெய்யதேல் - உண்மையானுல், (அப்போரில்), குனித்த - ஆடிய உடற் குறைகள், கோடியின் மேல் உள - கோடியினும் மிக்குள்ளன; (எனவே) இனி - இனி, கொற்றவன் - வெற்றி வீரனுன இலக்குவ னுடைய, பாடு - பெருமை, ஒருவரால் பகரல் பாலதோ - ஒருவரால் எடுத்துச் சொல்லக் கூடியதோ? ஓ: எதிர்மறை.

ஆறெண்ணுயிரம்: பதினுலாயிரம் என்றும் கொள்வர். இங்குக் குறிக்கப் பெற்ற பனுவல் முதனூலாகிய வான்மீகம். குனித்த கோடியின்மேல் உள என மொழி மாற்றுக.

பி - ம். 1. ஆடின; ஓராறெண்ணுயிரம், எண்ணூறெண்ணுயிரர், எண்ணூறெண் ணுயிரம்.
2. பொழுதினும்; மெய்யதே, மெய்யதோ;
3. மேலுளர்; பொருத; கொற்றவர்.
4. பாடியல்வு, பாடியல், பகரப். 111

1773. ஆனையின் குருதியு மரக்கர் சோரியும்
ஏனைவெம் புரவியி னுதிரத் தீட்டமும்
கானினு மலையினும் பரந்த காற்புனல்
வானயா றுமெனக் கடன் மடுத்தவே.

ஆனையின் குருதியும் - யானைகளின் உதிரமும், அரக்கர் சோரியும் - இராக்கதர்களின் இரத்தமும், ஏனை - மற்றுமுள்ள, வெம் புரவியின் உதிரத்து ஈட்டமும் - விரைந்து செல்லும் குதிரைகளின் செம்புனல் தொகுதியும், கானினும் மலையினும் பரந்த - காட்டிலும் மலையிலும் பரவிய, கால் புனல் - மழைக்கால் பொழிந்த நீரினுல் உண்டாய, வானம் யாறு ஆம் என - ஆகாய கங்கையைப் போன்று, கடல் மடுத்தவே - கடலிற் பாய்ந்தன. ஏ: அசை,

சோரி : சொரிதல் என்ற காரணக் குறி, வெம்புரவி - இங்கே விரைவின் கடுமை. கால்-மழைக்கால்; 'மாலோன் பதியை யரன்பதி நாடிவரினு மழைக்காலோதி பாலின் நிறமே பெறினும்' (தனிப்பா.).

பி - ம். 1. அரக்கர் சேனையும்.

2. இரத்தத் திட்டமும், உதிரவிட்டமும்.

3. வரையினும் ; பொழிந்த ; கார்மழை, கார்புனல்.

4. மானயாறு ; மடுந்தநே. 112

1774. தாக்கிய சரங்களிற் றலைகள் நீங்கிய
ஆக்கைய புரசையோ டணைந்த தாளன
மேக்குய ரங்குசக் கைய வெங்கரி
நூக்குவ கணிப்பில வரக்கர் நோன்பிணம்.

தாக்கிய சரங்களில் - பாய்ந்து மோதிய வாளிகளால், புரசையோடு அணைந்த தாளன - யானைக்கழுத்திற் கயிற்றுடன் சேர்ந்த கால்களை யுடையனவும், தலைகள் நீங்கிய ஆக்கைய - தலைகள துணிக்கப்பெற்ற உடல்களையுமுடைய, அரக்கர் நோன் பிணம் - இராக்கதரின் வலிய சவங்கள், மேக்கு உயர் அங்குசம் கைய - மேலே உயர்த்த அங்குசத்தைப் பற்றிய கையை உடையனவும் ஆகி, வெம் கரி நூக்குவ - கொடிய யானைகளை விலக்குவன, கணிப்பில - கணக்கற்றன.

தலைகள் துணியப்பெற்றும் சினம் தணியாமையின் அங்குசம் கொண்டு யானையை நூக்கின அரக்கர்தம் கரங்கள் என்று வீராவேசத்தை முன் தொடர்புபற்றிக் கூறினர்; (ஒப்பு): 'சிறுவனை நோக்கியும் சிவப்பானுவே' (புறநா. 100); யாக்கை ஆக்கையெனத் திரிந்தது. புரசை-யானையின் கழுத்திடு கயிறு, 'புரசை யானையின் வீதியிற்போகவும்' (சுந்தர. 642); பால. நாக. 7; பெருங்கதை. 3, 20, 64. இது புரோசை எனவும் வழங்கும்: சீவக. 1835. இது தூசம் எனவும் வழங்கும். சீவக. 1602, 1933. மேக்குயர்; 'மேக்குயரு நெடுமூக்கும் மடந்தையர்க்கு மிகையன்றோ' (ஆரணிய. 348); அங்குசம்: யானையை அடக்கும் கருவி. 'பானையும் பண்ணு மங்குசப் பயல் யான்' (தனிப்பா.). நூக்குதல்: விலக்குதல் 'நூக்கலாகலாத காதல்' (ஆரணிய. 643); 'நூக்கிப் புறத்திருபோ

தென்னுமின்னுச் சொல்' (நாலடி. 326); நோன்மை: ஆரணிய. 229; 1116.

பி-ம். 1. நீங்கிய.

2. ஆக்கிய; அனைந்த, அணிந்த; தாளின.

3. அங்குசக் கையர். 113

1775. கோளுடைக் கணைபடப் புரவிக் கூத்தன
தோளுடை நெடுந்தலை துமிந்துந் தீர்கில
ஆளுடைக் குறைத்தலை யதிர வாடுவ
வாளுடைத் தடக்கைய வாசி மேலன.

கோள் உடை - எதிரிகளின் உயிரைக் கொள்ளவல்ல, கணை பட - (இலக்குவனுடைய) அம்பு தைத்ததனால், தோள் உடை நெடுதலை துமிந்தும் - தோளின் மிசையுள்ள நீண்ட தலைகள் அறு பட்டும், வாள் உடை தடகைய - வாளைத் தாங்கிய பெரிய கரத்தை யுடையனவும், வாசி மேலன - குதிரையின்மீது உள்ளனவுமான, ஆள் உடை - காலாள் வீரரின், குறைதலை - தலையற்ற உடற் குறைகள், புரவி கூத்தன - குதிரைகளின் கூத்தினை மேற்கொண்டன வாய், தீர்கில அதிர ஆடுவ - நீங்காது அதிர்ச்சி எழும்படி ஆடுவன.

குதிரைகள் ஆடின: அவற்றின் மிசையிருந்த கவந்தங்களும் அந்த ஆடற்கேற்ப ஆடுவ எனக்கூட்டுக. முதலடியில், 'பருவக் கூற்றனர்' என்ற பாடங்கொண்டு 'உகாந்தத்திற் கொல்லும் யமன் ஒத்தவர்' என்பது பழையவுரை.

பி-ம். 1. புரவிகூத்தன, புரவிக்கூத்தையர், பருவக்கூற்றனர்.

2. துமிந்து, துணிந்து; தீர்ந்தில.

4. மேலென. 114

1776. வைவன முனிவர்சொல் லனைய வாளிகள்
கொய்வன தலைகொளக் குறைத்த லைக்குழாம்
கைவளை வரிசிலைக் கடுப்பிற் கைவிடா
எய்வன வெனைப்பல விரத வீரரே.

வைவன முனிவர் சொல் அனைய - சாபம் தரும் முனிவர்களின் வெகுண்டுகூறும் சொற்களை நிகர்த்த, கொய்வன வாளிகள் - அறுக்கும் இயல்புள்ள அம்புகள், தலைகொள - தலைகளைக் கவர, (பின்னரும்) இரதவீரர் - தேர் வீரரின், குறைதலை குழாம் - கவந்தத் தொகுதிகள், கைவளை - கையினால் வளைக்கப் படுகின்ற, வரிசிலை - கட்டமைந்த வில்லினின்றும், கடுப்பில் கைவிடா - (முன் அமைந்த) வேகத்தை நழுவவிடாமல், எய்வன எனைபல - (வாளிகளை) விடுப்பன மிகப்பல. ஏ : அசை.

வைவன முனிவர் சொல் : அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பலனைத் தரும் முனிவரின் சாபமொழிகள் : இங்கு வெகுண்டு கூறியதைக் குறித்து நின்றது ; யுத்த. 751: உரைக் குறிப்புக் காண்க. திமர் என வெட்டுண்ட நிலையில் கொதிக்கின்ற இரத்தம் தண்மைபெறும் வரையில் உடல் துடி துடிப்புறல் உண்டாகலின், அதனையே கவந்தத்தின் ஆட்டம் என்பர்.

பி - ம். 2. கொய்வனததலைகலைக், தலைகடோன்.

3. சிலைபிடித்த, சிலைகடுப்பிற்.

4. எனப்பலர் நிருதரிட்டமே, இரதமேலன. 115

1777. தாதையைத் தம்முனைத் தம்பி யைத்தனிக்
காதலைப் பேரனை மருக னைக்களத்
தூதையி னொருகணை யுருவ மாண்டனர்
சீதையென் றொருகொடுங் கூற்றந் தேடினர்.

சீதை என்று ஒரு கொடு கூற்றம் தேடினர் - சீதை என்று பேர் படைத்த ஒரு கொடிய யமனைத் தேடிக்கொண்டவரான அரக்கர்கள், தாதையை - தந்தையினையும், தம்முனை - தமையனையும், தம்பியை - தம்பியையும், தனிகாதலை - ஒப்பற்ற காதற்குப் பாத்திரமான புதல்வனையும், பேரனை - பெயரனையும், மருகனை - மருகனையும், களத்து - போர்க்களத்தே, (இலக்குவனுடைய) ஊதையின் ஒரு கணை - வாயு அத்திரமானது, உருவ மாண்டனர் - ஊடுருவிச்செல்ல (தாமும்) இறந்துபட்டனர்.

இங்கு 'புத்திரர் குருக்கள்'யின் பொருவில் கேண்மையர், மித்திரரடைந்துளோர் மெலியர் வன்மையர், இத்தனை பேரையும் இராமன் வெஞ்சரம், சித்திரவதம்செயக் கண்டுதீர்தியோ' (யுத்த. 317); என்ற வீடணன் கூற்று ஒப்பு நோக்கத்தக்கது. தம்முன்; தமையன் : 'அரசனுவாத்தியான் தாய்தந்தை தம்முன்' (ஆசாரக். 16); 'புனைந்த செல்வன் தம்முனோர்' (யுத்த. 441); தம் முனைத் துறந்தது தரும நீதியோ' (யுத்த. 365); காதல் : இங்கே புதல்வன் 'மாருதத்தின் காதலைத்தான்' பேரன் - பாட்டன் பெய ரினைப் பெற்றவன். 'மேதக்க எந்தை பெயரனை யாம்கொள்வோம்' (கலித். 81 : 35); ஊதை : பெருங்காற்றுமாம். அரக்கர் அனை வோரின் அழிவுக்குக் காரணமாகலின் 'சீதையென்றொரு கொடுங் கூற்றம்' எனப்பட்டது. கூற்றம் ஆண்பாலாகவேதான் கூறப் படும். இங்குப் பெண்பாற் கூற்றம் கூறினர்; (ஒப்பு) : 'பெண்டிரிற் கூற்றம் அன்னாள்'. (அயோத்தி. கைகேசி : 79). என்றது காண்க. ஊதையின் ஒருகணை - வாயு அத்திரம்.

பி - ம். 2. காதலன்; பெயரனை.

4. ஒருபெருங்; கூற்றை; தேடியே. 116

1778. தூண்டருங் கணைபடத் துமிந்து துள்ளிய
தீண்டரு நெடுந்தலை தழுவிச் சேர்ந்தன
பூண்டெழு கரதலம் பொறுக்க லாதன
ஆண்டலை நிகர்த்தன வெருவை யாடுவ.

தூண்ட அரு - தூண்டுதல் வேண்டாத, (இயற்கையிலே வேகம் படைத்துள்ள), கணைபட - அம்புதைத்தலின், துமிந்து - அறுபட்டு, துள்ளிய - துடித்த, தீண்ட அரு நெடு தலை - தீண்டற்கியலாத நீண்ட தலையினை, தழுவி சேர்ந்தன எருவை - தழுவிப் பொருந்தியவான கழுகுகள், பூண்டு எழு - (தாம்) மேற் கொண்டு எழும் தன்மை வாய்ந்த, கரதலம் பொறுக்கலாதன-கை யாகிய இடத்தைப் பெறாதனவான, ஆண்டலை நிகர்த்தன ஆடுவ- ஆண்டலை என்னும் பறவையினை ஒத்து எங்கும் திரிவனவாயின.

தற்குறிப்பேற்றவணி : பறவைகட்குக் கைகளின்மையால், 'பூண்டெழு கரதலம் பொறுக்கலாதன' எனப்பட்டது. எருவை: கழுகுவகை. 'வந்தனன் எருவையின் மன்னன்' (ஆரணிய. 896); 'எருவைக்கு முதலாய சம்பாதி' (சுந்தர. 327); ஆண்டலை : ஒரு வகைப்புள் ; 'ஆண்மகன் தலைபோன்ற தலையினையுடைய ஓர் புள் ; 'ஆண்டலைக்கொடி' (திருமுரு. 227); 'ஆண்டலையடுப்பு' (சிலப். 15 ; 221) இவற்றைக் காண்க.

பி-ம். 1. துணிந்து.
2. தழுவச் சேர்ந்தன.
3. பூண்டன. 117

1779. ஆயிர வாயிர கோடி யாய்வரும்
தீயுமிழ் நெடுங்கணை மனத்திற் செல்வன
பாய்வன புகுவன நிருதர் பல்லுயிர்
ஒய்வன நமன்தமர் கால்க ளோயவே.

ஆயிரம் ஆயிர கோடியாய் வரும் - பல் ஆயிரக் கோடியளவில் (வில்லினின்று) வெளிப்படுவனவும், மனத்தில் செல்வன - மனம் போல வேகமாகச் செல்வனவும், பாய்வன - பாய்வனவும், புகுவன - உடலில் நுழைவனவுமான, தீ உமிழ் நெடுகணை - நெருப்பினைக் கக்குகின்ற பெரிய அம்புகள், நிருதர் பல்உயிர் - அரக்கர் பலரின் உயிர்களும், நமன் தமர் கால்கள் ஒயவே - யம படர்களின் கால்கள் களைக்குமாறு, ஒய்வன - ஒழிவனவாயின. ஏ - அசை.

தீயுமிழ் நெடுங்கணை - ஆக்னேயாத்திரம். மனத்திற் செல்வன : 'மானுருவாக நின்மனம் பூட்டினையோ' (அகநா. 384); நமன் தமர் கால்கள் ஓயவே ; 'கொடுமாமறலி தூதாளும் கொன்றிளைத் தான்' (திருக்கருவை. கலித். அந். 96) : ஓய்தல் - மூச்சற்று ஒழிதல்.

பி-ம். 1. ஆயிரமாயிரங்.
2. கொடுங்கணை.
3. பாய்வனபடுவன.
4. ஓய்வில ; ஓய்வன, ஒடியே. 118

இங்கு அதிகப்பாடல்கள் :—

தீயுமிழ் கடுங்கணை யுயிரைத் தின்பன
வாயினு மனத்தினு முகத்தும் செல்வன
நேயம்விட் டியங்கிடு நிருதர் பல்லுயி
ரோய்வன நமன்றமர் தூறெதா டோடுவ. 1

இலக்குவக் கடவுடன் ஏவின் மாரியால்
விலக்கரும் கரிபரி யிரதம் வீரரென்
றுலப்பரும் வெள்ளமாஞ் சேனை யொன்றற
நிலைப்படச் சாய்ந்தமை நிகழ்ந்த போதிலே. 2

**1780. விளக்குவான் கணைகளால் விளிந்து மேருவைத்**
**துளக்குவா ருடற்பொறை துணிந்து துள்ளுவார்**
**இளக்குவா ரமரர்தஞ் சிரத்தை யெண்முது**
**குளுக்குவாள் நிலமகள் பிணத்தி னோங்கலால்.**

மேருவை துளக்குவார் - மேரு மலையையும் அசைக்கக் கூடிய (ஆற்றல் வாய்ந்த) அரக்கர்கள், விளக்குவான் கணைகளால் - ஒளி விடுகின்ற (இலக்குவனுடைய) சரங்களால், விளிந்து - மரித்து, உடல்பொறை துணிந்து - உடலாகிய சுமை பிளக்கப்பட்டு, துள்ளு வார் - துடிதுடிப்பாராயினர்; (அது நோக்கி), அமரர்தம் சிரத்தை இளக்குவார் - தேவர்கள் தமது தலைகளை அசைப்பாராயினர்; பிணத்தின் ஓங்கலால் - பிணமலையால், எண் நிலமகள் - நன்கு மதிக்கத்தக்க பூதேவியானவள், முதுகு உளுக்குவாள் - முதுகு நெளிவாளாயினள்.

விளக்கு வான்கணை - தீபம் போன்று ஒளிவிடும் அம்புகள். இளக்குதல் - அசைத்தல்; 'வெளிலிளக்கும் களிறுபோல் (பட்டினப். 172); முதுகுளுத்தல்; 'நில முதுகுளுக்கிக் கீழுற' (பால. கார் முகப்) 10); நிலத்தை மகளாகக் கூறுவது கவிமரபு; மற்றும் பூமி தேவி திருமால் மனைவிமார்களுள் ஒருத்தியாதலும் காண்க; 'நில மகள் முகமோ திலகமோ' (பால. நகரப். 2).

பி - ம். 2. துன்னுவார், துள்ளலால்.
3. இளக்குவான்; சிரத்தையேன்.

## தாருகன் இலக்குவனோடு எதிர்த்து இறத்தல்

1781. தாருக னென்றுள னொருவன் தானெடு
மேருவின் பெருமையா னெரியின் வெம்மையான்
போருவந் துழக்குவான் புகுந்து தாங்கினன்
தேரினன் சிலையின னுமிழுந் தீயினன்.

தான் நெடு மேருவின் பெருமையான் - தான் உயர்ந்த மேருமலை போன்ற பெருந்தோற்றம் உடையவனும், எரியின் வெம்மையான் - தீப்போன்ற வெம்மையுடையவனுமாகிய, தாருகன் என்று உளன் ஒருவன் - தாருகன் என்று உள்ளவனை ஒருவன், போர் உவந்து உழக்குவான் புகுந்து - போரிடத்து மகிழ்ந்து கலக்கப்புக்கு, தேரினன் - தேரின்மீது இருந்தவனாய், சிலையினன் - வில்லைக் கையில் தாங்கி, உமிழும் தீயினன் - கண்ணினின்று அனல் பொறியைக் கக்குகின்றவனாய், தாங்கினன் - (இலக்குவனுடன்) எதிர்த்து நின்றான்.

தாருகன் : அதிகாயன் மந்திரி. உயரமும் திண்மையும் சலிக்காத தன்மையும் பற்றி, மேரு தாருகனுக்கு உவமை. உழக்குவான் - வானீற்று வினையெச்சம்.

பா - ம். 1. தாருகன் ; தன்னெடு.

2. எரியுப் ; வெய்யவன், வெண்மையான்.

3. போரில் வந்து ; ஒழுகுவான், வழல்குவான் ; தாக்கினன். 120

1782. துரந்தன னெடுஞ்சர நெருப்பின் தோற்றத்த
பரந்தன விசும்பிடை யொடுங்கப் பண்டுடை
வரந்தனின் வளர்வன வவற்றை வள்ளலும்
கரந்தனன் கணைகளான் முனிவு காந்துவான்.

பண்டு உடை வரம் தனில் வளர்வன - முன்னர் (த்தான்) பெற்றுள்ள வரத்தினாலே மிகுவனவும், நெருப்பின் தோற்றத்த - நெருப்பின் தோற்றத்தை யுடையனவுமான, நெடு சரம் - நெடிய அம்புகளை, (தாரகன்) துரந்தனன் - ஏவினன் ; விசும்பிடை ஒடுங்க - (அவை) விண்ணின் பரப்பும் அளவில் குறுகும்படி, பரந்தன - எங்கும் பரவின : அவற்றை - அந்த வாளிகளை, வள்ளலும் - இலக்குவனும், முனிவு காந்துவான் - கோபத்தால் (மனம்) கொதித்

தவனாய்(த் தன்), கணைகளால் - சரங்களால், கரந்தான் - மறையு மாறு செய்தான்.

பி - ம். 1. துரந்தன ; சுடுசரம்.

2. விசும்பெலாம்.

3. அவற்றை வானவன். 121

இங்கு அதிகப்பாடல்கள் :—

காந்திய வரக்கனுங் கணையின் மாரிகள்
பாய்ந்திடப் பருஞ்சிலை விசையிற் பற்றினான்
மாய்ந்தது குரங்கது கண்டு மாமறை
வேந்தனுக் கிளவலும வெகுளி வீங்கவே. 1

கார்முக விசையுறுங் கணையின் மாரியால்
பாரவெஞ் சிலையறுத் தவன்றன் பரய்பரித்
தேரினைப் பாகனோ டழியச் சிந்திமற்
றோர்கணை யவன்சிரம் உருளத் தூண்டினான். 2

1783. அண்ணல்தன் வடிக்கணை துணிப்ப வற்றவன்
கண்ணக னெடுந்தலை விசையிற் காரென
விண்ணிடை யார்த்தது விரைவின் மெய்யுயிர்
உண்ணிய வந்தவெங் கூற்று முட்கவே.

அண்ணல் தன் - பெருமை சான்றவனான இலக்குவனுடைய, வடிகணை - கூரிய அம்புகள், விசையில் துணிப்ப - விரைந்து அறுப்ப, அவன் - அந்தத் தாருகனுடைய, கண் அகல் நெடுதலை- இடம் அகன்ற நெடியதலை, அற்று - துணிபட்டு, விரைவின் - விரைவாக, மெய் உயிர் உண்ணிய வந்த - உடற்கண் உள்ள உயி ரினைப் பருகுதற்குவந்த, வெம்கூற்றும் உட்க - கொடிய யமனும் அச்சுறும்படி, கார்என விண் இடை ஆர்த்தது - மேகம் போன்று வானத்தில் பெருமுழக்கம் செய்தது. ஏ - அசை.

அறுபட்ட தலை யமனும் துஞ்சுமாறு ஆர்ப்பரித்தது. தலை: தாருகன் தலை,

பி - ம். 1. அற்றன.

3. ஆர்த்தன ; வெவ்வுயிர். 122

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

தாருக னெனும்படைத் தலைவன் தன்வயப்
போரழிந் தவனுயிர் பொன்றி ஞனெனக்
கார்நிற வரக்கர்கள் கனலிற் பொங்கியே
வீரனை வளைத்தனர் வெகுளி மிக்குளார்.

### பின்பு காலன் முதலிய ஐவர் பொரவந்தாராக இலக்குவன் எதிர்த்தழித்தல்

1784. காலனுங் குலிசனுங் கால சங்கனும்
மாலியு மருத்தனு மருவு மைவரும்
சூலமுங் கணிச்சியுங் கடிது சுற்றினர்
பாலமும் பாசமு மயிலும் பற்றுவார்.

(பின்னர்) காலனும் குலிசனும் காலசங்கனும் - காலன் குலிசன் காலசங்கன், மாலியும் மருத்தனும் - மாலிமருத்தன் (என்று), மருவும் ஐவரும் - பொருந்திய ஐவரும், சூலமும் - சூலப் படையையும், கணிச்சியும் - மழுப்படையையும், கடிது சுற்றினர் - விரைந்து சுழற்றுபவரும், பாலமும் பாசமும் அயிலும் பற்றுவார் - பிண்டிபாலம் பாசாயுதம் வேல் என்னும் படைக்கலங்களைக் கைப்பற்றுபவர்களும் ஆனர்கள்.

ஐந்து வீரர்களைக் கூறி ஐந்து போர்க்கருவிகளைக் கூறினர். அக்கருவிகளை ஐவர்க்கும் நிரைநிரையாகக் கொள்க. பாலம்: பிண்டிபாலம்.

பி - ம். 1. காலன் ; காலசங்கனும்.
2. மருவுவார்கடாம்.
3. பாலமும் ; பற்றினர்.
4. ஆலமும் பாசமும், சூலமும் ஆலமும் ; தூவுவார், தூவுவான், பற்றினர் ; தாவுவார். 123

1785. அன்னவ ரெய்தன வெறிந்த வாயிரம்
துன்னரும் படைக்கலந் துணித்துத் தூவினன்
நன்னெடுந் தலைகளைத் துணித்து நால்வகைப்
பன்னெடுந் தானையைப் பாற நூறினன்.

அன்னவர் - அவர், எய்தன - விடுத்தனவும், எறிந்த - வீசி னவுமான, ஆயிரம் - ஆயிரக்கணக்கான, துன்னரும் - நெருங்கு தற்கரிய, படைகலம் - போர்க்கலங்களை (இலக்குவன் ஏவிய அம்பு களைத்), தூவினன் துணித்து - பரப்பினவனாய் அறுத்து, நல்நெடு- நல்ல நீண்ட, தலைகளை துணித்து - (அவர்கள்) தலைகளை வெட்டி, நால்வகை பல்நெடு தானையை பாற நூறினான் - நான்கு வகைப் பட்ட பலவான பெரிய சேனையைச் சிதறும்படி நுறுக்கினான்.

பி - ம். 2. துணியத் ; தூவின தூவினர்.

3. தலைகளும் தடிந்து. 124

## அப்போது அதிகாயன் சேனையோர் இலக்குவனை வளைந்து பொருதல்

1786. ஆண்டதி காயன்தன் சேனை யாடவர்
ஈண்டின மதகிரி யேழெண் ணாயிரம்
தூண்டினர் மருங்குறச் சுற்றி னார்தொகை
வேண்டிய படைக்கல முறையின் வீசுவார்.

ஆண்டு - அப்போது, அதிகாயன் தன் - அதிகாயனுடைய - சேனை ஆடவர் - சேனைவீரர், ஈண்டின மதகிரி - நெருங்கின மதமலை, ஏழ்எண்ணாயிரம் - ஐம்பத்தாறாயிரத்தை, தூண்டினர் - செலுத்தி, மருங்கு உறசுற்றினார்-அருகே வளைத்து பொருந்தச் சூழ்ந்தவராய், தொகை - திரளாகிய, வேண்டிய படைக்கலம் முறையின் வீசுவார்- (தாம்) விரும்பிய போர்க்கருவிகளைப் போர் முறைக்கேற்ப எறிபவ ராயினர்.

ஆண்டு - அவ்விடத்தில் எனினுமாம். மதகிரி - யானை ; வெளிப்படை ; மதமலை, நடைமலை முதலியன காண்க. வேண்டிய: காலம் இடங்கட்கேற்ப எறிய வேண்டுவன.

பி - ம். 1. ஆண்டவர், ஆண்டவை.

2. ஈண்டினர்.

3. தொக.

4. மழையின், மலையின் ; வீசினர். 125

1787. போக்கிலா வகைபுறம் வளைத்துப் பொங்கினர்
தாக்கினர் திசைதொறுந் தடக்கை மால்வரை
நூக்கினர் படைகளால் நுறுக்கி னர்குழும்
பாக்கினர் கவிகள்தங் குழுவை யார்ப்பினல்.

(குரங்கு வீரர்கள்), போக்குஇலா வகை - பிழைத்துப் போக வியலாத வகையில், புறம் வளைத்து பொங்கினர் - பக்கம் எல்லாம் வளைத்து (மனம்) கொதித்தவராய், (அதிகாயன் சேனையோர்), தாக்கினர் - தாக்கி, திசைதொறும் - திக்குகள் தோறும், தடகை மால் வரை - பெரிய கைகளையுடைய உயர்ந்த மலை போன்ற யானைகளை, நூக்கினர் - செலுத்தினர்; படைகளால் - படைக்கலங்களால் நுறுக்கினர் - தகர்த்தவராய், ஆர்ப்பினல் - பெருமுழக்கத்துடன், கவிகள் தம் குழுவை, குழம்பு ஆக்கினர் - குரங்குத் தொகுதிகளைச் சேருக்கினர்.

வளைத்தல் : உழிஞைத்திணை. தடக்கை மால்வரை; உவம வாகுபெயராக யானையைக் குறித்தது. நூக்குதல் - செலுத்துதல்.

பி - ம். 1. பகை, வகையுற.

3. நூக்கினர்; படைகளை, படைக்கலம். 126

1788 எறிந்தன வெய்தன வெய்தி யொன்றுடொன்
றறைந்தன வசனியின் விசையி னுசைகள்
நிறைந்தன மழையென நெருக்கி நிற்றலான்
மறைந்தன வுலகொடு திசையும் வானமும்.

எறிந்தன - (வாநரர்கள்) வீசிய மலைகளும், எய்தன - (அரக்கர்கள்) விடுத்த அம்புகளும், எய்தி - புறப்பட்டு வந்து, ஒன்றெடு ஒன்று அறைந்தன - தம்முள் (ஒலியுண்டாக்குமாறு) தாக்கினவாய், அசனியின் விசையின் - இடிபோன்ற வேகத்துடன், ஆசைகள் நிறைந்தன - திக்குகளில் நிறைந்தனவாகி, மழை என நெருக்கி நிற்றலான் - மேகம்போன்று அடர்ந்து நிற்றலின், உலகொடு

திசையும் வானமும் - உலகங்களுடனே திசைகளும் ஆகாயமும், மறைந்தன - கட்புலனாகாதொழிந்தன.

மலைகள் அம்புகள் என்றவைகட்கேற்ப எறிந்தன எய்தன எனப்பட்டது, அசனி - இடி; (ஆரணிய. 580). ஆசை : திக்கு : 'ஆசைகள் சுமந்த பேரளவில் யானையின்' (ஆரணிய. 848).

பி - ம். 1. வெந்தன.
2. விசையா வாரியின், விசையா வாரைகள்.
4. உலகமும் திசையும். 127

## இலக்குவன் எதிரிகளைத் தாக்கி யானைப்படைகளை வெல்லுதல்

1789. அப்படை யனைத்தையு மறுத்து வீழ்த்தவர்
துப்புடைத் தடக்கைகள் துணித்துச் சுற்றிய
முப்புடை மதமலைக் குலத்தை முட்டினன்
எப்புடை மருங்கினு மெரியும் வாளியான்.

எரியும் வாளியான் - எரிகின்ற அம்புகளை உடையவனான இலக்குவன், (எதிரிகள் வீசிய) அ படை அனைத்தையும் - அந்தப் போர்க்கருவிகளை எல்லாம், அறுத்து வீழ்த்து - துணித்துத் தள்ளி, அவர் துப்பு உடை - அவருடைய வன்மை வாய்ந்த, தட கைகள் துணித்து - பெரிய கைகளை வெட்டி, சுற்றிய - தன்னை வளைந்துகொண்ட, மு புடை மதம் குலத்தை - முத்திறத்தவான மதம் செறிந்த யானைக்குழாங்களை, எ புடை மருங்கினும் முட்டினன் - எல்லாப் பக்கங்களிலும் தாக்கினன்.

முப்புடை மதம் : கன்ன கபோலகோசமதங்கள். மதமலை : உவமவாகுபெயர்.

பி - ம். 1. வீழ்த்துவார்.
2. துப்புடைக் கைகடாள்.
4. எப்படை ; வாளியால், 128

## வேறு

1790. குன்றன மதகரி கொம்பொடு கரமற
வன்றலை துமிதர மஞ்சென மறிவன
ஒன்றல வொருபது மொன்பது மொருகணை
சென்றரி தரமழை சிந்துவ மதமலை.

ஒருகணை சென்று அரிதர - (இலக்குவன் விடுத்த) ஓர் அம்பு சென்று சேதித்தலால், குன்றுஅன மதகரி - மலையை யொத்த யானைகள், கொம்பொடு கரம் அற - கொம்புகளுடனே துதிக்கைகள் வெட்டுப்பட, வல்தலை துமிதர - வலிய தலை அறுபட்டு, மஞ்சுஎன மறிவன - மேகம் ஒப்ப வீழ்ந்து கிடப்பவை, ஒன்று அல - ஒன்றல்ல, மதமழை சிந்துவ - மதமழை பொழிவனவான, மலை - மலைபோன்ற அவ்யானைகள், ஒருபதும் ஒன்பதும் - பத்தும் ஒன்பதுமாகும்.

இலக்குவன் எய்த சரங்கள் ஒன்பதும் பத்துமாக மதயானைகளை விழச்செய்தன. குன்றன; அன உவமவுருபு. கொம்பு - தந்தம்; கரம் - துதிக்கை. துமிதர அரிதர: தர துணைவினை. மஞ்சு - மேகம்; 'மஞ்சௌத் திரண்டகோல மேனிய' (கிட்கிந்தா. 68): 'மஞ்சொக்கும் அளகவோதி' (ஆரணிய. 623).

பி - ம். 1. குன்றெனும்.
3. ஒன்றின பஃதுமொ ரொருபதும், ஒன்றென ஒருபது மொன்பதும்.
4. சென்றெரிதர, சென்றெதிர்தர; சென்றன சரம்; சிந்தின. 129

1791. ஒருதொடை விடுவன வுருமுறழ் கணைபட
இருதுடை புரசையொ டிறுபவ ரெறிபடை
விருதுடை நிருதர்கண் மலையென விழுவர்கள்
பொருதுடை வனமத மழையன புகர்மலை

ஒரு தொடை - ஒரு தொடுப்பினில், விடுவன - எய்வனவான, உரும் உறழ்கணை பட - இடியை ஒத்த அம்புகள் தைப்பதனால், எறிபடை - வீசுகின்ற போர்க்கருவிகளையும், விருது - விருதுகளையும், உடை - உடைத்தாயிருந்த, நிருதர்கள் - அரக்கர்கள், இரு துடை - (தமது) இரண்டு துடைகளும், புரசையொடு இறுபவர் -

யானைக் கழுத்திடு கயிற்றுடன் துணிக்கப் பட்டவராய், மலை என விழுவர்கள் - மலை போன்று வீழ்பவராயினர்; மதம் மழை அன - மதநீர் மழையை ஒத்திருக்கப்பெற்ற, புகர் - விளங்குகின்ற, மலை - மலைபோன்ற (அவர் ஏறிய) யானைகள், பொருது உடைவன - போர் புரிந்து (தாமும்) உயிர் நீங்கப் பெறுவன.

ஒருதொடை விடுவன; (ஒப்பு): 'தொடுப்பி னாயிரம்' (மதுரைக் காஞ்சி. *11*). புரசை: யுத்த. *1774* உரைக்குறிப்புக் காண்க. விருது - வீரர்க்குரிய பட்டம்; 'தலம்புகழ் விருது' (திருவால. *46 : 9*); புகர்; புள்ளியுமாம்; வி. பா. *16*ஆம் போர் *7*.

பி - ம். 1. எருவன.
2. அறுபவர்.
4. மதமலையன, மதமழையென. 130

1792. பருமமும் முதுகிடு படிகையும் வலிபடர்
மருமமு மழிபட நுழைவன வடிகணை
உருமினும் வலியன வுருள்வன திசைதிசை
கருமலை நிகர்வன கதமலை கனல்வன.

கனல்வன கதமலை - பொங்கி யெழுவனவான சினமிக்க யானைகள், உருமினும் வலியன வடிகணை - இடியைப் பார்க்கிலும் வலிமை வாய்ந்த கூரிய அம்புகள்; நுழைவன - புகப்பெற்றனவாகி, பருமமும் - தமது கல்லணையும், முதுகிடு படிகையும் - முதுகில் அமைக்கப்பெற்ற அம்பாரியும், வலிபடர் மருமமும் - வலிமைமிக்க இரகசியத்தானமும், அழிபட - கெட்டழிய, திசை திசை உருள்வன - திசைகள் தோறும் உருண்டு, கருமலை நிகர்வன - கரிய நிறம் வாய்ந்த மலையை ஒத்தன.

பருமம் - யானைச் சேணம், 'பருமங்களையாப் பாய்பரிக் கலிமா' (நெடுநல். *179*); பருமம் - யானை மேலிடும் தவிசு; இதனை அம்பாரி என்ப: (சீவக. *203*); உரைக்குறிப்புக் காண்க. மருமம் - அண்டகோசம்: உயிர் நிலையுமாம். தாக்குவதாலும் வலியானும்

உரும் உவமை. கருமலை; 'கருமலை செம்மலையன்ன காட்சியர்' (ஆரணிய. *191*).

பி - ம். 1. முதுகிடை.

2. வழிபட.

3. உருமெனும், உருமென; உருவின.

4. களியுடை, களிமலை; தனிமலை, மதமலை. 131

1793. இறுவன கொடியவை யெரிவன விடையிடை
துறுவன சுடுகணை துணிவன மதகரி
அறுவன வவையவை கடவினர் தடிதலை
வெறுமைகள் கெடுவன விழிகுழி கழுதுகள்.

எரிவன - எரியும் இயல்பினவும், இடை இடை துறுவன - ஆங்காங்குப் பல விடங்களில் (இலக்குத் தேடி) அணுகுவனவுமான, சுடுகணை - (இலக்குவன் விடுத்த), சுடக் கூடிய சரங்களால், கொடி அவை இறுவன - தம்மீது பொருத்தப் பெற்ற கொடிகள் துணிவனவாக, மதகரி துணிவன - மத யானைகள் துண்டு பட்டன; அவை அவை கடவினர் தடிதலை அறுவன - (அன்றியும் அந்த அந்த வேழங்களைத் தூண்டிச் செலுத்திய பாகரின் பருத்த தலைகளும் அறுபட்டன; (அதனால்) விழி குழி கழுதுகள் - (பசியால்) விழி குழியப்பெற்ற பேய்கள், வெறுமைகள் கெடுவன - தாம் ஊனின்றி வறிதாயிருந்த நிலைதீரப் பெற்றனவாயின.

வெறுமை - வறிதான நிலை: 'வெறுமை யிடத்தும் விழுப் பிணிப் போழ்தும்' (நாலடி. *369*); கழுது - பேய்; கழுதொடு காட்டிடை நாடகமாடி' (திருவாசக. திருச்சதகம். *7*).

பி - ம். 1. கொடியன, எறிவன.

3. கடவின ரவரொடு; மதமலை, கடிதலை, அமைதலை, அடிதலை. 132

1794. மிடலொடு விடுகணை மழையினும் மிகையுள
படலொடு முருமெறி பருவரை நிலையன
உடலொடு முருள்கரி யுதிரம துருகெழு
கடலொடு பொருதது கரியொடு கரியென.

மிடலொடு - வலிமையுடனே, விடுகணை - விடுக்கப்பட்ட வாளி கன், மழையினும் மிகை உள படலொடும் - மழையை விட அதிக மாக உள்ளவை தைத்தலோடும், உரும் எறி பருவரை நிலையன - இடிதாக்கப்பெற்ற பெரிய மலையின் தன்மையையுற்றனவாய், உடலொடும் உருள்கரி உதிரம் அது - உடலோடும் உருண்டு கீழ் வீழ்ந்த யானைகளின் இரத்தம், கரி யொடு கரி என - யானையோடு யானை பொருவது போன்று, உரு கெழு - அச்சம் பொருந்திய, கடலொடு பொருதது - கடலுடன் எதிர்த்துப் போரிட்டது,

தற்குறிப்பேற்றவணி: உதிரம் கடலுடன் மோதித்தாக்குதற்குக் கரியொடு கரிபொருவது உவமை: உரும் எறி பருவரை இவ்வாசிரி யரால் பல இடங்களிலும் குறிக்கப்பெறும். உதிரமது; அது பகுதிப் பொருள் விகுதி; 'உரு எழுகடல் என்பதற்கு ஆதித்த னால் உருகிப் பொங்கும் கடல்' என்பது பழையவுரை.

பி - ம். 1. மிகையன, மிகுவன.
2. உருமுறழ்; நிரையன, நிலையென, நிரையென.
3. உருள்நிரி யுரமது வுருகெழு.
4. கரியொடு கரியினம். 133

1795. மேலவர் படுதலின் விடுமுறை யிலமிடல்
ஆலமு மசனியு மனையன வடுகிரி
மாலுறு களியன மறுகின மதமழை
போல்வன தமதம வெதிரெதிர் பொருவன.

மேலவர் படுதலின் - யானை மீதிருந்த பாகர் மரித்தலின், விடும் முறை இல - முறைமையாக நடத்தப் பெறுதல் இல்லாதனவும் (தமது இச்சைப்படிச் செல்வனவும்), மிடல் ஆலமும் - வலிய ஆல கால விடமும், அசனியும் - இடியும், அனையன - போல்வனவுமான, அடு - கொல்லும் இயல்புள்ள, கிரி - (மலையொத்த) யானைகள், மால் உறுகளியன - மயக்கம் மிகுகின்ற மதக் களிப்பினை யுடையனவாகி, மறுகின - கலங்கி, மதம் மழைபோல்வன - (தம்) மதமழை ஒப்பன வாக, தம தம எதிர் எதிர் பொருவன - தங்களுக்குள்ளே எதிரெதி ராகப் போர் புரிவன,

ஆலம் கொல்லும் தன்மையாலும் காட்சிக் கடுமையாலும், அசனி பேரோசையினாலும் யானை கட்குவமை, மாலுறு - 'மாலுறு

பிறவி நோய்க்கு மருந்தென வணங்கு மைந்த' (கிட்கிந்தா. 376); அடக்கிச் செலுத்தும் பாகர் இறந்து பட்டமையின், பொருவது இன்னாருடன் என்று புரியாமல் மத மிகுதியால் யானைகள் தம்மினத்து யானைகளுடன் போர் புரிவனவாயின.

பி-ம். 1. மடிதலின்.

2. அனையவன்; எனவழல்; விடுகரி.

3. மாஞுறு கிரியினின், கரியினின்.

4. தமதமறு, தமதமர்; மதகரி; பொருதன. 134

1796. கால்சில துணிவன கரமறு வனகதழ்
வால்சில துணிவன் வயிறுகள் வெளிப்பட
நால்வன குடரன் நகழ்வன சிலவரு
தோல்சில கணைபல சொரிவன் மழையன

மழை அன - பிளிறுவதால் மழையை யொத்தனவாய், பல கணை சொரிவன-பல அம்புகள் தம்மீது பெய்யப்பெற்றனவான, சில வருதோல் - சில வளரும் இயல்புள்ள யானைகள், கால் துணிவன - கால் அறுபடுவன; கரம் அறுவன - துதிக்கைகள் துணிக்கப்படுவன: சில கதழ்வால் துணிவன - சில விரைகின்ற வால்கள் வெட்டுண்பன; சில வயிறுகள் வெளிபட - சில வயிறுகள் வெளித்தோன்றுமாறு, நால்வன - தொங்குகின்றனவான, குடரன - குடருடையன; சில நகழ்வன - சில தோல் வழண்டு போவன.

'மழை எனக் கணைபல சொரிவன' என்ற தொடரைச் சில என்பவற்றுடன் எல்லாம் இயைத்து பொருள் கொள்க. சொரிவன-சொரியப்பட்டன. தோல் - யானை.

பி-ம். 3. நால்சில; குடர்சில, குடரின; சிலசில, சிலபொரு.

4. மழையின. 135

1797. முட்டின முட்டற முரணுறு திசைநிலை
எட்டினு மெட்டரு நிலையன வெவையவன்
விட்டன விட்டன விடுகணை படுதொறும்
பட்டன பட்டன படர்மத கரிபல.

முரண் உறு-(தாம்) மோதுதலைப் பொருந்திய, திசை நிலை எட்டினும் முட்டின-எட்டுத் திசைகளிலும் (சென்று) தாக்கியன வான (இலக்குவனுடைய) சரங்களால், முட்டு அற-மோதுத லின்றி, எட்ட அரு நிலையன-நீண்டுதற்கு அருமையான நிலை யினையுற்ற யானைகள், எவை-யாவை; (எவையுமில்லை); அவன்-அந்தஇலக்குவன், விட்டன விட்டன-விடாமல் எய்தனவாய், விடுகணை-ஏவப்படும் அம்புகள், படுதொறும்-தைக்குந்தோறும், படர் மத கரி பட்டன பட்டன-(எதிர்ந்து) வருகின்ற பலதிறப் பட்ட மதவேழங்கள் மிகவும் இறந்தன.

விட்டன விட்டன, பட்டன பட்டன என்ற அடுக்குகள் மிகுதி யைக்குறித்து நின்றன. படர் மதம்-பரவுகின்ற மதம் எனினுமாம்.

பி-ம். 1. முட்டின.

2. எட்டின வெட்டின, எட்டினு மெட்டற, நிலையின, நிலையென; எவை யவர், எவையெவை; அவரவை, அவையவை.

4. படுமதகரி, படமதகரி. 136

### மீண்டும் பகைவர் எதிர்க்க, இலக்குவன் வென்றமை கூறும்

1798. அறுபதின் முதலிடை நாலொழி யாயிரம்
இறுதிய மதகரி யிறுதலு மெரியுமிழ்
தறுகணர் தகையறு நிலையினர் சலமுறு
கறுவின ரவனெதிர் கடவினர் கடலென.

அறுபதின் முதல் இடை நால் ஒழி ஆயிரம் இறுதிய-ஐம்பத் தாறுயிரம் என்ற எண்ணிக்கையுள்ள, மதம் கரி இறுதலும்-மதயானை ஒழிந்திடலும், எரி உமிழ்-நெருப்பினைக் கக்குகின்ற, தறு கணர்-வெகுண்ட விழியாரும், தகை அறு நிலையினர்-நற்பண்பற்ற நிலையினை யுடையவரும், சலம் உறு கறுவினர்-சினம் பொருந்திய தீராப்பகையினைக் கொண்டவருமான அரக்கர், அவன் எதிர்-அந்த இலக்குவன் முன்பு, கடல் என-கடல்போன்று, கடவினர்-(யானைப்படையையே மீண்டும்) செலுத்தினர்.

அறுபதின் முதல் ஆயிரம்-அறுபது என்பதை முதலாகக் கொண்ட ஆயிரம்; அறுபதினாயிரம். இடை நால் ஒழி (ஆயிரம்)-

பின்னிட்ட நாலாயிரம் என்ற எண்ணைக் கழித்து, இறுதியிலுடைய கரி ஐம்பத்தாறாயிரம் என்க. இவ்விரண்டாம் முறை செலுத்திய யானைப்படைகளின் தொகை, நூறாயிரம் என்பது 148 ஆவது செய்யுளால் விளங்கும். தறு கணர் - அஞ்சாமையுடன் கூடியவர் எனினுமாம். சலம் - தணியாக் கோபம்.

பி - ம். 1. அறுபது முதலினொடாறமை, அறுபது முதலினொடாறவை.
2. இறுவிய.
3. தறுகணை : 'தகைவரு நிலையன, நிலையென.
4. எதிரெதிர், வரையெதிர். 137

1799. எல்லையின் மதகரி யிரவின தினம்நிகர்
செல்வன முடிவில தெறுதொழின் மறவனை
வில்லியை யினிதுற விடுகணை மழையினர்
கொல்லுதி யெனவெதிர் கடவினர் கொடியவர்.

கொடியவர் - கொடுமைவாய்ந்த அரக்கர்கள், இனிது உற - எளிதாக, விடு கணை மழையினர் - அம்புகளை மழை என்னும்படி செலுத்துபவராய், முடிவு இல தெறு தொழில் மறவனை - முடிவின்றி அழிக்கும் வினையை மேற்பூண்ட வீரனும், வில்லியை - வில்லாளியுமான இலக்குவனைப் பார்த்து, 'கொல்லுதி - கொல்வாயாக', என - என்று பகர்ந்தவண்ணம், இரவினது இனம் நிகர் செல்வன - இருளின் தொகுதியை ஒத்துச்செல்வனவான, எல்லையில் மதகரி - எண்ணிறந்த மதயானைகளை, எதிர் கடவினர் - எதிராகச் செலுத்தினர்.

கருநிறத்தனவாகலின் இரவினது இனம் எனப்பட்டது. இனிது, எளிது என்ற பொருளது. தெறு தொழில், விடுகணை ; வினைத்தொகை. கொடியவர் - அரக்கர். மறவன் - இலக்குவன்.

பி - ம். 1. இமகிரிநிகர்வன, விரவினவிளனிகர், எறும்வலி விரைவொடு.
2. முடிவில ; மறமுறம், மறவினை.
3. இனிவிடு, இனியிது ; கணைமழை ; எனவெமைக், எனவிமை, மழையெனக், மழையன. 138

1800. வந்தன மதகரி வளைதலின் மறைபொதி
செந்தனி யொருசுட ரெனமறை திறலவன்
இந்திர தனுவென வெழுசிலை குனிவுழி
தந்தியி னெடுமழை சிதறின தரையினில்.

வந்தன மதகரி வளைதலின் - வந்தனவான மதவேழங்கள் சூழ்வதனால், மழை பொதி - மேகத்தால் மூடப்பெற்று, செம் - செந்நிறம் வாய்ந்த, தனி ஒரு - மிகவும் ஒப்பற்ற, சுடர் என - கதிரவன் ஒத்து, மறைதிறலவன் - மறைக்கப்பெற்ற வல்லபம் உடையவனான இளையபெருமாள், இந்திர தனு என - இந்திர வில்லைப்போன்று, எழு சிலை - அம்பு வெளிப்படுகின்ற வில்லினை, குனிவுழி - வளைத்தபோழ்தே, தரையினில் தந்தியின் நெடுமழை சிதறின - தரையினிடத்து யானைகளாகிய நெடிய மேகங்கள் சிதறுண்டன.

இந்திர தனு - வானிடுவில்; இந்திரவில், இலக்குவன் வில்லுக்கு. தந்தி - தந்தத்தையுடையது என்று யானைக்குக் காரணக்குறி. யானைகளால் மறைக்கப்பட்ட இலக்குவனுக்கு மழை மறைத்த சூரியன் உவமை.

பி - ம். 1. மலைதிறலவன்.

3. குனிவழி, குனிதலும்.

4. தரையன, தரையின. 139

வேறு

1801. மையல்தழை செவிமுற்பொழி மழைபெற்றன மலையின்
மெய்பெற்றன கடலொப்பன வெயிலுக்கன விழியின்
மொய்பெற்றுயர் முதுகிற்றன முகமுக்கன முரண்வெங்
கையற்றன மதமுற்றின களியற்றில கதமா.

மையல் தழை - மதமயக்கம் கொண்டு தழைத்த, செவி முன் - தம் செவியின் மூலமாக, மழை பொழி பெற்றன - (மதநீர்) சொரியப் பெற்றனவும், மலையின் மெய் பெற்றன - மலைபோன்ற உடலைப் பெற்றனவும், கடல் ஒப்பன - (நிறத்தாற்) கடல்போன்றனவும், விழியின் வெயில் உக்கன - கண்வாயிலாக வெம்மையை வெளிவிடுவனவுமான, கதம் மா - சீற்றங்கொண்ட யானைகள், மொய்

பெற்று உயர் - வலிமைகொண்டு உயர்ந்த, முதுகு இற்றன - முதுகு ஒடிந்தனவும், முகம் உக்கன - முகம் சிதறினவும், முரண் - மாறுபடுகின்ற, வெம் கை அற்றன - கொடியகை துணிபட்டனவு மாவன ; (ஆனால்), மதம் முற்றின களி அற்றில - மதத்தால் முதிர்ந்த களிப்புமட்டும் நீங்கினவல்ல.

மையல் - மயல். தழைத்தல் - மிகுதல். கதமா - கறுவுள்ள மிருகம். செவி முன் - செவி மூலமாக. முன் இரண்டடிகளில் யானைகளின் உயரமும், நிறமும், தறுகண்மையும், களிப்பும் கூறி, பின்னிரண்டடிகளில் அவை நிலைகுலைந்த தன்மையை அழகு பெறக் கூறினர். இச்செய்யுள் சந்தத்துடன், கந்தபுராணம்; யுத்த. 13, 301-319 ஒப்பிடுக.

பி - ம். 1. மையற்றன ; முப்பொழி

2. கடலொப்பென.

3. பெற்றன ; முகமற்றன ; முரணும்.

4. கையுக்கன ; கதமற்றில, களியுற்றில, களியற்றன, களிமா. 140

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

மழையுற்றன முகிலொப்பன செவிமும்மதம் வழிய
விழையுற்றன வெறிவெங்கணை நிமிரப்பொறி சிதற
முழையுற்றன முகில்சிந்தின முன்பேறில முடிய
யுழையுற்றன வுலவும்படி யுலவுற்றன கரிகள்.

1802. உண்ணின்றலை கடல்நீருக விறுதிக்கடை யுறுகால்
எண்ணின்றலை நிமிர்கின்றன விகல்வெங்கணை யிரணப்
பண்ணின்படர் தலையிற்பட மடிகின்றன பலவாம்
மண்ணின்றலை யுருள்கின்றன மழையொத்துயர் மதமா.

உண் நின்று அலைகடல் நீர் - தன் அளவிற்குள் நின்று அலை எறிகின்ற கடலின் நீர், (எல்லைகடந்து புறத்தே) உக - பெருகு மாறு, கடை இறுதி - ஊழியின் முடிவில் வீசும், உறுகால் - பெருங் காற்றையொப்ப, எண்ணின் தலை - அளவுபட்ட எல்லையினின்று மீறி, நிமிர்கின்ற - உயர்வனவான, இகல் வெம் கணை - (இலக்குவ னுடைய) கொடிய சரங்கள், இரணம் பண்ணின் - பொன்னாலாகிய அலங்காரத்தைப்பெற்ற, படர் தலையில் - பரவிய தலைகளில், பட -

நீண்டுதலின், மழை ஒத்து உயர் மதம் மா - மேகங்களை நிகர்த்து உயர்ந்த மதயானைகள், மண்ணின் தலை - பூமியினிடத்தே, உருள் கின்றன - புரள்வனவாகி, மடிகின்றன பல ஆம் - இறந்து ஒழி கின்றன பலவாகும்.

இரணம் - பொன், இரணியம் என்ற வடசொல்லின் திரிபு; 'இரணம் கொடுத்தால் இடுவர்' (நல்வழி. 18); 'இரணமாளிகை' (யுத்த. 402). இரணப்பண் - பொன்னலங்காரம்; இரணம் போரெனக் கொண்டு போர் அலங்காரம் எனினுமாம். உண்ணின்று அலை, எண்ணின் தலை, மண்ணின் தலை எனப்பிரிக்க. மண்ணின் தலை - தலை என்பது ஏழன் உருபு.

பா - ம். 1. அலைநீருக.

3. தலையிற்படர்; படிகின்றனர்; பலவாய்.

4. உருகின்றன, புகுகின்றன. 141

1803. பிறைபற்றிய வெனுநெற்றிய பிழையற்றன பிறழப்
பறையற்றமில் விசைபெற்றன பரியக்கிரி யமரர்க்
கிறையற்றைய முனிவிற்படை யெறியப்புடை யெழுபொற்
சிறையற்றன வெனவிற்றன சினமுற்றிய மதமா.

பறை - பறவைபோன்று பறக்கின்றன என்னுமாறு, அற்றம் இல் - குற்றமற்ற, விசை பெற்றன - விரைவினைப் பொருந்தியவை யான, சினம் முற்றிய மதமா - கோபம் முதிரப் பெற்ற மதயானை கள், பிழை அற்றன - குறிதவறாதனவான, (இலக்குவனுடைய) அர்த்தசந்திர பாணங்கள், பிறழ - விளங்குவதனால், பிறைபற்றிய எனும் - பிறை மதிகள் பற்றியுள்ளன என்னுமாறு காணப்படுகின்ற, நெற்றிய - நெற்றியினை உடையனவாகி, அம ரர்க்கு இறை - தேவேந்திரன், அற்றைய முனிவில் - அப்போது கொண்ட சினத்துடன், படை எறிய - தன் வயிரப்படையினை வீச, கிரி - மலைகள், புடை எழு - தம் இருபக்கங்களிலும் அமைந்த, பொன் சிறை அற்றன என - அழகிய சிறகுகள் அறுபட்டு வீழ்ந் தாற் போன்று, பரிய - இரங்குமாறு, இற்றன - உயிர் நீங்கப் பெற்றுக்கிடந்தன.

பிழையற்றன - இலக்குத் தவறாத பிறைமதி வடிவான (வாளி கள்): பறை - பறவை; பறை - சிறகு ஆதலின், சிறகுகளையுடைய

புட்களைக் குறித்தது, 'பல் பறைத் தொழுதி' (குறுந். 175); அற்றம் - குற்றம்; அற்றைய முனிய: வரலாறு: சுந்தர. 55, 1025; 'மலைச்சிறகரிந்த வச்சிரவேந்தற்கு' (சிலப். 24, 94). முன்காலத்தில் மலைகள் சிறகுடன் கூடினவாய்ப் பல இடங்களிலும் பறந்து சென்று அழிவு செய்தனவாக, இந்திரன் வெகுண்டு அவற்றின் சிறகினைத் தனது வயிரப்படை கொண்டறுத்ததாகப் புராணம் கூறும்.

பி - ம். 1. பிறழாப் - பறை, பிறழ்வன் - றறை, பிறழாவறை.

2. வசையற்றன ; அரிய.

3. பற்றிய ; நற்படை ; படை

4. எனவற்றன ; முற்றின ; சில முற்றிய ; சிலமா. 142

1804. கதிரொப்பன கணைபட்டுள கதமற்றில கதழ்கார்
அதிரத்தனி யதிர்கைக்கரி யளவற்றன வுளவா
எதிர்பட்டனல் பொழியக்கிரி யிடறித்திசை யெழுகார்
உதிரத்தொடு மொழுகிக்கடல் நடுவுற்றவு முளவால்.

கதிர் ஒப்பன கணை பட்டுள - சூரியனுக்கு ஒப்பான (இலக்குவனுடைய) அம்புகள் தைக்கப்பெற்ற, கரி - யானைகள், கதம் அற்றில - சினம் தீராமல், கதழ்கார் அதிர - விரைந்து செல்லும் மேகம் (இடிப்பது போன்று), தனி - ஒப்பற்று, அதிர் - முழங்குவதுடன், அளவற்றன உளவா - எண்ணிறந்தனவாயிருக்க, எதிர்பட்டு - எதிர்ப்பட்டு, அனல் பொழிய - தீ வெளிப்பட, கிரி இடறி - மலைகளில் இடறி விழுந்து, திசை எழு - திக்குகளில் தோன்றுகின்ற, கார் உதிரத்தொடும் ஒழுகி - கரு ரத்த வெள்ளத்துடன் சென்று, கடல் நடு உற்றவும் உள - கடலின் இடையிற் புகும் வேழங்களும் உள்ளன. ஆல்: அசை.

வெம்மை ஒளி என்ற இரண்டு பற்றியும் கணைக்குச் சூரியன் உவமை. பரிபவப் பட்டும் சினம் அடங்காமை கதம் அற்றில என்ற தொடரால் அறியலாம். கதழ்தல்: விரைதல்: 'மலைத்தலை வந்த மரையான் கதழ்விடை' (மலைபடு. 331); முதலடி முற்றுமோனை கார் அதிர: கார்போன்று அதிர என்க. உளவாக எனபது ஈறு குறைந்து உளவா என நின்றது. அம்பு தைத்தும சினம் நீங்காதனவாய் மேகம் போன்று பிளிறிக்கொண்டு, அனல் பொழிய

மலைகளில் இடறி வீழ்ந்து உதிரம் பெருகக் கடலையடைந்தன யானைகள் என்க. கார் உதிரம்: சினம் முதிர்ந்த நிலையில் உதிரம் கருநிறம் எய்தும் என்ப.

பா-ம். 1. பட்டில, பட்டுடல்; தூரம்; கதழ்காய்.

2. திரள்கைத், திரளக்; கிரி; அளவா, அளவாது, உளவால்

3. எதிர்ப்பட்டன; மொழியக், ஒழியக்.

4. இவறித்திரை, இவரித்திரை; முழுகி. 143

1805. கண்ணின்றலை யயில்வெங்கணை படநின்றன காணு
எண்ணின்றலை நிமிர்வெங்கத முதிர்கின்றன வினமா
மண்ணின்றலை நெரியும்படி திரிகின்றன மலைபோல்
உண்ணின்றலை நிருதக்கட லுழக்கிட்டவு முளவால்.

கண்ணின் தலை - விழியினிடத்து, அயில் வெம் கணை - கூரிய கடுமையான வாளிகள், பட நின்றன - தைக்கும்படி நின்றனவாய், காணு - பார்க்கவியலாதவாறு, எண்ணின் தலைநிமிர் - அளவிற் கடங்காது மேலெழுகின்ற, வெம் கதம் முதிர்கின்றன - கொடிய சினம் முதிரப்பெற்றுள்ளனவான, மா இனம் - யானைத் தொகுதி கள், மண்ணின் தலை - தரையினிடத்து, நெரியும்படி திரிகின்றன - நெரியுமாறு அலைகின்றனவாய், உள்-(தம்முடைய) இடத்திலேயே, மலைபோல் நின்று - மலைபோலத் தங்கிப் பகைவரிடத்துக்குச் செல்லாது), நிருதர் அலைகடல் உழக்கிட்டவும். உள - அரக்கர்களாகிய அலைகடலைக் கலக்கினவான, (யானைகளும்) உள்ளன, ஆல்: அசை.

கண்ணின் தலை, மண்ணின் தலை: தலை ஏழனுருபு. எண்ணின் தலை என்றும், உண்ணின்று அலை என்றும் பிரிக்க. உள் மலை போல் நின்று என்க.

பா-ம். 1. படை; நின்றவை.

2. இகன்மா, இதன்மா.

4. உழறிட்டன, உலறிட்டவும், உலறிட்டன; தரைமேல். 144

1806. ஓராயிர மயில்வெங்கணை யொருகால்விடு தொடையிற்
காராயிரம் விடுதாரையி னிமிர்கின்றன கதுவுற்
றீராயிர மதமால்கரி விழுகின்றன வினிமேல்
ஆராய்வதெ னவன்விற்றொழி லமரேசரு மறியார்.

ஒருகால் விடு தொடையில் - ஒருமுறை தொடுக்கும் தொடுப்பினில், ஓர் ஆயிரம் அயில் வெம் கணை - கூரிய கொடிய சரங்கள், ஆயிரம் கார் - எண்ணற்ற கரிய மேகங்கள், விடுதாரையின் - பொழிகின்ற தாரைகள் சொரிகின்றன போல், நிமிர்கின்றன - நிமிர்கின்றனவாய், கதுவுற்று - கவ்வுவதால், மதம்மால் ஈராயிரம் கரி - மதமயக்கம் கொண்ட இரண்டாயிரம் யானைகள், விழுகின்றன - விழுகின்றன; அவன் வில்தொழில் அமரேசரும் அறியார் - அந்த இலக்குவனது விற்றொழிலின் வன்மையைத் தலைமைத் தேவர்களும் தெரியமாட்டார்கள்; இனிமேல் ஆராய்வது என் - இனிமேற்பட்டு ஆராயவேண்டியது என்ன இருக்கிறது?

கதுவுதல் - கவ்வுதல்; 'காயெரிகதுவ' (ஆரணிய. 442); 'கடுத்த கராம் கதுவ நிமிர்' (ஆரணிய. 49). அமர + ஈசர்: அமரேசர் வடமொழிச் சந்தி.

பி - ம். 2. கதழ்வுற்று.
3. மதமாகிரி. 145

## அழிந்த யானையின் இரத்தப் பெருக்கு

1807. தேருந்தெறு கரியும்பொரு சினமள்ளரும் வயவெம்
போரிற்றலை யுகள்கின்றன புரவிக்குல மெவையும்
பேருந்திசை பெறுகின்றில பணையின்பிணை மதவெங்
காரின்றரு குருதிப்பொரு கடல்நின்றன கடவா.

பணையின் - தந்தங்களுடன், பிணை - பொருந்திய, மதம் வெம் காரின் தரு - மதம் செறிந்த கொடிய யானைகளினின்று பெருகு கின்ற, கடல்பொரு குருதி நின்றன - கடலையொத்த உதிரப்பெருக்கில் நின்றனவற்றை, கடவா - தான் கடக்க இயலாதனவாய், தேரும் - இரதங்களும், தெறு கரியும் - அழிக்கவல்ல யானைகளும், பொருசின

மள்ளரும் - போர் புரிகின்ற கோபம்மிக்க காலாட்களான வீரரும், புரவி குலம் எவையும் - குதிரைக் கூட்டங்கள் என்ற எல்லாமும், வயம் வெம் போரின் தலை - வலிய கடுமையான போரிடத்து, உகள் கின்றன - புரள்கின்றனவாய், பேருந்திசை பெறுகின்றில - இடம் பெயர்ந்து செல்லும் திசையிடத்தைப் பெறுவாயின.

அதிகாயனுடைய நால்வகைப் படைகள், அவனுடைய தனிப் பட்ட யானைப் படையின் உதிரக் கடலைக் கடக்க முடியாது, அந்த உதிரப்பெருக்கிலேயே புரள்வனவாயின என்று, உதிரப் பிரவாகம் கூறப்பட்டது. பணையும் பிணை மதமும், யானைக்குச் சிறப்பாதலின் கூறப்பட்டன.

பி - ம். 1. மன்னரும்.
3. பெருகுந்திறல் பிறையின்றலை ; பிணையின் பணை.
4. கடலின்கரை. 140

## இராவணன் மீண்டும் யானைச் சேனையை அனுப்ப இலக்குவன் அவற்றையும் அழித்தல்

1808. நூறுயிர மதவெங்கரி யொருநாழிகை நுவலக்
கூறுயின பயமுற்றொரு குலைவாயின வுலகம்
தேறுதன மலைநின்றன தெரியாதன சினமா
வேறுயின வவையாவையு முடனேவர விட்டான்.

மதம் வெம்கரி நூறுயிரம் - மதம் செறிந்த கொடிய லக்ஷம் யானைகள், ஒரு நாழிகை நுவல - ஒரு நாழிகை கடந்தது என்று மொழிந்த அளவில், கூறுயின - துண்டுபட்டன; உலகம் - உலகத் துயிர்கள், ஒரு - ஒப்பற்ற (அசாதாரணமான), பயம் உற்று - அச்சம் அடைந்து, குலைவு ஆயின - நிலை குலைந்தன, (இங்நிலையில் இந்த நிகழ்ச்சியை ஒற்றர் மூலம் உணர்ந்த இராவணன்), தேறுதன - தெளிவடையாது (மதமயக்கம்) உற்றனவும், மலை நின்றன - மலை போல் நின்றனவும், தெரியாதன - பிறர் யாவரும் பார்த்தறியாதனவு மாகி, வேறு ஆயின சினம்மா அவை - சேமமாகத் தனித்து வைக் கப்பட்டிருந்த கோபம் மிக்க யானைகள், யாவையும் - எல்லாவற்றை யும், உடனே வரவிட்டான் - தாமதமின்றிச் செல்லும்படி செய்தான்.

இரண்டாம் முறையாக விடப்பட்ட நூறுயிரம் யானைகள் அழிந்துபடவே, மூன்ரும் முறையாகப் பிறிதொரு நூறுயிரம் வேழங்கள் அனுப்பினுன் என்க. உலகம் ஒரு பயம் உற்று என மொழிமாற்றப்பட்டது. மதம்மிக்குத் தெளிவற்ற நிலையில் யானைகள் பொருகின்ற வேகம் மிகுமாகலின், தேருதன எனப்பட்டது. மலை நின்றன - மலைபோல் நின்றன.

பி - ம். 1. நுணுகிக்

2. கொலையாயின, குறைவாயின

3. மலையென்றன, மலைகின்றன ; தெரியாவர ; பிலமா

4. வேருயுள ; பிலவிட்டான். 147

## யானைகளை இளையபெருமாளுக்கு எதிரே வீரர் செலுத்துதல்

1809. ஒருகோடிய மதமால்கரி யுளவந்தன வுடன்முன்
பொருகோடியி லுயிருக்கன வொழியப்பொழி மதயா
றருகோடுவ வரஉந்தின ரசனிப்படி கணைகால்
இருகோடுடை மதவெஞ்சிலை யிளவாளரி யெதிரே.

முன்பொரு கோடியில் - முன் பொருத போரின் முனையில், உயிர் உக்கன ஒழிய - உயிர் சிந்தின நீங்கலாக, உள - உயிருள்ளனவாய், உடன் வந்தன - ஒருசேர வந்தனவான, பொழிமதயாறு - பொழிகின்ற மதவெள்ளம், அருகு ஓடுவ - அண்மையில் பாயப்பெற்ற ஒரு கோடிய மதம் மால்கரி - ஒரு கோடி மதமயக்கம் கொண்ட பெரிய யானைகள், அசனிபடி - இடிபோன்று, கணைகால் - அம்புகளை உமிழ்கின்ற, இருகோடு உடை மதம் வெம்சிலை - இரண்டு நுனிகளையுடைய வலிய கொடிய வில்லினைக் கைக்கொண்ட, இள வாள் அரி - இளைய கொடிய சிங்கம்போன்ற இலக்குவனுக்கு, எதிரே - நேராக, வர உந்தினர் - செல்லுமாறு (அரக்கவீரர்) செலுத்தினர்கள்.

உள உடன் வந்தன. கோடி : முனை, இங்கே போர் முனை. வாளரியெதிரே வர உந்தினர் என்க. படி : (ஒப்பு.) 'படியுரைத் தெடுத்துக் காட்டும்படித்தன்று' (சுந்தர. 527); கணைகால்

காலுதல் - உமிழ்தல், உந்தினர் என்ற வினைமுற்றுக்கு அரக்க வீரர் என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. அசனி யானைக்கு உவமை.

பி - ம். 2. உயிருக்கின ; ஒழிய.

3. படுகணையால்.

4. மழை ; வய. 148

1810. உலகத்துள மலையெத்தனை யவையத்தனை யுடனே
கொலநிற்பன பொருகிற்பன புடைசுற்றின குழுவாய்
அலகற்றன சினமுற்றிய வனலொப்பன வவையும்
தலையற்றன கரமற்றன தனிவிற்றொழி லவனல்.

(இங்ஙனம் செலுத்தப்பெற்ற வேழங்கள்) உலகத்துள மலை எத்தனை - புவியின்கண் உள்ளனவான மலைகள் எத்தனையோ, அவை அத்தனை - அவையனைத்தையும், உடனே கொல நிற்பன - உடனே அழிக்குமாறு நிற்பனவற்றை, பொருகிற்பன - நிகர்ப்பன வாகி, குழுவாய் புடை சுற்றின - திரளாக, (இலக்குவன்) அண்மையிலே சுற்றின, அலகு அற்றன - கணக்கற்றனவும், சினம் முற்றிய- கோபம் முதிரப்பெற்றனவும், அனல் ஒப்பன - நெருப்புப்போன் றனவுமான, அவையும் - அந்த வேழங்களாகிய எல்லாமும், தனி வில்தொழில் அவனல்-ஒப்பற்ற இலக்குவனுடைய விற்றொழிலால், தலை அற்றன கரம் அற்றன - தலைகளும் கைகளும் நீங்கப்பெறு வனவாயின.

அளவு கடந்த சீற்றமும் வலியும் மிக்க யானைகள் யாவும் இலக்குவன் அம்பினல் இறந்தொழிந்தன எனப்பட்டது.

பி - ம். 2. கொலை.

3. சினமுற்றின.

4. அதனல். 149

1811. நாலாயிர நவயோசனை நனிவன்றிசை யெவையும்
மாலாயின மதவெங்கரி திரிகின்றன வரலும்
தோலாயின வுலகெங்கணு மெனவஞ்சினர் துகளே
போலாயின வயவானமு மாருனது புவியே.

நவம் நாலாயிரம் யோசனை - முப்பத்தாறுயிர யோசனை தூரம், வல் திசை எவையும் - வலிய திக்குகள் எல்லாம், மால் ஆயின மதம் வெம் கரி - களிமயக்கங்கொண்ட மதம் செறிந்த கொடிய யானைகள், திரிகின்றன நனி வரலும் - திரிவனவாகி மிகுதியும் வந்த அளவில், 'உலகு எங்கணும் தோல் ஆயின - உலகடங்கலும் யானைகளே ஆகிவிட்டன' என - என்று, அஞ்சினர் - யாவரும் பயங்கொண்டனர்; வயம் வானமும் துகள்போல் ஆயின - வலிய ஆகாயமும் தூள்போல ஆயின; புவி மாறு ஆயின - பூமி (தன்னகத்திருந்த துகள் ஒழிந்து) அதற்கு மாறான நிலையை உற்றது (துகளற்றதாயிற்று). ஏ : அசை.

வானிடம், மண்ணின் துகளால் நிறையப் பூமி துகளற்ற தாயிற்று என்க. நவம் - ஒன்பது. யோசனை - மூன்றரை மைல் என்றும், பத்து மைல் என்றும் கூறுவர்; 'ஒன்றினுக் கொன்றி னிடை நெடிதி யோசனை யுடைய' (கிட்கிந்தா. *168*). தோல் - யானை; 'தோலுரிந்து கழன்றன தோலெலாம்' (சுந்தர. *1188*).

பி - ம். 1. நாலாயிரமவை, நாலாயினவவை

2. மலைபோல்வன வரலும்

3. தோலாயினது, அஞ்சின

4. வானர மின்றுயது, வானர மன்றுயது; வனக மாறுனது, வானமு மளறுனது. 150

**1812.** **கடைகண்டில தலைகண்டில கழுதின்திரள் பிணமா**
**இடைகண்டன மலைகொண்டென வெழுகின்றன திரையால்**
**புடைகொண்டெறி குருதிக்கடல் புணர்கின்றன பொறிவெம்**
**படைகொண்டிடை படர்கின்றன மதயாறுகள் பலவால்.**

கழுதின் திரள் - பேய்களின் கூட்டம், கடை கண்டில - முடிவினைக் காணமலும், தலை கண்டில - தொடங்குமிடத்தைக் காணமலும், பிணம்மா - சவமாகிவிட்ட யானைகளை, இடை கண்டன - இடையிற் கண்டு, மலைகொண்டு என எழுகின்றன - மலைகளைத் தாங்கிக்கொண்டு ஏகுவனபோன்று சுமந்துகொண்டு செல்வன ஆயின; (அன்றியும்), திரையால் - அலையினால், புடைகொண்டு - பருத்து, எறி - கொந்தளிக்கின்ற, குருதி கடல் - உதிரக் கடலினிடத்து, பொறி - தீப்பொறி பறக்கின்ற, வெம் படை - கொடிய

படைகளை, இடை கொண்டு - தம்மிடம் அடித்துக்கொண்டு, படர்கின்றன மதயாறுகள் பல புணர்கின்றன - செல்லுகின்றன வான மதயாறுகள் பல ஒன்று கூடுவனவாயின. ஆல் : அசை.

கடைதலை என்பதற்கு வாற்புறம், தலைப்புறம் எனினுமாம். பிணம் மா - இறந்துபட்ட யானைகள். புடை கொள்ளுதல் - பருத்தல் ; 'பால் புடைக்கொண்டு' (சிலப். 13, 162).

பி - ப். 1. கடைகண்டன ; கழுகின் ; பிணமாம், பிணமார்

2. இடைகொண்டன ; கொண்டன, கண்டேன ; துறையால், துரையால்

3. பொறிவெய் ; விடையே

4. கறையாறுகள். 151

1813. ஒற்றைச்சர மதனோடொரு கரிபட்டுக வொளிர்வாய்
வெற்றிக்கணை யுருமொப்பன வெயிலொப்பன வயில்போல்
வற்றக்கடல் சுடுகிற்பன மழையொப்பன பொழியும்
கொற்றக்கரி பதினாயிர மொருபத்தியிற் கொல்வான்.

ஒற்றை சரம் அதனோடு ஒரு கரி பட்டு உக - ஓரம்புக்கு ஒரு யானையாக இறந்துபட, உரும் ஒப்பன வெயில் ஒப்பன - இடியை ஒத்துப் பிளிறுவனவும் (கொடுமையால்) வெயிலை நிகர்த்தனவும், அயில்போல் - வேல்போன்று, கடல் வற்ற சுடுகிற்பன - கடலும் சுவறுமாறு காயவல்லனவுமான, ஒளிர் வாய் - ஒளிவிடுகின்ற வாயினையுடைய, வெற்றி கணை - வெற்றி பொருந்திய வாளிகளால், மழை ஒப்பன - மாரியை ஒப்பனவாய், பொழியும் - (மதம்) சொரியும், பதினாயிரம் கொற்றம் கரி - பதினாயிரம் வெற்றிபொருந்திய யானைகளை, ஒரு பத்தியில் கொல்வான் - ஒரு வரிசையாகக் கொல்பவனானான் (இலக்குவன்).

கடல் வற்றிய வரலாறு: திருவிளையாடலிற் கண்டது ; உக்கிரகுமார பாண்டியன் செங்கோல் முறைப்படி அரசுபுரிந்து பல அசுவமேத வேள்விகளைச் செய்து வந்தானாக, அதுகண்டு அழுக்காறுகொண்ட இந்திரன், பாண்டியனுடைய நாட்டை அழிக்குமாறு வருணனை ஏவ, அத்தேவன் கடல்நீரைப் பெருகச் செய்து நாட்டை அழிக்கப் புகுகையில், சிவபெருமான் பாண்டியன் கனவில் சித்தராய்த் தோன்றிச் செய்தியை உணர்த்தி வேலைக்

கொண்டு கடல்மீது செலுத்தி, வருணனை யடக்குமாறு கட்டளை யிட, அரசன் கடலைச் சுவறச்செய்து அடக்கினன் என்பது (திருவிளை. கடல்சுவற வேல்விட்ட படலம்). பத்தி - வரிசை; 'சித்திரப் பத்தியிற் றேவர் சென்றனர்' (சுந்தர. *146*); 'துன்று பத்திய விராவகன் சுடுசரம் துரக்க' (ஆரணிய. *441*); 'கரபத்திரப் பத்தி' (ஆரணிய. *691*).

பி - ம். 1. ஒளிவாய்

2. ஒப்பனவிசையால். 152

**1814.** **மலையஞ்சின மழையஞ்சின வனமஞ்சின பிறவும்**
**நிலையஞ்சின திசைவெங்கரி நிமிர்கின்றன கடலின்**
**அலையஞ்சின பிறிதென்சில தனியைங்கர கரியும்**
**கொலையஞ்சுதல் புரிகின்றது கரியின்படி கொளலால்.**

(இங்ஙனம் யானைகள் கொல்லப்படுவது கண்டு), மலை அஞ்சின - மலைகள் பயந்தன; மழை அஞ்சின - அந்த யானை போன்று கருநிறம்வாய்ந்த மேகங்களும் பயந்தன; வனம் அஞ்சின - (அங்ஙனமே கருத்திருண்டமையின்) காடுகளும் பயந்தன; பிறவும் வெம் திசை கரி நிலை அஞ்சின - வேறான கொடிய திக்கு யானைகளும் தம் நிலையிலிருப்பதற்கு அஞ்சிஓடின; நிமிர்கின்றன கடலின் அலை அஞ்சின - உயர்கின்றனவான கடல் அலைகளும் (தாம் மதயானைபோன்ற தோற்றம் உடைமையின்) பயந்தன; சில பிறிது என் - சிலவற்றைப்பற்றித் தனித்துக் கூறுவது என்? தனி ஐங்கர கரியும் - ஒப்பற்ற ஐந்து கைளையுடைய வேழ முகக் கடவுளும், கரியின் படி கொளலால் - (தான்) யானையின் உருவத்தைக் கொண்டிருத்தலால், கொலை - இலக்குவன் எப்பொழுது கொலை செய்வானோ என்று, அஞ்சுதல் புரிகின்றது - அஞ்சுதலைச் செய்கின்றது.

தொடர்புயர்வுநவிற்சி. இச்செய்யுளுடன், 'ஏழுமா மரமுருவி' என்ற கவியையும், ஏழு வேலையும்' என்ற கவியையும் ஒப்பு நோக்குக; (கிட்கிந்தா. *173*, *174*); மற்றும், பால. குலமுறை. *26*; புறநா. *152*-ம் காணத்தகும்; (ஒருசார் ஒப்பு): 'மணிவாசகர் பொருட்டுக் கூலியாளாகி மண் சுமந்த சோமசுந்தரப் பெருமானைப் பாண்டியன் பிரம்பாலடித்ததனால் எழுந்த தழும்பு, உலகத்திலுள்ள

சரசரங்கள் அனைத்தினும் சென்றுபட்டமை' (திருவிளை. மண்சுமந்த. 53—56). இது கற்பனை நயர் செறிந்த பாடல். வேழமுகனுக்கு ஐந்து கரம் ஆதலின் ஐங்கரகரி எனப்பட்டது. அஞ்சுதல் புரிதல்: அஞ்சுதல்' ஒருசொல் நீர்மைத்து.

பி - ம். 1. மறவோர்

3. தலையஞ்சின; சில; தனியையங்கரகிரியும், தனிவெங்கரி கிரியும்

4. கொலையஞ்சலி; புரிகின்றன 153

1815. காலேறின சிலைநாணொலி கடவேறுகள் படவான்
மேலேறின மிசையாளர்கள் தலைமெய்தொரு முருவக்
கோலேறின உருமேறுகள் குடியேறின வெனலாய்
மாலேறிய களியானைகண் மழையேறென மறிய.

கால் ஏறின - குதைகளில் ஏறியுள்ள, சிலை நாண் ஒலி - வில் நாணின் ஒலிகள், கடம் - காட்டின்கணுள்ள, ஏறுகள் பட - ஆண் சிங்கங்கள் மரிக்கும்படி, வான்மேல் ஏறின - ஆகாயத்தின்மேலும் தோன்றின; (பின்னர்), உரும் ஏறுகள் குடி ஏறின எனலாய் - பருத்த இடிகள் சென்று தங்கின என்னுமாறு, கோல் - அம்புகள், மால் ஏறிய களி யானைகள் - மதமயக்கம் மிகுந்த களிப்பினைக் கொண்ட வேழங்கள், ஏறு மழை என மறிய - பலத்த மழைபோல மடங்கிவிழவும், மிசையாளர்கள் - அந்த யானைகளின்மீது அமர்ந்தவரின், தலை மெய்தொறும் உருவ - தலைகளிலும் உடம்புகளிலும் ஊடுருவவும், ஏறின - பாய்ந்தன.

கால்: குதைஅல்லது சுவடு. மிசையாளர்கள்: பாகர்கள். தலைமெய்: உம்மைத்தொகை. கோல் உருவ, மறிய ஏறின என்க.

பி - ம். 1. சில; கடலேறுகள்

2. மேலேறினர்; மிகையாளர்கள்

3. எனலால்

4. ஏறின. 154

1816. இவ்வேலையி னனுமான்முத லெழுவேலையு மனையார்
வெவ்வேலவர் செலவேவிய கொலையானையின் மிகையைச்
செவ்வேயுற நினையாவொரு செயல்செய்குவ னென்பான்
தவ்வேலென வந்தானவன் தனிவேலெனத் தகையான்.

இ வேலையில் - இச்சமயத்தில், முதல் எழு வேலையும் - தலைமை பெற்ற ஏழு கடல்களையும், அனையார் - ஒத்தவரான, வெம் வேலவர் - கொடிய வேற்படையைக்கொண்ட அரக்கர், செல - செல்லுமாறு, ஏவிய - செலுத்திய, கொலை யானையின் மிகையை - கொலைவல்ல வேழங்களின் மிகுதியை, அநுமான் - அநுமன், செவ்வே - செம்மையாக, உற - பொருந்த, நினையா - நினைந்து, 'ஒரு செயல் செய்குவென் - ஒரு வீரச்செயல் புரிவேன்', என்பான் - என்று (தனக்குள்ளே) சொல்லிக்கொண்டவனாகிய, அவன் தனி வேல் என தகையான் - அந்த இலக்குவனுடைய ஒப்பற்ற வேல் என்று சொல்லும் தகுதியையுடையவனாய், தவ்வேல் என வந்தான் - திடீரென்று (ஆங்கு) வந்தான்.

வெவ்வேலவர் ஆன அரக்கரின் மிகுதியைக் குறிப்பான் எழு வேலையும் அனையார் எனப்பட்டது. தவ்வேல் - திடீரென்று; ஒலிக்குறிப்பு. தவ்வேல் - தாவாதீர்கள் என எச்சரித்ததுமாம். தனிவேலெனத் தகையான்: 'அநுமனென்பவனே யாழி ஐயநின் செய்ய செங்கைத் தனுவென நினைதி' (கிட்கிந்தா. 358) என வாலி கூறியது காண்க; (ஒப்பு): 'அறத்தகை யரசன்தன் போராழியு மனைய னானான்' (சுந்தர. 31); 'கடலெலாம் கடக்கத்தாவும் கலுழனு மனைய னானான்' (சுந்தர. 32); 'அயோத்தி வேந்தன் புகழெனக் குவவுத் தோளான்' (சுந்தர. 195); 'இராகவன் புகழெனும் நலத்தான்' (சுந்தர. 228); 'ஆழியா னெனச் செலுமறிவோன்' (சுந்தர. 229); 'புக்கு நீங்கினன் இராகவன் சரமெனப் புகழோன்' (சுந்தர. 239) எனக்காவிய பாத்திரங்களின் படைச் செயல்களையே உவமை கூறுதல் காண்க.

பா - ம். 1. அவ்வேலையின்; அநுமானுமொர்; எனவே

2. மிசையேவிய, செலவேவிய, செலமேவிய; மிசையே

3. செவ்வேசெல; என்று

5. தவ்வேனென, தவ்வேளென; அவர், இவன், ஒரு; வேலன்.

1817. ஆர்த்தங்கனல் விழியாமுதிர் மதயானையை யனையான்
தீர்த்தன்கழல் பரவாமுத லரிபோல்வரு திறலான்
வார்த்தங்கிய கழலானொரு மரனின்றது நமனார்
போர்த்தண்டினும் வலிதாயது கொண்டான்
புகழ்கொண்டான்.

முதிர்மதம் யானையை அனையான் - முதிர்ந்த மதம் கொண்ட வேழத்தை ஒத்தவனும், முதல் அரி போல் வரு திறலான் - முதன்மைப் பொருளான நரசிங்கப் பெருமானை நிகர்த்த வன்மையனும், வார் தங்கிய கழலான - வாரிற் பொருந்திய வீரகண்டையைத் தரித்தவனும், புகழ் கொண்டான்-புகழ் பூண்டவனுமான அநுமன், அங்கு - அப்போது, தீர்த்தன் - என்றும் தூய்மையனான இராம பிரானுடைய, கழல் - திருவடிகளை, பரவா - துதித்து, ஆர்த்து - கூச்சலிட்டு, அனல் விழியா - நெருப்புப் பிறக்கும்படி விழித்து, நின்றதும் - (அருகே) நின்றதும், நமனார் - யமனுடைய, போர் தண்டினும் வலிதாயது - போர் செய்தற்குதவும் கதாயுதத்தினும் வலியதுமான, ஒரு மரன் - ஒரு மரத்தை, கொண்டான் - (பொருதற் பொருட்டுக்) கைக்கொண்டான்.

விழியா, பரவா : செய்யா என்னும் வாய்பாடுகள். தீர்த்தன்-தூய்மையன்; இறைவனுடைய எண் குணங்களில் ஒன்று. 'புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்' (மணி. 5 : 98); வார்தங்குதல் - வாரில் இணைக்கப்பட்டுப் பொருந்துதல். மரம்:மரன் ஈற்றுப்போலி. நமனார் - மரியாதைப்பன்மை. தண்டு (யுத்த. 139); கதை கொண்டான் புகழ் கொண்டான் என்ற இடத்துப்பிராசம் காண்க, கழலானாகிய அநுமன், தீர்த்தன் கழல்பரவா என்ற நயம் காண்க. ஒரு கழலான் பிறிதொரு கழலானை வணங்கியது. கழல் : வீரர்கள் ஒற்றைக் காலில் அணிவது.

பி - ம். 1. முழுமத.
4. வலியாயது.



1818. கருங்கார்புரை நெடுங்கையன களியானைக ளவைசென்
றொருங்காயின வுயிர்மாய்ந்தன பிறிதென்பல வுரையால்
வருங்காலனும் பெரும்பூதமு மழைமேகமு முடனுப்
பொருகாலையின் மலைமேல்விழு முருமேறெனப்
[புடைத்தான்.

வரும் காலனும் - (உயிரைக் கவர) எய்தும் யமனும், பெரு பூதமும் - பெருமைசான்ற ஐந்து மகா பூதங்களும், மழை மேகமும் - சூழ்கொண்ட முகிலும், உடனு - ஒன்றுகூடி, பொரு காலையில் - உலகினை மோதி அழிக்குங்கால் (ஊழி இறுதியில்), மலை மேல் விழும் உரும் ஏறு என - மலைமீது விழுகின்ற இடியேறு என எண்ணுமாறு, புடைத்தான் - அடித்தான், (அதனால்) கருகார் புரை-கரிய மேகத்தை ஒப்பாகி, நெடுகையன களியானைகள் அவை-நீண்ட துதிக்கைகளையுடைய மதமிக்க யானைகள், சென்று-போய், ஒருங்காயின உயிர் மாய்ந்தன - திரள் திரளாக உயிர் நீங்கப்பெற் றன, பிறிது பல உரையால் என்-வேருகப் பலவாறு கூறுவதால் என்ன பயன்.

முதலடியில் யானைகளின் நிறம் உருவம் பண்பு என்ற இவை கள் சுருக்கமாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. ஒருங்காயினவாய் என்க. காலன் ஐந்து பூதங்கள் மழை மேகம் : என்ற இவைகள் அழித்தல் தொழிலில் தனித்தனிப் பெயர்போனவை. அவைகள் அனைத்தும் ஒன்று சேர்ந்தாற்போன்று எனப்பட்டது. காலகால ஞகிய சிவாம்சம் ஆனதாலும், அநுமானுடைய அளவு கடந்த வன்மை குறிக்கப்பட்டது. பெரும் பூதம் : சண்டமாருதமுமாம்

பி-ம். 1. கருங்காரன, களியானைகளோடு
2. ஒருங்காய்ந்தன, உரையா.
3. காலமும், காலமைம், உடனுய்ப்.
4. இடியேறெனப். 157

1819. மிதியாற்பல விசையாற்பல மிடலாற்பல இடறும்
கதியாற்பல காலாற்பல வாலாற்பல வாலின்
நுதியாற்பல நுதலாற்பல நொடியாற்பல பயிலும்
குதியாற்பல குமையாற்பல கொன்ருு னறநின்ருன்.

அறம் நின்ருன் - தருமநெறியின்கண் நிலைத்து நின்றவனை, அநுமன், (வேழங்களில்) மிதியால் பல - கால் மிதிப்பினுல் பலவற் றையும், விசையால் பல - வேகத்தினுல் பலவற்றையும், மிடலால் பல - வலிமையாற் பலவற்றையும், இடறும் கதியால் பல - இடறும் நடையினுல் பலவற்றையும், காலால் பல - மூச்சுக்காற்ருல் பலவற்

றையும், வாலால் பல - வாலால் பலவற்றையும், வாலின் நுதியால் பல - வாலின் நுனியாற் பலவற்றையும், நுதலால் பல - நெற்றியினுல் பலவற்றையும், நொடியால் பல - நொடியால் பலவற்றையும, பயிலும் குதியால் பல - பழகிய குதிப்பினுல் பலவற்றையும், குமையால் பல - பிசைதலினுல் பலவற்றையும், கொன்ருன் - கொலை புரிந்தான்.

மிதி - காலால் மிதித்தல் அல்லது துகைத்தல். விசை - நடக்கின்ற அல்லது எழுகின்ற வேகம். கதி என்பது, மல்லகதி, மயூர, கதி போன்ற கதிகள். 'கதிகொண்ட சேனே' (வி. பா. 16 ஆம் போர், 73); முன் மிதி என்று வந்தமையின் இங்குக் காலால் என்றதற்கு மூச்சுக் காற்றினுல் என்று பொருள் தரப்பட்டது. வால் என்ற தோடமையாது வாலின் நுனி என்றும் கூறியது ; வாலால் வளைத்தடித்தும், வால் நுனியால் இடித்து வீழ்த்தியும் என்பது குறிக்க. நொடி ஓசை என்றேனும், இரண்டு விரல்களைத் தெறிக்கும் ஒலி என்றேனும் கொள்க. 'கண்ணிமை கைந்நொடியவ்வே மாத்திரை' (தொல். எழுத். 7) ; நுதலாற்பல என்றது, நெற்றிகொண்டு முட்டுதலால் என்க. குமை : பெயர். குமைத்தல் : துவைத்தல். 'கூற்றைக் குரைக்கழலாலன்று குமைத்தார் போலும்' (தேவா 44, 6) ; 'கோவாய் முடுகி யடுதிறற் கூற்றம் குமைப்பதன் முன்' (தேவா 419, 1) ; நுதி - முனை. 'வைந்துதி பொருத வடுவாழ்' (திருமுருகு. 78) ; அறம் நின்ருன் : 'மாருதியறத்தை ஓம்புவான்' (யுத்த. 1464).

பி - ம். 1. விறல்வெங், விடவெங்.

2. தெழியாற்பல, காலாற்பல வாலின், காலாற்பல காலின்.

3. பல நுவலும்.

4. தனி நின்ருன். 158

1820. பறித்தான்சில பகிர்ந்தான்சில வகிர்ந்தான்சில [பனைபோன்
றிறுத்தான்சில விடந்தான்சில பிளந்தான்சில வெயிற்ருல்
கறித்தான்சில கவர்ந்தான்சில கரத்தாற்சில பிடித்தான்
முறித்தான்சில திறத்தானெயி னெடுங்கோடுகண் [முனிந்தான்.

முனிந்தான் - வெகுண்டவனுன அநுமன், சில பறித்தான் - சில பகிர்ந்தான், சில வகிர்ந்தான் - சில யானைகளைப் பற்றியிழுத்தும், சிலவற்றைப் பிளந்தும், சிலவற்றை நகங்களால் கிறியும், சில பணைபோன்று இறுத்தான் - சிலவற்றை மூங்கில்போன்று ஒடித்தும், சில இடந்தான் சில பிளந்தான் - சிலவற்றைத் தோலுரித்தும், சிலவற்றைப் பல துண்டங்களாக்கியும், சில எயிற்றுல் கறித்தான் - சிலவற்றைப் பற்களால் கடித்தும், சில கவர்ந்தான் - சிலவற்றைக் கவர்ந்தும், கரத்தாற் சில பிடித்தான் - கைகளாற் சிலவற்றைப் பற்றியும், சில திறத்து யானையின் நெடுகோடுகள் முறித்தான் - சிலவகையான யானைகளின் நீண்ட தந்தங்களை முறித்தும் நின்றுன்.

பணை - மூங்கில்.

பி - ம். 1. மறிந்தான், பணைபோல், ஒன்று.
3. கவர்ந்தான், சில கடித்நான்.
4. திறந்தானையின், திறத்தானையன், கோடுள. 159

1821. வாரிக்குரை கடலிற்புக வெறியும்நெடு மரத்தாற்
சாரித்தலைத் துருட்டும்நெடுந் தலத்திற்படுத் தரைக்கும்
பாரிற்பிடித் தடிக்குங்குடர் பறிக்கும் படர்விசும்பின்
னூரிற்செல வெறியும்மிதித் துழக்கும் முகத்துதைக்கும்.

(மற்றும் அவ்வீரன் யானைகளை) வாரி குரை கடலில் புக எறியும் - நீர் மிக்க ஒலிக்கும் கடலில் வீழுமாறு எறிவான், நெடு மரத்தால் - நீண்ட மரத்தைக்கொண்டு, சாரித்து அலைத்து உருட்டும் - சாரிதிரிந்து அலைக்கழித்து உருட்டுவான், நெடு தலத்தில் படுத்து அரைக்கும் - அகன்றபூமியில் தள்ளி அரைப்பான், பாரில் பிடித்து அடிக்கும் - பற்றிப் பூமியில் அறைவான், குடர் பறிக்கும் - குடரைப் பிய்த்திடுவான், பறிக்கும் (பறிக்கின்ற குடரைப்), படர் விசும்பின் ஊரில் - பரந்த வானுலகத்து ஊரில், செல எறியும் - செல்லுமாறு வீசுவான், மிதித்து உழக்கும் - மிதித்துக் கலக்குவான், முகத்து உதைக்கும் - முகத்தில் உதைப்பான்.

குரைகடல் : 'கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர்' (நளிப்பா.) ; சாரித்தல் - வலசாரி இடசாரி வருதல். விசும்பின் ஊர் - விண்ணுலகம் வீரசுவர்க்கமும் ஆம்.

பி - ம். 1. புகவிலகும், வழங்கும், விலக்கும்.

2. சாரித்தலந்து, சாரித்தலே, நிலத்திற்.

3. பிடித்தெற்றும், நெடுவிசும்பின்.

4. செலவிசும், மிதித்துதைக்கும். 160

1822. வாலால்வர வளைக்குந்நெடு மலைப்பாம்பென வளையா
மேலாளொடு மிடையும்முழு மலைமேற்செல விலக்கும்
ஆலாலமுண் டவனேயென வகல்வாயினிட் டதுக்கும்
தோலாயிர மிமைப்போதினி னரியேறெனத் தொலைக்கும்

(பின்னும் அநுமன் தன்) வாலால் வர - வாலினால், (வெகுதூரம் அடங்குமாறு) நெடுமலை பாம்பு என - நீண்ட மலைப்பாம்புபோல, வளைக்கும் - வளைப்பான் ; வளையா - வளைத்து, மேல் ஆளொடு - (அந்த யானைகளின்) மீதுள்ள பாகனுடனே, மிடையும் - (அவ் வேழங்களை) நெருங்கிய, முழுமலை மேல் செல - பெரிய மலைமீது செல்லுமாறு (மோதி), விலக்கும் - உயிர் நீங்குமாறு புரிவான் ; (மற்றும் சிலவற்றை) ஆலாலம் உண்டவனே என - ஆலகால விடத்தை உண்டவனான சிவபிரானே எனுமாறு, அகல் வாயின் இட்டு அதுக்கும் - பெரிய வாயிலிட்டு அதுக்குவான் ; இமை போதினில் அரி ஏறு என ஆயிரம் தோல் தொலைக்கும் - ஆண் சிங்கம் போன்று ஆயிரம் வேழங்களைக் கண்ணிமைப் போதினில் அழித்திடுவான்.

யானைகளை இவ்வண்ணம் பலவாறு அழித்தது அநுமன் சிவாம்சம் ஆதலின் நன்கு பொருந்தும். யானையை உரித்துத் தோலைப் போர்த்தவன் சிவபிரான் என்ற வரலாறு காண்க. வழுவூர் என்ற அட்டவீரட்டத்தலத்தில், இச்செயல் நிகழ்ந்த தென்ப. வளைக்கும் விலக்கும் அறுக்கும் தொலைக்கும் என்ற செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள் இங்கு ஆண்பாற்கு வந்தமை காண்க.

பி - ம். 2. மிசையும் ; மழு ; மலையிற் ; விசும்.

3. வாயிலிட்.

4. இறைப்போதினில் ; துகைத்தான், தொலைப்பான். 161

**1823.** சையத்தினு முயர்வுற்றன தறுகட்களி மதமா
நொய்திற்கடி தெதிருற்றன நூருயிரம் மாரு
மையற்கரி யுயிரிற்றன விண்புக்கன மறையத்
தொய்யற்பட ரழுவக்கொழுஞ் சேருயுகத் துகைத்தான்.

மாரு மையல்கரி - தீராத மயக்கம் கொண்ட யானைகள், உயிர் இற்றன - உயிர் நீங்கப்பெற்று, விண்புக்கன - வானுலகம் எய்தினவாய், மறைய - கட் புலனுகாமல் போக, சையத்தினும் உயர்வு உற்றன - மலையைக் காட்டிலும் உயர்ந்திருப்பனவான, தறுகண் களிமதமா - அஞ்சாமை வாய்ந்த மதக்களிப்புக்கொண்ட யானைகள், நூறு ஆயிரம் நொய்தில் கடிது எதிர் உற்றன - ஒரு லக்ஷம் மிக விரைந்து எதிர்ப்பட்டவை, தொய்யல் படர் அழுவம் - குழம்பாய்ப் பரவிய நீர்ப்பரப்பிலே, கொழு சேருய் - வளவிய சேருகி, உக - சிந்தும்படி, துகைத்தான் - உழக்கினுன்.

சையத்தினும் உயர்வுற்றன ; மதமலை என்றே யானைகள் வழங்குதல் காண்க. அஞ்சாமையும், மதச்செறிவும் மயக்கத்தானுற்ற ஆவேசமும் அதன் காரணமாக நிகழ்ந்த வேகமும் 'தறுகட் களிமதமா நொய்திற் கடிது' என்ற தொடரால் அறிவுறுத்தப் பட்டன. நூருயிரம் மாரு என்ற இடத்துப்பிராசம் காண்க. நொய்தில் கடிது ஒருபொருட் பன்மொழி. மற்றும் எளிதாகவும் விரைந்தும் எனினுமாம். தொய்யல் - நெகிழ்ந்த சேற்றுக் குழம்பு; (பிங்.).

பி - ம். 1. தளிமா.
2. கடித்திருத்தானவன்.
3. மையற்கிரி ; உகிரிற்பில, உயிரிற்பில, உருவிற்பில ; விண்புக்குயிர், குழைபுக்குரு ; பிலவற்றன ; மறியத், மழையத்.
4. அழுவத்தொடு ; சேருயெழத் ; துகைப்பான். 162

**1824.** வேருயின மதவெங்கரி யொருகோடியின் விறலோன்
நூருயிரம் படுத்தானிது நுவல்காலையி னிளையோன்
கூருயின வெனவன்னவை கொலைவாளியிற் கொன்ருன்
ஏருநெடும் பயத்தால்நெடுந் திசைக்காவல ரிரிந்தார்.

விறலோன் - வன்மை வாய்ந்தவனுன அநுமன், வேருயின - (பராக்கிரமத்தால்) சாதாரண யாணைகளினின்றும் வேறுபட்ட,

மதம் வெம்கரி ஒரு கோடியின் - மதம் செறிந்த கொடிய ஒருகோடி வேழங்களில், நாருயிரம் படுத்தான் - ஒரு இலட்சம் யானைகளை அழித்தான்; இது நுவல் காலையில் - இத்தொழிலை விரும்பிப்புரியும் கால், இளையோன் - இலக்குவன், கூறு ஆயின்என அன்னவை - தன் பங்காகத், தான் அழிக்க வேண்டுவன எனுமாறு நின்ற (அநுமானல் கொல்லாமல் விடப்பட்ட) அந்த யானைகளை, கொலை வாளியில் கொன்ருன் - கொல்லும் தொழில் உள்ள அம்புகளால் கொன்ருன்; (அக்காலையில்), நெடு திசை காவலர் நெடு பயத்தால் ஏரு இரிந்தார் - பெரிய திக்குப் பாலகர்கள் மிக்க அச்சம் எழப் போர்க்களத்திற் புகாமல் நிலை குலைந்து ஓடினர்.

வேருதல் - வீர பராக்கிரமத்தால் ஏனைய யானைகளினின்றும் தனிப்பட்டு நிற்றல். விறலோன் : அநுமன். நுவல்தல் - விரும்புதல். 'பருகியும் அமையாது நுவலும் அமைதிய' (ஞாறு. 25, 6); இது ஓர் விசேடச்சொல். புகலுதல் : சொல்லுதல் என்றும் விரும்புதல் என்றும் பொருள்படுவது போன்று, இச்சொல்லும் அவ்விரண்டு பொருளும் பயத்தல் காண்க. கொலைவாளி : இலக்கணை, ஏரு - செய்யா என்னும் வாய்பாடுமாம், அச்சம் ஏறப்பெற்று என்க. இச்செய்யுளிலும் அடுத்த செய்யுளிலும் அந்தாதித் தொடை காண்க.

பி - ம். 1. மிடலோன்.
2. படுத்தாடினன் ; அனையான்.
3. கூருயினபெற ; அறுத்தான், குறைத்தான்.
4. தேருதோர், ஈருய்நெடுய், தேருநெடும் ; பெருந்திசைக். 183

1825. இரிந்தார்திசை திசையெங்கணும் யானைப்பிண மெற்ற
நெரிந்தரர்களும் நெரியாதுயர் நிலைத்தார்களும் நெருக்கால்
எரிந்தார்நெடுந் தடந்தேரிழிந் தெல்லாருமுன் செல்லத்
திரிந்தானெரு தனியேநெடுந் தேவாந்தகன் சினத்தான்.

திசை திசை எங்கணும் - எல்லாத் திக்குகளிலும், யானை பிணம் எற்ற - யானைச் சவங்கள் மோதுவதால், நெரிந்தார்களும் - நசுக்குண்டவர்களும், இரிந்தார் - நிலைகுலைந்து ஓடினர் ; நெரியாது உயிர் நிலைத்தார்களும் - (அங்ஙனம்) நசுக்குண்ணுமல் உயிர் தரிக்கப் பெற்றவர்களும், நெருக்கால் எரிந்தார் - நெருக்கத்தால் எரிந்தனர்

ஆக, எல்லாரும் - எல்லோரும், நெடு தட தேர் இழிந்து - உயர்ந்த பெரிய தேரினின்று இறங்கி, முன் செல்ல - முன்னே ஓட, நெடு தேவாந்தகன் - வலிய தேவாந்தகன், சினத்தான் - கோபத்துடன், ஒரு தனியே திரிந்தான் - தன்னந்தனியாக அலைந்தான்.

பி - ம். 3. தெரிந்தார்; தேரொடும், தேரழிந்து.

4. நெடுந் தனியேயொரு; சினத்தால், செறுத்தான். 164

## தேவாந்தகன் அநுமனோடு பொருது இறந்தமை

1826. உதிரக்கடல் பிணமால்வரை யொன்றல்லன பலவாய்
எதிரக்கடு நெடும்போர்க்களத் தொருதான்புகுந் தேற்றுன்
கதிரொப்பன சிலவெங்கணை யனுமானுடற் கரந்தான்
அதிரக்கடல் நெடுந்தேரினன் மழையேறென வார்த்தான்.

உதிரம் கடல் - இரத்தக் கடலும், மால் பிணம் வரை - பெரிய சவமலைகளும், ஒன்று அல்லன பலவாய் எதிர : ஒன்றன்றிப் பலவாகக் காணப்பட்ட போதிலும், நெடு தேரினன் - பெரிய தேரினை யுடைய தேவாந்தகன், கடு நெடு போர்களத்து - கடுமையான பரந்த போர்க்களத்தில், ஒரு தான் புகுந்து - தான் ஒருத்தனய்ப்புக்கு, எற்றுன் - எதிர்த்தவனாய், கதிர் ஒப்பன - சூரியனை நிகர்ப்பனவான, சில வெம்கணை - சில கொடிய அம்புகளை, அநுமான் உடல் கரந்தான் - அநுமன் உடலில் புக்கு ஒளிக்குமாறு செலுத்தி, கடல் அதிர - கடலும் முழங்குமாறு, மழை ஏறு என ஆர்த்தான் - மேகத்தின் முழக்கம் போன்று ஆர்ப்பரித்தான்.

ஒரு தான் புகுந்தேற்றல்; இது 'வருவிசைப் புனலைக் கற்சிறை போல, ஒருவன் தாங்கிய பெருமையானும்' என்ற வஞ்சித்துறையின் பாற்படும்: 'கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன், தார்பற்றி யேர்தரு தோணேக்கித், தார்ப்பின்னர், ஞாட்பினுள் யானைக்கண நோக்கிக்-கூர்த்த, கணைவரவு நோக்கித் தன் வேனைக் இப் பின்னைக், கிணைவனை நோக்கி நகும்' (தொல். புறத். 63). 'வேந் துடைத்தானை முனைகெட நெரிதலின், எந்துவாள் வலத்தன்

ஒருவன் ஆகித், தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற், காழியனோயன் மாதோ' (தொல். புறத். 63). சீவக. 451-ம் காண்க.

பி - ம். 2. கருநெடும்.

4. அதிரத்தலே ; மழையாமென. 165

1827. அப்போதினி னனுமானுமொர் மரமோச்சிநின் றார்த்தான்
இப்போதிவ னுயிர்போமென வுருமேறென வெறிந்தான்
வெப்போவென வெயில்கால்வன வயில்வெங்கணை
[விசையால்
துப்போவெனத் துணியாம்வகை தேவாந்தகன் துரந்தான்.

அப்போதினின் - அக்காலையில், அநுமானும் - அநுமானும், ஒரு மரம் - ஒரு மரத்தை, ஓச்சி நின்று - உயர எடுத்து நின்று, ஆர்த்தான் - பேராரவாரம் செய்து, 'இப்போது இவன் உயிர் போம் - இக்கணத்திலேயே இவன் உயிர் கழியும்', என - என்று மொழிந்து, உரும் எறுஎன எறிந்தான் - பேரிடி போன்று வீசினான் ; வெப்போ என - நெருப்பின் வடிவுதானோ என்று கருதுமாறு, வெயில் கால்வன - வெம்மையை வெளிப்படுத்துவனவான, அயில் வெம்கணை - கூர்மையான வெவ்விய அம்பின், விசையால் - வேகத்தால், 'துப்போ - (இம்மரம்) ஒரு வலியுடைய தாமோ', என - என்று பகர்ந்து, துணி ஆம்வகை - துண்டு படும்படி, தேவாந்தகன் துரந்தான் - தேவாந்தகன் விடுத்தான்.

ஓச்சி - எறிவதற்காக உயர்த்தல், 'கடிதோச்சி மெல்ல எறிக' (குறள். 562) ; தேவாந்தகன் - இராவணன் புதல்வர்களில் ஒருவன். தேவர்க்கு யமன் போன்றவன் என்பது பொருள். துப்பு - வலிமை ; 'துப்புற முருக்கியுயிருண்பல்' (சுந்தர. 696).

பி - ம். 1 : மரமேந்தி.

3. காய்வன.

4. துணியாநெடுஞ் ; அறுத்தான். 166

1828. மாருங்கொரு மலைவாங்கினன் வயவானரக் குலத்தோர்
ஏருங்கது வெறியாதமுன் முறியாயுக வெய்தான்
கோருங்கிய சிலையானுடன் நெடுமாருதி கொதித்தான்
பாருமெனப் புகப்பாய்ந்தவ னெடுவில்லினைப் பறித்தான்.

வயம் வாநரம் குலத்தோர் - வெற்றியமைந்த வாநரக் குலத்தோரில், ஏறு - சிறந்தவனான அநுமன், ஆங்கு - அப்போது, மாறு ஒருமலை வாங்கினன் - மாறாக ஒருமலையைப் பெயர்த்தான்; அது - அந்த மலையை, ஆங்கு - அவ்விடத்து, எறியாத முன் - வீசுவதற்கு முன்னரே, முறியாய் உக - துண்டாக விழுமாறு; எய்தான் - (தேவாந்தகன்) வாளியினை விடுத்தான்; கோல் தாங்கிய சிலையானுடன் - அம்பைத் தரித்த வில்லினைக் கைக்கொண்ட, அந்தத் தேவாந்தகனுடன், நெடுமாருதி - பெருமை சான்ற அநுமன், கொதித்தான் - மனம் வெகுண்டு, பாறுஆம்என புகபாய்ந்து - பருந்து புகுந்தாற் போன்று பாய்ந்து, அவன் - அந்த அரக்கனுடைய, நெடுவில்லினை பறித்தான் - நீண்ட வில்லினைக் கைப்பற்றினான்.

உடையான் அரசருள் ஏறு என்றாற் போன்று வாநரக் குலத்தோர்ஏறு எனப்பட்டது) 'ஏறூர்ந்தான் ஏறே' (திருமுரு. பாயிரம்) என்றதும் காண்க. முறி - துண்டு. 'நீண்ட வளையின் முறியொன்றுடைப்ப' (ஞானவா. சிரித். 107); நெடுமாருதி - உயரமும் பெருமையும் பற்றி நெடு என்ற அடைமொழி வந்தது, பாறு - பருந்து; 'பாற்றின மார்த்தன பணில மார்த்தன' (ஆரணிய. 393); 'பாறுடைப் பரிதிவேல்' (சீவக. 568); இச்செய்யுளும் இதன்பின் வரும் செய்யுளும் அந்தாதித் தொடை.

பி - ம். 1. குலத்தோர்க்கு.
2. ஏறுங்கதும்.
4. பாருங்கென.

167

1829. பறித்தானெடும் படைவானவர்
பலரார்த்திடப் பலவா
முறித்தான்அவன் வலிகண்டுயர்
தேவாந்தகன் முனிந்தான்
மறித்தாங்கொரு சுடர்த்தோமரம்
வாங்காமிசை யோங்காச்
செறித்தானவ விடத்தோண் மிசை
யிமையோர்களுந் திகைத்தார்.

(தேவாந்தகனுடைய) நெடுபடை பறித்தான் - நீண்ட வில்லை வலிந்துகைப் பற்றிய அநுமன், வானவர் பலர் ஆர்த்திட - தேவர்கள் பலர் (உவகையால்) ஆரவாரிக்க, பலவா முறித்தான் - பல படியாக ஒடித்தான்; அவன் வலி கண்டு - (அந்த) அநுமனது வலிமையைக் கண்ணுற்று, உயர் - வீரத்தாற் சிறந்த, தேவாந்தகன் முனிந்தான் - தேவாந்தகன் வெகுண்டவனாய், மறித்து - மீண்டும், ஆங்கு - அவ்விடத்து, ஒரு சுடர் தோமரம் - ஓர் ஒளிகொண்ட தோமரம் என்னும் படையினை, வாங்கா - கையில் வாங்கி, மிசை ஓங்கா - மேலோங்கி, அவன் இடதோளின் மிசை - அந்த அநுமனது இடது தோளிடத்து, செறித்தான் - நெருக்குமாறு எறிந்தான்; இமையோர்களும் திகைத்தார் - வானவர்களும் திடுக்கிட்டார்கள்.

வானவர் ஆர்ப்பு முன்னர்ப்பல இடங்களிலும் குறிக்கப் பெற்றது. பலவாக என்பது ஈறு குறைந்தது. தோமரம் - இருப்புலக்கை, தண்டாயுதமும் ஆம்; 'சூலம்வாண்மழுத் தோமரம் சக்கரம்' (ஆரணிய. 72); 'தோமர வலத்தர்' (பதிற். 54; 14): கைவேல் என்றும் கூறுவர். (பிங்.); வாங்கா, ஓங்கா; செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சங்கள். அநுமன் பறித்தபோது ஆர்த்தவர், தேவாந்தகன் தோமரம் செறித்தபோது திகைத்தார் எனப்பட்டது. இங்கு: 'ஆடாடென்ப வொருசாரோரே, ஆடன்றென்ப வொருசாரோரே' (புறநா. 85) என்பது காணத்தகும். இங்கு ஒருதிறத்தார்க்கே மகிழ்வும் துன்பமும் மாறிமாறி வந்தது. இமையோர்களும்: உம்மை உயர்வு சிறப்பு; புண்ணிய மிகுதியால் துன்பம் இன்னதென்றறியப்பெறாத இமையோர்களும் என்பது கருத்து.

பி - ம். 1. பகையானவர், பகைவாநரப்; பகைதிக்கிட, படையார்த்திட.

2: முறித்தானிவன்.

3. மிக. 188

1830. சுடர்த்தோமர மெறிந்தார்த்தலுங்
கனலாமெனச் சுளித்தான்
அடல்தோமரம் பறித்தான்திரித்
துருமேறென வார்த்தான்

புடைத்தானவன் தடந்தேரொடு
நெடுஞ்சாரதி புரண்டான்
மடத்தோகையர் வலிவென்றவன்
வானோர்முக மலர்ந்தார்.

சுடர் தோமரம் - ஒளிபொருந்திய இருப்புலக்கையை, எறிந்து ஆர்த்தலும் - (தேவாந்தகன்) வீசி முழங்கிய அளவில், மடம் தோகையர் வலி வென்றவன் - மடம் என்ற இயற்கைப்பண்புள்ள மகளிரின் வசிகரிக்கும் திறலை வெற்றிகொண்ட அநுமன், கனல் ஆம் என சுளித்தான் - தீப்போன்று வெகுண்டவனாய், அடல் தோமரம் பறித்தான் - வன்மைவாய்ந்த அந்த உலக்கையைப் பிடுங்கி, திரிந்து - சுழன்று, உரும் ஏறு என ஆர்த்தான் - பெரிய இடிபோன்று கர்ச்சனை செய்து, புடைத்தான் - அடித்தான்; (அதனால்), அவன் - அந்தத் தேவாந்தகனுடைய, நெடு தட தேரொடு - உயர்ந்த பெரிய இரதத்துடனே, சாரதி புரண்டான் - பாகனும் உருண்டான்; (அதனைக்கண்டு), வானோர் முகம் மலர்ந்தார் - இமையோர்கள் முகமலர்ந்து உவகைகொண்டனர்.

சுடர்த்தோமரம் என்பது முன் கவியிலும் வந்தது. அப் படைக்கு ஒளி சிறப்புப்போலும். சுளித்தல்: 'சுளிகிலே யாமெனத் தொழுகின்றார் சிலர்' (சுந்தர. 1053); 'மற்றவன் களியும் என்றலால்' (கிட்கிந்தா. 122). நெடு என்பது தேருக்கு அடையாக்கப் பட்டது. மடம்: மகளிருடைய பிறவிப்பண்புகளில் ஒன்று; 'அது கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை' (இறை. அகப்.) என்பர். தோகையர்: உவமவாகுபெயர்; மகளிர்க்கு நீண்ட கூந்தல்பற்றியும் சாயல்பற்றியும் நடைபற்றியும் தோகை உவமை. மடத்தோகையர் வலி வென்றவன்: 'நினைவானும் மாதர் நலம் பேறாது வளர்ந்திர்' (கிட்கிந்தா. 922) என்று சாம்பவன் அநுமனைப் புகழ்ந்ததும், 'பொலங்குழை யவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தேன்' (சுந்தர. 1279) என்று அநுமன் கூறியதும், 'அனையவன்குலத் தாய்வளை யாரிடம், நினைவி னெய்தின வீதியின் எய்தினான்' (சுந்தர. 274) என்றதும் காண்க.

பி - ம். 1. எடுந்து, செறிந்து; சுளிந்தான்.
2. அடர்தோமரம், அடத்தோமரம்; திரித்து, நிறத்து.
3. அடிந்தான்; புரள.
4. மடல்.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

துள்ளிக்களி வயவாநர ரார்த்தா ரவைதோன்றக்
கள்ளக்கடு நிருதக்குலங் கண்டப்படக் கண்டே
உள்ளக்கடு வேகத்தொடு தேவாந்தக னுளத்தே
கொள்ளப் படை யனையஃதொரு கொடுஞ்சூலம்கைக்
[கொண்டான்.

1831. சூலப்படை தொடுவான்றனை யிமையாதமுன்
[தொடர்ந்தான்
ஆலத்தினும் வலியானும்வந் தெதிரேபுகுந் தடர்த்தான்
காலற்கிரு கண்ணுன்றன கையாலவன் கதுப்பின்
மூலத்திடைப் புடைத்தானுயிர் முடித்தான்சிர மடித்தான்.

சூலம் படை தொடுவான் தனை - சூலாயுதத்தைக் கைப்பற்றிய தேவாந்தகனை, இமையாத முன் - கண்ணிமைப்போதிற்குள்ளாக, தொடர்ந்தான்-(அநுமன்) தொடர்ந்து பொரலானான்; ஆலத்தினும் வலியானும் - நஞ்சினும் வலிய தேவாந்தகனும், எதிரே வந்து புகுந்து அடர்த்தான் - எதிரே வந்து புகுந்து போர்செய்தான்; காலற்கு இரு கண்ணன் - யமனுடைய இருவிழிகளை நிகர்த்த அநுமன், தன கையால் அவன் கதுப்பின் மூலத்து இடை புடைத்தான்- தனது கரத்தால் அவனுடைய கன்னத்தின் அடியில் அறைந்து, சிரம் மடித்தான் உயிர் முடித்தான் - சிரத்தைக் கொய்து உயிர் இறச்செய்தான்.

தொடுவான் - தேவாந்தகன். ஆலம் விரைவில் கொல்லும் தன்மையால் உவமை; நிறத்தாலும் ஆம்; 'ஆல மன்னவர்க் கல்லையெற் கல்லையால்' (சுந்தர. 619); 'ஆலகாலந் திரண்டன்ன ஆக்கையார்' (ஆரணிய. 372). கதுப்பின் மூலம் - கன்ன மூலம்; கன்னம், காது; 'தும்பி தொடர் கதுப்ப' (பரி. 19, 30); 'காதங் கறுத்துச் செருப்பிட் டடித்துக் கதுப்பிற் புடைத்து' (தனிப்பா. காளமேகம்.). வன்மையானும் பிறரை அழித்தல் தொழிலானும் காலற்கிருகண்ணன் எனப்பட்டது. 'முடித்தான் சிரமடித்தான்'

என்ற இடத்துப் பிரயோகம் காண்க. கதுப்பின் மூலம் - பொட்டு என்பது ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. துடர்ந்தான்.

2. ஆலத்தினுங் கடியானும்; அடர்ந்தான், ஆர்ந்தான்.

3. காலற்றெறி, காலந்திரு, தனிக்.

4. சிரமிடிந்தான், சிரமுடித்தான். 170

## அதிகாயன் சினந்து அநுமனோடு பொரவந்து வீரம் பேசுதல்

1832. கண்டானெதி ரதிகாயனுங் கனலாமெனக் கனன்றான்
புண்டானெனப் புனலோடிழி யுதிரம்விழி பொழிவான்
உண்டேனிவ னுயிரிப்பொழு தொழியேனென வுரையாத்
திண்டேரினைக் கடிதேவெனச் சென்றானவ னின்றான்.

அதிகாயனும் - அதிகாயனும், எதிர் கண்டான் -(தேவாந்தகன் மரித்ததை) நேரில் கண்டு, கனல் ஆம் என கனன்றான் - தீப் போன்று மனம் வெம்பி, புண்தான் என - புண் என்று புலப்படுமாறு, புனலோடு இழி - நீர்வடிவமாய் ஒழுகுகின்ற, உதிரம் - இரத்தத்தை, விழி பொழிவான் - கண்களினின்று சொரிபவனாய், 'இவன் உயிர் இப்பொழுது உண்டேன் - இவன் உயிரை இக் கணத்திலேயே பருகினேன்; ஒழியேன் - பருகாது விடேன்', என உரையா - என்று பகர்ந்து, 'திண் தேரினை கடிது ஏவு - வலிய இரதத்தினை விரைவாகச் செலுத்துக', என - என்று (பாகற்குச்) சொல்லி, சென்றான் - (அந்த அநுமனிருந்த இடத்துக்கு) ஏகினான்; அவன் - அந்த அநுமனும், நின்றான் - எதிர்த்து நின்றான்.

உண்டேன்: விரைவும் தெளிவும்பற்றி வந்த காலவழுவமைதி. உரையா: செய்யா என்னும் வாய்பாடு.

பி - ம். 2. பெருந்தீரிய துதிரம்.

4. கடிதோட்டினன்; இவன். 171

1833. அன்னுன்வரு மளவின்றலை நிலைநின்றன வனிகம்
பின்னுனதும் முன்னுனது பிறிந்தார்களுஞ் செறிந்தார்
பொன்னுலுயர் நெடுமால்வரை போல்வானெதிர் புக்கான்
சொன்னுனிவை யதிகாயனும் வடமேருவைத்
[துணிப்பான்.

அன்னுன் வரும் அளவின் தலை - அவ்வதிகாயன் எதிர்த்து வரும் அளவில், அனிகம் நிலை நின்றன - அரக்கர்படைகள் தலை நிமிர்ந்து நின்றன; பின்னுனதும் முன்னுனது - பின்னிட்டதும் முன்வரலாயிற்று; பிறிந்தார்களும் செறிந்தார் - பிறிந்துசென்ற வீரர்களும் (வந்து) ஒன்றுகூடினர்; வடமேருவை துணிப்பான் அதிகாயனும் - வடமேரு மலையையும் பிளக்கவல்ல அதிகாயனும், பொன்னுல் உயர் நெடு மால்வரை போல்வான் எதிர் புக்கான் - பொன்னிலுலாகிய உயர்ந்த மிகப்பெரிய மலையான மேருவைப் போல்பவன் ஆன அநுமன் எதிரிற் புகுந்தவனுய், இவை சொன்னுன் - பின்வரும் வீரவசனங்களைப் பகர்ந்தான்.

அளவின் தலை: தலை ஏழனுருபு. அனிகம்: அனீகம் என்ற வடசொல். அதிகாயன் வடமேருவைத் துணிப்பவன், தன் எதிர் வந்த உயிர்மேருவைத் துணிக்கும் ஆற்றலின்றி இறத்தல் பின்னர் அறியப்படும்.

பி - ம். 1. பின்னுனது முன்னுனதும்.
3. வடமால்வரை.
4. அதிகாயனச் சுடர்மாருதி முன்னர்.



1834. தேய்த்தாயொரு தனியெம்பியைத்
தலத்தோடொரு திறத்தால்
போய்த்தாயினை நெடுமாகடல்
பிழைத்தாய்கடல் புகுந்தாய்
வாய்த்தானையு மடித்தாயது
கண்டேனெதிர் வந்தேன்
ஆய்த்தாயது முடிவின்றுனக்
கனித்தாகவந் தடுத்தாய்.

'(முன்னர்) ஒரு - ஒப்பற்ற, தனி எம்பியை - தனியாக நின்ற என் தம்பியை (அக்ககுமாரனை), தலத்தொடு - தரையோடு, தேய்த்தாய் - தேய்த்து, ஒரு திறத்தால் - ஒப்பற்ற திண்மையால், நெடுமா கடல் தாயினை போய் பிழைத்தாய் - நீண்டகன்ற கடலைத் தாவிச் சென்று உயிர் தப்பினாய்; (இப்போது) கடல் புகுந்தாய் - அரக்கர் கடலில் நுழைந்து, வாய்த்தானையும் - நல்ல வலிமை வாய்க்கப் பெற்றவனான தேவாந்தகனையும், மடித்தாய் - கொன்றாய்; அது கண்டேன் எதிர் வந்தேன் - அதைக்கண்டு உன் முன்னர் வந்திருக்கின்றேன்; இன்று உனக்கு முடிவு ஆய்த்தாயது - இன்று உனக்கு இறுதி நெருங்கிவிட்டது, (அதனால்தான்) அணித்து ஆக வந்து அடுத்தாய் - என் அருகே வந்து பொருந்தினை.

எம்பியைத் தேய்த்தது 'தேய்த்தானூழியின் உலகேழ் தேயினும் ஒரு தன் புகழிறை தேயாதான்' (சுந்தர. 968); 'எம்பியோ தேய்ந்தான் எந்தை புகழன்றோ தேய்ந்ததென்றான்' (சுந்தர. 985); என்று இந்திரசித்துக் கூறியதும் காண்க. 'சாந்தெனப் புதல்வன் தன்னைத் தரையிடைத் தேய்த்து' (யுத்த. 946); அக்கனைத் தேய்த்துவிட்டு அச்சம்கொண்டு கடலைத் தாவியதால், பிழைத்த தாக ஏசுகின்றான். ஆய்த்தாயது : ஆயது : ஒருபொருட் பன்மொழி, ஆயது ஆய்த்து என மாற்றுக.

பி - ம். 2. தாவினை; மால்கடல்; பிழைத்தா யெதிர், பிழைத்தாயிடை, பிழைத்தாயனல்.

3. வந்தோன்.

4. முடிவுன்றனக்கு; வந்தடைந்தாய், வந்தணைந்தாய். 173

1835. இன்றல்லது நெடுநாளுனை யொருநாளினு மெதிரேன்
ஒன்றல்லது செய்தாய்பல இளையோனையு முனையும்
வென்றல்லது மீளாதவென் மிடல்வெங்கணை மழையால்
கொன்றல்லது செல்லேன்இது கொள்ளென்றனன்
[கொடியோன்.

'இன்று அல்லது - (இன்றையதினம் கொன்றால்) அன்றி, உனை நெடுநாள் ஒரு நாளினும் எதிரேன் - உன்னை (இனிவரும்) நீண்ட நாட்களில் ஒரு நாளினும் தாக்கமாட்டேன்; ஒன்று அல்லது பல செய்தாய் - நீ ஒன்றலாது பல தீங்குகளும் புரிந்தனை;

(ஆதலின்), வென்று அல்லது மீளாத - வெற்றிபெற்றல்லது திரும்பாத, என் மிடல் வெங்கணை மழையால் - என்னுடைய வலிய கொடிய அம்புமாரியால், இளையோனையும் - இலக்குவனையும், உனையும் - உன்னையும், கொன்று அல்லது செல்லேன் - கொலை புரிந்தல்லது திரும்பிச் செல்லேன், இதுகொள் - இதனை உள்ளத்துப் பதிப்பாயாக, எனறனன் கொடியோன் - என்று பகர்ந்தான் தீயவனான அதிகாயன்.

இன்று அதிகாயன் அநுமனைக் கொல்லாவிடின், தண்டிற் புகுந்தால் இரண்டில் ஒன்ருகலின் அநுமனுல் அவன் கொல்லப்படுவது உறுதி. ஆகவே பின்னர் அவன் எதிர்த்துச் செல்வதற்கில்லை என்னும் பொருளும் 'ஒரு நாளினும் எதிரேன்' என்ற தொடரில் காணலாம்.

பி - ம். 1. எதிரே.
2. செய்தாயெமை ; முன்னை.
3. என்விறல் ; வேறு கணையால்.
4. கொல்லேனிது கொள்கென்றனன் 174

## அதுகேட்டு அனுமான் திரிசிரனையும் யான்கொல்லும்படி அழைத்துக்கொள் எனல்

1836. பிழையாதிது பிழையாதெனப் பெருங்கைத்தலம் பிசையா
மழையாமெனச் சிரித்தான்வட மலையாமெனு நிலையான்
முழைவாளரி யனையானையும் எனையும்மிக முனிவாய்
அழையாய்திரி சிரத்தோனையும் நிலத்தோடுமிட்
[டரைப்பான்.

வடமலையாம் எனும் நிலையான் - வடதிக்கின்கண் உள்ள மேரு மலை என்னுமாறு சலியாத நிலையையுடைய அநுமன், (அவன் சொற்களைக் கேட்டு), 'முழைவாள் அரி அனையானையும் - குகையில் வாழ்கின்ற சிங்கம் போன்ற இலக்குவனையும், எனையும் - என்னையும், மிக முனிவாய் - மிகவும் கோபிக்கின்றனை ; நிலத்தோடும் இட்டு அரைப்பான் - (யான்) தரையில் இட்டுத் தேய்ப்பதற்கு, திரிசிரத்தோனையும் அழையாய் - திரிசிரனையும் அழைப்பாயாக,

இதுபிழையாது பிழையாது - நான் சொல்லும் இச் சொல் தவறாது தவறாது' என - என மொழிந்து, பெருகைதலம் பிசையா - பெரிய கரங்கள் இரண்டையும் பிசைந்துகொண்டு, மழையாம் என சிரித்தான் - மேகத்தினிடிபோன்று வெடிபட நகைத்தான்.

உன் சினம் என்மீது மட்டும் அன்றி இலக்குவன் மீது மாதலின், சாகப்போகின்ற உனக்கு வழித்துணையாகத் திரிசிரனையும் அழைத்துவா என்றான். 'பிழையாது பிழையாது' என்ற அடுக்கு நிச்சய நிகழ்ச்சியைக்குறித்து நின்றது. கைத்தலம் பிசைந்தது, மழையெனச் சிரித்தது, என்ற இவை வெகுளியின் மெய்ப்பாடுகள். முழைவாளரி 'முழையினின்றெழுந்து செல்லு மடங்கல்' (ஆரணிய. 426); 'அவ்விசை முழை யேற்றழைப்ப' (பரி. 19, 63); கரன் வதைப்படலத்து இராமபிரான் அம்பு பட்டு அழிந்த ஒரு திரிசிரா உண்டு: (ஆரணிய. 497). இவன் அவன் மகனோ அல்லது அவன் பெயர்கொண்ட ஒருவனோ ஆதல்கூடும். சிரித்தான்: வீரத்தெழுந்த வெகுளிநகை. அரைப்பான்: பானீற்று வினையெச்சம்.

பி - ம். 1. பிணையா.

3. வாழரி; இளையாளினுமேனை நிமிக.

4. தலந்தோடும்; இட்டரைப்ப, இட்டரைக்க. 175

அதுகேட்ட திரிசிரசு வந்துசேர இருவரும் பொருதல்

1837. ஆமாமெனத் தலைமூன்றுடை யவனார்த்துவந் தடர்த்தான்
கோமான்தனிப் பெருந்தூதனு மெதிரேசெருக்
[கொடுத்தான்
காமாண்டவர் கல்லாதவர் வல்லீரெனக் கழறு
தாமாண்டற வயல்நின்றவர் நடுவேபுக நடந்தான்.

(அநுமன் சொற்களைக் கேட்டு), 'ஆம் ஆம் என - சரி சரி' என்று மொழிந்து, மூன்று தலையுடையவன் - மூன்று தலையுடைய வனான திரிசிரசு, ஆர்த்து வந்து அடர்த்தான் - ஆரவாரம் செய்து கொண்டுவந்து எதிர்த்தான்; கோமான் தனிபெரு தூதனும் - சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமபிரானுடைய ஒப்பற்ற பெருமை

சான்ற தூதனாகிய அநுமானும், எதிரே செரு கொடுத்தான் - எதிர் எதிராகப் போர் தந்து, 'காமாண்டவர் அல்லாதவர் - காத்தல் தொழிலில் மாட்சிமைப்பட்டவர் அல்லாதவராகிய நீங்கள், வல்லீர் - என்னோடு பொரவல்லவர் ஆவீர்', என கழறு - என்று சொல்லி, அயல் நின்றவர் நாமாண்டு அற - அருகே நின்றவருடைய நாவானது நீர்ப்பசையற்று வற்றியொழிய, நடுவே புக நடந்தான் - நடுவே புகுமாறு நடந்தான்.

ஆம் ஆம் என்றது அதிகாயன் சொற்களை ஏற்றமை. கழறுதல் - இடித்துரைத்தல் என்ப. நாமாண்டு அறவென்க. வல்லீர் : பிறகுறிப்பு. கா என்பதை முதனிலைத் தொழிற் பெயராக்கிக் காத்தலை மாண்டவர் (அல்லாதவர்) அதாவது காத்தல் தொழிலில் வல்லவர் அல்லாதவர் என்று பொருள் செய்யப் பட்டது. நாப்பசை அறல் : அச்சத்தால் நிகழ்வது.

பா - ம். 1. அடர்ந்தான், உடைந்தான்

2. செருக்குறித்தான் ; கொடுப்பான்

3. இல்லாதவர் மாண்டவரயனின்றவர், மாண்டரை யளின்றுற. 176

## திரிசிரசைத் தரையிலிட்டரைத்திட்டு அநுமன் மேற்றிசை வாயிலுக்குச் செல்லுதல்

1838. தேர்மேற்செலக் குதித்தான்திரி
சிரத்தானையோர் திறத்தால்
கார்மேல்துயின் மலைபோலியைக்
கரத்தாற்பிடித் தெடுத்தான்
பார்மேற்படுத் தரைத்தானவன்
பழிமேற்படப் படுத்தான்
போர்மேற்றிசை நெடுவாயிலி
னுளதாமெனப் போனான்.

தேர்மேல் செலகுதித்தான் - (அந்தத் திரிசிரனுடைய) தேரின் மீது சேருமாறு குதித்து, கார்மேல் துயில் மலைபோலியை திரிசிரத் தானை - தன்மீது மேகம் படியப்பெற்ற மலையொப்பவனான திரிசிரனை,

ஓர் திறத்தால் - ஒப்பற்ற வன்மையால், கரத்தால் பிடித்து எடுத்தான் - கையாற்பற்றி உயர்த்தி, பார்மேல் படுத்து அரைத்தான் - பூமிமீது தள்ளித் தேய்த்து, அவன் - அந்த அரக்கனுக்கு, பழிமேல் பட படுத்தான் - பழிப்பு மிகுமாறு கொன்றான்; (பின்னர்), போர் - சண்டை, மேல்திசை நெடு வாயலின் உளது ஆம் என போனான் - மேலைத்திக்கில் உள்ள பெரிய வாயிலில் உள்ளது என்று (அங்குச்) சென்றான்.

ஒரு திறத்தால்: ஒருவகை அல்லது சூழ்ச்சியால் எனினுமாம். மேற்றிசைக்கு அநுமன் ஏகினன் என்பதுகொண்டு, இப்பொழுது நிகழ்ந்த போர் இலக்குவன் இருந்த வடதிசை வாயிலின் நிகழ்ந்தது என்று உணர்க. கார்மேல் துயில் என்பது மலைக்கு இயற்கை அடை: 'தும்புடை நெடுங்கை வேழம்' (சீவக. 232); 'குருதிக்கோட்டுக் குஞ்சர நகரம்' (சீவக. 2182) என்ற இடங்களிற் போல.

பி - ம். 2. கார்போல்

3. உரைத்தான் அவன்; வழிமேற்பட

4. வாயினில். 177

வேறு

## அதிகாயன் அநுமனுடைய திறத்தை மனத்தினுள் வியத்தல்

1839. இமையிடை யாகச் சென்றா
விகலதி காய னின்றான்
அமைவதோன் றாற்றல் தேற்றா
னருவியோ டழல்கால் கண்ணான்
உமையொரு பாக னேயு
மிவன்முனிந் துருத்த போது
கமையில னாற்ற லென்னாக்
கதத்தொடுங் குலைக்குங் கையான்.

இமை இடை ஆக சென்றான் - கண்ணிமைப்பொழுதான ஒரு மாத்திரைப்பொழுதிற்குள்ளாக (மேற்றிசைவாயிற்கு அநுமன்)

சென்ருன்; இகல் அதிகாயன் - மாறுபட்ட அதிகாயன், அமைவது ஒன்று ஆற்றல் தேற்ருன் - பொருந்தியதொரு செயலைச் செய்தற்கு அறியாது, அருவியோடு அழல் கால் கண்ணன் - நீரருவியோடு நெருப்பையும் வெளிவிடுகின்ற விழிகளையுடையவன் ஆகி, நின்ருன் - (திகைத்து) நின்றவனுய், 'உமை ஒரு பாகனேயும் - பார்ப்பதியை ஒரு பாகத்தில் வைத்துள்ள சிவ பெருமானும், இவன் முனிந்து உருத்தபோது - இந்த அநுமன் வெகுண்டு சினத்தை வெளிக்காட்டுங்கால், கமை ஆற்றல் இலன் - (அதனைப்) பொறுக்கும் வன்மையுடையன் அல்லன்', என்ஞ - என்று மொழிந்து, கதத்தொடும் குலைக்கும் கையான் - சினத்துடன் நடுங்குகின்ற கரத்தினை உடையவன் ஆஞன்.

கண்ணிமைப்பொழுது - ஒருமாத்திரை அளவு; 'கண்ணிமை கைந்நொடி யவ்வே மாத்திரை' (தொல். எழுத். நூன்மரபு. 7). இகல் - மாறுபாடு; 'இகல் இலர் எஃகுடையார்' (நாலடி. 137); 'இகல் கடந்த புலவுவேலோய்' (பால. கையடை. 7). அருவியோடழல்: திரிசிரன் முதலானோர் இறந்ததற்கு அருவிநீர், மற்றும் வெகுளியின் குறிப்பான அழல்கண்; இரு மெய்ப்பாடுகளும் மாறிமாறி உடனிகழ்வதைப் போரிற் காணலாம்; 'தம்பியை யுன்னும் தோறும் தாரைநீர் ததும்பும் கண்ணன், வம்பியல் சிலையைநோக்கி வாய்மடித் துருத்து நக்கான்' (சுந்தர. 985); 'துன்பமு முவகையும் சுமக்கும் உள்ளத்தாள்' (சுந்தர. 538).

பி - ம். 2. அமைவதென்று, அமைவிதொன் ருற்றலேற்ருன்; அழல்காய்; கண்ணான்.

3. பாகனேனும்; உருத்தகாலைக், போழ்து.

4. கமையுறற்பாலன், கமைவில ஞற்றல்; என்னுஞ்; சிரத்தொடுங், கரத்தொடுங். 178

## அதிகாயன் பொருமாறு இலக்குவன்மேற் செல்லுதல்

1840. பூணிப்பொன் றுடைய ஞகிப்
புகுந்தநான் புறத்து நின்று
பாணித்தல் வீர மன்ருற்
பருவலி படைத்தோர்க் கெல்லாம்

ஆணிப்பொன் னானன் தன்னைப்
பின்னுங்கண் டறிவ னென்னாத்
தூணிப்பொற் புறத்தான் திண்டே
ரிளவன்மேல் தூண்டச் சொன்னான்.

'பூணிப்பு ஒன்று உடையன் ஆகி - (இலக்குவனைக் கொல்வது நல்லது என்று) ஓர் உறுதி கொண்டவனாய், புகுந்த நான் - புக்க நான், புறத்து நின்று பாணித்தல் வீரம் அன்று - பிறிதொரு காரியத்திலே தாழ்ந்து நிற்பது வீரமாகாது; தூணி பொன் புறத் தான் - அம்பறாத் தூணியைப் பொன்போன்ற புறத்திற் பிணித்தவ னும், பரு வலி படைத்தோர்க்கு எல்லாம் - மிக்க வன்மை பெற்றோர்க்கெல்லாம், ஆணிப்பொன் ஆனான் தன்னை - ஆணிப் பொன்போல் சிறந்தவனுமான இலக்குவனுடைய வன்மையை, பின்னும் கண்டு அறிவன் - இந்தப்போர் முடிந்தபின்னர் பொருது தெரிந்துகொள்ளப் போகின்றேன்', என்னா - என்று பகர்ந்து, (அதிகாயன்), இளவல் மேல் திண்தேர் தூண்ட சொன்னான் - இலக்குவனை நோக்கி உறுதிவாய்ந்த இரதத்தினைச் செலுத் துமாறு மொழிந்தான். ஆல் - அசை.

பூணிப்பு - சங்கற்பம்; 'பூமியில் புரட்டலென் பூணிப்பாம்' (சுந்தர. 1105); (ஒப்பு): ஆரணிய. 354 சூர்ப்பணகை சூழுறவு. பாணித்தல் - தாமதித்தல்; 'பாணித்து நின்று பயனாவ தென்னை' (ஆரணிய. 961); 'பாணியே மென்றார்' (கலித். 102). ஆணிப் பொன் - மாற்றுயர்ந்த பொன், சாம்பூநதம் போன்றது; 'ஆணிப் பொன்னால் செய்த தொட்டில்' (பெரியாழ். 1:8:1); உரையாணி யாக அமையும், உயர்ந்த பொன் எனினுமாம்; 'ஆணிப்பொ னம்பலத்தே கண்ட காட்சிகள் அற்புதக் காட்சியடி' (திருவருட்.) 'ஆணிப்பொன் வேங்கை' (ஆரணிய. 649); 'ஆணிப்பொன்னா கியது' (ஆரணிய. 773).

பா - ம். 1. புகுந்துதான், புகுந்துநான்.

2. பொன் அணையான், அன்னான்.

3. புயத்தான். 170

இதன்பின், 'முழங்கின' என்ற பாடல் சில பிரதிகளில்.

### அதிகாயன் சேனையுடன்கூட இலக்குவனும் எதிரே நிற்றல்

1841. தேரொலி கடலைச் சீறச் சிலையொலி மழையைச் சீறப்
போரொலி முரசி னோதை திசைகளிற் புறத்துப் போகத்
தாரொலி கழற்கான் மைந்தன் தானையுந் தானுஞ்
[சென்றான்
வீரனு மெதிரே நின்றான் விண்ணவர் விசயம் வேண்ட.

தேர் ஒலி கடலை சீற - தேர் ஒலியானது கடலைச் சீறவும், சிலை ஒலி மழையை சீற - வில்லின் ஒலி மழையைச் சீறவும், போர் ஒலி முரசின் ஓதை திசைகளின் புறத்து போக - போரில் ஒலிக்கின்ற முரசின் ஒலியானது திக்குகளினையும் கடந்து செல்லவும், தார் ஒலி - போர்க்குரிய வஞ்சிமாலை தழைத்த, கழல்கால் மைந்தன் - கழலைப்புனைந்த காலையுடைய வீரன் ஆன அதிகாயன், தானையும் - படையும், தானும் சென்றான் - தானுமாகச் சென்றான்; விண்ணவர் விசயம் வேண்ட - தேவர்கள் வெற்றியை விரும்ப, வீரனும் - இலக்குவனும், எதிரே நின்றான் - எதிரே நின்றான்.

தார் - போர்மாலையான வஞ்சி. ஒலி - ஒலித்தல்; முதனிலைத் தொழிற்பெயர். விசயம் - வெற்றி; விஜயம் என்ற வடமொழியின் தமிழாக்கம்.

பி - ம். 2. பேரொலி; திசைகளின் புறத்துஞ் செல்ல. 180

### தேரில் வந்த அதிகாயனும், அங்கதன் தோளில் அமர்ந்த இலக்குவனும் பொருதல்

1842. வல்லையி னணுக வந்து வணங்கினன் வாலி மைந்தன்
சில்லியந் தேரின் மேலா னவனமர் செவ்வி தன்றால்
வில்லியர் திலத மன்ன நின்திரு மேனி தாங்கப்
புல்லிய வெனினு மென்றோ ளேறுதி புனித வென்றான்.

வல்லையின் - விரைவாக, அணுக வந்து - அருகே வந்து, வணங்கினன் - வழிபட்டவனாகி, வாலி மைந்தன் - வாலியின் புதல்வனான அங்கதன், 'அவன் சில்லி அம் தேரின் மேலான் - அவன்

சக்கரங்களையுடைய அழகிய தேரின்மீது உள்ளான்; அமர் செவ்விது அன்று-(அவனுடன் தரையிலிருந்தவண்ணம்) போர்புரிதல் செந்நெறியாகாது; வில்லியர் திலதம் அன்ன - வில்லாளிகட்குத் திலகம்போன்ற, நின் திருமேனி தாங்க - உனது திருமேனியைத் தாங்குதற்கு, புல்லிய எனினும் - அற்பமானவை ஆயினும், புனித - புனிதனே! என் தோள் ஏறுதி - என் புயத்தின்மீது ஆரோகணிப்பாயாக', என்றான் - என்று பகர்ந்தான். ஆல் - அசை.

வல்லை - விரைவு. சில்லி - சக்கரம்; 'பொற்றேர்ச் சில்லிகள்' (சுந்தர. 872). திலதம் - நெற்றிப்பொட்டு, அழகு தருவது; 'அமர் செவ்வி தன்றால்' (யுத்த. முதற்போர். ). 'வில்லாளராளர்க்கெல்லாம் மேலவன்' (யுத்த. இந்திரசித்து. 56) என்று இந்திரசித்தினைப் புகழ்ந்தது காண்க. திலதம் - திலகம் என்றும் வழங்கும். இச்செய்யுள் அங்கதன் கூற்று.

பி - ம். 1. வணங்கிய.

2. மேலோனிவன்; செய்யபாரின்.

3. திலகமன்னாய்.

4. புல்லியன். 181

1843. ஆமென வமலன் தம்பி யங்கத னலங்கற் றோண்மேல்
தாமரைச் சரணம் வைத்தான் கலுழனிற் றாங்கி நின்ற
கோமக னாற்ற னோக்கிக் குளிர்கின்ற மனத்த ராகிப்
பூமழை பொழிந்து வாழ்த்திப் புகழ்ந்தனர் புலவ
[ரெல்லாம்.

'ஆம் என - சரி என்று ஏற்று' அமலன் தம்பி - தூயோனான இராமபிரானின் தம்பியான இலக்குவன், அங்கதன் - அங்கதனுடைய, அலங்கல் தோள்மேல் - பூமாலை புனைந்த தோளின்மீது, தாமரை சரணம் வைத்தான் - தாமரை மலர்போன்ற தன் பாதங்களை வைத்தனர்; கலுழனில் - கருடன் (திருமாலைத் தாங்குவது) போன்று, தாங்கி நின்ற - இலக்குவனை ஏற்று நின்ற, கோமகன் ஆற்றல் நோக்கி - அரசகுமாரன் ஆன அங்கதனுடைய திறனைப் பார்த்து, குளிர்கின்ற மனத்தர் ஆகி - குளிர்ந்த உள்ளத்தார் ஆகி,

புலவர் எல்லாம் - வானவர் அனைவரும், பூமழை பொழிந்து வாழ்த்தி புகழ்ந்தனர் - பூமாரி பொழிந்து வாழ்த்திப் புகழ்ந்தார்கள்.

கலுழனில்: இல் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருளில் வந்தது.

பி-ம். 1. ஆமென்று மன்னன், ஆமென்னும் அண்ணல்.
3. மனத்தனுகி.
4. வாழ்ந்துப் புகன்றனர்; வானோர் போயதெம் பொருமலென்றார். 182

1844. ஆயிரம் புரவி பூண்ட வதிர்குர லசனித் திண்டேர்
போயின திசைக ளெங்குங் கறங்கெனச் சாரி போமால்
மீயெழி னுயருந் தாழிற் றாழும்விண் செல்லிற் செல்லும்
தீயெழ வுவரி நீரைக் கலக்கினுன் சிறுவ னம்மா.

உவரி நீரை தீ எழ கலக்கினுன் சிறுவன் - பாற்கடல் நீரை நெருப்புப் பிறக்குமாறு உழக்கினவனுன வாலி மைந்தன் அங்கதன், ஆயிரம் புரவி பூண்ட - ஆயிரம் குதிரைகள் கட்டப் பெற்றதும், அதிர் குரல் - குரல் முழக்கத்தால், அசனி - இடியை நிகர்த்ததுமான, திண் தேர் - (அதிகாயனுடைய) வலிய இரத மானது, போயின திசைகள் எங்கும் - சென்ற சென்ற திக்குகளில் எல்லாம், கறங்கு என - (தானும்) காற்றாடிபோன்று, சாரி போம் - சாரி போவான்; மீ எழின் உயரும் - நேர் மேலே கிளம்பினுல் தானும் கிளம்புவான்; தாழில் தாழும் - தணிந்தால் தணிவான்; விண் செல்லில் செல்லும் - ஆகாயத்தில் செல்லுமேல் அங்கும் செல்வான் ஆனுன். அம்மா - வியப்பிடைச்சொல். ஆல்; அசை.

இந்திரசித்தின் தேர்: ஓராயிரம் பரிபூண்டதாகக் கூறப் படுதல் காண்க; (யுத்த. நிகும்பலை. 101); ‘ஆயிரம் பரி யமுதத்தின் வந்தவு மருக்கன், பாய்வ யப்பசுங் குதிரையின் வழியவும் படர்நீர், வாய்ம டுக்குமா வடவையின் வயிற்றின்வன் காற்றின், நாயகற்கு வந்துதித்தவும் பூண்டது’ (யுத்த. இராவணன் தேரேறு. 19)-உம காணத்தகும். இத்தேர்கள்கூட அதில் ஏறுபவர் தகுதிநோக்கி வருணிக்கப்படும்; ‘அக்க குமாரன் தேர் நூறொடு நூறுபூண்ட

நொறில்வயப் புரவி னோன்றேர்' (சுந்தர 937) எனக் கூறப் படுதல் காண்க. அதிகாயனைப் போருக்குச் செல்லுமாறு ஏவி 'வாரேறு வயப்பரி யாயிரம்வன், போரேறிட வேறுவ பூணுறு திண், தேரேறுதி தந்தனன்' (யுத்த. 1679) என்று இராவணன் கூறுவதும் இங்குக் காணத்தகும். இருவரும் புரிந்த போர்த் திறம் இனிதாகக் கூறப்பட்டிருத்தல் காண்க. நியெழ உவரி நீரைக் கலக்கினான் வாலி; கிட்கிந்தா. 115, 249, 252, 253, 367, 372; சுந்தர. 518; யுத்த. 936 என்பன காண்க. உவரிநீர்: உவர்ப் பான கடல்நீர்; இ; பெயர்விகுதி. உவரி என்ற சிறப்புப்பெயர் 'கடல்' என்ற பொதுப்பொருளில் வந்தது. கடையப்பட்டது நீர்க்கடல் என்றும் வரலாறுண்டு.

பி - ம். 1. ஆயிரம்கோடிமாபூண் டநிர்குவ.
2. திசைகடோறும்; போவான்.
3. மீயெழின் மேலாம்; மேலின் மேவும். 183

1845. அத்தொழில் நோக்கி யாங்கு வாநரத் தலைவ ரார்த்தார்
இத்தொழில் கலுழற் கேயு மரிதென விமையோ
ரெல்லாம்
கைத்தலங் குலைத்தா ராகக் களிற்றினும் புரவி மேலும்
தைத்தன விளைய வீரன் சரமெனுந் தாரை மாரி.

அ தொழில் நோக்கி - அங்கதனுடைய அச்செயலைக் கண்ணுற்று, ஆங்கு - அப்போது, வாநரர் தலைவர் ஆர்த்தார் - குரங்குப்படை வீரர்கள் ஆரவாரம் செய்தனர், இ தொழில் கலுழற்கேயும் அரிது - 'இந்த அரிய போராற்றல் கருடனுக்கும் அரியது' என - என்று, இமையோர் எல்லாம் - தேவர்கள் அனைவரும், கை தலம் குலைத்தார் ஆக - கைகள் நடுங்கப்பெற்றாராக, களிற்றினும் புரவி மேலும் - யானைகளின் மீதும் குதிரைகளின் மீதும், இளைய வீரன் - இலக்குவனுடைய, சரம் எனும் தாரை மாரி - அம்பு என்கின்ற தாரையாகப் பெய்கின்ற மாரிகள், தைத்தன - ஊடுருவிச் சென்றன.

கலுழன்: கருடன். 'வருவ போற் கலுழன் மேல் வந்து தோன்றினான்' (பால. திருவவ. 13); கைத்தலம் குலைத்தல். 'காத்

தொடுங் குலிக்குங் கையான்' (யுத்த. 1839) மற்றும் இப்படலம் 179ம் காண்க.

பி - ம். 1. ஆங்கண், ஓங்கும்.

3. குலைந்தார் பின்னைக், பின்னு, பின்னுர், இந்தக், தேரின் மேலும்.

1846. முழங்கின முரசம் வேழ முழங்கின மூரித் திண்டேர்
முழங்கின முரணைப் பாய்மா முழங்கின முழுவெண் சங்கம்
முழங்கின தனுவி னோதை முழங்கின கழலுந் தாரும்
முழங்கின தெழிப்பு மார்ப்பு முழங்கின முகிலின் மும்மை.

முரசம் முழங்கின - முரசம் ஒலித்தன, வேழம் முழங்கின - களிறுகள் பிளிறின; மூரி திண் தேர் முழங்கின - மிக வலிய தேர்கள் பெரொலி செய்தன; பாய் மா முரண முழங்கின - குதிரைகள் மாறு படுவதற்காகக் கனைத்தன; முழு வெண் சங்கம் முழங்கின - பூர்ண மான வெள்ளிய சங்கநாதம் எழுந்தன; தனுவின் ஓதை முழங்கின - வில்லின் நாணொலி முழங்கின; கழலும் தாரும் முழங்கின - வீர கண்டையும் கிண்கிணி மாலையும் ஒலித்தன; தெழிப்பும் ஆர்ப்பும் முகிலின் மும்மை முழங்கின - வீரர்களின் அதட்டொலியும் ஆர வாரமும் மேகத்தினும் மும்மடங்கு முழங்கின.

முரண் அப்பாய்மா எனவும் பிரிக்கலாம். பாய்மா - குதிரை. 'கொட்புறு புரவி' (சுந்தர. 25); சொற் பொருட்பின்வரு நிலை யணி.

பி - ம். 1. புரசை வேழம்.

2. மூரிப், முகரப். 185

இதன்பின், 'வல்லையின்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

1847. கரிபடக் காலாள் வெள்ளங் களம்படக் கலின கால்போல்
பரிபடக் கண்ட னற்றும் பயம்படப் பைம்பொற் றிண்டேர்
எரிபடப் பொருத பூமி யிடம்பட வெதிர்ந்த வெல்லாம்
முரிபடப் பட்ட வீரன் முரட்கணை மூரி மாரி.

களம் - போர்க் களத்தில், கரிபட - யானைகள் மடியவும், காலாள் வெள்ளம் பட - காலாட்களின் கூட்டம் இறக்கவும், கலினம்- கல்லணை பூண்ட, கால்போல் பரிபட - காற்றுப்போற் செல்லும் குதிரைகள் மரிக்கவும், கண்ட கூற்றும் - (அந்தப் போரின் தீவிரத்தைக்) கண்ணுற்ற யமனும், பயம்பட - அச்சம் எய்தவும், பைம் பொன் திண் தேர் எரிபட - பசிய பொன்னாலியன்ற உறுதியான தேர் எரியுண்ணவும், பொருத பூமி இடம்பட - போர்புரிந்த யுத்தகளம் (சேனைகள் இறந்துபட்டமையின்) அகன்று காணப்படவும், எதிர்ந்த எல்லாம் முரிபட - எதிராக வந்த சேனைகள் எல்லாம் அழியவும், வீரன் முரண் கணை மூரி மாரி - இலக்குவனுடைய வலிய அம்புகளாகிய பெருமழை, பட்ட - மிகுதியாக உண்டாயின.

யானை முதற்கண் நிற்பதாகலின் கரிபட என்று அதனை முன்னும், அடுத்த முன் அணியில் காலாட்களாகலின், அவர்களை அதன் பின்னும், பரிகளை அதன் பின்னும், இயக்கம் மெதுவாகலின் தேரினை அதன் பின்னும் கூறினர் என்க. கலினம்: குதிரைச் சேணம். 'கொட்புறு புரவி' (சுந்தர. 25); கால்போல் பரி - காற்றுப் போன்ற வேகமுடையது. கூற்றும்: உம்மை உயர்வு சிறப்பு. இடம் படல்: விசாலமாதல் 'இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும்' (நாலடி. 116); படுதல்-நிகழ்தல்.

பி - ம். 1. களப்படக், காலின் கால்போல், கலினக்காலப்.
2. கூற்றம், பயப்படப்.
3. விநியெல்லாம், எய்திற்றெல்லாம்; ஏயிற்றெல்லாம். 186

இங்கு அதிகப் பாடல்கள்—

ஆங்கது நிகழக் கண்ட வடலதி காயன் சிறித்
தாங்குபல் லண்ட கோடி தான்பிளந் துடையத் தன்கை
வாங்கினன் சிலைநா ணோசை படைத்தபின் வாளி மாரி
பாங்குறு கவியின் சேனைக் கடல்மிசைப் பரப்பி யார்த்தான். 1

ஆர்த்தரும் பகழி மாரி யாயிர கோடி மேலும்
நூர்த்தடற் கவியின் சேனை துகள்படத் துணிந்து சிந்தப்
பேர்த்தனன் சிலைநா ணோதை பிறைமுகப் பகழி பின்னும்
கோத்தன வனந்த கோடி கோடியின் கொதித்து
வெய்யோன். 2

உருத்ததி காயன் மேன்மே லொண்சுடர்ப் பகழி மாரி
நிரைத்தலி னிடைவிடாது நெடுங்கவிச் சேனை வெள்ளம்
தரைத்தல மதனில் பட்டுத் தலையுடற் சிதறச் சோரி
யிரைத்தெழு கடலிற் பொங்க யிமையவ ரலக்க ணுற்றார். 3

கரடியின் சேனை யோடு கவிக்குலத் தானை யெல்லாம்
தரைப்படச் சரத்தின் மாரித் தசமுகன் சிறுவன் சீறக்
கரையறு கவியின் சேனைத் தலைவர்கள் கனலிற் பொங்கி
வரையொடு மரமும் கல்லும் வாங்கினர் விரைவின் வந்தார். 4

வானரத் தலைவர் பொங்கி வருதலும் அரக்கன் மைந்தன்
போனதிக் கறிவுறாமல் பொழிந்திடும் பகழி தன்னால்
ஆனவர் உடல முற்றும் அழித்தனன் குருதி பொங்க
தானறி வழிந்து யாரும் தனித்தனித் தலத்தின் வீழ்ந்தார். 5

திசைமுகம் கிழியத் தேவர் சிரம்பொதி ரெறியத் திண்டோள்
தசமுகன் சிறுவன் பின்னும் தடஞ்சிலை குழைய வாங்கி
விசைகொள்நா ணெறிந்து மேன்மேல் வெங்கவித் தானை
வெள்ளம்
பசையறப் புலர்ந்து போகப் பொழிந்தனன் பகழி மாரி. 6

வீரருக் கொருவரான விறலதி காயன் வெம்போர்
ஆரினித் தடுக்க வல்லா ரெனப்பதைத் தமர ரெல்லாம்
சோர்வுறத் துளங்கி நில்லா தோடினர் சுடரும் வைவேல்
போர்வலி யரக்கன் சேனை புகுந்தது கடலின் பொங்கி. 7

அங்கதன் தோளின் நின்ற வண்ணலாங் கதனைக் கண்டே
செங்கையிற் பிடித்த வீரச் சிலையைநா ணெறிந்து தீரா
வெங்கொலை யரக்கன் விட்ட கணையெலாம் வலிய வீசித்
துங்கவேல் நிருதர் சேனை துணிபடச் சொரிந்தான் வாளி. 8

உரைபெறு புவன மூன்றும் ஒழிந்திடுங் காலத் தேழு
கருமுகில் பொழிவ தென்னக் கணைமழை சொரிந்து காலான்
இரதமொ டிபங்கள் வாளி யாவையுங் களத்தில் வீழ்த்திப்
பொருதிறல் அரக்க னோடும் புகுந்தமர் கடிதி னேற்றான். 9

## இலக்குவன் வினவும், அதிகாயன் விடையும்

1848. மன்னவன் தம்பி மற்றவ் விராவணன் மகனை நோக்கி
என்னுனக் கிச்சை நின்ற வெறிகடற் றனை யெல்லாம்
சின்னபின் னங்கள் பட்டாற் பொருதியோ திரிந்து நீயே
நன்னெடுஞ் செருச்செய் வாயோ சொல்லுதி நயந்த
[தென்றான்.

மன்னவன் தம்பி-இராமபிரானுடைய இளவலான இலக்குவன், மற்று-பின்பு, அவ் இராவணன் மகனை நோக்கி-அந்த இராவணன் புதல்வனான அதிகாயனைப் பார்த்து, 'உனக்கு என் இச்சை'-உன் விருப்பம் யாது? எறிகடல் தானை எல்லாம்-அலையெறிகின்ற கடல் போன்றுள்ள சேனையெல்லாம், சின்ன பின்னங்கள் பட்டால் பொருதியோ-கண்டதுண்டங்களான (பிறகுதான்) போர் செய்வாயோ? (இப்போதே போர் முனையில்) திரிந்து-திரிந்து, நீயே நல் நெடு செரு செய்வாயோ-நீயே சிறந்த நீண்ட போரைப் புரிவாயோ?' (இவ்விரண்டில் நீ) நயந்தது சொல்லுதி-நீ விரும்பியதைப் பகர்வாயாக' என்றான்-என்று மொழிந்தான்.

சின்ன பின்னம்-'சின்ன பின்னங்கள் செய்த வதனைநீ சிந்தியாயோ' (சுந்தர. 463); 'சின்ன பின்னம் படுத்திடுதலும்' (கிட்கிந்தா. 185); சின்ன பின்னம் வடமொழித் தொடர்.

பி-ம். 1. மற்றை.
2. இங்கு நின்ற, எறிபடைச் சேனை எல்லாம்.
3. பொருநியோ சேனையோடும், எரிபடைச் சேனையோடும், நிநின்.
4. நகர் செல்வாயோ, நயந்த, நயக்க. 187

1849. யாவரும் பொருவ ரல்ல ரெதிர்ந்துள யானு நீயும்
தேவரும் பிறருங் காணச் செய்வது செய்வ வெல்லாம்
காவல்வந் துன்னைக் காப்பார் காக்கவு மமையும் வேறே
கூவிய ததனுக் கன்றோ வென்றனன் கூற்றின்
[வெய்யோன்.

கூற்றின் வெய்யோன் - யமனைப் பார்க்கிலும் வன்மை வாய்ந்த அதிகாயன், 'யாவரும் பொருவர் அல்லர் - எவரும் போர்புரிபவ ரல்லர்; தேவரும் பிறரும் காண செய்வ எல்லாம் - அமரர்களும் பிறரும்காணச் செய்யப்போகின்ற போர் எல்லாம், எதிர்ந்துள யானும் நீயும - எதிரெதிராகவுள்ள நானும் நீயும், செய்வது - செய்யும் போரே; காவல் வந்து உன்னை காப்பார் காக்கவும் அமையும் - பாது காவலாயத் தோன்றி உன்னைக் காப்பவர் காப்பினும் பொருந்தும்; (உன்னைக் காத்தற்கு எத்தனைபேர் வரினும் வரட்டும்), வேறே - தனித்து, கூவியது - (உன்னை ஆள்விடுத்து) அழைத்தது, அத னுக்கு அன்றோ - (உன்னுடன் போர்செய்து வெற்றிபெற வேண்டும் என்ற) அதன் பொருட்டே அன்றோ?' என்றனன் - என்று பகர்ந் தான்.

செருவது என்பதில் அது என்பது பகுதிப்பொருள் விகுதி கூவுதல்; அறைகூவுதலுமாம்.

பி - ம். 1. பொருவதில்லை; எதிர்ந்துளன்; நீயும் நானும்.
2. செருப்பல செய்வதல்லாற், செருப்பல செய்வோ மென்றுன்.
3. காப்பவும்.
4. கூவியந்தகனுக்கிவன்; மிக்கான். 188

1850. உமையனே காக்க மற்றங் குமையொரு கூறன் காக்க
இமையவ ரெல்லாங் காக்க வுலகமோ ரேழுங் காக்க
சமையுமுன் வாழ்க்கை யின்றே டென்றுதன் சங்க மூதி
நமனுருக் கொண்ட வில்லை நாணெறிந் துருமி னார்த்தான்.

'உம் ஐயனே காக்க - உம் அண்ணனே காக்கட்டும்; உமை ஒரு கூறன் காக்க - பார்வதியை ஒரு பாகத்திற் கொண்ட சிவபெருமானே காக்கட்டும்; இமையவர் எல்லாம் காக்க - வானோ ரனைவருமே காக்கட்டும்; உலகம் ஓர் ஏழும் காக்க - ஓர் ஏழ் உல கமே காக்கட்டும்; உன் வாழ்க்கை இன்றோடு சமையும் - உன் வாழ்வு இன்றுடன் அடங்கிவிடும்;' என்று - என்று மொழிந்து, தன் சங்கம் ஊதி - தன் சங்கத்தை ஒலியெழுப்பி; நமன் உரு கொண்ட வில்லை - யமன் வடிவான வில்லினை, நாண் எறிந்து

உருமின் ஆர்த்தான் - நாண் ஏற்றி ஒலி எழுப்பி, உருமின் ஆர்த்தான் - இடிபோன்று குமுறினன். மற்று : வினைமாற்று.

உம் ஐயன் - உன் தமையன். இத்தொடரே உமையன் என்று மருஉச் சொல்லாகத் திரிந்தது என்க. என் தந்தை : எந்தை என்றாற் போல. சமைதல் : அழிதல். 'ஐயா தலைவரும் சமைந் தார்' (சுந்தர. 930); தன் சங்கம் ஊதி : போர்வீரர் ஒவ்வொரு வர்க்கும் தனித்தனிச் சங்கம் உண்டு; தேவதத்தம் முதலிய சங்குகளைப் பஞ்சவர் ஐவரும் பாரதப் போரில் ஊதினமை, பகவத்கீதை கொண்டுணர்க. நாண் எறிதல் : 'நாணெறிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற், பூணெறிந்தனர்' (யுத்த. 1413).

பி - ம். 1. மற்றை ; பாகன்.
3. இன்றே.
4. கூற்றை, கொண்ட கூற்றும், கொண்டாலன்ன. 189

## இலக்குவன் அதிகாயனுக்குப் பதிலுரைத்துப் பொருதல்

1851. அன்னது கேட்ட மைந்த
னரும்பியன் முறுவல் தோன்றச்
சொன்னவர் வாரார் யானே
தோற்கினுந் தோற்கத் தக்கேன்
என்னை நீ பொருது வெல்லி
னவரையும் வென்றி யென்னு
மின்னினு மிளிர்வ தாங்கோர்
வெஞ்சரங் கோத்து விட்டான்.

அன்னது கேட்ட மைந்தன் - அவ்வார்த்தையைக் கேட்ட இலக்குவன், அரும்பு இயல் முறுவல் தோன்ற - முல்லை அரும்பின் தன்மையைக் கொண்ட புன்னகை வெளிப்பட, 'சொன்னவர் வாரார் - (நீ) சொல்லிய எம் ஐயன் முதலோர் வரமாட்டார்கள்; (ஒரு கால்) யானே தோற்கினும் தோற்க தக்கேன் - நானே தோற்றாலும் தோற்கத் தக்கவனே ; என்னை நீ பொருது வெல்லின் - என்னை நீ எதிர்த்து வெல்வாயாகில், அவரையும் வென்றி - அவர் அனைவரை

யும் வென்றவனே யாவாய்', என்ன - என்று பகர்ந்து, மின்னினும் மிளிர்வது ஓர் வெம்சரம் ஆங்கு கோத்துவிட்டான் - மின்னலைக் காட்டிலும் ஒளிவிடுவதான ஓர் கொடிய வாளியை அப்பொழுது தொடுத்து விட்டான்.

மைந்தன் விட்டான் என வினைமுடிவு செய்க. போரிலும் கடுமையின்றிப் புன்னகை கொண்டான் எனப்பட்டது. 'சின வுண்மை தெரிந்ததில்லை' (யுத்த. 1237) என்று இராமபிரான் புகழப்பட்டமை காண்க. இங்குத் தோன்றிய புன்னகை, எதிரியின் மடன்பற்றி எழுந்தது; தன்னைப் பிறன் எள்ளிய வழி நகைத் ததுமாம். இறுதியடியில் அம்பின் ஒளியும் வெம்மை வேகமும் குறிக்கப்பட்டன. இச்செய்யுளும் வருஞ் செய்யுளும் அந்தாதித் தொடை.

பி - ம். 1. அரும்பிய.

2. சொன்னவாவாராய்; தோழ்கத்தக்க.

3. என்னையும்; வென்றதென்முன்.

4. தொடுத்துவிட்டான்; கூட்டிவிட்டான். 100

### அதிகாயனுக்கும் இலக்குவனுக்கும் நிகழ்ந்த போர்

1852. விட்டவெம் பகழி தன்னை
வெற்பினை வெதுப்புந் தோளான்
சுட்டதோர் பகழி தன்னால்
விசும்பிடைத் துணித்து நீக்கி
எட்டினோ டெட்டு வாளி
யிலக்குவ விலக்கா யென்னாத்
திட்டியின் விடத்து நாக
மனையன சிந்தி யார்த்தான்.

வெற்பினை வெதுப்பும் தோளான் - மலையையும் வாட்டவல்ல தோளையுடையவன் ஆன அதிகாயன், விட்டவெம் பகழிதன்னை - (இலக்குவன்) செலுத்திய கொடிய அம்பினை, சுட்டது ஓர் பகழி தன்னால் - சுடுந்தன்மையுள்ள ஒப்பற்ற அம்பினைக் கொண்டு, விசும்பிடை துணித்து நீக்கி - ஆகாயத்தினிடத்தே துண்டு செய்து,

அசுற்றி, (இலக்குவனைப் பார்த்து) 'இலக்குவ - இலக்குவனே! விலக்காய் - (இந்த வாளிகளை) விலக்குவாயாக! என்னு - என்று மொழிந்து, திட்டியின் விடத்து நாகம் அனையன - திட்டிவிடம் என்ற நாகம் போன்றனவான, எட்டினோடு எட்டு வாளி - பதினறு அம்புகளை, சிந்தி ஆர்த்தான் - சிதறிப் பெருமுழக்கம் செய்தான்.

சுட்டதோர் பகழி: அக்கினி யத்திரம் எனினும் ஆம். இலக்குவ விலக்காய் என்ற இடத்துப் பிராசம் காண்க. திட்டியின் விடத்து நாகம்; இது திருஷ்டிவிஷம் எனப்படும்; 'திட்டிவிடமுணச் செல்லுயிர் போம்வழி' (மணி. 11 : 100)ம் அதன் உரைக் குறிப்பும் காண்க; 'திட்டியின் விடமன்ன' (யுத்த. 1284).

பி - ம். 1. வெற்பினும் விங்கு, வெற்பென விங்குந்.
2. கணையினுலே; விக்கி; விழ்ந்தான்.
4. திட்டியும்; விடத்தினலும்; இனையன; சிதறி. 191

1853. ஆர்த்தவ னெய்த வாளி
யனைத்தையு மறுத்து மாற்றி
வேர்த்தொலி வயிர வெங்கோன்
மேருவைப் பிளக்கற் பால
தூர்த்தன விராமன் தம்பி
யவையெலாந் துணித்துச் சிந்திக்
கூர்த்தன பகழி கோத்தான்
குபேரனை யாடல் கொண்டான்.

இராமன் தம்பி - இலக்குவன், ஆர்த்து - ஆரவாரம் செய்து, அவன் - அந்த அதிகாயன், எய்த வாளி அனைத்தையும் - விடுத்த அம்புகள் எல்லாவற்றையும், அறுத்து மாற்றி - துணித்துப் போக்கி, வேர்த்து - உடல் வியர்த்து, மேருவை பிளக்கல்பால - மேருகிரியையும் பிளக்கவல்லனவான, ஒலிவயிரம் வெங்கோல் - ஒலிக்கும் உறுதிவாய்ந்த கொடிய சரங்களை, தூர்த்தனன் - நிரப்பினன்; குபேரனை ஆடல் கொண்டான் - குபேரனையும் வெற்றி கொண்டவன் ஆன அதிகாயன்; அவை எலாம் துணித்து சிந்தி - அவையனைத்தையும் வெட்டிச் சிதறச் செய்து, கூர்த்தன பகழி கோத்தான் - கூர்மையான அம்புகளைத் தொடுத்துவிட்டான்;

மேருவைப் பிளக்கவல்ல பகழி; 'மேருவையுருவ வேண்டின் ......ஆரியன் பகழி வல்லது. (சுந்தர. 446); ஆடல் கொள்ளுதல்: 'கூற்றையும் ஆடல் கொண்டேன்' (யுத்த.).

பி-ம். 1. அனைத்தையு மம்பினாலே.

2. ஒளிர்; விட்டாற்போலத், விசும்பை முட்டத்.

3. துளையத்தூவிக். 192

1854. எய்தன னெய்த வெல்லா மெரிமுகப் பகழி யாலே
கொய்தன னகற்றி யார்க்கு மரக்கனைக் குரிசில் கோபம்
செய்தனன் துரந்தான் தெய்வச் செயலன்ன கணையை [வெங்கோல்
நொய்தவன் கலசஞ் சீறி நுழைவன பிழைப்பி லாத.

குரிசில் - பெருமை மிக்கவனான இலக்குவன், எய்தனன் - எய்தவனான அதிகாயன், எய்த எல்லாம் - விடுத்த எல்லாவற்றையும், எரிமுகம் பகழியாலே - நெருப்பினை நுனியிற் கொண்ட அம்பினாலே, கொய்தனன் அகற்றி - அறுத்து அப்புறப்படுத்தி, ஆர்க்கும் அரக்கனை - ஆரவாரிக்கின்ற இராக்கதனை, கோபம் செய்தனன் - சினந்தவனாகி, தெய்வம் செயல் அன்ன கணையை துரந்தான் - தெய்வச் செயல் போன்ற செயலைப் புரியவல்ல அம்பினைச் செலுத்தினன்; வெம்கோல் - கொடிய அந்த அம்புகள் (யாவும்) பிழைப்பிலாத - இலக்குத் தவறாதனவாகி, நொய்தது - கடினமின்றி, அவன் கவசம் கீறி - அந்த அதிகாயனுடைய கவசத்தினைப் பிளந்துகொண்டு, நுழைவன - நுழைவனவாயின.

கோபம் செய்தனன் - இயற்கையாகச் சாந்தன் ஆகலின் சினத்தை வருவித்துக் கொண்டான் என்க. தவறாது விரும்பிய பயனைத் தருதலின் 'தெய்வச் செயல் அன்ன கணை எனப்பட்டது,

பி-ம். 2. கொய்தவை; நீக்கிமற்றக், நீக்கியாற்ற, நீக்கி யார்க்கும்; குமாரனை.

3. தேவர் செயலன்னகணையை, தெய்வச் சிலையினிற் செங்கன், தெய்வர் செயலின செங்கன், தெய்வச் செல்லெனக் கணையை, தெய்வச் செயலன்ன.

4. கோய்தன. 193

1855. நூறுகோல் கவசங் கீறி நுழைதலுங் குழைவு தோன்றத்
தேறலாந் துணையுந் தெய்வச் சிலைநெடுந் தேரி னூன்றி
ஆறினு னதுகா லத்தங் கவனுடை யனீக மெல்லாம்
கூறுகூ றுக்கி யம்பாற் கோடியின் மேலுங் கொன்றுன்.

நூறு கோல் கவசம் கிறி நுழைதலும் - நூறு அம்புகள் (தன்னுடைய) கவசத்தைப் பிளந்து கொண்டு உட்புகவும், குழைவு தோன்ற - தளர்ச்சி தோன்ற, தேறலாம் துணையும் - (அதிகாயன் தான்) தெளியு மளவும், தெய்வம் சிலை - (தன்) தெய்வத் தன்மை வாய்ந்த வில்லினை, நெடுதேரின் ஊன்றி - பெரிய தேரில் ஊன்றிக் கொண்டு, ஆறினுன் - இளைப்பாறினுன்; அதுகாலத்து - அக் காலத்து, அங்கு - அவ்விடத்து, அவனுடை அனீகம் எல்லாம் - அந்த அதிகாயனுடைய சேனை எல்லாவற்றையும், (இலக்குவன்) அம்பால் - அம்பினுல் கூறு கூறு ஆக்கி - துண்டு துண்டாக்கி, கோடியின் மேலும் கொன்ருன் - கோடிக்கும் மேலாக உயிர் நீங்கச் செய்தான்.

அனிகம்: சேனை.

பி - ம். 1. நுழைத்தலும்.

2. சிலையோடும்.

3. ஆறின; காலத்தங்கவன்படை, காலத்தினங்கவன், காலத்தங் கன்னவன். 194

1856. புடைநின்ருர் புரண்ட வாறும் போகின்ற புங்க வாளி
கடைநின்று கணிக்க வாங்கோர் கணக்கிலா வாறுங் [கண்டான்
இடைநின்ற மயக்கந் தீர்ந்தா னேந்திய சிலையன் காந்தித்
தொடைநின்ற பகழி மாரி மாரியின் மும்மை தூர்த்தான்.

இடைநின்ற மயக்கம் தீர்ந்தான் - நடுவே நேர்ந்த (தன்) மயக்கம் தீரப்பெற்ற அதிகாயன், புடை நின்ருர் புரண்ட ஆறும் - அருகில் நின்றவர்கள் புரண்டு சென்ற விதத்தையும், போகின்ற - விளைகின்ற, புங்கம் வாளி - சிறந்த (இலக்குவனுடைய) அம்புகள், கடை நின்று கணிக்க - முழுதும் நின்று கணக்கிட, ஆங்கு - அவ்

விடத்து, ஓர் கணக்கு இலா ஆறும் கண்டான் - ஒரு கணக்கில் லாத வகையையும் உணர்ந்தவனுகி, எந்திய சிலேயன் - தாங்கிய வில்லினை உடையவனுய், காந்தி தொடை நின்ற பகழிமாரி மாரி யின் மும்மை தூர்ந்தான் - கொதித்துத் தொடுக்கப்பெற்று நின்ற அம்பு மழையை. மாரியின் மும்மை தூர்த்தான் - மாரியினும் மும்மடங்காக விடுத்து நிரப்பினுன்.

புங்கம்: உயர்வு; கடைநின்று கணித்தல்; முடிவு போகக் கணித்தல். இடைநின்ற மயக்கம்: முன் கவியில், தேரின் ஊன்றி ஆறினுன் என்பது பற்றி வந்தது.

பி - ம். 1. நின்ருேர்.

2. கடைநின்று கவித்த, நின்று கணக்கில், சென்று கழிந்து; கவிப்பிலா.

3. இடைநின்று.

இங்கு ஓர் அதிகப்பாடல்.

புரமெரித் துடைய புத்தேள் முதலிய புலவ ருள்ளம்
திரிதர வரக்கன் சிறித் திண்சிலே குழைய வாங்கி
யெரிமுகப் பகழிமாரி யிடைவிடா தநந்தகோடி
சொரிதர வநும னுதி வீரர்கள் சோர்ந்து வீழ்ந்தார்.

1857. வானெலாம் பகழி வானின் வரம்பெலாம் பகழி மண்ணுந்
தானெலாம் பகழி குன்றின் தலேயெலாம் பகழி சார்ந்தோர்
ஊனெலாம் பகழி யேன்ருே ருயிரெலாம் பகழி வேலே
மீனெலாம் பகழி யாக வித்தினன் வெகுளி மிக்கோன்.

வெகுளி மிக்கோன் - சினம் முதிர்ந்தவனுன அதிகாயன், வான் எலாம் பகழி - ஆகாயம் எல்லாம் அம்பு, வானின் வரம்பு எலாம், பகழி - வானின் விளிம்பெல்லாம் அம்பு, மண்ணும் தான் எலாம் பகழி - பூமியில் எல்லாம் அம்பு, குன்றின் தலே எலாம் பகழி - மலேயின் சிகரங்களில் எல்லாம் அம்பு, சார்ந்தோர் ஊன் எலாம் பகழி - சார்ந்தவரின் உடலெல்லாம் அம்பு, ஏன்ருேர் உயிர் எலாம் பகழி - எதிர்ந்தோரின் உயிரில் எல்லாம் அம்பு, வேலேமீன் எலாம் கடல்மீன்களிடத்தெல்லாம் அம்பு. ஆக - இவ்வாருக, வித்தினன் - (வாளிகளே எங்கும்) விதைத்திட்டான்.

சொற்பொருட்பின் வருநிலை உருவப் பொருளன்றி அருவப் பொருளாகிய உயிரையும் அப்பு உருவியதாகக் கூறப்பட்டது. இச்செய்யுள் சொற்பொருட் பின்வருநிலையணி.

பி ம். 1. நிக்கின் ; மன்னோ.

2. சாய்ந்தோர்.

3. நின்றர் : உடலெலாம்.

4. விதிர்ந்தனன், விறைத்தனன், வீழினன். 196

1858. மறைந்தன திசைக ளெல்லாம் வானவர்
மனமே போலக்
குறைந்தன சுடரின் மும்மைக் கொழுங்கதிர்
குவிந்தொன் றொன்றை
அறைந்தன பகழி வைய மதிர்ந்தது
விண்ணு மஃதே
நிறைந்தன பொறியின் குப்பை நிமிர்ந்தது
நெருப்பின் கற்றை.

(அதிகாயன் வித்திய அம்புகளால்) திசைகள் எல்லாம் மறைந்தன - திக்குகள் எல்லாம் மறைந்திட்டன ; வானவர் மனமே போல - அமரர்களின் மனம் போன்று. மும்மை சுடரின் கொழு கதிர்-முச்சுடர்களின் தழைத்த கிரணம், குறைந்தன-(ஒளி) குறைந் தன ; பகழி - அம்புகள், குவிந்து - நிறைந்து, ஒன்று ஒன்றை அறைந்தன - ஒன்று பிறிதொன்றைத் தாக்கின ; வையம் அதிர்ந் தது - பூமி நடுங்கிற்று; விண்ணும் அஃதே-ஆகாயமும் அவ்வாறே கம்பித்தது ; பொறியின குபபை நிறைந்தன - அனற் பொறித் தொகுதிகள் நிரம்பின ; நெருப்பின் கற்றை நிமிர்ந்தது - நெருப் பின் தொகுதி மிக்குக் காணப்பட்டது.

ஒளி குன்றியதற்கு வானவர் மனத்தின் கிளர்ச்சிக் குறை வினை உவமித்தார். என்ன நிகழுமோ என்ற அச்சததால் தேவர் கள் உற்சாகம் குன்றினர். மும்மை கொழுங்கதிர் - சூரிய சந்திர

அக்கினிகளின் கிரணம். போர்க்கள நிகழ்ச்சி சிறந்த முறையில் வருணிக்கப்பட்டது காண்க.

பி - ம். 1. சேனை மாண்டு.
2. கொழுங்கலிக்.
3. அதிர்ந்தன, மாதிரம்.
4. நிமிர்ந்தன.

1859. முற்றிய தின்றே யன்றோ வானர முழங்கு தானை
மற்றிவன் தன்னை வெல்ல வல்லனோ வள்ளல் தம்பி
கற்றது கால னோடோ கொலையிவ னொருவன் கற்ற
விற்றொழி லென்னே யென்னத் தேவரும் வெருவ
[லுற்றார்.

'முழங்கு வாநர தானை - ஆரவாரிக்கின்ற குரங்குப்படை, இன்றே முற்றியது அன்றோ - இன்றைக்கே முடிந்துவிடுமன்றோ? வள்ளல் தம்பி இவன் தன்னை வெல்ல வல்லனோ - கருணையாளனாகிய இராமபிரானுடைய தம்பி இவனை வெல்லமாட்டுவனோ? இவன் கொலை கற்றது காலனோடோ - இந்த அதிகாயன் கொலைத் தொழில் பயின்றது யமனுடனேதானோ? ஒருவன் - ஒப்பற்ற இவன், கற்ற விற்றொழில் என்னே - கற்றுள்ள வில்வித்தை (இருந்தவாறு) என்னே', என்ன - என்று கூறி, தேவரும் வெருவல் உற்றார் - தேவர்களும் அஞ்சத்தொடங்கினர்.

தம் காரியத்துக்குக் கேடு நேருமோ என்று கவலையுற்ற தேவர்கள் அஞ்சி ஐயுற்றமை கூறப்பட்டது. மூன்றாம் அடியில் 'இவன்' என்பதை முன்னும் பின்னும் கூட்டுக. மற்று : அசை.

பி - ம். 1. வாநரர்
2. மற்றவன்.
3. காலனேடே.
4. என்றுமென்னத்.



1860. அங்கத னெற்றி மேலுந் தோளினும்
ஆகத் துள்ளும்
புங்கமே தோன்று வண்ணம் பொருசரம்
பலவும் போக்கி

வெங்கணை யிரண்டு மொன்றும் வீரன்மே
லேவி மேகச்
சங்கமு மூதி விண்ணோர் தலைபொதி
ரெறிய வார்த்தான்.

(அப்போது அதிகாயன்) அங்கதன் நெற்றி மேலும் - அங்கதனுடைய நெற்றிமீதும், தோளினும் - தோளின்மேலும், ஆகத்து உள்ளும் - மார்பினிடத்திலும், புங்கமே தோன்றுவண்ணம் - அம்பின் நுனியும் புலப்படாதவாறு, பொருசரம் பலவும் போக்கி - பொருகின்ற வாளிகள் பலவற்றையும் செலுத்தி, வெம் கணை இரண்டும் ஒன்றும் - கொடிய அம்புகள் மூன்றினை, வீரன்மேல் ஏவி - இலக்குவன்மேல் விடுத்து, மேகம் சங்கமும் ஊதி - மேகம் போன்று முழங்குகின்ற சங்கினையும் ஊதி, விண்ணோர் தலை பொதிர் எறிய ஆர்த்தான் - வானோர்களின் தலை நடுங்குமாறு வீர கர்ச்சனை செய்தான்.

மேகச் சங்கம் - மேகம்போன்று முழங்கும் சங்கம்.

பி - ம். 2. புங்கமும்; தோன்றும்.
3. ஏவிமிக்க, வேகச்.
4. பொதிரெறிப்ப. 199

1861. வாலிசேய் மேனி மேலு மழைபொரு
குருதி வாரி
காலுயர் வரையிற் செங்கே ழருவிபோ
லொழுகக் கண்டான்
கோலொரு பத்து நூற்றுக் குதிரையின்
தலைகள் கொய்து
மேலவன் சிரத்தைச் சிந்தி வில்லையுந்
துணித்தான் வீரன்

கால் உயர் வரையில் - (சிறிதளவு) உயர்ந்த தாழ்வரையில், செம் கேழ் அருவிபோல் - சிவந்த நிறமுள்ள அருவிபோன்று, வாலி சேய் மேனி மேலும் - வாலி புதல்வனான அங்கதனுடைய உடல்மீதும், மழை பொரு - மழைபோன்று, குருதி வாரி - உதிர நீர், ஒழுக கண்டான் - வடிவதைப் பார்த்தவனாய், வீரன் -

ஆண்மைசான்ற இலக்குவன், ஒரு - ஒப்பற்ற, பத்து நூறு கோலால் - ஆயிரம் சரங்களால், குதிரையின் தலைகள் கொய்து - தேரிற் பூட்டிநின்ற குதிரைகளின் தலைகளை அறுத்து, மேலவன் - பாகனுடைய, சிரத்தை சிந்தி - தலையையும் வெட்டி, வில்லையும் துணித்தான் - (அதிகாயனுடைய) வில்லையும் சேதித்தான்.

வரை அங்கதனுடைய பெரிய மேனிக்கும் அருவி அவன் உடலினின்று பெருகிய இரத்தத்திற்கும் உவமை; 'வாசத்தாரவன் மார்பெனும் மலைவழங் கருவி' (கிட்கிந்தா. 298) என்றது காண்க.

பி - ம். 1. வாலிதன்சிறுவன் ; குருதிமாரி.

2. நிழ்விழருவி

3. கோலென்று ; நூறுற் ; தலையை

4. தேரைச் சிந்தி ; அறுத்தான். 200

1862. மாற்றொரு தடந்தே ரேறி மாறொரு
சிலையும் வாங்கி
ஏற்றவல் லரக்கன் தன்மே லெரிமுகக்
கடவு ளெவ்பான்
ஆற்றல்சால் படையை விட்டா னரிய
னரக்க னம்மா
வேற்றுள தாங்க வென்னு வெய்யவன்
படையை விட்டான்.

மாற்று ஒரு தட தேர் ஏறி - வேறு ஒரு பெரிய தேரின்மீது ஏறி, மாறு ஒரு சிலையும் வாங்கி - பிறிது ஒரு வில்லையும் வளைத்துக்கொண்டு, ஏற்ற வல் அரக்கன் தன்மேல் - எதிர்ந்த வலிய அரக்கன்மீது, ஆரியன் - இலக்குவன், எரி முகம் கடவுள் என்பான் ஆற்றல் சால் படையை விட்டான் - தீயினை முகமாகவுடைய அக்கினிதேவனுடைய வன்மைசெறிந்த அம்பினை (அக்கினி யத்திரத்தை) ஏவினான்; அரக்கன் - அதிகாயனும், 'தாங்க - தாங்குவாயாக', என்னு - என்று மொழிந்து, வேறு உள வெய்யவன் படையை விட்டான் - வேறாக உள்ளதொரு சூரியாத்திரத்தை விடுத்தான். அம்மா - வியப்பிடைச்சொல்.

மாறெருரு - மற்றெருரு. வெய்யவன் படை - அக்கினி யம்புமாம். ஆற்றல்சால்: 'ஆற்றல்சால் நளனே யன்றி' (நைடத. நளன்தூது. 222). ஆரியன் - சிரேட்டன்; (நிக.).

பி - ம். 1. மற்றெருரு, மாற்றெருரு
2. பேற்றயலரக்கன், ஏற்றவாளரக்கன்; எரிமுதற்; என்றும்
4. தாங்க. 201

1863. பொருபடை யிரண்டுந் தம்மிற் பொருதன
பொருத லோடும்
எரிகணை யுருமின் வெய்ய விலக்குவன்
துரந்த மார்பை
உருவின வுலப்பி லாத வுளைகில
ஞற்ற லோயான்
சொரிகணை மழையின் மும்மை சொரிந்தனன்
றெழிக்குஞ் சொல்லான்.

பொருபடை இரண்டும் தம்மிற் பொருதன - (ஒன்றுடன் ஒன்று) மாறுபடுகின்ற அந்தச் சரங்களிரண்டும் தம்மிற் போராடின; பொருதலோடும் - பொருங்காலை, இலக்குவன் துரந்த - இலக்குவன் செலுத்திய, உருமின் வெய்ய எரிகணை - இடியினும் கடுமை வாய்ந்த அக்கினி யத்திரங்கள், உலப்பு இலாத - வற்றுதனவாய், மார்பை உருவின - (அதிகாயன்) மார்பினை ஊடுருவிச் சென்றன, உளைகிலன் - (அப்போதும்) வருந்தாதவனும், ஆற்றல் ஓயான் - வலிமை குன்றப் பெருதவனும்ஆகி, தெழிக்கும் சொல்லான் - முழங்கும் சொல்லை யுடையவனான அதிகாயன், சொரி கணை - (இலக்குவன்) பொழிந்த கணைகளினும், மும்மை சொரிந்தனன் - மூன்றுமடங்கு வாளிகளைப் பொழிந்தான்.

பொருபடை: சொரிகணை; வினைத்தொகை. உரும்: இடி. ஓய்தல் - தளர்தல்: 'ஓய்தல் சாய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்' (தொல். உரி: 34); தெழித்தல் - உரத்துப் பேசுதல்: 'தெழித்தனள் உரப்பினள்' (அயோத்தி. 55).

பி - ம். 1. பொருந்தின
2. எரிகணை கோடிகோடி
3. உலைகிலன்
4. துரந்தனன். 202

1864. பின்னின்றார் முன்னின் றாரைக் காணலாம் பெற்றித் தாக
மின்னின்ற வயிர வாளி திறந்தன மேனி முற்றும்
அந்நின்ற நிலையி னாற்றல் குறைந்தில னாவி நீங்கான்
பொன்னின்ற வடிம்பின் வாளி மழையெனப் பொழியும்
[வில்லான்.

மின் நின்ற வயிரம்வாளி - (பின்னும் இளையபெருமாள் விடுத்த) ஒளி தங்கிய உறுதியான கணைகள், பின் நின்றார் முன் நின்றாரை காணலாம் பெற்றித்து ஆக - பின்னே நிற்பவர்கள் முன்னே இருப்பவரைப் பார்க்கலாகும்படி, மேனி முற்றும் திறந்தன - (அந்த அதிகாயனுடைய) உடல் முற்றும் பல துளைகள் செய்தன; அந் நின்ற நிலையின் - அந்த அவல நிலைமையிலும், (அதிகாயன்) ஆற்றல் குறைந்திலன் - வல்லமை குறையப் பெறாதவனும், ஆவி நீங்கான் - உயிர் பிரியப்பெறாதவனுமாகி, பொன் நின்ற வடிம்பின் - பொன்போல் நிலைபெற்ற விளிம்பினையுடைய, வாளி - அம்பினை, மழைஎன பொழியும் வில்லான் - மழைபோலப் பொழிகின்ற வில்லை யுடையவன் ஆனான்.

முதலடியில் அவலச்சுவையின் மிகுதியைக் காணலாம். அதிகாயன் மேனி நன்கு துளைபடவே அவன்பின்னின்றவர் அவனுக்கு முன் வரிசையிலிருந்தவர்களைக் காணும்படி ஆயிற்று எனப் பட்டது. அந்நிலையிலும் அதிகாயன் ஆற்றல் குறைந்திலது எனப்பட்டது. வடிப்பு - விளிம்பு

பி - ம். 2. முன்னின்ற ; துரந்தனன்

பி - ம். 3. அன்னின்ற ; நிலையான், நிலைபவாற்றல் ; நுறந்திலன்

4. உருமெனப் ; கையான், வில்லி. 203

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

வில்லினுக் கொருவ னாகி யுலகொரு மூன்றும் வென்ற
வல்லதி காய னென்னும் வாளெயிற் றரக்க னேயான்
கல்விடு மாரி யென்னக் கணைமழை பொழியக் கண்ட
வில்லியும் விடாது வெய்ய கணைமழை விலக்கி நின்றான்.

## வாயுதேவன் தோன்றி இவன் நான்முகன் கணையால்தான் இறப்பான் என்று இலக்குவனுக்கு உரைத்தல்

1865. கோன்முகந் தள்ளி யள்ளிக்
கொடுஞ்சிலை நாணிற் கோத்துக்
கான்முகம் குழைய வாங்கிச்
சொரிகின்ற காளை வீரன்
பான்முகந் தோன்ற நின்று
காற்றினுக் கரசன் பண்டை
நான்முகன் படையி னன்றிச்
சாகில னம்ப வென்றான்.

கோல் அள்ளி அள்ளி முகந்து-அம்புகளை வாரி வாரி எடுத்து, கொடு சிலை நாணில் கோத்து-கொடிய வில்லின் நாணியிலே பொருத்தி, கால் முகம் குழைய வாங்கி-வில்லின் தண்டு முகம் தளரும்படி வளைத்து, சொரிகின்ற காளை வீரன் பால்-சொரிபவனை காளை போன்ற இளைய வில்லியினிடத்து, காற்றினுக்கரசன்-வாயுபகவான், முகம் தோன்ற நின்று (தன்) முகம் விளங்கும்படி நேரில் வந்து, 'நம்ப-தலைவனே! பண்டை நான்முகன் படையின் அன்றி-பழமை வாய்ந்த பிரமனை அதிதேவதையாகப் பெற்றகணையால் (பிரமாத்திரத்தால்) அல்லாமல், சாகிலன்-இவன் இறக்க மாட்டான்' என்றான்-என்று பகர்ந்தான்.

கோல்: அம்பு. 'வாலிமேற் கோலொன்று வாங்கி' (கிட்கிந்தா. 288); அள்ளி அள்ளி முகந்து என்றதுகொண்டு, விடுத்த வாளிகள் ஏராளம் என்பதுணரலாகும். கால்: வில்லின் தண்டு. காளை: உவமவாகு பெயர். பால்: ஏழனுருபு. முகம் தோன்ற நிற்றல்-பிரத்தியக்ஷமாதல். பான் முகம் தோன்ற-இளைய பெருமாள் பக்கத்திலே தன் உருத் தோன்ற' என்பது பழைய உரைக் குறிப்பு. காற்றினுக்கரசன்: எழுவாய்.

பி-ம். 1. அள்ளுங், உள்ளுங்.
2. பொழிகின்ற.
3. தோன்றி.

## அதிகாயன் சிரத்தை இலக்குவன் பிரமாத்திரத்தாலறுத் தலும் அதுகண்டு தேவர் முதலானோரின் நிலைமையும்

1866 நன்றென வுவந்து வீரன் நான்முகன் படையை வாங்கி
மின்றனி திரண்ட தென்னச் சரத்தொடுங் கூட்டி விட்டான்
குன்றினு முயர்ந்த தோளான் தலையினைக் கொண்டவ் வாளி
சென்றது விசும்பி னூடு தேவருந் தெரியக் கண்டார்.

வீரன் - இலக்குவன், 'நன்று - நல்லது' என உவந்து என்று சொல்லி மகிழ்ந்து, நான்முகன் படையை வாங்கி - பிரமாத் திரத்தை எடுத்து, மின் தனி திரண்டது என்ன - மின்னல் தனித்துத் திரண்டது என்னுமாறு, சரத்தொடும் கூட்டி விட் டான் - அம்புடனே சேர்த்து விட்டான்; அ வாளி - அந்த அம்பா னது, குன்றினும் உயர்ந்த தோளான் - மலையினும் உயர்ந்த புயங் களை உடையவன் ஆன அதிகாயனுடைய, தலையினை கொண்டு - தலையினைப் பறித்துக்கொண்டு, விசும்பின் ஊடு சென்றது - விண் வழிச் சென்றது; தேவரும் தெரியக் கண்டார் - வானவரும் கண் கொண்டு நோக்கினர்.

காற்றினுக்கரசன் கூற்றினை உட்கொண்டு மகிழ்ந்தான் என் பார். 'நன்றென வுவந்து எனப்பட்டது'. சரம் - அம்பு : 'வீரன் சரத்திற்கும் குறித்த துண்டோ' (சுந்தர. 449); கொண்டு - துணித்துக்கொண்டு. இந்த அதிகாயன் மரணம், மகிழ்ச்சி விளைக்கக்கூடிய செய்தியாகலின் தேவரைக் குறிப்பிட்டார்.

பி - ம். 1. உணர்ந்து.
2. திரண்டவன்ன, வென்ன; வில்லொடும் கூட்டி.
3. உயர்ந்த நியோன்; தலையிலிக்; கொண்ட. 205

1867. பூமழை பொழிந்து வானோர்
போயதெம் பொரும லென்றார்
தாமமைத் தலறி யெங்கும்
சரிந்தன ரரக்கர் தள்ளித்
தீமையும் தகைப்பும் நீங்கித்
தெளிந்தது குரக்குச் சேனை
கோமகன் தோளி வின்றங்
குதித்தனன் கொற்ற வில்லான்.

வானோர் பூமழை பொழிந்து - தேவர்கள் மலர் மாரி சிந்தி, 'எம் பொருமல் போயது-எம்முடைய வருத்தம் நீங்கிற்று' என்றார் - என்று மொழிந்தனர், அரக்கர் - இராக்கதர்கள், தாம் அழைத்து அலறி - தாங்கள் வாய்விட்டுக் கதறியழுத வண்ணம், எங்கும் சரிந்தனர் - எங்கும் நிலைகுலைந்து ஒதுங்கினர்; குரக்கு சேனை - வானரப் படையினர், இமையும் தகைப்பும் நீங்கி தெளிந்தது - துன்புறுதலும் தடுப்பும் போய்த் தெளிவடைந்தது; கொற்றம் வில்லான் - வெற்றி பொருந்திய வில்லாளியான இலக்குவன், கோமகன் தோளினின்றும் கீழே குதித்தான்.

'போயதெம் பொருமல் என்னு இந்திரன் உவகை பூத்தான்', (பால. திருவவ. 25); பொருமல் - வருத்தம். 'பொருமி யொருமக வழும்' (குசேலோ. 1, 70); அதிகாயன் இறந்துபடவே குரங்குகட்குத் இமையோ அரக்கரால் தடுப்போ நிகழ்தற்கில்லையாதலின் தெளிந்தது எனப்பட்டது.

பி - ம். 1. விண்ணோர்.

2. ஏங்கிச் சரிந்தனர்.

3. நிமையுங்களிப்பும், நன்மை, நலிமை: நிகைந்தன, தெளிந்தது; சேனைக்.

4. கொற்றவில்லி. 206

## இலக்குமணன் வென்றதுகண்ட விடணன், இந்திரசித்தும் இறப்பது உறுதி என்று நினைத்தல்

1868. வெந்திறற் சித்தி கண்ட வீடணன் வியந்த நெஞ்சன்
அந்தரச் சித்த ரார்க்கு மமலையுங் கேட்டான் ஐயன்
மந்திர சித்தி யன்ன சிலைத்தொழில் வலியி தாயின்
இந்திர சித்தி னார்க்கு மிறுதியே யியைவ தென்றான்.

வெம்திறல் சித்தி கண்ட விடணன் - (இலக்குவனுடைய) கடுமையான வன்மை பயனின்றது கண்ட விடணன், வியந்த நெஞ்சன்-வியப்புக்கொண்ட உள்ளத்தனாய், அந்தரம் சித்தர் ஆர்க்கும் - விண்ணில் திரியும் சித்தர்கள் ஆர்ப்பரிக்கும், அமலையும் கேட்டான் - பேரொலியும் கேட்டான், (பின்னர்) 'ஐயன் - அழகன் (இலக்குவனின்), மந்திர சித்தி அன்ன - மந்திர சித்தி கைவந்த

இலக்குவனுடைய, சிலைதொழில் வலி ஈது ஆயின் - வில் தொழில் ஆற்றல் இங்ஙனம் ஆயின், இந்திர சித்தினுர்க்கும் இறுதியே இயைவது - இந்திரசித்துக்கும் மரணமே பொருந்துவது', என்ருன் - என்று பகர்ந்தான்.

சித்தி காணுதல் - பயனைப் பெறுதல். அந்தரம் - ஆகாயம், 'அந்தரத் திந்துவைத் தீண்டுகின்றது' (கிட்கிந்தா. 739); சித்தர்: ஆகாயசாரிகளில் ஒருவகையினர். எட்டு வகைச் சித்திகளில் வல்லவர்: எண்வகைச் சித்தி அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாம்யம், ஈசத்துவம், வசித்வம். அமலை - பேரொலி- 'அக்கணத்தவள் வாய்திறந்தரற்றிய வமலை' (ஆரணிய. 313); மந்திர சித்தியன்ன சிலைத்தொழில், 'இந்திரன் பகைஞனும் இராமன் தம்பிகை, மந்திர அம்பினல் மடிதல் வாய்மையால்' (யுந்த. 1301); என்று தீர்க்கதரிசியான கும்பகன்னன் முன்னர்க்கூறியது காண்க.

பி - ம். 1. வெந்திறஞ் சத்தி.

2. சித்தரார்ப்பும்.

3. சித்தியன்னுன்; வலியதாயின், வலியிதாலுல்.

4. இந்திரசித்தனுற்கும்; ஏயியல்வது, இங்கிவனுல். 207

இங்கு ஓர் அதிகப்பாடல்—

விறலதி காயன் வீழ வெந்திற லரக்கன் மைந்தர்
குறுகினர் மும்மையான வாயிர கோடி யுள்ளார்
எறிகடற் சேனை யோடும் எங்கணு மிரிய வார்த்துச்
செறியவெண் டிசையும் வந்து சூழ்ந்தனர் தெழிக்கும்
[சொல்லார்.

## நராந்தகன் வீழ்ச்சி

1869. ஏந்தெழி லாகத் தெம்மு னிறந்தன னென்று நீநின்
சாந்தகன் மார்பு திண்டோள் நோக்கிநின் தனுவை
[நோக்கிப்
போந்தகைக் குரியை யன்றுல் போகலை போக லென்னு
நாந்தக மின்னத் தேரை நராந்தகன் நடத்தி வந்தான்.

'ஏந்து எழில் ஆகத்து-மிக்க அழகான மார்பினைக் கொண்ட, எம்முன் இறந்தலன் என்று-எமது அண்ணன் பரித்தான் என்று,

நீ - நீ, நின் - உன்னுடைய, சாந்து அகல் மார்பு - சந்தனம்பூசப் பெற்ற விரிந்த மார்பினையும், திண் தோள் - வலிய தோளையும், நோக்கி - பார்த்துக் கொண்டும், நின் தனுவை நோக்கி - 'உன்னுடைய வில்லைக் கண்டு கொண்டும், போம் தகைக்கு உரியை அன்று - செல்கின்ற தகவுக்கு உடையவன் அன்று; போகலை போகல் - செல்லாதே செல்லாதே,' என்னு - என்று (இலக்குவனை நோக்கிச்) சொல்லிக் கொண்டு, நாந்தகம் மின்ன - வாளானது ஒளி விட, நராந்தகன் தேரை நடத்தி வந்தான் - நராந்தகன் என்பவன் தேரினைச் செலுத்தி வந்தான். ஆல் : அசை.

மார்பு திண்தோளையும் தனுவையும் பார்த்தல்; வீரத்தின் மெய்ப்பாடுகள் : மனக்கிளர்ச்சியாலாவது. 'தலையினை நோக்கும் தம்பி கொற்றவை தழீஇய பொற்றோள், மலையினை நோக்கு நின்ற மாருதி வலியை நோக்கும். சிலையினை நோக்கும் தேவர் செய்கையை நோக்கும் செய்த, கொலையினை நோக்கும் ஒன்றும் உரைத்திலன் களிப்புக் கொண்டான்' (யுத்த. இந்திரசித்து. 67) காண்க. இங்ஙனமே சோகம் மிகுந்த போதும் செய்வதுண்டு; 'பொழிலை நோக்கும் பொழிலுறையும் புள்ளை நோக்கும் பூங்கொம்பின், எழிலை நோக்கும் மிளமயிலி னியலை நோக்கும்' (ஆரணிய. 1060) என வருவது காண்க. போர்க்கண் சாந்தத்திற்கிடனின்று; எனவே சாந்தகன் மார்பு என்பதை இயற்கை யடைமொழியாகக் கொள்க. போந்தகை - தலை நிமிர்ந்து ஏறுபோற் பீடுநடை கொள்ளுதல். நாந்தகம் : வாள்; 'நாந்தக வுழவர்மேல் நாடும் தண்டத்தார்' (ஆரணிய 591) : 'நாந்தகம் பிழைத்து வீழா' (சீவக. 815); இஃது வடசொல்; திருமாலின் வாள் : 'நாந்தகம் சங்கு தண்டு' (பெரியாழ்வார். 4; 1 : 2) : நராந்தகன் - மனிதர்க்கு யமன் போன்றவன்.

பி - ம். 1. என்றே.
2. சாந்தணி மார்பு, அகன்மார்பிற், அகலாத; நோக்கினன்; தனுவைத் தாங்கிப்.
3. உரியது.
4. நாந்தகப்பரிவை, நாந்தகமின்னும்; வீசி, விச; நடந்து. 208

1870. தேரிடை நின்று கண்கள் தீயுகச் சீற்றம் பொங்கப்
பாரிடைக் கிரியப் பாய்ந்து பகலிடைப் ப்ரிதி யென்பான்
ஊரிடை நின்று வென்னக் கேடக மொருகை தோன்ற
நீருடை முகிலின் மின்போல் வாளொடு நிமிர வந்தான்.

(வந்த நராந்தகன்), கண்கள் தீஉக-விழிகளினின்று நெருப்புப் பொறி சிந்தவும், சீற்றம் பொங்க - சினம் மிகுத்துத் தோன்றவும், தேர் இடை நின்று பார் கிழிய இடை பாய்ந்து - தேரிலிருந்து பூமி பிளக்கும்படி அதனிடை விரைந்து குதித்து, பகல் இடை பரிதி என்பான் ஊர் இடை நின்றான் என்ன - பகலில் சூரியன் ஊர் கோளின் நடுவில் நின்றான் என்னுமாறு, ஒருகை கேடகம் தோன்ற - ஒருகரத்தில் கேடகம் விளங்க, நீர் உடை முகிலின் மின் போல்-நீர் நிறைந்த மின்னலைப் போன்று, வாளொடு - (மற்றொரு கையில்) வாள்கொண்டு, நிமிர வந்தான் - தலை நிமிர்ந்து வந்தான்.

அவன் இறங்கிய இடத்தில் குழி விழுமாறு குதித்தான் என்பார் பாரிடை கிழியப் பாய்ந்து என்றார்; 'கைகேயி அன்புடன் அளித்த மாலையை வெகுண்டு உதறிக் 'குழித்தனள் நிலத்தையக் கொடிய கூனியே' (அயோத்தி. மந்தரை. 53) என்றமை காண்க. ஊர் - ஊர்கோள். ஒருகையில் கடகம் என்ற பரிசையும் மற்றொரு கையில் வாளும் ஏந்தி வந்தான் என்க. பரிவேடத்தினிடையிலே சூரியன் அடங்கினது போகப் பரிசையிலடங்கினான். கேடகத்துக்கு ஊர்கோளும் தலைவனுக்குச் சூரியனும் உவமை.

பி - ம். 1. தீயோன ; சீற்றம் செல்லப்.

3. நின்றானன்ன, நின்றுலன்ன, நடந்தானென்ன.

4. நீரிடை ; வானிடை, வாளிடை, வாளொளி. 209

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

வருதலு மரக்கன் மற்றவ் வானரச் சேனை பின்னும்
பொருசினம் திருகி முற்று பொய்கழ லென்னப் பொங்கி
மரமொடு மலைக ளேந்தி மாதிர மறைய வல்லே
உருமெனச் சொரிய வீசி யுடற்றினர் ஒழிவிலா தார்.

1871. வீசின மரமுங் கல்லும் விலங்கலும் வீற்று வீற்றாய்
ஆசைகள் தோறும் சிந்த வாளினா லறுத்து மாற்றித்
தூசியு மிரண்டு கையு நெற்றியுஞ் சுருண்டு நீர்மேல்
பாசியி னெதுங்க வந்தா னங்கத னதனைப் பார்த்தான்.

(அவன் வருகை கண்ட வானரப்படைகள்) வீசின மரமும் - எறிந்த மரங்களும் கல்லும் மலைகளும், வீற்று வீற்றாய் - வெவ்

வேருக, ஆசைகள் தோறுப் சிந்த - திசைகள் தோறும் சிதறும் படி, வாளினுல் அறுத்து மாற்றி - வாளினுல் அழித்துப் போக்கி, நாசியும் - வாநர சேனையின் முன்னணியும், இரண்டு கையும் - இரு பக்கமும், நெற்றியும் - நெற்றிச் சேனையும், சுருண்டு - சுருண்டு போய், நீர்மேல் பாசியின் ஒதுங்க - நீர்மேல் உள்ள பாசி (ஒதுங்குவது) போன்று, ஒதுங்கி வழிவிட்டிட, வந்தான் -(அந்த நராந்தகன்) வந்தான்; அங்கதன் அதனைப் பார்த்தான் - அங்கதன் (அவன்) வருவதைக் கண்டான்.

வாநரப் படைகட்குப் போர்க்கருவிகள் மரமும் கல்லும் விலங்கலுமேயாகலின் அவை மூன்றும் குறிப்பிடப்பட்டன. 'பற்கொடுங் நெடும் பாதவம் பற்றிலம், கற்கொடுஞ் சென்றதக் கவியின் கடல்' (யுத்த. 690). நீர்மேற்பாசி: மிகப் பொருத்தமான உவமை. (பாசி படுகுட்டத்திற் கல்லினை விட்டெறியப் படும்போது விலகியது விடும்போது பரக்கும்' (சிவசிந்தி. 8, 9) ஊருண்கேணி யுண்டுறைத் தொக்க, பாசியற்றே பசலை (குறுந். 399); தொல். புறத். பாசிநிலை இங்குக் காணத்தகும்.

பி - ம். 1. விற்று விற்றுக விழ.

2. விசி, விச.

3. மென்மேற்.

4. சென்றுவ். 210

1872. மரமொன்று விரைவின் வாங்கி வாய்மடித் துருத்து [வள்ளல்
சரமொன்றிற் கடிது சென்று தாக்கினன் தாக்கி னன்றன்
கரமொன்றில் திரிவ தாருங் காண்கிலா ததனைத் தன்கை
அரமொன்று வயிர வாளா லாயிரங் கண்டங் கண்டான்.

மரம் ஒன்று - ஒரு மரத்தை, விரைவின் வாங்கி - விரைவாக எடுத்து, வாய் மடித்து உருத்து - வாயை மடித்துக்கொண்டு சினந்து, வள்ளல் சரம் ஒன்றில் - கருணையாளனாகிய இராமபிரானுடைய ஒப்பற்ற கணை போன்று, கடிது சென்று - விரைந்து போய், தாக்கினன் - (அங்கதன் நராந்தகனை) தாக்கினன்; தாக்கினன் தன் - தாக்கின அங்கதனுடைய கையொன்றிலே (மரம் ஒன்று), திரிவது - சுற்றுவதை, யாரும் காண்கிலாது - எவரும்

பாராதபடி, (மிக விரைவிலே) அதனை - அம்மரத்தை (நராந்தகன்) தன்னை அரம் ஒன்று வயிரம் வாளால் ஆயிரம் கண்டம் கண்டான் - தன் கரத்திற் பற்றிய அரத்தினால் அராவிச் செய்த உறுதியான வாட்படைகொண்டு ஆயிரம் துண்டுகளாக்கினான்.

வாய் மடித்துருத்தல்: வெகுளியின் மெய்ப்பாடு. 'வாய் மடித் துருத்து நக்கான்' (சுந்தர. 985); வள்ளல்: சரம் ஒன்றிற் கடிது சென்று, அங்கதன் வேகத்திற்கு இராமன் கணை உவமை. கதாநாயகனுடைய சொற்செயல்களே ஆங்காங்கு உவமையாக்கப் பெறுதல் காண்க. (சுந்தர. 31, 155, 605, 1020. (யுத்த. 925): 'மைந்தர் வார்த்தை யிராகவன் வாளி யொத்த' (யுத்த. 1214); வயிரவாள்: வயிரத்தாலியன்ற வாள் எனினும் ஒன்றும்.

பி - ம். 1. கடிதின், வினசயின்; உறுக்கி.

2. சரமொன்று கடிதிற்; காண்கிலாதானை, காண்கிலரதனை. 211

1873. அவ்விடை வெறுங்கை நின்ற
வங்கத னுண்மை யன்றால்
இவ்விடை பெயர்த லென்னு
விமையிடை யொதுங்கா முன்னர்
வெவ்விட மென்னப் பொங்கி
யவனிடை யெறிந்த வீச்சுத்
தவ்விட வுருமிற் புக்கு
வாளொடு தழுவிக் கொண்டான்.

அவ் இடை - அவ்விடத்து, வெறுகை நின்ற - வறுங்கையனாகி நின்ற, அங்கதன் - அங்கதன், 'இவ் இடை பெயர்தல் - இப்போது விட்டுச் செல்லுதல், ஆண்மை அன்று - மனிதத் தன்மையன்று', என்னா - என்று நினைந்து, இமை இடை ஒதுங்கா முன்னர் - இமைப்பொழுது கழிவதற்குள்ளாக, வெம் விடம் என்ன பொங்கி - கடிய நஞ்சுபோன்று சிறி, அவன் இடை - அந்நராந்தகனிடத்து, எறிந்த வீச்சு - அவன் எறிந்த வாள் வீச்சு, தவ்விட - தவறிடுமாறு, உருமில் புக்கு - இடிபோன்று (முழங்கிப்) புகுந்து, வாளொடு தழுவி கொண்டான் - வாளுடனே (அவனைத்) தழுவிக் கொண்டான். ஆல்; அசை.

வெறுங்கை : 'வெறுங்கை பெயரே ஒருவ ரானும் விளியா தேன்' (சுந்தர. 610); வெவ்விடம்: திட்டிவிடம் என்னும் பாம்புமாம்; உருமில்: ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொருள். தழுவுதல் : இங்கே மற்போர்க்குத் தழுவுதல், 'தடுப்பர் பின்றுவர் ஒன்றுவர் தழுவுவர் விழுவர்' (கிட்கிந்தா. 382);

பா - ம். 1. பேர்வது, பேர்வது ; ஒருங்கா, அடங்கா

3. வெவ்விடை ; எழுந்துவிசி, எரிந்துவிழும், எறிந்து விசுந், அறிந்து விசுந், இரிந்து விசுந்.

4. தவ்விடை, தவ்வுடை ; உருவித். 212

**1874.** அத்தொழில் கண்ட வானே ராவலங் கொட்டி யார்த்தார்
இத்தொழி லிவனுக் கல்லா லீசற்கு மியலா தென்பார்
குத்தொழித் தவன்கை வாள்தன் கூருகிர்த் தடக்கை [கொண்டான்
ஒத்திரு கூருய் வீழ வீசிவா னுலைய வார்த்தான்.

அத்தொழில் - (அங்கதனுடைய) அந்தச் செயலை, கண்ட வானோர் - கண்ணுற்ற தேவர்கள், ஆவலம் கொட்டி ஆர்த்தார் - மகிழ்ச்சியால் கை கொட்டி யார்ப்பரித்து, 'இ தொழில் இவனுக்கு அல்லால் ஈசற்கும் இயலாது என்பார் - இச்செயல் இவனுற் செய்ய இயலுமே யன்றி (சங்காரக் கடவுளான) உருத்திரனுக்கும் செய்ய இயலாது', என்பார் - என்று கூறலாயினர் ; (அங்கதன்) குத்து ஒழித்து - குத்துதலை விடுத்து, அவன் - அந்த நராந்தகனுடைய, கைவாள் (கைவாளைப் பிடுங்கித்), தன் கூர் உகிர் தடகை கொண்டான் - தன்னுடைய கூர்மையான நகங்களுடன் கூடிய பெரிய கரங்களிற் கொண்டவனாய், ஒத்து இரு கூருய் வீழ - ஒத்த இரு பகுதியாகி (உயிரற்று) விழும்படி, வீசி - எறிந்து, வான் உலைய ஆர்த்தான் - விண்ணும் நடுங்குமாறு பெரு முழக்கம் செய்தான்.

ஆவலம் கொட்டுதல் ; (கந்தபு. சிங்கமுகா. 438); சுந்தர. 1040. வான் : இடவாகுபெயர்.

பா - ம். 2. இத்தொழில் அவனுக்கு ; யார்வர்க்கும்.

3. வாட்டன், வாடன்

4. வீசி, விண்ணவர், விழவீசினன். 213

## போர்மத்தன் பொருது வீழ்தல்

1875. கூர்மத்தின் வெரிநின் வைத்து
வானவ ரமுதங் கொண்ட
நீர்மத்தி னிமிர்ந்த தோளான்
நிறைமத்த மதுவைத் தேக்கி
ஊர்மத்த முண்டா லன்ன
மயக்கத்தா னுருமைத் தின்பான்
போர்மத்த னென்பான் வந்தான்
புகர்மத்தப் பூட்கை மேலான்.

கூர்மத்தின் வெரிநின் வைத்து - ஆமையின் முதுகில் வைத்து, வானவர் அமுதம் கொண்ட - தேவர்கள் அமுதத்தைப் பெறுவதற்குக் காரணமான, நீர் மத்தின் - நீரினைக்கடைந்த (மந்தர) மலைபோன்று, நிமிர்ந்த தோளான் - உயர்ந்த தோளையுடையவனும், நிறை மத்தம் மதுவை தேக்கி - நிரம்பிய மதத்தைச் செய்யவல்ல மதுவைத் தேக்கப்பருகி, ஊர் மத்தம் உண்டால் அன்ன மயக்கத் தான் - ஊமத்தங்காயைத் தின்றால் ஒத்த மயக்கத்தை யுடைய வனும், உருமை தின்பான் - இடியையும் உட்கொள்ள வல்லவனு மான, போர்மத்தன் என்பான் - போரில் வல்ல மத்தன் என்பான், புகர் மத்தம் பூட்கை மேலான் வந்தான் - முகப்புள்ளியையும் மதக் களிப்பினையும் உடைய யானைமீது ஆரோகணித்தவனாய் வந்தான்.

இக்கவியில் போர் மத்தன் என்ற பெயருக்கேற்ப எதுகை யமைந்துள்ளமை காண்க. கூர்மம்: ஆமை (திவா.); கூர்மா என்பது வடசொல். வெரிந்: முதுகு; நீர் மத்து - நீரைக் கடைதற் கான மத்து; இது மந்தரமலை. கடல் கடைந்தது: பால. அகலிகை: 21-28. தக்க. 630, 645 காண்க. ஊமத்தைக் காயைத் தின்றாற் பித்துப் பிடிக்கும் என்பார்கள். உருமைத்தின்பான்; இடியையும் தின்பவன், புகர் - யானையின் முகப் புள்ளிகள்; 'ஆழி யினளவும் புகராலழகெய்தி' (வி. பா. 16-ஆம் போர், 7); ஊர்மத்தம் ஊமத்தன் என்பதன் விரித்தல், போர்மத்தன்; ரணமஸ்தகன் (முதனூல்).

பி - ம். 1. முதுகின், முதுகு

3. ஊர்மத்தை, ஒர்மத்தை; உண்டானென்ன; உருமுத். 214

1876. காற்றன்றேற் கடுமை யென்னுங்
கடலன்றேன் முழக்க மென்னும்
கூற்றன்றேற் கொலைமற் றென்னும்
உருமன்றேற் கொடுமை யென்னும்
சீற்றந்தா னன்றேற் சீற்றம்
வேறொன்று தெரிப்ப தெங்கே
மாற்றன்றே மலைமற் றென்னே
மத்தன்றன் மத்த யானை.

மத்தன்தன் மத்த யானை - போர்மத்தனுடைய மதங்கொண்ட வேழம், காற்று அன்றேல் கடுமை என் ஆம் - காற்று அன்றானால் - விரைவு எப்படி நிகழும், கடல் அன்றேல் - கடல் அன்றாயின், முழக்கம் என் ஆம் - முழக்கம் எப்படி நிகழும்? கூற்று அன்றேல் கொலை மற்று என்னும் - யமன் இல்லையாயின் கொலைத் தொழில் எவ்வாறு நேரும்? உரும் அன்றேல் - இடியன்றாயின், சொடுமை என்னும் - கொடுமை எப்படி ஏற்படும்; சீற்றம் தான் அன்றேல் - சினமே ஓர் வடிவுகொண்டு வந்ததன்றாயின், வேறு ஒன்று சீற்றம் தெரிப்பது எங்கே - பிறிதொடு சினத்தை அறிவிப்பது எங்ஙனம்? மலை மாற்று அன்றே - மலையோ இதற்கு நிகராவதன்று; மற்று - பின்னர், என்னே - என்ன என்று எடுத்து மொழிவது. ஏ : அசை.

இக்கவியும் இதனை அடுத்துள்ள கவியும் போர் மத்தனுடைய யானை வருணனை; காற்றுப் போன்று கடுகிக் கடல்போன்று முழங்கி, கூற்றம்போற் கொலைத் தொழில் வல்லதாய், இடி போன்று கொடுமை செய்வதாய், உருவத்தால் மலையும் நிகரில் லாததாய் சினத்துடன் நின்றது போர் மத்தன் யானை என்க. மாறு; (ஒப்பு) : 'மாறிலா வள்ளி வாழ்க' (கந்தபு. துதி). மத்த யானை ; 'மத்த யானை வருந்தாதோ' (சுந்தர. 547); வான்மீகர் மகா பார்சுவனை 'மத்தன்' என்றும், மத்தாநீகன் என்றும் கூறுவர்.

பா - ம். 1. அன்றே, அன்றே.

4. மற்று யாதோ, எங்கோ, எதோ.

1877. வேகமாக் கவிகள் வீசும் வெற்பினம் விழுவ மேன்மேற்
பாகர்காற் சிலையிற் றூண்டு முண்டையா மெனவும் பற்று
மாகமா மரங்க ளெல்லாங் கடாத்திடை வண்டு சோப்பி
ஆகினு மாம தன்றேற் கரும்பென்றே யறைய லாமால்.

கவிகள் - குரங்குகள், வேகமா வீசும் வெற்பினம் - விரைந்து எறிகின்ற மலைத் தொகுதிகள், மேன்மேல் விழுவ - அடுத்தடுத்து வீழ்வன, பாகர் கால் - பாகர் காலிலே, சிலையில் தூண்டும் - வில்லி னின்று செலுத்துகின்ற, உண்டை ஆம் எனவும் பற்று - உண்டை யாகும் என்பதற்கும் ஏற்றன வல்ல; மாகம்மா மரங்கள் எல்லாம்-(மற்றும் அவர்கள் எறியும்) விண் அளாவி உயர்ந்த மரங் கள் அனைத்தும், கடாத்திடை - யானையின் கன்னத்தில், வண்டு சோப்பி ஆகினும் - வண்டினை ஓட்டுவதாகினும் ஆம்; அது அன் றேல் - அஃது உவமையில்லை என்றால், கரும்பு என்றே அறைய லாம் - கரும்பு என்றே சொல்லலாம். ஏ, ஆல் - அசை.

மரங்கள் எல்லாம் மிகவும் எளிதாகக் கரும்புபோன்று முரிந்தன என்க. வெற்பினங்கள் பாகர்கள் வில்லின் வைத்து எய்யும் உண்டையாதற்கும் போதா என்றபடி.

வேகமாக என்பது ஈறு குறைந்து வேகமா என நின்றது. உண்டை: வில்லில் வைத்து அடிக்கும் மருந்துருண்டை 'பண்டைநா ளிராகவன் பாணி வில்லுமிழ், உண்டை' (அயோத்தி. மந்தரை. 41); 'கூனி கூன் போக வுண்டை தெறித்தபோ தொத்த தன்றிச் சினவுண்மை தெரிந்ததில்லை' (யுத்த. 1227); 'கூனிகூன், உண்டைகொண் டரங்க ஓட்டியுண் மகிழ்ந்த நாதன் ஊர்' (திருச் சந்தவிருத்தம். 49). உண்டையாம் எனவும் பற்று; (ஒப்பு): 'குவவுத் தோட்கமைந்த, தண்டெனக் கொளலுற்றது நொய்தெனத் தவிர்ந் தான்' (யுத்த. 139). மாகம் - ஆகாயம்; 'மாகமார் திருக்காளாத்தி மலை' (பெரியபு. கண்ணப்பர். 105). சோப்பி-ஈயோட்டி; ஈச்சோப்பி என்ற சொல் உண்மையும் காண்க; (கலிங். 142). கடாம் - மதநீர் வடியும் கன்னம்.

பா - ம். 1. வேகமாய்; விழ்வ.

2. பற்ற.

3. கடந்திடை, மதத்திடை; சேர்வது.

4. ஆகும் ஆக; என.

1878. காலிடைப் பட்டும் மானக் கையிடைப்
பட்டுங் கால
வாலிடைப் பட்டும் வெய்ய மருப்பிடைப்
பட்டும் மாண்டு
நாலிடைப் பட்ட சேனை நாயகன்
தம்பி யெய்த
கோலிடைப் பட்ட தெல்லாம் பட்டது
குரக்குச் சேனை.

குரங்குப்படை - அப்போது, கால் இடை பட்டும் - (அந்த வேழத்தின்) காலின் கீழ்ச்சிக்கியும், மானம் - உத்தம யானைக்குரிய அளவு கொண்ட, கை இடைபட்டும் - துதிக்கையிலே சிக்கியும், கால வால் இடைபட்டும் - யமனை ஒத்த வாலிடைச் சிக்கியும், வெய்ய மருப்பு இடைபட்டும் - கொடிய தந்தங்களில் அகப்பட்டும், மாண்டு - உயிர்நீங்கி, நாயகன் தம்பி எய்த - இராமபிரான் தம்பி யான இலக்குவன் விடுத்த, கோல் இடைபட்டது எல்லாம் - அம்பி னிடத்துச் சிக்கிய, நால் இடைபட்ட - நான்காக அமைந்த, குரக்கு சேனை - குரங்குப்படை, மாண்டு - இறந்து, பட்டது எல்லாம் பட்டது - படவேண்டிய பாடுகள் எல்லாம் உற்றது.

சொற்பொருட்பின் வருநிலையணி: மானம்: பெருமையும் ஆம். காலவால்; 'கால வேலான்' (பால. கையடை. 11). நாலிடைப் பட்டது: நான்கு என்ற எண்ணில் பொருந்தியது; இலக்குவனால் அரக்கர்பட்ட துன்பத்தை யானையினால் அரக்கர் பட்டனர். யானை தன்னுடைய ஐந்துறுப்பினாலும் வெல்லும் என்ப' (சீவக. 1677) உரை காண்க.

பி - ம். 2. பட்டும் மாண்ட.
3. சேனை நம்பிதன், நம்பிதம்பி.
4. பட்ட, பட்டன; பட்டதக்.



1879. தன்படை பட்ட தன்மை நோக்கினன் தரிக்கிலாமை
அன்படை யுள்ளத் தண்ண லங்கியின் புதல்வ னுழி
வன்படை யனைய தாங்கோர் மராமரஞ் சுழற்றி வந்தான்
பின்படை செல்ல நள்ளார் பெரும்படை யிரிந்து பேர.

தன் படைபட்ட தன்மை நோக்கினன் - தன் படையுற்ற தன்மையைக் கண்டவனாய், அன்பு அடை உள்ளத்து அண்ணல் - அன்பு நிறைந்த மனத்தைக் கொண்ட பெருமையாளனும், அங்கியின் புதல்வன் - அக்கினி குமாரனுமான நீலன், தரிக்கிலாமை - மனம் பொறாது, ஆங்கு - அப்பொழுது, ஓர் - ஒரு, மராமரம் - மராமரத்தை எடுத்து, படை பின் செல்ல - சேனை பின்பற்றி வரவும், நள்ளார் பெருபடை இரிந்து பேர - பகைவரின் பெரிய சேனை நிலை குலைந்து ஓடவும், ஆழி வன்படை அனையது - வலிய சக்கரப் படை போல்வதாக, சுழற்றி வந்தான் - சுழற்றிக் கொண்டு வந்தான்.

நோக்கினன் : நீலன் : கிட்கிந்தா. 696 ; குறிப்புக் காண்க.

பி - ம். 1. உற்ற தன்மை.

2. அனலன்றன், அளவின்றன், அங்கிதன்.

4. பின்படைபட்டு ; நண்ணார், நன்னீச்ப் ; போக. 218

1880. சேறலுங் களிற்றின் மேலான் திண்டிற லரக்கன் செவ்வே
ஆறிரண் டம்பி னலந் நெடுமர மறுத்து வீழ்த்தான்
வேறொரு குன்ற நீலன் வீசின னதனை விண்ணின்
நூறுவெம் பகழி யாலே நுறுக்கினன் களிறு நூக்கி.

சேறலும் - (தன்னை நோக்கி) நீலன் வந்த அளவில், களிற்றின் மேலான் - யானை மீதமர்ந்திருந்தவனான, திண் திறல் அரக்கன் - மிக்க வன்மையுள்ள இராக்கதன், செவ்வே - செம்மையாக, ஆறு இரண்டு அம்பினால் - பன்னிரண்டு சரங்களால், அ நெடுமரம் அறுத்து வீழ்த்தான் - அந்த நீண்ட மராமரத்தினை வெட்டித் தரையில் தள்ளினான் ; நீலன் வேறு ஒரு குன்றம் வீசினன் - நீலன் என்ற வீரன் பிறிதொரு மலையை எறிந்தான் ; அதனை - அந்த மலையை, களிறு நூக்கி - யானையை முன் செலுத்திக் கொண்டே, நூறு வெம்பகழியாலே - நூறு கொடிய அம்புகளால், விண்ணின் நுறுக்கினன் - ஆகாயத்திலேயே துகளாக்கி விட்டான்.

சேறல் : செல் + தல் ; 'தேயத்தார் தேயம் சேறல் தெறுவிலார் செருவிற் சேறல்' (சுந்தர. 130) ; பெண்வழிச் சேறல் என்ற திருக்குறள் அதிகாரமும் காண்க, நூறு பகழி - நுறுக்குகின்ற பகழி எனினுமாம் ; 'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி'

(நாலடி. 156); என்றது காண்க. நூக்குதல் - செலுத்துதல்; 'நூறுவாயென மாதலி நூக்கினன்' (யுந்த. இராவணன் வதை. 174); ஊறு வெம்பகழி என்றும் பிரிப்பர் ஒரு சாரார்.

பி - ம். 2. அம்பினுவேயம்; விட்டான்.
3. அதனை வென்றி.
4. பகழிதன்னல்; கரியை நூக்கி; நூறலும் பிற்கொடாது துணிந்தெதிர் நோக்கிப் புக்கான். 219

1881. பின்னெடுங் குன்றந் தேடிப் பெயர்குவான் பெயரா [வண்ணம்
பொன்னெடுங் குன்றஞ் சூழ்ந்த பொறிவரி யரவம் போல
அந்நெடுங் கோப யானை யமரரும் வெயர்ப்ப வங்கி
தன்னெடு மகனைச் சுற்றிப் பிடித்தது தடக்கை நீட்டி.

பின் - அதன் பின்னர், நெடு குன்றம் தேடி பெயர்குவான் - பெரிய மலையைத் தேடிக்கொண்டு செல்பவன் ஆன நீலன், பெயரா வண்ணம் - ஏக முடியாதபடி, பொன் நெடுகுன்றம் சூழ்ந்த பொறி வரி அரவம் போல - அழகிய உயர்ந்த மந்தர கிரியை வளைத்த, படப் புள்ளிகளையும் உடல் கோடுகளையும் உடைய, வாசுகி என்னும் நாகத்தைப் போன்று, அ நெடு கோபம் யானை - அந்த உயர்ந்த சினம் உள்ள வேழம், அமரரும் வெயர்ப்ப - தேவர்களும் பயத்தால் உடல் வேர்வை கொள்ளும்மாறு, அங்கி தன் நெடு மகனை - அக்கினியின் உயர்ந்த மகனுன அந்த நீலனை, தடகை நீட்டி சுற்றி பிடித்தது - பெரிய துதிக்கையை நீட்டி வளைத்துக் கைப்பற்றியது.

பெயர்குவான்: வினையாலணையும் பெயர். 'மந்தர மலையை வாசுகி என்ற அரவம் கயிறுபோன்று சுற்றியது பாற்கடல் கடைந்த காலத்து நிகழ்ச்சி யுந்த. 1875 உரைக் குறிப்புக் காண்க. பொறிவரி: உம்மைத் தொகை. கோப யானை: 'வெங் கோப யானை விறல் மன்னர்' (அரிச். பயான.); குன்று நீலனுக்கும் அரவு கைக்கும் உவமை; வேழத்தின் கைக்குப் பாம்பு உவமை; (முல்லைப். 19).

பி - ம். 1. பின்னரும்.
2. அன்னெடுங்; அஞ்ச; வியப்ப, தவிப்ப.
4. பற்றி; தாக்கி, தாங்கி. 220

1882. ஒடுங்கின னுரமு மாற்ற லூற்றமு
முயிரு மென்னக்
கொடும்படை வயிரக் கோட்டாற் குத்துவான்
குறிக்குங் காலை
நெடுங்கையுந் தலையும் பிய்யா நொய்தினி
னிமிர்ந்து போனான்
நடுங்கின ரரக்கர் விண்ணோர் நன்றுநன்
றென்ன நக்கார்.

(அப்போது நீலன்), உரமும் - வன்மையும், ஆற்றல் ஊற்றமும் வல்லமையாலான மனோதிடமும், உயிரும் - ஆவியும், ஒடுங்கினன் என்ன - அடங்கப் பெற்றான் என்று (கண்டோர்) நினையுமாறு, கொடுபடை - வளைந்த அரிவாள் போன்று, வயிரம் கோட்டால் - (கூர்மையான) வயிரப்பூண் அமைத்த தந்தத்தினால், குத்துவான் - குத்துமாறு, குறிக்கும் காலை -(அதிகாயனுடைய) யானை எண்ணும் அளவில், நெடுகையும் தலையும் பிய்யா - (அதனுடைய) நீண்ட துதிக்கையினையும் சிரத்தினையும் பிய்த்துக்கொண்டு, நொய்தினின் நிமிர்ந்து போனான் - விரைவில் மேலோங்கிச் சென்றான்; அரக்கர் நடுங்கினர் - இராக்கதர்கள் நடுக்கம் உற்றனர்; விண்ணோர் 'நன்று நன்று - வானவர் நல்லது நல்லது', என்ன நக்கார் - என்று கூறி நகைத்தனர்.

உரம்-வன்மை; 'உரமொருவற் குள்ள வெறுக்கை' (குறள். 600). ஊற்றம் - மனவலி ; 'ஊற்றமில்லவன் ஓடினன் கனகனை உற்றான்' (யுத்த. 163). குத்துவான் : வானீற்று வினையெச்சம். பிய்த்தல் - கிழித்தல். பிய்யா : செய்யா என்னும் வாய்பாடு. புய்த்தல்; களவழி. 39 ; மணி. 13 ; 47.

பி - ம். 2. குறுகுங்காலை, குறுகும்வேலை.
3. விய, பாற, பிய்ய.
4. நன்றென்ன வார்த்தார்.



1883. தறைத்தலை யுற்றா னீல னென்பதோர்
காலந் தன்னில்
நிறைத்தலை வழங்குஞ் சோரி நீத்தத்து
நெடுங்குன் றென்னக்

குறைத்தலை வேழம் வீழ விசும்பின்மேற்
　　கொண்டு நின்றான்
பிறைத்தலை வயிர வாளி மழையெனப்
　　பெய்யும் வில்லான்.

நீலன் - நீலன், தறைதலை உற்றான் என்பது ஓர் காலம் தன்னில் - பூமியை அடைந்தான் என்னும் அளவுக்குள், நிறைதலை வழங்கும் சோரி நீத்தத்து - நிறையத்தலைகளை அடித்துக்கொண்டு உதிரப்பெருக்கிலே, நெடுகுன்று என்ன - பெரிய மலை என்னும்படி, தலை குறை வேழம் வீழ - தலை துணிக்கப்பட்ட களிறு வீழ, (அதன் மீதிருந்த போர் மத்தன்), விசும்பின் மேல்கொண்டு நின்றான் - ஆகாயத்தின் மேலே நின்றவனாய், பிறைதலை வயிரம் வாளி மழை என பெய்யும் வில்லான் - அர்த்த சந்திர பாணங்களை மழைபோன்று பெய்கின்ற வில்லினை யுடையவன் ஆயினான்.

தறைதலை: செய்யுள் எதுகை நோக்கி வலித்தது. நீத்தம் - வெள்ளம்; 'மொய்புனிர் நீத்தம்' (ஆரணிய. 550); குறைதலை: தலைகுறை என மாற்றுக. பிறைத்தலை வயிர வாளி: அர்த்த சந்திர பாணம்.

பா - ம். 1. தரையினி னுற்ற னுற்றான், தறைத்தலை யுற்ற னுற்றான்.
　　2. நிறந்தலை; நீர்ந்தது.
　　3. விசும்பை.
　　4. பொழியும் கையான். 222

1884 வாங்கிய சிரத்தின் மற்றை வயிரவான் கோட்டை வவ்வி
　　வீங்கிய விசையி னில வரக்கன்மேற் செல்ல விட்டான்
　　ஆங்கவ னவற்றை யாண்டோ ரம்பினு லறுத்தோ ரம்பால்
　　ஓங்கல்போற் புயத்தி னென்ற னுரத்திடை யொளிக்க
　　　　　　　　[வெய்தான்.

நீலன் - நீலன், வாங்கிய சிரத்தின் - வாங்கிய தலையின் உள்ள, மற்றை வயிரம் வான் கோட்டை - அந்த உறுதியான வெள்ளிய தந்தங்களை, வவ்வி - பறித்து, வீங்கிய விசையின் - மிக்க வேகமுடன், அரக்கன் மேல் செல்ல விட்டான் - அரக்கன்மீது செல்லும்படி விட்டான்; ஆங்கு - அப்போது, அவன் - அந்த அரக்கன்,

அவற்றை - அந்தத் தந்தங்களை, ஆண்டு - அவ்விடத்தில், ஓர் அம்பினால் அறுத்து - ஓர் வாளியால் துணித்து, ஓர் அம்பால் - பிறிதொரு சரத்தால், ஓங்கல்போல் புயத்தினன் தன் உரத்திடை ஒளிக்க எய்தான் - மலைபோன்ற புயத்தை உடையவனான நீல னுடைய மார்பின்கண் கரக்குமாறு விடுத்தான்.

வான்கோடு - பெரிய தந்தம் எனினும் ஆம். வவ்வி : சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர் அனைவரும்; (பால. நகரப். 1).

பி - ம். 1. வாட்; கோடு; வாங்கி.

2. விசையால்.

3. ஆங்கவன் அத்தை; ஆங்கோர்.

4. ஓங்கலம்; உரந்தின்மேற்; ஒளிப்ப, குளிப்ப. 223

1885. எய்தது கால மாக விளிந்தில தியானை யென்னக்
கையுடை மலையொன் றேறிக் காற்றெனக் கடாவி [வந்தான்
வெய்யவ னவனைத் தானு மேற்கொளா வில்லி னேடு
மொய்பெருங் களிற்றி னிட்டான் மும்மதக் களிற்றின் [முன்னர்.

எய்த அது காலம் ஆக - எய்த அந்தக் காலத்திலே, (பார்த் தோர்) யானை விளிந்திலது என்ன - யானை இறந்துபட வில்லை என்று நினையுமாறு, (அரக்கன்) கைஉடை மலை ஒன்று ஏறி - கையினையுடைய மலைபோன்ற யானை ஒன்றின்மீது ஏறி, காற்று என கடாவி வந்தான் - காற்றுப் போன்று விரைவாகச் செலுத்திக் கொண்டு வந்தான்; வெய்யவன் - கொடிய வீரம் சான்ற அந்த நீலன், அவனை தானும் - அந்த அரக்கனையும், வில்லினேடு மொய் பெரு களிற்றின் மேல் கொளா - வில்லுடனே வலிய பெரிய வேழத் தினின்றும் மேலே கொண்டு (உயர்த்தி), மும்மதம் களிற்றின் முன னர் - மூன்று மதம் அமைந்த (அந்த) யானையின் முன்புறத்தில் இட்டான்.

எய்த அது என்பது எய்தது என நின்றது. கையுடை மலை - யானை; வெளிப்படை. நடைமலை, மதமலை, வருங்குன்றம் என்றாற்

போன்று. கடாவுதல் - செலுத்துதல்; 'அங்குசம் கடாவ வொரு கை' (திருமுருகு. 110); 'தேர் பரி கடாவித் தொடங்கினர்' (ஆரணிய. 525); மேற்கொளா; செய்யா என்னும் வாய்பாடு. மொய்: வலிமை. மும்மதம்: கன்ன கபோல கோசமதம். 'மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி' (தனிப்பா. ஒட்டக்கூத்தர்); இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் அந்தாதித் தொடை.

பி - ம். 1. விழுந்திலநியானை, விழுந்தில யானை.
2. மலையோன் றேந்தி.
3. வெய்யவன் அதனைத், தன்னைந்.
4. மொய்தரு; பெருங்களத்தின். 224

1886. இட்டவ னவனி நின்று மெழுவதன்
முன்ன மியானை
கட்டமை வயிரக் கோட்டாற் களப்பட
விழ்த்திக் காலால்
எட்டிவன் தடக்கை தன்னு லெடுத்தெங்கும்
விசையின் வீசப்
பட்டிலன் தானே தன்போர்க் கரியினைப்
படுத்து வீழ்த்தான்.

இட்டவன் - இடப்பட்ட அந்தப் போர்மத்தன் என்பவன், அவனி நின்றும் - பூமியினின்றும், எழுவதன் முன்னம் - கிளம்பு வதற்கு முன்னர், (மத மயக்கத்தால் அவனைத் தன் தலைவன் என்று உணராமையால்), யானை - வேழமானது, கட்டு அமை வயிரம் கோட்டால் - பூண் அமைக்கப்பெற்ற கிம்புரிக் கோட்டினால், களம்பட விழ்த்தி - களத்தில் விழுமாறு தள்ளி, காலால் எட்டி - காலினால் எட்டி (மிதித்து), வல் தடகை தன்னால் எடுத்து - வலிய பெரியகரத்தினால் தூக்கி, எங்கும் விசையின் வீச - எங்கும் விரைவுடன் வீசவும், பட்டிலன் - சாகாதவனாய், தன்போர் கரியினை தானே படுத்து விழ்த்தான் - தன்னுடைய போர் வேழத்தைத் தானே கொன்று விழ்த்தினன்.

அவனி - பூமி ; 'அவனி கீண்டுக' (ஆரணிய. 467).

பி - ம். 1. இட்டனன் ; நின்றுங் கெழுவதன்.

2. விழ்த்துக்.

3. வெட்டி ; எடுந்தெடுத் தெங்கும், எடுத் தங்குமிங்கும்.

4. நன்கைக், நன்போர் ; களிற்றினை ; விழ்ந்தான். 225

1887. தன்கரி தானே கொன்று தடக்கையாற்
றடிந்து வீழ்த்தும்
மின்கரி தென்ன மின்னு மெயிற்றினன்
வெகுளி நோக்கிப்
பொன்கரி தென்னுங் கண்கள் பொறியுக
நீலன் புக்கான்
வன்கர முறுக்கி மார்பிற் குத்தினன்
மத்தன் மாண்டான்.

தடகையால்-பெரிய கரத்தால், தன் கரி தானே கொன்று-தன் யானையைத் தானே உயிர் நீங்குமாறு, தடிந்து வீழ்த்தும்-துணித்து வீழ்த்திய, மின்கரிது என்ன மின்னும் எயிற்றினன் - மின்னலும் நிறத்தால் கரியது என்னுமாறு ஒளிவிடுகின்ற பற்களை உடையவன் ஆன போர் மத்தனுடைய. வெகுளி நோக்கி - சினத்தினைக் கண்ணுற்று, நீலன் - நீலன், பொன்கரிது என்னும் கண்கள் பொறி உக - பொன்னும் கருமை என்னுமாறு (தன் விழிகளினின்றும்) நெருப்புப்பொறி சிந்த, புக்கான்-புகுந்து, வல் கரம் முறுக்கி-வலிய கையினை முறுக்கி, (மத்தனது) மார்பில் குத்தினன் - மார்பிலே குத்தினன் ; (குத்தவே) மத்தன் மாண்டான் - போர் மத்தன் மரித்தான்.

மின்கரிது என்னும், பொன்கரிது என்னும், (ஒப்பு): 'திங்களும் கரிதென வெண்மைதீற்றிய' (பால. நகரப். 27); இடையிரண்டடிகளில் வெகுளியின் மெய்ப்பாடுகள் காண்க.

பி - ம். 1. படுத்து, கொன்று ; விழ்த்த.

2 என்ன நின்ற.

3. புகையுக. 226

## இனி, இடபவயமந்தர்கள் போரும் வயமந்தன் சாவும்

1888. உன்மத்தன் வயிர மார்பி னுருமொத்த
கரஞ்சென் றுற்ற
வன்மத்தைக் கண்டும் மாண்ட மதமத்த
மலையைப் பார்த்தும்
சன்மத்தின் தன்மை யானுந் தருமந்தைத்
தள்ளி வாழ்ந்த
கன்மத்தின் கடைக் கூட்டானும் வயமந்தன்
கடிதின் வந்தான்.

மாண்ட - மாட்சிமைப்பட்ட, மதமத்த மலையை (வேழத்தைப்) பார்த்தும், உன்மத்தன் - உன்மத்தனுடைய, வயிரம் மார்பில் - வயிரம்போல் உறுதியான மார்பிடத்து, உரும் ஒத்த - இடிபோன்ற, கரம் சென்று உற்ற - கை சென்று பொருந்திய, வன்மத்தை கண்டும் - வலிமையைக் கண்ணுற்றதாலும், சன்மத்தின் தன்மை யானும் - பிறப்பின் இயல்பாலும், தருமத்தை தள்ளி வாழ்ந்த - (உடன் பிறப்பாம்) தருமத்தைப் போக்கி வாழ்ந்து வந்த, கன்மத்தின் கடைகூட்டானும் - தீவினையால் நிகழ்ந்துள்ள இறுதிக்காலத்தாலும், வயமத்தன் கடிதின் வந்தான் - வயமத்தன் என்பவன் (போருக்கு) விரைந்து வந்தான்.

உன்மத்தன் - போர்ப்பித்துக் கொண்டவன். மத்தன் யுத்தோன் மத்தன் என்ற பெயர்கள் முதனூலிலும் காணலாம். மாண்ட - மாட்சிமைப்பட்ட ; 'மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்' (புறநா. 191); 'பூமாண்ட தீந்தேன் தொடை' (சீவக. 31); 'மாண்ட குணத்தொடு மக்கட்பே றில்லெனினும்' (நாலடி. 56); சன்மம் - பிறப்பு. 'சன்மமும் மரணமுமின்றித்தீருமே' (பால. பாயிரம்.); தருமத்தைத் தள்ளிவாழ்ந்த : 'அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகி' (யுந்த, மூலபல. 6); 'அறம்புகாமை யால் அழியுமிப்பதி' (சுந்தா. 118). கடைக் கூட்டு : மரண சமயம் ; 'உயிர் காக்கக் கடவீரேன் கடைக் கூட்டால்' (யுந்த. 1559).

பி - ம். 1. சென்று ஊன்ற.
2. பார்த்து ; கண்டும்.
4. கடைக்கூட்டாலு மல்ல, கடைக்கூட்டானமலே ; கடிது, களன்று. 227

1889. பொய்யினும் பெரிய மெய்யான் பொருப்பினைப்
பழித்த தோளான்
வெய்யனென் றுரைக்கச் சாலத் திண்ணியான்
வில்லின் செல்வன்
பெய்கழ லரக்கன் சேனை யார்த்தெழப்
பிறங்கு பல்பேய்
ஐயிரு நூறு பூண்ட வாழியந்
தேரின் மேலான்.

(அந்த வயமத்தன்), பொய்யினும் பெரிய மெய்யான் - பொய்யைப் பார்க்கிலும் பெரிய சரீரம் படைத்தவன்; பொருப்பினை பழித்த தோளான் - மலையினையும் பழிக்கும் தோளையுடையவன்; வெய்யன் என்று உரைக்க சால திண்ணியான் - கொடியவன் என்னக் கூறுமாறு மிக்க மனவுறுதி யுடையவன், வில்லின் செல்வன் - வில்வித்தையைச் செல்வமாக ஏற்றவன்; (அவன்), பெய் கழல் அரக்கன் சேனை - பூண்ட வீரக்கழலையுடைய இராவணனுடைய சேனை, ஆர்த்து எழ - ஆரவாரம் செய்து கிளம்ப, பிறங்கு பல் பேய் - விளங்குகின்ற பல பேய்கள், ஐயிரு நூறு பூண்ட ஆழி அம் தேரின் மேலான் - ஆயிரம் கட்டப்பட்ட சக்கரங்களையுடைய தேரின்மீது அமர்ந்துள்ளான்.

பொய் எவ்வளவு எல்லையற்றதோ அதுபோன்ற மெய் என்றார்; (ஒப்பு): 'அவாப்போலகன்ற' (யாப். காரிகை.). ஒரு பொய்யைச் சொல்லி அதை மறைக்கப் பிறிதொன்று, அதனையும் மறைக்கப் பிறிதொன்றாக அது வளர்ந்து செல்லும்; ஆகலின் அவ்வாறு கூறினர். திண்மைக்கும் அசைவின்மைக்கும் உயர அகலங்கட்கும் மலை உவமை. வில்லின் செல்வன்; இது சொல்லின் செல்வன் போன்றது. முன்பு ஆயிரம் பரிகள் பூட்டப்பெற்ற தேரினைக் கண்டோம்; இவன் தேர் ஆயிரம் பேய்கள் பூட்டப் பெற்றது. இனி, பொய்யினும் பெரிய மெய்யான் என்பதற்கு, அவ்வரக்கன்மாட்டு உள்ள பொய்யினைவிடப் பெரிய மெய்யான் எனினுமாம்.

பி - ம். 2. உரைப்பார்க்கெல்லாம் வெய்யவன், தன்னியான்.
3. அரக்கன் தானை.

1890. ஆர்க்கின்ரு னுலகை யெல்லா மதிர்க்கின்ரு
　　　னசனி யஞ்சப்
பார்க்கின்ருன் பொன்றி ஞரைப் பழிக்கின்ருன்
　　　பகழி மாரி
தூர்க்கின்ருன் குரங்குச் சேனை துரக்கின்ருன்
　　　துணிவை நோக்கி
ஏற்கின்ரு ரில்லை யென்னு விடபன்வந்
　　　தவனே டேற்ருன்.

ஆர்க்கின்ருன் - ஆரவாரம் செய்பவனும், உலகை எல்லாம் அதிர்க்கின்ருன் -(அதனல்) உலகத்தையெல்லாம் திடுக்கிடச் செய்பவனும், அசனி அஞ்ச - இடியும் பயப்படுமாறு, பார்க்கின்ருன் - நோக்குபவனும், பொன்றினுரை பழிக்கின்ருன் - இறந்தவர்களை அவதூறு பேசுபவனும், பகழி மாரி தூர்க்கின்ருன் - அம்புமழையைப் போர்க்களம் நிரம்புமாறு பெய்பவனும், குரங்கு சேனை துரக்கின்ருன் - குரங்குச் சேனையைத் துரத்துபவனுமான (அந்த வயமத்தனுடைய), துணிவை நோக்கி- துணிவினைப்பார்த்து, 'ஏற்கின்ருர் இல்லை-(இவனை) எதிர்ப்பவர் இல்லை', என்னு-என்று, இடபன் - இடபன் என்ற குரங்குவீரன், வந்து அவனேடு ஏற்ருன் - வந்து அவனுடன் பொருதான்.

பொன்றினுரைப் பழித்தல் - ஆண்மையற்றவர்கள் என்று நிந்தித்தல்; 'பொன்றலில் இராமன் அம்பாற் பொன்றலே புகழ்' (ஆரணிய. 757); 'புகழலாற், பொன்ருது நிற்பதொன் றில்' (குறள். 233).

பி - ம். 1. உருமுமஞ்ச.
4. இடவன். 229

1891. சென்றவன் தன்னை நோக்கிச் சிரித்துநீ
　　　சிறியை யுன்னை
வென்றவம் உம்மை யெல்லாம் விளிப்பனே
　　　விரிஞ்சன் ருனே
என்றவ னெதிர்ந்த போது மிராவணன்
　　　மகனை யின்று
கொன்றவன் தன்னைக் கொன்றே குரங்கின்மேற்
　　　கோதிப்ப னென்ருன்.

சென்றவன் தன்னை நோக்கி - சென்றடைந்தவனான இடபனை பார்த்து, (அந்த வயமத்தன்) சிரித்து - நகையாடி, 'நீ சிறியை - நீ சிறியவன்; உம்மை எல்லாம் வென்று அவம் - உங்கள் அனை வரையும் வெல்வதால் (பயனின்று) வீணேயாம்; விளிப்பனோ - உங்களை அறைகூவி அழைப்பேனோ? விரிஞ்சன் தானே - பிரம தேவன் தானே, என்று - என்று சொல்லுமாறுள்ள, அவன் - அந்த அநுமன், எதிர்ந்தபோதும் - பொருதபோதும், இராவணன் மகனை இன்று கொன்றவன் தன்னை கொன்றே - இராவணன் மகனான அதிகாயனை இன்று கொலைசெய்தவன் ஆன இலக்குவனைக் கொன்ற பின்னரே, குரங்கின்மேல் கோதிப்பன் - அந்தக் குரங்கின் மீது சினங்கொள்வேன்', என்றான் - என்று மொழிந்தான்.

சென்றவன் - போர்புரிதற்கு அணைந்த இடபன். சிரித்து: வீரத்தெழுந்த வெகுளிநகை. சமானமில்லாதவரோடு பொருதல் போர்வீரற்குப் பொருந்தாது ஆகலின் சிறியை என்றான்; சிறியன் உருவத்தாலும் வயதாலும் ஆற்றலாலும் சிறியவன். 'நூறு மாமகத்தோன் சேயெனில் இளையன்' (வி. பா. இராசசூய; 3) என்று சராசந்தன் கண்ணனை நோக்கிக் கூறியது காண்க. விரிஞ்சன் - பிரமன், விரிஞ்சன்தானே என்றவன்; 'விரிஞ்சனோ விடைவல்லானோ' (கிட்கிந்தா. 61) என்று இராமபிரான் அநுமனைக் கூறியது காண்க. 'ஆதி யயன்றானேயென யாவும் அறைகின்றிர்' (கிட்கிந்தா. 992) அநுமன் பிரமபட்டத்தைப் பெறப்போகின்றவனாதல்பற்றியும் இங்ஙனம் கூறியதாம் என்க. நான்காமடி வயமத்தகன் கூறிய வஞ்சினம்.

பி - ம். 2. என்று போரின் விளிகிலன், என்று நின்மேல் விளிகிலன்; விளிவனே; விரிஞ்ச னென்பான்.

4. தன்னைக்கொன்று; கோறிப்பது. 230

1892. வாய்கொண்டு சொற்றற் கேற்ற வலிகொண்டு
பலியுண் வாழ்க்கைப்
பேய்கொண்டு வெல்ல வந்த பித்தனே
மிடுக்கைப் பேணி

நோய்கொண்டு மருந்தைச் செய்யா வொருவநின்
நோன்மை யெல்லாம்
ஒய்கின்றாய் காண்டி யென்று வுரைத்தன
னிடப னொல்கான்.

'வாய்கொண்டு சொற்றற்கு ஏற்ற வலிகொண்டு - வாயினால் சொல்லுதற்குத்தக்க வலிமையைக் கொண்டும், பலி உண் வாழ்க்கை-பலியையுண்ணும் வாழ்க்கையினையுடைய, பேய்கொண்டு வெல்ல வந்த பித்தனே - பேய்களை உதவியாகக்கொண்டும் வெற்றி பெற வந்துள்ள பித்தனே; மிடுக்கை பேணி-வலிமையைப் பாராட்டிய வண்ணம், நோய்கொண்டும் மருந்தை செய்யா ஒருவ-நோயினாற் பிடிக்கப்பட்டிருந்தும் அதற்குப் பரிகாரம் செய்யும் வல்லமையற்ற ஒருவனே! நின் நோன்மை எல்லாம் ஓய்கின்றாய் - உன் வல்லபம் எல்லாம் இழந்து தளரப்போகின்றாய்; காண்டி - காண்பாயாக', என்று - என்று, ஒல்கான் - சிறிதும் தளராதவனாய், இடபன் உரைத்தனன் - இடபன் என்ற வானரவீரன் சொன்னான்.

வாய்கொண்டு சொற்றற்கேற்ற வலிகொண்டு - வெறும் வாய்ப்பந்தல் போடுவது; 'தோளினால் வலியராகித் தொக்கவர் தலைகள்பாற, வாளினாற் பேசி னல்லால் வாயினாற் பேசல் தேற்றேன்' (சீவக. 257). வாய்கொண்டு: 'வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியே னல்லேன்' (திருவாய். 3·9·9). பேய் கொண்டு: இவன் ஆயிரம் பேய்கள் பூண்ட தேரின் வந்தது முன்னர்க் குறிக்கப்பெற்றது; (யுத்த. 1888) அதனைச் சொல்லி ஏசினன் என்க. மிடுக்கு - வன்மை; 'மிடுக்கிலாதானை வீமனே' (தேவா. 647 : 7). நோய் கொண்டது: பிராட்டியை வஞ்சனையாகக் கவர்ந்துசென்று இராமபிரானுடைய பகையாகிய நோயினைக் கொண்டது; அந்தப் பகைநோய் தீர்வது பிராட்டியை உரியவனிடம் ஒப்படைப்பதே என்பதை உணராமை, மருந்தைச் செய்யாமை என்க. நோன்மை - வன்மை; 'நொய்தினிவ் வுலகெலா நுழையு நோன்மையாள்' (ஆரணிய. 229); 'ஒய்வறு துயர்வர வுட்கல் நோன்மையோ' (ஆரணிய. 1116); 'நொய்தினு லழுதங் கொண்ட நோன்மை' (சுந்தர. 22). ஓய்தல்-தளர்தல்; 'ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்' (தொல். சொல். உரி. 34). ஒல்கான் - தளரான்; 'ஒப்புரவிற் கொல்கார் கடனறி காட்சியவர்' (குறள். 218); 'சிதைவிடத் தொல்கா

ருரவேசர்' (குறள். 597); 'ஒப்புரவிற் கொல்கார் குடிப்பிறந்தார்' (நாலடி. 148).

பி - ம். 1. வாய்கொண்டும்; சொற்றற்கொத்த, சொற்றற்கொற்ற.
2. பேஸின். ○
3. நோய்கண்டு; ஒருவனின், ஒருவநீ.
4. நோறுய். 231

1893. ஓடுதீ யென்ன வோடா துரைத்தியே லுன்னோ டின்னே
ஆடுவன் விளையாட் டென்று வயிலெயிற் றரக்க [னம்பொற்
கோடுறு வயிரப் போர்விற் காலொடு புருவங் கோட்டி
ஈடுற விடபன் மார்பத் தீரைந்து பகழி யெய்தான்.

அயில் எயிறு அரக்கன் - கூர்மையான கோரப்பற்களையுடைய வயமத்தன், 'ஓடுதி என்ன - நீ ஓடிவிடுவாய் என்று நான் நினைக்கையில், ஓடாது உரைத்தியேல் - ஓடாமல் வீரவசனம் பேசுவாயாகில், இன்னே - இப்பொழுதே, உன்னோடு விளையாட்டு ஆடுவன் - உன்னுடனே போர்விளையாட்டினைப் புரிவேன்', என்று - என்று பகர்ந்து, அம் பொன் கோடு உறு - அழகிய பொன் மலையான மேருவினை நிகர்த்த, வயிரம் போர் வில் - உறுதியுள்ள போர் வில்லின், காலொடு புருவம் கோட்டி - விளிம்புகளோடு (தன்) புருவத்தினையும் வளைத்து, இடபன் மார்பத்து ஈடு உற - இடபன் என்ற வீரனுடைய மார்பில் வன்மையுடன் பொருந்த, ஈரைந்து பகழி எய்தான் - பத்து வாளிகளைச் செலுத்தினன்.

இன்னே - இப்பொழுதே; 'இன்னே செய்யவும் வேண்டும்' (தனிப்பா. ஔவை.); 'போயழைத் திடுமின் இன்னே' (குசேலோ. 2:192). வயமத்தனுக்குப் போர், விளையாட்டுப்போன்றது என்க; (ஒப்பு): 'சொன்ன வித்தொழில்கள் மூன்றும் தோற்றிடும் வகையே தென்னின், முன்னவன் விளையாட்டென்று மொழியலாம்' (சிவ. சித்தி. 2:36); 'குழாக்களிற் றரசர் குறித்தெழு கொலைக்களம், விழாக்களம் போல மெய்ம்மலி யுவகையர்' (தொல். புறத். 72) உரை காண்க. அயிலெயிறு: 'அயிலெயிற்றி னேந்துதியால்' (ஆரணிய. 58). அம்பொன் கோடு - பொன் மலை, கால் - வில்லின் அடி.

ஈடு - வன்மை; 'ஆரக்கனு மீடழிந்தான்' (ஆரணிய. 707). இடபன்: 'போர்க்கெலாந் தானேயென்று நின்றவன் இடபன்' (யுத்த. 830); 'நிலனிடபன் குமுதாக்கன்' (சுந்தர. 604). பகழி: 'பாருஞ் சார்வலி படைத்தவ னாத்தையப் பகழி' (கிட்கிந்தா. 289). உரு - உவமை உருபு.

பி - ம். 1. ஓடிவாய்; ஓடா வுரைத்தியோ; என்னே.

3. புருவங்காட்டி. 232

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

1894. அசும்புடைக் குருதி பாயு
மாகத்தான் வேகத் தாலந்
தசும்புடைக் கொடுந்தேர் தன்னைத்
தடக்கையா லெடுத்து வீசப்
பசுங்கழற் கண்ண பேயும்
பறந்தன பரவை நோக்கி
விசும்பிடைச் செல்லுங் காரின்
தாரைபோல் நான்ற மெய்யான்.

அசும்பு உடை குருதி பாயும் ஆகத்தான் - சேற்றுக் கசிவாக உள்ள உதிரம் பெருகுகின்ற உடம்பை யுடையவனாய், (இடபன்), வேகத்தால் - விரைவுடன், அ தசும்பு உடை கொடுதேர் தன்னை - அந்தக் கலசத்தை மேலே கொண்ட கொடிய இரதத்தை, தட கையால் எடுத்து - பெரிய கரத்தால் தூக்கி, வீச - எறிய, பசு கழல் கண்ண பேயும் - பசிய கழற்சிக்காய் ஒத்த விழியினையுடைய பேயும், பரவை நோக்கி பறந்தன - கடலை நோக்கிப் பறந்தன; அப்போது, (வயமத்தன்) விசும்பு இடை செல்லும் காரின் தாரை போல் - ஆகாயத்தினிடத்துச் செல்லும் மேகத்தின் ஒழுங்கு போன்று, நான்ற மெய்யான் - தொங்குகின்ற உடலை உடையவன் ஆனான்.

அசும்பு; கசிவு; 'அசும்புறு மதகிரி' (ஆரணிய. 414): மற்றும்; அயோத்தி. சித்திரகூடப். 30; சுந்தர. 90. ஆகத்தான் வேகத்தால் என்ற இடத்துப்பிராசநயம் காண்க. தசும்பு: குடம்; பால.

நகரப். 26; அயோத்தி. சித்திரகூடப். 30; சுந்தர. 90; அரக்கர், ' இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர் ' ஆகலின், கொடுந் தேர் எனப்பட்டது. பேயின் கண்ணிற்குக் கழற்சிக்காய் பொருத்த மான உவமை. பரவை: பரந்திருத்தலின் கடலுக்குக் காரணக்குறி. விசும்பு - ஆகாயம்; ' மண்டிணிந்த நிலனும், நிலனேந்திய விசும்பும் ' (புறநா. 2). தாரை - நீரொழுக்கு; ' தம்பியை யுன்னுந்தோறும் தாரைநீர் வழங்குங் கண்ணன் ' (சுந்தர. 985); நாலுதல்: தொங்குதல். 'ஒருகை யிருமருப்பு மும்மதத்து நால்வாய்' (தனிப்பா. ஔவை); ' ஒருவாய்க்கும் நால்வாய்க்கும் இரையெங்கே நிரப்புவேனே ' (தனிப்பா. வீரராகவ. 3).

பி - ம். 1. அசுர்பிடை; வேகத்தரய.

2. தசும்பிடைக்; தடங்.

3. பசுங்கனற் கண்ணின், பாய, பாய்ந்து, போக்கி.

4. சேரும். 233

1895. தேரொடுங் கடலின் வீழ்ந்து சிலையுந்தன் தலையு [மெல்லாம்
நீரிடை யழுந்திப் பின்னு நெருப்பொடு நிமிர வந்தான்
பாரிடைக் குதியா முன்ன மிடபனும் பதக நீபோய்
ஆரிடைப் புகுதி யென்னு வந்தரத் தார்த்துச் சென்றான்

தேரொடும் கடலின் வீழ்ந்து - இரதத்துடனே கடலிலே வீழ்ந்து: சிலையும் தன் தலையும் எல்லாம் - வில்லும் தன்தலையும் என்ற எல்லாம், நீர் இடை அழுந்தி - நீரில் அழுந்தப்பெற்று, பின்னும் நெருப்பொடும் - பிறகு தீப்போன்ற சினத்துடனும், நிமிர வந்தான் - மேல் எழுந்து வந்தவனை வயமத்தன், பார் இடை குதியா முன்னம் - பூமியின்கண் குதிப்பதன் முன்பு, இடபனும் - இடபனும், 'பதக - சண்டாளனே! நீ போய் ஆர் இடை புகுதி-நீ சென்று எவ ரிடம் புகலடையப்போகின்றாய்?' என்னு-என்று முழங்கிக்கொண்டு, அந்தரத்து - பரந்த வெளியில் (யுத்தகளத்தில்), ஆர்த்து சென்றான் - ஆரவாரித்துக் கொண்டு ஏகினான்.

சிலை என்னவே சிலைபற்றிய கையும் கொள்க; நீரிடை அழுந்தி நெருப்போடு - இங்கு முரண் காண்க. பதகன் - பாதகன்; ' வெய்

யன் பதகன் பாதார விருப்பன் வினன்' (அரிச். இந்திர. 35). புகுதல் - சரண் புகுதல்.

பி - ம். 1. தலையுஞ்சோரி.

2. நின்றவன், நின்றவா; நெருப்பினும்; நிமிர்ந்து நீண்டான். 234

1896. அல்லினைத் தழுவி நின்ற பகலென வரக்கன் தன்னைக்
கல்லினும் வலிய தோளாற் கட்டியிட் டிறுக்குங் காலைப்
பல்லுடைப் பிலவா யூடும் பசும்பெருங் குருதி பாய
வில்லுடை மேக மென்ன விழுந்தன னுயிர்விண் செல்ல.

அல்லினை தழுவி நின்ற பகல் என - இரவினைத் தழுவி நின்ற பகலைப் போன்று (இடபன்), அரக்கன் தன்னை - அரக்கனை வயமத்தனை, கல்லினும் வலிய தோளால் - கல்லைக் காட்டிலும் வலிய தோளினால், கட்டி இட்டு இறுக்கும் காலை - கட்டியிட்டு நெருக்குகின்ற அளவில், பல் உடை பிலம் வாய் ஊடும் - பல்லைக் கொண்ட பிலம் ஒத்த வாயின் வழியாக, பசும்பெரு குருதி பாய-பசிய உதிரம் மிகுதியாகப்பாய, உயிர் விண்செல்ல - (தன) உயிர் ஆகாய வழியே ஏக, வில் உடை மேகம் என்ன விழுந்தனன் - வில்லைப் பூண்ட மேகம்போன்று தரையில் வீழ்ந்தான்.

அல்லினைத் தழுவி நின்ற பகல்; (ஒப்பு): 'எல்லியும் பகலும் போலத் தழுவினர் எழுவிற்றோளார்' (யுத்த. 426); காளமேகத்தைச் சார்ந்த கதிரவன் என்ன (யுத்த. நாகபாசப். 118); 'கல்லினும் வலிய தோள்' (ஒப்பு): 'கற்காணும் திண்மையான்' (அயோத்தி. குகப். 26). வில்லுடை மேகம்; (ஒப்பு): 'கார்முகில் கமலம் பூத்து, மண்ணுற்று வரிவி லேந்தி வருவதே போலும்' (கிட்கிந்தா. 304).

பி - ம். 3. பல்விடைப்; வாயோடு, வாயோடும்.

4. வில்லிடை. 235

### சுக்கிரீவனும் கும்பனும் பொருதல்

1897. குரங்கினுக் கரசும் வென்றிக் கும்பனுங்
குறித்த வெம்போர்
அரங்கினுக் கழகு செய்ய வாயிரஞ்
சாரி போந்தார்

மரங்கொண்டுந் தண்டு கொண்டு மலையென
மலையா நின்றார்
சிரங்களுங் கரமு மெல்லாங் குலைந்தனர்
கண்ட தேவர்.

குரங்கினுக்கு அரசும் - வானரர்கட்கு இறைவன் ஆன சுக்கிரீவ னும், வென்றி கும்பனும் - வெற்றி வாய்ந்த கும்பன் என்பவனும், குறித்த வெம்போர் அரங்கினுக்கு - (அப்போது) கருதிய கொடிய போரைக் கொண்ட களத்தினை, அழகு செய்ய - அழகுபடுத்த, ஆயிரம் சாரி போந்தார் - ஆயிரம் தடவை வலசாரி இடசாரியாகச் சுற்றி வருபவராகி, மரம் கொண்டும், தண்டு கொண்டும் - மரங் களைக் கொண்டும், கதையைக் கைப்பற்றியும், மலைஎன - மலை யென்று சொல்லுமாறு, மலையா நின்றார் - பொருதார்கள்; கண்ட - (அதனைக் கண்ணுற்ற) தேவர் - அமரர்கள், சிரங்களும் கரமும் எல்லாம் குலைந்தனர் - தலைகளும் கைகளும் என்ற அனைத்தும் நடுங்கப்பெற்றனர்.

கும்பன், 'கும்பனும் குலச்சங்கனும்' (கிட்கிந்தா. 706). மலை யென மலைதல்; பிராசநயம் காண்க. அரங்கு: போர்க்களம்; 'அரங்க பூசை செய்வன்' (வி. பா. வாரணா. 65).

பி-ம். 1. குரங்கினுக் கிறையும்.
2. அழகு செய்யும்; சாரி போர்ந்தார்.
3. மரங்கொடுந்; மலைகொண்டும்.
4. கரங்களும் தலையும்; குலைத்தனர்; தேவரெல்லாம். 236

வேறு

1898. கிடைத்தா ருடலிற் கிழிசோ ரியைவாரித்
துடைத்தார் விழியிற் றழன்மாரி சொரிந்தார்
உடைத்தா ரொடுபைங் கழலார்ப்ப வுலாவிப்
புடைத்தார் பொருகின்றனர் கோளரி போல்வார்.

பொருகின்றனர் கோள் அரி போல்வார் - போர் புரிவோராகிய வலிய சிங்கத்தையொத்த கும்ப சுக்கிரீவர் என்ற இருவரும்,

கிடைத்தார் - (ஒருவர் ஒருவரைக்) கிட்டியவராய், உடலில் கிழி சோரியை - உடலிற் கிழிந்து பெருகும் உதிரத்தை, வாரி துடைத்தார் - வாரித் துடைத்தனர் ; விழியில் தழல்மாரி சொரிந் தார் - கண்களினின்று நெருப்பு மழையைப் பொழிந்தனர் ; உடை தாரொடு - (தாம்) தரித்துள்ள மாலையுடனே, பைகழல் ஆர்ப்ப - பசும் பொன்னாலாகிய வீரக்கழல் ஒலிப்ப, உலாவி - (அங்குமிங்கும்) உலாவுபவராய், புடைத்தார் (ஒருவரை ஒருவர்) அடித்தார்கள்.

பொருகின்றனர் : வினையாலணையும் பெயர். இச்செய்யுளும் இதனையடுத்த 'தண்டங்கையின்' எனத் தொடங்கும் செய்யுளும் முன்பின்னாகச் சில பிரதிகளில் மாறியுள்ளன.

பி - ம். 1. கெழு.

2. கனல்மாரி. 237

1899. தண்டங்கையின் வீசிய தக்க வரக்கன்
அண்டங்கள் வெடிப்பன வென்ன வடித்தான்
கண்டங்கது மாமர மேகொடு காத்தான்
விண்டங்கது தீர்ந்தது மன்னன் வெகுண்டான்.

தண்டம் கையின் வீசிய - தண்டத்தைக் கரத்தில் எடுத்துச் சுற்றிய, தக்க அரக்கன் - (போர்த்தகுதி வாய்ந்த) கும்பன், அண் டங்கள் வெடிப்பன என்ன - அண்டங்கள் வெடிப்பன என்னும்படி, அடித்தான் - (பேரொலி எழும்படி) அடித்தான்; அங்கு-அப்போது; அது கண்டு மாமரமே கொடு - அதனைப் பார்த்துப் பெரிய மரத் தைக் கொண்டு, காத்தான் - (சுக்கிரீவன் தண்டத்தின் வீச்சு தன் மீது படாதவாறு) தடுத்தான் ; அங்கு - அப்போது, அது விண்டு தீர்ந்தது - அதுவும் முறிந்து விழ்ந்தது ; மன்னன் வெகுண்டான் (அதனால் அந்தச்) சுக்கிரீவ மன்னன் சினந்தான்.

தண்டம் : கதை. மன்னன் : சுக்கிரீவன்.

பி - ம். 1. வீசியதாக.

2. வெடித்தன. 238

1900 பொன்றப் பொருவேனினி யென்று பொருதான்
ஒன்றப் புகுகின்றதொர் கால முணர்ந்தான்
நின்றப் பெரியோ னினையாதமு னீலன்
குன்றொப்பதொர் தண்டு கொணர்ந்து கொடுத்தான்.

'பொன்ற பொருவேன் - (நீ) இறக்குமாறு இனிப் பொருவேன்' என்று - என்று கூறி, பொருதான் - மனம் பொருத சுக்கிரீவன், ஒன்ற புகுகின்றது ஓர் காலம் - (பொருதற்குப்) பொருந்த வருகின்ற தொரு காலத்தை, உணர்ந்தான் நின்று - உணர்ந்தவனாய் நின்று, அ பெரியோன் - அந்தப் பெருமையுள்ள சுக்கிரீவன், நினையாத முன் - எண்ணுவதற்கு முன்னம், நீலன் - நீலன் என்ற வானர வீரன், குன்று ஒப்பது ஓர் - மலையை நிகர்ப்பதாகிய ஒரு தண்டினை, கொணர்ந்து கொடுத்தான் - (அந்தச் சுக்கிரீவனுக்குக்) கொண்டு வந்து தந்தான்.

ஒன்றுதல் - பொருந்துதல்; சுக்கிரீவன் கையிற் படையின்மையை கண்டு, நீலன் தண்டு கொண்டு தந்தான் என்க. கரன் வதைப்படலத்து இராமன் கைவில்லானது கரனால் துணிபட, அந்நிலையில் வருணன் வில்கொண்டுவந்து அளித்தமை இங்கு நினைவு கூரத்தகும். (ஆரணிய. 559). 230

1901. அத்தண்டு கொடுத்தது கைக்கொ டடைந்தான்
ஒத்தண்டமு மண்ணு நடுங்க வுருத்தான்
பித்தன் தட மார்பொடு தோள்கள் பிளந்தான்
சித்தங்கள் நடுங்கி யரக்கர் திகைத்தார்.

கொடுத்தது அ தண்டு-(நீலன்) தந்ததாகிய அந்தத்தண்டினை, கைகொடு - கையில் ஏற்று, அடைந்தான் - (பொருதற்கு) வந்தடைந்த சுக்கிரீவன், அண்டமும் விண்ணும் ஒத்து நடுங்க - மண்ணும் விண்ணும் ஒருசேர நடுங்குமாறு, உருத்தான் - சினந்தவனாய், பித்தன் - போர்ப்பித்துக்கொண்ட கும்பனுடைய, தட மார்பொடு - பரந்த மார்புடனே, தோள்கள் பிளந்தான் - தோள்களைப் பிளந்திட்டான், அரக்கர் சித்தங்கள் நடுங்கி திகைத்தார் - இராக்கதர்கள் உள்ளம் நடுங்கித் திகைப்புற்றனர்.

கொடுத்தது அத்தண்டு என்றும், அண்டமும் மண்ணும் ஒத்து என்றும் மாற்றுக.

பி - ம். 3. பித்தன்றன். 240

1902. அடியுண்ட வரக்க னருங்கனன் மின்ன
இடியுண்டதோர் மால்வரை யென்ன விழுந்தான்
முடியும்மிவ னென்பதோர் முன்னம் வெகுண்டான்
ஒடியும்முன தோளென மோதி யுடன்றான்.

அடியுண்ட அரக்கன் - அடிபட்ட அரக்கன், அரு கனல் மின்ன - அரிய கனல் ஒளிரும்படி, இடியுண்ட - இடிவிழப் பெற்ற தான, ஓர் மால்வரை என்ன விழுந்தான் - ஒரு பெருமலை என்னு மாறு வீழ்ந்து, 'இவன் முடியும் - இவன் அழிவான்', என்பது ஓர் முன்னம்-என்று கருதுவதற்குச் சற்று முன்னமே, வெகுண்டான் - சினந்தவனாய், 'உனதோள் ஒடியும் - உன் தோள் முறியும்', என - என்று (சுக்கிரீவனைப் பார்த்துக்) கூறி, மோதி உடன்றான் - தாக்கி (மேலும்) வெகுண்டான்.

பி - ம். 1. கலன்; விழ, மின்ன.
2. இருந்தான்.
3. முன்னின், முனிந்தான்.
4. உயர்ந்தான், உணர்ந்தான். 241

1903. தோளிற் புடையுண்டயர் சூரியன் மைந்தன்
தாளிற் றடுமாறல் தவிர்ந்து தகைந்தான்
வாளிக் கடுவல்விசை யாலெதிர் மண்டி
ஆளித் தொழிலன்னவன் மார்பி னறைந்தான்.

தோளில் புடை யுண்டு அயர் சூரியன் மைந்தன் - தோளிலே அடிபட்டுத் தளர்கின்ற சூரியன் புதல்வனான சுக்கிரீவன், தாளில் - (தன்) போர் முயற்சியில், தடுமாறல் தவிர்ந்து - தடுமாறுதல் ஒழிந்து. வாளி கடுவல் விசையால் - அம்பு போன்ற மிக்க வேகத் தோடு, எதிர் மண்டி - (அரக்கன்) எதிரே நெருங்கி, தகைந் தான் - தடுத்து, ஆளி தொழில் அன்னவன் மார்பின் அறைந் தான் - சிங்கம் போன்ற வீரச் செயலையுடைய அந்த அரக்கனு டைய மார்பில் புடைத்தான்.

தடுமாறல் : 'தடுமாற்றம் தீர்ந்ததே தான்' (நள. 30) : எல்லா மிடை தடுமாறு நீரால்' (பால. ஆற்றுப். 17) ; தகைத்தல் - தடுத்தல் ; 'நின்னைத் தகைத்தனன்' (கலித். 108, 20) : மண்டுதல் - மிக்குச் செல்லுதல்.

பி - ம். 1. புடைகொண்டு.
2. தகைந்தான்.
3. வாளிப்படு ; வால் ; அவன்.
4. திறலன்னவன், தொழிலோனவன். 242

1904. அடியாயிர கோடியின் மேலு மடித்தார்
முடிவானவ ரியாரென வானவர் மொய்த்தார்
இடியோடிடி கிட்டிய தென்ன விரண்டும்
பொடியாயின தண்டு பொருந்தினர் புக்கார்.

ஆயிரம் கோடியின் மேலும் அடி அடித்தார் - ஆயிர கோடிக்கு மேலும் (அதிகமாக) அடிகளைத் (தண்டாயுதத்தால்) அடித்துக்கொண்டார் ; முடிவானவர் யார்-(அப்போது வெற்றியை) முடிவாகப் பெறுபவர் யார்? என - என்று அறிய, வானவர் மொய்த்தார் - தேவர்கள் வந்து கவிந்தார்கள் ; இடியோடு இடி கிட்டியது என்ன - இடியோடு இடி கிட்டியது என்னுமாறு, தண்டு இரண்டும் - இரண்டு தண்டாயுதமும், பொடி ஆயின - (ஒன்றோடு ஒன்று தாக்கிப்) பொடியாயின ; பொருந்தினர் புக்கார் - பொருந்தி மற்போர் புரியத் தொடங்கினர்.

முடிவு - இறுதி வெற்றி ; உயிரிறுதியுமாம். இடியுடன் இடி தாக்கியது தண்டுடன் தண்டு மோதியதற்குவமை.

பி - ம். 2. முடிவாரவர், முடிவானவன், முடியாரினி, முடிவாரினி.
3. இடியோறனின்ன. 243

1905. மத்தச்சின மால்களி றென்ன மலைந்தார்
பத்துத்திசை யுஞ்செவி டெய்தின பல்கால்
தத்தித் தழுவித்திரள் தோள்கொடு தள்ளிக்
குத்தித்தனிக் குத்தென மார்பு கொடுத்தார்.

(கும்ப சுக்கிரீவர்), மத்தம் - மதம் கொண்ட, சினம் - கோபமும், மால் - மயக்கமுமுள்ள, களிறு என்ன - ஆண் யானை போன்று, மலைந்தார் - பொருதனர்; பத்து திசையும் செவிடு எய்தின - பத்துத் திக்குகளும் செவிடுபட்டன; பல்கால் - பல தடவை, தத்தி தழுவி - தாவித் தழுவியும், திரள் தோள் கொடு தள்ளி - திரண்ட தோள்களைக் கொண்டு (ஒருவர் ஒருவரைத்) தள்ளியும், குத்தி - ஒருவர் (தாம்) குத்தி, 'தனிகுத்து குத்து - தனிக்குத்துக் குத்து வாய்', என - எனச்சொல்லி, மார்பு கொடுத்தார் - மார்பு காட்டியும் (மற்போர்) செய்தனர்.

தத்துதல் - தத்திக் கரை புரளும் பரமானந்த சாகரத்தே' (கந்தரலங். 47).

பி - ம். 1. மா.

4. குத்தத்; கொடுத்தான். 244

1906. நிலையிற்சுட ரோன்மகன் வன்கை நெருங்கக்
கலையிற்படு கம்மியர் கூட மலைப்ப
உலையிற்ப டிரும்பென வன்மை யொடுங்க
மலையிற்பிள வுற்றது தீயவன் மார்பம்.

நிலையில் - (பொருகின்ற) நிலையில், சுடரோன் மகன் - சூரியன் குமாரனான சுக்கிரீவனுடைய, வல் கை நெருங்க - வலிய கரம் கிட்ட, கலையில் படு - தொழிலிற் பழகிய, கம்மியர் கூடம் அலைப்ப - கம்மியரின் சம்மட்டி தாக்குவதனால், உலையில் படு இரும்பு என - உலைக்களத்தில் பொருந்திய இரும்பு போல, வன்மை ஒடுங்க - வலிமை ஒடுங்கியதாக, தீயவன் மார்பம் - தீயவனான அந்தக் கும்பனுடைய மார்பு, மலையில் பிளவு உற்றது - மலை பிளந்தது போலப் பிளந்தது.

கலை: கம்மியர் கலை, கம்மியர்; கொற்றொழிலோர்; (திவா. 'உறுவினைக் கசாவா வுலைவில் கம்மியன்' (நற். 363); 'செய்வினைக் கம்மியர்கைவினை விளக்கமும்' (சிலப். 6 : 135); கூடம்: சம்மட்டி; கொல்லுலை கூடத்தினால்' (நீதிநெறி. 14).

பி - ம். 1. அங்கை.

2. வலையிற்.

3. உலையிட்ட; இரும்பன; வன்மை; ஒடுங்கி.

4. உற்றன. 245

### சுக்கிரீவனுற் கும்பன் மாளுதல்

1907. செய்வாயிக லென்றவ னின்று சிரித்தான்
ஐவா யரவம் முழைபுக்கென வையன்
கைவாய்வழி சென்றவ னருயிர் கக்கப்
பைவாய்நெடு நாவை முனிந்து பறித்தான்.

(அப்போதும்), அவன் - அந்த அரக்கன், 'இகல் செய்வாய் - போர் செய்யக்கடவை' என்று - என்று ஏசி, நின்று சிரித்தான் - நின்று நகையாடினன்; (அச்சமயம்). ஐவாய் அரவம் முழைபுக்கு என - ஐந்துதலைப் பாம்பு குகையில் நுழைந்தாற்போன்று, ஐயன் - சுக்கிரீவன். கை - (தன்) கரத்தை, வாய்வழி சென்று (அரக்கனுடைய) வாயிலே செல்லுமாறு செய்து. அவன் ஆருயிர் கக்க - அவன் (தன்) அருமையான உயிரைக் கக்குமாறு, பைவாய் நெடு நாவை முனிந்து பறித்தான் - விஷப் பைபோன்ற (அவனுடைய) நீண்ட நாவினை வெகுண்டு பிடுங்கினான்.

சிரிப்பு: எள்ளல் சிரிப்பு: ஐவாய் அரவம்: சுக்கிரீவனுடைய ஐந்துவிரல்கள்கொண்ட கைக்கு உவமை. 'ஐவாய வெட்கை யவாவினை'; முழை இங்கு அரக்கன் வாய். புக்கு என என்பது புக்கென என விகாரப்பட்டது. சென்று: பிறவினைப் பொருளில் வந்த தன்வினை என்க. அருமை உயிர் - ஆருயிர்: 'ஆருயிர் கொடுத்துக் காத்தார்' (யுத்த. 422); பை - படம். பை வடிவாயுள்ளது இங்கு விடப்பை எனப்பட்டது. 'பையராவினிற் கண்டுயில் பண்ணவன்றனக்கும் பைவாய் நெடுநாவை முனிந்து பறித்தான்' என்ற தொடர்க்கண் உள்ள வெகுளிமெய்ப்பாட்டினைக் காண்க. பறித்தவன் - சுக்கிரீவன். கும்பன்; இவன் பொன்னாட்டிலுள்ள சித்தரைச் சிறைப்படுத்தியவன்; (யுத்த. 492); உரைக் குறிப்புக் காண்க.

பி - ம். 1. இவனென்று. 246

### அங்கதன் நிகும்பனுடன் பொருதல்

1908. அக்காலை நிகும்ப னனற்சொரி கண்ணன்
புக்கானினி யெங்கட போகுவ தென்னு
மிக்கானெதி ரங்கத னுற்று வெருண்டான்
எக்காலமு மில்லதொர் பூச லிழைத்தார்.

அக்காலை - அப்போது, நிகும்பன் - நிகும்பன் என்னும் அரக்கன், அனல்சொரி கண்ணன் - நெருப்பினை யுமிழ்கின்ற விழிகளையுடையவனாய், புக்கான் - புகுந்து, 'இனி எங்கடபோவது - இனி எங்கே போவதடா' என்று - என்று மொழிந்துகொண்டு, மிக்கான் - செருக்கு மிகுந்தவனாய் நின்றான்; எதிர் - அவன் எதிராக, அங்கதன் உற்று வெகுண்டனன் - அங்கதன் எய்திச் சினந்தான்; (இருவரும்), எக்காலமும் இல்லது ஓர் பூசல் இழைத்தார் - எக்காலத்திலும் நடைபெறாத சண்டையைச் செய்தனர்.

நிகும்பன்; இவன் 'செருப்பெய் வானிடைச் சினக்கிடாய் கடாய் வந்து செறுத்த, நெருப்பை வென்றவன்' என்று புகழ்பெற்றவன் (யுத்த. 491); உரைக் குறிப்புக் காண்க. எங்கட என்றது ஏக வசனம் இகழ்வுபற்றி எழுந்தது. மிக்கான் - தருக்கு மிக்கவனாய் என்க. இறுதியடி போரின் கடுமையையும் நெடுமையையும் சுட்டி நின்றது.

பி - ம். 1. அனற்றெறு.
2. போருதியென்ன.
4. இழைத்தான். 247

1909. சூலப்படை யாவிடை வந்து தொடர்ந்தான்
ஆலத்தினும் வெய்யவ னங்கத னங்கோர்
தாலப்பனை கைக்கொடு சென்று தடுந்தான்
நீலக்கிரி மேனிமிர் பொற்கிரி நேர்வான்.

சூலப்படையானிடை - சூலப்படையை ஏந்தியவனான நிகும்பனிடத்தே, ஆலத்தினும் வெய்யவன் அங்கதன் - ஆலகாலவிடத்தினைக்காட்டிலும் கொடியவன் ஆன அங்கதன், வந்து தொடர்ந்தான் - வந்து பின்சென்று, அங்கு - அவ்விடத்தில், ஓர் - ஒரு, தாலம் பனை கைகொடு - பனைமரத்தினைக் கருவியாகக் கரத்திற்கொண்டு, சென்று தடுத்தான் - போய்த்தடுத்தவனாய், நீலம்கிரி மேல் நிமிர் - நீலநிறமான மலைமீது தலை நிமிர்ந்து செல்லும், பொன் கிரிநேர்வான் - பொன்மலைபோல்பவனுமானான்.

ஆலம் இங்கு அங்கதனுக்கு விரைந்து கொல்வதில்மட்டும் உவமை, தாலம் + பனை; 'தலை தாலத்தினேலும், கொத்தொப்

பன' (ஆரணிய. 910): தாலமுயர் கொடியினன் (வி. பா. குரு. 141); நீலக்கிரியும் பொற்கிரியும் முறையே நிகும்பனுக்கும் அங்கதற்கும் உவமை. தாலப்பனை; இருபெயரொட்டு; தாலம் பனையின் வகையுமாம்.

பி - ம். 1. படைபின்னிட, படையின்னிடை.

3. கோலப்பனை, சாலப்பனை, தாலப்படை; கையொடு; குதித்தான்.

4. மேவிகல், மேனிகர், போனிகர். 248

## நிகும்பன் சாவு

1910. எறிவானுயர் சூல மெடுத்தலு மின்னே
முறிவானிக லங்கத னென்பதன் முன்னே
அறிவானடல் மாருதி யற்ற முணர்ந்தான்
பொறிவானுகு தீயென வந்து புகுந்தான்.

எறிவான் - வீசும்பொருட்டு, உயர் சூலம் எடுத்தலும் - சிறந்த சூலப்படையை (நிகும்பன்) தூக்கிய அளவில், இகல் அங்கதன் - போரில் வல்ல அங்கதன், இன்னே முறிவான் - இக்கணமே அழிக்கப்படுவான், என்பதன் முன்னே - என்று நினைத்தற்கு முன்னரே, அடல் மாருதி - வலிமைசான்ற அநுமன், அறிவான் - (அதனை) உணர்பவனாய், அற்றம் உணர்ந்தான் - தருணம் அறிந்து, வான் பொறி உகு - சிறந்த பொறிகளைச் சிந்துகின்ற, தீ என வந்து புகுந்தான் - நெருப்புப்போன்று வந்து பிரவேசித்தான்.

எறிவான்: வானீற்று வினையெச்சம். அறிவான் அற்றம் உணர்ந்தான் என இயைக்க. அற்றம் - சமயம்; 'தந்தையை அற்றம் நோக்கியே' (பால. திருவவ. 41); 'திசைதொறு மொதுங்கி யற்ற நோக்கினர்' (சுந்தர. 1039).

பி - ம். 1. எறிவானிகல், எறிபாலுயர், எறிவானிவர்.

2. முறிவானிவன்; முன்னர், முன்னம்.

4. வானுறு. 249

1911. தடையேதுமில் சூல முனிந்து சலத்தால்
விடையேநிக ரங்கதன் மேல்விடு வானை
இடையேதடை கொண்டுதன் ஏடவி ழங்கைப்
புடையே கொடு கொன்றடன் மாருதி போனான்.

தடை ஏதும் இல் - (உயிரைக் கவர்வதில்) தடையேதுமில்லாத, சூலம் முனிந்து - சூலாயுதத்தைச் சினந்து, விடையே நிகர் அங்கதன்மேல் சலத்தால் விடுவானை - காளையை ஒத்த அங்கதன்மீது நீங்காத சினத்தொடு விடுதற்கு முயன்ற நிகும்பனை, இடையே தடைகொண்டு - நடுவே புகுந்து விலக்கி, தன் ஏடு அவிழ் அங்கை - தன்னுடைய இதழ் விரியப்பெற்றதுபோன்ற அழகிய கரத்தால், புடையே கொடு - அடித்தலைச் செய்து, கொன்று - கொல்வித்து, அடல் மாருதி போனான் - வலிமைசான்ற அநுமன் களத்தினின்று சென்றான்.

தடை - பிறரால் தடுக்கமுடியாத சூலம் எனினும், அநுமனால் அது தடுக்கப்பட்டமைகொண்டு அநுமன் ஆற்றல் உணர்க. சலம் - தணியா வெகுளி; 'சலம்புரி தண்டு' (பரிபா. 15 : 38). விடை: நடையினாலும், பார்வையினாலும், கம்பீரத்தாலும், பாய்ச்சலாலும் அங்கதற் குவமை; 'விடைத்தனியே றன்னான்' (திருவிளை. தருமி. 42) என்றது காண்க. அநுமனுடைய அழகிய கையினை ஏடவிழ் அங்கை என்றார்; பால. கார்முக. 33 காண்க. புடையே கொடு - அடித்தலையே செய்து என்க.

பா - ம். 3. ஏடவிழ் செங்கை.
4. கொன்றனன். 250

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

மற்றுந்திறல் வானர வீரர்கள் யாரும்
கொற்றங்கொ ளிராவணன் மைந்தர் குலைந்தே
முற்றும்படி மோதினர் மோத முடித்தே
யற்றங்கவர் யாவரும் ஆவி யழிந்தார்.

## அரக்கர் சேனையின் நிலைகுலைவு

1912. நின்றார்கள் தடுப்பவ ரின்மை நெளிந்தார்
பின்றுதவர் பின்றி யிரிந்து பிரிந்தார்
வன்றாண்மரம் வீசிய வாநர வீரர்
கொன்றார் மிகுதானை யரக்கர் குறைந்தார்.

பின்றுதவர் நின்றார்கள் - இதுகாறும் பின்னிடாது நின்ற அரக்க வீரரும், தடுப்பவர் இன்மை - குரக்குப்படையைத் தடை செய்பவர் இன்மையின், நெளிந்தார் - தத்தளிப்பாராய், பின்றி இரிந்து பிரிந்தார் - பின் படர்ந்து நிலைகுலைந்து போயினர்; அவ் வாநர வீரர் - அந்தக் குரங்கு வீரர்கள், வல் தாள் மரம் வீசி - வலிய அடிப்பகுதியைக்கொண்ட மரத்தினை எறிந்து, கொன்றார் - கொலை செய்தனர்; மிகு தானை அரக்கர் குறைந்தார் - மிக்க சேனையினையுடைய அரக்கர் (எண்ணிக்கை) குறையப்பெற்றனர்.

பின்றுதவர் நின்றார்கள் என இயைக்க. பின்றுதவர்: முற்றெச்சம். பின்றுதல் - பின்னிடுதல்; 'ஆற்றல் போகிப் பின்றினன்' (கந்தபு. சிங்கமு. 175); 'பின்றாது பந்தம் பிடி' (கம்பர். தனிப்பாடல்). பின்றுதவர் பின்றி: முரண்தொடை. இரிந்து பிரிந்தார்: இணை எதுகை காண்க. வன்தாள் - வலிய அடிப் பகுதி; 'வன்றாட் சிலையேந்தி' (ஆரணிய. 989).

பி - ம். 1. எதிர்ப்பவர்; நினைந்தார்.
2. யிரிந்து பெயர்ந்தார்.
4. நிமிர்தானை; குலைந்தார். 251

1913. ஓடிப்புகு வாயி னெருக்கி னுலந்தார்
கோடிக்கணி தத்தினு மேலுளர் குத்தாற்
பீடிப்புறு புண்ணுட லோடு பெயர்ந்தார்
பாடித்தலை யுற்றவ ரெண்ணிலர் பட்டார்.

ஓடி புகு வாயில் நெருக்கின் உலந்தார் - ஓடி நுழைகின்ற (நகரின்) கோட்டை வாயிலிலே நெருக்கத்தினால் உயிர் இழந்தவர், கோடி கணிதத்தினும் மேல் உளர் - கோடி என்ற எண்ணினும் மிகுதியாக உள்ளார்; குத்தால் பீடிப்பு உறு புண் உடலோடு

பெயர்ந்தார் - குத்தால் துன்புறுத்தப்படுகின்ற புண்பெற்ற உடலுடனே நீங்கி, பாடி தலை உற்றவர் பட்டார் எண்ணிலர் - படைவீட்டின்கண் எய்தினராய் இறந்தொழிந்தவர் கணக்கிலர்.

கூட்டத்தின் நெருக்கத்தினால் இறந்துபட்டவர் பலர் என்று சேனையின் அல்லோலகல்லோலம் குறிக்கப்பெற்றது. குத்து - மற்போரில் நிகழ்வது. பீடிப்பு: தொழிற்பெயர். பாடி - படைவீடு; 'பாசறை படுநீர்ப் புணரியிற் பரந்தபாடி' (முல்லைப். 28); பாசறை - பாடிவிடு; (புறநா. 62) உரை. பட்டார் எண்ணிலர் என மொழி மாற்றுக.

பி - ம். 1. நெருக்கி யுலைந்தார்.

2. கோடிக் கறிகத்தினும்; குத்திற். 252

1914. தண்ணீர் தருகென்றனர் தாவற வோடி
உண்ணீரற வாவி யுலர்ந்தன ருக்கார்
கண்ணீரொடு மாவி கலுழ்ந்தனர் காலால்
மண்ணீரமு றக்கடி தூர்புக வந்தார்.

'தண்ணீர் தருகென்றனர் - தண்ணீர் உதவுக' என்று வேண்டியவர், தா அற ஓடி - வருத்தம் நீங்குமாறு விரைந்து, உண்ணீர் அற ஆவி உலர்ந்தனர் உக்கார் - நாவினுள்ளும் நீர் வற்ற வறண்டு உயிர் விடுத்தனராய் ஒழிந்தார்; (சிலர் போய்), கண்ணீரொடு ஆவி கலுழ்ந்தனர்-கண்ணீர்ப்பெருக்குடன் உயிர்க்கு வருந்தியழுதவராக; (சிலர் சென்று), காலால் ஈரம்-கால்வழியாகப் பெருகும் (அக் கண்ணீரின்) ஈரம், மண் உற - மண்ணிற் பொருந்த, கடிது - விரைந்து, ஊர் புக வந்தார் - ஊரில் புகுமாறு வந்தனர்.

தருகென்றனர்: தருக என்பதில் அகரஈறு குறைந்தது. வேட்கை மிகுதியால் பாய்ந்து ஓடினர் என்பார், தாவற ஓடி எனப்பட்டது. உண்ணீர் - நாவகத்துள்ள இயற்கையான ஊறுநீர்; 'உண்ணீர் வறப்பப் புலர் வாடு நாவிற்குத், தண்ணீர் பெறுஅத் தடுமாற் றருந்துயரம், கண்ணீர் நனைக்கும் கடுமைய காடு'

(கலித். 6). காலால் - கால்வழியே. ஈரம் மண் உற என மாற்றிப் பொருள் செய்யப்பட்டது.

பா - ம். 1. தருகென்றன ; தாவுற.

2. உலந்தனர்.

3. இழந்தனர் ; காலின்.

4. தமதூர். 253

1915. விண்மேல்நெடி தோடின ராருயிர் விட்டார்
மண்மேல்நெடு மால்வரை யென்ன மறிந்தார்
எண்மேலும் நிமிர்ந்துள ரீரல் தயங்கும்
புண்மேலுடை மேனியி னார்திசை போனார்.

விண்மேல் - விண்ணின்மீது, நெடிது ஓடினர் - வெகுதூரம் ஓடி, ஆருயிர் விட்டார் - அருமையான உயிரை நீத்தாராய், மண்மேல் - பூமியின்மீது, நெடு மால்வரை என்ன - உயர்ந்த பெரிய மலை (படிந்துள்ளன) என்னுமாறு, மறிந்தார் - மடங்கிக் கிடந்தவரும், ஈரல் தயங்கும் - உள்ளீரல் வெளியில் காணப்படுமாறு, புண்மேல் உடை மேனியினார் - புண்ணை மிகுதியாகப்பெற்ற உடலினராகி, திசை போனார் - திக்குகளில் விரைந்து போனவரும், எண் மேலும் நிமிர்ந்துளர் - எண்ணுக்கும் அடங்காமல் மிகுதியாக உள்ளார்.

நெடு மால்வரை : இறந்துபட்ட வீரர்கட்கு உவமை. மறிந்தாரும் போனாரும் எண்மேலும் நிமிர்ந்தனர் என்க.

பா - ம். 2. மடிந்தார்.

3. நிமிர்ந்தனரிருள் தயங்க, நிமிர்ந்த தமிர நயங்கி, நிமிர்ந்தன இருடனெங்கும். 254

1916. அறியும்மவர் தங்களை ஐயவி வம்பைப்
பறியும்மென வந்து பறித்தலு மாவி
பிறியும்மவ ரெண்ணிலர் தம்மனை பெற்றார்
குறியும்மறி கின்றிலர் சிந்தை குறைந்தார்.

அறியும் அவர் தங்களை - தமக்குப் பழக்கமாயுள்ளவரைக் கண்ணுற்று, 'ஐய - ஐயா ! இ அம்பை பறியும் - இந்த வாளி

யினைப் பிடுங்குங்கள்', என - என்று சொல்ல, வந்து பறித்தலும் - (அவர்) வந்து பிடுங்கினவுடனே, ஆவி பிறியும் அவர் எண்ணிலர் - தம் உயிர் நீங்கப்பெற்றவர் கணக்கிலர்; தம் மனை பெற்ருர் - தம் வீட்டினை அடைந்தவர், குறியும் அறிகின்றிலர் - (மனைக்கண் உள்ள மனைவி முதலியோரால்) அடையாளமும் அறியப்பெருத வராய், சிந்தை குறைந்தார் - உள்ளம் ஒடுங்கினுரும் (எண்ணிலர்).

அம்பினைப் பறிக்கச்செய்து சிலர் உயிர் விடுத்தனர். அம்பு பறிக்கப்பெருமலே இறக்கும் வீரர்களும் உண்டு; 'கைபோய்க் கணையுகைப்பக் காவலன் மேலோடி, யெய்போற் கிடந்தானென் னேறு' (புற. வெண். வாகை. 22) என்றது காண்க. உடலில் பல வாளிகள் தைத்ததனுலும் பலவகைப் புண்களாலும உருமாறப் பெற்ற நிலையில், தத்தம் கணவன்மார்களை அடையாளம் காண முடியாதவர் ஆயினர் மனைக்கண் உள்ளார் என்க.

பா - ம். 1. ஏயவர்.
3. நம்முனை.
4. பறிகின்றிலர், அறிகின்றில. 255

1917. பரிபட்டு விழச்சிலர் நின்று பதைத்தார்
கரிபட்டு ருளச்சிலர் கால்கொடு சென்ருர்
நெரிபட் டழிதேரிடை யேசிலர் நின்ருர்
எரிபட்ட மலைக்க ணிருந்தவ ரென்ன.

பரி பட்டு விழ - குதிரை மரித்து விழ, சிலர் நின்று பதைத் தார் - சில வீரர் (ஒன்றும் புலப்படாது) நின்று உள்ளம் நடுங் கினர்; கரி பட்டு உருள - தாம் ஏறியிருந்த யானை அம்புபட்டு உருண்டு விழ, சிலர் கால் கொடு சென்ருர் - சிலர் பாதசாரியாகப் போயினர்; எரி பட்ட மலைக்கண் இருந்தவர் என்ன - தீப்பட் டொழிந்த மலையிலே இருந்தவர் ஒப்ப, நெரிபட்டு அழி தேர் இடையே சிலர் நின்ருர் - நெரிபட்டு ஒழிந்த தேரினிடத்தில் தானே சிலர் நின்றனர்,

இங்குக் குதிரைவீரர், யானைவீரர், தேர்வீரர் என்ற இவர்களின் நிலை கூறப்பட்டது.

ப - ம். 1. பரிவிட்டு.
2. கரிபட்டுவிழ ; காலொடு.
3. இழிதேருடையார் ; பலர்.
4. மனைக்குள், மனைக்குள் ; என்ன, ஒத்தார். 256

1918. மண்ணின்றலை வானர மேனியர் வந்தார்
புண்ணின்ற வுடற்பொறை யோர்சிலர் புக்கார்
கண்ணின்ற குரங்கு கலந்தன வென்னு
உண்ணின்ற வரக்கர் மலைக்க வுலந்தார்.

புண் நின்ற உடல் பொறையோர் சிலர் - புண் நிலைபெற்ற உடலாகிய சுமையினையுடைய சில இராக்கதர்கள், மண்ணின் தலை - பூமியில், வானரர் மேனியர் வந்தார் புக்கார் - குரங்குடலினராய் வந்து புகுந்தாராக, 'குரங்கு கண் நின்ற - குரங்குகள் விழியெதிரே நின்றனவாய், கலந்தன - (நம்மிடம்) விரவின', என்னு - என்று, உள் நின்ற அரக்கர் மலைக்க உலந்தார் - உள்ளேயிருந்த அரக்கர் பொர உயிர் இழந்தார்.

தம்மைக் குரங்குகள் கொல்லாதிருக்க வேண்டும் என்று, அரக்கர் குரங்கு வடிவம்கொள்ள, அவ்வுருவேற்றவர்கள் உண்மையான வானரங்கள் என்றே கருதப்பெற்று, அரக்கர் கையாலேயே மரித்தார்கள். புண்ணின்ற மேனியர் இனி எதற்கும் தகுதியற்றவர் என்பது தோன்ற, 'உடற் பொறையோர்' எனப்பட்டது. போர்க்களத்தில் தப்புதற்காக இவ்வாறு வேடம் மாறுவதும் புனைவதும் உண்டு என்பதை, 'மீனாய் வேலையை யுற்றார் சிலர் சிலர், பசுவாய் வழிதொறு மேய் வுற்றார், ஊனார் பறவையின் வடிவா னார்சிலர், சிலர்நான் மறையவ ருருவானார், மானார் கண்ணிள மடவா ராயினர், முன்னே தங்குழல் வகிர்வுற்றார், ஆனார் சிலர்சிலர் ஐயா நின்சர ணென்றார் நின்றவ ரரியென்றார்' (சுந்தர. 970).

பி - ம். 1. மண்ணின்றன ; மேனியின்.
2. பொறையோருறை.
4. உலைந்தார். 257

## வேறு

1919. இருகணுந் திறந்து நோக்கி யயலிருந் திரங்கு கின்ற
உருகுதங் காத லோரை யுண்ணுநீ ருதவு மென்ருர்
வருவதன் முன்னம் மாண்டார் சிலர்சிலர் வந்து தண்ணீர்
பருகுவா ரிடையே பட்டார் சிலர்சிலர் பருகிப் பட்டார்.

இரு கணும் திறந்து நோக்கி - (தமது) இரு விழிகளையும் திறந்து பார்த்து, அயல் இருந்து இரங்குகின்ற - பக்கலிலிருந்து (தமது நிலையைக் கண்ணுற்று) மனம் வருந்துபவர்களும், உருகும் - உருகுபவருமான, தம் காதலோரை - தமது ஆசைக்கிடமானவரை, 'உண்ணும் நீர் உதவும் - பருகுதற்குத் தண்ணீர் கொடுங்கள்', என்ருர் - என்று வேண்டினவராய், வருவதன் முன்னம் சிலர் மாண்டார் - (அவர்கள் நீரைக் கொண்டு) வருவதன் முன்பே சிலர் இறந்தனர்; சிலர் வந்து தண்ணீர் பருகுவார் இடையே பட்டார் - சிலர் கொணரப்பட்ட தண்ணீரைப் பருகத் தொடங்கியவராய் முற்றும் பருகுவதற்குள் இறந்தனர்; சிலர் சிலர் பருகி பட்டார் - சிற்சிலர் குடித்தவுடனே மரித்தார்.

காதலோர் - புதல்வர்கள்; (யுத்த. மீட்சி: 228). உண்ணு நீர்: 'உண்ணுநீர் வேட்டேனென வந்தாற்கு' (கலித். 5).

பி - ம். 1. இல்லிருந்து.

3. சிலசிலர்; நன்னீர், தெண்ணீர்.

4. பருகுவான், பருகுவ. 258

1920. மக்களைச் சுமந்து செல்லுந்
தாதையர் வழியி னுவி
உக்கன ரென்ன வீசித்
தம்மைக்கொன் டோடிப் போனுர்
கக்கினர் குருதி வாயாற்
கண்மணி சிதறக் காலால்
திக்கொடு நெறியுங் காணுர்
திரிந்துசென் றுயிருந் தீர்ந்தார்.

மக்களை சுமந்து செல்லும் தாதையர் - (தத்தம்) மக்களைத்தாங்கிச் செல்லும் தந்தையர், வழியின் ஆவி உக்கனர் என்ன-வழியிலே, (அம்மக்கள்) உயிர்நீங்கப் பெற்றவராக, வீசி - அவ்வுடலை எறிந்து விட்டு, தம்மை கொண்டு ஓடி போனர் - தாமட்டும் விரைந்து சென்று, (துன்ப மீதூர) குருதி வாயாற் கக்கிலர் - உதிரத்தை வாய் வழியே கக்கி, கண்மணி சிதற - கண்மணி சிதறி வீழ்தலின், திக்கொடு நெறியும் காணர் - திசைகளும் வழியும் காணாராய், காலால் திரிந்து சென்று உயிரும் தீர்ந்தார் - காலினாலேயே தடவி யலைந்து போய்த் தம் உயிரும் நீங்கப் பெற்றனர்.

பி - ம். 1. தாயரும்.

3. கக்கின ; வாயார் ; சிதறி.

4. திரிந்து வந்து, தீர்வர். 259

## அரக்கர் தோற்ற செய்தி தூதர் இராவணனை யடைந்து கூறல்

1921. இன்னதோர் தன்மை யெய்தி
யிராக்கத ரிரிந்து சிந்திப்
பொன்னகர் புக்கார் இப்பாற்
பூசல்கண் டோடிப் போன
துன்னருந் தூதர் சென்றார்
தொடுகழ லரக்கர்க் கெல்லாம்
மன்னவ னடியில் வீழ்ந்தார்
மழையினீர் வழங்கு கண்ணர்.

இன்னது ஓர் தன்மை எய்தி - இத்தகைய நிலைமையுற்று, இராக்கதர் - அரக்கர், இரிந்து சிந்தி - நிலைகுலைந்து சிதறி, பொன் நகர் புக்கார் - அழகிய இலங்காபுரியுட் புகுந்தார்; இப்பால் - இவ் விடத்தில், பூசல் கண்டு ஓடி போன - அந்தப் போரினைப் பார்த்து விட்டு (அச்செய்தியைச் சொல்வதற்காக) விரைந்து சென்ற, துன்னரும் தூதர் சென்றார் - நெருங்குதற்கரிய தூதுவர் போய், மழையின் நீர் வழங்கு கண்ணர் - மழைபோன்று நீரை வெளியிடுகின்ற விழிகளை யுடையவராய், தொடு கழல் அரக்கர்க்கு எல்லாம் மன்னவன் அடியில் வீழ்ந்தார் - வீரக்கழல் அணிந்த அரக்கர் அரசனான இராவணனுடைய பாதங்களில் விழுந்தனர்.

துன்னரும்; 'தென்னவர்ப் பெயரிய துன்னருந் துப்பிற்' (மதுரைக்காஞ்சி. *40*).

பி - ம். 2. கண்டோடிப் போனர், போய. 260

## அதிகாயன் முதலியோர் இறந்தமை தூதுவர் தெரிவித்தல்

1922. நோக்கிய விலங்கை வேந்த
  னுற்றது நுவன்மி னென்றுன்
போக்கிய சேனை தன்னிற்
  புகுந்துள விறையும் போதா
ஆக்கிய செருவி னைய
  வதிகாயன் முதல்வ ராய
கோக்குலக் குமர ரெல்லாங்
  கொடுத்தன ராவி யென்றார்.

நோக்கிய-(தூதுவர் பாதத்தில் வீழ்ந்ததைக்) கண்ணுற்ற, இலங்கை வேந்தன் - இராவணன்) 'உற்றது நுவல்மின் - நிகழ்ந்ததைச் சொல்லுங்கள்' என்றான் - என்று கட்டளையிட்டான்; 'போக்கிய சேனை தன்னில்-(நீ) அனுப்பிய படைகளில், புகுந்துஉள-இறையும் போதா - மீண்டு வந்துள்ளவை சிறிது என்று பகர்தற்கும் பற்ற; (மிகவும் சொற்ப சேனையே மீண்டது); ஆக்கிய செருவில்-நிகழ்த்தியபோரில், ஐய-ஐயனே! அதிகாயன் முதல்வர் ஆய-அதிகாயனை முதலாகவுடைய, கோகுலம் குமரர் எல்லாம் - அரசவங்கிசத்து மக்களெல்லாம், ஆவி கொடுத்தனர் - உயிர் விடுத்தார்கள்', என்றார் - என்று விடையிறுத்தார்.

இறையும் போதா.

பி - ம். 1. வேந்தும்; நுவறிர், நுவலும்; இன்னே, என்ன.
2. தம்மிற்; உளது; தறையும்.
3. போரின்; முதலாயுள்ள.
4. குலமைந்தர். 261

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

அளப்பில மைந்த ரெல்லாம் ஆனைதேர் பரியா னென்னும்
வழக்குறுஞ் சேனை வெள்ளம் அளப்பில மடியத் தாமும்
களத்திடைக் கவிழ்ந்தா ரென்ற மொழியினைக் காதிற் கேளாத்
துளக்கமில் லரக்கன் மேருத் துளங்கிய தென்னச்

[சோர்ந்தான்.

### செய்தியுணர்ந்த இராவணன் தன்மையும் செயலும்

1923. ஏங்கிய விம்மன் மான மிரங்கிய விரக்கம் வீரம்
ஓங்கிய வெகுளி துன்ப மென்றிவை யொன்றற் கொன்று
தாங்கிய தரங்க மாகத் தரையினைத் தள்ளித் தள்ளி
வாங்கிய கடல்போல் நின்று னருவிநீர் வழங்குங்

[கண்ணன்.

அருவி நீர் வழங்கும் கண்ணன் - (மேற்கூறியதைச் செவிக் கொண்டதனுல்), நீரருவி போன்று கண்ணீரை விடுக்கும் விழிகளை யுடையவன் ஆன இலங்காதிபன், ஏங்கிய - ஏக்கம் கொள்வதற்குக் காரணமான, விம்மல் மானம் இரங்கிய இரக்கம் வீரம் - அவலம், அபிமானம், இரங்குகின்ற இரக்கம், ஆண்மை; ஓங்கிய வெகுளி - வீங்கிய சிற்றம், துன்பம் - துயரம்; என்ற இவை - என்ற இந்த மெய்ப்பாடுகள், ஒன்றற்கு ஒன்று தாங்கிய தரங்கம் ஆக - ஒன்றன் மேல் ஒன்றுக அடுத்தடுத் துந்தப்பட்டு எறிகின்ற அலைபோன் றிருக்க, (அலைகள்), தரையினை - கரை வரையில், தள்ளி தள்ளி - உந்தி உந்தி, வாங்கிய கடல்போல் - மறிகின்ற கடல்போல், நின்றுன் - நின்றுன்.

பலவகையான மெய்ப்பாடுகள் இங்குக் குறிக்கப் பெற்றன. சொந்த மகன் முதலானேர் இறந்துபட்டதுபற்றி அவலம்.; தன் மக்கட்கு இது நிகழ்ந்ததே என்பதுபற்றித் தருக்கு; இறந்துபட்ட வருடைய உற்றார் உறவினர் வருந்துவரேயென்பதுபற்றி இரக்கம்: பழிக்குப்பழி வாங்க வேண்டும் என்று எழுந்த வீரம்; அடுத்துப் பகைவர் செயலை எண்ண, எழுந்த வெகுளி, மறிந்தவர்களை மீண்டும் எண்ணியதால் உண்டாய துயரம் என்ற இவை மாறிமாறி வந்தன என்க. (ஒப்பு) 'சிற்றமென்றொன்று தானே மேனிமிர் செயலிற் றுகித், தோற்றிய துன்ப நோயை யுள்ளுறத் துறந்ததம்மா' (சுந்தர.

1002) ; வாங்குதல் : அலைகள் மறிதல். 'அருவி நீர் வழங்கு கண்ணான்' 1920-ம் காண்க.

பி - ம். 2. ஒன்றுக்கொன்று.

3. கரையினை, நிரையினைத்.

4 போல்வானெருப்பு, போல் வந்தானருவி. 282

1924. திசையினை நோக்கும் நின்ற தேவரை நோக்கும் வந்த
வசையினை நோக்குங் கொற்ற வாளினை நோக்கும் பற்றிப்
பிசையுறுங் கையை மீசை சுறுக்கொள வுயிர்க்கும் பேதை
நசையிடைக் கண்டா னென்ன நகும்அழும் முனியும் [நாணும்.

(இராவணன்), திசையினை நோக்கும் - திக்குகளைப் பார்ப்பான் ; நின்ற தேவரை நோக்கும் - (உண்மகிழ்ந்து கண்ணுற்று நின்ற) அமரர்களைப் பார்ப்பான் ; வந்த வசையினை நோக்கும் - தனக்குற்ற பழியினைக் கருதுவான் ; கொற்றம் வாளினை நோக்கும் - வெற்றி செறிந்த தன் வாளினைக் கண்ணுறுவான் ; கையை பற்றி பிசையுறும் - கையைப் பிடித்துக்கொண்டு பிசைவான் ; மீசை சுறு கொள உயிர்க்கும் - மீசை சுறுசுறு என்ற ஒலியுடன் எரியுமாறு பெருமூச்செறிவான் ; பேதை நசையிடை கண்டான் என்ன நகும் - மனைவியை அவள் காதலித்த பிறன் ஒருவனிடம் கண்ட சொந்தக் கணவன்போன்று வெகுண்டு சிரிப்பான், அழும் முனியும் நாணும் - அழுவான் வெகுள்வான் வெட்கமுறுவான்.

இக்கவியிலும் பலவகை மெய்ப்பாடுகள் அழகுறச் சித்திரிக்கப் பெற்றமை காண்க. 'திசையினை நோக்கும் நின்ற தேவரை நோக்கும்' (ஒப்பு) யுத்த. இந்திரசித்து. 67 ; ஆரணிய. 1030. முதல் நாள் போரில் பரிபவப்பட்டு மீண்ட நிலையில் 'மாதிரம் எவையும் நோக்கான்' என்று கூறப்பட்ட இராவணன், இப்போது பழிக்குப் பழி வாங்குமாறு எட்டுத்திக்குகளையும் பொரநினைந்தான் என்பான் திசையினை நோக்கும் எனப்பட்டது. திசைகளை நோக்கவே அங்கு விண்ணிற் காணப்பட்ட தேவர்களைச் சுறுக்கொண்டு நோக்கினான். மகாபராக்கிமசாலியான அதிகாயன் இறந்துபட்டதால், தனக்குற்ற வசையினைக் கருதுவான் ; என்றும் வெற்றி அளிக்கவல்ல சந்திரகாசம் என்னும் வாளிருந்து என்பயன் என்று அதனை நோக்கி

அலமருவான்; மானமும் அவலமும் கலந்த நிலையில் ஒன்றும்செய்ய அறியாது கைகளைப் பிசைவான்; வெகுளி மிஞ்சவே பெருமூச் செறிவான் எனப்பட்டது. பேதை நகையிடைக் கண்டான் என்ன என்பதற்கு நகையினால் பேதைமைக் குணத்தை யடைந்தார்போல என்றும் கூறுவர். பேதை நகையிடைக் கண்டான் என்ன; இங்கு 'தன்பால் மனையா ளயலான் தலைக்கண்டு பின்னும், இனி பாலடிசிற் கிவர்கின் றகைப் பேடிபோலாம்' (சீவக. 443) என்ற கவி யும் அதற்கு நச்சினார்க்கினியர் கூறும் உரையும் காணத்தகும்.

பி-ம். 1. நிசைகளை; நோக்குகின்ற; செய்த, நிரா.
2. வசைகளை; நோக்கும்வாரிப்.
3. கைகள்; உறுக்கும், முறுக்கும்; பேச.
4. கண்டால். 263

1925. மண்ணினை யெடுக்க வெண்ணும்
வானினை யிடிக்க வெண்ணும்
எண்ணிய வுயிர்க ளெல்லா
மொருகணத் தெற்ற வெண்ணும்
பெண்ணெனும் பெயர வெல்லாம்
பிளப்பெனென் றெண்ணு மெண்ணிப்
புண்ணிடை யெரிபுக் கென்ன
மானத்தாற் புழுங்கி நையும்.

(மற்றும் இராவணன்), மண்ணினை எடுக்க எண்ணும் - பூமி யைப் பெயர்க்கக் கருதுவான்; வானினை இடிக்க எண்ணும் - விண்ணினைத் தகர்க்க நினைப்பான்; எண்ணிய உயிர்கள் எல்லாம் - கணக்கிடப்பட்ட உயிர்களனைத்தையும், ஒருகணத்து எற்ற எண் ணும் - ஒருகணப் பொழுதில் தாக்க உன்னுவான்; பெண் எனும் பெயர எல்லாம் - பெண் என்று பெயர்படைத்த எல்லாவற்றையும், பிளப்பென் என்று எண்ணும் - பிளப்பேன் என்று மனம் கொள் வான; எண்ணி - இங்ஙனம் பலபட நினைந்து, புண் இடை எரி புக் கென்ன - புண்ணிலே தீ நுழைந்தாற்போல, மானத்தால் புழுங்கி நையும் - அபிமானத்தால் வெந்து வருந்துவான்.

வெகுளி என்ற மெய்ப்பாட்டின் பல்வேறு நினைவுகளும் செயல் களும் இங்கே குறிக்கப்பட்டன. எண்ணும் எண்ணும் என்று அடுத்தடுத்தது வந்தமை, சொற்பொருட்பின்வரு நிலையணி.

செய்யும் என்னும் முற்று, 'பல்லோர் படர்க்கை முன்னிலைத் தன்மையிற் செல்லாதாகும் செய்யும் என்னும் முற்றே' (நன்.) என்ற சூத்திரத்தின்படி ஆண்பாற்கு வந்தது. எண்ணிய உயிர்கள் : இவ்வளவு என்று பேரறிஞர்களால் கணக்கிடப்பட்ட உயிர்கள்; மொத்தம் எண்பத்து நான்கு இலக்கம் சீவராசிகள் என்ப. இவை வினைவயத்தாற் பிறக்கும் அண்டசம், சுவேதசம், உற்பிசம், சராயுசமான நால்வகைத் தோற்றங்களும், தேவர், நரர், மிருகம், பட்சி, ஊர்வன, நீருறுவன, தருக்கள் என்ற ஏழுவகைப் பிறப்புக்களும் இவற்றில் உண்டான யோனி பேதங்களும் என்க. 'அண்டசம் சுவேசங்களுற்பிசம்' (சிவ. சித்தி. 4 : 89) எனத் தொடங்கும் சித்தியார்ச் செய்யுளினையும், 'தோற்றியிடு மண்ட சங்கள்' (சிவப்பிரகாசம். 2·29) என்பதுவும் கண்டு தெளிக. பெண் ணொனும் பெயரவெல்லாம் பிளப்பனென் றெண்ணும்; 'மண் ணூட்டுநர் காக்குநர் வீட்டுநர் வந்தபோதும், பெண்ணூட்ட மொட்டே னினிப் பேருல கத்துளென்ன' (அயோத்தி. நகர்நீ. 123); 'நாரியரில்லை யிஞ்ஞாலமேழு மென்னக்; கூரியவாள் கொடு கொன்று நீக்கியானும், பூரியரெண்ணிடை வீழ்வனென்று பொங்கும், வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்' (அயோத்தி. கைகேசி. 23); ஏழு என்ற எண்ணெற்றுமையால் இராகவன் வாளி தம்மீதும் பாயுங்கோல், என்று ஏழுலகம், ஏழு வேலை முதலியன வும் அஞ்சியமை இங்கு ஒருசார் ஒப்பாகக்கொள்க. எடுக்க, இடிக்க, எற்ற, பிளக்க என அவ்வவைகட்குப் பொருத்தமாகக் கூறப் பட்டமை காண்க. புண்ணிடை எரிபுக்கென்ன; மிகப்பொருத்த மான உவமை. 'எறிவேல் பாய்ந்த, புண்ணிலாம் பெரும்புழையிற் கனல் நுழைந்தாலென' (பால. கையடைப். 11); 'புண்ணினுற்ற தோரெரியன்ன துயரினள்' (யுத்த. பிரமாத்திர. 205); (ஒப்பு): 'வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்' (யுத்த. இராவணன் சோகப். 10); 'புண்ணுளே கோலிட்டன்ன மானத்தாற் புழுங்கு கின்றான்' (சுந்தர. 997); புக்கது என்ன என்பது புக்கென எனத் தொகுத்தது. புண் இடை எரியுற்றது; முன்னர் சிதையின் இணக்கம் பெறவில்லையெ என்பது முதற்கண் புண், அதன் மேல் அதிகாயன் இறந்த துன்பம் எரியென்க.

பி-ப். 1. வானினைமடிக்க.

2. உயிர்கள்யாவும்.

3. பெயரை, பெயர்கள்; பேராப், எண்ணில்.

4. புழுங்குகின்றான்.

### தன்மக னிறந்ததை யறிந்த தானிய மாலினி அரக்கன் தாளில் விழ்ந்து புலம்புதல்

1926. ஒருவரு முரையார் வாயி னுயிர்த்தில ருள்ள மோய்வார்
வெருவருந் தகைய ராகி விம்மின ரிருந்த வேலைத்
தருவன மனைய தோளான் தன்னெதிர் தானி மாலி
இரியலிட் டலறி யோயாப் பூசலிட் டேங்கி வந்தாள்.

ஒருவரும் வாயின் உரையார் - (அங்கிருந்தவர்களில்), ஒருவரும் வாய்திறந்து (யாதும்) சொல்லாதவர்களும், உயிர்த்திலர் - மூச்சு விடாதவருமாகி, உள்ளம் ஓய்வார் - மனம் தளரப்பெற்று, வெருவரு தகையர் ஆகி - அச்சம் தோன்றுகின்ற இயல்பினராய், விம்மினர் இருந்த வேலை - புலம்பிக் கொண்டிருந்த போழ்து, தருவனம் அனைய தோளான் தன் எதிர் - மரங்கள் செறிந்த காடு போன்ற தோள்களையுடையவன் ஆன இராவணன் முன்பாக, தானிமாலி - தானிய மாலினி, இரியல் இட்டு அலறி - நிலைகுலைந்து கத்திக் கொண்டு, ஓயா பூசல் இட்டு - நீங்காத பேராரவாரம் செய்து, ஏங்கி வந்தாள் - ஏக்கம் உற்று வந்தாள்.

இராவணன் என்ன செய்வானோ என்ற அச்சத்தினால் ஒருவரும் பேச்சு மூச்சுக் காட்டவில்லை. ஓய்தல் - வலி குறைதல். வெருவரும்: 'வெருவருஞ் செலவின் வெகுளி வேழம்' (பொருந. 172); 'வேழத்தன்ன வெருவரு செலவின்' (மதுரைக்காஞ்சி. 392); வெரு: அச்சம். விம்மினர்: 'விழுதல் விம்முதல்' (சுந்தர. 334); 'விம்மலுற் றனையா னேவ வினவிய வந்தே னென்றான்' (கிட்கிந்தா. 59); வேலை - சமயம்; 'மணந்தாருயிருண்ணும் வேலை' (குறள். 1221); தருவன மனைய தோளான்; 'கொத்துறு தலையான்' (யுத்த. 719)ம் அதன் உரைக்குறிப்பும் காண்க. தானிமாலி - தானியமாலினி என்பதன் சிதைவு. இவள் இராவணன் மனைவி யருள் ஒருத்தி: அதிகாயனைப் பெற்றவள்.

பி - ம். 1. ஓர்வார்.
2. தகைய.
3. தருவமைந்தனைய; தானமாலி, தானுமாலி.
4. இரியலுற்று.

1927. மலைக்குவட் டிடிவிழ்ந் தென்ன வளைகளோ டார மேங்க
முலைக்குவட் டெற்றுங் கையாள் முழைதிறந் தன்ன [வாயாள்
தலைக்குவட் டணைந்த செக்கர் சரிந்தன குழல்க டத்தி
யுலைக்குவட் டுருகு செம்போத் துதிரநீர் உமிழும் [கண்ணாள்.

(அங்கு அரற்றிவந்த தானியமாலினி) மலைகுவடு - மலைச்சிகரத் தில், இடி விழ்ந்தென்ன - இடி தாக்கினாற் போல, வளைகளோடு ஆரம் ஏங்க - கைவளைகளுடன் (கழுத்திலணியப் பெற்ற) ஆரங் களும் ஒலிக்க, முலைகுவடு எற்றும் கையாள் - தனங்களின் முகத் திலே அடித்துக் கொள்ளும் கரங்களை யுடையவளும், முழை திறந் தன்ன வாயாள் - குகை திறந்தாற்போன்ற வாயினை யுடையவளும், தலைகுவடு அணைந்த - மேற்சிகரத்தின்கண் அமைந்த, செக்கர் குழல்கள் தாங்கி - செவ்வானம்போன்ற (செம்பட்ட மயிர்க்) குழல் கள், தத்தி - குலைந்து எங்கும் விரிந்து நிற்க; உலைகுவடு உருகு செம்பு ஒத்து - உலை முகட்டிலே, உருகின செம்பினை நிகர்த்து, உதிரம் நீர் உமிழும் கண்ணாள் - இரத்தநீர் ஒழுக விடுகின்ற விழி களை யுடையவளும் ஆயினள்.

முலை முகட்டிலே கையால் தாக்குதல் மலைக்குவட்டில் இடி விழ்ந்தது போலும் என்று, அதன் பேரொலி குறிக்கப்பட்டது. (ஒப்பு): 'அசனியேறெனக் கரத்தொடு கரங்களைப் புடைத்து' (ஆரணிய. 580); 'கமலப்பூவால் குரும்பையைப் புடைக்கின்றாள் போல், கைகளால் முலைமேற்கொட்டி' (யுத்த. இராவணன் சோகப். 45). தத்தி என்பதை செய என்னும் வாய்பாடாகக் கொள்க. உலைக்குவட்டு உருகு என்று பிரித்து உலைக்கு என்பதை உருபு மயக்கமாக்குவர் ஒருசாரார். செக்கர் சரிந்தன குழல்கள்; (ஒப்பு): 'செக்கர்மேல் விரிந்த மேகம்' (ஆரணிய. 342); 'குடதிசைச் செக்கரிற் சேந்த கூந்தலாள்' (ஆரணிய. 578); 'உருகு செம் பொத்துதிர நீர்' (யுத்த. இராவணன் சோகப். 8); 'உருக்கு செம் பென வம்பரத்தோடின வுதிரம்' (யுத்த. வேலேற்ற. 7); குருதிக்குச்

செம்பு ; 'செம்பொத்த குருதி தேக்கி' (யுத்த. 254); உதிரநீர் ; 'உள்ளநீ ரெல்லா மாறி யுதிர நீரொழுக விட்டான்' (யுத்த. 1273).

பி - ம். 1. மணிகளோடு ; வாங்க, ஓங்கு.

2. திறந்தனைய.

3. குழல்கடாங்கி, குழலாடத்தி, குழலாள்கத்தி.

4. அருவிநீர் ; வழங்கும், ஒழுகும். 266

1928. விழ்ந்தன ளரக்கன் தாள்மேன்
மென்மைத்தோள் நிலத்தை மேவப்
போழ்ந்தனள் பெரும்பாம் பென்னப்
புரண்டனள் பொருமிப் பொங்கிச்
சூழ்ந்தனை கொடுமை யென்னுத்
துடித்தருந் துயர வெள்ளத்
தாழ்ந்தனள் புலம்ப லுற்ருள்
ளழக்கண்டு மறிந்தி லாதாள்.

அழக்கண்டும் அறிந்திலாதாள் - (இதுகாறும்) பிறர் அழு வதைப் பார்த்தும் அறியாதவளான தானியமாலி, மென்மை தோள் நிலத்தை மேவ - மெல்லிய தோள் தரையிற் பொருந்த, அரக்கன் தாள்மேல் வீழ்ந்தனள் - இராவணன் பாதத்தில் வீழ்ந்து, பொருமி பொங்கி - துயரம்மிகப் புலம்பி, போழ்ந்தனள் - (வாயைப்) பிளந்துகொண்டு, பெரு பாம்பு என்ன புரண்டனள் - பெரிய பாம் பைப்போலப் புரண்டு, 'கொடுமை சூழ்ந்தனை - (எனக்குக்) கேடு சூழ்ந்தாய்', என்ளு-என்று பகர்ந்து, துடித்து-துடித்து, அரு துய ரம் வெள்ளத்து ஆழ்ந்தனள்-தாண்டற்கரிய துன்ப வெள்ளத்தில் அழுந்தியவளாய், புலம்பல் உற்ருள் - அரற்றத் தொடங்கினுள்.

போழ்ந்தனள் : வாயைத் திறந்தாள். முன்னர் (1926) 'முழை திறந்தன்ன வாயாள்' என்றதற்கேற்ப, போழ்ந்தனள் எனப் பட்டது. முன்னர் வாழ்ந்த காலத்துக் கணவன் தோள்மேல் வீழ்ந்தனள் ; இனித் தோண்மேல் வீழுங்காலமும் இன்றென்பது குறிப்பு. சூழ்தல் : கேடு சூழ்தல். அவனுடைய காம விச்சை யினுல் நிகழ்ந்ததாகலின் கொடுமை சூழ்ந்தனை என்ருள். அழக் கண்டும் அறிந்திலாதாள், 'களிக்கின்ருரலாற் கவல்கின்ருர் ஒரு வரைக் காணேன்' (சுந்தர. 125) என்று முன்னர் இலங்கைநகர்

வாசிகளைக் கூறியமை காண்க. (ஒப்பு): 'அன்னமும் துயர்க்கட லடிவைத் தாளரோ' (அயோத்தி. கிளைகண்டு. 87); 'காட்டாதன காட்டிய தாதையைக் கண்ணிற் கண்டான், (1939) என்பதும் இங்கு நோக்குக. 'மிதிலை, அன்னமும் துயர்க்கடல் அடிவைத் தாளரோ' (அயோ‌த்தி. கிளைகண்டு. 87).

பி - ம். 1. நிலத்துந் ; தோய

ர. போழ்ந்தன ; நோக்கித் துன்பம் 267

## வேறு

1929 மாட்டாயோ விக்காலம் வல்லோர் வலிதீர்க்க
மீட்டாயோ வீரம் மெலிந்தாயோ தோளாற்றல்
கேட்டா யுணர்ந்திலையோ வென்னுரையுங் கேளாயோ
காட்டாயோ வென்னுடைய கண்மணியைக் காட்டாயோ.

இ காலம் வல்லோர் வலி தீர்க்க மாட்டாயோ - இப்போது வலிமை சான்ற பகைவர்களின் வன்மையைப் போக்க மாட்டாயோ? வீரம் மீட்டாயோ - வீரம் மேற்செல்லாது உன் கண்ணே மீண்டு வந்து அடங்கப் பெற்றாயோ? தோள் ஆற்றல் மெலிந் தாயோ - புய வன்மை தளரப் பெற்றாயோ? கேட்டாய் உணர்ந் திலையோ - (நான்) சொல்வதைக் கேட்டு அறிந்திலையோ? (அல்லாமல்), என் உரையும் கேளாயோ - என் சொற்களை செவி சாய்த்துக்கேளாயோ? என்னுடைய கண்மணியைக் காட்டாயோ - என் கண்மணிபோன்ற மகனைக் காட்டமாட்டாயோ?

தோளாற்றல்: 'தோளாற்ற லென்னும்' (சுந்தர. 314) கண் மணி: கண்ணின் கருமணி, 'கருமணியிற் பாவாய் நீ போதாய்' (குறள். 1123); 'கருடனஞ்சுறு கண்மணி' (ஆரணிய. 449); மற்றும் சுந்தர. 621, 666; தக்க. 562; சூளாமணி. 15 காண்க.

பி - ம். 1. வல்லாரை

3. அறிந்திலையோ ; என்னுயிரும். 268

1930. இந்திரற்குந் தோலாத நன்மகனை யீன்றுளென்
றந்தரத்து வாழ்வாரு மேத்து மளியத்தேன்
மந்தரத்தோ ளென்மகனை மாட்டா மனிதன்றன்
உந்துசிலைப் பகழிக் குண்ணக் கொடுத்தேனே.

'இந்திரற்கும் தோலாத - இந்திரனாலும் முறியடிக்கப்பெறாத, நல்மகனை - சிறந்த வன்மையன் ஆன புதல்வனை, ஈன்றாள் என்று - பெற்றனள் என்று, அந்தரத்து வாழ்வாரும் ஏத்தும் அளியத் தேன் - விண்ணில் உறையும் தேவர்களும் புகழ்கின்ற புகழ்ச் சிக்குப் பாத்திரமான எளியேன், மந்தரம் தோள் என் மகனை - மந்தர கிரி போன்ற தோளினைக் கொண்ட என் புத்திரனை, மாட்டா மனிதன் தன் - பொரும் ஆற்றல் இல்லாத மனித வர்க் கத்தைச் சார்ந்தவன ஆன ஒருவனுடைய, சிலை உந்து பகழிக்கு உண்ண கொடுத்தேனே - வில்லானது செலுத்துகின்ற வாளிக்கு உண்ணும் இரையாகத் தந்தேனே.

இந்திரற்கும் : உம்மை உயர்வு சிறப்பு; நன்மகனை; நன்மை இங்கு வீரச் சிறப்பு. ஈன்றாள் என்று; (குறள். 70); ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச், சான்றோன் எனக்கேட்ட தாய்' (குறள். 70); என்றது காண்க. அந்தரம் - விண்ணுலகம்; 'அந்தரம் பாரிடமில்லை' (திருமாலை. திருப்பள்ளி); அளியத்தேன்; இரங்கத் தக்க யான் 'அளியத்தாய்' (சுந்தர. 179); 'மந்தரத் தோள்' 'மந்தரமனைய தோள் வள்ளல்பேர் சொல்' (அரிச். பு.); மாட்டா - புரிய மாட்டாத; 'வல்லார்க்கு மாட்டார்க்கும் வரமளிக் கும் வரமே' (திருவருட்பா.). சிலை உந்து பகழி என மாற்றுக; பகழி உண்ணுதல் : மரபு வழுவமைதி; 'உண்டற்குரிய வல்லாப் பொருளை யுண்டது போலக் கூறலு மரபே' (தொல். பொருளி: 213); கொடுத்தேனே; ஏகாரம் இரக்கப் பொருள், 'நின்றேனு நின் றேன் நெடுமரம்போ னின்றேனே' (ஆரணிய. 989) என்ற இடத் துப் பொல, 'அளியத்தேன் : மேம்பாடு பெற்றிருந்தேன்' என்பது பழையவுரைக் குறிப்பு.

பி - ம். 1. தோலவ
2. அந்தரத்தின் வானவரும்
4. கொடுத்தாயே. 269

1931. அக்க னுலந்தா னதிகாயன் தான்பட்டான்
மிக்கதிறத் துள்ளார்க ளெல்லாரும் வீடினர்
மக்களினி யின்றுளான் மண்டோ தரிமகனே
திக்கு விசய மினியொருகாற் செல்லாயோ.

அக்கன் உலந்தான் - அட்சய குமாரன் (முன்னரே) இறந்தான்; அதிகாயன் பட்டான் - அதிகாயனும் மரித்தான்; மிக்க திறத்து உள்ளார்கள் எல்லோரும் வீடினர் - மிகுந்த வன்மை வாய்ந்தவர்கள் அனைவரும் அழிந்தார்கள்; மக்களினில் நின்றுளான் மண்டோதரி மகனே - (உனது) புதல்வர்க்குள் உயிருடனிருப்பவன மண்டோதரி மகனான இந்திர சித்தே; இனி திக் விசயம் ஒருகால் செல்லாயோ - இனிப் பழிக்குப் பழி வாங்குமாறு ஒரு முறை திசைவென்றிக்கு செல்லமாட்டாயா? தான் - அசை.

அக்கன் உலந்தது: சுந்தரகாண்டத்து அக்ககுமாரன் வதைப் படலத்துக் காண்க. உலத்தல் - அழிதல், 'நாளுலந் தழியுமன்றே' (ஆரணிய. 424); 'உலந்தாருடல் கடலோடுற' (ஆரணிய, 454); தான்? சொல் விழுக்காடு. மிக்க திறத்துள்ளார்கள்; தாருகன், காலன், குலிசன், காலசங்கன், மாலி, மருத்தன் முதலிய அரக்க வீரர்கள்; மண்டோதரி, மயன் மகள். இனி செய்யாயோ - என்ற பாடமும் கொண்டு மண்டோதரி மகனை விளித்துக் கூறியதுமாம்.

பி - ம். 1. அதிகாயன் தாளுலந்தான், நாளுலந்தான்.
2. திறந்துள்ளார்; பாருள்ளார், நின்றுளார்
4. வண்டோதரி; செய்வாயோ. 270

**1932.** ஏதையா சிந்தித் திருக்கின்று யெண்ணிறந்த
கோதையார் வேலரக்கர் பட்டாரைக் கூவாயோ
பேதையாய்க் காமம் பிடித்தார் பிழைப்பாரோ
சீதையா லின்னம் வருவ சிலவேயோ.

'ஐயா - ஐயனே! ஏது சிந்தித்து இருக்கின்றுய் - என்ன கருதியுள்ளனை? கோதையார்-வெற்றிமாலை சூடிய வேற்படையைத் தாங்கிய கணக்கற்ற இராக்கதர்கள் மரித்தவரைத் (திரும்பி வரும்படி), கூவாயோ - அழைக்க மாட்டாயோ? பேதையாய் - அறிவில்லாதவராய், காமம் பிடித்தார் - காமத்தாற் பிணியுண்டவர் பிழைப்பாரோ - கடைத்தேறுவாரோ! சீதையால் வருவ இன்னம் சிலவேயோ - சீதையால் எய்த வேண்டியவை இன்னம் சிலவோ? (மிகப் பல என்றபடி).

முன் கவியில் தான் வினவியதற்கு விடை தாராமையின் 'ஏதையா சிந்தித்திருக்கின்றாய்' என்றாள்.

பி-ம். 1. இருக்கின்றது.

2. வில், வல்.

3. பேதையாய்; பிடிப்பாய் பிழைப்பாயே. 271

1933. உம்பி யுணர்வுடையான் சொன்ன வுரைகொள்ளாய்
நம்பி குலக்கிழவன் கூறு நலமோராய்
கும்ப கருணனையுங் கொல்வித்தென் கோமகனை
அம்புக் கிரையாக்கி யாண்டா யரசைய.

'உணர்வு உடையான் உம்பி - பேரறிவுடையவன் ஆன உன் தம்பி (கும்பகன்னன்), சொன்ன உரை கொள்ளாய் - கூறிய நன்மொழியைச் செவியேற்கா தொழிந்தாய்; குலம் கிழவன் நம்பி கூறும் நலம் ஓராய் - குலவுரிமையுள்ள வீடணன், சொல்லிய நன்னெறியை உணராதவனானாய்; கும்பகருணனையும் கொல்வித்து - கும்பகன்னனையும் கொலை புரிந்து, என் கோமகனை - உனது புதல்வனையும், அம்புக்கு இரையாக்கி - வாளிக்கு உணவாக்கி, ஐய - ஐயனே! அரசு ஆண்டாய் - அரசு புரிந்தனை'.

உம்பி உணர்வுடையான் - வீடணன்; 'மிக்கான் அடல் வீடணன்' (யுத்த. *1747*). குலக் கிழவன் மாலியவான் எனினுமாம்.

பி-ம். 1. உரை கொள்ளாய், உள்ளாய். 272

தானிய மாலினியை உருப்பசியும் மேனகையும்
அரண்மனைக்கு அழைத்துப் போதல்

1934. என்று பலப்பலவும் பன்னி யெடுத்தழைத்துக்
கன்று படப்பிழைத்த தாய்போற் கவல்வாளை
நின்ற வுருப்பசியும் மேனகையு நேர்ந்தெடுத்துக்
குன்று புரையும் நெடுங்கோயில் கொண்டணைந்தார்.

என்று பல பலவும் பன்னி - என்று பற்பலவும் விடாது கூறி, எடுத்து அழைத்து - குரல் உயர்த்துக் கூவி, கன்றுபட பிழைத்த

தாய் போல் - கன்று மரிக்கப் பிழைத்திருக்கின்ற அன்னைபோன்று கவல்வாளை - மனம் வருந்துபவளான தானிய மாலையை, நின்ற உருப்பசியும் மேனகையும் நேர்ந்து எடுத்து - (அங்கு) நின்ற உருப்பசியும் மேனகையும் அணுகி எடுத்து, குன்று புரையும் நெடு கோயில் கொண்டு அணைந்தார் - மலையை ஒத்த உயர்ந்த அரண் மனைக்குள்ளே கொண்டு சேர்ந்தார்.

எடுத்தழைத்து - உரத்துக் கூவி, கன்றுபட பிழைத்தாய்; (ஒப்பு); 'கன்றுபிரி காராவின் துயருடைய கொடிவினவ' (அயோத்தி. குகப். 66); 'பிரிந்துழிக், கறவையொப்பக் கரைந்து கலங்கினன்' (அயோத்தி. நகர்நீ. 14); உருப்பசியும் மேனகையும் தேவ மாதர் கள் எனினும், இராவணன் ஆட்சியிற் பணி புரிந்துவந்தவர்கள்; (சுந்தர. 408).

பி - ம். 2. கதறும், பதைத்த ; கவல்வானை.
4. மணிக்கோயில், நெடுங்கோவில். 273

## பலரும் வருந்துதல்

1935. தான நகரத் தரக்கர் தலைமயங்கிப்
போன மகவுடையார் போலப் புலம்பினர்
ஏனை மகளிர் நிலையென்னும் போயிரங்கி
வான மகளிருந்தம் வாய்திறந்து மாழ்கினர்.

தானம் - (முதன்மை) இடத்தைப்பெற்ற, நகரத்து அரக்கர் தலைமயங்கி - இலங்காபுரியிலே இராக்கதர்கள் ஒன்றுகூடி, போன மகவு உடையார் போல புலம்பினர் - (தத்தம்) மகவிழந்தவர்கள் போன்று அழுதனர்; (அப்புலம்பலைக் கேட்டு), வானமகளிரும் போய் இரங்கி - தேவமாதரும் மிக இரக்கம் கொண்டு, தம் வாய் திறந்து மாழ்கினர் - தம் வாய்திறந்து (கதறி) மயங்கினர், ஏனை மகளிர் நிலை என்னும் - பிற பெண்களின் நிலைஎன்னுவது ?

தலைமயங்கி: 'தமிழ் தலைமயங்கிய தலையாலங் கானத்து' (புறநா. 19, 2): போனமகவுடையார்: வடமொழிநடை. மாழ்கினர்: 'குழறி மாழ்கி' (ஆரணிய. 791). போனமகவுடையார் போல; (ஒப்பு): 'ஒத்தசிந்தைய ருவகைய ரொருவர்க்கங் கொருவர்,

தத்தமக் குற்ற வரசெனத் தழைக்கின்ற மனத்தர்' (அயோத்தி. மந்தரப். 76); 'மாதர்கள் கற்பின் மிக்கார்' (அயோத்தி. கைகேசி. 66) என்ற கவியும் இங்கு ஒப்புநோக்கத்தகும். பரம்பரை வைரிகளாய் அரக்கர் குழுவிற்கு ஏதம் நேரின் மகிழும்படியான வானமகளிரும், தானிய மாலியின் அவலமும் அரற்றும் கண்டுமயங்கிப் புலம் பினார் என்றதிலிருந்தே, அந்த அரக்கியின் கோரமான துய ரம் புலனாம். வானமகளிரும் மாழ்கினர் என்னாது வாய்திறந்து மாழ்கினர் என்றது காண்க. ஏனையோர் துயருற்றதைக்கூறும், 'மங்கையழுதாள்' (சிதை களம். 5) எனத் தொடங்கும் செய் யுட்கண் ஒப்புரவாகப் பலரும் அழுததைக் குறித்து, இறுதியில் 'இரங்காத அரக்கிமாரும் அழுதார் என்றமையாது தளர்ந் தழுதார் என்றுகூறி அவலத்தை மிகுத்துக் காட்டுதலைக் கண்டு ணர்க. இவ்வண்ணமே 'இராமபிரான் காடுபுகும் செய்தி கேட்டுச் சராசரங்கள் அழுதன என்று கூறிக்கம்பநாடர், 'பருவர லின்பமென் றிரண்டும், ஒக்க நோக்கிய யோகரு மருந்துயர் உழந் தார்' (அயோத்தி. நகர்நீ: 215) என்றஇடத்து, பிறர் துயர் உழந்தார், யோகர் அருந்துயரிழந்தார் என்று கூறியதும் காண்க. 'தேவ ருள்ளமும் வெந்தனர் மேல்வரும் உறுதி வேண்டலார்' (அயோத்தி. நகர்நீ. 171) என்பதும் நோக்கத்தகும், வானமகளிரும் மாழ்கினர் எனின், ஏனை மகளிர் நிலை என்னாம் என்றார்; (ஒப்பு): 'உருவறியாப் பிள்ளை அழுத பெரியோரை என்சொல்ல, வள்ளல் வனம்புகுவான் என்றுரைத்த மாற்றத்தால்' (அயோத்தி. நகர்நீ. 100); கல்வியிற் பெரியரான கம்பநாடர் இவ்வாறு பல சுவைகளையும் திறம்படக் கூறி வாசகர்களை மகிழ்விப்பது ஊன்றி நோக்கத்தக்கது. ஏனை மகளிர்: அரக்க மகளிர். இனி, 'போன மகவுடையார் எல்லாம்' என்ற பாடங்கொண்டால்போரில் தத்தம் மக்களை யிழக்கப்பெற்றோ ரெல்லாம் என்க. இனி ஒருசாரார் வானமகளிர் அழுதது 'தேவ ரும் அழுதனர் களிக்கும் சிந்தையார்' (சுந்தர. 980); 'கெண்டயங் கண்ணாள் உள்ளே கிளுகிளுத்தாள்' (யுத்த. 1653) என்ற இடங் களிற் போன்று என்றும், உள்ளபடி வருந்தியது இன்றென்றும் கூறுவர். இது உலகியற்கு மாறுதல் உய்த்துணர்க.

பி-ம். 1. தானை நகரத் தளரத்.

2. மகவுடையார் எல்லாம்.

3. என்னும் எண்ணிறத்த.

4. மகளிர்களும்.

## இலங்கைவாசிகளின் வருத்தம்

1936. தாரகலத் தண்ணல் தனிக்கோயில் தாசரதி
பேரவுல குற்ற துற்றதாற் பேரிலங்கை
ஊரகல மெல்லா மரந்தை யுவாவுற்ற
ஆர்கலியே யொத்த தழுத குரலோசை.

பேர் இலங்கை - புகழ்பெற்ற இலங்கா நகர் ஆனது, தார் அகலத்து அண்ணல் - வெற்றிமாலை புனைந்த மார்பினனான தசரதப் பேரரசனுடைய, தனி கோயில் - ஒப்பற்ற அரண்மனையிலிருந்து, தாசரதி - இராமபிரான், பேர - காட்டிற்குப் பெயர்ந்து ஏக, உலகு உற்றது உற்றது - உலகு அடைந்த துயரத்தை அடைந்தது; ஊர் அகலம் எல்லாம் - ஊர்ப் பரப்பு எல்லாம், அரந்தை - உண்டான பெருந்துயரத்தால், அழுத குரல்ஓசை - அழுத குரலின் ஓசையானது, உவா உற்ற ஆர்கலியே ஒத்தது - முழுமதியைக் கண்ணுற்ற கடலின் ஆரவாரத்தை நிகர்த்தது.

தார் அகலம்; அகலம்: மார்பு. 'அந்தாரகத்தொடும்' (ஆரணிய. 702). 'மலைப்பரு மகலம்' (புறநா. 78). தாசரதி பேர உலகுற்றது உற்றது; இதனை அயோத்தி. நகர்நீங்குபடலம் 171—216ல் காண்க. ஊரகலம்: ஊர்ப்பரப்பு; அரந்தை - துன்பம்; 'அரந்தைவெம் பிறவிநோய்க்கோ ரருமருந் தனைய வையா' (கிட்கிந்தா. 452); உவா வுற்ற ஆர்கலி: சந்திரனைக் கண்டால் கடல் பொங்குமென்பர் 'எழுதரு மதியங்கடற் கண்டாஅங்கு' (குறுந். 315); ஆர்கலி: கடல்; நிறைந்த ஓசையுடையது. 'ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லாம், ஓதலிற் சிறந்தன் றொழுக்கம் உடைமை' (கொன்றைவேந்தன். 1).

பி - ம். 1. கோயில்தாள் சாந்தி.
4. ஆர்கலியோடு; ஒத்த.



அதிகாயன் வதைப்படலம் முற்றும்.

---

## இப்படலத்தைக் குறித்து முதநூல் கூறுவது :—

கும்பகன்னன் மரித்தவுடன் இராவணன் சோகம் உற்றான். தேவாந்தகன், நராந்தகன், திரிசிரன், அதிகாயன் முதலியோர் வருந்தினர். பின்னர் இராவணன் சிறிது தேறிக் கும்பகன்னனுடைய பல தன்மைகளையும் கூறிப் புலம்புகின்றான். தம்பியைப் பிரிந்து தவிக்கின்றான். வீடணன் சொன்ன சொற்களைக் கேளாதிருந்ததற்கு வருந்துகின்றான். திரிசிரன், தேவாந்தகன் முதலானோர் தேற்றுகின்றனர். நராந்தகன் போரில் அங்கதன் கையால் இறக்கின்றான். அநுமனால் குத்தப்பட்டுத் தேவாந்தகன் மடிகின்றான். நீலன் என்ற வானரவீரன் ஓர் மலையை எறிந்து மகோதரனைக் கொல்கின்றான். திரிசிரன் என்ற அரக்கன் அநுமன் கைப்பட்டு இறக்கின்றான். மத்தன் என்ற மகாபார்சுவன், இடபன் என்ற வானர வீரன் கைப்பட்டு மாள்கின்றான். இந்நிலையில் அதிகாயன் போர்க்கு எழுகின்றான். வானரர்கள் அவனுடைய பேருடலைக் கண்ணுற்று ஓடி, இராமபிரானைச் சரண் அடைகின்றனர். இராமபிரான், 'வருகின்ற அரக்கன் யாவன்' என்று வீடணனைக் கேட்க, 'அவன், அதிகாயன் என்றும், இராவணன் புதல்வன் என்றும், நன்குகற்றவன் என்றும், தானியமாலினியின் குமாரன் என்றும், பிரமதேவனிடம் பல வரங்களுடன் கவசமும் இரதமும் பெற்றவன் என்றும், இவனைத் தாமதமின்றிக் கொல்வதே நல்லது' என்றும் மொழிகின்றான் ; இங்ஙனம் சொல்லி முடித்த அளவில், அதிகாயன் போர்க்கு வெகு உக்கிரமாகப் புறப்படுகின்றான். குமுதன், துவிவிதன், மைந்தன், நீலன், சரபன் என்ற வானரவீரர்கள் எதிர்த்துப் போர் புரிகின்றனர். இலக்குவன் எதிர்க்க முன்வருகின்றான். இலக்குவனுக்கும் அதிகாயனுக்கும் வீரவாதம் நிகழ்கின்றது ; பல அஸ்திரங்களை மாறிமாறி விடுத்தும் இருவரும் சலியாமல் வெகுநேரம் போர்புரிகின்றனர். இலக்குவன் பலபட முயலும் அதிகாயனைப் புண்படுத்தக்கூடவில்லை. அப்பொழுது வாயுபகவான் இலக்குவனிடம் வந்து, 'இவ்வரக்கன் பிரமனிடமிருந்து வரம் பெற்றவன், யாவராலும் பிளக்கமுடியாத கவசம் அணிந்துள்ளான் ; பிரமாத்திரம் கொண்டுதான் இவனை வதைக்க

வேண்டும்; வேறு வாளிகளாலே இவனை வதைக்க முடியாது' என்று மொழிகின்றான். இலக்குவன் அவன் சொன்னவாறே பிரமாத்திரத்தை ஏவி, அதிகாயன் தலையை வெட்டி வீழ்த்துகின்றான். அரக்கர்கள் நிலைதடுமாறி இலங்கை நகர்க்கு ஓடுகின்றனர். இந்தத் துயரச் செய்தியைக்கேட்டு மிகவும் வருந்தியவனாய், எதிரிகளான இராம இலக்குவர்களின் அளவுகடந்த பராக்கிரமத்தை நினைந்து, 'அவ்விராகவனை அழியாத நாராயணன் என்றே நினைக்கின்றேன்' என்று கூறி, அதிகாயன் முதலானோர் இறந்தமைக்கு மிகவும் வருந்துகின்றான். அடுத்து இந்திரசித்து பிரமாத்திரத்தால் யாவரையும் பிணிக்கத் தொடங்குகின்றான்.

---

## 18. நாகபாசப் படலம்

இஃது, நாகபாசத்தைப்பற்றிக் கூறும் படலம் எனவிரியும்.

### அரக்கியரழுவது கண்டு இந்திரசித்து ஐயுறவு கொள்ளுதல்

1937. குழுமிக் கொலைவாட்க ணரக்கியர் கூந்தல் தாழத்
தழுவித் தலைப்பெய்து தங்கைகொடு மார்பி னெற்றி
அழுமித் தொழிலியாதுகொ லென்றொரு ரயிர்ப்பு முற்றான்
எழிலித் தனியே றெனவிந் திரசித் தெழுந்தான்.

இந்திரசித்து - இந்திரசித்தானவன், 'கொலை வாள் கண் - கொல்லும் தொழில் உள்ள வாள்போன்ற விழிகளையுடைய, அரக்கியர்-அரக்கர் மாதர்கள், குழுமி - ஒன்றுகூடி, தலைபெய்து - திரண்டு, கூந்தல் தாழ - கூந்தல் அவிழ்ந்து தொங்க, தழுவி - ஒருவர் ஒருவரை அணைத்துக்கொண்டும், தம் கைகொடு மார்பின் எற்றி - தங்கள் கரங்களால் மார்பில் புடைத்துக்கொண்டும், அழும் - பலாக் கணம் பாடும், இ தொழில் - இச் செயல், யாது கொல் - எது பற்றி எழுந்ததோ?' என்று ஓர் அயிர்ப்பும் உற்றான் - என ஓர் ஐயம் கொண்டவனாய், எழிலி தனி ஏறு என எழுந்தான் - மேகத்தில் தோன்றும் ஒப்பற்ற இடிபோலப் புறப்பட்டான்.

கொலைவாட்கண்: 'கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல், நோக்கமிம் மூன்றும் உடைத்து' (குறள். 1085); கூந்தல் தாழ்தல்: தலைவிரி கோலம்; துக்கக் குறிப்பு, 'ஆருகி யிருதடங்கண் அஞ்சனமை புனல்சோர அளகம் சோர' (வில்லி. பா. சூது. போர். 247); 'செக்கர் சரிந்தன குழல்கடாங்கி (யுத்த. 1926); 'கருங்குழற் கற்றைப் பாரங் கால்தொட' (யுத்த. இராவணன் சோகப். 44); தலைப்பெய்து; 'தலைப்பெய்து' (யுத்த. 1944) 'மார்பின் எற்றி : முலை

பொலியாக்க முருப்ப நூறி: புறநா. அயிர்ப்பு - ஐயம்; அண்ணலங் குமரராமென் றயிர்ப்புறும்' (வில்லி. பா. திரௌபதிமாலை. 63).

பி - ம். 2. தழுமித்; எற்ற.

3. அயிர்ப்பம்.

4. எழுமித். 1

இந்தப் படலத்துக்கு இந்திரசித்து நாகபாசப்படலம் என்று ஒரு பிரதியிற் காணப்படுகிறது.

1938. எட்டாகிய திக்கையும் வென்றவன் இன்றும் ஈடு
பட்டான்கொல் அதன்றெனிற் பட்டழிந் தான்கொல் [பண்டூர்
சுட்டாளி வகன்பதி யைத்தொடு வேலை யோடும்
சுட்டான்கொ லிதற்கொரு காரண மென்கொ லென்றான்.

'எட்டு ஆகிய திக்கையும் வென்றவன் - எட்டு என்று கணக்கிடப்பெற்ற திசைகளில் உள்ளார் எல்லோரையும் வெற்றிகொண்டவனான இராவணன், இன்றும் - (முதல் நாட்போரிற் போன்றே) இன்றைக்கும், ஈடுபட்டான்கொல் - (போரில் தோற்று) வலியழியப் பெற்றானோ? அது அன்று எனில் - அங்ஙனம் இல்லையாகில், பட்டு அழிந்தான் கொல்-(போரில்) இறந்தானோ? பண்டு-முன்பு, ஊர் சுட்டான் - இலங்கையை எரியூட்டிய அநுமன், தொகு வேலையோடும் - (சகரர் புதல்வர்களால்) அகழப்பெற்றதும் (நகர்க்கு நீர் அரண் ஆக அமைந்ததுமான) கடலோடும், இவ் அகன் பதியை - இந்த விசாலமான இலங்காபுரியை, கட்டான்கொல் - (இப்பொழுது) களைந்து விட்டானோ? இதற்கு - இங்ஙனம் அரக்கியர் அழுது அரற்றுதற்கு, ஒரு காரணம் என்கொல் - ஒரு காரணம் யாதாகவிருக்கும்', என்றான் - என்று (பலவாறு) ஐயுற்றான் (இந்திரசித்து).

எட்டாகிய திக்கையும் வென்றவன், உத்தரகாண்டம் திக்விசயப்படலத்தில் காண்க. 'திக்கின் மாவெலாம் தொலைத்து வெள்ளிக் கிரியெடுத்து' (ஆரணிய. 258); 'எட்டுமோ ரிரண்டு மாய

திசையினை எறிந்து வென்றேன்' (யுந்த. இந்திரசித்து. 11) என்று இராவணனே கூறுதல் காண்க. ஈடு படுதல் - வலி யழிதல், 'இற்றைய னல்லனால் ஈடுண்டேகுவான்' (கிட்கிந்தா. 250); ஈடு: வலிமை: 'ஒரு கரியிடமிழித்துரித்தனை' (தேவா. 142: வரி: 13); கொல்: ஐயம்: 'கோல்லேயையம் அசைநிலைக் கூற்றே' பண்டுர் சுட்டது; சுந்தர. இலங்கை யெரியூட்டுப் படலத்துக் காண்க. 'அயலாரூரில், அஞ்சிலே யொன்றை வைத்தான்' (பால. பாயிரம்): தொடுவேலை; 'தொல்லைநம் பிறவி யெண்ணில் தொடுகடல் மணலுமாற்று வெல்லைய' (சீவக. 270). 'சகரர் தொட்டலாற் சாகரம்' (பால. அகலிகை. 43); வேலை - ஆழி; சுந்தர. 1275. கட்டான் - பறித்துப் பெயர்த்தான்; களைகட்டான் என்றாற்போன்று எனக; 'களை கட்டதனொடு நேர்' (குறள். 550); 'ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின், நீரினும் நன்றதன் காப்பு' (குறள். 1038); இவ்வகன்பதியை என்பதை இடைநிலை விளக்காகக் கொண்டு சுட்டான், சுட்டான் என்ற இரண்டினோடும் இயைக்க. அநுமன் என்ற குரங்கு சுட்டான் என்று கூறியது அந்தக் குரங்கின் அறிவுணர்ச்சிபற்றி என்க. 'இடங்கர் வலித்திடக், கோடு பற்றிய கொற்றவற் கூயதோர், வீடுபெற்ற விலங்கும் விலங்கரோ' (கிட்கிந்தா. 358); 'நலங்கொ டெவரிற் றென்றி நவையறக், கலங்க லாவற நன்னெறி காண்டலின், விலங்கலாமை விளங்கிய நாதலான்' (கிட்கிந்தா. 336); 'பொறியின் யாக்கைய தோபுல னோக்கிய, அறிவின் மேலதன் றோவறத் தாறுதான்' (கிட்கிந்தா. 337) என்று இராமபிரானே கூறியன இங்கு நோக்கத்தகும். மற்றும் தொல்காப்பியம் மரபியலில், 'மக்கள் தாமே ஆறறிவுயிரே' என்ற சூத்திரத்தின் கீழ் 'குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வுடையன உளவாயின், 'அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும்' என்றமை காண்க. 'ஒரோ வழி அஃறிணைப் பொருள்கள் மொழியாற் பேசுவன உளவாயின், அது தெய்வத் தன்மை முதலிய விசேடத்தான் அன்றிப் பொருட்டன்மையான் அன்மையின், அமைத்துக் கொள்வது' என்ற இலக்கண விளக்கச் சூருவளியும் இங்கு நோக்கத்தகும்.

பி - ம். 2. பட்டொழிந்தான், அழிந்தது; பண்டு.

4. கொலிவன்.

## இந்திரசித்து சென்று இராவணனைக் கண்டு அழுகையின் காரணம் உணர்தல்

**1939.** கேட்டா னிடையுற்ற தென்னென்று கிளத்தலி யாரும்
மாட்டாது நடுங்கினர் மாற்றம் மறந்து நின்றார்
ஓட்டா நெடுந்தேர் கடிதோட்டி யிமைப்பி னுற்றான்
காட்டாதன காட்டிய தாதையைக் கண்ணிற் கண்டான்.

'இடை - இவ்விடத்தில் (இலங்காபுரியில்) உற்ற என் - நிகழ்ந்தவை யாவை', என்று - என்று, கேட்டான் - (எதிர்ப்பட்டவர்களை) இந்திரசித்து வினவினான்; யாரும் கிளத்தல் மாட்டாது (அதற்கு) எவரும் வாய்விட்டுக்கூற இயலாமல், நடுங்கினர் - உடலும் மனமும் நடுங்கி, மாற்றம் மறந்து நின்றார் - சொற்சோர்வுற்று நின்றனர்; (அந்நிலையில் உண்மை நிகழ்ச்சிகளை அறிய எண்ணினவனாய்), ஓட்டா நெடுதேர் - தூண்டிச்செலுத்த வேண்டாத உயர்ந்த தேரினை, கடிது ஓட்டி - மிக விரைவாகச் செலுத்தி, இமைப்பின் - கண்ணிமைக்கும் மாத்திரையில், உற்றான் - தந்தை இருந்தவிடத்தை அடைந்தவனாய், காட்டாதன காட்டிய தாதையை கண்ணில் கண்டான் - (அதுகாறும்) பிறர்க்குக் காட்டாதனவாய் ஒன்றினை அப்பொழுது காட்டிநின்ற தந்தையைக் கண்ணாற் பார்த்தான்.

கிளத்தல் - சொல்லுதல்; 'இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்' (தொல். சொல். கிளவி. 19) மாற்றம்-செய்தி; 'நம்பி நடந்திலனென்னு மாற்றம்' (அயோத்தி. தைலமாட்டு. 59); 'ஓட்டா நெடுந்தேர் வலவ னேவா வானவூர்தி' என்ற புட்பக விமானம்போன்றதென்க. 'தெய்வத்தேர்' (யுத்த. இந்திரசித்து, 15); 'திசைதிசையுலகிரியத் திரிபுவ னமுழுறு தனியிரதம்' (யுத்த. இந்திரசித்து. 18). ஓட்டா ஓட்டி என்ற இடத்துத் தொடை முரண் காண்க. காட்டாதன காட்டிய தாதை: அதுகாறும் பிறர்க்குக் காட்டாத கண்ணீரை வெளிப்படுத்துகின்ற தந்தை; இதற்குப் பிறராற் செய்து காட்ட முடியாத செயல்களைச் செய்து காட்டிய தந்தையான இராவணன் என்றும் சொல்வர். இவ்வாறு நயம்பெறக் கூறுவது கம்பர் வழக்கு; (ஒப்பு): 'பின்னை ரிந்திர னிலாமையாற் பேரதி

காயன்' (யுத்த. 507) என்ற இடத்துப்போல, காட்டாதன காட்டிய தொடை முரண். கண்ணில் என்பதற்குத் தந்தைகண்கொண்டே எனினுமாம்; 'கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்' (சுந்தர. 1269) என்ற இடத்துப்போல. மிக விரைந்து செல்லும் தேரினை மேலும் தூண்டியது நிகழ்ச்சியினை அறியவேண்டிய பரபரப்பால் என்க. 'காட்டாதன காட்டிய தாதை: வேதத்தினாலும் காணப்படாத பொருள் இராமனாகத் திருவவதரிக்குமாறு, உலகத்துக்குத் துக்கத்தைக் காட்டிய இராவணன்' என்பது பழைய உரைக்குறிப்பு.

பி - ம். 1. உற்றதெனென்று; ளொத்தயாரும்.

3. ஒட்டாய்; கூடிதென்றோர்.

4. சென்றுகண்டான். 3

1940. கண்டா னிறையாறிய நெஞ்சினன் கைகள் கூப்பி
உண்டாயதெ னிவ்வுழி யென்றலு மும்பி மாரைக்
கொண்டா னுயிர்காலனுங் கும்ப நிகும்ப ரோடும்
விண்டா னடைந்தா னதிகாயனும் வீர வென்றான்.

கண்டான் - (இந்திரசித்து இராவணனை) நோக்கி, இறை ஆறிய நெஞ்சினன் - சிறிது துன்பம் குறைந்த உள்ளத்தனாய், கைகள் கூப்பி - கரங்களைக் குவித்து (வணங்கி), 'இவ் உழி - இந்த இடத்து, உண்டாயதுஎன் - நிகழ்ந்தது யாது', என்றலும்-என்று வினவிய அளவில், (இராவணன் மகனை நோக்கி) 'வீர - வீரனே! காலனும் - யமனும், உம்பிமாரை உயிர் கொண்டான் - உன் தம்பியரை உயிர் வாங்கினான், கும்ப நிகும்பரோடும் - கும்ப நிகும்பர்களோடும், அதிகாயனும் விண் அடைந்தான் - அதிகாயனும் வானுலகுற்றான்', என்றான் - என்று பகர்ந்தான். தான் - அசை.

இறை - சிறிதுபொழுது; ஆரணிய. 302, 611; சுந்தர. 968. உன்தம்பி: உம்பி என நின்றது மரூஉ. காலனும் என்ற இடத்து இழிவு சிறப்பும்மை. காலனும் இராவணற்கு அஞ்சி ஒடுங்கினமை; 'சூலமே முதலிய துறந்து சுற்றிய, சேனையாற் செய்யவாய் புதைத்த செங்கையன், தோலுடை நெடும்பணை துவைக்குந் தோறெலாம்,

காலனின் றிசைக்குநாட் கடிகை கூறவே' (ஆரணிய. 570) என்றது கொண்டு காண்க. அதிகாயன்தம்பிகள் : தேவாந்தகன், நராந்தகன், திரிசிரன்.

பி-ம். 1. இடையாறிய; கூப்பா.

2. இவ்வழி. 4

## இந்திரசித்து வினவ இராவணன் நிகழ்ந்தன கூறல்

1941. சொல்லாத முன்னஞ் சுடரைச் சுடர்தூண்டு கண்ணன்
பல்லா லதரத்தை யதுக்கிவிண் மீது பார்த்தான்
எல்லாரு மிறந்தன ரோவென வேங்கி நைந்தான்
வில்லாளரை யெண்ணில் விரற்குமுன் னிற்கும் வீரன்.

வில்லாளரை எண்ணில் விரற்கு முன் நிற்கும் வீரன் - வில் வீரர்களை எண்ணத்தொடங்கினால் (ஐந்து) விரல்களுள் முதல் விரலாக நிற்கும் வீரனாகிய இந்திரசித்து, சொல்லாத முன்னம் - (தனது தம்பியர்களின் இறுதியை இராவணன்) கூறுதற்கு முன்னரே, சுடரை சுடர் தூண்டு கண்ணன் - சூரியனுக்கும் நெருப்புக் கொடுக்கும் நேத்திரங்களை உடையவனாய், பல்லால் அதரத்தை அதுக்கி - பற்களால் உதட்டினைக் கடித்து, விண் மிது பார்த்தான் - (நிமிர்ந்து) ஆகாயத்தைப் பார்த்து, 'எல்லாரும் இறந்தனர் - அனைவரும் இறந்துபட்டனர், ஓ - அந்தோ', என - என்று, ஏங்கி நைந்தான் - ஏக்கமுற்றுத் தளர்ந்தான்.

உயர்வுநவிற்சி. இந்திரசித்து கேட்டறிய வேண்டாதபடி இலங்கேசன் முகமே தம்பியரின் இறப்பினைத் தெரிவித்துவிட்டது எனப்பட்டது; 'நல்லவன் முகமே நம்பி நடந்தில னென்னு மாற்றம் சொல்லலும்' (அயோத்தி. தைலமாட்டுப். 59); 'உள்ளத்தி னுள்ளதை யுரையின் முந்துற, மெள்ளத்தன் முகங்களே விளம்பும்' (யுத்த. 394); 'முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினும், காயினும் தான்முந் துறும்' (குறள். 707) என்றன காண்க. பல்லால் அதரத்தை அதுக்குதல்: 'பல்லாலே யிதழதுக்கும் கொடும்பாவி நெடும்பாரப் பழிதீர்ந் தாளே' (யுத்த. இராவணன்வதை. 225). அதரம் - உதடு; (பிங்.). பல்லால்

அதரம் அதுக்குதல் - சினக்குறி ; 'வெகுண்டோன் அவிநயம் விளம்புங்காலை, மடித்தவாயு மலர்ந்த மார்பும்' (சிலப். 3). வீரத்திலும் இதனைக் காணலாம் ; 'பிடித்த வாளும் கடித்த வெயிறும், மடித்த வுதடும்' (சிலப். 3) ; 'மடித்தபில வாய்கடொறும் வந்து புகை முந்த' (ஆரணிய. 602) ; 'வாய்மடித் துருத்து நக்கான்' (சுந்தர. 985). வில்லாளரை எண்ணில் விரல்முன் நிற்கும் வீரன் : 'அதிரதர் தம்மை யெண்ணில் அணிவிரல் முடக்க வொட்டா, முதிர்சிலை முனியும்' (வி. பா. நிரைமீட்சி. 92) ; 'மண்மிசை நால்விர னிற்கும் மணிமகுடத்தணி யரங்கின்' (வி. பா. இராச. 13). விண் மீது பார்த்தான் : உயிர் கவர்ந்துசென்ற யமன் இருக்கின்றானோ இல்லையோ என்று பார்த்தான் என்க.

பி - ம். 2. இருக்கி.

3. ஏங்கி நின்றான், இரங்கி நின்றான்.

4. வீரர்க்கு. 5

1942. ஆர்கொன் றவரென்றலும் பேரதி காய னென்னும்
பேர்கொன் றவன்வென்றி யிலக்குவன் பின்பு நின்றார்
ஊர்கொன் றவனாற் பிறராலென வுற்ற வெல்லாம்
தார்கொன் றையினான் கிரிசாய்த்தவன் தானு ரைத்தான்.

(இந்திரசித்து இலங்காதிபனைப் பார்த்து), 'கொன்றவர் ஆர் - (அதிகாயன் முதலிய வீரர்களைக்) கொலைபுரிந்தவர் யாவர்?' என்றலும் - என்று கேட்டலும், கொன்றை தாரினான் - கொன்றை மாலை புனைந்த சிவபிரானுடைய, கிரி சாய்த்தவன் - கைலாய மலையைப் பெயர்த்து வீழ்த்தியவனான இராவணன், 'பேர் அதிகாயன் என்னும் பேர் கொன்றவன் - பெருமையுள்ள அதிகாயன் என்னும் நாமம் தரித்தவனைக் கொன்றவன், வென்றி இலக்குவன் - வெற்றியையுடைய இலக்குவன் ; பின்பு நின்றார் - பின்னர் அதிகாயனல்லாது நின்ற பிறர் ; (தேவாந்தகன், நராந்தகன், திரிசிரன், கும்பன், நிகும்பன் என்பவர்), ஊர் கொன்றவனால் - இலங்கை நகரத்தை எரித்தவனான அநுமனாலும், பிறரால் - பிறராலும்

(கொலை செய்யப்பட்டனர்)', என - என்று, உற்ற எல்லாம் - நடந்தவற்றை எல்லாம், உரைத்தான் - சொன்னான். தான் - அசை.

பேரதிகாயன் பேர்கொன்றவன் என்ற இடத்துப் பிராசநயம் காண்க. பேர் கொல்லுதல்; (ஒப்பு): 'குரங்கென் றேதுங் கருதுவையுங் களைவெ னென்றான்' (சுந்தர. 953). கிரி சாய்த்தவன் - இராவணன்; ஆரணிய. 319, 848, 889 முதலிய இடங்களிற் காண்க. பிறர்: சுக்கிரீவன், அங்கதன் முதலானோர்.

பி - ம். 1. கொன்றனர்; என்றலுமே.

2. கொன்றனன்; பின்னை நின்றது.

3. பிறவுற்ற தெல்லாம், பிறர்க்குற்றது. 6

## இந்திரசித்து இராவணனைக் கடிந்து கூறுதல்

1943. கொன்றா ரவரோ கொலைசூழ்கென நீகொ டுத்தாய்
வன்றானையர் மானிடர் வன்மை யறிந்தும் மன்னா
என்றானு மெனைச்செல வேவலை யிற்ற தென்னா
நின்றான் நெடிதுன்னி முனிந்து நெருப்பு யிர்ப்பான்.

(இந்திரசித்து அரக்கர்கோனைப் பார்த்து), 'மன்னா - அரசே!, வல் தானையர் மானிடர் வன்மை அறிந்தும் - பலத்த சேனையை உடையவர்களாகிய மனிதர்களின் ஆற்றலை உணர்ந்து நின்றும், என் தானும் - என்னை, செல - செல்லுமாறு, எனை ஏவலை - சிறிதும் ஏவினாயில்லை; (அதிகாயன் முதலானோரை நீ அனுப்ப அவர்கள் உயிர் இழந்தார்கள் எனவே), கொன்றார் அவரோ - (அதிகாயன் முதலியவர்களைக்) கொன்றவர் அப்பகைவர்களோ?, கொலை சூழ்க என நீ கொடுத்தாய் - அவர்களைக் கொல்வதற்கான சூழ்ச்சியைப் புரிக என்று நீயே (அவ்வீரர்களைக்) காட்டிக்கொடுத்தாய்; இற்றது - (அதனால் நம் பக்கத்து வன்மை) குறைந்தது', என்னா - என்று கூறி, நெடிது உன்னி - நீண்டநேரம் ஆலோசித்து, முனிந்து - சினந்து, நெருப்பு உயிர்ப்பான் நின்றான் - தீப்பிறக்கப் பெருமூச்செறிபவனாய் நின்றான்.

அவரோ: ஓகாரம்; ஒழியிசை. சூழ்க என என்பதில் அகர ஈறு தொக்கது. முன் இரண்டடிகட்கு (ஒப்பு): 'ஒன்றுநீ யுறுதி

யோரா யுற்றிருந் துணைய கிற்றி, வன்றிறற் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்தும் மன்னு, சென்றுநீர் பொருதி ரென்று திறந் திறம் விடுத்துத் தேயக், கொன்றனை நீயேயன்றோ வென்றனை னறிவு மிக்கான்' (சுந்தர. *989*) காண்க. எனை - சிறிதும்.

பி - ம். 2. வன்மை; உணர்ந்தும்.

3. ஒன்றுனும், என்றுலும்; உற்றவென்னு, உற்றவென்று; இனிச்செல வுற்றதுன் வாழ்க்கை யென்னு.

4. உயிர்த்தான். 7

**1944.** அக்கப் பெயரோனை நிலத்தொ டரைத்து ளானை
விக்கற்கொரு வெவ்வுரைத் தூதுவ னென்று விட்டாய்
புக்கத் தலைப்பெய்தல் நினைந்திலை புந்தி யில்லாய்
மக்கள் துணையற்றனை யிற்றதுன் வாழ்க்கை மன்னே.

'அக்கன் பெயரோனை - அக்க குமாரனை, நிலத்தொடு அரைத் துளானை - தரையிலிட்டுத் தேய்த்தவனுன அநுமனை (நான் பிரமாத்திரத்தாற் பிணித்துக் கொணர்ந்தபோது), விக்கற்கு - கொல்லுதற்கு மாருக, ஒரு வெம் உரை தூதுவன் என்று விட்டாய் - ஒரு (எதிரியின்) விரும்புகின்ற பேச்சினைப்பகரும் தூதன் என்று (இரக்கம் காட்டி) விட்டுவிட்டாய்; (அவனைக் கொலை புரியாமையால் இங்குள்ள செய்திகள் அனைத்தும்), புக்கு - எதிரி சார்பிற் புகுந்து, அதலை பெய்தல் நினைந்திலை - அந்த இடத்தில் சென்றடைதலை எண்ணினுயில்லை; புந்தி இல்லாய் - முன்பின் ஆராயும் அறிவில்லாதவனே!, மக்கள் துணை அற்றனை - இனிப் பிறமக்களின் உதவியையும் இழந்தனை; (அதனுல்), உன் வாழ்க்கை இற்றது - உன்னுடைய வாழ்க்கை முடிந்தது'. மன்னே - ஈற்றசை.

அக்க குமாரனைத் தேய்த்தது: 'விண்ணெடு மண்காணத், தேய்த்தா னூழியி னுலகேழ் தேயினு மொருதன் புகழிறை தேயாதான்' (சுந்தர. *968*); 'சாந்தெனப் புதல்வன் றன்னைத் தரையிடைத் தேய்த்து' (யுத்த. *946*). விக்கல் - வீக்கல் என்பதன் குறுக்கம்; விக்கி இறக்கச்செய்தல். வெவ்வுரை - வெம்மை

யுரை. தூதுவன் என்றுவிட்டது வீடணன் அறிவுரையின்பேரில்; சுந்தர. 1152—1158 காண்க; வீடணன் அடைக்கலப் படலம் 400, 401-உம் காணத்தகும்.

பி - ம். 2. மிக்கற்பொரு, விக்கைக்கொரு; வேவுரைத் தூதுவனென்று ; விளம்பி.

3. புக்கத் தலையெய்தி ; புத்தியில்லாய்.

4. வாழ்க்கை யென்றுன். 8

1945. என்னின்று நினைந்து மியம்பியு மெண்ணி யுந்தான்
கொன்னின்ற படைக்கலத் தெம்பியைக் கொன்று ளானை
அந்நின்ற நிலத்தவ னாக்கையை வீட்டி யல்லால்
மன்னின்ற நகர்க்கினி வாரலென் வாழ்வும் வேண்டேன்.

'நின்று நினைந்தும் - நிதானித்துக் கருதியும், எண்ணியும் இயம்பியும் - இனி என்ன நேருமோ என்று ஆலோசித்தும் (உன்மீது) குறைகூறியும், என் - என்ன பயன்? கொன் நின்ற - கூர்மை அமைந்த, படைகலத்து எம்பியை - போர்க்கருவிகளை யுடைய என் தம்பியான அதிகாயனை, கொன்றுளானை - கொன்றவனை, அவன் - அந்த இலக்குவனுடைய, ஆக்கையை - உடலை, அந்நின்ற - அவன் நின்ற, நிலத்து - போர்க்களத்திலேயே, வீட்டி அல்லால் - ஒழித்தல்லாமல், மன்நின்ற - பெருமை வாய்ந்த, நகர்க்கு இனி வாரலென் - இந்த இலங்காபுரிக்கு (இனி மீண்டு) வாரேன்; வாழ்வும் வேண்டேன் - (அவ்வாறு செய்யத்தவறினால்) உயிர் வாழ்வினையும் விரும்பமாட்டேன்'. தான் - அசை.

இந்திரசித்தின் சூளுறவு. என் இன்று எனவும் பிரிக்கலாம்.

பி - ம். 1. நினைத்தும்.

3. அன்னின்ற; ஆக்கையை நீக்கி, வீழ்த்தி யல்லால்.

4. வாங்கிலேன்; வாரலேன். 9

இதன்பின் 'வெங்கண்' என்ற செய்யுள் ஓர் பிரதியில்.

1946. மாற்றுவுயி ரெம்பியை மாற்றிய மானு டன்றன்
ஊற்றூர் குருதிப்புனல் பார்மக ளுண்டி லாளேல்
ஏற்று னிகலிந்திர னீரிரு காலெ னக்கே
தோற்றான் தனக்கென் னெடுசேவகந் தோற்க வென்றான்.

'மாற்று உயிர் எம்பியை - (பிறரால்) போக்கமுடியாத உயிரை யுடைய என் தம்பியை, மாற்றிய - உயிர் நீக்கிய, மானுடன்தன் - மனிதனாகிய இலக்குவனுடைய, ஊறு ஆர் - சுரக்கும் தன்மையுள்ள, குருதி புனல் - உதிரப் பெருக்கை, பார்மகள் உண்டிலாளேல் - பூமி தேவி பருகாவிட்டால், (அவன் உதிரம் பூமியில் நிறைந்து வெள்ள மாம்படி நான் புரியாமற் போனால்) இகல் ஏற்றான் - போரில் எதிர்த்து, தோற்றான் இந்திரன் தனக்கே - எனக்கே (ஒருமுறை) தோற்றவனான இந்திரனுக்கு, என்நெடு சேவகம் ஈரிருகால் தோற்க - எனது பெரிய போர்வீரம் நான்கு முறை தோற்றது போன்று ஆகக் கடவது', என்றான் - என்று சூளுரைத்தான்.

மானுடன் என்றது இகழ்ச்சி. மாற்று மாற்றிய : தொடை முரண்.

பி - ம். 3. ஏற்று.
4. கேநெடுவெஞ்சமர் ; தோற்கவேயான். 10

1947. வெங்கண் ணெடுவாநரத் தானையை வீற்று வீற்றுப்
பங்கம் படநூறி யிலக்குவ னைப்ப டேனேல்
அங்கந் தரவஞ்சியென் னாணை கடக்க லாத
செங்கண் ணெடுமான் முதற்றேவர் சிரிக்க வென்றான்.

'வெம் கண் நெடு வாநர தானையை - கொடுந்தன்மை வாய்ந்த பெரிய குரங்குப் படையினை, வீற்று வீற்றாய் பங்கம்பட - தனித் தனியாகத் துணிபட்டு முறியுமாறு, நூறி - அழித்து, இலக்குவனை படேனேல் - இலக்குவனையும் கொல்லாது விடுவேனாகில், அங்கம் தர அஞ்சி - உடம்பினை என்முன் காட்டிப் பொருதற்குப் பயந்து, என் ஆணை கடக்கலாத - என் ஆணையை மீறமாட்டாத, செ கண் - சிவந்த விழிகளையுடைய, நெடுமால் முதல் தேவர் சிரிக்க - பெரிய திருமால் ஆதியான தேவர்கள் (என்னைக் கண்டு), நகை யாடட்டும், என்றான் - என்று கூறினன்.

என்னை அஞ்சி என் எதிர்வரத் துணியாதவரும் என்னைப் பார்த்து நகை செய்யட்டும் என்றபடி (ஒப்பு) : 'விட்டனன் சீதை தன்னை யென்னலும் விண்ணோர் நண்ணிக், கட்டுவதல்லால் பின்னை யானெனக் கருதுவாரோ' (யுத்த. இந்திரசித்து வதை. 11) ; வீற்று வீற்றோடு மயிலினம் போல்' (களவழி. 49), பலந்துணியின் வீற்று வீற்றுக் கிடப்ப' (புறநா. 35) ; மார்பினைக் காட்டிப் பொருமாறு எனினுமாம். பங்கம்பட - பழிபொருந்த ; 'பங்கம் படவிரண்டு கால்பரப்பி' (நவிப்பா. இறையனார்.).

பா-ம். 2. பங்கமுற. இற.

3. தரமஞ்சி ; கடக்கிலாத.

4. சிரிப்ப ; என்றுன். 11

1948. பாம்பிற் றருவெம்படை பாசு பதத்தி னேடும்
தேம்பற் பிறைசென்னி வைத்தான்றரு தெய்வ வேதி
ஓம்பித் திரிந்தேற் கினியின் றுதவாது போமேல்
சோம்பித் திரிவே னினிச்சோறு முவந்து வாழேன்.

'பாம்பில் தருவெம்படை - அரவத்தின் உருவிற் பொருந்திய கொடிய அத்திரத்தை, பாசுபதத்தினேடும் - பாசுபதம் என்னும் அத்திரத்துடன், தேம்பல் பிறைசென்னி - தேய்தலையுடைய பிறை மதியை, சென்னி வைத்தான் தரு - முடியில் தரித்த சிவபெருமான் அருளிய, தெய்வ எதி - தெய்வத்தன்மை வாய்ந்த வாளாயுதத்தையும், ஓம்பி - பாதுகாத்துக் கொண்டு, திரிந்தேற்கு - அலைந்து திரிந்து பொழுதுபோக்கிய எனக்கு, இனி - இனிமேல், இன்று - இற்றை நாளில் (நான் புரியவிருக்கும் சண்டையில்), உதவாது போமேல் - (அவைகள்) பயன்படாது கழியுமானல், சோம்பி திரிவேன் - சோம்பலை மேற்கொண்டு அலைவேன் ; இனி சோறும் உவந்து வாழேன் - இனிமேல் சோற்றுணவிலும் ஆசை கொண்டு வாழ மாட்டேன்.

பாம்பில் தரு வெம்படை - நாகாத்திரம் ; இங்கு நாகாத்திரத்தைத், தான் பயன்படுத்துவதை இந்திரசித்துக் குறிப்பிட்டான் என்க. பாசுபதம் : பசுபதி சம்பந்தமானது என்று தத்திதாந்த நாமம். இந்த அத்திரங்கள் இரண்டும் சிவபிரான் அளித்தவை. பெரியதிருமொழி. 18. தேம்பல் - குறைதல் ; 'தேம்பற்றுடியிடை'

(திருக்கோ. 21). திரிந்தேற்கு - வீரச்செறிவால் பொருவாரைத் தேடியலைந்த எனக்கு என்க. சோறு; உபலக்கணத்தால் அத னுடன் பருகும் நீரும், உட்கொள்ளும் கறி முதலியனவும் கொள்க. சோம்பி : 'இரு தோளெனச் சோம்பி யோங்கும் கல்லும் சுமந்தேன்' (அயோத்தி. நகர்நீ. 138); 'சோம்பித் திரியேல்' (ஔவை.).

பி - ம். 2. தேம்பொற்.
3. திரிந்தேனெனக்கு, திரிவேன்.
4. உகந்து. 16

இதன்பின் 'மாற்று' என்ற செய்யுள் ஓர் பிரதியில்.

1949. மருந்தே நிகரெம்பிதன் னுருயிர் வவ்வி னானை
விருந்தே யெனவந்தகற் கீகிலென் வில்லு மேந்திப்
பொருந்தேவர் குழாநகை செய்திடப் போந்து பாரின்
இருந்தே னெனினானவ் விராவணி யல்ல னென்றான்.

'மருந்தே நிகர் எம்பிதன் - தேவர் அமுதத்தையே நிகர்த்த எனது தம்பியான அதிகாயனுடைய, ஆர் உயிர் வவ்வினானை - அருமையான உயிரைக் கவர்ந்தவனான இலக்குவனை, அந்தகற்கு - யமனுக்கு, விருந்தே என ஈகிலென் - விருந்தாகத் தாராமல், பொரும் தேவர் குழாம் - (என்னுடன்) போர் புரியும் தன்மையுள்ள, தேவர்களின் கூட்டம், நகை செய்திட - சிரிக்குமாறு, வில்லும் ஏந்தி - வில்லையும் (அவமே) சுமந்து, போந்து - போய், பாரின் - உலகிற்கு, இருந்தேன் - பார (மாக) அமைந்திருந்தேன், எனின் - ஆனால், நான் அவ் இராவணி அல்லன் - நான் அந்த இராவணன் மகனல்லன்', என்றான் - என்று சூளுரைத்தான்.

மருந்து - அமுதம்; 'வீயும் உயிர் மீளும், மருந்து மென லாகியது வாழி மணியாழி' (சுந்தர. 558): அந்தகன்: உயிர்களை அவற்றின் வாழ்நாள் இறுதியில் கவர்பவன்; வில்லும் சுமக்கப் பிறந்தேன்வெகுண் டென்னை என்றான்' (அயோத்தி. நகர்நீ. 139); 'வன்றாட் சிலையேந்தி வாளிக் கடல் சுமந்து, நின்றேனு நின்றேன்' (ஆரணிய. 989). இராவணி: இராவணன் மகனான இந்திரசித்து

'இராவணியினையகூற' (உத்தர. இக்குவிசய. 248). 'ஏகவீரியனையுள்ள விராவணி' (உத்தர 203); 'எமுக மறிய வல்ல விராவணி' (உத்தர. 202);

பி - ம். 3. பெருந்தேவர் குழாசநகை செய்நிடப் பேர்ந்து, பெயர்த்து.
4. தெனின் யானும். 13

## இலக்குவனை நாகபாசத்தால் பிணிக்குமாறு இராவணன் வேண்டுதல்

1950. ஏகா விதுசெய் தெனதின்னலை நீக்கி டெந்தைக்
காகா தனவும் முளவோவெனக் காற்ற லார்மேல்
மாகால் வரிவெஞ் சிலையோடும் வளைத்த போது
சேகாகு மென்றெண்ணி யிவ்வின்னலிற் சிந்தை செய்தேன்.

(இராவணன் இந்திரசித்தைப் பார்த்து) 'ஏகா - போர்க்களம் சென்று, இதுசெய்து - (நீ சொன்னபடியே நாகபாசத்தால் இலக்குவனைக் கொல்வதாகிய) இத்தொழிலைச் செய்து, எனது இன்னலை நீக்கிடு - என்னுடைய மனத்துயரைப் போக்குவாயாக; எந்தைக்கு ஆகாதனவும் உளவோ - என் அப்பனே! உன்னால் செய்துமுடிக்க வியலாதவனும் இருக்கின்றனவோ? இவ் இன்னலில் - ஆற்றமுடியாத புதல்வர்ப் பிரிவு நேர்ந்த இத்துன்ப நிலையில், எனக்கு - என்பொருட்டு, ஆற்றலார் மேல் - பகைவர்கள் மீது, (நீ சென்று) மாகால் - பெரிய தண்டினையுடைய, வரி வெம் சிலையோடும் - கட்டமைந்த கொடிய உனது வில்லையும் (எதிரிகளையும்) வளைத்தபோது - வளைத்த காலத்து, சேகு ஆகும் - (உனக்கு) உறுதி யேற்படும், என்று எண்ணி - என்று கருதி, சிந்தை செய்தேன் - (உன்னை) நினைந்தேன்.' என்றானை என அடுத்த கவியொடும் தொடரும்.

ஏகா - செய்யா என்னும் வாய்பாடு. இன்னல்: இனிமையல்லாதது எனவே துன்பம் என்க. எந்தைக்கு என்பது அன்பு பற்றிய வழுவமைதி; உவப்புப்பற்றி வந்ததுமாம்; சேகு: மரவயிரமுமாம் சுந்தர. 943. சேகாகுதல் : இங்கு, 'வன்மை, தந்தையே மகனுடைய சார்த்தை வெளிவிட்டுச் சொன்னால்,

கண்ணேறு நாவேறு வரும் என்று இருப்பேன்' என்பது - ஐயர் குறிப்பு.

பி - ம். 1. ஏகாய்; நிக்க; எந்தை.

2. உளதோ; ஆற்றலாயோ.

3. சிலையோடும், சிலையோரை, மறித்தபோதே.

4. உவப்பினிற்; செய்தார். 14

## இந்திரசித்து தந்தையின் உத்திரவின்படி போர்க்குச் சித்தனுதல்

1951. என்றானை வணங்கி யிலங்கயில் வாளு மார்த்திட்
டொன்றா னுமரு வுருவா வுடற்காவ லோடும்
பொன்றாழ் கணையின் னெடும்புட்டில் புறத்து விக்கி
வன்றாள் வயிரச் சிலைவாங்கினன் வானை வென்றான்.

என்றானை - என்று மொழிந்த இராவணனை, வானை வென்றான் - விண்ணுலகத்தை வெற்றிகொண்ட மேகநாதன், வணங்கி - தொழுது, ஒன்றானும் அரு - (எந்தக் கருவியாலும்) அறுக்க முடியாததும், உருவா - எதனாலும் ஊடுருவ வியலாததுமான, உடல் காவலோடும் - மெய்ப்பை என்ற கவசத்துடனே, இலங்கு அயில் வாளும் ஆர்த்திட்டு - விளங்குகின்ற கூரிய வாட்படையையும் அணிந்து கொண்டு, பொன் தாழ் - கரும் பொன்னால் இயன்றனவும் உள்ளாழம் உடையனவுமான, நெடு கணையின் புட்டில் புறத்து விக்கி - நீண்ட அம்பறாத் தூணிகளைத் (தோள்களின்) புறத்தே கட்டிக்கொண்டு, வல் தாள் வயிரம் சிலை வாங்கினன் - வலிய தண்டினையுடைய உறுதியான வில்லினைக் கைக்கொண்டான்.

என்றானை : வினையாலணையும் பெயர். அயில்வாள் என்பதனை உம்மைத் தொகையாகக் கோடலுமாம். உடற் காவல் : மெய்புகு கருவி. புட்டில் அம்பறாத்தூணி ; இதனை ஆவம் என்றும் கூறுவர். 'சரம் படர் புட்டில் கட்டிச் சாபமுந் தரித்தான்'; 'பொன்னின்ற வடிம்பின் வாளிப் புட்டிலன்' (ஆரணிய. 421, 422); பொன்தாழ் கணை - அடியிற் பொன் அமையப்பெற்ற கணை எனினுமாம் (ஒப்பு) : 'பொன்புனைபகழி' (குறுந். 16); விக்குதல் - இறுக்கக் கட்டுதல் : 'மேகமென் துருத்தி விக்கி' (ஆரணி. 567); வன்றாட்சிலை : ஆரணிய.

989); வாலி வென்றது: உத்தரகாண்டம். திக்குவிசயப்படலம் 198 - 240 காண்க.

பி - ம். 1. மிலங்கிலே; யாதும்.

3 பின்றும், பின்ரு. 15

இதன் பின் 'தோளில்' என்ற செய்யுள் ஓர் பிரதியில்.

1952. வயிரந் நெடுமால் வரைகொண்டு மலர்க்கண் வந்தான்
செயிரொன்று முருவகை யிந்திரற் கென்று செய்த
உயர்வெஞ்சிலை யச்சிலை பண்டவன் றன்னை யோட்டித்
துயரின் தலைவைத் திவன்கொண்டது தோற்ற மீதால்.

அசிலை - (மேகநாதன் கைப்பற்றிய) அந்த வில்லானது, மலர் கண் வந்தான் - (திருமாலின் நாபிக்) கமலத்தில் தோன்றியவனுன பிரமன், செயிர் ஒன்றும் உருவகை - (பகைவர்களால்) குற்றம் ஏதும் உண்டாகாதபடி, இந்திரற்கு என்று - தேவேந்திரர்க்கு என்று, நெடுமால் வயிரம் வரை கொண்டு - மிக உயர்ந்த வச்சிர மலையினைக்கொண்டு, செய்த - அமைத்த, உயர் வெம் சிலை - சிறந்த கொடிய வில்லாகும்; பண்டு - முன்னாளில், அவன் தன்னை ஓட்டி - அந்த இந்திரனை விரட்டி, துயரின் தலை வைத்து - (அவனைத்) துன்பத்திலிருத்தி, இவன் - இந்த இந்திரசித்து, கொண்டது - கைப்பற்றிக்கொண்டது: தோற்றம் ஈது - அந்த வில்வந்த வரலாறு இது ஆகும். ஆல்: அசை.

மலர்க்கண் வந்தான்: பிரமன்; இந்திரற்கென்று; என்று நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு. துயரின் தலை வைத்தல்: சிறைப்படுத்தி வருத்துதல்: இவன்: இந்திரசித்து, இந்திரசித்து போர்க்களம் அடைந்து அங்குத் தியில் ஓமம் செய்து, அக்கினியினின்று, பிரமாத்திரம் முதலியவற்றைப் பெற்றதாக முதனூல் கூறும். நல்ல வயிரக் குன்றைப் பிரமன் வில்லாக்கி இந்திரனுக்குக் கொடுத்ததைப் பறித்தான்.

பி - ம். 1. சிலை கொண்டவன்.

4. வைத்தவற், வைத்தவர்க்; தொல்லை நாளில். 16

1953. தோளிற் கணைப்புட்டிலு மிந்திரன் தோற்ற ஞான்றே
ஆளித் திறலன்னவன் கொண்டன ஆழி யேழும்
மாளப் புனல்வற்றினும் வாளி யருத வன்கண்
கூளிக் கொடுங்கூற்றினுக் காவதோர் கூடு போல்வ.

தோளில் கணை புட்டிலும் - புயங்களில் பிணிக்கப்பட்ட அம்பறாத் தூணிகளும், இந்திரன் தோற்ற ஞான்றே - இந்திரன் தோல்வியுற்ற அந்நாளிலேயே, ஆளிதிறல் அன்னவன் - யாளி போன்ற ஆற்றல் வாய்ந்த அந்த இந்திரசித்து, கொண்டன - (அவன் வசமிருந்து) கைப்பற்றினவாம்; (அவை) ஏழு ஆழியும் - எழுகடல்களும், மாள - இல்லையாக்குமாறு, புனல் வற்றினும் - (முழுவதும்; நீர் வறண்டாலும், வாளி அருத - அம்புகள் ஒழியப் பெறுதன, (மேலும்) வன்கண் கூளி - இரக்கமற்ற கொல்லும் தொழிலை யுடைய. கொடு கூற்றினுக்கு - கொடிய யமனுக்கு, ஆவது ஓர் - (உறைவதற்கு) அமைந்த ஒப்பற்ற, கூடு போல்வ - கூண்டு போன்றன.

கணைப்புட்டில்: 'கல்லும் சுமந்தேன் கணைப் புட்டிலும் கட்டமைந்த வில்லும்' (அயோத்தி. நகர்நீ: 138); ஆளி - பண்டை நாளில்இருந்த ஓர் விலங்கு; இப்பொழுது அது அருகிவிட்டது. பெருங் கோயில்களிலும் மடாலயங்களிலும் ஓவிய வடிவிற்றான் இதனை இப்பொழுது காணலாம். வன்கண்; 'வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே' (குறுந். 73): 'வன் கண் ஆடவர்; (குறுந். 274); கூளி - கொலைத்தொழிலுடையவன்; 'கூளியர் நண்பர் பூதகண வீரர் கொலைத்திறத்தோர்' (சூடா.); கூளி - பேயுமாம்; களங் கொள் கூளியொடு' (பட்டினப். 259); 'காளிக்குக் கூளி கூறியது' எனப்பரணி நூல்களில் வருதல் காண்க.

பி - ம். 1. தோற்றநாளே.
2. சொண்டனன், கொண்டனல்.
3. வன்கைக்.
4. கூளிக்கடுங் கூற்றினுக் கூறுவதோர்; கூடம். 17

1954. பல்லாயிர கோடி படைக்கலம் பண்டு தேவர்
எல்லாரு முனைத்தலை யாவரு மீந்த மேரு
வில்லாளன் கொடுத்த விரிஞ்ச னளித்த மெய்ம்மை
அல்லாற் புரியாதன யாவையும் ஆய்ந்து கொண்டான்.

பண்டு - முன்னாளில், தேவர் எல்லாரும் - எல்லாத் தேவர்களும் (எதிர்த்துப் பொருத), முனைதலை - யுத்த களத்தில், யாவரும் - (இவனிடம் தோல்வியுற்ற அந்த இமையவர்கள் பலரும்), ஈந்த - கொடுத்தனவும், மேரு வில்லாளன் கொடுத்த - மகா மேரு மலையை வில்லாகக் கொண்டவனான சிவபெருமான ஈந்தனவும், விரிஞ்சன் அளித்த - பிரமதேவன் தந்தருளினவும், மெய்ம்மை அல்லால் - (தங்கள்) உண்மையான கொலைத் தொழிலை யல்லாமல், புரியாதன (கொல்லாது வறிதாதலை அதுகாறும்) செய்யாதனவுமான, பல்லாயிரம் கோடி படை கலம் யாவையும் ஆய்ந்து கொண்டான் - கோடிக் கணக்கான எல்லாப் போர்க் கருவிகளையும் தெரிந்து கைக்கொண்டான்.

பல்லாயிரகோடி (யுந்த. 287); (யுந்த. மூலபலப். 191; மேருவில்லாளன்: சிவபெருமான்: இவன் மேருவை வில்லாகக் கொண்டது திரிபுரம் எரித்த காலத்து; (ஆரணிய. 139, 258, 458, 815, 905, 921, 999; கிட்கிந்நா. 351, 422, 530; சுந்நர. 139, 272, 350, 451, 982, யுந்த. 1236, 1246. இந்திரசித்திற்குப் பிரமன் வரமளித்தது; உத்நர. திக்விசயம்: 249, 250, தேவரையும் முனிவரையும் அச்சுறுத்திப் பெற்ற அம்புகள் என்பது முதலிரண்டடிகளிற் கண்டது.

பி - ம். 2. முனித்தலை.

3. வில்லாளர், வெம்மை, மேன்மை. 18

## இந்திரசித்து தனது தேரில் சேனை புடைசூழக்களம் புகுதல்

1955 நூருயிரம் யாளியி னேன்மை தெரிந்த சீயத்
தேருமவை யன்னவை யாயிரம் பூண்ட தெள்பு
மாருயோ ரிலங்கை நிகர்ப்பது வானு ளோரும்
தேருதது மற்றவ னேறிய தெய்வ மாத்தேர்.

அவன் ஏறிய தெய்வம் மாதேர் - அந்த மேகநாதன் ஏறின தெய்வத்தன்மை வாய்ந்த பெரிய தேரானது, நூறு ஆயிரம் யாளியின் நேரன்மை தெரிந்த சியத்து - ஓரிலக்ஷம் யாளிகளின் வன்மை தனித்தனி விளங்கப்பெற்ற, அன்னவை - அப்படிப்பட்ட, ஆயிரம் ஏறும் அலவ பூண்டது - ஆயிரம் ஆண் சிங்கங்கள்,

பூட்டப்பெற்றது ; மாருய் ஓர் இலங்கை நிகர்ப்பது - வேருக ஓர் இலங்கா நகரத்தை யொப்பானது ; வானுளோரும் தேருதது - தேவர்களாலும் இவ்வியல்பினது என அறியப் பெருதது ; மற்று என்ப ; அசைகள்.

நோன்மை வன்மை : 'உலகெலா நுழையு நோன்மையாள் ; 'உயர்வர வுட்கணேன்மையோ' (ஆரணிய. 229 : 1116) ; தெரிதல் - வெளிப்படுதல். சீயம் - சிங்கம் : 'புகலரு முழையுட் டுஞ்சும் பொங்குளைச் சீயம்' (சுந்தர. 5) ; மாருயொரிலங்கை நிகர்ப்பது ; (ஒப்பு) : 'உலகு கிளர்ந்தன்ன வுருகெழுவங்கம்' (அகம். 255) ; வானுளோரும் : உம்மை உயர்வு சிறப்பு. தெய்வத்தேர் ; 'தெய்வத் தேர் மேலேறினன்' (யுத்த. இந்திரசித்து. 13) ; இந்திரசித்தின் தேர் கோவேறு கழுதை பூண்டது என்று முதனூல் கூறும்.

பி - ம். 1. ஆளரி ; யாளியும் ; தோன்மை.

2, பூண்டதென்ன.

4. மற்றிவன். 19

1956. பொன்சென் றறியா வுவணத்தனிப் புள்ளி னுக்கும்
மின்சென் றறியா மழுவாளன் விடைக்கு மேனுட்
பின்சென்ற தல்லாற் பெருகுஞ்சிறப் புற்றபோதும்
முன்சென் றறியாதது மூன்றுல கத்தி னுள்ளும்.

(அத்தேர் நிறத்தினல்), பொன் சென்று அறியா - பொன்னும் உவமையாக நடத்தலை அறியப்பெருத, (பொன்னும் நிகர்க்கமாட்டாத திருமாலின் வாகனமான), உவணம் தனி புள்ளினுக்கும் - கருடன் என்ற ஒப்பற்ற பட்சிக்கும், மின் - மின்னலும், சென்று அறியா - உவமையாக நடந்து அறியாத, மழு ஆளன் - மழுவைத் தாங்கிய சிவபிரானுடைய, விடைக்கும் - வாகனமான இடபத்துக்கும், மேல் நாள் - முற்காலத்தில், பின் சென்றது அல்லால் - (அவைகள் புறங்காட்டியோட அவற்றை, விரட்டிக்கொண்டு தான் அவற்றின்) பின் சென்றதே அல்லாமல், பெருகும் சிறப்பு உற்ற போதும் - (அவை ஒப்பற்ற துணைவலி முதலிய) பெருஞ் சிறப்பினை எய்திய காலத்தும், மூன்று உலகத்தின் உள்ளும் - மூன்று புவனங்கள் உள்ளும், முன் சென்று அறியாதது - அவைகள் தன்பின் துரத்திவரத் தான் முன் சென்று அறியாதது.

இந்திரசித்தின் தேர், கருடன் இடபம் என்றவற்றைக் காட்டிலும் வன்மையும் விரைவும் வாய்ந்தது என்பது கூறப்பட்டது. இனி, கருடனுக்கும் இடபத்துக்கும் பின்சென்றுற் செல்லுமேயன்றி மற்று அவையும் தனக்கு முன்னே செல்லப்பெறுதது எனினுமாம். உவணம் - ஸுபர்ணன் என்ற வட சொல்லின் சிதைவு. அழகிய சிறகுகளையுடையவன் என்று பொருள்படும். வைணவ மரபில் பெரிய திருவடி எனப்படுபவன் இவன். பிறிதினவிற்சியணி.

பி - ம். 3. அல்லாததோர் பெருஞ், போரின்.

4. மூவுலகத்தின். 20

1957. ஏயாத் தனிபோர் வலிகாட்டிய விந்தி ரன்றன்
சாயாப் பெருஞ்சாய் கெடத்தாம்புக ளாற்ற டந்தோள்
போயார்த்தவன் வந்தனன் வந்தன னென்று பூசல்
பேயார்த் தெழுந்தாடு நெடுங்கொடி பெற்ற தம்மா.

(அத்தேர்) 'ஏயா-ஒப்பில்லாத, தனிபோர் வலி காட்டிய இந்திரன் தன் - சிறந்த போர்த்திறம் காட்டிப்பொருத இந்திரனுடைய, சாயா பெருசாய் கெட - (யார்க்கும்) தளராத மிக்க ஒளி அழியும்படி, போய் - எதிர்த்துப் பொன்னுலகு சென்று, தாம்புகளால் - கயிறுகளால், தடதோள் போய் ஆர்த்தவன் - பெரிய தோள்களைப் பிணித்த வீரன், 'வந்தனன் வந்தனன்-வந்தான் வந்தான்', என்று-என்று கூவும், பூசல் - பேராரவாரத்தையுடைய, பேய் ஆர்த்து எழுந்து ஆடு - பேய் ஆரவாரித்து எழுந்து கூத்தாடப்பெற்ற, நெடு கொடி பெற்றது - உயர்ந்த பெரிய கொடியைத் தன் அகம் கொண்டது. அம்மா: வியப்பிடைச்சொல்.

ஏய்தல் - ஒத்தல்; 'சேலேய் கண்ணியரும்' (திருவாய். 5; 1-8); சாயாப் பெருஞ்சாய்: தொடை முரண். சாய்: ஒளி. 'சாய் கொண்ட விம்மையும்' (திவ். திருவாய். 3 : 9 : 9); தாம்பு: 'மணித் தாம்பே, நாணே யகலகட' (தனிப்பா. கம்பன்); சாற்றுர வாரத்திற் றும்பறுத்துப் புறனின்ற' (திருவிளை. பழியஞ்சின. 37); 'வந்தனன் வந்தனன்' வீரம் பற்றிய அடுக்கு. 'வந்தனென் வந்தனென் என்ற வாசகம், இந்திர திசைமுத லெட்டும் கேட்டன' (கிட்கிந்தா. 244). மேகநாதன் இந்திரனைப் பாசத்தால் பிணித்தது; 'செய்வ தொன்றறியாது சிந்தை கலங்கி யிந்திர னின்றிடக், கய்யு மெய்யு

மகப்படத்தெறு கால பாசமிதா மெனும், வெய்யபாச முறப்பிணித் தனன் மேகநாதன் விளங்குசிர், அய்ய வெய்ய வரக்க ரானவர் ஆடினர் சுரர்வாடினர்' (உத்தர. திக்குவிசய. 240)ல் காண்க. நெடுங்கொடி : பதாகை; இந்திரசித்துக்குப் பேய்க் கொடியும் உண்டு; (யுத்த. 1957).

பி - ம். 2. பாம்புகளால்.

4. எழுந்தாட, எழுந்தாடுவ; பொற்கொடி; பெய்ததம்மா, பெற்றி யம்மா. 21

1958. செதுகைப் பெருந் தானவ ருடனெடுந் தேய்த்த நேமி
யதுகைத் திசையானையை யோட்டிய தென்ன லாமே
மதுகைத் தடந்தோள்வலி காட்டிய வான வேந்தன்
முதுகைத் தழும்பாக்கிய மொய்யொளி மொட்ட தம்மா.

(பின்னும் அத்தேர்), செதுகை பெரு தானவர் - கொல்லும் தொழிலை உடைய பெரிய அரக்கர்களை, உடனெடும் தேய்த்த நேமியது - உடம்புகளை (தரையிட்டுத்) தேய்த்த சக்கரங்களை யுடையது; மதுகை - வன்மை வாய்ந்த, தடதோள்வலி காட்டிய (தனது) பெரும் புயவன்மையைக் காட்டிய, வானவேந்தன் - விண் ணுலகின் இறைவன் ஆன இந்திரனுடைய, முதுகை தழும்பு ஆக்கிய - முதுகைப்புண் செய்து தழும்புறச் செய்ததும், மொய் ஒளி - அடர்ந்த ஒளியினை யுடையதுமான, மொட்டது - மொட்டு என்னும் உறுப்பினையுடையது; (இங்ஙனம் சிறப்புற்ற) அது - அத் தேர், கைதிசை யானையை ஓட்டியது என்னல் ஆமே - துதிக்கை யினையுடைய திசை வேழங்களை வென்று வெருட்டியது என்று பகர்தல் (அதற்கு ஒரு) சிறப்பைத் தரவல்லதா?

நேமியது - வகையுளி. தேர்க்குப்பல உறுப்புக்கள் உண்டு; நேமியது : அதன் ஆழியானது அசுரர்களை வென்றது; பிறிதோர் உறுப்பான மொட்டு இந்திரனையும் காயப்படுத்தியது. இங்ஙன மிருக்கத் திக்குயானைகளை வெருட்டியது ஒரு பெருஞ் செயலாகுமா? செதுகை : தொழிற் பெயர்; செதுகை : வயிரம் என்றும் சொல்வர். மொட்டு-தாமரை மலரின் வடிவாகச் செய்து, தேரின் முன்னிடத்து வைக்கப் படுவதோர் உறுப்பு: இதனைக் கொடிஞ்சி என்றும் மொழிவர்; 'நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்' (புறநா.

77); மற்றும் மதுரைக். 752, மனி. 4; 48; அகநா. 110; கலித். 85ம் காண்க. ஏ: எதிர்மறை. மதுகை: வலி. 'வனைகழல் வரிசிலை மதுகை மைந்தரை' (ஆரணிய. 187); 'அறியுநர் கொல்லோவனை மதுகையர் கொல்' (குறுந். 290); முதுகைத் தழும்பாக்கியது என்பது கொண்டு இந்திரனுடைய முழுத் தோல்வியும் புலனும். மொட்டு: கடைந்த குமிழ் என்பது ஐயர் குறிப்பு.

பி-ம். 1. தானவன்; தன்னெடுந், வைரொடுந்; செய்த.
3. பெருந்தோள்.
4. மெய்யொளி; மொட்டிதம்மா. 22

1959. அத்தேரினை யேறிய தொப்பன வாயி ரந்தேர்
ஒத்தேய்வன சேமம தாய்வர வுள்ளம் வெம்போர்ப்
பித்தேறின னென்ன நடந்தனன் பின்ப லான்மற்
றெத்தே வரையும் முகங்கண் டறியாத விட்டான்.

எ தேவரையும் - தேவர்கள் அனைவரையும் (தோற்குமாறு செய்து), பின்பு அலால் - அவர்களின் முதுகுப்புறத்தை(ப் பார்த்ததே) அன்றி, முகம் கண்டு அறியாத - முகம் காட்டிப் போர் செய்யக் கண்டிராத, ஈட்டான் - வலிமை பெற்றவனை இந்திரசித்து, அ தேரினை ஏறி - அந்தத் தேரின்மிசை ஏறி, அது ஒப்பன ஒத்து ஏய்வன - அந்த தேரினை ஒத்துப்பொருந்தினவான, ஆயிரம் தேர்-ஆயிரம் இரதங்கள், சேமமது ஆய்வர-பாதுகாவலாய் உடன் தொடர, 'உள்ளம் - மனத்தில், வெம்போர் பித்து ஏறினன்-கொடிய யுத்தவெறி பிடித்தவன்,' என்ன-என்று, (பார்த்தோர் கூறும்படி), நடந்தனன் - போர்க்குச் சென்றான்.

சேமத்தேர்: சேமவில் என்ற இவைகள், தொழிற்படும் தேர் முறியின், அதற்குப் பிரதியாக உதவும் தேரும் வில்லும். 'அத்தனை தேர் சேமத்தன' (யுத்த. 1679); இறுதியடிக்கு (ஒப்பு): 'புள்ளினுக்கும்.........விடைக்கும் மேனாட், பின்சென்றதல்லாற் பெருகுஞ்சிறப் புற்ற போதும், முன் சென் றறியாதது. (யுத்த. 1955). ஈடு; 'ஒருகரி யிடழித் துரித்தனை' (தேவா. 142, வரி 13).

பி-ம். 2. ஒத்தேறின சேமம் வரத்தனதுள்ளம்.
3. பின்பலாமற்று.
4. முகங்கண்டறியாது விட்டான். 23

1960. அன்றுஉடனே போயின தானை அளந்து கூற
என்றால் அரிது ஏனும் இயம்பு வான்மீகன் என்னும்
நன்னான் மறையான் அது நாற்பது வெள்ளம் என்னச்
சொன்னான் பிறர் யார் அஃது உணர்ந்து தொகுக்க வல்லார்.

அன்றுஉடனே போயின - (உதவியாக), அந்த இந்திரசித்துடன் சென்ற, தானை அளந்து கூற - படையின் அளவினை (இத்துணை) என்று கூற, என்றால் அரிது ஏனும் -(எளியவனாகிய) என்னால் இயலாதாயினும், இயம்பு - (யாவராலும்) புகழ்ந்து சொல்லப்படுகின்ற, வான்மீகன் என்னும் - வான்மீகி என்னப்படுகின்ற, நல் நான் மறையான் - சிறந்த நான்கு வேதங்களையும் அறிந்த முனிவரன், 'அது - அது, நாற்பது வெள்ளம் - நாற்பது வெள்ளம்', என்ன - என்று, சொன்னான் - பகர்ந்தான்; (ஆதலின் நானும் அதனையே ஏற்றுக் கூறுவேன்), பிறர் யார் அஃது உணர்ந்து தொகுக்க வல்லார் - பிறர் எவர்தாம் அஃது (இவ்வளவு என்று) தெரிந்து திரட்டிக் கூறும் வன்மையுடையவர்?

முதனூல் ஆசிரியராகிய வான்மீக முனிவர் திரிகால ஞானியாகலின் நிகழ்ச்சிகளை ஞானக்கண்ணாற் கண்டு கூறவல்லவர்; எனவே அதில் ஓர் குறைவுமிராது. அதனையே நான் ஏற்பேன் என்று கூறியதிலிருந்து கம்பநாடர்க்கு முதனூல் ஆசிரியரிடம் இருந்த நன்மதிப்பு வெளியாகும், பாயிரத்திலேயே 'மூங்கையான் பேச லுற்றான் என்ன யான் மொழிய லுற்றேன்' என்று கூறியது காண்க. வான்மீகன்: இவன் முதலில் பிருகு முனிவர் வழிவந்து, ஓர் குறவனிதையைக் காதலித்து மக்களைப்பெற்று, வறுமைத் தொல்லையால் ஆறலைத்துப் பிழைத்து வருங்காலத்து, ஓர் நாள் இருடிகள் எழுவரின் பொருளைப்பறி செய்ய, அவர்கள் 'பறித்த இப்பொருள்களை இங்கேயே வைத்து உன் மனைவிமக்களிடம் சென்று, 'நான் உங்களையே பாதுகாக்கின்றேன் நான் செய்யும் பாவத்தில் உங்கட்குப் பங்குண்டா என்று கேட்டுவா' என்றார்கள். அவன் அவர் சொற்கிணங்கி வீடு சென்று பாவத்தில் தமக்குப் பங்கில்லை என்று அவர்கள் சொல்லக் கேட்டு, மயங்கி இருடிகளைச் சரண்புக்க அளவில், அந்த முனிவரர் இவனுக்கு இராம நாமத்தை உபதேசித்துச் சென்றனர். இவன்

வெகுகாலம் தவம் செய்ய, இவன்மீது புற்று மூடிக்கொண்டது; பின்னர் ஒரு சமயம் பெருமழை பெய்து அந்தப்புற்றுக் கரைய அதி லிருந்து வெளிப்பட்டான் என்பது வரலாறு. வன்மீகம்; புற்று: அதினின்று வெளிவந்தமை பற்றி வான்மீகன் எனப்பட்டான். தத்திதாந்த நாமம். நாற்பது வெள்ளம் என்பது இப்பொழுது வழக்கின்கண் உள்ள வான்மீகத்தில் இல்லை.

பி - ம். 1. போகிய; அறிந்து.
2. வன்மீகனென்பான்.
3. அன்னுளறைவானது.
4. சொன்னூர்; பிறர் யாவர். 24

1961. தூமக்க ணரக்கனுந் தொல்லமர் யார்க்குந் தோலா
மாபக்கனு மந்நெடுந் தேர்மணி யாழி காக்கத்
தாமக் குடைமீ துயரப் பெருஞ்சங்கம் விம்ம
நாமக் கடற்பல்லிய நாற்கடன் மேலு மார்ப்ப.

தூமம் கண் அரக்கனும் - புகைநிறக் கண்ணனும், தொல் - பழைய, அமர் - போரில், யார்க்கும் தோலா - எவரிடத்திலும் தோற்காத, மாபக்கனும் - பெரும்பக்கனும், அ நெடு தேர் மணி ஆழி காக்க - அந்த; (தான் ஏறிய) தேரினுடைய அழகிய சக்கரங் களைப் பாதுகாவல் செய்யவும், தாமம் குடை மீது உயர - ஒளிமிக்க வெண்குடை மேலே உயர்ந்து விளங்கவும், பெரு சங்கம் விம்ம - பெரிய சங்கு வாத்தியங்கள் முழங்கவும், நாமம் கடல் பல்இயம் - (பிறர்க்குத் தமது பேரொலியால்) அச்சத்தைச் செய்கின்ற பல வகை இசைக்கருவிகளின் தொகுதிகள், நால்கடல் மேலும் ஆர்ப்ப - நாற்றிசைக் கண் உள்ள கடல்களிலும் அதிகமான ஒலி விளைக்கவும்; சென்றனன் என்ற அடுத்த கவியுடன் தொடர்ந்து முடியும்.

இராவணன் முதலில் தோல்வியுறுவதற்கு முன்னரே, தூமி ராட்சன் அநுமனாலும், மகாபார்சுவன் என்ற பெரும்பக்கன் இடப னாலும் கொல்லப்பட்டான் என்று முதனூல் கூறும். பல்வகை இயங்கள்; தோற் கருவி, துளைக் கருவி, கஞ்சக் கருவி, நரப்புக் கருவி என்க. தூமக்கண் அரக்கன்; தூமிராக்ஷன் என்ற வட சொல்லின் தமிழாக்கம்: மகாபார்சுவன் என்ற வடசொல் பெரும் பக்கன் என நின்றது. 'தூமக்கண்ணனும் அநுமனும் முறை

முறை தொடர்ந்தார்' (யுத்த. படைத்தலைவர். 49); மற்றும் யுத்த. 501 குறிப்புக் காண்க; பெரும்பக்கன்: யுத்த. 497 காண்க. அந் நெடுந்தேர்: முன்னர் வருணிக்கப்பட்ட மேகநாதன் தேர். தாமம் - ஒளி; தாமகூடம்; (கிட்கிந்தா. 804).

பி - ம். 1. அமரர்க்குந் தோலான்.
2. காப்பத்.
3. சங்கமார்ப்ப.
4. நாமப்பெரும், நாமக்கடும் நாற்றிசை, போலும். 25

1962. தேரா யிரமா யிரகோடி தன்மாடு செல்லப்
போரானை புறத்தி னவற்றி விரட்டி போதத்
தாரார் புரவிக்கடல் பின்செலத் தானை வீரப்
பேராழி முகஞ்செலச் சென்றனன் பேர்ச்சி யில்லான்.

ஆயிரம் ஆயிரம் கோடி தேர்-ஆயிரத்தாற் பெருக்கிய ஆயிரம் கோடி என்னும் எண்ணளவான தேர்கள், தன்மாடு-தன்பக்கத்தே (உள் வரிசையாகச் சூழ்ந்து, செல்ல - வரவும், அவற்றின் இரட்டி - அத்தேர்த் தொகையினும் இருமடங்கான, போர் ஆனை - போர் வேழங்கள், புறத்தின - அவ்வுள் வரிசையின் புறத்தே, போத - வரவும், தார் ஆர் புரவி கடல் - மாலை அணிந்த குதிரைத் தொகுதி கள், பின்செல-பின்னே வரவும், தானை வீரம் பேராழி - காலாட் படையாகிய பெருந்திரள், முகம்செல - முன்னே வரவும்: பேர்ச்சி இல்லான் - நிலை பெயராத இந்திரசித்து, சென்றனன் - போனான்.

கடல்: பெருந் தொகுதிக்கு வந்தது; 'இவுளிக்கடல்' (சீவக. 28); என்ற இடத்துப்போல. மாடு - பக்கம்; 'ஊர்தரு குரங்கின் மாடே' (கிட்கிந்தா. 309): 'மாடுபற்றி யிடங்கர் வலித்திட' (கிட்கிந்தா. 338); முகம் செல - முன்பு செல்ல; முகம் - முன்பு; 'ஈன்றுள் முகத்தேயு மின்னாதாம்' (குறள். 923). பேர்ச்சி யில்லான் - போர்க்குச் சென்று மீளாதவன் என்ற அமங்கலப் பொருள் தருதலும் காண்க.

பி - ம். 2. இரட்டி போகத்.
3. முன்செலத்; தானைவீரர். 26

வேறு

‘இராவணனே, இந்திரசித்தோ’ பொர வரக்கூடுமென்று
போர்க்களத்தில் இலக்குமணன் இருத்தல்

1963. நின்றன னிலக்குவன் களத்தை நீங்கலன்
பொன்றின னிராவணன் புதல்வன் போர்க்கினி
அன்றவ னல்லனே லமரர் வேந்தனை
வென்றவன் வருமென விரும்புஞ் சிந்தையான்.

இராவணன் புதல்வன் பொன்றினன் - இராவணன் மகனான அதிகாயன் மரித்தான்; இனி - இனிமேல், அன்று - மாறுபட்டு நின்ற, அவன் - அவ்விராவணன் அல்லனேல் - அல்லது, அமரர் வேந்தனை வென்றவன் போர்க்கு வரும்-தேவர்கள் கோனை வெற்றி கொண்டவன் ஆன இந்திரசித்து போர்க்கு வருவான், என-என்று நினைந்து, விரும்பும் சிந்தையான் - (அவர்கள் வரவினை) ஆவலுடன் எதிர் பார்க்கும் உள்ளத்தனாய், களத்தை நீங்கலன் - போர்க்களத்தினை விடுத்துச் செல்லாமலே, இலக்குவன் நின்றனன் - இளைய பெருமாள் நின்றான்.

அன்று அவன்: அன்றுதலை மேற்கொண்ட அவன் என்க. அன்றுதல்: பகைத்தல்; ‘ஆரறத்தினோடன்றி நின்றார்’ (ஆரணிய. 139); ‘அன்றியவாணன்’ (பெரியதிரு. 4, 3, 8); அன்றவன்: வினைத்தொகை. விரும்பும் சிந்தையான்; ‘போரெனப் புகலும் புனைகழல் மறவர்’ (புறநா. 31); ‘போரென்ன வீங்கும் பொருப் பன்ன பொலன்கொ டிண்டோள்’ (பால. பூக்கொய்: 18).

‘வருபவன் யார்?’ என்று இலக்குமணன் வீடணனைக்
கேட்க, அவன் ‘இந்திரசித்து’ என்றும், துணைவலி
கொண்டே பொரவேண்டும் என்று அறிவித்தல்

1964. யாரிவன் வருபவ னியம்பு வாயென
வீரவெந் தொழிலினன் வினவ வீடணன்
ஆரிய விவனிக லமரர் வேந்தனைப்
போர்கடந் தவனின்று வலிதுபோ ரென்றான்.

(அப்பொழுது) வீரம் வெம் தொழிலினன் - வீரம் செறிந்த கொடிய தொழிலை ஆற்றவல்ல இலக்குவன், (வீடணனைப் பார்த்து), 'வருபவன் இவன், யார் - (இதோ) வருகின்ற இவன் யாவன்? இயம்புவாய் - சொல்வாயாக', என - என்று, வினவ - கேட்க, வீடணன் - வீடணன் (இலக்குவனை நோக்கி), 'ஆரிய - சிரேட்டனே! இவன் - இவன், இகல் அமரர் வேந்தனை - போர் வலிமிக்க தேவர்கோனை, போர் கடந்தவன் - போரில் வெற்றி கொண்டவனான இந்திரசித்து; (இவன் போர்க்கு வருதலின்), இன்று போர் வலிது - இன்று யுத்தம் மும்முரமாக இருக்கும்' என்றான் - என்று விடையிறுத்தான்.

ஆரியன் - சிரேட்டன்; (நிகண்டு) இகல்: போர்; 'இகல்மிக நவின்று' (பரி. 6, 28).

பி - ம். 1. ஆரிவன், யாரிவன்; வருமவன்.

2. வெந்திறலினன்; விளம்ப.

3. இவன் கோலாமமர.

4. கடந்தவனிவன்; புரிந்துயர்த்தவன். 28

1965. எண்ணின துணர்த்துவ துளதொன் றெம்பிரான்
கண்ணகன் பெரும்படைத் தலைவர் காத்திட
நண்ணின துணையொடு பொருதல் நன்றிது
திண்ணிதி னுணர்தியாற் றெளியுஞ் சிந்தையால்.

(வீடணன் இலக்குவனை நோக்கி) 'எம்பிரான் - எமது தலைவனே!, எண்ணினது ஒன்று - நான் நினைத்தது ஒன்று உணர்த்துவது உளது - (உன்னிடம்) அறிவிக்க வேண்டுவது இருக்கின்றது, (அது யாது எனில்), கண் அகல் - இடமகன்ற, பெரு படை துணைவர் - பெரிய சேனையின் தலைவர்களாகிய போர்த்துணைவர்கள், காத்திட - காவல்புரிய, நண்ணின துணையொடு - அணுகிய அத்துணை வலிமையுடன், (கூடிய அந்த இராவணியுடன்), பொருதல் - போர் புரிதல், நன்று - நல்லது; இது - இதனை,

தெளியும் சிந்தையால் நின்னினின் உணர்தி - இதனையும் ஆராய்ந்து தெளியும் உள்ளம் கொண்டு உறுதியாகத் தெரிந்து கொள்வாயாக.' ஆல்: அசை.

கண்ணகல்: 'கண்ணகன் றூமணி பெறூஉ நாடன்' (குறுந். 379); 'கழுநீர் பொதிந்த கண்ணகன் பொய்கை' (மதுரைக். 171); 'கைக்கசடிருந்த வென் கண்ணகன் தடாரி' (பொருந. 70); துணையொடு பொருதல். 'துணைவலியுந் தூக்கிச் செயல்' (குறள். 471); நண்ணின துணை. 'நண்ணின மனிசரை நண்பு பூண்டனை' (யுத்த. 311); தெளியும் சிந்தை. 'தெளிவுடைச் செம்மல்' (ஆரணிய. மாரிசன். 232).

பி - ம். 1. எண்ணினன், எண்ணியது, துளதென்று.

2. காத்துடன், நந்துணை, துணைபொடும்.

3. பொருகை நன்றெனத், பொருதல் நன்றிது.

4. நின்னிய துணர்த்தினன், நின்னென வுணர்தியால்; தெரியுஞ் சிந்தையான், செய்கையான். 29

1966. மாருதி சாம்பவன் வான ரேந்திரன்
தாரைசேய் நீலனென் றினைய தன்மையார்
வீரர்வந் துடனுற விமல நீநெடும்
போர்செயத் தகுதியாற் புகழின் பூணினாய்.

'விமல - பரிசுத்தமானவனே!, புகழின் பூணினாய் - புகழையே அணியாக மேற்கொண்டவனே!, மாருதி சாம்பவன் வானர இந்திரன் தாரைசேய் நிலன் என்று இனைய தன்மையார் - அநுமனும், சாம்பவனும், குரங்கரசனான சுக்கிரீவனும், தாரையின் புதல்வனான அங்கதனும், நீலனும் என்ற இவர்கள்போன்ற தன்மையை உடையவரான, வீரர் வந்து - வீரர்கள் வந்து, உடன் உற - உன்னுடன் (உதவியாகப்) பொருந்த, நீ நெடு போர் செய தகுதி - நீ நீண்ட போர்புரிதற்குத் தகுதி. ஆல்: அசை

மாருதி - மருத்தின் மகன், தத்திதாந்த நாமம். (கிட்கிந்தா. 58) உரைக்குறிப்புக் காண்க. இவனைக் 'காலின் மதலை' (கிட்கிந்தா. 45,

71, 92, 157); சமீரணன் மகன். (கிட்கிந்நா. 140); மருத்துமகன். (கிட்கிந்நா. 852); என்றும் கூறுதல் காண்க.

பி - ம். 2. தன்மையாம். 30

1967. பல்பதி னுயிரந் தேவர் பக்கமா
எல்லையில் சேனைகொண் டெதிர்ந்த விந்திரன்
ஒல்லையி னுடைந்தன னுயிர்கொண் டுய்ந்துளான்
மல்லலந் தோளினு யமுதின் வன்மையால்.

'மல்லல் அம் தோளினுய் - செழித்துயர்ந்த அழகிய தோளை யுடையவனே! பல் பதினுயிரம் தேவர் - பல பதினுயிரக்கணக்கான அமரர்கள், பக்கமா - (தனக்குப்) பக்கபலமாயிருக்க, எல்லை இல் - அளவற்ற, சேனை கொண்டு - சேனையை உடன்கொண்டு, எதிர்ந்த (இவ்விந்திரசித்துடன்) எதிர்த்துப் போர் செய்த, இந்திரன் - இந்திரன், (இவன்முன்) ஒல்லையின் - விரைவில், உடைந்தனன் - தோற்றவனுகி, அமுதின் வன்மையால் - (தாம் முன்பு உட்கொண்ட) தேவாமிர்தத்தின் பலத்தினுலேயே, உயிர்கொண்டு உய்ந்துளான் - உயிருடன் தப்பிப் பிழைத்தான்,

இவ்வாறு அமுதம் பருகாதிருப்பின் இந்திரசித்தால் மரணம் எய்தியிருப்பன் எனறபடி. இங்ஙனம் வீடணன் கூறியது உதவியின் நலத்தை வற்புறுத்த என்க. பக்கமாக என்பது ஈறு குறைந்தது.

பி - ம். 1. பக்கமார், பண்டொர் நாள்.
2. தானைகொண்டு, எழுந்த.
3. உய்ந்தனன்.
4. மல்லெனும், வரத்தின் வன்மையால். 31

1968. இனியவை மறையுமோ விந்தி ரன்புயப்
பனிவரை யுளநெடும் பாசப் பஃறழும்
பனுமனைப் பிணித்துள னை போதிவன்
தனுமறை வித்தகஞ் சாற்றற் பாலதோ.

'இந்திரன் புயம் பனிவரை உள - இந்திரனுடைய தோள்களாகிய இமயமலையில் பொருந்தியுள்ள, நெடு பாசம் பல் தழும்பு அவை -(இவன் பிணித்த நீண்ட மாயைக்) கயிற்றினாலாய அந்தப் பலவாகிய தழும்புகள், இனி மறையுமோ - இனி மறைவெய்துமோ? (அன்றியும்), அநுமனை - அநுமனையும், பிணித்துளன் ஆன போது - பிரமாத்திரத்தினால் கட்டினவனாயிருக்கையில் (கட்டினதால்), இவன் - இவ்விந்திரசித்தினுடைய, தனுமறை வித்தகம் சாற்றல்பாலதோ - வில் வேதப் பயிற்சியில் உள்ள திறமை சொல்லும் தன்மையுள்ளதோ?' ஓ : வினா.

வீடணன் இந்திரசித்தின் வன்மையை இலக்குவற்கு விளக்க, அவன் வானுலகில் இந்திரனை வென்றதையும், மண்ணுலகில் அநுமனை வென்றதையும் கூறினன் என்க. முன்னது உத்தர காண்டத்திலும் பின்னது சுந்தரகாண்டத்திலும் முறையே காண்க. அநுமன் : பெயர்க்காரணம். (கிட்கிந்தா. 58); உரைக் குறிப்பில் காண்க. வித்தகம் - சமர்த்து, திறம். 'வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப' (பால. கார்முக. 19); 'பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்க்கரிய வித்தகன்' (திருவாய். 1:3:1); தனுமறை : உபவேதம், நான்கனுள் ஒன்று. ஏனையவை : ஆயுர்வேதம், காந்தர்வ வேதம், தந்திர வேதம் என்ப. இந்திரனைப் பாசத்தாற் பிணித்தது (யுத்த. 2162).

பி - ம். 1. இனியது மறையுமே.

2. வரைவன்னெடும், வரையன்னெடும், வரையின்னெடும்; பாசத்தாலுறை, பாசத்தார்ந்தடல், பாசத்தாலுற.

3. ஆனபோதவன்.

4. தனுமுறை; தடுக்கற்பாலதோ, நவிக்கற்பாலதோ. 32

## அநுமன் அங்கு வருதல்

1969. என்றவ னிறைஞ்சினன் இளைய வள்ளலும்
நன்றெனை மொழிதலும் நணுகி னனரோ
வன்றிறன் மாருதி யிலங்கைக் கோமகன்
சென்றன னிவன்மே லென்னுஞ் சிந்தையான்.

என்று - என்று பகர்ந்து, அவன் இறைஞ்சினன் - அவ் விடணன் (இலக்குவனை) வணங்கினன்; இளைய வள்ளலும் - இலக்குவனும், 'நன்று - நல்லது', என மொழிதலும் - என்று கூறி இயைதலும், வல் திறல் மாருதி - கொடிய வன்மைவாய்ந்த அநுமன், 'இலங்கை கோமகன் - இலங்கையரசனான இராவண னுடைய மகனான இந்திரசித்து, இளவல் மேல் சென்றனன் - இளையபெருமாளுடன் (போர்புரியச்) சென்றான்', என்னும் சிந்தை யான் - என்னும் கவலைகொண்டவனாய், நணுகினான் - அங்கு வந்தடைந்தான். அரோ - ஈற்றசை.

சிந்தை: சிந்தா என்னும் வடசொல் ஐயீறு பெற்றது. மேற்செல்லுதல் - பகைத்தெழுதல்; 'வட்கார்மேற் செல்லுதல் வஞ்சியாம்'. இளவல்: அல் பெயர்விகுதி. தாராளமான மனப் பான்மையுடன் வீடணன் உரையைக்கேட்டு மகிழ்ந்ததுபற்றி வள்ளல் எனப்பட்டான் இலக்குவன். அநுமன் வந்ததன் காரணம் யுத்த. 1970, 2036 காண்க. 1964–1968 வீடணன் கூற்று, இலக்கு வற்குக் கூறியது.

பி - ம். 1. இறைஞ்சலும், இயம்பலும்.

3. அரக்கன்; கோன்மகன். 33

1970 கூற்றமுங் கட்புலம் புதைப்பக் கோத்தெழு
தோற்றமு மிராவணி துணிபும் நோக்குறு
மேற்றிசை வாயிலை விட்டு வெங்கடுங்
காற்றென வனுகினன் கடிதின் காக்கவே.

கூற்றமும் - யமனும், கண் புலம் புதைப்ப - (பயந்து) விழி களைப் பொத்திக்கொள்ளும்படி, கோத்து - படைகளைக் கூட்டிக் கொண்டு, எழு - எழுகின்ற, இராவணி துணிபும் - இராவணன் புதல்வனான இந்திரசித்தின் மனத்துணிவையும், தோற்றமும் - காட்சியினையும், நோக்குறு - கண்ணுற்று; (அநுமன்), மேல் திசை வாயிலை விட்டு - தான் இருந்த மேலைத்திசை வாயிலை விடுத்து, வெம் கடு காற்று என - கொடிய காற்றுப்போன்று, கடிதின் காக்க

அணுகினன் - விரைந்துவந்து காக்கும்பொருட்டு (இலக்குவன்) பக்கல் அடைந்தான். ஏ - அசை.

இராவணி : யுத்த. 1948 உரைக்குறிப்புப் பார்க்க. கட்புலம் புதைப்ப : 'கண்புதைத் திரங்கி னல்லால்' (சீவக. 2616); 'நாயகன் கண்ணயப்பா ருயகி புதைப்ப' (சிவ. சித்தி. 2 : 52). நோக்குறு : செய்யா என்னும் வாய்பாடு.

பி - ம். 1. தோற்றமும்.

3. கீழ்த்திசை விட்டு.

4. அணுகினர் ; வந்தரோ. 34

### சுக்கிரீவன் ஆதியர் இலக்குவனுக்குத் துணையாதல்

1971. அங்கதன் முன்னரே யாண்டை யானயல்
துங்கவன் தோளினு ரெவருஞ் சுற்றினர்
செங்கதி ரோன்மகன் முன்பு சென்றனன்
சங்கநீர்க் கடலெனத் தழீஇய தானையே.

அங்கதன் - அங்கதன், முன்னரே - (அநுமன் அணுகுவதன்) முன்பே, ஆண்மையான் அயல் - வீரம் செறிந்தவனான அந்த இலக்குவன் அருகிலேயே வந்து இருந்தான் ; துங்கம் வல் தோளினர் எவரும் - உயர்ந்த வலிய தோள்களையுடைய வானர வீரர்கள் அனைவரும், சுற்றினர் - இலக்குவனைச் சூழ்ந்து நின்றனர்; செங்கதிரோன் மகன் - சுக்கிரீவன், முன்பு சென்றனன் - முன்னர்ச் சென்றான் ; சங்கம் நீர் கடல் என தழீஇய தானை - சங்குகளை யுடைய நீர்நிறைந்த கடல்போன்ற படையும் தழுவி உடன் சென்றது.

ஆண்மையான் - இலக்குவன். சங்க நீர்க் கடல் : சங்கம் ஒலி பற்றியும் வெண்ணிறம்பற்றியும் வானரங்கட்கு உவமை. கடல் : பெருந்திரளுக்கு என்க.

பி - ம். 1. முன்னதா யாண்ட சேனையிற் ; ஆண்மை வீரர்கள்.

2. துங்கவெந் தொழிலினர் வந்து சுற்றினர் ; தானையான். 35

## இருதிறத்துச் சேனைகளின் தோற்றம்

1972. இருதிரைப் பெருங்கட லிரண்டு திக்கினும்
பொருதொழில் வேட்டெழுந் தார்த்துப் பொங்கின
வருவன போல்வன மனத்தி னுற்சினம்
திருகின வெதிரெதிர் செல்லுஞ் சேனையே.

சினத்தினல் - கோபத்தால், மனம் திருகின - உள்ளம் மாறு பட்டனவாய், எதிர் எதிர் செல்லும் சேனை - (ஒன்றற்கொன்று) எதிர் எதிராகச் செல்கின்ற அரக்கர் வானர சேனைகளும், திரை - அலைகளை யுடைய, இரு பெரு கடல் - இரண்டு பெரிய கடல்கள், பொரு தொழில் வேட்டு எழுந்து - போர்புரியும் தொழிலை விழைந்து ஊக் கத்துடன் கிளம்பி, இரண்டு திக்கினும் - இரண்டு திசைகளில் இருந்தும், ஆர்த்து பொங்கின வருவன போல்வன - ஆர்ப்பரித்துப் பொங்கி வருவனவற்றை ஒத்தன. ஏ - அசை.

சினத்தினல் மனம் திருகின என்று உருபு பிரித்துக் கூறப் பெற்றது; 'திருகுவெஞ் சினத்தன' (யுத்த. 536). மனத்தினல் என்பது உருபு மயக்கம்; இல்பொருளுவமை. எதிரெதிராகச் செல் லும் சேனையாதலின் எதிரெதிராக அமைந்த திசைகளைக் கூறினர்.

பி - ம். 1. திக்கென.
2. வேட்டுவந்து; பொங்கியே.
3. போன்றன.
4. தானையே.



## தேவர்கள் போர் காணுதற்கு வானத்தில் வந்து திரளுதல்

1973. கண்ணினுன் மனத்தினுற் கருத்தினுற் றெரிந்
தெண்ணினுற் பெறுபய னெய்து மின்றென
நண்ணின ரிமையவர் நங்கை மாரொடும்
விண்ணின துறைவிடம் வெறுமை கூரவே.

இமையவர் - வானவர்கள், 'கருத்தினல் தெரிந்து எண்ணி னல் - மனம் ஊன்றி ஆலோசித்து உணருமிடத்து, கண்ணினல் மனத்தினல் பெறுபயன் - கண் பெற்றதனாலும், மனம் உண்மை

யாலும் பெறுவதற்குரிய பயன், இன்று எய்தும் - இன்றைக்குக் கைகூடும்', என - என்று எண்ணியும் சொல்லியும், விண்ணின் நாடு உறைவிடம் வெறுமை கூர - சுவர்க்க புவனமாகிய தாங்கள் வதியும் இடம் காலியாகுமாறு, (அதனை யாவரும் விடுத்து), நங்கைமாரொடும் - (தத்தம்) மனைவிமாருடனே, நண்ணினர் -(போர்க் களம் காண) விண்ணில் வந்து நெருங்கினார்கள். ஏ : அசை.

கண்ணும் மனமும் பெற்ற பயன் அவற்றால் கண்டும் மகிழ்ந்தும் நிற்றல். வெறுமை கூரல் - வறிதாதல். தெரிந்து எண்ணிணாய் : எண்ணித் தெரிந்தாய் என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. பெரும் போர்களைக் காணத் தேவர்கள் வானிற் கூடுவர் என்று கூறுவது கவிமரபு; 'ஈச னுன்முக னென்றிவர் முதலிய விமையோர், பூசல் காணிய வந்தன ரந்தரம் புகுந்தார்' (யுத்த. 1178); 'இராமன்றம்பிநி யிராவணன்றம்பிநா னிருவேம், பொரா நின்றேமமுது காணிய வந்தனர் புலவோர்' (யுத்த. 1438). 'மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்பன அந்தக்கரணங்கள். மனம் சஞ்சலம் : கருத்து நிச்சயம்; தேவர் தங்களூர் பாழ்கிடக்கும்படி இளைய பெருமாளின் போரைச் சேவிக்க வந்தார்; 'மாறனடியை மன நினைப்பப் புந்தியதை, விருடனே யந்தரம் வீடருளும்—மாறெனவே யந்தமுற நிச்சயிக்க வாங்கார மாங்கேகச், சிந்தைமகிழ்ந் தின்ப முறுந்தேய்ந்து' என்பது பழையவுரை.

பி - ம். 2. பெறும்பயன்.
3. விண்ணவர் நங்கைமார்.

37

## சேனைகளின் ஆரவாரம்

1974. ஒத்திரு தானையு முடற்ற வுற்றுழி
அத்தனை வீரரு மார்த்த வவ்வொலி
நத்தொலி முரசொலி நடுக்க லாற்றலை
பொத்தினர் செவிகளைப் புரந்த ராதியர்.

இரு தானையும் - இரு திறத்துப்படைகளும், ஒத்து உடற்ற உற்றுழி - (தம்மில்) இயைந்து, போர்புரிய நேர்ந்தபோது, அத்தனை

வீரரும் - (இருதரப்பிலும் உள்ள) அவ்வளவு வீரர்களும், ஆர்த்த அவ்ஒலி - ஆரவாரித்தலின் எழுந்த அந்தப் பேரொலியும், நத்து ஒலி - சங்கத்தின் ஓசையும், முரசு ஒலி - வீரமுரசின் ஒலியும், நடுக்கலால் - நடுங்கச் செய்தலினால், புரந்தர ஆதியர் - இந்திரன் முதலான தேவர்கள், செவிகளை தலைபொத்தினர் - (தங்கள் காதுகளை (க் கரத்தினால்) மூடிக்கொண்டனர்.

நத்து - சங்கு; (சூடா): 'நத்தின் வயிற்றில் முத்துப் பிறக்கும்' என்ற பழமொழி காண்க. 'அஞ்சுவணத்தின் முத்து' (சுந்தர. 174); 'வால் நந்து செம்மணி சிந்த: (சுந்தர. 725); தலை: தமிழ் உபசர்க்கம். செவி பொத்துதல்; 'போதத் தன்செவித் தொளை யிருகைகளாற் பொத்தி' (யுத்த. 151); (ஒப்பு): 'செவிகளைத் தளிர்க் கையாலே சிக்குறச் சேமம் செய்தாள்' (ஆரணிய. 873); புரந்தர + ஆதியர்: வடமொழி தீர்க்கசந்தி.

பி - ம். 2. ஆர்க்கும், ஆர்கலி.
3. நடுக்கலாற்செவி.
4. பொத்தின ரிமையவர்; செவித்தொளை; புரந்தராதியர். 38

1975. எற்றுமின் பற்றுமி னெறிமி னெய்ம்மினென்
றுற்றன வுற்றன வுரைக்கு மோதையும்
முற்றுறு கடையுகத் திடியின் மும்மடி
பெற்றன பிறந்தன சிலையின் பேரொலி.

'எற்றுமின் - அடியுங்கள், பற்றுமின் - பிடியுங்கள், எறியுமின் - (ஆயுதங்களை) வீசுங்கள், எய்ம்மின் - (அம்புகளை) எய்யுங்கள்', என்று - என்று, உற்றன உற்றன - அவ்வச் சமயங்கட்குப் பொருந்தியவாக, உரைக்கும் ஓதையும் - (இருதிறத்து வீரர்களும்) பேசுதலால் உண்டான ஓசைகளும், சிலையின் பிறந்தன பேர் ஒலி - வில்லினின்று எழுந்த நாண் ஒலிகளும், முற்றுறு கடை உகத்து - (யாவும்) முடிவெய்தும் கற்பாந்த காலத்து (உண்டாகும்), இடியின் மும்மடி பெற்றன - இடி ஓசையினும் மும்மடங்கு கொண்டனவாய், பிறந்தன - எழுந்தன.

எற்றுமின் பற்றுமின் எறிமின் - எற்றுதிர் பற்றுதிர் எறிதிர்; (யுத்த. 340). கடை உகம் - ஊழியின் இறுதி. யுகக்கைகடை; மும் மடி - மும்மடங்கு; 'பதாதி மும்மடி சேனைமுகமே' (பிங். 6).

பி - ம். 2. ஓசையும்.

4. உற்றனருற்றனர் : ஆர்ப்பொலி. 39

இஃது ஓர் பிரதியில் இல்லை.

## இரு சேனையும் கலந்து பொருதல்

1976. கற்பட மரம்படக் கால வேல்பட
விற்படு கணைபட வீழும் வீரர்தம்
எற்படு முடல்பட விரண்டு சேனையும்
பிற்பட விருநிலம் பிளந்து பேருமால்.

இரண்டு சேனையும் பின்பட - இருபக்கத்துப் படைகளும் பின்னிடுமாறு, (ஒருவர் மேல் ஒருவர் எறியும்), கல்பட - கற்கள் படுதலினாலும், மரம் பட - மரங்கள் மோதுதலினாலும், கால வேல் பட - யமன் ஒத்த வேற்படைகள் ஊடுருவதலினாலும், வில்படு கணை பட - வில்லிற் பொருந்திய அம்புகள் தைத்தலினாலும், வீழும் வீரர் தம் - மரித்து விழ்கிற, (இருபுறத்திலுமுள்ள) வீரர்களின், எல் படும் உடல்பட - ஒளிபொருந்திய உடம்புகள் (தன்மீது) தீண்டுவதனால், நெடுநிலம் பிளந்து பேரும் - அப்பளுவையும் அதிர்ச்சியையும் பொறுக்கலாற்றாது, இருநிலம் - பெரிய பூமி, பிளந்து பேரும் - விரிந்து நிலைகெடும். ஆல் - அசை.

உயர்வுநவிற்சியணி. எற்படு உடல்பட என்ற தொடர் இரு திறத்து வீரர்க்கும் பொது. அரக்கர்க் கேற்றும்போது இரவினை ஒத்த அரக்கர் உடல் என்றும், வானரர்க் கேற்றும்போது ஒளி வாய்ந்த வெள்ளிய குரக்குவீரர் என்றும் கொள்க. எல் - இரவு; 'எல்லியும் பகலும் போலத் தழுவினர் எழுவிற்றோளார்' (யுத்த. 426).

பி - ம். 1. கற்படை.

3. எற்படர்; தானையும்.

4. நெடுநிலம்; பிளந்த தாமரோ. 40

1977. எழுத்தொடர் மரங்களா லெற்ற முற்றிய
விழுத்தலை முழுவதுஞ் சிதறி வீழ்ந்தன
அழுத்திய பெருஞ்சினத் தரக்க ராக்கைகள்
கழுத்துள தலையில களத்தி னாடுவ.

எழுதொடர் - வலிய தடிகளாலும், இருப்புச் சங்கிலிகளாலும், மரங்களால் - மரங்களாலும், எற்ற - (குரங்கு வீரர்கள்) தாக்கியதனால், முற்றிய - இறந்துபட்டனவும், விழுதலை முழுவதும் - மேம்பட்ட தலைகள் எல்லாம் அடியோடும், சிதறி வீழ்ந்தன - சிதறி விழுந்தனவுமான, அழுத்திய பெருசினத்து அரக்கர் ஆக்கைகள் - (தம்மையும் அடக்கி) மேலிட்ட மிகுந்த கோபத்தினையுடைய அரக்கர்களின் உடல்கள், கழுத்துஉள தலைஇல - கழுத்துக்களுடன் கூடியனவாய் ஆனால் தலைகள் அற்றனவாய், களத்தின் ஆடுவ - போரரங்கில் கூத்தாடுவன வாயின.

தொடர் - சங்கிலி; 'தொடர்ப்படு ஞமலியின்' (புறநா. 74); 'தொடர்வாங்கு கதநாய்போற் றோன்றின' (சீவக. 2242); 'கழுகு தொடர் குந்தம்; (சீவக. 101); அழுத்திய பெருஞ்சினம்: வேரூன்றிய மிக்க வெகுளியுமாம். கழுத்துள தலையில - கபந்தங்கள்; உள இல-தொடை முரண். 'எழுத்தொடர் மரம்; கணைய மரம் போன்ற மரம்' என்பது பழைய உரைக்குறிப்பு.

பி - ம். 2. விழ்வன.
3. அழுத்தினர்.
4. கவந்தம் ஆடுவ.



1978. வெட்டிய தலையன நரம்பு வீசமேல்
முட்டிய குருதிய குரங்கின் மொய்யுடல்
சுட்டுயர் நெடுவனந் தொலைந்த பின்னெடுங்
கட்டைக ளெரிவன போன்று காட்டுவ.

வெட்டிய தலையன - (அரக்கர்களால்) வெட்டப்பட்ட தலைகளையுடையனவும், நரம்பு வீச - (துணிபட்ட) நரம்புகள் வீசுவதனால், மேல்முட்டிய குருதிய - மேலே நிமிர்ந்து மோதிய உதிரத்தை

யுடையனவுமான, குரங்கின் மொய் உடல் - குரங்குகளின் வலிய உடம்புகள், உயர் நெடுவனம் - ஓங்கி வளர்ந்த பெரிய காடு, சுட்டு- தீயினாற் சுடப்பட்டு, தொலைந்த பின் - நீறாகி யொழிந்த பின்னர், நெடு கட்டைகள் எரிவன போன்று காட்டுவ - நீண்ட மரக்கட்டைகள் எரிவனவற்றைப் போன்று காணப்படுவன.

வெட்டிய தலையன, முட்டிய குருதிய; வடமொழி நடை. மொய்: வலிமை. 'மொய்யார் கலிசூழ் முதுபாரின்' (பால. அரசியல். 3); 'மொய்வளம் செருக்கி' (பதிற். 49 : 8); சுட்டுத் தொலைந்த எனக் கூட்டுக. குரங்குகள் தலை துணிக்கப்பட்ட அளவில், கழுத்து நரம்புகள் உதிரத்தைக் கக்கிக்கொண்டு நின்ற காட்சிக்கு, காட்டு மரங்கள் மேற்பகுதி எரியுண்ட பின்னர், கட்டைகள் நின்று எரிந்தது உவமை. சுட்டு - சுடப்பட்டு எனப் பிறவினையாகக் கொள்க. தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. வெட்டிய தலைகளின், தலையின ; பகழி மேற்கொடு.

2. முட்டிய குருதிகள் ; முயங்கி ; உடற்.

3. தொலைத்த. 42

1979. பிடித்தன நிருதரைப் பெரிய தோள்களை
ஒடித்தன கால்விசைத் துதைத்த வுந்தின
கடித்தன கழுத்தறக் கைக ளாலெடுத்
தடித்தன வரைத்தன வார்த்த வானரம்

வானரம் - குரங்குகள், நிருதரை பிடித்தன - இராக்கதர்களை இறுகப் பற்றியும், பெரிய தோள்களை ஒடித்தன - (அவர்களுடைய) நீண்ட தோள்களை முறித்தும், கால் விசைத்து உதைத்த உந்தின - கால்களால் விரைந்து உதைத்துத் தள்ளியும், கழுத்து அற கடித்தன - கழுத்து அறும்படி (பற்களாற்) கடித்தும், கைகளால் எடுத்து - கரங்களால் தூக்கி எடுத்து, அடித்தன - தரையிடை மோதியும், அரைத்தன - தேய்த்தும், ஆர்த்த - பெருங் கூச்சலிட்டன.

குரங்குகள் அரக்கரை மீட்டும் சின்னுபின்னம் செய்தமை கூறப்பட்டது. பிடித்தன, ஒடித்தன முதலியவைகள் முற்றெச்சம். கால் விசைத்து : (திருவாச).

பி - ம். 1. தோள் பெயர்த்து. 43

1980. வாள்களிற் கவிக்குல விரர் வார்கழல்
தாள்களைத் துணித்தனர் தலையைத் தள்ளினர்
தோள்களைப் பிரித்தன ருடலைத் துண்டமிட்
டாழ்கடற் புரட்டினர் அரக்கர் ஆர்த்தனர்.

அரக்கர் - அரக்கர்கள், வாள்களில் - வாள்களைக் கொண்டு, கவி குலம் வீரர் - குரங்கின வீரர்களின், வார்கழல் - நீண்ட வீரக்கழல் புனைந்த, தாள்களை துணித்தனர் - கால்களை வெட்டியும், தலையை தள்ளினர் - தலைகளைத் தள்ளியும், தோள்களை பிரித்தனர் - தோள் களை(த் துணித்து) வேறு படுத்தியும், உடலை துண்டம் இட்டு உடம்புகளைத் துண்டித்தும், ஆழ்கடலில் புரட்டினர் - ஆழமான கடலில் போட்டு அலைத்தும், ஆர்த்தனர் - பெரு முழக்கமிட்டனர்.

இங்கு, குரங்குகளின் அழிவும் நிலைகுலைவும் கூறப்பட்டது. வாள்களில் : உருபு மயக்கம்.

பி - ம். 1. வன்கழல், வான்கழற், வால்களிற்
2. குறைத்தனர்
3. பிரிந்தனர் ; துண்டவன்.
4. போழ்களிற் ; நிருதர் ; பொங்கினர். 44

1981. மரங்களி லரக்கரை மலைகள் போன்றுயர்
சிரங்களைச் சிதறின வுடலைச் சிந்தின
கரங்களைக் கழல்களை யொடியக் காதின
குரங்கெனப் பெயர்கொடு திரியுங் கூற்றமே.

குரங்கு என பெயர் கொடுதிரியும் கூற்றம் - குரங்கு என்று கூறிக்கொண்டு அலைகின்ற யமன்கள், மரங்களில் - மரங்களினால்,

அரக்கரை மலைகள் போன்று உயர் சிரங்களை - அரக்கர்களுடைய மலைகள்போல உயர்ந்த தலைகளை, சிதறின - சிதறவடித்தும், உடலை சிந்தின - (அவர்களுடைய) உடலைப் போக்கியும், கரங்களை கழல்களைஒடிய - கைகளும் கால்களும் ஒடியுமாறு செய்தும், காதின - பொருதன. ஏ : அசை.

மரங்களில் : மரங்களால் ; உருபு மயக்கம். கழல் : கருவியாகு பெயர். அரக்கரை சிரங்களைச் சிதறின ; யானையைக் கரலைத்துணித் தாற் போன்று கொள்க. 'முதலையையுறின் சினையைக் கண்ணுறும். அது சினைக்காயின் முதற்கையாகும். (நன். 315) இங்கே இரண்டு செயப்படுபொருள் வந்தமை காண்க. (தொல். சொல். வேற்றுமை மயங்கியல். 87). காதுதல் - மோதிப் பொருதல். 'காதும் கண்ணுதல்' (யுத்த. 130) ; 'காது வேலன்ன கண்ணார்' (திருவிளை. வளையல் : 9); குரங்கெனப் பெயர் கொடு கூற்றம் : (ஒப்பு). பெண்டிரிற் கூற்றமன்னாள் (அயோத்தி. கைகேசி : 79).

பி - ம். 1. மரங்களால்.

2. முறிந்தன, முறிந்தனர் 45

1982. சுடர்த்தலை நெடும்பொறி சொரியுங் கண்ணன
அடர்த்தலை நெடுமர மற்ற கையன
உடர்த்தலை வைரவே லுருவ வுற்றவர்
மிடற்றினைக் கடித்துடன் விளிந்து போயின.

சுடர்தலை நெடுபொறி சொரியும் கண்ணன - ஒளியைத் தன்னகம்கொண்ட பரந்த தீப்பொறிகளைப் பொழிகின்ற விழிகளையுடையனவான சில வானரங்கள், அடர்த்தலை - நெருக்கி வருத்துதலை செய்கின்ற, (தமது கையிற் கொண்ட), நெடுமரம் - நீண்ட மரங்களுடனே, அற்றகையன - துணிபட்ட கரங்களையுடையனவாய், உடர்தலை - (தமது) உடலிடத்து, (எதிரிகள் விடுத்த), வைரம் வேல் - உறுதியான வேற்படை, உருவ - ஊடுருவவும், உற்றவர் - (தம்மிது) அப்படையை எறியலுற்றவர்களுடைய,

மிடற்றினை கடித்து உடன் விளிந்து போயின - கழுத்தைக் கடித்து விட்டு, அவருடன் (தாமும்) இறந்து பட்டன.

அரக்கர்களும் வானரர்களும் ஒருசேர அழிந்தமை இக் கவியிற் கூறப் பெற்றது. வேல் உடலில் தைத்ததையும் பொருட்படுத் தாது, பகைவர்களின் கழுத்துக்களைக் கடித்து இறந்தன வீரமிக்க வானரங்கள் என்க; (ஒப்பு): குறள். 774. தலை: ஏழனுருபு. உடர் - உடல்; இறுதிப்போலி.

பி - ம். 1. நெடுங்கனல்; கன்னினை.

2. அடற்றலை.

3. உருவ உடற்றலை யுற்றவர்உருவி; அற்றவர்.

4. தடிந்துடன்; விரிந்து போயின, போவன, விளிந்த வாநரம். 40

1983. அடர்ந்தன கிரிகளை யசனி யேறெனத்
தொடர்ந்தன மழைபொழி தும்பிக் கும்பங்கள்
இடந்தன மூளைக ளினிதி னுண்டன
கடந்தன பசித்தழல் கரடி காதுவ.

காதுவகரடி - போர் புரிவனவான கரடிகள், கிரிகளை அடர்ந் தன - மலைகளைச் சார்ந்து அழிக்கின்றனவான, அசனி ஏறு என - பேரிடிகள் போல, தொடர்ந்தன - தொடர்ந்து சென்று, மழை பொழி - மத மாரியைப் பெய்கின்ற, தும்பி கும்பங்கள் - யானைகளின் மத்தகங்களை, இடந்தன - பிளந்தனவாய், மூளைகள் இனிதின் உண்டன - (அவற்றின்) மூளைகளை இனிமையாகத் தின்று, பசி தழல் - பசியாகிய தீயினை, கடந்தன - ஒழித்தன. (பசியாறின)

இச்செய்யுட்கண் ஜாம்பவான் முதலிய கரடிகள் பொருதமை கூறப்பட்டது. இடிகளால் மலைகள் தாக்கப்பட்டு உடைதல் போன்று, அரக்கர் யானைகள் அழிந்தன என்க. பசித்தழலை ஜாடராக்கினி என்ப. காதுவ: வினையாலணையும் பெயர். உவமை யணி. கரடிகள் மூளைகளை உண்டதாகக் கூறப்பட்டமை காண்க.

பி - ம். 1. கரிகளை; யேறனற்

2. மழைமதத், மழையென; கொம்புகள்.

3. பரிகளைக் பசிகளை, கரடி காதியே, காத்துவ. 47

1984. கொலைமத கரியன குதிரை மேலன
வலமணித் தேரன வாளின் மேலன
சிலைகளின் குடுமிய சிரத்தின் மேலன
மலைகளிற் பெரியன குரங்கு வாவுவ.

மலைகளில் பெரியன குரங்கு - மலைகளினும் பெரியவையான குரங்குகள், வாவுவ - தாவுவனவாய், கொலை மதகரியன - கொல்லும் தொழில் உள்ள மதங்கொண்ட (அரக்கர்களுடைய) யானைகளின் மேற் பாய்வனவும், குதிரை மேலன - குதிரைகள்மேற் பாய்வனவும், வலம் மணிதேரன - உறுதி வாய்ந்த மணிகள் கட்டிய தேர்களின் மேற் பாய்வனவும், வாளின் மேலன - வாட் படைகளின்மேற் பாய்வனவும், சிலைகளின் குடுமிய - விற்களின் நுனியின்மேற் பாய்வனவும், சிரத்தின் மேலன - (அவர்களுடைய) தலைகளின்மேற் பாய்வனவும் ஆயின.

தன்மை நவிற்சியணி.

பா-ம். 1. மதக் ; மேலென.
2. அலர்மணி, அலைமணித் தேரளனவாளி மேலென.
3. சிலைகளிற் ; சித்திரத்தின்மேல். 48

## வேறு

## உதிரப் பெருக்கு

1985. தண்டுகொண் டரக்கர் தாக்கச் சாய்ந்துகு நிலைய சந்தின்
துண்டங்க ளாக வாளிற் றுணிந்தபே ருடலைத் தூவிக்
கொண்டெழு மலைக ளோடுங் குரக்கினப் பிணத்தின் குப்பை
மண்டுவெங் குருதி யாறுய் மறிகடன் மடுத்த மாதோ.

குரக்கு இனம் பிணத்தின் குப்பை - குரங்குக் கூட்டங்களின் பிணக் குவியல்களிலிருந்து, மண்டு வெம்குருதி ஆறுய் - மிக்குப் பெருகுகின்ற வெம்மைவாய்ந்த உதிரம் ஆறுகி, அரக்கர் தண்டுகொண்டு தாக்க - இராக்கதர்கள் கதாயுதங்களைக் கொண்டு அடித்ததனுல், சாய்ந்து உகும் நிலைய - தளர்ந்து விழும் தன்மையனவும், வாளில் துணிந்த பேர் உடலை - (அவர்களுடைய) வாட்

படைகளினால் துணிபட்டனவுமான பெரிய உடல்களை, சந்தின் துண்டங்கள் ஆக தூவி - சந்தன மரத்தின் துண்டுகளாக இறைத்துக் கொண்டு, கொண்டு எழும் அலைகளோடும் - கிளர்ந்து எழுகின்ற அலைகளோடும், மறிகடல் மடுத்த - அலைகள் கரைக்கண் மோதி மடங்கப் பெற்ற கடலில் சென்று நிறைந்தன. மாது : ஓ. ஈற்றசை.

மலையிடத்திலிருந்து பெருகும் வெள்ளம் தன் வேகத்தால் துண்டுபட்ட சந்தன மரத் துண்டுகளை அடித்துக்கொண்டு, போரில் வீரர்களுடைய மலை போன்ற உடல்களிலிருந்து பெருகிய உதிர ஆறு, துண்டுபட்ட உடல் துண்டுகளை வீசிக்கொண்டு கடலிற் சேர்ந்தன என்க. உருவகவணி. அரக்கர் சேனை உருக் குலைந்து போனமையின் குரங்கின் உடல் துண்டுகளே கூறப் பட்டன. தண்டு : கதை ; 'தண்டெனக்கொள லுற்றது நொய் தெனத் தவிர்ந்தான்' (யுத்த. 139) ; சந்து - சந்தனம் : 'சந்தார் தடங்குன்றினில்' (சுந்தர. 577) ; மண்டுதல் : விரைந்து செல்லுதல்: 'கடற்படை குளிப்ப மண்டி' (புறநா. 6).

பி - ம். 1. தகர்ந்துடல் தலைகள் தள்ளிந். தகர்ந்துடைதலை யோடள்ளிக்.

2. வாளால் ; உடல்கள் தூங்கத் ; துணித்த. 49

இதன்பின் 'தாக்கிய' என்னும் செய்யுள் ஓர் பிரதியில்.

### அநுமன் பகைவர் படையைக் கலக்குதல்

1986. பனிவென்ற பதாகை யென்றும்
பல்லுளைப் பரிமா வென்றும்
தனுவென்றும் வாளி யென்றுந்
தண்டென்றுந் தனிவே லென்றும்
சினவென்றி மதமா வென்றுந்
தேரென்றுந் தெரிந்த தில்லை
அனுமன்கை வயிரக் குன்று
லரைப்புண்ட வரக்கர் தானை.

அநுமன் கை வயிரம் குன்றால் - அநுமனுடைய கரங்களாகிய உறுதி வாய்ந்த மலைகளினால், அரைப்புண்ட அரக்கர் தானை -

(நிலத்தில்) தேய்க்கப் பெற்ற இராக்கதர் படையில், பனிவென்ற பதாகை என்றும் - அஞ்சுதலை வென்ற கொடிகள் என்றும், பல் உளை பரிமா என்றும் - பலவான தலையாட்டத்தினையுடைய குதிரைகள் என்றும், தனு என்றும் - வில்லென்றும், வாளி என்றும் - அம்பென்றும், தண்டு என்றும் - கதைகள் என்றும், தனிவேல் என்றும் - ஒப்பற்ற வேற்படை என்றும், சினம் வென்றி மதம்மா என்றும் - கோபமும் வெற்றியும் உடைய மதம் கொண்ட வேழம் என்றும், தேர் என்றும் தெரிந்தது இல்லை - தேர்கள் என்றும் தெரியவில்லை.

அநுமன் அழித்தலின் மேற்கூறிய அனைத்தும் உருத்தெரியாமல் அழிந்தொழிந்தன என்க. மற்றும் அவன் அழித்த விரைவினால், எது எது எப்பொழுது அழிந்தது என்றும் உணர முடியாது போயிற்று எனினுமாம். 'பனிவென்ற பதாகை'; பனி என்பது பனித்தலின் முதனிலைத் தொழிற் பெயர். அஞ்சாமையைக் கொடிமேலேற்றிக் கூறினர். சினவென்றி - உம்மைத் தொகை.

பி - ம். 2. விட்டேறென்றும்.

4. அநுமன்றன்; தண்டால்; அரைப்புண்டது. 50

அங்கதன் அரக்கர் சேனையை அழித்தமை

1987. பொங்குதேர் புரவி யானை பொருதொழில் நிருத ரென்னும்
சங்கையு மில்லா வண்ணந் தன்னுளே தழுவிக் கூற்றம்
எங்குள வுயிரென் றெண்ணி யிளைக்கையாற் சிளைத்த [தென்ப
அங்கதன் மரங்கொண் டெற்ற வளறுபட் டழிந்த தானை.

அங்கதன் - அங்கதன் என்ற வானர வீரன், மரம் கொண்டு எற்ற - மரத்தினால் தாக்க, அளறுபட்டு அழிந்த - சேறாகி அழிதல் உற்ற, பொங்குதேர் புரவி யானை பொருதொழில் நிருதர் என்னும் தானை - அளவின்மிக்க தேர்களும் குதிரைகளும் யானைகளும், போர் புரியும் தொழிலரான அரக்கர்களும், என்று சொல்லப்படும் படைகளில், கூற்றம் - யமன், தன் உள்ளே சங்கையும் இல்லா வண்ணம் - தன் உள்ளே (அதுகாறும் அரக்கரிடம்

கொண்டிருந்த) அச்சம் (இப்பொழுது) சிறிதும் கொள்ளாமல், தழுவி - பொருந்தி, 'உயிர் எங்கு உள என்று எண்ணி - (தனக்கு உணவிற்கான) உயிர்கள் எங்கேனும் (தப்பி) உள்ளனவோ' என்று ஆராய்ந்து, இணை கையால் கிளைத்தது - தன்னுடைய இரண்டு கரங்களாலும் கிளறிப் பார்த்தது. என்ப : அசை.

பொங்கு தேர் : பல்வகையாகப் புனையப் பெற்று அழகு பொங்கும் தேர் எனினுமாம். அல்லது தேரும், பொங்கு புரவி யானை எனினுமாம, சங்கை : அச்சம் ; (வின்ஸ்லோ) ; கூற்றம் கிளைத்தது என்க.

பி - ம். 1. காலாள் ; பொருகழல் ; நிருதர் என்னர்.
3. கிளைப்பதென்ன, கிளைத்ததென்ப.
4. அளறுபட்டழிந்த சேனை. 51

1988. தாக்கிய திசைகள் தோறுந் தலைத்தலை மயங்கித் தம்மில்
நூக்கிய களிறுந் தேரும் புரவியு நூழில் செய்ய
ஆக்கிய செருவை நோக்கி யமரரோ டசுரர் போரைத்
தூக்கினர் முனிவ் ரென்னை யிதற்கது தோற்கு மென்றார்.

தாக்கிய திசைகள் தோறும் - எதிர்த்துப் போர் புரிகின்ற எல்லாத் திக்குகளிலும், தம்மில் தலை தலை மயங்கி நூக்கிய களிறும் - தமக்குள்ளே அந்தந்த இடங்களில் கலந்து எதிர்த்த வேழங்களையும், தேரும் - தேர்களையும், புரவியும் - குதிரைகளையும், நூழில் செய்ய - குரங்குகள் கொன்று குவிக்க, ஆக்கிய செருவை நோக்கி ; இங்ஙனம் இயற்றிய இச் சண்டையைக் கண்ணுற்று, அமரரோடு அசுரர் போரை - தேவர்களுடன் அசுரர்கள் ஆற்றிய போரினை, தூக்கினர் முனிவர் - (இதனோடு ஒத்து நோக்கிய) தேவ விருடிகள், 'என்னை-(இந்தப் போர்க்கு முன்னே அந்தத் தேவாசுரர் போர்) எம் மாத்திரம்? அது இதற்கு தோற்கும் - அந்தப் போர் இப்போர்க்கு நிகராகாது தோல்வியுறும்,' என்றார் - என்று மொழிந்தார்.

தலைத்தலை - இடந்தோறும் : 'தத்தரிக்கண்ணார் தலைத்தலை வருமே' (பரிபா. 16,10) ; தலைத்தலை - ஒவ்வொரு சேனையும் தனித் தனியாக எனினுமாம. நூழில் செய்ய : நூழில் ; கொன்று குவிக்கை : 'வேழப் பழனத்து நூழிலாட்டு' (மதுரைக். 257) ;

முனிவர் : தேவ முனிவர் ; அரக்கர் தங்களில் தாங்கள்பிரமை யினாலே அடித்துக்கொண்டனர், தேவாசுரப் போரும் இதற்கு ஒப் பாகாது என்று முனிவர் மொய்த்தார்கள் என்பது' ஐயர் குறிப்பு. சாகரத்துக்குச் சாகரம் உவமை ; இராம இராவணர் யுத்தத்திற்கு இராம இராவணர் யுத்தமே நிகர் என்று ஓர் வடமொழி சுலோகம் உண்டு. அது இங்கு அறிதல் தகும்,

பி - ம். 1. மயங்கிப் பின்னும்.

2. பரிகளும் ; செய்ய.

4. நூக்கிய ; என்னே ; தோற்றம். 52

## அரக்கர் சேனையால் நிலைகலங்கிய வாநரசேனையை வாநர வீரர் காத்தல்

**1989.** எடுத்தது நிருதர் தானை யிரிந்தது குரங்கி னீட்டம்
தடுத்தனர் முகங்கள் தாங்கித் தனித்தனித் தலைவர் தள்ளிப்
படுத்தன ரரக்கர் வேலை பட்டதும் படவும் பாரார்
கடுத்தனர் கடுத்த பின்னுங் காத்தனர் கவியின் வீரர்.

நிருதர் தானை எடுத்தது - அரக்கர் படை (முதலில்) தலை யெடுத்தது ; (எடுக்கவே), குரங்கின் ஈட்டம் இரிந்தது - குரங்கு களின் தொகுதி புறங்காட்டி ஓடிற்று ; தலைவர்-குரங்குப் படைத் தலைவர்கள், முகங்கள் தாங்கி - அவர்களை எதிர்க்கும் முகத்தின ராய், தனித்தனி - ஒவ்வொருவரும், (குரங்குகள் ஓடிப் போக ஒட்டாமல்) தடுத்தனர் - அந்த வானரங்களைத் தடுத்தார்கள் ; அரக்கர் - இராக்கதர்கள், வேலை படுத்தனர் - கடல் போலப் பரந்த குரங்குப் படையை, தள்ளி படுத்தனர் - (மீட்டும்) கொன்று வீழ்த் தினர் ; பட்டதும் - (அங்ஙனம் பல குரங்குகள் மரித்தவுடன்) (அஞ்சி நின்ற) வானரங்கள், கடுத்தனர் - ஓட்டம் பிடித்தனர் ; கவி வீரர் - வானரப்படைத்தலை வரான வீரர்கள், படவும் பாரார் - (தம் திறத்துப் படைகள்) இறந்தொழியவும் சிறிதும் பொருட்படுத்தாத வராய், கடுத்த பின்னும் காத்தனர் - ஓடின வானரங்களைப் பின்னும் தடுத்து நிறுத்தினர்.

கடுத்தல் - விரைந்து ஓடுதல் ; 'காலெனக் கடுக்கும் கவின் பெறு தேரும்' (மதுரைக் காஞ்சி. 388) கோழைகளாய்ப் புறங்காட்டி

ஓடும் குரங்குகளைத் தேற்றித் தடுத்தனர் என்க. ஆரணிய. 502 508) காண்க.

பா - ம். 2. முகங்கடோறும்.

3. பட்டது ; பாராக்.

4. கடுத்தனரரக்கர் ; காய்ந்தனர், கரந்தனர்.

## நீலன் முதலிய வாநரரது போர்த்திறம்

1990. சூலமும் மழுவுந் தாங்கித் தோளிரு நான்குந் தோன்ற
மூலம்வந் துலகை யுண்ணு முருத்திர மூர்த்தி யென்ன
நீலனின் றுழியே நின்று னிரந்தரங் கணங்க ளோடும்
காலனென் றொருவ னியாண்டும் பிரிந்திலன் பாசக்
[கையான்.

சூலமும் மழுவும் தாங்கி - சூலப் படையும் எரியிட்டியும் சுமந்து, இரு நான்கு தோளும் தோன்ற - எட்டுத் தோள்களும் ஒளிர, மூலம் வந்து உலகை உண்ணும் - முதற் கடவுளாகத் தோன்றி உலகனைத்தையும் சங்காரம் செய்கின்ற, உருத்திரமூர்த்தி என்ன - அச்சம் செய்யும் வடிவுள்ள சிவபெருமான் போன்று, நீலன் நின்றுழியே - நீலன் என்ற வாநர வீரன், (தான் போர் செய்து அழித்து) நின்ற இடத்திலேயே, காலன் என்று ஒருவன் - யமன் என்று சொல்லப்படுகின்ற ஒரு தேவன், கணங்களோடும் - தனது பரிவாரங்களோடும், பாசம் கையான் - பாசம் என்னும் கருவியைக் கொண்டவனாய், யாண்டும் பிரிந்திலன் - எவ்விடத்துக்கும் பிரிந்து செல்லக் கூடாதவனாய், நிரந்தரம் நின்றான் - இடைவிடாது நின்றான்.

இச் செய்யுள் முதலாக 6 செய்யுட்களில் சில வாநர வீரர் களின் வீரச் செயல் கூறப்படுகிறது. நீலன் ; (கிட்கிந்தா. 696, 981); உரைக் குறிப்புக் காண்க. நீலனின்றவன் நெருப்பின் மகன் திண், சூலமுங்கயிறு மின்மை துணிந்தும், ஆலமென்று நிறமின்மை யறிந்தும், காலனென் பரிவனைக் கருதாதார்' (யுத்த. 824) என்றதால் சீலமும் ஆண்மையும் நோக்கி இவனுக்குக் கால காலனான சிவ பிரான் உவமையாக்கப் பட்டான். சிவபிரானுக்கு இரு நான்கு தோள் ; 'எண்டோள் வீசி நின்றாடும் பிரான் தன்னைக், கண்காள்

காண்மின்களோ' (அப்பர். திருவங்கமாலை); உருத்திரம்: கோபம். நின்ற உழி என்பது அகர ஈறு தொக்கது. நிரந்தரம்: வடசொல்; எப்பொழுதும் என்று பொருள் படும். 'புலவர் யாவரையும் நிரந்தர நோக்குவென்' (ஆரணிய. 188); 'புழைத்த போல நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்' (சுந்தர. 335); நீலனுக்கு உதவியாகக் காலன் தன் தூதுவர்களுடன் நின்றதனால் அளவற்ற பகைவர் அழிந்தபாசம் - உயிர்களைப் பிணித்துச் செல்லும் கயிறு: அழிந் தமை விளங்கும்: கால பாசம்; (சுந்தர. 165, 173); 'கால பாசத்திற் காட்டிக் கொடாமலே' (நந்தனார் கீர்த்தனை).

பி - ம். 2. உருத்திரர்; என்பான், என்றும்,

3. நிரந்தரச், நிரந்தரங். 54

1991. காற்றல்லன் புனலோ வல்லன்
கனலல்ல விரண்டு கையால்
ஆற்றல னுற்று நின்ற
வருஞ்சம மிதுவே யாகில்
ஏற்றமென் பலவுஞ் சொல்லி
யென்பத மிழந்தே னென்னக்
கூற்றமுங் குலுங்கி யஞ்ச
வெங்கதக் குமுதன் கொன்றான்.

கூற்றமும் - யமனும், 'என்பதம் இழந்தேன்' என்ன - எனது பதவியினை இழந்தேன் என்று, குலுங்கி அஞ்ச - உடல் நடுங்கி யச்சுறுமாறு, வெம்கதம் குமுதன் - கடுஞ் சினத்தனான குமுதன் என்பவன், கொன்றான் - (பகைவரை) அழித்திட்டான்; காற்று அல்லன் - ஊழிக்காலத்து உலகினை அழிக்கின்ற காற்றோ எனின், (உருவத்துடன் விளங்குகின்றமையின்) காற்று அல்லன்; புனல் அல்லன் - தன்னிடம் அழுத்திக் கொல்லவல்ல நீர் என்னவாகுமோ எனின், (நேர் நின்று வெளிப்படையாகத் தாக்கிக் கொல்கின்றமை யின்) நீரும் அல்லன்; கனல் அல்லன் - (எரிந்து ஜ்வாலை வீசிக்) கொல்லும் தீயோ என்னின், அல்லன்; ஆற்றலன் - (பகைவர் தன்னை வந்து பொருவதனைக் கண்டு) மனம் பொறுதவனாய்; இரண்டு கையால் - (எவ்விதமான துணைக்கருவியுமின்றித் தன்) இரு கரங்களால், ஆற்றுகின்ற - செய்கின்ற, அருசமம் - (பிற ரால்) புரிதற்கு அரிய போர், இதுவே ஆகில் - ஈதாகில், பலவும்

சொல்லி ஏற்றம் என் - (அவ்வீரனது பேராற்றலைப்பற்றி மற்றும்) பலபட உயர்த்துக் கூறுவதால் காணக்கூடிய சிறப்பு யாது' (ஒன்றுமில்லை).

காற்றினை அருவுரு வென்பர்: கட்புலனாகாமையின் உருவில்லது என்றும், மேனியிற் றீண்டப்பெறுதலின் உருவுள்ளது என்றும் நூல்கள் கூறும். ஆகாயத்திற்கு வடிவின்று ஆகலானும், பூமி யாவரையும் பொறுப்பதன்றி அழிக்கும் திறனுள்ளது ஆகலானும் அவையிரண்டினையும் கூறவில்லை வில்லிகணி.

பி - ம். 1. காற்றவன்; புனலும்; கையான்.

2. வஞ்சமும்; அருவேயாகில்.

3. இழப்பனென்று, யிழப்பதென்று.

4. வெருவியஞ்ச; வெஞ்சினக்; சொன்னான். 65

1992. மறிகடல் புடைசூழ் வைப்பின் மானவன் வாளி போன
செறிபணை மரமே நின்ற மரங்களிற் றெரியச் செப்பும்
குறியுடை மலைகள் தம்மிற் குலவரைக் குலமே கொள்ளா
எறிதலோ டறைதல் வேட்ட விடவனன் றெடுத்தி லாத.

கொள்ளா எறிதலோடு அறைதல் வேட்ட - கையில் கொண்டு வீசுதலையும் அடித்தலையும் விழைந்த, இடவன்-இடபன் என்ற வாநரவீரன், அன்று - அப்பொழுது, எடுத்திலாத-(வேருடன்) அகழாதுவிடப்பட்டவை, மறி கடல்-அலைகள் கரைக்கண் வந்து மடங்குகின்ற கடலால், புடைசூழ் வைப்பின் - பக்கங்களிற் சூழப்பெற்ற நிலஉலகத்து, நின்ற மரங்களில் - நின்ற மரங்களுள்ளே, மானவன் வாளி போன - பெருமைசான்ற இராகவன் அம்பினால் ஊடுருவப் பட்டு துளைக்கப்பட்டனவும், செறி பணை - நெருங்கின கிளைகளையுடையனவுமான, மரமே - ஏழு மராமரங்களே ஆகும்; தெரிய செப்பும் - (பலரும்) அறியுமாறு புகழ்ந்து சொல்லப்படுகிற, குறி உடை - பெயர்களையுடைய, மலைகள் தம்மில் - மலைகட்குள்ளே, குலவரை குலமே - குலமலைகளின் வருக்கமே.

தொடர்புயர்வுநவிற்சி. இடபன் என்னும் வாநரவீரன் இராமன் அம்பினால் துளைக்கப்பட்ட ஏழு மராமரங்கள் தவிர ஏனைய மரங்களையும், அஷ்டகுலாசலம் அன்றி மற்ற எல்லா மலைகளையும்

அகழ்ந்து வீசிப்பொருதனன் என்க. மானவன் - மநுவின் வழி வந்தவன் ; தத்திதாந்த நாமம். இந்த மநுதான் இராமபிரான் வமிசத்துக்கு ஆதிபுருடன்; 'ஆதித்தன் குலமுதல்வன் மநுவினையா ரறியாதார்' (பால. குலமுறை. 1); 'மானவன் மலர்க் கழலின்' (சுந்தர. 692); 'மானவன் குணமெலா நினையுமா மதியிலன்' (கிட்கிந்தா. 78); 'மானவன் வாளிபோன செறிபணை மரம்' கிட்கிந்தா. மராமரப் படலத்துக் காண்க. மறிகடல்: 'மையோ மரகதமோ மறிகடலோ' (அயோத்தி. கங்கை. 1).

பி - ம். 3. குலமேகொள்க, கொள்ள.

4. வேண்டி; இடபனேனெடுந்நிலாத, இடவவன் றெடுத்நிலாத, றெடுத்நிலாதான். 56

1993. வாம்பரி மதமா மான்தேர் வாளெயிற்
றரக்கர் மானப்
பாம்பினும் வெய்யோர் சாலப் படுகுவர்
பயமின் றின்றே
தூம்புறழ் குருதி மண்டத் தொடர் நெடு
மரங்கள் சுற்றிச்
சாம்பவன் கொல்லச் சாம்பு மென்று
கொண்ட ரார்த்தார்.

வாம்பரி - தாவிச்செல்கின்ற குதிரைகளையும், மதம் மா - மதங்கொண்ட வேழங்களையும், மான் தேர் - குதிரைகள் பூட்டப்பெற்ற இரதங்களையும் உடையவர்களும், மானம் பாம்பினும் வெய்யோர் வாள் எயிறு அரக்கர் - விடத்தாற் சிறந்த அரவினைக்காட்டிலும் கொடியவர்களுமான, வாள்போன்று கூரிய பற்களையுடைய இராக்கதர்கள், சால படுகுவர் - மிகுதியாக இறந்தொழிவார்கள், இன்று பயம் இன்று - இன்று நமக்கு அச்சம் இல்லை; தூம்பு உறழ் - மதகுகளினின்று வழிந்து வருவதுபோன்ற, குருதிமண்ட - உதிரம் மிகுமாறு, தொடர் நெடுமரங்கள் சுற்றி - கிளைகள் ஒன்றோடொன்று பிணையப் பெற்ற நீண்ட மரங்களைச் சுழற்றி, சாம்பவன் கொல்ல - சாம்பவன் என்னும் கரடி வேந்தன் கொலைத்தொழில் புரிய, சாம்பும் - (அரக்கர் கூட்டம்) அழியும், என்று கொண்டு - என்று மனத்துட்கொண்டு, அமரர் ஆர்த்தார் - வானவர்கள் ஆரவாரம் செய்தனர். ஏ - அசை.

வாவும் என்பது வாம் எனக் குறுகிற்று. வாம்பரி மதமா மான்தேர் என ஏற்ற அடைமொழிகள் கொடுக்கப்பட்டமை காண்க. வாளெயிற்றரக்கர்; (யுத்த. படைக்காட்சி. 14). தூம்பு - நீர் விழும் மதகு; 'தூம்பழி குளத்திற் கண்ணீர்'; 'தூம்பழி குளம்' (சீவக. 1280, 1976). 'சாம்பவன் கொல்லச் சாம்பும்' பிராசநயம் காண்க. சாம்பன்: கிட்கிந்தா. 699 உரைக்குறிப்புக் காண்க. சாம்புதல்: ஆரணிய. 942.

பி - ம். 1. மாளப்; மாயப்.

2. பல்குதல்; பயன்; றெய்த்த, எய்த' என்ன.

3. தூம்புள; சுடர்.

4. என்றுரையமரர்தந்தார், என்றனரமார். 57

**1994.** பெருங்கலப் புரவி யான திரைகளும் கலம்பொற் றேரும்
இருங்களி யானை யான மகரமு மிரியல் போக
நெருங்கிய படைக ளான மீன்குலம் மிரிந்து சிந்தக்
கருங்கடல் கலக்கு மத்திற் பனசனுங் கலக்கிப் புக்கான்.

பொரும் - போர்புரிகின்ற, புரவி ஆன திரைகளும் - குதிரைகளாகிய அலைகளும், பொன் தேர் கலமும் - அழகிய (அல்லது பொன்னாலியன்ற) இரதங்களாகிய மரக்கலங்களும், இரு களி யானை ஆன மகரமும் - நிறைந்த மனக்களிப்பினையுடைய சுறா மீன்களும், இரியல் போக - (மனம் கலங்கிப்) பின்னிடையவும், நெருங்கிய - அடர்ந்த, படைகள் ஆன மீன் குலம் நெரிந்து சிந்த - போர்க்கருவிகளாகிய மீன் குழாங்கள் நிலைகெட்டுச் சிதறவும், கரு கடல் கலக்கும் மத்தில் - பெரிய (திருப்பாற்) கடலைக் கடைந்து கலங்கச்செய்த (மந்தரம் என்னும்) மத்துப்போன்று, பனசனும் - பனசன் என்ற குரங்கு வீரனும், கலக்கி புக்கான் - (இராக்கதருடைய சேனைக்கடலைக்) கலக்கிக்கொண்டே புகுந்தான்.

குதிரை: திரை; தேர்; கப்பல். ஆனை - மகரமீன். அரக்கர் - கடல். ஆயுதம் - மீன்களுமாம்; கலவையணி. குலப்புரவி - உச்சைச்ரவம்போன்ற சாதிக்குதிரைகள். குதிரைக்குத் திரைகள்: 'தரங்க நிரைத்தன தரள நிரைத்தன, துரங்க மெனைப்பல கோடி தொகுத்தே' (தக்க. 265); 'ஒலியவார் திரையினன்ன வொழுங்கின யோகமாக்கள்' (திருவிளை. திருமணப். 11); 'பொடியின் மிசை

வெளி புதைதர விடுவன, புணரி யிடையலே யலேயொடு பொருவன' (வி. பா. 16ஆம் போர் 22). கலம் பொன் தேரும் என்பது பொன் தேர்க்கலமும் என விகுதி பிரித்துக் கூட்டப்பெற்றது. தேருக்கு மரக்கலம்; 'விசைபெற விடுபரி யிரத, மறிகடல் மிசைவிடு கலமெனவே' (கலிங். 399). கம்ப மதத்துக் களியானை; யுத்த. இந்திரசித்து. 69. கடல் என்ற ஒப்புமைபற்றிக் கடையப்பட்ட பாற்கடல் கருங்கடல் எனப்பெற்றது. கருமை - பெருமை, வலிமையுமாம். பாற்கடல் எனினும், அதனகத்துப் பள்ளி கொண்ட பெருமானுடைய நீலவொளியால் கருமைபெற்ற கடலாகலின், கருங்கடல் என்க; 'நீலக்கடல் கடைந்தாய்' (திருவாய்.) என்றது காண்க. கருங்கடல்: கரிய இராக்கதக் கடல் எனினுமாம். மத்தம் - மந்தரகிரி. பனசன்: கிட்கிந்தா. 695 உரைக்குறிப்புக் காண்க; 'போர்த்தேர் புலிபோற் பனசன்' யுத்த. படைத்தலைவர். 49, 63); 'பருவலிப் பனசன்' (யுத்த. பிரமாத்திர. 121). ஈற்றடி, உவமையணி; ஏனைய மூன்றடிகளும் உருவகம்.

பி - ம். 1. பொற்றேர்திரைகளும்; பொலம்பெற்.

2. இருங்கலயானை; மலைகளும்.

1995. மயிந்தனுந் துமிந்தன் தானு மழைக்குலங்
கிழித்து வானத்
துயர்ந்தெழு மெருவை வேந்த ருடன்பிறந்
தவரை யொத்தார்
கயங்குடைந் தாடும் வீரக் களிறெனத் தான்
கயவன் காலிற்
பெயர்த்தில னுற்ற தல்லாற் கேசரி
பெரும்பொற் றோளான்.

மயிந்தனும் - மயிந்தனும், துமிந்தன் தானும் - துமிந்தனும், மழைகுலம் கிழித்து - மேகத்தொகுதிகளைக் கிழித்துகொண்டு, வானத்து - விண்ணுலகைக் குறித்து, உயர்ந்து எழும் எருவை வேந்தர் உடன் பிறந்தவரை ஒத்தார் - உயரமாகப் பறந்து சென்ற சகோதரராகிய (சம்பாதி சடாயு என்னும்) கழுகரசர்களை நிகர்த்து விளங்கினர்; கவயன் - கவயன் என்னும் வானர வீரன், கயம்

குடைந்து ஆடும் வீர களிறு ஒத்தான் - குளத்தில் மூழ்கி விளையாடுகின்ற வீரம் செறிந்த ஆண் யானையை ஒத்தான்; கேசரி பெரும்பொன் தோளான் - கேசரி என்னும் பெரிய அழகிய தோளையுடைய குரங்கு வீரன், உற்றது அல்லால் - ஒரே இடத்தில் நிலையாகப் பொருந்தியதன்றி, காலில் பெயர்ந்திலன் - அடியெடுத்து வைத்து அப்பாற் செல்லவில்லை.

விண்ணிடைத் தாவிப் போர் செய்தமை கொண்டு மயிந்த துமிந்தர்க்குக் கழுகுகளும், சேனைக் கடலில் நின்று பொருதமையின், கவயனுக்குக் கயம் குடைந்தாடும் களிறுகளும் உவமிக்கப் பெற்றன. மயிந்த துமிந்தர்கள்: யுத்த. 344. சம்பாதி வரலாறு: கிட்கிந்தா. 969-973ல் காண்க. சடாயு வரலாறும் செயலும்: ஆரணிய காண்டத்துக் காண்க. கேசரி: கிட்கிந்தா. 692 உரைக் குறிப்புக் காண்க.

பி - ம். 1. மிளவல்தானும்; கிழிய
3. காலால்
4. பெரும்போர் பெற்றுன். 58

## அரக்கர்சேனை தளர்தல்கண்டு இந்திரசித்து தான் தனியே நின்று பொருதல்

1996. பெரும்படைத் தலைவ ரியாரும் பெயர்ந்திலர்
பிணத்தின் குப்பை
வரம்பில பரம்பி யார்த்து மலைகின்ற
பொழுதின் வந்துற்
றிரிந்தன கவியுங் கூடி யெடுத்தன
வெடுத்த லோடும்
சரிந்தது நிருதர் தானை தாக்கின
னரக்கன் தானே.

பெருபடை தலைவர் யாரும் - பெரிய குரங்குச் சேனாதிபதிகள் எவரும், பெயர்ந்திலர் - இடம் விட்டு அகலாதவராய், பிணத்தின் குப்பை - (இராக்கதருடைய) சவக்குவைகள், வரம்பில - எல்லையில்லாதனவாய், பரம்பி ஆர்த்து - பரவும்படி ஆரவாரித்து, மலைகின்றபொழுதின் - போர் புரிகின்ற தருணத்தில், இரிந்தன கவி

யும்-(முன்னர்த்) தோற்றோடின வானரங்களும், வந்துற்று - மீண்டு வந்து, கூடி - உடன் சேர்ந்து, எடுத்தன - போரினை மேற்கொண்டன ; எடுத்தலோடும் - (அவைகள் அங்ஙனம்) மேற்கொண்ட அளவில், நிருதர்தானை சரிந்தது - அரக்கர் படைநிலை தளர்ந்தது; (அப்பொழுது) அரக்கன்தானே - அரக்கர் வீரனான இந்திரசித்துத் தன்னந் தனியாகவே நின்று, தாக்கினன் - பொருதனன்.

எடுத்தல் : போர் தொடுத்தல்.

பி - ம். 2. பரப்பி

3. ஈண்டி ; யெரிந்தனவெடுத்த

4. சரிந்தன ; தாக்கினன், தாங்கிறன். 60

வேறு

1997. பூணெ றிந்தகுவ டனைய தோள்களிரு
புடைப ரந்துயர வடல்வலித்
தூணெ றிந்தனைய விரல்கள் கோதையொடு
சுவடெ றிந்ததொரு தொழில்படச்
சேணெ றிந்துநிமிர் திசைக ளோடுமலை
செவிடெ றிந்துடைய மிடல்வலோன்
நாணெ றிந்துமுறை முறைதொ டர்ந்துகட
லுலக மியாவையு நடுக்கினன்.

மிடல்வலோன் - வலிமை மிக்க இந்திரசித்து, பூண் எறிந்த - ஆபரணங்கள் ஒளி வீசப்பெற்ற, குவடு அனைய தோள்கள் - மலைச் சிகரங்களை நிகர்த்த (தனது) தோள்கள், இருபுடை பரந்து உயர - இருபுறங்களில் பரவி உயரவும், அடல் வலி தூண் எறிந்தனைய - மிக்க வலிமையுடைய தூண்கள் பொருந்தினாற் போன்ற, விரல்கள் - கை விரல்கள், கோதையொடு - ஒழுங்காக, சுவடு எறிந்தது ஒரு தொழில்பட - தழும்பேறுதலாகிய ஒரு தொழிலைப் பொருந்தவும், சேண் எறிந்து - நெடுந்தூரம் பரவி, நிமிர் திசைகளோடு மலை செவிடெறிந்து உடைய - உயர்ந்த திக்குகளும் மலைகளும் செவிடு பட்டுச் சிதறவும், முறை முறை தொடர்ந்து - வரிசையாகத் தொடரும்படி, நாண் எறிந்து - குணத் தொனி செய்து, கடல்

உலகம் யாவையும் நடுக்கினான் - கடலாற் சூழப்பெற்ற உலகனைத்தையும் (அப்பேரொலியால்) நடுங்கச் செய்தான்.

கோதை: ஒழுங்கு அல்லது வரிசை; (பிங்). சேணெறிதல், செவிடெறிதல்: யுத்த. *1413*: கடல் உலகம்; கடல் சூழ்ந்த உலகம். 'கடல் சூழ்ந்தவுலகெலாம் காக்கின்ற பெருமான்' பெரிய. பு. திரு: தொகை); இனி, பூணெறிந்த குவடு என்பதை இல்பொருள் உவமையாகக் கொண்டு, 'ஒரு மலைக்குப் பூண் கட்டியிருந்தால் அந்தப் பூண் தெறிக்கப் பருப்பது போன்று, தோள்வளை தெறிக்கப் புயம் பூரித்தது' என்றும் கூறுவர்.

பி - ம் 1. புடைபெயர்ந்துயர; பிடைவலத், மிடல்வலி

2 குவடெறிந்தது, நிலையெறிந்தது, செரிடெறிந்தது, தொடர்வறிந்தது

3. விரல்வலவன், விறல்விலோன்

4. பிடலுலகம். 81

1998. சிங்க வேறுகடல் போன்மு ழங்கிநிமிர்
 தேர்க டாய்நெடிது செல்கெனு
அங்க தாதிய ரனுங்க வானவர்க
 ளஞ்ச வெஞ்சின மனந்தமாச்
சங்க பாலகுளி காதி வாலெயிறு
 தந்த தீவிடமுமிழ்ந்து சார்
வெங்க ணுகமென வேகமா யுருமு
 வெள்க வெங்கணைகள் சிந்தினான்.

சிங்க ஏறு - ஆண் சிங்கம் நிகர்த்தவனான இந்திரசித்து, கடல் போல் முழங்கி - சமுத்திரம் போன்று பேராரவாரம் செய்து, நிமிர் தேர்கடாய் - உயர்ந்த இரதத்தினைச் செலுத்திக்கொண்டு, 'நெடிது செல்க எனு - (பகைவர் சேனையின் ஊடே) நீண்ட தூரம் விரைந்து செல்க' என்று - என்று, (தன் தேர்ப்பாகனை நோக்கிக்) கட்டளையிட்டு, அங்கத ஆதியர் அனுங்க - அங்கதன் முதலான வானர வீரர்கள் மனம் நோகவும், வானவர்கள் அஞ்ச - தேவர்கள் பயம் எய்தவும், உருமும் வெள்க - இடியும் (ஈடாகமாட்டாது) நாணவும், வால் எயிறு - வெள்ளிய பற்களினின்று, தந்த - வெளிப்படுகிற, தீ விடம் உமிழ்ந்து சார் - கொடிய நஞ்சினைக் கக்கிக்கொண்டு வந்து அடைகின்ற, சங்கபால குளிக ஆதி - சங்கபாலன் குளிகன் முதலிய,

வெம்கண் நாகம்என - கொடிய நாகங்கள் என்று கூறுமாறு, வெம் கணைகள் - கடுமையான அம்புகளை, வெம்சினம் - வெம்மைமிக்க கோபத்துடனே, அனந்தமா வேகமா சிந்தினன் - மிகப்பலவாகவும் விரைவுடனும் சிதறினன்.

சிங்கவேறு ; (யுந்த. 428) ; கடாவுதல் - செலுத்துதல். 'தேர் பரி கடாவி' (ஆரணிய. 525) ; 'காலை ஞாயிற்றுக் கதிர் கடாவுறுப்ப' (சிறுபாண். 10) ; செல்க எனு என்பது அகரஈறு குறைந்து நின்றது. அங்கத + ஆதி, குளிக ஆதி, வடமொழிச் சந்திகள் ; அனுங்குதல்; (பிங்.) ; அனந்தமாக என்பது ஈறு குறைந்தது ; ந + அனந்தம் என்பது சமாசம்; 'ஊரனந்தம் பெற்ற பேரனந்தம்' (தாயு. பரசிவ: 7); 'அனந்த சோதி' (நக்க. 183) ; சங்கபாலன், குளிகன் : திசை நாகங்கள் ; கிட்கிந்தா. 442 உரை காண்க. வாலெயிறு; பணிமொழி வாலெயிறூறிய நீர்' (குறள். 1121). இறுதியடி வீர மெய்ப்பாடு தோன்றக் கூறப்பட்டமை காண்க. வெங்கணுளி ; (கிட்கிந்தா. 227). 'ஆறினூர்களு மஞ்சினுருல கெலாமனுங்க' (யுந்த. இராவணன் தேர் : 25); 'பஞ்சியொளிர் விஞ்சு குளிர் பல்லவ மனுங்க' (ஆரணிய. 250),

பி - ம். 1. முழக்கி.

2. அங்கதாதிபன் ; வெஞ்சரம், னைவனந்தன்மார்.

3. வாளெயிறுகைத்து, வாலெயிறதுக்கி; வெவ்விடம்; சால், சேர்.

4. செங்கணுகம் ; உருமுசிந்து, உருமுமஞ்ச. 62

1999. சுற்றும் வந்துகவி வீரர் வீசிய
சூடர்த்த டங்கல்வரை தோய்மரம்
இற்றெ ரிந்துபொடி யாயு திர்ந்தன
வெழுந்து சேணிடை யிழிந்தபோல்
வெற்றி வெங்கணை படப்ப டந்தலைகள்
விண்ணி னூடுதிசை மீதுபோய்
அற்றெ ழுந்தன விழுந்து மண்ணிடை
யழுந்து கின்றன வனந்தமால்.

வெற்றி வெம்கணை படபட-(மேகநாதனுடைய) வெற்றிபொருந் திய கொடிய சரங்களை விடாமற்படுதலின், கவிவீரர் - குரக்கு வீரர்கள் சுற்றும்வந்து-(இந்திரசித்தினை) நாற்புறங்களிலும் சூழ்ந்து

கொண்டு, விசிய - அவன்மீது எறிந்த, சுடர் - ஒளியினையுடைய, தடகல்வரை - பெரிய கல் மலைகளும், தோய்மரம் - வானத்தைத் தீண்டும் உயர்ந்த மரங்களும், இற்று - முரிந்து, எரிந்து - தீப்பட்டு, பொடியாய் உதிர்ந்தன - தூளாகிச் சிதறி வீழ்ந்தன ; அற்று எழுந்தன - அறுபட்டு எழுந்தனவான, அனந்தம் தலைகள் - மிகப்பல வான (வாநரர்) சிரங்கள், சேண் இடை எழுந்து இழிந்தபோல் - (பறவைகள்) விண்ணிற் கிளம்பிக் கீழ் இறங்குவன போன்று, விண்ணின் ஊடு - ஆகாயத்தில், திசைமீது போய் - (பல திக்குகளினும்) சென்று விழுந்து - (பூமியில்) விழுந்து, மண்ணிடை அழுந்துகின்றன - (வீழ்கின்ற விசையால்) மண்ணில் அழுந்தலாயின. ஆல் - அசை.

தோய்தல் - வானளாவுதல்.

பி - ம். 1. தடங்கல்; மாமரம், தொன்மரம்,

2. இற்றெடிந்து ; ஒடிந்தன, உடைந்தன ஏரிந்து மண்ணிடை ; போச்.

3. வெம்படை.

4. விண்ணிடை. 63

2000. சிலைத்த டம்பொழி வயக்க டும்பகழி
செல்ல வொல்கினர் சினத்தினல்
உலைத்தெ றிந்திட வெடுத்த குன்றுதொ
றுடற்ப ரங்கள்கொ டொதுங்கினர்
நிலைத்து நின்றுசின முந்து செல்ல வெதிர்
சென்று சென்றுற நெருக்கலான்
மலைத்த லங்களொ டுரத்த லங்கழல
வூடு சென்றபல வாளியே.

(சில குரக்கு வீரர்கள்), சிலைதடம் பொழி - (இந்திரசித்தின்) வில்லிடத்தில் இருந்து பொழிகின்ற, வயம்கடு பகழி - வன்மையையும் விரைவினையும் உடைய வாளிகள், செல்ல - (தம் உடல்களில்) ஊடுருவவின், ஒல்கினர் - தளர்ச்சியுற்றவராய், சினத்தினல் - (அரக்கன்மீது எழுந்த) கோபத்தினல், உலைத்து - வருந்தி, எறிந்திட எடுத்த குன்றுதொறு - (அவன்மீது) வீசுதற்காகத் (தாம்) கையிற் கொண்டுள்ள மலைகள் தோறும், உடல் பரங்கள் கொடு

ஒதுங்கினர் - (தங்கள் உடற்பாரங்களை ஒடுக்கிக் கொண்டு) பதுங்கி, நிலைத்து நின்று - நிலையாக இருந்து, சினம் முந்து செல - அவன்மீது தாம் கொண்ட வெகுளி, (தம்மை யிழுத்துக் கொண்டு) முன்னே போக, எதிர் சென்று சென்றுற நெருக்கலரன்- (அவனுக்கு) நேராகச் சென்று சென்று (அவனை) மிகவும் அணுகவே, பலவாளி - (மீண்டும் அவன் வில்லினின்று எழுந்த வேறு) பல அம்புகள், மலை தலங்களொடு - (அவர்கள் கையிலே தாங்கியுள்ள) மலைகளுடனே, (அவற்றின் மறைந்துள்ள அவர்களின்), உரம் தலம் கழல ஊடு சென்ற - மார்பு வழியாக வெளிப் படுமாறு, ஊடு சென்ற - (அவற்றை ஊடுருவிப் போயின).

இந்திரசித்து விடுத்த அம்புகள் விடாது தம்மீது தைத்தலின், அவன் எதிர் செல்லத் தளர்ந்த குரக்கு வீரர்கள், தாம் கைக் கொண்ட மலைக்குள்ளாகவே தமது உடலைச் சுருக்கிக் கொண்டு, தந்திரமாகப் பிழைத்து, பின் அவனை அணுகிய அளவில், மீண்டும் அவன் எய்த வாளிகள் அவர்கட்கு மறைவளித்த மலைகளையும் துளைத்துக் கொண்டு குரக்கு வீரர் தம் மார்பினை ஊடுருவின. ஒல்கினர் முற்றெச்சம். உலைந்து உலைத்து என வலித்தது. எதிரியின் முன் நிற்கமாட்டாமல் பதுங்க நேர்ந்தமையின் அவர்கள் உடல் அவர்கட்குப் பெரும் பொறையாயிற்று என்பார். 'உடற் பரங்களை என்றார். (ஒப்பு) பராவெஞ்சிலை வீரம் பழிப்பதே' (கிட்கிந்தா. 319). அயோத்தி. நகர்நி. 138-ம் காண்க.

பி - ம். 2. கடுங்கணைகள்.

2. குன்று கொடுடற் பரங்கள் கொடொடுங்கிறர்.

3. நினைத்து ; நின்ற ; சென்றிடை ; நெருக்கினன்.

4. மலைக்கரங்களொடு ; தலங்கிழிய ; ஊடுபோனபல வாளியால். 64

2001. முழுத்த மொன்றிலொரு வெள்ள வானர
முடிந்து மாள்வன தடிந்துபோய்க்
கழுத்த கையநிமிர் கால வாலபல
கண்ட மானபடி கண்டுநேர்
எழுத்தொ டர்ந்தபடர் தோள்களா லெறிய
வெற்ற வுற்றன வெழுந்துமேல்
விழுத்த பைந்தலைய வேனு'மால்வரைகள்
வீசி வீசியுடன் விழுமால்.

முழுத்தம் ஒன்றில் - ஒரு முகூர்த்த நாழிகை அளவில், ஒரு வெள்ளம் வானரங்கள், முடிந்து - (ஆயுட்காலம்) முடியப்பெற்று, தடிந்து போய் - (அரக்கன் அம்பினால்) துணிபட்டுப்போய், மாள்வன - இர்வனவான, கழுத்த - கழுத்தையுடையனவும், கைய - கைகளையுடையனவும், நிமிர் கால-நிமிர்ந்த கால்களையுடையனவும், வால - வாலையுடையனவுமாகி, கண்டம் ஆனபடி - பல துண்டங்கள் ஆன விதத்தை, நேர் கண்டு - கண்கூடாக நோக்கி, எழு தொடர்ந்த படர் தோள்களால் - இரும்புத் தூண் ஒத்த, பரந்த தங்களது கரங்களால், எறிய-(அவன்மீது மலைகளை) வீசுவதற்கும், எற்ற - (அவனைத்) தாக்குதற்கும், மேல் உற்றன எழுந்து-(மேலே உயர்ந்து) எழுந்தனவான சில குரங்குகள், (அவன் வாளிகளால் அறுபட்டு), விழுத்த - (அவன் மேல்) வீழச்செய்த, பைந்தலையன் - பசுமையான சிரங்களை உடையனவாய், (தாம் கையில் ஏந்தியுள்ள) வேணுமால் வரைகள் வீசி வீசி - மூங்கிற் காட்டினையுடைய பெரிய மலைகளையும் (அந்த அரக்கன் மீது) விடாமல் எறிந்து, (அத்தலைகளோடும் மலைகளோடும்) வீழும் - தாமும் ஒருங்கே (அவன்மீது) வீழ்வன ஆயின.

முழுத்தம் : கண்ணாடிப்புறத்து உருட்டின உழுந்து விழுந்த நேரம். இந்திரசித்து எய்த அம்புகளால் உறுப்புக்கள் அறுபட்டு ஒரு வெள்ளம் வானரங்கள் மடிந்தனவாக, வேறு சில குரங்குகள் அவனைத் தாக்கக் கருதி விண்மீது தாவின. பின்னர் அவைகளும் அரக்கன் அம்புகளால் துணிபட்டு வீழ்ந்த போதிலும், வீழ்கின்ற பொழுதே அரக்கன் தலையிலும் தோள்களிலும் தாம் ஏந்தி நின்ற மலைகளை வீசியும் தம்முடல்களையும் அவன்மீது வீழச்செய்தும், அவனை ஊறுபடுத்தின என்று குரங்குகளின் வீரம் குறிக்கப் பெற்றது. 'அடுசிலை பகழி தொடுத்து விடப்புகும், அளவினிலயமெதிர் விட்டவர் வெட்டின, உடல்சில விருதுணி பட்டன பட்டபின், ஒருதுணி கருதுமி லக்கை யழித்தன, உருவிய பிறைமுக வப்பக ழித்தலை, அரிதரி திதுவுமெ னப்பரி யுய்ப்பவர், அடியொடு முடிகடு ணித்து விழுந்துமே; (கலிங். 421, 422); 423,

424ம் காணத்தகும். முழுத்தம்: முகூர்த்தம் என்ற வடசொற் சிதைவு, மூன்றே முக்கால் நாழிகை கொண்ட காலம்.

பி - ம். 1. முடிந்தருள்ளன ; கடிந்து.

3. தொடர்ந்தவடர், தொடர்ந்தபல, தொடர்ந்தமிரிர் ; தோளர்போ நெரிய ; வற்றின, அற்றன ; விழுந்து.

4. நலைகள் விரவிச ; உடல்வியுமால், மிளுமால். 65

2002. அற்ற பைந்தலை யரிந்து சென்றன
வயிற்க டுங்கணை வெயிற்கள் போற்
புற்ற டைந்தகொடு வெவ்வ ராவினெடு
நாக லோகமது புக்கவால்
வெற்ற வெள்ளிடை விரிந்து போவதொரு
மேடு பள்ளம்வெளி யின்மையால்
உற்ற செங்குருதி வெள்ள முள்ளதிரை
யோத வேலையொடு மொத்ததால்.

அற்ற - துணிபட்ட, பை தலை - (குரங்குகளின்) பசியதலைகளை, அரிந்து - அறுத்துக்கொண்டு, சென்றன - (அப்பாற்) போன, அயில் கடுகணை - கூர்மையினையும் விசையினையும் உடைய (அரக்கனுடைய) வாளிகள், வெயில்கள் போல்-(சிறு புழைகளின் உள்ளும் ஊடுருவிச் செல்லும்) வெயில் ஒளிகள் போன்றும்,புற்று அடைந்த- புற்றில் புகுந்த, கொடு வெவ் அராவின் - மிகக் கொடிய பாம்புகள் போன்றும், நெடு - ஆழ்ந்த, நாகலோக மது புக்க - பாதாள உலகத்தை அடைந்தன; மேடு பள்ளம் வெளி இன்மையால், இடை விரிந்து போவது ஒரு - மேடும் பள்ளமும் இவ்விரண்டும் அற்ற சம பூமியும் என்று வேற்றுமை சிறிதும் இல்லாதபடி செய்துகொண்டு, போவது ஒரு வெற்ற வெள்ளிடை-செல்கின்ற ஒரு வெட்ட வெளியில், உற்ற - ப்ரவிச் செல்வதாகிய (தன்மையை பொருந்திய), செம் குருதி வெள்ளம்-சிவந்த உதிரப் பெருக்கானது உள்ள -(இயற்கையால்) உள்ள, திரை ஓதம் வேலையொடும் ஒத்தது - அலைகளையும் பொங்குதலையும் உடைய கடலோடும் ஒத்திருந்தது. ஆல் : அசை.

உவமையணி. வாநரங்களின் உருவத்தில் ஊடுருவி அவைகள் கீழ் விழ்ந்த பின்னரும் தரையினைத் துளைத்துப் பாதாளம் வரையில் சென்ற அம்புகட்குச் சிறு துவாரங்களின் ஊடே கீழ் நோக்கி

நெடுந்தூரம் சென்று ஒளிரும் கிரணங்களும், புற்றில் நுழைந்து செல்லும் அரவமும் உவமைகள். பெரு வெள்ளம் பரவுவதற்கு மேடு பள்ளம் சம நிலம் என்று வேற்றுமையின்மையின் ‘மேடு பள்ளம் வெளியின்மையால் வெற்ற வெள்ளிடை விரிந்து போவது’ எனப்பட்டது.

பி - ம். 1. நிந்தின ; வெயிற்கொள்பொற்.

2. அடர்ந்ததொரு ; அராவிநெடு ; புக்கதால்.

3. யிரிந்து, விரைந்து.

4. வைங்குருதி ; அள்ளுதிரை ; வேலையினை. 66

**2003.** விழிக்கு மேல்விழிய நிற்கின் மார்பிடைய
மீளு மேன்முதுக மேனிய
கழிக்கு மேலுயர வோடு மேனெடிய
கால வீசினிமிர் கையவாய்த்
தெழிக்கு மேலகவு நாவ சிந்தையின
வுன்னு மேற்சிகர மியாவையும்
பழிக்கு மேனிய குரக்கின் மேலவன்
விடுங்கொ டும்பகழி பாயவே.

சிகரம் யாவையும் - மலைச் சிகரங்களை எல்லாம், பழிக்கும் மேனிய - பழிக்கும்படியான (மிகச் செறிவும் பெரிதும் வலியதுமான) உடலையுடைய குரங்குகளின் மேல், அவன் - (அந்த இந்திரசித்து), விடும் : எய்த, கொடு பகழி - கொடிய வாளிகள், பாயவே - (தாம்) பாயும்போது, விழிக்கு மேல் - குரங்குகள் (கண்களைத்) திறந்து நோக்கினால், விழிய - அவ்விழிகளின்மேல் விழுவனவும், நிற்கின் - எதிர்த்து நிற்பின், மார்பிடைய - மார்பின்மீது பாய்கின்றனவும், மீளுமேல் - புறந்தந்து ஓடுமாயின், முதுக - முதுகின் மீது தாக்குகின்றனவும், கழிக்கு மேல் மேனிய - (அந்த அம்புகளைத் தம் உடலிற் படாதபடி ஒதுக்கித் தப்ப முயலுமாயின்) அவ்வுடம்பிலெங்கும் எய்வனவும், உயர ஓடுமேல் - உயரமாகத் தாவி ஓடுமாயின், நெடிய கால - நீண்ட கால்களின்மேல் தாக்கினவும், வீசின் - (கைகளை) வீசுமாயின், நிமிர் கையவாய் - உயர்ந்த கைகளில் தைப்பனவும், தெழிக்கு மேல் - (வாயினால்) அதட்டுமாயின், அகவும் நாவ - அசைகின்ற நாவிடத்தனவும் ஆகி, உன்னு மேல் - (மனத்தால்) நினைக்கு

மாயின், சிந்தையின - அம் மனத்தின்மேற் செல்வனவும் ஆயின. ஏ : அசை.

வானரங்களின் ஒவ்வோர் உறுப்பிலும் இந்திரசித்தின் அம்புகள் தைத்தமை அணிபெற உரைக்கப்பெற்றது. தன்மை நவிற்சியணி. அருவமான மனத்தினையும் எய்ததாக இந்திரசித்தின் அம்பின் சிறப்பினைக் கூறியவாறு. விழிய, மேனிய முதலியன குறிப்பு முற்றுகள்.

பி - ம். 1. விழியினிற்கும் ; மார்பிடையின், மார்பிடையும் ; விழுமேன் ; முதுகை மேனியை.

2. கிழிக்குமே லுயிரிலோடும், கிழிக்குமே லுயிரைவேருப் ; கால்கள் வீரி, காலபார, காலைவிரி.

3. எனவுன்னுமேற்.

4. குரங்கு, குரங்கின் ; கடும்பகழி ; பாயுமே. 67

2004. மொய்யெ டுத்தகணை மாரி யாலிடை
முடிந்த தொன்றுமுறை கண்டிலார்
எய்வி டத்தெறியு நாணி னேசையல
தியாது மொன்றுசெவி யுற்றிலார்
மெய்யெ டுத்தகவி வெள்ள மியாவையும்
விழுந்து போனவெனும் விம்மலாற்
கையெ டுத்தன குரங்கி னேடுமுறை
கண்டு தேவர்கள் கலங்கினர்.

தேவர்கள் - (விண்மிசை நின்று போரைக் கண்டிருந்த) வானவர்கள், (இந்திரசித்தாகிய மேகம் சொரிந்த) மொய் எடுத்த கணை மாரியால் - இகல் கருதி எய்த அம்பு மாரியால், இடை முடிந்தது ஒன்றும் முறை கண்டிலார் - நடுவில் நிகழ்ந்த செயல்களுள் ஒன்றும் முறையாகப் பார்க்கவில்லை; எய்வு இடத்து - (அரக்கன்) அம்பு விடுக்கும் கால், எறியும் நாணின் ஓசை அலது - (கைவிரலால்) தெறிக்கின்ற வில் நாணிலிருந்து எழுகின்ற ஓசையல்லாது, யாது ஒன்றும் செவி உற்றிலார் - பிறிதொன்றும் கேட்டறிந்தார் இல்லை; 'மெய் எடுத்த கவி வெள்ளம் யாவையும் - உடல் படைத்துள்ள குரங்குக் கூட்டங்கள் எல்லாம், விழுந்துபோன - இறந்துபட்டன', எனும் விம்மலால் - என்ற துயரத்தால், கை எடுத்தன குரங்கின் - கைகளை

மேல் உயர்த்தலவான சில வாநரங்களின், ஓடும் முறை கண்டு கலங்கினர்-ஓடும் தன்மையையே பார்த்து மனக்கலக்கம் உற்றனர்.

மொய் : போர் : 'மொய் வெல்லும் குருதி வேலான்' (சீவக. 1704) ; விம்மலாற் கை எடுத்தல் : துயரத்தின் மெய்ப்பாடு. மெய் யெடுத்த கவி வெள்ளம் : குரக்குருவான எல்லாம் என்க ; கை யெடுத்தல் : துயரக் குறிப்பு.

பி - ம். 1. இடை கண்டிலர்.
2. எய்யும் விற்கை யெறி, எய்விடத்தி னெறி ; ஒன்றுமிடை.
3. விளிந்துபோன.
4. அடிந்தன ; கண்ட. 68

2005. கண்ட வாநர மநந்த கோடிமுறை
கண்ட மானபடி கண்டவக்
கண்டன் மாறொருவ ரின்மை கண்டுகணை
மாறி னன்விடுத லின்மையாய்க்
கண்ட காலையில் விலங்கி னனிரவி
காதல் காதுவதொர் காதலாற்
கண்ட கார்சிதைய மீது யர்ந்தொளிர்
மராம ரஞ்சுலவு கையினன்.

கண்ட - (தன்) கண்ணிற்பட்ட, அநந்த கோடி வாநரர் - எண்ணிறந்த கோடிக் கணக்கான குரங்குகள், முறை-படிப்படியாக, கண்டம் ஆன படி கண்ட அ கண்டன் - துண்டு துண்டாகப் போன தன்மையைக் கண்ணுற்ற தீயவனான அந்த இந்திரசித்து, மாறு ஒருவர் இன்மை கண்டு - பகைவர் எவரும் இல்லாமையை நோக்கி, விடுதல் இன்மையாய் - ஏவுதலின்றி, கணை மாறினன் - அம்புகள் ஏவுதலை நிறுத்தினன், (அப்போது) இரவிகாதல் - சூரியனுடைய பிரிய புதல்வனான சுக்கிரீவன், கண்ட காலையில் - (அதனைப்) பார்த்த அளவில், காதுவது ஓர் காதலால் - (அவனைத்) தாக்குவதாகிய ஓர் ஆசையால், கண்ட கார் சிதைய - காணப்படுகின்ற மேகங்கள் சிதைந்து கெடுமாறு, மீது உயர்ந்து ஒளிர் மராமரம் சுலவு கையனன் - மேலே ஓங்கி விளங்கும் ஓர் மராமரத்தைப் பெயர்த்து சுழற்றும் கையனாய்; எய்தி என்ற அடுத்த கவியொடு தொடரும்.

முதலடியில் பிராச இனிமை படித்துக் காண்க. கண்டன் - வீரன். 'தெவ்வர் புரமெரி கண்டா' (கோயிற்பு. நடராச. 26); முள்போற் கொடியவன் எனினுமாம். காதல் காதுவதோர் காதல்: பிராசம் காண்க. இச்செய்யுள் இனியதோர் சந்தச் செய்யுள். சுலதல் - சுழற்றுதல். (நைடத. அன்னத். 45); உறச்சுலவிச் சூன்றிடலும் (குசேலோ. வைகுந்த. 54); கார் சிதைய சுலவு கையி னன் என இயைக்க,

பி - ம். 2. கனாட; மாறேருவன்; விடுதலன்னதாற், விடுதல் கன்னிற்.
3. காதலன் சமர்செய்; இரவி செம்மல்.
4. கண்டகாரற; மிதுயர்ந்ததொர். (19)

2006. உடைந்து தன்படை யுலைந்து சிந்தியுயி
ரொல்க வெல்செரு வுடற்றலாற்
கடைந்து தெள்ளமுது கொள்ளும் வள்ளலென
மேனி மிர்ந்ததொர் கறுப்பினன்
இடைந்து சென்றவனை யெய்தி யெய்தரிய
காவல் பெற்றிக லியற்றுவான்
மிடைந்து நின்றபடை வேலை கால்தளர
வீசி னனிருதர் கூசினர்.

தன்படை - தனது (குரங்குச்) சேனை, உடைந்து உலைந்து - மனம் உடைந்து வருந்தி, சிந்தி - சின்னபின்னமாய், உயிர் ஒல்க - உயிர் நீங்குமாறு, வெல் செரு - (அரக்கன்) வெல்கின்ற போரை, உடற்றலால் - தீவிரமாகச் செய்ததனால், கடைந்து தெள் அமுது கொள்ளும் வள்ளல் என - (பாற்கடலைக்) கடைந்து வாரித் தெள்ளிய அமுதத்தைக் கொள்ளும் வண்மையுடையவனை வாலி போன்று, மேல் நிமிர்ந்தது ஓர் கறுப்பினன் - மேலோங்கப் பெற்ற வெகுளியனாய், இடைந்து - (போரை நிறுத்தி) விலகி, சென்றவனை எய்தி - செல்கின்ற அந்த மேகநாதனை அணுகி, எய்தரிய காவல் பெற்று - பிறரால் அடைதற்கருமையான காவலையடைந்து, இகல் இயற்றுவான் மிடைந்து - போர் செய்யும் பொருட்டு நெருங்கி, நின்ற படை வேலை - நின்ற (இந்திரசித்தின்) சேனைக்கடல், கால் தளர விசினன் - நிலைகுலையுமாறு (அம் மராமரத்தை), வீசினன்.

சுழற்றி எறிந்து போர் புரிந்தான்; (அதனால்), நிருதர் கூசினார் - அரக்கர் கூச்சங் கொண்டனர்.

வெல் செரு: வினைத்தொகை. கறுப்பு - சினம்; 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள' (தொல். உரி. 76). ஒல்க வல் செரு, கொள்ளும் வள்ளல், எய்தி எய்தரிய, வேலை கால் தளர, வீசினார் கூசினார் என்ற தொடர்களில் இணை எதுகைநயம் காண்க.

பி - ம். 1. சித்வ

2. கடைந்த; வண்ணமென; கடுப்பிறன்.

3. அடைந்து; மேலிகலியற்றுவான், பெற்றுகலியற்றுவான். 70

2007. சுற்று நின்றபடை சிந்தி யோடவொரு
மராம ரங்கொடு துகைத்துளான்
வெற்றி கண்டுவலி நன்று நன்றென
வியந்து வெங்கணை தெரிந்தவன்
நெற்றி யின்றலை யிரண்டு மார்பிடை
யொரஞ்சு நஞ்சென நிறுத்தவன்
பற்றி வந்தமரம் வேறு வேறுற
நொறுக்கி நுண்பொடி பரப்பினான்.

(இந்திரசித்து), சுற்று நின்ற படை சிந்தி ஓட - (தன்னைச்) சூழ்ந்துநின்ற சேனைகள் சிதறியோடும்படி, ஒரு மராமரம் கொடு துகைத்துளான் வெற்றி கண்டு - ஒரு மராமரத்தைக்கொண்டு அழித்தவனான சுக்கிரீவனுடைய வென்றியைக் கண்ணுற்று, 'வலி நன்று நன்று - (இவன்) ஆற்றல் மிகவும் நன்றாயுள்ளது', என வியந்து - என்று (அவனைப்) பாராட்டிப் (பின்னர்), நஞ்சு என வெம் கணை தெரிந்து - விடத்தைப் போன்று கொடிய சரங்களைச் (சிறந்தனவாக) ஆராய்ந்தெடுத்து, அவன் நெற்றியின் தலை - அவனது நெற்றியினிடத்தில், இரண்டு - இரண்டு அம்புகளையும், மார்பிடை ஓர் அஞ்சும் - மார்பிடத்து ஐந்து சரங்களையும், நிறுத்து - அழுந்துமாறு நிறுத்தி, அவன் - அந்த வானரேந்திரன், பற்றி வந்த மரம் வேறு வேறு உற நொறுக்கி - கையிற் பிடித்துவந்த மராமரத்தை தனித்தனித் தூளாகுமாறு செய்து, நுண்பொடி பரப்பினான் - சிறிய பொடிகளாகப் பரவச் செய்தான்.

வெற்றிகண்டு வியந்தது - வீரச்செயல் : 'வீரரை யார் வியவாதார்' (கிட்கிந்நா. 297); மற்றும், யுத்த. 1226-1241 ; யுத்த. 4, 5. நெற்றியின் தலை : தலை : ஏழன் உருபு. நஞ்செனவெங்கணை எனக்கொண்டுகூட்டாக்கிப் பொருள்தரப்பெற்றது. மரம் : மேலே குறித்த மராமரம்.

பி - ம். 1. சுற்றி ; தொலைந்துளான்.
2. விரைந்தவன்.
2. நிறுத்தபின், நிறுத்தினன்
4. கூறுற ; படுத்தினன். 71

## அநுமன் ஒருமலையை எறிய அதனை இந்திரசித்துத் தூளாக்குதல்

2008. அக்க ணத்தநும னால காலமென
லாய தோர்வெகுளி யாயினன்
புக்க னைத்துலக முங்கு லுங்கநிமிர்
தோள்பு டைத்துருமு போலுரு
இக்க ணத்தவ னிறக்கு மென்பதொரு
குன்றெடுத்து மிசை யேவினன்
உக்க தக்கிரி சொரிந்த வாளிகளி
னூழிலாத சிறு பூழியாய்.

அ கணத்து - அப்போது, அநுமன் - அநுமன், ஆலகாலம் எனல் ஆயது ஓர் வெகுளி ஆயினன் - ஆலகால விடம் என்று கூறுமாறு எழுந்ததொரு (மிகவும் கடுமையான) சினத்தை மேற்கொண்டவனாய், புக்கு - (அங்குப்) புகுந்து, அனைத்து உலகமும் குலுங்க - எல்லா உலகமும் நடுங்கும்படி, நிமிர் தோள் புடைத்து - (தனது) உயர்ந்த புயங்களைத் தட்டி, உருமுபோல் உரு - இடி போன்று பொருந்தி, (பெருமுழக்கம் செய்து) 'இகணத்து அவன் இறக்கும் - இப்பொழுதே அந்த அரக்கன் மரிப்பன்' என்பது - என்று கண்டோர் கூறும்படி, ஒரு குன்று எடுத்து மிசை ஏவினன் - ஒப்பற்ற ஓர் மலையினைப் பெயர்த்தெடுத்து (அவ்வரக்கன்) மீது வீசினன் ; (அப்பொழுது) சொரிந்த வாளிகளின் அ கிரி ஊழ் இலாத சிறு பூழியாய் உக்கது - (இந்திரசித்து) பொழிந்த அம்புகளால் அம்மலை முறை பிறழ்ந்து சிறு துகளாகி உதிர்ந்துவிட்டது.

ஆலகாலம்: கடல் கடைந்தபோது அதனின்று எழுந்த பாம்பின் விடம்: 'அந்தக் காலத்தவ்வால காலத்துடன் பிறந்தோர்' (யுத்த. படைக் காட்சி: 14); 'ஆலகாலத்தினமிழ்தின் முன் பிறந்த போரரக்கர்' (யுத்த. படைக் காட்சி: 26); 'ஆலகாலந்திரண்டன்ன யாக்கையர்'. இஃது ஆலம் எனவும் குறுகி வழங்கும் (ஆரணிய. 694, 1149); 'ஆலத்தினலமிர் தாக்கிய கோன்' (திருக்கோவை, 27); ஆலாலம் என்றும் திரிந்து வழங்கும்: 'ஆலால மன்னுள்' (சுந்தர. 76); உரு: செய்யா என்னும் வாய்பாடு. கீழ்மேலாகவும் மேல் கீழாகவும் முறையின்றிக் கிடந்தமையின் 'ஊழிலாத' எனப் பட்டது.

பி - 1. ஆயவன், அன்மினுற், அன்னினுன்

2. குலுங்கவுயர்

3. இக்கணத்தினில்; இறுக்கும். 72

## இந்திரசித்துக்கும் அநுமனுக்கும் நடந்த வீரவுரை

2009. நில்ல டாசிறிது நில்ல டாவுனை
நினைந்து வந்தனன் முனைக்குநான்
வில்லெ டாமைநின தாண்மை பேசியுயி
ரோடு நின்றுவிளை யாடினுய்
கல்ல டாநெடு மரங்க ளோவரு
கருத்தி னேன்வலி கடப்பவோ
சொல்ல டாவென வியம்பி னுனிக
லரக்க னையனிவை சொல்லினுன்.

(அநுமன் எறிந்த பெரிய மலை தூளாக, அப்பொழுது, இகல் அரக்கன் - போர் வன்மையும் பகைமையும் உடைய அரக்கனான இந்திரசித்து, (அநுமனைப் பார்த்து), 'நில் அடா, சிறிது நில் அடா - நில் அடா சற்று நில்லடா; உனை நினைந்து முனைக்கு வந்தனன் - உன்னுடன் போர் புரிவது கருதி இந்த அமர்க்களத் துக்கு வந்தேன்; வில் எடாமை - நீ வில் கைக்கொள்ளாமலே, நினது ஆண்மை பேசி - உன்னுடைய வீரத்தைப் புகழ்ந்து கொண்டு, உயிரோடு நின்று விளையாடினுய் - உயிருடன் நின்று

விளையாடுகின்றனை ; வரு கருத்தினோன் - (உன்னுடன் பொருதற்கு வரும்) எண்ணம் உடையவன் ஆன என்னுடைய, வலி கடப்ப - எனது ஆற்றலை அடக்க வல்லன, கல் நெடுமரங்களோ - கற்களும் உயர்ந்த மரங்களும் தாமோ? அடா அடா சொல் - அடா அடா (நீ) சொல்வாயாக, 'என - என்று, இயம்பினன் - என்று இகழ்வு புலப்படச் சொன்னான் ; ஐயன் இவை சொல்லினன் - அநுமன் இவ்வார்த்தைகளைப் பகர்ந்தான் ; அவற்றை அடுத்துவரும் இரண்டு கவிகளிற் காண்க. ஓ : வினா.

முனை - போர் முனை ; வில்லெடாமை - வில் எடாமல் : வில் வீரனாகிய தன்னுடன் விற்றாங்கிப் பொருவதே தகுதி; கல்லும் மரங்களும் கொண்டு பொருதல் தகுதியன்று என்பது அரக்கன் குறிப்பு : விளையாடினாய் : நிகழ்வு இறப்பில் வந்தது. இயல்பினன் வந்த காலவழுவமைதி. இச்செய்யுள் வீரவாதத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

பி - ம். 1. நில்லெடா
3. கல்லெடா ; மரங்களோடிரு கரத்தினேன், மரங்களோ விருகரத்தினேன் ; கடக்குமோ, கடக்கவோ
4. சொல்லெடா : இது. 73

2010. வில்லெ டுக்கவுரி யார்கள் வெய்யசில
வீர ரிங்குமுளர் மெல்லியோய்
கல்லெ டுக்கவுரி யானு நின்றன
னதின்று நாளை யிடை காணலாம்
எல்லெ டுத்த படை யிந்தி ராதிய
ருனக்கிடைந் துயிர்கொ டேகுவார்
புல்லெ டுத்தவர்க ளல்லம் வேறுசில
போரெ டுத்தெதிர் புகுந்துளேம்.

' இங்கும் - எம் பக்கத்திலும், வில் எடுக்க உரியார்கள் வெய்ய சில வீரர் உளர் - வில் தாங்கிப் போர் புரியும் திறம் உள்ளவர்கள் ஆன கொடிய வீரர்கள் சிலர் இருக்கின்றனர் ; மெல்லியோய் - மெலிந்தவனே ! கல் எடுக்க உரியானும் நின்றனன் - கல் எடுத்துப் பொர வல்லவனும் நிற்கின்றான் ; அது இன்று நாளை இடை

காணலாம் - அங்ஙனம் இருத்தலை இரண்டொரு நாட்களிலேயே காணலாகும்; எல் எடுத்த படை இந்திராதியர் - ஒளி தங்கிய ஆயுதங்களை ஏந்திய இந்திரன் முதலான தேவர்கள், உனக்கு இடைந்து உயிர் கொடு ஏகுவர் - உனக்குத் தோற்று உயிர் தாங்கிச் செல்வார்கள்; (நாங்கள்), புல் எடுத்தவர்கள் அல்லம் - (அந்த இந்திராதியர் ஒப்பப்), புல்லை வாயினுற் கௌவினவர்கள் அல்லோம்; வேறு சில போர் எடுத்து எதிர் புகுந்துளேம் - வேறு சில போர் ரகங்களைத் தொடங்கி எதிராக வந்துள்ளோம்.

போர்ப் பரம்பரை வேண்டும் என்பார் உரியார்கள் எனப் பட்டது. மெல்லியோய்: இகழ்ச்சி. 'இந்திராதி தேவர்களை வென்ேறும் என்று நீ தருக்குகின்றனை; என் சார்பில் உள்ள வீரர் முன் நிற்பின் உன் வலியின்மை பெறப்படும்' என்ருன் அநுமன். போரில் தோற்றவர் வாயினுற் புல்லைக் கௌவுதல் மரபு; கல் எடுக்க உரியானும் நின்றனன்; நீ வில் வீரர்க்குத் தோற்று மரிக்க, உனக்குக் கல் எடுத்தல் (பாஷாண ஸ்தாபனம்) ஆகிய சவச் சடங்கைப் புரிதற்குரிமையுள்ள வீடணன், இங்கு எம் தரப்பில் உள்ளான் என்றும், உனக்கு எதிராகக் கல்லெடுத்துப் பொரற்குரிய யானும் உள்ளேன்; என்னை யொத்த வீரரும் உள்ளார்கள் என்று இரு பொருள்பட மொழிந்தான் அநுமன். அல்லம்: தன்மைப் பன்மை வினைமுற்று.

பி - ம். 1. எடுக்கவும்; உரித்தெமையர் சிலர், உரித்தெமைய சில; உரியார்களெம்மையர், உரியார்களாய சில; மெல்லியோம்,

2. உரியோமு நின்றனம்; காண்கலாம்.

3. எடுத்தபடி உனக்குடைந்து; ஏகினர், ஏகுநாட்.

4. வென்று சில; எடுத்திடை.



2011. என்னொ டேபொருதி யோவ தன்றெனி
னிலக்கு வப்பெயரி னெம்பிரான்
தன்னொ டேபொருதி யோசொ லுந்தைதலை
தள்ள நின்றதனி வள்ளலாம்
மன்னொ டேபொருதி யோவு ரைத்தது
மறுக்கி லேமென வழங்கினன்
பொன்னோ டேபொருவி னல்ல தோன்றொடு
பொதுப்ப டாவுயர் புயத்தினன்.

பொற்றெடே பொருவின் அல்லது ஒன்றொடு பொதுபடா உயர் புயத்தினன் - பொன் மயமான மேரு மலையுடன் நிகர்ப்ப தன்றிப் பிறிதொரு பொருளோடு பொதுத் தன்மை பொருந்த மாட்டாத (உவமையற்ற) உயர்ந்த தோள்களை யுடையவன் ஆன அநுமன், 'என்னொடே பொருதியோ - (நீ) என்னுடனே போர் புரி வாயோ? அது அன்று எனின் - அப்படியல்லாவிடின், இலக்குவன் பெயரின் எம்பிரான் தன்னொடே - இலக்குவன் என்னும் பெயரினை எமது தலைவனுடனே, பொருதியோ - போர் இயற்றுவாயோ? உந்தை தலை தள்ள நின்ற தனி வள்ளல் ஆம் - உனது தந்தையின் (இராவணனுடைய) தலைகளை அறுத்து வீழ்த்துவதற்காகப் போந்துள்ள, தனி வள்ளல் ஆம் - ஒப்பற்ற தன்மையன் ஆன, மன்னொடே பொருதியோ - இராமபிரானுடனே போர் புரிவாயோ? சொல்: பகர்வாயாக; உரைத்தது மறுக்கிலேம் - (நீ) எதைச் சொல்லினும் அதை மறுக்க மாட்டோம்'; என வழங்கினன் - என்று கூறினன்.

அநுமன் திர்க்கதரிசியாக எக்காலமும் உணர வல்லவன் ஆகலின் 'உந்தை தலை தள்ள நின்ற தனி வள்ளல்' என்று இராவண சங்காரத்திற்காக அவதரித்துள்ள இராமனைக் குறித் தான். உந்தை என்பது உன் தந்தை என்பதன் மரூஉ. ஈற்றடிக்கு; (கிட்கிந்தா. 566); (ஆரணிய. 38, 1114); 'பொன்னொத்த மேனி புயலொத்த தடக்கையானை' (அயோத்தி. நகர்நீ; 126); 'செம்பொற் பருவரையும் நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார் கள்' (பால. குலமுறை; 22); உவமை அணியில் உபமான உப மேயங்கட்குப் பொதுத் தன்மை குறிப்பர்; பொன் மலையன்றி வேறு எந்தப் பொருளிலும் இங்கு, அந்தப் பொதுத்தன்மை இல்லை எனப் பட்டது. பொருவுதல்: ஒத்தல்.

பா - ம். 1. பெயரேன்.

2. பொருதியோவுன்.

4. பொருவநன்றி வேறொரு பொருப்படா. பொருவிலன்றி.

2012. எங்கு நின்றன விலக்கு வப்பெயரவ்
வேழை யெம்பியதி காயனும்
சிங்கம் வந்தவனை வென்று தன்னுயி
ரெனக்கு வைத்ததோர் சிறப்பினன்
அங்க வன்றனை மலைந்து கொன்றுமுனி
வாற வந்தனெ னதன்றியும்
உங்க டன்மையி னடங்கு மோவுல
கொடுக்கும் வெங்கணை தொடுப்பினே.

(இந்திரசித்து அநுமனை நோக்கி); 'எம்பி அதிகாயனும் சிங்கம் வந்தவனை - எனது தம்பியான அதிகாயன் என்னும் (போர் புரிய வந்த) சிங்கம் நிகர்த்தவனை, வென்று - முறியடித்து, தன் உயிர் எனக்கு வைத்தது ஓர் சிறப்பினன் - தனது உயிரை நான் வதைப்பதற்கென்று ஒதுக்கி வைத்துள்ளதொரு பெருமை யுடையவன் ஆன, அவ்விலக்குவன் பெயர் ஏழை - அந்த இலக்குவன் என்னும பெயர் பூண்ட அந்த அறிவிலி, எங்கு நின்றனன் - எங்கே இருக்கின்றானோ? அங்கு - அவ்விடத்திலேயே, அவன் தனை மலைந்து - அவனை எதிர்த்து, கொன்று - வதைத்து, முனிவு ஆற வந்தனென் - சினம் தணிதற்காகவே (நான்) வந்துள்ளேன்; அதன்றியும் - அஃது அல்லாமலும், உலகு ஒடுக்கும் - உலகனைத்தையும் ஒடுங்கச் செய்யும். வெங்கணை - கொடிய அம்புகளை தொடுப்பின் - தொடுத்தால், உங்கள் தன்மையின் அடங்குமோ - உங்களுடைய வீரத் தன்மையில் அவை அடங்கி நிற்குமோ?

அதிகாயனைக் கொன்றதற்குப் பழிக்குப்பழி வாங்குதல் வேண்டும் என்று இந்திரசித்து கொண்ட கருத்து இச் செய்யுட் கண் காணலாம். அதிகாயனைக் கொன்று தன்னுயிர்க்கே கேடு தேடிக்கொண்டான் என்னும் கருத்தால் இலக்குவனை ஏழை என்றான். சிறப்பினன்: பிற குறிப்பு; 76, 77. இந்திரசித்தின் வீரவாதம். அநுமனை நோக்கி ஏனையோரையும் உளப்படுத்திக் கூறியது.

பி - ம். 1. பெயரன்.
2. வந்ததனை.
3. அன்றியே.
4. தொடுக்கினே, தொடுக்கிலே.

2013. ஆரு மென்படைஞ ரெய்த லின்றியய
லேக யானுமிகல் வில்லுமோர்
தேரி னின்றுமை யடங்க லுந்திரள்
சிரந்து ணிப்பெனிது திண்ணமால்
வாரு முங்களுடன் வானு ளோர்களையு
மண்ணு ளோரையும் வரச்சொலும்
போரு மின்றொரு பகற்க ணேபொருது
வெல்வென் வென்றலது போகிலேன்.

'என் படைஞர் யாரும் - எனது சேனை வீரர் எவரும், எய்தல் இன்றி - (எனக்குதவியாக) வாராமல், அயல் ஏக (விலகி) அப்பாற் சென்றிட, யானும் - (தனிப்பட்ட) யானும், இகல் வில்லும் - (எனது) பேராற்றலும வில்லும், ஓர் தேரின் நின்று - (அந்த) ஒப்பற்ற தேரில் நின்றுகொண்டு, உமை அடங்கலும் சிரம் துணிப்பென் - உங்கள் அனைவரையும் தலையறுத்து விடுவேன் ; இது திண்ணம் - இது உறுதி ; வாரும்-போர் புரிய வாருங்கள் ; உங்களுடன் - உங்களோடு, வான் உளோர்களையும் - விண்ணுலகத்துள்ளவர்களையும், வர சொலும் - போர் இயற்றுமாறு சொல்லுங்கள் ; இன்று ஒரு பகல் கணே - இன்றைய ஓர் பகற் பொழுதிற்குள்ளாகவே, பொருது - யுத்தமும் செய்து, வெல்வேன் - வெற்றியும் பெறுவேன் ; வென்றலது போகிலேன் - வெற்றி பெற்றல்லது களத்தினின்றும் பெயரேன்'. ஆல் : அசை.

என் படைஞர் ஆரும் என மாற்றுக. யானும் வில்லும் நின்று துணிப்பென் - சிறப்புப் பற்றி வந்த பால் வழுவமைதி.

பி - ம். 1. யாரும் ; பகைஞர் ; அன்றி, ஒரு வில்லும்.

2. துணிப்பனிவை.

3. உங்களோடு.

4. பகற்கணே.

### இந்திரசித்து அம்பெய்ய, அநுமன் மலையை யேந்திக்கொண்டு அவனெதிரில் ஒன்று கூறத்தொடங்குதல்

2014. என்று வெம்பகழி யேழு நூறுமிரு
நூறும் வெஞ்சிலைகொ டேவினன்
குன்று நின்றனைய வீர மாருதிதன்
மேனி மேலவை குழுக்களாய்ச்
சென்று சென்றுருவ லோடும் வாளெயிறு
தின்று சீறியொரு சேமவன்
குன்று நின்றது பறித்தெ டுத்தவனை
யெய்தி நொய்தினிது கூறினன்.

என்று - என்று பகர்ந்து, (இந்திரசித்து) வெம்சிலைகொடு - கொடிய வில்லினை யேந்தி, வெம் - கொடிய, ஏழுநூறும் இரு நூறும்பகழி-தொள்ளாயிரம் அம்புகளை, ஏவினன் - அநுமன் மீது விடுத்தான்; அவை - அந்தச் சரங்கள், தன் மேனிமேல் - தனது உடலின் மீது, குழுக்களாய் - கூட்டமாக, சென்று சென்று உருவலோடும் - விடாது சென்று ஊடுருவிய அளவில், குன்று நின்றனைய - மலை நின்றாற் போன்ற; வீரம் மாருதி - வீரம் செறிந்த அநுமன், வாள் எயிறு தின்று - தனது ஒளி தங்கிய பற்களைக் கடித்துக்கொண்டு, சீறி - வெகுண்டு, நின்றது - அங்கே நின்றதாகிய சேமமவன் குன்று - தனக்குப் பாதுகாப்பளிக்கும் என்று கருதற்கு இடம் ஆன ஒரு மலையினை, பறித்து எடுத்து - பெயர்த்து உயர்த்திக் கொண்டு, அவனை எய்தி - அந்த இந்திர சித்தினை அணுகி, நொய்தின் இது கூறினன் - இலேசாகச் சில சொற்களைப் பகர்ந்தான். இதனை அடுத்த செய்யுட்கண் காண்க.

சேம வில் - தக்க சமயத்தில் உதவுவதற்காக வைக்கப்பட்டிருந்த வில். நின்றது அனைய என்பது விகாரப்பட்டு நின்றனைய என நின்றது; சீறுதலும், வாளெயிறு தின்றலும், சினத்தின் மெய்ப்பாடுகள்; இப்படலம் 61 முதல் 76 வரை உள்ள செய்யுட் சந்தத்துடன் வில்லிபாரதம்; இராசசூயச் சருக்கம்;

42 - 65 வரையுள்ள செய்யுட் சந்தத்தை ஒப்பு நோக்குக. எய்திய நொய்தின் - எதுகை நயம் காண்க.

பி - ம். 1. எழுநூறுந் எழுநூறும் ; சிலையினேயினுன்.

3. நின்று நின்றதொரு சேவகன்.

4. பிடிந்தெடுத்து : ஐயனிவை, நொய்தினிவை. 76

## அநுமன் கூறிய வீரவாதம்

2015. தும்பி யென்றுலகி னுள்ள யாவை யவை
யேவை யுந்தொகுபு துள்ளுதாள்
வெம்பு வெஞ்சின மடங்க லொன்றின்வலி
தன்னை நின்றெளிதின் வெல்லுமோ
நம்பி தம்பியென தெம்பி ரான்வரு
துணைத்த ரிக்கிலை நலித்தியேல்
அம்பின் முந்தியுன தாவி யுண்ணுமிது
காவ டாசிலைவ லாண்மையால்.

'உலகின் - உலகத்தில், தும்பி என்று உள்ள யானை - என்று சொல்லப்பட்டுள்ளன, யாவை - எவை, அவை எவையும் - அவை யனைத்தும், தொகுபு - ஒன்ருகக் கூடினுலும், துள்ளுதாள் - துள் ளிப் பாயும் அடிகளையும், வெம்பு வெம்சினம் - புழுங்குகின்ற கொடிய வெகுளியினையுமுடைய, மடங்கல் ஒன்றின் வலி-ஒரு சிங்கத் தின் திறலினை, நின்று எளிதின் வெல்லுமோ - (அதற்கு முன்) நின்று எளிதாக வெல்லுமோ! நம்பிதம்பி - இராமபிரானுடைய தம்பியும், எனது தம்பிரான் - எங்கள் தலைவனுமாகிய இலக்குவன், வருதுணை - வரும் அளவும், தரிக்கிலை நலித்தியேல் - பொறுக் காமல் (என்னைத்) துன்புறுத்துவாயாகில், (என்னுடன் போர் புரிவாயாகில்), அம்பின முந்தி - உனது அம்பு (நான் வீசும் மலை யினைப் பிளக்க) வருவதன் முன்பு, இது - இம் மலை, உனது ஆவி உண்ணும் - உன் உயிரைப் பருகி விடும் ; வல்சிலை ஆண்மையால் - உன்னுடைய வலிய வில்லின் ஆற்றலால், அடா - அடா, (இம் மலை உன் உயிரை சுழிக்கவிட்டாது), கர்வடா - பாதுகாத்துக் கொள் வாயாக' (என்று அநுமன் ஒரு மலையை வீசினுன்). ஓ: எதிர்மறை.

(தும்பி - யானை ; 'தும்பியங் குழாத்திற் சுற்றும்' (அயோத்தி. கங்கை. 49); தொகுபு - செப்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம், மடங்கல் - பிடரி மயிர் மடங்கப் பெற்றிருப்பது என்று ஆண் சிங்கத்திற்குக் காரணக் குறி. நம்பி - ஆண்பாற் சிறப்புப் பெயர் ; 'நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்' (அயோத்தி. குகப். 30). இது - இம்மலை பிறிதுமொழிதல் அணி. ஆவி உண்ணுதல் ; மரபு வழுவமைதி. 'அங்கவன்றனை வளைந்து கொன்று முனிவாற வந்தனன்' என நீ கூறியதனால் நான் சிறிது தாமதித்தேன். ஆயினும் நீ தாழ்க்காமல் என்மீது அம்பினை ஏவியதால். உனது உயிரை ஒழிக்குமாறு இம்மலையினை வீசினேன்' என்றான் அநுமன். முதல் இரண்டடிகட்கு 'மல்லலா ளியைப்பல வளைந்து கொள்ளினும், கொல்லலா யிருக்குமோ குஞ்ச ரங்களால்' (வில்லிபா. நிரைமீட்சி. 84).

பி - ம். 1. எவை யாவையும், அவையாயிரத் ; தொகுநியாயினும், தொகுநியுள்ளதான், தொகுநியுள்ளதார்.

2. வெம்பியஞ்சின ; ஒன்றை, வெகு நாய்கள் மற்றதனை, ஒன்றை வலி படனுயு மற்றவைகள் ; வெல்லுமேல்.

3. என தம்பிரான் ; தருக்கிலை ; நடத்தியேல், சலித்தியேல்.

4. யுன்பதிது ; காவெடா. 79

அநுமா னெறிந்த மலை இந்திரசித்தின் மார்பிற் பட்டுப் பொடியாதலும் அவன் அநுமன்மீது பல அம்புகள் செலுத்தலும்

2016. செருப்ப யிற்றிய தடக்கை யாளிசெல
விட்ட குன்றுதிசை யானையின்
மருப்பை யுற்றதிர டோளி ராவணன்
மகன்றன் மார்பினுயர் வச்சிரப்
பொருப்பை யுற்றதோர் பொருப்பெனக்கடி
தொடிந்தி டிந்துதிசை போயதால்
நெருப்பை யுற்றதொ ரிரும்பு கூடமுற
நீறு பட்டது நிகர்த்ததால்.

செரு பயிற்றிய - போரிற் பழக்கியுள்ள, தடகை யாளி - பெரிய கரங்களையுடைய யாளி ஒத்த அநுமன், செலவிட்ட குன்று - இந்திரசித்தின்மீது செல்லுமாறு எறிந்த மலையானது, திசை யானையின் - திக்கு யானைகளின், மருப்பை உற்ற - தந்தங்கள் பதியப்பெற்ற, திரள்தோள் - திரண்ட தோள்களையுடைய, இராவணன் மகன் தன் மார்பின் - இராவணன் புதல்வனான இந்திரசித்தின் மார்பில், உயர் வச்சிரம் பொருப்பை - உயர்ந்த வயிரமயமானதொரு மலை மீது, உற்றது ஓர் பொருப்பு என - தாக்கியதொரு மலை போன்று, கடிது ஓடிந்து - விரைவிலே பிளவுண்டு, இடிந்து - இடிபட்டு(த் தூளாகித்), திசை போயது - திக்குகளில் சிதறி நின்றது; (அஃதல்லாமலும்), நெருப்பை உற்றது ஓர் இரும்பு - நெருப்பிற் பழுக்கக் காய்ந்த ஓர் இரும்பு, கூடம்உற நீறுபட்டதும் நிகர்த்தது - சம்மட்டியினால் அடிக்கப்பட்ட அளவில் பொடியாய்ப் பறந்ததையும் ஒத்திருந்தது. ஆல் - அசை.

பயிற்றிய - பயிற்றப்பட்ட, திசை யானையின் மருப்பையுற்ற திரள்தோள் இராவணன்; ஆரணிய. 258, 323, 328, 557, 643, 646 752, 840, 875; 'திசை யானையின் ஒளிர் மருப்புற்றிற்ற, பழந் தழும்பு' (சுந்தர. 303); 'திசையானை மதந்துதைந்த வண்டும் சுற்றி மாடுழுத நறுங்கலவை வயக்களிற்றின் சிந்துரத்தை மாறு கொள்ள; (சுந்தர. 312). 'வச்சிரப் பொருப்பை யுற்றதோர் பொருப்பென' இல்பொருள் உவமை; இந்திரசித்தின் மார்பு சம்மட்டி, காய்ச்சிய இரும்பு அநுமன் வீசிய மலை. கூடம் - சம்மட்டி: 'கொல்லுலைக் கூடத்தினால்' (நீதிநெறி. 14).

பி - ம். 2. மருப்புகுத்த; மார்பினெடு, மார்பினிடை

4. கூடமென; நிகர்த்தவால். 60

2017. விலங்கன் மேல்வர விலங்க வீசிய
விலங்க லீறுபடு வேலையிற்
சலங்கை மேவிமிர வெஞ்சி னந்திருகி
வஞ்சன் மேனிமிர் தருக்கினன்
வலங்கொள் பேருலக மேரு வோடென
மறிக்க மாருதிதன் வாசநா
ளலங்கன் மார்பினெடு தோளி னூடுருவ
வாயி ரஞ்சர மழுத்தினன்.

விலங்கல் மேல் - மலை போன்ற தனது மார்பின்மீது, வர - தாக்கும்படி. விலங்க - (செய்மையில்) நின்ற அநுமன், வீசிய விலங்கல் - எறிந்த மலை, நீறுபடுவேலையில் - தூளாகிச் சிதறிய அளவில், வஞ்சன்-வஞ்சனைக் குணம் உள்ள அரக்கன், சலம் கைமேல் நிமிர - (தீராத) கோபம் தன்னிடம் மென்மேல் மிக, வெம்சினம் - கொடிய கோபத்தினால், திருகி - மாறுபட்டு, நிமிர் தருக்கினான் - வளர்ந்த செருக்குக் கொண்டவனாய், வலம்கொள் - வன்மை வாய்ந்த, பேர் உலகம் - பெரிய உலகத்தையும், மேருவோடு என - மேருகிரியையும், மறிக்கும் - பெயர்த்தெடுக்கவல்ல, மாருதிதன் - அநுமனுடைய, வாசம் நாறு அலங்கல்-மணம் கமழ்கின்ற மாலையை அணிந்த, மார்பினொடு தோளின் - மார்பிலும் தோள்களிலும் ஊடுருவ - ஊடுருவிப் பாயும்படி, ஆயிரம் சரம் அழுத்தினான் - ஆயிரக்கணக்கான அம்புகளை விடுத்தான்.

விலங்கல் - மலை; பூமிக்குக் குறுக்கே உயர்வது என்பது காரணக்குறி. விலங்கல் விலங்க விலங்க : சொற்பொருட்பின் வருநிலையணி. வாசம் நாறு அலங்கல் : இஃது அநுமன் தரித்திருந்த மாலை; இந்திரனால் இவனுக்கு அளிக்கப்பட்டது. அலங்கல் : போர்க்குரிய தும்பை மாலையெனினுமாம். மேருவோடு என : என்பதில். என : அசை. நாறுதல் : தற்காலத்து நறுமணம் கமழ்தல் என்ற பொருளில் வழங்குதல் இல்லை. சங்ககாலத்தில் நறுமண நாற்றத்தையே குறித்து நின்றது. நாளடைவில் சொற்கள் இழிபொருட் பேறடைதற்கு இஃது ஓர் உதாரணம் என்ப. ஆயிரம் சரம் : பல என்னும் பொருளது ; 'ஒரு நாள் எழுநாள் போற் செல்லும்' (குறள். 1269) என்ற இடத்து எழுநாள் பல நாள் எனப் படுதல் போன்று.

பி - ம். 1. விலங்கல் வீசிய, விலங்கி மற்றது ; விலங்கி நின்றுபடும், விலங்க வின்றுபடும் ; ஏல்வையிற்

2. கலங்க ; மேனிகர் தருக்கினல்

3. உலக மேருவொடென மறிக்கும் ; உலகை மேருவோடுடன்

4. வாசமெல் ; தோளூ மூடுருவ, தோளினூடுருவ,

### அநுமனுக்குத் துணையாக நீலன் வருதல்

2018. ஒன்று போல்வனவொ ராயி ரம்பகழி
யூடு போயுருவ வாடகக்
குன்று கால்குடைய மேலு யர்ந்திடை
குலுங்கு கின்றனைய கொள்கையான்
மன்ற னாறுதட மேனி மேலுதிர
வாரி சோரவரு மாருதி
நின்று தேறுமள வின்கண் வெங்கண்விழி
நீலன் வந்திடை நெருக்கினன்.

(இந்திரசித்தினுடைய) - ஒன்று போல்வன ஓர் ஆயிரம் பகழி - ஒன்றையொன்று நிகர்த்தனவான ஒப்பற்ற ஆயிரம் வாளிகள், ஊடு போய் உருவ - (தனது உடற்கண்) துளைத்துச் செல்ல, ஆடகம் குன்று - பொன் மயமான மேருமலை, கால் குடைய - பெருங் காற்றுத் தாக்கி வருத்த, மேல் உயர்ந்து - வெளிப்பார்வைக்கு மட்டும் உயர்ந்து தோன்றி, இடை குலுங்குகின்றனைய கொள்கையான் - உள்ளிடம் நடுங்கும் தன்மையுடையனாகி, மன்றல் நாறு தட மேனிமேல் - (புனைந்துள்ள மாலையினால்), நறுமணம் கமழப் பெற்ற பெரிய உடல்மீது, உதிரம் வாரி சோர வரும் - இரத்த வெள்ளம் பெருகப்பெற்ற, மாருதி - அநுமன், (ஒன்றும் புரியமாட்டாது), நின்று தேறும் அளவின் கண் - நின்று தெளிவதற்குள்ளாக, வெம்கண் விழிநீலன்வந்து இடை நெருக்கினன் - கொடிய கண்களை யுடைய நீலன் வந்து (அரக்கனை) அடர்க்கப் புகுந்தான்.

ஆடகக்குன்று - மேருமலை. ஆடகம் - பொன்; (ஆரணிய. 414, 480); ' ஆடக மால் வரை யன்னது தன்னை ' (பால. கார்முக. 34); கால் குடைதல் - காற்றால் துளைக்கப்படுதல்; குலுங்குதல்; ' கஞ்சமும் கலங்குமாகில் நெஞ்சமும் கலங்குமே ' (திருச்செந்திற்கலம்பகம்). மன்றல் - மணம்; இச்சொல் தமிழில் ஓர் விநோதச்சொல்: மணம் திருமணத்தையும் நறுமணத்தையும் குறித்தல்போன்று, மன்றல் என்ற சொல்லும் இரண்டினையும் குறிக்கும் 'மன்றல மாலை நெற்றி'

(சீவக. 2289); 'மாரி சோர வருமாருதி' பிரயோகம் காண்க. நீலன்: கிட்கிந்தா. 696; குறிப்புக் காண்க.

பி - ம். 1. வாட்டடக்

2. காலெறிய மேலெழுந்திடை, கால் குலைய மேலுலைந்திடை, குலுங்க நின்றனைய

3. வயமாருதி

4. அடல் நீலன். 82

நீலன் ஒரு மலையை இந்திசித்தின்மேல் எறிய, அதனைத் தனது பாணங்களால் அவன் அழித்தல்

2019. நீல னின்றதொரு நீல மால்வரை
நெடுந்த டக்கையி னிடந்துநேர்
மேலே ழுந்தெரி விசும்பு செல்வதொரு
வெம்மை யோடுவர வீசலுங்
சூல மந்தக னெறிந்த தன்னது
துணிந்து சிந்தவிடை சொல்லுறுங்
கால மொன்றுமறி யாம லம்புகொடு
கல்லினு னெடிய வில்லினுன்.

நீலன் - நீலன் என்பவன், நின்றது ஒரு நீலம் மால்வரை - அருகில் நின்ற நீலநிறமுள்ள ஒரு பெரிய மலையை, நெடு தடகையின் இடந்து - நீண்ட பெரிய கரங்களால் பெயர்த்து, எரிமேல் எழுந்து விசும்பு செல்வது ஒரு வெம்மையோடு - அக்கினியானது மேலே கிளம்பி விண்ணிற் செல்வது போன்ற ஒப்பற்ற கொடுமையுடன், நேர்வர வீசலும் - (அரக்கன்மீது) நேரே செல்ல வீசியவுடன், நெடிய வில்லினுன் - நீண்ட வில்லை ஏந்திய இந்திரசித்து, அந்தகன் - எறிந்தது - யமன் வீசிய, சூலம் அன்னது - சூலப்படை போன்ற அம்மலை, துணிந்து சிந்த - துண்டுபட்டுச் சிதறும்படி, இடை சொல்லுறும் காலம் - இடைநடுவில் (எண்ணிச்) சொல்லக்கூடிய காலம், ஒன்றும் அறியாமல் - சிறிதும் தெரியாதவண்ணம், (அதே கணத்தில்) அம்புகொடு கல்லினுன் - (தனது) வாளிகளால் பெயர்த்தழித்தான்.

நீலன் மலை வீசியதும் அரக்கன் அம்பு வீசியதும் உடனிகழ்ச்சியென்றே கொள்ளுமாறிருந்தன என்க. நீலன் நீலமால் வரை, நெடுந் தடக்கையினிடந்து, கல்லினுனெடிய வில்லினன் என்ற இடங்களில் எதுகை நயம் காண்க. அந்தகன் எறிந்தது சூலம் அன்னது என அந்வயிக்க. அந்தகன் - யமன்; 'அல்லாத மூவரும் அந்தகனும்'; (ஆரணிய. 902).

பி - ம். 1. இடைந்து

2. மேலெழுந்தரி; செல

3. எறிந்தனன்னது; சொல்லினும், செல்லுநும்

4 வலிய வில்லினன். 83

## நீலன் இந்திரசித்தின் வாளிகளினல் நடுக்கமடைதல்

2020. ஊக மெங்குமுயி ரோடு நின்றனவு
மோட வானவர்க ளுள்ளமுங்
மோக மெங்குமுள வாக மேருவினு
மும்ம டங்கு வலி திண்மைசால்
ஆக மெங்கும்வெளி யாக வெங்குருதி
யாறு பாயவன லஞ்சுவாய்
நாக வெங்கணகு வாளி பாய்தொறு
நடுங்கி னுன்மலை பிடுங்கினுன்.

(உயிர் தீர்ந்தன ஒழிய), உயிரோடு நின்றன ஊகமும் எங்கும் ஓட - உயிர் தரிக்கப்பெற்று நின்ற குரங்கனைத்தும் எல்லாப் பக்கங்களிலும் சிதறியோடுமாறும், வானவர்கள் உள்ளமும் - தேவர்களுடைய மனத்திலும், எங்கும்-மற்றையோர் மனத்திலும், மோகம் உளவாக-மயக்கம் நிகழும்படியும், மேருவினும் மும்மடங்கு - மகா மேருமலையைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகமான,வலி திண்மை சால் - மிக்க உறுதி நிறைந்த, ஆகம் எங்கும் - (நீலனுடைய) உடல் முற்றிலும் (துளைபட்டு), வெளியாக - வெட்ட வெளியாகவும், வெம் குருதி ஆறு பாய - கொடிய உதிர வெள்ளம் பெருகவும், நகுவாய் - கூர்நுனியுடையனவும், நாகம் வெம்கண் - பாம்பின் கொடுமை ஒளிர்வனவுமான, அனல் அஞ்சும் வாய் - தீயும் அஞ்சுமாறுள்ள

(அரக்கனுடைய) வாளி - அம்புகள், பாய்தொறும் - தாவிவருந் தோறும். மலை பிடுங்கினன் - மலையைப் பெயர்த்து எறிந்தவனை (அந்த நீலன்), நடுங்கினன் - நடுக்கம் கொண்டான்.

இந்திரசித்தின் போர்த்திறம் சித்திரிக்கப்பட்டது. ஊகம் - குரங்கு; 'ஊகங்களிறையகர்' (கிட்கிந்தா. 276). மோகம் - மயக்கம். 'காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்பன காண்க. மூன்றும் அடியில் ஆறு, அஞ்சு என்ற எண்ணலங் காரம் காண்க.

பி - ம். 1. உயிரோட

2. மோக வெங்கடலின் வீழ்க; மும்மடங்கு முறிர், நிமிர்; தன்மை யான்; திண்மையான்

4. வெங்கணைகள் மாரி. 64

## அங்கதன் மலைகளையெறிய, இந்திரசித்து அவைகளை அம்புகளாற் பொடியாக்குதல்

2021. மேரு மேருவென வல்ல வல்லவென
வேரி னேடுநெடு வெற்பெலாம்
மார்பின் மேலுமுயர் தோளின் மேலும்வர
வாலி காதலன் வழங்கினன்
சேரு மேயவை தனுக்கை நீர்கவெதிர்
செல்லு மேகடிது செல்லினும்
பேரு மேகொடிய வாளி யான்முறி
பொறுக்கோணு வகை நுறுக்கினன்.

மேரு மேரு என - இது மேருமலையே மேரு மலையே என்று (சிலர்) சொல்லுமாறும், அல்ல அல்ல என - (வேறு சிலர்) மேரு வன்று மேருவன்று என்று சொல்லுமாறும், நெடுவெற்பு எலாம்- பெரிய மலைகள் அனைத்தையும், வேரினேடு - வேருடன் அகழ்ந் தெடுத்து, மார்பின்மேலும் உயர் தோளின்மேலும்-(அரக்கனுடைய) மார்பின்மீதும் உயர்ந்த தோளின்மீதும், வர - செல்லுமாறு, வாலி காதலன் வழங்கினன் - வாலியின் அன்புக்குரிய புதல்வனை அங்க

தன் மிகுதியாகப் பொழிந்தான்; அவை தனுகை நிற்க சேருமே - அம்மலைகள் (இந்திரசித்தின்) கையில் வில் இருக்கையிலே, அவன் உடலின் சென்று தாக்குமோ? எதிர் செல்லுமே - நேராகத்தான் சென்றிடுமோ? கடிது செல்லினும் - அங்ஙனம் ஒருக்கால் விரைந்து சென்றாலும், பேருமே - (அவனுடைய அம்புக்கு) இலக்காகாமல், ஒழியுமோ? கொடிய வாளியான் முன் பொறுக்கலா வகை நுறுக்கினன் - தீய அம்புகளால், பொருக்கவும் முடியாதபடி (தூள் தூளாகுமாறு) உடைத்தெறிந்தான். ஏகாரங்கள் எதிர்மறை.

காதலன் - புதல்வன் 'மருத்தின் காதலன்' (யுத்த. வேலேற்ற. 40). முறி - துண்டு; 'சேருமே யவைதனுக்கை நிற்க வெதிர் செல்லுமே கடிது செல்லினும், பேருமே' இவ்வடிகள் கவிக்கூற்று.

பி - ம். 1. வெற்பன

2. மாரின்; மேலும்உற

3. கடிய; பொறுக்கலாவகை; அவை. 85

## இந்திரசித்தின் அம்புகளினல் அங்கதன் சோர்ந்து விழுதல்

2022. நெற்றி மேலுமுயர் தோளின் மேலுநெடு
மார்பின் மேலுநிமிர் தாளினும்
புற்றி னூடுநுழை நாக மன்னபுகை
வேக வாளிகள் புகப்புகத்
தெற்றி வாளெயிறு தின்று கைத்துணை
பிசைந்து கண்களெரி தீயுக
வற்றி யோடுதிர வாரி சோர்வுற
மயங்கி னுவில முயங்கினுன்.

நெற்றி மேலும் - (அங்கதனுடைய) நெற்றியிலும், உயர் தோளின் மேலும் - உயர்ந்த தோளிலும், நெடு மார்பின்மேலும் - அகன்ற மார்பிலும், நிமிர் தாளினும் - நீண்ட கால்களிலும், புற்றின் ஊடு நுழை நாகம் அன்ன - புற்றினுள்ளே புகுகின்ற பாம்புகள் ஒத்தனவாய், புகை வேகம் - புகைபோன்ற (தீவிரமான) விசையினை யுடைய, வாளிகள் - (இந்திரசித்தின்) சரங்கள், புகபுக - பாயப்பாய, (அங்கதன்) தெற்றி - தடுமாற்றமுற்று, வாள் எயிறு தின்று - ஒளி யுள்ள பற்களைக் கடித்து மென்று, (செய்வதறியாது) துணை கை

பிசைந்து - தன் இரண்டு கரங்களையும் பிசைந்துகொண்டு, கண்கள் எரி தீயுக - விழிகளினின்று எரிகின்ற தீப்பொறி சிந்த, வற்றி - சரீரம் உலர்ந்து, ஓடு உதிரம் வாரி-(தனது உடலினின்று) பெருகும் இரத்தப்பெருக்கு, சோர்வுற - இழிந்தவண்ணம் இருக்க, மயங்கினன் - மயக்கமுற்றவனாய், நிலம் முயங்கினன் - நிலத்தைத் தழுவுவது போன்று வீழ்ந்தான்.

புற்றினூடு நுழை நாகம் வாளி நேராகச் சென்றதற்குவமை. தெற்றுதல்: கடித்தல்; 'தெற்றின ரெயிறுகள் திருகினர்', 'தெற்றிய பாதச் சிலம்பு' (ஆரணிய. 465, 1073); தெற்றுதல், எயிறு தின்றல், என்ற இவை வெகுளியின் மெய்ப்பாடுகள். கை பிசைதல்: செயலற்ற நிலையில் நிகழ்வது. 'காதலுடன் கேட்டழுது கை பிசைய' (திருக்காளத்தியுலா).

பி-ம். 4. வற்றிஞேடு, வற்றியூடு, உற்றிலாது; நிலை. 66

## தன்பக்கத்துச் சேனை பலபடியாக அழிந்தமை கண்ட இலக்குவன் வீடணனை நோக்கி ஒன்று உரைத்தல்

2023 மற்றை வீரர்கள்தம் மார்பின் மேலுமுயர்
தோளின் மேலுமழை மாரிபோல்
கொற்ற வெங்கணை யுலக்க வெய்தவை
குளிப்ப நின்றுடல் குலுங்கினர்
இற்ற விந்தன பெரும்ப தாதியுயி
ருள்ள வெங்கணு மிரிந்தவப்
பெற்றி கண்டிளைய வள்ள லொள்ளெரி
பிறந்த கண்ணனிவை பேசினன்.

மற்றை வீரர்கள் - (அநுமன் நீலன் அங்கதன் நீங்கலாக) வேறு பல வீரர்களும், தம் மார்பின் மேலும் உயர் தோளின் மேலும் - தங்களுடைய மார்பிலும் உயர்ந்த தோள்களிலும், மழை மாரி போல் உலக்க - மழை வீழ்ச்சிபோன்று அழியுமாறு, எய்தவை கொற்றம் வெம் கணை-ஏவப்பட்டனவாகிய வெற்றிகொண்ட கொடிய அம்புகள், குளிப்ப - உள்ளே மூழ்க, நின்று உடல் குலுங்கினர் -

நின்ற நிலையிலேயே உடல் நடுங்கினர்கள்; பெருபதாதி - பெரிய காலாட்படையான வானரங்கள், இற்று அவிந்தன - இறந்து பட்டன; உயிர் உள்ள - உயிர் தப்பினவைகளோ, எங்கணும் இரிந்த - எல்லாப் பக்கங்களிலும் சிதறின! அ பெற்றி கண்டு - அந்தத் தன்மையைக் கண்ணுற்று, இளைய வள்ளல் - இலக்குவன், ஒள் எரி பிறந்த கண்ணன் - ஒள்ளிய தீப்பொறி தோன்றப்பெற்ற விழிகளை யுடையவனாய், இவை பேசினான் - (வீடணனை நோக்கி) இவற்றைக் கூறினான். இவற்றை அடுத்த கவியிற் காண்க.

உலக்க - அழிய; 'உலக்கவின் னுயிர்குடித் தொல்லை மீள்குவல்' (கிட்கிந்தா. 249). பதாதி: வடசொல்; காலாட்படை.

பி - ம். 1. மற்று, மற்ற.
2. வன்கனை; உலக்க வெய்தன, இலக்கு மெய்தலை.
3. அவிந்தது; உள்ளது; இரிந்ததப், உயர்ந்தவப்.
4. ஒள்ளரி; பேசுவான். 87

## வேறு

2024\. பிழைத்தது கொள்கை போதப்
பெரும்படைத் தலைவர் யாரும்
உழைத்தனர் குருதி வெள்ளத்
துலந்தது முலப்பிற் றன்றே
அழைத்திவன் தன்னை யானே
யாருயிர் கொளப்ப டாதே
இழைத்தது பழுதே யன்றே
விடண வென்னச் சொன்னான்.

(இலக்குவன் விடணனை நோக்கி) 'விடண - விபீஷணா! கொள்கை போத பிழைத்தது - (நாம் கொண்ட) கோட்பாடு பெரிதும் தவறி விட்டது; (எவ்வாறெனில்), பெரு படை தலைவர் யாரும் - நமது பெரிய சேனைத் தலைவர் அனைவரும், குருதி வெள்ளத்து உழைத்தனர் - உதிரப்பெருக்கில் சிக்கி உழன்றனர்; உலந்ததும் உலப்பிற்று அன்று - இறந்துபட்ட (நம்) சேனையும் எண்ணிக்கையிற் குறைந்ததன்று; இவன் தன்னை அழைத்து - இந்த இந்திரசித்தை(ப் போருக்கு) விளித்து, யானே ஆர் உயிர்

கொளப்படாதே - நானே (இவன்) அருமையான உயிரை வாங்கி யிருக்கக்கூடாதா? (அங்ஙனம் செய்யாமல்), இழைத்தது - (இவ் வாறு) புரிந்தது (நமது படைத்தலைவர்களையும் இவனோடும் போர் புரிய) விடுத்தது, பழுதே அன்றோ - வீண்செயல் அல்லவோ?" என்ன சொன்னான் - என்று மொழிந்தான். படாதே, ஏ - வினா. பழுதே, ஏ - அசை.

கொள்கை - இலக்குவன் தானே பொருதற்குச் செல்லாமல் ஏனையோரை விடுத்தது. போத - மிக. 'போதத் தன்செவித் தொளையிரு கையினாற் பொத்தி' (யுத்த. 151); உழைத்தல் - வருந் துதல்; 'வலையிற்பட் டுழைக்கின்றேற்கு' (திருமாலை. 36); 'பழுது பயமின்றே' (தொல். சொல். 324).

பி - ம். 1. போகப், போயப்.

2. உழைத்ததும்; உலைந்ததும்.

3. கோட்படாதே.

4. பிழைபே, என்றே; விடலு. 68

## விடணன் இலக்குவனது வார்த்தையை ஏற்றல்

2025. ஐயவீ தன்ன தேயா லாயிர கோடித் தேவர்
எய்தின ரெய்தி னரே யீடுபட் டிரிந்த தல்லால்
செய்தில ரிவனை யொன்றும் நீயிது தீர்ப்பி னல்லால்
உய்திற முண்டோ வேறிவ் வுலகினுக் குயிரோ டென்றான்.

'ஐய - தலைவனே! ஈது அன்னதே - (நீ கூறிய) இது நீ கூறிய படி உண்மையே, (முன்னர்) இவ்விந்திரசித்துடன் போர் ஆற்றற்கு, எய்தினர் எய்தினர் - விடாமல் வந்தவர்களாகிய, ஆயிரம் கோடி தேவர் - எண்ணிறந்த தேவர்கள், ஈடுபட்டு இரிந் தது அல்லால் - வலிமை யிழந்து ஓடினரே யன்றி, (தாங்கள் மிகப் பலராக விருந்தும்) இவனை ஒன்றும் செய்திலர் - இவனை யாதொன் றும் செய்ய இயலாதவர் ஆயினர்; இது நீ தீர்ப்பின் அல்லால் - (இவனால் நிகழ்ந்த) இத்துயரை நீ போக்கினால் அன்றி (நீ இவனைக் கொன்றாலல்லாமல்), இ உலகினுக்கு உயிரோடு உய்திறம்

உண்டோ - இவ்வுலகத்திலுள்ள சீவராசிகட்கு உயிரோடு பிழைக்கும் வழி, வேறு உண்டோ - பிறிது உள்ளதோ? (ஒன்றுமின்று அன்றோ?' என்றான் - என்று வீடணன் பகர்ந்தான். ஆல், ஏ - அசை.

அன்னது - நீ சொன்னபடிதான். மேன்மேலும் பெருந்திரளாக என்பது எய்தின் எய்தினர் என அடுக்கிக் கூறப்பட்டது. உலகு இடவாகு பெயராக உலகத்துயிரைக் குறித்து நின்றது. உய்திறன்: 'உய்திறமுடையார்க்கன்றோ அறவழி; (யுத்த. 1374); ஈடுபடுதல்; வலிமை அறுதல்: ஈடு: வலிமை' 'ஈடுண்டேகுவான்' (கிட்கிந்தா. 250); ஈடுபட்டு: எளி வரவுபட்டு, 'ஒருகரி யிடழித் துரித்தனை; (தேவா. 142; 13) உலகினுக்கு உயிரோடுய்திறன் எனக் கூட்டுக. இந்திரசித்தினைக் கொல்வதற்குரியவன் இலக்குவனே என்பது இக் காப்பியத்திற் பல இடங்களிலும் கூறப் பெற்றுள்ளது. பதினான்காண்டுகள் உறக்கமின்றியிருந்த ஒருவனன்றிப் பிறர் இவ்வரக்கனைக் கொல்ல முடியாது. அவ்வரக்கன் பெற்ற வரம் அது. அதுபற்றியேதான் வீடணன் 'இது நீ தீர்ப்பின் அல்லது' என்றான். 'இந்திரன் பகைஞனு மிராமன் தம்பிகை, மந்திர வம்பினால் மடிதல் வாய்மை' (யுத்த. 1301) என்பது கும்பகன்னன் கூற்று; 'துஞ்சலில் நயனத்தைய' (யுத்த. விபீடண. 144); 'இமைப்பிலன் நயனம்' (அயோத்தி. குகப். 42) என்பனவும் காண்க.

பி - ம். 1. ஐயகேள்; ஆயிரங்.

2. எய்தினர்களிடு, எய்தினரெய்தி; இருந்தது.

3. இவனையின்று.

4. உய்திறன், திறல்; மற்றிவ்; உயிர்கொடு, உயிர்கொண்டு. 19

இந்திரசித்து ஒற்றனை வினவி இலக்குவனை யறிதல்

2026. என்பது சொல்லக் கேட்ட
 விந்திர வில்லி னேடும்
பொன்பொறை மேக மொன்று
 வருவது போல்கின் றானை

முன்பனை முன்பு நோக்கி
இவன்கோலாம் பரதன் முன்னோன்
தன்பெருந் தம்பி யென்றான்
ஆமெனச் சாரன் சொன்னான்.

என்பது சொல்ல கேட்ட - என்று (வீடணன்) கூறிய சொற்களைக் கேட்டவனான, பொன் பொருமேகம் ஒன்று - பொன்னை நிகர்க்கும் ஓர் மேகம், இந்திர வில்லினோடும் - வான வில்லுடன், வருவது போல்கின்றானை - வருவதை ஒப்பவனும், முன்பனை - வன்மை யுடையவனுமான இலக்குவனை, (இந்திரசித்து) முன்பு நோக்கி - நேரில் கண்டு, (ஒற்றனை நோக்கி), 'பரதன் முன்னோன் தன்பெரு தம்பி இவன் கொலாம் - 'பரதனுடைய அண்ணனும் இராமனுடைய பெரிய தம்பியாகிய இலக்குவன் இவன் தானோ?' என்றான் - என்று வினவினான்; சாரன் ஆம் என சொன்னான் - ஒற்றன் 'ஆம்' என்று விடையிறுத்தான்.

மேகாதிபன் இந்திரன் ஆதலின் வானவில்லை இந்திர தனுசு என்று கூறுவது மரபு. மேகத்தில் பல வர்ணங்கள் காணப் பெறுவதுண்டாகலின் இங்கு பொன்னிற மேகம் எனப்பட்டது. பரதன் - பரித்தல் அல்லது சுமத்தல் என்ற காரணம்பற்றி எழுந்த பெயர்; 'தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் பள்ளம் எனும் தகையானைப் பரதன் எனும் பெயரானை' (பால. குலமுறை. 2) என்றும், 'சமுதிதோ குணைஹி' (வான்மீகம்) என்றும் பரதன் சகலகலியாண குணங்களையும் பரிப்பவன் எனப் படுதல் காண்க. பொன்பொரு மேகம்: இல்பொருள் உவமை. இலக்குவனைப்பற்றி முன்னரே கேட்டுணர்ந்தவன் ஆகலின், 'இவன் கொலாம் பரதன் முன்னோன் தன்பெருந் தம்பி' என்றான். முன்பனை, முன்பு என்ற இடத்து எதுகைநயம் காண்க. சாரன்: 'ஓடினார் சாரர்வல்லை' (யுத்த. பிரமாத்திர. 162); இவன் கொலாம் இலக்குவன் என்று நேராக வினவாது, பரதன் முன்னோன் தன் பெருந் தம்பி என்றது காண்க. இவ்வாறு கூறுவது கம்பர் வழக்கு; 'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி' (ஆரணிய. 258); 'வையந்தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்' (சுந்தர. 483) என்பன காண்க பரதன் முன்னோனாகிய இராம

பிரானுக்கு இருவர் தம்பியாகலின், சத்துருக்கனை விலக்கும் பொருட்டுப் 'பெருந்தம்பி' எனப்பட்டது. 'இன்றுணைவனிராக வற்கிலக்குவற்கு மிளையவற்குமெனக்கு மூத்தான்' (அயோத்தி. குகப்.); பெருமை: 'கல்வி தறுகண் இசைமை கொடை' எனப் பெருமிதம் என்ற மெய்ப்பாட்டிற்குரிய பெருமை என்க. பொன் பொரு மேகம்: 'பொன்னொத்த மேனி' (அயோத்தி. நகர்நீ. 126).

பி ம். 2. பொன்புரை, பொன்புனை; முன்பினும். 90

## இராக்கதத் தலைவர்கள் இலக்குவன்மேற் செல்லுதல்

2027. தீயவ னிளவல் தன்மேற்
செல்வதன் முன்னஞ் செல்கென்
றேயின ரொருவ ரின்றி
யிராக்கதத் தலைவ ரெங்கள்
நாயகன் மகனைக் கொன்றாய்
நண்ணினை நாங்கள் காணப்
போயினி யுய்வ தெங்கே
யென்றெரி விழித்துப் புக்கார்.

தீயவன் - கொடியவனை இந்திரசித்து, இளவல் தன்மேல் செல்வதன் முன்னம் - இலக்குவன் மீது விரைவதன் முன்பு, 'செல்க - (நீங்கள் இலக்குவனுடன் போர் புரியச்) செல்லுங்கள்,' என்று - என்று சொல்லி, ஏயினர் ஒருவர் இன்றி - (தங்களைக்) கட்டளையிட்டவர் எவரும் இன்றியே, இராக்கதத் தலைவர் - அரக்கர் படைத் தலைவர்கள், (இளைய பெருமானை நோக்கி), 'எங்கள் நாயகன் மகனை - எங்கள் தலைவனை இராவணன் மகனை (அதிகாயனை), கொன்றாய் - வதைத்தவனே! நாங்கள் காண நண்ணினை - நாங்கள் காணும்படி வந்து சிக்கிக் கொண்டாய், இனி போய் உய்வது எங்கே - இனிமேல் (எங்களிடம் இருந்து தப்பிப்) பிழைத்து ஏகுவது எங்ஙனம்', என்று எரி விழித்து புக்கார் - என்று நெருப்புப் போல (உக்கிரமாக) விழித்துப் பார்த்துப் போர் புரியப் புகுந்தார்கள். எங்கே: ஏ: வினா.

இந்திரசித்துக்கு துணையாக வந்த அரக்கர்கள், அதிகாயனைக் கொன்றதற்காகப் பழிக்குப் பழி வாங்க, இலக்குவனுடன் போரத்

தொடங்கினர். இளவல்; இலக்குவன்: அல்: பெயர் விகுதி: நாங்கள் காண; எங்கள் கண்முன்பாக. 'நண்ணினை நாங்கள் காண' (ஒப்பு): யுத். விபீடணன். 58.

பி - ம். 1. தன்னை; சேர்வதன்.

3. நண்ணினை.

4. புகுவதென்னே. 91

### இலக்குவன் வெற்றி

2028. கோடிநூ றமைந்த கூட்டத்
 திராக்கதர் கொடித்திண் டேரும்
ஆடன்மாக் களிறும் மாவுங்
 கடாவின ரார்த்து மண்டி
மூடினர் மூடினாரை முறை
 முறை துணித்து வாகை
சூடினு னிராமன் பாதஞ்
 சூடிய தோன்றல் தம்பி.

கோடி நூறு அமைந்த - நூறு கோடி அளவில் பொருந்திய, கூட்டத்து இராக்கதர்கள் - பெருந்திரளான அரக்கர்கள், கொடி திண் தேரும் - கொடிகள் கட்டப்பெற்ற வலிய தேர்களையும், ஆடல் மாகளிறும் - பலம் அமைந்த பெரிய வேழங்களையும், மாவும் - குதிரைகளையும், கடாவினர் - (இலக்குவன் மீது) செலுத்தினவர்களாய், ஆர்த்துமண்டி - ஆர்ப்பாட்டம் செய்து கொண்டு மிக்குச் சென்று, மூடினர் - (அவனை) வளைந்து கொண்டனர்; மூடினாரை - (அங்ஙனம் தன்னைச்) சூழ்ந்துகொண்ட இராக்கதர்களை, இராமன் பாதம் சூடிய தோன்றல் தம்பி - இராமபிரானுடைய திருவடி நிலையை (த் தன் முடிமேல்) தரித்தவனான பரதனுடைய தம்பியான இலக்குவன், முறை முறை - படிப்படியாக, துணித்து - வெட்டி, வாகை சூடினன் - வெற்றி மாலையைச் சூடினன்.

ஆடன் மாக்களிறு; அடல் ஆடல் என நீண்டது, 'ஆடன் மாகரி சேவக மமைந்தென வசைந்தான்' (யுத். பிரமாத்திர: 173).

கடாவுதல் - செலுத்துதல், 'தடங்களிறு தேர் பரிகடாவி' (ஆரணிய. 525) ; முறை முறை என்பது நாற் படையையும் தனித் தனித் துணித்ததைக் குறித்தது எனினுமாம். வாகை சூடுதல்: வாகை : வெற்றிமாலே. (ஆரணிய. 397, 428) காண்க. 'வடதிசை வாகை சூடி' (கல்வெட்டு) ; இங்கும் இலக்குவன் எனக் கூறுது பெரும் தொடராற் குறித்தமை காண்க ; (யுத்த. 2026) ; உரைக் குறிப்புக் காண்க. தோன்றல்: ஆண்பாற் சிறப்புப் பெயர். இறுதியடிகள் காரண காரியம் தோன்றக் கூறப் பெற்றிருத்தல் உய்த்துணர்க. பரதம் இராமன் பாதுகை பெற்று அயோத்திக்கு மீண்டு செல்லாதிருந்தால், பின்னர் வரலாறு பெருகி, இலக்குவன் இலங்கைப் போர்களில் வெற்றி பெற்று வாகை சூடுதல் நிகழ்ந் திராது என்ற குறிப்பினை ஆசிரியர் உணர்த்துதல் ஓர்ந்துணர்க. 'மடமான் இரக்கமின்மை யன்றோ வின்றிவ் வுலகங்க ளிராமன், பரக்குந் தொல்புக முமுதினைப் பருகுகின்றதுவே' (அயோத்தி. மந்தரை : 78) ; 'தேவி, தூய சிந்தையுந் திரிந்தது சூழ்ச்சியினிமை யோர், மாயை யும்மவர் பெற்றநல் வரமுண்மை யாலும், ஆய வந்தண ரியற்றிய வருந்தவத்தாலும்' 'காந்தை யருக்க கனி யனைய சானகியார் பேரழகும் அவர்தங் கற்பும்' (யுத்த. இராவணன் வதை: 341) என்ற செய்யுளும் இங்கு ஒப்பு நோக்கத் தகுவன. இராமன் பாதம் சூடியது அயோத்தியா காண்டம் 'கிளை கண்டு நீங்கு படலத்துக் காண்க'

பி - ம். 1. இயைத்த ; கோடித்தின்டேர்.
2. அடங்கலு மடங்க லூர்ந்து.
3. முனிந்து ; தொகுத்து வாகை.

92

2029. அதிர்ந்தன வுலக மேழு
மனற்பொறி யசனி யென்னப்
பிதிர்ந்தன மலையும் பாரும்
பிளந்தன பிணத்தின் மேன்மேல்
உதிர்ந்தன தலைகள் மண்டி
யோடின வுதிர நீத்தம்
விதிர்ந்தன வமரர் கைகள்
விளைந்தது கொடிய வெம்போர்,

இலக்குவன் (எய்த வாளிகளின் வேகத்தால்), உலகம் ஏழும் அதிர்ந்தன - ஏழு உலகங்களும் நடுங்கின; அனல் பொறி அசனி என்ன - தீப்பொறிகளையுடைய இடி (வீழ்ந்தாற்போன்று), மலையும் பிதிர்ந்தன - மலைகளும் தூள்பட்டன; பாரும் பிளந்தன - பூமிப் பகுதிகளும் பிளவுபட்டன; பிணத்தின் மேல்மேல் - (போர்க்களத்தில் மரித்துக்கிடந்த) சவங்களின்மீது, (விடாமல்) தலைகள் உதிர்ந்தன - தலைகள் ஒன்றன்மேல் ஒன்றாக விழுந்தன; உதிரம் நீத்தம் மண்டி ஓடின - இரத்த வெள்ளம் மிக்குப் பெருகின; அமரர் கைகள் விதிர்ந்தன - (இவற்றைக் கண்ணுற்ற) தேவர்களின் கரங்கள் நடுங்கின; கொடிய வெம்போர் - மிகவும் கடுமையான போர் விளைந்தது - மூண்டது.

அசனி: இடி; (ஆரணிய. 580). நீத்தம்: வெள்ளம்; 'மொய் புணிர் நீத்த மோடி' (ஆரணிய. 550).

பா - ம். 1. உலகமெங்கும்.

2. மழையும்; பிணத்தின் குன்றத்து, குன்றம்.

4. விளைந்தன; கோடி. 93

2030. விட்டனன் விசிகம் வேகம் விடாதன வீரன் மார்பில்
பட்டன வுலக மெங்கும் பரந்தன பதாகைக் காட்டைச்
சுட்டன துரக ராசி துணித்தன பணைக்கைம் மாவை
அட்டன கூற்ற மென்ன வடர்த்தன வனந்த மம்மா.

வீரன் - ஆண் மகனான இலக்குவன், வேகம் விடாதன அனந்தம் விசிகம் விட்டனன் - வேகம் நீங்கப் பெறாத எல்லையற்ற அம்புகளை விடுத்தான்; மார்பில் பட்டன - (அந்த அம்புகள்) அரக்கர் தம் மார்பில் தைத்தன; உலகம் எங்கும் பரந்தன - உலகங்களும் பரவின; பதாகை காட்டை சுட்டன - கொடிகளின் தொகுதியை எரித்தன; துரகம் ராசி துணித்தன - குதிரைத் திரளை வெட்டி யெறிந்தன: பணைகை மாவை அட்டன - பனந் துண்டுகள் போன்ற துதிக்கைகளையுடைய யானைகளை அழித்தன; கூற்றம் என்ன அடர்த்தன - (கொலைத் தொழில் புரியும்) யமன் போன்று போர்க்களம் எங்கும் நெருங்கின. அம்மா: வியப்பிடைச் சொல்.

அனந்தம் விசிகம் என இணைக்க, விசிகம்: அம்பு; 'வெந் தீவினைப் பயன் ஒத்தன அரக்கன் சொரி விசிகம்; (யுத்த. இராவணன் வதை: 52); 'விலக் கினன்தடந் தோளினு மார்பினும் விசிகம்' (யுத்த. வேலேற்ற: 20); பதாகைக் காடு என்றதால் தேர்களின் மிகுதி உணரப்படும். ராசி: கூட்டம். 'துடித்தன குருதியில் துரக ராசியே' (யுத்த. 1753).

பா - ம். 1. விட்டன; விகிதை; வீழ்ந்தன; விரர்.

2. படர்ந்தன.

3. பணைக்கை; வேழம்.

4. கூற்றமென்னப்பட்டன.

2031. உலக்கின்ற ருலக்கின் றுரை
யெண்ணுவா னுற்ற விண்ணோர்
கலக்குறு கண்ண ராகிக்
கடையுறக் காண லாற்றார்
விலக்கரும் பகழி மாரி
விளைக்கின்ற விளைவை யுன்னி
இலக்குவன் சிலைகொ டேகொ
லெழுமழை பயின்ற தென்றார்.

உலக்கின்றார் உலக்கின்றாரை - மேன்மேலும் மரிக்கும் அரக்கர் களை, எண்ணுவான் உற்ற விண்ணோர் - கணக்கிடத் தொடங்கிய அமரர்கள், கலக்குறு கண்ணர் ஆகி - (வரம்பு மீறியிருத்தலின்) கலங்கிய விழிகளை உடையவர் ஆகி, கடை உற காணல் ஆற்றார் - முடிவு போகக்காண வியலாதவர் ஆயினர்; (மற்றும்) விலக்கரும் பகழிமாரி - (எவராலும்) தவிர்க்க முடியாத அம்பு மழையை, விளைக் கின்ற விளைவை உன்னி - இலக்குவன் உண்டு பண்ணுகின்ற நிகழ்ச்சியை மனத்துக் கொண்டு, 'எழுமழை பயின்றது - ஏழு மேகங்களும் (இடையறாது பொழியும் தன்மையைப்) பழகியது, இலக்குவன் சிலை கொடே - இலக்குவனுடைய வில்லினிடத்துத் தானோ?' என்றார் - என்று பகர்ந்தனர். கொல்: ஐயம்.

முன்னிரண்டடி : நன்மை நவிற்சியணி. பின்னிரண்டடி : நற்குறிப் பேற்றவணி. மேகம் ஏழு : சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலா வர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம். உலத்தல் : அழிதல் ; 'நட்புலந்தவரால்' (வி. பா. நச்சு. 33) ; 'உய்ந்தா ளல்லதுலந்த துண்மையோ' (கிட்கிந்தா. 961). எழுமழை பயின்றது ; (ஒப்பு) : யுத்த. 1429.

பி - ம். 1. உலக்குநர் ; வானோர்.

2. கண்ணர் நோக்கி ; காணலாறு.

3. மாரி விழ்கின்ற ; நோக்கி.

4. சிலை கொண்டேயோ, சிலையொடே கோல் ; எழிலியும் ; ஈன்றது ; என்பார். 95

## படுகளச் சிறப்பு

2032. ஒளியொண் கணைகள் தோறு முந்திய வேழ மொற்றை
வாளியின் தலைய பாரின் மறிவன மலையிற் சூழ்ந்த
ஆளியின் றுப்பின் வீரர் பொருகளத் தார்த்த வாழித்
தூளியின் தொகைய வள்ளல் சுடுகணைத் தொகையு
[மம்மா.

ஒளி ஒள் கணைகள் தோறும் - (இலக்குவன் விடுத்த) வரிசையான ஒளி வாய்ந்த சரங்கள் விடும் தோறும், உந்திய வேழம் - கீழே வீழ்த்தப்பட்ட யானைகள், (ஒவ்வொன்றும்), ஒற்றை வாளியின் தலைய - ஒவ்வோர் அம்பின் முனையை உடையனவாய், பாரில் மறிவன - பூமியில் இறந்து வீழ்ந்து, மலையில் சூழ்ந்த - மலைகள் போன்று சுற்றிக் கிடந்தன ; ஆளியின் துப்பின் வீரர் - சிங்கம் போன்ற வன்மை வாய்ந்த வீரர்கள், பொருகளத்து - போர் புரிகின்ற அந்தக் களத்தே, வள்ளல் சுடுகணை தொகையும் - இலக்குவனுடைய கொல்லும் இயல்புள்ள அம்புகளின் எண்ணிக்கையும், ஆர்த்த - ஆரவாரம் செய்கின்ற, ஆழி தூளியின் தொகைய - கடல் மணல்களின் தொகையை உடையன. அம்மா : வியப்பிடைச் சொல்.

ஒளி.- வரிசை ; 'காலமாரியன்ன வாளியோளியால்' (யுத்த. மூலபல. 98); 'ஒளின்முற்றுது' (யுத்த. வாநர் களங்காண். 16); துப்பு: வலிமை ; 'கெடலருந் துப்பின்' (அகநா. 105) ; ஆழித் தூளியின்

தொகைய : கடல் மணல் அளவிட முடியாதது போன்று அளவிட முடியாதன என்க. ‘தொல்லைநம் பிறவி யெண்ணில் தொடுகடல் மணலு மாற்று எல்லைய’ (சீவக. 270) ; சுடுகணை : வினைத்தொகை.

பி - ம். 1. மீளி ; கணைகளோடும்.

2. வாளியின் நிலைகள் ; மறிந்தவன் மலையிற், மறிந்தன மலையில், மறிவன மழையிற்.

3. ஆளியின் துழனி, ஆளியிற்றுளக்கு, பூணையிற்றுளக்கி ; அமர்க்களத்து.

4. தொகையும் ; சொரிகணை ; அஃதே. 06

2033. பிறவியிற் பெரிய நோக்கிற்
பிசிதமுண் டுழலும் பெற்றிச்
சிறையன வென்ன நோக்கித்
தேவருந் திகைக்கத் தேற்றித்
துறைதொறுந் தொடர்ந்து வானம்
வெளியறத் துவன்றி வீழும்
பறவையிற் பெரிது பட்டார்
பிணத்தின்மேற் படிவ மாதோ.

‘(இவை) பிறவியில் - பிறப்பிலேயே, பெரிய நோக்கில் - பெரிய காட்சியையும், பிசிதம் உண்டு உழலும் பெற்றி - ஊனை உண்டு திரியும் இயல்பினையும், சிறையன - இறகுகளையும் உடையனவான பறவைகளே, என்ன - என்று, தேவரும் நோக்கி திகைக்க - அமரர்களும் கண்டு மலைக்குமாறு, தேற்றி - தம்மைக் காட்டிக் கொண்டு, (இலக்குவன் விடுத்த அம்புகள்) துறை தொறும் தொடர்ந்து - போர்க்களத்தில் பல இடங்களிலும் நிறைந்து, வானம் வெளி அற துவன்றி - ஆகாயத்தில் இடைவெளியின்றி நெருங்கி, வீழும் பறவையில் - (பிணங்களைத் தின்னுமாறு அவற்றின்மீது) வீழ்கின்ற கழுகுபோன்று, பெரிது - அதிகமாக, பட்டார் பிணத்தின்மேல் படிவ - இறந்தவர்களுடைய பிணங்களின் மீது கிடப்பன ஆயின. மாது, ஓ: அசைகள்.

இறகுகளோடும் கூடிச் சவங்களைக் கவ்விக்கொண்டு பெரிதும் காட்சியளித்த அம்புகட்கு, இறகுகளோடு கூடிப் பிணங்களை அல

கினல் குத்திக்கொண்டு பேருருவமுடையனவா யிருந்த பறவை உவமை: அம்புகட்கு அவை விரைதல் வேண்டி இறகுகள் இரு புறங்களிலும் கட்டுதல் மரபு; இது பற்றியே அம்புக்குப் பத்ரி என்ற பெயர் உண்டு என்பர். அம்புகட்குச் சம்பாதி: சிலேடை; பிறவியிற் சம்பாதி அருணனிடம் தோன்றியதனுல், அநேக தூரம் நோக்கும் விழியினுல், ஊன் அருந்துவதால், சிறகுண்மையால், அருக்கன் மண்டலம் வரை சென்று பூமியிலே விழுந்ததனுல் என்றறிக. பறவையின் - பறவையைப் பார்க்கிலும் எனினுமாம்; பிசிதம்: மாமிசம்; அரக்கர்க்குப் பிசிதாசநர் என்ற பெயருண்டு.

பி-ம். 1. நோய்க்கு; தோற்றம்.
2. சிறையென, சிறையயவே, சிறியவே; நிகைத்துத், நிகைப்பக்; நெற்றி, தோற்றித்.
4. பட்ட; படியுமம்மா, பகழிமாதோ. 07

2034. திறந்தரு கவியின் சேனை செறிகழ லிருதன் சீற
இறந்தன கிடந்த வெள்ள மெழுபதிற் பாதி மேலும்
பறந்தலை முழுதும் பட்ட வஞ்சகர் புடிவ மூட
மறைந்தன குருதி யோடி மறிகடன் மடுத்தி லாத.

செறி கழல் நிருதன் சிற - புனைந்த வீரகண்டை யணிந்த அரக்கனுன இந்திரசித்து வெகுண்டு போராற்றியதால், திறம்தரு கவியின் சேனை - வலிமை மிக்க குரக்குப் படைகள், எழுபதில் பாதி வெள்ளம் மேலும் - முப்பத்தைந்து வெள்ளத்திற்கு மேலும், இறந்தன கிடந்த - மரித்துக் கீழ் விழுந்து கிடந்தவை, பறந்தலை முழுதும் - போர்க்களம் முழுவதும், பட்ட வஞ்சகர் படிவம் மூட - இறந்த சூழ்ச்சிகள் வல்ல அரக்கர்களின் உடல்கள் மூடுதலால், மறைந்தன - மறைந்தன; குருதி - (அங்குப் பெருகிய) உதிர வெள்ளங்கள், ஓடி - விரைந்து சென்று, மறிகடல் மடுத்திலாத - அலைகள் மடங்குகின்ற ஆழியில் அடங்காவாயின.

வெள்ளம் எழுபதில் பாதி மேலும்; இது நாற்பது வெள்ளம் என்க: 'ஐய அமர்த்தலை, நீயும் நாற்பது வெள்ள நெடும்படை, மாய வெங்கணை மாரி வழங்கினை' (யுத்த. 2094) எனப் பின்பு வருவது காண்க. பறந்தலை: போர்க்களம்; 'பறந்தலை யதனின்

மற்றப் பாதக வரக்கன் கொல்ல' (யுத்த. இந்திரசித். 58), 'பறந் தலை யதனின் வந்த பல பெருங் கவியின் பண்ணை' (யுத்த. 1411); மற்றும்: புறநா. 66, 237, 373. இரத்தப் பெருக்குக் கடலினும் அதிகம் என்பது செய்யுட் கருத்து.

பா-ம். 1. நிருதர், அரக்கர்.

2. இறந்தது; பாகமென்ன; பரக்குமென்னவ்.

3. படிவம் மூடி.

4. மறைந்தது; குருதியோடு; மடுத்த மாதோ. ௬௮

2035. கையற்ருர் கால்க ளற்ருர் கழுத்தற்ருர் கவச மற்ருர்
மெய்யற்ருர் குடர்கள் சோர விசையற்ருர் விளிவு மற்ருர்
மையற்ருர்க் கரியுந் தேரும் வாசியு மற்று மற்ருர்
உய்யச் சாய்ந் தோடிச் சென்ருரு யிருள்ளா ராகியுள்ளார்.

(அரக்கர்களில் பலர்), கை அற்ருர் - கரங்கள் துணிக்கப் பெற்ருர்கள், கால்கள் அற்ருர் - கால்கள் வெட்டப்பட்டனர்; கழுத்து அற்ருர் - கழுத்தினை இழந்தார்கள்; கவசம் அற்ருர் - கவசம் துண்டிக்கப் பெற்றனர்; குடல்கள் சோர மெய் அற்ருர் - குடல்கள் நழுவுமாறு உடலை யிழந்தார்கள்; விசை அற்ருர் - வேகம் அடங்கப் பெற்ருர்கள்; விளிவும் அற்ருர் - கூப்பிடும் சத்தியும் இழக்கப் பெற்ருர்கள்; மையல்தார் கரியும் தேரும் வாசியும் மற்றும் அற்ருர் - மதக் களிப்புக் கொண்ட கிண்கிணி மாலை புனைந்த யானை களும் தேர்களும் குதிரைகளும் பிறவும் இழக்கப் பெற்றனர்; (இந் நிலையில்) உயிர் உள்ளார் ஆகி உள்ளார் - உயிருடன் இருப்பவர் களாகிய இராக்கதர்கள், உய்ய - தாம் உயிர் தப்பிப் பிழைக்கும்படி, சாய்ந்து ஓடி சென்ருர் - தளர்ந்து ஓடிப் போயினர்.

மெய்: உடல்; பொய்யாயிருந்தும் உடலை மெய் என்பது மங்கல வழக்கென்பர் அறிஞர். குடல்: குடர்; ஈற்றுப் போலி. விளித்தல்; அழைத்தல். 'உம்மை யெல்லாம் விளிப்பனே' (யுத்த. 1891) 'கூற்றத்தைக் கையால் விளித்தற்ருல்' (குறள். 894); மையல்: மயக்கம்; (யுத்த. 1801), 'மையற்கரி யுயிரிற்றன; (யுத்த. 1823); கவசம்: இருப்புச் சட்டை; இதனை மெய்புகுகருவி என்பர்; மற்றும் என்றது படைக்கலம் முதலிய போர்க்கு இன்றி யமையாதனவற்றை. சாய்தல்: தளர்தல்; 'ஒய்தல் ஆய்தல் நிழத்

நல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்'. உயிர் உள்ளாரகி உள்ளார்: என்றது, உயிர் மாத்திரம் இயங்கப் பெற்ருர்கள் அன்றி எவ்விதமான முயற்சியும் இன்றி நடைப்பிண மாயினர் என்றபடி.

பி-ம். 2. ருடல்கள் அற்ருர்; விழியும்.

3. மையற்ருர் கரியும்.

4. சார்ந்தோடியுற்ருர். 99

## இலக்குவனை இந்திரசித்து நெருங்க அநுமன் அங்கு வருதல்

2036. வற்றிய கடலுள் நின்ற மலையென மருங்கின் யாரும்
சுற்றின ரின்றித் தோன்றுந் தசமுகன் தோன்ற றுள்ளித்
தெற்றின புருவத் தோன்றன் மனமெனச் செல்லுந்
[தேரான்
உற்றன னிளைய கோவை யனுமனு முடன்வந் துற்ருன்.

வற்றிய கடலுள் நின்ற - நீர் வறண்ட கடலுள் (தனித்து) நின்ற மலை போன்று, மருங்கின் யாரும் சுற்றினர் இன்றி - (தன்) அருகில் சூழ்ந்திருப்பவர் எவரும் இல்லாமல், தோன்றும் - காணப் படும், தசமுகன் தோன்றல் - இராவணனுடைய புதல்வனை இந்திரசித்து, துள்ளி - துடித்து, தெற்றின புருவத்தோன் - (சினத் தால்) நெறித்த புருவத்தனாய், தன்மனம் என செல்லும் தேரான் - தன் மனம் போன்று (நினைந்த இடத்திற்கு விரைந்து) செல்லும் தேர்மீது அமர்ந்தவனாய், இளைய கோவை உற்றனன் - இலக்கு வனை அணுகினான், அநுமனும் உடன் வந்து உற்ருன் - அநுமனும் (அங்கு) உடனே வந்து சேர்ந்தான்.

நால்வகைப் படைகளும் பிறவும் அழிந்துபடத் தனியே நின்ற அரக்கனுக்கு, நீரும் நீரகத்துள்ள சலராசிகளும் அற்றனவாக வறிதே புலப்படும் மலை உவமை. தன் மனம் எனச் செல்லும் தேரான் - மனம் விரைந்து செல்லற்குவமை; 'மானுருவாக நின் மனம் பூட்டினையோ' (அகநா. 384); 'துரகமின்றெனினும், நிருதர்

கோமக னிணைந்துழிச் செல்வ தோர் நினைப்பில்' (யுத்த. இராவணன் தேரேறு. 18) என்றமையும் காண்க. 'தசமுகன் தோன்றல்' என்ற தொடர், இந்திரசித்து உற்ற பரிபவத்தினை மிகுத்துக் காட்டுவது உய்த்துணர்க. இளையகோ: 'இன்னிரையின் காவலான் இளையகோவே' (வி. பா. நிரை மீட்சி. 139).

பி-ம். 2. தசமுகன் தனைய னுள்ளம்.

3. தெற்றிய புருவத்தோளான், புருவக்கோளான்; தேர்மேல்.

4. இளவறன்னை. 100

## இந்திரசித்தும் அநுமன்மீது ஏறிய இலக்குவனும் ஒருவர்மீது ஒருவர் அம்பு சொரிதல்

2037. தோளின்மே லாதி யைய வென்றடி தொழுது நின்றுன்
ஆளிபோன் மொய்ம்பி னுனு மேறின னமர ரார்த்தார்
காளியே யனைய காலன் கொலையன கனலின் வெய்ய
வாளிமேல் வாளி தூர்த்தார் மழையின் மேன் மழை
[வந்தன்னுர்.

(அநுமன் இலக்குவனை நோக்கி), 'ஐய - தலைவனே! தோளின் மேல் ஆதி - எனது தோளின் மீது ஏறி யருள்க', என்று - என்று பகர்ந்து, அடி தொழுது நின்றுன் - பாதங்களில் வணங்கி நின்றுன்; ஆளிபோல் மொய்ம்பினுனும் - சிங்கம் போன்ற வன்மை வாய்ந்த அவ்விலக்குவனும், ஏறினன் - (அவன் விழைந்த வண்ணமே) ஏறி யருளினுன்; அமரர் ஆர்த்தார் - (அது கண்டு) தேவர்கள் பெரு முழக்கம் செய்தனர்; (உடனே), மழையின்மேல் மழை வந்தன்னுர் - மேகத்துடன் பிறிதொரு மேகம் (எதிர்த்து) வந்தாற்போன்ற தன்மையுடையவரான (அவ்விருவரும்), காளியே அணைய - காளியை நிகர்த்துப் பகையொழிக்கும் தன்மையனவும், காலன் கொலையன - யமன்போன்று கொல்லும் பெற்றியனவும், கனலின் வெய்ய - தீயினைக்காட்டிலும் கொடியனவுமான, வாளிமேல் வாளி - சரத்தின் மேல் சரமாக (சரமாரியாக), தூர்த்தார் - எய்து நிரப்பினுர்கள்.

ஆதி: முன்னிலை ஒருமை வினைமுற்று. மொய்ம்பு - வலி; 'மொய்ம்பின் தாக்கினுன்' (ஆரணிய. 973). 'ஆளியின் மொய்ம்பினுய்' (ஆரணிய. 424); அமரர் ஆர்த்தது தம் நலம் கருதி;

'வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான்' (திருவா. திருச் சதகம். 16). காளி: கருநிறம்; அந்நிறமுடைய காளிக்கு வந்தது, 'சிற்றக் காளிக டொகையும்' (கந்த. அசுரர்யாக. 40). கனலின் என் பதற்குக் கனலைப் போன்று அல்லது கனலைக் காட்டிலும் என்க. தூர்த்தல் - நிறைத்தல்; 'உலகமும் விசும்பும் நாண்மலர் தூர்க்க' (யுத்த. 1072); இல்பொருள் உவமை.

பி - ம். 2. ஆளியேய்.
3. கூளியே, காளியை.
4. விழ்ந்தென்ன. 101

## இலக்குவ இந்திரசித்தரின் போர்

2038. இடித்தன சிலையி னுங்க
விரிந்தன திசைக ளிற்று
வெடித்தன மலைகள் விண்டு
பிளந்தன விசும்பு மேன்மேல்
பொடித்தவிவ் வுலக மெங்கும்
பொழிந்தன பொறிகள் பொங்கிக்
கடிந்தன கணைக ளோடு
கணைகள்தம் மயில்வாய் கவ்வி.

சிலையின் நாண்கள் இடித்தன - (இருவருடைய) வில்லின் நாணிகள் (தெறிக்கப்பட்டு) இடிபோன்று ஒலித்தன; திசைகள் இற்று இரிந்தன - திக்குகள் எல்லாம் அவ்வோசையைக் கேட்டு உடைந்து நிலைகுலைந்தன; மலைகள் விண்டு வெடித்தன - மலைகள் பிளவுபட்டு வெடித்தன; விசும்பு மேன்மேல் பிளந்தன - ஆகாயம் மேலும் மேலும் பிளவுபட்டன; (இந்த நாண் ஒலியால்) இவ் உலகம் எங்கும் பொடித்த - இந்த உலகம் முழுவதும் பொடி யாயின; பொறிகள் பொழிந்தன - தீப்பொறிகள் மிகுதி யாகப் பெய்தன; கணைகளோடு கணைகள் - அம்புகளோடு அம்பு கள், தம் அயில்வாய் கவ்வி பொங்கி கடித்தன - தங்களுடைய கூரிய வாயினால்(நுனியால்) கவ்விச் சிதறிக் கடித்தன.

இச்செய்யுட்கு (ஒப்பு): 'நாணெறிந்தனன்' (யுத்த. 1413) எனத் தொடங்கும் செய்யுள். அம்புகள் ஒன்றுடன் ஒன்று தாக்கியதால் தீப்பொறிகள் எழுந்தன எனப்பட்டது.

பி-ம். 1. எரிந்தன, எறிந்தன; அற்று.
2. வெடித்தன அண்டம்; விசும்பு மென்னப்.
3. பொடித்தன, பொரிந்தன.
4. கணைகளோடும். 102

2039. அம்பினே டம்பொன் ருென்றை
யறுக்கமற் றறுக்கி லாத
வெம்பொறி கதுவ விண்ணில்
வெந்தன கரிந்து வீழ்ந்த
உம்பரு முணர்வு சிந்தி
யொடுங்கினு ருலக மியாவும்
கம்பமுற் றலைந்த வேலைக்
கலமெனக் கலங்கிற் றண்டம்.

அம்பினேடு அம்பு - அம்புகளுடன் எதிர் அம்புகள் (தாக்குங் கால்), ஒன்றை ஒன்று அறுக்க - ஒன்றை யொன்று துணிக்க, அறுக்கிலாத - அவ்வாறு (ஒன்றை யொன்று) அறுக்கமாட்டாதன வான (சில அம்புகள்), வெம்பொறி கதுவ - வெய்ய தீப்பொறிகளால் பற்றப்பட்டு, விண்ணில் வெந்தன கரிந்து வீழ்ந்த - ஆகாயத்தில் வெந்து கருகிக் கீழே வீழ்ந்தன; (இதைக் கண்டு ஆற்ருத), உம்பரும் - தேவர்களும், உணர்வு சிந்தி - அறிவு குலைந்து, ஒடுங் கினர் - ஒடுங்கினுர்கள்; உலகம் யாவும் கம்பம் உற்று உலைந்த - உலகங்கள் அனைத்தும் உடல் நடுங்கி உழன்றன; அண்டம் - அண்ட கோளமானது, வேலை கலம் என கலங்கிற்று - கடலிற் செல்லும் கப்பல் போன்று அசைந்து நடுங்கிற்று.

கதுவ - பற்றி; 'கடுத்தகராம் கதுவ நிமிர் கையெடுத்து' (ஆரணிய. 49); 'கல்லும் மரமுங் கரமுங் கதுவ' (யுத்த. நிகும் பலை. 25). உம்பரும்: உம்மை உயர்வு சிறப்பு. கம்பம் - நடுக்கம்; 'கம்பஞ் செய் பரிவு' (சீவக. 1737); 'அழுதுடல் கம்பித்து' (திருவாச. 4 : 61). வேலைக்கலம்: பொருத்தமான உவமை. 'கம்பித்

தலை யெற்றிடுர் கடல்' (பால. 1359). மற்று: வினைமாற்று. இது கவிக் கூற்று.

பி-ம். 1. அறுத்தன வறுத்திலாத, அறுந்தவற்றற்றிலாத, அறுந்தற்ற வற்றிலாத.

2. வெம்புவெஞ் சரங்கடம்மில், வம்பு வெம்பொறிகடுள்ளி, வெம்புவ பொறிகடுள்ளி; விய்ந்த.

3. உம்பரும் பிறரு நீக்கியோங்கின, உணர்வு நீங்கியொடுங்கினர்.

4. நம்பமிற்று; எழுந்த வேலைக், உலைந்து காலிற், உலைந்த வேலை; கடல்களும், கடலெனக்; அன்றே. 103

2040. அரியினம் பூண்ட தேரு மனுமனு மனந்த சாரி
புரிதலி னிலங்கை யூருந் திரிந்தது புலவ ரேயும்
எரிகணைப் படல மூட விலருள ரென்னுந் தன்மை
தெரிகிலர் செவிடு செல்லக் கிழிந்தன திசைக ளெல்லாம்.

அரி இனம் பூண்ட தேரும் - சிங்கக் கூட்டங்கள் பூட்டப்பட்டுள்ள (இந்திரசித்தின்) இரதமும், அநுமனும் - (இலக்குவனை ஏந்தி நின்ற) மாருதியும், அனந்த சாரி புரிதலின் - எல்லையற்றனவான வலசாரி இடசாரிகள் வருவதால், இலங்கை ஊரும் திரிந்தது - இலங்கா நகரும் சுற்றியது; எரிகணை படலம் - (இருவரும் எய்த) எரியும் தன்மையுள்ள அம்புகளின் தொகுதி, மூட-(எங்கும்) மூடியதால், (இலக்குவன் இந்திரசித்து என்ற இருவரும்), இலர் உளர் என்னும் தன்மை - இலரோ உளரோ என்ற தன்மையை, புலவரேயும்-(இமையா நாட்டமுடையவரான) தேவர்கள்கூட, தெரிகிலர் - அறியவியலாதவராயினர்; திசைகள் எல்லாம் செவிடு செல்ல கிழிந்தன - எல்லாத் திக்குகளும் (அப்போர் ஒலியால் ஆங்காங்குள்ள உயிர்கள்) செவிடுபடுமாறு, (தாம்) பிளவுபட்டன.

புலவர் - அறிஞர் ஆன தேவர்கள்.

பி-ம். 1. அனந்தம்.

2. புரிதலும்; புரிந்தது.

3. மூடி; இவருளர், யாரிவர்.

4. கிழிந்தது. 104

இதன்பின் 'என் செய்தார்' என்ற கவி ஓர் பிரதியில்.

2041. நாண்பொரு வரிவிற் செங்கை நாமநூல் நவின்ற கல்வி
மாண்பொரு வகையிற் றன்று வலிக்கிலை யவதி வானஞ்
சேண்பெரி தென்று சென்ற தேவரு மிருவர் செய்கை
காண்பரி தென்று காட்சிக் கையுற வெய்திற் றன்றே.

'நாண் பொரு - நாணி பூட்டப்பட்ட, வரிவில் - கட்டமைந்த வில்லினது, நாமம் நூல் - புகழ் சான்ற நூலை (வில் வித்தையினை), செம்கை - தங்களுடைய சிவந்தகரங்களால், நவின்ற - (இவ்விருவரும்) பழகிய, கல்வி மாண்பு - கல்விப் பெருமை, ஒருவகையிற்று அன்று - ஒருதிறப்பட்டதன்று; (பலவகைச் சிறப்பினது), வலிக்கு அவதி இலை - (இவர்களின் உடல்) வன்மைக்கும் எல்லை இல்லை; (இவர்களின் வலிமை), வானம் சேண் பெரிது - வானத்தினும் மிக விரிந்தது, (ஆதலின் இவர்கள் போரினைக்காண வேண்டுவது அவசியம்), என்று - என்று நினைந்து, சென்ற தேவரும் - போரினைக் காண வந்த அமரரும், இருவர் செய்கை காண்பரிது - இவ்விருவரின் போர்ச்செயல் காண்பதற்கு இயலாது', என்று - என்று சொல்லி விட்டதனால், காட்சிக்கு ஐயுறவு எய்திற்று - காட்சிப் பிரமாணத்துக்கும் ஐயம் ஏற்பட்டது. அன்றே : வியப்பிடைச்சொல்.

இவர்களின் வீரச்செயலைக் காண விழைந்து வந்த தேவர்கள் இவர்கள் செய்த போர்ச்செயல்களின் விரைவினால் அவற்றைக் காணமாட்டாதவராயினர் என்க. பிரமாணங்கள் எட்டு வகைப் படும்: அவை; காட்சி, அநுமானம், ஆகமம், உவமானம், அருத்தாபத்தி, அநுபலத்தி, சம்பவம், ஐதிகம் (வேதா. சூடா. 20) என்ப. இவற்றுள் காட்சி ஆகமம் அநுமானம் என்ற மூன்றும் மிகச் சிறந்தவை. காட்சி ஐயத்திற்கிடமின்றி யிருப்பதால் எல்லாவற்றிலும் மேலானது. ஆயினும் இந்தக் காட்சிப் பிரமாணத்திலும் சந்தேகம் நிகழும்படி இமையா நாட்டத்தினரான தேவர்களும் இவ்விருவர் செய்த போரினைக்காண இயலாதவர் ஆயினர் என்க. இச்செய்யுள் கவிக்கூற்று. அவதி: 'அன்பினுக்கவதியில்லை' (யுத்த. 410); வானம் சேண் என்பன ஒரு பொருட் சொற்கள் எனினும் சேண் என்பது மிகுதி என்று பொருள் செய்யப்பட்டது; சேணுற நிண்டு மீண்டு' (ஆரணிய. 265) என்றது காண்க.

பி - ம். 2. வலிக்கில்லை ; வானச்.

3. செம்பரிதேன்று சென்ற, சேண் பொருளென்று நின்ற.

4. காண்பொருளன்றென், காட்சி கையறவு ; அன்றே, அம்மா. 105

இதன்பின் 'ஆயிர' என்ற கவி ஓர் பிரதியில்.

2042. என்செய்தா ரென்செய் தாரென்
றியம்புவா ரினைய தன்மை
முன்செய்தா ரியாவ ரென்பார்
முன்னேது பின்னே தென்பார்
கொன்செய்தார் வீர ரின்ன
திசையினு ரென்றுங் கொள்ளார்
பொன்செய்தார் மவுலி விண்ணோ
ருணர்ந்திலர் புகுந்த தொன்றும்.

பொன் செய்தார் மவுலி விண்ணோர் - பொன் மயமான (மந்தார கற்பக மாலையை) முடியிற் புனைந்த அமரர்கள், (போர் நிகழும் தீவிரத்தால் அங்கு), புகுந்தது ஒன்றும் - நிகழ்ந்த எதனையும், உணர்ந்திலர் - அறிய இயலாதவர்களாய், 'என் செய்தார் என் செய்தார் - (இப்பெருவீரர் இருவரும்) யாது செய்தனர்', என்று இயம்புவார் - என்று விடாது கூறுபவராய், 'இனைய தன்மை - இது போன்ற விற்றொழிலை, முன் யாவர் செய்தார் - இதன் முன்பு யாவரே புரிந்துள்ளனர்', என்பார் - என்று மொழிவார் ; 'முன் ஏது பின் ஏது - இந்த மாதிரிக் கடுந்தொழில் முன்னும் நிகழ்ந்ததில்லை பின்னும் நிகழ்தற்கில்லை', என்பார் - என்று பகர்வார்கள் ; கொன் செய்தார் வீரர் - யாவர்க்கும் அச்சம் எய்துமாறு புரிந்த வீரர்கள் (இருவருள்), இன்ன திசையினர் - இன்ன திக்குகளில் உள்ளார்கள், என்றும் கொள்ளார் - என்று அறியவும் இயலாதவர் ஆயினர்.

என் செய்தார் என் செய்தார் என்ற அடுக்கு வியப்புப் பற்றியது ; 'புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு, மதிமை சாலா மருட்கை நான்கே' (தொல். மெய்ப்பாட். 7-ம் அதன் உரை உதாரணங்களும் காண்க. இங்குப் புதுமைபற்றி வந்தது. முன்

னேது பின்ளேதென்பார்; 'ந பூதே நபவிஷ்யதி' என்பர் வட நூலார். கொன் - அச்சம்; 'கொன்முனை யிரவூர் போல' (குறுந். 91).

பி - ம். 1. இயம்பினர்; இன்னதன்மை.
3. கொல் செய்வேன்.
4. புரிந்தது. 108

இங்கு இரண்டு அதிகப்பாடல்கள் :—

எரிமுகப் பகழி மாரி தொடுத்திகல் அரக்கன் எய்தான்
எரிமுகப் பகழி மாரி தொடுத்தவை யிறுத்தா னெந்தை
உருமினப் பகழி மாரி யுருத்துவிட் டரக்க னுர்த்தான்
உருமினப் பகழி மாரி யுருத்துவிட் டிளவல் கொன்றான். 1

நெருக்கிமற் றனந்த கோடி
நெடுங்கணை யரக்கன் கோத்தான்
நெருக்கிமற் றனந்த கோடி
நெடுங்கணை நிமலன் மாய்த்தான்
முடுக்கினுற் றனந்த கோடி
முனைக்கணை யரக்கன் மொய்த்தான்
முடுக்கினுற் றனந்த கோடி
முனைக்கணை முடித்தான் மொய்ம்பன். 2

2043. ஆயிர கோடி பல்ல மயிலெயிற் றரக்க னெய்தான்
ஆயிர கோடி பல்லத் தவை துணித் தறுத்தா னையன்
ஆயிர கோடி நாகக் கணைதொடுத் தரக்க னெய்தான்
ஆயிர கோடி நாகக் கணைகளா லறுத்தா னண்ணல்.

அயில் எயிற்று அரக்கன் - கூரிய பற்களையுடைய இந்திரசித்து, ஆயிரம் கோடி பல்லம் எய்தான் - ஆயிரக் கோடிக் கணக்கான அம்புகளை ஏவினன்; ஐயன் - இளைய கோவும், ஆயிரம் கோடி பல்லத்து - ஆயிரம் கோடி அம்புகளால், அவை துணித்து அறுத்தான் - அந்த அம்புகளை வெட்டி வீழ்த்தினன்; அரக்கன் - மேகநாதன், ஆயிரம் கோடி நாகம் கணைதொடுத்து எய்தான் - ஆயிரம் கோடி நாகாத்திரங்களை வழங்கினன்; அண்ணல் - பெருந்தகையான இளையபெருமான், ஆயிரம் கோடி நாக கணைகளால்

அறுத்தான் - பல கோடி நாகாத்திரங்களைக் கொண்டே அவற்றைச் சேதித்தான்.

பல்லம் - தளிர்வாய் அம்பு; வடசொல். இந்தப் போர்முறையுடன்; 'குதிகொண்டவாசி வயவர் பலரொடு குதிகொண்டவாசி வயவர் குறுகினர்' (வி. பா. 16ஆல் போர். 74) எனத்தொடங்கும் சந்தச் செய்யுளை ஒப்பு நோக்குக. இச்செய்யுள் யமகம்.

பா - ம். 2. அளவ தொடுத்து.

4. கணை தொடுத்து; ஐயன். 107

2044. கோட்டியின் தலைய கோடி கோடியம்
பரக்கன் கோத்தான்
கோட்டியின் தலைய கோடி கோடியாற்
குறைத்தான் கொண்டல்
மீட்டொரு கோடி கோடி வெஞ்சினத்
தரக்கன் விட்டான்
மீட்டொரு கோடி கோடி கொண்டவை
தடுத்தான் வீரன்.

அரக்கன் - அரக்கன், கோட்டியின் தலைய - துன்பத்தினைத் தம்மிடத்துக் கொண்ட, கோடிகோடி அம்பு - பலகோடி சரங்களை, கோத்தான் - தொடுத்தான்; கொண்டல் - மேகத்தை ஒத்தவனான இளையகோ, கோட்டியின் தலைய கோடி கோடியாற் குறைத்தான் - துன்பம் செய்யவல்ல பலகோடி பாணங்களால் (அந்த அரக்கன் வழங்கிய அம்புகளை) அறுத்தான்; வெம்சினத்து அரக்கன் - கடுங்கோபம் கொண்ட இந்திரசித்து, மீட்டு ஒரு கோடி கோடி விட்டான் - மீண்டும் கோடிக் கணக்கான வாளிகளை எய்தான்; வீரன் - இலக்குவன், மீட்டு ஒரு கோடி கோடி கொண்டு அவை தடுத்தான் - மீண்டும் கோடிக்கணக்கான அம்புகளால் அவற்றை விலக்கினான்.

கோட்டி துன்பம்: கொண்டல்: நீரைக் கொள்வது என்ற காரணக்குறி; அல்: பெயர் விகுதி; இங்கு உவமையாகு பெயராய்

கொடையினால் மேகம் ஒத்த இலக்குவனைக் குறித்து நின்றது. இங்கு வாளிக்கொடை அல்லது அம்புவர்ஷம் என்க. முன்னர்ப் 'பொன்னொத்த மேனிப் புயலொத்த தடக்கை யானை' (அயோத்தி. நகர்நீ. 125) என்றமை காண்க.

பா - ம். 1. கொட்டிய நடையா

3. மிட்டிருகோடி

4. மிட்டவை. 108

1045. கங்கபத் திரமோர் கோடி கைவிசைத் தரக்க னெய்தான்
கங்கபத் திரமோர் கோடி கணைதொடுத் திளவல் [காத்தான்
திங்களிற் பாதி கோடி யிலக்குவன் தெரிந்து விட்டான்
திங்களிற் பாதி கோடி தொடுத்தவை யரக்கன் றீர்த்தான்.

அரக்கன் - இந்திரசித்து, ஓர் கோடி கங்கம் பத்திரம் கை விசைத்து எய்தான் - ஒரு கோடிக் கணக்கான கங்கபத்திரம் என்னும் அம்புகளை கையினால் விரைந்து ஏவினான்; இளவல் - இளைய வீரனும், ஓர் கோடி கங்க பத்திரம் கணை தொடுத்து காத்தான் - ஓர் கோடி கங்க பத்திரம் என்னும் அம்புகளை விடுத்து அவற்றைத் தடுத்தான்; இலக்குவன் - இளையவன், திங்களில் பாதி கோடி தெரிந்து விட்டான் - கோடி அர்த்த சந்திர பாணங் களை ஆராய்ந்து பொறுக்கி எடுத்துவிட்டான்; அவை - அவற்றை, கோடி திங்களில் பாதி தொடுத்து தீர்த்தான் - கோடிக்கணக்கான அர்த்த சந்திர பாணங்களை விடுத்து ஒழித்தான்.

கங்கபத்திரம்: கழுகுபோன்ற சிறகுகளையுடைய அம்புகள்; கங்கம் - கழுகு; பத்திரம் - சிறகு; யுத்த. 2033 காண்க. காத்தான் - தடுத்தான்; கணமேயுங் காத்தலரிது' (குறள். 29); காத்தான் என்பதற்குத் தன்னைக் காத்துக் கொண்டான் எனினுமாம். திங்களிற் பாதி - அர்த்த சந்திர பாணம். தெரிந்து: குறி நன்கு ஆராய்ந்து எனினுமாம்.

பா - ம். 2. கோடி கணைகளால்

4. தெரிந்தவை, தெறிந்தவை. 109

2046. கோரையின் தலைய கோடி கொடுங்கணை
யரக்கன் கோத்தான்
கோரையின் தலைய கோடி தொடுத்தவை
யிளவல் கொய்தான்
பாரையின் தலைய கோடி பரப்பின
னிளவல் பல்கால்
பாரையின் தலைய கோடி யரக்கனும்
பதைக்க வெய்தான்.

அரக்கன் - இந்திரசித்து, கோரையின் தலைய கோடி கொடு கணை கோத்தான் - கோரை போன்ற நுனியினை யுடையனவான கோடி கொடியான சரங்களைத் தொடுத்து விட்டான்; இளவல் - இலக்குவன், கோரையின் தலைய கோடி தொடுத்து - கோரையின் நுனியை உடையனவான கோடி (அம்புகளைத்) விடுத்து, அவை கொய்தான் - அவற்றை அறுத்தான்; இளவல் பாரையின் தலைய கோடி பல்கால் பரப்பினன் - இளையகோ பாரை போன்ற தலையை உடையனவான கோடி அம்புகளைப் பலதரம் பரவும்படி செய்தான்; அரக்கனும் - இந்திரசித்தும், பாரையின் தலைய கோடி பதைக்க எய்தான் - பாரையின் தலைபோன்ற கோடி வாளிகளை விரைவாக எவினன்.

கோரை ஒருவகைக் கூரிய நுனியினையுடைய புல்வகை. பாரை கடப்பாரை; 'பாரைக்கு நெக்குவிடாப் பாறை' (நல்வழி. 33). ஒருவகை மீனுமாம்; இதன் தலை பருத்திருக்கும்.

பி - ம். 2. கொன்றன்

3. பாய; பார்மேல்; பால்வாய்

4. பரக்க, பாய, பதைப்ப. 110

2047. தாமரைத் தலைய வாளி தாமரைக்
கணக்கிற் சார்ந்த
தாம்வரத் துரந்து முந்தித் தசமுகன்
தனய னார்த்தான்.

தாமரைத் தலைய வாளி தாமரைக்
கணக்கிற் சார்ந்த
தாம்வரத் தடுத்து வீழ்த்தான் தாமரைக்
கண்ணன் தம்பி.

தசமுகன் தனையன் - இராவணன் மகனான இந்திரசித்து, தாமரை தலைய - தாமரை முகை போன்ற நுதியினையுடைய, வாளி - அம்புகள், தாமரை கணக்கில் சார்ந்த - பதுமம் என்ற பேரெழில் அமைந்தனவாய், தாம் - தாம், வர - வில்லினின்று வெளியேற, முந்தி துரந்து - முன்னர்ப் பிரயோகம் செய்து, ஆர்த்தான் - பேரிரைச்சலிட்டான்; தாமரை கண்ணன் தம்பி - செந்தாமரை போன்ற விழிகளையுடைய இராகவன் இளவலான இலக்குவன், தாமரை தலைய வாளி - தாமரை முகை போன்ற நுதியினை யுடைய அம்புகள், தாமரை கணக்கில் சார்ந்த - பதுமம் என்னும் பேரெண்ணை யொட்டியவாய், தாம்வர - தன் வில்லினின்று வெளியேற, (அவற்றால் அந்த அரக்கன் வாளிகளைத்) தடுத்து வீழ்த்தான் - விலக்கிப் பயனின்றாகச் செய்தான்.

தாமரைத் தலைவாளி - இதனை 'மொட்டம்பு' என்பர். (பிங்); தாமரை : பத்மம் : அதாவது கோடியினாற் பெருக்கி கோடி. ஒன்று முதல் பதினைந்தாவது தானமான (100000000000000); பதுமம், தாமரைக் கண்ணன்; 'தாதையப்பரி சுரைசெயத் தாமரைக் கண்ணன்' (அயோத்தி. மந்திரப் : 70).

பி - ம். 1. கணத்தில் ! சாரத்

2. தாமரைக் கணத்திற் சிந்தி, தாமரைக் கணத்தினுந்தி, தாமரைத் தூரந்துமுந்தி

3. சார்ந்து, சார

4. தாமரைத் தடுத்து: தாமரைக்கணத்து, தாம்வரத் தடித்து. ॥।

2048. வச்சிரப் பகழி கோடி வளையெயிற் றரக்க னெய்தான்
வச்சிரப் பகழி கோடி துரந்தவை யனகன் மாய்த்தான்
முச்சிரப் பகழி கோடி யிலக்குவன் முடுக விட்டான்
முச்சிரப் பகழி கோடி தொடுத்தவை தடுத்தான் முன்பன்.

வளையெயிறு அரக்கன் - வளைந்த பற்களையுடைய இந்திர சித்து, கோடி வச்சிரம் பகழி எய்தான் - கோடிக் கணக்கான வச்சிர வாளிகளை விடுத்தான்; அனகன் - குற்றம் தீர்ந்தவனான இளைய வீரன், கோடி வச்சிரம் பகழி துரந்து அவை மாய்த்தான் - கோடிக் கணக்கான வச்சிர வாளிகளைச் செலுத்தி அவன் விடுத்த அம்பு களை அறுத்தொழித்தான்; இலக்குவன் - இளையவன், கோடி மு சிரம் பகழி - கோடிக் கணக்கான 'திரிசிரம்' என்னும் அம்புகளை, முடுக விட்டான் - விரையுமாறு ஏவினான்; முன்பன் - வன்மை வாய்ந்த அரக்கன், கோடி முசிரம் பகழி தொடுத்து அவை தடுத் தான் - கோடிக் கணக்கான 'திரிசிரம்' என்னும் வாளிகளை விடுத்து அவற்றை விலக்கினான்.

வச்சிரப் பகழி : வச்சிரம் போன்ற உறுதியான அம்பு. 'வளை யெயிற் றரக்கரோடு வரும்வினை யாட்டென் றாலும்' (ஆரணிய, 286). அனகன் - குற்றமற்றவன் : 'அனகனும் இளையகோவும்' (ஆரணிய 1193). முச்சிரம் : மூன்று நுனி : 'முத்தலை எயில் என்றாற் போன்று' முன்பன் : வலியன்; 'முத்தலைச் சூல மோச்சான் வெறுங்கை யானென்று முன்பன்' (யுத்த. 1390). 'முன்பன் மேல் வரத் துரந்தனன்' (யுத்த. வேலே : 24).

பி - ம். 1. வாளெயிற்று
2. துறந்தவை யிளவல்
3. முடுக்கி, முடுகி
4. முறையிற்கொய்தான், தடுத்தான் மொய்ம்பன். 112

2049. அஞ்சலி யஞ்சு கோடி தொடுத்திக லரக்க னெய்தான்
அஞ்சலி யஞ்சு கோடி தொடுத்தவை யறுத்தா னையன்
குஞ்சரக் கன்னங் கோடி யிலக்குவன் சிலையிற் கோத்தான்
குஞ்சரக் கன்னங் கோடி தொடுத்தவை யரக்கன்
[காத்தான்.

இகல் அரக்கன் - வலிமை சான்ற இந்திரசித்து, அஞ்சு கோடி அஞ்சலி தொடுத்து எய்தான் - அஞ்சு கோடியளவினவான அஞ்சலி என்ற வாளிகளைத் தொடுத்து விடுத்தான்; ஐயன் - (அழகனான) இலக்குவன், அவை - அந்த அம்புகளை, அஞ்சு,

கோடி அஞ்சலி தொடுத்து அறுத்தான் - அஞ்சு கோடி அளவின வான வாளிகளைத் தொடுத்துச் சேதித்தான்; இலக்குவன் - இளைய செம்மல், கோடி குஞ்சரம் கன்னம் சிலையில் கோத்தான் - கோடிக் கணக்கான குஞ்சரக் கன்னம் என்ற வாளிகளை வில்லில் கோத்து விடுத்தான்; அரக்கன் - இந்திரசித்து, (அந்தச் சரங்களைக்) கோடிக் குஞ்சரம் கன்னம் தொடுத்து காத்தான் - கோடிக் கணக்கான குஞ்சரக் கன்னங்களை எவித் தன்னைக் காத்துக் கொண்டான்.

அஞ்சலி: ஒருவகைப் பாணம்; அஞ்சலிப்பது போன்று தரையில் வீழ்வது போலும். இகல் அரக்கன் - வலிய இராக்கதன்; 'ஏற்றவனை வரிசிலையோன் இயம்பாமுன் இகலரக்கி' (ஆரணிய. 340). குஞ்சரக் கன்னம்: வடசொற்றொடர்: யானையின் காது போன்ற பகழி என்க. கர்ணம்: கன்னம் எனத் திரிந்தது; 'கன்னங்களில் வேறுள காணுதுமால்' (ஆரணிய. 778). காத்தான்: தடுத்தான் எனினுமாம்: குறள். 29.

பி - ப். 1. ஆர்த்தான்

2. கோடி தொடுத்திவை, கோடியாற்றடுத்து; தடுத்தானையன்

4. கன்னகோடி; கொய்தான். 113

2050. எய்யவு மெய்த வாளி விலக்கவு முலக மெல்லாம்
மொய்கணைக் கான மாகி முடிந்தது முழங்கு வேலை
பெய்கணைப் பொதிக ளாலே வளர்ந்தது பிறந்த கோபம்
கைம்மிகக் கனன்ற தல்லால் தளர்ந்திலர் காளை வீரர்.

(இவ்வாறு இரு பெரு வீரரும் அம்புகளை) எய்யவும் எய்த வாளி விலக்கவும் - ஏவுவதாலும், ஏவப்பட்ட அம்புகளைத் தடுத்தலாலும், உலகம் எல்லாம் - உலகனைத்தும், மொய்கணை கானம் ஆகி முடிந்தது - அடர்ந்த அம்புத்தொகுதி மயமாகிவிட்டது; முழங்கு வேலை - ஆரவாரிக்கும் கடல், பெய்கணை பொதிகளாலே வளர்ந்தது - சொரிகின்ற வாளிகளாலே பெருகி நின்றது; (அவ்வாறாகவும்), காளை வீரர் - இளைய எருது போன்ற அந்த வீரர்கள் இருவரிடமும், பிறந்த கோபம் - உண்டான சினம், கை மிக -

மிகுதியாக, கனன்றது அல்லால் - மேன்மேலும் கொதித்தெழுந்த தல்லாமல், தளர்ந்திலர் ; (சிறிதும்) குறையப்பெற்றாரில்லை

கணைக் கானம் : அம்புக் காடு. முழங்கு வேலை : ஆர்கலி. பெய்கணைப் பொதிகள் - பொழியப் பெறும் அம்பு மூடைகள் கைம்மிக : கை ; உபசர்க்கம். காளை : உவமவாகு பெயர் ; 'கல்லென்ற ஒலியிற் சென்றார் கான்முதற் காளை வீரர்' (ஆரணிய. 617); காளை வீரர் கோபம் தணிந்திலர் ; அஃறிணைப் பண்புப் பெயர் உயர்திணை எழுவாயைத் தொடர்ந்து அம்முடிபேற்றது. கைம்மிக 'காந்தின மனத்தினர் புலவிகைம்மிக' (ஆரணிய. 591).

பி - ம். 1. உலகமெங்கும்

2. கானமாக

3. பொறிகளாலே ; வறண்டது, பெயர்ந்தது, பறந்தது. 114

2051. விழியின் கனிபோன் மேனி கிழிபட வனுமன் வீரச்
சூழெழு வனைய தோண்மே லாயிரம் பகழி தூவி
ஊழியி னிமிர்ந்த செந்தீ யுருமினை யுமிழ்வ தென்ன
ஏழிரு நூறு வாளி யிலக்குவன் கவசத் தெய்தான்.

(இந்திரசித்தானவன்), விழியின் கனிபோல் அநுமன் மேனி கிழிபட - விழிப்பழம்போன்று அநுமனுடைய உடலம் கிழிபடும்படி, (அவனது) வீரம் சூழ் எழு அனைய தோள்மேல் - வீரம் செறிந்த திரண்ட இருப்புக்கம்பம் ஒத்த தோள்களின்மீது, ஆயிரம் பகழி தூவி - ஆயிரம் அம்புகளைப் பொழிந்து, ஊழியின் நிமிர்ந்த செந்தீ உருமினை உமிழ்வது என்ன - பிரளயத்தில் உயர எழுந்த வடவைத்தீயானது சிவந்த நெருப்புமயமான இடியை வெளிப்படுத்துவது போன்று, ஏழ் இரு நூறு வாளி - ஆயிரத்து நானூறு அம்புகளை, இலக்குவன் கவசத்து எய்தான் - இலக்குவனுடைய கவசத்தின் மீது விடுத்தான்.

விழி - செந்நிறமான ஓர் கனி. விழியை விழுதி என்றும் சொல்வர். இச்சொல்லைப் பல இடங்களில் உவமையாக எடுத்தாள்வர் கம்பநாடர் ; பால. புனல்விளை. 28 ; யுத்த. 805 ; யுத்த.

2306; கிட்கிந்தா. 30 உரைக்குறிப்பு என்பன காண்க. ஊழியின் நிமிர்ந்த செந்தீ - வடவைத்தீ; உரும் - இடி; ஆரணிய. 602, 689.

பி - ம். 1. வீரஞ்

3. ஊழியினெழுந்த. 115

2052. முற்கொண்டா னரக்க னென்னு முளரிவாண்
முகங்கள் தேவர்
பிற்கொண்டா ரிளைய கோவைப் பியற்கொண்டான்
பெருந்தோ ணின்றுங்
கற்கொண்டார் கிரியின் நாலு மருவிபோற்
குருதி கண்டார்
விற்கொண்டா னிவனே யென்னு வெருக்கொண்டார்
முனிவர் மேலோர்.

மேலோர் தேவர் - விண்மிதிருந்த அமரர்கள், 'அரக்கன் முன் கொண்டான் - இந்திரசித்து (போர்ச் செயலில்) முன்னேறி விட்டனன்', என்னு - என்று எண்ணி, முளரி வாள் முகங்கள் பின் கொண்டார் - தாமரைபோன்ற ஒளிகொண்ட முகங்களைப் பின்புறமாகத் திருப்பிக்கொண்டனர்; முனிவர் - இருடிகளும், இளைய கோவை - இலக்குவனை, பியல் கொண்டான் பெரு தோள் நின்றும் - (தனது) பிடரியின்மீது ஏற்றி வைத்துக்கொண்டுள்ளவனை அநுமனுடைய பரந்த தோள்களினின்று (பெருகுவதாகிக்), கல் கொண்டு ஆர் - கற்களால் நிறைந்துள்ள, கிரியின் நாலும் அருவிபோல் - மலையிலிருந்து வீழ்கின்ற அருவிபோன்ற, குருதி கண்டார் - உதிரத்தைக் கண்ணுற்றாராய், 'வில் கொண்டான் இவனே - வில்வித்தையிற் சிறந்தவன் இவனே', என்னு - என்று மொழிந்து, வெரு கொண்டார் - (எங்கு பங்கம் நிகழுமோ) என்று அஞ்சினர்.

முளரி: காரணவிடுகுறி. பியல் - பிடர்; 'புலித்தோல் பியற் குமிட்டு' (தேவா. 186:4); 'பெரும்பியல் தலைகள் சிந்தி' (யுத்த. 1624). கல்கொண்டு ஆர் எனப் பிரிக்கப்பட்டது. நாலுதல் - வீழ்தல்; 'நாரியதங் கூந்தலினும் நாலும் அருவியினும், வேரி னறுஞ் சாந்தொழுகும் வேங்கடமே' (திருவேங்கடமாலை: 81). விற்

கொண்டான் இவனே : 'திண்மைக்கிவனே நெறிக்கிவனே தேசுக் கிவனே சிலைக்கிவனே' (வி. பா. திரௌபதிமாலை. 39) என வருதல் காண்க.

பி - ம். 1. முகங்கொள்

2. பெயர்கொண்டான், பொறற்கொண்டான், பெயர் கொண்டார்; தேர் நின்றும்

3. கிரியின் மேல்வரர்

4. விற்கொண்டால்; விண்ணேரெல்லாம். 116

2053. சீறுநூ றெரிந்த சிந்தை யிலக்குவன் சிலைக்கை வாளி
நூறுநூ றேவி நொய்தி னுடங்குளை மடங்கன் மாவும்
வேறுகூ றியற்றி வீரக் கொடியையு மறுத்து வீழ்த்தி
ஆறுநூ றம்பு செம்பொற் கவசம்புக் கழுந்த வெய்தான்.

சிறு நூல் தெரிந்த சிந்தை இலக்குவன் - சினந்து செய்யும் போர்முறையினைக் கூறும் நூல்களை நன்கு உணர்ந்துள்ள இளைய பெருமாள், சிலை கை - (தனது) கரத்தில் உள்ள வில்லினின்று, நூறு நூறு வாளி ஏவி - நூற்றுக்கணக்கான அம்புகளை விடுத்து, நுடங்கு உளை மடங்கன் மாவும் - மடங்கியுள்ள பிடரிமயிரினையுடைய சிங்கங்களை, நொய்தின் வேறு கூறு இயற்றி - விரைவில் (அல்லது) எளிதாக வெவ்வேறு துண்டங்களாகச் செய்து, வீரம் கொடியையும் அறுத்து வீழ்த்தி - வீரத்தின் அடையாளமான கொடியினையும் துணித்து விழச்செய்து, (அவன் அணிந்திருந்த), செம் பொன் கவசம் புக்கு - செம்பொன்மயமான கவசத்துட் புகுந்து, அழுந்த - அழுந்துமாறு, ஆறு நூறு அம்பு எய்தான் - ஆறு நூறு வாளிகளை ஏவினன்.

சிறுநூல் - யுத்த சாஸ்திரம்; சிறும் நூல் என்றது உபசார வழக்கு. பழிக்குப்பழி வாங்கும் வாள் என்றாற்போல. வீரக் கொடியையும் என்ற உம்மையால் பாகனையும் வெட்டி வீழ்த்தமை கொள்க. சாரதி வீழ்ந்தது; 119 இலும் காணலாம். ஆறுநூ றம்பு; (ஒப்பு): 'ஆறுநூறு சகடத் ,தடிசிலும்' (யுத்த. 1264); இலக்குவன் எய்தான் என்க.

பி - ம். 1. சிறி

2. ஏவ; வெய்தின்; அடங்கன்மாவும்

3. வேறியற்றி, சுற்றி, விழ்த்தி 117

2054. காளமே கந்தைச் சார்ந்த கதிரவ னென்னக் காந்தித்
தோளின்மேன் மார்பின் மேலுஞ் சுடர்விடு கவசஞ் சூழ
நீள்நீள் பவள வல்லி நிரையொளி நிமிர்வ வென்ன
வாளிவாய் தோறும் வந்து வடிந்தன குருதி வாரி.

காளம் மேகத்தை சார்ந்த கதிரவன் என்ன - கருமேகத்தைப் பொருந்திய சூரியன்போன்று, காந்தி - ஒளிவீசி, தோளின்மேல் மார்பின் மேலும் - இந்திரசித்தினுடைய தோளின்மீதும் மார்பினிடத்தும், சுடர் விடு கவசம் சூழ - ஒளிவிடுகின்ற கவசத்தைச் சுற்றிலும், நீள நீள் பவளம் வல்லி நிரை - நீளமாக நீண்டுள்ள பவளக்கொடிகளின் வரிசைகள், ஒளி நிமிர்வ என்ன - ஒளியுயர்ந்து விளங்குவதுபோன்று, குருதி வாரி வாளி வாய்தொறும் வந்து வடிந்தன - (இலக்குவன் எய்த) அம்புகள் தைத்த இடந்தோறும் இரத்தம் வந்து ஒழுகின.

இந்திரசித்தின் கரிய மேனியில் அணியப்பெற்றிருந்த பொற் கலசத்திற்குக் காளமேகத்தைச் சார்ந்த கதிரவன் உவமை; 'வெங்கதிர் கரந்த மேகம்' (யுத்த. 853); 'வெய்யவன் தன்னைச் சார்ந்த நீனிறமேக மொத்தான்' (யுத்த. நாகபாசப். 221). பொடித்தன குருதி: 'புண்ணுற்ற நிறத்திற் சோரி பொங்கியே பொடிப்ப (கிட்கிந்தா. 304). அம்புகள் தைத்த இடந்தொறும் பொடித்த' குருதிக்குப் பவளக்கொடியின் ஒளியை உவமித்தார்; (ஒப்பு): 'பவளம்சொரிதரு பைபோல் திவளொளிய' (களவழி. 14).

பி - ம். 2. சுடர் விடுகவசத்தூடு, கவசச்சூழல்

3. நீளுநீர், நீளணி; நிரைந்தன, நிரைந்தன: விழ்ப்ப விழ்வ

4. பொழந்ததுர் உதிரவாரி.



2055. பொன்னுறு தடந்தேர் பூண்ட
மடங்கன்மாப் புரண்ட போதும்
மின்னுறு பதாகை யோடு
சாரதி விழ்ந்த போதும்
தன்விறத் துருவ வாளி
தடுப்பில சார்ந்த போதும்
இன்னதென் றறியா னன்று
வினையதோர் மாற்றஞ் சொன்னான்.

(இலக்குவன் தொடுத்த சரங்களால்) பொன்உறு - பொன்னினால் இயன்ற, தட - பெரிய, தேர் பூண்ட - இரதத்திற் பூட்டப்பெற்ற, மடங்கல்மா புரண்ட போதும் - தரையில் இறந்து வீழ்ந்து புரண்ட காலத்தும், மின் உறு பதாகையோடு - ஒளி பொருந்திய கொடியுடனே, சாரதி வீழ்ந்த போதும் - தேர்ப்பாகன் மரித்து வீழ்ந்த காலத்தும், தன் நிறத்து உருவ - தனது மார்பில் அம்புகள் ஊடுருவுமாறு, வாளி - அம்புகள், தடுப்பு இல சார்ந்த போதும் - தடுக்க முடியாதனவாய்த் தைத்த காலத்தும், இன்னது என்று அறியான் - இன்னதென்று (ஏதும்) உணராதவனாய், அன்னான் - அந்த அரக்கர் கோவின் புதல்வன், இனையது ஓர்மாற்றம் சொன்னான் - இத் தன்மையதான ஓர் வார்த்தையைப் பகர்ந்தான்.

உறுத்தல் : செய்தல் ; பொன்உறு - பொன் உறுத்திச் செய்யப்பட்ட என்க. தட : பெரிய ; 'தடவும் கயவும் நளியும் பெருமை' (தொல். சொல் : மடங்கல்மா : இரு பெயரொட்டு; பதாகை ; பெருங்கொடி ; (யுத்த. 2030 ; 971) மூலபல. 83 : இன்னது இனையது என்று அறியான் அன்னான் ஓர் மாற்றம் சொன்னான் என இயைத்தலும் ஆம். மாற்றம் : வார்த்தை ; 'மாற்ற மஃதுரை செய' (அயோத்தி. மந்தரை : 51) ; அடுத்த பாட்டில் மாற்றாரைப் புகழ்தலின் தன்னை மறந்து அங்ஙனம் செய்ததாகக் கூறினன். அவன் எதிரியின் ஆற்றலை நேரிற் கண்டு வியந்து கூறிய இடங்களும் உண்டு; (யுத்த. இந்திரசித்து வதை : 4, 5) காண்க,

பா - ம். 2. வியந்த, விழுந்த.
3. தன்னிறந் துருவி. 118

2056. அந்நர னல்ல னாகின் நாரண னனைய னன்றேல்
பின்னரன் பிரம னென்பார்ப் பேசுக பிறந்து வாழும்
மன்னர்நம் பதியின் வந்து வரிசிலை பிடித்த கல்வி
இந்நரன் தன்னொ டொப்பா ரியாருள ரொருவ ரென்றான்.

'(இந்த இலக்குவன்) அ நரன் - அந்த நரனே யாவன்; அல்லன் ஆகில் - அவன் அல்லாவிடின், நாரணன் அனையன் - நாராயணனையே ஒப்பான் ; அன்றேல் - அவனும் அல்லன் ஆயின், பின்

அரன் பிரமன் என்பார் பேசுக-அவற்றை அடுத்துச் சிவன் பிரமன் என்ற தேவர்களை (உவமையாக்கி) கூறுக; நம் பதியின் வந்து-நமது நகரிடத்தே வந்து, வரிசிலை பிடித்த கல்வி-கட்டமைந்த வில்லைத் தாங்கிய வில் வித்தையில் தேர்ந்துள்ள, இ நரன் தன்னொடு ஒப்பார்-இம் மனிதனை நிகர்ப்பவர், பிறந்து வாழும் மன்னர்-உலகிற்றோன்றி வாழ்கின்ற மன்னருள், யார் ஒருவர் உளர்-எவர் ஒருவர் இருக்கின்றனர்?' என்றான்-என்று இந்திரசித்து இலக்குவனைப் புகழ்ந்து கொண்டாடினான்.

இலக்குவனுக்கு உவமை கூறின் திரிமூர்த்திகளைத்தான் சொல்ல வேண்டும்; பிறர் யாரையும் சொல்வதற்கில்லை என்றான். ஏனையோரை வாளா உவமை கூறி நாரணன் அனையான் என்றது கருதத்தக்கது. முன்னொரு காலத்தில் குருசிடக் கிரமத்தை உலகத்தார்க்குத் தெரிவித்தற்காக, திருமால் தானாகவே நரன் என்னும் சிடனும் நாராயணன் என்ற ஆசார்யனுமாகப் பதரிகாச்சிரமத்தில் தோன்றி உபதேசகராக வீற்றிருந்தார் என்றது வரலாறு: அந் நரன் என்ற இடத்துத் திருமாலின் அவதார விசேடமாகிய நரனையும், இறுதியடியில் உள்ள நரன் இலக்குவனையும் குறித்து நின்றன. அருச்சுனனிடம் கண்ணபிரான் தாமிருவரும் நர நாரணராக இருந்ததாகக் கூறியது பகவற் கீதையிற் காண்க. அந் நரன்; அபண்டறிசுட்டு, நாராயணன் என்பது செய்யுள் நோக்கி நாரணன் என நின்றது; 'நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவர் கூற, (பால. பாயிரம்); மற்றும் (யுத்த. இராவணன் வதை: 186 : 192 'தன்னூர்க்கு யானை அயலூர்க்குப் பூனை' என்பது பழமொழி. திருக்குறள் இடமறிதல் என்ற அதிகாரத்தில், 'நெடும் புனலுள் வெல்லு முதலை யடும்புனலி, னீங்கி னதனைப்பிற (குறள். 495) என்று சொல்லப்பட்டது; இதற்கு மாறாக எதிரியின் தேயம் சென்று வில் வித்தைத் திறனைக் காட்டினன் இளைய பெருமான் ஆகலின், இங்ஙனம் இந்திரசித்து வியந்தான் என்க. புதுமை பற்றியெழுந்த வியப்பு.

பி-ம். 1. அன்னரன்; அல்லாற்.

2. பின்னரல்; என்பார் பேசுக.

3. மன்னர்தம்; விதியால்; வடித்த. விளைத்த.

4. இன்னரன்; இனையர்.

## தேர் அழியப் பிறிதொரு தேரில் நின்று இந்திரசித்து பொருதல்

**2057.** **வாயிடை நெருப்புக் கால வுடனெடுங் குருதி வாரத்**
**தீயிடை நெய்வார்த் தன்ன வெகுளியா னுயிர்தீர்ந் தாலும்**
**ஓய்விட மில்லான் வல்லை யோரிமை யொடுங்கா முன்னம்**
**ஆயிரம் புரவி பூண்ட வாழியந் தேரி னுனன்.**

உயிர் தீர்ந்தாலும் ஓய்விடம் இல்லான் - (தன்) உயிர் ஒழிவதாயிருந்தாலும் (போர்ச் செயலைக்) கைவிடாதவனாகிய இந்திரசித்து, வாய்இடை நெருப்பு கால - வாயில் தீ எழவும், உடல் - உடலில், நெடு குருதி வார - மிக்க உதிரம் பெருகி வழியவும், தீயிடை நெய் வார்த்து அன்ன - நெருப்பில் நெய்யை ஊற்றினாற் போன்ற வெகுளியான் - சினத்தினனாய், வல்லை - விரைவாக, ஓர் இமை ஒடுங்கா முன்னம் - ஒரு முறை இமை மூடுவதற்கு முன்பே, (ஒரு மாத்திரை அளவிற்குள்ளாக), ஆயிரம் புரவி பூண்ட ஆழி அம் தேரின் ஆனான் - ஆயிரம் குதிரைகள் பூண்டதும், ஆழி - சக்கரங்களை யுடையதுமான அழகிய மற்றொரு இரதத்தின்மீது ஏறிக் கொண்டான்.

காலுதல் : உமிழ்தல் ; பெரும்பாண். 2-ஆம் அடியின் உரைக் குறிப்புக் காண்க. 'பச்சை மாலனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற, எச்சில்' (டாக்டர். ஐயர் தனிப்பா) ; நெடுங்குருதி : விடாது ஒழுகும் உதிரம், தீயிடை நெய் வார்த்தது ; வெகுளி எழுந்ததற்கு நல்ல உவமை ; 'காய் கனற்றலை நெய்சொரிந் தெனக்கதம் கனற்ற' (அயோத்தி. மந்தரை : 63) ; 'நெய் பெய்தீயின்' (குறுந். 106) ; 'நெய் பெய்து மாட்டிய சுடர்' (குறுந். 398) (யுத்த. 2059). மரணத்திற்கும் அஞ்சாதவன் என்று அவன் வீரம் 'உயிர் தீர்ந்தாலும் ஓய்விட மில்லான்' என்ற தொடராற் குறிக்கப் பெற்றது. ஓரிமை ஒடுங்குதல்: ஒரு மாத்திரை அளவு 'கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை' (தொல். எழுத். 7); முன்னர் அக்க குமரன் கையாண்டது 'நூற்றொடு நூறு பூண்ட நொறில் வயப்புரவி நோன்தேர்' (சுந்தர. 937) ; இந்திரசித்துப் பின்னர் ஏறுவது, 'ஆயிர மடங்கல் பூண்ட

பொங்கொடி நெடுந்தேர்' (யுத்த. பிரமாத்திர : 4); 'ஆயிரம் புரவி பூண்ட தேர்' கும்பகன்னன் தேரும் ஆயிரம் பரி பூண்டது' (யுத்த. இந்திரசித்து, 17); (யுத்த. 1435); இவ்வாறு அரக்கர் தலைவர்கள் ஏறிய தேர்களின் ஏற்றத் தாழ்வு காண்க.

பி-ம். 2. உடவெழுங்; மண்டத்.
2. ஓரிமம்.
4. தேரன் ஆறுன். 121

வேறு

2058. ஆசை யெங்கணு மம்புக வெம்புபோர்
ஓசை விம்ம வுருத்திர னும்முடல்
கூச வாயிர கோடி கொலைக்கணை
வீசி விண்ணை வெளியில தாக்கினுன்.

வெம்பு போர் ஓசைவிம்ம - வீரர் மனம் கொதித்துச் செய்யும் போரினது ஒலி பெருகி எழவும், உருத்திரனும் - (அழித்தல் தொழிலினன் ஆன) சிவபெருமானும், உடல் கூச - உடம்பு நடுக்குறவும், ஆசை எங்கணும் - எல்லாத் திக்குகளிலும், அம்புஉக - அம்புகள் சிதறும்படியும், ஆயிரம் கோடி கொலைகணை வீசி - பல கோடிக்கணக்கான கொல்லும் தன்மையுடைய வாளிகளை விடுத்து, விண்ணை வெளி இலது ஆக்கினுன் - ஆகாயத்தை வெற்றிடம் இல்லையாம்படி செய்தான்.

ஆசை: திக்கு; 'ஆசைக டோறும் மள்ளின கொள்ளி' (யுத்த. மாயாசிதை: 22); 'பெயர்ந்தாசைக் கரியிரியப் புருவம் பேர்த்தாய்; (யுத்த. இராவணன் வதைப்: 221( ; அப்புக வெம்பு போர்; எதுகை நயம் காண்க; சர்வ சங்காரம் புரியும் உருத்திரனும் கூசினன் என்று அரக்கனது கொலைத் தொழிலை மிகுத்துக் கூறினுர். கூச: 'கூசியாவி குலையுறுவாளையும் (சுந்தர. 428, 431-ம்) காண்க.

பி-ம். 2. உருத்திரும். 122

இதன் பின் 'ஆயிரம்' என்ற கவி ஓர் பிரதியில்.

2059. அத்தி ரத்தி லனகனு மாயிரம்
பத்தி பத்தியி னெய்குவ பல்கணை
சித்தி ரத்தினிற் சிந்தி யிராவணன்
புத்தி ரற்குமொ ராயிரம் போக்கினான்.

அனகனும் - குற்ற மற்றவனாகிய இலக்குவனும், அ திறத்தில் - அப்பொழுது, பத்தி பத்தியின - வரிசை வரிசையாக, எய்குவ - விடுவனவாகிய, பல் ஆயிரம் கணை - பல்லாயிரம் வாளிகளை, சித்திரத் தினில் சிந்தி - (கண்டோர்) வியப்புறுமாறு சிதறி (அரக்கன் சரங்களை அறுத்து) இராவணன் புத்திரற்கும் ஓர் ஆயிரம் போக்கினான் - இராவணன் புதல்வனை இந்திரசித்தின்மீதும் ஆயிரம் பகழிகளைச் செலுத்தினான்.

அனகன்; குற்றமற்றவன். 'கோடி துரந்தவை அனகன் மாய்த் தான்' (யுத்த. 2048); 'பாசத்தால் அனகன் தம்பி' (யுத்த. நாக பாச: 209); 'உயர் அனகனொடு மமரின் முடுகி; (யுத்த. மூலபல: 161); பத்தி: வரிசை; 'நூறு பத்துடைப் பத்தி னெறிற்பரி பூண்ட' (யுத்த. 1435); 'தோளின் பத்திக டோறும் சுமந்தன' (யுத்த. இராவணன் வதை: 166); சித்திரம்: ஆச்சரியம்; 'சித்திர மிங்கிது வொப்ப தெங்குண்டு' (பால. கார்முகப்: 19); 'சித்திர விலக்கமாகும்' (சுந்தர. 448); புத்திரன்: பெற்றோரைப் புத் தெனும் நரகத்திற் புகாமல் காப்பவன் என்று பொருள்படும் என்பார். இக் கருத்துக் கொண்டேதான் 'தென் புலம் வாழ்நர்க் கருங்கட னிறுக்கும், பொன்போற் புதல்வர்ப் பெறு அதீரும்' (புறநா. 9) என்று கூறப்பட்டது. 'புத்தான கொடுவினையோ டருந் துயரம் போயொளிப்ப' (பால. திருவவ: 36) என்றதும் காண்க.

பி - ம். 1. அந்திறத்தினன். அத்திறத்தினில்; ஐயனும்.
2. எய்துவ, எய்துறும். 123

இஃது ஓர் பிரதியில் இல்லை.

2060. ஆயி ரங்கணை பாய்தலு மாற்றரும்
காயெ ரித்தலை நெய்யெனக் காந்துருத்
தீய வன்பெருஞ் சேவகன் சென்னிமேல்
தூய வெங்கணை நூறுடன் தூண்டினான்.

ஆயிரம் கணை - (இலக்குவன் விடுத்த) ஆயிரம் பாணங்களும், பாய்தலும் - (இந்திரசித்தின்மீது) தாக்கிய அளவில், மாற்றரும் - மாற்றுதற்கு முடியாத, காய் எரிதலை நெய் என காந்துரு - பொங்குகின்ற நெருப்பின்மீது நெய் சொரிந்தாலெலன மனம் கொதித்து, தீயவன் - கொடியவன் ஆன இந்திரசித்து, பெரு சேவகன் - பெரிய வீரன் ஆன இலக்குவனுடைய, சென்னிமேல் - நெற்றிமீது, தூய வெம்கணை நூறு உடன் தூண்டினான் - தூய்மையும் வெம்மையும் கொண்ட அம்புகள் ஒரு நூற்றினை ஏக காலத்துச் செலுத்தினான்.

மாற்றரும்: 'மாற்றரும் கூற்றம் சாற்றிய பெருமையும்' (தொல். புறத். 79); 'காயெரித்தலை நெய்யெனக் காந்துரு' (அயோத்தி. மந்தரை. 63); யுத்த. 2057ம் காண்க. காந்துரு: உரு; செய்யா என்னும் வாய்பாடு. சேவகன்: வீரன்; 'வீரச சேவகச் செய்கை கண்டால்' (யுத்த. 1240); 'சேவகனாகித் திண் சிலையேந்தி' (திருவாச. 2:81); 'குதிரைச் சேவகனாகிய கொள்கையும்' (திருவாச. அகவல்). சென்னி - தலை; இங்கு நெற்றியென்று பொருள் செய்யப்பட்டது; அடுத்த செய்யுளில் 'நெற்றிமேலொரு' என வருதல் காண்க. கணைக்குத் தூய்மை குறிதவறுமை; நல்லோர்க்குச் சத்தியம் தவறுமைபோன்று என்க; ஒரு கணையே நூறாகக் கிளைக்கும் என்பர் 'உற்பத்தி யயனேடொக்கும்' (யுத்த. 1257) என்றமை காண்க. 'தூயவன் சுடர் சூழொளி நெற்றியில், தீயவெங்கணை நூறு செலுத்தினான்' என்ற பாடம் கொள்வர் சிலர்; அங்ஙனம் கொண்டால், இந்திரசித்து என்ற எழுவாய் தருவிக்க வேண்டும்; மேலும் காந்துரு என்ற வினைக்கேற்பத் தீயவன் என இயைத்தல் நன்கு பொருந்துவது உய்த்துணர்க. முதலடியில் 'ஆற்றரும்' எனக் கோடலுமாம்.

பி - ம். 1. பாய்தலும்.

2. காயெரிப்படு; காந்தினன்.

3. தூயவன் சுடர் சூழொளி நெற்றியில், தீய வெங்கணை நூறு செலுத்தினன்.

124

2061. நெற்றி மேலொரு நூறு நெடுங்கணை
உற்ற போதினு மியாதுமோன் றுற்றிலன்
மற்ற வன்தொழி லோன்மணி மார்பிடை
முற்ற வெங்கணை நூறு முடுக்கினான்.

நெற்றிமேல் - (தனது) நெற்றியின்மீது, ஒரு நூறு நெடுகணை உற்ற போதினும் - (இந்திரசித்து விடுத்த) ஒப்பற்ற நூறு பெரிய அம்புகள் தாக்கிய போதிலும், யாது ஒன்றும் உற்றிலன் - எந்தவித மான ஊறுபாடும் அடையாதவனாய், அவன் தொழிலோன் மணி மார்பிடை முற்ற - அந்த வலிய செய்கையன் ஆன அந்த அரக்க னுடைய அழகிய மார்பிடத்து (முழுதும் துளைத்துச் செல்லுமாறு), நூறு வெம்கணை முடுக்கினான் - நூறு கோடி அம்புகளை விரைந்து செலுத்தினான்.

யாதொன்றும் உற்றிலன் என்பதற்கு எந்தவிதமான மன வருத்தமும் எய்திலன் என்றும் பொருள் கொள்வர்; யாதொன்றும் என உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. மற்று அவன் தொழி லோன் எனப் பிரித்து மற்று வினைமாற்றாகக் கொள்ளப்பட்டது. முடுக்குதல்: விரைந்து தாண்டுதல்; 'கடுகி முடுக்கிலும்' (விநாயகபு. 55 : 7); 'அறலைக் கடித்து சைவலத்தை முடுக்கி' (அரிச். பு. விவாக. 11).

பி - ம். 1. மேலுமோர்.

3. மற்றவ்வெந். 125

இதன் பின் 'புதையும்' என்ற கவி ஓர் பிரதியில்.

இந்திரசித்து பொரமாட்டாது வில்லூன்றி நிற்றல்

2062. நூறு வெங்கணை மார்பி னுழைதலின்
ஊறு சோரியொ டுள்ளமுஞ் சோர்தரத்
தேற லாந்துணை யுஞ்சிலை யூன்றியே
ஆறி நின்றன னாற்றலிற் றோற்றிலான்.

ஆற்றலில் தோற்றிலான் - (போர் செய்யும்) திறத்தில், (இது காறும்) தோல்வியுறாதவனான இந்திரசித்து, நூறு வெம்கணை - (இலக்குவனுடைய) நூறு கொடிய வாளிகள், மார்பின் நுழை தலின் - (தனது) மார்பில் புகுந்ததனால், ஊறு சோரியொடு - மென் மேல் உதிரம் பெருகுதலுடனே, உள்ளமும் சோர்தர - மனமும் களைப்புற, தேறலாம் துணையும் - (களைப்பு நீங்கித்) தேறுதல் உண்டாகும் வரை, சிலை ஊன்றியே - (ஊன்றுகோற் போன்று)

தேரில் ஊன்றி நின்று, ஆறி நின்றனன் - ஒன்றும் புரியாமல் ஓய்ந்திருந்தான்.

முன் செய்யுட்கண் 'முற்ற' என்றதற்கேற்ப இங்கு நுழைதலின் எனப்பட்டது. சோர்தல் உதிரம் ஒழுகுதற்கும் உள்ளம் தளர்தற்கும் ஒரே வினையாகச் சமத்காரம் தோன்றக் கூறப்பட்டது. 'மென் மருங்குல் போல் வேறுள வங்கமும் மெலிந்தாள்' (சுந்த. 332); 'உள்ளமும் கோடிய கொடியாள்' (அயோத்தி. மந்தரை: 81); 'அங்கையும் உள்ளமும் குவிந்த யாக்கையர்' (ஆரணிய. 562); 'சிந்திப்போம் இருவினையும் சிந்திப்போமே' (தனிப்பா). அவமானம் சோர்வு கூச்சம் இவை காரணமாகச் சிலரைத் தரையில் ஊன்றுவதுண்டு; வாலி மனைவி தாரையைக் கண்ட இலக்குவன், 'தாமரை வதனம் சாய்த்துத் தனுநெடுந் தரைக்கை யூன்றி' (கிட்கிந்தா. 599); நின்றமை கூறப் பெறுதல் காண்க. வீரத்தோடும் அம்பெய்தற்குரிய வில் இங்கு களைப்பால் ஊன்றுகோலாக ஆயினமை காண்க. 'மம்மர்கொள் மாந்தர்க் கணங்காதும் தன் கைக்கோல், அம்மனைக்கோ லாகிய ஞான்று' (நாலடி. 15); (ஒப்பு): அயோத்தி. நகர்நீ. 163.

பி - ம். 1. நுழைதலும். 126

## இந்திரசித்து அநுமன் தேரை அழித்தது

2063. புதையு நன்மணிப் பொன்னுரு ளச்சொடும்
சிதைய வாயிரம் பாய்பரி சிந்திட
வதையின் மற்றொரு கூற்றென மாருதி
உதையி னுலவன் றேரை யுருட்டினன்.

வதையில் மற்றொரு கூற்று, அன மாருதி - சிவபெருமான் காலினால் மடியாத யமனை ஒத்த அநுமன், புதையும் - (தரையில்) அழுந்தும் தன்மையுள்ள, நல்மணி பொன் உருள் - சிறந்த நவமணிகள் பதித்துச் செய்த பொன் மயமான சக்கரங்கள், அச்சொடும் சிதைய - அச்சுக்களுடனே சிதையவும், பாய்பரி - தாவிச் செல்வனவான குதிரைகள், சிந்திட - வீழ்ந்து படவும், உதையினால் அவன் தேரை உருட்டினன் - (ஒரு) உதையினாலே அந்த இந்திரசித்து ஏறிய தேரை உருட்டித் தள்ளினன்.

அரக்கனுடைய தேர் அச்சு ஆழிகளை முறித்துப் பூட்டி யிருந்த குதிரைகளையும் கொன்று தேரையும் உருட்டி வீழ்த்தான், புதைதல்; 'நெடுஞ்சுனை புதையப் புகுந்தெடுத் தளித்தும்' (கல்லா. 13); பொன் உருள்: பொன்னாலாகிய ஆழி; 'பொன் உருள் உரைத் துரைத்தோடி' (பால. வரைக்காட்சி. 8). பாய்பரி - வினைத்தொகை.

பி - ம். 1. நன்மணி.

2. கூற்றென. 127

## பிறிதொரு தேரேறி இந்திரசித்து இலக்குவன்மீது அம்பெய்தல்

2064. பேயொ ராயிரம் பூண்டது பெய்ம்மணி
ஏய தேரிமைப் பின்னிடை யேறினன்
தூய வன்சுடர்த் தோளிணைமேற் சுடர்
தீய வெங்கணை யைம்பது சிந்தினன்.

(இந்திரசித்து) ஓர் ஆயிரம் பேய் பூண்டது-ஓராயிரம் பேய்கள் பூட்டப் பெற்றதும், பெய்மணி ஏய தேர் - நிரம்பப் பதிக்கப்பெற்று நவமணிகள் அமையப்பெற்றதுமான (பிறிதோர்) தேரின் மீது, இமைப்பின் இடை ஏறினன் - ஒரு மாத்திரைப்போழ்தில் ஏறினவனாய், தூயவன் - தூய்மை மிக்கவனான இலக்குவனுடைய, சுடர் தோள் இணைமேல் - ஒளி செய்கின்ற இரண்டு புயங்களின் மீது, சுடர் தீய வெம்கணை - ஒளிவிடுகின்ற மிகவும் கொடிய அம்பு களை, சிந்தினன் - சிதறினன்.

முன்னர் இப்படலத்துப் பத்தொன்பதாம் கவியில் 'நூறாயிரம் யாளியினோன்மை தெரிந்த சியத், தேருமவை யாயிரம் பூண்ட தேர்' எனப்பட்டது; இத்தேர்ச் சிறப்பினை யுத்த. 1955—1958ல் காண்க. மற்றும் யுத்த. 2040, 2055, 2057ம் காணத்தகும். மூன்று நான்காமடிகள் 2060 பாடல் இறுதியடிகளை ஒத்திருத்தல் காண்க. தியவெம்கணை:ஒருபொருட் பன்மொழி; கணைகளின் கொடுமையை

விளக்கி நின்றது: 'தீயவெஞ்சொற் செவிசுடத் தேம்புவாள்' (அயோத்தி. நகர்நீ. 222); சிந்தினான் என்பதிலிருந்து கணைகளின் பன்மை விளங்கும்.

பா - ம். 2. தேர்நிரைமைப்பிடை, தேரொரீமைப்பிடை.

3. துணைத்தோள்; தோளிணை; மேற்செல, சுடத். 128

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

சிந்து வாளி செறிதலும் சேவகன்
ஐந்து நூறு கடுங்கணை யாலவன்
உந்து தேரை யொறுத்தனன் வெய்யவன்
வந்து தேரொன்றின் வல்லையி லேறினான்.

## இந்திரசித்தின் தேர்களை இலக்குவன் விடாது அழித்தமை

2065. ஏறி யேறி யிழிந்ததல் லாலிகல்
வேறு செய்திலன் வெய்யவன் வீரனும்
ஆறு கோடி பகழியி னையிரு
நூறு தேரொரு நாழிகை நூறினான்.

வெய்யவன் - கொடியவன் ஆன இந்திரசித்து (தன்னுடைய தேர்களை இலக்குவன் அழித்ததனால்), ஏறி ஏறி இழிந்தது அல்லால் - பல தேர்களில் ஏறி ஏறி இறங்கியதன்றி, வேறு இகல் செய்திலன் - வேறு போர் ஒன்றும் புரியவில்லை; வீரனும்-இலக்குவனும் (இவ்வாறு நிகழுமாறு), ஆறு கோடி பகழியின் ஐயிரு நூறு தேர் ஒரு நாழிகை நூறினான் - ஆறு கோடி அம்புகளைக்கொண்டு ஆயிரம் இரதங்களை ஒரு நாழிகையளவில் நொறுக்கித்தள்ளினான்.

முன்னிரண்டடிகள் இகழ்வுபற்றி எழுந்தன; 'நூறுவது வேகருமமென்பது நுவன்றான்' (யுத்த. 67); மற்றும்; (ஆரணிய. 466, 468, 541, 551ம் காண்க.

பா - ம். 1. இழிவது, அழிதல், இழந்தது.

2. வெய்யவவ்வீரனும்.

3. ஐயறு.

4. நூறு தேரரை. 129

## தேவர்களின் மகிழ்ச்சி

2066. ஆசி கூறின ரார்த்தன ராய்மலர்
வீசி வீசி வணங்கினர் விண்ணவர்
ஊசல் நீங்கின ருத்தரி கத்தொடு
தூசு வீசினர் நன்னெறி துன்னினர்.

(இலக்குவனுடைய இவ்வரிய போர்த்திறலைக் கண்ட) நல்நெறி துன்னினர் - விண்ணில் நெருங்கி நின்றவரான, விண்ணவர் - தேவர்கள், ஆசி கூறினர் - ஆசிர்வாதம் கூறினர்; ஆர்த்தனர் - பெரு முழக்கமிட்டனர்; ஆய்மலர் - அழகிய மலர்களை, வீசி வீசி வழங்கினர் - விடாமல் வீசித் தொழுதார்கள்; ஊசல் நீங்கினர் - மனச் சஞ்சலம் நீங்கப்பெற்றனர்; உத்தரீகத்தொடு தூசு வீசினர் - மேலாடையுடன் அரையாடையும் எடுத்து ஆகாயத்தில் எறிந்தார்கள்.

அண்ணல் வெல்கவென் றாசிசொன்னார்' (யுத்த. மூலபல. 73); 'வீரனேறலும் ஆசி கூறி' (யுத்த. இராவணன்வதை. 1). ஊசல் - மனத்தடுமாற்றம்; சுந்தர. 428. உத்தரிகத்தொடு; 'உத்தரீக நெடுமார்பினுலாவ' (யுத்த. 803). மற்றும்; சுந்தர. 146, 411, 421. தூசு - ஆடை; மகிழ்ச்சிக்குறியாக மேலாடை அரையாடைகளை வீசுதல் வழக்கு; 'எல்லாரும் தூசு நீக்கி எறிடவார்த்தபோது, கொல்லாத விரதத் தார்தம் கடவுளர் கூட்டமொத்தார்' (யுத்த. இந்திரசித்து வதை. 56); 'வடகமுந் தூசும் வீசினர்; (யுத்த. இராவணன் வதை. 151); 'குரகதக்குழுவுந் தூசும், அம்பரந் தன்னை நீத்தான் அலரி காதலனுக்கீந்தான்' (யுத்த. விடை. 17); நன்னெறி துன்னினர் என்பதற்கு நல்லமார்க்கத்தையே பின்பற்றியவர் எனினும் ஒக்கும். நன்னெறி - ஆகாயம்; ஸத்பதம் என்று ஆகாயத்துக்குப் பெயர் வழங்குதல் காண்க.

பி-ம். 4. தூது; தூசு வீசினர்; முனிவர்கள்,

## அரக்கர்கள் இலக்குவனை யெதிர்த்தல்

2067. அக்க ணத்தி னோராயிர மாயிரம்
மிக்க வெங்க ணரக்கரவ் வீரனோ
டொக்க வின்ப மொருவழி யூணினர்
புக்கு முந்தினர் போரிடைப் பொன்றுவார்.

அக்கணத்தின் - அப்பொழுதில், அ வீரனோடு - அந்த இந்திர சித்துடன், ஒக்க இன்பம் ஊணினர் - சமமான சுகத்தையும் உண வையும் துய்ப்பவராகிய, மிக்க வெம்கண் ஓர் ஆயிரம் ஆயிரம் அரக்கர் - மிகவும் கொடுமை செறிந்த நூறுயிரம் அரக்கர்கள், பொன்றுவார் - இறக்கத் துணிந்தவர்களாய், போர் இடை புக்கு ஒரு வழி முந்தினர் - சமர்க்களத்து முன்வந்து (இளையகோவை) ஒன்றுகூடி எதிர்த்தார்கள்.

எல்லா அரக்கர்களும் எவ்வகையிலும் இந்திரசித்தை நிகர்த்த வர் என்பது மூன்றுமடியின் கருத்து. இந்த அரக்கர்கள் இந்திர சித்துக்கு உதவியாகப் போந்தவர்கள்; 'அத்தேரினை யேறிய தொப் பன வாயிரந்தேர், ஒத்தேய்வன சேமமதாய்வர' (யுத்த. 1959) என்றது காண்க. ஊணும் இன்பமும் அல்லாது, ஊருந் தேரினும் வேற்றுமையின்று என்பது இங்குக் குறிக்கப் பெற்றது. மிகவும் கொடிய போர் வீரர் என்பது 'மிக்க வெங்கண்' என்ற அடை மொழியால் விளங்கும். 'போரெனப் புகலும் புனைகழல் மறவர்' (புறநா. 3) ஆகலின் 'புக்கு முந்தினர்' எனப்பட்டது. ஒரு சமமாக அமர்ந்து உணவுக்கொள்வது பெருமையாகக் கருதப்படும்; இதனைச் சமபந்தி உண்டி என்றும் அக்ரபோசனம் என்றும் மொழிவர்.

பி - ம். 1. அக்கணத்திவில்.
2. அரக்கர்தம்.
3. ஒக்கவந்துற்றொரு வழி நண்ணினர்.
4. புக்கிறிந்தனர், புக்கமுந்தினர்; பொன்றுவரன். 101

2068. தேரர் தேரி னிவுளியர் செம்முகக்
காரர் காரி னிடிப்பினர் கண்டையின்
தாரர் தாரணி யும்விசும் புந்தவழ்
பேரர் பேரி முழக்கன்ன பேச்சினர்.

தேரின் - ஆழ்ந்து கருதுமிடத்து, தேரர் - இரத வீரர்களும், இவுளியர் - குதிரை வீரர்களும், செம்முகம் காரர் - செம்புள்ளிகள் கொண்ட முகத்தினையுடைய மேகம் போன்ற (கரிய நிறத்தினரும்) யானை வீரர்களுமான அந்த அரக்கர்கள், காரின் இடிப்பினர் - முகில் ஒத்து முழங்குபவர்களும், கண்டையின் தாரர் - கிண்கிணி மாலையுடையவர்களும், தாரணியும் விசும்பும் தவழ் பேரர் - பூதலத்தும் ஆகாயத்தும் பரவும்படியான புகழ் படைத்தவர்களும், பேரி முழக்கு அன்ன பேச்சினர் - பேரிகை என்ற தோற்கருவியின் ஒலியை ஒத்த பேச்சினையுடையவர்களுமாக இருந்தனர்.

செம்முகக்காரர் : யானை வீரர் ; சிறந்த யானைகட்கு முகத்திற் செம்புள்ளிகள் உண்டென்பர் ; 'அடிக்கை கனத்து மதம்பொழி யாழியினளவும் புகராலழ கெய்தி' (வி. பா. 16 ஆம்போர், 7); 'களிற்று முகவரியிற் றெறுழ்வீ பூப்ப' (புறநா. 119) ; மற்றும் நற்றிணை. 176, கலித். 44 ; அகநா. 349. செம்முகக்காரர் : ஆறும் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை ; 'காரின் இடிப்பினர்' (ஒப்பு) : 'அசனியி னார்ப்பார்' (யுத்த. மூலபல. 10). தாரணி-பூமி ; 'தசரதன் மதலையா வருதும் தாரணி' (பால. திருவவ. 22) ; அவ் வரக்கர்களின் கீர்த்தி மூவுலகங்களும் பரவி நின்றது என்பார், 'தாரணியும் விசும்பும் தவழ் பேரர்' எனப்பட்டது; பாதாளம் உபலக்கணத்தாற் கொள்க. கண்டைத்தார் - வீரர்கள் கழுத்தில் புனையும் மாலை ; கண்டம் - வடசொல்; கழுத்து எனப் பொருள் படும்.

பி - ம். 1. பாயும் இவுளியர் ; செந்நிறக்.
2. இடியினர், கண்டையர், இடிப்பன காட்சியர்.



2069. பார்த்த பார்த்த திசைதொறும் பன்மழை
போர்த்த வான மெனவிடி போர்த்தெழ
ஆர்த்த வோதையு மம்பொடு வெம்படை
தூர்த்த வோசையும் விண்ணினைத் தூர்த்தவால்.

பார்த்த பார்த்த திசைதொறும் - கண்ட கண்ட திக்குகளில் எல்லாம், பல்மழை போர்த்த - பல முகில்கள் சூழ்ந்து கொள்ளப் பெற்ற, வானம் என - ஆகாயம் போன்று, இடி போர்த்து எழ - முழக்கம் பரந்து எழும்படி, ஆர்த்த ஓதையும் - (வீரர்களின்) ஆர்ப்பரித்தலால் எழும் ஒலியும், அம்பொடு வெம்படை தூர்த்த ஓசையும் - வாளிகளையும் கொடிய போர்க் கருவிகளையும் கையாண்டு நிறைப்பதால் உண்டான ஒலியும், விண்ணினை தூர்த்த - ஆகாய வீதியை நிறைத்தன. ஆல் - அசை.

ஆர்த்தல்: 'அனல் விழித்தார்த்திரைத் தரக்கர்' (ஆரணிய. 446).

பி - ம். 2. வானத்திடியெனப் போர்த்தனர்.

3. ஆர்ந்த ஓசையும்.

4. நூர்த்ததால். 133

2070. ஆளி யார்த்தன வாளரி யார்த்தன
கூளி யார்த்தன குஞ்சர மார்த்தன
வாளி யார்த்தன வானவர் மண்டிலம்
தூளி யார்த்தில தாற்பிணந் துன்னலால்.

ஆளி ஆர்த்தன - யாளிகள் முழங்கின; வாளரி ஆர்த்தன - சிங்கங்கள் கர்ச்சித்தன; கூளி ஆர்த்தன - பேய்கள் ஆரவாரித்தன; குஞ்சரம் ஆர்த்தன - யானைகள் பிளிறின; வாளி ஆர்த்தன - வட்ட வடிவாகச் சாரி செல்லும் குதிரைகள் கனைத்தன; வானவர் மண்டிலம் - தேவர் உலகம், பிணம் துன்னலால் - பிணங்கள் அடர்ந்து நெருங்கலின், தூளி ஆர்த்திலது - தூளிகள் மேலெழப் பெற்றிலது.

ஆளி - யாளி; கூளி - பேய்; 'பேயோராயிரம் பூண்டது' (யுத்த. 2064) என்றது காண்க. குஞ்சரம் - யானை; 'குஞ்சர மனைய வீரன் குவவுத்தோ டழுவிக் கொண்டாள்' (ஆரணிய. 285); 'பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரம்' (தனிப்பா. அந்தகக்கவி).

பி - ம். 2. குதிரைகள் ஆர்த்நன, குதிரையும்.

3. தேவர்தம்; மண்டலம்.

4. துன்னவே, துன்றலால். 134

### எதிர்த்தாரை இலக்குவன் அம்பெய்தழித்தல்

2071. வந்த ணைந்ததோர் வாளரி வாவுதேர்
இந்தி ரன்றனை வென்றவ னேறினன்
சிந்தி னன்சர மாரி திசைதிசை
அந்தி வண்ணனொ ரம்பி னகற்றினன்.

வந்து அணைந்தது ஓர் வாள் அரி - (ஏவல் மாக்களால் கொணரப்பட்டு) வந்து சேர்ந்த, கொடிய சிங்கங்கள் பூட்டப் பெற்று; வாவு தேர் - தாவிச் செல்லும் ஒரு தேரின்மீது, இந்திரன் தனை வென்றவன் - இந்திரசித்து, ஏறினன் - ஏறி, சரம் மாரி - அம்பு மாரியை, திசை திசை சிந்தினன் - திக்கு களில் எல்லாம் சிதறினன்; அந்தி வண்ணன் - செவ்வானம் போன்ற நிறத்தவன் ஆன இலக்குவன், ஓர் அம்பின் அகற்றினன் - (அவற்றை) ஓர் அம்பினால் தவிர்த்தான்.

வாவுதல் - தாவிச் செல்லுதல்; இராவணன் வதை. 20; 'வாவுமிள மான்காள்' (நைடத.); இந்திரன் தனை வென்றவன் இத்தொடர் இந்திரசித்து என்பதன் தமிழாக்கம். திசை திசை சரமாரி சிந்தினன் என அந்வயிக்க. இலக்குவன் பொன் ஒத்த மேனியன் ஆகலின் 'அந்திவண்ணன்', எனப்பட்டது. சரமாரியை ஓரம்பினால் அகற்றினன் என்று இலக்குவன் சௌரியம் கூறப் பெற்றமை காண்க. விடாது பொழிந்த சரம், மாரியாக உருவகிக்கப் பட்டது. 'கார், பெய்தாலென சரமாரிகள் சொரிந்தான் துயில் பிரிந்தான்' (யுத்த. 1113); யுத்த. இராவணன் வதை. 48ம் காண்க.

பி - ம். 1. வந்தகோந்தன; மாருதி பேர்செல.
3. திசாதிசை.
4. அந்திவண்ணனும்.



2072. சுற்றும் வந்து பரந்து தொடர்ந்தவர்
எற்று கின்றன வெய்த வெறிந்தன
அற்று தீர்ந்தன வாயிரம் வன்றலை
ஒற்றை வெங்கணை யோடு முருண்டவால்.

சுற்றும் வந்து பரந்து தொடர்ந்தவர் (இலக்குவனைச்) சூழ்ந்து நின்று பரவித் தொடர்ந்துள்ள அரக்கர்கள், எற்றுகின்றன - தாக்குகின்றனவும், எய்த - விடுத்தனவும், எறிந்தன - வீசியனவும் ஆன, எல்லாப் போர்க்கருவிகளும், (இலக்குவன் தொடுத்த) அம்புகளால் அற்று உதிர்ந்தன - அறுபட்டுத் தூளாயின; ஆயிரம் வல்தலை - (அரக்கரின்) ஆயிரம் பெரிய தலைகள், ஒற்றை வெம்கணையோடும் உருண்ட - ஒரே ஒரு கொடிய அம்புடன் தரையில் வீழ்ந்து உருண்டன. ஆல் - அசை.

தொடர்ந்தவர்: இராக்கதர்கள். ஒற்றை வெங்கணை; இலக்குவன் விடுத்தது; 2071.

பி - ம். 1. படர்ந்து.

2, எய்து.

4. உருட்டினன். 136

2073. குடர்கி டந்தன பாம்பெனக் கோண்மதி
திடர்கி டந்தன சிந்தின தேர்த்திரள்
படர்கி டந்தனர் பல்படைக் கையினர்
கடர்கி டந்தன போன்ற களத்திலே.

கடர் கிடந்தன போன்ற களத்திலே - ஆழி கிடந்தாற் போன்ற (மிக அகன்ற) போர்க்களத்திலே, குடர் பாம்பு என கிடந்தன - (வீரர்களின்) குடல்கள், பாம்பு போன்று தரையிற் கிடந்தன; கோண்மதி திடர் கிடந்தன - வலிய மதத்தையுடைய வேழங்கள் பெரு மலைகள் போன்று கிடந்தன; தேர் திரள் சிந்தின - தேர்த் தொகுதிகள் (தூள் தூளாய்ச்) சிதறின; பல் - பலவான, படைகையினர் படர் - படைக்கலம் ஏந்திய வீரர்கள், கிடந்தனர் - (இலக்குவன் அம்புகள் தாக்கித்) வீழ்ந்து கிடந்தனர். ஏ - அசை.

சொற்பொருட்பின் வருநிலையணி, குடல், குடர், திடல்; திடர், கடல், கடர். இவை ஈற்றுப் போலிகள். மதி - மதீ என்ற வட சொல்லின் குறுக்கம்; மதத்தையுடையது என்க. கோள் - பிறவுயிரைக் கொள்ளவல்ல எனினும் ஒன்றும். தேர்த்திரள் சிந்தின என மாற்றுக. கோள் - வலி; 'கோளின் மழைவன் குழுவினில்' (ஆரணிய. 527); 'கோளிடையற்றன குடைகள் அற்றன' (ஆரணிய. 477).

இடல் : மலை ; 'இடல் துடைத்தன தசமுகன் சரம்' (யுத்த. 1150) ; படர் : வீரர்கள் ; யமபடர் (வில்லி. பா. 13ஆம் போர் 1) ; படர் : வட சொல்.

பி - ம். 1. பிடந்தது ; மதிந்.

2. நிரட்.

3. கிடந்தன ; கையன.

4. போன்று. 137

2074. குண்ட லங்களு மாரமுங் கோவையும்
கண்ட நாணுங் கழலுங் கவசமும்
சண்ட மாருதம் வீசத் தலத்துகும்
விண்ட லத்தினின் மீனென வீழ்ந்தவால்.

குண்டலங்களும் ஆரமும் கோவையும் - (அரக்கர்களுடைய) குண்டலங்களும் முத்து மாலைகளும் தாழ்வடங்களும், கண்டம் நாணும் - கண்ட சரங்களும், கழலும் - வீர கண்டையும், கவசமும் - மெய்புகு கருவிகளும் ஆகிய அனைத்தும், சண்டம் மாருதம் வீச - பெரிய வெய்ய புயற்காற்று அடித்தலால், தலத்து உகும் - தரையில் உதிர்ந்து வீழ்கின்ற, விண்தலத்தினின் மீன் என வீழ்ந்த - ஆகாய தலத்தின்கண் உள்ள நட்சத்திரங்கள் ஒப்ப உதிர்ந்தன. ஆல் : அசை.

குண்டலம் ; காதணி : 'குண்டலங்களும் மவுலியும் ஆரமும்' (யுத்த. 1456) ; 'நூங்கிருங் குண்டலம் செவியிற் சூழ்வர' (யுத்த. மீட்சி : 259) ; 'குண்டலங்கள் குலவரையை வலம் வருவான்' (ஆரணிய. 557) ; சண்ட மாருதம் : பெரும் புயற்காற்று ; இங்கே ஊழிக்காற்று ; 'சண்ட மாருதமென்னத் தடவரை கொண்டு சிறி' (யுத்த. 1018) ; சண்டம் : வேகம் ; உக்கிரமாக வீசும் காற்று ; விண் தலத்தினின் என்றே ஐந்தாம் வேற்றுமை நீங்கற் பொருளாகக் கொண்டு விண்தலத்தினின் தலத்துகும் எனலும் ஒன்று. விண் தலத்தினின் என்றே முன்னர் உரைத்த பொருளைக்கொண்டு, 'இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு இன்னென் சாரியை இன்மை வேண்டும்' (தொல். எழுத். புணரியல்.) என்ற சூத்திரத்து உரையில், 'இன்னினிகரம் என்றதன் பின் இதனை வையாத முறை யன்றிக் கூற்றினன் இன்சாரியை கெடாது வழக்கின் கண்ணும்

அணுகினன் - விரைந்துவந்து காக்கும்பொருட்டு (இலக்குவன்) பக்கல் அடைந்தான். ஏ - அசை.

இராவணி : யுத்த. 1948 உரைக்குறிப்புப் பார்க்க. கட்புலம் புதைப்ப : 'கண்புதைத் திரங்கி னல்லால்' (சீவக. 2616); 'நாயகன் கண்ணயப்பா ளுயகி புதைப்ப' (சிவ. சித்தி. 2 : 52). நோக்குறு : செய்யா என்னும் வாய்பாடு.

பி - ம். 1. தோற்றமும்.

3. கீழ்த்திசை விட்டு.

4. அணுகினர் ; வந்தரோ. 34

## சுக்கிரீவன் ஆதியர் இலக்குவனுக்குத் துணையாதல்

1971. அங்கதன் முன்னரே யாண்டை யானயல்
துங்கவன் தோளினு ரெவருஞ் சுற்றினர்
செங்கதி ரோன்மகன் முன்பு சென்றனன்
சங்கநீர்க் கடலெனத் தழீஇய தானையே.

அங்கதன் - அங்கதன், முன்னரே - (அநுமன் அணுகுவதன்) முன்பே, ஆண்மையான் அயல் - வீரம் செறிந்தவனுன அந்த இலக்குவன் அருகிலேயே வந்து இருந்தான்; துங்கம் வல் தோளினர் எவரும் - உயர்ந்த வலிய தோள்களையுடைய வானர வீரர்கள் அனைவரும், சுற்றினர் - இலக்குவனைச் சூழ்ந்து நின்றனர்; செங்கதிரோன் மகன் - சுக்கிரீவன், முன்பு சென்றனன் - முன்னர்ச் சென்றான்; சங்கம் நீர் கடல் என தழீஇய தானை - சங்குகளை யுடைய நீர்நிறைந்த கடல்போன்ற படையும் தழுவி உடன் சென்றது.

ஆண்மையான் - இலக்குவன். சங்க நீர்க் கடல் : சங்கம் ஒலி பற்றியும் வெண்ணிறம்பற்றியும் வானரங்கட்கு உவமை. கடல் : பெருந்திரளுக்கு என்க.

பி - ம். 1. முன்னதா யாண்ட சேனையிற் ; ஆண்மை வீரர்கள்.

2. துங்கவெந் தோழினர் வந்து சுற்றினர் ; தானையான். 35

## இருதிறத்துச் சேனைகளின் தோற்றம்

1972. இருதிரைப் பெருங்கட லிரண்டு திக்கினும்
பொருதொழில் வேட்டெழுந் தார்த்துப் பொங்கின
வருவன போல்வன மனத்தி னுற்சினம்
திருகின வெதிரெதிர் செல்லுஞ் சேனையே.

சினத்தினால் - கோபத்தால், மனம் திருகின - உள்ளம் மாறு பட்டனவாய், எதிர் எதிர் செல்லும் சேனை-(ஒன்றற்கொன்று) எதிர் எதிராகச் செல்கின்ற அரக்கர் வானர சேனைகளும், திரை - அலைகளை யுடைய, இரு பெரு கடல் - இரண்டு பெரிய கடல்கள், பொரு தொழில் வேட்டு எழுந்து - போர்புரியும் தொழிலை விழைந்து ஊக் கத்துடன் கிளம்பி, இரண்டு திக்கினும் - இரண்டு திசைகளில் இருந்தும், ஆர்த்து பொங்கின வருவன போல்வன-ஆர்ப்பரித்துப் பொங்கி வருவனவற்றை ஒத்தன. ஏ - அசை.

சினத்தினால் மனம் திருகின என்று உருபு பிரித்துக் கூறப் பெற்றது; 'திருகுவெஞ் சினத்தன' (யுத்த. 536). மனத்தினால் என்பது உருபு மயக்கம்; இல்பொருளுவமை. எதிரெதிராகச் செல் லும் சேனையாதலின் எதிரெதிராக அமைந்த திசைகளைக் கூறினர்.

பி - ம். 1. திக்கென.
2. வேட்டுவந்து; பொங்கியே.
3. போன்றன.
4. தானையே. 30

## தேவர்கள் போர் காணுதற்கு வானத்தில் வந்து திரளுதல்

1973. கண்ணினுன் மனத்தினுற் கருத்தினுற் றெரிந்
தெண்ணினுற் பெறுபய னெய்து மின்றென
நண்ணின ரிமையவர் நங்கை மாரொடும்
விண்ணினு டுறைவிடம் வெறுமை கூரவே.

இமையவர் - வானவர்கள், 'கருத்தினால் தெரிந்து எண்ணி னால் - மனம் ஊன்றி ஆலோசித்து உணருமிடத்து, கண்ணினால் மனத்தினால் பெறுபயன் - கண் பெற்றதனாலும், மனம் உண்மை

யாலும் பெறுவதற்குரிய பயன், இன்று எய்தும் - இன்றைக்குக் கைகூடும்', என - என்று எண்ணியும் சொல்லியும், விண்ணின் நாடு உறைவிடம் வெறுமை கூர - சுவர்க்க புவனமாகிய தாங்கள் வதியும் இடம் காலியாகுமாறு, (அதனை யாவரும் விடுத்து), நங்கைமர்ரொடும் - (தத்தம்) மனைவிமாருடனே, நண்ணினர் -(போர்க் களம் காண) விண்ணில் வந்து நெருங்கினார்கள். ஏ : அசை.

கண்ணும் மனமும் பெற்ற பயன் அவற்றால் கண்டும் மகிழ்ந்தும் நிற்றல். வெறுமை கூரல் - வறிதாதல். தெரிந்து எண்ணினாய் : எண்ணித் தெரிந்தாய் என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. பெரும் போர்களைக் காணத் தேவர்கள் வானிற் கூடுவர் என்று கூறுவது கவிமரபு; 'ஈச னுன்முக னென்றிவர் முதலிய விமையோர், பூசல் காணிய வந்தன ரந்தரம் புகுந்தார்' (யுத்த. 1178); 'இராமன்றம்பிநீ யிராவணன்றம்பிநா னிருவேம், பொரா நின்றேமுது காணிய வந்தனர் புலவோர்' (யுத்த. 1438). 'மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்பன அந்தக்கரணங்கள். மனம் சஞ் சலம் : கருத்து நிச்சயம் ; தேவர் தங்களூர் பாழ்கிடக்கும்படி இளைய பெருமாளின் போரைச் சேவிக்க வந்தார் ; 'மாறனடியை மன நினைப்பப் புந்தியதை, வீறுடனே யந்தரம் வீடருளும்—மாறெனவே யந்தமுற நிச்சயிக்க வாங்கார மாங்கேகச், சிந்தைமகிழ்ந் தின்ப முறுந்தேய்ந்து' என்பது பழையவுரை.

பி - ம். 2. பெறும்பயன்.
3. விண்ணவர் நங்கைமார். 37

### சேனைகளின் ஆரவாரம்

1974. ஒத்திரு தானையு முடற்ற வுற்றுழி
அத்தனை வீரரு மார்த்த வவ்வொலி
நத்தொலி முரசொலி நடுக்க லாற்றலை
பொத்தினர் செவிகளைப் புரந்த ராதியர்.

இரு தானையும் - இரு திறத்துப்படைகளும், ஒத்து உடற்ற உற்றுழி - (தம்மில்) இயைந்து, போர்புரிய நேர்ந்தபோது, அத்தனை

வீரரும் - (இருதரப்பிலும் உள்ள) அவ்வளவு வீரர்களும், ஆர்த்த அவ்ஒலி - ஆரவாரித்தலின் எழுந்த அந்தப் பேரொலியும், நத்து ஒலி - சங்கத்தின் ஓசையும், முரசு ஒலி - வீரமுரசின் ஒலியும், நடுக்கலால் - நடுங்கச் செய்தலினால், புரந்தர ஆதியர் - இந்திரன் முதலான தேவர்கள், செவிகளை தலைபொத்தினர் - (தங்கள் காதுகளை (க் கரத்தினால்) மூடிக்கொண்டனர்.

நத்து - சங்கு ; (சூடா) : 'நத்தின் வயிற்றில் முத்துப் பிறக்கும்' என்ற பழமொழி காண்க. 'அஞ்சுவணத்தின் முத்து' (சுந்தர. 174); 'வால் நந்து செம்மணி சிந்த : (சுந்தர. 725) ; தலை : தமிழ் உப சர்க்கம். செவி பொத்துதல் ; 'போதத் தன்செவித் தொளை யிரு கைகளாற் பொத்தி' (யுத்த. 151) ; (ஒப்பு) : 'செவிகளைத் தளிர்க் கையாலே சிக்குறச் சேமம் செய்தாள்' (ஆரணிய. 873) ; புரந்தர + ஆதியர் : வடமொழி தீர்க்கசந்தி.

பி - ம். 2. ஆர்க்கும், ஆர்கலி.
3. நடுக்கலாற்செவி.
4. பொத்தின ரிமையவர் ; செவித்தொளை ; புரந்தராதியர். 38

1975. எற்றுமின் பற்றுமி னெறிமி னெய்ம்மினென்
றுற்றன வுற்றன வுரைக்கு மோதையும்
முற்றுறு கடையுகத் திடியின் மும்மடி
பெற்றன பிறந்தன சிலையின் பேரொலி.

'எற்றுமின் - அடியுங்கள், பற்றுமின்-பிடியுங்கள், எறியுமின்- (ஆயுதங்களை) வீசுங்கள், எய்ம்மின் - (அம்புகளை) எய்யுங்கள்', என்று - என்று, உற்றன உற்றன - அவ்வச் சமயங்கட்குப் பொருந்தியவாக, உரைக்கும் ஓதையும் - (இருதிறத்து வீரர்களும்) பேசுதலால் உண்டான ஓசைகளும், சிலையின் பிறந்தன பேர் ஒலி - வில்லினின்று எழுந்த நாண் ஒலிகளும், முற்றுறு கடை உகத்து - (யாவும்) முடிவெய்தும் கற்பாந்த காலத்து (உண்டாகும்), இடியின் மும்மடி பெற்றன - இடி ஓசையினும் மும்மடங்கு கொண்டனவாய், பிறந்தன - எழுந்தன.

எற்றுமின் பற்றுமின் எறிமின் - எற்றுதிர் பற்றுதிர் எறிதிர்; (யுந்த. 340). கடை உகம் - ஊழியின் இறுதி. யுகக்கைகடை; மும்மடி - மும்மடங்கு; 'பதாதி மும்மடி சேனைமுகமே' (பிங். 6).

பி - ம். 2. ஓசையும்.

4. உற்றனருற்றனர்; ஆர்ப்பொலி. 39

இஃது ஓர் பிரதியில் இல்லை.

## இரு சேனையும் கலந்து பொருதல்

1976. கற்பட மரம்படக் கால வேல்பட
விற்படு கணைபட விழும் வீரர்தம்
எற்படு முடல்பட விரண்டு சேனையும்
பிற்பட விருநிலம் பிளந்து பேருமால்.

இரண்டு சேனையும் பின்பட - இருபக்கத்துப் படைகளும் பின்னிடுமாறு, (ஒருவர் மேல் ஒருவர் எறியும்), கல்பட - கற்கள் படுதலினாலும், மரம் பட - மரங்கள் மோதுதலினாலும், கால வேல் பட - யமன் ஒத்த வேற்படைகள் ஊடுருவதலினாலும், வில்படு கணை பட - வில்லிற் பொருந்திய அம்புகள் தைத்தலினாலும், வீழும் வீரர் தம் - மரித்து வீழ்கிற, (இருபுறத்திலுமுள்ள) வீரர்களின், எல் படும் உடல்பட - ஒளிபொருந்திய உடம்புகள் (தன்மீது) தீண்டுவதனால், நெடுநிலம் பிளந்து பேரும் - அப்பளுவையும் அதிர்ச்சியையும் பொறுக்கலாற்றாது, இருநிலம் - பெரிய பூமி, பிளந்து பேரும் - விரிந்து நிலைகெடும். ஆல் - அசை.

உயர்வுநவிற்சியணி. எற்படு உடல்பட என்ற தொடர் இரு திறத்து வீரர்க்கும் பொது. அரக்கர்க் கேற்றும்போது இரவினை ஒத்த அரக்கர் உடல் என்றும், வானரர்க் கேற்றும்போது ஒளி வாய்ந்த வெள்ளிய குரக்குவீரர் என்றும் கொள்க. எல் - இரவு; 'எல்லியும் பகலும் போலத் தழுவினர் எழுவிற்றோளார்' (யுந்த. 426).

பி - ம். 1. கற்படை.

3. எற்படர்; தானையும்.

4. நெடுநிலம்; பிளந்த தாமரோ. 40

1977. எழுத்தொடர் மரங்களா லெற்ற முற்றிய
விழுத்தலை முழுவதுஞ் சிதறி வீழ்ந்தன
அழுத்திய பெருஞ்சினத் தரக்க ராக்கைகள்
கழுத்துள தலையில களத்தி னாடுவ-

எழுதொடர் - வளை தடிகளாலும், இருப்புச் சங்கிலிகளாலும், மரங்களால் - மரங்களாலும், எற்ற - (குரங்கு வீரர்கள்) தாக்கிய தனால், முற்றிய - இறந்துபட்டனவும், விழுதலை முழுவதும் - மேம் பட்ட தலைகள் எல்லாம் அடியோடும், சிதறி வீழ்ந்தன - சிதறி விழுந்தனவுமான, அழுத்திய பெருசினத்து அரக்கர் ஆக்கைகள் - (தம்மையும் அடக்கி) மேலிட்ட மிகுந்த கோபத்தினையுடைய அரக் கர்களின் உடல்கள், கழுத்துஉள தலைஇல - கழுத்துக்களுடன் கூடியனவாய் ஆனால் தலைகள் அற்றனவாய், களத்தின் ஆடுவ - போரரங்கில் கூத்தாடுவன வாயின்.

தொடர் - சங்கிலி; 'தொடர்ப்படு ஞமலியின்' (புறநா. 74); 'தொடர்வாங்கு கதநாய்போற் றோன்றின' (சீவக. 2242); 'கழுகு தொடர் குந்தம்; (சீவக. 101); அழுத்திய பெருஞ்சினம் : வேரூன் றிய மிக்க வெகுளியுமாம். கழுத்துள தலையில - கபந்தங்கள்; உள இல-தொடை முரண். 'எழுத்தொடர் மரம்; கணைய மரம் போன்ற மரம்' என்பது பழைய உரைக்குறிப்பு.

பி - ம். 2. விழ்வன.
3. அழுத்தினர்.
4. கவந்தம் ஆடுவ. 41

1978. வெட்டிய தலையன நரம்பு வீசமேல்
முட்டிய குருதிய குரங்கின் மொய்யுடல்
சுட்டுயர் நெடுவனந் தொலைந்த பின்னெடும்
கட்டைக ளெரிவன போன்று காட்டுவ.

வெட்டிய தலையன - (அரக்கர்களால்) வெட்டப்பட்ட தலைகளை யுடையனவும், நரம்பு வீச - (துணிபட்ட) நரம்புகள் வீசுவதனால், மேல்முட்டிய குருதிய - மேலே நிமிர்ந்து மோதிய உதிரத்தை

யுடையனவுமான, குரங்கின் மொய் உடல் - குரங்குகளின் வலிய உடம்புகள், உயர் நெடுவனம் - ஓங்கி வளர்ந்த பெரிய காடு, சுட்டு - தீயினாற் சுடப்பட்டு, தொலைந்த பின் - நீருகி யொழிந்த பின்னர், நெடு கட்டைகள் எரிவன போன்று காட்டுவ - நீண்ட மரக்கட்டைகள் எரிவனவற்றைப் போன்று காணப்படுவன.

வெட்டிய தலையன, முட்டிய குருதிய; வடமொழி நடை. மொய்: வலிமை. 'மொய்யார் கலிசூழ் முதுபாரின்' (பால. அரசியல். 3); 'மொய்வளம் சேருக்கி' (பதிற். 49 : 8); சுட்டுத் தொலைந்த எனக் கூட்டுக. குரங்குகள் தலை துணிக்கப்பட்ட அளவில், கழுத்து நரம்புகள் உதிரத்தைக் கக்கிக்கொண்டு நின்ற காட்சிக்கு, காட்டு மரங்கள் மேற்பகுதி எரியுண்ட பின்னர், கட்டைகள் நின்று எரிந்தது உவமை. சுட்டு - சுடப்பட்டு எனப் பிறவினையாகக் கொள்க. தற்குறிப்பேற்றவணி.

பி - ம். 1. வெட்டிய தலைகளின், தலையின ; பகழி மேற்கொடு.

2. முட்டிய குருதிகள் ; முயங்கி ; உடற்.

3. தொலைத்த.

42

1979. பிடித்தன நிருதரைப் பெரிய தோள்களை
ஒடித்தன கால்விசைத் துதைத்த வுந்தின
கடித்தன கழுத்தறக் கைக ளாலெடுத்
தடித்தன வரைத்தன வார்த்த வானரம்

வானரம் - குரங்குகள், நிருதரை பிடித்தன - இராக்கதர்களை இறுகப் பற்றியும், பெரிய தோள்களை ஒடித்தன - (அவர்களுடைய) நீண்ட தோள்களை முறித்தும், கால் விசைத்து உதைத்த உந்தின - கால்களால் விரைந்து உதைத்துத் தள்ளியும், கழுத்து அற கடித்தன - கழுத்து அறும்படி (பற்களாற்) கடித்தும், கைகளால் எடுத்து - கரங்களால் தூக்கி எடுத்து, அடித்தன - தரையிடை மோதியும், அரைத்தன - தேய்த்தும், ஆர்த்த - பெருங் கூச்சலிட்டன.

குரங்குகள் அரக்கரை மீட்டும் சின்னாபின்னம் செய்தமை கூறப்பட்டது. பிடித்தன, ஒடித்தன முதலியவைகள் முற்றெச்சம். கால் விசைத்து : (திருவாச).

பி - ம். 1. தோள் பெயர்த்து. 43

1980. வாள்களிற் கவிக்குல வீரர் வார்கழல்
தாள்களைத் துணித்தனர் தலையைத் தள்ளினர்
தோள்களைப் பிரித்தன ருடலைத் துண்டமிட்
டாழ்கடற் புரட்டினர் அரக்கர் ஆர்த்தனர்.

அரக்கர் - அரக்கர்கள், வாள்களில் - வாள்களைக் கொண்டு, கவி குலம் வீரர் - குரங்கின வீரர்களின், வார்கழல் - நீண்ட வீரக்கழல் புனைந்த, தாள்களை துணித்தனர் - கால்களை வெட்டியும், தலையை தள்ளினர் - தலைகளைத் தள்ளியும், தோள்களை பிரித்தனர் - தோள் களை(த் துணித்து) வேறு படுத்தியும், உடலை துண்டம் இட்டு உடம்புகளைத் துண்டித்தும், ஆழ்கடலில் புரட்டினர் - ஆழமான கடலில் போட்டு அலைத்தும், ஆர்த்தனர் - பெரு முழக்கமிட்டனர்.

இங்கு, குரங்குகளின் அழிவும் நிலைகுலைவும் கூறப்பட்டது. வாள்களில் : உருபு மயக்கம்.

பி - ம். 1. வன்கழல், வான்கழற், வால்களிற்
2. குறைத்தனர்
3. பிரிந்தனர் ; துண்டவன்.
4. போழ்களிற் ; நிருதர் ; பொங்கினர். 44

1981. மரங்களி லரக்கரை மலைகள் போன்றுயர்
சிரங்களைச் சிதறின வுடலைச் சிந்தின
கரங்களைக் கழல்களை யொடியக் காதின
குரங்கெனப் பெயர்கொடு திரியுங் கூற்றமே.

குரங்கு என பெயர் கொடுதிரியும் கூற்றம் - குரங்கு என்று கூறிக்கொண்டு அலைகின்ற யமன்கள், மரங்களில் - மரங்களினால்,

அரக்கரை மலைகள் போன்று உயர் சிரங்களை - அரக்கர்களுடைய மலைகள்போல உயர்ந்த தலைகளை, சிதறின - சிதறவடித்தும், உடலை சிந்தின - (அவர்களுடைய) உடலைப் போக்கியும், கரங்களை கழல்களைஒடிய - கைகளும் கால்களும் ஒடியுமாறு செய்தும், காதின - பொருதன. ஏ : அசை.

மரங்களில் : மரங்களால் ; உருபு மயக்கம். கழல் : கருவியாகு பெயர். அரக்கரை சிரங்களைச் சிதறின ; யானையைக் கரலைத்துணித் தாற் போன்று கொள்க. 'முதலையையுறின் சினையைக் கண் ணுறும். அது சினைக்காயின் முதற்கையாகும். (நன். 315) இங்கே இரண்டு செயப்படுபொருள் வந்தமை காண்க. (தொல். சொல். வேற்றுமை மயங்கியல். 87). காதுதல் - மோதிப் பொருதல். 'காதும் கண்ணுதல்' (யுத்த. 130) ; 'காது வேலன்ன கண்ணார்' (திருவிளை. வளையல் : 9); குரங்கெனப் பெயர் கொடு கூற்றம் : (ஒப்பு). பெண்டிரிற் கூற்றமன்னாள் (அயோத்தி. கைகேசி : 79).

பா - ம். 1. மரங்களால்.

2. முறிந்தன, முறிந்தனர் 45

1982. சுடர்த்தலை நெடும்பொறி சொரியுங் கண்ணன
அடர்த்தலை நெடுமர மற்ற கையன
உடர்த்தலை வைரவே லுருவ வுற்றவர்
மிடற்றினைக் கடித்துடன் விளிந்து போயின.

சுடர்தலை நெடுபொறி சொரியும் கண்ணன - ஒளியைத் தன் னகம்கொண்ட பரந்த தீப்பொறிகளைப் பொழிகின்ற விழிகளை யுடையனவான சில வானரங்கள், அடர்த்தலை - நெருக்கி வருத்து தலை செய்கின்ற, (தமது கையிற் கொண்ட), நெடுமரம் - நீண்ட மரங்களுடனே, அற்றகையன - துணிபட்ட கரங்களை யுடையன வாய், உடர்தலை - (தமது) உடலிடத்து, (எதிரிகள் விடுத்த), வைரம் வேல் - உறுதியான வேற்படை, உருவ - ஊடுருவவும், உற்றவர் - (தம்மீது) அப்படையை எறியலுற்றவர்களுடைய,

மிடற்றினை கடித்து உடன் விளிந்து போயின - கழுத்தைக் கடித்து விட்டு, அவருடன் (தாமும்) இறந்து பட்டன.

அரக்கர்களும் வானரர்களும் ஒருசேர அழிந்தமை இக் கவியிற் கூறப் பெற்றது. வேல் உடலில் தைத்ததையும் பொருட்படுத் தாது, பகைவர்களின் கழுத்துக்களைக் கடித்து இறந்தன வீரமிக்க வானரங்கள் என்க; (ஒப்பு): குறள். 774. தலை: ஏழனுருபு. உடர் - உடல்; இறுதிப்போலி.

பி - ம். 1. நெடுங்கனல்; கன்னின.

2. அடற்றலை.

3. உருவ உடற்றலை யுற்றவர்உருவி; அற்றவர்.

4. தடிந்துடன்; விரிந்து போயின, போவன, விளிந்த வாநரம். 46

1983. அடர்ந்தன கிரிகளை யசனி யேறெனத்
தொடர்ந்தன மழைபொழி தும்பிக் கும்பங்கள்
இடந்தன மூளைக ளினிதி னுண்டன
கடந்தன பசித்தழல் கரடி காதுவ.

காதுவகரடி - போர் புரிவனவான கரடிகள், கிரிகளை அடர்ந் தன - மலைகளைச் சார்ந்து அழிக்கின்றனவான, அசனி ஏறு என - பேரிடிகள் போல, தொடர்ந்தன - தொடர்ந்து சென்று, மழை பொழி - மத மாரியைப் பெய்கின்ற, தும்பி கும்பங்கள் - யானைகளின் மத்தகங்களை, இடந்தன - பிளந்தனவாய், மூளைகள் இனிதின் உண்டன - (அவற்றின்) மூளைகளை இனிமையாகத் தின்று, பசி தழல் - பசியாகிய தீயினை, கடந்தன - ஒழித்தன. (பசியாறின)

இச்செய்யுட்கண் ஜாம்பவான் முதலிய கரடிகள் பொருதமை கூறப்பட்டது. இடிகளால் மலைகள் தாக்கப்பட்டு உடைதல் போன்று, அரக்கர் யானைகள் அழிந்தன என்க. பசித்தழலை ஜாடராக்கினி என்ப. காதுவ: வினையாலணையும் பெயர். உவமை யணி. கரடிகள் மூளைகளை உண்டதாகக் கூறப்பட்டமை காண்க.

பி - ம். 1. கரிகளை; யேறனற்

2. மழைமதத், மழையென; கொம்புகள்.

3. பரிகளைக் பரிகளை, கரடி காறியே, காந்துவ. 47

1984. கொலைமத கரியன குதிரை மேலன
வலமணித் தேரன வாளின் மேலன
சிலைகளின் குடுமிய சிரத்தின் மேலன
மலைகளிற் பெரியன குரங்கு வாவுவ.

மலைகளில் பெரியன குரங்கு - மலைகளினும் பெரியவையான குரங்குகள், வாவுவ - தாவுவனவாய், கொலை மதகரியன - கொல்லும் தொழில் உள்ள மதங்கொண்ட (அரக்கர்களுடைய) யானைகளின் மேற் பாய்வனவும், குதிரை மேலன - குதிரைகள்மேற் பாய்வனவும், வலம் மணிதேரன - உறுதி வாய்ந்த மணிகள் கட்டிய தேர்களின் மேற் பாய்வனவும், வாளின் மேலன - வாட் படைகளின்மேற் பாய்வனவும், சிலைகளின் குடுமிய - விற்களின் நுனியின்மேற் பாய்வனவும், சிரத்தின் மேலன - (அவர்களுடைய) தலைகளின்மேற் பாய்வனவும் ஆயின.

தன்மை நவிற்சியணி.

பி-ம். 1. மதக்; மேலென.
2. அலம்மணி, அலைமணித் தேரளனவாளி மேலென.
3. சிலைகளிற்; சித்திரத்தின்மேல். 48

வேறு

உதிரப் பெருக்கு

1985. தண்டுகொண் டரக்கர் தாக்கச் சாய்ந்துகு நிலைய சந்தின்
துண்டங்க ளாக வாளிற் றுணிந்தபே ருடலைத் தாவிக்
கொண்டெழு மலைக ளோடுங் குரக்கினப் பிணத்தின் குப்பை
மண்டுவெங் குருதி யாருய் மறிகடன் மடுத்த மாதோ.

குரக்கு இனம் பிணத்தின் குப்பை - குரங்குக் கூட்டங்களின் பிணக் குவியல்களிலிருந்து, மண்டு வெம்குருதி ஆருய் - மிக்குப் பெருகுகின்ற வெம்மைவாய்ந்த உதிரம் ஆருகி, அரக்கர் தண்டுகொண்டு தாக்க - இராக்கதர்கள் கதாயுதங்களைக் கொண்டு அடித்ததனல், சாய்ந்து உகும் நிலைய - தளர்ந்து விழும் தன்மையனவும், வாளில் துணிந்த பேர் உடலை - (அவர்களுடைய) வாட்

படைகளினுல் துணிபட்டனவுமான பெரிய உடல்கஜா, சந்தின் துண்டங்கள் ஆக தாவி - சந்தன மரத்தின் துண்டுகளாக இறைத்துக் கொண்டு, கொண்டு எழும் அலேகளோடும் - கிளர்ந்து எழுகின்ற அலேகளோடும், மறிகடல் மடுத்த - அலேகள் கரைக்கண் மோதி மடங்கப் பெற்ற கடலில் சென்று நிறைந்தன. மாது : ஓ. ஈற்றசை.

மலேயிடத்திலிருந்து பெருகும் வெள்ளம் தன் வேகத்தால் துண்டுபட்ட சந்தன மரத் துண்டுகஜா அடித்துக்கொண்டு, போரில் வீரர்களுடைய மலே போன்ற உடல்களிலிருந்து பெருகிய உதிர ஆறு, துண்டுபட்ட உடல் துண்டுகஜா வீசிக்கொண்டு கடலிற் சேர்ந்தன என்க. உருவகவணி. அரக்கர் சேஜா உருக் குலேந்து போனமையின் குரங்கின் உடல் துண்டுகளே கூறப் பட்டன. தண்டு : கதை ; 'தண்டெனக்கொள லுற்றது நொய் தெனத் தவிர்ந்தான்' (யுத்த. 139) ; சந்து - சந்தனம் : 'சந்தார் தடங்குன்றினில்' (சுந்தர. 577) ; மண்டுதல் : விரைந்து செல்லுதல்: 'கடற்படை குளிப்ப மண்டி' (புறநா. 6).

பி - ம். 1. தகர்ந்துடல் தலேகள் தள்ளிந். தகர்ந்துடைதலே யொடள்ளிக்.

2. வாளால் ; உடல்கள் தூங்கத் ; துணித்த. 48

இதன்பின் 'தாக்கிய' என்னும் செய்யுள் ஓர் பிரதியில்.

### அநுமன் பகைவர் படையைக் கலக்குதல்

1986. பனிவென்ற பதாகை யென்றும்
பல்லுஜாப் பரிமா வென்றும்
தனுவென்றும் வாளி யென்றுந்
தண்டென்றுந் தனிவே லென்றும்
சினவென்றி மதமா வென்றுந்
தேரென்றுந் தெரிந்த தில்லே
அனுமன்கை வயிரக் குன்ரு
லரைப்புண்ட வரக்கர் தாஜா.

அநுமன் கை வயிரம் குன்ருல் - அநுமனுடைய கரங்களாகிய உறுதி வாய்ந்த மலேகளினுல், அரைப்புண்ட அரக்கர் தாணி -

(நிலத்தில்) தேய்க்கப் பெற்ற இராக்கதர் படையில், பனிவென்ற பதாகை என்றும் - அஞ்சுதலை வென்ற கொடிகள் என்றும், பல் உளை பரிமா என்றும் - பலவான தலையாட்டத்திணையுடைய குதிரைகள் என்றும், தனு என்றும் - வில்லென்றும், வாளி என்றும் - அம்பென்றும், தண்டு என்றும் - கதைகள் என்றும், தனிவேல் என்றும் - ஒப்பற்ற வேற்படை என்றும், சினம் வென்றி மதம்மா என்றும் - கோபமும் வெற்றியும் உடைய மதம் கொண்ட வேழம் என்றும், தேர் என்றும் தெரிந்தது இல்லை - தேர்கள் என்றும் தெரியவில்லை.

அநுமன் அழித்தலின் மேற்கூறிய அனைத்தும் உருத்தெரியாமல் அழிந்தொழிந்தன என்க. மற்றும் அவன் அழித்த விரைவினால், எது எது எப்பொழுது அழிந்தது என்றும் உணர முடியாது போயிற்று எனினுமாம். 'பனிவென்ற பதாகை'; பனி என்பது பனித்தலின் முதனிலைத் தொழிற் பெயர். அஞ்சாமையைக் கொடிமேலேற்றிக் கூறினர். சினவென்றி - உம்மைத் தொகை.

பி - ம். 2. விட்டேறென்றும்.

4. அநுமன்றன்; தண்டால்; அரைப்புண்டது. 50

## அங்கதன் அரக்கர் சேனையை அழித்தமை

1987. பொங்குதேர் புரவி யானை பொருதொழில் நிருத ரென்னும்
சங்கையு மில்லா வண்ணந் தன்னுளே தழுவிக் கூற்றம்
எங்குள வுயிரென் றெண்ணி யிணைக்கையாற் சினைத்த [தென்ப
அங்கதன் மரங்கொண் டெற்ற வளறுபட் டழிந்த தானை.

அங்கதன் - அங்கதன் என்ற வானர வீரன், மரம் கொண்டு எற்ற - மரத்தினால் தாக்க, அளறுபட்டு அழிந்த - சேறாகி அழிதல் உற்ற, பொங்குதேர் புரவி யானை பொருதொழில் நிருதர் என்னும் தானை - அளவின்மிக்க தேர்களும் குதிரைகளும் யானைகளும், போர் புரியும் தொழிலரான அரக்கர்களும், என்று சொல்லப்படும் படைகளில், கூற்றம் - யமன், தன் உள்ளே சங்கையும் இல்லா வண்ணம் - தன் உள்ளே (அதுகாறும் அரக்கரிடம்

கொண்டிருந்த) அச்சம் (இப்பொழுது) சிறிதும் கொள்ளாமல், தழுவி - பொருந்தி, 'உயிர் எங்கு உள என்று எண்ணி - (தனக்கு உணவிற்கான) உயிர்கள் எங்கேனும் (தப்பி) உள்ளனவோ' என்று ஆராய்ந்து, இணை கையால் கிளைத்தது - தன்னுடைய இரண்டு கரங்களாலும் கிளறிப் பார்த்தது. என்ப : அசை.

பொங்கு தேர் : பல்வகையாகப் புனையப் பெற்று அழகு பொங்கும் தேர் எனினுமாம். அல்லது தேரும், பொங்கு புரவி யானை எனினுமாம, சங்கை : அச்சம் ; (வின்ஸ்லோ) ; கூற்றம் கிளைத்தது என்க.

பி - ம். 1. காலாள் ; பொருகழல் ; நிருதர் என்னர்.
3. கிளைப்பதென்ன, கிளைத்ததென்ப.
4. அளறுபட்டழிந்த சேனை. 51

1988. தாக்கிய திசைகள் தோறுந் தலைத்தலை மயங்கித் தம்மில்
நூக்கிய களிறுந் தேரும் புரவியு நூழில் செய்ய
ஆக்கிய செருவை நோக்கி யமரரோ டசுரர் போரைத்
தூக்கினர் முனிவ் ரென்னை யிதற்கது தோற்கு மென்றார்.

தாக்கிய திசைகள் தோறும் - எதிர்த்துப் போர் புரிகின்ற எல்லாத் திக்குகளிலும், தம்மில் தலை தலை மயங்கி நூக்கிய களிறும் - தமக்குள்ளே அந்தந்த இடங்களில் கலந்து எதிர்த்த வேழங்களையும், தேரும் - தேர்களையும், புரவியும் - குதிரைகளையும், நூழில் செய்ய - குரங்குகள் கொன்று குவிக்க, ஆக்கிய செருவை நோக்கி ; இங்ஙனம் இயற்றிய இச் சண்டையைக் கண்ணுற்று, அமரரோடு அசுரர் போரை - தேவர்களுடன் அசுரர்கள் ஆற்றிய போரினை, தூக்கினர் முனிவர் - (இதனோடு ஒத்து நோக்கிய) தேவ விருடிகள், 'என்னை-(இந்தப் போர்க்கு முன்னே அந்தத் தேவாசுரர் போர்) எம் மாத்திரம் ? அது இதற்கு தோற்கும் - அந்தப் போர் இப்போர்க்கு நிகராகாது தோல்வியுறும்,' என்றார் - என்று மொழிந்தார்.

தலைத்தலை - இடந்தோறும் : 'தத்தரிக்கண்ணார் தலைத்தலை வருமே' (பரிபா. 16,10) ; தலைத்தலை - ஒவ்வொரு சேனையும் தனித் தனியாக எனினுமாம. நூழில் செய்ய : நூழில் ; கொன்று குவிக்கை ; 'வேழப் பழனத்து நூழிலாட்டு' (மதுரைக். 257) ;

முனிவர்: தேவமுனிவர்; அரக்கர் தங்களில் தாங்கள்பிரமையினாலே அடித்துக்கொண்டனர், தேவாசுரப் போரும் இதற்கு ஒப்பாகாது என்று முனிவர் மொய்த்தார்கள் என்பது' ஐயர் குறிப்பு. சாகரத்துக்குச் சாகரம் உவமை; இராம இராவணர் யுத்தத்திற்கு இராம இராவணர் யுத்தமே நிகர் என்று ஓர் வடமொழி சுலோகம் உண்டு. அது இங்கு அறிதல் தகும்,

பி-ம். 1. மயங்கிப் பின்னும்.
2. பரிகளும்; செய்ய.
4. நூக்கிய; என்னே; தோற்றம். 52

## அரக்கர் சேனையால் நிலைகலங்கிய வாநரசேனையை வாநர வீரர் காத்தல்

1989. எடுத்தது நிருதர் தானை யிரிந்தது குரங்கி னீட்டம்
தடுத்தனர் முகங்கள் தாங்கித் தனித்தனித் தலைவர் தள்ளிப்
படுத்தன ரரக்கர் வேலை பட்டதும் படவும் பாரார்
கடுத்தனர் கடுத்த பின்னுங் காத்தனர் கவியின் வீரர்.

நிருதர் தானை எடுத்தது - அரக்கர் படை (முதலில்) தலையெடுத்தது; (எடுக்கவே), குரங்கின் ஈட்டம் இரிந்தது - குரங்குகளின் தொகுதி புறங்காட்டி ஓடிற்று; தலைவர்-குரங்குப் படைத் தலைவர்கள், முகங்கள் தாங்கி - அவர்களை எதிர்க்கும் முகத்தினராய், தனித்தனி - ஒவ்வொருவரும், (குரங்குகள் ஓடிப் போக ஒட்டாமல்) தடுத்தனர் - அந்த வாநரங்களைத் தடுத்தார்கள்; அரக்கர் - இராக்கதர்கள், வேலை படுத்தனர் - கடல் போலப் பரந்த குரங்குப் படையை, தள்ளி படுத்தனர் - (மீட்டும்) கொன்று வீழ்த்தினர்; பட்டதும் - (அங்ஙனம் பல குரங்குகள் மரித்தவுடன்) (எஞ்சி நின்ற) வாநரங்கள், கடுத்தனர் - ஓட்டம் பிடித்தனர்; கவி வீரர் - வாநரப்படைத்தலைவரான வீரர்கள், படவும் பாரார் - (தம் திறத்துப் படைகள்) இறந்தொழியவும் சிறிதும் பொருட்படுத்தாதவராய், கடுத்த பின்னும் காத்தனர் - ஓடின வாநரங்களைப் பின்னும் தடுத்து நிறுத்தினர்.

கடுத்தல் - விரைந்து ஓடுதல்; 'காலெனக் கடுக்கும் கவின் பெறு தேரும்' (மதுரைக் காஞ்சி. 388) கோழைகளாய்ப் புறங்காட்டி

ஓடும் குரங்குகளைத் தேற்றித் தடுத்தனர் என்க. ஆரணிய. 502 508) காண்க.

பா-ம். 2. முகங்கடோறும்.

3. பட்டது; பாரக்.

4. கடுத்தனரரக்கர்; காய்ந்தனர், கரந்தனர்.

## நீலன் முதலிய வாநரரது போர்த்திறம்

1990. சூலமும் மழுவுந் தாங்கித் தோளிரு நான்குந் தோன்ற
மூலம்வந் துலகை யுண்ணு முருத்திர மூர்த்தி யென்ன
நீலனின் றுழியே நின்று நிரந்தரங் கணங்க ளோடும்
காலனென் றொருவ னியாண்டும் பிரிந்திலன் பாசக்
[கையான்.

சூலமும் மழுவும் தாங்கி - சூலப் படையும் எரியீட்டியும் சுமந்து, இரு நான்கு தோளும் தோன்ற - எட்டுத் தோள்களும் ஒளிர, மூலம் வந்து உலகை உண்ணும் - முதற் கடவுளாகத் தோன்றி உலகனைத்தையும் சங்காரம் செய்கின்ற, உருத்திரமூர்த்தி என்ன - அச்சம் செய்யும் வடிவுள்ள சிவபெருமான் போன்று, நீலன் நின்றுழியே - நீலன் என்ற வாநர வீரன், (தான் போர் செய்து அழித்து) நின்ற இடத்திலேயே, காலன் என்று ஒருவன் - யமன் என்று சொல்லப்படுகின்ற ஒரு தேவன், கணங்களோடும் - தனது பரிவாரங்களோடும், பாசம் கையான் - பாசம் என்னும் க்ருவியைக் கொண்டவனாய், யாண்டும் பிரிந்திலன் - எவ்விடத்துக்கும் பிரிந்து செல்லக் கூடாதவனாய், நிரந்தரம் நின்றான் - இடைவிடாது நின்றான்.

இச் செய்யுள் முதலாக 6 செய்யுட்களில் சில வாநர வீரர்களின் வீரச் செயல் கூறப்படுகிறது. நீலன்; (கிட்கிந்தா. 696, 981); உரைக் குறிப்புக் காண்க. நீலனின்றவன் நெருப்பின் மகன் திண், சூலமுங்கயிறு மின்மை துணிந்தும், ஆலமென்று நிறமின்மையறிந்தும், காலனென் பரிவனைக் கருதாதார்' (யுத்த. 824) என்றதால் சீலமும் ஆண்மையும் நோக்கி இவனுக்குக் கால காலனை சிவபிரான் உவமையாக்கப் பட்டான். சிவபிரானுக்கு இரு நான்கு தோள்; 'எண்டோள் வீசி நின்றாடும் பிரான் தன்னைக், கண்காள்

காண்மின்களோ' (அப்பர். திருவங்கமாலை); உருத்திரம்: கோபம். நின்ற உழி என்பது அகர ஈறு தொக்கது. நிரந்தரம்: வடசொல்; எப்பொழுதும் என்று பொருள் படும். 'புலவர் யாவரையும் நிரந்தர நோக்குவென்' (ஆரணிய. 188); 'புழைத்த போல நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்' (சுந்தர. 335); நீலனுக்கு உதவியாகக் காலன் தன் தூதுவர்களுடன் நின்றதனால் அளவற்ற பகைவர் அழிந்தபாசம் - உயிர்களைப் பிணித்துச் செல்லும் கயிறு: அழிந் தமை விளங்கும்: கால பாசம்; (சுந்தர. 165, 173); 'கால பாசத்திற் காட்டிக் கொடாமலே' (நந்தனார் கீர்த்தனை).

பி-ம். 2. உருத்திரர்; என்பான், என்றும்,

3. நிரந்தரர், நிரந்தரங். 54

1991. காற்றல்லன் புனலோ வல்லன்
கனலல்ல விரண்டு கையால்
ஆற்றல னூற்று சின்ற
வருஞ்சம மிதுவே யாகில்
ஏற்றமென் பலவுஞ் சொல்லி
யென்பத மிழந்தே னென்னக்
கூற்றமுங் குலுங்கி யஞ்ச
வெங்கதக் குமுதன் கொன்றான்.

கூற்றமும் - யமனும், 'என்பதம் இழந்தேன்' என்ன - எனது பதவியினை இழந்தேன் என்று, குலுங்கி அஞ்ச - உடல் நடுங்கி யச்சுறுமாறு, வெம்கதம் குமுதன் - கடுஞ் சினத்தனான குமுதம் என்பவன், கொன்றான் - (பகைவரை) அழித்திட்டான்; காற்று அல்லன் - ஊழிக்காலத்து உலகினை அழிக்கின்ற காற்றோ எனின், (உருவத்துடன் விளங்குகின்றமையின்) காற்று அல்லன்; புனல் அல்லன்-தன்னிடம் அழுத்திக் கொல்லவல்ல நீர் என்னவாகுமோ எனின், (நேர் நின்று வெளிப்படையாகத் தாக்கிக் கொல்கின்றமை யின்) நீரும் அல்லன்; கனல் அல்லன் - (எரிந்து ஜ்வாலை வீசிக்) கொல்லும் தீயோ என்னின், அல்லன்; ஆற்றலன் - (பகைவர் தன்னை வந்து பொருவதனைக் கண்டு) மனம் பொறுதவனாய்; இரண்டு கையால் - (எவ்விதமான துணைக்கருவியுமின்றித் தன்) இரு கரங்களால், ஆற்றுகின்ற - செய்கின்ற, அருசமம் - (பிற ரால்) புரிதற்கு அரிய போர், இதுவே ஆகில் - ஈதாகில், பலவும்

சொல்லி ஏற்றம் என் - (அவ்வீரனது பேராற்றலைப்பற்றி மற்றும்) பலபட உயர்த்துக் கூறுவதால் காணக்கூடிய சிறப்பு யாது' (ஒன்றுமில்லை).

காற்றினை அருவுரு வென்பர்: கட்புலனாகாமையின் உருவில்லது என்றும், மேனியிற் றீண்டப்பெறுதலின் உருவுள்ளது என்றும் நூல்கள் கூறும். ஆகாயத்திற்கு வடிவின்று ஆகலானும், பூமி யாவரையும் பொறுப்பதன்றி அழிக்கும் திறனுள்ளது ஆகலானும் அவையிரண்டினையும் கூறவில்லை விலக்கணி.

பி - ம். 1. காற்றவன்; புனலும்; கையான்.
2. வஞ்சமும்; அருவேயாகில்.
3. இழப்பனென்று, யிழப்பதென்று.
4. வெருவியஞ்ச; வெஞ்சினக்; சொன்னான். 65

1992. மறிகடல் புடைசூழ் வைப்பின் மானவன் வாளி போன
செறிபணை மரமே நின்ற மரங்களிற் றெரியச் செப்பும்
குறியுடை மலைகள் தம்மிற் குலவரைக் குலமே கொள்ளா
எறிதலோ டறைதல் வேட்ட விடவனன் றெடுத்தி லாத.

கொள்ளா எறிதலோடு அறைதல் வேட்ட - கையில் கொண்டு வீசுதலையும் அடித்தலையும் விழைந்த, இடவன்-இடபன் என்ற வானரவீரன், அன்று - அப்பொழுது, எடுத்திலாத-(வேருடன்) அகழாதுவிடப்பட்டவை, மறி கடல்-அலைகள் கரைக்கண் வந்து மடங்குகின்ற கடலால், புடைசூழ் வைப்பின் - பக்கங்களிற் சூழப்பெற்ற நிலஉலகத்து, நின்ற மரங்களில் - நின்ற மரங்களுள்ளே, மானவன் வாளி போன - பெருமைசான்ற இராகவன் அம்பினால் ஊடுருவப் பட்டு துளைக்கப்பட்டனவும், செறி பணை - நெருங்கின கிளைகளையுடையனவுமான, மரமே - ஏழு மராமரங்களே ஆகும்; தெரிய செப்பும் - (பலரும்) அறியுமாறு புகழ்ந்து சொல்லப்படுகிற, குறி உடை - பெயர்களையுடைய, மலைகள் தம்மில் - மலைகட்குள்ளே, குலவரை குலமே - குலமலைகளின் வருக்கமே.

தொடர்புயர்வுநவிர்சி. இடபன் என்னும் வானரவீரன் இராமன் அம்பினால் துளைக்கப்பட்ட ஏழு மராமரங்கள் தவிர ஏனைய மரங்களையும், அஷ்டகுலாசலம் அன்றி மற்ற எல்லா மலைகளையும்

அகழ்ந்து வீசிப்பொருதனன் என்க. மானவன் - மநுவின் வழி வந்தவன் ; தத்திதாந்த நாமம். இந்த மநுதான் இராமபிரான் வமிசத்துக்கு ஆதிபுருடன்; 'ஆதித்தன் குலமுதல்வன் மநுவினையா ரறியாதார்' (பால. குலமுறை. 1); 'மானவன் மலர்க் கழலின்' (சுந்தர. 692); 'மானவன் குணமெலா நினையுமா மதியிறன்' (கிட்கிந்தா. 78); 'மானவன் வாளிபோன செறிபணை மரம்' கிட்கிந்தா. மராமரப் படலத்துக் காண்க. மறிகடல்: 'மையோ மரகதமோ மறிகடலோ' (அயோத்தி. கங்கை. 1).

பி. ம். 3. குலமேகொள்க, கொள்ள.

4. வேண்டி ; இடபனேனெடுந்நிலாத, இடவவன் றெடுத்நிலாத, றெடுத்நிலாதான். 56

1993. வாம்பரி மதமா மான்தேர் வாளெயிற்
றரக்கர் மானப்
பாம்பினும் வெய்யோர் சாலப் படுகுவர்
பயமின் றின்றே
தூம்புறழ் குருதி மண்டத் தொடர் நெடு
மரங்கள் சுற்றிச்
சாம்பவன் கொல்லச் சாம்பு மென்று
கொண்ட ரார்த்தார்.

வாம்பரி - தாவிச்செல்கின்ற குதிரைகளையும், மதம் மா - மதங் கொண்ட வேழங்களையும், மான் தேர் - குதிரைகள் பூட்டப்பெற்ற இரதங்களையும் உடையவர்களும், மானம் பாம்பினும் வெய்யோர் வாள் எயிறு அரக்கர் - விடத்தாற் சிறந்த அரவினைக்காட்டிலும் கொடியவர்களுமான, வாள்போன்று கூரிய பற்களையுடைய இராக்கதர்கள், சால படுகுவர் - மிகுதியாக இறந்தொழிவார்கள், இன்று பயம் இன்று - இன்று நமக்கு அச்சம் இல்லை; தூம்பு உறழ் - மதகுகளினின்று வழிந்து வருவதுபோன்ற, குருதிமண்ட - உதிரம் மிகுமாறு, தொடர் நெடுமரங்கள் சுற்றி - கிளைகள் ஒன்றோடொன்று பிணையப் பெற்ற நீண்ட மரங்களைச் சுழற்றி, சாம்பவன் கொல்ல - சாம்பவன் என்னும் கரடி வேந்தன் கொலைத்தொழில் புரிய, சாம்பும் - (அரக்கர் கூட்டம்) அழியும், என்று கொண்டு - என்று மனத் துட்கொண்டு, அமரர் ஆர்த்தார் - வானவர்கள் ஆரவாரம் செய்தனர். ஏ - அசை.

வாவும் என்பது வாம் எனக் குறுகிற்று. வாம்பரி மதமா மான்தேர் என ஏற்ற அடைமொழிகள் கொடுக்கப்பட்டமை காண்க. வாளெயிற்றரக்கர்; (யுத்த. படைக்காட்சி. 14). தூம்பு - நீர் விழும் மதகு; 'தூம்பழி குளத்திற் கண்ணீர்'; 'தூம்பழி குளம்' (சீவக. 1280, 1976). 'சாம்பவன் கொல்லச் சாம்பும்' பிரசாநயம் காண்க. சாம்பன்: கிட்கிந்தா. 699 உரைக்குறிப்புக் காண்க. சாம்புதல்: ஆரணிய. 942.

பி - ம். 1. மாளப்; மாயப்.

2. பல்குதல்; பயன்; றெய்த்த, எய்த' என்ன.

3. தூம்புள; சுடர்.

4. என்றுரையமரர்தந்தார், என்றனரமரர். 57

1994. பெருங்கலப் புரவி யான திரைகளும் கலம்பொற் றேரும்
இருங்களி யானை யான மகரமு மிரியல் போக
நெருங்கிய படைக ளான மீன்குலம் மிரிந்து சிந்தக்
கருங்கடல் கலக்கு மத்திற் பனசனுங் கலக்கிப் புக்கான்.

பொரும் - போர்புரிகின்ற, புரவி ஆன திரைகளும் - குதிரைகளாகிய அலைகளும், பொன் தேர் கலமும் - அழகிய (அல்லது பொன்னுனியன்ற) இரதங்களாகிய மரக்கலங்களும், இரு களி யானை ஆன மகரமும் - நிறைந்த மனக்களிப்பினையுடைய சுறு மீன்களும், இரியல் போக - (மனம் கலங்கிப்) பின்னிடையவும், நெருங்கிய - அடர்ந்த, படைகள் ஆன மீன் குலம் நெரிந்து சிந்த - போர்க்கருவிகளாகிய மீன் குழாங்கள் நிலைகெட்டுச் சிதறவும், கரு கடல் கலக்கும் மத்தில் - பெரிய (திருப்பாற்) கடலைக் கடைந்து கலங்கச்செய்த (மந்தரம் என்னும்) மத்துப்போன்று, பனசனும் - பனசன் என்ற குரங்கு வீரனும், கலக்கி புக்கான் - (இராக்கதருடைய சேனைக்கடலைக்) கலக்கிக்கொண்டே புகுந்தான்.

குதிரை: திரை; தேர்; கப்பல். ஆனை - மகரமீன். அரக்கர் - கடல். ஆயுதம் - மீன்களுமாம்; கல்வையணி. குலப்புரவி - உச்சைச்ரவம்போன்ற சாதிக்குதிரைகள். குதிரைக்குத் திரைகள்: 'தரங்க நிரைத்தன தரள நிரைத்தன, துரங்க மெனைப்பல கோடி தொகுத்தே' (தக்க. 265); 'ஒலியவார் திரையினன்ன வொழுங்கின யோகமாக்கள்' (திருவிளை. திருமணப். 11); 'பொடியின் மிசை

வெளி புதைதர விடுவன, புணரி யிடையலை யலையொடு பொரு வன' (வி. பா. 16ஆம் போர் 22). கலம் பொன் தேரும் என்பது பொன் தேர்க்கலமும் என விகுதி பிரித்துக் கூட்டப்பெற்றது. தேருக்கு மரக்கலம்; 'விசைபெற விடுபரி யிரத, மறிகடல் மிசை விடு கலமெனவே' (கலிங். 399). கம்ப மதத்துக் களியானை; யுத்த. இந்திரசித்து. 69. கடல் என்ற ஒப்புமைபற்றிக் கடையப்பட்ட பாற்கடல் கருங்கடல் எனப்பெற்றது. கருமை - பெருமை, வலிமையுமாம். பாற்கடல் எனினும், அதனகத்துப் பள்ளி கொண்ட பெருமானுடைய நீலவொளியால் கருமைபெற்ற கட லாகலின், கருங்கடல் என்க; 'நீலக்கடல் கடைந்தாய்' (திருவாய்.) என்றது காண்க. கருங்கடல்: கரிய இராக்கதக் கடல் எனினுமாம். மத்தம் - மந்தரகிரி. பனசன்: கிட்கிந்தா. 695 உரைக்குறிப்புக் காண்க; 'போர்த்தோர் புலிபோற் பனசன்' யுத்த. படைத்தலைவர். 49, 63); 'பருவலிப் பனசன்' (யுத்த. பிரமாத்திர. 121). ஈற்றடி, உவமையணி; ஏனைய மூன்றடிகளும் உருவகம்.

பி - ம். 1. பொற்றேர்திரைகளும்; பொலம்பெற்.

2. இருங்கலயானை; மலைகளும்.

1995. மயிந்தனுந் துமிந்தன் தானு மழைக்குலங்
கிழித்து வானத்
துயர்ந்தெழு மெருவை வேந்த ருடன்பிறந்
தவரை யொத்தார்
கயங்குடைந் தாடும் வீரக் களிறெனத் தான்
கயவன் காலிற்
பெயர்த்தில னுற்ற தல்லாற் கேசரி
பெரும்பொற் றேளான்.

மயிந்தனும் - மயிந்தனும், துமிந்தன் தானும் - துமிந்தனும், மழைகுலம் கிழித்து - மேகத் தொகுதிகளைக் கிழித்துகொண்டு, வானத்து - விண்ணுலகைக் குறித்து, உயர்ந்து எழும் எருவை வேந்தர் உடன் பிறந்தவரை ஒத்தார் - உயரமாகப் பறந்து சென்ற சகோதரராகிய (சம்பாதி சடாயு என்னும்) கழுகரசர்களை நிகர்த்து விளங்கினர்; கவயன் - கவயன் என்னும் வானர வீரன், கயம்

குடைந்து ஆடும் வீர களிறு ஒத்தான் - குளத்தில் மூழ்கி விளை யாடுகின்ற வீரம் செறிந்த ஆண் யானையை ஒத்தான்; கேசரி பெரும்பொன் தோளான் - கேசரி என்னும் பெரிய அழகிய தோளை யுடைய குரங்கு வீரன், உற்றது அல்லால் - ஒரே இடத்தில் நிலை யாகப் பொருந்தியதன்றி, காலில் பெயர்ந்திலன் - அடியெடுத்து வைத்து அப்பாற் செல்லவில்லை.

விண்ணிடைத் தாவிப் போர் செய்தமை கொண்டு மயிந்தது மிந்தர்க்குக் கழுகுகளும், சேனைக் கடலில் நின்று பொருதமையின், கவயனுக்குக் கயம் குடைந்தாடும் களிறுகளும் உவமிக்கப் பெற்றன. மயிந்த துமிந்தர்கள்: யுத்த. *344.* சம்பாதி வரலாறு: கிட்கிந்தா. *969-973*ல் காண்க. சடாயு வரலாறும் செயலும்: ஆரணிய காண்டத்துக் காண்க. கேசரி: கிட்கிந்தா. *692* உரைக் குறிப்புக் காண்க.

பி - ம். 1. மிளவல்தானும்; கிழிய

3. காலால்

4. பெரும்போர் பெற்றான். 59

## அரக்கர்சேனை தளர்தல்கண்டு இந்திரசித்து தான் தனியே நின்று பொருதல்

1996. பெரும்படைத் தலைவ ரியாரும் பெயர்ந்திலர்
பிணத்தின் குப்பை
வரம்பில பரம்பி யார்த்து மலைசின்ற
பொழுதின் வந்துற்
றிரிந்தன கவியுங் கூடி யெடுத்தன
வெடுத்த லோடும்
சரிந்தது நிருதர் தானை தாக்கின
னரக்கன் தானே.

பெருபடை தலைவர் யாரும் - பெரிய குரங்குச் சேனாதிபதிகள் எவரும், பெயர்ந்திலர் - இடம் விட்டு அகலாதவராய், பிணத் தின் குப்பை - (இராக்கதருடைய) சவக்குவைகள், வரம்பில - எல்லை யில்லாதனவாய், பரம்பி ஆர்த்து - பரவும்படி ஆரவாரித்து, மலை கின்றபொழுதின் - போர் புரிகின்ற தருணத்தில், இரிந்தன கவி

யும்-(முன்னர்த்) தோற்றோடின வானரங்களும், வந்துற்று - மீண்டு வந்து, கூடி - உடன் சேர்ந்து, எடுத்தன - போரினை மேற்கொண் டன; எடுத்தலோடும் - (அவைகள் அங்ஙனம்) மேற்கொண்ட அளவில், நிருதர் தானை சரிந்தது - அரக்கர் படைநிலை தளர்ந்தது; (அப்பொழுது) அரக்கன் தானே - அரக்கர் வீரனான இந்திரசித்துத் தன்னந் தனியாகவே நின்று, தாக்கினான் - பொருதனன்.

எடுத்தல் : போர் தொடுத்தல்.

பி - ம். 2. பரப்பி

3. ஈண்டி ; யெரிந்தனவெடுத்த

4. சரிந்தன ; தாக்கினவ், தாங்கிறன். 60

வேறு

1997. பூணெ றிந்தகுவ டனைய தோள்களிரு
புடைப ரந்துயர வடல்வலித்
தூணெ றிந்தனைய விரல்கள் கோதையொடு
சுவடெ றிந்ததொரு தொழில்படச்
சேணெ றிந்துநிமிர் திசைக ளோடுமலை
செவிடெ றிந்துடைய மிடல்வலோன்
நாணெ றிந்துமுறை முறைதொ டர்ந்துகட
லுலக மியாவையு நடுக்கினன்.

மிடல்வலோன் - வலிமை மிக்க இந்திரசித்து, பூண் எறிந்த - ஆபரணங்கள் ஒளி வீசப்பெற்ற, குவடு அனைய தோள்கள் - மலைச் சிகரங்களை நிகர்த்த (தனது) தோள்கள், இருபுடை பரந்து உயர - இருபுறங்களில் பரவி உயரவும், அடல் வலி தூண் எறிந்தனைய - மிக்க வலிமையுடைய தூண்கள் பொருந்தினாற் போன்ற, விரல்கள் - கை விரல்கள், கோதையொடு - ஒழுங்காக, சுவடு எறிந்தது ஒரு தொழில்பட - தழும்பேறுதலாகிய ஒரு தொழிலைப் பொருந்தவும், சேண் எறிந்து - நெடுந்தூரம் பரவி, நிமிர் திசைகளோடு மலை செவிடெறிந்து உடைய - உயர்ந்த திக்குகளும் மலைகளும் செவிடு பட்டுச் சிதறவும், முறை முறை தொடர்ந்து - வரிசையாகத் தொடரும்படி, நாண் எறிந்து - குணத் தொனி செய்து, கடல்

உலகம் யாவையும் நடுக்கினன் - கடலாற் சூழப்பெற்ற உலகனைத்தையும் (அப்பேரொலியால்) நடுங்கச் செய்தான்.

கோதை: ஒழுங்கு அல்லது வரிசை; (பிங்). சேணெறிதல், செவிடெறிதல்: யுத்த. 1413: கடல் உலகம்; கடல் சூழ்ந்த உலகம். 'கடல் சூழ்ந்தவுல கெலாம் காக்கின்ற பெருமான்' பெரிய. பு. திரு: தொகை); இனி, பூணெறிந்த குவடு என்பதை இல்பொருள் உவமையாகக் கொண்டு, 'ஒரு மலைக்குப் பூண் கட்டியிருந்தால் அந்தப் பூண் தெறிக்கப் பருப்பது போன்று, தோள்வளை தெறிக்கப் புயம் பூரித்தது' என்றும் கூறுவர்.

பி - ம் 1. புடைபெயர்ந்துயர; பிடைவலத், மிடல்வலி

2 குவடெறிந்தது, சிலையெறிந்தது, செரிடெறிந்தது, தொடர்வறிந்தது

3. விரல்வவென், விறல்விலோன்

4. மிடலுலகம். 61

1998. சிங்க வேறுகடல் போன்மு ழங்கிநிமிர்
தேர்க டாய்நெடிது செல்கென
அங்க தாதிய ரனுங்க வானவர்க
ளஞ்ச வெஞ்சின மனந்தமாச்
சங்க பாலகுளி காதி வாலெயிறு
தந்த தீவிடமுமிழ்ந்து சார்
வெங்க ணுகமென வேகமா யுருமு
வெள்க வெங்கணைகள் சிந்தினன்.

சிங்க ஏறு - ஆண் சிங்கம் நிகர்த்தவனான இந்திரசித்து, கடல் போல் முழங்கி - சமுத்திரம் போன்று பேராரவாரம் செய்து, 'நிமிர் தேர்கடாய் - உயர்ந்த இரதத்தினைச் செலுத்திக்கொண்டு, 'நெடிது செல்க என - (பகைவர் சேனையின் ஊடே) நீண்ட தூரம் விரைந்து செல்க' என்று - என்று, (தன் தேர்ப்பாகனை நோக்கிக்) கட்டளையிட்டு, அங்கத ஆதியர் அனுங்க - அங்கதன் முதலான வானர வீரர்கள் மனம் நோகவும், வானவர்கள் அஞ்ச - தேவர்கள் பயம் எய்தவும், உருமும் வெள்க - இடியும் (ஈடாகமாட்டாது) நாணவும், வால் எயிறு - வெள்ளிய பற்களினின்று, தந்த - வெளிப்படுகிற, தீ விடம் உமிழ்ந்து சார் - கொடிய நஞ்சினைக் கக்கிக்கொண்டு வந்து அடைகின்ற, சங்கபால குளிக ஆதி-சங்கபாலன் குளிகன் முதலிய,

வெம்கண் நாகம்என - கொடிய நாகங்கள் என்று கூறுமாறு, வெம் கணைகள் - கடுமையான அம்புகளை, வெம்சினம் - வெம்மைமிக்க கோபத்துடனே, அனந்தமா வேகமா சிந்தினன் - மிகப்பலவாகவும் விரைவுடனும் சிதறினன்.

சிங்கவேறு; (யுத்த. 428); கடாவுதல் - செலுத்துதல். 'தேர் பரி கடாவி' (ஆரணிய. 525); 'காலை ஞாயிற்றுக் கதிர் கடாவுறுப்ப' (சிறுபாண். 10); செல்க என என்பது அகரம் குறைந்து நின்றது. அங்கத + ஆதி, குளிக ஆதி, வடமொழிச் சந்திகள்; அனுங்குதல்; (பிங்.); அனந்தமாக என்பது ஈறு குறைந்தது; ந + அனந்தம் என்பது சமாசம்; 'ஊரனந்தம் பெற்ற பேரனந்தம்' (தாயு. பரசிவ: 7); 'அனந்த சோதி' (நக்க. 183); சங்கபாலன், குளிகன்: திசை நாகங்கள்; கிட்கிந்தா. 442 உரை காண்க. வாலெயிறு; பணிமொழி வாலெயிறூறிய நீர்' (குறள். 1121). இறுதியடி வீர மெய்ப்பாடு தோன்றக் கூறப்பட்டமை காண்க. வெங்கணுளி; (கிட்கிந்தா. 227). 'ஆறினர்களு மஞ்சினருல கெலாமனுங்க' (யுத்த. இராவணன் தேர்: 25); 'பஞ்சியொளிர் விஞ்சு குளிர் பல்லவ மனுங்க' (ஆரணிய. 250),

பி - ம். 1. முழக்கி.

2. அங்கதாதிபன்; வெஞ்சரம், னைவனந்தன்மரச்.

3. வாளெயிறுகைத்து, வாலெயிறநுக்கி; வெவ்விடம்; சால், சேர்.

4. செங்கணுகம்; உருமுசிந்து, உருமுமஞ்ச. 62

1999. சுற்றும் வந்துகவி வீரர் வீசிய
சூடர்த்த டங்கல்வரை தோய்மரம்
இற்றெ ரிந்துபொடி யாயு திர்ந்தன
வெழுந்து சேணிடை யிழிந்தபோல்
வெற்றி வெங்கணை படப்ப டந்தலைகள்
விண்ணி னூடுதிசை மீதுபோய்
அற்றெ ழுந்தன விழுந்து மண்ணிடை
யழுந்து கின்றன வனந்தமால்.

வெற்றி வெம்கணை படபட-(மேகநாதனுடைய) வெற்றிபொருந் திய கொடிய சரங்கள் விடாமற்படுதலின், கவிவீரர் - குரக்கு வீரர்கள் சுற்றும்வந்து-(இந்திரசித்தினை) நாற்புறங்களிலும் சூழ்ந்து

கொண்டு, வீசிய - அவன்மீது எறிந்த, சுடர் - ஒளியினையுடைய, தடகல்வரை - பெரிய கல் மலைகளும், தோய்மரம் - வானத்தைத் தீண்டும் உயர்ந்த மரங்களும், இற்று - முரிந்து, எரிந்து - தீப்பட்டு, பொடியாய் உதிர்ந்தன - தூளாகிச் சிதறி வீழ்ந்தன ; அற்று எழுந்தன - அறுபட்டு எழுந்தனவான, அனந்தம் தலைகள் - மிகப்பல வான (வானரர்) சிரங்கள், சேண் இடை எழுந்து இழிந்தபோல் - (பறவைகள்) விண்ணிற் கிளம்பிக் கீழ் இறங்குவன போன்று, விண்ணின் ஊடு - ஆகாயத்தில், திசைமீது போய் - (பல திக்குகளினும்) சென்று விழுந்து - (பூமியில்) விழுந்து, மண்ணிடை அழுந்துகின்றன - (வீழ்கின்ற விசையால்) மண்ணில் அழுந்தலாயின. ஆல் - அசை.

தோய்தல் - வானளாவுதல்.

பி - ம். 1. தடங்கல்; மாமரம், தொன்மரம்,

2. இற்றொடிந்து ; ஒடிந்தன, உடைந்தன எரிந்து மண்ணிடை ; போச்.

3. வெம்படை.

4. விண்ணிடை. 63

2000. சிலைத்த டம்பொழி வயக்க டும்பகழி
செல்ல வொல்கினர் சினத்தினால்
உலைத்தெ றிந்திட வெடுத்த குன்றுதொ
றுடற்ப ரங்கள்கொ டொதுங்கினர்
நிலைத்து நின்றுசின முந்து செல்ல வெதிர்
சென்று சென்றுற நெருக்கலான்
மலைத்த லங்களொ டுரத்த லங்கழல
வூடு சென்றபல வாளியே.

(சில குரக்கு வீரர்கள்), சிலைதடம் பொழி - (இந்திரசித்தின்) வில்லிடத்தில் இருந்து பொழிகின்ற, வயம்கடு பகழி - வன்மையையும் விரைவினையும் உடைய வாளிகள், செல்ல - (தம் உடல்களில்) ஊடுருவவின், ஒல்கினர் - தளர்ச்சியுற்றவராய், சினத்தினால் - (அரக்கன்மீது எழுந்த) கோபத்தினால், உலைத்து - வருந்தி, எறிந்திட எடுத்த குன்றுதொறு - (அவன்மீது) வீசுதற்காகத் (தாம்) கையிற் கொண்டுள்ள மலைகள் தோறும், உடல் பரங்கள் கொடு

ஒதுங்கினர் - (தங்கள் உடற்பாரங்களை ஒடுக்கிக் கொண்டு) பதுங்கி, நிலைத்து நின்று - நிலையாக இருந்து, சினம் முந்து செல - அவன்மீது தாம் கொண்ட வெகுளி, (தம்மை யிழுத்துக் கொண்டு) முன்னே போக, எதிர் சென்று சென்றுற நெருக்கலரன்- (அவனுக்கு) நேராகச் சென்று சென்று (அவனை) மிகவும் அணுகவே, பலவாளி - (மீண்டும் அவன் வில்லினின்று எழுந்த வேறு) பல அம்புகள், மலை தலங்களொடு - (அவர்கள் கையிலே தாங்கியுள்ள) மலைகளுடனே, (அவற்றின் மறைந்துள்ள அவர் களின்), உரம் தலம் கழல ஊடு சென்ற - மார்பு வழியாக வெளிப் படுமாறு, ஊடு சென்ற - (அவற்றை ஊடுருவிப் போயின).

இந்திரசித்து விடுத்த அம்புகள் விடாது தம்மீது தைத்தலின், அவன் எதிர் செல்லத் தளர்ந்த குரக்கு வீரர்கள், தாம் கைக் கொண்ட மலைக்குள்ளாகவே தமது உடலைச் சுருக்கிக் கொண்டு, தந்திரமாகப் பிழைத்து, பின் அவனை அணுகிய அளவில், மீண்டும் அவன் எய்த வாளிகள் அவர்கட்கு மறைவளித்த மலைகளையும் துளைத்துக் கொண்டு குரக்கு வீரர் தம் மார்பினை ஊடுருவின. ஒல்கினர் முற்றெச்சம். உலைந்து உலைத்து என வலித்தது. எதிரியின் முன் நிற்கமாட்டாமல் பதுங்க நேர்ந்தமையின் அவர்கள் உடல் அவர்கட்குப் பெரும் பொறையாயிற்று என்பார். 'உடற் பரங்களை என்றார். (ஒப்பு) பராவெஞ்சிலை வீரம் பழிப்பதே' (கிட்கிந்தா. *319*). அயோத்தி. நகர்நீ. *138*-ம் காண்க.

பி-ம். 2. கடுங்கணைகள்.

2. குன்று கொடுடற் பாரங்கள் கொடொடுங்கிறர்.

3. நினைத்து; நின்ற; சென்றிடை; நெருக்கினன்.

4. மலைக்கரங்களொடு; தலங்கிழிய; ஊடுபோனபல வாளியால். 84

2001. முழுத்த மொன்றிலொரு வெள்ள வானர
முடிந்து மாள்வன தடிந்துபோய்க்
கழுத்த கையநிமிர் கால வாலபல
கண்ட மானபடி கண்டுநேர்
எழுத்தோ டர்ந்தபடர் தோள்களா லெறிய
வெற்ற வுற்றன வெழுந்துமேல்
விழுத்த பைந்தலைய வேனு மால்வரைகள்
வீசி வீசியுடன் விழுமால்.

முழுத்தம் ஒன்றில் - ஒரு முகூர்த்த நாழிகை அளவில், ஒரு வெள்ளம் வானரங்கள், முடிந்து - (ஆயுட்காலம்) முடியப்பெற்று, தடிந்து போய் - (அரக்கன் அம்பினால்) துணிபட்டுப்போய், மாள்வன - தீர்வனவான, கழுத்த - கழுத்தையுடையனவும், கைய - கைகளையுடையனவும், நிமிர் கால - நிமிர்ந்த கால்களையுடையனவும், வால - வாலையுடையனவுமாகி, கண்டம் ஆனபடி - பல துண்டங்கள் ஆன விதத்தை, நேர் கண்டு - கண்கூடாக நோக்கி, எழு தொடர்ந்த படர் தோள்களால் - இரும்புத் தூண் ஒத்த, பரந்த தங்களது கரங்களால், எறிய - (அவன்மீது மலைகளை) வீசுவதற்கும், எற்ற - (அவனைத்) தாக்குதற்கும், மேல் உற்றன எழுந்து - (மேலே உயர்ந்து) எழுந்தனவான சில குரங்குகள், (அவன் வாளிகளால் அறுபட்டு), விழுத்த - (அவன் மேல்) வீழச்செய்த, பைந்தலையன் - பசுமையான சிரங்களை உடையனவாய், (தாம் கையில் ஏந்தியுள்ள) வேணுமால் வரைகள் வீசி வீசி - மூங்கிற் காட்டினையுடைய பெரிய மலைகளையும் (அந்த அரக்கன் மீது) விடாமல் எறிந்து, (அத்தலைகளோடும் மலைகளோடும்) வீழும் - தாமும் ஒருங்கே (அவன்மீது) வீழ்வன ஆயின.

முழுத்தம் : கண்ணாடிப்புறத்து உருட்டின உழுந்து விழுந்த நேரம். இந்திரசித்து எய்த அம்புகளால் உறுப்புக்கள் அறுபட்டு ஒரு வெள்ளம் வானரங்கள் மடிந்தனவாக, வேறு சில குரங்குகள் அவனைத் தாக்கக் கருதி விண்மீது தாவின. பின்னர் அவைகளும் அரக்கன் அம்புகளால் துணிபட்டு விழ்ந்த போதிலும், வீழ்கின்ற பொழுதே அரக்கன் தலையிலும் தோள்களிலும் தாம் ஏந்தி நின்ற மலைகளை வீசியும் தம்முடல்களையும் அவன்மீது வீழச்செய்தும், அவனை ஊறுபடுத்தின என்று குரங்குகளின் வீரம் குறிக்கப் பெற்றது. 'அடுசிலை பகழி தொடுத்து விடப்புகும், அளவினி லயமெதிர் விட்டவர் வெட்டின, உடல்சில விருதுணி பட்டன பட்டபின், ஒருதுணி கருதுமி லக்கை யழித்தன, உருவிய பிறை முக வப்பக ழித்தலை, அரிதரி திருவுமெ னப்பரி யுய்ப்பவர், அடியொடு முடிகடு ணித்து விழுந்துமே; (கலிங். 421, 422) ; 423,

424ம் காணத்தகும். முழுத்தம்: முகூர்த்தம் என்ற வடசொற் சிதைவு, மூன்றே முக்கால் நாழிகை கொண்ட காலம்.

பி - ம். 1. முடிந்ததுள்ளன ; கடிந்து.

3. தொடர்ந்தவடர், தொடர்ந்தபல, தொடர்ந்தமிரி ; தோளிபோ நெரிய ; வற்றின, அற்றன ; விழுந்து.

4. நலைகள் விரவிச ; உடல்வியுமால், மிளுமால். 65

2002. அற்ற பைந்தலை யரிந்து சென்றன
வயிற்க டுங்கணை வெயிற்கள் போற்
புற்ற டைந்தகொடு வெவ்வ ராவினெடு
நாக லோகமது புக்கவால்
வெற்ற வெள்ளிடை விரிந்து போவதொரு
மேடு பள்ளம்வெளி யின்மையால்
உற்ற செங்குருதி வெள்ள முள்ளதிரை
யோத வேலையொடு மொத்ததால்.

அற்ற - துணிபட்ட, பை தலை - (குரங்குகளின்) பசியதலைகளை, அரிந்து - அறுத்துக்கொண்டு, சென்றன - (அப்பாற்) போன, அயில் கடுகணை - கூர்மையினையும் விசையினையும் உடைய (அரக்கனுடைய) வாளிகள், வெயில்கள் போல்-(சிறு புழைகளின் உள்ளும் ஊடுருவிச் செல்லும்) வெயில் ஒளிகள் போன்றும், புற்று அடைந்த-புற்றில் புகுந்த, கொடு வெவ் அராவின் - மிகக் கொடிய பாம்புகள் போன்றும், நெடு - ஆழ்ந்த, நாகலோக மது புக்க - பாதாள உலகத்தை அடைந்தன; மேடு பள்ளம் வெளி இன்மையால், இடை விரிந்து போவது ஒரு - மேடும் பள்ளமும் இவ்விரண்டும் அற்ற சம பூமியும் என்று வேற்றுமை சிறிதும் இல்லாதபடி செய்து கொண்டு, போவது ஒரு வெற்ற வெள்ளிடை-செல்கின்ற ஒரு வெட்ட வெளியில், உற்ற - ப்ரவிச் செல்வதாகிய (தன்மையை பொருந்திய), செம் குருதி வெள்ளம்-சிவந்த உதிரப் பெருக்கானது உள்ள - (இயற்கையால்) உள்ள, திரை ஓதம் வேலையொடும் ஒத்தது - அலைகளையும் பொங்குதலையும் உடைய கடலோடும் ஒத்திருந்தது. ஆல் : அசை.

உவமையணி. வாநரங்களின் உருவத்தில் ஊடுருவி அவைகள் கீழ் விழ்ந்த பின்னரும் தரையினைத் துளைத்துப் பாதாளம் வரையில் சென்ற அம்புகட்குச் சிறு துவாரங்களின் ஊடே கீழ் நோக்கி

நெடுந்தூரம் சென்று ஒளிரும் கிரணங்களும், புற்றில் நுழைந்து செல்லும் அரவமும் உவமைகள். பெரு வெள்ளம் பரவுவதற்கு மேடு பள்ளம் சம நிலம் என்று வேற்றுமையின்மையின் 'மேடு பள்ளம் வெளியின்மையால் வெற்ற வெள்ளிடை விரிந்து போவது' எனப்பட்டது.

பி - ம். 1. சிந்தின ; வெயிற்கொள்பொற்.

2. அடர்ந்ததொரு ; அராவினெடு ; புக்கதாள்.

3. பிரிந்து, விரைந்து.

4. பைங்குருதி ; அள்ளுதிரை ; வேலையினை. 66

2003. விழிக்கு மேல்விழிய நிற்கின் மார்பிடைய
மீளு மேன்முதுக மேனிய
கழிக்கு மேலுயர வோடு மேனெடிய
கால வீசினிமிர் கையவாய்த்
தெழிக்கு மேலகவு நாவ சிந்தையின
வுன்னு மேற்சிகர மியாவையும்
பழிக்கு மேனிய குரக்கின் மேலவன்
விடுங்கொ டும்பகழி பாயவே.

சிகரம் யாவையும் - மலைச் சிகரங்களை எல்லாம், பழிக்கும் மேனிய - பழிக்கும்படியான (மிகச் செறிவும் பெரிதும் வலியதுமான) உடலையுடைய குரங்குகளின் மேல், அவன் - (அந்த இந்திரசித்து), விடும் : எய்த, கொடு பகழி - கொடிய வாளிகள், பாயவே - (தாம்) பாயும்போது, விழிக்கு மேல் - குரங்குகள் (கண்களைத்) திறந்து நோக்கினால், விழிய - அவ்விழிகளின்மேல் விழுவனவும், நிற்கின் - எதிர்த்து நிற்பின், மார்பிடைய - மார்பின்மீது பாய்கின்றனவும், மீளுமேல் - புறந்தந்து ஓடுமாயின், முதுக - முதுகின் மீது தாக்கு கின்றனவும், கழிக்கு மேல் மேனிய-(அந்த அம்புகளைத் தம் உடலிற் படாதபடி ஒதுக்கித் தப்ப முயலுமாயின்) அவ்வுடம்பிலெங்கும் எய்வனவும், உயர ஓடுமேல் - உயரமாகத் தாவி ஓடுமாயின், நெடிய கால - நீண்ட கால்களின்மேல் தாக்கினவும், வீசின் - (கைகளை) வீசுமாயின், நிமிர் கையவாய் - உயர்ந்த கைகளில் தைப்பனவும், தெழிக்கு மேல் - (வாயினால்) அதட்டுமாயின், அகவும் நாவ - அசைகின்ற நாவிடத்தனவும் ஆகி, உன்னு மேல்-(மனத்தால்) நினைக்கு

மாயின், சிந்தையின - அம் மனத்தின்மேற் செல்வனவும் ஆயின. ஏ : அசை.

வானரங்களின் ஒவ்வோர் உறுப்பிலும் இந்திரசித்தின் அம்புகள் தைத்தமை அணிபெற உரைக்கப்பெற்றது. தன்மை நவிற்சியணி. அருவமான மனத்தினையும் எய்ததாக இந்திரசித்தின் அம்பின் சிறப்பினைக் கூறியவாறு. விழிய, மேனிய முதலியன குறிப்பு முற்றுகள்.

பி - ம். 1. விழியினிற்கும் ; மார்பிடையின், மார்பிடையும் ; விழுமேன் ; முதுகை மேனியை.

2. கிழிக்குமே லுயிரிலோடும், கிழிக்குமே லுயிரைவேருப் ; கால்கள் வீரி, காலபாச, காலைவிரி.

3. எனவுள்ளுமேற்.

4. குரங்கு, குரங்கின் ; கடும்பகழி ; பாயுமே. 67

2004. மொய்யெ டுத்தகணை மாரி யாலிடை
முடிந்த தொன்றுமுறை கண்டிலார்
எய்வி டத்தெறியு நாணி னேசையல
தியாது மொன்றுசெவி யுற்றிலார்
மெய்யெ டுத்தகவி வெள்ள மியாவையும்
விழுந்து போனவெனும் விம்மலாற்
கையெ டுத்தன குரங்கி னேடுமுறை
கண்டு தேவர்கள் கலங்கினர்.

தேவர்கள் - (விண்மிசை நின்று போரைக் கண்டிருந்த) வானவர்கள், (இந்திரசித்தாகிய மேகம் சொரிந்த) மொய் எடுத்த கணை மாரியால் - இகல் கருதி எய்த அம்பு மாரியால், இடை முடிந்தது ஒன்றும் முறை கண்டிலார் - நடுவில் நிகழ்ந்த செயல்களுள் ஒன்றும் முறையாகப் பார்க்கவில்லை; எய்வு இடத்து - (அரக்கன்) அம்பு விடுக்கும் கால், எறியும் நாணின் ஓசை அலது - (கைவிரலால்) தெறிக்கின்ற வில் நாணிலிருந்து எழுகின்ற ஓசையல்லாது, யாது ஒன்றும் செவி உற்றிலார் - பிறிதொன்றும் கேட்டறிந்தார் இல்லை; 'மெய் எடுத்த கவி வெள்ளம் யாவையும் - உடல் படைத்துள்ள குரங்குக் கூட்டங்கள் எல்லாம், விழுந்துபோன - இறந்துபட்டன', எனும் விம்மலால் - என்ற துயரத்தால், கை எடுத்தன குரங்கின் - கைகளை

மேல் உயர்த்தலாவான சில வாநரங்களின், ஓடும் முறை கண்டு கலங்கினர்-ஓடும் தன்மையையே பார்த்து மனக்கலக்கம் உற்றனர்.

மொய்: போர்: 'மொய் வெல்லும் குருதி வேலான்' (சீவக. 1704); விம்மலாற் கை எடுத்தல்: துயரத்தின் மெய்ப்பாடு. மெய் யெடுத்த கவி வெள்ளம்: குரக்குருவான எல்லாம் என்க; கை யெடுத்தல்: துயரக் குறிப்பு.

பி-ம். 1. இடை கண்டிலர்.

2. எய்யும் விற்கை யெறி, எய்விடத்தி னெறி; ஒன்றுமிடை.

3. விளிந்துபோன.

4. அடித்தன; கண்டட. 68

2005. கண்ட வாநர மநந்த கோடிமுறை
கண்ட மானபடி கண்டவக்
கண்டன் மாறொருவ ரின்மை கண்டுகணை
மாறி னன்விடுத லின்மையாய்க்
கண்ட காலையில் விலங்கி னிரவி
காதல் காதுவதொர் காதலாற்
கண்ட கார்சிதைய மீது யர்ந்தொளிர்
மராம ரஞ்சுலவு கையினன்.

கண்ட-(தன்) கண்ணிற்பட்ட, அநந்த கோடி வாநரர்-எண்ணிறந்த கோடிக் கணக்கான குரங்குகள், முறை-படிப்படியாக, கண்டம் ஆன படி கண்ட அ கண்டன்-துண்டு துண்டாகப் போன தன்மையைக் கண்ணுற்ற தீயவனான அந்த இந்திரசித்து, மாறு ஒருவர் இன்மை கண்டு-பகைவர் எவரும் இல்லாமையை நோக்கி, விடுதல் இன்மையாய்-ஏவுதலின்றி, கணை மாறினன்-அம்புகள் ஏவுதலை நிறுத்தினன், (அப்போது) இரவிகாதல்-சூரியனுடைய பிரிய புதல்வனான சுக்கிரிவன், கண்ட காலையில்-(அதனைப்)பார்த்த அளவில், காதுவது ஓர் காதலால்-(அவனைத்) தாக்குவதாகிய ஓர் ஆசையால், கண்ட கார் சிதைய-காணப்படுகின்ற மேகங்கள் சிதைந்து கெடுமாறு, மீது உயர்ந்து ஒளிர் மராமரம் சுலவு கையன்-மேலே ஓங்கி விளங்கும் ஓர் மராமரத்தைப் பெயர்த்து சுழற்றும் கையனாய்; எய்தி என்ற அடுத்த கவியொடு தொடரும்.

முதலடியில் பிராச இனிமை படித்துக் காண்க. கண்டன் - வீரன். 'தெவ்வர் புரமெரி கண்டா' (கோயிற்பு. நடராச. 26); முள்போற் கொடியவன் எனினுமாம். காதல் காதுவதோர் காதல்: பிராசம் காண்க. இச்செய்யுள் இனியதோர் சந்தச் செய்யுள். சுலதல் - சுழற்றுதல். (நைடத. அன்னத். 45); உறச்சுலவிச் சூன்றிடலும் (குசேலோ. வைகுந்த. 54); கார் சிதைய சுலவு கையி ஞன் என இயைக்க,

பி - ம். 2. கணட ; மாறேருவன் ; விடுதலன்னதாற், விடுதல் கண்ணிறூற்.

3. காதலன் சமர்செய் ; இரவி செம்மல்.

4. கண்டகாரற ; மிதுயர்ந்ததொர். 69

2006. உடைந்து தன்படை யுலைந்து சிந்தியுயி
 ரொல்க வெல்செரு வுடற்றலாற்
கடைந்து தெள்ளமுது கொள்ளும் வள்ளலென
 மேனி மிர்ந்ததொர் கறுப்பினுன்
இடைந்து சென்றவனை யெய்தி யெய்தரிய
 காவல் பெற்றிக லியற்றுவான்
மிடைந்து நின்றபடை வேலை கால்தளர
 வீசி னுனிருதர் கூசினர்.

தன்படை - தனது (குரங்குச்) சேனை, உடைந்து உலைந்து - மனம் உடைந்து வருந்தி, சிந்தி - சின்னபின்னமாய், உயிர் ஒல்க - உயிர் நீங்குமாறு, வெல் செரு - (அரக்கன்) வெல்கின்ற போரை, உடற்றலால் - தீவிரமாகச் செய்ததனுல், கடைந்து தெள் அமுது கொள்ளும் வள்ளல் என -(பாற்கடலைக்) கடைந்து வாரித் தெள்ளிய அமுதத்தைக் கொள்ளும் வண்மையுடையவனை வாலி போன்று, மேல் நிமிர்ந்தது ஓர் கறுப்பினுன் - மேலோங்கப் பெற்ற வெகுளியனுய், இடைந்து -(போரை நிறுத்தி) விலகி, சென்றவனை எய்தி - செல்கின்ற அந்த மேகநாதனை அணுகி, எய்தரிய காவல் பெற்று - பிறரால் அடைதற்கருமையான காவலையடைந்து, இகல் இயற்றுவான் மிடைந்து - போர் செய்யும் பொருட்டு நெருங்கி, நின்ற படை வேலை - நின்ற (இந்திரசித்தின்) சேனைக்கடல், கால் தளர வீசினுன் - நிலைகுலையுமாறு (அம் மராமரத்தை), வீசினுன் -

சுழற்றி எறிந்து போர் புரிந்தான்; (அதனால்), நிருதர் கூசினர் - அரக்கர் கூச்சங் கொண்டனர்.

வெல் செரு: வினைத்தொகை. கறுப்பு - சினம்; 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள' (தொல். உரி. 76). ஒல்க வல் செரு, கொள்ளும் வள்ளல், எய்தி எய்தரிய, வேலை கால் தளர, வீசினர் கூசினர் என்ற தொடர்களில் இணை எதுகைநயம் காண்க.

பி - ம். 1. சித்வ
2. கடைந்த; வன்னமென; கடுப்பிறன்.
3. அடைந்து; மேலிகலியற்றுவான், பெற்றுகலியற்றுவான். 70

2007. சுற்று நின்றபடை சிந்தி யோடவொரு
மராம ரங்கொடு துகைத்துளான்
வெற்றி கண்டுவலி நன்று நன்றென
வியந்து வெங்கணை தெரிந்தவன்
நெற்றி யின்றலை யிரண்டு மார்பிடை
யொரஞ்சு நஞ்சென நிறுத்தவன்
பற்றி வந்தமரம் வேறு வேறுற
நொறுக்கி நுண்பொடி பரப்பினன்.

(இந்திரசித்து), சுற்று நின்ற படை சிந்தி ஓட - (தன்னைச்) சூழ்ந்துநின்ற சேனைகள் சிதறியோடும்படி, ஒரு மராமரம் கொடு துகைத்துளான் வெற்றி கண்டு - ஒரு மராமரத்தைக்கொண்டு அழித்தவனான சுக்கிரிவனுடைய வென்றியைக் கண்ணுற்று, 'வலி நன்று நன்று - (இவன்) ஆற்றல் மிகவும் நன்றாயுள்ளது', என வியந்து - என்று (அவனைப்) பாராட்டிப் (பின்னர்), நஞ்சு என வெம் கணை தெரிந்து - விடத்தைப் போன்று கொடிய சரங்களைச் (சிறந்தனவாக) ஆராய்ந்தெடுத்து, அவன் நெற்றியின் தலை - அவனது நெற்றியினிடத்தில், இரண்டு - இரண்டு அம்புகளையும், மார்பிடை ஓர் அஞ்சும்-மார்பிடத்து ஐந்து சரங்களையும், நிறுத்து- அழுந்துமாறு நிறுத்தி, அவன் - அந்த வானரேந்திரன், பற்றி வந்த மரம் வேறு வேறு உற நொறுக்கி - கையிற் பிடித்துவந்த மராமரத்தை தனித்தனித் தூளாகுமாறு செய்து, நுண்பொடி பரப்பினன் - சிறிய பொடிகளாகப் பரவச் செய்தான்.

வெற்றிகண்டு வியந்தது - வீரச்செயல் : 'வீரரை யார் வியவாதார்' (கிட்கிந்நா. 297); மற்றும், யுத்த. 1226-1241 ; யுத்த. 4, 5. நெற்றியின் தலை : தலை : ஏழன் உருபு. நஞ்சென வெங்கணை எனக்கொண்டுகூட்டாக்கிப் பொருள்தரப்பெற்றது. மரம் : மேலே குறித்த மராமரம்.

பி - ம். 1. சுற்றி ; தொலைந்துளான்.

2. விரைந்தவன்.

2. நிறுத்தபின், நிறுத்தினன்

4. கூறுற ; படுத்தினன். 71

## அநுமன் ஒருமலையை எறிய அதனை இந்திரசித்துத் தூளாக்குதல்

2008. அக்க ணத்தநும னால காலமென
லாய தோர்வெகுளி யாயினன்
புக்க னைத்துலக முங்கு லுங்கநிமிர்
தோள்பு டைத்துருமு போலுரு
இக்க ணத்தவ னிறக்கு மென்பதொரு
குன்றெடுத்து மிசை யேவினன்
உக்க தக்கிரி சொரிந்த வாளிகளி
னூழிலாத சிறு பூழியாய்.

அ கணத்து - அப்போது, அநுமன் - அநுமன், ஆலகாலம் எனல் ஆயது ஓர் வெகுளி ஆயினன் - ஆலகால விடம் என்று கூறுமாறு எழுந்ததொரு (மிகவும் கடுமையான) சினத்தை மேற்கொண்டவனாய், புக்கு - (அங்குப்) புகுந்து, அனைத்து உலகமும் குலுங்க - எல்லா உலகமும் நடுங்கும்படி, நிமிர் தோள் புடைத்து - (தனது) உயர்ந்த புயங்களைத் தட்டி, உருமுபோல் உரு - இடி போன்று பொருந்தி, (பெருமுழக்கம் செய்து) 'இகணத்து அவன் இறக்கும் - இப்பொழுதே அந்த அரக்கன் மரிப்பன்' என்பது - என்று கண்டோர் கூறும்படி, ஒரு குன்று எடுத்து மிசை ஏவினன் - ஒப்பற்ற ஓர் மலையினைப் பெயர்த்தெடுத்து (அவ்வரக்கன்) மீது வீசினன் ; (அப்பொழுது) சொரிந்த வாளிகளின் அ கிரி ஊழ் இலாத சிறு பூழியாய் உக்கது - (இந்திரசித்து) பொழிந்த அம்புகளால் அம்மலை முறை பிறழ்ந்து சிறு துகளாகி உதிர்ந்துவிட்டது.

ஆலகாலம்: கடல் கடைந்தபோது அதனின்று எழுந்த பாம்பின் விடம்: 'அந்தக் காலத்தவ்வால காலத்துடன் பிறந்தோர்' (யுத்த. படைக் காட்சி: 14); 'ஆலகாலத்தினமிழ்தின் முன் பிறந்த போரரக்கர்' (யுத்த. படைக் காட்சி: 26); 'ஆலகாலந்திரண்டன்ன யாக்கையர்'. இஃது ஆலம் எனவும் குறுகி வழங்கும் (ஆரணிய. 694, 1149); 'ஆலத்தினலமிர்தாக்கிய கோன்' (திருக்கோவை, 27); ஆலாலம் என்றும் திரிந்து வழங்கும்: 'ஆலால மன்னுள்' (சுந்தர. 76); உரு: செய்யா என்னும் வாய்பாடு. கீழ்மேலாகவும் மேல் கீழாகவும் முறையின்றிக் கிடந்தமையின் 'ஊழிலாத' எனப் பட்டது.

பி - 1. ஆயவன், அன்மினுற், அன்னினுன்

2. குலுங்கவுயர்

3. இக்கணத்தினில்; இறுக்கும். 72

## இந்திரசித்துக்கும் அநுமனுக்கும் நடந்த வீரவுரை

2009. நில்ல டாசிறிது நில்ல டாவுனை
நினைந்து வந்தனன் முனைக்குநான்
வில்லெ டாமைநின தாண்மை பேசியுயி
ரோடு நின்றுவிளை யாடினுய்
கல்ல டாநெடு மரங்க ளோவரு
கருத்தி னேன்வலி கடப்பவோ
சொல்ல டாவென வியம்பி னுஇக
லரக்க னையவிவை சொல்லினுன்.

(அநுமன் எறிந்த பெரிய மலை தூளாக, அப்பொழுது, இகல் அரக்கன் - போர் வன்மையும் பகைமையும் உடைய அரக்கனான இந்திரசித்து, (அநுமனைப் பார்த்து), 'நில் அடா, சிறிது நில் அடா - நில் அடா சற்று நில்லடா; உனை நினைந்து முனைக்கு வந்தனன் - உன்னுடன் போர் புரிவது கருதி இந்த அமர்க்களத் துக்கு வந்தேன்; வில் எடாமை - நீ வில் கைக்கொள்ளாமலே, நினது ஆண்மை பேசி - உன்னுடைய வீரத்தைப் புகழ்ந்து கொண்டு, உயிரோடு நின்று விளையாடினுய் - உயிருடன் நின்று

விளையாடுகின்றனை ; வரு கருத்தினேன் - (உன்னுடன் பொருதற்கு வரும்) எண்ணம் உடையவன் ஆன என்னுடைய, வலி கடப்ப - எனது ஆற்றலை அடக்க வல்லன, கல் நெடுமரங்களோ - கற்களும் உயர்ந்த மரங்களும் தாமோ? அடா அடா சொல் - அடா அடா (நீ) சொல்வாயாக, 'என - என்று, இயம்பினுன் - என்று இகழ்வு புலப்படச் சொன்னுன்; ஐயன் இவை சொல்லினுன் - அநுமன் இவ்வார்த்தைகளைப் பகர்ந்தான்; அவற்றை அடுத்துவரும் இரண்டு கவிகளிற் காண்க. ஓ : வினு.

முனை - போர் முனை ; வில்லெடாமை - வில் எடாமல் : வில் வீரனுகிய தன்னுடன் விற்ருங்கிப் பொருவதே தகுதி; கல்லும் மரங்களும் கொண்டு பொருதல் தகுதியன்று என்பது அரக்கன் குறிப்பு : விளையாடினுய் : நிகழ்வு இறப்பில் வந்தது. இயல்பினுன் வந்த காலவழுவமைதி. இச்செய்யுள் வீரவாதத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

பி - ம். 1. நில்லெடா

3. கல்லெடா ; மரங்களோடிரு கரத்தினேன், மரங்களோ விருகரத்தினேன் ; கடக்குமோ, கடக்கவோ

4. சொல்லெடா : இது. 73

2010. வில்லெ டுக்கவுரி யார்கள் வெய்யசில
வீர ரிங்குமுளர் மெல்லியோய்
கல்லெ டுக்கவுரி யானு நின்றன
னதின்று நாளை யிடை காணலாம்
எல்லெ டுத்த படை யிந்தி ராதிய
ருனக்கிடைந் துயிர்கொ டேகுவார்
புல்லெ டுத்தவர்க ளல்லம் வேறுசில
போரெ டுத்தெதிர் புகுந்துளேம்.

'இங்கும் - எம் பக்கத்திலும், வில் எடுக்க உரியார்கள் வெய்ய சில வீரர் உளர் - வில் தாங்கிப் போர் புரியும் திறம் உள்ளவர்கள் ஆன கொடிய வீரர்கள் சிலர் இருக்கின்றனர் ; மெல்லியோய் - மெலிந்தவனே ! கல் எடுக்க உரியானும் நின்றனன் - கல் எடுத்துப் பொர வல்லவனும் நிற்கின்றுன்; அது இன்று நாளை இடை

காணலாம் - அங்ஙனம் இருத்தலை இரண்டொரு நாட்களிலேயே காணலாகும்; எல் எடுத்த படை இந்திராதியர் - ஒளி தங்கிய ஆயு தங்களை ஏந்திய இந்திரன் முதலான தேவர்கள், உனக்கு இடைந்து உயிர் கொடு ஏகுவார் - உனக்குத் தோற்று உயிர் தாங்கிச் செல் வார்கள்; (நாங்கள்), புல் எடுத்தவர்கள் அல்லம் - (அந்த இந்திராதி யர் ஒப்பப்), புல்லை வாயினுற் கௌவினவர்கள் அல்லோம்; வேறு சில போர் எடுத்து எதிர் புகுந்துளேம் - வேறு சில போர் ரகங் களைத் தொடங்கி எதிராக வந்துள்ளோம்.

போர்ப் பரம்பரை வேண்டும் என்பார் உரியார்கள் எனப் பட்டது. மெல்லியோய்: இகழ்ச்சி. 'இந்திராதி தேவர்களை வென் றேம் என்று நீ தருக்குகின்றனை; என் சார்பில் உள்ள வீரர் முன் நிற்பின் உன் வலியின்மை பெறப்படும்' என்றான் அநுமன். போரில் தோற்றவர் வாயினுற் புல்லைக் கௌவுதல் மரபு; கல் எடுக்க உரியானும் நின்றனன்; நீ வில் வீரர்க்குத் தோற்று மரிக்க, உனக்குக் கல் எடுத்தல் (பாஷாண ஸ்தாபனம்) ஆகிய சவச் சடங்கைப் புரிதற்குரிமையுள்ள வீடணன், இங்கு எம் தரப்பில் உள்ளான் என்றும், உனக்கு எதிராகக் கல்லெடுத்துப் பொரற் குரிய யானும் உள்ளேன்; என்னை யொத்த வீரரும் உள்ளார்கள் என்று இரு பொருள்பட மொழிந்தான் அநுமன். அல்லம்: தன்மைப் பன்மை வினைமுற்று.

பி - ம். 1. எடுக்கவும்; உரித்தெமையர்ச் சிலர், உரித்தெமைய சில; உரியார்க ளெம்மையர், உரியார்களைய சில; மெல்லியோம்,

2. உரியோமு நின்றனம்; காண்கலாம்.

3. எடுத்தபதி உனக்குடைந்து; ஏகினர், ஏகுநாட்.

4. வென்று சில; எடுத்திடை. 74

2011. என்னொ டேபொருதி யோவ தன்றெனி
னிலக்கு வப்பெயரி னெம்பிரான்
தன்னொ டேபொருதி யோசொ லுந்தைதலை
தள்ள நின்றதனி வள்ளலாம்
மன்னொ டேபொருதி யோவு ரைத்தது
மறுக்கி லேமென வழங்கினான்
பொன்னொ டேபொருவி னல்ல தோன்றொடு
பொதுப்ப டாவுயர் புயத்தினான்.

பொற்றெடே பொருவின் அல்லது ஒன்றெடு பொதுபடா உயர் புயத்தினன் - பொன் மயமான மேரு மலையுடன் நிகர்ப்ப தன்றிப் பிறிதொரு பொருளோடு பொதுத் தன்மை பொருந்த மாட்டாத (உவமையற்ற) உயர்ந்த தோள்களை யுடையவன் ஆன அநுமன், 'என்னெடே பொருதியோ - (நீ) என்னுடனே போர் புரிவாயோ? அது அன்று எனின் - அப்படியல்லாவிடின், இலக்குவன் பெயரின் எம்பிரான் தன்னெடே - இலக்குவன் என்னும் பெயரினன எமது தலைவனுடனே, பொருதியோ - போர் இயற்றுவாயோ? உந்தை தலை தள்ள நின்ற தனி வள்ளல் ஆம் - உனது தந்தையின் (இராவணனுடைய) தலைகளை அறுத்து வீழ்த்துவதற்காகப் போந்துள்ள, தனி வள்ளல் ஆம் - ஒப்பற்ற தன்மையன் ஆன மன்னெடே பொருதியோ - இராமபிரானுடனே போர் புரிவாயோ? சொல் : பகர்வாயாக ; உரைத்தது மறுக்கிலேம் - (நீ) எதைச் சொல்லினும் அதை மறுக்க மாட்டோம்'; என வழங்கினன் - என்று கூறினன்.

அநுமன் திரிக்கதரிசியாக எக்காலமும் உணர வல்லவன் ஆகலின் 'உந்தை தலை தள்ள நின்ற தனி வள்ளல்' என்று இராவண சங்காரத்திற்காக அவதரித்துள்ள இராமனைக் குறித்தான். உந்தை என்பது உன் தந்தை என்பதன் மரூஉ. ஈற்றடிக்கு ; (கிட்கிந்தா. 566) ; (ஆரணிய. 38, 1114) ; 'பொன்னெத்த மேனி புயலொத்த தடக்கையானை' (அயோத்தி. நகர்நீ ; 126) ; 'செம்பொற் பருவரையும் நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்' (பால. குலமுறை ; 22) ; உவமை அணியில் உபமான உபமேயங்கட்குப் பொதுத் தன்மை குறிப்பர் ; பொன் மலையன்றி வேறு எந்தப் பொருளிலும் இங்கு, அந்தப் பொதுத்தன்மை இல்லை எனப் பட்டது. பொருவுதல் : ஒத்தல்.

பி - ம். 1. பெயரேன்.

2. பொருதியோவுன்.

4. பொருவநன்றி வேறெரு பொருப்படா. பொருவிலன்றி.

2012. எங்கு நின்றன னிலக்கு வப்பெயரவ்
வேழை யெம்பியதி காயனும்
சிங்கம் வந்தவனை வென்று தன்னுயி
ரெனக்கு வைத்ததொர் சிறப்பினன்
அங்க வன்றனை மலைந்து கொன்றுமுனி
வாற வந்தனெ னதன்றியும்
உங்க டன்மையி னடங்கு மோவுல
கொடுக்கும் வெங்கணை தொடுப்பினே.

(இந்திரசித்து அநுமனை நோக்கி); 'எம்பி அதிகாயனும் சிங்கம் வந்தவனை - எனது தம்பியான அதிகாயன் என்னும் (போர் புரிய வந்த) சிங்கம் நிகர்த்தவனை, வென்று - முறியடித்து, தன் உயிர் எனக்கு வைத்தது ஓர் சிறப்பினன் - தனது உயிரை நான் வதைப்பதற்கென்று ஒதுக்கி வைத்துள்ளதொரு பெருமை யுடையவன் ஆன, அவ்விலக்குவன் பெயர் ஏழை - அந்த இலக்குவன் என்னும பெயர் பூண்ட அந்த அறிவிலி, எங்கு நின்றனன் - எங்கே இருக்கின்றானோ? அங்கு - அவ்விடத்திலேயே, அவன் தனை மலைந்து - அவனை எதிர்த்து, கொன்று - வதைத்து, முனிவு ஆற வந்தனென் - சினம் தணிதற்காகவே (நான்) வந்துள்ளேன்; அதன்றியும் - அஃது அல்லாமலும், உலகு ஒடுக்கும் - உலகனைத்தையும் ஒடுங்கச் செய்யும். வெம்கணை - கொடிய அம்புகளை தொடுப்பின் - தொடுத்தால், உங்கள் தன்மையின் அடங்குமோ - உங்களுடைய வீரத் தன்மையில் அவை அடங்கி நிற்குமோ?

அதிகாயனைக் கொன்றதற்குப் பழிக்குப்பழி வாங்குதல் வேண்டும் என்று இந்திரசித்து கொண்ட கருத்து இச் செய்யுட்கண் காணலாம். அதிகாயனைக் கொன்று தன்னுயிர்க்கே கேடு தேடிக்கொண்டான் என்னும் கருத்தால் இலக்குவனை ஏழை என்றான். சிறப்பினன்: பிற குறிப்பு; 76, 77. இந்திரசித்தின் வீரவாதம். அநுமனை நோக்கி ஏனையோரையும் உளப்படுத்திக் கூறியது.

பி - ம். 1. பெயரன்.
2. வந்ததனை.
3. அன்றியே.
4. தொடுக்கினே, தொடுக்கிலே.

2013. ஆரு மென்படைஞ ரெய்த லின்றியய
லேக யானுமிகல் வில்லுமோர்
தேரி னின்றுமை யடங்க லுஞ்சிரம்
துணிப்பெனிது திண்ணமால்
வாரு முங்களுடன் வானு ளோர்களையு
மன்னு ளோரையும் வரச்சொலும்
போரு மின்றொரு பகற்க ணேபொருது
வெல்வெ னென்றல்லது போகிலேன்.

'என் படைஞர் யாரும் - எனது சேனை வீரர் எவரும், எய்தல் இன்றி - (எனக்குதவியாக) வாராமல், அயல் ஏக (விலகி) அப்பாற் சென்றிட, யானும் - (தனிப்பட்ட) யானும், இகல் வில்லும் - (எனது) பேராற்றலும வில்லும், ஓர் தேரின் நின்று - (அந்த) ஒப்பற்ற தேரில் நின்றுகொண்டு, உமை அடங்கலும் சிரம் துணிப்பென் - உங்கள் அனைவரையும் தலையறுத்து விடுவேன்; இது திண்ணம் - இது உறுதி; வாரும்-போர் புரிய வாருங்கள்; உங்களுடன் - உங்களோடு, வான் உளோர்களையும் - விண்ணுலகத்துள்ளவர்களையும், வர சொலும் - போர் இயற்றுமாறு சொல்லுங்கள்; இன்று ஒரு பகல் கணே - இன்றைய ஓர் பகற் பொழுதிற்குள்ளாகவே, பொருது - யுத்தமும் செய்து, வெல்வேன் - வெற்றியும் பெறுவேன்; வென்றலது போகிலேன் - வெற்றி பெற்றல்லது களத்தினின்றும் பெயரேன்'. ஆல்: அசை.

என் படைஞர் ஆரும் என மாற்றுக. யானும் வில்லும் நின்று துணிப்பென் - சிறப்புப் பற்றி வந்த பால் வழுவமைதி.

பி - ம். 1. யாரும்; பகைஞர்; அன்றி, ஒரு வில்லும்.

2. துணிப்பனிவை.

3. உங்களோடு.

4. பகற்கணே.

### இந்திரசித்து அம்பெய்ய, அநுமன் மலையை யேந்திக்கொண்டு அவனெதிரில் ஒன்று கூறத்தொடங்குதல்

2014. என்று வெம்பகழி யேழு நூறுமிரு
நூறும் வெஞ்சிலைகொ டேவினன்
குன்று நின்றனைய வீர மாருதிதன்
மேனி மேலவை குழுக்களாய்ச்
சென்று சென்றுருவ லோடும் வாளெயிறு
தின்று சீறியொரு சேமவன்
குன்று நின்றது பறித்தெ டுத்தவனை
யெய்தி நொய்தினிது கூறினன்.

என்று - என்று பகர்ந்து, (இந்திரசித்து) வெம்சிலைகொடு - கொடிய வில்லினை யேந்தி, வெம் - கொடிய, ஏழுநூறும் இரு நூறும்பகழி-தொள்ளாயிரம் அம்புகளை, ஏவினன் - அநுமன் மீது விடுத்தான்; அவை - அந்தச் சரங்கள், தன் மேனிமேல் - தனது உடலின் மீது, குழுக்களாய் - கூட்டமாக, சென்று சென்று உருவலோடும் - விடாது சென்று ஊடுருவிய அளவில், குன்று நின்றனைய - மலை நின்றாற் போன்ற; வீரம் மாருதி - வீரம் செறிந்த அநுமன், வாள் எயிறு தின்று - தனது ஒளி தங்கிய பற்களைக் கடித்துக்கொண்டு, சீறி - வெகுண்டு, நின்றது - அங்கே நின்றதாகிய சேமமவன் குன்று - தனக்குப் பாதுகாப்பளிக்கும் என்று கருதற்கு இடம் ஆன ஒரு மலையினை, பறித்து எடுத்து - பெயர்த்து உயர்த்திக் கொண்டு, அவனை எய்தி - அந்த இந்திர சித்தினை அணுகி, நொய்தின் இது கூறினன் - இலேசாகச் சில சொற்களைப் பகர்ந்தான். இதனை அடுத்த செய்யுட்கண் காண்க.

சேம வில் - தக்க சமயத்தில் உதவுவதற்காக வைக்கப்பட்டிருந்த வில். நின்றது அனைய என்பது விகாரப்பட்டு நின்றனைய என நின்றது; சீறுதலும், வாளெயிறு தின்றலும், சினத்தின் மெய்ப்பாடுகள்; இப்படலம் 61 முதல் 76 வரை உள்ள செய்யுட் சந்தத்துடன் வில்லிபாரதம்; இராசசூயச் சருக்கம்;

42 - 65 வரையுள்ள செய்யுட் சந்தத்தை ஒப்பு நோக்குக. எய்திய நொய்தின் - எதுகை நயம் காண்க.

பி - ம். 1. எழுநூறுந் எழுநூறும் ; சிலையினையினன்.
3. நின்று நின்றதொரு சேவகன்.
4. பிடிந்தெடுத்து : ஐயனிவை, நொய்தினிவை. 78

## அநுமன் கூறிய வீரவாதம்

2015. தும்பி யென்றுலகி னுள்ள யாவை யவை
.யேவை யுந்தொகுபு துள்ளுதாள்
வெம்பு வெஞ்சின மடங்க லொன்றின்வலி
நின்னை நின்றெளிதின் வெல்லுமோ
நம்பி தம்பியென தெம்பி ரான்வரு
துணைத்த ரிக்கிலை நலித்தியேல்
அம்பின் முந்தியுன தாவி யுண்ணுமிது
காவ டாசிலைவ லாண்மையால்.

'உலகின் - உலகத்தில், தும்பி என்று உள்ள யானை - என்று சொல்லப்பட்டுள்ளன, யாவை - எவை, அவை ஏவையும் - அவை யனைத்தும், தொகுபு - ஒன்ருகக் கூடினாலும், துள்ளுதாள் - துள்ளிப் பாயும் அடிகளையும், வெம்பு வெம்சினம் - புழுங்குகின்ற கொடிய வெகுளியினையுமுடைய, மடங்கல் ஒன்றின் வலி-ஒரு சிங்கத்தின் திறலினை, நின்று எளிதின் வெல்லுமோ - (அதற்கு முன்) நின்று எளிதாக வெல்லுமோ! நம்பிதம்பி - இராமபிரானுடைய தம்பியும், எனது தம்பிரான் - எங்கள் தலைவனுமாகிய இலக்குவன், வருதுணை - வரும் அளவும், தரிக்கிலை நலித்தியேல் - பொறுக்காமல் (என்னைத்) துன்புறுத்துவாயாகில், (என்னுடன் போர் புரிவாயாகில்), அம்பின முந்தி - உனது அம்பு (நான் வீசும் மலையினைப் பிளக்க) வருவதன் முன்பு, இது - இம் மலை, உனது ஆவி உண்ணும் - உன் உயிரைப் பருகி விடும் ; வல்சிலை ஆண்மையால் - உன்னுடைய வலிய வில்லின் ஆற்றலால், அடா - அடா, (இம் மலை உன் உயிரை சுழிக்கவிட்டாது), கர்வடா - பாதுகாத்துக் கொள்வாயாக' (என்று அநுமன் ஒரு மலையை வீசினான்). ஓ: எதிர்மறை.

(தும்பி - யானை ; ‘ தும்பியங் குழாத்திற் சுற்றும் ’ (அயோத்தி. கங்கை. 49) ; தொகுபு - செப்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம், மடங்கல் - பிடரி மயிர் மடங்கப் பெற்றிருப்பது என்று ஆண் சிங்கத்திற்குக் காரணக் குறி. நம்பி - ஆண்பாற் சிறப்புப் பெயர் ; ‘ நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான் ’ (அயோத்தி. குகப். 30). இது - இம்மலை பிறிதுமொழிதல் அணி. ஆவி உண்ணுதல் ; மரபு வழுவமைதி. ‘ அங்கவன்றனை வளைந்து கொன்று முனிவாற வந்தனன் ’ என நீ கூறியதனால் நான் சிறிது தாமதித்தேன். ஆயினும் நீ தாழ்க்காமல் என்மீது அம்பினை ஏவியதால். உனது உயிரை ஒழிக்குமாறு இம் மலையினை வீசினேன் ’ என்றான் அநுமன். முதல் இரண்டடிகட்கு ‘ மல்லலா ளியைப்பல வளைந்து கொள்ளினும், கொல்லலா யிருக்குமோ குஞ்ச ரங்களால் ’ (வில்லிபா. நிரைமீட்சி. 84).

பி - ம். 1. எவை யாவையும், அவையாயிரத் ; தொகுதியாயினும், தொகுதியுள்ளதான், தொகுதியுள்ளதார்.

2. வெம்பியஞ்சின ; ஒன்றை, வெகு நாய்கள் மற்றதனை, ஒன்றை வலிபுடனுயு மற்றவைகள் ; வெல்லுமேல்.

3. என தம்பிரான் ; தருக்கிலை ; நடத்தியேல், சலித்தியேல்.

4. யுன்பதிது ; காவெடா. 79

## அநுமா னெறிந்த மலை இந்திரசித்தின் மார்பிற் பட்டுப் பொடியாதலும் அவன் அநுமன்மீது பல அம்புகள் செலுத்தலும்

2016. செருப்ப யிற்றிய தடக்கை யாளிசெல
 விட்ட குன்றுதிசை யானையின்
மருப்பை யுற்றதிர டோளி ராவணன்
 மகன்றன் மார்பினுயர் வச்சிரப்
பொருப்பை யுற்றதொர் பொருப்பெனக்கடி
 தொடிந்தி டிந்துதிசை போயதால்
நெருப்பை யுற்றதொ ரிரும்பு கூடமுற
 நீறு பட்டது நிகர்த்ததால்.

செரு பயிற்றிய - போரிற் பழக்கியுள்ள, தடகை யாளி - பெரிய கரங்களையுடைய யாளி ஒத்த அநுமன், செலவிட்ட குன்று-இந்திரசித்தின்மீது செல்லுமாறு எறிந்த மலையானது, திசை யானையின் - திக்கு யானைகளின், மருப்பை உற்ற - தந்தங்கள் பதியப்பெற்ற, திரள்தோள் - திரண்ட தோள்களையுடைய, இராவணன் மகன் தன் மார்பின் - இராவணன் புதல்வனை இந்திரசித்தின் மார்பில், உயர் வச்சிரம் பொருப்பை - உயர்ந்த வயிரமயமானதொரு மலை மீது, உற்றது ஓர் பொருப்பு என - தாக்கியதொரு மலை போன்று, கடிது ஒடிந்து - விரைவிலே பிளவுண்டு, இடிந்து-இடிபட்டு(த் தூளாகித்), திசை போயது - திக்குகளில் சிதறி நின்றது; (அஃதல்லாமலும்), நெருப்பை உற்றது ஓர் இரும்பு - நெருப்பிற் பழுக்கக் காய்ந்த ஓர் இரும்பு, கூடம்உற நீறுபட்டதும் நிகர்த்தது-சம்மட்டியினால் அடிக்கப்பட்ட அளவில் பொடியாய்ப் பறந்ததையும் ஒத்திருந்தது. ஆல் - அசை.

பயிற்றிய - பயிற்றப்பட்ட, திசை யானையின் மருப்பையுற்ற திரள்தோள் இராவணன்; ஆரணிய. 258, 323, 328, 557, 643, 646 752, 840, 875; 'திசை யானையின் ஒளிர் மருப்புற்றிற்ற, பழந் தழும்பு' (சுந்தர. 303); 'திசையானை மதந்துதைந்த வண்டும் சுற்றி மாடுழுத நறுங்கலவை வயக்களிற்றின் சிந்துரத்தை மாறு கொள்ள; (சுந்தர. 312). 'வச்சிரப் பொருப்பை யுற்றதோர் பொருப் பென' இல்பொருள் உவமை; இந்திரசித்தின் மார்பு சம்மட்டி, காய்ச்சிய இரும்பு அநுமன் வீசிய மலை. கூடம் - சம்மட்டி: 'கொல்லுலைக் கூடத்தினால்' (நீதிநெறி. 14).

பி - ம். 2. மருப்புகுத்த ; மார்பினெடு, மார்பினிடை

4. கூடமென ; நிகர்த்தவால். 80

2017. விலங்கன் மேல்வர விலங்க வீசிய
விலங்க னீறுபடு வேலையிற்
சலங்கை மேனிமிர வெஞ்சி னந்திருகி
வஞ்சன் மேனிமிர் தருக்கினன்
வலங்கொள் பேருலக மேரு வோடென
மறிக்கு மாருதிதன் வாசநா
றலங்கன் மார்பினெடு தோளி னுடுருவ
வாயி ரஞ்சர மழுத்தினன்.

விலங்கல் மேல் - மலை போன்ற தனது மார்பின்மீது, வர - தாக்கும்படி, விலங்க - (சேய்மையில்) நின்ற அநுமன், வீசிய விலங்கல் - எறிந்த மலை, நீறுபடுவேலையில் - தூளாகிச் சிதறிய அளவில், வஞ்சன் - வஞ்சனைக் குணம் உள்ள அரக்கன், சலம் கைமேல் நிமிர - (தீராத) கோபம் தன்னிடம் மென்மேல் மிக, வெம்சினம் - கொடிய கோபத்தினால், திருகி - மாறுபட்டு, நிமிர் தருக்கினன் - வளர்ந்த செருக்குக் கொண்டவனாய், வலம்கொள் - வன்மை வாய்ந்த, பேர் உலகம் - பெரிய உலகத்தையும், மேருவோடு என - மேருகிரியையும், மறிக்கும் - பெயர்த்தெடுக்கவல்ல, மாருதிதன் - அநுமனுடைய, வாசம் நாறு அலங்கல் - மணம் கமழ்கின்ற மாலையை அணிந்த, மார்பினொடு தோளின் - மார்பிலும் தோள்களிலும் ஊடுருவ - ஊடுருவிப் பாயும்படி, ஆயிரம் சரம் அழுத்தினன் - ஆயிரக்கணக்கான அம்புகளை விடுத்தான்.

விலங்கல் - மலை; பூமிக்குக் குறுக்கே உயர்வது என்பது காரணக்குறி. விலங்கல் விலங்க விலங்க : சொற்பொருட்பின் வருநிலையணி. வாசம் நாறு அலங்கல் : இஃது அநுமன் தரித்திருந்த மாலை; இந்திரனால் இவனுக்கு அளிக்கப்பட்டது. அலங்கல் : போர்க்குரிய தும்பை மாலையெனினுமாம். மேருவோடு என : என்பதில். என : அசை. நாறுதல் : தற்காலத்து நறுமணம் கமழ்தல் என்ற பொருளில் வழங்குதல் இல்லை. சங்ககாலத்தில் நறுமண நாற்றத்தையே குறித்து நின்றது. நாளடைவில் சொற்கள் இழிபொருட் பேறடைதற்கு இஃது ஓர் உதாரணம் என்ப. ஆயிரம் சரம் : பல என்னும் பொருளது ; 'ஒரு நாள் எழுநாள் போற் செல்லும்' (குறள். 1269) என்ற இடத்து எழுநாள் பல நாள் எனப் படுதல் போன்று.

பா - ம். 1. விலங்கல் விசிய, விலங்கி மற்றது ; விலங்கி நின்றுபடுப், விலங்கலின்றுபடும் ; ஏல்வையிற்

2. கலங்க ; மேனிகர் தருக்கினல்

3. உலக மேருவொவென மறிக்கும் ; உலகை மேருவோடுடன்

4. வாசமெல் ; தோளூ மூடுருவ, தோளினூடுருவ,

## அநுமனுக்குத் துணையாக நீலன் வருதல்

2018. ஒன்று போல்வனவொ ராயி ரம்பகழி
யூடு போயுருவ வாடகக்
குன்று கால்குடைய மேலு யர்ந்திடை
குலுங்கு கின்றனைய கொள்கையான்
மன்ற னறுதட மேனி மேலுதிர
வாரி சோரவரு மாருதி
நின்று தேறுமள வின்கண் வெங்கண்விழி
நீலன் வந்திடை நெருக்கினன்.

(இந்திரசித்தினுடைய) - ஒன்று போல்வன ஓர் ஆயிரம் பகழி - ஒன்றையொன்று நிகர்த்தனவான ஒப்பற்ற ஆயிரம் வாளிகள், ஊடு போய் உருவ - (தனது உடற்கண்) துளைத்துச் செல்ல, ஆடகம் குன்று - பொன் மயமான மேருமலை, கால் குடைய - பெருங் காற்றுத் தாக்கி வருத்த, மேல் உயர்ந்து - வெளிப்பார்வைக்கு மட்டும் உயர்ந்து தோன்றி, இடை குலுங்குகின்றனைய கொள்கையான் - உள்ளிடம் நடுங்கும் தன்மையுடையனாகி, மன்றல் நாறு தட மேனிமேல் - (புனைந்துள்ள மாலையினால்), நறுமணம் கமழப் பெற்ற பெரிய உடல்மீது, உதிரம் வாரி சோர வரும் - இரத்த வெள்ளம் பெருகப்பெற்ற, மாருதி - அநுமன், (குன்றும் புரியமாட்டாது), நின்று தேறும் அளவின் கண் - நின்று தெளிவதற்குள்ளாக, வெம்கண் விழிநீலன்வந்து இடை நெருக்கினன் - கொடிய கண்களை யுடைய நீலன் வந்து (அரக்கனை) அடர்க்கப் புகுந்தான்.

ஆடகக்குன்று - மேருமலை. ஆடகம் - பொன்; (ஆரணிய. 414, 480); 'ஆடக மால் வரை யன்னது தன்னை' (பால. கார்முக. 34); கால் குடைதல் - காற்றால் துளைக்கப்படுதல்; குலுங்குதல்; 'கஞ்சமும் கலங்குமாகில் நெஞ்சமும் கலங்குமே' (திருச்செந்திற்கலம்பகம்). மன்றல் - மணம்; இச்சொல் தமிழில் ஓர் விநோதச்சொல்: மணம் திருமணத்தையும் நறுமணத்தையும் குறித்தல்போன்று, மன்றல் என்ற சொல்லும் இரண்டினையும் குறிக்கும் 'மன்றல மாலை செற்றி'

(சீவக. 2289); 'மாரி சோர வருமாருதி' பிரயோகம் காண்க. நீலன் : கிட்கிந்தா. 696 ; குறிப்புக் காண்க.

பா-ம். 1. வாட்டடக்

2. காலெறிய மேனிமிழ்ந்திடை, கால் குலைய மேலுலைந்திடை, குலுங்க நின்றலைய

3. வயமாருதி

4. அடல் நீலன். 82

## நீலன் ஒரு மலையை இந்திரசித்தின்மேல் எறிய, அதனைத் தனது பாணங்களால் அவன் அழித்தல்

2019. நீல னின்றதொரு நீல மால்வரை
நெடுந்த டக்கையி னிடந்துநேர்
மேலெ ழுந்தெரி விசும்பு செல்வதொரு
வெம்மை யோடுவர வீசலுஞ்
சூல மந்தக னெறிந்த தன்னது
துணிந்து சிந்தவிடை சொல்லுறுங்
கால மொன்றுமறி யாம லம்புகொடு
கல்லி னெடிய வில்லினன்.

நீலன் - நீலன் என்பவன், நின்றது ஒரு நீலம் மால்வரை - அருகில் நின்ற நீலநிறமுள்ள ஒரு பெரிய மலையை, நெடு தடகையின் இடந்து - நீண்ட பெரிய கரங்களால் பெயர்த்து, எரிமேல் எழுந்து விசும்பு செல்வது ஒரு வெம்மையோடு - அக்கினியானது மேலே கிளம்பி விண்ணிற் செல்வது போன்ற ஒப்பற்ற கொடுமையுடன், நேர்வர வீசலும் - (அரக்கன்மீது) நேரே செல்ல வீசியவுடன், நெடிய வில்லினன் - நீண்ட வில்லை ஏந்திய இந்திரசித்து, அந்தகன் எறிந்தது - யமன் வீசிய, சூலம் அன்னது - சூலப்படை போன்ற அம்மலை, துணிந்து சிந்த - துண்டுபட்டுச் சிதறும்படி, இடை சொல்லுறும் காலம் - இடைநடுவில் (எண்ணிச்) சொல்லக்கூடிய காலம், ஒன்றும் அறியாமல் - சிறிதும் தெரியாதவண்ணம், (அதே கணத்தில்) அம்பு கொடு கல்லினன் - (தனது) வாளிகளால் பெயர்த்தழித்தான்.

நீலன் மலை வீசியதும் அரக்கன் அம்பு வீசியதும் உடனிகழ்ச்சியென்றே கொள்ளுமாறிருந்தன என்க. நீலன் நீலமால் வரை, நெடுந் தடக்கையினிடந்து, கல்லினுநெடிய வில்லினன் என்ற இடங்களில் எதுகை நயம் காண்க. அந்தகன் எறிந்தது சூலம் அன்னது என அந்வயிக்க. அந்தகன் - யமன்; 'அல்லாத மூவரும் அந்தகனும்'; (ஆரணிய. 902).

பி - ம். 1. இடைந்து

2. மேலெழுந்தரி; செல

3. எறிந்தனன்னது; சொல்லினும், செல்லுறும்

4 வலிய வில்லினன். 83

## நீலன் இந்திரசித்தின் வாளிகளினால் நடுக்கமடைதல்

2020. ஊக மெங்குமுயி ரோடு நின்றனவு
மோட வானவர்க ளுள்ளமுங்
மோக மெங்குமுள வாக மேருவினு
மும்ம டங்கு வலி திண்மைசால்
ஆக மெங்கும்வெளி யாக வெங்குருதி
யாறு பாயவன லஞ்சுவாய்
நாக வெங்கணகு வாளி பாய்தொறு
நடுங்கி னான்மலை பிடுங்கினான்.

(உயிர் தீர்ந்தன ஒழிய), உயிரோடு நின்றன ஊகமும் எங்கும் ஓட - உயிர் தரிக்கப்பெற்று நின்ற குரங்கனைத்தும் எல்லாப் பக்கங்களிலும் சிதறியோடுமாறும், வானவர்கள் உள்ளமும் - தேவர்களுடைய மனத்திலும், எங்கும்-மற்றையோர் மனத்திலும், மோகம் உளவாக-மயக்கம் நிகழும்படியும், மேருவினும் மும்மடங்கு - மகா மேருமலையைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகமான,வலி திண்மை சால் - மிக்க உறுதி நிறைந்த, ஆகம் எங்கும் - (நீலனுடைய) உடல் முற்றிலும் (துளைபட்டு), வெளியாக - வெட்ட வெளியாகவும், வெம் குருதி ஆறு பாய - கொடிய உதிர வெள்ளம் பெருகவும், நகுவாய் - கூர்நுனியுடையனவும், நாகம் வெம்கண் - பாம்பின் கொடுமை ஒளிர்வனவுமான, அனல் அஞ்சும் வாய் - தீயும் அஞ்சுமாறுள்ள

(அரக்கனுடைய) வாளி - அம்புகள், பாய்தொறும் - தாவிவருந் தோறும். மலை பிடுங்கினன் - மலையைப் பெயர்த்து எறிந்தவனை (அந்த நீலன்), நடுங்கினன் - நடுக்கம் கொண்டான்.

இந்திரசித்தின் போர்த்திறம் சித்திரிக்கப்பட்டது. ஊகம் - குரங்கு; 'ஊகங்களினயகர்' (கிட்கிந்தா. 276). மோகம் - மயக்கம். 'காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்பன காண்க. மூன்றும் அடியில் ஆறு, அஞ்சு என்ற எண்ணலங் காரம் காண்க.

பி - ம். 1. உயிரோட

2. மோக வெங்கடலின் விழ்க; மும்மடங்கு முநிர், நிமிர்; தன்மை யான்; திண்மையான்

4. வெங்கணைகள் மாரி. 64

## அங்கதன் மலைகளையெறிய, இந்திரசித்து அவைகளை அம்புகளாற் பொடியாக்குதல்

2021. மேரு மேருவென வல்ல வல்லவென
வேரி னேடுநெடு வெற்பெலாம்
மார்பின் மேலுமுயர் தோளின் மேலும்வர
வாலி காதலன் வழங்கினன்
சேரு மேயவை தனுக்கை நீற்கவெதிர்
செல்லு மேகடிது செல்லினும்
பேரு மேகொடிய வாளி யான்முறி
பொறுக்கொண வகை நுறுக்கினன்.

மேரு மேரு என - இது மேருமலையே மேரு மலையே என்று (சிலர்) சொல்லுமாறும், அல்ல அல்ல என - (வேறு சிலர்) மேரு வன்று மேருவன்று என்று சொல்லுமாறும், நெடுவெற்பு எலாம் - பெரிய மலைகள் அனைத்தையும், வேரினேடு - வேருடன் அகழ்ந் தெடுத்து, மார்பின்மேலும் உயர் தோளின்மேலும் - (அரக்கனுடைய) மார்பின்மீதும் உயர்ந்த தோளின்மீதும், வர - செல்லுமாறு, வாலி காதலன் வழங்கினன் - வாலியின் அன்புக்குரிய புதல்வனை அங்க

தன் மிகுதியாகப் பொழிந்தான்; அவை தனுவகை நிற்க சேருமே - அம்மலைகள் (இந்திரசித்தின்) கையில் வில் இருக்கையிலே, அவன் உடலின் சென்று தாக்குமோ? எதிர் செல்லுமே - நேராகத்தான் சென்றிடுமோ? கடிது செல்லினும் - அங்ஙனம் ஒருக்கால் விரைந்து சென்றாலும், பேருமே - (அவனுடைய அம்புக்கு) இலக்காகாமல், ஒழியுமோ? கொடிய வாளியான் முன் பொறுக்கலா வகை நூறுக்கினான் - தீய அம்புகளால், பொருக்கவும் முடியாதபடி (தூள் தூளாகுமாறு) உடைத்தெறிந்தான். ஏகாரங்கள் எதிர்மறை.

காதலன் - புதல்வன் 'மருத்தின் காதலன்' (யுத்த. வேலேற்ற. 40). முறி - துண்டு; 'சேருமே யவைதனுக்கை நிற்க வெதிர் செல்லுமே கடிது செல்லினும், பேருமே' இவ்வடிகள் கவிக்கூற்று.

பி - ம். 1. வெற்பன

2. மாரின்; மேலும்உற

3. கடிய; பொறுக்கலாவகை; அவை. 85

## இந்திரசித்தின் அம்புகளினுல் அங்கதன் சோர்ந்து விழுதல்

2022. நெற்றி மேலுமுயர் தோளின் மேலுநெடு
மார்பின் மேலுநிமிர் தாளினும்
புற்றி னூடுநுழை நாக மன்னபுகை
வேக வாளிகள் புகப்புகத்
தெற்றி வாளெயிறு தின்று கைத்துணை
பிசைந்து கண்களெரி தீயுக
வற்றி யோடுதிர வாரி சோர்வுற
மயங்கி னுவில முயங்கினுன்.

நெற்றி மேலும் - (அங்கதனுடைய) நெற்றியிலும், உயர் தோளின் மேலும் - உயர்ந்த தோளிலும், நெடு மார்பின்மேலும் - அகன்ற மார்பிலும், நிமிர் தாளினும் - நீண்ட கால்களிலும், புற்றின் ஊடு நுழை நாகம் அன்ன - புற்றினுள்ளே புகுகின்ற பாம்புகள் ஒத்தனவாய், புகை வேகம் - புகைபோன்ற (தீவிரமான) விசையினை யுடைய, வாளிகள் - (இந்திரசித்தின்) சரங்கள், புகபுக - பாயப்பாய, (அங்கதன்) தெற்றி - தடுமாற்றமுற்று, வாள் எயிறு தின்று - ஒளியுள்ள பற்களைக் கடித்து மென்று, (செய்வதறியாது) துணை கை

பிசைந்து - தன் இரண்டு கரங்களையும் பிசைந்துகொண்டு, கண்கள் எரி தீயுக - விழிகளினின்று எரிகின்ற தீப்பொறி சிந்த, வற்றி - சரீரம் உலர்ந்து, ஓடு உதிரம் வாரி-(தனது உடலினின்று) பெருகும் இரத்தப்பெருக்கு, சோர்வுற - இழிந்தவண்ணம் இருக்க, மயங்கினான் - மயக்கமுற்றவனாய், நிலம் முயங்கினான் - நிலத்தைத் தழுவுவது போன்று விழ்ந்தான்.

புற்றினூடு நுழை நாகம் வாளி நேராகச் சென்றதற்குவமை. தெற்றுதல்: கடித்தல்; 'தெற்றின ரெயிறுகள் திருகினார்', 'தெற்றிய பாதச்சிலம்பு' (ஆரணிய. 465, 1073); தெற்றுதல், எயிறு தின்றல், என்ற இவை வெகுளியின் மெய்ப்பாடுகள். கை பிசைதல்: செயலற்ற நிலையில் நிகழ்வது. 'காதலுடன் கேட்டமுது கை பிசைய' (திருக்காளத்தியுலா).

பி - ம். 4. வற்றினோடு, வற்றியூடு, உற்றிலாது; நிலே. 86

## தன்பக்கத்துச் சேனை பலபடியாக அழிந்தமை கண்ட இலக்குவன் வீடணனை நோக்கி ஒன்று உரைத்தல்

2023 மற்றை வீரர்கள்தம் மார்பின் மேலுமுயர்
தோளின் மேலுமழை மாரிபோல்
கொற்ற வெங்கணை யுலக்க வெய்தவை
குளிப்ப நின்றுடல் குலுங்கினார்
இற்ற விந்தன பெரும்ப தாதியுயி
ருள்ள வெங்கணு மிரிந்தவப்
பெற்றி கண்டிளைய வள்ள லொள்ளெரி
பிறந்த கண்ணனிவை பேசினான்.

மற்றை வீரர்கள் - (அநுமன் நீலன் அங்கதன் நீங்கலாக) வேறு பல வீரர்களும், தம் மார்பின் மேலும் உயர் தோளின் மேலும் - தங்களுடைய மார்பிலும் உயர்ந்த தோள்களிலும், மழை மாரி போல் உலக்க - மழை வீழ்ச்சிபோன்று அழியுமாறு, எய்தவை கொற்றம் வெம் கணை-ஏவப்பட்டனவாகிய வெற்றிகொண்ட கொடிய அம்புகள், குளிப்ப - உள்ளே மூழ்க, நின்று உடல் குலுங்கினார் -

நின்ற நிலையிலேயே உடல் நடுங்கினர்கள்; பெருபதாதி - பெரிய காலாட்படையான வாநரங்கள், இற்று அவிந்தன - இறந்து பட்டன; உயிர் உள்ள - உயிர் தப்பினவைகளோ, எங்கணும் இரிந்த - எல்லாப் பக்கங்களிலும் சிதறின; அ பெற்றி கண்டு - அந்தத் தன்மையைக் கண்ணுற்று, இளைய வள்ளல் - இலக்குவன், ஒள் எரி பிறந்த கண்ணன் - ஒள்ளிய தீப்பொறி தோன்றப்பெற்ற விழிகளை யுடையவனாய், இவை பேசினன் - (வீடணனை நோக்கி) இவற்றைக் கூறினன். இவற்றை அடுத்த கவியிற் காண்க.

உலக்க - அழிய; 'உலக்கவின் னுயிர்குடித் தொல்லை மீள்குவல்' (கிட்கிந்தா. 249). பதாதி: வடசொல்; காலாட்படை.

பி - ம். 1. மற்று, மற்ற.
2. வன்கணை; உலக்க வெய்தன, இலக்கு மெய்தவை.
3. அவிந்தது; உள்ளது; இரிந்ததப், உயர்ந்தவப்.
4. ஒள்ளரி; பேசுவான். 87

## வேறு

2024. பிழைந்தது கொள்கை போதப்
பெரும்படைத் தலைவர் யாரும்
உழைத்தனர் குருதி வெள்ளத்
துலந்தது முலப்பிற் றன்றே
அழைத்திவன் தன்னை யானே
யாருயிர் கொளப்ப டாதே
இழைந்தது பழுதே யன்றோ
வீடண வென்னச் சொன்னன்.

(இலக்குவன் வீடணனை நோக்கி) 'வீடண - விபீஷணா! கொள்கை போத பிழைத்தது - (நாம் கொண்ட) கோட்பாடு பெரிதும் தவறி விட்டது; (எவ்வாறெனில்), பெரு படை தலைவர் யாரும் - நமது பெரிய சேனைத் தலைவர் அனைவரும், குருதி வெள்ளத்து உழைத்தனர் - உதிரப்பெருக்கில் சிக்கி உழன்றனர்; உலந்ததும் உலப்பிற்று அன்று - இறந்துபட்ட (நம்) சேனையும் எண்ணிக்கையிற் குறைந்ததன்று; இவன் தனனை அழைத்து - இந்த இந்திரசித்தை(ப் போருக்கு) விளித்து, யானே ஆர் உயிர்

கொளப்படாதே - நானே (இவன்) அருமையான உயிரை வாங்கி யிருக்கக்கூடாதா? (அங்ஙனம் செய்யாமல்), இழைத்தது - (இவ்வாறு) புரிந்தது (நமது படைத்தலைவர்களையும் இவனோடும் போர் புரிய) விடுத்தது, பழுதே அன்றோ - வீண்செயல் அல்லவோ?" என்ன சொன்னான் - என்று மொழிந்தான். படாதே, ஏ - வினா. பழுதே, ஏ - அசை.

கொள்கை - இலக்குவன் தானே பொருதற்குச் செல்லாமல் ஏனையோரை விடுத்தது. போத - மிக. 'போதத் தன்செவித் தொளையிரு கையினாற் பொத்தி' (யுத்த. 151); உழைத்தல் - வருந்துதல்; 'வலையிற்பட் டுழைக்கின்றேற்கு' (திருமாலை. 36); 'பழுது பயமின்றே' (தொல். சொல். 324).

பி - ம். 1. போகப், போயப்.

2. உழைத்ததுங்; உலைந்ததுங்.

3. கோட்படாதே.

4. பிழைபோ, என்றோ; விடலு. 88

### வீடணன் இலக்குவனது வார்த்தையை ஏற்றல்

2025. ஐயவீ தன்ன தேயா லாயிர கோடித் தேவர்
எய்தின ரெய்தி னரே யீடுபட் டிரிந்த தல்லால்
செய்தில ரிவனை யொன்றும் நீயிது தீர்ப்பி னல்லால்
உய்திற முண்டோ வேறிவ் வுலகினுக் குயிரோ டென்றான்.

'ஐய - தலைவனே! ஈது அன்னதே - (நீ கூறிய) இது நீ கூறிய படி உண்மையே, (முன்னர்) இவ்விந்திரசித்துடன் போர் ஆற்றற்கு, எய்தினர் எய்தினர் - விடாமல் வந்தவர்களாகிய, ஆயிரம் கோடி தேவர் - எண்ணிறந்த தேவர்கள், ஈடுபட்டு இரிந்தது அல்லால் - வலிமை யிழந்து ஓடினரே யன்றி, (தாங்கள் மிகப் பலராக விருந்தும்) இவனை ஒன்றும் செய்திலர் - இவனை யாதொன்றும் செய்ய இயலாதவர் ஆயினர்; இது நீ தீர்ப்பின் அல்லால் - (இவனால் நிகழ்ந்த) இத்துயரை நீ போக்கினால் அன்றி (நீ இவனைக் கொன்றாலல்லாமல்), இ உலகினுக்கு உயிரோடு உய்திறம்

உண்டோ - இவ்வுலகத்திலுள்ள சிவராசிகட்கு உயிரோடு பிழைக் கும் வழி, வேறு உண்டோ - பிறிது உள்ளதோ? (ஒன்றுமின்று அன்றோ ?" என்ருன் - என்று விடணன் பகர்ந்தான். ஆல், ஏ - அசை.

அன்னது - நீ சொன்னபடிதான். மேன்மேலும் பெருந் திரளாக என்பது எய்தின் எய்திஞர் என அடுக்கிக் கூறப் பட்டது. உலகு இடவாகு பெயராக உலகத்துயிரைக் குறித்து நின்றது. உய்திறன் : 'உய்திறமுடையார்க்கன்றோ அறவழி; (யுத்த. 1374); ஈடுபடுதல்; வலிமை அறுதல் : ஈடு : வலிமை' 'ஈடுண்டேகுவான்' (கிட்கிந்தா. 250); ஈடுபட்டு : எளி வரவுபட்டு, 'ஒருகரி யிடழித் துரித்தனே; (தேவா. 142; 13) உலகினுக்கு உயிரோடுய்திறன் எனக் கூட்டுக. இந்திரசித்தினைக் கொல் வதற்குரியவன் இலக்குவனே என்பது இக் காப்பியத்திற் பல இடங்களிலும் கூறப் பெற்றுள்ளது. பதினன்காண்டுகள் உறக்க மின்றியிருந்த ஒருவனன்றிப் பிறர் இவ்வரக்கனைக் கொல்ல முடி யாது. அவ்வரக்கன் பெற்ற வரம் அது. அதுபற்றியேதான் வீடணன் 'இது நீ தீர்ப்பின் அல்லது' என்ருன். 'இந்திரன் பகைஞனு மிராமன் தம்பிகை, மந்திர வம்பினல் மடிதல் வாய்மை' (யுத்த. 1301) என்பது கும்பகன்னன் கூற்று; 'துஞ்சலில் நயனத் தைய' (யுத்த. விபீடண. 144); 'இமைப்பிலன் நயனம்' (அயோத்தி. குகப். 42) என்பனவும் காண்க.

பி - ம். 1. ஐயகேள்; ஆயிரங்.

2. எய்திஞர்களிடு, எய்திறரெய்தி; இருந்தது.

3. இவனையின்று.

4. உய்திறன், திறல்; மற்றிவ்; உயிர்கொடு, உயிர்கொண்டு. 89

இந்திரசித்து ஒற்றனை வினவி இலக்குவனை யறிதல்

2026. என்பது சொல்லக் கேட்ட
விந்திர வில்லி னேடும்
பொன்பொறை மேக மொன்று
வருவது போல்கின் ருனே

முன்பனை முன்பு நோக்கி
யிவன்கோலாம் பரதன் முன்னோன்
தன்பெருந் தம்பி யென்றான்
ஆமெனச் சாரன் சொன்னான்.

என்பது சொல்ல கேட்ட - என்று (வீடணன்) கூறிய சொற்களைக் கேட்டவனை, பொன் பொருமேகம் ஒன்று - பொன்னை நிகர்க்கும் ஓர் மேகம், இந்திர வில்லினோடும் - வான வில்லுடன், வருவது போல்கின்றானை - வருவதை ஒப்பவனும், முன்பனை - வன்மை யுடையவனுமான இலக்குவனை, (இந்திரசித்து) முன்பு நோக்கி - நேரில் கண்டு, (ஒற்றனை நோக்கி), 'பரதன் முன்னோன் தன்பெரு தம்பி இவன் கொலாம் - 'பரதனுடைய அண்ணனும் இராமனுடைய பெரிய தம்பியாகிய இலக்குவன் இவன் தானோ?' என்றான் - என்று வினவினான்; சாரன் ஆம் என சொன்னான் - ஒற்றன் 'ஆம்' என்று விடையிறுத்தான்.

மேகாதிபன் இந்திரன் ஆதலின் வானவில்லை இந்திர தனுசு என்று கூறுவது மரபு. மேகத்தில் பல வர்ணங்கள் காணப் பெறுவதுண்டாகலின் இங்கு பொன்னிற மேகம் எனப்பட்டது. பரதன் - பரித்தல் அல்லது சுமத்தல் என்ற காரணம்பற்றி எழுந்த பெயர்; 'தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் பள்ளம் எனும் தகையானைப் பரதன் எனும் பெயரானை' (பால. குலமுறை. 2) என்றும், 'சமுதிதோ குணைஹி' (வான்மீகம்) என்றும் பரதன் சகலகலியாண குணங்களையும் பரிப்பவன் எனப் படுதல் காண்க. பொன்பொரு மேகம்: இல்பொருள் உவமை. இலக்குவனைப்பற்றி முன்னரே கேட்டுணர்ந்தவன் ஆகலின், 'இவன் கொலாம் பரதன் முன்னோன் தன்பெருந் தம்பி' என்றான். முன்பனை, முன்பு என்ற இடத்து எதுகைநயம் காண்க. சாரன்: 'ஓடினார் சாரர்வல்லை' (யுத்த. பிரமாத்திர. 162); இவன் கொலாம் இலக்குவன் என்று நேராக வினவாது, பரதன் முன்னோன் தன் பெருந் தம்பி என்றது காண்க. இவ்வாறு கூறுவது கம்பர் வழக்கு; 'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி' (ஆரணிய. 258); 'வையந்தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்' (சுந்தர. 483) என்பன காண்க பரதன் முன்னோனாகிய இராம

பிரானுக்கு இருவர் தம்பியாகலின், சத்துருக்கனை விலக்கும் பொருட்டுப் 'பெருந்தம்பி' எனப்பட்டது. 'இன்றுணைவனிராக வற்கிலக்குவற்கு மிளையவற்குமெனக்கு மூத்தான்' (அயோத்தி. குகப்.); பெருமை: 'கல்வி தறுகண் இசைமை கொடை' எனப் பெருமிதம் என்ற மெய்ப்பாட்டிற்குரிய பெருமை என்க. பொன் பொரு மேகம்: 'பொன்னொத்த மேனி' (அயோத்தி. நகர்நீ. 126).

பி ம். 2. பொன்புரை, பொன்புணர் ; முன்பினும். 90

## இராக்கதத் தலைவர்கள் இலக்குவன்மேற் செல்லுதல்

2027. தீயவ னிளவல் தன்மேற்
செல்வதன் முன்னஞ் செல்கென்
றேயின ரொருவ ரின்றி
யிராக்கதத் தலைவ ரெங்கள்
நாயகன் மகனைக் கொன்றாய்
நண்ணினை நாங்கள் காணப்
போயினி யுய்வ தெங்கே
யென்றெரி விழித்துப் புக்கார்.

தீயவன் - கொடியவனான இந்திரசித்து, இளவல் தன் மேல் செல்வதன் முன்னம் - இலக்குவன் மீது விரைவதன் முன்பு, 'செல்க - (நீங்கள் இலக்குவனுடன் போர் புரியச்) செல்லுங்கள்,' என்று - என்று சொல்லி, எயினர் ஒருவர் இன்றி - (தங்களைக்) கட்டளையிட்டவர் எவரும் இன்றியே, இராக்கதத் தலைவர் - அரக்கர் படைத் தலைவர்கள், (இளைய பெருமானை நோக்கி), 'எங்கள் நாயகன் மகனை - எங்கள் தலைவனான இராவணன் மகனை (அதிகாயனை), கொன்றாய் - வதைத்தவனே! நாங்கள் காண நண்ணினை - நாங்கள் காணும்படி வந்து சிக்கிக் கொண்டாய், இனி போய் உய்வது எங்கே - இனிமேல் (எங்களிடம் இருந்து தப்பிப்) பிழைத்து ஏகுவது எங்ஙனம்', என்று எரி விழித்து புக்கார் - என்று நெருப்புப் போல (உக்கிரமாக) விழித்துப் பார்த்துப் போர் புரியப் புகுந்தார்கள். எங்கே: ஏ: வினா.

இந்திரசித்துக்கு துணையாக வந்த அரக்கர்கள், அதிகாயனைக் கொன்றதற்காகப் பழிக்குப் பழி வாங்க, இலக்குவனுடன் பொரத்

தொடங்கினர். இளவல்; இலக்குவன்: அல்: பெயர் விகுதி: நாங்கள் காண; எங்கள் கண்முன்பாக. 'நண்ணினை நாங்கள் காண' (ஒப்பு): யுத்த. விபீடணன். 58.

பி - ம். 1. தன்னை; சேர்வதன்.

3. நண்ணின.

4. புகுவதென்னே. 91

## இமக்குவன் வெற்றி

2028. கோடிநூ றமைந்த கூட்டத்
 திராக்கதர் கொடித்தின் டேரும்
ஆடன்மாக் களிறும் மாவுங்
 கடாவின ரார்த்து மண்டி
மூடினர் மூடினரை முறை
 முறை துணித்து வாகை
சூடின னிராமன் பாதஞ்
 சூடிய தோன்றல் தம்பி.

கோடி நூறு அமைந்த - நூறு கோடி அளவில் பொருந்திய, கூட்டத்து இராக்கதர்கள் - பெருந்திரளான அரக்கர்கள், கொடி திண் தேரும் - கொடிகள் கட்டப்பெற்ற வலிய தேர்களையும், ஆடல் மாகளிறும் - பலம் அமைந்த பெரிய வேழங்களையும், மாவும் - குதிரைகளையும், கடாவினர் - (இலக்குவன் மீது) செலுத்தினவர்களாய், ஆர்த்துமண்டி - ஆர்ப்பாட்டம் செய்து கொண்டு மிக்குச் சென்று, மூடினர் - (அவனை) வளைந்து கொண்டனர்; மூடினரை - (அங்ஙனம் தன்னைச்) சூழ்ந்துகொண்ட இராக்கதர்களை, இராமன் பாதம் சூடிய தோன்றல் தம்பி - இராமபிரானுடைய திருவடி நிலையை (த் தன் முடிமேல்) தரித்தவனான பரதனுடைய தம்பியான இலக்குவன், முறை முறை - படிப்படியாக, துணித்து - வெட்டி, வாகை சூடினன் - வெற்றி மாலையைச் சூடினன்.

ஆடன் மாக்களிறு; அடல் ஆடல் என நீண்டது, 'ஆடன் மாகரி சேவக மமைந்தென வசைந்தான்' (யுத்த. பிரமாத்திர: 173).

கடாவுதல் - செலுத்துதல், 'தடங்களிறு தேர் பரிகடாவி' (ஆரணிய. 525); முறை முறை என்பது நாற் படையையும் தனித் தனித் துணித்ததைக் குறித்தது எனினுமாம். வாகை சூடுதல்; வாகை: வெற்றிமாலை. (ஆரணிய. 397, 428) காண்க. 'வடதிசை வாகை சூடி' (கல்வெட்டு); இங்கும் இலக்குவன் எனக் கூறுது பெரும் தொடராற் குறித்தமை காண்க; (யுத்த. 2026); உரைக் குறிப்புக் காண்க. தோன்றல்: ஆண்பாற் சிறப்புப் பெயர். இறுதியடிகள் காரண காரியம் தோன்றக் கூறப் பெற்றிருத்தல் உய்த்துணர்க. பரதம் இராமன் பாதுகை பெற்று அயோத்திக்கு மீண்டு செல்லாதிருந்தால், பின்னர் வரலாறு பெருகி, இலக்குவன் இலங்கைப் போர்களில் வெற்றி பெற்று வாகை சூடுதல் நிகழ்ந் திராது என்ற குறிப்பினை ஆசிரியர் உணர்த்துதல் ஓர்ந்துணர்க. 'மடமான் இரக்கமின்மை யன்றோ வின்றிவ் வுலகங்க ளிராமன், பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின்றதுவே' (அயோத்தி. மந்தரை: 78); 'தேவி, தூய சிந்தையுந் திரிந்தது சூழ்ச்சியினிமை யோர், மாயை யும்மவர் பெற்றநல் வரமுண்மை யாலும், ஆய வந்தண ரியற்றிய வருந்தவத்தாலும்' 'கரந்தை யருக்க கணி யனைய சானகியார் பேரழகும் அவர்தங் கற்பும்' (யுத்த. இரா வணன் வதை: 341) என்ற செய்யுளும் இங்கு ஒப்பு நோக்கத் தகுவன. இராமன் பாதம் சூடியது அயோத்தியா காண்டம் 'கிளை கண்டு நீங்கு படலத்துக் காண்க'

பி - ம். 1. இயைத்த; கோடித்தின்டேர்.

2. அடங்கலு மடங்க லூர்ந்து.

3. முனிந்து; தொகுத்து வாகை. 92

2029. அதிர்ந்தன வுலக மேழு
மனற்பொறி யசனி யென்னப்
பிதிர்ந்தன மலையும் பாரும்
பிளந்தன பிணத்தின் மேன்மேல்
உதிர்ந்தன தலைகள் மண்டி
யோடின வுதிர நீத்தம்
விதிர்ந்தன வாரர் கைகள்
விளைந்தது கொடிய வெம்போர்.

இலக்குவன் (எய்த வாளிகளின் வேகத்தால்), உலகம் ஏழும் அதிர்ந்தன - ஏழு உலகங்களும் நடுங்கின ; அனல் பொறி அசனி என்ன - தீப்பொறிகளையுடைய இடி (வீழ்ந்தாற்போன்று), மலையும் பிதிர்ந்தன - மலைகளும் தூள்பட்டன ; பாரும் பிளந்தன - பூமிப் பகுதிகளும் பிளவுபட்டன ; பிணத்தின் மேல்மேல் - (போர்க்களத்தில் மரித்துக்கிடந்த) சவங்களின்மீது, (விடாமல்) தலைகள் உதிர்ந்தன - தலைகள் ஒன்றன்மேல் ஒன்றாக விழுந்தன ; உதிரம் நீத்தம் மண்டி ஓடின - இரத்த வெள்ளம் மிக்குப் பெருகின ; அமரர் கைகள் விதிர்ந்தன - (இவற்றைக் கண்ணுற்ற) தேவர்களின் கரங்கள் நடுங்கின ; கொடிய வெம்போர் - மிகவும் கடுமையான போர் விளைந்தது - மூண்டது.

அசனி : இடி ; (ஆரணிய. 580). நீத்தம் : வெள்ளம் ; 'மொய் புணீர் நீத்த மோடி' (ஆரணிய. 550).

பி - ம். 1. உலகமெங்கும்.

2. மழையும் ; பிணத்தின் குன்றத்து, குன்றம்.

4. விளைந்தன ; கோடி. 93

2030. விட்டனன் விசிகம் வேகம் விடாதன வீரன் மார்பில்
பட்டன வுலக மெங்கும் பரந்தன பதாகைக் காட்டைச்
சுட்டன துரக ராசி துணித்தன பனைக்கைம் மாவை
அட்டன கூற்ற மென்ன வடர்த்தன வனந்த மம்மா.

வீரன் - ஆண் மகனான இலக்குவன், வேகம் விடாதன அனந்தம் விசிகம் விட்டனன் - வேகம் நீங்கப் பெறாத எல்லையற்ற அம்புகளை விடுத்தான் ; மார்பில் பட்டன - (அந்த அம்புகள்) அரக்கர் தம் மார்பில் தைத்தன; உலகம் எங்கும் பரந்தன - உலகங்களும் பரவின ; பதாகை காட்டை சுட்டன - கொடிகளின் தொகுதியை எரித்தன ; துரகம் ராசி துணித்தன - குதிரைத் திரளை வெட்டி யெறிந்தன : பனைகை மாவை அட்டன - பனந் துண்டுகள் போன்ற துதிக்கைகளையுடைய யானைகளை அழித்தன ; கூற்றம் என்ன அடர்த்தன - (கொலைத் தொழில் புரியும்) யமன் போன்று போர்க்களம் எங்கும் நெருங்கின. அம்மா : வியப்பிடைச் சொல்.

அனந்தம் விசிகம் என இணைக்க, விசிகம் : அம்பு ; 'வெந் தீவினைப் பயன் ஒத்தன அரக்கன் சொரி விசிகம்; (யுத்த. இராவணன் வதை: 52) ; 'விலக் கிருந்தடந் தோளினு மார்பினும் விசிகம்' (யுத்த. வேலேற்ற: 20); பதாகைக் காடு என்றதால் தேர்களின் மிகுதி உணரப்படும். ராசி : கூட்டம். 'துடித்தன குருதியில் துரக ராசியே' (யுத்த. 1753).

பி-ம். 1. விட்டன ; விகிதை ; வீழ்ந்தன ; வீரர்.

2. படர்ந்தன.

3. பணைக்கை ; வேழம்.

4. கூற்றமென்னப்பட்டன.



2031. உலக்கின்ரு ருலக்கின் ருரை
யெண்ணுவா னுற்ற விண்ணேர்
கலக்குறு கண்ண ராகிக்
கடையுறக் காண லாற்ருர்
விலக்கரும் பகழி மாரி
விளைக்கின்ற விளைவை யுன்னி
இலக்குவன் சிலைகோ டேகொ
லெழுமழை பயின்ற தென்ருர்.

உலக்கின்ருர் உலக்கின்ருரை - மேன்மேலும் மரிக்கும் அரக்கர்களை, எண்ணுவான் உற்ற விண்ணேர் - கணக்கிடத் தொடங்கிய அமரர்கள், கலக்குறு கண்ணர் ஆகி - (வரம்பு மீறியிருத்தலின்) கலங்கிய விழிகளை உடையவர் ஆகி, கடை உற காணல் ஆற்ருர் - முடிவு போகக்காண வியலாதவர் ஆயினர் ; (மற்றும்) விலக்கரும் பகழிமாரி - (எவராலும்) தவிர்க்க முடியாத அம்பு மழையை, விளைக்கின்ற விளைவை உன்னி - இலக்குவன் உண்டு பண்ணுகின்ற நிகழ்ச்சியை மனத்துக் கொண்டு, 'எழுமழை பயின்றது - வழு மேகங்களும் (இடையருது பொழியும் தன்மையைப்) பழகியது, இலக்குவன் சிலை கொடே - இலக்குவனுடைய வில்லினிடத்துத் தானே ?' என்ருர் - என்று பகர்ந்தனர். கொல் : ஐயம்.

முன்னிரண்டடி : தன்மை நவிற்சியணி. பின்னிரண்டடி : தற்குறிப் பேற்றவணி. மேகம் ஏழு : சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலா வர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம். உலத் தல் : அழிதல் ; 'நட்புலந்தவரால்' (வி. பா. நச்சு. 33) ; 'உய்ந்தா ளல்லதுலந்த துண்மையோ' (கிட்கிந்தா. 961). எழுமழை பயின் றது ; (ஒப்பு) : யுத்த. 1429.

பி - ம். 1. உலக்குநர் ; வானோர்.

2. கன்னார் நோக்கி ; காணலாறு.

3. மாரி வீழ்கின்ற ; நோக்கி.

4. சிலை கொண்டேயோ, சிலையொடே கொல் ; எழிலியும் ; ஈன்றது ; என்பார். 95

## படுகளச் சிறப்பு

2032. ஒளியொண் கணைகள் தோறு முந்திய வேழ மொற்றை
வாளியின் தலைய பாரின் மறிவன மலையிற் சூழ்ந்த
ஆளியின் றுப்பின் வீரர் பொருகளத் தார்த்த வாழித்
தூளியின் தொகைய வள்ளல் சுடுகணைத் தொகையு
[மம்மா.

ஒளி ஒள் கணைகள் தோறும் - (இலக்குவன் விடுத்த) வரிசை யான ஒளி வாய்ந்த சரங்கள் விடும் தோறும், உந்திய வேழம் - கீழே வீழ்த்தப்பட்ட யானைகள், (ஒவ்வொன்றும்), ஒற்றை வாளி யின் தலைய - ஒவ்வோர் அம்பின் முனையை உடையனவாய், பாரில் மறிவன - பூமியில் இறந்து வீழ்ந்து, மலையில் சூழ்ந்த - மலைகள் போன்று சுற்றிக் கிடந்தன ; ஆளியின் துப்பின் வீரர் - சிங்கம் போன்ற வன்மை வாய்ந்த வீரர்கள், பொருகளத்து - போர் புரி கின்ற அந்தக் களத்தே, வள்ளல் சுடுகணை தொகையும் - இலக்கு வனுடைய கொல்லும் இயல்புள்ள அம்புகளின் எண்ணிக்கையும், ஆர்த்த - ஆரவாரம் செய்கின்ற, ஆழி தூளியின் தொகைய - கடல் மணல்களின் தொகையை உடையன. அம்மா : வியப்பிடைச் சொல்.

ஒளி - வரிசை ; 'காலமாரியன்ன வாளியோளியால்' (யுத்த. மூல பல. 98); 'ஒளின்முற்றுது' (யுத்த. வானர் களங்காண். 16); துப்பு: வலிமை ; 'கெடலருந் துப்பின்' (அகநா. 105) ; ஆழித் தூளியின்

தொகைய: கடல் மணல் அளவிட முடியாதது போன்று அளவிட முடியாதன என்க. ‘தொல்லைநம் பிறவி யெண்ணில் தொடுகடல் மணலு மாற்ரு எல்லைய’ (சீவக. 270); சுடுகணை: வினைத்தொகை.

பி - ம். 1. பிளி; கணைகளோடும்.

2. வாளியின் தலைகள்; மறிந்தவன் மலையிற், மறிந்நின மலையிற், மறிவன மழையிற்.

3. ஆளியின் துழனி, ஆளியிற்றுளக்கு, பூஷையிற்றுளக்கி; அமர்க்களத்து.

4. தொகையும்; சொரிகணை; அ∴தே. 06

2033. பிறவியிற் பெரிய நோக்கிற்
பிசிதமுண் டுழலும் பெற்றிச்
சிறையன வென்ன நோக்கித்
தேவருந் திகைக்கத் தேற்றித்
துறைதொறுந் தொடர்ந்து வானம்
வெளியறத் துவன்றி வீழும்
பறவையிற் பெரிது பட்டார்
பிணத்தின்மேற் படிவ மாதோ.

‘(இவை) பிறவியில் - பிறப்பிலேயே, பெரிய நோக்கில் - பெரிய காட்சியையும், பிசிதம் உண்டு உழலும் பெற்றி - ஊனை உண்டு திரியும் இயல்பினையும், சிறையன - இறகுகளையும் உடையனவான பறவைகளே, என்ன - என்று, தேவரும் நோக்கி திகைக்க - அமரர்களும் கண்டு மலைக்குமாறு, தேற்றி - தம்மைக் காட்டிக் கொண்டு, (இலக்குவன் விடுத்த அம்புகள்) துறை தொறும் தொடர்ந்து - போர்க்களத்தில் பல இடங்களிலும் நிறைந்து, வானம் வெளி அற துவன்றி - ஆகாயத்தில் இடைவெளியின்றி நெருங்கி, வீழும் பறவையில் - (பிணங்களைத் தின்னுமாறு அவற்றின்மீது) வீழ்கின்ற கழுகுபோன்று, பெரிது - அதிகமாக, பட்டார் பிணத்தின்மேல் படிவ - இறந்தவர்களுடைய பிணங்களின் மீது கிடப்பன ஆயின. மாது, ஓ: அசைகள்.

இறகுகளோடும் கூடிச் சவங்களைக் கவ்விக்கொண்டு பெரிதும் காட்சியளித்த அம்புகட்கு, இறகுகளோடு கூடிப் பிணங்களை அல

கினுல் குத்திக்கொண்டு பேருருவமுடையனவா யிருந்த பறவை உவமை: அம்புகட்கு அவை விரைதல் வேண்டி இறகுகள் இரு புறங்களிலும் கட்டுதல் மரபு: இது பற்றியே அம்புக்குப் பத்ரீ என்ற பெயர் உண்டு என்பர். அம்புகட்குச் சம்பாதி: சிலேடை; பிறவியிற் சம்பாதி அருணனிடம் தோன்றியதனுல், அநேக தூரம் நோக்கும் விழியினுல், ஊன் அருந்துவதால், சிறகுண்மையால், அருக்கன் மண்டலம் வரை சென்று பூமியிலே விழுந்ததனுல் என்றறிக. பறவையின் - பறவையைப் பார்க்கிலும் எனினுமாம்; பிசிதம்: மாமிசம்; அரக்கர்க்குப் பிசிதாசகர் என்ற பெயருண்டு.

பி - ம். 1. நோய்க்கு; தோற்றம்.
2. சிறையென, சிறையவே, சிறியவே; திகைத்துந், திகைப்பக்; தெற்றி, தோற்றித்.
4. பட்ட; படியுமம்மா, பகழிமாதோ.

07

2034. திறந்தரு கவியின் சேனை செறிகழ நிருதன் சீற
இறந்தன கிடந்த வெள்ள மெழுபதிற் பாதி மேலும்
பறந்தலை முழுதும் பட்ட வஞ்சகர் படிவ மூட
மறைந்தன குருதி யோடி மறிகடன் மடுத்தி லாத.

செறி கழல் நிருதன் சீற - புனைந்த வீரகண்டை யணிந்த அரக்கனை இந்திரசித்து வெகுண்டு போராற்றியதால், திறம்தரு கவியின் சேனை - வலிமை மிக்க குரக்குப் படைகள், எழுபதில் பாதி வெள்ளம் மேலும் - முப்பத்தைந்து வெள்ளத்திற்கு மேலும், இறந்தன கிடந்த - மரித்துக் கீழ் விழுந்து கிடந்தவை, பறந்தலை முழுதும் - போர்க்களம் முழுவதும், பட்ட வஞ்சகர் படிவம் மூட - இறந்த சூழ்ச்சிகள் வல்ல அரக்கர்களின் உடல்கள் மூடுதலால், மறைந்தன - மறைந்தன; குருதி - (அங்குப் பெருகிய) உதிர வெள்ளங்கள், ஓடி - விரைந்து சென்று, மறிகடல் மடுத்திலாத - அலைகள் மடங்குகின்ற ஆழியில் அடங்கா வாயின.

வெள்ளம் எழுபதில் பாதி மேலும்; இது நாற்பது வெள்ளம் என்க: 'ஐய அமர்த்தலை, நீயும் நாற்பது வெள்ள நெடும்படை, மாய வெங்கணை மாரி வழங்கினை' (யுத்த. 2094) எனப் பின்பு வருவது காண்க. பறந்தலை: போர்க்களம்; 'பறந்தலை யதனின்

மற்றப் பாதக வரக்கன் கொல்ல’ (யுத்த. இந்திரசித். 58), ‘பறந் தலை யதனின் வந்த பல பெருங் கவியின் பண்ணை’ (யுத்த. 1411); மற்றும்: புறநா. 66, 237, 373. இரத்தப் பெருக்குக் கடலினும் அதிகம் என்பது செய்யுட் கருத்து.

பி - ம். 1. நிருதர், அரக்கர்.

2. இறந்தது; பாகமென்ன; பரக்குமென்னப்.

3. படிவம் மூடி.

4. மறைந்தது; குருதியோடு; மடுத்த யாதோ. ௫௮

**2035.** கையற்ருர் கால்க ளற்ருர் கழுத்தற்ருர் கவச மற்ருர்
மெய்யற்ருர் குடர்கள் சோர விசையற்ருர் விளிவு மற்ருர்
மையற்ருர்க் கரியுந் தேரும் வாசியு மற்று மற்ருர்
உய்யச் சாய்ந் தோடிச் சென்ருருயிருள்ள ராகியுள்ளார்.

(அரக்கர்களில் பலர்), கை அற்ருர் - கரங்கள் துணிக்கப் பெற்ருர்கள், கால்கள் அற்ருர் - கால்கள் வெட்டப்பட்டனர்; கழுத்து அற்ருர் - கழுத்தினை இழந்தார்கள்; கவசம் அற்ருர் - கவசம் துண்டிக்கப் பெற்றனர்; குடல்கள் சோர மெய் அற்ருர் - குடல்கள் நழுவுமாறு உடலை யிழந்தார்கள்; விசை அற்ருர் - வேகம் அடங்கப் பெற்ருர்கள்; விளிவும் அற்ருர் - கூப்பிடும் சத்தியும் இழக்கப் பெற்ருர்கள்:; மையல்தார் கரியும் தேரும் வாசியும் மற்றும் அற்ருர்-மதக் களிப்புக் கொண்ட கிண்கிணி மாலை புனைந்த யானை களும் தேர்களும் குதிரைகளும் பிறவும் இழக்கப் பெற்றனர்; (இந் நிலையில்) உயிர் உள்ளார் ஆகி உள்ளார் - உயிருடன் இருப்பவர் களாகிய இராக்கதர்கள், உய்ய - தாம் உயிர் தப்பிப் பிழைக்கும்படி, சாய்ந்து ஓடி சென்ருர் - தளர்ந்து ஓடிப் போயினர்.

மெய்: உடல்; பொய்யாயிருந்தும் உடலை மெய் என்பது மங்கல வழக்கென்பர் அறிஞர். குடல்: குடர்; ஈற்றுப் போலி. விளித்தல்; அழைத்தல். ‘உம்மை யெல்லாம் விளிப்பனோ’ (யுத்த. 1891) ‘கூற்றத்தைக் கையால் விளித்தற்ருல்’ (குறள். 894); மையல்: மயக்கம்; (யுத்த. 1801), ‘மையற்கரி யுயிரிற்றன; (யுத்த. 1823); கவசம்: இருப்புச் சட்டை; இதனை மெய்புகுகருவி என்பர்; மற்றும் என்றது படைக்கலம் முதலிய போர்க்கு இன்றி யமையாதனவற்றை. சாய்தல்: தளர்தல்; ‘ஒய்தல் ஆய்தல் நிழத்

தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்'. உயிர் உள்ளாரகி உள்ளார்: என்றது, உயிர் மாத்திரம் இயங்கப் பெற் ருர்கள் அன்றி எவ்விதமான முயற்சியும் இன்றி நடைப்பிண மாயினர் என்றபடி.

பி-ம். 2. குடல்கள் அற்ருர்; விழியும்.
3. மையற்ருர் கரியும்.
4. சார்ந்தோடியுற்ருர். 89

## இலக்குவனை இந்திரசித்து நெருங்க அநுமன் அங்கு வருதல்

2036. வற்றிய கடலுள் நின்ற மலையென மருங்கின் யாரும்
சுற்றின ரின்றித் தோன்றுந் தசமுகன் தோன்ற றுள்ளித்
தெற்றின புருவத் தோன்றன் மனமெனச் செல்லுந்
[தேரான்
உற்றன னிளைய கோவை யனுமனு முடன்வந் துற்ருன்.

வற்றிய கடலுள் நின்ற - நீர் வறண்ட கடலுள் (தனித்து) நின்ற மலை போன்று, மருங்கின் யாரும் சுற்றினர் இன்றி - (தன்) அருகில் சூழ்ந்திருப்பவர் எவரும் இல்லாமல், தோன்றும் - காணப் படும், தசமுகன் தோன்றல் - இராவணனுடைய புதல்வனை இந்திரசித்து, துள்ளி - துடித்து, தெற்றின புருவத்தோன் - (சினத் தால்) நெறித்த புருவத்தனுய், தன்மனம் என செல்லும் தேரான் - தன் மனம் போன்று (நினைந்த இடத்திற்கு விரைந்து) செல்லும் தேர்மீது அமர்ந்தவனுய், இளைய கோவை உற்றனன் - இலக்கு வனை அணுகினன், அநுமனும் உடன் வந்து உற்ருன் - அநுமனும் (அங்கு) உடனே வந்து சேர்ந்தான்.

நால்வகைப் படைகளும் பிறவும் அழிந்துபடத் தனியே நின்ற அரக்கனுக்கு, நீரும் நீரகத்துள்ள சலராசிகளும் அற்றனவாக வறிதே புலப்படும் மலை உவமை. தன் மனம் எனச் செல்லும் தேரான் - மனம் விரைந்து செல்லற்குவமை; 'மானுருவாக நின் மனம் பூட்டினையோ' (அகநா. 384); 'துரகமின்றெனினும், நிருதர்

கோமக னிணைந்துழிச் செல்வதோர் நினைப்பில்' (யுத்த. இராவணன் தேரேறு. 18) என்றமையும் காண்க. 'தசமுகன் தோன்றல்' என்ற தொடர், இந்திரசித்து உற்ற பரிபவத்தினை மிகுத்துக் காட்டுவது உய்த்துணர்க. இளையகோ: 'இன்னிரையின் காவலான் இளையகோவே' (வி. பா. நிரை மீட்சி. 139).

பி - ம். 2. தசமுகன் தனைய னுள்ளம்.

3. தெற்றிய புருவத்தோளான், புருவக்கோளான்; தேர்மேல்.

4. இளவறன்னை. 100

## இந்திரசித்தும் அநுமன்மீது ஏறிய இலக்குவனும் ஒருவர்மீது ஒருவர் அம்பு சொரிதல்

2037. தோளின்மே லாதி யைய வென்றடி தொழுது நின்றான்
ஆளிபோன் மொய்ம்பி னானு மேறின னமர ரார்த்தார்
காளியே யனைய காலன் கொலையன கனலின் வெய்ய
வாளிமேல் வாளி தூர்த்தார் மழையின் மேன் மழை
[வந்தன்னார்.

(அநுமன் இலக்குவனை நோக்கி), 'ஐய - தலைவனே! தோளின் மேல் ஆதி - எனது தோளின் மீது ஏறியருள்க', என்று - என்று பகர்ந்து, அடி தொழுது நின்றான் - பாதங்களில் வணங்கி நின்றான்; ஆளிபோல் மொய்ம்பினானும் - சிங்கம் போன்ற வன்மை வாய்ந்த அவ்விலக்குவனும், ஏறினன் - (அவன் விழைந்த வண்ணமே) ஏறியருளினான்; அமரர் ஆர்த்தார் - (அது கண்டு) தேவர்கள் பெருமுழக்கம் செய்தனர்; (உடனே), மழையின்மேல் மழை வந்தன்னார் - மேகத்துடன் பிறிதொரு மேகம் (எதிர்த்து) வந்தாற்போன்ற தன்மையுடையவரான (அவ்விருவரும்), காளியே அனைய - காளியை நிகர்த்துப் பகையொழிக்கும் தன்மையனவும், காலன் கொலையன - யமன்போன்று கொல்லும் பெற்றியனவும், கனலின் வெய்ய - தீயினைக்காட்டிலும் கொடியனவுமான, வாளிமேல் வாளி - சரத்தின் மேல் சரமாக (சரமாரியாக), தூர்த்தார் - எய்து நிரப்பினார்கள்.

ஆதி: முன்னிலை ஒருமை வினைமுற்று. மொய்ம்பு - வலி; 'மொய்ம்பின் தாக்கினான்' (ஆரணிய. 973). 'ஆளியின் மொய்ம்பினாய்' (ஆரணிய. 424); அமரர் ஆர்த்தது தம் நலம் கருதி;

'வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான்' (திருவா. திருச் சதகம். 16). காளி: கருநிறம்; அந்நிறமுடைய காளிக்கு வந்தது, 'ஒற்றைக் காளிக டொகையும்' (கந்த. அசுரர்யாக. 40). கனலின் என்பதற்குக் கனலைப் போன்று அல்லது கனலைக் காட்டிலும் என்க. தூர்த்தல் - நிறைத்தல்; 'உலகமும் விசும்பும் நாண்மலர் தூர்க்க' (யுத்த. 1072); இல்பொருள் உவமை.

பி - ம். 2. ஆளியேய்.
3. கூளியே, காளியை.
4. விழ்ந்தென்ன. 101

## இலக்குவ இந்திரசித்தரின் போர்

2038. இடித்தன சிலையி னுண்க
ளிரிந்தன திசைக ளிற்று
வெடித்தன மலைகள் விண்டு
பிளந்தன விசும்பு மேன்மேல்
பொடித்தவிவ் வுலக மெங்கும்
பொழிந்தன பொறிகள் பொங்கிக்
கடித்தன கணைக ளோடு
கணைகள்தம் மயில்வாய் கவ்வி.

சிலையின் நாண்கள் இடித்தன - (இருவருடைய) வில்லின் நாணிகள் (தெறிக்கப்பட்டு) இடிபோன்று ஒலித்தன; திசைகள் இற்று இரிந்தன - திக்குகள் எல்லாம் அவ்வோசையைக் கேட்டு உடைந்து நிலைகுலைந்தன; மலைகள் விண்டு வெடித்தன - மலைகள் பிளவுபட்டு வெடித்தன; விசும்பு மேன்மேல் பிளந்தன - ஆகாயம் மேலும் மேலும் பிளவுபட்டன; (இந்த நாண் ஒலியால்) இவ் உலகம் எங்கும் பொடித்த - இந்த உலகம் முழுவதும் பொடியாயின; பொறிகள் பொழிந்தன - தீப்பொறிகள் மிகுதியாகப் பெய்தன; கணைகளோடு கணைகள் - அம்புகளோடு அம்புகள், தம் அயில்வாய் கவ்வி பொங்கி கடித்தன - தங்களுடைய கூரிய வாயினல் (நுனியால்) கவ்விச் சிதறிக் கடித்தன.

இச்செய்யுட்கு (ஒப்பு): 'நாணெறிந்தனன்' (யுத்த. 1413) எனத் தொடங்கும் செய்யுள். அம்புகள் ஒன்றுடன் ஒன்று தாக்கியதால் தீப்பொறிகள் எழுந்தன எனப்பட்டது.

பி-ம். 1. எரிந்தன, எறிந்தன ; அற்று.
2. வெடித்தன அண்டம் ; விசும்பு மென்னப்.
3. பொடித்தன, பொரிந்தன.
4. கணைகளோடும். 102

2039. அம்பினோ டம்பொன் றொன்றை
யறுக்கமற் றறுக்கி லாத
வெம்பொறி கதுவ விண்ணில்
வெந்தன கரிந்து வீழ்ந்த
உம்பரு முணர்வு சிந்தி
யொடுங்கினா ருலக மியாவும்
கம்பமுற் றலைந்த வேலைக்
கலமெனக் கலங்கிற் றண்டம்.

அம்பினோடு அம்பு - அம்புகளுடன் எதிர் அம்புகள் (தாக்குங் கால்), ஒன்றை ஒன்று அறுக்க - ஒன்றை யொன்று துணிக்க, அறுக்கிலாத - அவ்வாறு (ஒன்றை யொன்று) அறுக்கமாட்டாதன வான (சில அம்புகள்), வெம்பொறி கதுவ-வெய்ய தீப்பொறிகளால் பற்றப்பட்டு, விண்ணில் வெந்தன கரிந்து வீழ்ந்த - ஆகாயத்தில் வெந்து கருகிக் கீழே வீழ்ந்தன; (இதைக் கண்டு ஆற்றாத), உம்பரும் - தேவர்களும், உணர்வு சிந்தி - அறிவு குலைந்து, ஒடுங் கினார் - ஒடுங்கினார்கள் ; உலகம் யாவும் கம்பம் உற்று உலைந்த - உலகங்கள் அனைத்தும் உடல் நடுங்கி உழன்றன ; அண்டம் - அண்ட கோளமானது, வேலை கலம் என கலங்கிற்று - கடலிற் செல்லும் கப்பல் போன்று அசைந்து நடுங்கிற்று.

கதுவ - பற்றி ; 'கடுத்தகராம் கதுவ நிமிர் கையெடுத்து' (ஆரணிய. 49) ; 'கல்லும் மரமுங் கரமுங் கதுவ' (யுத்த. நிகும் பலை. 25). உம்பரும் : உம்மை உயர்வு சிறப்பு. கம்பம் - நடுக்கம் ; 'கம்பஞ் செய் பரிவு' (சீவக. 1737) ; 'அழுதுடல் கம்பித்து' (திருவாச. 4 : 61). வேலைக்கலம்: பொருத்தமான உவமை. 'கம்பித்

தலை யெற்றிரீர் கடல்' (பால. 1359). மற்று: வினைமாற்று. இது கவிக் கூற்று.

பி-ம். 1. அறுத்தன வறுத்திலாத, அறுந்தவற்றற்றிலாத, அறுத்தற்ற வற்றிலாத.

2. வெம்புவெஞ் சரங்கடம்மில், வம்பு வெப்பொறிகடுள்ளி, வெம்புவ பொறிகடுன்னி; வியந்த.

3. உம்பரும் பிறரு நீக்கியோங்கின, உணர்வு நீங்கியொடுங்கினர்.

4. தம்பமிற்று; எழுந்த வேலைக், உலைந்து காலிற், உலைந்த வேலை; கடல்களும், கடலெனக்; அன்றே. 103

2040. அரியினம் பூண்ட தேரு மனுமனு மனந்த சாரி
புரிதலி னிலங்கை யூருந் திரிந்தது புலவ ரேயும்
எரிகணைப் படல மூட விலருள ரென்னுந் தன்மை
தெரிகிலர் செவிடு செல்லக் கிழிந்தன திசைக ளெல்லாம்.

அரி இனம் பூண்ட தேரும் - சிங்கக் கூட்டங்கள் பூட்டப்பட்டுள்ள (இந்திரசித்தின்) இரதமும், அநுமனும் - (இலக்குவனை ஏந்தி நின்ற) மாருதியும், அனந்த சாரி புரிதலின் - எல்லையற்றன வான வலசாரி இடசாரிகள் வருவதால், இலங்கை ஊரும் திரிந்தது - இலங்கா நகரும் சுற்றியது; எரிகணை படலம் - (இருவரும் எய்த) எரியும் தன்மையுள்ள அம்புகளின் தொகுதி, மூட - (எங்கும்) மூடியதால், (இலக்குவன் இந்திரசித்து என்ற இருவரும்), இலர் உளர் என்னும் தன்மை - இலரோ உளரோ என்ற தன்மையை, புலவரேயும் - (இமையா நாட்டமுடையவரான) தேவர்கள்கூட, தெரிகிலர் - அறியவியலாதவராயினர்; திசைகள் எல்லாம் செவிடு செல்ல கிழிந்தன - எல்லாத் திக்குகளும் (அப்போர் ஒலியால் ஆங்காங்குள்ள உயிர்கள்) செவிடுபடுமாறு, (தாம்) பிளவுபட்டன.

புலவர் - அறிஞர் ஆன தேவர்கள்.

பி-ம். 1. அனந்தம்.

2. புரிதலும்; புரிந்தது.

3. மூடி; இவருளர், யாரிவர்.

4. கிழிந்தது. 104

இதன்பின் 'என் செய்தார்' என்ற கவி ஓர் பிரதியில்.

2041. நாண்பொரு வரிவிற் செங்கை நாமநூல் நவின்ற கல்வி
மாண்பொரு வகையிற் றன்று வலிக்கிலை யவதி வானஞ்
சேண்பெரி தென்று சென்ற தேவரு மிருவர் செய்கை
காண்பரி தென்று காட்சிக் கையுற வெய்திற் றன்றே.

'நாண் பொரு - நாணி பூட்டப்பட்ட, வரிவில் - கட்டமைந்த வில்லினது, நாமம் நூல் - புகழ் சான்ற நூலை (வில் வித்தையினை), செம்கை - தங்களுடைய சிவந்தகரங்களால், நவின்ற - (இவ்விருவரும்) பழகிய, கல்வி மாண்பு - கல்விப் பெருமை, ஒருவகையிற்று அன்று - ஒருதிறப்பட்டதன்று; (பலவகைச் சிறப்பினது), வலிக்கு அவதி இலை - (இவர்களின் உடல்) வன்மைக்கும் எல்லை இல்லை; (இவர்களின் வலிமை), வானம் சேண் பெரிது - வானத்தினும் மிக விரிந்தது, (ஆதலின் இவர்கள் போரினைக்காண வேண்டுவது அவசியம்), என்று - என்று நினைந்து, சென்ற தேவரும் - போரினைக் காண வந்த அமரரும், இருவர் செய்கை காண்பரிது - இவ்விருவரின் போர்ச்செயல் காண்பதற்கு இயலாது', என்று - என்று சொல்லி விட்டதனால், காட்சிக்கு ஐயுறவு எய்திற்று - காட்சிப் பிரமாணத்துக்கும் ஐயம் ஏற்பட்டது. அன்றே : வியப்பிடைச்சொல்.

இவர்களின் வீரச்செயலைக் காண விழைந்து வந்த தேவர்கள் இவர்கள் செய்த போர்ச்செயல்களின் விரைவினால் அவற்றைக் காணமாட்டாதவராயினர் என்க. பிரமாணங்கள் எட்டு வகைப் படும்: அவை; காட்சி, அநுமானம், ஆகமம், உவமானம், அருத்தாபத்தி, அநுபலத்தி, சம்பவம், ஐதிகம் (வேதா. சூடா. 20) என்ப. இவற்றுள் காட்சி ஆகமம் அநுமானம் என்ற மூன்றும் மிகச் சிறந்தவை. காட்சி ஐயத்திற்கிடமின்றி யிருப்பதால் எல்லாவற்றிலும் மேலானது. ஆயினும் இந்தக் காட்சிப் பிரமாணத்திலும் சந்தேகம் நிகழும்படி இமையா நாட்டத்தினரான தேவர்களும் இவ்விருவர் செய்த போரினைக்காண இயலாதவர் ஆயினர் என்க. இச் செய்யுள் கவிக்கூற்று. அவதி: 'அன்பினுக்கவதியில்லை' (யுத்த. 410); வானம் சேண் என்பன ஒரு பொருட்சொற்கள் எனினும் சேண் என்பது மிகுதி என்று பொருள் செய்யப்பட்டது; சேணுற நீண்டு மீண்டு' (ஆரணிய. 265) என்றது காண்க.

பி - ம். 2. வலிக்கில்லை ; வானச்.

3. செம்பரிதென்று சென்ற, சேண் பொருளென்று நின்ற.

4. காண்பொருளன்றென், காட்சி கையறவு ; அன்றே, அம்மா. 105

இதன்பின் 'ஆயிர' என்ற கவி ஓர் பிரதியில்.

2042. என்செய்தா ரென்செய் தாரெ
னியம்புவா ரினைய தன்மை
முன்செய்தா ரியாவ ரென்பார்
முன்னேது பின்னே தென்பார்
கொன்செய்தார் வீர ரின்ன
திசையின ரென்றுங் கொள்ளார்
பொன்செய்தார் மவுலி விண்ணோ
ருணர்ந்திலர் புகுந்த தொன்றும்.

பொன் செய்தார் மவுலி விண்ணோர் - பொன் மயமான (மந்தார கற்பக மாலையை) முடியிற் புனைந்த அமரர்கள், (போர் நிகழும் தீவிரத்தால் அங்கு), புகுந்தது ஒன்றும் - நிகழ்ந்த எதனையும், உணர்ந்திலர் - அறிய இயலாதவர்களாய், 'என் செய்தார் என் செய்தார் - (இப்பெருவீரர் இருவரும்) யாது செய்தனர்', என்று இயம்புவார் - என்று விடாது கூறுபவராய், 'இனைய தன்மை - இது போன்ற விற்றொழிலை, முன் யாவர் செய்தார் - இதன் முன்பு யாவரே புரிந்துள்ளனர்', என்பார் - என்று மொழிவார் ; 'முன் ஏது பின் ஏது - இந்த மாதிரிக் கடுந்தொழில் முன்னும் நிகழ்ந்ததில்லை பின்னும் நிகழ்தற்கில்லை', என்பார் - என்று பகர்வார்கள் ; கொன் செய்தார் வீரர் - யாவர்க்கும் அச்சம் எய்துமாறு புரிந்த வீரர்கள் (இருவருள்), இன்ன திசையினர் - இன்ன திக்குகளில் உள்ளார்கள், என்றும் கொள்ளார் - என்று அறியவும் இயலாதவர் ஆயினர்.

என் செய்தார் என் செய்தார் என்ற அடுக்கு வியப்புப் பற்றியது ; 'புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு, மதிமை சாலா மருட்கை நான்கே' (தொல். மெய்ப்பாட். 7-ம் அதன் உரை உதாரணங்களும் காண்க. இங்குப் புதுமைபற்றி வந்தது. முன்

னேது பின்ளேதென்பார்; 'ந பூதே நபவிஷ்யதி' என்பர் வடநூலார். கொன் - அச்சம்; 'கொன்முனை யிரவூர் போல' (குறுந். 91).

பி - ம். 1. இயம்பினர்; இன்னதன்மை.
3. கொன் செய்வேன்.
4. புரிந்தது. 106

இங்கு இரண்டு அதிகப்பாடல்கள் :—

எரிமுகப் பகழி மாரி தொடுத்திகல் அரக்கன் எய்தான்
எரிமுகப் பகழி மாரி தொடுத்தவை யிறுத்தா னெந்தை
உருமினப் பகழி மாரி யுருத்துவிட் டரக்க னூர்த்தான்
உருமினப் பகழி மாரி யுருத்துவிட் டிளவல் கொன்ருன். 1

நெருக்கிமற் றனந்த கோடி
நெடுங்கணை யரக்கன் கோத்தான்
நெருக்கிமற் றனந்த கோடி
நெடுங்கணை நிமலன் மாய்த்தான்
முடுக்கினுற் றனந்த கோடி
முனைக்கணை யரக்கன் மொய்த்தான்
முடுக்கினுற் றனந்த கோடி
முனைக்கணை முடித்தான் மொய்ம்பன். 2

2043. ஆயிர கோடி பல்ல மயிலெயிற் றரக்க னெய்தான்
ஆயிர கோடி பல்லத் தவை துணித் தறுத்தா னையன்
ஆயிர கோடி நாகக் கணைதொடுத் தரக்க னெய்தான்
ஆயிர கோடி நாகக் கணைகளா லறுத்தா னண்ணல்.

அயில் எயிற்று அரக்கன் - கூரிய பற்களையுடைய இந்திரசித்து, ஆயிரம் கோடி பல்லம் எய்தான் - ஆயிரக் கோடிக் கணக்கான அம்புகளை ஏவினுன்; ஐயன் - இளைய கோவும், ஆயிரம் கோடி பல்லத்து - ஆயிரம் கோடி அம்புகளால், அவை துணித்து அறுத்தான் - அந்த அம்புகளை வெட்டி வீழ்த்தினுன்; அரக்கன் - மேகநாதன், ஆயிரம் கோடி நாகம் கணைதொடுத்து எய்தான் - ஆயிரம் கோடி நாகாத்திரங்களை வழங்கினுன்; அண்ணல் - பெருந்தகையான இளையபெருமான், ஆயிரம் கோடி நாக கணைகளால்

அறுத்தான் - பல கோடி நாகாத்திரங்களைக் கொண்டே அவற்றைச் சேதித்தான்.

பல்லம் - தளிர்வாய் அம்பு; வடசொல். இந்தப் போர்முறையுடன்; 'குதிகொண்டவாசி வயவர் பலரொடு குதிகொண்ட வாசி வயவர் குறுகினர்' (வி. பா. 16ஆல் போர். 74) எனத்தொடங்கும் சந்தச் செய்யுளை ஒப்பு நோக்குக. இச்செய்யுள் யமகம்.

பி - ம். 2. அனைவ தொடுத்து.

4. கணை தொடுத்து; ஐயன். 107

2044. கோட்டியின் தலைய கோடி கோடியம்
 பரக்கன் கோத்தான்
கோட்டியின் தலைய கோடி கோடியாற்
 குறைத்தான் கொண்டல்
மீட்டொரு கோடி கோடி வெஞ்சினத்
 தரக்கன் விட்டான்
மீட்டொரு கோடி கோடி கொண்டவை
 தடுத்தான் வீரன்.

அரக்கன் - அரக்கன், கோட்டியின் தலைய - துன்பத்தினைத் தம்மிடத்துக் கொண்ட, கோடிகோடி அம்பு - பலகோடி சரங்களை, கோத்தான் - தொடுத்தான்; கொண்டல் - மேகத்தை ஒத்தவனான இளையகோ, கோட்டியின் தலைய கோடி கோடியாற் குறைத்தான் - துன்பம் செய்யவல்ல பலகோடி பாணங்களால் (அந்த அரக்கன் வழங்கிய அம்புகளை) அறுத்தான்; வெம்சினத்து அரக்கன் - கடுங்கோபம் கொண்ட இந்திரசித்து, மீட்டு ஒரு கோடி கோடி விட்டான் - மீண்டும் கோடிக் கணக்கான வாளிகளை எய்தான்; வீரன் - இலக்குவன், மீட்டு ஒரு கோடி கோடி கொண்டு அவை தடுத்தான் - மீண்டும் கோடிக்கணக்கான அம்புகளால் அவற்றை விலக்கினான்.

கோட்டி துன்பம்: கொண்டல்: நீரைக் கொள்வது என்ற காரணக்குறி; அல்: பெயர் விகுதி; இங்கு உவமையாகு பெயராய்

கொடையினுல் மேகம் ஒத்த இலக்குவனைக் குறித்து நின்றது. இங்கு வாளிக்கொடை அல்லது அம்புவர்ஷம் என்க. முன்னர்ப் 'பொன்னொத்த மேனிப் புயலொத்த தடக்கை யானை' (அயோத்தி. நகர்நீ. 125) என்றமை காண்க.

பா-ம். 1. கொட்டிய நடையா

3. மீட்டிருகோடி

4. மீட்டவை. 108

1045. கங்கபத் திரமோர் கோடி கைவிசைத் தரக்க னெய்தான்
கங்கபத் திரமோர் கோடி கணைதொடுத் திளவல் [காத்தான்
திங்களிற் பாதி கோடி யிலக்குவன் தெரிந்து விட்டான்
திங்களிற் பாதி கோடி தொடுத்தவை யரக்கன் றீர்த்தான்.

அரக்கன் - இந்திரசித்து, ஓர் கோடி கங்கம் பத்திரம் கை விசைத்து எய்தான் - ஒரு கோடிக் கணக்கான கங்கபத்திரம் என்னும் அம்புகளை கையினுல் விரைந்து ஏவினுன்; இளவல் - இளைய வீரனும், ஓர் கோடி கங்க பத்திரம் கணை தொடுத்து காத்தான் - ஓர் கோடி கங்க பத்திரம் என்னும் அம்புகளை விடுத்து அவற்றைத் தடுத்தான்; இலக்குவன் - இளையவன், திங்களில் பாதி கோடி தெரிந்து விட்டான் - கோடி அர்த்த சந்திர பாணங் களை ஆராய்ந்து பொறுக்கி எடுத்துவிட்டான்; அவை-அவற்றை, கோடி திங்களில் பாதி தொடுத்து தீர்த்தான் - கோடிக்கணக்கான அர்த்த சந்திர பாணங்களை விடுத்து ஒழித்தான்.

சங்கபத்திரம்: கழுகுபோன்ற சிறகுகளையுடைய அம்புகள்; கங்கம் - கழுகு; பத்திரம் - சிறகு; யுத்த. 2033 காண்க. காத்தான்- தடுத்தான்; கணமேயுங் காத்தலரிது' (குறள். 29); காத்தான் என்பதற்குத் தன்னைக் காத்துக் கொண்டான் எனினுமாம். திங்களிற் பாதி - அர்த்த சந்திர பாணம். தெரிந்து: குறி நன்கு ஆராய்ந்து எனினுமாம்.

பா-ம். 2. கோடி கணைகளால்

4. தேர்ந்தவை, தெறிந்தவை. 109

2046. கோரையின் தலைய கோடி கொடுங்கணை
யரக்கன் கோத்தான்
கோரையின் தலைய கோடி தொடுத்தவை
யிளவல் கொய்தான்
பாரையின் தலைய கோடி பரப்பின
னிளவல் பல்கால்
பாரையின் தலைய கோடி யரக்கனும்
பதைக்க வெய்தான்.

அரக்கன் - இந்திரசித்து, கோரையின் தலைய கோடி கொடு கணை கோத்தான் - கோரை போன்ற நுனியினை யுடையனவான கோடி கொடியான சரங்களைத் தொடுத்து விட்டான்; இளவல் - இலக்குவன், கோரையின் தலைய கோடி தொடுத்து - கோரையின் நுனியை உடையனவான கோடி (அம்புகளைத்) விடுத்து, அவை கொய்தான் - அவற்றை அறுத்தான்; இளவல் பாரையின் தலைய கோடி பல்கால் பரப்பினன் - இளையகோ பாரை போன்ற தலையை உடையனவான கோடி அம்புகளைப் பலதரம் பரவும்படி செய்தான்; அரக்கனும் - இந்திரசித்தும், பாரையின் தலைய கோடி பதைக்க எய்தான் - பாரையின் தலைபோன்ற கோடி வாளிகளை விரைவாக ஏவினன்.

கோரை ஒருவகைக் கூரிய நுனியினையுடைய புல்வகை. பாரை கடப்பாரை; 'பாரைக்கு நெக்குவிடாப் பாறை' (நல்வழி. 33). ஒருவகை மீனுமாம்; இதன் தலை பருத்திருக்கும்.

பி - ம். 2. கொன்றன்

3. பாய; பார்மேல்; பால்வாய்

4. பரக்க, பாய, பதைப்ப. 110

2047. தாமரைத் தலைய வாளி தாமரைக்
கணக்கிற் சார்ந்த
தாம்வரத் துரந்து முந்தித் தசமுகன்
தனைய னார்த்தான்.

தாமரைத் தலைய வாளி தாமரைக்
 கணக்கிற் சார்ந்த
தாம்வரத் தடுத்து வீழ்த்தான் தாமரைக்
 கண்ணன் தம்பி.

தசமுகன் தனையன் - இராவணன் மகனான இந்திரசித்து, தாமரை தலைய - தாமரை முகை போன்ற நுதியினையுடைய, வாளி - அம்புகள், தாமரை கணக்கில் சார்ந்த - பதுமம் என்ற பேரெழில் அமைந்தனவாய், தாம் - தாம், வர - வில்லினின்று வெளியேற, முந்தி துரந்து - முன்னர்ப் பிரயோகம் செய்து, ஆர்த் தான் - பேரிரைச்சலிட்டான்; தாமரை கண்ணன் தம்பி - செந் தாமரை போன்ற விழிகளையுடைய இராகவன் இளவலான இலக்கு வன், தாமரை தலைய வாளி - தாமரை முகை போன்ற நுதியினை யுடைய அம்புகள், தாமரை கணக்கில் சார்ந்த-பதுமம் என்னும் பேரெண்ணை யொட்டியவாய், தாம்வர - தன் வில்லினின்று வெளியேற, (அவற்றால் அந்த அரக்கன் வாளிகளைத்) தடுத்து வீழ்த்தான் - விலக்கிப் பயனின்றாகச் செய்தான்.

தாமரைத் தலைவாளி - இதனை 'மொட்டம்பு' என்பர். (ரிங்); தாமரை : பத்மம்: அதாவது கோடியினைப் பெருக்கி கோடி. ஒன்று முதல் பதினைந்தாவது தானமான (100000000000000); பதுமம், தாமரைக் கண்ணன்; 'தாதையப்பரி சுரைசெயத் தாமரைக் கண்ணன்' (அயோத்தி. மந்திரப் : 70).

பா - ம். 1. கணத்தில் சாரத்

2. தாமரைக் கணத்திற் சிந்தி, தாமரைக் கணத்தினுந்தி, தாமரைத் துரந்துமுந்தி

3. சார்ந்து, சார

4. தாமரைத் தடுத்து; தாமரைக்கணத்து, தாம்வரத் தடித்து. 111

2048. வச்சிரப் பகழி கோடி வனையெயிற் றரக்க னெய்தான்
வச்சிரப் பகழி கோடி துரந்தவை யனகன் மாய்த்தான்
முச்சிரப் பகழி கோடி யிலக்குவன் முடுக விட்டான்
முச்சிரப் பகழி கோடி தொடுத்தவை தடுத்தான் முன்பன்.

வளையெயிறு அரக்கன் - வளைந்த பற்களையுடைய இந்திர சித்து, கோடி வச்சிரம் பகழி எய்தான் - கோடிக் கணக்கான வச்சிர வாளிகளை விடுத்தான்; அனகன் - குற்றம் தீர்ந்தவனான இளைய வீரன், கோடி வச்சிரம் பகழி துரந்து அவை மாய்த்தான் - கோடிக் கணக்கான வச்சிர வாளிகளைச் செலுத்தி அவன் விடுத்த அம்பு களை அறுத்தொழித்தான்; இலக்குவன் - இளையவன், கோடி மு சிரம் பகழி - கோடிக் கணக்கான 'திரிசிரம்' என்னும் அம்புகளை, முடுக விட்டான் - விரையுமாறு ஏவினான்; முன்பன் - வன்மை வாய்ந்த அரக்கன், கோடி முசிரம் பகழி தொடுத்து அவை தடுத் தான் - கோடிக் கணக்கான 'திரிசிரம்' என்னும் வாளிகளை விடுத்து அவற்றை விலக்கினான்.

வச்சிரப் பகழி : வச்சிரம் போன்ற உறுதியான அம்பு. வளை யெயிற் றரக்கரோடு வரும்வினை யாட்டென் றாலும்' (ஆரணிய, 286). அனகன் - குற்றமற்றவன் : 'அனகனும் இளையகோவும்' (ஆரணிய 1193). முச்சிரம் : மூன்று நுனி : 'முத்தலை எயில் என்றாற் போன்று' முன்பன் : வலியன்; 'முத்தலைச் சூல மோச்சான் வெறுங்கை யானென்று முன்பன்' (யுத்த. 1390). 'முன்பன் மேல் வரத் துரந்தனன்' (யுத்த. வேலே : 24).

பி - ம். 1. வாளெயிற்று
2. துறந்தவை யிளவல்
3. முடுக்கி, முடுகி
4. முறையிற்கொய்தான், தடுத்தான் மொய்ம்பன். 112

2049. அஞ்சலி யஞ்சு கோடி தொடுத்திக லரக்க னெய்தான்
அஞ்சலி யஞ்சு கோடி தொடுத்தவை யறுத்தா னையன்
குஞ்சரக் கன்னங் கோடி யிலக்குவன் சிலையிற் கோத்தான்
குஞ்சரக் கன்னங் கோடி தொடுத்தவை யரக்கன்
[காத்தான்.

இகல் அரக்கன் - வலிமை சான்ற இந்திரசித்து, அஞ்சு கோடி அஞ்சலி தொடுத்து எய்தான் - அஞ்சு கோடியளவினவான அஞ்சலி என்ற வாளிகளைத் தொடுத்து விடுத்தான்; ஐயன் - (அழகனான) இலக்குவன், அவை - அந்த அம்புகளை, அஞ்சு,

கோடி அஞ்சலி தொடுத்து அறுத்தான் - அஞ்சு கோடி அளவின வான வாளிகளைத் தொடுத்துச் சேதித்தான்; இலக்குவன் - இளைய செம்மல், கோடி குஞ்சரம் கன்னம் சிலையில் கோத்தான் - கோடிக் கணக்கான குஞ்சரக் கன்னம் என்ற வாளிகளை வில்லில் கோத்து விடுத்தான்; அரக்கன் - இந்திரசித்து, (அந்தச் சரங்களைக்) கோடிக் குஞ்சரம் கன்னம் தொடுத்து காத்தான் - கோடிக் கணக்கான குஞ்சரக் கன்னங்களை எவித் தன்னைக் காத்துக் கொண்டான்.

அஞ்சலி: ஒருவகைப் பாணம்; அஞ்சலிப்பது போன்று தரையில் வீழ்வது போலும். இகல் அரக்கன் - வலிய இராக்கதன்; 'ஏற்றவளை வரிசிலையோன் இயம்பாமுன் இகலரக்கி' (ஆரணிய. 340). குஞ்சரக் கன்னம்: வடசொற்றொடர்: யானையின் காது போன்ற பகழி என்க. கர்ணம்: கன்னம் எனத் திரிந்தது; 'கன்னங்களில் வேறுள காணுதுமால்' (ஆரணிய. 778). காத்தான்: தடுத்தான் எனினுமாம்: குறள். 29.

பி - ம். 1. ஆர்த்தான்

2. கோடி தொடுத்திவை, கோடியாற்றடுத்து; தடுத்தானையவன்

4. கன்னகோடி; கொய்தான். 113

2050. எய்யவு மெய்த வாளி விலக்கவு முலக மெல்லாம்
மொய்கணைக் கான மாகி முடிந்தது முழங்கு வேலை
பெய்கணைப் பொதிக ளாலே வளர்ந்தது பிறந்த கோபம்
கைம்மிகக் கனன்ற தல்லால் தளர்ந்திலர் காளை வீரர்.

(இவ்வாறு இரு பெரு வீரரும் அம்புகளை) எய்யவும் எய்த வாளி விலக்கவும் - ஏவுவதாலும், ஏவப்பட்ட அம்புகளைத் தடுத்தலாலும், உலகம் எல்லாம் - உலகனைத்தும், மொய்கணை கானம் ஆகி முடிந்தது - அடர்ந்த அம்புத்தொகுதி மயமாகிவிட்டது; முழங்கு வேலை - ஆரவாரிக்கும் கடல், பெய்கணை பொதிகளாலே வளர்ந்தது - சொரிகின்ற வாளிகளாலே பெருகி நின்றது; (அவ்வாறாகவும்), காளை வீரர் - இளைய எருது போன்ற அந்த வீரர்கள் இருவரிடமும், பிறந்த கோபம் - உண்டான சினம், கை மிக -

மிகுதியாக, கனன்றது அல்லால் - மேன்மேலும் கொதித்தெழுந்த தல்லாமல், தளர்ந்திலர்; (சிறிதும்) குறையப்பெற்றாரில்லை

கணைக் கானம்: அம்புக் காடு. முழங்கு வேலை: ஆர்கலி. பெய்கணைப் பொதிகள் - பொழியப் பெறும் அம்பு மூடைகள் கைம்மிக: கை; உபசர்க்கம். காளை: உவமவாகு பெயர்; 'கல்லென்ற ஒலியிற் சென்றார் கான்முதற் காளை வீரர்' (ஆரணிய. 617); காளை வீரர் கோபம் தணிந்திலர்; அஃறிணைப் பண்புப் பெயர் உயர்திணை எழுவாயைத் தொடர்ந்து அம்முடிபேற்றது. கைம்மிக 'காந்தின மனத்தினர் புலவிகைம்மிக' (ஆரணிய. 591).

பி - ம். 1. உலகமெங்கும்

2. கானமாக

3. பொறிகளாலே; வறண்டது, பெயர்ந்தது, பறந்தது. 114

2051. விழியின் கனிபோன் மேனி கிழிபட வனுமன் வீரச்
சூழெழு வனைய தோண்மே லாயிரம் பகழி தூவி
ஊழியி னிமிர்ந்த செந்தீ யுருமினை யுமிழ்வ தென்ன
ஏழிரு நூறு வாளி யிலக்குவன் கவசத் தெய்தான்.

(இந்திரசித்தானவன்), விழியின் கனிபோல் அநுமன் மேனி கிழிபட - விழிப்பழம்போன்று அநுமனுடைய உடலம் கிழிபடும் படி, (அவனது) வீரம் சூழ் எழு அனைய தோள்மேல் - வீரம் செறிந்த திரண்ட இருப்புக்கம்பம் ஒத்த தோள்களின்மீது, ஆயிரம் பகழி தூவி - ஆயிரம் அம்புகளைப் பொழிந்து, ஊழியின் நிமிர்ந்த செந்தீ உருமினை உமிழ்வது என்ன - பிரளயத்தில் உயர எழுந்த வடவைத்தீயானது சிவந்த நெருப்புமயமான இடியை வெளிப்படுத்துவது போன்று, ஏழ் இரு நூறு வாளி - ஆயிரத்து நானூறு அம்புகளை, இலக்குவன் கவசத்து எய்தான் - இலக்குவனுடைய கவசத்தின் மீது விடுத்தான்.

விழி - செந்நிறமான ஓர் கனி. விழியை விழுதி என்றும் சொல்வர். இச்சொல்லைப் பல இடங்களில் உவமையாக எடுத்தாள்வர் கம்பநாடர்; பால. புனல்விளை. 28; யுத்த. 805; யுத்த.

2306; கிட்கிந்தா. 30 உரைக்குறிப்பு என்பன காண்க. ஊழியின் நிமிர்ந்த செந்தீ - வடவைத்தீ; உரும் - இடி; ஆரணிய. 602, 689.

பி - ம். 1. விரந்

3. ஊழியினெழுந்த. 115

2052. முற்கொண்டா னரக்க னென்னு முளரிவாண்
முகங்கள் தேவர்
பிற்கொண்டா ரிளைய கோவைப் பியற்கொண்டயன்
பெருந்தோ ணின்றுங்
கற்கொண்டார் கிரியின் நாலு மருவிபோற்
குருதி கண்டார்
விற்கொண்டா னிவனே யென்னு வெருக்கொண்டார்
முனிவர் மேலோர்.

மேலோர் தேவர் - விண்மிதிருந்த அமரர்கள், 'அரக்கன் முன் கொண்டான் - இந்திரசித்து (போர்ச் செயலில்) முன்னேறி விட்டனன்', என்னு - என்று எண்ணி, முளரி வாள் முகங்கள் பின் கொண்டார் - தாமரைபோன்ற ஒளிகொண்ட முகங்களைப் பின்புறமாகத் திருப்பிக்கொண்டனர்; முனிவர் - இருடிகளும், இளைய கோவை - இலக்குவனை, பியல் கொண்டான் பெரு தோள் நின்றும் - (தனது) பிடரியின்மீது ஏற்றி வைத்துக்கொண்டுள்ளவனை அநுமனுடைய பரந்த தோள்களினின்று (பெருகுவதாகிக்), கல் கொண்டு ஆர் - கற்களால் நிறைந்துள்ள, கிரியின் நாலும் அருவிபோல் - மலையிலிருந்து வீழ்கின்ற அருவிபோன்ற, குருதி கண்டார் - உதிரத்தைக் கண்ணுற்றாராய், 'வில் கொண்டான் இவனே - வில்வித்தையிற் சிறந்தவன் இவனே', என்னு - என்று மொழிந்து, வெரு கொண்டார் - (எங்கு பங்கம் நிகழுமோ) என்று அஞ்சினர்.

முளரி: காரணவிடுகுறி. பியல் - பிடர்; 'புலித்தோல் பியற்குமிட்டு' (தேவா. 186:4); 'பெரும்பியல் தலைகள் சிந்தி' (யுத்த. 1624). கல்கொண்டு ஆர் எனப் பிரிக்கப்பட்டது. நாலுதல் - வீழ்தல்; 'நாரியதங் கூந்தலினும் நாலும் அருவியினும், வேரி னறுஞ் சாந்தொழுகும் வேங்கடமே' (திருவேங்கடமாலை: 81). விற்

கொண்டான் இவனே : 'திண்மைக்கிவனே நெறிக்கிவனே தேசுக் கிவனே சிலைக்கிவனே' (வி. பா. திரௌபதிமாலை. 39) என வருதல் காண்க.

பி-ம். 1. முகங்கொள்

2. பெயர்கொண்டான், பெயற்கொண்டான், பெயர் கொண்டார்; தேர் நின்றும்

3. கிரியின் மேல்வார்

4. விற்கொண்டால்; விண்ணோரெல்லாம். 116

2053. சீறுநூ றெரிந்த சிந்தை யிலக்குவன் சிலைக்கை வாளி
நூறுநூ றேவி நொய்தி னுடங்குளை மடங்கன் மாவும்
வேறுகூ றியற்றி வீரக் கொடியையு மறுத்து வீழ்த்தி
ஆறுநூ றம்பு செம்பொற் கவசம்புக் கழுந்த வெய்தான்.

சீறு நூல் தெரிந்த சிந்தை இலக்குவன் - சினந்து செய்யும் போர்முறையினைக் கூறும் நூல்களை நன்கு உணர்ந்துள்ள இளைய பெருமாள், சிலை கை - (தனது) கரத்தில் உள்ள வில்லினின்று, நூறு நூறு வாளி ஏவி - நூற்றுக்கணக்கான அம்புகளை விடுத்து, நுடங்கு உளை மடங்கன் மாவும் - மடங்கியுள்ள பிடரிமயிரினையுடைய சிங்கங்களை, நொய்தின் வேறு கூறு இயற்றி - விரைவில் (அல்லது) எளிதாக வெவ்வேறு துண்டங்களாகச் செய்து, வீரம் கொடியையும் அறுத்து வீழ்த்தி - வீரத்தின் அடையாளமான கொடியினையும் துணித்து விழச்செய்து, (அவன் அணிந்திருந்த), செம் பொன் கவசம் புக்கு - செம்பொன்மயமான கவசத்துட் புகுந்து, அழுந்த - அழுந்துமாறு, ஆறு நூறு அம்பு எய்தான் - ஆறு நூறு வாளிகளை ஏவினன்.

சீறுநூல் - யுத்த சாஸ்திரம்; சீறும் நூல் என்றது உபசார வழக்கு. பழிக்குப்பழி வாங்கும் வாள் என்றாற்போல. வீரக் கொடியையும் என்ற உம்மையால் பாகனையும் வெட்டி வீழ்த்தமை கொள்க. சாரதி வீழ்ந்தது; 119 இலும் காணலாம். ஆறுநூ றம்பு ; (ஒப்பு) : 'ஆறுநூறு சகடத் தடிசிலும்' (யுத்த. 1264); இலக்குவன் எய்தான் என்க.

பி-ம். 1. சிறி

2. ஏவ; வெய்தின்; அடங்கன்மாவும்

3. வேறியற்றி, சுற்றி, விழ்த்தி 117

2054. காளமே கத்தைச் சார்ந்த கதிரவ னென்னக் காந்தித்
தோளின்மேன் மார்பின் மேலுஞ் சுடர்விடு கவசஞ் சூழ
நீள்நீள் பவள வல்லி நிரையொளி நிமிர்வ வென்ன
வாளிவாய் தோறும் வந்து வடிந்தன குருதி வாரி.

காளம் மேகத்தை சார்ந்த கதிரவன் என்ன - கருமேகத்தைப் பொருந்திய சூரியன்போன்று, காந்தி - ஒளிவீசி, தோளின்மேல் மார்பின் மேலும் - இந்திரசித்தினுடைய தோளின்மீதும் மார்பினிடத்தும், சுடர் விடு கவசம் சூழ - ஒளிவிடுகின்ற கவசத்தைச் சுற்றிலும், நீள நீள் பவளம் வல்லி நிரை - நீளமாக நீண்டுள்ள பவளக்கொடிகளின் வரிசைகள், ஒளி நிமிர்வ என்ன - ஒளியுயர்ந்து விளங்குவதுபோன்று, குருதி வாரி வாளி வாய்தொறும் வந்து வடிந்தன - (இலக்குவன் எய்த) அம்புகள் தைத்த இடந்தோறும் இரத்தம் வந்து ஒழுகின.

இந்திரசித்தின் கரிய மேனியில் அணியப்பெற்றிருந்த பொற் கலசத்திற்குக் காளமேகத்தைச் சார்ந்த கதிரவன் உவமை; 'வெங்கதிர் கரந்த மேகம்' (யுத்த. 853); 'வெய்யவன் தன்னைச் சார்ந்த நீனிறமேக மொத்தான்' (யுத்த. நாகபாசப். 221). பொடித்தன குருதி: 'புண்ணுற்ற நிறத்திற் சோரி பொங்கியே பொடிப்ப (கிட்கிந்தா. 304). அம்புகள் தைத்த இடந்தொறும் பொடித்த' குருதிக்குப் பவளக்கொடியின் ஒளியை உவமித்தார்; (ஒப்பு): 'பவளம்சொரிதரு பைபோல் திவளொளிய' (களவழி. 14).

பி - ம். 2. சுடர் விடுகவசத்தூடு, கவசச்சூழல்

3. நிளுநிர், நிளணி; நிரைந்தன, நிரைந்தன: விழ்ப்ப விழ்வ

4. பொழந்ததுர் உதிரவாரி.



2055. பொன்னுறு தடந்தேர் பூண்ட
மடங்கன்மாப் புரண்ட போதும்
மின்னுறு பதாகை யோடு
சாரதி விழ்ந்த போதும்
தன்விறத் துருவ வாளி
தடுப்பில சார்ந்த போதும்
இன்னதென் றறியா னன்னு
வினையதோர் மாற்றஞ் சொன்னுன்.

(இலக்குவன் தொடுத்த சரங்களால்) பொன்உறு - பொன்னி ஞல் இயன்ற, தட - பெரிய, தேர் பூண்ட - இரதத்திற் பூட்டப் பெற்ற, மடங்கல்மா புரண்ட போதும் - தரையில் இறந்து வீழ்ந்து புரண்ட காலத்தும், மின் உறு பதாகையோடு - ஒளி பொருந்திய கொடியுடனே, சாரதி வீழ்ந்த போதும் - தேர்ப்பாகன் மரித்து வீழ்ந்த காலத்தும், தன் நிறத்து உருவ - தனது மார்பில் அம்புகள் ஊடுருவுமாறு, வாளி - அம்புகள், தடுப்பு இல சார்ந்த போதும் - தடுக்க முடியாதனவாய்த்தைத்த காலத்தும், இன்னது என்று அறியான் - இன்னதென்று (ஏதும்) உணராதவனுய், அன்னுன் - அந்த அரக்கர் கோவின் புதல்வன், இனையது ஓர்மாற்றம் சொன் ஞன் - இத் தன்மையதான ஓர் வார்த்தையைப் பகர்ந்தான்.

உறுத்தல் : செய்தல் ; பொன்உறு - பொன் உறுத்திச் செய் யப்பட்ட என்க. தட : பெரிய ; 'தடவும் கயவும் நளியும் பெருமை' (தொல். சொல் : மடங்கல்மா : இரு பெயரொட்டு; பதாகை ; பெருங் கொடி ; (யுத்த. 2030 ; 971) மூலபல. 83 : இன்னது இனையது என்று அறியான் அன்னுன் ஓர் மாற்றம் சொன்ஞன் என இயைத் தலும் ஆம். மாற்றல் : வார்த்தை ; 'மாற்ற மஃதுரை செய' (அயோத்தி. மந்தரை : 51) ; அடுத்த பாட்டில் மாற்றுரைப் புகழ் தலின் தன்னை மறந்து அங்ஙனம் செய்ததாகக் கூறினன். அவன் எதிரியின் ஆற்றலை நேரிற் கண்டு வியந்து கூறிய இடங்களும் உண்டு; (யுத்த. இந்திரசித்து வதை : 4, 5) காண்க,

பி - ம். 2. வியந்த, விழுந்த.
3. தன்னிறந் துருவி. 119

2056. அந்நர னல்ல ஞகின் நாரணை னனைய னன்றேல்
பின்னரன் பிரம னென்பார்ப் பேசுக பிறந்து வாழும்
மன்னர்நம் பதியின் வந்து வரிசிலை பிடித்த கல்வி
இந்நரன் தன்னெ டொப்பா ரியாருள ரொருவ ரென்ருன்.

'(இந்த இலக்குவன்) அ நரன் - அந்த நரனே யாவன்; அல்லன் ஆகில் - அவன் அல்லாவிடின், நாரணன் அனையன் - நாரா யணனையே ஒப்பான் ; அன்றேல் - அவனும் அல்லன் ஆயின், பின்

அரன் பிரமன் என்பார் பேசுக-அவற்றை அடுத்துச் சிவன் பிரமன் என்ற தேவர்களை (உவமையாக்கி) கூறுக; நம் பதியின் வந்து - நமது நகரிடத்தே வந்து, வரிசிலை பிடித்த கல்வி - கட்டமைந்த வில்லைத் தாங்கிய வில் வித்தையில் தேர்ந்துள்ள, இ நரன் தன்னொடு ஒப்பார் - இம் மனிதனை நிகர்ப்பவர், பிறந்து வாழும் மன்னர்-உலகிற்றோன்றி வாழ்கின்ற மன்னருள், யார் ஒருவர் உளர்-எவர் ஒருவர் இருக்கின்றனர்?' என்றான் - என்று இந்திரசித்து இலக்குவனைப் புகழ்ந்து கொண்டாடினான்.

இலக்குவனுக்கு உவமை கூறின் திரிமூர்த்திகளைத்தான் சொல்ல வேண்டும்; பிறர் யாரையும் சொல்வதற்கில்லை என்றான். ஏனையோரை வாளா உவமை கூறி நாரணன் அனையான் என்றது கருதத்தக்கது. முன்னொரு காலத்தில் குருசீடக் கிரமத்தை உலகத்தார்க்குத் தெரிவித்தற்காக, திருமால் தானாகவே நரன் என்னும் சீடனும் நாராயணன் என்ற ஆசார்யனுமாகப் பதரிகாச்சிரமத்தில் தோன்றி உபதேசகராக வீற்றிருந்தார் என்றது வரலாறு: அந் நரன் என்ற இடத்துத் திருமாலின் அவதார விசேடமாகிய நரனையும், இறுதியடியில் உள்ள நரன் இலக்குவனையும் குறித்து நின்றன. அருச்சுனனிடம் கண்ண பிரான் தாமிருவரும் நர நாரணராக இருந்ததாகக் கூறியது பகவற் கீதையிற் காண்க. அந் நரன்; அபண்டறிசுட்டு, நாராயணன் என்பது செய்யுள் நோக்கி நாரணன் என நின்றது; 'நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவர் கூற, (பால. பாயிரம்); மற்றும் (யுத்த. இராவணன் வதை: 186 : 192 'தன்னூர்க்கு யானை அயலூர்க்குப் பூனை' என்பது பழமொழி. திருக்குறள் இடமறிதல் என்ற அதிகாரத்தில், 'நெடும் புனலுள் வெல்லு முதலை யடும்புனலி, னீங்கின் அதனைப்பிற (குறள். 495) என்று சொல்லப்பட்டது; இதற்கு மாறாக எதிரியின் தேயம் சென்று வில் வித்தைத் திறனைக் காட்டினன் இளைய பெருமான் ஆகலின், இங்ஙனம் இந்திரசித்து வியந்தான் என்க. புதுமை பற்றி யெழுந்த வியப்பு.

பி - ம். 1. அன்னரன்; அல்லாற்.

2. பின்னரல்; என்பார் பேசுக.

3. மன்னர்தம்; விதியால்; வடித்த. விளைத்த.

4. இன்னரன்; இனையர்.

## தேர் அழியப் பிறிதொரு தேரில் நின்று இந்திரசித்து பொருதல்

2057. வாயிடை நெருப்புக் கால வுடனெடுங் குருதி வாரத்
தீயிடை நெய்வார்த் தன்ன வெகுளியா னுயிர்தீர்ந் தாலும்
ஓய்விட மில்லான் வல்லை யோரிமை யொடுங்கா முன்னம்
ஆயிரம் புரவி பூண்ட வாழியந் தேரி னானன்.

உயிர் தீர்ந்தாலும் ஓய்விடம் இல்லான் - (தன்) உயிர் ஒழிவதாயிருந்தாலும் (போர்ச் செயலைக்) கைவிடாதவனாகிய இந்திரசித்து, வாய்இடை நெருப்பு கால - வாயில் தீ எழவும், உடல் - உடலில், நெடு குருதி வார - மிக்க உதிரம் பெருகி வழியவும், தீயிடை நெய் வார்த்து அன்ன - நெருப்பில் நெய்யை ஊற்றினாற் போன்ற வெகுளியான் - சினத்தினனாய், வல்லை - விரைவாக, ஓர் இமை ஒடுங்கா முன்னம் - ஒரு முறை இமை மூடுவதற்கு முன்பே, (ஒரு மாத்திரை அளவிற்குள்ளாக), ஆயிரம் புரவி பூண்ட ஆழி அம் தேரின் ஆனான் - ஆயிரம் குதிரைகள் பூண்டதும், ஆழி - சக்கரங்களை யுடையதுமான அழகிய மற்றொரு இரதத்தின்மீது ஏறிக் கொண்டான்.

காலுதல்: உமிழ்தல்; பெரும்பாண். 2-ஆம் அடியின் உரைக் குறிப்புக் காண்க. 'பச்சை மாலனைய மேகம் பௌவ நீர் பருகிக் கான்ற, எச்சில்' (டாக்டர். ஐயர் தனிப்பா); நெடுங்குருதி: விடாது ஒழுகும் உதிரம், தீயிடை நெய் வார்த்தது; வெகுளி எழுந்ததற்கு நல்ல உவமை; 'காய் கனற்றலை நெய்சொரிந் தெனக்கதம் கனற்ற' (அயோத்தி. மந்தரை: 63); 'நெய் பெய்தீயின்' (குறுந். 106); 'நெய் பெய்து மாட்டிய சுடர்' (குறுந். 398) (யுத்த. 2059). மரணத்திற்கும் அஞ்சாதவன் என்று அவன் வீரம் 'உயிர் தீர்ந்தாலும் ஓய்விட மில்லான்' என்ற தொடராற் குறிக்கப் பெற்றது. ஓரிமை ஒடுங்குதல்: ஒரு மாத்திரை அளவு 'கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை' (தொல். எழுத். 7); முன்னர் அக்க குமரன் கையாண்டது 'நூறொடு நூறு பூண்ட நொறில் வயப்புரவி நோன்தேர்' (சுந்தர. 937); இந்திரசித்துப் பின்னர் ஏறுவது, 'ஆயிர மடங்கல் பூண்ட

பொங்கொடி நெடுந்தேர்' (யுத்த. பிரமாத்திர: 4); 'ஆயிரம் புரவி பூண்ட தேர்' கும்பகன்னன் தேரும் ஆயிரம பரி பூண்டது' (யுத்த. இந்திரசித்து, 17); (யுத்த. 1435); இவ்வாறு அரக்கர் தலைவர்கள் ஏறிய தேர்களின் ஏற்றத் தாழ்வு காண்க.

பி - ம். 2. உடலெழுங்; மண்டத்.

2. ஓரிமம்.

4. தேரன் ஆனன். 121

## வேறு

2058. ஆசை யெங்கணு மம்புக வெம்புபோர்
ஓசை விம்ம வுருத்திர னும்முடல்
கூச வாயிர கோடி கொலைக்கணை
வீசி விண்ணை வெளியில தாக்கினன்.

வெம்பு போர் ஓசைவிம்ம - வீரர் மனம் கொதித்துச் செய்யும் போரினது ஒலி பெருகி எழவும், உருத்திரனும் - (அழித்தல் தொழிலினன் ஆன) சிவபெருமானும், உடல் கூச - உடம்பு நடுக்குறவும், ஆசை எங்கணும் - எல்லாத் திக்குகளிலும், அம்புஉக - அம்புகள் சிதறும்படியும், ஆயிரம் கோடி கொலைகணை வீசி - பல கோடிக்கணக்கான கொல்லும் தன்மையுடைய வாளிகளை விடுத்து, விண்ணை வெளி இலது ஆக்கினன் - ஆகாயத்தை வெற்றிடம் இல்லையாம்படி செய்தான்.

ஆசை: திக்கு; 'ஆசைக டோறும் மள்ளின கொள்ளி' (யுத்த. மாயாசீதை: 22); 'பெயர்ந்தாசைக் கரியிரியப் புருவம் பேர்த்தாய்; (யுத்த. இராவணன் வதைப்: 221(; அம்புக வெம்பு போர்; எதுகை நயம் காண்க; சர்வ சங்காரம் புரியும் உருத்திரனும் கூசினன் என்று அரக்கனது கொலைத் தொழிலை மிகுத்துக் கூறினர். கூச: 'கூசியாவி குலையுறுவாளையும் (சுந்தர. 428, 431-ம்) காண்க.

பி - ம். 2. உருத்திரும். 122

இதன் பின் 'ஆயிரம்' என்ற கவி ஓர் பிரதியில்.

2059. அத்தி றத்தி லனகனு மாயிரம்
பத்தி பத்தியி னெய்குவ பல்கணை
சித்தி ரத்தினிற் சிந்தி யிராவணன்
புத்தி ரற்குமொ ராயிரம் போக்கினன்.

அனகனும் - குற்ற மற்றவனாகிய இலக்குவனும், அ திறத்தில் - அப்பொழுது, பத்தி பத்தியின - வரிசை வரிசையாக, எய்குவ - விடுவனவாகிய, பல் ஆயிரம் கணை - பல்லாயிரம் வாளிகளை, சித்திரத்தினில் சிந்தி - (கண்டோர்) வியப்புறுமாறு சிதறி (அரக்கன் சரங்களை அறுத்து) இராவணன் புத்திரற்கும் ஓர் ஆயிரம் போக்கினன் - இராவணன் புதல்வனான இந்திரசித்தின்மீதும் ஆயிரம் பகழிகளைச் செலுத்தினன்.

அனகன்; குற்றமற்றவன். 'கோடி துரந்தவை அனகன் மாய்த்தான்' (யுத்த. 2048); 'பாசத்தால் அனகன் தம்பி' (யுத்த. நாகபாச: 209); 'உயர் அனகனொடு மமரின் முடுகி; (யுத்த. மூலபல: 161); பத்தி: வரிசை; 'நூறு பத்துடைப் பத்தி நெறிற்பரி பூண்ட' (யுத்த. 1435); 'தோளின் பத்திக டோறும் சுமந்தன' (யுத்த. இராவணன் வதை: 166); சித்திரம்: ஆச்சரியம்; 'சித்திர மிங்கிது வொப்ப தெங்குண்டு' (பால. கார்முகப்: 19); 'சித்திர விலக்கமாகும்' (சுந்தர. 448); புத்திரன்: பெற்றோரைப் புத் தெனும் நரகத்திற் புகாமல் காப்பவன் என்று பொருள்படும் என்பார். இக் கருத்துக் கொண்டேதான் 'தென் புலம் வாழ்நர்க் கருங்கட னிறுக்கும், பொன்போற் புதல்வர்ப் பெறு அதீரும்' (புறநா. 9) என்று கூறப்பட்டது. 'புத்தான கொடுவினையோ டருந் துயரம் போயொளிப்ப' (பால. திருவவ: 36) என்றதும் காண்க.

பி - ம். 1. அந்திறத்தினன். அத்திறத்தினில்; ஐயனும்.
2. எய்துவ, எய்துறும்.

123

இஃது ஓர் பிரதியில் இல்லை.

2060. ஆயி ரங்கணை பாய்தலு மாற்றரும்
காயெ ரித்தலை நெய்யெனக் காந்துருத்
தீய வன்பெருஞ் சேவகன் சென்னிமேல்
தூய வெங்கணை நூறுடன் தூண்டினன்.

ஆயிரம் கணை - (இலக்குவன் விடுத்த) ஆயிரம் பாணங்களும், பாய்தலும் - (இந்திரசித்தின்மீது) தாக்கிய அளவில், மாற்றரும் - மாற்றுதற்கு முடியாத, காய் எரிதலை நெய் என காந்துரு - பொங்குகின்ற நெருப்பின்மீது நெய் சொரிந்தாலென மனம் கொதித்து, தீயவன் - கொடியவன் ஆன இந்திரசித்து, பெரு சேவகன் - பெரிய வீரன் ஆன இலக்குவனுடைய, சென்னிமேல் - நெற்றிமீது, தூய வெம்கணை நூறு உடன் தூண்டினான் - தூய்மையும் வெம்மையும் கொண்ட அம்புகள் ஒரு நூற்றினை ஏக காலத்துச் செலுத்தினான்.

மாற்றரும்: 'மாற்றரும் கூற்றம் சாற்றிய பெருமையும்' (தொல். புறத். 79); 'காயெரித்தலை நெய்யெனக் காந்துரு' (அயோத்தி. மந்தரை. 63); யுத்த. 2057ம் காண்க. காந்துரு: உரு; செய்யா என்னும் வாய்பாடு. சேவகன்: வீரன்; 'வீரச சேவகச் செய்கை கண்டால்' (யுத்த. 1240); 'சேவகனாகித் திண் சிலையேந்தி' (திருவாச. 2:81); 'குதிரைச் சேவகனாகிய கொள்கையும்' (திருவாச. அகவல்). சென்னி - தலை; இங்கு நெற்றியென்று பொருள் செய்யப்பட்டது; அடுத்த செய்யுளில் 'நெற்றிமேலொரு' என வருதல் காண்க. கணைக்குத் தூய்மை குறிதவறாமை; நல்லோர்க்குச் சத்தியம் தவறாமைபோன்று என்க; ஒரு கணையே நூறாகக் கிளைக்கும் என்பர் 'உற்பத்தி யயனே யொக்கும்' (யுத்த. 1257) என்றமை காண்க. 'தூயவன் சுடர் சூழொளிநெற்றியில், தீயவெங்கணை நூறு செலுத்தினான்' என்ற பாடம் கொள்வர் சிலர்; அங்ஙனம் கொண்டால், இந்திரசித்து என்ற எழுவாய் தருவிக்க வேண்டும்; மேலும் காந்துரு என்ற வினைக்கேற்பத் தீயவன் என இயைத்தல் நன்கு பொருந்துவது உய்த்துணர்க. முதலடியில் 'ஆற்றரும்' எனக் கோடலுமாம்.

பி - ம். 1. பாய்தலும்.

2. காயெரிப்படு; காந்தினன்.

3. தூயவன் சுடர் சூழொளி நெற்றியில், தீய வெங்கணை நூறு செலுத்தினான்.

124

2061. நெற்றி மேலொரு நூறு நெடுங்கணை
உற்ற போதினு மியாதுமோன் றுற்றிலன்
மற்ற வன்தொழி லோன்மணி மார்பிடை
முற்ற வெங்கணை நூறு முடுக்கினான்.

நெற்றிமேல் - (தனது) நெற்றியின்மீது, ஒரு நூறு நெடுகணை உற்ற போதினும் - (இந்திரசித்து விடுத்த) ஒப்பற்ற நூறு பெரிய அம்புகள் தாக்கிய போதிலும், யாது ஒன்றும் உற்றிலன் - எந்தவித மான ஊறுபாடும் அடையாதவனாய், அவன் தொழிலோன் மணி மார்பிடை முற்ற - அந்த வலிய செய்கையன் ஆன அந்த அரக்க னுடைய அழகிய மார்பிடத்து (முழுதும் துளைத்துச் செல்லுமாறு), நூறு வெம்கணை முடுக்கினான் - நூறு கோடி அம்புகளை விரைந்து செலுத்தினான்.

யாதொன்றும் உற்றிலன் என்பதற்கு எந்தவிதமான மன வருத்தமும் எய்திலன் என்றும் பொருள் கொள்வர்; யாதொன்றும் என உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. மற்று அவன் தொழி லோன் எனப் பிரித்து மற்று வினைமாற்றாகக் கொள்ளப்பட்டது. முடுக்குதல்: விரைந்து தூண்டுதல்; 'கடுகி முடுக்கிலும்' (விநாயகபு. 55:7); 'அறலைக் கடித்து சைவலத்தை முடுக்கி' (அரிச். பு. விவாக. 11).

பி - ம். 1. மேலுமோர். 3. மற்றவ்வெந்.

125

இதன் பின் 'புதையும்' என்ற கவி ஓர் பிரதியில்.

### இந்திரசித்து பொரமாட்டாது வில்லூன்றி நிற்றல்

2062. நூறு வெங்கணை மார்பி னுழைதலின்
ஊறு சோரியொ டுள்ளமுஞ் சோர்தரத்
தேற லாந்துணை யுஞ்சிலை யூன்றியே
ஆறி நின்றன னாற்றலிற் றோற்றிலான்.

ஆற்றலில் தோற்றிலான் - (போர் செய்யும்) திறத்தில், (இது காறும்) தோல்வியுறாதவனான இந்திரசித்து, நூறு வெம்கணை - (இலக்குவனுடைய) நூறு கொடிய வாளிகள், மார்பின் நுழை தலின் - (தனது) மார்பில் புகுந்ததனால், ஊறு சோரியொடு - மென் மேல் உதிரம் பெருகுதலுடனே, உள்ளமும் சோர்தர - மனமும் களைப்புற, தேறலாம் துணையும் - (களைப்பு நீங்கித்) தேறுதல் உண்டாகும் வரை, சிலை ஊன்றியே - (ஊன்றுகோற் போன்று)

தேரில் ஊன்றி நின்று, ஆறி நின்றனன் - ஒன்றும் புரியாமல் ஓய்ந்திருந்தான்.

முன் செய்யுட்கண் 'முற்ற' என்றதற்கேற்ப இங்கு நுழைதலின் எனப்பட்டது. சோர்தல் உதிரம் ஒழுகுதற்கும் உள்ளம் தளர்தற்கும் ஒரே வினையாகச் சமத்காரம் தோன்றக் கூறப்பட்டது. 'மென் மருங்குல் போல் வேறுள வங்கமும் மெலிந்தாள்' (சுந்தர. 332); 'உள்ளமும் கோடிய கொடியாள்' (அயோத்தி. மந்தரை: 81); 'அங்கையும் உள்ளமும் குவிந்த யாக்கையர்' (ஆரணிய. 562); 'சிந்திப்போம் இருவினையும் சிந்திப்போமே' (தனிப்பா). அவமானம் சோர்வு கூச்சம் இவை காரணமாகச் சிலையினைத் தரையில் ஊன்றுவதுண்டு; வாலி மனைவி தாரையைக் கண்ட இலக்குவன், 'தாமரை வதனம் சாய்த்துத் தனுநெடுந் தரைக்கை யூன்றி' (கிட்கிந்தா. 599); நின்றமை கூறப் பெறுதல் காண்க. வீரத்தோடும் அம்பெய்தற்குரிய வில் இங்கு களைப்பால் ஊன்றுகோலாக ஆயினமை காண்க. 'மம்மர்கொள் மாந்தர்க் கணங்காகும் தன் கைக்கோல், அம்மனைக்கோ லாகிய ஞான்று' (நாலடி. 15); (ஒப்பு): அயோத்தி. நகர்நீ. 163.

பி - ம். 1. நுழைதலும். 126

## இந்திரசித்து அநுமன் தேரை அழித்தது

2063. புதையு நன்மணிப் பொன்னுரு ளச்சொடும்
சிதைய வாயிரம் பாய்பரி சிந்திட
வதையின் மற்றொரு கூற்றென மாருதி
உதையி னுலவன் றேரை யுருட்டினன்.

வதையில் மற்றொரு கூற்று, அன மாருதி - சிவபெருமான் காலினால் மடியாத யமனை ஒத்த அநுமன், புதையும் - (தரையில்) அழுந்தும் தன்மையுள்ள, நல்மணி பொன் உருள் - சிறந்த நவமணிகள் பதித்துச் செய்த பொன் மயமான சக்கரங்கள், அச்சொடும் சிதைய - அச்சுக்களுடனே சிதையவும், பாய்பரி - தாவிச் செல்வனவான குதிரைகள், சிந்திட - வீழ்ந்து படவும், உதையினால் அவன் தேரை உருட்டினான் - (ஒரு) உதையினாலே அந்த இந்திரசித்து ஏறிய தேரை உருட்டித் தள்ளினான்.

அரக்கனுடைய தேர் அச்சு ஆழிகளை முறித்துப் பூட்டி யிருந்த குதிரைகளையும் கொன்று தேரையும் உருட்டி வீழ்த்தான், புதைதல்; 'நெடுஞ்சுனை புதையப் புகுந்தெடுத் தளித்தும்' (கல்லா. 13); பொன் உருள்: பொன்னாலாகிய ஆழி; 'பொன் உருள் உரைத் துரைத்தோடி' (பால. வரைக்காட்சி. 8). பாய்பரி - வினைத்தொகை.

பி - ம். 1. நன்மணி.

2. கூற்றென. 127

## பிறிதொரு தேரேறி இந்திரசித்து இலக்குவன்மீது அம்பெய்தல்

2064. பேயொ ராயிரம் பூண்டது பெய்ம்மணி
ஏய தேரிமைப் பின்னிடை யேறினன்
தூய வன்சுடர்த் தோளிணைமேற் சுடர்
தீய வெங்கணை யைம்பது சிந்தினன்.

(இந்திரசித்து) ஓர் ஆயிரம் பேய் பூண்டது-ஓராயிரம் பேய்கள் பூட்டப் பெற்றதும், பெய்மணி ஏய தேர் - நிரம்பப் பதிக்கப்பெற்று நவமணிகள் அமையப்பெற்றதுமான (பிறிதோர்) தேரின் மீது, இமைப்பின் இடை ஏறினன் - ஒரு மாத்திரைப்போழ்தில் ஏறினவனாய், தூயவன் - தூய்மை மிக்கவனான இலக்குவனுடைய, சுடர் தோள் இணைமேல் - ஒளி செய்கின்ற இரண்டு புயங்களின் மீது, சுடர் தீய வெம்கணை - ஒளிவிடுகின்ற மிகவும் கொடிய அம்பு களை, சிந்தினன் - சிதறினன்.

முன்னர் இப்படலத்துப் பத்தொன்பதாம் கவியில் 'நூறுயிரம யாளியினேன்மை தெரிந்த சியத், தேருமவை யாயிரம் பூண்ட தேர்' எனப்பட்டது; இத்தேர்ச் சிறப்பினை யுத்த. 1955—1958ல் காண்க. மற்றும் யுத்த. 2040, 2055, 2057ம் காணத்தகும். மூன்று நான்காம்டிகள் 2060 பாடல் இறுதியடிகளை ஒத்திருத்தல் காண்க. தீயவெம்கணை:ஒருபொருட் பன்மொழி; கணைகளின் கொடுமையை

விளக்கி நின்றது: 'தீயவெஞ்சொற் செவிசுடத் தேம்புவாள்' (அயோத்தி. நகர்நீ. 222); சிந்தினான் என்பதிலிருந்து கணைகளின் பன்மை விளங்கும்.

பி-ம். 2. தேரினிமைப்பிடை, தேரொசிமைப்பிடை.

3. நுனைத்தோள்; தோளினை; மேற்செல, சுடத். 128

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

சிந்து வாளி செறிதலும் சேவகன்
ஐந்து நூறு கடுங்கணை யாலவன்
உந்து தேரை யொறுத்தனன் வெய்யவன்
வந்து தேரொன்றின் வல்லையி லேறினான்.

## இந்திரசித்தின் தேர்களை இலக்குவன் விடாது அழித்தமை

2065. ஏறி யேறி யிழிந்ததல் லாலிகல்
வேறு செய்திலன் வெய்யவன் வீரனும்
ஆறு கோடி பகழியி னையிரு
நூறு தேரொரு நாழிகை நூறினன்.

வெய்யவன் - கொடியவன் ஆன இந்திரசித்து (தன்னுடைய தேர்களை இலக்குவன் அழித்ததனால்), ஏறி ஏறி இழிந்தது அல்லால் - பல தேர்களில் ஏறி ஏறி இறங்கியதன்றி, வேறு இகல் செய்திலன் - வேறு போர் ஒன்றும் புரியவில்லை; வீரனும்-இலக்குவனும் (இவ்வாறு நிகழுமாறு), ஆறு கோடி பகழியின் ஐயிரு நூறு தேர் ஒரு நாழிகை நூறினன் - ஆறு கோடி அம்புகளைக்கொண்டு ஆயிரம் இரதங்களை ஒரு நாழிகையளவில் நொறுக்கித்தள்ளினான்.

முன்னிரண்டடிகள் இகழ்வுபற்றி எழுந்தன; 'நூறுவது வேகருமமென்பது நுவன்றான்' (யுத்த. 67); மற்றும்; (ஆரணிய. 466, 468, 541, 551ம் காண்க.

பி-ம். 1. இழிவது, அழிதல், இழந்தது.

2. வெய்யவவ்வீரனும்.

3. ஐயறு.

4. நூறு தேரை. 129

## தேவர்களின் மகிழ்ச்சி

2066. ஆசி கூறின ரார்த்தன ராய்மலர்
வீசி வீசி வணங்கினர் விண்ணவர்
ஊசல் நீங்கின ருந்தரி கத்தொடு
தூசு வீசினர் நன்னெறி துன்னினூர்.

(இலக்குவனுடைய இவ்வரிய போர்த்திறலைக் கண்ட) நல்நெறி துன்னினூர் - விண்ணில் நெருங்கி நின்றவரான, விண்ணவர் - தேவர்கள், ஆசி கூறினர் - ஆசீர்வாதம் கூறினர்; ஆர்த்தனர் - பெருமுழக்கமிட்டனர்; ஆய்மலர் - அழகிய மலர்களை, வீசி வீசி வழங்கினர் - விடாமல் வீசித் தொழுதார்கள்; ஊசல் நீங்கினர் - மனச் சஞ்சலம் நீங்கப்பெற்றனர்; உத்தரீகத்தொடு தூசு வீசினர் - மேலாடையுடன் அரையாடையும் எடுத்து ஆகாயத்தில் எறிந்தார்கள்,

அண்ணல் வெல்கவென் றுசிசொன்னூர்' (யுத்த. மூலபல. 73); 'வீரனேறலும் ஆசி கூறி' (யுத்த. இராவணன்வதை. 1). ஊசல் - மனத்தடுமாற்றம்; சுந்தர. 428. உத்தரிகத்தொடு; 'உத்தரீக நெடு மார்பினுலாவ' (யுத்த. 803). மற்றும்; சுந்தர. 146, 411, 421. தூசு - ஆடை; மகிழ்ச்சிக்குறியாக மேலாடை அரையாடைகளை வீசுதல் வழக்கு; 'எல்லாரும் தூசு நீக்கி ஏறிட வார்த்தபோது, கொல்லாத விரதத் தார்தம் கடவுளர் கூட்டமொத்தார்' (யுத்த. இந்திரசித்து வதை. 56); 'வடகமுந் தூசும் வீசினூர்; (யுத்த. இராவணன் வதை. 151); 'குரகதக்குழுவுந் தூசும், அம்பரந் தன்னை நீத்தான் அலரி காதலனுக்கீந்தான்' (யுத்த. விடை. 17); நன்னெறி துன்னினூர் என்பதற்கு நல்லமார்க்கத்தையே பின்பற்றியவர் எனினும் ஒக்கும். நன்னெறி - ஆகாயம்; ஸத்பதம் என்று ஆகாயத்துக்குப் பெயர் வழங்குதல் காண்க.

பி-ம். 4. தூது; தூசு வீசினர்; முனிவர்கள்,

## அரக்கர்கள் இலக்குவனை யெதிர்த்தல்

2067. அக்க ணத்தி னோராயிர மாயிரம்
மிக்க வெங்க ணரக்கரவ் வீரனோ
டொக்க வின்ப மொருவழி யூணினர்
புக்கு முந்தினர் போரிடைப் பொன்றுவார்.

அக்கணத்தின் - அப்பொழுதில், அ வீரனோடு - அந்த இந்திர சித்துடன், ஒக்க இன்பம் ஊணினர் - சமமான சுகத்தையும் உண வையும் துய்ப்பவராகிய, மிக்க வெம்கண் ஓர் ஆயிரம் ஆயிரம் அரக்கர் - மிகவும் கொடுமை செறிந்த நூறாயிரம் அரக்கர்கள், பொன்றுவார் - இறக்கத் துணிந்தவர்களாய், போர் இடை புக்கு ஒரு வழி முந்தினர் - சமர்க்களத்து முன்வந்து (இளையகோவை) ஒன்றுகூடி எதிர்த்தார்கள்.

எல்லா அரக்கர்களும் எவ்வகையிலும் இந்திரசித்தை நிகர்த்த வர் என்பது மூன்றாமடியின் கருத்து. இந்த அரக்கர்கள் இந்திர சித்துக்கு உதவியாகப் போந்தவர்கள்; அத்தேரினை யேறிய தொப் பன வாயிரந்தேர், ஒத்தேய்வன சேமமதாய்வர' (யுத்த. 1959) என்றது காண்க. ஊணும் இன்பமும் அல்லாது, ஊருந் தேரினும் வேற்றுமையின்று என்பது இங்குக் குறிக்கப் பெற்றது. மிகவும் கொடிய போர் வீரர் என்பது 'மிக்க வெங்கண்' என்ற அடை மொழியால் விளங்கும். 'போரெனப் புகலும் புனைகழல் மறவர்' (புறநா. 3) ஆகலின் 'புக்கு முந்தினர்' எனப்பட்டது. ஒரு சமமாக அமர்ந்து உணவுட்கொள்வது பெருமையாகக் கருதப்படும்; இதனைச் சமபந்தி உண்டி என்றும் அக்ரபோசனம் என்றும் மொழிவர்.

பா-ம். 1. அக்கணந்திவில்.
2. அரக்கர்தம்.
3. ஒக்கவந்துற்றொரு வழி நண்ணினர்.
4. புக்கிழிந்தனர், புக்கமுந்தினர்; பொன்றுவரன்.

2068. தேரர் தேரி னிவுளியர் செம்முகக்
காரர் காரி னிடிப்பினர் கண்டையின்
தாரர் தாரணி யும்விசும் புந்தவழ்
பேரர் பேரி முழக்கன்ன பேச்சினர்.

தேரின் - ஆழ்ந்து கருதுமிடத்து, தேரர் - இரத வீரர்களும், இவுளியர் - குதிரை வீரர்களும், செம்முகம் காரர் - செம்புள்ளிகள் கொண்ட முகத்தினையுடைய மேகம் போன்ற (கரிய நிறத்தினரும்) யானை வீரர்களுமான அந்த அரக்கர்கள், காரின் இடிப்பினர் - முகில் ஒத்து முழங்குபவர்களும், கண்டையின் தாரர் - கிண்கிணி மாலையுடையவர்களும், தாரணியும் விசும்பும் தவழ் பேரர் - பூதலத்தும் ஆகாயத்தும் பரவும்படியான புகழ் படைத்தவர்களும், பேரி முழக்கு அன்ன பேச்சினர் - பேரிகை என்ற தோற்கருவியின் ஒலியை ஒத்த பேச்சினையுடையவர்களுமாக இருந்தனர்.

செம்முகக்காரர் : யானை வீரர் ; சிறந்த யானைகட்கு முகத்திற் செம்புள்ளிகள் உண்டென்பர் ; 'அடிக்கை கனத்து மதம்பொழி யாழியினளவும் புகராலழ கெய்தி' (வி. பா. 16 ஆம்போர். 7); 'களிற்று முகவரியிற் றெறுழ்வீ பூப்ப' (புறநா. 119) ; மற்றும் நற்றிணை. 176, கலித். 44 ; அகநா. 349. செம்முகக்காரர் : ஆறும் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை ; 'காரின் இடிப்பினர்' (ஒப்பு) : 'அசனியி னார்ப்பார்' (யுத்த. மூலபல. 10). தாரணி-பூமி ; 'தசரதன் மதலையா வருதும் தாரணி' (பால. திருவவ. 22) ; அவ்வரக்கர்களின் கீர்த்தி மூவுலகங்களும் பரவி நின்றது என்பார், 'தாரணியும் விசும்பும் தவழ் பேரர்' எனப்பட்டது ; பாதாளம் உபலக்கணத்தாற் கொள்க. கண்டைத்தார் - வீரர்கள் கழுத்தில் புனையும் மாலை ; கண்டம் - வடசொல் ; கழுத்து எனப் பொருள் படும்.

பி - ம். 1. பாயும் இவுளியர் ; செந்திறக்.

2. இடியினர், கண்டையர், இடிப்பன காட்சியர். 

2069. பார்த்த பார்த்த திசைதொறும் பன்மழை
போர்த்த வான மெனவிடி போர்த்தெழ
ஆர்த்த வோதையு மம்பொடு வெம்படை
தூர்த்த வோசையும் விண்ணினைத் தூர்த்தவால்.

பார்த்த பார்த்த திசைதொறும் - கண்ட கண்ட திக்குகளில் எல்லாம், பல்மழை போர்த்த - பல முகில்கள் சூழ்ந்து கொள்ளப் பெற்ற, வானம் என - ஆகாயம் போன்று, இடி போர்த்து எழ - முழக்கம் பரந்து எழும்படி, ஆர்த்த ஓதையும் - (வீரர்களின்) ஆர்ப்பரித்தலால் எழும் ஒலியும், அம்பொடு வெம்படை தூர்த்த ஓசையும் - வாளிகளையும் கொடிய போர்க் கருவிகளையும் கையாண்டு நிறைப்பதால் உண்டான ஒலியும், விண்ணினை தூர்த்த - ஆகாய வீதியை நிறைத்தன. ஆல் - அசை.

ஆர்த்தல்: 'அனல் விழித்தார்த்திரைத் தரக்கர்' (ஆரணிய. 446).

பி - ம். 2. வானத்திடியெனப் போர்த்தனர்.

3. ஆர்ந்த ஓசையும்.

4. நூர்த்ததால். 133

2070. ஆளி யார்த்தன வாளரி யார்த்தன
கூளி யார்த்தன குஞ்சர மார்த்தன
வாளி யார்த்தன வானவர் மண்டிலம்
தூளி யார்த்தில தாற்பிணந் துன்னலால்.

ஆளி ஆர்த்தன - யாளிகள் முழங்கின; வாளரி ஆர்த்தன - சிங்கங்கள் கர்ச்சித்தன; கூளி ஆர்த்தன - பேய்கள் ஆரவாரித்தன; குஞ்சரம் ஆர்த்தன - யானைகள் பிளிறின; வாளி ஆர்த்தன - வட்ட வடிவாகச் சாரி செல்லும் குதிரைகள் கனைத்தன; வானவர் மண்டிலம் - தேவர் உலகம், பிணம் துன்னலால் - பிணங்கள் அடர்ந்து நெருங்கலின், தூளி ஆர்த்திலது - தூளிகள் மேலெழப் பெற்றிலது.

ஆளி - யாளி; கூளி - பேய்; 'பேயோராயிரம் பூண்டது' (யுத்த. 2064) என்றது காண்க. குஞ்சரம் - யானை; 'குஞ்சர மனைய வீரன் குவவுத்தோ டழுவிக் கொண்டாள்' (ஆரணிய. 285); 'பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரம்' (தனிப்பா. அந்தகக்கவி).

பி - ம். 2. குதிரைகள் ஆர்த்தன, குதிரையும்.

3. தேவர்தம்; மண்டலம்.

4. துள்ளவே, துன்றலால். 134

## எதிர்த்தாரை இலக்குவன் அம்பெய்தழித்தல்

2071. வந்த ணைந்ததோர் வாளரி வாவுதேர்
இந்தி ரன்றனை வென்றவ னேறினன்
சிந்தி னன்சர மாரி திசைதிசை
அந்தி வண்ணனொ ரம்பி னகற்றினன்.

வந்து அணைந்தது ஓர் வாள் அரி-(ஏவன் மாக்களால் கொணரப்பட்டு) வந்து சேர்ந்த, கொடிய சிங்கங்கள் பூட்டப் பெற்று; வாவு தேர்-தாவிச் செல்லும் ஒரு தேரின்மீது, இந்திரன் தனை வென்றவன்-இந்திரசித்து, ஏறினன்-ஏறி, சரம் மாரி-அம்பு மாரியை, திசை திசை சிந்தினன்-திக்குகளில் எல்லாம் சிதறினன்; அந்தி வண்ணன்-செவ்வானம் போன்ற நிறத்தவன் ஆன இலக்குவன், ஓர் அம்பின் அகற்றினன்-(அவற்றை) ஓர் அம்பினால் தவிர்த்தான்.

வாவுதல்-தாவிச் செல்லுதல்; இராவணன் வதை. 20; 'வாவுமிள மான்காள்' (நைடத.); இந்திரன் தனை வென்றவன் இத்தொடர் இந்திரசித்து என்பதன் தமிழாக்கம். திசை திசை சரமாரி சிந்தினன் என அன்வயிக்க. இலக்குவன் பொன் ஒத்த மேனியன் ஆகலின் 'அந்திவண்ணன்', எனப்பட்டது. சரமாரியை ஓரம்பினால் அகற்றினன் என்று இலக்குவன் சௌரியம் கூறப் பெற்றமை காண்க. விடாது பொழிந்த சரம், மாரியாக உருவகிக்கப் பட்டது. 'கார், பெய்தாலென சரமாரிகள் சொரிந்தான் துயில் பிரிந்தான்' (யுத்த. 1113); யுத்த. இராவணன் வதை. 48ம் காண்க.

பி-ம். 1. வந்தணைந்தன; மாருதி பேற்செல.
3. திசாதிசை.
4. அந்திவண்ணனும்.



2072. சுற்றும் வந்து பரந்து தொடர்ந்தவர்
எற்று கின்றன வெய்த வெறிந்தன
அற்று தீர்ந்தன வாயிரம் வன்றலை
ஒற்றை வெங்கணை யோடு முருண்டவால்.

சுற்றும் வந்து பரந்து தொடர்ந்தவர் (இலக்குவனைச்) சூழ்ந்து நின்று பரவித்தொடர்ந்துள்ள அரக்கர்கள், எற்றுகின்றன-தாக்கு கின்றனவும், எய்த - விடுத்தனவும், எறிந்தன - வீசியனவும் ஆன, எல்லாப் போர்க்கருவிகளும், (இலக்குவன் தொடுத்த) அம்புகளால் அற்று உதிர்ந்தன - அறுபட்டுத் தூளாயின ; ஆயிரம் வல்தலை - (அரக்கரின்) ஆயிரம் பெரிய தலைகள், ஒற்றை வெம்கணையோடும் உருண்ட - ஒரே ஒரு கொடிய அம்புடன் தரையில் வீழ்ந்து உருண்டன. ஆல் - அசை.

தொடர்ந்தவர் : இராக்கதர்கள். ஒற்றை வெங்கணை ; இலக்கு வன் விடுத்தது ; 2071.

பி - ம். 1. படர்ந்து.

2. எய்து.

4. உருட்டினன். 138

2073. குடர்கி டந்தன பாம்பெனக் கோண்மதி
திடர்கி டந்தன சிந்தின தேர்த்திரள்
படர்கி டந்தனர் பல்படைக் கையினர்
கடர்கி டந்தன போன்ற களத்தினே.

கடர் கிடந்தன போன்ற களத்தினே-ஆழி கிடந்தாற் போன்ற (மிக அகன்ற) போர்க்களத்திலே, குடர் பாம்பு என கிடந்தன - (வீரர்களின்) குடல்கள், பாம்பு போன்று தரையிற் கிடந்தன ; கோண்மதி திடர் கிடந்தன - வலிய மதத்தையுடைய வேழங்கள் பெரு மலைகள் போன்று கிடந்தன ; தேர் திரள் சிந்தின - தேர்த் தொகுதிகள் (தூள் தூளாய்ச்) சிதறின ; பல்-பலவான, படை கையினர் படர் - படைக்கலம் ஏந்திய வீரர்கள், கிடந்தனர் - (இலக் குவன் அம்புகள் தாக்கித்) விழ்ந்து கிடந்தனர். ஏ - அசை.

சொற்பொருட்பின் வருநிலையணி, குடல், குடர், திடல் ; திடர், கடல், கடர். இவை ஈற்றுப் போலிகள். மதி - மதி என்ற வட சொல்லின் குறுக்கம்; மதத்தையுடையது என்க. கோள் - பிறவுயி ரைக் கொள்ளவல்ல எனினும் ஒன்றும். தேர்த்திரள் சிந்தின என மாற்றுக. கோள்-வலி; 'கோளின் மழைவன் குழுவினில்' (ஆரணிய. 527) ; 'கோளிடையற்றன குடைகள் அற்றன' (ஆரணிய. 477).

திடல்: மலை; 'திடல் துடைத்தன தசமுகன் சரம்' (யுத்த. 1150); படர்: வீரர்கள்; யமபடர் (வில்லி. பா. 13ஆம் போர் 1); படர்: வட சொல்.

பி-ம். 1. கிடந்தது; மறிந்.

2. நிரட்.

3. கிடந்தன; கையன.

4. போன்று. 137

2074. குண்ட லங்களு மாரமுங் கோவையும்
கண்ட நாணுங் கழலுங் கவசமும்
சண்ட மாருதம் வீசத் தலத்துகும்
விண்ட லத்தினின் மீனென வீழ்ந்தவால்.

குண்டலங்களும் ஆரமும் கோவையும் - (அரக்கர்களுடைய) குண்டலங்களும் முத்து மாலைகளும் தாழ்வடங்களும், கண்டம் நாணும் - கண்ட சரங்களும், கழலும் - வீர கண்டையும், கவசமும் - மெய்புகு கருவிகளும் ஆகிய அனைத்தும், சண்டம் மாருதம் வீச - பெரிய வெய்ய புயற்காற்று அடித்தலால், தலத்து உகும் - தரையில் உதிர்ந்து வீழ்கின்ற, விண்தலத்தினின் மீன் என வீழ்ந்த - ஆகாய தலத்தின்கண் உள்ள நட்சத்திரங்கள் ஒப்ப உதிர்ந்தன. ஆல்: அசை.

குண்டலம்; காதணி: 'குண்டலங்களும் மவுலியும் ஆரமும்' (யுத்த. 1456); 'நூங்கிருங் குண்டலம் செவியிற் சூழ்வர' (யுத்த. மீட்சி: 259); 'குண்டலங்கள் குலவரையை வலம் வருவான்' (ஆரணிய. 557); சண்ட மாருதம்: பெரும் புயற்காற்று; இங்கே ஊழிக்காற்று; 'சண்ட மாருதமென்னத் தடவரை கொண்டு சிறி' (யுத்த. 1018); சண்டம்: வேகம்; உக்கிரமாக வீசும் காற்று; விண் தலத்தினின் என்றே ஐந்தாம் வேற்றுமை நீங்கற் பொருளாகக் கொண்டு விண்தலத்தினின் தலத்துகும் எனலும் ஒன்று. விண் தலத்தினின் என்றே முன்னர் உரைத்த பொருளைக்கொண்டு, 'இன்னென வருஉம் வேற்றுமை யுருபிற்கு இன்னென் சாரியை இன்மை வேண்டும்' (தொல். எழுத். புணரியல்.) என்ற சூத்திரத்து உரையில், 'இன்னினிகரம் என்றதன் பின் இதனை வையாத முறை யன்றிக் கூற்றினுன் இன்சாரியை கெடாது வழக்கின் கண்ணும்

செய்யுட்கண்ணும் நிற்றல் கொள்க' என இளம்பூரணரும், 'இனி, இன்மையும் வேண்டும் என்றும் தொக்குநின்ற தாக்கி அதனல், இவை கோடலுமொன்று' என நச்சினர்க்கினியரும் கூறியன கொண்டு உரை கூறலுமாம்.

பி - ம். 2. கண்டை.
4. விண்டலஞ்செறி, விண்டலத்துள ; மீனும், மீனின் ; விழுந்தவால், விளங்குமால் மீனினமென்னவே. 138

2075. அரக்கன் மைந்தனை யாரிய னம்பினல்
கரக்க நூறி யெதிர்பொரு கண்டகர்
சிரக்கொ டுங்குவைக் குன்று திரட்டினுன்
இரக்க மெய்திவெங் காலனு மெஞ்சவே.

ஆரியன் - இலக்குவன், அரக்கன் மைந்தனை - இராவணன் புதல்வனான இந்திரசித்தை, அம்பினல் - (தனது) வாளிகளால், காக்க நூறி - மறையும்படி வளைத்துஎய்து, வெம் காலனும் - கொடிய யமனும், இரக்கம் எய்தி எஞ்ச - மனமிரங்கிப் பின்னிடையுமாறு எதிர்பொரு கண்டகர் - எதிர்த்துப் போர் புரிகின்ற தீயவர்களான அரக்கர்களுடைய, கொடுசிரம் குவை குன்று திரட்டினுன் - கொடிய தலைகளின் குவியல்களை மலைபோன்று குவித்தான். ஏ : அசை.

நூறுதல் : வளைந்து கொல்லுதல் ; 'நதிவெள்ள நூறுகென' (தக்கயாகம். 652); கண்டகர் : வடசொல் ; முட் போன்ற கொடியவர். திரட்டுதல் - ஒன்று சேர்த்தல் ; 'முத்திர்த்துப் பொன் திரட்டி' (கிட்கிந்தா. 740); எஞ்சுதல் - பின்னடைதல் ; 'மலைகள் எஞ்சப் பிறப்பன ஒலிகள்' (யுத்த. 1622) ; இரக்கம் எய்தி வெங்காலனும் 'கூற்றுக் கண்ணேடிய வெருவரு பறந்தலை' (புறநா. 19).

பி - ம். 1. மைந்தன் ; அடுங்கணை, அடுகணை அடுசிலை ; யாரவையும்.
3. கொடுங்குலக் ; திரட்டினர்.
4. எய்த ; ஏங்கவே, ஓங்கவே. 139

## இலக்குவன் வாகனமாகிய அநுமன் செய்த போர்

2076. சுற்றி வால்கொடு தூவுந் துவைக்கும்விட்
டெற்றும் வானி னெடுத்தெறி யும்மெதிர்
உற்று மோது முதைக்கு முழக்குமால்
கொற்ற வில்லியன் றேறிய கூற்றமே.

கொற்றம் வில்லி - வெற்றி வில் வீரனுன இலக்குவன், அன்று ஏறிய கூற்றம் - அப்பொழுது ஏறியிருக்கப் பெற்ற யமன் போன்ற மாருதி, (இராக்கதர்களைத் தனது) வால் கொடு - வாலி ஞல், சுற்றி தூவும் - சுற்றிப் பிணித்து வாரித்) தூவுவான்; துவைக்கும் - (கால்களால்) மிதிப்பான்; விட்டு எற்றும் - நூக்கித் தள்ளுவான்; வானின் எடுத்து எறியும் - ஆகாயத்தில் தூக்கி வீசு வான், எதிர் உற்று மோதும் - எதிரேசென்று தாக்குவான்; உதைக் கும் - உதைப்பான், உழக்கும் - வருத்தும்; ஆல்: ஏ: அசைகள்.

எற்றும்: 'எடுத்துப் பாரிடை யெற்றுவரம் பற்றி யென்று' (கிட்கிந்தா. 288). வில்லி: 'வில்லியு மவனை நோக்கி' (கிட்கிந்தா. 628); கூற்றம்: உவம ஆகுபெயராக அநுமனைக் குறித்து நின்றது. 'கூற்றையே யூர்கின்ருனே குரங்கின்மேற் கொண்டு நின்ருன்' (யுத்த. 1239).

பி - ம். 1. சுற்றும்.
2. மோதுமுருட்டும்; உறுக்குமாற், உதைக்குமாற்.
3. வில்வியின்று.

140

இதன் பின் 'மாவும்' என்ற கவி ஒரு பிரதியில்.

2077. பார்க்கு மஞ்ச வுறுக்கும் பகட்டினுல்
தூர்க்கும் வேலையைத் தோள்புடை கொட்டிநின்
ருர்க்கு மாயிரந் தேர்பிடித் தங்கையால்
ஈர்க்கு மையனன் றேறிய யானையே.

ஐயன் அன்று ஏறிய யானை - இலக்குவன் அப்பொழுது ஏறி யிருந்த யானையை நிகர்த்த அநுமன், அஞ்ச பார்க்கும் - எதிரிகள் அச்சுறுமாறு நோக்குவான்; உறுக்கும் - அதட்டுவான்; பகட்

டினால் - யானைகளைக் கொண்டு, வேலையை தூர்க்கும் - கடலை நிறைப்பான்; தோள்புடை கொட்டி நின்று ஆர்க்கும் - தோள் களின் புறங்களைத் தட்டி நின்று ஆரவாரம் செய்வான்; அம்கையால் - (தனது) அழகிய கரத்தால், ஆயிரம் தேர் பிடித்து ஈர்க்கும் - ஆயிரம் இரதங்களைப் பற்றி இழுப்பான். ஏ: அசை.

உறுக்கும்: 'உறுக்கினர் ஒருவரை ஒருவர்' (யுத்த. 1471). பகடு - யானை; 'பைங்கட் பணைத்தாட் பகட்டுழவன்' (பு. வெ. மா: 8 : 5); 'பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும்' (பெரியபுராண. சிறுத்: 6); தோள் புடை கொட்டுதல்: வீரத்தால் எழுந்த மெய்ப்பாடு. யானை - அநுமனை, யானையாக உருவகம் செய்தார்.

பி - ம். 1. பகட்டுயால்,
2. புடைத்தொட்டி. 141

இஃது ஓர் பிரதியில் இல்லை.

2078. மாவு மியானையும் வாளுடைத் தானையும்
பூவு நீரும் புனைதளி ரும்மெனத்
தூவு மள்ளும் பிசையுந் துகைக்குமால்
சேவ கன்தெரிந் தேறிய சீயமே.

சேவகன் தெரிந்து ஏறிய சீயம்-வீரனான இலக்குவன் தேர்ந்து ஏறியிருந்த சிங்கம் போன்ற அநுமன், மாவும் - குதிரைகளையும், யானையும் - வேழங்களையும், வாள் உடை தானையும் - வாளாயுதம் ஏந்திய காலாட் படைகளையும், பூவும் நீரும் புனை தளிரும் என - மலர்களும் நீரும் அழகிய தளிர்களும் போன்று, (எளிதாக எடுத்துத்) தூவும் - தூவுவான்; அள்ளும் - வாருவான்; பிசையும் - பிசைவான், துகைக்கும் - துகைப்பான். ஆல்: ஏ - அசைகள்.

யானையும் தானையும் என்ற இடத்துப் பிராசம் காண்க. சேவகன்: வீரன்; 'கருத்திறல் தரும் சேவகனல்லையோ' (யுத்த. 1434); 'சேவகன் முறுவல் செய்தான்' (யுத்த. 919). சியம்-சிங்கம்; 'சிரித்ததோர் செங்கட்சியம்' (யுத்த. 256); 'சீயம், தும்பியைத்

தொடர்வதல்லாற் குரங்கினைத் தொடர்வதுண்டோ' (யுத்த. நிகும்ப : 98).

பி - ம். 1. மாவு மரனையும்.

3. அள்ளிப். 142

2079. உரகம் பூண்ட வுருளை பொருந்தின
இரத மாயிர மேயெனு மாத்திரை
சரத மாகத் தரைப்படச் சாடுமால்
வரத னன்றுவந் தேறிய வாசியே.

வரதன் அன்று உவந்து ஏறிய வாசி - இலக்குவன் அப்பொழுது மகிழ்ந்து ஏறிய குதிரை போன்ற அநுமன், உரகம் பூண்ட - அரவங்கள் பூட்டப் பட்டனவும், உருளை பொருந்தின - சக்கரங்கள் பொருந்தினவுமான, ஆயிரம் இரதம் - ஆயிரம் தேர்களை, ஏ எனும் மாத்திரை - மிக்க விரைவில், சரதமாக - விளையாட்டாக தரைபட சாடும் - தரையில் வீழ்ந்து அழியும் வண்ணம் தாக்குவான். ஏ : அசை.

பூண்ட, பொருந்தின: வினையாலணையும் பெயர்கள். ஏயெனும் மாத்திரை ; 'ஏயெனுந் துணை மாத்திரத் தெய்தன' (யுத்த. 211); 'ஏயெனும் மாத்திரத் தெய்து கொன்றனன்' (யுத்த. மூலபல. 174). சரதம்: சரசம் என்ற வடசொல் திரிபு. விளையாட்டு என்பது பொருள். சாடுதல்: 'சாடவெடுத்தது தக்கன்றன் வேள்வியில்' (தேவா. 11 : 10); வரதன் ; 'வரதனு மிளவலும்' (பால. திருவவ. 131). சரதம் : சரசம் என்ற வடசொற்றிரிபு ; உறுதியெனினுமாம்.

பி - ம். 2. எய்யெனும். 143

இந்திரசித்தின் அம்பினல் மயங்கி வீழ்ந்த வாநரர் தெளிந்தெழுந்து பொருதல்

2080. அவ்வி டத்தினி லாய்மருந் தாலமுல்
வெவ்வி டத்தினை யுண்டவர் மீண்டென
எவ்வி டத்தினும் வீழ்ந்த வினத்தலைத்
தெவ்வ டக்கும் வலியவர் தேறினர்.

அவ்விடத்தினில் - அப்பொழுது, அழல் வெவ்விடத்தினை உண்டவர் மீண்டென - வெப்பங் கொண்ட கொடிய விடத்தை உட்கொண்டவர், ஆய் மருந்தால் மீண்டென - சிறந்த மருந்தினால் உயிர் பெற்றெழுந்தாற் போன்று, எவ்விடத்தினும் வீழ்ந்த - பல விடங்களிலும் (இந்திரசித்தின் வாளிகளால் மூர்ச்சித்து) விழுந்து கிடந்தவர்களாகிய, இனம்தலை - (அந்த மாருதியின்) வானரத் தொகுதியின் கண் உள்ளவர்களான, தெவ் அடக்கும் வலியவர் தேறினார் - பகைவர்களை அடக்கும் திறல்வாய்ந்த வீரர்கள் (மூர்ச்சை தெளிந்து எழுந்தனர்.

அவ்விடத்தினில்: அநுமன் தீவிரமாகப் போர் செய்து அழித்து நின்ற போது, ஆய் மருந்து - அழகிய மருந்து, வெவ் விடத்தினை: 'வெவ்விடத்தை யமுதென வேண்டுவான்' (சுந்தர. 430); மீண்டாலென என்பது மீண்டென என நின்றது. எவ்விடத்தினும் - போர்க்களத்தின் எல்லாப் புறங்களிலும், தலை: ஏழன் உருபு. தெவ்வுப் பகைமை; (தொல். உரி. 50); கடும் விடத்தால் மூர்ச்சையுற்றவர் நினைவு தோன்றி எழுந்தாற் போன்று, இந்திரசித்தின் கொடிய அம்புகளால் வானரர்கள் மூர்ச்சை தெளிந்து எழுந்தனர் என்பது கருத்து; உவமையணி. அழல் விடம்: உவமைத் தொகை. 'வலியவர்' என்றது, இலக்குவன் பொருமுன் அரக்கன் அம்புகளால் மூர்ச்சித்து வீழ்ந்த குரக்கு வீரரை என்க.

பி - ம். 1. உழல்.

3. வீழ்ந்த வினைத்தலை, வீழ்ந்தவரெண்ணிலர், வீழ்ந்தவரெண்ணிலாத்.

இதன் பின் 'வாலிக்கு' என்ற கவி ஓர் பிரதியில்.

2081. தேறி னார்க நெருப்புகச் சீறினார்
ஊறி னார்வந் திளவலை யொன்றினார்
மாறு மாறு மலையு மரங்களும்
நூறு மாயிர முங்கோடு நூறினார்.

தேறினார்கள் - தெளிவு பெற்றெழுந்த அந்த வானர வீரர்கள், நெருப்பு உக சீறினார் - தீப்பொறி சிந்தும்படி வெகுண்டவராய், ஊறினார் வந்து - மேலும் மேலும் நெருங்கி வந்து, இளவலை ஒன்

றினர் - இளைய பெருமானை அடுத்தாராய், மாறுமாறு - பகைவன் ஆன அரக்கனுக்கு எதிராக, மலையும் மரங்களும் - மலைகளையும் மரங்களையும், நூறும் ஆயிரமும் கொடு நூறினர் - நூற்றுக் கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் கொண்டு (எதிரிகளைக்) கொன்றழித்தனர்.

மாறுமாறு - பகைவனுக்கு எதிராக, 'வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக' (குறள். 861); 'மாற்றிரு வேந்தர்' (புறநா. 42); ஊறுதல், இறைக்கும் தோறும் மேலும் மேலும் ஊறுவதுபோன்று படைகள் மேன்மேல் வருதல். தேறினர்கள் நூறினர் என்க.

பி - ம். 3. மாறிமாறி, மாறுமற்றை.

4. நூறினன்; நூக்கினர். 145

2082. விகட முற்ற மரனெடு வெற்பினம்
பொகட வுற்ற பொறுத்தன போவன
துகட வத்தொழில் செய்துறைக் கம்மியர்
சகட மொத்தன தாரணி தேரெலாம்.

விகடம் உற்ற - வேறுபாடமைந்த (பலதிறப்பட்ட), மரனெடு வெற்பு இனம் - மரங்களையும் மலைத் தொகுதிகளையும், பொகட - செல்லும்படி விட, உற்ற - (அவை தாக்குதலால் தமக்கு) நேர்ந்துள்ள, பொறுத்தன போவன - ஊறுபாடுகளைக் கொண்டனவாய் அழிந்து ஒழிந்த, தார் அணி தேர் எலாம் - கிங்கிணி மாலைகள் அணியப் பெற்ற தேர்கள் அனைத்தும், கம்மியர் - கம்மாளரின், துகள் தவ தொழில் செய் - பழுதறப் பணி புரிகின்ற, துறை - இடங்களில் உள்ள, சகடம் ஒத்தன - (வேலை முற்றுப் பெறாது அறை குறையாயுள்ள) தேர்களை நிகர்த்தன.

விகடம்: வேறுபாடு; மரங்களில் ஒன்றற்கொன்றுள்ள வேற்றுமை. விகடன் என்று விநாயகர்க்கு ஓர் பெயர் உண்மை காண்க. சாதாரண மக்கள் உருவத்தினின்றும் வேறுபட்ட உருவம் ஆதலின் அப்பெயர் எழுந்தது. போகட என்பது பொகட என்க் குறுகிற்று. துகள்; குற்றம், தவ; கெட. சகடம்: தேர்; 'சகட சக்கரத் தாமரை நாயகன்' கந்தபு. (காப்பு: 1); 'தாரணி தாங்கிய மலை கிடந்தன' (யுத்த. மீட்சிப்: 18); குரங்கு வீரர்கள் எறிந்த மரங்களாலும் மலைகளாலும் உறுப்புக்கள் சிதையப்

பெற்றுக் கிடந்த அரக்கரது தேர்களுக்குத், தேர் அமைக்கும் மரத்தச்சருடைய கூடத்தில், வேலை முற்றுப்பெறாது அரைகுறையாகக் கிடந்த தேர்கள் உவமை. போகவிட என்பது பொகட என மருவியது. கர்மியர் என்ற வடசொல் கம்மியர் என விகாரப் பட்டது.

பி - ம். 1. விகடமற்ற ; மரமரய்.
2. புகட, உற்ற.
3. செய்துறை கம்மியர்.
4. தாரணித் தேரரோ. 146

## அங்கதன் இந்திரசித்தை வென்றமை

2083. வாலி மைந்தனோர் மாமரம் வாங்கினன்
காலின் வந்த வரக்கனைக் காவிது
போலு முன்னுயி ருண்பது புக்கென
மேல்நி மிர்ந்து நெருப்புக வீசினன்.

வாலி மைந்தன் - வாலியின் மகனான அங்கதன், ஓர் மாமரம் வாங்கினன் - ஒரு பெரிய மரத்தைப் பெயர்த்துக்கொண்டு, காலின் வந்த அரக்கனை - தேரின்மீது வந்த இந்திரசித்தினை(ப் பார்த்து), 'இது புக்கு உன் உயிர் உண்பது - இந்த மரம் உன் உடலிற் புகுந்து உனது உயிரைப் பருகுவது, கா - உன்னை (இதனின்றும்) காத்துக் கொள்வாயாக', என - என்று, மேல் எழுந்து - உயரக் கிளம்பி, நெருப்பு உக வீசினன் - தீப்பொறிகள் சிந்துமாறு எறிந்தான்.

வாங்கினன், முற்றெச்சம் ; கால் : தேர்க்கால் ; இங்கு சினையாகு பெயராய்த் தேரைக் குறித்தது. காலின் என்பதற்குக் காற்றுப் போன்று கடுமையாகத் (தேரின்) வந்த எனினுமாம், கா என்பது தடுப்பாயாக எனினுமாம்; 'செல்லிடத்துக் காப்பான்' (குறள். 301) என்றது காண்க. பின்னர் 'அழித்த தேரினின்று' (2086) என வருதலின் கால் என்பதற்குத் தேர் என்றே பொருள் தரப்பட்டது. போலும் : ஒப்பில் போலி.

பி - ம். 1. மால்வரை, மாமலை.
2. காலன்.
4. பேனிரந்து, மேலிவர்ந்து. 147

2084. ஏர ழித்தது செய்தவ னீண்டெழில்
சீர ழித்தவ னுமெனத் தேவர்கள்
ஊர ழித்த வுயர்வரைத் தோளவன்
தேர ழித்த திமைப்பினிற் சென்றதால்.

'(இந்த அங்கதன்), ஏர் அழித்தது செய்தவன் - அழகு நீர்ந்த செயலைப் புரிந்தவனான இராவணனுடைய, ஈண்டு எழில் சீர் - நெருங்கிய வலியின் சிறப்பை, அழித்தவன் ஆம் - தொலைத்தவன் ஆவான்', என - என்று பகருமாறு, (அவ் வாலி மகன் வீசிய அம் மரம்) தேவர்கள் ஊர் அழித்த உயர் வரை தோளவன் - தேவர்களின் இருக்கையான விண்ணுலகத்தை அழித்தவனும், உயர்ந்த மலை போன்ற தோள்களை யுடையவனுமான இந்திரசித்தின், தேர் - இரதத்தை, இமைப்பினில் அழித்தது சென்றது - ஒரு நொடிப் பொழுதில் அழித்துப் போயிற்று, ஆல் : அசை.

நல்லோரைத் துன்புறுத்தல், பிறர் மனை நலத்தைக் கவர எண்ணுதல் முதலிய தீய தொழில்களைப் புரிந்தவன் இராவணன் ஆகலின் 'ஏரழித்தது செய்தவன்' எனப்பட்டான். அங்கதன் வீசிய மரத்தின் விசையால் 'இராவணன் பக்கத்திற்குத் தோல்வி நிச்சயம்' என்று கண்டோர் புகலுமாறு இருந்தது என்பது முதலிரண்டடிகளின் கருத்து.

பி - ம். 2. அழித்தவர்தாமென ; தேவர்தம்.
3. உயர்வலித்.
4. அழித்தொரிமைப்பிடை.

148

2085. அந்த வேலையி னார்த்தெழுந் தாடினர்
சிந்தை சீரி னுயர்ந்தனர் தேவர்கள்
தந்தை தந்தைபண் டுற்ற சழக்கெலாம்
எந்தை தீர்த்தன னென்பதோ ரேம்பலால்.

அந்த வேலையின் - அப்பொழுது, தேவர்கள் - அமரர்கள், சிந்தை சீரின் உயர்ந்தனர் - உள்ளத்து உயர்வில் மிகுந்தவராய், 'பண்டு தந்தை தந்தை உற்ற சழக்கு எலாம் - முன்னே பாட்டனாகிய

இந்திரன் (இந்த மேகநாதனால்) அடைந்த பரிபவம் எல்லாம், எந்தை தீர்த்தனன்-எனது ஐயனாகிய இவ்வங்கதன் போக்கினான்', என்பது ஓர் எம்பலால் - என்று நினைவதனாலாகிய ஒப்பற்ற உவகையால், ஆர்த்து எழுந்து ஆடினார் - ஆரவாரித்து எழுந்து கூத்தாடினர்.

தந்தைக்குத் தந்தை: பாட்டன். அங்கதன் தந்தை: வாலி; அவன் தந்தை இந்திரன்; எனவே பிதா மகன் என்க. எம்பல்: மகிழ்ச்சி; 'எம்பல் வந்தெய்தச் சொல்லி' (யுத்த. மூலபல: 45); எந்தை: அன்பு பற்றி வந்த மரபு வழுவமைதி.

### அங்கதனை நெருங்கிய இந்திரசித்தை வானரர் சூழ்ந்து பொருதல்

2086. அழிந்த தேரினின் றந்தரத் தக்கணத்
தெழுந்து மற்றொ ரிரதமுற் றேறினன்
கழிந்து போகலை நில்லெனக் கைக்கணை
பொழிந்து சென்றனன் தீயெனப் பொங்கினன்.

அ கணத்து - அச் சமயத்தில், அழிந்த தேரின் நின்று - (இந்திரசித்து) அழிந்த (அந்தத்) தேரிலிருந்து, அந்தரத்து எழுந்து-ஆகாயத்தில் கிளம்பி, மற்று ஓர் இரதம் உற்று ஏறினன்- பிறிதோர் இரதத்தை அடைந்து ஏறி, தீ என பொங்கினன் - கனல்போன்று கொதித்து, (அங்கதனைக் கண்ணுற்று), 'கழிந்து போகலை நில் - அப்பால் (உயிர் தப்பிச்) செல்லாதே நிற்பாயாக' என - என்று பகர்ந்து, கைக்கணை பொழிந்து சென்றனன் - கையினால் அம்புகளைச் சிதறி நெருங்கினன்.

போகலை: அல் எதிர்மறை இடைநிலை.

பி-ம். 3. கார்க்கணை
4. தீயென; போக்குவான்.

## இந்திரசித்தை வளைத்துக்கொண்டு பல வாநரங்கள் பொருதமை

2087. இந்தி ரன்மகன் மைந்தனை யின்னுயிர்
தந்து போகெனச் சாரலுற் றான்றனை
வந்து மற்றைய வாநர வீரரும்
முந்து போர்க்கு முறைமுறை முற்றினர்.

இந்திரன் மகன் மைந்தனை - இந்திரன் புதல்வன் வாலியின் பிள்ளையாகிய அங்கதனை (நோக்கி), 'இன் உயிர் தந்து போக - (உனது) இனிய உயிரை (என் வாளிகட்குணவாகக்) கொடுத்துச் செல்வாயாக', என - என்று கூறி, சாரல் உற்றான் தனை - (அவ வங்கதனை) அடைந்தவனாகிய இந்திரசித்தை, மற்றைய வாநர வீரரும் - பிற குரங்கு வீரர்கள் அனைவரும், முந்து வந்து - முற்படச் சென்று, முறை முறை போர்க்கு முற்றினர் - வரிசை வரிசையாகச் சூழ்ந்து கொண்டனர்.

இந்திரன் மகன்: வாலி; (கிட்கிந்தா. 126) உரைக் குறிப்புக் காண்க. இந்திரன் மகன் மைந்தன்; அங்கதன்; இங்ஙனம் வளைத்துக் கூறுவது கம்பர் கவிமரபு; ஆரணிய. 258; சுந்தர. 483; யுத்த. 348, 511 காண்க். போக என என்பது அகர ஈறு தொகுத்துப் போகென, என நின்றது. முந்து வந்து என்று கொண்டுகூட்டாக் கிப் பொருள் கொள்ளப்பட்டது. முற்றுதல் எதிர்ப்பின் பொருட் டுச் சூழ்தல்; 'முற்றிய குரிசிலை' (யுத்த. 340); வானர வீரர்கள் சூழ்ந்தது, அங்கதனுக்கு ஊறு நேராதபடி காக்க என்க. இந்திர சித்து அங்கதனை 'உயிர் தந்து! என்றது, தன்னோடொத்த அரச னாகக் கருதினமையின்', 'ஈதா கொடுவெனக் கிள்க்கு மூன்றும் இர வின் கிளவி யாகிட னுடைய' (தொல். சொல்: எச்ச: 48); 'ஈதா கொடுவெனு மூன்றும் முறையே, இழிந்தோன் ஒப்போ னுயர்ந்தோனிரப்புரை' (நன். 407) என்றன காண்க.

பி-ம். 2. சாற்றும்
4. முன்னினர்.

2088. மரமுங் குன்று மடிந்த வரக்கர்தம்
சிரமுந் தேரும் புரவியும் திண்கரிக்
கரமு மாளியும் வாரிக் கடையவன்
சரமுந் தாழ்தர விசினர் தாங்கினர்.

(சூழ்ந்த வானர வீரர்கள்), மரமும் குன்றும் மடிந்த அரக்கர் தம் - மரங்களையும் மலைகளையும் மரித்த இராக்கதர்களின், சிரமும் தேரும் புரவியும் - தலைகளையும் தேர்களையும், குதிரைகளையும், திண் கரி கரமும் - வலிய யானைகளின் துதிக்கைகளையும், ஆளியும் - சிங்கங்களையும், வாரி - கரங்களால் வாரி எடுத்து, கடையவன் சரமும் தாழ்தர - அதமனான இந்திரசித்து எய்கிற அம்புகளின் வேகமும் பின்னிடுமாறு, வீசினர் தாங்கினர் - எறிந்து தடுத்தார்கள்.

அம்பின் வேகத்தினையும் வானரவீரர் எறிந்த வேகம் விஞ்சியது என்க. சரமும் தாழ்தர - அம்பும் வலிகெட எனினுமாம். தர: துணைவினை. வாரித்தாங்கினர் என இயைக்க.

பி - ப். 2. திங்கிரிக்.
3. கரமும் வாரிக் கடிந்தவ னேவிய; கடியவன்.
4. தாங்கினன். 152

## இலக்குவன் கணக்கற்ற அரக்கர்களை மாய்த்தல்

2089. அனைய காலையி லாயிர மாயிரம்
வினைய வெங்க ணரக்கரை விண்ணவர்
நினையு மாத்திரத் தாருயிர் நீக்கினன்
மனையும் வாழ்வு முறக்கமு மாற்றினன்.

அனைய காலையில் - அச்சமயத்தில், மனையும் வாழ்வும் உறக்கமும் மாற்றினன் - மாளிகை வாசத்தையும் அரசபோகத்தையும் நித்திரையையும் அகற்றி நின்றவனான இலக்குவன், வினையம் வெம் கண் ஆயிரம் ஆயிரம் அரக்கரை - போர்த்தொழிலையும் கொடுமையையும் உடைய பத்து இலட்சக் கணக்கான இராக்கதர்

களை, விண்ணவர் நினையும் மாத்திரத்து - தேவர்கள் நினைக்கும் பொழுதிற்குள்ளாக (தேவர்களும் மனத்தினால் எண்ணவியலாத படி மிக்க விரைவில்), ஆர் உயிர் நீக்கினான் - அருமையான உயிரைப் போக்கினான்.

தனக்கென வாழாது, போகங்கள் அனைத்தையும் வெறுத்து, எக்காலங்களிலும் அடிமைத்தொழில் புரிதற்காகவே, நாடுதுறந்து காடு புகுந்து உறக்கமின்றிப் பணியாற்றியவன் இலக்குவன் என்பது இறுதியடியால் விளங்கும்; லக்ஷ்மணோ லக்ஷ்மி சம்பன்னகா: என்றது காண்க. 'தொடுத்த வில்லன், வெம்பி வெந்தழியா நின்ற நெஞ்சினன் விழித்த கண்ணன்' (அயோத்தி. கங்கைப். 49); 'கண்கணீர் சொரியக் கங்குல், எல்லைகாண் பளவு நின்றா னிமைப்பில னயனமென்றான்' (அயோத்தி. குகப். 42); 'பயிலுங் காலம் பத்தொடு நாலும் படர்கானத், தயில்கினறேனுக் காவன நல்கி யயிலாதாய்' (யுத்த. பிரமாத்திர. 209); 'துஞ்சலில் நயனத்தைய' (யுத்த. 447); 'துறக்க மெய்திய வருந்துற வாத, உறக்க மென்பதனை யோட முனிந்தான்' (யுத்த. இராவணன் வானரத்தானை. 22) எனவருவன காண்க.

பி - ம். 3. ஆக்கையை.

4. மனையின் வாழ்வும். 153

## தோற்ற இந்திரசித்து சீறுதல்

2090. ஆனை யுந்தடந் தேருந்தன் னாருயிர்த்
தானை யும்பரி யும்பட்ட தன்மையை
மானவெங்க ணரக்கன் மகன்கொளாப்
போன வென்றியன் தீயெனப் பொங்கினான்.

மானம் வெம் கண் அரக்கன் மகன் - தருக்கும் கொடுமையும் உடைய இராவணன் மகனான இந்திரசித்து, ஆனையும் தட தேரும் - யானைகளும் பெரிய இரதங்களும், தன் ஆருயிர் - தனது அருமையான உயிர்போன்ற, தானையும் - காலாட்படைகளும, பரியும் - குதிரைகளும், பட்ட தன்மையை - இறந்த விதத்தை, கொளா - (உள்ளத்தில்) கொண்டு (கவலை மிகுந்து), போன வென்றியன் - நீங்கின வெற்றி யுடையவனாய்த் (தோல்வியுற்றுத்), தீ என பொங்கினான் - அனல்போன்று கொதித்தெழுந்தான்,

அருமை + உயிர் = ஆருயிர். பட்ட தன்மை: ஆரணிய. 46. கொளா: செய்யா என்னும் வாய்பாடு. போன வென்றியன்: வடமொழிநடை. ஆருயிர்த்தானை; (ஒப்பு): 'வெல்படை வேந்தன், வெறுக்கையு ளெல்லாம் தலை' (குறள். 761); குறள். 381ம் காண்க.

பி - ம். 1. அடர்தடந்தேரும்.

2. படுந்தன்மை. 154

## தேர்ச்சக்கரக் காவலரைக்கண்டு இந்திரசித்து இலக்குவன் போர்த்திறம் கூறல்

2091. சீர்த்த டம்பெருஞ் சில்லியந் தேரினர்
காத்து நின்ற விருவரைக் கண்டனன்
ஆர்த்த தம்பெருஞ் சேனைகொண் டண்டமேல்
ஈர்த்த சோரிப் பரவைநின் றீர்த்தலால்.

ஆர்த்த தம் பெரு சேனைகொண்டு - பெருமுழக்கம் செய்த தம்பக்கத்துப் பெரிய படைகளை வாரிக்கொண்டு, அண்டம் மேல் ஈர்த்த - அண்டமுகட்டில் தாக்கிய, சோரி பரவை - உதிரக்கடல், நின்று - (பரவி) நின்று, ஈர்த்தலால் - இந்திரசித்தின் தேரையும் இழுத்தலால்; (அங்ஙனம் தம்மை இழுத்துச் செல்லாதபடி), காத்து நின்ற - பாதுகாத்துக்கொண்டிருந்த, சீர் - சிறந்த, தட பெரு - மிகப்பெரிய, அம் - அழகிய, சில்லி தேரினர் இருவரை - (தனது) தேர் ஆழியை அடுத்திருந்த (தூம்ராட்சன், மகாபார்சுவன் என்ற) இருவரையும், கண்டனன் - (இந்திரசித்து) பார்த்தான்.

சில்லி - தேர்ச்சக்கரம்; சுந்தர. 820, 872, 1193. ஈர்த்தலால்: 'இளக்கரு நெடுவரை யீர்க்குமா றெலாம்' (யுத்த. மூலபல. 180). காத்துநின்ற இருவர்: மாபெரும்பக்கன், தூமக்கண்ணன்; யுத்த. 2098, 2099 காண்க.

பி - ம். 1. தேர்த்தடம், தேரினைக்.

2. கண்டிலன், கண்டவன்.

3. ஆர்த்தவப், ஆர்த்தவப், ஆர்த்துநும்; அண்மினீர்.

4. நின்றேற்றலான், நின்றேறிரால். 155

2092. நேர்செ லாதிடை நின்றனர் நீணெடும்
கார்செ லாவிருள் கீறிய கண்ணகல்
தேர்செ லாது விசும்பிடைச் செல்வதோர்
பேர்செ லாது பிணத்தின் பிறக்கமே.

(அப்போர்க்களத்தில்), பிணத்தின் பிறக்கம் - பிணங்கள் மலை போன்று குவிந்திருத்தலின்; (அதற்கு நேராக மேலே), நீள் நெடு கார் நேர் செலா - மிகப்பெரிய மேகங்களும் செல்லமாட்டா; இருள் கீறிய கண் அகல் தேர் செலாது - இருளைப்பிளக்கின்ற (கதிரவனுடைய) இடம் அகன்ற தேரும் செல்லமாட்டாது; விசும்பிடை செல்வது ஓர் பேர் செலா - ஆகாயத்தில் செல்லும் தன்மையுள்ள (பிராணிகளில்) ஒரு பிராணியும் செல்லாது; (இங்ஙனம் பிணங்கள் நெருங்கியிருத்தலின் அவ்விரு வீரர்களும்), நேர் செலாது இடை நின்றனர் - நேராகச் செல்லவியலாமல் இருந்த இடத்திலேயே இருந்தார்கள். ஏ - அசை.

ஓர் பேர் - ஓர் பிராணி. பிறக்கம் - நெடுந்தூரத்தினின்றும் காணப்படுவது என்று மலைக்குக் காரணக்குறி; 'ஈண்டுநின்றோர்க்கும் தோன்றும் சிறுவரை, சென்று நின்றோர்க்கும் தோன்றும்' (புறநா. 14). பிணங்கள் மலைபோலக் குவிந்து, பிறிதொன்றும் தன்னைக் கடந்து செல்லாதவாறு தடுக்கும் எனக; தொடர் புயர்வுநவிற்சியணி. விற்பூட்டுப் பொருள்கோள்.

பி - ம். 1. நின்றன.
2. சிறிய.
3. விசும்பினில்.
4. பிறங்கலால், பிறங்கலே, பிறங்கவே.

156

2093. அன்று தன்னயல் நின்ற வரக்கரை
ஒன்று வான்முக நோக்கி யொருவிலான்
நன்று நம்படை நாற்பது வெள்ளமும்
கொன்று நின்ற படியெனக் கூறினன்.

அன்று - அப்பொழுது; (இந்திரசித்து), தன் அயல் நின்ற - தன் அருகில் நின்ற, அரக்கரை - இராக்கதர்களுடைய, வாள்

ஒன்று முகம் நோக்கி - ஒளி அமைந்த முகத்தைப் பார்த்து, ஒரு விலான - ஒப்பற்ற வில்லேந்திய இலக்குவன், 'நம் படை நாற்பது வெள்ளமும் கொன்று நின்றபடி நன்று - நமது சேனை நாற்பது வெள்ளத்தையும் அழித்து நின்றவிதம் வியக்கத்தக்கது', என கூறினான் - என்று மொழிந்தான்.

இலக்குவனுடைய பேராற்றலை வியந்து, இந்திரசித்து அந்த அரக்கர் இருவரிடமும் மொழிந்தது இது. அன்று: அவ்வரக்கர் இருவரும் ஓரிடத்திலே நின்றபொழுது. வாள் ஒன்று முகம் என்க. நன்று: வியப்புப்பற்றி எழுந்தது. நாற்பது வெள்ளம்; 'அன்னுறெடு போயின தானை யறிந்துகூற, வென்னு லரிதேனு மியம்புவான் மீக னென்னும், நன்னுன் மறையானது நாற்பது வெள்ளமென்னச் சொன்னுன்' (யுத்த. 1960) காண்க. கொன்று நின்றபடி நன்று என்க.

பி - ம். 2. ஒன்ற நோக்கி யொருவில்லி னுற்றலான்; நன்றுவெள்ளமு நாற்பது.

## அவ்வரக்கர் இருவரும் சமஆற்றலர் எனல்

2094. ஆய வீரு மைய வமர்த்தலை
நீயு நாற்பது வெள்ள நெடும்படை
மாய வெங்கணை மாரி வழங்கினை
ஓய்வில் வெஞ்செரு வொக்குமென் றோதினர்.

ஆய வீரரும் - (அது கேட்ட) அத்தகைய அந்த வீரர் இருவரும் (இந்திரசித்தைப் பார்த்து), 'ஐய - அழகனே? அமர் தலை - போர்க்களத்தில், நீயும் - நீயும், நாற்பது வெள்ளம் நெடு படை - (பகைவர்களுடைய) நாற்பது வெள்ளமான பெரிய குரக்குச்சேனை, மாய - அழியுமாறு, வெம் கணை மாரி வழங்கினை - கொடிய வாளிகளை மழைபோன்று பெய்தாய்; (ஆதலின்), ஓய்வில்வெம் செரு ஒக்கும்-இடையருது ஆற்றிய (உனது) கொடிய போர் (அந்த இளையகோவின் போருடன்) ஒத்ததே', என்று ஓதினர் - என்று கூறினர்.

ஐய - தலைவ எனினுமாம். சமப் போர் என்பதுபட இரு தரப்பிலும் நாற்பது வெள்ளமே பட்டதாகக் கூறப்பட்டது, இந்திர சித்தினைத் தேற்றியவாறு என்க. மாய - தோற்றழிய.

பி - ம். 4. ஓயும். 158

இதன்பின் 'ஆறுமேழும்' என்ற கவி ஓர் பிரதியில்.

## இந்திரசித்தும் இலக்குவனும் மீண்டும் பொருதல்

2095. வந்து நேர்ந்தனர் மாருதி மேல்வரும்
அந்தி வண்ணனு மாயிர மாயிரம்
சிந்தி ளுன்கணை தேவரை வென்றவன்
நுந்த நுந்த முறைமுறை நூறினுன்.

(இந்திரசித்து இலக்குவன் என்ற இருவரும் போர்புரிய), வந்து நேர்ந்தனர் - வந்து எதிர்த்தார்கள்; (அவர்களில்), மாருதி மேல் வரும்-அநுமன் தோள்மீது ஏறி வந்த, அந்திவண்ணனும் - செவ்வானம் ஒத்த நிறமுள்ள இளையகோவும், ஆயிரம் ஆயிரம் கணை சிந்தினுன் - பல்ஆயிரக் கணக்கில் வாளிகளை வாரியிறைத் தான்; தேவரை வென்றவன் - அமரர்களை வெற்றிகொண்ட இந்திர சித்து, நுந்த நுந்த முறை முறை நூறினுன் - (இலக்குவன்) எறியும் தோறும் (அவன் விடுத்த அம்புகளைத் தன் அம்புகளால்) படிப்படியாகத் துகள் செய்தான்.

அந்திவண்ணன்: 'கனகமேனியன்' (ஆரணிய. 38, 1114); 'பொன்னொத்த மேனி' (அயோத்தி. நகர்நீ. 126); 'பொன்னொளிர் மேனியான்' (கிட்கிந்தா. 516); நுந்த நுந்த: அடுக்கு, தொறுப் பொருளது.

பி - ம். 1. நேர்ந்தனன்.
3. சிந்தினுன் சரம்.
4. முந்து போர்க்கு முறைமுறை முந்தினுன்; நோக்கினுன். 159

இதன்பின் கதிரும் என்ற செய்யுள் ஓர் பிரதியில்.

2096. ஆறு மேழு மறுபது மைம்பதும்
நூறு மாயிர முங்கணை நூக்கிவந்
தூறி னரை யுணர்வு தொலைத்துயிர்
தேறி னரை நெடுநிலஞ் சேர்த்தினன்.

(இந்திரசித்து), ஆறும் ஏழும் அறுபதும் ஐம்பதும் நூறும் ஆயிரமும் - ஆறும் ஏழும் அறுபதும் ஐம்பதும் நூறும் ஆயிரமும் ஆக, கணை நூக்கி வந்து - வாளிகளை எய்து செலுத்தி, ஊறினரை - வலிமை மிகப்பெற்று எதிர்க்க வந்தவரை, உணர்வு தொலைத்து - மூர்ச்சையுறச் செய்து, (மூர்ச்சை தெளிந்து பின்னர்), உயிர் தேறினரை - உயிர்ப்பு (பிராணவாயு) வரப்பெற்றுத் தெளிந்தவர்களாய் (மீட்டும் பொரவந்த) குரக்கு வீரர்களை, நெடு நிலம் சேர்த்தினன் - அகன்ற நிலத்தில் வீழும்படி செய்தான்.

நூக்கி : 'நூக்கிப் புறத்திரு போகென்னு மின்னுச்சொல்' (நாலடி. 326) ; உயிர் - பிராணவாயு. 'உயிரணைந்து வந்த மொழி' (சிவப்பிர. 2 : 20) ; 'ஊறினார்' (யுந்த. 2081).

பி - ம். 1. அறுபது மெண்பதும்.
3. தொலைந்துயிர்.
4. நெடுஞ்சரம். 160

இதன்பின் 'வந்து' என்ற கவி ஓர் பிரதியில்.

2097. கதிரின் மைந்தன் முதலினோர் காவலார்
உதிர வெள்ளத்தி னொல்கி யொதுங்கலும்
எதிரி னின்ற விராவணி யேடுற
வெதிரின் காட்டெரி போற்சரம் வித்தினன்.

கதிரின் மைந்தன் முதலினோர் - சூரியன் மகனான சுக்கிரீவன் முதலிய, காவலார் - குரங்குப்படைக் காவல் வீரர்கள், ஒல்கி - தளர்ந்து, உதிரம் வெள்ளத்தின் ஒதுங்கலும் - இரத்தப்பெருக்கில் ஒதுங்கின அளவில், (இலக்குவன்), எதிரில் நின்ற இராவணி ஏடு உற - தன்முன்பு நின்ற இராவணன் புதல்வனான மேகநாதன்,

தளர்வுறும் வண்ணம், வெதிரின் காட்டு எரி போல் சரம் வித்தி ஞன்-மூங்கிற் காட்டில் பற்றிய தீப்போன்று, அம்புகளை மேன்மேல் விளையும்படி செய்தான்.

காவலார் - வானரத்தானையின் காவலர்கள். ஒல்கி - தளர்ந்து ; 'சிதைவிடத் தொல்கார் உரவோர்' (குறள். 597) ; இராவணி - இந்திரசித்து. ஏடு உற : இளைப்புற ; ஏடு - தளர்வு ; 'ஏட்டைப் பருவத்தும இற்பிறந்தார் செய்வன' (நாலடி. 358). வெதிர் - மூங் கில் ; 'வெதிரின் வன்னெடுங்கானென' (யுத்த. 560) ; 'வெதிர் நெடுங் கான மென்ன வேகின்ற மனத்தன்' யுத்த. நாகபாச. 200); 'உற்பத்தியனை டொக்கும், ஓடும்போ தரியே யொக்கும்' (யுத்த. 1237) என்றது காண்க. வெதிர் : 'சிறியிலை வெதிரின் நெல் விளையும்' (புறநா. 109). தெலுங்கரும், மூங்கிலை 'வெதிர்' என்பர். இதிலிருந்து கிடைக்கும் அரிசியைச் சிலர் உண்பர். 'ஆடுகழை நெல்லை யறையுரலிற் பெய்திருவாம்' (சுலிந். 41) ; 'மூங்கில் ஒன்றொடொன்று உராயவே தீப்பிறந்து, சிறு தீயும் பெருங் காட்டையழிக்கும் ; அது போன்று இலக்குவன் விடுத்த அம்பு கள் பலவாக விளைந்து, பகைவரை அழித்தன என்க. ஏவிய சரங்கள் ஒன்று பத்தாக விளையுமாதலின் 'வித்திஞன்' எனப் பட்டது.

பி - ம். 1. மைந்தர் ; காந்தினர், காதினர்.

3. ஈடுற.

4. விசினன்.

161

2098. உளைவு தோன்ற விராவணி யொல்கினன்
கிளையி னின்ற விருவர் கிளைத்தலும்
அளவில் சேனை யவிதர வாரியற்
கிளைய வீரன் சுடுசர மேவினன்.

(அக்காலையில்), இராவணி - இந்திரசித்து, உளைவு தோன்ற - ஒல்கினன் - வருத்தம் உண்டாகத் தளர்ந்தான் ; (பின்பு) கிளையின் நின்ற இருவர் - மரத்தின் கிளைபோன்று அவன் அருகில் நின்று கொண்டிருந்த, இரண்டு அரக்கர்களும், கிளைத்தலும் - பொங்கி

எழுந்த அளவில், ஆரியற்கு இளைய வீரன் - இராமபிரானுக்குத் தம்பியாகிய இலக்குவன், அளவு இல் சேனை அவிதர சுடுசரம் ஏவினான் - எண்ணிறந்த அரக்கர் சேனைகள் அழியுமாறு வெவ்விய வாளிகளைச் செலுத்தினான்.

கிளையின் : ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருள். கிளைத்தல்-ஊக்கத்துடன் பொருதல். அவிதர - தர துணைவினை. சுடுசரம் - வினைத்தொகை. இருவர் புகைநிறக் கண்ணனும் பெரும்பக்கனும். ஒரு பிரதியில் இச்செய்யுள் அடிகள் முன்பின்னாக மாறியுள்ளன.

பி - ம். 1. உளைவு தோன்றி.

2. கிளர்த்தரும், கிளைத்தரும், கிளந்தலும், கிளைத்தரும், கிளக்கரும்.

3. நாயகற்கு. 162

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஐயன் வாளி துணித்திட வாடவர்
கையில் வாயவுங்கண்டு தன் காதலி
செய்ய தாமரைக் கண்கள் துடைத்தக்கை
மையிதா மெனக் கண்டுள வாவினான்.

வேறு

## இலக்குவனம்புகளால் தாக்கப்பட்ட அரக்கர்களின் நிலைமை

2099. தெரிகணை மாரி பெய்யத் தேர்களுஞ் சினைக்கைம் மாவும்
பரிகளு மரக்கர் தாமும் பட்டன கிடக்கக் கண்டார்
இருவரு நின்றார் மற்றங் கிராக்கத ரென்னும் பேரார்
ஒருவரு நின்று ரில்லை யுள்ளவ ரோடிப் போனார்.

தெரிகணை மாரி பெய்ய -(இலக்குவன்) தேர்ந்தெடுத்த வாளிகளை மழைபோன்று வழங்க, (அதனால் அரக்கருடைய), தேர்களும்-இரதங்களும், சினைகை மாவும் - துதிக்கையாக உறுப்பினை யுடைய யானைகளும், பரிகளும் - குதிரைகளும், அரக்கர் தாமும் -

பல அரக்கர்களும், பட்டன கிடக்க கண்டார் - அப்பொழுது மரித்துக் கிடந்ததைக் கண்ணுற்றவரான, இருவரும் - அந்த இரண்டு அரக்கர் மாத்திரமே, நின்ருர் - போர்க்களத்தில் நின்றனர்; இராக்கதர் என்னும் பேரார் ஒருவரும் நின்ருர் இல்லை - (அங்கு) இராக்கதர் என்ற பெயருள்ளவர் எவரும் (உயிருடன்) நிற்கவில்லை; உள்ளவர் ஓடி போனுர் - உயிர் தரித்திருந்த சில அரக்கர்களும், ஓடி போனர் - (களத்தைவிட்டு) ஓடி விட்டார்கள்.

சினேக்கை மா - சினேயாகிய துதிக்கையுடையது. 'கைம்மா வென்றேன் சும்மா கலங்கினுளே' (தனிப்பா. அந்தக்கவி); 'கைம்மா மதகரியின்னினம்' (தேவா. 1017 ; 2); தாமும் நின்ருர் என்க. மற்று : வினைமாற்று.

பி - ம். 1. மாரி பாயத் ; சினக்கை, சிலேக்கை.

2. தாமுமன்று ; பட்டவா ; பட்டனர் கிடப்ப ; கண்டாங்கு.

3. மற்றை, மற்ற ; பேர்கள், பேரோர். 163

2100. ஓடினு ரரக்கர் தண்ணீ ருண்ணசை யுற்ற நாவர்
தேடினு ரெதிர்ந்து கையான் முகிலினே முகந்து தேக்கிப்
பாடுறு புண்கள் தோறும் பசும்புனல் பாயப் பாய
வீடினர் சிலவர் சில்லோர் பெற்றிலர் விளிந்து வீழ்ந்தார்.

ஓடினுர் அரக்கர் - (அவ்வாறு) ஓடினவர்களாகிய இராக்கதர்களில், சிலவர் - சிலர், தண்ணீர் உண்நசை உற்ற - தண்ணீர் பருக வேண்டும் என்ற விருப்பம் எழப்பெற்ற, நாவர் - நாவினராய், தேடினுர் -(தண்ணீர்) தேடி, முகிலினே எதிர்ந்து - மேக மண்டலத்தின் நேரே சென்று, கையால் - (தமது) கரங்களால், (அம் மேகத்தில் உள்ள நீரினே) முகந்து தேக்கி - வாரிப்பருகி, பாடுஉறு புண்கள் தோறும் - (அம்புகள் பட்டதால் உற்ற துன்பம் பொருந்திய புண்களில் எல்லாம், பசும் புனல் பாய பாய - தண்ணீர் மிகுதியாக ஊறுவதால், சிலவர் வீடினுர் - சிலர் இறந்தார்கள் ; சில்லோர் - மற்றும் சிலர், பெற்றிலர் - (நீர்) கிட்டப் பெருதவர்களாய், விளிந்து வீழ்ந்தார் - இறந்து விழுந்தனர்.

உண்ணசை : உண்ண வெண்டும் என்ற ஆசை. உலர்ந்த நாவர் : வடமொழி நடை. முகிலினை முகந்து தேக்கி ; 'தண்ணீர் முறை தப்பிடிற் றடக்கை யாற்றடவி, விண்ணின் மேகத்தை வாரி வாய்ப் பிழிந்திடும் விடாயார்' (யுத்த. மூலபல : 9); தேக்குதல் - நிரம்பப் பருகுதல்; 'நிறை மத்த மதுவைத் தேக்கி' (யுத்த. அதிகாய : 215); பாடுறு : பாடுறு பசியை நோக்கி' (யுத்த. 415). பசும் புனல் - உதிரமுமாம். சிலர் தண்ணீர் பருகியும் சிலர் பருகாமலும் இறந்தனர். புண்கள் தோறும் பருகிய நீர் படியச் சன்னி கண்டு மடிந்தனர் என்க.

பி - ம். 1. ஓடிய ; புலர்ந்த வாயர்

2. தெரிந்து, திரிந்து ; மூடின

3. புண்களெல்லாமப், புண்களோடும் பசும்

4. சில்பேர் ; விளிந்து போனர். 164

2101. வெங்கணை திறந்த மெய்யர் விளிந்திலர்
விரைந்து சென்ருர்
செங்குழற் கற்றை சோரத் தெரிவைய
ராற்றத் தெய்வப்
பொங்கிரும் பள்ளி புக்கா ரவருடல்
பொருந்தப் புல்லி
அங்கவ ராவி யோடுந் தம்முயிர்
போக்கி யற்ருர்.

வெம்கணை திறந்த மெய்யர் - கொடிய வாளிகளாற் பிளக்கப் பட்ட உடலையுடையவரான சில இராக்கதர்கள், விளிந்திலர் விரைந்து சென்ருர் - இறவாது வேகமாகப் போய், தெரிவையர் - (தமது) மனைவியரான அரக்கிமார்கள், செம் குழல் கற்றை சோர - (தமது) செம்பட்ட மயிர்த் தொகுதி வீழ (ஓடி வந்து), ஆற்ற - தேறுதல் கூற, அவர் உடல் பொருந்த புல்லி - அம்மனைவியரின் உடம்பை அழுந்த அணைத்தபடியே, அங்கு - அவ்விடத்திலேயே, அவர் ஆவியோடும் - அம்மனைவியருடைய உயிருடன், தம் உயிர் போக்கி அற்ருர் - தமது உயிரையும் நீத்து மரித்தவர்களாய்,

(வீரர் உலகில்), தெய்வம் பொங்கு இரு பள்ளி புக்கார் - தெய்வத் தன்மையுள்ள நறுமணம் பொங்கும்படியான பெரிய படுக்கையை அடைந்தார்கள்.

விளிந்திலர், சென்றார் : முற்றெச்சங்கள். குழல் கற்றை - கூந்தற்றொகுதி ; சோர்தல் - அவிழ்ந்து வீழ்தல். 'இருதடங்க ணஞ்சனவெம் புனல்சோர அளகம் சோர' (வில்லி பா. சூது. போர். 247); ஆற்றுதல்: தேற்றுதல். மணி. 11 ; 86. தெரிவையர் : இங்கே மனைவியர் ; மாதர்களின் பருவம் குறித்து வந்ததன்று. பொருந்தப் புல்லுதல் ; இதனைக் காடாலிங்கனம் என்பர் வட நூலார். தெய்வப் பொங்கிரும் பள்ளி என்றார் ; விண்ணுலகத் துப் பாரிசாதம் கற்பகம் முதலியன பரப்பப்பெற்று நறுமணம் கமழும் பள்ளியாதலின் ; கணவனுடன் உயிர் துறந்தோர் வீரர் உலகில் சென்று அவருடன் வதிவர் என்பது நூற்கொள்கை. 'ஹதோவாப்ராப்ஸ்யஸேஸ்வர்கம்' (பகவற்கீதை. 1: 37).

பி - ம். 1. துறந்த ; இறக்க

2. தெரிவையரெதிர்ப்ப ; அரற்றத்

3. பூம்பள்ளி ; புக்கங்கு 165

2102. பொறிக்கொடும் பகழி மார்பர் போயின
ரிடங்கள் புக்கார்
மறிக்கொளுஞ் சிறுவர் தம்மை மற்றுள
சுற்றந் தம்மைக்
குறிக்கொளு மென்று கூறி யவர்முகங்
குழைய நோக்கி
நெறிக்கொளுங் கூற்றை நோக்கி யாருயிர்
நெடிதின் நீத்தார்.

பொறி கொடு பகழி மார்பர் - தீப்பொறியை உமிழ்கின்ற கொடிய அம்புகள் புதையப்பெற்ற மார்பினரான சில அரக்கர், போயினர் - (போர்க்களத்தை நீத்துப்) போய், இடங்கள் புக்கார் - தத்தம் பாசறைகளில் புகுந்து, (பின்னர்) உள் சுற்றம் தம்மை - தமக்கு அமைந்த உறவினர்களைக் கண்டு, 'மறிகொளும் சிறுவர்

தம்மை-(காலைக் கட்டித்) தடுக்கின்ற (இந்த) எம்மக்களை, குறி கொளும்- (நீங்கள்) கருத்துடன் கவனித்துக் கொள்ளுங்கள்', என்று கூறி - என்று மொழிந்து, அவர் முகம் குழைய நோக்கி - அந்தச் சிறுவர்களுடைய முகத்தை மனம் கனிந்து பார்த்து, நெறிகொளும் கூற்றை ஒறுத்து நோக்கி - தங்கள் உயிரைக் கவர்ந்துசெல்லும் வழியை மேற்கொண்டு அணுகாநின்ற யமனைக் கடிந்து பார்த்து, ஆருயிர் நெடிதின் நீத்தார் - தமது அருமையான உயிரைத் தமது துயர நீட்சியுடன் போக்கினர்.

மறிக்கொள்ளுதல்: (ஆட்டுக் குட்டியொப்பக்) காலைக் கட்டிக் கொள்ளுதல்: மறி: ஆட்டுக் குட்டி: 'பெண்டாட்டி கால் விலங்கு பிள்ளை யொரு சுள்ளாணி' என்ற பழமொழி காண்க. மனைவி மக்களைக் கால்கட்டு என்பதும் உண்டு. மற்று: வினைமாற்று. குறிக்கொள்ளுதல்: 'குறிக்கொண்டு நோக்காமை யல்லால்' (குறள். 1095). குழைதல்: நெகிழ்தல்; 'வழுத்துதல் போற்றல் வணங்கல் குழைதல்' (திருக்கருவை. கலித். 28); 'குழைந்து கசிந்து கரஞ்சிரமேற் கொண்டு' (அகிலாண்ட. பிள்ளைத்) ஒறுத்து என்பதை நோக்கி என்பதனோடும் கூட்டுக. தமது தமர் தாரம் மகவு என்ற இவர்களினின்றும் தம்மைக் கவர்ந்து சேறலின் யமனை ஒறுத்து நோக்கி எனப்பட்டது. 'கடந்த ஞானியும் கடப்பரோ மக்கள்மேற் காதல்' என்றபடி மக்கட் பாசம் பொல்லாதென்க.

பி-ம். 1. பொறிக் கொளும்; பாய

2. மற்றுள்ள சுற்றத்தாரை, சுற்றத்தோரை

3. தறிக்கொளும்; என்னக்; குழைந்து நோக்கி

4. நெடிது.

166

2103. தாமரைக் கண்ணன் தம்பி தன்மையீ
தாயின் மெய்யே
வேமரைக் கனத்தி னிவ்வூ ரிராவணி
விளிதன் முன்னம்
மாமரக் கானிற் குன்றின் மறைந்திரு
மறைய வல்லை
போமெனத் தமரைச் சொல்லிச் சிலருடல்
துறந்து போனர்.

சிலர் - சிலர் அரக்கர்கள், 'தாமரை கண்ணன் தம்பி - செந் தாமரை போன்ற இராமபிரான் தம்பியான இலக்குவனுடைய, தன்மை ஈது ஆயின் - வீரப்பான்மையே இவ்வாறெனின் (கொடி தா யிருத்தலின்), இ ஊர் அரை கணத்தின் வேம் - இந்த இலங்கை நகர் அரைக்கணத்தில் எரிந்து அழியும்; மெய்யே - இஃது உண்மை; (ஆதலின்), இராவணி விளிதல் முன்னம் - இந்திரசித்து மரிப்பதன் முன்னரே, மாமரம் கானில் குன்றில் மறைந்திரும் - பெரிய மரங்களையுடைய காடுகளிலும், மலைகளிலும் (இலக்குவன் கைப்படாமல்) ஒளித்திருங்கள்; மறைய - அங்ஙனம் ஒளித்து வைகுவதற்காக, வல்லை போம் - விரைந்து செல்லுங்கள்', என - என்று, தமரை சொல்லி - தங்கள் உறவினரிடம் மொழிந்து, உடல் துறந்து போனார் - உடற் கூட்டை நீத்து வீரருலகடைந்தனர்.

தாமரைக் கண்ணன்: அயோத்தி. மந்திரப். 70. வேம்: வேகும் என்பதன் தொகுத்தல்; 'வெயிலும் வேம் மழையும் வேம், மின்னி னேடியும் வேம்' (பால. தாடகை: 6); இராவணி; 'தோற்றமு மிராவணி துணியும்' (யுத்த. 1970); 2106-ம் பார்க்க. தமர்: 'நல்ல செய்வார்க்குத் தமர்' (நாலடி. 77).

பி - ம். 1. மெய்ம்மை

3. மாமரைக் கானில்; மறைந்திடும், மறைந்து நீர்: உறைய; வல்லே

4. தமதுடல், தம்முடல்; ஆவிபோனார். 167

2104. வரையுண்ட மதுகை மேனி மருமத்து
வள்ளல் வாளி
இரையுண்டு துயிலச் சென்றார் வாங்கிடி
னிறப்ப மென்பார்
பிரையுண்ட பாலி னுள்ளம் பிறிதுறப்
பிறர்முன் சொல்லா
உரையுண்ட நல்லோரென்ன வுயிர்த்துயிர்த்
துளைப்ப தானார்.

வரை உண்ட - (தங்களது) மலைபோன்ற, மதுகை மேனி - வலிமைவாய்ந்த உடலின், மருமத்து - இரகசியமான (இடத் திலே (உயிர்நிலையிலே), வள்ளல் - இலக்குவனுடைய, வாளி இரை யுண்டு துயில - அம்புகள் (பதியப்பெற்று) உணவினை யுண்டு

டெக்க, சென்றார் - சென்றசில அரக்கர், 'வாங்கிடின் இறப்பம்-(இந்த அம்புகளைப்) பிடுங்கினால் இறந்துபடுவோம்', என்பார் - என்று கருதினவராய், பிரை உண்ட பாலின் - பிரையூற்றின பால் போன்று, உள்ளம் பிறிது உற - (தமது) உள்ளம் வேறுபட, பிறர் முன் சொல்லா - பிறர்பாற் கூறாத, உரை உண்ட - சொற்களைக் கொண்ட, நல்லோர் என்ன - (மோனவிரதம் பூண்ட) பெரியோர் போல (ஒன்றும் சொல்லமாட்டாதவராய்), உயிர்த்து உயிர்த்து உளைப்பது ஆனார் - பெருமூச்சு விட்டுக்கொண்டு வருந்துபவர் ஆனார்கள்.

வரை உண்ட: உண்ட உவமவுருபு; 'சேலுண்ட வொண்கணாரில்' (பால. நாட்டுப். 13) என்ற இடத்துப்போல. மதுகை - வலிமை; 'உரங்கிளர் மதுகையான்' (யுத்த. இராவணன்வதை. 237). அம்புகள் சருமத்தில் தைத்து ஊனைக்கவ்வி நின்றதை இரையுண்டதாக வருணித்தது கவிசாதுரியம். மருமம்: மார்பு எனினுமாம்; 'மருமத்தின் எறிவேல் பாய்ந்த' (பால. கையடைப். 11); பிரையுண்டபால்: சிறந்த மந்திரங்களைக் கற்றோர் அம்மந்திரத்தை அதிகாரிகள் அல்லாதவர்க்கும், பக்குவமில்லார்க்கும் உபதேசிக்கக்கூடாத நிலையில், அவற்றை மனத்துள்ளே அடக்குவர்; அவர்களைப்போனறு சொல்லவோ மெல்லவோ இயலாத நிலையில் வருந்துவோர் ஒப்ப, உயிர்த்து. வருந்தினர் சிலர் என்க. இனி, பிறர்முன் சொல்லா வுரையுண்ட பெரியோர் என்பது; அயலார், இந்த ஞானி கள்ளனே எனும்படி ஒரு வம்பன் அந்த ஞானியைக்கண்டு இல்லாத அவதூறு சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்ட ஞானி, 'நமக்கு இந்த அவதூறுகேட்க விதித்ததே' என்று, அவ்வார்த்தையைப் பொறுத்திருந்தது ஒத்தது என்க; நல்லோர் தம் குறையைப் பிறரிடம் சொல்லாமை இங்குக் குறிக்கப் பட்டது எனினுமாம்.

பா - ம். 1. வாளிபாய

2. இகல்கிட்டி; நிற்ப வென்பார், இறப்பனென்றார், இறப்பமென்றார்

4. பெரியோரென்ன; உயிர்ப்புபயிர்த்து, உழைப்பது.

2105. தேரிடைச் செல்லார் மானப் புரவியிற்
செல்லார் செங்கண்
காரிடைச் செல்லார் காலிற் காலெனச்
செல்லார் காவல்
ஊரிடைச் செல்லார் நாணு லுயிரின்மே
லுடைய வன்பால்
போரிடைத் திரியா நின்று நடுங்கினர்
புறத்தும் போகார்.

(மற்றும் அரக்கர்), தேர்இடை செல்லார் - தேர்மீது ஏறிச் செல்லாமலும், மானம் புரவியில் செல்லார் - செருக்குமிகுந்த குதிரைகள் ஊர்ந்து செல்லாமலும், செம்கண்கார் இடை செல்லார் - சிவந்த விழிகளையுடைய கருமேகம் போன்ற யானைகள்மீது செல்லாமலும், கால்என காலில் செல்லார் - காற்றுப் போன்று (விரைந்து) காலினுல் நடந்து செல்லாமலும், நாணல் - வெட்கத்தினுல், காவல் ஊரிடைச் செல்லார் - காவலுடன் கூடிய இலங்காபுரிக்குச் செல்லாமலும், புறத்தும் போகார் - சமர்க்களத்தின் புறம்பே ஓடிப் போகாமலும், உயிரின் மேல் உடைய அன்பால் - (தத்தம்) உயிரின் மீது கொண்ட அபிமானத்திஞலே, போரிடை திரியா நின்று நடுங்கினர் - போர்க்களத்தில் உலவாமல் (ஒரு புறமாக ஒளிந்து) நின்று நடுக்கமுற்றனர்.

வாகனுதிகளில் ஏறிச் சென்ருல் எதிரியால் என்ன நிகழுமோ என்ற அச்சத்தால், தத்தம் வாகனங்களில் ஏறுவதைத் தவிர்ந்தனர். இலங்கை ஊர்க்கண் சென்ருல் பலரும் ஏசுவரே என்ற நாணமும் அச்சமுங்கொண்டு, அங்கும் சென்ருரில்லை; உயிர்மீது உற்ற அன்பினல் போர்க்களத்தின் உள்ளே புகவில்லை. செங்கண்கார் யானை : கண் சிவந்தது வெகுளியால் என்க.

பி - ம். 3. உயிரிடை

4. பேரரிடைச் செல்லார்; நடுங்கியே போகார்.

## இலக்குவன் இந்திரசித்தின் கவசத்தைப் பிளத்தல்

2106. நொய்தினிற் சென்று கூடி யிராவணி
யுளவை நோக்கி
வெய்தினிற் கொன்று வீழ்ப்ப லென்பதோர்
வெகுளி வீங்கிப்
பெய்துழிப் பெய்யு மாரி யனையவன்
பிணங்கு கூற்றின்
கையினிற் பெரிய வம்பாற் கவசத்தைக்
கழித்து வீழ்த்தான்.

பெய்துழி பெய்யும் மாரி அனையவன் - பெய்த இடத்திலேயே பெய்யும் மேகத்தை நிகர்த்தவனான இலக்குவன், நொய்தினில் சென்று கூடி - விரைவுடன் சென்று நெருங்கி, இராவணி உளவை நோக்கி - இந்திரசித்தின் தந்திரத்தைக் கண்டு, 'வெய்தினில் கொன்று வீழ்ப்பல் - (இவனை) விரைவினில் கொன்றுதள்ளுவேன்', என்பது ஓர் வெகுளி வீங்கி - என்று ஒப்பற்ற சினம் பெருகி, பிணங்கு கூற்றின் - மாறுபாடு கொள்ளும் யமன்போன்ற, கையினில் பெரிய அம்பால் - (தன) கரத்தில் உள்ள பெரிய வாளிகளால், கவசத்தைக் கழித்து வீழ்த்தான் - கவசத்தைத் துணித்துத் தள்ளினான் (இளையகோ).

இந்திரசித்தின்மீது விடாது சரமாரி பெய்ததை, பெய்துழிப் பெய்யும் மாரி என்றார். உளைவு நோக்கி: என்ற பாடம் உண்டு; அங்கு உளைவு தளர்ச்சி என்று பொருள்படும்; யுத்த. 2098 காண்க. மற்றும் எதிரி தனித்துக் களைத்துநின்ற நிலையில் அவனை அழிக்க முயல்வது சுத்த வீரமன்று ஆகலின், உளவு என்ற பாடமே தழுவப்பட்டது. 'ஆளையா' (1210) என்ற கவியும், தழிஞ்சி என்னும் புறத்திணைத் துறையும் இங்குக் காண்க.

பி - ம். 2. வெய்தினிற்றுணித்து; விங்கப்.

3. அனையன; பிறங்கு.

4. கடிய; வெம்போர் கவசத்தை; இழித்து.



இதன் பின் 'மாருதி' என்ற பாடல் ஓர் பிரதியில்,

## தூமிராக்ஷனும் மகாபாரிசுவனும் இலக்குவனை எதிர்த்துப் பொருதல்

2107. கவசத்தைக் கழித்து வீழ்ப்பக் காப்புறு கடனின் ருகி
அவசத்தை யடைந்த வீர னறிவுவந் தடையு முன்னம்
துவசத்தின் புரவித் திண்டேர் கடிதுறத் தூண்டி யாமித்
திவசத்தின் முடித்தும் வெம்போ ரெனச்சினந் திருகிச்
[சென்ருர்.

(இலக்குவன் இந்திரசித்தின்), கவசத்தை கழித்து வீழ்ப்ப - கவசத்தை வெட்டித் தள்ள, காப்புறு கடன் இன்று ஆகி - (அம்பு படாமல்) காத்துக்கொள்ளும்படியான, கடன் இன்று ஆகி - முறை யொன்றுமின்றி, அவசத்தை அடைந்த வீரன் - தன் வசம் தீர்ந்த (மூர்ச்சை யடைந்த) இந்திரசித்து, அறிவு வந்து அடையும் முன்னம் - உணர்வு வந்து தோன்றும் முன்பே, (புகை நிறக் கண்ணன், பெரும் பக்கன் என்ற இருவரும்), துவசத்தின் - கொடி யினை யுடையதும், புரவி திண்தேர் - குதிரைகள் பூட்டப் பெற்றது மான, வலிய தேரை, கடிது உற தூண்டி - விரைவாகச் செலுத்தி, 'யாம் இ திவசத்தின் வெம்போர் முடித்தும்-நாங்கள் இந்தத்தினத் தில் கொடுமையானபோரை முடித்திடுவோம்', என - என்று மொழிந்து, சினம் திருகி சென்ருர் - கோபத்தால் மாறுபட்டுப் போயினர்.

அவசம் : வடமொழி ; தன் வசமிழத்தல் என்பது பொருள். 'அவசமாய்ச் சிந்தையழிந் தயலே நின்ரு, னறியாதான் போல வறிந்த வெலாம் சொன்ஞன்' (ஆரணிய. 99); திவசம் : வடமொழி ; நாள் (ஆரணிய. 99); கொடி : (ஆரணிய. 99); முடித்தும் : செய்யும் என்னும் வாய்பாட்டு வினை. சினம் திருகி : 'திருகு வெஞ்சினத் தன' (யுத்த 336).

பி - ம். 1. கிழித்து ; கடையினின்ருர்.
2. வீரனறிவுறுந் துணையின், அண்ணலறிவுறுந் துணையும் வீரத்.
3. கடிதினில்.



இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

2108. மாருதி மேலு மையன் மார்பினும் தோளின் மேலும்
தேரின ரிருவர் சென்ருர் செந்தழற் பகழி தூவி.
ஆரியன் அவர்கள் வில்லு மச்சுடைத் தேரு மத்தேர்
ஊர்குவா ருயிரும் பூட்டும் புரவியி னுயிரு முண்டான்.

தேரினர் இருவர் - தேர் வீரரான இரண்டு அரக்கர்களும், மாருதி மேலும் - அநுமன் மீதும், ஐயன் மார்பினும் - இலக்குவனுடைய மார்பின் மேலும், தோளின் மேலும்-தோள்களின்மீதும், செம்தழல் பகழி தூவி - செந்நிறமான அம்புகளை இரைத்து, சென்ருர் - (எதிர்த்துச்) சென்றனர்; ஆரியன் - இலக்குவன், அவர்கள் வில்லும் - அவர்களின் வில்லையும், அச்சுடை தேரும் - அச்சினையுடைய இரதத்தையும், அ தேர் ஊர்குவார் - அந்தத் தேரைச் செலுத்தும் பாகருடைய, உயிரும் - உயிரையும், பூட்டும் புரவியின் உயிரும் உண்டான் - தேரினிற் பூட்டப் பெற்ற குதிரைகளின் உயிரையும் கவர்ந்துகொண்டான்.

தேர் ஊர்குவார்: 'தேரூரும் அவர் மணக்கே வளாந்த என்னே' (வி. பா. 17ஆம் போர்: 21). வாகை வில் என்ற பாடமும் உண்டு. அந்தப் பாடத்துக்கு வாகை பிற குறிப்பாகவே கொள்க. இருவர்: தூம்ராட்சன்: மகாபார்சுவன்.

பி - ம். 2. தேரிவிருவர், தேரிலின்றிருவர்; சிந்தின பகழி சிந்தி

3. வாகை வில்லும்

4. ஊர்குவான், ஊருவான்; கோண்டான், கொன்ருன். 172

இதன்தன் 'தண்டவக்' என்ற செய்யுள் ஓர் பிரதியில்.

அந்த இரண்டு அரக்கரும் அநுமனுடன் பொருது
உயிர் தப்பியோடுதல்

2109. இருவரு மிழந்த வில்ல ரெழுமுனே
வயிரத் தண்டர்
உருமெனக் கடிதி னேடி யனுமனே
யிமைப்பி னுற்ருர்

பொருகனற் பொறிகள் சிந்தப் புடைத்தனர்
புடைத்த லோடும்
பருவலிக் கரத்தி னுற்றண் டிரண்டையும்
பறித்துக் கொண்டான்.

இழந்த வில்லர் இருவரும் - விற்களை இழந்தவரான (புகை நிறக் கண்ணன் பெரும்பக்கன் என்ற) இரண்டு அரக்கர்களும் எழுமுனை வயிரம் தண்டர் - இரும்பினால் செய்த பூணையுடைய வலிய கதையை ஏந்தியவர்களாய், உரும் என - இடி போன்று, கடிதின் ஓடி - விரைந்து சென்று, இமைப்பின் - ஓரிமைப் பொழுதிற்குள், அநுமனை உற்றார் - மாருதியை அடைந்து, பொருகனல் பொறிகள் சிந்த - அடர்ந்த தீப்பொறிகள் சிதறுமாறு, புடைத்தனர் - அடித்தார்கள்; புடைத்தலோடும் - (அங்ஙனம்) அடித்த அளவில், (அநுமன்), பருவலி கரத்தினால் - பருத்த வலிமை சான்ற (தனது) கைகளினால், தண்டு இரண்டையும் பறித்துகொண்டான் - இரண்டு கதைகளையும் பிடுங்கிக் கொண்டான்.

முனைத்தண்டு - முனையினையுடைய தண்டாயுதம்: சீவக. 1136; 'எழுமுனை வயிரத்தண்டு' (சுந்தர. அக்ககுமாரன். 11). எழுமுனை என்றபாடத்துக்கு - வளர்ந்த மூங்கில் என்க.

பி - ம் 1. முளை; தண்டான். 178

2110. தண்டவன் கைய தாய தன்மையைத் தறுக ணாளர்
கண்டனர் கண்டு செய்ய லாவதொன் றுனுங் காணார்
கொண்டன னெறிந்து நம்மைக் கொல்லுமென் றச்சங்
[கொண்டார்
உண்டசெஞ் சோறு நோக்கா ருயிருக்கே யுதவி செய்தார்.

தறுகண் ஆளர் - அஞ்சாமை மிக்க அவ்வரக்கர் இருவரும், (தாம் கைக்கொண்டிருந்த), தண்டு அவன கையது ஆய தன்மையை - கதை அந்த அநுமன் கையிற் சிக்கிய தன்மையை, கண்டனர் - பார்த்தார்கள்; கண்டு - கண்ணுற்று, '(தம்மால் அப்போழ்தில் அவனுக்கு மாறாகச்), செய்யல் ஆவது - செய்யக் கூடிய தொழில், ஒன்றுனும் காணார் - ஒன்றையேனும் அறியாதவர்களாய், கொண்டவன் - (நமது தண்டைப்) பறித்துக் கொண்ட (இவ் வநுமன்), எறிந்து - வீசி, (அப்போர்க் கருவியினாலேயே), நம்மை

கொல்லும் - நம்மைக் கொல்வான்', என்று அச்சம் கொண்டார் - என்று பயமடைந்தவர்களாய், உண்ட செம் சோறும் - (தாம் இது வரையிற்) புசித்த செவ்விய சோற்றைப் பற்றியும், நோக்கார் - ஆராயாதவர்களாய், உயிருக்கே உதவி செய்தார் - தங்கள் உயிரைப் பாதுகாப்பதற்கே, உதவி செய்தார் - துணை புரிந்தனர்; (உயிர் தப்புமாறு ஓடினார்கள்.)

சிறிதேனும் உண்ட செஞ்சோறு நோக்கார்; 'இராச ராசனுக்குச் செரு முனைச் சென்று செஞ் சோற்றுக், கடன் கழிப்பதுவே யெஃக்கினிப் புகழுங் கருமமுந் தருமமும் என்றான்' (வில்லி. பா. இருட்டிலான் : 255) என்ற கன்னன் கூற்று இங்கு நினைவு கூரத்தகும். 'உண்ட வீட்டுக் கிரண்டகம் நினைப்பதா' என்ற பழமொழியும் 'செஞ் சோற்று விலையுந் தீர்ந்து' (தொல். புறத். உரை: 72) என்றதும் காண்க. இங்ஙனம் செய்வதை விடுத்து உயிர் மேலிச்சை கொண்டாராகலின் 'உண்ட செஞ்சோறு நோக்கார்' எனப்பட்டது. 'தஞ்ச மெனவொருவர் சோறுண்ட தாளாண்மை, வெஞ்சமரி லன்றி விளிவரோ' என்றபடி, ஒருவனது சோற்றைப் புசித்தவர்கள் நன்றி மறவாது தமது உயிர் கொண்டும் அவனுக்கு உதவி புரிவது கடமை. அங்ஙனம் செய்யாது ஓடிப்போயினர் என்பது ஈற்றடியின் கருத்து. தண்டு என்று ஒருமையாகக் கூறப் படினும் இருவர் தண்டாயுதங்களும் அநுமன் கையிற் சிக்கின வென்க.

பா - ம் 1. தகைமையை ; நறுகண்ணுளர்

2. கண்டவர் ; ஆண்டு ; ஆவதோ வென்றும்

3. கொண்டிவன், கொண்டவன்

4. செஞ் சோற்றை. 174

## மயக்கம் நீங்கிய வாநர வீரர்கள் தெளிந்தெழுந்து போர் செய்தல்

2111. காற்றுவந் தசைத்த லாலுங் காலமல் லாமை யாலும்
கூற்றுவந் தாவி கொள்ளுங் குறியின்மை குறித்த லாலும்
தேற்றம்வந் தெய்தி நின்ற மயக்கமு நோவுந் தீர்ந்தார்
ஏற்றமும் வலியும் பெற்று ரெழுந்தனர் வீர ரெல்லாம்.

(இந்திரசித்தின் வாளிகளால் நினைவிழந்திருந்த வானர), வீரர் எல்லாம் - வீரர்கள் அனைவரும், காற்று வந்து அசைத்தலாலும் - குளிர்ந்த காற்று எழுந்து வீசியதாலும், காலம் அல்லாமை யாலும் - (அது தாங்கள் மரித்தற்குரிய) காலமன்மையானும், கூற்று வந்து ஆவிகொள்ளும் குறி இன்மை குறித்தலாலும்-யமன் தோன்றித் (தமது) உயிரைக் கவர்தற்குரிய அறிகுறி ஒன்றும் இல்லாமையறியப் படுதலாலும், (மரண வேதனை சிறிதும் காணப் படாமையானும்), தேற்றம் வந்து எய்தி - தெளிவு பெறும் தன்மை வந்து பொருந்தி, நின்ற மயக்கமும் நோவும் தீர்ந்தார் - (முன்பு) பொருந்தி நின்ற மருட்சியும் துன்பமும் தீரப்பெற்றவர்களாய், ஏற்றமும் வலியும் பெற்றார் எழுந்தனர் - மிக்க மன எழுச்சியையும் வன்மையையும் அடைந்தவர்களாகிப் (போர்க்குக்) கிளம்பினர்.

இதில் காரண காரியங்கள் எழிலுறக் கூறப்பட்டமை காண்க மயக்கமும் நோவும் உற்றவர்க்குக் குளிர்ந்த காற்று சஞ்சீவி போன்றதென்பர் ஆகலின், 'காற்று வந்தசைத்தலாலும்' என்றும், மரணம் அடைய வேண்டிய காலத்தன்றிப் பிற நேரங்களில் இறப்பது நியதியன்றாகலின், 'காலமல்லாமை யாலும்,' என்றும் கூறப்பட்டது. 'வாழுநாளுள வென்றபின் மாள்வரோ, ஊழிபேரினும் உய்குநர் உய்வரே' (சீவக.) என்றதும் காண்க. உரிய காலத்தன்றி உயிர்களைக் கவராமைபற்றியே தென்திசைக் கோனுக்கு காலன் என்றும், தருமன் என்றும் பெயர்கள் எழுந் தமை உணர்க. 'காலனும் காலம் பார்க்கும்' (புறநா. 41); மற்றும், பழ. 89; பெருங். 1 : 37 : 204-5; பால. தாடகைவதை. 64 என்பர். 'கூற்று வந்து ஆவி கொள்ளும் குறியின்மை குறித்த லாலும்', இங்குக் குறி, நோய் முதலியன; 'பற்றறு பெற்றி யோர்க்கும், உந்தரு நிலைய தாகி யுடனுறைந் துயிர் கடம்மை, யந்தகர்க் களிக்கும் நோய்போல்' (ஆரணிய. 417); 'உடனுறைந்தே கொல்லும் வியாதி' (மூதுரை 20); என்றதும் காண்க. மற்றும் இறத்தற்கு ஏதேனும் ஓர் காரணம் வேண்டப்படும்; 'ஒரு காரண மின்றி யுயிர் கொள்வதன்றே யென் செய்தும்' (பழியஞ்சின. 36) என்று யமன் தூதுவர் கவன்றதும். பின்னர் அவருள் ஒருவன் ஓர் ஈற்றாவை வெருள விடுத்து ஓர் மணமகன் உயிரைக் கவர்ந்ததும் திருவிளையாடற் புராணம் பழியஞ்சின படலம் கொண்டுணர்க.

ஆவிகொள்ளும் குறி, உடற்கண் மரண காலத்துக் காணப்படும் பல குறிகளுமாம்; 'புலனைந்தும் பொறிகலங்கி யறிவழிந்திட்டை மேலுந்தி, யலமந்த பொழுது' (தேவா. 278 : 1) என்றும், 'காலன் வருமுன்னே கண்பஞ்சடை முன்னே' (தனிப்பா. காளமேகம்.) என்றும், வருவனவும் காண்க. ஏற்றம்: மனக்கிளர்ச்சி.

பி-ம். 1. இசைத்தலாலும்; அன்றுதலாலும்

2. கூற்றம்; உயிரைக்; கோளின்மை; கொடுத்தலானும். 175

2112. அங்கதன் குமுத னிலன் சாம்பவ னருக்கன் மைந்தன்
பங்கமின் மயிந்தன் தம்பி சதவலி பனசன் முன்னாச்
சிங்கவே றனைய வீரர் யாவருஞ் சிகரி யேந்தி
மங்கலம் வானோர் சொல்ல மழையென வார்த்து வந்தார்.

அங்கதன் குமுதன் நிலன் சாம்பவன் அருக்கன் மைந்தன் - அங்கதன் குமுதன் நிலன் சாம்பவன் கதிரோன் புதல்வனான சுக்கிரீவன், பங்கம் இல் மயிந்தன் - தோல்வியே உறாத மயிந்தன், தம்பி - அவன் தம்பியான துமிந்தன், சதவலி - சதவலி, பனசன் - பனசன், (ஆகிய இவர்கள்) முன்னா - ஆதியாக, சிங்க ஏறு அனைய வீரர் யாவரும் - ஆண் சிங்கத்தை நிகர்த்த வானர வீரர்கள் அனைவரும், வானோர் மங்கலம் சொல்ல - தேவர்கள் மங்கல வாழ்த் தியம்ப, சிகரி ஏந்தி - மலைகளை உயர்த்துக்கொண்டு, மழை என ஆர்த்து வந்தார் - மேகம் போன்று முழங்கிக்கொண்டு வந்தனர்.

மயிந்தன் தம்பி என்பதில் உம்மை தொக்கது; 'மயிந்தனும் துமிந்தனுமென்னும் மாண்பினர்' (யுத்த. 345); 'குமுதன்: நிலன்; சதவலி: பனசன்; முறையே கிட்கிந்தா. 703, 696, 689, 695, உரைக் குறிப்புக் காண்க. சாம்பன், மயிந்தன், துமிந்தன்: 699, 701, 702, உரைக் குறிப்புக் காண்க. முன்னாக என்பது ஈறு குறைந்து முன்னா என நின்றது. சிங்க வேறனைய; 'சிங்க வேறனையான் சொன்ன வாசகம்' (யுத்த. 428); சிகரி - சிகரத்தை யுடையது என்று மலைக்குக் காரணக் குறி. அநாயாச

மாகக் கைகொண்டுயர்த்தலின் 'ஏந்தி' எனப்பட்டது; வாநர வீரர்தம் மங்கல வாழ்த்து.

பி - ம். 2. முன்னேர், முன்றான்.

3. சிகரம்.

4. கூற. 176

2113. அத்தனை யோருங் குன்ற மளப்பிலா வசனி யேற்றே
டொத்தன நெருப்பு வீசு முருமென வொருங்க வுய்த்தார்
இத்தனை போலுஞ் செய்யு மிகலெனு முறுவ லெய்திச்
சித்திர வில்வ லோனுஞ் சின்னபின் னங்கள் செய்தான்.

அத்தனையோரும் - அவ்வளவு வீரர்களும், அசனி ஏற்றோடு ஒத்தன குன்றம் நெருப்பு வீசும் உரும் என - பேரிடி போன்ற மலைகளை தீ உமிழும் இடிபோன்று, (இடி அனலைச் சொரிவது போன்று) அளப்பு இலா - அளவின்றி, ஒருங்க உய்த்தார் - ஒருசேரச் செலுத்தினர், சித்திரம் வில்வலோனும் - (நினைவு பெற்று எழுந்த) அழகிய விற்றிறம் மிக்க இந்திரசித்தும்; 'செய்யும் இகல் இத்தனை போலும் - (இவர்கள் புரியும் போர்) இவ்வளவு போலும்', எனு - என்று, முறுவல் எய்தி - புன்னகை கொண்டு, (அவர்கள் வீசிய மலைகளை), சின்னபின்னங்கள் செய்தான் - பலவாறு வெட்டிச் சிதைத்தான்.

அசனி உரும், ஒரு பொருட் சொற்கள்; போலும் - ஒப்பில் போலி; முறுவல் - புன் சிரிப்பு; 'புதியதோர் முறுவல் பூத்தாள்' (ஆரணிய. 224); சின்னபின்னங்கள், 'சின்னபின்னம் படுத்திடுதலும்' (கிட்கிந்தா. 185); சின்ன பின்னங்கள் செய்த வதனை நீ சிந்தியாயோ' (சுந்தர. 463); மற்றும்: (யுத்த. 923); (யுத்த. பிரமாத்திர: 52). இத்தனை போலும் இகல் என்றது இகழ்ச்சிக் குறிப்பு; முறுவல் - எள்ளல் நகை. பிறனை எள்ளி நகைத்தது.

பி - ம். 1. அத்தனைவோரும்; அளப்பில, அளவில; ஆளியேறெடு.

2. விட்டார்.

3. முறுவல் செய்த, முறுவலித்தே.

4. வில்லினனும். 177

## சூரியன் மறைவும் இருள் பரத்தலும்

2114. மரங்களு மலையுங் கல்லு
மழையென வழங்கி வந்து
நெருங்கினர் நெருங்கு மாகண்
டொருதனி நெஞ்சும் வில்லும்
சரங்களுந் துணையாய் நின்ற
நிசாசரன் தனிமை நோக்கி
இரங்கின னென்ன மேல்பாற்
குன்றுபுக் கருக்க னின்றான்.

(வானரர்கள் மீண்டும்), மரங்களும் மலையும் கல்லும் மழை என வழங்கி வந்து - மரங்களையும் பொருதற்குரிய கற்களையும் மழை போன்று பெய்து கொண்டு, நெருங்கினர் - (இந்திரசித்தின் அருகில்) வந்து நெருங்கினர்; நெருங்குமா கண்டு - (அவர்கள் அங்ஙனம் நெருங்குவதை நோக்கி, (பிறிதொரு துணையுமின்றி), ஒரு தனி நெஞ்சும் வில்லும் சரங்களும் துணையாய் நின்ற நிசாசரன் தனிமை நோக்கி - தன்னுடைய தன்னந் தனியான உள்ளமும் வில்லும் வாளிகளுமே (தனக்குத்) துணையாகக் கொண்டு நின்ற, இராக்கதனாகிய இந்திரசித்தின் தனித்த நிலைமையைக் கண்ணுற்று, இரங்கினன் என்ன - இரக்கம் கொண்டவன் போன்று அருக்கன் - சூரியன், மேல் பால் குன்று புக்கு நின்றான் - மேற்குத் திசைக்கணுள்ள அத்தமனகிரியை அடைந்து நின்றான்.

நெருங்குமாறு என்பது ஈறு குறைந்தது, பெருவாழ்வு படைத்து நின்ற பெருவீரன் பரிபவத்தைக் கண்டு அருக்கன் இரங்கினான் என்றது ஏதுத்தற் குறிப்பெற்றவணி. சூரியோதயம், சந்திரோதயம் அவற்றின் அத்தமனம் முதலிய இயற்கை நிகழ்ச்சிகள், காப்பிய இலக்கணங்களாகக் கூறப்படுவன ஆகலின், சூரியாத்தமனம் இங்குக் குறிக்கப்பட்டது. யுத்த காண்டத்தில்: ஒற்றுக் கேள்வி : 19; இலங்கை காண் : 23; மகுடபங்கம் : 50; படைத் தலைவர் : 55; இந்திரசித்து : 34 முதலிய இடங்களில் காண்க. இரவில் சரிப்பவர்க்குத் தான் இடையூறாக நிற்றல்

அடாது என்று மறைந்தனன் அருக்கன் எனினுமாம். நிசாசரன் - நிசியில் சஞ்சரிப்பவர் என்று அரக்கர்க்குக் காரணக் குறி; ஆரணி. 454, 854; சுந்தர. 194; முதற் போர்: 80; இராவணன் மந்திரப்: 22; இனி 'இந்தப் பாதகனுக்கும் இரங்கி ஆதித்தன்மறைந்தான் என்று பெரியோர் நிந்திக்கப் பானு அத்தமித்தான்' என்றும் பொருள் செய்வர். 'கதிர் புகா' (சுந்தர. 118) என்று தன்னுடைய உதயமும் இலங்கையில் நிகழாதவண்ணம், ஆதிக்கம் செலுத்திய இராவணன் மகனுக்கு இரங்கினன் என்று சூரியனுடைய அருளுடன் கூடிய மனப்பான்மை குறித்ததுமாம்.

பி - ம். 1. மலையும் ஏந்தி; அம்பும்.
2. நெருங்கக் கண்டும்.
4. இரவி சென்றான். 178

2115. வாழிய வேத நான்கு மனுமுதல் வந்த நூலும்
வேள்வியு மெய்யுந் தெய்வ வேதியர் விழைவு மஃதே
ஆழியங் கமலக் கையா னுகிய பரம னென்னு
ஏழைய ருள்ள மென்ன விருண்டன திசைக ளெல்லாம்.

வாழிய - வாழ்ச்சி பெற்ற, வேதம் நான்கும் - நான்கு மறைகளும், மனுமுதல் வந்த நூலும் - மனுதர்ம சாத்திரம் முதலாக எழுந்த அற நூல்களும், வேள்வியும் - யாகங்களும், மெய்யும் - சத்தியமும், தெய்வ வேதியர் விழைவு அஃதும் - தெய்வத் தன்மை வாய்ந்த அந்தணர்கள் விரும்பும் அந்தப் பேறும் (ஆகிய அனைத்தும்) ஆழி அம் கமலக் கையான் ஆகிய பரமன் - சக்கரப் படை ஏந்திய அழகிய செந்தாமரை போன்ற கரங்களையுடைய ஸ்ரீமந் நாராயணனது சொரூபமே, என்னு - என்று தேராத, ஏழையர் உள்ளம் என்ன - அறிவில் வறியரான மதியீனர்களின் மனம், (அவித்தையால் இருளுற்று) நிற்பது போன்று, திசைகள் எல்லாம் இருண்டன - எல்லாத் திக்குகளும் இருண்டு காட்டின.

இதில் கம்பர் கற்பனைத் திறம் காண்க. முதலிரண்டடிகட்கு, யுத்த. 194 ஒப்பு நோக்குக. 'வருதியின் வயத்தன வரவு போக்கது, புத்தியில்லாதவர் புலத்திற் ருகுமோ' (யுத்த. 198); 'காலமுங் கருவியு மிடனுமாய்' (யுத்த. 203) என்ற இவைகளும்

காணத் தக்கன. வேதம் நான்கு எனப்படினும், அவை அளப்பில என்பது, 'அநந்தாவை வேதாகா' என்ற வான்மீகம் கொண்டும் உணர்க; இராவணனை 'ஐயன் வேதம் ஆயிரம் வல்லான்' (சுந்தர. 483) என்பவர் கம்பநாடர். 'பரமனென்னு வேழையர் உள்ளம்' (ஒப்பு). 'அரனஞ்செழுத்து முணரா வறிவிலோர், நெஞ்சு மென்ன விருண்டது' (பெரிய. பு. தடுத்தாட்: 159) தெய்வ வேதியர், 'மந்திரம் பிராமணாதீனம், பிராமணா மமதேவதா' என்றது காண்க. இங்கு ஆசிரியரது தெய்வக் கொள்கை ஒருவாறு உணரப்படும். மற்றும், 'வேதம் பரம்பொருளின் சொரூபம் முதலியவற்றைப் பிரதிபாதித்தலாலும், மநு முதல் நூல் வேதப் பொருளை யுணர வுதவுவதாலும், வேள்வி பரம்பொருளின் ஆராதன சொரூபமாதலாலும், மெய் - பரம்பொருள் போல் என்றும் ஒருபடியாக இருத்தலாலும், வேதியர் விழையும் பேறு பரம் பொருளே யாதலாலும், 'வேத நான்கும்..... பரமன் என்னு' என்று, எனது அரிய நண்பரும், தமிழ் லெக்ஸிகன் தயாரித்த போழ்து என்னுடன் பணியாற்றியவரும், வடமொழி தென்மொழி வல்லுநருமான உ. வே. கோபால கிருஷ்ணமாசாரியார் அவர்கள் எழுதியுள்ள உரைக்குறிப்பு உணரத் தகும். விழைவு அஃதும் என்க.

பி - ம். 1. மனுமுறை, மறைமுறை.

2. வேள்வியுமேய, வேள்வியுமஃதே, வேள்வியும் மாறும்; வினையும், வினையும்.

3. ஆழியக் கமலக் கண்ணனுதியம், ஆழியங் கமலக் கையனுதியம்; ஆதியம் பரமனென்னு.

4. உள்ளம்போல. 179

## வீடணன் வார்த்தையால் இலக்குவன் இந்திரசித்தைக் கொல்ல முயலுதல்

2116. நாகமே யனைய நம்ப நாழிகை யொன்று நான்கு
பாகமே கால மாகப் படுத்தியேற் பட்டா னன்றேல்
வேகவா ளரக்கர் காலம் விளைந்தது விசும்பின் மீதா
ஏகுமேல் வெல்வ னென்ப திராவணற் கிளவல் சொன்னான்.

'நாகமே அனைய நம்ப - (பகைவர்மேல்) பாம்புபோற் சீறும் இயல்புள்ள சிரியனே! நாழி ஒன்று நான்கு பாகமே காலமாக - ஒரு நாழிகையில் நான்கில் ஒரு கூறே காலமாக (கால் நாழிகையில்),

படுத்திியேல் பட்டான் - கொன்றல்தான் (இவ் விந்திரசித்து) மரிப்பான் ; அன்றேல் - அவ்வாறு அன்றாயின், வேகம் வாள் அரக்கர் - விரைந்து தொழிலாற்றவல்ல கொடிய இராக்கதர்கள், காலம் விளைந்தது - (தமது மாயச் செய்கைகளைப் புரியக் கூடிய இரவுப்) பொழுது தோன்றிவிடும் ; (அப்பொழுது) விசும்பின் மீதா ஏகுமேல் வெல்வன் - விண்ணிடத்துச் செல்வான் எனில் வெற்றி பெறுவான்' என்பது - என்ற செய்தியை, இராவணற்கு இளவல் சொன்னான் - வீடணன் கூறினான்,

நாகமே அனைய நம்ப-இலக்குவன் ஆதிசேடன் அமிசமாகலின் இங்ஙனம் விளிக்கப்பட்டான். 'அண்ணற் பெரியோன் தனதாதியின் மூர்த்தி யொத்தான்' (அயோத்தி. நகர்நீ: 116) என்றது காண்க. நிசாசரன் ஆகலின் இந்திரசித்தின் மாயச் செய்கைகள் இரவிலே தான் மிகுத்து நிற்கும். அரக்கர் இரவிலே சரிப்பதை ; 'அவ்வழி யவ்விருள் பரந்த வாயிடை, எவ்வழி மருங்கினும் அரக்க ரெய்தினார், செவ்வழி மந்திரத் திசைய ராகையால், வெவ்வழி யிருடர மிதித்து மீச்செல்வார்' (சுந்தர. 142) என்றது கொண்டு காண்க. இதுபற்றியே 'காலம் விளைந்தது' எனப்பட்டது, விளைந்தது - விரைவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாக வந்த காலவழுவமைதி.

பா - ம். 1. நம்பி : ஒன்றின்.

3. வேலரக்கர் : விசும்பின் வஞ்சன், மீனில்.

4. வெல்லுமென்மை. 180

2117. அத்தனை வீரர் மேலு மாண்டகை யனுமன் மேலும்
எத்தனை கோடி வாளி மழையென வெய்யா நின்ற
வித்தக வில்லினானைக் கொல்வது விரும்பி வீரன்
சித்திரத் தேரைத் தெய்வப் பகழியாற் சிதைத்து
[வீழ்த்தான்.

(தன்னை அணுகிய), அத்தனை வீரர் மேலும் - அத்தனை வானர வீரர்கள் மேலும், ஆண்டகை அநுமன் மேலும்-ஆண்மைத் தகுதி சான்ற அநுமன் மேலும், எத்தனை கோடி வாளி - எத்தனையோ கோடிக் கணக்கான (மிகப்பல) சரங்களை, மழை என எய்யா நின்ற - மழை போன்று பொழிந்து நின்ற, வித்தக வில்லினானை - திறம் படைத்த வில்லாளியான இந்திரசித்தினை, கொல்வது விரும்பி -

கொல்லுதலை விழைந்து, வீரன் - இலக்குவன், சித்திரம் தேரை - (அந்த அரக்கனது) அழகிய இரதத்தை, தெய்வம் பகழியால் சிதைத்து வீழ்த்தான்-(தனது) தெய்வத் தன்மை வாய்ந்த அம்பி னால் கெடுத்து வீழ்த்தினன்.

எய்யா நின்ற: ஆ நின்ற: நிகழ்கால இடைநிலை. தற்காலம் அதிக வழக்கில் இல்லை. வித்தக வில்லினன் 'வித்தக வில்லினன்' (சுந்தர. 448); என்று பிராட்டியார் இராமபிரானைக் கூறுதல் காண்க. 'வித்தக மறந்திலேன் யான்' (யுத்த. மீட்சி. 192); பத் துள வடியவர்க் கெளியவன், பிறர்க்கரிய வித்தகன்' (திருவாய் *1:3:1*). அடைமொழிகளின்றியே இலக்குவனை 'வீரன்' என்று கூறும் இடங்கள் இக்காவியத்தில் பல உள; (ஆரணிய. *423*, *955*, *956*, *1061*, *1067*, *1082*).

பி-ம். 3. கொல்வது கருதி, கொல்வது வீரமென்ன. 181

இதன்பின் 'வாழி' என்ற கவி ஓர் பிரதியில்.

**2118.** **அழித்ததே ரழுந்தா முன்ன மம்பொடு கிடந்து வெம்பி**
**உழைத்துயிர் விடுவ தல்லா லுறுசெரு வென்றே மென்று**
**பிழைத்திவர் போவ ரல்லர் பாசத்தாற் பிணிப்பி னென்ன**
**விழித்திமை யாத முன்னம் வில்லொடும் விசும்பிற்**
**[சென்றான்.**

அழித்த தேர் அழுந்தா முன்னம் - இலக்குவனால் நிலைகுலையப் பெற்ற தேர் கீழே வீழ்ந்து தரையில் அழுந்து முன்னரே, (இந்திரசித்து) 'பாசத்தால் பிணிப்பின்' - நான் இவர்களை (நாக) 'பாசத்தால் கட்டிவிட்டால், இவர் அம்பொடு கிடந்து வெம்பி - இலக்குவன் முதலானவர்கள் அம்பினாற் பிணிக்கப்பட்டுக் கீழ் வீழ்ந்துமனம்புழுங்கி, உழைத்து உயிர் விடுவது அல்லால்-வருந்தி உயிரை நீக்க வேண்டுமேயல்லாமல், உறு செரு வென்றேம் - உற்ற போரில்வெற்றி பெற்றேம், என்று-என்று செருக்கிக்கொண்டு, பிழைத்து போவர் அல்லர் - உயிர் தப்பிச் செல்லமாட்டார்',

என்று - என்று எண்ணி, விழித்து இமையா முன்னம் வில்லொடும் விசும்பில் சென்றான் - கண்மூடித் திறப்பதற்குள்ளாக வில்லுடன் கூடவிண்ணிற் சென்றான்.

இஃது வானோர் கூற்று. வெம்புதல்: 'அம்பு மழலு மவிர் கதிர் ஞாயிறும், வெம்பிச்சுடினும் புறம்சுடும்' (நாலடி. 89); 'வெம்புவாள் விழுவாள் பொய்யே' (விவேகசிந்தாமணி). உறு செரு- பெரும் போருமாம், பாசம் - நாகாத்திரம், விழித்திமையாத முன்னம்: ஒரு மாத்திரை அளவில். 'கண்ணிமை கைந் நொடி யவ்வே மாத்திரை' (தொல். எழுத்து. 7); விழித்து இமையாத முன்னம் என்பதனை இமைத்து விழியா முன்னம் என மாற்றுக. விழித்திமையா: 'விழிந்திமைக்குமாத்திரை யன்றோ' (நாலடி. 302). இங்கு, இந்திரசித்து முதல்நாட்போர்ப் படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் உள்ளது.

பா - ம். 1. அழியா, அழிந்த போழ்தில், கிடந்துமண்டி.

2. இளிச் செயலொன்றோ வென்றுப், உறுபகை வென்றோ மென்று, எறு பகை வேண்டோ மென்று.

3. போகா வண்ணம், போகா முன்னம். 182

2119. பொன்குலா மேனி மைந்தன்
தன்னொடும் புகழ்தற் கொத்தான்
வன்கலா மியற்றி நின்றான்
மற்றொரு மனத்த னாகி
மின்குலாங் கழற்கால் வீரன்
விண்ணிடை விரைந்த தன்மை
என்கொலா மென்ன வஞ்சி
வானவ ரிரியல் போனார்.

'பொன் குலாம் மேனி மைந்தன் தன்னொடும் புகழ்தற்கு ஒத் தான் - பொன் போன்றொளிரும் திருமேனியையுடைய இலக்குவ னொடும் ஒக்கவைத்துப் புகழத்தக்கவனும், வன்கலாம் இயற்றி நின்றான் - வலிய போரை ஆற்றி நின்றவனும், மின் குலாம் கழல் கால் வீரன் - ஒளி விடுகின்ற வீரகண்டை புனைந்த காலிணையுடைய

வனும் வீரனும் ஆன இந்திரசித்து, மற்றொரு மனத்தன் ஆகி - மனம் மாறுபட்டு, விண் இடை விரைந்த தன்மை என் ஆம்கொல்- ஆகாயத்தில் வேகமாகச் சென்ற தன்மை யாதாய் முடியுமோ', என்ன அஞ்சி - எனப்பயந்து, வானவர் இரியல் போனார் - தேவர்கள் சிதறியோடினார்கள்.

இனி பொன் குலா மேனி மைந்தன் வன் கலாம் இயற்றி நின்றான் எனப் பிரித்துக்கூட்டலுமாம். கலாம் : கலகம், போர் ; 'கலா அத் தானையன்' (புறநா. 69, 11) ; மற்றொரு மனத்தனாகி : இலக்குவனை வெல்லுவதற்கு வேறொருபாயத்தைக் கருதினவனாகி என்க. 'ஒன்றைவிட் டொன்றை யுன்ன, மற்றொரு மனமு முண்டோ' (ஆரணிய. 637) ; கொல் - ஐயம். இங்கு நாகபாசப் படலம் ஆரம்பம் என்று ஓர் பிரதியில் உள்ளது.

பி - ம். 1. ஒத்த.

2. வன்கொலாம், இயற்று நின்றான், எயிற்று நின்றான், இயற்றுகின்றான்

3. மறைந்த தன்மை.

4. விண்ணவர், இமையவர். 183

2120. தாங்குவிற் கரத்தன் றூணி தழுவிய புறத்தன் றன்னின்
ஓங்கியுற் றெரியா நின்ற வெகுளிய னுயிர்ப்பன் றீயன்
தீங்கிழைப் பவர்கட் கெல்லாஞ் சீரியன் மாயச் செல்வன்
வீங்கிருட் பிழம்பி னும்பர் மேகத்தின் மீதி னானன்.

வில் தாங்கு கரத்தன் - வில்லையேந்திய கையினனும், தூணி தழுவிய புறத்தன் - அம்பறாத் தூணியைப் பிணித்த முதுகினனும், தன்னின் - தானாகவே, ஓங்கி உற்று எரியா நின்ற வெகுளியன் - மிகப் பொங்கி எழுந்து எரிகின்ற சினத்தினனும், உயிர்ப்பன் - நெட்டுயிர்ப்புக் கொள்பவனும், தீயன் - கொடியனும், தீங்கு இழைப் பவர்கட்கு எல்லாம் சீரியன் - தீமை புரிவோர்கள் யாவரினும் சிறந் தவனும், மாயம் செல்வன் - மாயத்தையே செல்வமாக உடையவனும் ஆன இந்திரசித்து, உம்பர் - வானத்தில், வீங்கு இருள் பிழம்பின் - மிகுதியான இருள் தொகுதியிலே, மேகத்தின் மீதின் ஆனான் - மேகத்தின் மீது போயினான்.

இந்திரசித்தின் பல்வேறு வன்மைகளும் முதல் மூன்றடிகளில் கூறப்பட்டன.

பி - ம். 1. தன்னுள்.
2. வெகுளியின், வுயிர்ப்புத் தீயன், வுயிர்ப்பிற்றியன்.
3. இழைப்பவரையெண்ணில், சிரியோன்.
4. வேகத்தின். 184

2121. தணிவறப் பண்டு செய்த தவத்தினுந் தருமத் தானும்
பிணியறுப் பவரிற் பெற்ற வரத்தினும் பிறப்பி னானும்
மணிநிறத் தரக்கன் செய்த மாயமந் திரத்தி னானும்
அணுவெனச் சிறிய தாங்கோ ராக்கையு முடைய னானன்.

மணி நிறத்து அரக்கன் - நீலமணி போன்ற நிறத்தவனான இந்திரசித்து, ஆங்கு - அப்பொழுது, பண்டு தணிவு அற செய்த தவத்தினும் - முன்னாளில் குறைவின்றி ஆற்றிய தவத்தின் பயனாகவும், தருமத் தானும் - அறச் செயல்களின் விளைவாகவும், பிணி அறுப்பவரில் பெற்ற வரத்தினும் - அவித்தை என்ற நோயினைச் சேதிப்பவர்களான பிரமன் முதலானோரிடத்தில் பெற்றுள்ள வரங்களினாலும், பிறப்பினானும் - (தனது) அரக்கர்வழிப் பிறப்புரிமையினாலும், செய்த - புரிகின்ற, மாயம் மந்திரத்தினானும் - மாயையுடன் கூடிய மந்திரத்தின் வன்மையாலும், அணு என சிறியது ஓர் ஆக்கையும் உடையன் ஆனான் - அணுப் போன்று நுண்ணிய ஓர் தேகத்தையும் உடையவன் ஆயினான்.

'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம், ஈண்டு முயலப்படும்' (குறள். 265); என்பது தமிழ்மறையாதலின், 'தணிவறப் பண்டு செய்த தவத்தினும்' எனப்பட்டது. 'அறத்தினூஉங் காக்கமு மில்லை' (குறள். 32); ஆதலின் 'தருமத் தானும்' எனப்பட்டது. பாசப் பிணியறுத்தோர் அளிக்கும் வரமே பெரிதும் உறுதி பயத்தலின், 'பிணியறுப்பவரிற் பெற்ற வரம்' எனப்பட்டது. அரக்கர் மாயம் வல்லவர் ஆகலின், அரக்கர் பிறப்பானும் எனப்பட்டது. மணி நிறத்தரக்கன் 'நீலமா மணிநிற நிருதர் வேந்தனை' (ஆரணிய. 227); அணுவெனச் சிறியதாங்கோராக்கை. இது 'லகிமா' என்ற சித்தியால் நிகழ்வது. 'அணுவில்

மேருவில் ஆழியா னெனச்செலும் அநுமன்' (சுந்தர. 229); இந்திர சித்தின் பெருமைக்குக் காரணம் இதில் கூறப்பட்டது.

பி - ம் 2. பிணியறுப்பவனில்.
3. அரக்கன் கற்ற,

185

2122. வாங்கினன் மலரின் மேலே வானவன் வானக் கங்கை
தாங்கின னுலகந் தாங்குஞ் சக்கரந் தவனென் றுலும்
விங்குவான் தோளை வீக்கி வீழ்த்தலான் மீள்கி லாத
ஓங்குவா ளரவி னுமத் தொருதனிப் படையை யுன்னி.

அந்த இந்திரசித்து, மலரின் மேலே வானவன் - (திருமாலின் நாபித்) தாமரை மலர் மீதுள்ள பழைமையன் ஆன பிரமனும், வானம் கங்கை தாங்கினன் - ஆகாய கங்கையைச் சடையில் ஏற்ற சிவபெருமானும், உலகம் தாங்கும் சக்கரத்தவன் என்றுலும் - உலகத்தை யெல்லாம் புரக்கும் ஆழிப் படையேந்திய திருமாலுமே ஆயினும், (அவர்களையும்), விங்கு வான் தோளை வீக்கி வீழ்த்து அலால் - பருத்து உயர்ந்த புயங்களைப் பிணித்துத் தள்ளியல்லாமல், மீள் கிலாத - (வெறுங்கையுடன்) திரும்பாத, ஓங்கும் வாள் அரவின் நாமத்து ஒரு தனிபடையை உன்னி - உயர்ந்த கொடிய நாகத்தின் பெயர் கொண்ட மிகவும் ஒப்பற்ற அத்திரத்தை (மனத்தால் கருதி), வாங்கினன் - கையில் எடுத்தான்.

இச்செய்யுள் விற்பூட்டு. உன்னி வாங்கினன் என்க. மேலே வானவன் - மேம்பட்டவன் எனினுமாம்: 'மேலை வானவரும் மறியாததோர், கோலமே' (திருவாச. திருச்சத. 43); தான் வருகின்ற வேகத்தால் உலகினை அழித்தல்கூடும் என ஓர்ந்து, கங்கையைத் தன் சடைக்கண் தாங்கினவன் என்ற சிவபெருமானின் ஆற்றலும், அருட்டிறமும் கூறப்பட்டன. 'மாகநன்னதி புவியிடை வருகின் மற்றவடன், வேகமாற்றுதல் கண்ணுதற்கன்றி வேறரிதால்' (பால. அகலிகைப். 49); 'மலைமகள் கொழுநன், சிந்திடாதொரு சடையினிற் கரந்தனன்' (பால. அகலிகைப். 55); சக்கரத்தவன்: 'சக்கரத்தவனெனத் தமியனுயினுன்' (அயோத்தி. மந்திரப். 5); நாகாத்திரம் விளைக்கக்கூடிய பேரிடர்களைக் கருதி; ஓங்குவாள் அரவின் நாமத்தொரு தனிப்படை எனப்பட்டது. ஒரு தனி: ஒருபொருட் பன்மொழி. உலகம் தாங்கும் சக்கரத்தவன்;

கூர்மாவதாரம் எடுத்துப் பாதலம் சென்று உலகத்தைத் தாங்கிக் கொணர்ந்த திருமால் எனினுமாம்.

பி - ம். 1. மேலான்; வானநமணிநீர்க் கங்கை.

2. தாவும்.

3. தோளின் வீக்கின், தோளினுக்கின்; விழ்த்நன்றி.

4. உன்று. 186

இது ஒரு பிரதியில் 'அதுகணத்து' என்றதன்பின் உள்ளது.

## இந்திரசித்து தோற்றோடி விட்டதாக எண்ணி யாவரும் மகிழ்ந்திருத்தல்

2123. ஆயின காலத் தார்த்தா ரமர்த்தொழி லஞ்சி யப்பால்
போயின னென்ப துன்னி வாநர வீரர் போல்வார்
நாயகற் கிளைய கோவு மன்னதே நினைந்து நக்கான்
மாயையைத் தெரிய வுன்னார் போர்த்தொழின் மாற்றி
[நின்றார்.

ஆயின காலத்து - அப்பொழுது, வாநர வீரர் போல்வார் - குரக்கு வீரர்கள், மாயையை தெரிய உன்னார் - (இந்திரசித்தின்) மாயச் செயல்களை நன்கு கருதாதவர்களாய், '(இந்திரசித்து), அமர் தொழில் அஞ்சி - போர் புரிதற்குப் பயந்து, அப்பால் போயினன் - விண்ணிடைச் சென்றான்', என்பது உன்னி - என்பதை நினைந்து, ஆர்த்தார் - ஆர்ப்பரித்தவர்களாய், போர் தொழில் மாற்றி நின்றார் - போர்புரிதலை விலக்கி நின்றார்கள்; நாயகற்கு இளையகோவும் - தலைவனான இராமபிரானுடைய திருத்தம்பியும், அன்னதே நினைந்து நக்கான் - அந்த வாநர வீரர் கொண்ட நினைவினையே தானும் ஏற்றுச் சிரித்தான்.

வாநர வீரர் மாயையைத் தெரியவுன்னார், அமர்த்தொழில் அஞ்சி அப்பாற் போயினன் என்பதுன்னி ஆர்த்தார் எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க. 'யாப்படி பலவினும் கோப்புடைப் பொருள்களை, ஏற்புழி யிசைப்பது' கொண்டு கூட்டின் இலக்கணம். வாநரவீரர்கள் போன்றே இளையகோவும் மாயையைத் தெரிந்துகொள்ளவில்லை எனப்பட்டது; 'திருமாலின்

அமிசமான அவன் மாயையைக் கடந்தவன் எனினும். ஏற்ற வடிவுக்கேற்ப நடிக்க வேண்டுவரு கடனுகலின் என்க. இராமபிரானும் இவ்வாறு மயங்கிய இடங்களும், பிரமன் வீடணன் சாம்பவன் முதவானோர்கள் அவனுக்குண்மை யுரைத்துத் தேற்றியனவும் இந்நூலில் ஆங்காங்குக் காணலாம்; யுத்த. நாகபாசப். 220 முதல் உள்ள சில செய்யுட்களையும்; மீட்சிப்படலம் 97 முதல் 115ம் காணத்தகும்; 'மாநுஷம் மன்யே, இராமம் தசரதாத்மஜம்' என்பது வான்மீகம். அப்பால் போயினன்; என்றது 'உம்பர் மேகத்தின் மீதிருன்' (யுத்த. 2120) என்பது கொண்டு. போல்வார் என்பது ஒப்பில் போலி; 'நெய் போல்வதூஉம்' (நாலடி. 124) என்ற இடத்துப் போல; மற்றும் வாநர வீரரும் அவர் போல்வாரும் எனினுமாம். நக்கான்: நகுதல் எள்ளல் பற்றி எழுந்தது.

பி - ம். 1. அமர்த் தொழிற்கு.
2 வாநரப் பெரியோர் தாமும்.
3. நயத்தான், நயந்து; நிய.
4. அமர்த்தொழின் மாறி.

187

2124. அதுகணத் தனுமன் தோளின்
றையனு மிழிந்து வெய்ய
கதுவலிச் சிலையை வென்றி
யங்கதன் கைய தாக்கி
முதுகுறச் சென்று நின்ற
கணையெலா முறையின் வாங்கி
விதுவிதுப் பாற்ற லுற்றுன்
விளைகின்ற துணர்ந்தி லாதான்.

அது கணத்து - அப்பொழுது, ஐயனும் - இலக்குவனும், விளைகின்றது உணர்ந்திலாதான் - நடப்பதனை உணராதவனாய், அநுமன் தோள் நின்று இழிந்து - அநுமனுடைய தோளிலிருந்து கீழேகுதித்து, வெய்ய-கொடுமையான, வலி கது வென்றி சிலையை - வலிமை தழுவிய (தனது) வெற்றி வில்லை, வென்றி அங்கதன் கையது ஆக்கி - வெற்றி பொருந்திய அங்கதன் கையில் பொருந்தச் செய்து, முதுகு உற சென்றுநின்ற - (தன் மார்பின் ஊடே சென்று)

முதுகில் நன்ருகத் தைத்திருந்த, கணை எலாம் - பகைவர் எய்த அம்புகளனைத்தையும், முறையின் வாங்கி - ஒன்றொன்ருகப் பிடுங்கி வீசி, விதுவிதுப்பு ஆற்றல் உற்ருன் - உடலின் முதுகுவலியை போக்கத் தொடங்கினுன்.

இலக்குவன் அநுமன் தோளில் ஏறியது 'தோளின்மே லாதி யைய வென்றடி தொழுது நின்ருன். ஆளிபோன் மெய்ம்பினுனு மேறினனமரர் ஆர்த்தார்' (யுத்த. 2057) என்று வருவது கொண்டு காண்க. கதுவலிச்சிலை என்பதை வலிகது சிலையென மாற்றுக. கதுவுதல் - தழுவுதல். கதுவுவலி தொகுத்தல். வென்றி என்பதை அங்கதனுக்கேற்றலுமாம். விதுவிதுப்பு : உடலில் உற்ற குத்து வலி ; திருவாச. 138 ; விளைகின்றது என்றது, இனி விளைய இருப்பது எனக் கொள்க. அநுமன் அங்கதன் கையில் வில்லைக் கொடுத்தது, இங்குக் குறிக்கப்பட்டது.

பி - ம். 2. கதிவலி, கதிர்வலி.

4. விதிர்விதிர்ப்பு ; ஆற்றி ; உணர்விலாதான், உணர்கிலாதான். 188

## இந்திரசித்து நாகபாசத்தை விடுக்க, அது இலக்குவன் தோளைப் பிணித்தல்

2125. வீட்டன வரக்கன் வெய்ய படையினை விடுத்த லோடும்
எட்டினே டிரண்டு திக்கு மிருள்திரிந் திரிய வோடிக்
கட்டின தென்ப மன்னே காகுத்தற் கிளைய காளை
வட்டவான் வயிரத் திண்டோள் மலைகளை யுளைய வாங்கி.

அரக்கன் - இந்திரசித்து, வெய்ய படையினை - கொடிய அந்த நாகாத்திரத்தை, விட்டனன் - எய்தான் ; விடுத்தலோடும் - (அங்ஙனம்) எய்தவுடனே, (அப்படை) எட்டினேடு இரண்டு திக்கும் - பத்துத் திசைகளிலும், இருள் திரிந்து - இருள் மாறி, இரிய ஓடி - பகைவர் நிலைகுலையுமாறு விரைந்து சென்று, காகுத்தற்கு இளைய காளை - இராமபிரானுடைய தம்பியான இலக்குவனுடைய, வட்டம் - திரண்ட, வான் - உயர்ந்த, வயிரம் - உறுதியான, திண் - வலிய, தோள் மலைகளை உளைய - மலைகள் போன்ற தோள்களை வருந்து மாறு, வாங்கி கட்டினது - வளைத்துப் பிணித்தது என்ப. மன், ஓ - அசைகள்.

எட்டினோ டிரண்டு திக்கு; 'எட்டினோடிரண்டுமாய திசையினை எறிந்து வென்றேன்; (யுத்த. இந்திரசித்து. 11); காகுத்தன்: ககுத்தன் மரபில் வந்த இராமபிரான்; தத்திதாந்த நாமம். இதன் வரலாறு யுத்த. 94 உரைக்குறிப்புக் கொண்டுணர்க; 'கண்டு வருமென்றிருக்கும் காகுத்தன்' (சுந்தர. 322); 'காகுத்தன் புக ழோடும்' (சுந்தர. 295); மற்றும் மாயாசீதை. 50; அதிகாயன். 45. கானை: உவமவாகு பெயர். வட்டம்: வாகுவலயம் என்றும் கூறுவர்.

பி-ம். 1. விடுதலோடும்.
2. எட்டுமோர்; இரிந்திரிய, எழுந்திரிய.
4. வட்டவான்; மலையினையுலைய. 188

## நாகபாசத்தாற் கட்டுண்டவர்களின் நிலைமை

2126. இறுகுறப் பிணித்த லோடு மியாவையு மெதிர்ந்த போதும்
மறுகுறக் கடவா னல்லன் மாயமென் றுணர்வா னல்லன்
உறுகுறைத் துன்ப மில்லா னொடுங்கினன் செய்வ
[தோரான்
அறுகுறைக் களத்தை நோக்கி யந்தர மதனை நோக்கும்.

யாவையும் எதிர்ந்த போதும் - எல்லா உயிர்களும் (திரண்டு வந்து) பொருத காலத்திலும், மறுகு உற கடவான் அல்லன் - மனம் கலங்கக் கூடியவன் அல்லாதவனும், உறுகுறை துன்பம் இல்லான் -(உள்ளத்திற்) பொருந்திய குறையாகிய துயரம் இல்லாத வனுமான, (இலக்குவன்), இறுகுற பிணித்தலோடும் - (அந்த அரவப்படை தன்னை) இறுகிக் கட்டிய அளவில், 'மாயம் என்று உணர்வான் அல்லன் - (இந்திரசித்தின்) மாயைச் செய்கை' என்று தெளியாமலும், செய்வது ஓரான் - இன்னது புரிவது என்று தெரியாமலும், ஒடுங்கினன் - வலிமை குன்றினவனாய், அறு குறை களத்தை நோக்கி - தலையற்ற உடற் குறைகளையுடைய போர்க்களத்தை நோக்கி, அந்தரம் அதனை நோக்கும் - ஆகாயத் தையும் பார்ப்பான்.

யாவையும் எதிர்ந்த போதும் மறுகுறக் கடவான் அல்லன்; 'இலக்குவ வுலகமோ ரேழு மேழுநீ, கலக்குவன் என்பது கருதின

லது, விலக்குவரிதது விளம்ப வேண்டுமோ' (அயோத்தி. கிளை கண்டு. 42); அறுகுறை - தலையற்ற கவந்தங்கள். சுற்றுமுற்றும் நோக்கி எதிரி யாருமின்மை கண்டு, ஆகாயத்தை நோக்கினன் இலக்குவன்.

பி - ம். 1. இறுக்குற.

2. மறுக்குற ; மாயமொன்று ; உணரானல்லன், உணரவல்லான்,

3. உறுக்குற.

4. அறுக்குறை ; நோக்குல். 190

2127. காலுடைச் சிறுவன் மாயக்
கள்வனைக் கணத்தின் காலை
மேல்விசைத் தெழுந்து நாடிப்
பிடிப்பெனென் றுறுக்கும் வேலை
ஏல்புடைப் பாச மேனு
ளிராவணன் புயத்தை வாலி
வால்பிணித் தென்னச் சுற்றிப்
பிணித்தது வயிரத் தோளை.

கால் உடை சிறுவன்-காற்றின் புதல்வனான அநுமன், 'மாயம் கள்வனை - (இங்ஙனம்) மாயச் செயல் புரிகின்ற வஞ்சக அரக்கனை, கணத்தின் காலை-கணப்பொழுதில், நாடி மேல் விசைத்து எழுந்து- நாடி விண்மீது விரைந்து சென்று, பிடிப்பென் என்று - அகப் படுத்துவன் என்று, உறுக்கும் வேலை - அதட்டும் சமயத்தில், ஏல் புடை - தாக்கி வருத்தலையுடைய, பாசம் - அந்த நாகபாசமானது, மேனுள்-முன்னாளில், இராவணன் புயத்தை வாலி வால் பிணித்து என்ன - இராவணனுடைய தோள்களை வாலியின் வால் கட்டியது போன்று, வயிரம் தோளை - அநுமனுடைய உறுதிவாய்ந்த தோள் களை, சுற்றி பிணித்தது - வளைந்து கட்டியது.

காலுடை சிறுவன் : மாருதி. இராவணன் புயத்தை வாலி வால் பிணித்தது இங்கு இடத்துக்கேற்ற உவமை. பிணித்தது என்ன என்பது 'பிணித்தென்ன' என நின்றது. வயிரத்

தோளைச் சுற்றிப் பிணித்தது என்க. வரலாறு, உத்தரகாண்டம்: வாலி வாலாற் கட்டுண்ட படலத்துக் காண்க. மற்றும், கிட்கிந்தா காண்டம் 125, 392 ; சுந்தர. 518, 580 ; யுத்த. 936 காண்க.

பி-ம். 2. எழுந்த.

3. ஏலவப், ஏலுடைப், எல்வுடைப்

4. பிடித்து, புடைத்து ; பற்றிப். 191

இதன்பின் 'மலையென' என்ற பாடல் ஓர் பிரதியில்.

2128 மற்றையோர் தமையு மெல்லாம் வாளெயிற் றரவம் வந்து
சுற்றின வயிரத் தூணின் மலையினிற் பெரிய தோள்கள்
இற்றன விற்ற வென்ன விறுக்கின விளகா வுள்ளம்
தெற்றென வுடைய விர ரிருந்தனர் செய்வ் தோரார்.

வாள் எயிறு அரவம் - (அந்த அரவப் படையால் உண்டான), வாள் போன்று கூரிய பற்களையுடைய பாம்புகள், மற்றையோர் தமையும் எல்லாம் - மற்ற வானர வீரர்கள் யாவரையும், வந்து சுற்றின - வந்து வளைந்துகொண்டு, வயிரம் தூணின் மலையினில் பெரிய தோள்கள் - வயிரக் கம்பங்கள் போன்றும், மலைகள் போன்றும் உயர்ந்த, (அந்தக் குரக்கு வீரர்களின்) தோள்களை ; 'இற்றன இற்ற - முறிந்தன முறிந்தன', என்ன - என்று கதறும் படி, இறுக்கின - அழுத்திப்பற்றின ; (அப்பொழுது), இளகா உள்ளம் - தளராத மனத்தை, தெற்றென உடைய - தெளிவாகப் பெற்ற, வீரர் - அந்த வீரர் அனைவோரும், செய்வது ஓரார் இருந் தனர் - செய்வது இன்னது என்று தோராது திகைத்திருந்தனர்.

இற்றன இற்றன என்று முறையிட்டவர் வானர வீரர்.

பி-ம். 1. தம்மை.

2. மலையெனப், மலைகளிற்

3. இரிந்தனர். 192

2129. மலையென வெழுவர் விழ்வர்
மண்ணிடைப் புரள்வர் வானில்
தலைகளை யெடுத்து நோக்கித்
தழலெழ விழிப்பர் தாவி

அலேகிளர் வாலாற் பாரி
னடிப்பர்வாய் மடிப்ப ராண்மைச்
சிலேயவற் கிளேய கோவை
நோக்குவ ருள்ளந் தீவர்.

(அரவப்படையாற் கட்டுண்ட வானர வீரர்கள்), மலே என எழுவர் - மலேகள் (மேலெழுந்தாற்போன்று) கிளம்புவார்கள்; வீழ்வார் - வீழ்வார்கள் ; மண் இடை புரள்வர் - தரையில் கிடந்து புரள்வார்கள் ; தலேகளே எடுத்து வானில் நோக்கி - தலேகளே உயர்த்தி ஆகாயத்தைப் பார்த்து, தழல் எழ விழிப்பர் - நெருப்புப்பொறி வெளித்தோன்றுமாறு விழிப்பார்கள்; தாவி-பாய்ந்து, அலேகிளர் வாலால்-அலேகின்ற விளங்குகின்ற வால்களினுல், பாரின் அடிப்பர் - பூமியில் அறைவார்கள் ; வாய் மடிப்பர் - உதடுகளேக் கடிப்பார்கள் ; ஆண்மை - ஆண்தன்மையை யுடைய, சிலேயவற்கு இளேயகோவை நோக்குவர் - வில்லேந்திய இராமபிரானுடைய தம்பியான இலக்குவனேப் பார்த்து, உள்ளம் தீவர் - மனம் வெந்தழிவார்கள்,

துன்பத்தால் நிகழ்ந்த மெய்ப்பாடுகளே இக் கவியிற் காணலாம் ; உள்ளம் தீய்ந்தது தங்கட்குப் பரிபவம், நேர்ந்ததே என்ற வருத்தத்தால் என்க. எழுதல் வீழ்தல் ; அரவப்படை பிணித்தலாலும் : வாய்மடித்தல் - சினத்தாலும், உள்ளம் தீய்தல்; துயரத்தாலும் நிகழ்ந்தன என்க.

பி - ம். 1. விழ்வர் விழ்வர் ; விழ்வர் வீழா.

4. தீய்வார், தீர்வர். 183

2130. விடணன் முகத்தை நோக்கி
வினேயுண்டே யிதனுக் கென்பர்
மூடின கங்குன் மாலே
யிருளினே முனிவர் மொய்ம்பில்
சுடுறத் தக்க போலாம்
நம்மெதி ரென்னு ஏந்தல்
ஆடகத் தோளே நோக்கி
நொந்துநொந் தழுங்கி நைவர்.

(அந்த வானர வீரர்கள்), வீடணன் முகத்தை நோக்கி - வீடணனுடைய முகத்தைப் பார்த்து, 'இதனுக்கு வினை உண்டே - இந்த இடர்ப்பாட்டுக்கு (ஏதேனும் பரிகாரச் செயல் உள்ளதோ', என்பர்- என்று வினவுவார்கள்; மூடின கங்குல் மாலை இருளினை முனிவர் - (அரவப் படை தங்களைப் பிணித்தற்குப் பக்கபலமாய்) இரவிலே வளைந்து கொண்ட தொகுதியான இருளைச் சினந்து கொள்வார்கள்; 'நம் எதிர் - நமது கண்முன்பாகவே, மொய்ம்பில் ஈடுஉற தக்க போலாம் - (இவை) வலிமையிற் குன்றத்தக்கனவோ?' என்னு - என்று இரங்கிக் கூறி, ஏந்தல் ஆடகம் தோளை நோக்கி நொந்து அழுங்கி நைவர் - இலக்குவனுடைய பொன் போன்ற புயங்களைக் கண்ணுற்று, வருந்தி வருந்தி மனம் மெலிவார்கள்.

வினை - பரிகாரம் அல்லது தீர்வு. மாலை - வரிசை; இங்குத் தொகுதி. முனிந்தது, அரவப்படையின் செலவினைக்காண முடியாமல் இருள் மறைத்ததுபற்றி. ஈடுறுதல் - வலியழிதல்; 'இற்றனன் முன்னைநாள் ஈடுண்டேகுவான்' (கிட்கிந்தா. 250); போலாம் - ஒப்பில்போலி. நகை செய்தது - தம்முடைய ஆற்றலின்மை நோக்கித் தம்மைத் தாமே எள்ளி நகைத்தது என்க. ஆடகம் - பொன்; (ஆரணிய. 414, 488).

பி - ம். 1. யுண்டோ.
2. மொய்ம்பன்.
3. என்று, என்ன. என்றே.
4. நொந்துநொந்துருகி நைவார், நகை செய்வார் விழுவரஞ்சார். 194

2131. ஆரிது தீர்க்க வல்லா ரஞ்சனை பயந்த வள்ளல்
மாருதி பிழைத்தான் கொல்லோ என்றனர் மறுகி நோக்கி
வீரனைக் கண்டு பட்ட திதுகொலா மென்று விம்மி
வார்கழற் றம்பி தன்மை காணுமோ வள்ள லென்பார்

(மற்றும் குரக்கு வீரர்கள்), 'இது - இப்பொழுது நேர்ந்துள்ள இடர்ப்பாட்டினை) தீர்க்க வல்லார் ஆர் - போக்கக் கூடியவர்கள் யாவர்; அஞ்சனை பயந்த வள்ளல் மாருதி - அஞ்சனாதேவி பெற்ற வள்ளலான அநுமன், பிழைத்தான் கொல்லோ - பிணிக்கப்படாமல் உள்ளானோ?' என்றனர் - என்று கூறியவர்களாய், மறுகி நோக்கி - உள்ளம் கலங்கிப் பார்த்து, வீரனை கண்டு - இலக்குவனைக் கண்

ணுற்று, 'பட்டது இதுகொலாம்-நிகழ்ந்தது இதுதானே' என்று விம்மி-என்று மொழிந்து புலம்பி, 'வள்ளல் வார்கழல் தம்பி தன்மை காணுமோ வள்ளல்' - கருணாநிதியான இராமபிரான் நீண்ட வீர கண்டையணிந்த இலக்குவன் நிலைமையைக்காணப் பொறுப்பனோ? என்பார் - என்று பகரலானார்கள்.

இதற்கு மாற்றுத்தேட அநுமனே உரியன், பிறர் அல்லர் என்ற துணிவினராதலின் 'அவன் பிழைத்துள்ளானோ' என்றனர். அஞ்சனை பயந்த வள்ளல்: 'அஞ்சனைக்கொரு சிறுவன்' (கிட்கிந்தா. 57) 'அஞ்சனை வயிற்றில் வந்தேன்' (கிட்கிந்தா. 58); என்று அநுமனே கூறுதல் காண்க.

பி - ம். 1. நீர.

2. பட்டவிதுகொலோ.

4. என்றார் 195

2132. என்சென்ற தன்மை சொல்லி
நெறுழ்வலி யரக்க னெய்தான்
மின்சென்ற தன்ன வானத்
துருமினம் வீழ்வ வென்னப்
பொன்சென்ற வடிம்பின் வாளி
புகையொடு பொறியுஞ் சிந்தி
முன்சென்ற முதுகிற் பாயப்
பின்சென்ற மார்ப முற்ற.

சென்ற தன்மை சொல்லி என் - நிகழ்ந்தனவான அந்த நிலைமைகளைப் பகர்வதால் என்ன பயன்! எறுழ்வலி அரக்கன் - மிக்க வன்மை வாய்ந்த இந்திரசித்து, வானத்து - விண்ணிடை நின்று, மின் சென்றது அன்ன - மின்னல் படர்ந்தது என்னுமாறு, எய்தான் - (அம்புகளை) விடுத்தான்; பொன் சென்ற வடிம்பின் வாளி - பொன்னால் அமைந்த நுனியையுடைய அந்தச் சரங்கள், உரும் இனம் வீழ்வ என்ன - இடியின் தொகுதிகள் விழுவன போன்று, புகையொடு பொறியும் சிந்தி - புகையையும் தீப்பொறிகளையும் சிதறிக்கொண்டு, மார்பம் உற்ற - மார்பில் பாய்ந்தவை, முதுகிற்பாய - முதுகிலே ஊடுருவிச் செல்ல, பின் சென்ற-முதுகில் தைத்தவை, முன் சென்ற - மார்பிலே பாய்ந்தன.

'சென்ற தன்மை சொல்லி என்' என மொழி மாற்றுக. பொன் சென்ற-பொன் செலுத்தப்பட்டுச் செய்த என்க, இது கவிக் கூற்று.

பா-ம். 1. செய்த தன்மை : சென்றதன்ன, சென்றதென்ன ; சொல்லி, சொல்வது உன்னி.

2. சென்றதென்ன ; விழ்ப.

3. வடிவின் ; சிந்த, செல்ல·

4. பின்பு செல்ல முதுகுற, முதுகிற்செல்லப் பின்சென்ற ; மார்பை. 196

2133. மலைத்தலைக் காலமாரி மறித்தெறி வாடை மோதத்
தலைத்தலை மயங்கி விழுந் தன்மையிற் றலைகள் சிந்தும்
கொலைத்தலை வாளி பாயுங் குன்றன குவவுத் தோளார்
நிலைத்தில ருலைந்து சாய்ந்தார் நிமிர்ந்தது குருதி நீத்தம்.

மறித்து எறிவாடை மோத-மடக்கி வீசுகின்ற வாடைக்காற்று தாக்குவதால், மலை தலை காலம் மாரி - மலைகளின்மீது படிந்துள்ள கார்ப் பருவ மேகங்கள், தலை தலை - இடங்கள் தோறும், மயங்கி விழும் தன்மையில் - கலந்து விழும் தன்மை போன்று, தலைகள் சிந்தும் கொலை தலை வாளி பாயும் - சிரங்களை அறுத்து வீழ்த்த வல்ல கொல்லுதல் தொழிலைத் தம்மிடம் கொண்ட (இந்திரசித்தின்) சரங்கள் உருவிச் செல்லப்பெற்ற, குன்று அன குவவு தோளார் - மலையொத்த திரட்சியான தோள்களையுடையவர்களான வானர வீரர்கள், நிலைதிலர் - ஒரே இடத்தில் நிற்கமாட்டாமல், உலைந்து சாய்ந்தார் - வருந்தி வீழ்ந்தார்கள் ; குருதி நீத்தம் நிமிர்ந்தது - அவர்களுடைய உதிர வெள்ளம் ஓங்கிப் பெருகிற்று,

தலை : ஏழன் வேற்றுமை உருபு. கால மாரி - கார்ப்பருவ மழை; 'பெண்ணினுக் கருங்கல மனைய பெய்வளை, கண்ணெனப் பொழிந்தது கால மாரியே' (கிட்கிந்தா. 451); மாறி மாறி வீசுவது வாடையின் இயல்பாதலின் மறித்தெறிவாடை எனப்பட்டது. வாடை : வடக்கிலிருந்து வீசுவது என்பது காரணக் குறி. தந்திதாந்தப் பதமுமாம். 'வினைக் குறிப்பெல்லாம் தத்திதம்' (இலக்கணக்கொத்து); என்றது காண்க. 'ஆடையின்றி வாடையின் மெலிந்து' (தனிப்பா. சத்திமுற்றப் புலவர்); குவவு தோள் 'குஞ்சர மனைய வீரன் குவவுத் தோள் தழுவிக் கொண்டாள்' (ஆரணிய. 285); உவமையணி,

கடும் வாடையால் மேகங்கள் சிதறியது, இந்திரசித்தின் வாளி களால் குரக்கு வீரர்கள் சிதறியதற்கு உவமை.

பி-ம். 1. மலைத்தலை தாவு.

2. வீழ்ந்த, தழல்கள்.

3. பாய, குன்றென, குன்றெனும், நிலைத்திலருலந்து, நிலைத்தலைகுலைந்து.

2134 ஆயிர கோடி மேலு மம்புதன் னுகத் தூடு
போயின போது மொன்றுந் துடித்திலன் பொடித்த மானத்
தீயெரி சிதறுஞ் செங்க ணஞ்சனை சிங்கம் தெய்வ
நாயகன் தம்பிக் குற்ற துயர்சுட நடுங்கு கின்றான்.

பொடித்த மானம் தீ எரி சிதறும் செகண் அஞ்சனை சிங்கம் - எழுந்த ரோஷத்தால் தீப்பொறிகளை இறைக்கின்ற சிவந்த கண் களையுடையவனான, அஞ்சனா தேவி பெற்ற சிங்கம் போன்ற அநுமன், ஆயிரம் கோடி மேலும் அம்பு - ஆயிரம் கோடிக்கும் அதிகமான அம்புகள், தன் ஆகத்து ஊடு போயின போதும் - தன் உடலில் ஊடுருவிச்சென்ற காலத்தும், ஒன்றும் துடித்திலன்- சிறிதும் வருந்தவில்லை; தெய்வ நாயகன் தம்பிக்கு உற்ற துயர் சுட நடுங்குகின்றான் - இராமபிரான் இளவலான இலக்குவனுக்கு நேர்ந்த இடரினைக் குறித்துச் (சரீரம்) நடுங்குவானானான்.

பொடித்தல்: தோன்றுதல். 'பொங்கியே பொடிப்ப நோக்கி' (கிட்கிந்தா. 304); மானம்-அபிமானம் அல்லது செருக்கு. முன்பின் பார்த்துச் செல்லும் நடையாலும், கம்பீரத்தாலும், வீரத் தாலும் சிங்கம் உவமை. சிங்கம்: உவமவாகு பெயர். தெய்வ நாயகன். (யுத்த. 933).

பி-ம். 1. தன்னுகத்தோடு.

2. பொடித்து, பொடித்தின், மானந்.

3. எரிசிந்தும், மேனி. 198

2135. வேறுள வீர ரெல்லாம் வீழ்ந்தன ருருமின் வெய்ய
நூறுமா யிரமும் வாளி யுடலிடை நுழையச் சோரி
ஆறுபோ லொழுக வண்ண லங்கத னநந்த வாளி
ஏறின மெய்ய னேனு மிருந்தன னிடைந்தி லாதான்.

வேறு உள வீரர் எல்லாம் - மற்றுமுள்ள குரக்கு வீரர்கள் அனைவரும், உருமின் வெய்ய-இடியைப் பார்க்கிலும் கொடியவான, வாளி-அம்புகள், நூறும் ஆயிரமும் உடலிடை நுழைய - நூற்றுக் கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் (தங்கள்) உடலில் புகுவதால், சோரி ஆறுபோல் ஒழுக-உதிரமானது ஆறுபோலப் பெருக, வீழ்ந் தனர் - கீழ் வீழ்ந்து கிடந்தனர்; அண்ணல் அங்கதன் - பெருமை யில் மிக்க அங்கதன், அநந்தம் வாளி ஏறிய மெய்யன் எனும் - எண்ணிறந்த அம்புகள் ஊடுருவப்பெற்ற உடலினனாயினும், இடைந்திலாதான் இருந்தனன் - (அதனால்) சோர்வுறாமல் இருந் தான்.

அநந்தம் : வடசொல். ந + அநந்தம் எனப் பிரிக்கப்பெறும். முன் செய்யுட்கண் அஞ்சனை சிங்கம் மேனி துடித்திலன் என்று அநுமனைக் கூறினர். இதில் அங்கதனைப்பற்றி 'அநந்த வாளி ஏறின மெய்யனேனு மிருந்தனன் இடைந்திலாதான்' என்றார். 'மாருதி யல்லனாகில் நீயெனு மாற்றம் பெற்றவன்' அங்கத னன்றோ? 'சோரி ஆறு போல் ஒழுக' என்பதை இடைநிலை விளக்காகக் கொள்க.

பி-ம். 2. நுழைப்ப.
3. ஐயன், அநந்தம். 199

2136. கதிரவன் காதன் மைந்தன்
கழலிளம் பசுங்கா யன்ன
எதிரெதிர் பகழி தைத்த
யாக்கைய னெரியுங் கண்ணன்
வெதிர்நெடுங் கான மென்ன
வேகின்ற மனத்தன் மெய்யன்
உதிரவெங் கடலுட் டாதை
யுதிக்கின்றான் றனையு மொத்தான்.

கதிரவன் காதல் மைந்தன் - சூரியனது அன்பிற்குரிய புதல்வனான சுக்கிரீவன், எதிர் எதிர் பகழி தைத்த - வாளிகள் நேர் நேராகத் தைத்ததும் (அது காரணமாக), இளபசும் கழற் காய் அன்ன யாக்கையன் - இளமையான பசிய கழற்சிக்காயை ஒத்ததுமான உடலையுடையவனும், எரியும் கண்ணன் - தீப்பொறி

பறக்கும் விழிகளையுடையவனும், நெடு வெதிர் கானம் என்ன வேகின்ற மனத்தன் மெய்யன் - நீண்ட மூங்கிற்காடு (எரிந்தாற்) போன்ற மூண்டு எரிகின்ற மனம் மெய்களை யுடையவனுமாய், வெம் உதிர கடலுள் - வெப்பமான இரத்தக் கடலில், உதிக்கின்றான் தாதைதனையும் ஒத்தான் - தோற்றுகின்ற (தனது) தந்தையாகிய சூரியனையும் போன்றான்.

முட்களைத் தம்மிடம் கொண்ட கழற்சிக்காய் : மேலே வாளிகள் தைக்கப்பெற்ற சுக்கிரீவன் உடலுக்குவமை. (ஒப்பு) '.கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி; யெய்போற் கிடந்தானென் ஏறு' (பு. வெ. மா. வாகை. 22); உதிக்கின்ற சூரியன் செந்நிறங் கொண்டு ஒளிர்பவனாகலின் இங்கு உதிர வெள்ளத்தில் கிடந்த சுக்கிரீவனுக்குவமை ; (ஒப்பு) : ஆரணிய. 983. இங்ஙனம் மகனுக்குத் தந்தையையும் அவதாரம் செய்த நிலையில் அதன் மூலப் புருஷனையும் உவமையாக்குவது கவிமரபு. 'முடிவுகாலத், தழிவுறக் கடுகும் வேகத் தாதையு மனைய னானான்' (சுந்தர. 29) ; என்று அநுமனையும் 'அண்ணற் பெரியோன் றனதாதியின் மூர்த்தி யொத்தான்' (அயோத்தி. நகர்நீ. 116) ; என்று இலக்குவனையும் கூறியமை காண்க ; (சீவக. 2287).

பி - ம். 1. காயென்ன.

2. வெய்ய.

4. ஒன் கடலில் ; உதிக்கின்றான் றன்னை, உதிக்கின்ற தன்மை. 200

## நாகபாசத்தாற் கட்டுண்ட இலக்குவன் நிலை

2137\. வெப்பாரும் பாசம் வீக்கி வெங்கணை வளைக்கு மெய்யன்
ஒப்பாரு மில்லான் றம்பி யுணர்ந்திருந் தின்ன றுய்ப்பான்
இப்பாச மாய்க்கு மாய மியான்வல்ல னென்ப
[தோர்ந்தும்
அப்பாசம் வீச வாற்று தழிந்தநல் லறிவு போன்றான்.

ஒப்பு ஆரும் இல்லான் தம்பி - (தனக்கு) நிகராக ஒருவரையும் பெறுதவனாகிய இராமபிரானுடைய தம்பியான இலக்குவன், வெப்பு

ஆரும் பாசம் வீக்கி - கொடுமை நிறைந்த அரவப்படையாற் பிணிப்புண்டு, வெங்கணை வளைக்கும் மெய்யன் - கொடிய சரங்கள் சூழப் பெற்ற உடலையுடையவனாய், உணர்ந்திருந்து - (தனக்கு அதனை ஒழிக்கும் திறமிருப்பதைத்) தெரிந்திருந்தும், இன்னல் துய்ப்பான் - துன்பத்தைத் துய்ப்பவனாய், 'இ பாசம் மாய்க்கும் மாயம் யான் வல்லன் என்பது ஓர்ந்தும் - இந்தச் சமுசார பந்தத்தினைப் போக்க வல்ல ஆற்றலுடையான் யான்' என்பதை உணர்ந்திருந்தும், அ பாசம் வீச ஆற்றாது - அந்தப் பாசங்களை அகற்ற வியலாது, அழிந்த - உணர்வு கெட்ட, நல் அறிவு போன்றான் - சிறந்த ஆன்மாவை ஒத்து விளங்கினான்.

ஒருவன் தந்தை தாய்தமர் தாரம் மகவு என்ற சமுசார பந்தத்தினின்று விலகி முத்திநெறி எய்தும் வன்மை பெற்றிருந்தும், விதியின் வன்மையால் அந்தப் பற்றுக்களிலேயே சிக்கி வருந்துதல் போன்று, பேராற்றல் சான்ற இலக்குவன், தான் அரவக்கணையினின்றும் தப்பும்வகை ஓர்ந்திருந்தும், மனிதவுருவெடுத்த தன்மையால் அங்ஙனம் செய்யாது, அக்கணைக்குக் கட்டுப்பட்டிருந்தனன் என்பது கருத்து. உபநிடதங்கள் ஆன்மாவை ஞானம் என்றே கூறும்; ஞானகுணமே அதனிடம் பிரதானமாகியிருத்தலின்; இது கொண்டே ஆன்மாவை அறிவென்றார். ஆன்மாவை 'அநாதி பெத்த சித்து' என்றதும் காண்க. ஆன்மாவிற்குச் சித் என்ற பெயருண்மையும் அறிக. மாயம்: உபாயம். இன்னல்: துன்பம்; இனிமை யல்லாதது என்பது பொருள்.

பி - ம். 1. விக்க; துளைக்கும், துளங்கும்.

3. மாய்க்குந் தன்மை; தேர்ந்தும்; மாய்க்கும் மாயம் வல்லெனென்னத் தேர்ந்தும், மயக்கு மாயமெய்திய வின்னல் தேரான்.

4. பொய்ப்பாசம்; வீசல்; நல்லறிவும். 201

2138. அம்பெலாங் கதிர்க ளாக வழிந்தழிந் திழியு மாகச்
செம்புனல் வெயிலிற் றோன்றத் திசையிரு ளிரியச் சீறிப்
பம்புபே ரொளிய நாகம் பற்றிய படிவத் தோடும்
உம்பர்நா டிறந்து விழ்ந்த வொளியவ னேயு மொத்தான்.

அம்பு எலாம் கதிர்கள் ஆக - (அந்த இலக்குவன் தன் உடம்பில் தைத்துள்ள) வாளிகள் அனைத்தும் கதிர்கள் ஆக - கிரணங்

களாகவும், ஆகம் - உடல், அழிந்து அழிந்து இழியும் - மெலிய மெலியப் பொழிகின்ற, செம்புனல் - உதிரம், வெயிலில் தோன்ற - வெயில் போலத் தோன்றவும், திசை இருள் இரிய சீறி - எல்லாத் திக்குகளிலும் நிறைந்த இருட்டை, நிலைகுலையுமாறு வெகுண்டு, (ஓட்டி), பம்பும் - நிறைந்துள்ள, பேர் ஒளிய - பெரிய ஒளியினையுடையதும், நாகம் பற்றிய - (இராகுவென்னும்) பாம்பினாற் பற்றப்பட்டதுமான, படிவத்தோடும் - உருவத்துடனே, உம்பர் நாடு இறந்து வீழ்ந்த - தேவலோகத்தினின்று தவறிக் கீழ் வீழ்ந்த, ஒளியவனையும் ஒத்தான் - கதிரவனையும் நிகர்த்தான்.

தற்குறிப்பேற்றவணி. பல் கிரணங்களுடன் இயைந்த வெயில் வீசப் பாம்பினால் பிடிக்கப்பட்டு விண்ணினின்று தவறிக் கீழ் விழுந்த கதிரவன், அம்புகள் தைத்து உதிரம் பெருக அரவக் கணையாற் பிணிக்கப்பட்டுக் கிடந்த இலக்குவனுக்கு உவமை. சூரியன் பாம்பினாற் பற்றப்படுவதன்றிக் கீழ் விழுவதாகக் கூறுவ தில்லை; ஆயினும் இங்கு இலக்குவன் வீழ்ந்திருந்த நிலைக்கு உவமையாக்கப் பெறுதலின் 'வீழ்ந்த ஒளியவன்' எனப்பட்டது. 'நாகம் பற்றிய படிவத்தோடும்' என்பதைச் சூரியனுக்கும் கொள்க.

பி - ம். 1. அலைந்தலைந்த, அழிந்தழிந் தலைக்குமாழிச், அழித்தழி கதிர்க்குமாழிச்.
2. இரியச் சீய்க்கும்.
3. பேரொளி கொள்; வடிவத்தோடும்.
4. இழிந்து, இழந்து. 202

## இந்திரசித்து இராவணனரண்மனையைச் சேர்தல்

2139. மயங்கினன் வள்ளல் தம்பி மற்றையோர் முற்றும் மண்ணை
முயங்கினர் மேனி யெல்லாம் மூடின னரக்கன் மூரித்
தயங்குபே ராற்ற லானுந் தன்னுடல் தைத்த வாளிக்
குயங்கின னுளைந்தான் வாயா லுதிரநீ ருமிழா நின்றான்.

வள்ளல் தம்பி - இராமபிரானுடைய தம்பியாகிய இலக்குவன், மயங்கினன் - மயக்கமுற்றான்; மற்றையோர் முற்றும் - பிற வீரர்கள்

எல்லாம், மண்ணை முயங்கினர் - (விழுந்து) தரையைத் தழுவிக் கிடந்தார்கள்; மேனி எல்லாம் மூடினன் - (அவர்களுடைய) சரீரங்களை எல்லாம் (வாளிகளால்) போர்த்தவனும், மூரி தயங்கு பேர் ஆற்றலான் அரக்கனும்-வலிமையோடு விளங்குகின்ற மிக்க திறல் வாய்ந்த அரக்கனுமாகிய இந்திரசித்தும், தன் உடல் தைத்த - தனது உடலில் (முன்னமே) தைத்துள்ள, வாளிக்கு - (இலக்குவனுடைய) அம்புகளால், உயங்கினன் - மனம் வாடி, உளைந்தான் - வருந்தி, வாயால் உதிரம் நீர் உமிழா நின்றான்-வாயில் உதிரத்தைக் கக்கிக் கொண்டு; என்று எண்ணினன் என அடுத்த கவியில் முடியும்.

ஆற்றலான் அரக்கனும் என உம்மை பிரித்துக் கூட்டுக.

பி - ம். 1. மூரி, மைந்தன்.

2. போராற்றலானும்; பேரம்பாற்றானும், போரம்பாற்றானும்.

3. உடற்றைத்த.

4. உமிழ்வதானன். 293

2140. சொற்றது முடித்தே னானை
யென்னுடற் சோர்வை நீக்கி
மற்றது முடிப்பெ னென்று
வெண்ணினன் மனிதன் வாழ்க்கை
இற்றது குரங்கின் தானை
யிறந்ததென் றிரண்டு பாலும்
கொற்றமங் கலங்க ளார்ப்ப
விராவணன் கோயில் புக்கான்.

'சொற்றது முடித்தேன் - சொன்னதை செய்து முடித்தேன், என் உடல் சோர்வை நீக்கி - எனது உடம்பின் தளர்வினை மாற்றிக் கொண்டு, நானை மற்றது முடிப்பென் - நாளைக்கு மற்றொன்றையும் நிறைவேற்றுவேன்' என்று எண்ணினன் - என்று நினைந்தவனாய், மனிதன் வாழ்க்கை - மனிதனுடைய வாழ்வு, இற்றது - இன்றோடழிந்தது, குரங்கின் தானை இறந்தது-குரங்கின் படை அழிந்தது' என்று - என்று, இரண்டு பாலும் - (தனது) இரண்டு பக்கங்களிலும், கொற்றம் மங்கலங்கள் ஆர்ப்ப - வெற்றி குறித்து மங்கல ஒலி முழங்க, இராவணன் கோயில் புக்கான் - இராவணனுடைய அரண்மனையிற் புகுந்தான்,

சொற்றது: 'வெங்கண் நெடுவாநாத் தானையை வீற்று வீற்றாய்ப் பங்கமுற நூறி' யிலக்குவனைப் படுத்தல்' (யுத்த. 1947); மற்றது; எஞ்சிநின்ற இராமபிரான் முதலானோரை அழித்தல். இற்றது, இறந்தது; துணிவுபற்றி வந்த காலவழுவமைதி.

பி-ம். 1. என்னுடைச் சோர்வு.

2. என்னும்; மனிதர்.

3. இழிந்தது.

4. மங்கல நின்று. 204

2141. ஈர்க்கடை பகழி மாரி
யிலக்குவ னென்ன நின்ற
நீர்க்கடை மேகந் தன்னை
நீக்கியுஞ் செருவி னீங்கான்
வார்க்கடை மதுகைக் கொங்கை
மணிக்குறு முறுவன் மாதர்
போர்க்கடைக் கருங்கண் வாளி
புயத்தொடு பொழியப் புக்கான்.

ஈர்க்கு அடை பகழிமாரி - ஈர்க்குப்போல் அடர்ந்த வாளி மழையைக் கொண்ட, இலக்குவன் என்ன நின்ற - இலக்குவன் என்று சொல்லப்பட்டு நின்ற, கடை நீர் மேகம் தன்னை - யுகாந்த காலத்து மேகத்தை, நீக்கியும் - அகற்றியும், (இந்திரசித்து), செருவின் நீங்கான் - போரினின்று விலகாதவனாய், வார்கடை மதுகை கொங்கை - கச்சினைப் பீறுதலையுடைய வன்மை பெற்ற தனங்களையும், மணிகுறு முறுவல் - அழகிய புன்னகையையும் கொண்ட, மாதர் - மகளிருடைய, போர் - பொரும் இயல்புள்ள, கருகடை கண் வாளி - கருநிறமுள்ள கடைக்கண் அம்பு, புயத்தொடு பொழிய புக்கான் - புயத்தில் விடாது வீழ்ந்து கொண்டிருக்கப் புகுந்தான்.

முன்னர்க் கோயில் புக்கான் என்று கூறி இக்கவியில் அவன் எவ்வாறு புகுந்தான் என்று அழகுபெறக் கூறினர்; நீர்க்கு-நீரை, உருபு மயக்கம். கடை: கடத்தல்.

பி-ம். 1. ஈர்க்கடை, ஈர்கிடை.

2. நீர்கிடை; நீங்கியுஞ் செருவை.

4. போர்கடை; புயந்தொறும்; போனன். 205

2142. ஐயிரு கோடி செம்பொன் மணிவிளக் கங்கை யேந்தி
மையறு வான நாட்டு மாதரு மற்றை நாட்டுப்
பையர வல்கு லாரும் பலாண்டிசை பரவத் தங்கள்
தையல ரறுகு தூவி வாழ்த்தினர் தழுவச் சார்ந்தான்.

(அக் காலையில் இந்திரசித்து), செம்பொன் மணிவிளக்கு அம் கைஏந்தி - சிவந்த பொன்னினிடையே அரதனங்களை அழுத்திச் செய்த தீபங்களை அழகிய கரங்களில் தாங்கிக்கொண்டு, மை அறு - குற்றமற்ற, வானம் நாடு மாதரும் - விண்ணுலகத்து மக ளிரும், மற்றை நாட்டு - பிற உலகத்து, அரவு பை அல்குலாரும் - நாக படத்தை ஒத்த அல்குலை யுடையவரான பெண்களும், ஐஇரு கோடி - பத்துக் கோடித் தொகையினர், இசை பலாண்டு பரவ - இசையுடனே பல்லாண்டு பட, தங்கள் தையலர் - தம் குலத்து மங்கையரான அரக்கியர், அறுகு தூவி வாழ்த்தினர் தழுவ சார்ந் தான் - அறுகைக் தூவி வாழ்த்தினவராய் உடன் வர, (இராவண னுடைய அரண்மனையை) அடைந்தான்.

விண்ணாட்டு மகளிரும் இராவணன் ஏவலிற்குட்பட்டு அவ னுக்குப் பணியாற்றியமை, சுந்தர. 104, 105, 120, 121, 144, 145, 146, காண்க. அறுகு தூவுதல்; மங்கல வாழ்த்து மரபுகளில் ஒன்று. 'ஆல்போற்றழைத்து அறுகுபோல் வேரூன்றி. மூங்கில் போல் தழைத்து, முசியாமல் வாழ்வீர்' என்று வாழ்த்தும் மரபு காண்க. மாதர் என்ற சொல் பண்டைக் காலத்துக் காதல் என்றும், தையல் என்ற சொல் அழகு என்றும் பொருள் பெற் றிருந்தன ; நாளடைவில் காதல் செய்தற்குரியாரும், அழகின் நிலைக்களமாகுபவருமான மகளிரைக் குறித்து வந்தன ; தொல். சொல், 328 ; தையல் : கட்டழகு ; திவாகரம். அமர மாதர் உடன் வர இராவணன் போந்தமை ; சுந்தர. 408-ல் காண்க. 'கந்தர்ப்ப ரியக்கர் சித்த ரரக்கர்தங் கன்னிமார்கள்' (யுத்த. இராவணன் சோக. 38) என்றசெய்யுள் இங்குக் காணத்தகும்.

பி ம். 3. பாடத்தங்கள்.
4. தையலாரரறு.

## இராவணனுக்குச் செய்தி தெரிவித்து, இந்திரசித்து தன் மாளிகை சேர்தல்

2143. தந்தையை யெய்தி யொன்னார்க்
குற்றுள தன்மை யெல்லாம்
சிந்தையி னுணரக் கூறித்
தீருதி யிடர்நீ யெந்தாய்
நொந்தன னியாக்கை நொய்தி
னாறிமே னுவல்வெ னென்னாப்
புந்தியி லனுக்கந் தீர்ப்பான்
தன்னுடைக் கோயில் புக்கான்.

(இந்திரசித்து) தந்தையை எய்தி - இராவணனைக் கிட்டி, ஒன்னார்க்கு உற்று உள தன்மை எல்லாம் - பகைவர்க்கு நேர்ந்துள்ள நிகழ்ச்சிகள் அனைத்தையும், சிந்தையின் உணர கூறி - (அவன்) மனம் கொள்ளுமாறு பகர்ந்து, 'எந்தாய் - என் தந்தையே! நீ இடர் தீருதி-நீ துன்பம் நீங்கப்பெறுவாயாக; யாக்கை நொந்தனன் - நான் உடல் வருத்தமுற்றேன்; நொய்தின் ஆறி - விரைவில் அயர்வாறி, மேல் நுவல்வென் - மேல் நடைபெற வேண்டுவனவற்றை மொழிவேன்' என்னா - என்று, புந்தியில் அனுக்கம் தீர்ப்பான் - தன் புத்தியில் நேர்ந்திருந்த தளர்ச்சியைப் போக்கிக் கொள்ளும் பொருட்டு, தன் உடை கோயில் புக்கான் - தன் அரண்மனையை அடைந்தான்,

எந்தாய்; மரூஉ. அனுக்கம்: (ஆரணிய. 250); 'மன மனுக்கம்விட' (அயோத்தி. கைகேசி: 52).

பி-ம். 1. யன்றுங்குற்றுள ; தன்மைசாரச்

2. உணர்த்தி மற்றுந் ; தியிடர் தீர்த்து நீக்கி, நியிடர் நிரநோக்கி

3. நொந்தனனுக்கை ; ஆற்றி

4. தீர்வாள்,

## வீடணன் புலம்பல்

2144. இத்தலை யின்ன லுற்ற வீடண னிழைப்ப தோரான்
மத்துறு தயிரி னுள்ளம் மறுகினன் மயங்கு கின்றான்
அத்தலைக் கொடிய னென்னை யட்டில னளியத் தேனான்
செத்திலென் வலியன் நின்றே னென்றுபோய் வையஞ்
[சேர்ந்தான்.

இதலை - இந்தப் பக்கத்தில், இன்னல் உற்ற வீடணன் - (இலக்கு வனுக்கு நேர்ந்ததைப் பற்றித்) துன்பமுற்ற வீடணன், இழைப்பது ஓரான் - செய்வது (இன்னதென்று) உணராமல், மத்து உறு தயிரின் உள்ளம் மறுகினன் - மத்தினாற் கடையப்பட்ட தயிர் போன்று மனம் கலங்கினவனாய், மயங்குகின்றான் - தெளிவு குறைந்தவனாகி, 'அதலை - எதிர்ப்பக்கத்தில் உள்ள, கொடியன் - (குரக்கு வீரர்களைக் கொன்ற) தீயவனான இந்திரசித்து, என்னை அட்டிலன் - (மற்றவர்களைப் போன்று) என்னைக் கொல்லவில்லை; அளியத்தேன் நான் - இரங்கத்தக்க எளியவனான நான், செத்திலென் - இறந்துபடவுமில்லை; வலியன் நின்றேன் - வன்மையுடையவனாய் நின்று கொண்டிருக்கின்றேன்'; என்று போய் வையம் சேர்ந்தான் என்று சொல்லிக் கொண்டுபோய், வையம் சேர்ந்தான் - (துன்பத்தால்) தரையில் வீழ்ந்தான்.

'ஏனையோரைக் கொன்றாற் போன்று தன்னையும் கொன்றிருந்தால் தான் துயர் கூர்தற்கு இடமிராதன்றோ' எனக் கவன்றான் வீடணன். மத்துறு தயிர்: பொருத்தமான உவமை; 'மத்துறு தண் தயிர்' (திருவாச. நீத்தல். 30).

பி - ம். 1. இசைப்ப ; தேரான்
2. தயிர்போல்
4. இன்றேயென்று, என்றேன்றமுன்று ; சிந்தை சோர்ந்தான். 208

2145. பாசத்தா லனகன் தம்பி
பிணிப்புண்ட படியைக் கண்டு
நேசத்தா ரெல்லாம் வீழ்ந்தா
ரியானொரு தமிய னின்றேன்

தேசத்தா ரென்னை யென்னே
சிந்திப்பா ரென்று நையும்
வாசத்தார் மாலை மார்பன்
வாய்திறந் தரற்ற லுற்றான்.

அனகன் தம்பி - குற்றமற்ற இராமபிரானுடைய இளவலான இலக்குவன், பாசத்தால் பிணிப்பு உண்ட - அரவக் கணையால் கட்டுண்ட, படியை கண்டு - தன்மையைப் பார்த்து, 'நேசத்தார் எல்லாம் வீழ்ந்தார் - அவன்பால் அன்பு பூண்டோர் அனைவரும் விழுந்தனர்; யான் ஒரு தமியன் நின்றேன் - நான் மட்டும் தனியனாய் வாழ்ந்திருக்கின்றேன்; தேசத்தார் என்னை என்னே சிந்திப்பார் - உலகத்தார் என்னைப் பற்றி என்ன நினைப்பார்களோ?' என்று - என்று, நையும் - மனம் மெலிபவனான, வாசம் தார்மாலை மார்பன் - மணம் நிறைந்த பூமாலையை அணிந்த மார்பினை யுடைய வீடணன், அரற்றல் உற்றான் - அழத் தொடங்கினான். இவன் அரற்றலை அடுத்துவரும் கவிகளில் காண்க.

தேசத்தார் என்னே சிந்திப்பார் என்று உலகத்தவர் நிந்தைக்கு அஞ்சுகின்றான் வீடணன்; 'உலகம் பழித்த தொழித்து விடின்' (குறள். 280) என்றது காண்க. இங்கு வீடணன் அழுது அரற்றி நின்ற வேலையில், அவனை 'வாசத்தார் மார்பன்' என்று எதுகையில் வைத்துக் கூறுவானேன் என்ற வினாவெழும்; ஆயினும், அடுத்துக் கருடாழ்வான் வந்து அரவப் பிணிப்பை அகற்ற எல்லோரும் மயக்கம் தீர்ந்தெழப் போகின்ற செய்தி நிகழவிருப்பதாகலின் இங்ஙனம் கூறப்பட்டது; (ஒப்பு): பிராட்டி சிஞ்சுபவனத்தில் இராமபிரான் பிரிவாற்றாது தற்கொலை செய்துகொள்ள எண்ணி 'மாதவிப் பொதும்பர் நண்ணினாள்' என்று கூற வந்த கம்பநாடர், 'போதுலாம் மாதவி' என்றது கருதத்தக்கது. அசேதனமான அந்த மாதவிப் பொதும்பரில், பின்னர் அநுமன் வந்து நற்செய்தி கூறித் தேற்றத் தேறித், தேவி அந்தத் தீய நினைவினை விடுத்தது காண்க. இன்றேல் போதுலாம் என்பது வேண்டாது கூறியதாக அமைவதுய்த்துணர்க. இவ்வாறு இரண்டொரு சொற்களைச் சிந்தித்தமைத்தே பல நுண்பொருள்களை விளக்குவர் கல்வியிற் பெரியார். இராமனுடன் வனம் செல்லத் துணிந்த அருமை மகன் இலக்குவனுக்கு, அவன் அன்னையார் கூறிய 'போகாதவுயிர்த் தாயர் அப்பூங்குழற் சீதையென்றே, ஏகாய்' என்ற தொடரில், பூங்குழல் என்ற சொல் நோக்கத்தக்கது; வனம் செல்லத்

துணிந்த சிதாபிராட்டியை, அந்த அவலநிலையில் 'பூங்குழல் சீதை' யென்று கூறவேண்டுவதின்று ; எனினும், இராமன் வனம்படர்ந்த அளவில் தயரதன் இறப்பான் ; தானும் கோசலை முதலிய சகோதரிகளும் தாபத நிலையை அடைந்து பூ முடித்தல் தவிர்க்கவேண்டி வரும் ; கட்டுக் கழுத்தியாய்ப் பூ முடிப்பவள் சீதைதான் என்ற குறிப்பு இங்கே பெறப்படுதல் உய்த்துணர்க.

பி - ம். 1. ஐயன் ; பிணிப்புற்ற ; படியே பட்ட

3. என்னென், என்னை ; நீயும்

4. அலங்கல் மார்பன். 209

2146. கொல்வித்தா னுடனே நின்றங்
கென்பரோ கொண்டு போனன்
வெல்வித்தான் மகனை யென்று
பகர்வரோ விளைவிற் கெல்லாம்
நல்வித்தாய் நடந்தான் முன்னே
யென்பரோ நயந்தோர் தத்தம்
கல்வித்தாம் வார்த்தை யென்று
கரைவித்தா னுயிரைக் கண்போல்.

'உடனே நின்று - கூடவே (நல்லவன் போன்று) இருந்து, அங்கு கொல்வித்தான் என்பரோ - (இந்திரசித்தைக் கொண்டு) அங்கு இலக்குவனைக் கொல்வித்தான் என்பரோ - என்று சொல்வார்களோ ?, கொண்டு போனன் - இந்திரசித்தினிடம்) அழைத்துச் சென்று, மகனை வெல்வித்தான் - (தனக்கு மகன் முறையில் நின்ற அந்த) அரக்கர் கோமகனை வெற்றியுறும்படி செய்தான், என்று பகர்வரோ - என்று மொழிவார்களோ ?' விளைவிற்கு எல்லாம் - நிகழ்ந்த கெடுதிகட்கெல்லாம், நல்வித்தாய் முன்னே நடந்தான் எனபரோ - சிறந்த ஆதாரமாகும் பொருட்டு முன்பு பணிவாய் ஒழுகினன் என்பார்களோ ?' நயந்தோர் - (இராமன்பால்) அன்பு உடையவரான உலகத்தோர், வார்த்தை - தாங்கள் ஆராய்ந்து கூறும் சொற்களும், தம் தம் கல்வித்து ஆம் - அவரவர்களின் கற்பனைக்கேற்றபடி பலதிறப்பட்டு நிற்கும்', என்று - என்றுகூறி, கண்போல் உயிரை கரைவித்தான் - தனது கண்களைப்போன்றே உயிரையும் கலரந்துருகுமாறு செய்தான் (விடணன்).

இனி, 'வினைவிற்கெல்லாம் நல்வித்தாய் நடந்தான் முன்னே' என்பதற்கு, நிகழ்ந்த செயல்கட்கு எல்லாம் சிறந்த காரணமாய் முதலிலே இலங்கையினின்று இராமன்பாற் சென்றான் எனினுமாம். கரைவித்தான் என்ற வினை உயிர்கண் என்ற இரண்டிற்கும் பொது; 'மென் மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்தாள்' (சுந்தர. 332) என்றதுபோல. உலக அபவாதம் என்ன என்ன உருவேற்றுப் பரவுமோ என்று வீடணன் கலங்கினான்.

பி-ம். 1. நின்றான்

4. கல்விக்காம்; என்னக்; உடலைக் கன்றால். 210

2147. போரவன் புரிந்த போதே
பொருவரு வயிரத் தண்டால்
தேரொடும் புரண்டு வீழச்
சிந்தியென் சிந்தை செப்பும்
வீரமுன் றெரித்தே னல்லேன்
விளிந்திலேன் மெலிந்தே னிஞ்ஞான்
றாருற வாகத் தக்கே
னளியத்தே னழுந்து கின்றேன்.

'அவன் போர் புரிந்தபோதே - அவ்விந்திரசித்து போர் செய்த அப்பொழுதே, (எனது) பொரு அரு - ஒப்பற்ற, வயிரம் தண்டால்- உறுதியான கதாயுதத்தால், தேரொடும் புரண்டு வீழ சிந்தி- (அவனைத்) தேருடன் புரண்டு வீழுமாறு சிதறடித்து, என் சிந்தை செப்பும் - என் உள்ளம் எனக்குச் சொல்லுகின்ற, (என் மனதில் எழுகின்ற) வீரம் - ஆண்மையை. முன் தெரித்தேன் அல்லேன் - முன்னமே செய்து காட்டினேனில்லை; விளிந்திலேன் - அவ்விந்திர சித்தினால் இறந்தேனுமில்லை; இஞ்ஞான்று மெலிந்தேன் - இப்பொழுது தளர்ந்தேன்; அளியத்தேன் அழுந்துகின்றேன் - இரங்கத்தக்க யான் (துயரக் கடலில்) ஆழ்கின்றேன்; ஆர் உறவு ஆக தக்கேன் - யார்க்குத்தான் (நான்) உறவாகத் தக்கவன்.

வயிரத்தண்டு - கதாயுதம். வீடணன் தன்னை வெகுண்டுரைத்த இராவணனை விடுத்து வெளியேறும்போது கதை ஏந்தி வந்ததாக முதனூல் கூறும். 'கதாபாணி' என்பது முதனூல்.

ஆருறவாக: 'ஆருறவாக நீரிங்கிருப்பதென் றறியமாட்டேன்' (பெரியபு. கண்ணப்பர்). இராவணனை விடுத்து வந்ததனால் அவன் உறவும் இன்றாயிற்று, இங்கும் அபவாதத்திற்குள்ளாகினேன்; எனவே எனக்குறவாவார் யார்? என்றான்.

பி - ம். 2. சாயச், சிறி, செய்ய, செப்ப.

3. வீரமுந் தரித்தேன், வீரமுந் தரிந்தேன், மெலிவுமில்லேன், மெலிந்தே னல்லேன், மெலிந்தேனிங்ஙன்.

4. அலியெயன்றேன். 211

2148. ஒத்தலைந் தொக்க வீடி
யுய்யினு முய்ந்தெ னுள்ளம்
கைத்தலை நெல்லி யொப்பக்
காட்டிலேன் கழிந்து மில்லேன்
அத்தலைக் கல்லேன் யானீண்
டபயமென் றடைந்து நின்ற
இத்தலைக் கல்லே னல்லே
னிருதலைக் கொள்ளி யொப்பேன்.

'ஒத்து - (வாநர வீரர்களோடு) ஒப்ப, அலைத்து - (பகைவரை) வருத்தி, விடி (மரிக்கும்படி நேரிட்டால்), ஒக்க - அவர்களோடு (ஒக்க நானும்) இறந்து, உய்யினும் உய்ந்து - பிழைப்பதாயினும் (நானும்) பிழைத்து, என் உள்ளம் - எனது மனக்கருத்தை, கைதலை நெல்லி ஒப்ப - கையில் உள்ள நெல்லிக் கனியைப் போல (நன்கு விளங்குமாறு), காட்டிலேன் - காட்டிலேனில்லை, கழிந்தும் இல்லேன் - (இவர்கட்கு நிகழ்ந்த விபத்தினைக் கண்டு) இறந்துபடவுமில்லை; யான் அதலைக்கு அல்லேன் - யான் எதிர்பக்கத்துக்கும் ஆகாதவனாயினேன்; ஈண்டு அபயம்என்று அடைந்து நின்ற இ தலைக்கு அல்லேன் - இங்கு வந்து புகல் என்று சேர்ந்த இந்தப் பக்கத்தார்க்கும் வேண்டியவன் அல்லேன்; நல்லேன் - நல்லவனான நான், இருதலை கொள்ளி ஒப்பேன் - (இருதிறத்தார்க்கும் ஆகாதவனான நிலையில்) இருபுறத்தும் நெருப்பெரியும் கொள்ளிக்கட்டையையொப்பேன்' என்று விடணன் வருந்தினான்.

ஒத்து அலைத்து விடி ஒக்க உய்யினும் எனப் பிரித்துக் கூட்டுக. உள்ளங்கை நெல்லி: 'கைத்தொன்று நெல்லியங்

கனியிற் காண்டியால்' (யுத்த. 187); 'கையுறு நெல்லியின் கனியிற் காட்டும்' (யுத்த. மீட்சி. 93); தான் செய்யத் தவிர்ந்தவைகளை நினைவு கூர்ந்து அவற்றைச் செய்யாமைக்கு வருந்துகின்றான் வீடணன். இரு திறத்தார்க்கும் வேண்டாதவனாயிருக்கும் நிலைக்கு இருதலைக் கொள்ளி உவமை. 'இருதலைக் கொள்ளியி னுள்ளெறும் பொத்து' (திருவாசக. நீத்தல். 9); என்றார் பிறரும். அல்லேன் அல்லேன் என்று கொண்டு வெறுப்புப்பற்றி எழுந்த அடுக்கு எனினுமாம். 2146—2148 செய்யுட்களோடு யுத்தகாண்டம் 872—875 வரையில் உள்ள சுக்கிரீவன கூற்றினை ஒப்பு நோக்குக. மற்றும் 'பார் குலாம் செல்வ நின்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை, ஈர்கிலாக் கள்வனேன்' (அயோத்தி. கங்கைப். 44)-ம் காணத் தகும்.

பா-ம். 1. அலைந்து, யுய்வினும், ஓடியுய்வினும், உய்ந்தே.

2. நெல்லியென்னக், தன்னிற், கழிந்து மேலேன்.

4. இருதலைச் சூலம் போல்வேன். 212

2149. அனையன பலவும் பன்னி யாகுலித் தரற்று வானை
வினையுள பலவுஞ் செய்யத் தக்கன வீர நீயும்
நினைவிலார் போல நெஞ்சம் நெகிழ்தியோ நீத்தி யென்னா
இனையன சொல்லித் தேற்றி யனலன்மற் றினைய
[செய்தான்.

அனையன பலவும் பன்னி - அத்தகைய பலவற்றையும் சொல்லி, ஆகுலித்து - துன்புற்று, அரற்றுவானை - கதறுபவனை வீடணனைப் பார்த்து, அனலன் - (வீடணனுடைய நான்கு அமைச்சர்களுள் ஒருவனான) அனலன் என்னும் இராக்கதன், 'வீர - வீரனே! செய்ய தக்கன வினை பலவும் உள - (இப்பொழுது தீர்வாகப்) புரியக்கூடிய செயல்கள் பலவும் உள்ளன, (அவற்றைப் புரியாமல்), நீயும் - சிறந்த அறிவாளியான நீயும், நினைவிலார் போல - ஆராய்ச்சி இல்லாதவர் போன்று, நெஞ்சம் நெகிழ்தியோ - மனம் தளர்கின்றனையோ? நீத்தி - (அவ்வாறு மனம் உலைதலை) விட்டுவிடுவாய்' என்னா - என்று, இனையன சொல்லி தேற்றி - இவ்வாறான வார்த்தைகளைச் சொல்லித் தெளிவித்து, மற்று இனைய செய்தான் - பின்பு இதனைச் செய்தான். செய்ததை அடுத்த கவியிற் காண்க.

ஆகுலித்து - ஆகுலம் என்ற பெயரடியாகப் பிறந்த வினையெச்சம். செய்யத்தக்கனவினை பலவும் உள என மாற்றுக. அனலன் : வீடணன் அமைச்சர்களில் ஒருவன். 'அனலனு மனிலனும்' (யுத்த. 319) ; ஆகுலித்தல் : 'ஆகுலித்தழுதான்' (யுத்த. பிரமாத்திர. 193). நீயும் ; உம்மை உயர்வு சிறப்பு.

பி - ம். 1. அனையவன்.

2. வினையவை, சொல்லத்தக்கவை,

3. நின்று நினைத்தியோ, நின்று நெகிழ்த்தியோ, மன்னவென்று, ஐய வென்று, உள்ளமென்ன, நீயுமென்று.

4. இதுவுஞ் சொன்னான். 213

2150. நீயினி திருத்தி யான்போய்
நெடியவற் குரைப்ப னென்னுப்
போயின னனலன் போயப்
புண்ணியன் பொலன்கொள் பாதம்
மேயினன் வணங்கி யுற்ற
வினையெலாம் விளங்கச் சொன்னான்
ஆயிரம் பெயரி னானு
மருந்துயர்க் கடலு ளாழ்ந்தான்.

'நீ இனிது இருத்தி - (நீ இவ்விடத்திலேயே துன்புறாது) இனிதாக இருப்பாயாக, யான் - நான், போய் - சென்று, நெடியவற்கு உரைப்பன் - இராமபிரானுக்கு (இச்செய்தியை) உரைத்து வருவேன்', என்னு - என்று சொல்லி, அனலன் - அனலன், போயினன் - சென்றான் ; போய் - சென்று, அ புண்ணியன் - புண்ணியசாலியான அந்த இராமபிரானுடைய, பொலன் கொள் பாதம் - அழகு நிறைந்த திருவடிகளை, மேயினன் வணங்கி - சார்ந்து பணிந்து, உற்றவினை எலாம் விளங்கச் சொன்னான் - (யுத்த களத்து) நிகழ்ந்த செயல்கள் அனைத்தையும் விளக்கமாகக் கூறினான் ; (அவற்றைச் செவியேற்று), ஆயிரம் பெயரினானும் - ஆயிரம் திருநாமங்களையுடையவனான (திருமாலின் அவதாரமான) இராமபிரானும், அருதுயர் கடலுள் ஆழ்ந்தான் - நீந்தற்கரிய துன்பக் கடலில் அழுந்தினான்.

இது கவிக்கூற்று. பொலன் கொள் பாதம்-பொன் போன்று அழகிய பாதம் எனினுமாம். 'பூக்கை கொண்டரன் பொன்னடி போற்றிலார்' (தேவா. 1203; 5); என்றது காண்க. மேயினன் - முற்றெச்சம். 'ஆயிரம் பெயரினன்' (யுத்த. 1508; பிரமாத்திர. 157; நிகும்பலை. 101.)

பி - ம். 1. இவண்.

2. அனலன் யாணர்ப், சென்றப்.

3. வினையெல்லாம், விளங்கச், விதியிற், இயம்பி நின்றான்.

4. நாமத்தன்னால், நாமத்தாலும். 214

2151. உரைத்தில னென்றுந் தன்னை
யுணர்ந்தில னுயிரு மோடக்
கரைத்திலன் கண்ணி னீரைக்
கண்டில னியாதுங் கண்ணால்
அரைத்தில னுலக மெல்லா
மங்கையாற் பொங்கிப் பொங்கி
இரைத்தில னுளனென் றெண்ணி
யிருந்தனன் விம்மி யேங்கி.

(இராமபிரான்) விம்மி ஏங்கி - வருந்தி ஏக்கமுற்று, உயிரும் ஓட - (உணர்வுடன்) உயிரும் நீங்க, ஒன்றும் உரைத்திலன் - ஒன்றையும் (வாய் திறந்து) கூறாமலும், தன்னை உணர்ந்திலன் - தன்னையும் அறியாமலும், கண்ணின் நீரில் கரைத்திலன் - கண்களினின்று நீரை வீழ்க்காமலும், யாதும் கண்ணால் கண்டிலன் - எதையும் விழிகொண்டு நோக்காமலும், பொங்கி பொங்கி அம் கையால் உலகம் எல்லாம் அரைத்திலன்-சினமிகுதியாற் பொங்கி(த் தன்) அழகிய கரங்களால் உலகனைத்தையும் அழித்துவிடாமலும், இரைத்திலன் - வாய்விட்டு அழாமலும், உளன் என்று எணணி இருந்தனன் - (மூர்ச்சை தெளிந்த அளவில்) நான் இன்னும் உயிருடன் இருக்கின்றேனே என எண்ணி இருந்தான்.

உலகம் எல்லாம் அரைத்திலன் - இது செய்ய வல்லவனாயிருந்தும் செய்தானில்லை. இராமபிரான் அவலநிலை நன்கு வருணிக்கப்

பட்டமை காண்க. தான் எடுத்த மனித உருவிற்கேற்ப, அவல நிலையில் ஒருவர்க்கு நிகழக்கூடிய மெய்ப்பாடுகளை எல்லாம் உற்ருன் என்க. 'உளன் என்று எண்ணி என்பதற்கு, இலக்குவன் இந்தப் பரிபவ நிலையைக் எய்தாது உளன்' என்று எண்ணி என்பாரும் உளர். இனி விம்மலும் ஏக்கமும் உண்மையின். இராமபிரான் உயிருடன் உள்ளனன் என்று அனலன் கருதுமாறு இருந்தனன் இராமபிரான் எனினுமாம்.

பா-ம். 1. ஒன்றும்.
2. கரைத்திலன் விம்மி விம்மிக்.
3. உலகை எல்லாம்.
4. என்றென்ன. 215

இச்செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

## இராமபிரான் எழுந்து போர்க்களம் சேர்தல்

2152. விம்மினன் வெதும்பி வெய்துற்
றேங்கின னிருந்த வீரன்
இம்முறை யிருந்து செய்வ
தியாவது மில்லென் றெண்ணிப்
பொம்மென வெழுந்து நொய்திற்
பொருக்கென விசையிற் போனன்
தெம்முறை துறந்து வென்ற
செங்கள மருங்கிற் சேர்ந்தான்.

விம்மினன் வெதும்பி வெய்துற்று ஏங்கினன் இருந்த வீரன் - புலம்பி மனம் கொதித்துச் சூடேறி ஏங்கி நின்ற இராமபிரான், 'இ முறை இருந்து செய்வது - இவ்வாறு (புலம்பிக் கொண்டு) இங்கிருந்து புரியக் கூடியது, யாவதும் இல் - சிறிதும் இல்லை' என்று - என்று, எண்ணி - நினைந்து, நொய்தில் பொம்மென எழுந்து - விரைவுடனே கிளம்பி, பொருக்கென விசையில் - திடீரென்று மிக்க விசையுடன், போனன் - சென்று, தெவ்முறை துறந்து வென்ற - பகைவன் முறைதவறி வென்ற, செம்களம் மருங்கில் சேர்ந்தான் - போர்க்களத்தின் அண்மையிற் சென்றடைந்தான்.

பொம்மென ; 'பொம்மென் றிரைத்தெழ' (யுத்த. 1274); பொருக்கென - விரைவுக் குறிப்பு ; 'பொருக்கெனப் புகல் புக்கவற் புல்லியத், திருக்கொண் மார்பன்' (யுத்த. மீட்சிப் : 11 ; 'பொருக் கென நிதியமும்' (யுத்த. மீட்சி: 260); 'பொருக்கென வீழ்த்தான்' (யுத்த. பிரமாத்திர : 190); 'பொருக்கென்று பாங்கியர்பாற் போய் விழுந்தாள் பொற்கொடியே' (குசேலா. 3 : 57); தெம்முறை; தெவ்+முறை; 'தெவ்வுப் பகையாகும்' (தொல். சொல். 346); 'தெம்மடங்கிய சேணிலங் கேகயர்' (சுந்தர. 348); செங்களம் : உதிரத்தாற் சிவந்த களம்; 'செங்களந் துழவுவோள்' (புறநா. 278). இலக்குவன் அயர்ந்த நிலையில், இரவில் விண்ணில் மறைந்து, அரக்கர் கோமகன் அரவக்கணையால் அனைவோரையும் பிணித்தது, போர் முறைக்கு மாறுபட்டதாகலின் 'தெம்முறை துறந்து' எனப்பட்டது.

பி - ம். 1. வேந்தன்

2. செய்யலாவ தொன்றில னென்று, செய்யல்யாவது மிலனென்று ; என்று.

3. பொம்மலி னெழுந்து, பொம்மலோ டெழுந்து, பொம்மென விம்ம லோடும்

4. தெம்முனை ; செங்கள மதனிற் ; சென்றான். 216

## இருள் நெருங்கியதன் வருணனை

2153. இழிந்தெழுங் காளமேக மெறிகட லனைய மற்றும்
ஒழிந்தன நீல வண்ண முள்ளன வெல்லா மொக்கப்
பிழிந்தது கால மாகக் காளிமைப் பிழம்பு போதப்
பொழிந்தது போன்ற தன்றே பொங்கிருட் கங்குற்
[போர்வை.

பொங்கு இருள் கங்குல் போர்வை-மிக்க இருட்டாகிய இரவின் போர்வையானது, இழிந்து - (கடலில்) படிந்து, எழும் - மேலே கிளம்புகின்ற, காளமேகம் - கருமுகில்களையும், எறிகடல் - அலை வீசுகின்ற கடலையும், மற்றும் ஒழிந்தன - மற்றும் (கூறப்படாது) தவிர்ந்தனவான, அனைய நீலவண்ணம் உள்ளன எல்லாம் - அத் தன்மைய நீலநிறம் செறிந்த எல்லாப் பொருள்களையும், ஒக்க பிழிந்

தது - ஒருசேரப் பிழிந்து, அது - அந்த இரவினையே, காலம் ஆக - (பொழிதற்குரிய) காலமாகக் கருதி, காளிமை பிழம்பு போத - (அவற்றினின்று எழுந்த) கருமையின் தொகுதியை மிகுதியாக, பொழிந்தது போன்றது - சொரிந்ததை ஒத்தது. அன்றே - அசை.

இது அபூத உவமை; இழிந்து எழும் காளமேகம்; 'நெடுங் கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி, தானல்கா தாகி விடின்' (குறள். 17) என்றது காண்க. காளமேகம் - கருமுகில்; 'காளமேகத் தைச் செக்கர் கலந்தென' (யுத்த. இந்திரசித்து. 68); எறிகடல்: 'எங்காக் கிடக்கும் எறிகடற்கு மெனக்கும் கொடியை யானுயே' (பால. மிதிலைக். 75). காளிமை - கறுப்பு; (கந்தபு. திருநகரப். 72); நன்மைத் தற்குறிப்பேற்றவணி. இருள் மிகுதி இவ்வாறு வருணிக்கப் பட்டது; (ஒப்பு): 'காலனிறத்தை யஞ்சனத்திற் கலந்து குழைத் துக் காயத்தின், மேலும் மெழுகாய்ப் பூசியதோ விளக்கு மிருளாய் விளைந்ததுவே' (பால. மிதிலைக். 67); 'வடவைக் கனலைப் பிழிந்து கொண்டு மற்றுமொருகால் வடித்தெடுத்து, வாடைக் கனலின் வைத்தூதி மறுகக் 'காய்ச்சிக் குழம்பு செய்து, புடவிக்கயவர் தமைப்பாடிப் பரிசுபெறுமற் றிரும்பிவரும், 'புலவர் மனம்போற் சுடுநெருப்பை' (தனிப்பா. அந்தகக்கவி); 'பளிதமும் பாலும் ஒழுகிய தேனுமாரமுதும், குயிலினிற் குரலும் கிளியினின்மொழியும் குழலும் யாழும் குழைத்திழைத்த........மொழி' (அரிச். பு. 4).

பி - ம். 2. ஒக்கும்

3. கழிந்தது, பிரிந்தன; கால மாண்ட; காளிமப், காளியம், பேரெழிற்

4. போன்ற; அந்தப், அன்ன, என்னப். 217

## இராமபிரான் அக்கினி அம்பால் இருளை யோட்டுதல்

2154. ஆரிரு ளென்ன தாக வாயிர நாமத் தண்ணல்
சீரிய வனலித் தெய்வப் படைக்கலந் தெரிந்து வாங்கிப்
பாரின்மேல் விடுத்த லோடும் பகையிரு ளிரிந்து பாறச்
சூரிய னுச்சி யுற்ற லொத்ததவ் வுலகின் சூழல்.

ஆர் இருள் - அடர்ந்த இருள், அன்னதாக - அவ்வாறிருக்க, ஆயிரம் நாமத்து அண்ணல் - இராமபிரான், சீரிய - சிறந்த, தெய்வம் அனலி படைக்கலம் தெரிந்து வாங்கி - தெய்வத் தன்மை பொருந்திய தீக்கணையைத் தேர்ந்து எடுத்து, பாரின்மேல் விடுத்தலோடும் - பூமியின்மீது செலுத்திய அளவில், பகை இருள் இரிந்து பாற - (காட்சிக் கிடையூறுயிருந்த) பகை இருள் உடைந்து அழிய, அ உலகின் சூழல் - அந்தப் போர்க்களத்தின் சுற்றுப்புறம் எல்லாம், சூரியன் உச்சி உற்றால் ஒத்தது - சூரியன் வானத்தின் உச்சியை அடைந்ததை நிகர்த்து விளங்கிற்று.

ஆர் இருள் - நிறைந்த இருள்; ஆயிர நாமத்தண்ணல்; 2150 காண்க. இராமபிரான் அக்கினியம்பினை ஏவ எங்கும் இருள் நீங்கி ஒளி உண்டாயிற்று, 'உலகு' என்னும் சொல் மண்ணுலகுமட்டும் அன்றித் அதன் கண் அமைந்த நானிலங்களையும் உணர்த்தும் என்பது கொண்டு; இங்கு 'உலகு' போர்க்களம் எனப்பட்டது; சீவக. 2606; நச். உரை. இச் செய்யுட்கு ஒப்பு; 'அங்கியி னெடும்படை வாங்கி யாங்கது, செங்கையிற் கரியவன் திரிக்கும் வேலையிற், பொங்கிரு ளப்புறத் துலகம் புக்கது, கங்குலும் பகலெனப் பொலிந்து காட்டிற்றே' (ஆரணிய. 1109).

பி - ம். 1. அனையதாக
2. அனலின்; சிலையிற் சேர்த்திப்
3. பாரிய; வெடுத்தலோடும், விடுந்தலோடும்
4. ஒத்ததால், ஒத்தன. 218

இராமபிரான் போர்க்களத்தைக் காணுதல்

2155. படையுறு பிணத்தின் பம்மற்
பருப்பதந் துவன்றிப் பல்வே
றிடையுறு குருதி வெள்ளத்
தெறிகட லெழுநீர்த் தும்பி
உடையுறு தலைக்கை யன்ன
லுயிரெலா மொருங்கி யுண்ணுங்
கடையுறு காலத் தாழி
யுலகன்ன களத்தைக் கண்டான்.

படை உறு - போர்க்கருவிகள் தைக்கப் பெற்ற, பிணத்தின் பம்மல் - பிணங்களின் தொகுதிகளினாலாகிய, பருப்பதம் துவன்றி - மலைகள் நெருங்கி, பல்வேறு - பலவகையாக, இடைஉறு - நடுவே பொருந்திய, குருதி வெள்ளத்து - உதிரப் பெருக்காகிய, எறிகடல் எழுநீர் - அலை வீசுகின்ற கடல் பொங்கும் நீர்மையால், தும்பி உடை உறு தலைகை அண்ணல் - யானையுரியாகிய ஆடையை உடையவனும், பிரமனது கபாலத்தைக் கரத்தில் கொண்டவனுமான சிவபெருமான், உயிர் எலாம் - உயிர்கள் அனைத்தையும், ஒருங்கி உண்ணும் - ஒருசேர அழிக்கின்ற, கடை உறு காலத்து - யுகாந்தப் பிரளய காலத்திலே, ஆழி உலகு அன்ன களத்தை கண்டான் - கடலினால் கொள்ளப்பட்ட உலகு போன்றுள்ள அந்தக் செங்களத்தைப் பார்த்தான்.

பம்மல்; 'எழுந்தது தண் பனிப் பம்மல்' (பாகவத. *10*: கோவியர்); சிவபெருமான் சங்காரக் கடவுள் என்பது இங்குக் குறிக்கப் பட்டது. தும்பி உடை; வரலாறு; ஆரணிய. *1090*; சுந்தர. *78*: *139*; யுத்த. *794*; தலைக் கலத்திரந்தது; ஆரணிய. *999*; சுந்தர. *387*.

பா - ம். 1. பம்பற்; பருவத்தும்

2. கடலெழு நீர் பொங்கி, கடலதனிற்றும்பி

3. உடைபுலித் தடக்கை; ஒருங்க, ஒடுங்க. 219

## தம்பியைக் கண்ட இராமபிரான் துயரம்

2156. பிணப்பெருங் குன்றி னூடுங்
குருதிநீர் பெயரப் பேரும்
நிணப்பெருஞ் சேற்றி னூடும்
படைக்கல நெருக்கி னூடும்
மணப்பெருங் களத்தின் மோடி
மங்கல வாழ்க்கை வைப்பிற்
கணத்தினும் பாதிப் போதில்
தம்பியைச் சென்று கண்டான்.

மோடி மங்கல வாழ்க்கை - துர்க்கா தேவியின் இன்ப வாழ்விற்குரிய இடமாகிய, மணம் - புலால் நாற்றத்துடன் கூடிய, பெருகளத்தின் வைப்பில் - பெரிய போர்க்களப் பூமியில்,

பிணம் பெரு குன்றின் ஊடும் - பிணங்களாகிய பெரிய மலைகளின் நடுவிலும், குருதிநீர் பெயர - உதிரவெள்ளம் பெருகுதலால், பேரும்- இடம் விட்டுப் பெயர்கின்ற, நிணம் பெரு சேற்றின் ஊடும்-பிணத்தின் கொழுப்பினாலாகிய மிக்க சேற்றின் இடையிலும, படைகலம் நெருக்கின் ஊடும் (கீழே சிதறியுள்ள) போர்க் கருவிகளின் நடுவிலும், கணத்திலும் பாதி போதில் - அரைக்கணப் பொழுதில், சென்று-போய், தம்பியை கண்டான் - இலக்குவனைப் பார்த்தான்.

போர்க்களத்தின் ஊடு செல்வது அரிதேனும், தம்பியைக் காண வேண்டும் என்ற அவாவானது எதையும் பொருட்படுத்தாது விரையுமாறு இராமனைத் தூண்ட, அவன் அரைக்கணத்து விரைந்து சென்றான் என்க. மணம் - இங்கே புலால் நாற்றம், மோடி - துர்க்கை; போர்க்குரிய சத்தி. (பிங்.); 'நெடுங்குன்றேழும் பிலமேழும் நேமிக்கிரியும் கடலேழும், ஒடுங்கும் பாகத் துறைமோடி யுறையும் காடு' (தக்க. 48); 'ஓடி மோடி கழல் சூடியே'. மோடி என்ற சொல் பெருமை யுடையாளென்றும், எல்லாரையும் பெற்ற வயிற்றையுடையாள் என்றும் பொருள்படும்; தக்க. 241. உரைக் குறிப்புக் காண்க. பெருமணக் களத்தின் என மாற்றிக் கூறலுமாம். மோடி மங்கல வாழ்க்கை வைப்பு; பத்திரகாளி கலியாணத் தலமான படைக்களம்.

பி-ம். 1. நீர்ப் பெருக்கி னூடும்

3. காகமோடி மங்கலப் பளாகை; வைப்பை. 220

**2157.** அய்யவ னாக்கை தன்மேல் விழுந்துமார் பழுந்தப் புல்லி.
உய்யல னென்ன வாவி யுயிர்த்துயிர்த் துருகு கின்றான்
பெய்யிரு தாரைக் கண்ணன் பெருந்துளி பிறங்க வானின்
வெய்யவன் தன்னைச் சேர்ந்த நீனிற மேக மொத்தான்.

(இராமபிரான்), அய்யவன் ஆக்கை தன்மேல் விழுந்து மார்பு அழுந்த புல்லி - தம்பியின் உடலின் மீது விழுந்து தனது மார்பு பதியுமாறு (அவனை) அணைத்து, 'உய்யலன் - (இனி இவன்) பிழைக்கமாட்டான்', என்ன -என்று எண்ணி (க்கண்டோர்) கூறும் படி, ஆவி உயிர்த்து உயிர்த்து - விடாமல் பெருமூச்சை விட்டுக்

கொண்டு, உருகுகின்றான் - உருகுபவனாய், தாரை பெய் - நீர் பொழி கின்ற, இருகண்ணன் - இரண்டு விழிகளையுடையவனாய், பெரு துளி பிறங்க - பெரிய மழைத் துளிகள் விளங்க, வானின் வெய்யவன் தன்னை சேர்ந்த - விண்ணில் (ஒளிர்கின்ற) சூரியனைச் சேர்ந்த, நீல்நிறம் மேகம் ஒத்தான் - நீல நிறமுள்ள மேகத்தை ஒத்து விளங்கினான்.

அய்யன் என்பது அய்யவன் என விரிந்தது செய்யுள் விகாரம். பிறங்கச் சேர்ந்த மேகம் என இயைக்க. வெய்யவன் செந்நிறமான இலக்குவன்; நீன்ற மேகம் இராமபிரான். நீலம் என்பது நீல் எனக்குறைந்தது. காளமேகத்தைச் சார்ந்த கதிரவன் என இந்த உவமையையே மாற்றியும் கூறுவர் ஆசிரியர்: (யுத்த. 2034); தாரைபெய் கண்ணன்; தாரை - நீரொழுக்கு 'தம்பியை யுன்னுந் தோறும் தாரைநீர் வழங்கும் கண்ணன்' (சுந்தர. 985).

பா - ம். 1. ஐயன்றனவன்மேல் விழ்ந்தானழுந்துற மார்பிற், ஐயன்றனவன்றன் மேல் விழ்ந்தழுந் துயிரழுந்த.
2. உய்யலென், உய்யரிலேன்; வாடி; உயங்குகின்றான்.
3. கண்ணீர்ப்.
4. நீனிற.



2158. உழைக்கும்வெய் துயிர்க்கு மாவி
யுருகும்போ யுணர்வு சோரும்
இழைக்குவ தறிதல் றேற்று
னிலக்குவா விலக்குவா வென்
றழைக்குந்தன் கையை வாயின்
மூக்கின்வைத் தயர்க்கு மையா
பிழைத்தியோ வென்னும் மெய்யே
பிறந்தேயும் பிறந்தி லாதான்.

மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான் - உண்மையாகப் பிறந்தி ருந்தும் (ஒரு காலத்தும்) பிறப்பில்லாத பரம்பொருளான இராம பிரான், உழைக்கும் - வருந்துவான்; வெய்து உயிர்க்கும் - வெம்மை யாகப் பெருமூச் செறிவான்; ஆவி உருகும் - உயிர் உருகுவான்; உணர்வு போய் சோரும் - அறிவுநீங்கித் தளர்வான்; இழைக்குவது

அறிதல் தேற்றான் - இன்னது புரிவது என்று தெளியான்; இலக்குவா இலக்குவா - இலக்குவனே இலக்குவனே, என்று - என்று அழைத்து, தன் கையை வாயின் மூக்கின் வைத்து அயர்க்கும் - தனது கரத்தை (இலக்குவனுடைய) வாயினும் மூக்கினும் வைத்து (சுவாசம் உளதோ என்று பார்த்து), அயர்க்கும் - வருந்துவான்; 'ஐயா பிழைத்தியோ - ஐயனே! பிழைப்பாயோ' என்று கதறுவான்.

உழைத்தல் - வருந்துதல். அவலச் சுவை மிகக்கொண்ட செய்யுள். கையை வாயின் மூக்கில் வைத்தது உயிர்ப்புண்டோ என அறியும் பொருட்டு, மெய்யே பிறந்தும்: என்றது உண்மையாகவே சாதாரணமாகத் தாயின் கருப்பத்தில் தங்கிப் பிறந்தும் பிறவாதவனாகக் கருதப்படுபவன் என்க. இராமபிரான் கோசலை வயிற்றில் பன்னிரண்டு மாதங்கள் இருந்ததாக வான்மீகம் கூறும். 'ததஸ்சே துவாத்சே மாசே' என்றது காண்க. இனி ஏனைய உயிர்களைப் போன்று கரும்வசப் பட்டுப் பிறவாமல் தன் இச்சையினால் அவதரித்தவன் எனினுமாம். 'பிறந்தேயும் பிறந்திலாதான்' 'பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோரிலையே' (பரி. 3 : 72); (ஆரணிய. 51) உரைக் குறிப்பும் காண்க. 'வாராதே வரவல்லாய்' (ஆரணிய. 55); 'வந்தாய் போல வாராதாய் வாராதோய் போல் வருவோனே' (ஆரணிய. 55); 'அஜாய மானோ பஹுதா விஜாயதே' (புருடசூக்தம்); 'பிறப்பில் பல்பிறவிப் பெம்மான்' (பரி.).

பி - ம். 1. பேருணர்வு.

2. அறிதிற்றேற்ரு, அரிதிற்றேரு.

3. மூக்கின் வாயில்; வைத்தறியும்; வைத்தநோக்கும்.

4. இன்னுமென்னும், என்னுமென்னும், என்னுமாவி. 222

2159. தாமரைக் கையாற் றாளைத்
தைவரும் குறங்கைத் தட்டும்
தூமலர்க் கண்ணை நோக்கும்
மார்பிடைத் துடிப்புண் டென்னு

எமுறும் விசும்பை நோக்கு
மெடுத்தெடுத் திறுகப் புல்லும்
பூமியில் வளர்த்தும் கள்வன்
போயகன் றனோ வென்னும்.

(பின்னும் இராமபிரான்), தாமரை கையால் - தனது தாமரை மலர் போன்ற கரத்தால், தாளை தைவரும் - இலக்குவனுடைய பாதங்களைத் தடவுவான்; குறங்கை தட்டும் - துடைகளைத் தட்டுவான்; தூமலர்க் கண்ணை நோக்கும் - பரிசுத்தமான விழிகளைப் பார்ப்பான்; மார்பிடை துடிப்பு உண்டு - (இவன்) மார்பில் துடித்தல் உள்ளது, என்று எமுறும் - என்று மகிழ்வான்; விசும்பை நோக்கும் - ஆகாயத்தைப் பார்ப்பான்; எடுத்து எடுத்து இறுக புல்லும் - அடிக்கடி யெடுத்து இறுகத்தழுவுவான்; பூமியில் வளர்த்தும் - தரையில் படுக்குமாறு விடுவான்; 'கள்வன் போய் அகன்றனோ - மாயச் செயல்களையுடைய இந்திரசித்து போய் விட்டானோ'? என்னும் - என்பான்.

தைவருதல் - தடவுதல்; 'விண் தைவரு சூரிய சத்துரு' (யுத்த. படைத்தலைவர். 21). தைவரல் - தட்டுதல்; விழிகளை நோக்குதல் முதலிய செயல்கள் உயிர்ப்புண்டோ என அறிதற்கு. வளர்த்துதல்: துயிலவிடுதல்; 'வளர்த்திய மழலைப் பிள்ளை' (பால. நாட்டுப். 13); கண் வளர்தல் என்ற வழக்குண்மை காண்க. கள்வன் போயகன்றனோ என்றது 'இருந்தால் அவனை எதிர்த்து அழித்தல் கூடுமே' என்ற எண்ணத்தால் என்க. போயகன்று: 'ஆவி போயகன்ற பின்னர் அனைவரும் புரட்டிப் பார்த்து' (அரிச். பு. மயான. 8). தன்மைநவிற்சியணி.

பி - ம். 1. தாளைக்கையாற்றைவரும்.
2. தூய்மலர்; என்னும்.
3. எடுக்குந் தன் கையாலேந்தும் கவானில்; எடுக்குந் தன்மார்பின் ஏற்றும்.

223

2160. வில்லினை நோக்கும் பாச
விசிப்பினை நோக்கும் வியா
அல்லினை நோக்கும் வானத்
தமரரை நோக்கும் பாரைக்

கல்லுவன் வேரோ டென்னும்
பவளவாய் கடிக்கும் கற்றோர்
சொல்லினை நோக்கும் தன்போற்
புகழினை நோக்குந் தோளான்

தன்போல் புகழினை நோக்கும் தோளான் - தன்னுடைய உயிரைப் போலத் தன்னுடைய கீர்த்தியைக் கருதும் தோள்களையுடையவனாகிய இராமபிரான், வில்லினை நோக்கும் - (தன் கையிற் றுங்கியுள்ள) வில்லைப் பார்ப்பான்; பாச விசிப்பினை நோக்கும் - நாகபாசத்தினது பிணிப்புக்களைப் பார்ப்பான்; வீயா அல்லினை நோக்கும் - விடியாத இரவினைப் பார்ப்பான்; வானத்து அமரரை நோக்கும் - விண்ணகத்துள்ள தேவர்களைப் பார்ப்பான்; 'பாரை வேரோடு கல்லுவன - பூமியை அடியோடு அகழ்ந்து விடுவேன்', என்னும் - என்பான்; பவளம் வாய் கடிக்கும் - பவளம் போன்ற தனது வாயுதடுகளைக் கடிப்பான்; கற்றோர் சொல்லினை நோக்கும் - கல்வி வல்லார் கூறியுள்ள சொற்களை ஆராய்வான்.

பாச விசிப்பினையும், இத்துணைப் பரிபவம் இயற்றிய பகைவனை ஒன்றும் செய்யாது வெறும் சுமையாகத் தோளில் தொங்கும் வில்லினையும் இகழ்ந்து நோக்குவான். எதிரிக்கு அளவுகடந்த வன்மையைத் தந்து, அவன் மாயம் இயற்றுமாறு விடுத்த இருட்டினைக் கடிந்து பார்ப்பான். மற்றும் இருளில் தான் மேற்கொள்ளும் செயல் ஒன்றுமின்றென்று கவன்று நோக்குவான்; வானத்து அமரரை நோக்கியதன் காரணம்; இந்திரசித்து முதலானோருக்குப் பல பெரிய வரங்களைக்கொடுத்துத் தனக்கும் தம்பிக்கும் கொடுமை யிழைக்குமாறு விடுத்ததுபற்றி; அஃதன்றியும் தேவ காரியமாக வந்த தான் இடர்ப்பாட்டுக்குள்ளாகி, அவர்கட்கு ஒன்றும் உதவி புரிய வியலாத நிலைகண்டு நோக்கியதும் ஆம். வேரோடு கல்லுதலும், வாய் கடித்தலும் சினத்தின் காரியங்கள். கற்றோர் சொல்லினை கருதியது: 'வெல்லுமோ தீவினை யறத்தை மெய்ம்மையால்' (சுந்தர. 405); என்று கூறியது. தன் பொற் புகழினை நோக்கும் என்ற பாடம் கொண்டும் பொருள் உரைப்பர்.

பி - ம். 1. விக்கினை.

2. அதுக்கி, கறிக்கும்.

4. தன்பொற், தன்கை; பகழியை.

2161. வீரரை யெல்லாம் பார்க்கும்
விதியினைப் பார்க்கும் வீரப்
பாரவெஞ் சிலையைப் பார்க்கும்
பகழியைப் பார்க்கும் பாரில்
யாரிது பட்டா ரென்போ
லிளிவந்த வண்ண மென்னும்
நேரிது பெரிதென் றோது
மளவையி னிமிர நின்றான்.

அளவையின் நிமிர நின்றான் - பிரமாணங்களால் நிர்ணயிக்க வியலாமல் உயர்ந்து நின்றவனுகிய இராமபிரான், (கீழே வீழ்ந்து கிடந்த), வீரரை எல்லாம் பார்க்கும் - குரக்கு வீரர்கள் அனைவரையும் கண்ணுறுவான்; விதியினை பார்க்கும் - (இல்லாளையும் தம்பி முதலானவர்களையும் பிரிய நேர்ந்த) ஊழ்வினையைக் குறித்து மனத்துள் எண்ணுவான்; வீரம் - வீரச்செயற்குரிய, பாரம்வெம் சிலையை பார்க்கும் - (ஒன்றும் செயல் புரியாது வெறும் சுமையாகத் தொங்குகின்ற) கொடிய வில்லினை நோக்குவான்; பகழியைப் பார்ப்பான் - (வில்லே பயன் தராத நிலையில் இவைகளால் அடையும் பயன் யாது) என்று தனது அம்புகளைப் பார்ப்பான்; 'பாரில் - இப் பூமியில், என்போல் இளிவந்த வண்ணம் இது யார் பட்டார் - என்னைப் போன்று இகழும் தன்மையதாகிய இந் நிலையை பிறர் யார் துய்த்தனர்' என்னும் - என்பான்; 'இது பெரிது நேரிது என்று ஓதும் - '(எனக்கு நேர்ந்துள்ள) இத் துன்பம் மிகவும் அழகாயிருந்தது' என்று மொழிவான்,

அளவையின் நிமிர நின்றான்: 'அளவையான் அளப்பரிது' (யுத்த. 191) ம் அதன் உரை விளக்கமும் காண்க. 'தனக்கும் தன் தன்மை அறிவறியானன பெருமான், எத்துணை ஞானமுடையார்க்கும் அறிய முடியாதவன் என்ப. 'உணர்ந்தார்க் குணர்வரியோன்' (திருக். 9) என்ற இடத்து, 'தவத்தாலும் தியானத்தாலும் எல்லாப் பொருள்களையும் உணர்ந்தவர்க்கும் உணர்வரியோன் இறைவன்' என்று பேராசிரியர் வரைதல் காண்க. 'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் சோதிக்க வேண்டர் சுடர் விட்டுளன் எங்கள் சோதி' (தேவா. 1178 : 5) என்றார் பிறரும். மனிதப் பிறவி யெடுத்

தோர் அனைவரும் ஊழ்வயப்பட்டவரே என்ற கொள்கை இந் நூலில் பல இடங்களிலும் கூறப்பட்டிருத்தல் காணலாம். 'விதியின் பிழைநீ யிதற்கென்னை வெகுண்டது' (அயோத்தி. நகர்நீ: 133); 'விதியது வலியினானு மேலுள வினைவினானும்' (ஆரணிய. 639); 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும்' என்பது (குறள். 380); பாரவெஞ்சிலை; 'பார வெஞ்சிலை வீரம் பழிப்பதே' (கிட்கிந்தா. 319); பயனற்றுத் தொங் கும் சிலையை வளைக்க எண்ணாது பார்த்தான் எனப்பட்டது. 'வில் லும் சுமக்கப் பிறந்தேன் வெகுண்டென்னை' என்றான். (அயோத்தி. நகர்நீ: 138): 'வன்றாட் சிலையேந்தி வாளிக்கடல் சுமந்து, நின்றேனு நின்றேன் நெடுமரம்போ னின்றேனே' (ஆரணிய, 989) என்று இராம பிரான் கூறுவது காண்க. தொழிற் படுங்கால் சிலையும் பகழியும் ஒன்று பட்டனவேனும், சோக மிகுதியால், தனித்தனிப் பிரித்துக் கூறப்பட்டன. 'கல்லா மதியே கதிர்வாணிலவே' (சுந்தர. 492); என்ற இடத்துப் போல; 'என்போல எளிவந்த வண்ணம் இது யார் பட்டார்' எனக் கூட்டுக. அளவை: காட்சி ஆகமம் அநுமானம் முதலிய பிரமாணங்கள். உலகத்தில் அணுவும் மகமேருவுமென் னும்படி அணுமயமாக வடிவுகொண்டு; அந்தர் யாமி யாகின்ற பெருமான் மேருமலைபோலவும் விளங்கினான் 'அணோ ரணீயாம் மகதோ மகியாம்' என்பது வேதம். 'அணுவின் மேருவின் ஆழியான் எனச் செலும் அறிவோன்' (சுந்தர. 229). என்று அநுமனைத் திருமாற்கு உவமித்ததும் பார்க்க.

பி-ம். 1. நோக்கும்.
2. பாரின்.
3. யானே எளிவந்த, என்போலிளி வந்த.
4. பரிது; நிமிர்ந்து.

225

## இராமன் வீடணனை நிந்தித்துக் கூறுதல்

2162. எடுத்தபோ ரிலங்கை வேந்தன்
மைந்தனோ டினைய கோவுக்
கடுத்ததென் றென்னை வல்லை
யழைத்திலை யரவின் பாசம்

தொடுத்தகை தலையி னேடுந்
துணித்துயிர் துடைக்க வென்னைக்
கெடுத்தனை வீடணா நீ
யென்றனன் கேடி லாதான்.

கேடு இலாதான் - என்றும் அழிவில்லாதவனான இராம பிரான், 'இலங்கை வேந்தன் மைந்தனோடு இளையகோவுக்கு எடுத்த போர் அடுத்தது - இலங்கை மன்னனான இராவணனுடைய புதல் வனான இந்திரசித்துக்கும் இலக்குவனுக்கும் பெரும் போர் உண்டா யிற்று' என்று - என்று சொல்லி, அரவின் பாசம் தொடுத்தகை - நாகபாசத்தை விடுத்த (இந்திரசித்தின்) கரங்களை, தலையினேடும் துணித்து - (அவனுடைய) சிரத்துடன் அறுத்து, உயிர் துடைக்க - அவன் உயிரையும் போக்க, என்னை வல்லை அழைத்திலை - என்னை விரைவுடன் அழையா தொழிந்தனை; (ஆதலின்) வீடணா - வீடணனே! நீ என்னை கெடுத்தனை - நீ எனக்குக் கெடுதி விளைத்தனை', என்றனன் - என்று கடிந்து கூறினன்.

எடுத்த - உயர்ந்த என்னும் பொருளது, 'கெடுத்தனை என் றனன் கேடிலாதான்' என்ற இடத்தில் பொருள் நயம் உய்த் துணர்க.

பி - ம். 1. கோவுற்று, கோவுந்.

2. அடுந்த, தடுத்தது, அடுத்தபோழ்தென்னையிங்கே; அமரர். 226

3. சரத்தினேடும், சிரத்தினேடும்; குடிக்க, குடிப்ப;

4. கேதமுய்ப்பான்

## நிகழ்ந்ததை வீடணன் கூறல்

2163. அவ்வுரை யருளக் கேட்டா
னழிகின்ற வரக்கன் றம்பி
இவ்வழி யவன்வந் தேற்ப
தறிந்திலே மெதிர்ந்த போதும்
வெவ்வழி யவனே தோற்கு
மென்பது விரும்பி நின்றேன்
தெய்வவன் பாசஞ் செய்த
செயலிந்த மாயச் செய்கை.

அ உரை அருள கேட்டான் - அத்தகைய உரையை (இராமபிரான்) கூறக் கேட்டவனாய், அழிகின்ற அரக்கன் தம்பி - மலைம் உளைகின்ற இராவணன் தம்பியான வீடணன், (பின் வருமாறு விடையிறுத்தான்) ; ' இ வழி - இந்தப் போர்க்களத்தில், அவன் - அந்த இந்திரசித்தே, வந்து ஏற்பது அறிந்திலெம்-வந்து எதிர்த்து நிற்பான் என்பதை (நாங்கள் முன்னை) அறிந்தோமில்லை ; எதிர்த்த போதும் - இருவரும் போர் செய்யும் போதும், வெவ்வழி அவனே தோற்கும் - தீய வழியினனான இந்திரசித்தே தோல்வியுறுவான்', என்பது விரும்பி நின்றேன்-என்பதையே எதிர்பார்த்து நின்றேன்; (அதனாலேயே இப் போர்ச் செய்தியை நான் தங்கட்குத் தெரிவிக்கவில்லை) ; இந்த மாய செய்கை-இந்த வஞ்சனைச் செயல், தெய்வம் வன் பாசம் செய்த செயல் - தெய்வத் தன்மை வாய்ந்த வலிய அரவக்கணையால் விளைந்த விளைவாம்'.

அரக்கன் நிகழ்ச்சிகளை எண்ணி அழிந்தமை : 2146 - 2148-ல் காண்க. ஏற்கனவே மனமழிந்த நிலையில் இராமபிரான் நிட்டுரமாகக் கூறியது வெந்த புண்ணில் வேலெறிந்தது போன்றதென்க. தம் பக்கத்தார் அனைவரையும் உளப்படுத்தி அறிந்திலெம் என்றான்.

பி - ம். 1. கேட்டங்கழுகின்ற.

2. இவன் ; அறிந்திலேன்.

3. என்பதைச் சூழ்ந்து.

4. தெய்வவான் ; மாயைச். 227

2164. அற்றதி காய னுக்கை
நலையில தாக்கி யாண்ட
வெற்றிய னுய வீரன்
மீண்டில னிலங்கை மேனுட்
பெற்றவ னெய்து மென்னும்
பெற்றியை யுன்னிப் பிற்போ
துற்றனன் மைந்தன் றானை
நாற்பது வெள்ளத் தோடும்.

'அற்று-அந் நாளில், அதிகாயன் ஆக்கை தலை இலது ஆக்கி-அதிகாயனுடைய உடலைத் தலையற்றதாகுமாறு செய்து, ஆண்ட வெற்றியன் ஆயவீரன்-பெற்ற வெற்றியை உடையவனான இலக்குவன், மேனாள்-முன்னாளில், 'இலங்கை பெற்றவன்-(குபேரனை வென்று) இலங்கையைக் கைக்கொண்டவனான இராவணனே, எய்தும்-போர்க்கு வருவான்', என்னும் பெற்றியை உன்னி-என்னும் தன்மையை நினைந்து, மீண்டிலன்-திரும்பிச் செல்லாமல் களத்திலேயே நின்றான்; பிற்போது தானை நாற்பது வெள்ளத்தோடும்-பின்னர் நாற்பது வெள்ளம் சேனையோடும், மைந்தன்-இராவணன் புதல்வனான இந்திரசித்து, உற்றனன்-போர் புரியுமாறு வந்தனன்.

அதிகாயன் ஆக்கை அற்று எனக் கூட்டினுமாம்-ஆக்கை தலையிலதாக்கியமை; (யுத்த. 1866). இலங்கை மேனாள் பெற்றவன்; திருமால் துரத்த நாகலோகத்தில் ஒளிந்திருந்த இராவணனுடைய தாய்ப்பாட்டனான சுமாலி, தன் பெண் வழி மக்கள் நல்ல வரம் பெற்றுயர்ந்ததைக் கேட்டு, இராவணனிடம் வந்து, ஆதியில் தமக்குச் சொந்தமாயிருந்த இலங்காபுரியைக் குபேரனிடமிருந்து கைப்பற்ற வேண்டும் என்று சொல்ல, முதலில் அதனைச் செய்ய மனமில்லாதிருந்த அந்த அரக்கர்கோனைப் பிரகத்தன் தூண்டிக், குபேரனிடமிருந்த அந் நகரத்தைக் கைப்பற்றச் செய்தனன் என்பது வரலாறு. உத்தரகாண்டம் வரையெடுத்த படலம் காண்க. 'இலங்கை மேனாள் பெற்றவனெய்தும்' இங்கு (யுத்த. 1963) காணத் தகும்.

பா-ம். 1. ஆண்டவ்.

2. ஆக்கி, ஆக, ஆகி. 228

2165 ஈண்டுநஞ் சேனை வெள்ள மிருபதிற் றிரட்டி மாளத்
தூண்டினன் பகழி மாரி தலைவர்கள் தொலைந்து சோர
மூண்டெழு போரிற் பாரின் முறைமுறை முடித்தான் பின்னர்
ஆண்டகை யோடு மேற்று ளயிர மடங்கற் றேரான்.

'ஆயிரம் மடங்கல் தேரான்-ஆயிரம் சிங்கங்கள் பூட்டிய தேரையுடையவனான இந்திரசித்து, மூண்டு எழு போரில்-தீவிரமாய்ச் செய்கின்ற போரில், ஈண்டு நம் சேனை வெள்ளம்-நெருங்கிய நமது சேனைகளில், இருபதிற்று இரட்டிமாள-நாற்பது வெள்ளம்

உயிர்கள் அழியவும், தலைவர்கள் - வானரத் தலைவர்கள், தொலைந்து பாரில் சோர - அழிந்து தரையில் வீழவும், பகழிமாரி தூண்டினன் - அம்பு மழையைப் பொழிந்து, முறைமுறை முடித்தான் - படிப் படியாக அழித்தான்: பின்னர் - பின்பு, ஆண்டகையோடும் ஏற்றான் - ஆடவர் திலகனாகிய இலக்குவனை எதிர்த்துப் பொருதான்.

ஈண்டு - இவ்விடத்து எனினுமாம்; ஆண்டகை - இலக்குவன், ஆயிரம் மடங்கல் தேரான்; 1955-ல் காண்க.

பி - ம். 1. எழுபதினிரட்டி, எழுபதிற்பாகம்.
2. தலைவரைத் தொலைத்துச்.
3. மும்முறை; முடிந்தான்.
4. உற்றான். 229

2166. அனுமன்மேல் நின்ற வைய னாயிரந் தேரு மாயத்
தனுவலங் காட்டிப் பின்னை நாற்பது வெள்ளத் தானை
பனியினைப் படுவித் தன்னான் பலத்தையுந் தொலைத்துப்
[பட்டான்
இனியென வயிரவாளி யெண்ணில நிறத்தி னெய்தான்.

அநுமன்மேல் நின்ற ஐயன் - அநுமன் மீது ஏறி நின்ற இலக்குவன், ஆயிரம் தேரும் - (இந்திரசித்தினுடைய ஆயிரம் தேர்களும், மாய - அழியும்படி, தனுவலங் காட்டி - (தன்னுடைய) வில்லாற்றலைக் காண்பித்து, பின்னை - பின்னர், நாற்பது வெள்ளம் தானை - பனியினை (அவனுடைய) நாற்பது வெள்ளம் சேனையாகிய, பனியினை - பனியினை, படுவித்து - அழியுமாறு செய்து, அன்னான் பலத்தையும் - அந்த அரக்கனுக்குப் பக்கபலமாக வந்த புகைநிறக் கண்ணன், பெரும்பக்கன் என்பவர்களையும், தொலைத்து - அழித்து, 'இனி பட்டான் - இப்பொழுதே மரித்தான்' என - என்று சொல்லுமாறு, எண் இல வயிரம் வாளி நிறத்தின் எய்தான் - கணக்கற்ற உறுதியான அம்புகளை (அவனுடைய) மார்பின்கண் செலுத்தினான்,

அரக்கன் தேர்மீருந்து பொருதானுகலின் இலக்குவன் தானும் அநுமனை வாகனமாகக் கொண்டு பொருதமை குறிக்கப் பெற்றது. பனி என என்றிருப்பினும் சூரியன் முன் பனி என உரைத்துக் கொள்க. பட்டான் - தெளிவு பற்றி வந்த காலவழுவமைதி. பலத்தையும் தொலைத்து - பலம் : பக்கபலமாக வந்த புகைநிறக் கண்ணன் பெருபக்கன் என்ற இருவர்.

பி - ம். 1. நின்ற வள்ளல் ; மாய்த்துத், மாள.

2. தனுவலி ; பின்னர் ; தானை.

3. பனியெனப் ; வலத்தையும், பலத்தையும் ; குறைத்து.

4. இளையன ; எண்ணிலர் ; நிறத்தின். 230

2167. ஏவுண்ட பகுவா யோடுங்
குருதிநீ ரிழிய நின்றுன்
தூவுண்ட தானை முற்றும்
படவொரு தமியன் சோர்வான்
போவுண்ட தென்னி னைய
புணர்க்குமோ மாய மென்று
பாவுண்ட கீர்த்தி யானுக்
குணர்த்தினன் பரிதி பட்டான்.

'ஏ உண்ட - அம்புகள் பட்ட, பகுவாய் - பிளந்த இடங்களில் எல்லாம், குருதிநீர் இழிய நின்றுன் - ஓடுந் தன்மையதான உதிர வெள்ளம் ஓடுமாறு நின்ற இந்திரசித்து, தூ உண்ட தானை முற்றும் பட - மாமிசம் புசிக்கும் அரக்கர் சேனை அடங்கலும் அழிய, தமியன் சோர்வான் - தன்னந்தனியனாய் நின்று தளர்வான்; 'ஐய - ஐயனே, போவுண்டது எனின் - இவன் பிழைத்துப் போக நேருமானல், மாமாயம் புணர்க்கும் - விசேடமான மாயச் செயல்களைச் செய்வான்'; என்று - என்று, பா உண்ட கீர்த்தியானுக்கு - புலவர் பெருமக்களின் புகழுரையை மேற்கொண்ட கீர்த்தியை யுடையவனான இலக்குவனுக்கு, உணர்த்தினன் - அறிவித்தான்; பரிதி பட்டான் - (அந்நிலையில்) சூரியன் மறைந்தான்.

உண்ணுதல் : மரபு வழுவமைதி. தூவுண்ணுதல் : மாமிசம் உண்ணுதல் ; மாமாயம் புணர்க்கும் என அந் வயிக்க ; பாவுண்ட

கீர்த்தி - பரவுதலைப் பெற்ற புகழ் எனினுமாம். பாவுண்ட கீர்த்தி : வான்மீகர், கம்பர், துளசிதாசர் முதலிய பெருங் கவிகளின் பாக்கட்கு இலக்கான என்க. பாவுண்ட கீர்த்தி ; 'உரையும் பாட்டும் உடையோர் சிலரே. புறநா. 27.

பி - ம். 1. ஏவுண்டு ; வாயூடு ; எய்த, ஒழுக.

2. சோர்வார்.

3. புணர்க்குவன் ; என்னப்.

4. சீர்த்தி ; உணர்த்தினேன். 231

2168. மாயத்தா லிருண்ட தாழி
யுலகெலாம் வஞ்சன் வானிற்
போயத்தா னுடைய வஞ்ச
வரத்தினு லொளித்துப் போயிவ்
வாயத்தார்ப் பாசம் வீசி
யயர்வித்தா னம்பின் வெம்புங்
காயத்தா னென்னச் சொல்லி
வணங்கினுன் கலுழுங் கண்ணுன்.

' ஆழி உலகு எலாம் - கடல் சூழ்ந்த புவனம் முழுதும், மாயத்தால் - மாயச் செயல் புரிதற்குதவியாக, இருண்டது - இருளடைந்தது; (அப்பொழுது இலக்குவனுடைய), அம்பின் வெம்பும் காயத்தான் - வாளிகளால் கொதிப்புற்ற உடலையுடையவனும், வஞ்சன் - வஞ்சகனுமான இந்திரசித்து, வானில் போய் - விண்ணிடைச் சென்று, தான் உடைய அ வஞ்சம் - தான் பெற்றுள்ள அந்த மாயைச் செயல்கள் ஆற்றுதற்கு அநுகூலமான, வரத்தினுல் - வரத்தின் பலத்தால், போய் ஒளித்து - ஓடி மறைந்து, இவ் ஆயத்தார் - இந்த வானரக் குழுவினரை, பாசம் வீசி - அரவக்கணை தொடுத்து, அயர்வித்தான் - சோர்வுறச் செய்தான்.' என்ன சொல்லி - என்று (நிகழ்ந்தவற்றைப்) பகர்ந்து, கலுழுங் கண்ணுன் - அழுகின்ற விழிகளை யுடையவனுன, (இராமபிரானை) வணங்கினுன் - பணிந்தான்.

இருள் அரக்கர்க்கு அளவு கடந்த பலம் அளிக்கும் ஆதலின். இந்திரசித்து மாயையாற் பாசம் வீசி அயர்வித்தான் எனப்பட்டது,

பி - ம். 2. பொய்யின் ;

3. ஆயத்தார் ; மேவி ; நம்ப, வெம்ப.

4. காய்வித்தான் ; கலுழி. 232

## எவரும் உயிர் துறக்கவில்லை யாதலால் பாசம் நீங்கினல் யாவரும் உயிர் பெற்றெழுவரென்று வீடணன் இராமபிரானைத் தேற்றுதல்

2169. பின்னையு மெழுந்து பேர்த்தும்
வணங்கியெம் பெரும யாரும்
இன்னுயிர் துறந்தா ரில்லை
யிறுக்கிய பாச மிற்றல்
புன்னுனைப் பகழிக் கோயுந்
தரத்தரோ புலம்பி யென்னை
இன்னலுற் றயரல் வெல்லா
வறத்தினைப் பாவ மென்றான்.

(வீடணன்), பின்னையும் எழுந்து - மீண்டும் எழுந்து, பேர்த்தும் வணங்கி - திரும்பவும் (இராமபிரானைப்) பணிந்து, 'எம்பெரும - எமது தலைவனே ! இறுக்கிய பாசம் இற்றல் - இவர்களைப் பிணித்துள்ள நாகபாசம் ஒழிந்தால், இன் உயிர் துறந்தார் இல்லை - இனிய உயிர் நீங்கப் பெறுபவர் இல்லை. (யாவரும் உயிர்த்து எழுவர்), புல்நுனை அற்பமான நுனியினையுடைய, பகழிக்கு ஓயும் தரத்தரோ - அம்புகளுக்கு வன்மையழியும் தன்மையுடையரோ (இவர்கள்); புலம்பி என்னை - அழுது என்ன பயன் ? இன்னல் உற்று அயரல் - துன்புற்று வருந்தாதே ? பாவம் அறத்தினை வெல்லா - பாவச் செயல்கள் தருமத்தை வெல்லமாட்டா' என்றான் - என்று கூறினன். ஆல் : ஈற்றசை.

அறவழியில் நடக்கும் தமக்கு மறவழியில் செல்லும் அரக்கரால் கெடுதி நேர்தற்கில்லை; ஆகவே எல்லோரும் உயிர் பெற்று

எழுவர் என்று சொல்லித் தேற்றினன் வீடணன். வெல்லா அறத்தினைப் பாவம் என்றதற்கேற்ப, அடுத்து, கருடன் வந்து பாசத்தினைப் போக்கி உயிர்ப்பித்தல் காண்க. இறுக்கிய பாசம் இற்ருல் இன்னுயிர் துறந்தாரில்லை என மாற்றி உரைக்க, வெல்லா அறத்தினைப் பாவம்; 'அறந்தலை நின்ருர்க்கில்லை யழிவெனும் அறிஞர் வார்த்தை, சிறந்தது' (யுத்த. இந்திரசித்து : 58); 'அறத்தினைப் பாவம் வெல்லா தென்னுமதறிந்து' ((யுத்த. நிகும்பலை : 177); 'அறத்துக்கொரு குறையுண்டாகுமோ' (யுத்த. 1289); 'வெல் லுமோ தீவினை யறத்தை மெய்ம்மையால்' (சுந்தர. 405); 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' (சுந்தர. 190); 'அருடருந்திறத் தறனன்றி வலியதுண்டாமோ' (ஆரணிய. 499).

பி - ம். 1. பின்னரும் வணங்கியேதும்; பிழைத்திலன், பிழைத்திலம்.
2. இறந்தாரில்லை.
3. பகழி கொல்லுந்தரத்ததோ, பகழி கொய்யும்தரத்தரோ; உள்ளம்,
4. தருமத்தை. 233

## நாகபாசத்தைப் பற்றிய விவரம்

2170. யாரிது கொடுத்த தேவ
னென்னையி திதனைத் தீரும்
காரண மியாது நின்ன
லுணர்ந்தது கழறிக் காணென்
ருரியன் வினவ வண்ணல்
விடண னமல சாலச்
சீரிதென் றதனை யுள்ள
பரிசெலாந் தெரியச் சொன்னன்.

'இது - இந்த அரவக்கணையை, கொடுத்த தேவன் யார் - உதவிய தேவன் யாவன்? ஈது என்னை - இதன் இயல்பு யாது! இதனை தீரும் காரணம் யாது' - இதினின்று பிழைக்கும் ஏது என்ன? நின்னல் உணர்ந்தது கழறி காண் - (இவற்றைக் குறித்து) உன்னல் அறியப்பட்டதைப் பகர்வாயாக: , என்று - என்று, ஆரியன் வினவ - இராமபிரான் கேட்க, அண்ணல்

வீடணன் - பெருமை சான்ற வீடணன், (பிராணை நோக்கி) 'அமல - களங்கமற்றவனே ! சாலசிரிது - மிகவும் நல்லது', என்று - என்று, அதனை உள்ள பரிசு எலாம் தெரிய சொன்ஞன் - அந்த அரவக் கணையைப் பற்றித் தான் அறிந்தனவெல்லாம் இராமபிரான் மனம் கொள்ளுமாறு கூறினுன். கூறியவற்றை அடுத்து வரும் மூன்று செய்யுட்களில் காண்க.

கழறிக்காண் : ஒரு சொல் நீர்மைத்து.

பி - ம். 1. தேவர் ; அது, ஈங்கு ; நீர்க்கும்.

3. ஆரியன் அருள ; அடிமலர் வணங்கியண்மிச், மலரடி சரணம் சார்ந்தது.

4. ஆறெலாம் ; செப்பலுற்ருன். 234

2171. ஆழியஞ் செல்வ பண்டிவ் வகலிட மளித்த வண்ணல்
வேள்வியிற் படைத்த தீசன் வேண்டினன் பெற்று வெற்றி
தாழ்வறு சிந்தை யோர்க்குத் தவத்திஞ லளித்த தாணை
ஊழியி னிமிர்ந்த காலத் துருமின தூற்ற மீதால்.

ஆழி அம் செல்வ - திகிரிப்படை தாங்கிய செல்வனே! பண்டு - முற்காலத்தில், இ அகல் இடம் அளித்த அண்ணல் - இந்த உலகத்தைப் படைத்த அயன், வேள்வியில் படைத்தது - (ஆற்றிய) ஓர் யாகத்தில் உண்டாக்கியது ; ஈசன் - சிவபெருமான், வேண்டினன் பெற்று - பிரமனிடம் விரும்பி வாங்கி, வெற்றி பெற்று - வெற்றி யடைந்து, (பிறகு)' தாழ்வு அறுசிந்தையோர்க்கு - தாழ்ச்சியில்லாத மனத்தினன் ஆன இந்திரசித்துக்கு, தவத்திஞல் அளித்தது - தவத்தின் பயஞகத் தந்தது ; (இதன் வரலாறு இது) ; ஆணை - இது உண்மை ; ஊழியின் நிமிர்ந்த காலத்து உருமினது - பிரளய காலத்தெழுகின்ற இடிபோன்ற தன்மையுடையது, (இதன்) ஊற்றம் ஈது - வலிமை இத்தகையது ; ஆல் - அசை.

ஆழியஞ் செல்வ எனவிளித்து இராமபிரானுடைய தானை நிலையுணர்ந்து கூறியது. மற்றும் ஆழி மன்னனுக் குரிய

ஆணைச்சக்கரமும். ஆர (யுத்த. 326': 442). பார்க்க. இரண்டாம் அடியில் ளகரம் இனஎதுகையாக வந்தது. வேள்வி: ஒரு பலனை விழைந்து செய்வது என்று யாகத்தின் பெயர்; இ: பெயர்விகுதி. ஈசன்: சிவபெருமான்; அஷ்டைசுவரிய சம்பன்னன்.

பி-ம். 1. பண்டிங்; செல்வன்.
2. படைத்த.
3. தாழ்வுறு; சிந்தையோனுக்; சிந்தையோற்குத் தவத்திறலளித் தானைய.
4. உணர்ந்த; உணர்ந்த. 235

2172. அன்னதன் ஆற்ற லன்றே யாயிரங் கண்ணி னானைப்
பின்னுற வயிரத்திண்டோள் பிணித்தது பெயர்த்தொன் [றெண்ணி
என்னினி யனுமன் தோளை யிறுக்கிய திதனா லாண்டும்
பொன்னுல காளுஞ் செல்வந் துறந்தது புலவ ரெல்லாம்.

ஆயிரம் கண்ணினானை - ஆயிரம் கண்களையுடையவன் ஆன இந்திரனுடைய, திண் வயிரம் தோள் - வலிய உறுதி சான்ற தோள்களை, பின்உற பிணித்தது - பின்முறையாகக் கட்டினது, அன்னதன் ஆற்றல் அன்றே - அந்த அரவக்கணையின் வலிமை யன்றோ? ஆண்டும் - அப்பொழுதும், (அநுமன் இலங்காபுரியில் தேவியைத் தேடச்சென்ற பொழுதும்), அநுமன் தோளை - அநுமனது தோள்களை, இறுக்கியது இதனால் - (இந்த மேகநாதன்) இறுகப் பிணித்ததும் இந்த அரவக்கணையினால்தான்; புலவர் எல்லாம் பொன் உலகு ஆளும் செல்வம் துறந்தது - தேவர்கள் அனைவரும் சுவர்க்கபோகத்தை ஆளும் பேற்றினை இழந்ததும் இதன் வன்மையினாலேதான்; (ஆதலின்), இனி ஒன்றுபெயர்த்து- இனி ஒன்றை மீட்டும், எண்ணி என் - ஆலோசித்து யாது பயன்?

பி-ம். 1. அன்னதின்; ஆற்றறன்றால்.
2. எண்ணல்.
3. யாண்டும்.
4. தந்தது. 236

2173. நான்விடில் விடுமி தொன்றே சதுமுகன் முதல்வ ராய
வான்விடில் விடாது மற்றிம் மண்ணினை யெண்ணி
[யென்னே
ஊன்விட வுயிர்போய் நீங்க நீங்கும்வே றுய்தி யில்லைத்
தேன்விடு துளவத் தாரா யிதுவிதன் செய்கை யென்றான்.

'தேன்விடு துளவம் தாராய் - தேன் ஒழுக விடுகின்ற துளவ மாலையை யணிந்தவனே! ஒன்று இது தான்விடில் விடும் - ஒப்பற்ற இந்த அரவக் கணையானது, தான் விடில் விடும் - தானே விட்டால் தான் விடும்; சதுமுகன் முதல்வர் ஆய - பிரமதேவனை முதலாக உடையவர்களான, வான்விடில் விடாது - விண்ணுலகத்தவர் விடுத்தாலும் விட்டு அகலாது; மற்று - வேறு. இ மண்ணினை எண்ணி என்னே - இந்த நிலவுலகத்தவரைப் பற்றி (இவர்கள் இப்பிணிப்பினை நீக்குவர்', என்று - ஆலோசித்து என்ன பயன்? ஊன்விட உயிர் போய் நீங்க - இக்கணை, (தன்னாற் பற்றப் பட்டவர்களுடைய) உடல் அழியவும், உயிர் போய் ஒழியவும், நீங்கும் - நீங்கும்; உய்தி வேறு இல்லை - (இதிலிருந்து) பிழைக்கும் வழி பிறிதொன்றுமில்லை; இதன் செய்கை இது - இந்தக் கணையின் செயல் இதுவாகும்', என்றான் - என்று பகர்ந்தான் (வீடணன்).

அரவக்கணையின் அபூர்வச் செய்கை இங்குக் குறிக்கப் பெற்றது. வான், மண் என்பன இடவாகு பெயர்களாக அவ் விடத்து வாசிகளைக் குறித்து நின்றன. மற்று - வினைமாற்று. உய்தி: 'செய்தி கொன்றோர்க்குய்தியின்றென, அறம்பாடிற்றே யாயிழைகணவ' (புறநா. 34); இதன் செய்கை இதுவென மாற்றி யுரைக்க.

பி-ம். 1. விடுத்தலல்லால், விடுவதல்லால், விடுதலன்றிச்; ஆய்ந்த.

2. மன்னனி,

3. ஊனிடை; உயிர்போல்; நீங்குமுள்ளம்; வேறுய்வது, வேறுல்.

4. செய்கையான.

## ‘செய்வது யாது’ என, இராமன் விடணனைக் கேட்டல்

2174. ஈந்துள தேவர் மேலே
யெழுகெனோ வுலகமி யாவும்
தீந்துக நூறி யானுந்
தீர்கெனோ விலங்கை சிந்தப்
பாய்ந்தவர் சுற்ற முற்றும்
படுப்பெனோ வியன்ற பண்போ
டேய்ந்தது பகர்தி யென்றா
னிமையவ ரிடுக்கண் டீர்ப்பான்.

இமையவர் இடுக்கண் தீர்ப்பான் - வானோரின் துயரத்தைப் போக்குதற்காகவே அவதரித்த இராமபிரான், (வீடணனைப் பார்த்து), ‘ஈந்துள தேவர் மேலே எழுகெனோ - (இந்த அரவக்கணை இந்திரசித்துக்குக்) கொடுத்துதவிய தேவர்களின் மீது போர் புரிய எழுவேனோ? உலகம் யாவும் தீந்துஉக நூறி - எல்லாப் புவனங்களும் எரிந்து அழியுமாறு செய்து, யானும் தீர்கெனோ - நானும் இறந்துபடுவேனோ? இலங்கை சிந்த பாய்ந்து அவர் சுற்றம் முற்றும் படுப்பெனோ - இலங்கா நகரம் அழியுமாறு (அதன் மீது) தாவி (அதில் உள்ள அரக்கர்களை) அவர்கள் உறவினருடனே ஒரு சேரக் கொல்வேனோ? (இவற்றில்) இத்தருணத்துக்குப் பொருந்திய, இயன்ற பண்போடு - ஏற்ற தகுதியுடன், ஏய்ந்தது பகர்தி - பொருந்தியதைச் சொல்வாயாக’, என்றான் - என்று வெகுண்டு வினவினான்.

இமையவர் இடுக்கண் தீர்ப்பான் ; ‘தீயதெ வுரைத்தியென்றான் தேவர்த மிடுக்கண் தீர்ப்பான்’ (ஆரணிய. 787). இத்தொடரில் அவதார இரகசியம் கூறப்பட்டமை காண்க ; பால. திருவவ. 21-30 பார்க்க. மற்றும், ஆரணிய. 31, 159, 230, 271, 774, 781, 789, 946, 1057, 1107 ; சுந்தர. 395, 455, 1123 ; கிட்கிந்தா. 360 ; சுந்தரகாண்டம் 757-765 ; என்ற மாலியவான் கூற்றும் இங்குக் காணத்தகும். நெறியிற் பிழையாத கொடைதான் சிறந்ததாகலின், ‘ஈந்துள தேவர் மேலே எழுகெனோ’ எனப்பட்டது.

ப - ம். 2. வானும்; நீக்கெனே.

3. சுற்றும்; முற்றப்படுக்கெனே; இயல்வு பண்டே, இயற்றும் பண்போடு.

4. தேவரை. 238

2175. வரங்கொடுத் தினைய பாசம்
வழங்கினன் றானே நேர்வந்
திரங்கிடத் தக்க துண்டே
லிகழ்கிலெ னில்லை யென்னின்
உரங்கெடுத் துலக மூன்று
மொருவனே ரம்பிற் சுட்ட
புரங்களிற் றீய்த்துக் காண்பென்
பொடியொரு கடிகைப் போழ்தின்.

'வரங் கொடுத்து-(இந்திரசித்துக்கு) வரத்தையளித்து, இனைய பாசம் வழங்கினன் - இத்தகைய கொடிய அரவக் கணையை யீந்தவன், தானே நேர் வந்து இரங்கிட தக்கது உண்டேல் - தானாகவே நேரில் வந்து மனமிரங்குவானாகில், இகழ்கிலென் - நான் புறக்கணிக்கமாட்டேன், இல்லை என்னின் - (அவ்வாறு புரியானேல்), உலகம் மூன்றும் உரம் கெடுத்து - மூன்று புவனங்களையும் வலியழியுமாறு செய்து, ஒருவன் - ஒப்பற்ற சிவபெருமான், ஓர் அம்பில் சுட்ட புரங்களில் தீய்த்து - ஒரே வாளியால் சுட்ட முப்புரங்களைப் போன்று எரியுண்ணுமாறு செய்து, ஒரு கடிகை போழ்தின் பொடி காண்பென் - ஒரு நாழிகையளவில் தூளாக்கி விடுவேன்.

வழங்கினன் - வழங்கின தேவன்; சிவபெருமான். (யுத்த. 217) காண்க. அம்பிற் சுட்ட புரங்கள்: சிவபெருமான் முப்புரம் எரித்த வரலாறு இக்காப்பியத்திற் பல இடங்களிலும் குறிக்கப் பெறுதல் காணலாம். (ஆரணிய. 138, 258, 458, 815, 905, 921, 999); (கிட்கிந்தா. 351, 530) மற்றும். கிட்கிந்தா காண்டம்: 452, உரைக் குறிப்பும் காண்க. ஓர் அம்பு: திருமாலாகிய அம்பு. 'நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம், பாணமென்றால் மண் தின்ற பாணமே, தாணுவே, சோணுர் மேவும் சிவனேநீ யெப்படியோ, நேரார் புரமெரித்த நேர்' (தனிப்பா. இரட்டையர்); 'ஆழியான் பள்ளி

யணையேயவன் கடைந்த, வாழி வரையின் மணித்தாம்பே-பூழியான், பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற, நாணே யகலாநட' (தனிப்பா. கம்பர்); ஒரு கடிகைப் போழ்தில் பொடி காண்பேன் என மாறிக் கூட்டுக.

பி-ம். 1. வழங்கினர் தாமே நேர்வந்து, வழங்கினர் தாமே வந்துற்று.

2. இகழிலையென்னையென்னில், இகழ்கின்றேனில்லை யென்னில்.

4. புரங்களிற்றிரக்; சுட்டுக் காண்பென். 239

2176. எம்பியே யிறக்கு மென்னி
லெனக்கினி யிலங்கை வேந்தன்
தம்பியே புகழ்தா னென்னை
பழியென்னை யறந்தா னென்னை
நம்பியே யென்னைச் சேர்ந்த
நண்பரி னல்ல வாமே
உம்பரு முலகத் துள்ள
வுயிர்களு முதவி பார்த்தால்.

'இலங்கை வேந்தன் தம்பியே - இலங்காபுரி மன்னனாகிய இராவணன் இளவலான வீடணனே! எம்பியே இறக்கும் என்னில் - என் தம்பியான இலக்குவனே மரிப்பானானால், எனக்கு இனி - எனக்கு இனிச் செய்ய இருக்கும் செயல்களால், புகழ்தான் என்னை - புகழ் உண்டாவதுதான் எவ்வாறு? பழி என்னை - எனக்கு உறும் பழியைப் பற்றித்தான் என்ன கவலை? அறம்தான் என்னை - தருமமா அதருமமா என்று சீர்தூக்கி நோக்கவேண்டிய அவசியம்தான் என்ன? (மற்றும் இவர்கள் பிரதியுதவி யெண்ணாமல் எனக்கு ஆற்றியுள்ள) உதவி பார்த்தால் - உபகாரத்தைக் கருதி நோக்கின், உம்பரும் - விண்ணுலகத்துள்ளவரும், உலகத்து உள்ள உயிர்களும் - இவ்வுலகத்துள்ள உயிர்களும், நம்பியே என்னை சேர்ந்த நண்பரின் நல்ல ஆமே - என்மீது நம்பிக்கை வைத்து என்னைக் கூடிய நண்பரின், நல்ல ஆமே - நண்பராகிய வானர வீரர்களின் நல்லன எனக் கூறுதல் ஏற்குமோ?'

எனக்குப் பேருதவி ஆற்ற முன்வந்தவர்கள் வானர வீரர்கள் போன்ற பலர்; அவர்கள் என்னை நம்பி வந்தவர்கள், அவர்கள் அனைவோரும் மரிப்பதுடன், என் கண்போன்ற தம்பி இலக்குவன்

இறக்கவிருக்கின்ருன். என் கண்காணிப்பிற்குரியவர்கள் இவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள் யாருளர்? ஆகவே ஒருகணத்தில் மூன்றுலகத்துயிர்களையும் அழித்து நீருக்குவேன்என்று ஆவேசத்துடன் மொழிகின்ருன் இராமபிரான். இங்கு இலங்கை வேந்தன் தம்பியே என்று இராமபிரான் வீடணனை விளித்தது ஆராயத் தக்கது. இலக்குவன் உண்மையில் இறந்திடின் எதிர்பார்த்தது ஒன்றும் கைகூடாது: வீடணனுக்கும் இராஜ்யம் நிலைக்காது என்ற தொனியும் காணலாம்.

பா-ம். 1. உயிலினியெனக்கு, உயினெனிலிவ்.

2. என்ன.

3. நம்பியர், நம்பரின், நண்பரும்; நல்லவாமேல், அல்லவாமேல்.

3. உம்பர்க்கும்; உயிர்கட்கும்; உதவியென்னை, உதவிப்பார்க்க, உதவிப் பார்க்கில். 240

## ஒருவற்காக உலகமழிதல் முறையன்றென்று இராமன் கருதுதல்

2177. என்றுகொண் டியம்பி யீண்டிங்
கொருவனிங் கிடுக்கண் செய்ய
வென்றரு முலகை மாய்த்தல்
விதியன்ரு லென்று விம்மி
நின்றுநின் றுன்னி யுன்னி
நெடிதுயிர்த் தலக்க ணுற்ருன்
தன்றுணைத் தம்பி தன்மேற்
றுணைவர்மேற் ருழ்ந்த வன்பான்.

தன் துணை தம்பி தன்மேல்-தனக்குத் துணையான தம்பியாகிய இலக்குவன் மீதும், துணைவர் மேல் - நண்பர்களான வானர வீரர்களின் மீதும், தாழ்ந்த அன்பான் - நிலைபெற்றுத் தங்கிய அன்பினனை இராமபிரான், என்று கொண்டு இயம்பி - என்று எடுத்துச் சொல்லி, ஈண்டு - இவ்விடத்து, ஒருவன் இங்கு இடுக்கண் செய்ய - ஒருவன் இங்ஙனம் துயர் உண்டாக்க; (அதற்காக), அரும் உலகை வென்று மாய்த்தல் - அருமையான உலகினை

வென்று அழித்தல், விதியன்று - முறையன்று, என்று விம்மி - என்று புலம்பி, நின்று நின்று - விட்டு விட்டு, உன்னி உன்னி - எண்ணி யெண்ணி, நெடிது உயிர்த்து - பெருமூச்செறிந்து, அலக்கண் உற்றான் - துன்பம் அடைந்தான். ஆல் : அசை.

முதலிரண்டடிகட்கு ; 'தீவினை யொருவன் செய்யவ்வனொடும் தீங்கிலாதோர், வீவினை யுறுதலைய மேன்கையோ கீழ்மை தானோ' (யுத்த. 1348) ; 'நின்று நின்று உன்னி யுன்னி நெடிதுயிர்த்து' என்ற தொடர்க்கண் அவலத்தின் பல படிகளும் கூறப்பெற்றிருத்தல் காண்க. தாழ்தல் : நிலைபெறுதல். 'மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார்' (சிலப். 17) ; ஒருவன் இங்கு ; இங்கு : அசை. ஒருவன் பாவம் செய்ய அதன் பயனைப் பலர் அநுபவிக்கின்றனர் ; முதனூல்.

பி - ம். 1. ஒருவர் ; ஓர்.
2. வென்றிவன், மாய்த்தால் ; விம்மும்.
3. உன்னி விம்மும் ; மீண்டும்.
4. அன்பால். 241

## நாகபாசத்தால் தம்பியிறப்பின் இராமபிரான் தானும் இறப்பதாகத் துணிதல்

2178. மீட்டும்வந் திளைய வீரன் வெற்பன்ன விசயத் தோளைப்
பூட்டுறு பாசந் தன்னைப் பன்முறை புரிந்து நோக்கி
வீட்டிய தென்னிற் பின்னை யிவனென் றெண்ணும் வேதத்
தோட்டியின் தொடக்கி னிற்குந் துணைக்கைம்மா
[லியானை யன்னான்.

வேதம் தோட்டியின் தொடக்கில் நிற்கும் துணைகைமால் யானை அன்னான் - மறையாகிய, அங்குசத்தின் பிணிப்புக்கு அடங்கி நிற்கின்ற இரண்டு துதிக்கைகளையுடையதொரு பெரிய வேழத்தை யொத்தவனான இராமபிரான், மீட்டும் வந்து - திரும்பவும் வந்து, இளைய வீரன் வெற்பு அன்ன விசயம் தோளை - இலக்குவனுடைய மலை போன்ற வெற்றி பொருந்திய தோள்களை, பூட்டுறு பாசம்

தன்னை-இறுக்கியுள்ள அரவக்கணையை, பன்முறை புரிந்து நோக்கி-பலமுறை குறிப்பாகப் பார்த்து, 'வீட்டியது என்னில் - இந்தப் பாசம் இலக்குவனைக் கொல்லும் என்னில், வீவன்-யானும் இறந்து படுவேன்' என்று எண்ணும் - என்று நினைவானுனன்.

வெற்பன்ன தோள், விசயத்தோள் எனத் தனித்தனிக் கூட்டுக. ஒருவன் இடுக்கண் செய்ய உலகத்தை மாய்த்தல் விதியன்று என்று முன்பாட்டில் கூறியதுகொண்டு, இராமபிரானுடைய நீதியுணர்வு நன்கு புலனாகுமாதலின், அவனை 'வேதத் தோட்டியின் தொடக்கில் நிற்கும் துளைக்கைமால் யானை அன்னான்' எனப்பட்டது. 'விராவரும் புவிக்கெலாம் வேதமேயன இராமன்' (அயோத்தி. மந்தரை. 47); 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைகள், உன் செய்கை யன்னவைதான் சொன்ன ஒழுக்கினவோ' (ஆரணிய. 1177); வேதங்களால் வசப்படுத்தப்பட்டவன் இராமபிரான் என்க. 'உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வானென்னும் வைப்புக்கோர் வித்து' (குறள்) என்றது காண்க. தொடக்குதல்: பிணித்தல். 'கொழுங்குடர் தொடக்க' (ஆரணிய. 497); 'நினைத்துன்பத்தாற் றொடக்கினேன்' (சீவக. 579) துளைக்கைமால் யானை: 'இருகை வேழத்தி ராகவன்' (பால. பாயிரம்.); துளைக்கைமால் யானை: இலபொருளுவமை.

பி - ம். 1. வைரத்.

2. பூட்டிய.

3. பின்னர் விப்பன், பாகன்.

4. தோட்டியிற் றுவக்கி, றுடக்க; துளைக். 242

வேறு

கருடன் வந்து இராமபிரானை வணங்குதல்

2179. இத்தன்மை யெய்து மளவின்க ணின்ற
விமையோர்க ளஞ்சி யிதுபோய்
எத்தன்மை யெய்தி முடியுங்கொ லென்று
குலைகின்ற வெல்லை யதன்வாய்

அத்தன்மை கண்டு புடைநின்ற வண்ணல்
கலுழன்ற னன்பின் மிகையால்
சித்தந் நடுங்கி யிதுதீர்ப்பெ னென்ன
விருளூடு வந்து 'தெரிவான்.

(இராமபிரான்), இதன்மை எய்தும் அளவின்கண் - இந் நிலையை அடையும் போழ்தில், நின்ற - (போரினைப் பார்த்தற்கு விண்ணிடை) நின்றவர்களான, ׀ இமையோர்கள் அஞ்சி - தேவர்கள் பயங்கொண்டு, 'இது போய் எத்தன்மை எய்தி முடியும் கொல் - இந்த நிலையானது எவ்வகையிற் சென்று முடிவுறுமோ', என - என்று எண்ணி, குலைகின்ற எல்லை அதன்வாய் - மனம் நடுங்கிய சமயத்தில், அதன்மை கண்டு - (இராமபிரானுடைய) அந்த அவசர நிலையைக் கண்ணுற்று, புடைநின்ற அண்ணல்கலுழன் - (தேவர்) அருகில் நின்று கொண்டிருந்த பெருந்தகையாகிய கருட பகவான், தன் அன்பின் மிகையால் - இராமபிரான் மீது தான் கொண்டுள்ள அன்பின் மிகுதியால், சித்தம் நடுங்கி - மன நடுக்கமுற்று, இதுதீர - (அப்பெருமானுடைய) இவ்விடரைத் தீர்ப்பனென்று சொல்லி, மெள்ள - மெல்ல, இருள் ஊடு வந்து தெரிவான் - இருட்டில் வந்து தோன்றி விளங்குபவனும்; பணிவான் - இன்னபண்ணி மொழிவான் எனத் தொடர்ந்து முடியும். இச் செய்யுள் குளகம்;

கருடன் : பதினெண் கணத்துத் தேவர்களுள் ஒருவன் ஆதலின் புடைநின்ற அண்ணல் எனப்பட்டான். மற்றும் புடை நின்ற கலுழன் என்பதற்குத் திருமால் அவதரிக்கும் போதெல்லாம் உடனிற்கும் கருடன் என்றும் கொள்க,

பி - ம். 1. அளவின்கண் வந்த.

2. இதன்வாய்.

3. விசையாற், மிகையால்.

4. கலக்கி, கலங்கும்; தீர்வனென்ன, தீர்ப்பனென்ன, தெளிவான். 243

2180. அசையாத சிந்தை யரவா லனுங்க
வழியாத வுள்ள மழிவான்
இசையா விலங்கை யரசோடு மன்ன
லருளின்மை கண்டு நயவான்

விசையா லனுங்க வடமேரு வைய
மொளியால் விளங்க விமையாத்
திசையானை கண்கள் முகிழா வொடுங்க
நிறைகால் வழங்கு சிறையான்.

அசையாத - (எதனாலும்) கலக்கமுறாத, சிந்தை - (இராமபிரானுடைய) உள்ளம், அரவால் அனுங்க-நாகபாசத்தாற் கலங்கினமையால், அழியாத உள்ளம் அழிவான் - எப்பொழுதும் வருத்தமுறாத (தன்) மனம் நிலைகுலைபவனும், இசையா - நல்வழியிற் பொருந்தாத, இலங்கை அரசோடும் - இலங்காபுரி மன்னனான இராவணனோடும், (ஏனையோரிடத்தும்) அண்ணல் அருள் இன்மை கண்டு - இராமபிரானுடைய திருவருள் இல்லாமை நோக்கி, நயவான் - விரும்பாதவனும், ஒளியால் - தன் சரீரத்தின் பேர் ஒளியால், வையம் விளங்க- பூமி விளங்கவும், விசையால் - தான் வரும் வேகத்தால், வடமேரு அனுங்க - வடக்கண் உள்ள மேருமலை நிலைகெடவும், இமையா - (என்றும்) கண் இமையாத, திசையானை-திக்கு வேழங்கள், சண்கள் முகிழா ஒடுங்க - கண்களை மூடி ஒடுங்கவும், நிறைகால் வழங்கு சிறையான்-நிறைந்த காற்றினை வீசுகின்ற சிறகுகளையுடையவனும்,

கலங்காத மனத்தனான இராமபிரானும் கலங்கியது கண்டு, கருடனும் கலங்கினான்; இராவணனும் அவனைச் சார்ந்த அரக்கர் குழுக்களும் தான் ஒறுத்தற்குரியார்; அவர்களின் பொருட்டு மூன்று உலகங்களையும் அழிக்க இராமபிரான் முயலுதலைக் கருடாழ்வான் விரும்பினானில்லை. ஆகவே இலங்கை யரசோடும் ஏனையவரிடத்தும் என்று கூட்டிப் பொருள் தரப்பட்டது. விசை: கருடன் வந்த வேகம். தேவர்கணத்தொருவன் ஆதலின் யாக்கை ஒளி கூறப்பட்டது. முகிழா: செய்யாவென்னும் வாய்பாடு. 'நிறைகால் வழங்கு சிறையான் என்ற இடத்துப் பிராசம் காண்க. பலரும் நல்லுரைகள் கூறியும் தன் கோணல் மனம் திருந்தாது நின்ற இராவணனாதலின் 'இசையா அரசெனப்பட்டது. தேவர்கள் இமையாராகலின் தெய்வ வேழங்களாகிய திக்கு யானைகளும் முகிழா என்றார்.

பி - ம். 1. அயர்வால்.

2. அசையா.

3. பெயர்த்தான்.

2181. காதங்கள் கோடி கடைசென்று காணு
நயனங்கள் வாரி கலுழக்
கேதங்கள் கூர வயர்கின்ற வள்ளல்
திருமேனி கண்டு கிளர்வான்
சீதங்கொள் வேலை யலைசிந்த ஞால
மிருள்சிந்த வந்த சிறையான்
வேதங்கள் பாட வுலகங்கள் யாவும்
வினைசிந்த நாக மெலிய

கேதங்கள் கூர அயர்கின்ற வள்ளல் - துயர்கள் மிகுதியாகத் தளர்கின்ற இராமபிரானுடைய, திருமேனி கண்டு - திருமேனியை நோக்கி, கடை கோடி காதங்கள் சென்று காணும் நயனங்கள் - கோடிக்கணக்கான காதங்கள் வரையில் சென்று (அவ்விடத்துள்ள பொருள்கள் அனைத்தையும்) காணும் வன்மை வாய்ந்த விழிகளில், வாரி கலுழ - நீர் வழிய, கிளர்வான் - (அரவக் கணையை விலக்குதலில்) மனக் கிளர்ச்சி யுற்றவனும், சீதம்கொள் வேலை - குளிர்ச்சி பொருந்திய கடல், அலைசிந்த - அலைகளைச் சிதறவும், ஞாலம் இருள் சிந்த - நிலவுலகங்கள் இருளை ஒழியவும், (இருள் நீங்கப் பெறவும்), வந்த சிறையார - அடித்துக் கொண்டுவந்த இறகுகளினால், வேதங்கள் பாட - மறைகளின் சுரத்தோடு இயைந்த ஒலி எழவும், உலகங்கள் யாவும் வினைசிந்த-எல்லா உலகங்களும் பாவங்களை விடுத்து ஒழியவும், நாகம் மெலிய - (இந்திரசித்தினால் ஏவப்பட்ட) அரவங்கள் தளர்ச்சி யடையவும்.

காதங்கள் கோடி கடைசென்று காணும் நயனங்கள் : கருடன், கழுகு முதலிய புட்கள் வெகு தூரத்துள்ள பொருள்களையும் காணும் என்பர்; கருடன் விழிநீர் பெருக்கியது இராமபிரான் உற்ற துயர் கண்டென்க. கருடன் வேத வடிவன் ஆதலினாலும் அவன் இறகு அடிக்கும்கால் எழுந்த ஒலி மறை ஒலியாகவே கூறப்பட்டது. சிறையின் காற்றால் அலைகளும் அதன் ஒளியால், உலகிருளும் சிதறின என்க. தூய்மை மிக்கவன்கலுழன் ஆகலின் அவன் சிறைக் காற்று மிகவும் பவித்திரமாதலானும், அந்தக் காற்றுப்பட்ட அளவில் வினைகள் சிதறின; தமக்குப் பகைவனான கருடன் வர அரவங்கள் ஒடுங்கின; இரண்டும் சன்ம வைரிகள்

ஆகலின். கடைகோடி காதங்கள் சென்று காணும் நயனங்கள் என
மாற்றிப் பொருள் தரப்பட்டது. கடை - கண்ணின் கடை
'கடைக்கணல் நோக்கி நோக்கி யிருகணீர் கலுழப் போனன்' (யுத்த
இந்திரசித்து. 14); புள்ளரசின் திருமேனி மூன்று லட்சத்து
ஐம்பது நூருயிரம் யோசனை ஆகையாலே கண்கள் ஒன்றுக்கு
ஒன்று அகலம் கோடி காதம்.

பி - ம். 3. திசைநிந்த ! ஞாலவிருள் ; வந்து ; பிறையால். 245

2182. அல்லைச் சுருட்டி வெயிலைப் பரப்பி
யகலாசை யெங்கு மழியா
வில்லைச் செலுத்தி நிலவைத் திரட்டி
விரிகின்ற சோதி மிளிர
எல்லைக் குயிற்றி யெரிகின்ற மோலி
யிடைநின்ற மேரு வெனுமத்
தொல்லைப் பொருப்பின் மிசையே விளங்கு
சுடரோனின் மும்மை சுடர.

அகல் ஆசை எங்கும் - விசாலமான திசைகளில், எல்லாம்,
அழியா வில்லை செலுத்தி - நீங்காத ஒளியைப் பரவுவதன் மூலமாக,
அல்லை சுருட்டி - இருளை மடக்கி (அஃதிருந்த இடத்தில்), வெயிலை
பரப்பி - செம்மேனியானது ஒளியை விரிக்கவும் (வெண்கழுத்து),
நிலவை திரட்டி - ஒளியைத் தொகுத்து, விரிகின்ற சோதி மிளிர -
பரவுகின்ற சந்திரன் ஒளிபோன்ற ஒளி மிளிரச் செய்யவும், எல்லை
குயிற்றி - (தன் உடல் ஒளியால்) பகற்போதினை யுண்டாக்கி, எரி
கின்ற மோலி - பிரகாசிக்கின்ற மகுடம், இடை நின்ற - நாவலம்
தீவின் இடையே யுள்ள, மேரு எனும் அ தொல்லை பொருப்பின் -
மேரு என்று பெயர் பெற்ற அந்தப் பழமையான மலையில்,
மிசையே - மேலே, விளங்கு சுடரோனின் மும்மை சுடர - ஒளிர்கின்ற
கதிரோனைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகமாக ஒளி விடவும்.

பொன் மயமான கருடன் மேனியினின்று எழுந்த ஒளி இருளை
அகற்றும் கதிரொளியாகவும் அதன் வெண்ணிறமான கழுத்தி
லின்று எழுந்த ஒளி நிலவனைய சோதியாகவும் கூறப்பட்டன.

மேருமலை - கருடன் உடல்; அதன் சிகரத்தில் தோன்றும் சூரியன் கருடபகவான் திருமுடியில் தரித்திருந்த கிரீடம்; பாயினைச் சுருட்டி விரிப்பது. போன்று இருளைச் சுருட்டி வேயிலை விரித்து எனப் பட்டது. வில் - ஒளி. மேருமலை மிகவும் பழமைசான்ற மலையாதலின் தொல்லைப் பொருப்பு எனப்பட்டது. 'மேருஸ் ஸிகரிணுமகம்' என்பது பகவற்கிதை. மோலி சுடரோனின் மும்மை சுடர எனக் கூட்டுக.

பி - ம். 3. மிகையே; சுடரோரின். 246

2183. நன்பால் விளங்கு மணிகோடி யோடு
நளிர்போது செம்பொன் முதலாத்
தன்பா லியைந்த நிழல்கொண் டமைந்த
தழுவாது வந்து தழுவ
மின்பா லியன்ற தொரு குன்றம் வானின்
மிளிர்கின்ற தென்ன வெயிலோன்
தென்பா லெழுந்து வடபால் நிமிர்ந்து
வருகின்ற செய்கை தெரிய.

நன்பால் - நன்மையுடன், விளங்கும் - ஒளிர்கின்ற, கோடி மணி யோடு - எண்ணிறந்த இரத்தினமாலைகளுடன், நளிர்போது செம் பொன் முதலா - குளிர்ந்த மலர் மாலைகள் பொன்னரி மாலைகள் முதலான, தன்பால் இயைந்த - தன்னிடம் பொருந்தியிருந்த, நிழல் கொண்டு அமைந்த - ஒளி பெற்றுள்ள அணிகள் அனைத்தும், தழுவாது வந்து தழுவ - (தான் சிறகுகளைப் புடைத்துக்கொண்டு மிக்க விரைவுடன் வருதலின்) தனது மார்பில் படாமலும் பட்டும் பொருந்தா நிற்கவும், மின்பால் இயன்றது-மின்னலினால் உண்டான, ஒரு குன்றம் - ஒரு மலை, வானின் மிளிர்கின்றது என்ன - விண்ணில் தோன்றி ஒளிர்கின்றது என்று சொல்லுமாறு, வெயிலோன் தென் பால் எழுந்து வடபால் நிமிர்ந்து வருகின்ற செய்கை தெரிய - கதிரோன் தெற்கே உதயமாகி வடபால் உயர்ந்து வருகின்ற காட்சி நிகழவும்.

நன்பால்: பால்; இடம்; இங்கே கருடனுடைய வெண் கழுத் துக்கு உவமையாகு பெயர்; கருடன் கழுத்தில் மலர் மாலைகளும் மணி மாலைகளும் பிறவணிகளும் தொங்கின; எனினும் அவை

அது பறந்து செல்லும் சமயத்தில் ஒரு நிலையில் நில்லாதனவாய் அவன் மார்பிற் பட்டும் படாமலும் இருந்தன என்பது கருத்து. எந்தத் திருமால் கோயிலிலும், பெரியதிருவடி என்ற கருடாழ்வார், பெருமாளுக்கு நேரே அமர்வது வழக்கம். இங்கேயும் தெற்கு முக மாக இருந்த இராமபிரானுக்கு எதிரே வடக்கு முகமாக வந்து நின்றனன் என்க. பின்னிரண்டடிகள் இல்பொருள் உவமையணி. சூரியனின் கதி கிழக்கிருந்து மேற்கு நோக்கியே யாகும். இங்கு தெற்கிருந்து வடக்கண் சென்றதாகக் குறிக்கப்பட்டது.

பி - ம். 1. நளி ; நனிசால்.

2. தகையாவும் வந்து தவழ.

3. அமைந்த, அமைந்தது ; விழுகின்றதென்ன, விரைகின்றது. 247

2184. பன்னகர் சென்னி மணிகோடி கோடி
பலகொண்டு செய்த வகையான்
மின்னு லியன்ற தெனலாய் விளங்கு
மிளிர்பூண் வயங்கும் வெயில்கால்
பொன்னு லியன்ற நகையோடை பொங்க
வனமாலை மார்பு புரளத்
தொன்னுள் பிரிந்த துயர்தீர வண்ணல்
திருமேனி கண்டு தொழுவான்.

பல் நாகர் சென்னி - பல நாகங்களின் தலைகளில் உள்ள, கோடி கோடி மணி பல கொண்டு செய்த வகையான் - மிகப் பல கோடிக்கணக்கான மாணிக்கங்களைக் கொண்டு, இயற்றியுள்ள தன்மையால், மின்னால் இயன்றது எனலாய் - மின்னலினால் ஆக்கப்பட்டது என்று புகலுமாறு, விளங்கும் மிளிர் பூண் - மிக விளங்குகின்ற மிகுதியான ஆபரணங்களும், வயங்கும் வெயில் கால் - விளங்குகின்ற சூரியகாந்தி போன்ற ஒளியை உமிழ்கின்ற, பொன்னால் இயன்ற நகை ஓடை பொங்க-பொன்னாலாகிய ஒளியினை யுடைய நெற்றிப் பட்டமானது சிறந்து ஒளிரவும், வனமாலை - திருத் துழாய் மாலையானது, மார்பு புரள - மார்பிற் புரளவும், தொல் நாள் பிரிந்த துயர் தீர-நெடுங்காலமாகப் பிரிந்துநின்றதாலான துன்பம் நீங்க, அண்ணல் திருமேனி - இராமபிரானுடைய திருமேனியை, கண்டு - செய்மையிலேயே தரிசித்து, தொழுவான் - கைகுவிப்ப வனும்.

முப்பத்து முக்கோடி தேவர்களில் பன்னகரும் ஒருவகையி னர் : அப்பதம் பன்னகர் என நீண்டது. தொன்ருள் : கோசலை யின் கருவில் இராமபிரான் பொருந்திய நாள் தொட்டு என்க. கருடன் கழுத்திலிருந்த பல்வகைப் பூண்கள் மாலைகள் என்ற இவைகளின் விளக்கம் கூறப்பெற்றது. ஓடை : நெற்றிப்பட்டம். வனமாலை : துளசிமாலை. 'வாட்டமில் வனமாலை மார்பனை' (பெருமாள்திரு. 2, 1) ; பாட, சிந்த, மெலிய, (245) ; மிளிர, சடர, (246) தழுவ, தெரிய (247) ; பொங்க. புரள (வந்து), தொழுவான் (248) ; என முடிக்க.

பி - ம். 1. கோடியோடுபணி.
2. வயங்க.
3. இயைந்த. 248

2185. முடிமேல் நிமிர்ந்த முகிழேறு கையன்
முகின்மேல் நிமிர்ந்த வொளியான்
அடிமேல் விழுந்து பணியாமல் நின்ற
நிலையுன்னி யுன்னி அழிவான்
கொடிமே லிருந்திவ் வுலகேழோ டேழு
தொழநின்ற கோளு மிலனுய்ப்
படிமே லெழுந்து வருவான் விரைந்து
பலகால் நினைந்து பணிவான்.

முடிமேல் நிமிர்ந்த முகிழ் ஏறு கையன்-சிரத்தின்மீது உயர்ந்து பொருந்திய குவிதலைக் கொண்ட கரங்களையுடையவனும், முகில் மேல் நிமிர்ந்த ஒளியான் - நீல மேகத்தினும் மிக்க நீல ஒளியுடைய வனுமாகிய, அத்திருமால் அவதாரமான இராமபிரானுடைய, அடி மேல் விழுந்து - திருவடிகளில் (நெடுங்காலமாக) வீழ்ந்து, பணியா மல் நின்ற - வணங்காமல் நின்ற, நிலை உன்னி உன்னி அழிவான் - (தனது) நிலையை எண்ணிஎண்ணி மனம் உளைபவனும், கொடிமேல் இருந்து - (அப்பெருமானுடைய) கொடியின் மீதிருந்து, இ உலகு ஏழொடு ஏழு தொழ நின்ற கோளும் இலனுய் - இந்தப் பதினான்கு உலகத்தாரும் (தன்னை) வணங்கும்படி நின்ற பெருமையும் அற்ற வனுய், எழுந்து விரைந்து படிமேல் வருவான் - எழுந்து வேகமாய்ப் பூமிமீது வருகின்றவனுய், பலகால் நினைந்து பணிவான் - பன்முறை

உள்ளத்தன்போடு வணங்கி 'இன்ன பன்னி மொழிவான்' என்று வருங்கவியுடன் முடியும்.

முடிமேல் நிமிர்ந்த முகிழேறு கையன்: 'தொழு துயர் கையினன்' (அயோத்தி. கிணைகண்டு. 49); கோள்-பெருமை. கருடப்கவான் திருமாலுக்கு வாகனமும் கொடியுமாவன்.

பி - ம். 1. நிமிர்ந்து.

3. தொடிமேல். 240

## கருடபகவான் இராமபிரானைத் தேற்றித் துதித்தல்

2186. வந்தான் மறைந்து பிரிவால் வருந்து
மலர்மே லயன்றன் முதலோர்
தந்தாதை தாதை யிறைவா மறைந்து
விளையாடு கின்ற தனியோய்
சிந்தா குலங்கள் களைவாய் தளர்ந்து
துயர்கூர லென்ன செயலோ
எந்தாய் வருந்த லுடையாய் வருந்த
லென வின்ன பன்னி மொழிவான்.

'திருமால் இராமபிரானாகி அவதரித்ததுக்கேற்பத் தானும் - ஆதிசேடனாக இருத்தலைத் தவிர்த்து, ஐயன் அயோத்தியிற் பிறந்த பின்னரும் தனது இயற்கை வடிவத்தை, 'மறைந்து வந்தான்-ஒளித்து வந்தவனான இலக்குவனுடைய, பிரிவால் வருந்தும்-பிரிவினால் வருந்துபவனும், மலர்மேல் அயன்தன் முதலோர் - தாமரை மலர்மீதில் இருக்கும பிரமன் முதலானோருக்கும், தம் தாதை தாதை - அவர் தங்கள் தந்தைக்கும் தந்தையுமான, இறைவா - தலைவனே! மறைந்து விளையாடுகின்ற தனியோய் - உண்மை சொரூபத்தை மறைத்துக்கொண்டு (எடுத்த மனித உருவத்திற்கேற்ப) நடிக்கின்ற ஒப்பற்றவனே! சிந்தா குலங்கள் களைவாய் - அன்பர்களின் கவலைகளைப் போக்குபவனே! தளர்ந்து துயர் கூரல் என்ன செயலோ - (இத்தகைய பெருமைகளுடன் கூடிய நீ) மனம் மெலிந்து துன்பம் மிகுந்து நிற்றல் என்ன செய்கையோ? எந்தாய் - என் தந்தையே! வருந்தல் - வருந்தாதே, உடையாய் -

எல்லாவற்றையும் உடைமையாகக் கொண்டவனே!, வருந்தல் - வருந்தாதே', என - என்று, இன்ன பன்னி அழிவான் - பின் வரும் சொற்களை மிகுதியாகக்கூறி மனம் வருந்தினன்.

அவதார ரகசியம் முற்றும் நன்கு உணர்ந்தவன் ஆகலின் கருடாழ்வான் இராம இலக்குவர்களின் உண்மைச் சொரூபத்தைக் கூறிப் பணியலானான். வருந்தல் : அல்லீற்று வியங்கொள். இறைவன் : உடையவன் ; உயிர்கள் : உடைமை. மறைந்து விளையாடுகின்ற ; இறைவன் உருவத் திருமேனி கொள்வதும், படைத்துக் காத்து அழிப்பதும் எல்லாம் ஓர் விளையாட்டே யாகலின் 'மறைந்து விளையாடுகின்ற' எனப்பட்டது. எடுத்த மனிதவுருவிற் கேற்ப நடிக்க வேண்டுதலின் தம்பி பிரிவிற்கு இரங்குவது போன்று காட்டுகின்றான். 'அலகிலா விளையாட்டுடை யாரவர்' (பால. பாயிரம். காண்க). 'சொன்னவித் தொழில்கள் என்ன காரணம் தோற்றவென்னில், முன்னவன் விளையாட்டென்றும் மொழியலாம்' (சிவ. சித்தி. 1 : 1) ; 'இறப்பதே பிறப்பதேயெனும் விளையாட்டு வந்தனையே' (ஆரணிய. 51) என்பது விராதன் துதி; பல்லுயிர்களின் கவலைகளை யெல்லாம் போக்கியருளும் நீயே இங்ஙனம் கவலுதல் பொருந்துமோ என்றான் என்க. 'வந்தாய் மறைந்து' என்பதற்கு திருவாய்மொழிப் பொருளினால், நித்திய சூரிகட்கு மறைந்து தூமப் புகையில் ஒளித்து வந்தாய் என்றது காண்க.

பி - ம். 1. வந்தாய், வருந்தியயர்வாய்.
2. எந்தை, பிறந்து, மறந்து, விளையாடுகின்ற விறைவா. விளையாடுகின்ற ரவிராய்.
4. மொழிவான்.

250

2187. தேவாதி தேவர் பலராலு முந்து
திருநாம மோது செயலோய்
மூவாதெ நாளு முலகேழொ டேழு
மரசாளு மேன்மை முதல்வா
மேவாத வின்ப மவைமேவி மேவ
நெடுவீடு காட்ட முடியாய்
ஆவாய் வருந்தி யழிவாய்கொ லாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'தேவர் அதிதேவர் பலராலும் - தேவர்கள் அவர்களின் உயர்ந்த தேவர்கள் என்ற பலராலும், முந்து திருநாமம் ஓது செயலோய் - சிறந்த திருப்பெயர்களைச் சொல்லி வழுத்தும்படியாக உள்ள செயல்களுடன் கூடினவனே! எ நாளும் மூவாது - எக்காலத்தும் மூப்புருவம் உறாது, உலகு ஏழொடு ஏழும் - பதினான்கு புவனங்களையும், அரசு ஆளும் மேன்மை முதல்வா - ஆட்சி புரியும் சிறப்பு வாய்ந்த ஆதிமுதல்வனே! மேவாத இன்பம் அவைமேவி - (உன் அடியார்கள்) பிறரால் எளிதில் அடையப்பெறாத இன்பங்களைப் பெற்று, (பின்னர்) மேவ-(பரமபதத்தில் நின்னைச்) சார்ந்தாராக, நெடுவீடு காட்ட - விசாலமான முத்தி உலகினை அவர்கட்குக் காட்டற்கு, முடி ஆய் ஆவாய் - முதல் தலைவனாக விளங்குபவனே! (அத்தகைய மேம்பாடுடைய நீ), வருந்தி அழிவாய் கொல் - மனம் உளைந்து தளரக் கடவையோ? இ அதிரேகம் மாயை அறிவார் ஆர் - (உனது) இந்தப் பிரமாதமான மாய்யையை அறியவல்லவர் யாவர்?

தேவாதிதேவர்: நித்ய சூரிகளுமாம். இங்குத் திருமாலின் பரத்வம் கூறப்பட்டதென்பர். அதிரேகம்: மிகுதி என்ற பொருள் தரும் வடசொல். எந்நாள்: எ நாள் எனத்தொகுத்தது. தேவர் அதிதேவர் என்றது. முறையே பதமுத்தி பரமுத்திகளை அடைந்தோரைக் குறிக்கும்; இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமிலின்பத்தழிவில் வீடும் என்ற இடத்து இவை முறையாகக் கூறப்பட்டமை காண்க. அந்தமில் இன்பத்தழிவில் வீடு: 'நசபுனரா வர்த்ததே நசபுனராவர்த்ததே' என்று எந்த இடம் சென்றால் மீட்டும் பிறந்திறக்கும் உலகத்துக்கு வருவதின்றோ அந்தப் பரமபதம் என்க. மூவாது: 'சாவா மூவாப் பேராடு' (கல்வெட்டு). மூவா: மூத்த என்னும் பெயரெச்சத்தின் எதிர்மறையடுக்கு; 'எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா' (தொல். வினை. 39) என்றது காண்க.

பா - ம். 1. ஆதி, செயலால்.

2. மூவாதவாயு, மூவாதேநாளும், எம்மை, முதலால்.

3. மேவி மேவி, கண்டு முடியா, கண்டு முடியார்.

4. அவர்.

2188. எழுவா யெவர்க்கு முதலாகி யீரோ
டிடையாகி யெங்கு முளையாய்
வழுவாத வர்க்கும் வரமீய வல்லை
யவரால் வரங்கள் பெறுவாய்
தொழுவா யுணர்ச்சி தொடராத தன்மை
யுருவாய் மறைத்து துயரால்
அழுவா யொருந்த னுளைபோலு மாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'எவர்க்கும் - எல்லா உயிர் வர்க்கங்கட்கும், முதலாகி - மூல காரணமாகியும், ஈறோடு - அழிக்கும் காரணமாகியும், இடை ஆகி - இடை நின்று காக்கும் காரணமாகியும், எழுவாய் - வியூகாவதாரம் கொண்டு முளைப்பாய்; எங்கும் உளையாய் - எல்லா இடங்களிலும் பரவி நின்று, வழுவாது - தவறாமல், அவர்க்கும் - வழிபடுவோர்கட் கெல்லாம், வரம் ஈய வல்லை - (அவரவர்கள் விழைந்த) வரங்களைத் தரும் வன்மை யுடையாய்; (இங்ஙனமாகவும்), உணர்ச்சி தொடராத தன்மை உருவாய் - முற்றுணர்வு கொள்ளப்பெறாத இயல்பினை யுடைய மனித வடிவினை ஏற்று, மறைந்து - (உன் உண்மைச் சொரூபத்தைக்) காந்து நின்று, தொழுவாய் - (உன்னினும் கீழ்ப் பட்ட தேவதாந்தரங்களை) வணங்கி, அவரால் - அவர்களிடத்து, வரங்கள் பெறுவாய் - (வேண்டும்) வரங்களைப் பெறுவாய்; துயரால் அழுவாய் - துன்பத்தினால் வருந்துவாய்; ஒருத்தன் உளைபோலும் - (இவ்வாறு அகடிதகடனா சாமர்த்தியசாலியாக) நீ ஒருவன் இருக் கின்றாய் போலும்; இ அதிரேகம் மாயை அறிவார் ஆர்.

எவர்க்கும் முதலாகி; 'அடுத்த பெருந்தனி மூலத் தரும் பரமே' (ஆரணிய. 49); 'ஓயாத மலரயனே முதலாக வுளராகி, மாயாத வானவர்க்கும் மற்றொழிந்த மன்னுயிர்க்கும், நீயாதி முதற் றாதை'; 'நீயாதி பரம்பரமும்' (ஆரணிய. 53, 54). முதலடிக்கு: (ஒப்பு) : 'உலகம் யாவையும் தாமுளவாக்கலும், நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா, அலகிலா விளையாட்டுடையார்' (பால. பாயிரம்) 'மூலமேயில்லா முதல்வனே' (ஆரணிய. 1172). எழுவாய் என்றது திருமாலின் வியூகாவதாரங்களைக் கருதி; பரிபாடல். 3, 80-82. வரி களும் அவற்றிற்குப் பரிமேலழகர் உரைக்குறிப்பும் காண்க.

எங்கும் உளையாய்; யுத்த. 250:253 ; வரமீய வல்லே; பெருமானுக்கு வரதன் என்ற பெயருண்மை காண்க. இச்செய்யுட்கண் இறைவனுடைய பரத்வம், வியூகத்வம், அந்தர்யாமித்வம், விபவம் என்ற அனைத்தும் கூறப்பட்டிருத்தல் உய்த்துணர்க. முத்தொழில்களுமியற்றி அடியார்க்கு அருள் வழங்குவது வியூகநிலே. எங்கும் வியாபித்திருப்பது அந்தர்யாமி நிலே, சாதாரண மனித வடிவில் தனக்குக் கீழ்ப்பட்டவரிடத்தும் சுலபனுக நின்று தொழில் ஆற்றுவது விபவ நிலேயென்று காண்க அவரால் வரங்கள் பெறுதல்: வருணனை வழிவேண்டியது கொண்டு அறிக. முற்றுணர் வினுதல் இறைவனுடைய எண்குணங்களுள் ஒன்று எனினும், வாராதே வந்து கன்மத்துக் குட்பட்டவன் போன்று நடித்தது கொண்டு, உணர்ச்சி தொடராத தன்மையுருவாய் எனப்பட்டது. 'மானுஷ்ம் மன்யே, ராகவம் தசரதாத்மஜம்' என்ற இராமபிரான் கூற்றினையே காண்க.

பி-ம். 2. வழுவாதெவர்க்கும்

3. உறுவாய்

4. ஒருத்தனெனவாகும். 252

2189. உன்னெக்க வைத்த விருவர்க்கு மொத்தி
யொருவர்க்கு முண்மை யுரையாய்
முன்னெக்க நிற்றி யுலகொக்க வொத்தி
முடிவொக்கி னென்று முடியாய்
என்னெக்கு மின்ன செயலோ வீதென்னி
லிருவொக்கு மென்று விடியாய்
அந்நொப்ப மேகோல் பிறிதேகோ லாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

உன் ஒக்க வைத்த இருவர்க்கும் ஒத்தி-(காத்தல் தொழிலே மேற்கொண்ட) உன்னுடன் சரிசமானமாக, (படைத்தல் அழித்தலாகிய தொழில்கட்கென்று), வைத்த-நீ நிறுவிய (பிரம ருத்திரர்களாகிய) இருவருடன், (கூடி பிரமன் திருமால் சிவன் என்று எண்ணுமாறு நீ), ஒத்தி-பொருந்தி யிருக்கின்றுய்; ஒருவர்க்கும் உண்மை உரையாய்-(அவ்வாறிருந்தும்) அவ்விரு மூர்த்தி

களில் ஒருவர்க்கேனும், உண்மையை நீ சொல்கின்றுயில்லை; ஒக்க முன் நிற்றி - மும்மூர்த்திகட்குள்ளே நீ முதலாக நிற்கின்றுய்; உலகு ஒக்க ஒத்தி - உலகப் பொருள்களுடன் (எள்ளுக்குள் எண்ணெய் போல்) அந்தர்யாமியாய் நிற்கின்றுய்; முடிவு ஒக்கின் ஒன்றும் - உலகங்களை அழிக்க வேணும் என்று நீ மனமியைந்தால், அந்நிலையிலேயே உலக அழிவு நேர்ந்து விடும்; முடியாய் - உனக்கு எப்பொழுதும் அழிவில்லை; இன்ன செயல் இது - உன்னுடைய இத்தகைய செய்கைகளான இவை, என் ஒக்கும் என்னின் - எதை நிகர்க்கும் என்று கேட்பின், இருள் ஒக்கும் என்று விடியாய் - (அங்ஙனம் வினவுவாருடைய மன மானது) இருள் மண்டிய இடத்தை நிகர்க்கும் என்னுமாறு, தெளிவு படுத்தாமல் நிற்பாய்; (இங்ஙனம் உன் செய்கைகள் பிறரால் தெரியப்படாததன் காரணம்) அ நொப்பமே கொல் - (ஆராய்கின்ற) அந்தப் புத்திச் சிறுமையோ, பிறிதேகொல் - அல்லது வேறு யாதோ? இ அதிரேக மாயை அறிவார் யார்?

முன் செய்யுட்கண் முத்தொழில்களேயும் ஆற்றுபவனுகக் கூறி, இச் செம்யுட்கண் 'உன்னெக்க வைத்த விருவர்க்கும் ஒத்தி' என்றது முரணுகாதோ எனின், காப்புத்தொழிலைத் தான்கொண்டு ஏனைய இரு தொழில்களையும், அவற்றை யியற்றுபவர் அவர்களின் உருவில் நிற்கும் தாமே என்பதுபட அங்ஙனம் கூறினர் என்ப.

முத்தொழில்களும் ஆற்றுபவன் திருமாலே என்று இங்குக் கூறப்பட்டது. சைவர்கள் சிவபரத்வம் கூறுபவராய், முத்தொழில் களையும் சிவபிரானுக்கேற்றி 'உரைத்தவித் தொழில்கண் மூன்றும் மூவருக்குலகமோத வரைத்தொரு வனுகே யாக்கி வைத்தில் லென்னை யென்னின், விரைக்க மலத்தோன் மாலுமேவலான் மேவி ஞேர்கள். புரைத்ததிகார சத்தி புண்ணிய நண்ணலாலே' என்று கூறுவர். (சிவ. சித்தி. 2 : 34).

பி - ம். 2. உலகொக்க நிற்றி; முடிவத்தில்; என்றும்; முடிவாய்.

3. என்ன; விடியா.

4. அன்றெப்பம்.

2190. வாழு ளளித்தி முடியாமல் நீதி
வருநாளு நிற்றி மறையோய்
பேணு யுனக்கோர் பொருள்வேண்டு
மென்று பெறுவா னருத்தி பிழையாய்
ஊணு யுயிர்க்கு முயிராகி நிற்றி
யுணர்வாய பெண்ணி னுருவாய்
ஆணுகி மற்று மலியாகி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'மறையோய் - வேதங்களால் புகழப்படுவோனே! வாழ்நாள் அளித்தி - உலகிலுள்ள உயிர்கள் அனைத்திற்கும், அவரவர் வினைக்கேற்றபடி வாழ்நாளை அளிக்கின்ருய்; நீதி முடியாமல் - நீதி-அழிவுருது, (இயல்பாகவே), வருநாளும் நிற்றி - எதிர்காலத்தும் நிற்கின்ருய்; உனக்கு ஓர் பொருள் வேண்டும் என்று பேணய் - உனக்கு ஓர் பொருள் வேண்டும் என்று விரும்புகின்ருயில்லை; பெறுவான் அருத்தி பிழையாய் - (உனது அடியார்கள் அடைதற்கு) இச்சிக்கும் பொருளைத் தவருமல் கொடுப்பாய்; ஊண் ஆய் - உண்டற்குரிய பொருளாகியும், உயிர்க்கும் உயிராகி - உயிர்கட் கெல்லாம் உயிராகியும், உணர்வு ஆய - காட்சியறிவிற்கு இலக்கா இன்ற, பெண்ணின் உருவாய் - பெண் வடிவமாகியும், ஆண் ஆகி - ஆண் வடிவமாகியும், மற்றும் - மேலும், அலி ஆகி - அலி வடிவ மாகியும், நிற்றி - நிற்கின்ருய்; இ அதிரேகம் மாயை அறிவார் ஆர்?

கரும வசத்தால் பிறக்கும் உயிர்கட்குத் தனுகரண புவன போகாதிகளை யீந்து, அவ்வவ்வற்றின் பரிபாகத்துக்கேற்ப அவை கட்கு வேண்டுவன அளித்தல். அழிவின்மை, வேதப் பிரதி பாதித்யனுக நிற்கும் தன்மை, எல்லாப் பொருள்களையும் உடை யவனுயிருத்தல், அந்தர் யாமித்வம், எல்லாப் பொருள்களுமாகி நிற்றல் என்ற இறைவனுடைய அனைத்துப் பண்புகளும் இச் செய்யுட்கண் குறிக்கப்பட்டமை காண்க. ஆணுகி, மற்றும் அலியாகி, 'அச்சன் ஆண் பெண் அலி யாகாசுமாகி' (திருவாச. திருச்சத: 29).

பி - ம். 1. நிதிவழுவாமளிற்றி, நிற்றி வருநாளிறந்நி.
8. பேணு; பிடியாய்.
4. ஆணுநி; மற்றை.

2191. தானந்த மில்லை பலவென்னு மொன்று
தனியென்னு மொன்று தவிரா
ஞானந் தொடர்ந்த சுடரென்னு மொன்று
நயனந் தொடர்ந்த வொளியால்
வானந் தொடர்ந்த பதமென்னு முன்னை
மறைநாலின் வந்த முறையால்
ஆனந்த மென்னு மயலென்னு மாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'உன்னை - உனது உண்மை வடிவினைப் பற்றி, மறை நாலின் நான்கு வேதங்களிலும், ஒன்று - ஒரு சுருதி, தான் - (திருமாலின் வடிவு) தான், அந்தம் இல்லை பல என்னும் - முடிவின்றி பலபடியாக இருக்கும் என்று முழங்கும்; ஒன்று - பிறிதொரு, சுருதி தனி என்னும் - ஏகமூர்த்தி என்று சொல்லும், ஒன்று - ஒருசுருதி, தவிரா ஞானம் தொடர்ந்த சுடர் என்னும் - நீங்காத ஞானம் பொருந்திய ஒளி மயமானது என்று சொல்லும்; ஒன்று-வேறொரு சுருதி, நயனம் தொடர்ந்த ஒளியால் - புறக் கண்ணுக்குப் புலனா கின்ற ஒளி வடிவில், வானம் தொடர்ந்த பதம் - (சூரியன் வடிவில்) ஆகாயத்தைப் பொருந்திய இடமாகக் கொண்டுள்ளது என்று சொல்லும்; ஒன்று-பின்னும் ஓர் சுருதி, வந்த முறையால் ஆனந்தம் என்னும் - வந்த முறைப்படியே ஆனந்த மயம் என்று சொல்லும்; (மற்றொன்று) - கெட்டாது, அயல் என்னும் - மனம் வாக்குக் கோசரம் என்று சொல்லும்; இவ் அதிரேகம் மாயை அறிவார் ஆர்!

நான் மறை என்ற வழக்கிருப்பினும் வேதங்கள் அனந்தம்; 'அநந்தாவை வேதாகா' என்பது வான்மீகம். இராவணனை 'ஐயன் வேதம் ஆயிரம் வல்லான்' என்பர் கம்பநாடர். சுருதி என் பதற்குக் கேட்கப்படுவது என்பது பொருள்; இது கேள்வி எனவும் படும். வேதங்களும் உபநிடதங்களும் இறைவன் குணுதிசயங் களையும் செயல்களையும் ஒருபடித்தாகக் கூறவில்லை, ஏனெனில் அவைகட்கும் அவன் முழுத்தன்மையும் அறியும் ஆற்றலில்லையாத லின். உலக சிருட்டிக்கிரமத்தைப் பற்றிக் கூறுங்கால் ஒவ்வொரு சுருதி ஒவ்வொருவிதமாகக் கூறுகின்றது. இங்ஙனம் மறைகளே

உணர்ந்து கூற வியலாமலிருக்கும்போது, பிறர் யார் பெருமானுடைய மாயா விலாசத்தை யறிதல் கூடும் என்பது கருத்து. உபநிடதங்கள் பரப்பிரமத்தின் சொரூபத்தை அன்னம், பிராணன், மனம், விஞ்ஞானம் என்று படிப்படியாகக் கூறி இறுதியில் ஆனந்தம் என்று கூறியமையின், 'வந்த முறையால் ஆனந்தம்' எனப்பட்டது. மற்றும் இச் செய்யுட்கண் குறித்த ஆழ்ந்த தத்துவப் பொருள்களைச்சிறந்த வேதம் வல்லார்பால் கேட்டுணர்க.

பி-ம். 2. நயனம் கடந்த வொளியா.

3. துறந்த; பதமென்று மொன்று; மறைநாலு மந்தமறியாது.

4. ஆனந்தமென்று மறிவென்றும் 255

2192. மீளாத வேத முடிவின்கண் நின்னை
மெய்யாக மெய்யி னினையும்
கேளாத வென்று பிறவென்று சொன்ன
கெடுவார்கள் சொன்ன கடவான்
மாளாத நீதி யிகழாமை நின்க
ணபிமான மில்லை வறியோர்
ஆளாயும் வாழ்தி யரசாள்தியாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

மீளாத - தாம் கூறுவதினின்றும் மாறாத, வேதம் - நான்மறைகள், முடிவின்கண் - அவற்றின் முடிவில் (உபநிடதங்களில்), நின்னை - உன்னை, மெய் ஆக - உண்மைப் பொருளாக, மெய்யின் நினையும் - (தமது) மெய்யுணர்வால் ஆராய்ந்து நிற்கும்; (அவ்வாறாகவும்), கேளாத என்று - கேட்டிராதவை என்றும், பிற என்று - இவை வேறு காரணம் பற்றியவை என்றும், (இவை அனைத்தும் கட்டுக்கதை என்றும்) சொன்ன, வறியோர் - அறிவால் வறுமைப் பட்டவர், சொன்ன கடவால் - தாம் பகர்ந்த சொற்கட்கு ஏற்ப, மாளாத நீதி இகழாமை - என்றும் பழுதுறாத (சாத்திரங்களில் கூறப்பெற்ற) ஒழுங்கு கெடாத வண்ணம், நின்கண் அபிமானம் - உன்னுடைய திருவருட் பார்வையின் (என்றும்) எய்தப் பெறுமல், கெடுவார்கள் - நரகத்தில் வீழ்ந்து அழிவார்கள்; (சாசுவதப் பொருளாகிய நீயோ) ஆள் ஆயும் வாழ்தி - (பக்தர்களுக்கு ஏவலாள்

போன்று சர்வ சுலபனாய் வாழ்கின்றாய், அரசு ஆள்தி - அரசு புரிதலும் செய்கின்றாய்; இவ் அதிரேகம் மாயை அறிவார் ஆர்?

மீளாத வேதம்; 'நால் வேதநெறி திரியினும்' என்றபடி மறைகள் பிறழா என்பது குறிக்கப்பட்டது. இங்கு அவைதிக மதங்கள் கண்டிக்கப்படுகின்றன. 'பரமேது வினை செயும் பயபதியேதுபசுவேது பாசமேது, பத்தியே தருணின்ற முத்தியே தருளேது பாவ புண்ணியங்களேது' என்று கூறும் நாத்திகக் கயவர்களுக்கு அதோகதிதான் என்று கூறுகின்றனர். பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்க்கரிய வித்தகன் பெருமான், என்பது 'ஆளாயும் வாழ்தி' என்ற தொடரால் விளக்கப்பட்டது. இறைவன் சௌலப்யத்தை, திருவாய்மொழி 1:3; 1:6; 1:7; 1:10; முதலியவற்றிற் காண்க. ஆளுதி என்பதில் உகரச்சாரியை தொக்கு ஆள்தி என நின்றது.

பா-ம். 1. நின்றவர மெய்யின் வினையின்.

2. கேளாகி நிற்றி, கேளாக நிற்றி; வேறு பேசும்; கடவாய்.

3. நிறி யிகழாமல்; உள்ள அறிவோர்க்கு.

4. ஆளாயுமாதி. 258

2193. சொல்லொன் றுரைத்தி பொருளாதி தூய
மறையுந் துறந்து திரிவாய்
வில்லொன் றெடுத்தி சரமொன் றெடுத்தி
மிளிர்சங்க மங்கை யுடையாய்
கொல்லென் றுரைத்தி கொலையுண்டு நிற்றி
கொடியாயுன் மாயை யறியேன்
அல்லென்று நிற்றி பகலாதி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'ஒன்று சொல் உரைத்தி - ஒப்பற்ற சப்த வடிவாகச் சொல்லப்படுகின்றாய்; பொருள் ஆதி - (அச் சொற்களின்) பொருளுமாகின்றாய்; தூய மறையும் துறந்து திரிவாய் - தூய்மையான வேதங்களுக்ும் அப்பால்பட்டு உலவுகின்றாய்; (பகைவரை அழிக்கும் பொருட்டு), வில் ஒன்று எடுத்தி - வில் ஒன்றை ஏந்துகின்றாய்; சரம் ஒன்று எடுத்தி - அதற்கு ஓர் அம்பினையும் கைக் கொள்கின்றாய்;

மிளிர் சங்கம் அம்கை உடையாய் - (தனது) ஒலியினாலேயே விரோதிகளையழிக்கவல்ல) ஒளிர்கின்ற சங்கினை அழகிய கரத்தில் உடையாய்; கொல் என்று உரைத்தி -(அரக்கர் பகைவனாய் நின்று), கொல் என்று கூறுகின்றாய்; கொலை உண்டு நிற்றி - (அரக்கராய் நின்று) வதையுண்டும் கிடக்கின்றாய்; கொடியாய் - (இவ்வாறு) முரண்பட்டவனே! உன் மாயை அறியேன் - (எந்த வகையிலும்) உனது மாயையை உணர்கின்றேனில்லை: அல் என்று நிற்றி - இரவாகவும் நிற்கின்றாய்; பகல் ஆதி - பகலும் ஆகின்றாய்; இங்ஙனம் ஒன்றுக்கொன்று மாறான இரட்டைப் பொருளாய் விளங்குகின்ற உனது) இவ் அதிரேகம் மாயை அறிவார் யார்?

யாவும் கடவுள் சொரூபமே யாகலின், சொல்லாகவும், பொருளாகவும், கொலை புரிபவனாகவும், கொலையுண்பவனாகவும், பகலாகவும் இரவாகவும் நிற்கின்றாய் என்றான்; இங்கே, 'எல்லா உருவமுமாய் நின்றக்கா லிவ்வுருவம், வல்லே படைத்தால் வரம்பின்மை வாராதோ'; 'பேரை யொரு பொருட்கே பலவகையாற் பேர்த்துண்ணும், தாரை நிலையை தமியை பிறரில்லை, யாரைப் படைக்கின்ற தியாரை யளிக்கின்ற, தாரை யழிக்கின்ற தையா வறியேமால்' யுத்த. 287; 288-ம் அவற்றின் உரைக் குறிப்பும் காண்க. இதற்கு 'யஏனம் வேத்தி ஹந்தாரம் யஸ்சைநம் மந்யதே ஹதம், உபௌ தௌ நவிஜாநீதோ நாயம் ஹஸ்தி நஹந்யதே' (பகவத்கீதை. 2 : 19). என்று கூறப்பட்ட ஆன்ம வியல்பு அறியத்தகும். சொல்லென்றுணர்த்தி பொருளாதி; 'சொல்லாகிச் சொல்லுக்கோர் பொருளுமாகி' (தேவா. 1227 : 3); 'அனைத்து நீ, யனைத்தினுட் பொருளு நீயாதலின, உறைவு முறைவது மிலையே' 'உண்மையும், மறவியல் சிறப்பின் மாய மாரனையே.' (பரி. 3 : 68-70).

பி - ப். 1. சொல்லென்று நிற்றி; அறிந்து தொடர.

2. சங்கை.

3. மாயம்; அறியார்;



2194. மறந்தாயு மொத்தி மறவாயு மொத்தி
மயலாரும் யானு மறியேம்
துறந்தாயு மொத்தி துறவாயு மொத்தி
யொருதன்மை சொல்ல வரியாய்

பிறந்தாயு மொத்தி பிறவாயு மொத்தி
பிறவாமல் நல்கு பெரியோய்
அறந்தா னிறுத்த லரிதாக வாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'பிறவாமல் நல்கு பெரியோய் - (அடியார்கள் மீட்டும்) பிறவா வண்ணம் (அவர்கட்குப் பரமபதம்) அளிக்கின்ற பெருமையனே! (நீ) மறந்தாயும் ஒத்தி - (உனது உண்மைச் சொரூபத்தை) மறந்தவன் போன்றும் காணப்படுகின்ருய்; மறவாயும் ஒத்தி - (அவதரித்தற்கேற்ப) தீயோரை ஒழிக்கும் நினைவுடன் இருத்தலின் உன் சுயவடிவை மறவாதவன் போன்றும் காணப்படுகின்ருய்; மயல் - உனது மாயாவிலாசத்தை, ஆரும் - (உலகத்தவர்) யாவரும், யானும் - நானும், அறியேம் - அறியும் ஆற்றல் உடையேம் அல்லோம்; துறந்தாயும் ஒத்தி - (இயல்பாகவே பாசப்பற்றின்றி இருத்தலின்) துறவி போன்றும் காணப்படுகின்ருய்; துறவாயும் ஒத்தி - (அரவக்கணையால் கட்டுண்டவரைக்கண்டு அங்கலாய்த்தலின்), அகப்பற்றுப் புறப்பற்றுள்ளவன் போலும் இருக்கின்ருய்; ஒருதன்மை சொல்ல அரியாய் - (இங்ஙனம் ஒன்றிற்கொன்று மாறுபட்ட இயல்புகளை நீ கொண்டிருத்தலின்) ஒரு வகையில் அடக்கிக் கூறற்கு அரியவனுயுள்ளனை; அறம் தான் நிறுத்தல் அரிது ஆக - தருமத்தைத் தானுன தன்மையில் (வைகுண்டத்தில் இருந்துகொண்டே) நிலைபெற நிறுத்தக் கூடாமையின், (அதனை நிறுவுவதற்காகப் பூமியின் வந்து) பிறந்தாயும் ஒத்தி - (ஏனைய சீவராசிகள் போன்று) பிறந்தவன் போன்றும் உள்ளாய்; பிறவாயும் ஒத்தி - (மற்றும் உலகத்தினர் போன்று கன்மம் காரணமாகத் தோன்ருமையின்) பிறவாதவன் போன்றும் காணப்படுகின்ருய்; இவ் அதிரேகம் மாயை அறிவார் ஆர்.

இச்செய்யுளும் முரண் விளைந்தழிவணி. ஒரு தன்மை சொல்ல வரிதால்; 'இவர் தாதையிலங்கு பூண்மா அல், தெருள நின்வர வறிதல், மருளறு தேர்ச்சி முனைவர்க்கும் அரிதே' (பரி. 1; 28-30) பிறந்தாயுமொத்தி; 'பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோரிலையே' (பரி. 5, 72). அறந்தானிறுத்தல் அரிதாக; பகவான் ஸ்ரீ; பதியாய் இலக்குமி சமேதனுய்த் தானுன தன்மையில் ஸ்ரீவைகுண்டத்தில் இருந்தே தருமஸ்தாபனம் செய்தல் அரிதென்று கருதி, அவ்வப் பொழுது உருவத் திருமேனி கொள்பவன்; இதுவே அவதார

ரகஸ்யம்; 'பரித்ராணய சாதூநாம் ,விநாசாயச துஷ்க்ருதாம், தர்ம சம்ஸ்தாப ஞர்த்தாய சமபவாமி யுகே யுகே' (பகவற்கீதை) என்றது காண்க. 'அறந்திறம்பு மென்றையனயோத்தியிற், பிறந் றபின்பும்' (அயோத்தி. நகர் நீ. 223). 'அறநெறி நிறுத்த வந்த இறை' (கிட்கிந்தா. 360). இக்கருத்தைக் கம்பநாடர் இக் காப்பி யத்தில் பல இடங்களில் பல பாத்திரங்களின் வாயிலாக வெளியிட் டுள்ளனர். இந் நூலகப் பதிப்பான கிட்கிந்தா காண்டம்; 360-ம் அதன் உரைக் குறிப்பும் காண்க. பிறவா மனல்கும் பெரியோய்; சன்மமு மரணமுமின்றித் தீருமே, இம்மையே விராமவென்றிரண் டெழுத்தினல்' (பால. பாயிரம்).

பி-ம். 1. மயலாகி மற்றெவ்வினையும்

2. சொல்ல லரிதால்

3. அறிதரும் அரிதாகி. 258

2195. வினைவர்க்க முற்று முடனே படைத்தி
யவையெய்தி யென்றும் விளையா
நினைவர்க்கு நெஞ்சி னுறுகாம முற்றி
யறியாமை நிற்றி மனமா
முனைவர்க்கு முத்தி யமரர்க்கு மற்றிம்
முழுமூட ரென்னு முதலோர்
அனைவர்க்கு மொத்தி யறியாமை யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'வினைவர்க்கம் முற்றும்-(உயிர்களின் புண்ணிய பாவ வடிவங் களான இருவினைகளின் தொகுதிகட்கெல்லாம் (ஏற்ப), உடனே - ஒருசேர, படைத்தி - (அவ்வுயிர்களை) உடல் ஏற்கச் செய்கின்றாய்; நினைவர்க்கு - உன்னை ஒருமுகமாகக் கருதுபவர்க்கு, அவை எய்தி என்றும் விளையா - அவ்விருவினைகள் (தம்மை) அணுகி எப் பொதும் பயனை விளைக்காதபடி புரிந்து, நெஞ்சின் உறுகாமம் - (அவர்கள்) உள்ளத்தின்கண் நிலவும் (எந்தவகையான) ஆசையை யும், முற்றி - நிறைவேறச் செய்து, அறியாமை - (நீயே மனோ ரதத்தைப் பூர்த்தி செய்பவன் என்பது புறத்துத்) தெரியாதவாறு மனம் ஆ நிற்றி - அவரது மனமாகவும் (கரந்து) நிற்கின்றாய்; முனைவர்க்கும் - முனிவர்கட்கும், முத்தி அமரர்க்கும் - முத்தி

உலகத்துள்ள நித்திய சூரிகட்கும், மற்றும் - மேலும், முதலோர்-முதல் மூர்த்தியரான பிரம உருத்திரர், முழுமுடர் - முழுமூடர், என்னும் - என்கின்ற, இ அனைவர்க்கும் - இந்த எல்லோருக்கும், அறியாமை - அறியவியலாம லிருத்தலாகிய, பண்பில் ஒத்தி - தன்மையில் ஒத்திருக்கின்றாய்; இ அதிரேகம் மாயை அறிவார் யார்.

வினைவர்க்கம்: நல்வினை தீவினைகள்; ஆகாமியம் சஞ்சிதம் பிரார்த்தமுமாம்: இந்தவினையே பிறப்பிறப்புக்குக் காரணம் 'வினைப்போகமேயுறு தேகங்கண்டாய் வினைதா னொழிந்தாற், றினைப்பொ தளவுநில் லாதுகண்டாய்' (பட்டினத்தார்.) இந்தவினைகள் அநாதி என்ப. நல்வினை தீவினை என்ற இரண்டும் பிறப்பிற்குக் காரணம் ஆகலின், அவற்றை முறையே பொன் விலங்கும் இருப்பு விலங்குமாகப் பகர்வர். சூக்கும உருவில் ஆணவ மலத்தாற் பிணிப்புண்டு கிடக்கும் உயிர்கள், பூவுலகாகிய கன்ம பூமியில் வந்து, தாம் தாம் செய்துள்ள வினைகளைத் துய்த்து ஒழித்தற்கு, இறைவனே உயிர்கட்குத் தனுகரண புவன போகங்களை அருள்வன். உயிர்களின் பரிபாகங்கட்குத் தக வினைப்பயன்களைக் குறைத்தும் போக்கியும் அருள் புரிவன்.: உயிர்கட்குத்தேவையான இகபர சாதனங்களையும் அவர்களின் இஷ்டங்களையும் நிறைவேற்றி வைப்பவன் இறைவனே. இங்ஙனம் அருளிய போதிலும் இறைவன் செய்கையை உயிர்கள் அறிவதில்லை. மற்றும் அவைகள் வினைப்போகம் துய்க்குங்கால் துய்க்கும் ஆன்மாக்கள் உண்மை நிலை ஒன்றும் உணராதபடி, திரோபவம் என்ற மறைப்புச்சத்தியால் இறைவன் செய்கின்றான். இங்ஙனம் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்ற ஐந்தொழில்களையும் புரிவதாக நூல்கள் கூறும். உயிர்களின் இன்ப துன்பங்களை இறைவனே ஏற்றுக் கொண்டு, அவைகட்கு ஏற்ற பெற்றி நல்லது கெட்டதைப் புரிகின்றான்; ஆயினும் அவன் புரியும் அனைத்தும் அருட்செயல்களே. 'நீயறிதி யெப்பொருளும் அவையுன்னை நிலையறியா, மாயமிது என்கொலோ வாராதே வரவல்லாய்' (ஆரணிய. 55) என்றது காண்க. அவர்தம் மனமாக நிற்றி; 'இந்திரி யாணுமனஸ் சாஸ்மி' என்றது காண்க. 'என் னுனே யூனின் உள்ளமே யுள்ளத்தி

னின்ற கருவே (தேவா. 482 : 1) என வருதல் காண்க. 'நினைப் பார்கள் மனத்திற்கோர் வித்துமானாய்' (தேவா.). முனைவர்க்கு முத்தியமார்க்கும் ...., அனைவர்க்கும் ஒத்தியறியாமை; 'உணர்ந் தார்க் குணர்வரியோன்' (திருக்கோவை. 8).

பி - ம். 1. செய்தி ; ஒன்றும் ; விழையாய், பிழையாய்.

2. அறியாமல், அறிவாகி, அறிவாக, நெறியார்.

3. ஒத்தி ; என்றிம்.

4. அறியாமல். 259

2196. எறிந்தாரு மேறு படுவாரு மின்ன
பொருள்கண் டிரங்கு பவரும்
செறிந்தாரி னுண்மை யெனலாய தன்மை
தெரிகின்ற துன்ன திடையே
பிறிந்தார் பிறிந்த பொருளோடு போதி
பிறியாது நிற்றி பெரியோய்
அறிந்தா ரறிந்த பொருளாதி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'பெரியோய் - பெரியோனே! எறிந்தாரும் - (படைக்கலங்களை) எறிந்தவர்களும், ஏறுபடுவாரும் - (அவற்றால்) காயம் படுபவர் களும், இன்ன பொருள் கண்டு இரங்குபவரும் - இந்தத் தன்மையை நோக்கி மனமிரங்குபவரும், (ஆன), செறிந்தாரின் - (இங்கு) நெருங்கி யுள்ளவர்களுள், உண்மை எனல் ஆய தன்மை - (நீ) கலந்திருக் கின்ற செய்தி, உன்னது இடையே - உன்னிடத்திலே, தெரி கின்றது - (அறிவோர்க்கு) விளங்குகின்றது; பிறிந்தார் பிறிந்த பொருளோடு போதி - அறிவிலார் நீங்கியுள்ள ஞானமாகிய பொரு ளோடு, (நீயும் அவர்களை விட்டுப்) பிரிகின்றாய்; பிறியாது நிற்றி - அங்ஙனமே பிரிந்து நிற்பினும், (அவர்களிடத்தினின்று பிரியாமல்) நிற்கின்றாய்; அறிந்தார் அறிந்த பொருள் ஆதி - தத்துவ ஞானி கள் (தமது மெய்யுணர்வால்) ஆராய்ந்து தெளிந்த மெய்ப் பொரு ளாகவும் உள்ளாய்; இவ் அதிரேக மாயை அறிவார் யார்?

எறிந்தார் - படைகளை வீசிய அரக்கர்கள்; ஏறுபடுவோர் இலக்குவன் முதலானோர்; கண்டிரங்குபவர் தேவர்கள்; இவர்

அனைவோரிடத்தும் ஒரு தன்மையாகக் கலந்து விளங்குகின்றனை; என்பது முன் இரண்டடிகளின் கருத்து. அஞ்ஞானிகள் உன்னை அறியமாட்டார் எனினும் அவர்களிடமும் நீ இல்லாமல் இல்லை. அவர்கள் செய்கைகட்குச் சாட்சியாய் உள்ளனை. 'தோய்ந்தும் பொருளனைத்தும் தோயாது, நின்ற தொல் சுடரே' (ஆரணிய. 100).

பி - ம். 2. செறிந்தாய்.

3. பொருளே யளத்தி. 260

இச் செய்யுள் ஒரு பிரதியில் இல்லை.

2197. பேராயிரங்க ளுடையாய் பிறந்த
பொருடோறு நீற்றி பிரியாய்
தீராய் பிரிந்து திரிவாய் திறந்தொ
றவைதேறு மென்று தெளியாய்
கூராழி யங்கை யுடையாய்
திரண்டொ ருருவாதிகோட லுரிபோல்
ஆராயி னேது மிலையாதி யாரிவ்
வதிரேக மாயை யறிவார்.

'பேர் ஆயிரங்கள் உடையாய் - ஆயிரம் திருப் பெயர்களை யுடையவனே! பிறந்த பொருள் தோறும் - தோன்றியுள்ள பொருள்களனைத்திலும், பிரியாய் நிற்றி - நீங்காமல் விரவி நிற்கின்றாய்; தீராய் - அழிவில்லாய்; பிரிந்து திரிவாய் - பலவகை உருவத் திருமேனிகளைத் தரித்து உன் உண்மை சொரூபத்தினின்றும் திரிந்து உலவுவாய்; திறம்தொறு அவைதேறும் என்று தெளியாய் - அந்த உருவத் திருமேனி கொள்ளுங்கால் அந்தந்த இனங்கள் உன்னைத் தம்மினமென்று மயங்குவதன்றி, உனது உண்மை நிலையை அறியுமென்று தெளியப்படாதவனா யுள்ளாய்; கூர் ஆழி அம்கை உடையாய் - கூர்மையான திகிரிப் படையை ஏந்திய திருக்கரத்தை யுடையவனே! திரண்டு ஓர் உரு ஆதி - விராட்ரூபமாய்த்திரண்டு ஓர் உருவமாகின்றாய்; ஆராயின் - எண்ணி நோக்குங்கால், கோடல் உரிபோல் - வெண்காந்தள் கிழங்கை உரித்தால் உள்ளே ஒன்றும் இல்லாதவாறு போல், ஏதும் இலையாதி - ஒன்றும் விளங்காதவனா யுள்ளாய்; இவ் அதிரேகம் மாயை அறிவார் யார்?'.

போரயிரங்கள் உடையாய்; யுந்ந. 1507. யுத்ந. பிரமாத்திர : 157. பிறந்த பொருள்தோறும் நிற்றி; 'உலகெலாமாகி வேறு முடனுமாய் ஒளியாயோங்கி, யலகிலா வுயிர்கள் தத்த மாணையி னமர்ந்து செல்லத், தலைவனு யவற்றின் தன்மை தனக்கெய்த லின்றி' (சிவசிந்தி. 2:1); திறந்தொறவை தேறுமென்று தெளியாய்; மீன் ஆமை வராகம் முதலிய உருவேற்குங்கால், அந்தந்த வர்க்கங் கள் உன்னைத் தத்தம் இனம் எனக்கருதும் அன்றி, உன் உண்மை நிலையைத் தெளியமாட்டா. பார்த்தன் கண்ணபிரானை அவதார புருஷன் என்று எண்ணாது, மனிதர்களில் ஒருவனாகக்கொண்டு நின்று பின் உண்மை யுணர்ந்ததை; (பகவற்கீதை. 11:41—42)ல் காண்க. கோடல் உரிபோல் ஆராயின் ஏதுமிலை; 'உரிக்கின்ற கோடலினுந்துகந் தம்மென வொன்றுமின்றி, விரிக்குந்தொறும் வெறும் பாழாய் விடும்' என்றது காண்க. கோடல் உரி; கோடற் கிழங்கை உரிக்க உரிக்க, உள்ளித்தோடு போறறேடாகி யிருக்கு மன்றி, உள்ளே ஒன்றுமிராது' அப்படி உன்னை அருவம் என்றார்க்கு அருவமாகி நிற்பை, என்க. மேலேகண்ட பதினொரு செய்யுட்கள், ஆர் இவ்வதிரேக மாயை யறிவார் என்ற மகுடத் துடன் வந்தன.

பி-ம். 1. பெரியோய்; பிறிந்து, பிறந்து.

2. நிராய் பிறந்தவை தேயும்; ஒன்று; நிறையாய்.

3. உருவாகி.

261

## கருடன் இராமபிரானை நெருங்குதல்

2198. என்றின்ன பன்னி யழிவா னெறிந்த
வெறிசோதி கீற விருள்போய்ப்
பொன்றுன்னி யன்ன வெயில்வீசு கின்ற
பொருள்கண்டு நின்ற புகழோன்
நின்றுன்னி யுன்னி யிவன்யாவ னென்று
நிமிர்கின்ற வெல்லை நிமிரச்
சென்றுன்னு முன்ன ருடனுயி ருனிவ்
வுலகேழு மூடு சிறையான்.

என்று - என்று, இன்ன பன்னி - இத் தன்மையனவான தோத்திரங்களைக் கூறி, அழிவான் - மனமழுங்கிய கருடாழ்

வான், (தான் வேகத்தோடும் வருங்கால், எறிந்த - வீசிய, எறி - பிரகாசிக்கின்ற, சோதிகிற - (அவனுடைய உடல்) ஒளி கிழித்து அழித்தலால், இருள் போய் - இருட்டு நீங்கி, பொன்துன்னி அன்ன - பொன்னின் ஒளி அமைந்தாற்போன்ற, வெயில் வீசுகின்ற பொருள் - சிவந்த ஒளி பரவுகின்ற தன்மையை, நின்ற புகழோன் கண்டு - நிலைபெற்ற கீர்த்தி யுடையவனை இராமபிரான் கண்ணுற்று, நின்று - நிதானித்து, 'இவன் யாவன் - இவன் யாரா யிருத்தல் கூடும்' என - என, உன்னி உன்னி - எண்ணி எண்ணி, நிமிர்கின்ற எல்லை - தலையுயர்த்தி நிற்கின்ற போழ்தில், இ உலகம் ஏழும் மூடு சிறையான் - இந்த ஏழுலகங்களையும் மறைக்கத்தக்க சிறகுகளை யுடையவனை அக் கருடன், நிமிர சென்று - நேராகத் தாவிச் சென்று, உன்னும் முன்னர் உடன் ஆயினன் - நினைக்கும் அளவிற்குள் அப்பிரானிடம் சேர்ந்தான்.

எறிந்த எரிசோதி ; 'வையம் ஒளியால் விளங்க' (யுத்த. 2180) மற்றும் ; 2182, 2183-ம் காண்க. கருடன் பொன்னிறமாதலின் ; பொன் துன்னியன்ன வெயில் வீச எனப்பட்டது.

பி - ம். 1. நிறத்தவெரி ; சிறியிருளை.

3. யாவனென்று நிறைகின்ற.

4. உன்னி முன்னம்.

262

## கருடன் அணுகியதால் நாகபாசம் நீங்குதல்

2199. வாசங் கலந்த மறைநாள நூலின்
வகையென்ப தென்னை மழையென்
றுசங்கை கொண்ட கொடைமீளி யண்ணல்
சடையன்றன் வெண்ணெ யணுகும்
தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொ
லறிவாள ரென்றிம் முதலோர்
பாசங் கலந்த பசிபோ லகன்ற
பதகன் றுரந்த வுரகம்.

பதகன் துரந்த உரகம் - பாதகன் ஆன இந்திரசித்து விடுத்த நாகாத்திரம், மழை என்று ஆசங்கை கொண்ட கொடை - மேகம் என்று ஐயுறுதற்கிடமான கொடையினை யுடைய, மீளி அண்ணல்

சடையன் தன் - பெருமையிற் சிறந்த சடையப்ப வள்ளலுடைய, வெண்ணெய் அணுகும் தேசம் - வெண்ணெய் என்ற சொல் முன்னே அமையப்பெற்ற, ஊர்க்கு - திருவெண்ணெய் நல்லூர்க்கு, கலந்த - சென்று அடைந்த, மறைவாணர் - வேதம்வல்ல அந்தணர் களும், செம் சொல் அறிவாளர் - செவ்விய சொற்களாலமைந்த நூலறிவிற் சிறந்த புலவர்களும், என்று இ முதலோர் - என்று கூறும் இவர் முதலாயினரது, பாசம் கலந்த பசிபோல் - சுற்றத் தார்கள் அடைந்துள்ள பசி (அந்த வள்ளல் கொடையால் அகல் வது) போன்று, அகன்ற - இருந்த இடம் தெரியாமல் மறைந்தன; (அங்ஙனம் துண்டுபட்ட நாகங்களை), வாசம் கலந்த - நறுமணம் பொருந்திய, மரைநாளம் நூலின் வகை என்பது என்னை - தாமரை யின் தண்டிற்குள் உள்ள (மெல்லிய) நூலின் தன்மையை அடைந் தன என்று கூறுவதில் என்ன சிறப்பு?

அந்த நாகபாசம், இருந்த இடமும் தெரிய ஒண்ணாதபடி முற் றும் அற்றது ஆகலின், தாமரைத் தண்டின் நூலும் உவமை யாகாது என்க. உபகார ஸ்மிருதி என்ற வகையில் ஆசிரியர் தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளலைப் புகழ்ந்துள்ளார்; ஏர் எழுபது. 18, தக்க. 236, பால. காப்பு. 5; வேள்வி. 1; மிதிலைக் காட்சி. 73; இந் நூலகப் பதிப்பு; கிட்கிந்தா காண்டம் 828-வது செய்யுட்கண் வரைந்துள்ள உரைக்குறிப்புக் காண்க. சடையன் தன் வெண்ணெய்: திருவெண்ணெய் நல்லூர்; இது இப்பொழுது தென் ஆற்காட்டில் இப் பெயருடன் திகழும் புகைவண்டி நிலையம் அன்று; மாயூரத்தை அடுத்த குற்றாலத்தருகில் உள்ள சிற்றூர் என்பர் அறிஞர். தேரழுந்தூர், ஆசிரியர் பிறப்பிடமாதலாலும், அதன் அருகில் சில மைல் தூரத்தில் இவ்வூர் இருப்பதனாலும், இந்த ஊரே சடையப்ப வள்ளல் வசித்த தலமாதல் கூடும். கம்பர் வணங்கி வந்தான காளி ஆலயமும் அங்கே உள்ளது.

மரை - தாமரை; முதற்குறை விகாரம். மறைவாணர்: வடமொழிப் புலவர்; செஞ்சொல் அறிவாளர் - செந்தமிழ்ப் புலவர்; 'செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற், சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர்' (பால. நகரப். 1) என்றமை காண்க.

முதலோர் - கூத்தர், பாணர், விறலியர் முதலானோர் என்க. பாசம் - கயிறு; அதுபோன்று பிணிக்கும் அன்புக்கு ஆகிவந்தது. அவ் வன்பிற்குப் பாத்திரமான உறவினரைக் குறித்தலின் இருமடியாகு பெயர்; மறைவாணர் முதலானோரது சுற்றத்தாரின் பசி நீக்கம் கூறவே மறைவாணருடைய பசியும் நீங்கிற்று என்பது அருத் தாபத்தியாற் பெறப்படும்; 'பகலுண்ணான் பருத்திருப்பான்' என்பது போன்று.

பி - ம். 2. வெண்ணா. 263

2200. பல்லா யிரத்தின் முடியாத பக்க
மவைவீச வந்து படர்கால்
செல்லா நிலத்தி னிருளாதல் செல்ல
வுடனின்ற வாளி சிதறுற்
றெல்லா விதத்து முணர்வோடு நண்ணி
யிவனே பிழைக்கு மெனவோர்
வல்லா னொருத்த னிடையே படுத்த
வடுவான மேனி வடுவும்.

பல் ஆயிரத்தின் முடியாத பக்கம் அவை வீச - பல் ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும் (இதழ்களை யுடைய) உதிரப் பெறாத, சிறகு கள் இரண்டும் ஒன்றோடொன்று அடித்துக் கொள்ளுதலால், வந்து படர்கால் - எழுந்து பரவுகின்ற காற்றானது, செல்லா நிலத் தில் - (போரில் மடிந்தோரின் உடற்குவையால்) நடக்க வியலாத தான தரையில் பொருந்திய, இருள் ஆதல் - இருட்டானது, செல்ல - விலகும்படி வீசுதலினால், உடல் நின்ற வாளி சிதறுற்று - (இலக்குவன் முதலானோருடைய) உடல்களில் பதிந்திருந்த அம்பு கள் சின்னபின்னப்பட்டு, வடுவான மேனி வடுவும் - (அவர் களுடைய) உடம்புகளில் (அரவக் கணையால் தோன்றிய) தழும்பு களும், எல்லாவிதத்தும் உணர்வோடு நண்ணி - எல்லா வகை யிலும் அறிவுடன் கூடிய, இவன் - இவனும், பிழைக்கும் - தவறு வானோ? என - என்று (யாவரும சொல்லும்) வண்ணம், ஓர் - உணர் வதில், வல்லான் ஒருத்தன் - வல்லவனான ஒரு பேரறிஞனிடத்து

(முக்குண வயத்தால்), இடையே படுத்த வடு ஆன - நடுவே நிகழ்ந்த பாவம் போன்று விலகின. ஏ - அசை.

பல்லாயிரம் என்பது: சிறகின் பல அலகுகள் அல்லது பாகங்கள்; பக்கம்: சிறகு; பக்ஷம் என்பதன் தமிழாக்கம். படர்கால்: வினைத்தொகை. செல்லா நிலத்தின்; 'செல்லாவிடத்தும்' (நாலடி. 149) என்ற இடத்துப்போல நின்றது. இருள் ஆதல்: இருளாக நின்றது எனவே இருட்டு என்க. ஆதல்: சொல்லுருபு. உடல் நின்ற எனப் பிரிக்க, நண்ணிய இவன் என்பது நண்ணியிவன் எனத் தொகுத்து. தன்னை உணர்ந்து தனக்காதாரத் தலைவனையும் உணர்ந்து எச் செயலினையும் பசுச் செயலாக வன்றி, பதிச் செயலாகச் செய்யும் பிரமஞானிகளிடம், சத்துவம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணவசத்தான் நிகழும் தீச்செயல்கள் பரமன் அருளால் நீங்குவது போன்று, கருட பகவானது சிறகுகளிலிருந்து எழுந்த காற்றினால், வீரர்களைப் பிணித்திருந்த அரவத்தோடு அதனால் உண்டான தழும்புகளும் முற்றும் மறைந்தன.

இச்செய்யுள் சிறிது மாறுபாட்டுடன் காலஞ்சென்ற வீராசாமிச் செட்டியார் எழுதிய விநோதரசமஞ்சரியில் காணப்படுகிறது. பல்லாயிரத்தின் முடியாத பக்கமவைவீச வந்த படர்கால், செல்லா நிலத்தின் அருளோடு செல்ல வுடனின்ற வாளி சிதறுற், றெல்லா மவித்து முணர்வோடு மெண்ணி யறனைவிளக்கு முரவோன், வல்லா னெருத்த னிடையே படுத்த வடுவானமேனி வடுவும் என்ற செய்யுளையும், அதன் உரையையும் பார்க்க. இங்கு வழங்கும் ஒரு கன்னபரம்பரைச் செய்தி பின்வருமாறு:—கல்வியிற் பெரியார் தமது இராமாயணத்தைத் திருவரங்கத் திவ்யதேசத்தில் அரங்கேற்றச் சென்றபோது, அங்குள்ள ஸ்ரீ வைணவர்கள் 'தில்லை வாழந்தணர் மூவாயிரவருடைய அங்கீகாரத்துடன் வந்தால் அரங்கேறலாம்' என்று கூறியனுப்ப, கம்பர் தில்லைப் பதியை அடைந்து மூவாயிரவரும் ஒருங்கே கூடும் சமயம் கிடைக்காமல், வருந்துகையில், ஓர்நாள் அவ்வந்தணர்களில் ஒருவரது மகன் அரவு தீண்டி மரிக்க, அவ்வுடலைத் தகனம் செய்யுங்கால் அனைவரும் கூடியிருக்கக் கண்டு, அங்குச் சென்று, தான் அங்குப்போந்த காரணத்தைக்கூறி, இந்நாகபாசப் படலத்திலிருந்து சிலபாடல்களையும், பின்னும் சில வெண்பாக்களையும் எடுத்து மொழிந்த அளவில்,

தீண்டிய நாகம் வலியவந்து விடத்தை மீட்டுச் செல்ல, அக்குழந்தை உயிர் பெற்றெழுந்தது என்றும், அதைக் கண்டு வியந்த இந்நூல் தெய்வீக காவியம் என்று அனைவரும் ஏற்றுக்கொள்ள, ஆசிரியர் திருவரங்கம் சென்று மேட்டழகர் சந்நிதியில் நாலுகால் மண்டபத்திருந்து இவ்வரும் பெருங் காவியத்தை, ஸ்ரீநாத முனிகள் போன்ற பரமாசார்யார்கள் திருமுன்பு அரங்கேற்றினர் என்ப, 'முக்குண வசத்தான் முறை மறைந்தறைவர்' என்றபடி சிறந்த தத்வ ஞானிகளிடமும் தீச் செயல்கள் நிகழ்தல் கூடும்.

பாடப் பெற்ற வெண்பாக்கள் :—

ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—பூழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட.

மங்கையொரு பங்கர் மணிமார்பில் ஆரமே
பொங்குகடல் கடைந்த பொற்கயிறே—திங்களையும்
சீறியதன் மேலூருந் தெய்வத் திருநாணே
ஏறிய பண்பே யிறங்கு.

பாரைச் சுமந்த படவரவே பங்கயக்கண்
வீரன் கிடந்துதங்கும் மெல்லணையே—ஈரமதிச்
செஞ்சடையான் பூணும் திருவா பரணமே
நஞ்சுடையாய் தூர நட.

என்பன.

பி-ம். 2. அருளாளர்; இருளோடு; சிதைவுற்று.

3. எண்ணியறனே யிழைக்குமுரவோன். 264

## வானரங்கள் பிழைத்தெழ, அரக்கர் பிழைத்திடாமை

2201. தருமத்தி னென்று மொழுகாத செய்கை
தழுவிப் புணர்ந்த தகையால்
உருமொத்த வெங்கண் வினைதீய வஞ்ச
ருடலுய்ந்த தில்லை யுலகின்

கருமத்தி னின்ற கவிசேனை வெள்ள
மலர்மேலவ் வள்ளல் கடைநாள்
நிருமித்த வென்ன வுயிரோ டெழுந்து
நிலைநின்ற தெய்வ நெறியால்.

தருமத்தின் ஒன்றும் ஒழுகாத செய்கை தழுவி புணர்ந்த தகையால் - அறவழியில் சிறிதும் செல்லாத செய்கையைப் பொருந்தியுள்ள தன்மையினால், உரும் ஒத்த - இடி போன்ற, வெம்கண் - கடுங் கண்ணையுடைய, தீயவினை வஞ்சர் உடல் உய்ந்தது இல்லை. - பாவச் செயல்களையுடைய இராக்கதர்களின் (உயிர் பிரிந்த) உடம்புகள் உயிர் பெற்று எழுந்தன இல்லை; மலர்மேல் அவ் வள்ளல் - தாமரை மலர்மீது உள்ள அப் பிரமதேவன், கடை நாள் - யுக முடிவின் பின்பு (சிருட்டி காலத்தில்), நிருமித்த என்ன - மீளவும் படைத்த ஜீவராசிகள் போன்று, உலகின் கருமத்தின் நின்ற - உலகம் புரக்கும் தொழிலிலே தலைப்பட்டு நின்ற, கவி சேனை வெள்ளம் - குரங்குச் சேனை வெள்ளங்கள், தெய்வ நெறியால் உயிரோடு எழுந்து, நிலை நின்ற - தெய்வ சங்கற்பத்தால் உயிர் பெற்றெழுந்து நின்றன.

மறநெறி மேற்கொண்டு ஒழுகினமையின் அரக்கர்கள் பிழைத்து எழுந்தாரில்லை. அறநெறியில் நின்றவராகலின் இராம பிரானைச் சேர்ந்தவர்கள் உயிர் பெற்றெழுந்தனர் என்க. தருமத்தின் ஒன்றும் ஒழுகாத செய்கை தழுவி; 'பாவம் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்' (யுத். படைக். 23); 'அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகிவே றமைந்த, மறத்தைப் பூண்டு வெம் பாவத்தை மணம்புணர் மணாளர்' (யுத். மூல பல. 6) என்பன காண்க. உலகம் புரக்கும் கருமத்தினின்ற கவிசேனை: தேவ காரியமாக வாநரர் உருவில் வந்த வானவர்கள், பின்னர் மருத்துமலைப் படலத்து, 'அரக்கர் தம் யாக்கைக ளழிவிலாழியிற், கரக்கமற் றொழிந்தன வொழியக் கண்டன, மரக்கல முதலவு முய்ந்து வாழ்ந்தன, குரக்கின முய்ந்தது கூறல் வேண்டுமோ' (யுத். மருந்து. 102); 'அறந்தலை நின்றார்க்கில்லை யழிவெனு மறிஞர் வார்த்தை, சிறந்தது சரங்கள் பாயச் சிந்திய சிரத்தவாகிப்

பறந்தலை யதனின் மற்றைப் பாதக வரக்கன் கொல்ல, இறந்தன கவிக ளெல்லாம் எழுந்தன விமையோரேத்த' (யுந். இந்திர சித்து. 58).

பி - ம். 1. வகையால்.

2. வெங்கண் அரவஞ்ச; உய்த்தது.

3. மலர்மேய.

4. நிருமித்தது. 265

## இராமனது மகிழ்ச்சி

2202. இளையா னெழுந்து தொழுவானை யன்பி
னிணையார மார்பி னணையா
விளையாத துன்பம் விளைவித்த தெய்வம்
வெளிவந்த தென்ன வியவாக்
கிளையாரி னின்ன துணையோரை யாவி
கெழுவத் தொடர்ந்து தழுவா
முளையாத திங்க ளுகிரான்முன் வந்து
முறைநின்ற வீரன் மொழிவான்.

முறை நின்ற வீரன் - அறம் திறம்பலராய் நன்னெறியில் நிற்கின்ற வீரனான இராமபிரான், எழுந்து தொழுவான் இளையானை - (உணர்வு வரப்பெற்று) எழுந்து தன்னை வணங்குபவனான இலக்குவனை, அன்பின் - அன்பினால், ஆரம் இணை மார்பின் அணையா - மாலைகள் பொருந்தப்பெற்ற மார்பில் தழுவி, 'விளையாத துன்பம் - நிகழக்கூடாத துன்பத்தை, விளைவித்த - உண்டு பண்ணிய, தெய்வம் - தெய்வந்தானே, (அத் துயரைப் போக்குதற்குக் கருடன் வடிவுகொண்டு, வெளி வந்தது - வந்து நேர்நின்றது', என்ன வியவா - என்று வியந்து பாராட்டி, கிளையாரின் இன்ன - சுற்றத்தவர் போன்ற (அன்புகெழுமிய) இந்த (வானர வீரர்களாகிய), துணையோரை - நண்பர்களை, ஆவி கெழுவ - உயிருடன் ஒன்ற, தொடர்ந்து தழுவா - பின்பற்றித் தழுவி, முளையாத - மேன்மேல் வளர்ச்சியுறாத, திங்கள் உகிரான் முன் வந்து - பிறைச் சந்திரன் போன்ற வெள்ளிய நகங்களை யுடையவனாகிய கருட பகவான் எதிரே வந்து, மொழிவான் - பின் வருமாறு கூறுவான் ஆயினன், இதனை அடுத்துவரும் மூன்று கவிகளிற் காண்க.

தெய்வத் தன்மை வாய்ந்த பெரிய திருவடி, அரவக்கணையால் மடிந்த அனைவரையும் பிழைப்பித்துத் தன் துன்பத்தை நீக்கியது பற்றி, 'விளையாத துன்பம் விளைவித்த தெய்வம் வெளி வந்தது' என வியந்தான் இராமபிரான். 'சுட்டுக் கோல்போல எரியும் புகுவரே, நட்டார் எனப்படுவார்' (நாலடி. 208) எனப்படுதலின், 'கிளையாரின்ன துணையார்' எனப்பட்டது. முளையாத திங்கள் இல்பொருள் உவமை; 'வருநாட்டோன்றுந் தனிமறுவும் வளர்வுந் தேய்வும் வாளரவம், ஒருநாட் கவ்வும் உறுகோளும் இறப்பும் பிறப்பும் ஒழிவுற்ற, இருநாற் பகலி னிலங்குமதி' (சுந்தர. 445); இணையார மார்பன் என்று சடையப்ப முதலியார்க்கு ஒரு இளவல் இருந்ததாகவும், தன்னை ஆதரித்த வள்ளல் நினைவால், அவர் பின் தோன்றலையும் ஆசிரியர் இங்குக் குறித்தார் என்றும் சிலர் சொல்வர்.

பி-ம். 1. அன்போடு.
2. கிளையரர்களென்ன.
3. கெழுவா ரெழுந்து.
4. முளையான.

266

## வேறு

### இராமபிரான் கருடபகவானுக்கு முகமன் கூறுவன

2203. ஐயநீ யாரை யெங்க ளருந்தவப் பயத்தின் வந்திங்
கெய்தினை யுயிரும் வாழ்வு மீந்தனை யெம்ம னேரால்
கையுறை கோடற் கொத்த காட்சியை யல்லை மீட்சி
செய்திற மிலையா லென்றுன் தேவர்க்குந் தெரிக்கி
[லாதான்.

தேவர்க்கும் தெரிக்கிலாதான் - தேவர்களுக்கும் (தனது உண்மைச் சொருபத்தை) உணர்த்தாதவனான இராமபிரான், (பெரிய திருவடியை நோக்கி), 'ஐய - ஐயனே, நீ யாரை - நீ யார்? எங்கள் அருதவ பயத்தின் - எங்களுடைய அருந் தவத்தின் பயனால், இங்கு வந்து எய்தினை - இவ்விடம் வந்தடைந்தனை; உயிரும் வாழ்வும் ஈந்தனை - (அரவக் கணையால் இறந்தவர் அனைவர்க்கும்) உயிரையும் நல் வாழ்வினையும் தந்தாய்; எம்மனோரால் கையுறை கோடற்கு ஒத்த காட்சியை அல்லை - எம் போன்றவரிடத்தில்

காணிக்கைப் பொருளை ஏற்பதற்குரிய தோற்றமுடையவனாகக் காணப்படவில்லை; (பெருந்தன்மையனாகக் காணப்படுகின்றாய்); (நீ புரிந்துள்ள இப் பேருபகாரத்திற்கு) மீட்சி - பிரதியுதவி, செய் திறம் இலை - ஆற்றும்வகை (எங்கட்கு) இல்லை', என்றான் - என்று மொழிந்தான் (இராமபிரான்). ஆல்: அசை.

நீ யாரை - நீ யார்; ஐய: சாரியை; யாரை நீ; (சுந்தர. 1115); 'வண்டறை கொன்றையான் முன் வந்து நி யாரை யென்றான்' (திருவிளை. விறகுவிற்ற. 24); எம்மனோரால்; 'இப்பொழு தெம் மனோரா லியம்புதற் கெளிதே' (அயோத்தி. கைகேசி. 108); 'கையுறை, ஒருமையே யெம்மனோர்க் குரைக்கலாவதே' (சுந்தர.404) 'மையறு சிறப்பிற் கையுறை யேந்தி' (சிலப். 8, 22); கொள்+தல்; கோடல்; மீட்சி - திருப்பிச் செய்வது: பிரதியுதவி. தேவர்க்கும் தெரிக்கிலாதான் என்றது, அகடிதகடனாசமர்த்தனும், கபடநாடக சூத்திரதாரியுமாய், எல்லாம் அறிந்தவனான இராமபிரான், ஒன்றும் அறியாதவன் போன்று தான் எடுத்த கோலத்துக்கேற்ப, 'மீட்சி செய்திறமிலையால்' என்றான். (ஒப்பு) 'மும்மையால முலகந் தந்த முதல்வற்கு முதல்வன் தூதாய்ச், செம்மையா லுயிர் தந் தாய்க்குச் செயலென்னால் எளிய துண்டே' சுந்தர. 560); 'செய் யாமற் செய்த வுதவிக்கு வையகமும், வானகமும் 'ஆற்றலரிது' (குறள். 101); என்றபடி, முன் எந்த உதவியும் புரியாதிருக்கக் காலத் தினாற் செய்த நன்றி யாதலின், 'மீட்சி செய்திறமிலை' என்றான். 'உதவாம லொருவன் செய்த உதவிக்குக் கைம்மாறாக, மதயானை யணையமைந்த மற்று முண்டாகவற்றோ' (கிட்கிந்தா. 617).

பி - ம். 1. யாரே; பயத்தினன் வந்து.

4. செய்திறமில்லை; தெரிக்கொணாதான்.



2204. பொருளினி உணர வேறு
புறத்துமொன்றுண்டோ புந்தித்
தெருளினை யுடைய ராயிற்
செயலருங் கருணைச் செல்வம்
அருளினை வரவின் வந்த
வாழ்க்கையீ தாகின் வாயால்
அருளினை என்னின் எய்த
வரியன வுளவோ வைய.

(மீட்டும் கருடாழ்வானைப் பார்த்து இராமபிரான் கூறுவான்); 'செயல் அரு கருணை செல்வம் - பிறர்க்கு அருள முடியாத அருட் செல்வத்தினை, அருளினை - அருள் செய்தாயாய், வரவின் வந்த - (உன்) வருகையால் நிகழ்ந்த, வாழ்க்கை ஈது ஆகில் - (எங்களுடைய) வாழ்க்கையானது இது (இறப்பொழிந்து இன்ப வாழ்வினைப் பெறுதல்) ஆனால், பொருள் - நீ செய்த பேருதவிக்குப் பிரதி யுதவியாகத் தரத்தக்க பொருள், (இவ்வுலகில் மட்டும் அன்று), வேறு புறத்தும் உணர் ஒன்று உண்டோ - இதனினும் வேறான புறவுலகங்களிலும் நான் அறிந்து கூறுதற்கு உள்ளதோ? இனி, வாயால் அருளினை என்னின் - நீ வாய்திறந்து (இன்னான்) என்று அருளிச்செய்வாயாகில், எய்த அரியன உளவோ - (எங்கட்கு) அடைதற்குரிய வேறு அரிய பொருள்கள் உள்ளனவோ? (இல்லை) என்றபடி.

இனி இச் செய்யுட்கு வேறு விதமாகவும் பொருள் கூறுவர்: (மீட்டும் கருடாழ்வானைப் பார்த்து) பிறர்க்கு அருளமுடியாத அருட் செல்வத்தினை அருள் செய்து, உன் வருகையால் நிகழ்ந்த வாழ்க்கை யீதாகில் (எங்களுடைய) வாழ்க்கையானது இது (இறப் பொழிந்து இன்ப வாழ்வெய்தல்) ஆனால், அறிவிற்றெளிந்த மேலோர், ஆராயுமிடத்து, 'இப்பொழுது இப் பண்புகளை யுடைய உனக்கு உவமையாகத் தக்க பொருள் இவ்வுலகில் மட்டும் அன்று, வேறான பிறவுலகங்களிலும் தெரிந்து கூறுதற்கு ஒன்றுள்ளதோ என்றும்; வாயினால் அருளினை என்பதற்கு: வாய்திறந்து இன்னான் என்று கூறுதல் எனவும் கூறுவர். 'செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரிது' (குறள். 101) என்ற திருக் குறளை அடியொற்றியது இச் செய்யுள் என்பதுணர்க.

பொருள்: பிரதியுதவியான பொருள்; புந்தி: புத்தி என்ற வடசொல்லின் தமிழாக்கம். தெருளினை யுடையர்; 'தெருணட மேலவர்' (பால. வரைக். 8); கருணைச் செல்வம்: அருட் செல்வம் செல்வத்துள் செல்வம், பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள (குறள். 241); என்றார் பொய்யில் புலவர்; அருளையும் கேள்வியையும், வேண்டாமையையும் செல்வம்; குறள். 241; 411; 363

இங்கே காணத்தகும். ஈது: இது என்னும் சுட்டு நீண்டது விகாரம்; உளவோ, உண்டோ: ஓகாரம் வினா; எதிர்மறைப் பொருள்.

பி-ம். 1. பொருளின; புறத்திறன்.

2. உடையையாகிச், உடையராகிற்.

3. மருளினில்; வரவே, வரவில். 268

2205. கண்டிலை முன்பு சொல்லக்
கேட்டிலை கடனொன் றெம்பால்
கொண்டிலை கொடுப்ப தல்லாற்
குறையிலை யிதுநின் கொள்கை
உண்டிலை யென்ன நின்ற
வுயிர் தந்த வுதவி யோனே
பண்டிலை நண்பு நாங்கள்
செய்வதென் பகர்தி யென்றான்.

'உண்டு இலை என்ன நின்ற உயிர் தந்த உதவியோனே - உண்டோ இல்லையோ என்று ஐயுறுமாறு நின்ற, (இலக்குவன் முதலியோரின்) உயிர்களை அளித்த பேருபகாரியே! பண்டு நண்பு இலை - (உனக்கும் எங்கட்கும) முன் நட்பில்லை; கண்டிலை - (இது வரையில் எங்களை நீ) பார்த்ததுமில்லை; முன்பு சொல்ல கேட்டிலை - முன்பு எங்களைக் குறித்துப் பிறர் கூறக்கேட்டும் இருக்கமாட்டாய்; கொடுப்பது அல்லால்கடன் ஒன்று எம்பால் கொண்டிலை - (நீ எங்கட்கு) ஈந்ததே யன்றி, (எமமிடத்தினின்றும்) கடனாக ஏதும் பெற்றுக்கொண்டாயில்லை; குறை இலை - ஒருகுறையும் உடையை யல்லை; நின் கொள்கை இது-நின் கோட்பாடு இவ்வாறு உள்ளது; நாங்கள் செய்வது என் நாங்கள் செய்தற்குரிய பிரதியுதவி யாது? பகர்தி-கூறுவாயாக' என்றான் - என்று கூறினன் இராமபிரான்.

ஒருவர் ஒருவரைக் கண்டு அளவளாவும் நிலையில் ஒருவர் மற்றொருவர்க்கு உதவி புரிதல் உலகியற்கை. கருடாழ்வானோ பூவுலகில் உருவத்திருமேனி கொண்டுள்ள இலக்குவர் முதலானோர் களைக் கண்டதில்லை; அவர்களைப் பற்றிக் கேட்டதுமில்லை; எவ் விதமான உதவியும் இவர்களிடம் பெற்றானில்லை, ஏதோ ஓர் உதவியின் பொருட்டு வந்ததாகவும் இல்லை; ஏனெனில் எவ்வகை

யான குறையுமின்றிக் காணப்படுகின்றான்; ஆகவே அவன் செய்த உதவி மிகவும் பெரிதென்றும், அதற்குக் கைம்மாறு இன்றென்றும் கூறினன் இராமபிரான். இல்லை 'முன்புறக் கண்டிலேன் கேள்வி முன்பிலேன், அன்புறக் காரணம் அறியகிற்றிலேன், என்புறக் குளிருநெஞ் சுருகுமே லிவன், புன்புலப் பிறவியின் பகைஞன் போலுமால்' (யுத்த. 326-ம்) அதற்கு அடியேன் வரைந்துள்ள குறிப்பும் காண்க.

பி-ம். 1. கண்டிலம்; கேட்டிலம்; உம்பாற்.

2. கொண்டிலம்.

4. பகர்தி என்றூர். 269

## கருடன் இராமபிரானிடம் விடைபெற்றுச் செல்லுதல்

2206. பறவையின் குலங்கள் காக்கும்
பாவகன் பழைய நின்னோ
டுறவுள தன்மை யெல்லா
முணர்த்துவெ னரக்க னோடம்
மறவினை முடித்த பின்னர்
வருவனின் னுழையன் மாயப்
பிறவியின் பகைஞ நல்கு
விடையெனப் பெயர்ந்து போனான்.

பறவையின் குலங்கள் காக்கும் - புள்ளினங்களைப் பராமரிக்கின்ற, (பறவைக்கிறைவனாகிய), பாவகன் - தூய்மைப் படுத்தும் தன்மையுடைய கருடாழ்வான், (இராமபிரானைப்பார்த்து), 'மாயம் பிறவியின் பகைஞ - மாயையினால் நிகழும் பிறப்பின் பகைவனே! (நான் அன்னியனல்லன), நின் உழையன் - நின் அண்மையிலிருந்து பணியாற்றுபவனே; அரக்கனோடு அ மறவினை முடித்த பின்னர் - அரக்கனோடு போர்த் தொழிலை முடித்த பிறகு, நின் உழையன் வருவன் - (நான்) உன் அருகில் வந்து நின்றவனாய், நின்னோடு பழைய உறவு உள தன்மை எல்லாம் உணர்த்துவென் - உன்னோடு எனக்கு தொன்றுதொட்டு உள்ள உறவின் இயல்பு முழுவதும் தெளிய வுரைப்பேன; விடை நல்கு - இப்பொழுது உத்தரவு அளிப்பாயாக' என - என்று மொழிந்து, பெயர்ந்து போனான் - அவ் விடத்தை விட்டு நீங்கிச்சென்றான்.

பக்ஷிராஜன் ஆனதால் 'பறவையின் குலங்கள் காக்கும் பாவகன் எனப்பட்டான்; பாவகன் - அக்கினி தேவன்; இங்கே எல்லோரையும் தூய்மை செய்பவன் என்ற பொருளில் வந்தது. ஆரணி. *1144* : நின் உழையன்; என்ற தொடர் இரண்டிடங்களில் கூட்டப் பெற்றது, நின் உழையன் : தாஞன தன்மையில், என்றும் வாகனமாகவும் கொடியாகவும் அண்மையிலேயே இருப்பவன் என்றும் குறித்தான். பிறவியின் பகைஞ; 'மால் தரும் பிறவி நோய்க்கு மருந்தென வணங்கு மைந்த' (கிட்கிந்தா. *376*); 'இருமை யும் துடைப்பவன் எம்பல் எய்திஞன்' (யுத்த. மருத்துமலை : *91*); 'சென்மமு மரணமு மின்றித் தீருமே, யிம்மையே ராமவென் றிரண் டெழுத்திஞல்' (பால. பாயிரம் :); 'புன்புலப் பிறவியின் பகைஞன் போலுமால்' (யுத்த. *326*); மறவினை; 'மறவினை நீக்கலில்லா மாயமும் மாய வாழ்க்கைப் பிறவியும் பெயர்த்தேன்' (யுத்த. *432*).

பி - ம். 1. பாரகன்.

2. அரக்கரோட்டை, அரக்கனேடிம்.

3. என்னுழையின், என்றுணர்த்தி, என்றுரைத்து ; மாயரப். 270

*இங்கு ஓர் அதிகப் பாடல் :—*

பறவைநா யகன்ரு னேகல் படருறு துயர நீங்கிக்
கறவையுங் கன்றும் போலக் களிக்கின்ற மனத்த ராகி
இறைவனு மிளைய கோவும் யாவரும் எழுந்து நின்ருர்
மறையொரு நான்கும் மண்ணும் மானமும் மகிழ்ந்த
[மாதோ.

## இராமபிரான் கருடாழ்வானைப் புகழ்தல்

2207. **ஆரிய னவனை நோக்கி யாருயி ருதவி யாதும்**
**காரிய மில்லான் போஞன் கருணையோர் கடன்மை யீதாற்**
**பேரிய லாளர் செய்கை யூதியம் பிடித்து மென்ஞர்**
**மாரியை நோக்கிக் கைம்மா றியற்றுமோ வைய**
**[மென்ருன்.**

ஆரியன் - இராமபிரான், (விடை பெற்றுச் சென்ற) அவனை நோக்கி - அக்கருடாழ்வான் செல்வதைப் பார்த்து (நின்று), (அவன் மறைந்த பின்வர் அண்மையில் இருந்தாரை நோக்கி), காரியம்

யாதும் இல்லான் - (நம்மிடத்தில்) காரியம் ஒன்றும் இல்லாதவன், ஆர் உயிர் உதவி - (இறந்து கிடந்த பல்லோர்க்கும்) உயிரளித்து, போனான் - சென்றான்; கருணையோர் கடன்மை ஈது - அருளாள் வார் தன்மை இவ்வண்ணமே இருக்கும் அன்றோ? பேரியல் ஆளர் செய்கை ஊதியம் பிடித்தும் என்னார் - பெருந்தன்மை வாய்ந்தவர்கள் தாம் புரிந்த உதவிக்குப் பிரதி உதவி பெறுவோம் என்று எண்ணமாட்டார்; வையம் - இவ்வுலகினர், (தங்கட்கு மழையை உதவுகின்ற) மேகத்திற்குப் பிரதியுதவி ஆற்றவல்லரோ?' ஆல்: அசை.

கருணையோர் கடன்மை யீது; 'பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின், நன்மை கடலிற் பெரிது' (குறள். 103); குறள். 101, 102-ம் காணத் தக்கன; 'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரி மாட், டென் னாற்றுங் கொல்லோ வுலகு' (குறள். 211); கைம்மாறு; 'எற்றங்கம் மாற்றாமை யென்னானும் தாம் வரையா, தாற்றாதார்க் கீவதாம் ஆண், கடன் - ஆற்றின மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல், பொலிகடனென்னும் பெயர்த்து' (நாலடி. 98); 'இம்மைச் செய்தது மறுமைக் காமெனும், அறவிலை வாணிகன் ஆ அய' (புறநா. 134); 'வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம், குறியெதிர்ப்பை நீர துடைத்து' (குறள். 221). 'முன்னோர் மொழி பொருளைப் பொன்னேபோற் போற்றிக் கம்பநாடர் ஆங் காங்குத் திருக்குறளைத் தம் காப்பியத்து எடுத்தாள்வர். அவ்விடங் களில் இஃது ஒன்று; வையம் இடவாகு பெயராய் வையத்துள் ளாரைக் குறித்தது. வேற்றுப் பொருள் வைப்பணி.

பி - ம். 2. கருமமீதாப், கடமை.
3. பிடித்துமென்றான், பிடிப்பரன்றால். 271

இங்கு நாகப்பாசம் படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் உள்ளது. படைத்தலைவர் வதைப் படலம் இங்குத்தொடங்குகிறது.

## அனைவரும் பெருமுழக்கம் செய்ய அநுமதியளிக்குமாறு அநுமன் வேண்டுதலும் இராமபிரான் இயைதலும்

2208. இறந்தன விளவ லென்னு
விறைவியு மிடுக்க னெய்தும்
மறந்தன ருறங்கு கின்ற
வஞ்சரு மறுகி மீளப்

பிறந்தன ரென்று கொண்டோர்
பெரும்பயம் பிடிப்ப ரன்றே
அறந்தரு சிந்தை யன்ப
வார்த்துமென் றனுமன் சொன்னான்.

அநுமன் - அநுமன் (இராமபிரானைப் பார்த்து), 'அறம்தரு சிந்தை அன்ப - தருமத்தை விளைக்கின்ற மனத்துடன் அன்பும் உடையவனே! (நாம் இப்பொழுது நமது மகிழ்ச்சியை வெளிப் படுத்தாமலிருப்போமாகில்), இளவல் இறந்தனன் என்ன - இலக்கு வன் மரித்தான் என்று, இறைவியும் இடுக்கண் எய்தும் - சீதா தேவியும் துன்புறுவாள்; (நாம் ஆரவாரம் செய்யின்), மறந்தனர் உறங்குகின்ற - தங்களை மறந்து நித்திரை புரிகின்ற, வஞ்சரும் - வஞ்சகரான இராக்கதர்களும், (இறந்த குரக்கு வீரர்கள் அனை வரும்), மீள பிறந்தனர் - உயிர் பெற்று எழுந்தார்கள், என்று கொண்டு - என்று உளத்திற்கொண்டு, மறுகிஓர் பெரும் பயம் பிடிப்பர் அன்றே - மனம் குழம்பி ஒரு பெரியதோர் அச்சத்தாற் பிடிபட்டவர்கள் ஆவர் அன்றோ? (ஆதலின்), ஆர்த்தும் - (நாம்- முழக்கம் புரிவோம்; (அநுமதி அளிப்பீராக),' என்று சொன்னான்) என்று பகர்ந்தான்.

பயம் என்றமையாது பெரும் பயம் என்றது; இறந்தவர் உயிர் பெற்றெழுந்தனர்; இந் நிகழ்ச்சி பின்னும் போரிடை நிகழ் தல் கூடும் ஆகலின் என் செய்வது என்று மறுகியதால் எனக, இங்ஙனம் அவர்கள் அஞ்சியது பொருத்தமானதே என்பது, பின்னர் இந்திரசித்து விடுத்த பிரமாத்திரத்தால் இலக்கு வனும் வீரர்களும் இறந்து கிடப்ப, அநுமன் மருத்து மலை கொணர்ந்து உயிர்ப்பித்த வரலாற்றினை யுத்த காண்டம் மருத்து மலைப் படலத்திற் காண்க, 'விருந்து வந்திருந்த புண்ணியர், ஏற்றமும் பெருவலி யழகொ டெய்தினர், கூற்றினை வென்றுத முருவும் கூடினர்' 'குரக்கின முய்ந்தது கூற வேண்டுமோ' (யுத்த. மருத்து மலை : 101, 102).

பி - ம். 1. என்றால்.
2. வஞ்சகர்
3. என்றுசாலப், கொண்டே
4. ஐய.

2209. அழகிதென் றண்ணல் கூற வார்த்தனர் கடல்க ளஞ்சிக்
குழைவுற வனந்த னுச்சிக் குன்றுநின் றண்ட கோளம்
எழமிசை யுலக மேன்மே லேங்கிட விரிந்து சிந்தி
மழைவிழ மலைகள் கீற மாதிரம் பிளக்க மாதோ.

அண்ணல்-இராமபிரான், 'அழகிது-(நீகேட்பது) பொருத்தமே', என்று கூற - என்று இயைந்து சொல்ல, (வாநர வீரர்கள்), கடல்கள் அஞ்சி குழைவு உற-எழு கடல்களும் அச்சமுற்றுக் கலங்கவும், அனந்தன் - ஆதிசேடனுடைய, குன்று உச்சி நினறு - மலை போன்ற தலைகளிலிருந்து, அண்டகோளம் மிசை எழ - உலக உருண்டை மேலே கிளம்பவும், உலகம் - உலகத்துள்ளார், மேல் மேல் ஏங்கிட - மிகுதியாக ஏக்கமுறவும், மழை-மேகங்கள், விரிந்து சிந்தி விழ - பிளந்து சிதறி விழவும், மலைகள்கீற - மலைகள் விள்ளவும், மாதிரம் பிளக்க - திக்குகள் எட்டும் பிளவு படவும், ஆர்த்தனர் - பெரு முழக்கம் செய்தனர். மாதுஓ: அசை.

தொடர்புயர்வு நவிற்சியணி; இந்தச் செய்யுள் முதல் சில பிரதிகளில் படைத்தலைவர் வதைப் படலம் என்று காணப்படுகிறது. ஒரு பிரதியில் இந்தச் செய்யுளுடன் நாகபாசப் படலம் முடிய, மேற் படலம் அடுத்த செய்யுளில் தொடங்குகின்றது.

பா - ம். 2. குழையுற ; தன்றிவின்று

3. எழவிழ, வழிவிரை ; சிந்த

4, பிளப்ப.



இங்கு ஓர் அதிகப் பாடல் :—

இருகிலம் இழியப் பாயும் எறிகட லிரைப்புத் தீரப்
பரவுமெண் டிசையைத் தாங்கும் பகட்டின மிரியல் போகக்
கருவயி றுடைந்து சிந்தி யரக்கியர் கலங்கி வீழ
அருவரை யண்ட கோளம் பிளக்கின் றநும ரார்த்தான்.

## அப்பேரொலியை இராவணன் கேட்டல்

2210. பழிப்பருஞ் சிந்தை யாள்பாற் சிந்தனை படரக் கண்கள்
விழிப்பிலன் மேனி சால வெதும்பின னீசன் வேலும்
குழிப்பரி தாய மார்பை மன்மதன் கொற்ற வாளி
கிழிப்புற வுயிர்ப்பு வீங்கிக் கிடந்தவா ளரக்கன்
[கேட்டான்.

பழிப்பு அரு சிந்தையாள் பால் சிந்தனை படர - இகழ்தற்கில்லாத மனத்தை யுடையவளான சீதா தேவியினிடத்தில் (தன்) உள்ளம் சென்றதனால், (ஒரு பொருளையும்), கண்கள் விழிப்பிலன் - கண்களால் திறந்து நோக்குதலும் செய்யானாய், மேனிசால வெதும்பினன் - உடல் மிகவும் வெப்புற்றவனாய், ஈசன் வேலும் - சிவபிரானுடைய சூலப் படையும், குழிப்பு அரிது ஆய - துளைத்தற்கருமையான, மார்பை - மார்பினை, மன்மதன் கொற்றம் வாளி கிழிப்புற - மாரனுடைய வெற்றியம்புகள் கிழித்துச் செல்ல, உயிர்ப்பு வீங்கி - பெருமூச்செறிந்து, கிடந்த - படுத்துக் கிடந்த, வாள் அரக்கன் - வாட்படை தாங்கிய அரக்கனான (இராவணன்), கேட்டான் - (ஆரவாரத்தினைக்) கேட்டான்.

பழிப்பருஞ் சிந்தையாள் : கொடியனாகிய இலங்கையர் கோனாற் சிறைப்படுத்தப்பட்ட நிலையினும், கற்பென்னும் திண்மை பெற்று அவனை ஓர் துரும்பாகக் கருதித், தனக்கு எவ்விதமான பங்கமும் நிகழாதவாறு தற்காத்துக் கொண்டவள் பிராட்டியாதலின், இங்ஙனம் புகழப் பெற்றாள். சுந்த. 404, 468, 1078, 1270, 369, 404, 468, 561, 594, 1078, 1169, 1269 ; யுத்த. 698, 1282, 1570 ; 'கண்டாள் கண்ணாற் கணவனுரு வன்றி யொன்றுங் காணாதாள் ; (யுத். பிராட்டி களம். 4) ; 'கண் பிறபொருளிற் செல்லாக் கருத்தெனின் அஃதே' (ஆரணிய. 279) ; ஜீவன்முத்தர்கள் கண்மூடி மோனத்தை நாடுவதுபோன்று, இலங்கேசனும் பிராட்டியை நினைத்தனன் என்க. சிந்தனை படர ; 'பூவை சானகி யுருவொடு மொருமுகம் பொருந்த' (சுந்தர. 1092) ; 'காந்தள் மென் விரற் சனகிதன் கற்பெனும் கடலை, நீந்தியேறுவ தெங்ஙனென் றொருமுகம் நினைய' (சுந்தர. 1093) ; 'சிற்றிடைச் சீதையென்னு நாமமும் சிந்தை தானும், உற்றுட னென்றாய் நின்றொ லொன்றை விட் டொன்றை யுள்ள, மற்றொரு மனமும் உண்டோ' (ஆரணிய. 637) ; 'ஏக நாயகன் தேவியை யெதிர்ந்ததன் பின்பு, தோகை

மாதர்கள் மைந்தரிற் றேன்றினர் சுற்ற' (சுந்தர. 1087) என்றமை காண்க. மன்மதன் கொற்றவாளி கிழிப்புற: ஆரணிய. 646; யுத்த. 1575, 1577. பின்னிரண்டடிகட்கு; 'ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள், நண்ணாரு முட்குமென் பீடு' (குறள். 1088); மன்மதனுடைய மலர் வாளிக்குக் கொற்றமாவது, பேராண்மை கொண்ட இராவணனுடைய மார்பினையும் ஊடுருவிச் செல்லுதல் என்க.

பி-ம். 1. மேனியாள்பாற்.
2. விழிப்பவன்; ஈசனும்.
3. மார்பு, மார்பின்.
4. கிழிந்திட, கிழித்துற; நீங்கிக். 274

## இலங்கையில் அவ்விரவில் துயிலாதிருந்தவர் இராவணனும் சீதாதேவியுமே என்றது

2211. தாதைசொற் றலைமேற் கொண்ட தாபதன் தரும மூர்த்தி
ஈதைகள் தீர்க்கு நாமத் திராமனை யெண்ணி யேங்கும்
சீதையும் அவனை யுன்னிச் சிந்தனை தீர்ந்துந் தீராப்
பேதையு மன்றி யவ்வூ ரியாருளர் துயில்பெ றுதார்.

தாதை சொல் தலைமேல்கொண்ட தாபதன் - (தன்) தந்தையின் கட்டளையைப் பெருமையுடன் ஏற்று ஒழுகிய தவத்தோனும், தரும மூர்த்தி - தருமமே ஓருருவாக வந்தாற் போன்றவனும், ஈதைகள் தீர்க்கும் நாமத்து இராமனை எண்ணி ஏங்கும் சீதையும் - (அன்பர்களுடைய துன்பங்கள் அனைத்தையும்) உச்சரித்த மாத்திரத்தில் போக்கியருளும் திருநாமத்தையுடைய இராமபிரானை நினைத்து மனம் வருந்தும் சீதா தேவியும், அவனை - அன்னவனையே, உன்னி - (விடாது) நினைத்து, சிந்தனை தீர்ந்தும் - மனம் உலைந்தும், தீரா - உயிர் நீங்கப்பெறாத, பேதையும் - அறிவிலியான இராவணனும், அன்றி - அல்லாமல், அவ்வூர் - அந்த இலங்கா நகரில், துயில் பெறாதார் யார் உளர் - நித்திரை செய்யாதார் யாவர் உளர்.

தாதை சொல் தலைமேல் கொண்ட தாபதன்: 'மின்னொளிர் கானமின்றே போகின்றேன் விடையுங் கொண்டேன்' (அயோத்தி. கைகேசி: 110); 'அன்னை ஏவத், தன்னுடையுரிமைச் செல்வந் தம்பிக்குத் தகவினல்கி, நன்னெடுங் கானம் சேர்ந்தான்' கிட்கிந்தா.

70); தாபதன்: தவத்தோன். 'இருவர் மானுடர் தாபதர்' (ஆரணிய. 325); தரும மூர்த்தி: 'புறத்து நாமினிப் புகல்கின்ற பொருளென்பதெவனோ, வறத்தின் மூர்த்திவந் தவதரித் தானென்ப தல்லால்' (அயோத்தி. 40); 'தருமமே தவிர்க்குமோ தன்னைத் தானரோ' (கிட்கிந்தா. 258); 'தருமமென் றறிஞர் சொல்லுந் தனிப் பொருடன்னை' (யுத்த. வேலேற்ற: 44); மற்றும்: சுந்தர. 639, 1120. ஈதைகள் தீர்க்கு நாமத்திராமன்: 'தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே, சென்மமு மரணமு மின்றித் தீருமே இம்மையே இராமவென் றிரண்டெ ழுத்தினால்' (பால. பாயிரம்); 'மும்மை சாலுலகுக் கெல்லை மூலமந் திரத்தை முற்றும், தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தைத் தானே, இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை யிராமன் என்னும், செம்மை சேர் நாமம் தன்னை' (கிட்கிந்தா. 300).

பி-ம். 2. ஈதிகள், ஏதமே.

3. சிந்தையுள்; நூபரம், திரிந்து.

4. ஆருளர். 275

### இந்திரசித்து பகைவென்றேனென்றது குறித்து இராவணன் நகையாடல்

2212. சிங்கவே றசனி யேறு கேட்டலுஞ்
சீற்றச் சேனை
பொங்கிய தென்ன மன்னன் பொருக்கென
வெழுந்து போரில்
மங்கினர் பகைஞ ரென்ற வார்த்தையே
வலிய தென்னா
அங்கையோ டங்கை கொட்டி யலங்கற்றோள்
குலுங்க நக்கான்.

சிங்க ஏறு - ஆண் சிங்கம் போன்ற, மன்னன் - இராவணன், அசனி ஏறு கேட்டலும் - பேரிடியொத்த அந்தப் பெரு முழக்கத்தைக் கேட்டவுடன், 'சீற்றம் சேனை - சினம் மிக்கக் குரங்குப்படை, பொங்கியது - (போர்க்குக்) கிளர்ந்தெழுந்தது', என்ன - என்று, (மனத்துட்கொண்டு), பொருக்கென எழுந்து - சரேலென (படுக்கை விடுத்து) எழுந்து, 'பகைஞர் போரில் மங்கினர் - பகைவர்கள்

போரில் மடிந்தனர்', என்ற - என்று (இந்திரசித்து) சொன்ன, வார்த்தையே வலியது - சொற்களே மிக்க, திறமுடையன' என்னு- என்று எளனம் செய்து, அங்கையோடு அங்கை கொட்டி அலங்கல் தோள் குலுங்க நக்கான் - உள்ளங்கையோடு உள்ளங்கை பொருந்தத் தட்டி (வெற்றி) மாலையணிந்த (தன்) தோள்கள் குலுங்குமாறு நகைத்தான்,

மகன் இந்திரசித்தின் சொற்களால் பகைவர்கள் இறந்து பட்டனர் என்று எண்ணியிருந்த இராவணன், குரங்குகள் உயிர் பெற்றுப் பெருமுழக்கம் செய்ததைக் கேட்ட அளவில், தன்மகன் சொற்கள் பொய்ப்பட்டவே என்று நகையாடிக் கைகொட்டினன். பொருக்கென - விரைவுக் குறிப்பு: 'பூங்குழை மாதரைப் பொருக் கெனத் தம்மென்' (பெருங் *4 : 7 : 198*); 'பொருக்கென, நீருடை வரைப்பி னெடுமொழி நீறியஇய' (பெருங். *3 : 9 : 149*); வார்த்தை வலியது; பிறகுறிப்பு: நக்கான்: நகை, எள்ளல் நகை: பேதைமை பற்றி எழுந்த தென்க. அங்கை கொட்டி: 'அங்கை கொட்டிப் பாடுவார்' (குசேலோ. *2 : 124*).

276

### இராவணன் தனக்குள்ளேயே பேசிக்கொள்ளுதல்

2213. இடிக்கின்ற வசனி யென்ன விரைக்கின்ற
திராமன் போர்வில்
வெடிக்கின்ற தண்ட மென்னப் படுவது
தம்பி வின்னுண்
அடிக்கின்ற தென்னை வந்து செவிதொறு
மனும னுர்ப்புப்
பிடிக்கின்ற துலக மெங்கும் பரிதிசே
யார்ப்பின் பெற்றி.

'இராமன் போர்வில் - இராமபிரான் போர் புரிதற்குரிய வில்லானது, இடிக்கின்ற அசனி என்ன இரைக்கின்றது - இடிக்கின்ற இடியொப்ப முழங்குகின்றது, தம்பி வில் நாண் - (அவனுடைய) தம்பி இலக்குவனுடைய வில்லின் நாணியோ (குணத்வனியோ), அண்டம் வெடிக்கின்றது என்ன படுவது - அண்ட கோளம் வெடிக்கின்றதோ என்று ஐயுறுமாறு ஒலிக்கின்றது; அநுமன் ஆர்ப்பு - அநுமனுடைய ஆர்ப்பொலியோ, என்னை வந்து - என்பால் வந்து, செவிதொறும் அடிக்கின்றது - (என்)

செவிகள் தோறும் தாக்குகின்றது. பரிதிசேய் ஆர்ப்பின் பெற்றி - சூரியன் புதல்வனான சுக்கிரீவனுடைய பெருமுழக்கத்தின் தன்மை உலகம் எங்கும் பிடிக்கின்றது - உலகமெல்லாம் பரவுகின்றது.

இரைத்தல் 'இரைத்த நெடும்படை யரக்கர்' (ஆரணிய. 554); 'இடையறவின்றி யிரையாறு தழீஇ' (பெருங். *1: 48: 168*); 'இரைத்துவரு கான்மகனும் எரிவிழி சிவந்தான்' (வி. பா. வெளிப் பாட்டு : 5). இக்கவி விற்பூட்டு.

பி - ம். 1. இடிக்கின்றது ; இசைக்கின்ற, விசைக்கின்ற.

3. உன்னக. 277

2214 அங்கத னவனே வார்த்தா னந்தர
மார்க்கின் றானும்
வெங்கத நீலன் மற்றை வீரரும்
வேறு வேறு
பொங்கின ரார்த்த வோசை யண்டத்தும்
புறத்தும் போன
சங்கையொன் றின்றித் தீர்ந்தார் பாசத்தைத்
தரும நல்க.

'அங்கதன் அவனே ஆர்த்தான்' - அங்கதனும் ஆரவாரம் புரிகின்றான்; வெம்கதம் நீலனும்-கடும் சினத்தையுடைய நீலனும், அந்தரம் ஆர்க்கின்றான் - விண்ணில் ஒலியுண்டாமாறு முழங்கு கின்றான்; மற்றை வீரரும் - பிற வானர வீரர்களும், வேறு வேறு - தனித்தனியாக, பொங்கினர் ஆர்த்த ஓசை - மனத்தில் மகிழ்ச்சி மிக்கவராய் முழங்கிய வீர முழக்கங்கள், அண்டத்தும் புறத்தும் போன - இந்த அண்ட கோளத்திலும் அதன் வெளியிலும் சென்று பரவின; (ஆதலின்), தருமம் நல்க - தருமதேவதை அருள் புரிய, சங்கை ஒன்று இன்றி - ஐயப்பாடு ஒரு சிறிதும் இல்லாமல், பாசத்தை தீர்ந்தார் - (பகைவர் எல்லோரும்), அரவக்கணையி லிருந்து வீடுபெற்றுய்ந்தனர்'.

இராவணன் வாயினாலேயே 'தருமம் நல்க' என்ற தொடர் எழுந்தது நோக்கத்தக்கது. 'அறம் புகாமையாலழியுமிப்பதி' (சுந்தர. *118*); என்று இலங்கை அழிவு முன்னர்க் குறிக்கப் பெற்றது. அத்தகைய நகர்க் காவலன் ஆன அரக்கர் கோனும் ஏற்கும்படி

தருமத்தின் அருட்சிறப்பு இருந்தது என்க. அங்கதன் அவன்; அவன்: ஏழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு. சங்கை: வடசொல்: 'இறையொரு சங்கையின்றி யெண்ணுதி' (கிட்கிந்தா. 360). பாசத்தை வேற்றுமைமயக்கம்.

பி - ம். 1. அவனும்; அனந்தரம்.
2. மற்ற.
3. அண்டத்தின்.
4. ஒன்றில்லை; பாவத்தை; மாய்க்க. 278

## வீரரும் மகளிரும் சூழ்ந்துவர இராவணன் இந்திர சித்தின் மாளிகைக்குச் செல்லுதல்

2215. என்பது சொல்லிப் பள்ளிச் சேக்கைநின்
றிழிந்து வேந்தன்
ஒன்பது கோடி வாட்கை யரக்கர்வந்
துழையர் சுற்றப்
பொன்பொதி விளக்கங் கோடிப்
பூங்குழை மகளிரேந்தத்
தன்பெருங் கோயில் நின்று மகன்றனிக்
கோயில் சார்ந்தான்.

என்பது சொல்லி - என்று (தனக்குள் தானே) பேசிக் கொண்டு, வேந்தன் - இராவணன், பள்ளி சேக்கை நின்று இழிந்து - அமளியினின்றும் இறங்கி, வாள்கை - வாளைக் கையில் ஏந்தியவர்களான, ஒன்பது கோடி அரக்கர் - ஒன்பது கோடி இராக்கதர்கள், உழையர் வந்து சுற்ற - வந்து தன் அண்மையில் உள்ளவராய்ச் சூழ்ந்து வரவும், பூ குழை - அழகிய காதணியையுடைய, கோடி மகளிர் - கோடி எண் கொண்ட மகளிர்கள், பொன் பொதி விளக்கம் - பொன்னாற் செய்யப்பட்ட விளக்குகளை, ஏந்த - தாங்கி வரவும், தன் பெரு கோயில் நின்று - தனது பெரிய அரண்மனையிலிருந்து, (எழுந்து தன்) மகன் தனி கோயில் சார்ந்தான் - தன் மகனான இந்திரசித்தின் ஒப்பற்ற மாளிகையை அடைந்தான்.

சொல்லி - தனக்குள்ளே உரையாடி; இதனை வடமொழி வாணர் சுவாகதம் என்ப. பெருங் கோயில், தனிக் கோயில்

என்று தாம் கூறியதை உய்த்துணர்க. மகளிர் விளக்கேந்தி வருதலும், மெய்காவலர்கள் படையேந்தி வருவதும், அரக்கர்க் குரிய சிறப்புக்களாம். 'நானநெய் விளக்கம் நாலிருகோடி, நங்கை யர் அங்கையா லெடுப்ப' (சுந்தர. 450).

பி - ம். 1. பன்னி ; சேக்கையின் ; எழுந்து.

2. அரக்கரோடு ; உழையிற் ; சுற்றிப்.

3. பொன் பொலி, பதி ; குழல். 270

## இராவணன் சென்றபோது மகளிர் உடன்சென்றதைக் கூறும்

2216. தாங்கிய துகிலார் மெள்ளச் சரிந்துவிழ் குழலார் தாங்கி
வீங்கிய வுயிர்ப்பார் விண்ணை விழுங்கிய முலையார் [மெல்லத்
தூங்கிய விழியார் தள்ளித் துளங்கிய நடையார் வல்லி
வாங்கிய மருங்குல் மாதர் அனந்தரான் மயங்கி வந்தார்.

வல்லி வாங்கிய மருங்குல் மாதர் - பூங்கொடியும் (ஒப்பாகாது) வளைந்து கொடுக்கும் இடையினையுடைய மகளிர், தாங்கிய துகிலார் - (நெகிழ்ந்திருத்தலால் கையினால்) தாங்கிய சேலையை உடையவரும், (முடிக்கப்படாமையின்), மெள்ள சரிந்து வீழ்குழலார் - மெல்லச் சோர்ந்து தொங்குகின்ற கூந்தலையுடையவரும், தாங்கி - தடைப்பட்டு (ப்பின்), வீங்கிய உயிர்ப்பார் - மிக்க பெருமூச்சேறி பவரும், விண்ணை விழுங்கிய முலையார் - வானத்தை இடைவெளி யில்லாமற் செய்கின்ற தனங்களையுடையவரும், மெல்ல தூங்கிய விழியார் - மெதுவாகச் சிறுதுயில் கொள்ளும் கண்களையுடைய வரும், தள்ளி துளங்கிய நடையார் - தள்ளாடி அசைந்து செல்லும் நடையை யுடையவருமாகி, அனந்தரான் மயங்கி வந்தார் - தூக்க மயக்கத்துடன் (இராவணன் அருகே) வந்தார்கள்.

தன்மை நவிற்சியணி. தாங்கிய துகிலார். சரிந்துவீழ் குழலார். வீங்கிய வுயிர்ப்பார் முதலிய தொடர்கள் வடமொழி நடை. விண்ணை விழுங்கிய முலையார் : உயர்வுநவிற்சி. மற்றும் விண்

என்பது இடையைக் குறிப்பதாகக் கொண்டு தம் பருமனால் இடையினை இல்லாமற் செய்யும் முலை எனினுமாம். மகளிர் இடைக்கு வானவெளியை உவமை கூறுவது கவிமரபு. அலந்தர்: நித்திரை மயக்கம். சீவக. 1249.

பி - ம். 1. மெல்லர் ; குழலைத் ; தாக்கி.
2. ஆடித், விம்மித்.
3. வள்ளி.
4. அனந்தராய் ; அனந்தவாய. 280

2217. பானமுந் துயிலுங் கண்ட கனவும்பண் கனிந்த [பண்ணைக்
கானமுந் தள்ளத் தள்ளிக் களியொடுங் கள்ளங் கற்ற
மீனிலும் பெரிய வாட்கண் விழிப்பது முகிழ்ப்ப தாக
வானவர் மகளிர் போனர் மழலையஞ் சதங்கை மாழ்க.

வானவர் மகளிர் - தேவ மகளிர், பானமும் துயிலும் - மது பானமும் தூக்கமும், கண்ட கனவும் - தாங்கள் கண்ட இன்பக் கனவுகளும், பண் கனிந்த பண்ணை கானமும் - (தாம் இராவணன் புகழ் பாடும்) இசைமிக்க பாடற் றெருருதியும், தள்ள - தம்மைத் தள்ளவும், களியொடும் - மதக்களிப்புடன் (செறிந்த), கள்ளம் கற்ற - வஞ்சனையைத் தேர்ந்த, மீனிலும் பெரிய வாள்கண் விழிப்பதும் - மீனினும் சிறந்த வாள்போன்ற (தமது) கண்கள் திறப்பதும், முகிழ்ப்பதாக - மூடுவதுமாகவும், (தமது காலில் புனைந்த), மழலை அம் சதங்கை மாழ்க - நிரம்ப ஒலியையுடைய அழகிய சதங்கைகள் சிறிதே ஒலிக்கவும், தள்ளி - தடுமாறி, போனன் - (இராவணனுடன்) சென்றனர்.

பண்ணை கானம் - மகிழ்ச்சியைத் தரும் இசைப்பாடல்கள் கள்ளம் கற்றவாட்கண் மீனினும் பெரிய வாட்கண் எனத் தனித் தனிக் கூட்டுக. மீன் கண்ணிற்கு : 'சேலனைய சில்வரிய கடைசி வந்து' (சீவக. 167); 'சேலுண்ட வொண்கணாரிற் றிரிகின்ற செங்கா லன்னம்' (பால. நாட்டுப். 13) ; தன்மைநவிற்சியணி. அவர்களின் மயக்கத்திற்கும் தள்ளாடிய செயலுக்கும் காரணம், மதுபானமும் அரைத்துயிலும் இன்னிசையும் என்க. அரக்கியர் கூட்டுறவால் வானவர் மகளிரும் மதுபானம் செய்தனர் போலும்; (ஒப்பு) : 'சான்றாண்மை தீயினஞ் சேரக் கெடும்' (நாலடி. 179).

வானவர் மகளிர் - இராவணன் திக்கு விசயம் செய்த காலத்துச் சிறைப்படுத்திக் கொணர்ந்த தேவமாதர்கள். விரைந்து நடவாமல் சோர்ந்து நடந்ததனல் சதங்கை ஒலியும் சிறிதே ஒலித்தது என்பார்; மாழ்க' என்ருர். உள்ளம் கற்றகண்: 'யானேக்கும் காலே நிலனேக்கும் நோக்காக்கால், தானேக்கி மெல்ல நகும்' (குறள். 1084); என்றது காண்க. இமைத்தலும் விழித்தலும் இல்லாத வானவர் மகளிரும் விழித்திமைத்தது சகவாசதோஷம் போலும். சதங்கை: 'குமரேச ரிருதாளும் சிலம்பும் சதங்கையும்' (கந்தரலங்.)

பி-ம். 1. கனிந்தபாடற், களித்தவாயும்.
2. தள்ளத்தள்ள; கழறக்கூற்ற.
4. சதங்கை கொஞ்ச. 281

2218. மழையினை நீல மூட்டி
வாசமும் புகையு மாட்டி
உழையுழை சுருட்டி மென்பூத்
தொடுத்திடைக் கிடையூ றென்னப்
பிழையுடை விதியார் செய்த
பெருங்குழல் கருங்கட் செவ்வாய்
இழையணி மகளிர் சூழ்ந்தா
ரனந்தரா லிடங்கள் தோறும்.

மழையினை நீலம் ஊட்டி - மேகத்திற்கு நீல நிறத்தை ஏற்றி, வாசமும் - நறுமணத்தையும், (அதில்), புகையும் மாட்டி சுருட்டி - புகையையும் கூட்டி நுழைத்து, உழை உழை - இடையிடையே, மெல்பூ தொடுத்து - மெல்லிய மலர்களைச் செருகி, 'இடைக்கு இடையூறு - நுட்பமான இடைக்கு (ப் பாரமிகுதியால்) துன்பம் (நேருமே)' என்ன - என்று நினையாத, பிழை உடை விதியார் செய்த - தவறுதலையுடைய பிரமனர் படைத்த, பெரு குழல் - நீண்டடர்ந்த கூந்தலையும், கருகண் - கறுத்த விழிகளையும் செ வாய் - சிவந்த வாயினையும் உடைய, இழை அணி மகளிர் - ஆபரணம் புனைந்த பெண்கள், அனந்தரால் - நித்திரை மயக்கத்துடன், இடங்கள் தொறும் சூழ்ந்தார் - (இராவணனுடைய) இரு புறங்களிலும் சுற்றி நின்றனர்.

மகளிர் கூந்தலுக்கு மேகத்தை உவமை கூறுவது மரபு. ஆயினும் இங்கு மகளிருடைய கூந்தல் மிக்க நிறமும் நறு

மணம் முதலியனவும் கொண்டு விளங்குதலின், உவமானமாகிய மேகத்திற்கும் சிலவற்றைக் கூட்டி உவமேயத்துக்குப் பொருந்தச் செய்தனர் ஆசிரியர் என்க. மழையிணை நீலம் ஊட்டி: இங்ஙனம் பல பொருள்களைச் சேர்த்து உறுப்பு முதலியவற்றை அமைத்தற்கு ஒப்பு: 'பாலெறிப்பாய்ந்திடத் தேன்மாரி பெய்ய நற்பாகு கற்கண், டாலேயெருவிழ முப்பழச் சாற்றின் அமுத வயல், மேலே முளைத்த கரும்போவிம் மாதுக்கு மெய்யெங்குமே' (தனிப்பா.) 'பயிர் கடிந்தனவும் பட்டமா மரமும் பண்டைநா ளுக்க வெள் ளென்பும், உயிர்பெறற் பொருட்டுப் பனிதழும் பாலும் ஒழுகிய தேனுமா ரமுதும், குயிலினிற் குரலும் கிளியினின் மொழியும் குழலும் யாழும் குழைத்திழைத்து, மயிலியற் சாயல் வாணுதல் தனக்கு மலரயன் வகுத்ததென் மொழியாள்' (அரிச். பு.); நைடதம்: நளன் தூதுப்படலம் 95-ம் காண்க. இல்லையுண் டென்ன நின்ற இடைக்கு, முன்னரே தனவிணைகள் பெரும்பாரமா யிருக்க, மற்றும் பல மலர்களை அணிந்துள்ள கூந்தற் பாரமும் ஏற்றிடின், மங்கைக்கு இடையூறு நிகழுமே என்ற எண்ணம் ஒரு சிறிதுமின்றி அயன் செய்த என்று, நூல்போன்ற இடையினது நுட்பமும், கூந்தலின் பெருந் தொகுதியும் குறிக்கப்பட்டன. விதியார் என்றது இகழ்ச்சிக் குறிப்பு. அனந்தர்: துயில் மயக்கம்; யுத்த. 2216 காண்க.

பி - ம். 1. விழையிணை ; ஊட்டி.
3. சூட்டி ; மென்பூக் குவித்து,
3. பிழையுணர் ; நுதலார் ; பெருங்கயல்.
3. இழையிழை ; தாழ்ந்தார். 282

2219. தேனிடைக் கரும்பிற் பாலி லமுதினிற் கிளவி தேடி
மானிடைக் கயலில் வாளில் மலரிடை நயனம் வாங்கி
மேனடை யனைய மற்றும் நல்வழி நல்க வேண்டி
வானுடை யண்ணல் செய்த மங்கையர் மருங்கு
[சென்றார்.

வானுடை அண்ணல் - சத்தியலோகத்தின் இறைவனான பிரமதேவன், நல்வழி நல்க வேண்டி - மிகவும் சிறந்த வகையிற் படைத்தலை விரும்பி, தேன் இடை - தேனினிடத்தும், கரும்பின் - கருப்பஞ் சாற்றினிடத்தும், பாலில் - பாலினிடத்தும், அமுதினில்- அமுதத்தினிடத்தும், (உள்ள சுவைப் பகுதிகளைக்), கிளவிதேடி -

சொற்களாகத் தேடியமைத்தும், மானிடை - மானினிடத்தும், கயலில் - கெண்டை மீனிடத்தும், வாளில் - வாட் படையினிடத்தும், மலரிடை-தாமரை மலரினிடத்தும், (உள்ள சிறந்த பகுதிகளை) நயனம் வாங்கி - விழிகளாக நாடியமைத்தும், மற்றும் - மேலும், மேல் நடைய - (அத்தன்மையவான) சிறந்த நல்ல கூறுகளைக் கொண்டும், செய்த மங்கையர் - இயற்றிய இளம் பெண்கள், மருங்கு சென்றார் - (இராவணன்) அருகிற் சென்றனர்.

தேனிடைக் கரும்பிற் பாலில் அமுதினில் கிளவி தேடி ; யுத்த. 2218. உரைக்குறிப்புக் காண்க. (ஒப்பு) : 'மின்வயின் மருங்குல் கொண்டாள் வேய்வயின்மென்றோள் கொண்டாள். பொன் வயின் மேனி கொண்டாள் பொருட்டினாற் புகுந்ததென்றாள்' (ஆரணிய. 620) ; 'பண்களாற் கிளவி செய்து பவளத்தால் அதர மாக்கிப், பெண்களா னார்க்குள் நல்ல உறுப்பெலாம் பெருக்கி நீட்டி, எண்களால் அளவா மானக் குணம் தொகுத் தியற்றினானை' (யுத்த. 1571); மேல் நடையனைய மற்றும்: என்றது மேலே கூறிய நயனம் என்ற உறுப்புக்கள் மட்டும் அன்றி மகளிரின் நடை, சாயல் முதலியனவும், அவ்வவற்றிற்குத் தக அமைந்த உவமானப் பொருள்களின் சிறப்பியல்புகளைக் கொண்டு இயற்றப்பெற்றன என்பது தெரியப்படும். உத்தம மகளிரின் அழகிலிருந்து ஒவ்வொரு எள்ளளவு எடுத்து உருவாக்கப்பட்டவள் திலோத்தமை என்ப.

பி - ம் 1. தேனினில்
2. மானினில் ; மலரினில்
4. வானிடை ; மருங்கில் ; வந்தார். 283

## பேரோசை கேட்டு அரக்கர் அரக்கியர் நிலை

2220. தொடங்கிய வார்ப்பி னோசை
செவிப்புலந் தொடர்த லோடும்
இடங்கரின் வயப்போத் தன்ன
வெறுழ்வலி யரக்க ரியாரும்
மடங்கலின் முழக்கங் கேட்ட
வான்கரி யொத்தார் மாதர்
அடங்கலு மசனி கேட்ட
வளையுறை யரவ மொத்தார்.

(வாநர வீரர்கள்), தொடங்கிய ஆர்ப்பின் ஓசை - தொடங்கி முழக்கிய பேராரவாரம், செவி புலம் தொடர்தலோடும் - காதுகளில் நுழைந்த அளவில், இடங்கரின் வயம்போத்தன்ன - முதலையின் வெற்றிபெற்ற ஆண் விலங்குபோன்ற, எறுழ் வலி - மிக்க வலிமை பெற்ற, அரக்கர் யாரும் - இராக்கதர்கள் எல்லோரும், மடங்கலின் முழக்கம் கேட்ட - சிங்கத்தின் கர்ச்சனையைக்கேட்ட, வான்கரி ஒத்தார் - சிறந்த யானைகளை ஒத்து விளங்கினர்; மாதர் அடங்கலும் - அரக்கியர் எல்லோரும், அசனி கேட்ட - இடியோசை கேட்ட, அளை உறை அரவம் ஒத்தார் - புற்றில் வசிக்கும் பாம்புகளை ஒத்தனர்.

ஆர்ப்பு : வாநரர் முதலியோரின் பேராரவாரம். இடங்கர் : முதலை. 'கொடுந்தாண் முதலையும் இடங்கரும் கராமும்' (குறிஞ்சிப். 257); இவை மூன்றும் சாதி விசேடம் என்பர் நச்சினார்க்கினியர். இடங்கர் யானைகளையும் விழுங்கவல்லன என்று நூல்கள் கூறும். 'உரவு களிறு கரக்கும் இடங்கர்' (மலைபடு. 211); அத்தகைய முதலைகள் போன்ற அரக்கர்களும், இங்குக் கரியொத்தனர் எனப்பட்டது. மற்றும் இடங்கர் : சிலப்பதிகாரம் பதிகம், அடியார்க்கு நல்லார் உரையினையும், இந்நூல் நிலையப் பதிப்பான கிட்கிந்தா காண்டம் 549ன் உரையினையும் காண்க. போத்து: விலங்கின் ஆண். 'பெற்ற மெருமை புலிமரை புல்வாய், மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே' (தொல். மரபி. 41); 'புலிப் போத்தன்ன புல்லணற் காளை' (பெரும்பாண். 138); 'முதலைப் போத்து முழுமீ னாரும், பகுவாய் வராஅற் பல்வரியிரும் போத்து' (அகம். 36); 'மயிறபோத் தார்ந்த வயிற் படை நெடுவேள்'. எறுழ் வலி: ஒருபொருட் பன்மொழி. மடங்கல் சிங்கம்; பிடரிமயிர் மடங்கப் பெற்றிருப்பது. 'மடங்கன் முனிந்தாலன்ன' (கிட்கிந்தா. 994); 'மடங்கலிற் சினை இ மடங்கா வுள்ளத்து' (புறநா. 71); ஆடவர்களுக்குக் கரியினையும், மகளிர்க்கு அரவினையும் ஏற்ற பெற்றி உவமித்தமை காண்க. மகளிர்க்கு அரவம் உவமை. நுண்ணிய இடையுடன் ஒல்கி ஒசிந்து நடத்தல் பற்றி என்க. அரவம் இடிக்கு அஞ்சுதல் : 'உருமிடித்த போதர வுறு மறுக்கம்' (யுத்த. இராவணன் தேரேறு : 8); 'இடியுண்ட அரவின்' (யுத்த. இலங். கேள்வி. 55); இவ்வுவமை இந்நூலில் பல இடங்களிலும் குறிக்கப் பெறுதல் காணலாம். 'விரிநிற நாகம் விடருளதேனும், உருமின் கடுஞ்சினம் சேணின்று முட்கும்' (நாலடி. 164).

## இராவணன் இந்திரசித்தைக் காணுதல்

2221. அரக்கனு மைந்தன் வைகு
மாடகத் தமைந்த மாடம்
பொருக்கெனச் சென்று புக்கான்
புண்ணினீர்க் குமிழி பொங்கத்
தரிக்கிலன் மடங்க லேற்றாற்
றொலைப்புண்டு சாய்ந்து போன
கருக்கிளர் மேக மன்ன
களிறனை யானைக் கண்டான்.

அரக்கனும் - இராவணனும், மைந்தன் வைகும் - (தனது) புதல்வனான இந்திரசித்து வசிக்கின்ற, ஆடகத்து அமைந்த மாடம் - பொன் கொண்டிழைத்த மாளிகையில், பொருக்கென சென்று புக்கான் - விரைவாகச் சென்று சேர்ந்து, புண்ணில் - (இலக்குவனுடைய சரங்களினால் துளைக்கப்பட்டதன் மேனியின்) புண்களினின்று, நீர் குமிழி பொங்க - உதிரம் நீர்க்குமிழி போன்று வெளிப்பட, தரிக்கிலன் - (துயரம்) பொறுதவனாய், கருகிளர் மேகம் என்ன - நீரினைக் கருக்கொண்டு எழுந்த மேகம் போன்ற (தோற்றத்தினையுடையவனாய்), மடங்கல் ஏற்றால் - ஆண் சிங்கத்தினால், தொலைப்புண்டு சாய்ந்து போன - முறியடிக்கப்பெற்று வலியழிந்த, களிறு அனையானை - ஆண் யானையைப் போன்றவனாயுள்ள இந்திரசித்தினை, கண்டான் - பார்த்தான்.

ஆடகம் - மாற்றுயர்ந்த செம்பொன். 'ஆடகத் தசும்பு' (ஆரணிய. 414); 'ஆடக மாடம் கடந்தறியாத வென் ஆரணங்கே' (இறை. அகப்); பொருக்கென: விரைவுக் குறிப்பு. சிங்கத்தினால் வலியழிந்த யானை இந்திரசித்துக்கு உவமை.

பி - ம். 2. புண்ணினிற்.
3. தருக்கிலன், அலைப்புண்டு, தொலைவுண்டு, சோர்ந்து.
4. என்னக்.

## இராவணன் இந்திரசித்தை நிகழ்ந்தது வினவல்

2222. எழுந்தடி வணங்க லாற்று
னிருகையு மரிதி னேற்றித்
தொழுந்தொழி லானை நோக்கித்
துணுக்குற்ற மனத்தன் தோன்றல்
அழுங்கினை வந்த தென்னை
யடுத்ததென் றடுத்துக் கேட்டான்
புழுங்கிய புண்ணி னானு
மினையன புகல லுற்றான்.

எழுந்து-எழுந்து, அடி வணங்கல் ஆற்றான்-(தன் தந்தையின்) பாதங்களைப் பணிவதற்கும் இயலாதவனாய், (கிடந்தபடியே), இரு கையும் அரிதின் ஏற்றி - தனது இரண்டு கரங்களையும் மிக்க வருத்தத்துடன் தலைமேல் உயர்த்தி, தொழும் தொழிலானை நோக்கி - வணங்கும் செயலுடையவன் ஆன மகனைப் பார்த்து (இராவணன்), துணுக்குற்ற மனத்தன் - திடுக்கிட்ட உள்ளத்தனாய், 'தோன்றல் - மகனே! அழுங்கினை-நீ மனம் உளைந்து நின்றனை, வந்தது என்னை - நிகழ்ந்தது யாது? என்று - என்று, அடுத்தடுத்து கேட்டான் - விடாது கேட்டான்; புழுங்கிய புண்ணினானும்-மனம் வருந்துதற்குக் காரணமான புண்களைக் கொண்டவனான இந்திரசித்தும், இனையன புகலல் உற்றான் - இவ்வார்த்தைகளைப் பகரத் தொடங்கினான். இவைகளை அடுத்த நான்கு கவிகளில் காண்க.

மேலே நிகழவேண்டியதற்குத் தன் மகனை அடுத்து யோசனை செய்யவேண்டி வந்த இராவணன், செயலற்றுக் கிடந்த மகன் நிலையைக் கண்டு வருந்தி, அவன் அவ்வாறு ஓய்ந்திருந்ததற்குக் காரணத்தை வினவினான். தோன்றல்: அண்மைவிளி. புழுங்கிய புண்: புழுங்குதற்குக் காரணமான புண் என்க.

பா-ம். 1. உற்றான்.

2. துளக்குற்ற, துயருற்ற, மனத்தனுகி.

3. அழுந்தினை, அடுத்தவனெடுத்து, அடுத்துச் சென்றெடுத்து, அடுத்த தென்றெடுத்து, சொன்னான்.

4. உள்ளத்தானும், புகல்வதானான், புகலவுற்றான்.

## இந்திரசித்தின் விடை

2223. உருவின வுரத்தை முற்று முலப்பில வுதிரம் வற்றப்
பருகின வளப்பி லாத பகழிகள் கவசம் பற்றற்
றருகின பின்னைச் சால வலசினெ னைய கண்கள்
செருகின வன்றே யானும் மாயையிற் றீர்ந்தி லேனே.

'ஐய - ஐயனே ! (இலக்குவன் எய்த) அளப்புஇலாத பகழிகள் எண்ணிக்கையற்ற அம்புகள். உரத்தை முற்றும் உருவின - எனது மார்பினை முழுதும் ஊடுருவிச் சென்று துளைத்தனவாய், உலப்பு இல - வற்றுதலில்லாத, உதிரம் - (எனது உடம்பின்) இரத்தத்தை, வற்ற பருகின - வற்றும்படி குடித்துவிட்டன, (அந்த அம்புகளினால்) கவசம்பற்று அற்று அருகின - கவசம் பற்றுவிட்டு அழிந்தன, பின்னை சால அலசினென் - பிறகு மிகவும் வருந்தினேன், கண்கள் செருகின - கண்கள் சொருகிவிட்டன, யானும் மாயையில் தீர்ந்திலேனே - என் மாயையின் வலத்தால் இறவாது பிழைத்தேன். ஏ ; அன்றே : அசை.

என் மாயையினால் இலக்குவனுடைய வாளிக்குப் பிழைத்தேன் என்றான்.

பி - ம். 2. பற்றுது, பற்றத்.
3. அலசின கணைகளைய.
4. அன்றோ, அன்றவ், தீர்ந்திலேனால், தீர்ந்திலேனேல். 287

2224. இந்திரன் விடையின் பாக னெறுழ்வலிக்
கலுழ னேறும்
சுந்தர னருக்க னென்றித் தொடக்கத்தார்
தொடர்ந்த போரில்
நொந்தில னினைய தொன்றும் நுவன்றிலன்
மனித னேன்மை
மந்தர மனைய தோளாய் வரம்புடைத்
தன்று மன்னோ

'மந்தரம் அனைய தோளாய் - மந்தர மலையை ஒத்த தோள்களை யுடையவனே! இந்திரன் - இந்திரனும், விடையின் பாகன் - இடபத்தினை வாகனமாக் கொண்டு செலுத்தும் சிவபெருமானும், ஏறும் வலி கலுழன் ஏறும் சுந்தரன் - மிக்க வலிமை செறிந்த கருடன்மீது ஏறிச் செலுத்தும் அழகனான திருமாலும், அருக்கன் - சூரியனும், என்ற இ தொடக்கத்தார் - என்ற இவர் முதலானவர்கள், தொடர்ந்த போரில் - என்னுடன் தொடர்ந்து புரிந்த சண்டையில், நொந்திலன் - (நான் சிறிதும்) வருந்தினேனில்லை; இனையது ஒன்றும் நுவன்றிலன் - இப்போது (நான்) சொல்வது போன்ற வார்த்தை ஒன்றையும் சொன்னது இல்லை; (எதற்கும் மனம் தளராத என்னையும் இவ்வாறு வருந்தும்படி செய்ததனால்), மனிதன் நோன்மை - மனிதனான இலக்குவனுடைய வன்மை, வரம்பு உடைத்து அன்று - ஓர் எல்லையுடையதன்று. மன் : ஒ: அசைகள்.

இந்திரன்......சுந்தரன், இவர்கட்குப் பின்னிடையாது இந்திரசித்து, பொருது வென்றமை. உத்தர காண்டம் திக்விசயப் படலத்துக் காண்க. நோன்மை - வலிமை: நோன்மை கூர் கவியரசு; (கிட்கிந்தா. 44); மந்தரம்: 'மந்தர மனைய தோள் வள்ளல்' (நைடத. 'நோன்மை வரம் புடைத்தன்று' இதே கருத்தைப் பின்னர் அவன் கூறுதல் யுத்த. இந்திரசித்து வதைப்படலம் 4-ல் காண்க.

பி - ம். 1. கருடன், ஏறிச்.
2. போரில், போது.
3. ஐய, அனைய,
4. மன்று,

208

2225. இளையவன் தன்மை யீதா லிராமன
தாற்ற லென்னில்
தளையவி ழலங்கன் மார்ப நம்வயிற்
றங்கிற் றன்றால்
விளைவுகண் டுணர்த லல்லால் வென்றிமேல்
விளையு மென்ன
உளைவதன் றென்னச் சொன்னா னுற்றுள
துணர்ந்தி லாதான்.

'உற்று உளது உணர்ந்திலாதான் - (இலக்குவனும் வானர வீரர்களும் உயிர் பெற்றெழுந்ததை அறியாதவனான் இந்திர சித்து, 'தளை அவிழ் அலங்கல் மார்ப - கட்டவிழ்ந்த மலர்களால் ஆகிய மாலை புனைந்தவனே! இளையவன் தன்மை ஈது - தம்பியான இலக்குவனுடைய வல்லமை இத்தகையது; இராமனது ஆற்றல் எண்ணில்-,(அவன் அண்ணன் ஆன) இராமபிரானுடைய வல்லமையைப்பற்றி ஆலோசித்தால், நம்வயின் தங்கிற்று அன்று - (அந்த எண்ணுதல்) நமக்கு இயல்வதொன்றன்று; விளைவுகண்டு உணர்தல் அல்லால் - மேல் நிகழ்வன கொண்டு எல்லாவற்றையும் தேர்தல் அன்றி, மேல் வென்றி விளையும் என்ன-இனி வெற்றியே (நமக்கு) நிகழும் எண்ணி என்று, உளைவது அன்று - மனத்தைப் புண்படுத்துவது பொருந்தாது', என்ன சொன்னான் - என்று மொழிந்தான். ஆல்கள் : அசை.

எண்ணில் நம்வயின் தங்கிற்றன்று; எண்ணுவது நம்மனோரால் செய்யக்கூடிய காரியம் ஆகாது. இலக்குவன் முதலானோர் உயிர் பெற்றெழுந்தமை இந்திரசித்து அறிந்திருப்பின், இந்திரசித்தின் உரைகளே மாறியிருக்கும்; ஆனால் அவன் உணரவில்லை யென்க.

பி-ம். 2. தக்கது

3. உணர்வதல்லால்; வென்றிமேல் விளையும் என்பது, வென்றியே விளைவதென்றல்

4. உளவது, உற்றன வுணர்கிலாதான். 289

2226. வென்றது பாசத் தாலு மாயையின்
விளைவி னாலும்
கொன்றது குரக்கு வீரர் தம்மொடக்
கொற்றத் தோனை
நின்றன னிராம னின்னும் நிகழ்ந்தவா
நிகழ மென்மேல்
என்றன னென்னக் கேட்ட விராவண
னிதனைச் சொன்னான்.

'குரக்கு வீரர் தம்மொடு அ கொற்றத்தோனை - வானர வீரர்களுடன் அந்த வெற்றியனான இலக்குவனை, கொன்றது - நான் கொன்றதும், வென்றது - வெற்றிபெற்றதும், பாசத்தாலும் - அரவக்கணையாலும், மாயையின் வினைவினாலும்-எனது மாயையின் நிகழ்ச்சியாலுமேதான்; இன்னும் இராமன் நின்றனன் - இன்னும் இராமன் என்பவன் எஞ்சி நிற்கின்றான்; மென்மேல் நிகழ்ந்தவா நிகழ - அடுத்தடுத்து நடக்கிறபடி நடக்கட்டும்', என்ன - என்று சொல்ல, கேட்ட இராவணன் - அதனைச் செவியேற்ற இராவணன், இதனை சொன்னான் - இதனைக் கூறினான்; கூறியதை அடுத்த செய்யுளிற் காண்க.

எல்லோரும் கருடன் உதவியால் உயிர் பெற்றெழுந்ததை உணராதவன் ஆதலின். கொன்றதாகவும் வென்றதாகவும் கூறினான் இராவணி. அளவு கடந்த மகிழ்ச்சியில் அந்த மகிழ்ச்சிக் குறையும் வண்ணம் ஓர் துக்கச் செய்தி நிகழ்வது உலகியல்; அவ்வண்ணமே அடுத்து இராவணன் கூறப்போகும் செய்தி கேட்டு இந்திரசித்து வருந்தப் போகின்றான். இச்செய்திகளை நாடக முறையில் ஏற்ற பெற்றி அமைத்துள்ள கம்பநாடர் திறம் மிகவும் போற்றத் தக்கது. மாயா சனகப் படலத்துப் பிராட்டி தனக்குக் கிடைப்பள் என்று மனப்பால் குடித்தும், கும்பகன்னன் வெற்றியுடன் திரும்புவான் என்றும் எண்ணியிருந்த இராவணன், கும்பகன்னன் இறந்த செய்தி கேட்டவுடன் வருந்திய செய்தி முன்னர்க் கூறப்பட்டது. 'வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள், தாழ்வினை யதுவரச் சிரை சார்த்தினான்' (அயோத்தி. நகர் நீ : 113)-ம் காண்க.

பி - ம். 1. வினையிறலும்
2. கொன்றதக்; தம்முடை, தம்மொடுந்; கொற்றத்தாரை
3. இப்பால்; நிகழும்; மேலால்
4. அதனைக் கேட்ட; இனைய.

290

## இராவணன் 'பகைவர்' செய்த பேரொலியைக் கேட்டிலை போலும் எனல்

2227. வார்கழற் கால மற்றவ் விலக்குவன் வயிர வில்லின்
பேரொலி யரவம் விண்ணைப் பிளந்திடக் குரங்கு போந்து
காரொலி யடங்க வல்லை கம்பிக்கக் களத்தி னார்த்த
போரொலி யொன்று மைய வறிந்திலை போலு மென்றான்.

வார் கழல் கால - நீண்ட வீரகண்டை புனைந்த காலையுடைய வனே! ஐய - அழகனே! மற்று-நீ சொல்வதற்கு நேர் மாறாக, அவ் இலக்குவன் வயிரம் வில்லின் பேர் ஒலி அரவம் - அவ் இலக்குவனுடைய உறுதியான வில்லினது மிகவும் பெரிய முழக்கம், விண்ணை பிளந்திட - ஆகாயத்தையே இரண்டு செய்ய, குரங்கு போந்து - வானரங்கள் முன்வந்து, மேகத்தின் இடியோசையும் அடங்க - முழக்கமும் கீழ்ப்படுமாறும், வல்லை கம்பிக்க - (எல்லா உயிர்களும்) உடல் விரைந்து நடுங்குமாறும், களத்தின் ஆர்த்த - போர்க்களத்தில் ஆர்ப்பரித்த போர் ஒலி - போர்க்கு அறிகுறியான ஓசையை, ஒன்றும் - சிறிதும் அறிந்திலை போலும் - தெரிந்திலை போலும்', என்றான் - என்று (இராவணன்) மொழிந்தான்.

குரங்கு போந்த குரங்கினின்றும் எழுந்த என்க. கம்பித்தல்: நடுங்குதல்; 'நெடுநிலம் கம்பித்தது' (யுத்த. 208); 'கம்பிப்பதோர் வன் துயர் கண்டிலனேல்' (யுத்த. 1672). களம்: போர்க்களம். போலும்: ஒப்பில் போலி.

பி - ம். 1. வார்கலிக் கழற்கால் வீர, வாரொலி கழற்கால் மற்றை; வில்லிற்; வலிவிற்

2. விண்ணும்; போந்து, பேர்ந்தது

3. காரொலி; மடங்க: கம்பித்த

4. ஆர்கலியையவொன்றும். 291

### இந்திரசித்து ஐயமுற்றுக் கூறல்

2228. ஐயவெம் பாசம் தன்னு லார்ப்புண்டா
ரசனி யென்னப்
பெய்யும்வெஞ் சரத்தான் மேனி பிளப்புண்டா
ருணர்வு பேர்ந்தார்
உய்யுந ரென்று ரைத்த துண்மையோ
வொழிக்க வொன்றோ
செய்யுமென் றெண்ணத் தெய்வஞ் சிறிதன்றே
தெரியி னென்றான்.

'ஐய-தந்தையே! (இலக்குவன் முதலியவர்கள்), வெம் பாசம் தன்னால் ஆர்ப்புண்டார் - கொடிய அரவக்கணையால் கட்டுண்டார்; (அல்லாமலும்), அசனி என்ன - இடிபோன்று, பெய்யும்-சொரிந்த, வெம் சரத்தால் - (எனது) கொடிய பாணங்களால், மேனி பிளப் புண்டார் - உடல் பிளக்கப்பட்டார்கள்; உணர்வு பேர்ந்தார் - நினைவு தப்பினர்; (இந் நிகழ்ச்சிகள் நான் நேரிற் கண்டவை); உய்யுநர் என்று உரைத்தது உண்மையோ - எல்லோரும் பிழைத்தனர் என்று (அது பற்றிப் பேரொலி களத்தில் எழுந்தது என்றும்) நீ சொல்லியது, உண்மையோ - மெய்தானோ? ஒழிக்க ஒன்றோ - (அவர்களைப் பிணித்தது அப்பாசம்) தவிர்ப்பதற்குரிய ஒரு பொருளாகுமோ? தெரியின் - ஆராயுங்கால், செய்யும் என்று எண்ண - பிறிதொன்று இக்கணையை அழிக்கும் என்று எண்ணுவோம் எனில், தெய்வம் சிறிது அன்றோ - (இதனை எனக்குதவிய) தெய்வம் சிறுமைப்பட்டு விடும் அல்லவோ?

பிரத்தியட்சப்பிரமாணமே மிகவும் சிறந்தது; முன் இரண்டடிகளிற் கூறப்பட்ட நிகழ்ச்சிகள் இந்திரசித்து நேரிற் கண்டவை; ஆதலின் தந்தை சொற்களை ஐயுறுகிறான். மற்றும் அரவக் கணையின் பலவகைப் பெருமையும் அதனை உதவிய கடவுளின் பெருமையும் அரக்கன் நன்கறிந்தவனாதலின், அவர்கள் உயிர்பெற்றெழுந்திருப்பார் என்று அவன் நம்பக்கூடவில்லை.

பி - ம் 1. ஐயகேள்

3. உய்யுமாறுணர்ந்து போந்தது, உய்யுமென்றுரைத்த போதது, உய்யுமென்றுரைத்தபோது; ஒழிக, ஒழிகில்

4. செய்யுநம், செய்வமென்று; என்னின்; தெய்வஞ் சிறியதோ, தெய்வச் செயலொன்றுந்; அம்பர.

292

## தூதர்கள் நிகழ்ந்தனவற்றைக் கூறத்தொடங்குதல்

2229. ஈதுரை நிகழும் வேலை யெய்திய தறியப் போன
தூதுவர் விரைவின் வந்தார் புகுந்தடி தொழுத லோடும்
யாதவ ணிகழ்ந்த தென்ன விராவண னியம்ப விறின்று,
ஓதிய கல்வி யாளர் புகுந்துள துரைக்க லுற்றார்.

ஈது உரை நிகழும் வேலை - இங்ஙனம் (தந்தைக்கும் மகனுக்கும்) உரையாட்டு நடந்துகொண்டிருந்தபோது, எய்தியது அறிய போன தூதுர்வ-(போர்க்களத்தில்) நிகழ்ந்ததை அறியும்படி சென்ற தூதுவர்கள், விரைவின் வந்தார் - விரைந்து வந்து, புகுந்து அடி தொழுதலோடும் - உள்ளே நுழைந்து அடியை வணங்கின அளவில், இராவணன் - இலங்கேசன், அவண் நிகழ்ந்தது யாது என்ன இயம்ப-அவ்விடத்தில் (போர்க்களத்தில்) நடந்தது என்ன? என்ன - என்று வினவ, ஈறு இன்று ஓதிய கல்வியாளர் புகுந்துளது உரைக்கல் உற்றார் - எல்லையின்றிப் படித்துத் தேர்ந்த கல்வியினராகிய அந்தத் தூதுவர்கள் நிகழ்ந்ததைக் கூறத் தொடங்கினார்கள்.

ஈறின்று ஓதிய கல்வியாளர்: 'அன்பறி வாராய்ந்த சொல் வன்மை; நூலாருள் நூல்வல்லனாகுதல்; அறிவுருவாராய்ந்த கல்வி முதலியன தூதர்க்கு இன்றியமையாவாகலின், ஈறின்று ஓதிய கல்வியாளர் எனப்பெற்றது' (திருக்குறள். தூது அதிகாரம்) பார்க்க. மகன், தந்தை சொற்களை ஐயுற்று நிற்க, அந்நிலையில் நாடகமுறையில் தூதுவர் வந்து கூறியதாக அமைத்த நயம் காண்க.

பி-ம். 1. எய்துவ தறியப்போய, எய்திய தெதிரே நின்ற.
2. வந்து.
3. யாதிவன்; விறி.
4. ஆதிய. 293

தூதர்கள் தாம் அறிந்துவந்த செய்தியைக் கூறல்

2230. பாசத்தாற் பிணிப்புண் டாரைப் பகழியாற்
களைப்பட் டாரைத்
தேசத்தா ரரசன் மைந்த னிடையிருள்
சேர்ந்து நின்றே
ஏசத்தா னிரங்கி யேங்கி யுலகெலா
மெரிப்பெ னென்றான்
வாசத்தார் மாலை மார்ப வானுறை
கலுழன் வந்தான்.

'வாசம் தார் மாலை மார்ப - நறுமணம் செறிந்த மலர்மாலை புனைந்த மார்பினையுடையவனே! தேசத்தார் அரசன் மைந்தன் - கோசல நாட்டிலுள்ளார்க்கு மன்னனாகிய தயரதன் புதல்வனாகிய இராமபிரான், பாசத்தால் பிணிப்புண்டாரை - அரவக்கணையால் கட்டுண்டவரை, பகழியால் களப்பட்டாரை - அம்பினால் சமர்க் களத்தில் மரித்தவரை, இடை இருள் - நடுயாமத்தில், சேர்ந்து நின்றே - அடைந்து நின்றே, ஏசற்றான் - வருத்த முற்றவனான இராமபிரான், இரங்கி ஏங்கி - மரித்தவர்க்கு மனமிரங்கி விம்மலுற்று(ச் சினத்தால்), உலகுஎலாம்எரிப்பென் என்றான்-எல்லா உலகங்களையும் தீக்கிரையாக்குவேன் என்று சொன்னான்; (அப்பொழுது), வான் உறை கலுழன் வந்தான் - விண்ணில் சஞ்சரிக்கும் கருடபகவான் தோன்றினன்.

அரவக்கணையால் இறந்தவர்மட்டும் அன்றி, வாளிபட்டு மரித்தவரும் பெரிய திருவடியால் உயிர் பெற்றெழுந்தனர் ஆகலின் பிணிப்புண்டார், களப்பட்டார் என்று கூறப்பட்டது. இடை இருள் - நடு யாமம். தீக்கிரையாக்காதவண்ணம் தடுப்பதற்குப் கருடன் வந்தான் என்க. ஏசற்றான் என்பது எதுகைநோக்கி ஏசத்தான் என நின்றது. ஏசறுதல் - வருத்தமுறுதல்; என் பெருங்களிறே காணவேசற்றேன் (யுத்த. இந்திரசித்து).(அகநா.32); இனி, ஏசு - குற்றம்; அஃதற்றவன் எனினுமாம்.

பி - ம். 1. அறுப்புண்டாரை

2. ஈசன் நேசன்; வந்திரை சினத்து; நோக்கி, கண்டு

4. ஏசெற்றான்; பின்னை; அவிப்பன், வீப்பன். 294

2231. அன்னவன் வரவு காணா வயிலெயிற்
றரவ மெல்லாம்
சின்னபின் னங்க ளான புண்ணொடு
மயர்வு தீர்ந்தார்
முன்னையின் வலிய ராகி மொய்க்கள
நெருங்கி மொய்த்தார்
இன்னது நிகழ்ந்த தென்றா ரரக்கனி
தேடுத்துச் சொன்னான்.

'அன்னவன் வரவு காணூ - அந்தக் கருடனது வரவுகண்டு, அயில் எயிற்று அரவம் எல்லாம் - (இலக்குவன் முதலானோரைப் பிணித்திருந்த) கூரிய பற்களையுடைய பாம்புகள் அனைத்தும், சின்னபின்னங்கள் ஆன - கண்டதுண்டங்களாயின ; புண்ணொடும் அயர்வு தீர்ந்தார் - அவர்கள் (எல்லோரும்) புண்களும் சோர்வும் நீங்கப்பெற்று, முன்னையின் வலியர் ஆகி - பிழைத்தற்கு முன்னர் இருந்ததைப்பார்க்கிலும் பலம் உடையவராகி, மொய்களம் நெருங்கி மொய்த்தார் - போர்க்களத்தில் திரண்டு கூடினார்கள் ; நிகழ்ந்தது இன்னது - நடந்தது இது', என்றார் - என்று கூறினர்' (அப்பால்), அரக்கன் ஈது எடுத்து சொன்னான் - இராவணன் இதனை எடுத்துச்சொல்லலானான், இதனை அடுத்துவரும் நான்கு செய்யுட்களில் காண்க.

அன்னவன் - கருடன். காணூ - கண்டு. அயில் எயிறு - கூரிய பல் ; 'அயிலெயிற்றின் ஏந்துதியால்' (ஆரணிய. 58). சின்னபின்னங்கள் : 'சின்ன பின்னங்கள் செய்யச் செருக்களம் சேர்தல் நன்றே' (யுத்த. 923) ; 'சித்திர வில்லவலோனும் சின்ன பின்னங்கள் செய்தான்' (யுத்த. 2113) ; 'சின்ன பின்னங்களாய் மயங்கிச் சிந்தலால்' (யுத்த. பிரமாத்திர. 52).

பி - ம் 2. பின்னொடு ; மோசப், மயக்கம்

3. மொய்கொள முனைக்களம் : நெருங்க

4. இராவணனவினைய.



## இராவணன் கருடனை இகழ்தல்

2232. ஏத்தருந் தடந்தோ ளாற்ற லென்மக
னெய்த பாசம்
காற்றிடைக் கழித்துத் தீர்த்தான் கலுழனுங்
காண்மின் காண்மின்
வார்த்தையி தாயி னன்றே லிராவணன்
வாழ்ந்த வாழ்க்கை
மூத்தது கொள்கை போலா மென்னுடை
முயற்சி யெல்லாம்.

'எத்தரும் - (எவராலும்) புகழ்தற்கு முடியாத', தட தோள் ஆற்றல் என் மகன் - பெரிய புயவலிமை செறிந்த எனது புதல்வனுன இந்திரசித்து, எய்த பாசம் - (பகைவர்மீது) விடுத்த அரவக் கணையை, கலுழன் - கருடன், காற்றிடை கழித்து தீர்த்தான் ஆம் - (தனது சிறகின்) காற்றினால் போக்கி நீக்கிவிட்டான் ஆம்; காண்மின் காண்மின் - (இந்த அற்புதத்தை) பாருங்கள்! பாருங்கள்!, வார்த்தை இது ஆயின் - இச்செய்தி இவ்வாறெனில், இராவணன் வாழ்ந்த வாழ்க்கை நன்று - இராவணன் வாழ்ந்த வாழ்வு மிகவும் நன்றாயிருந்தது; என்னுடை முயற்சி எல்லாம் - பகைவரை வெல்ல நான் மேற்கொண்ட முயற்சி எல்லாம், மூத்தது கொள்கை போலாம் - முதுமையுற்றது போலும் (வலிமை முற்றும் அழிந்தது போலும்).

பாசம் - நாகபாசம். காற்றிடைக் கழித்துத் தீர்த்தது: 'வந்த சிறையான், வேதங்கள்பாட வுலகங்கள யாவும் விணசிந்த நாகம்மெலிய' (யுத்த. 2181) என்றதுகொண்டு காண்க. மனவருத்தத்தாலும் அவமானத்தாலும இராவணன் தன்னைப் படர்க்கையில் வைத்துக் கூறுகின்றான். கொள்கை: தொழிற்பெயர்.

பா-ம். 1. ஏற்றரும்; அண்ணல்

2. காத்திடை; கழற்றி; காண்மன்; சால

3. நன்றும்

4. கொள்க; என்னினி.

296

2233. உண்டுல கேழுமேழு முமிழ்ந்தவ
னென்னு மூற்றம்
கொண்டவ னென்னொ டேற்ற செருவினின்
மறுக்கங் கொண்டான்
மண்டலந் திரிந்த போது மறிகடன்
மறிந்த போதும்
கண்டிலன் போலுஞ் சொற்ற கலுழனன்
றென்னைக் கண்ணால்.

'உலகு எழும் எழும் - பதினான்கு உலகங்களையும், உண்டு உமிழ்ந்தவன் என்னும் ஊற்றம் கொண்டவன் - தன்னுடைய வயிற்றில் அடக்கிக்கொண்டு (மீண்டும் படைப்புக்காலத்து) வெளிப்படுத்தினவன் என்னும் வன்மையைக்கொண்டவனான திருமால் (முன்பு), என்னொடு ஏற்ற செருவினில் - என்னுடன் எதிர்த்துப் புரிந்த போரில், மறுக்கம் கொண்டான் - கலக்கம் உற்றவனாய்; (புறங்காட்டி ஓடி), மண்டலம் திரிந்தபோது - பூமண்டலம் எங்கும் சுற்றியலைந்த காலத்தும், மறிகடல் மறிந்தபோதும் - அலைகள் கரைக்கண் மோதி மயங்குகின்ற கடலில் ஒளிந்தபோழ்தும், சொற்ற கலுழன் - (இவர்கள்) எடுத்துச்சொன்ன கருடன், என்னை கண்ணால் கண்டிலன் போலும் - என்னைக் கண்ணால் பார்த்திலன் போலும்.

உண்டுலகேழும் எழும் உமிழ்ந்தவன் : 'உண்டும் உமிழ்ந்தும் கடந்தும் இடந்தும் கிடந்தும் நின்றும்' (திருவாய். 4 : 5 · 10); 'ஒருவாயின் விழுங்குதியால் திருவான நிலமகளை' (ஆரணிய. 58). மூன்றுமடியிற் கூறப்பட்டவை வெகுகாலத்திற்கு முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சிகள். முதலடியிலிருந்து இராவணன் இராமபிரானைத் திருமாலாகக் கருதியது வெளியாகும். போலும் : ஒப்பில்போலி.

பி - ம். 3. மறித்த, மருத்த, கடந்த. 297

2234. கரங்களி னேமி சங்கந் தாங்கிய கரியோன் காக்கும்
புரங்களு மழியப் போன பொழுதிலென் சிலையிற் பொங்கி
உரங்களின் முதுகிற் றோளி னுறையுறு சிறையி னுற்ற
சரங்களு நிற்க வேகொல் வந்ததவ் வருணன் தம்பி.

'கரங்களில் நேமி சங்கம் தாங்கிய - திருக்கைகளிலே ஆழிப் படையையும் சங்கத்தையும் ஏந்தி நிற்கும், கரியோன் காக்கும் - கருநிறத்தவனாகிய திருமால் காக்கின்ற, புரங்களும் அழியபோன பொழுதில் - நகர்களும் அழியுமாறு (நான்) போர்க்குச்சென்ற அக்காலத்து, என் சிலையில் பொங்கி - என் வில்லினின்று மிக்குக் கிளம்பி, உரங்களில் முதுகில் தோளின் உறை உறு சிறையின் உற்ற - தனது மார்பிலும் முதுகிலும் தோளிலும் தன் பக்கத்தில் உள்ள சிறகுகளிலும் சென்று தைத்த, சரங்களும் - அம்புகளும், நிற்கவே கொல் - நிலைபெற்றிருக்கவும், அவ் அருணன் தம்பி வந்தது - அந்த அருணன் தம்பியான அக்கருடன் (என் பகைவர்க்கு) உதவி செய்ததோ ?.

கரியோன் காக்கும் புரங்கள்: திருமால் உபேந்திரனாக வந்து காத்த தேவலோக நகரங்கள். நேமிசங்கம்: இவை கட்கம், கதை கட்கம் சார்ங்கம் ஆகிய ஏனைய ஆயுதங்கட்கும் உபலக்ஷணம்; சங்கம், ஆயுதம் எனப்பட்டது. அதன் முழக்கத்தாலேயே பகைவர் அஞ்சுவராகலின்; அருணன் தம்பி என்றது இகழ்ச்சி. அருணன்: காசியப முனிவர்க்கு விந்தையிடம் பிறந்தவன்; சூரியனுடைய தேர்ப்பாகன். சரங்கள் நிற்கவே கொல்; யுத்த. 127 காண்க.

பி-ம். 1. இழிய; போழநினின்

3. மார்பிற்; உறைவன; பிறகின

4. வந்தனன். 298

## இராவணன் இந்திரசித்தை மீண்டும் பொரத்தூண்டுதல்

2235. ஈண்டது கிடக்க மேன்மே லிசைந்தவா
றிசைக வெஞ்சி
மீண்டவர் தம்மைக் கொல்லும் வேட்கையை
வேட்கு மன்றே
ஆண்டகை நீயே யின்னு மாற்றுதி
யருமைப் போர்கள்
காண்டலு நாணு மென்றான் மைந்தனுங்
கருத்தைச் சொன்னான்.

'ஈண்டு - இப்பொழுது, அது கிடக்க - அது ஒருபுறமிருக்க, மேன்மேல் இசைந்தவா இசைக - இனி முடிந்தபடியே முடியட்டும்; எஞ்சி மீண்டவர் தம்மை - இறவாது உயிர் மீண்டும் வரப்பெற்றவர்களை, கொல்லும் - (மீண்டும்) கொல்லவேண்டும் என்ற, வேட்கையை - விருப்பத்தை, வேட்கும் அன்றே - கைக்கொள்ள விரும்புவோம் அன்றோ? ஆண்டகை - வீரனே! நீயே - நீதானே, இன்னும் - இன்னும், அருமை போர்கள் ஆற்றுதி - அரிய போர்களைப் புரியக்கடவாய்; காண்டலும் - நீ போர்புரிவதைக் காணும் அளவில் (அந்தக் கருடன்), நாணும் - வெட்கமுறுவான்', என்றான் - என்று பகர்ந்தான் இராவணன்; மைந்தனும் கருத்தை சொன்னான் - மகனான இந்திரசித்து (தன்) கருத்தை வெளியிட்டான். அதனை அடுத்த கவியிற் காண்க.

அது - நடந்த நிகழ்ச்சி.

பி - ம். 1. ஈண்டிது ; இயைக

3. இன்னும், பின்னும்

4. காண்டிடும், காண்டது ; யானும், நாணம், யானே. 299

## இந்திரசித்து போர் புரிவேன் எனல்

2236. இன்றொரு பொழுது தாழ்த்தெ
னிகற்பெருஞ் சிரம நீங்கிச்
சென்றொரு கணத்தி னாளை
நான்முகன் படைத்த தெய்வ
வென்றிசெய் படையி னாலுன்
மனத்துயர் மீட்பெ னென்றான்
நன்றென வரக்கன் போய்த்த
னளிமலர்க் கோயில் புக்கான்.

இந்திரசித்து இராவணனை நோக்கி), 'இன்று ஒரு பொழுது தாழ்த்து - இன்று ஒருநாள் மட்டும் தாமதித்து என் இகல் பெரு சிரமம் நீங்கி - எனக்குப் போரில் உண்டான களைப்பினைத் தீர்த்துக் கொண்டு, நாளை - நாளைக்கு, (களம்புக்கு), ஒரு கணத்தில் - ஒரு நாழிகைப் போழ்தில், நான்முகன் படைத்த தெய்வ வென்றி செய் படையினால் - பிரமனாற் படைக்கப்பட்ட தெய்வத்தன்மை வாய்ந்த வெற்றியே என்றும் விளைவிக்கவல்ல பிரமாத்திரத்தால், உன் மனம் துயர் மீட்பென் - உனது மனத்துன்பத்தை அகற்றுமாறு (பகைவர்களைக் கொல்வேன்)' என்றான் - என்று பகர்ந்தான் ; 'நன்று - நல்லது', என - என்று கூறி, அரக்கன் - இராவணன், போய் - சென்று, தன் நளிமலர் கோயில் புக்கான் - சிறந்த மலர் களால் புனையப்பெற்ற தன் அரண்மனையை அடைந்தான்.

ஒரு பிரதியில் இங்கு பாசப்படலம் முற்றிற்று என்று எழுதப் பட்டுள்ளது.

பி - ம். 1. தாழ்த்தே ; நீக்கிச்.

2. அளித்த.

4. நளிர்மதிச், நகரினிற், சென்று. 300

---

## இப் படலத்தைக் குறித்து இந்நூலும் முதனூலும் கூறுவன:—

இந்திரசித்து வஞ்சனையால் விண்ணில் மறைந்து நின்று நாகாத்திரத்தால் இராம இலக்குவரைப் பிணித்தனன். இராம இலக்குவர்கள தளர்ந்து தரையில் சாய்ந்தனர். இவர்கள் நிலையைக் கண்டு அநுமன் முதலிய வாநர வீரர்களும் வீடணனும் புலம்பினர். மேகநாதன் வானத்து மறைந்திருப்பதை வீடணன் மட்டும் கண்டான். இந்திரசித்து மறைந்து நின்றே வாநர வீரர்களை மேலும் தாக்கினன். பின்னர் எதிரிகள் வீழ்ச்சியுற்றதைக் கண்டு மெச்சித் தன் அரண்மனைக்குச் சென்றான இராவணி. கலங்கி நின்ற சுக்கிரீவனை வீடணன் தேற்றினன். தேற்றும்போது வாநர வீரர்களைக் காப்பது கடமை என்றும், இராமபிரான் முகத்தில் உயிர்க்களை மறையவில்லை யாகலின் அவன் மீண்டும் எழுவான் என்றும் கூறினன். இடை நடுவில், இந்திரசித்து, தன் வீரச் செயலைத் தந்தையிடம் கூற, இராவணன் பெரிதும் மகிழ்ந்தான். இந் நிலையில் இராவணன் சீதா தேவியைப் புட்பக விமானத்தில் ஏற்றிப் படுகளத்தை அவட்குக் காட்டுமாறு பணிமாக்களை ஏவி, இராம இலக்குவர்கள் இறந்து பட்டனர் என்றும் கூறுமாறு சொன்னன். சீதாதேவி சாய்ந்து கிடந்த இராம இலக்குவரைக் கண்டு புலம்பினள். அக் காலையில் திரிசடை, பிராட்டியை நோக்கி, இராம இலக்குவர் இறந்தது உண்மையானல், புட்பக விமானம் தம்மையும் பிறரையும் தாங்கி நில்லாது என்றும், அதுகொண்டு அவர் உயிர்க்கு எவ்வித இடரும் இல்லை என்றும் சொல்லித் தேற்றினள்.

இந் நிலையில் இராமபிரான் தனது அதிக பலத்தாலும் தைரியத்தாலும் மூர்ச்சை தெளிந்து எழுந்தான். எழுந்து இலக்குவன் சாய்ந்திருந்த நிலையைக் கண்டு பலவாறு பிரலாபித்தார். வீடணன் அப்பொழுது அங்கு வந்தான். சுக்கிரீவன் மாமனரான சுடேணன் இறந்தவர்களைப் பிழைப்பிக்கக் கூடிய சஞ்சீவகரணி முதலிய அரிய மூலிகைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுது, கருடபகவான் அங்கு எழுந்தருளி இராம இலக்குவரை நாகபாசத்தினின்றும் விடுவித்தான். 'இராமபிரான் உபசார மொழி கூற, பெரிய திருவடி, தான் இன்னன் என்றதைத் தெரிவித்துப் போரில் ஆற்ற வேண்டியவற்றை ஆற்றி முடிந்த பின்னர், இராமபிரானே தன்னை இன்னன் என்று அறிந்துகொள்ளக் கூடும் என்று சொல்லி விடைபெறுகின்றுன்.

கம்பர் கவிதையில், அதிகாயனைக் கொன்றவர்கள் யார் என்று இராவணன் இந்திரசித்துக்குக் கூறுதலும், இந்திரசித்து நாக பாசத்தால் எதிரியினைப் பிணித்திடுவதாகச் சூளுறவு செய்து, இலக்குவனையும் வானரப் படையினையும் எதிர்த்தலும், வானரப் படைகளின் அருமையான போர் நிகழ்ச்சிகளும் இந்திரசித்தின் இணையற்ற வீரமும், இருள் எழுந்த அளவில், இராவணி விண்ணில் மறைந்து நாகாத்திரத்தை விடுத்து இலக்குவன் முதலானோரைக் கட்டுதலும், கட்டப்பட்டவர்களின் அவல நிலையும், வீடணன் கலக்கமும், இராமபிரான் அக்கினியத்திரத்தால் இருளை அகற்றிப் போர்க்களத்து இறந்து வீழ்ந்தவர்களைக் கண்டு புலம்பலும், வீடணன் தேற்றுதலும், இந் நிலையில் கருட பகவான் வந்து பல அரிய பாடல்களால் திருமாலின் அவதாரமான இராமபிரானைப் புகழ்தலும், புகழ்ந்து தன் சிறகுகளை வீசி நாகபாசத்தை அழித்தலும், இராமபிரான் பெரிய திருவடிக்கு முகமன் கூறி அவனை யார் என்று வினவுதலும், கருடபகவான் தான் இன்னான் என்று குறிப்பாகக் கூறி, 'அரக்கனோடு மறவினை முடித்த:பின்னர் வருவனின் னுழையன், மாயப் பிறவியின் பகைஞ' என்று கூறி விடை பெறுதலும், பிறவும் காணலாம். சுசேஷணன் சஞ்சீவகரணி முதலியவற்றைக் கூறியது கம்பர் காவியத்தில் இல்லை. மற்றும் கருட பகவான் கூறிய அருமையான தோத்திரங்களும் விரிவாக முதனூலிற் காணப்பெறவில்லை. தெய்வத் தன்மை வாய்ந்த இந்தத் தோத்திரங்களை முறையாகப் பயின்று அரவின் விடத்தைச் சிலர் மாற்றி வருகின்றனர் என்பது கேட்கப்படுவது ஒன்று.

---

# 19. படைத்தலைவர் வதைப் படலம்

[இலக்குவன்மீது இந்திரசித்து விடுத்த நாகபாசம் கருடாழ்வாரின் உதவியால் விடுபட்டதை அறிந்த இராவணன், இந்திரசித்தை மறுமுறை போருக்கெழ வேண்ட, அவன் அன்று, தான் எழுவியலாமையைத் தெரிவிக்க, இராவணன் மகாபாரிசுவன் முதலிய தன் படைத் தலைவர்களை ஏவியதையும், அவர்கள் வதையுண்டதையும் கூறும் படலம் என விரியும்.]

ஒரு பிரதியில் இதுவும் அடுத்த படலமும் சேர்க்கப் பெற்று, கங்குல் மகாராட்சசப் படைத்தலைவர் மகரக்கண்ணன் வதைப்படலம் என்ற பெயருடன் காணப் பெறுகிறது.

### வாநரர்கள் ஆர்த்தெழும் ஓசையைக் கேட்டு அரக்கர் போர் விரும்பி இராவணனிடம் விடை கேட்டல்

2237. ஆர்த்தெழு மோசை கேட்ட வரக்கரு முரச மார்ப்பப்
போர்த்தொழில் வேட்கை பூண்டு பொங்கினர் புகுந்து
[மொய்த்தார்
தார்த்தட மார்பன் றன்னைத் தாவிடை யென்னச் சார்ந்தார்
பார்த்தனன் முனிந்து மன்ன னினையன பகரும் காலை.

ஆர்த்து எழும் ஓசை கேட்ட - ஆரவாரித்து எழுந்த ஒலியைக் கேட்ட, அரக்கரும் - இராக்கதரும், முரசம் ஆர்ப்ப-போர் முரசம் முழங்க, பொர்த் தொழில் வேட்கை பூண்டு - போர்த் தொழிலில் ஆசை கொண்டு, பொங்கினர் - சினம் மிகுந்தவராய், புகுந்து - இராவணனிடம் சென்று, மொய்த்தார் - (அவனைச்) சூழ்ந்தவராய், தார்தட மார்பன் தன்னை - மாலை புனைந்த விசாலமான மார்பினையுடையவனான இராவணனைப் பார்த்து, 'விடைதா - உத்தரவு அளியுங்கள்', என்ன சார்ந்தார் - என்று சொல்லிக் கொண்டு அணுகினர்; மன்னன் -இராவணனும், பார்த்தனன் - (அவர்களைக்) கண்ணுற்று, முனிந்து - வெகுண்டு, இனையன பகரும் காலை - இவ்வார்த்தைகளை மொழியும்போது.

தாவிடை - பணியாளர்களாதலின் தா என்றார்; 'ஈ தாவெனும்' என்ற நன்னூல் சூத்திரம் காண்க. பார்த்தனன் - முற்றெச்சம்.

பி - ம். 2. வேடம்; பொங்கியே.

3. சொன்னார்.

4. அரக்கர் கோனும் போமெனப் பகருங்காலை 1

## தம்மைப் போருக்கு ஏவுமாறு கேட்ட வீரர்க்கு இராவணன் விடைதர, தூதுவர் பொறாமல் அவர் தன்மையை இராவணனிடஞ் சொல்லத் தொடங்குதல்

2238. மாபெரும் பக்க னோடு வான்புகைக் கண்ணன் வந்திங்
கேவுதி யெம்மை யென்றா னவர்முக மினிதி னோக்கிப்
போவது புரிதி ரென்னப் புகறலும் பொறாத தூதர்
தேவமற் றிவர்கள் செய்கை கேளெனத் தெரியச்
[சொன்னார்.

மாபெரு பக்கனோடு - மகாபாரிசுவன் என்பவனோடு, வான் - உயர்ந்த, புகை கண்ணன் - துமிராட்சன், வந்து - வந்து, 'இங்கு - இப்போரில், எம்மை ஏவுதி - எங்களை ஏவுவாயாக', என்றான் - என்று சொல்லுதலும், அவர் முகம் இனிதின் நோக்கி - (இராவணன்) அவர் முகத்தை இனிமையுடன் பார்த்து, 'போவது புரிதிர் - (போர்த் தொழிலுக்குப்) போவதைச் செய்க', என்ன புகறலும் - என்று மொழிந்த அளவில், (அதனைக் கேட்டுப்) பொறாத தூதர் - மனம் தாளாத தூதுவர்கள், "தேவ - இறைவனே! 'இவர்கள் செய்கை கேள்' - இவர்கள் புரிந்த செயலைக் கேட்பாயாக, என; என்று, தெரிய சொன்னார் - விளங்கக் கூறலாயினர். மற்று : வினைமாற்று.

அவர்கள் கூறியதை அடுத்த கவியிற் காண்க.

பி - ம். 1. மரபுகைக்; கன்ன; நீயும்.

2. ஏகுமினென்னப் பாராவவர், ஏவுதி வெம்மை யென்பார்தம், ஏவுதி யெம்மை யென்றாரவன், ஏவுறுமெம்மை யென்பார் தம் இனிது.

3. என்ன; புகுதலும். 3

2239. ஆனையும் பரியுந் தேரு மரக்கரு மமைந்த வாழித்
தானைகள் வீய நின்ற தலைமகன் றனிமை யோரார்
மானவன் வாளி வாளி யென்கின்ற மழலை வாயர்
போனவர் மீள வந்து புகுந்தனர் போலு மென்றார்.

'ஆனையும் பரியும் தேரும் - ஆனையும் குதிரையும் தேரும், அரக்கரும் - (காலாட்களான) இராக்கதரும், (என்ற நால்வகைப் படையும்), அமைந்த - ஒன்றாகக் கூடிய, ஆழி தானைகள் - கடல் போன்ற சேனைகள், வீய - மரிக்க, நின்ற தலைமகன் - (தனியே) நின்ற தலைமகன் ஆன, (இந்திரசித்தின்) தனிமை ஓரார் - தனிமை யைச் (சற்றும்) எண்ணாமல், 'மானவன் வாளி, வாளி - பெருமை மிக்கானுடைய அம்பு அம்பு', என்கின்ற மழலை வாயர் - அம்பு அம்பு என்று மொழிகின்ற குதலைச் சொல்லைச் சொல்லும் வாயினை உடையவராய், போனவர் - (அஞ்சி) ஓடியவரான, (பெரும்பக்கனும் புகைநிறக் கண்ணனும்), மீளவந்து - மீட்டும் வந்து, (தமது ஆண்மையைக் காட்டுமாறு), புகுந்தனர் போலும் - புக்கனர் போலும்', என்றார் - என்று கூறினர் (தூதுவர்).

போனவர் மீளவந்து என்றது நகையாடிக் கூறியது; (ஒப்பு.) 'இறைவன் மைந்தன் பட்டானென்பது கேட்டுத் திருகினர் முதுகிட்டுப் பறந்த வீரர்' (வி. பா. 13; ஆம்போர். 135); என்ற இடத்துப் போல. முன்பட்ட பாட்டை யுன்னி 'மானவன் வாளி வாளி என்கின்ற மழலைவாயர்' என்று பிதற்றினர் என்க. கிளி யின் குரலுக்கும் சிறு குழந்தைகளின் குழலைச் சொல்லுக்கும், 'மழலை முழவம்' என்ற இடத்துப் போன்று, சிறுபான்மை வாத்தி யங்களுக்கும் வழங்கும் மழலை என்னும் சொல், வயதுவந்த வீரரின் பிதற்றலுக்குக் கூறப்பட்டமை காண்க. 'குதலையும் மழலையும் எக் காலத்துக்கும் கூறுப' என்று ஆசிரியர் கூறியதும் இங்குக் குறிக் கொள்க. போலும் : ஒப்பில் போலி.

பா-ம். 1. ஐய ; ஆளித் ; பாளித் ; வெள்ளைத்.

2. தானையும்.

3. வாயார்.

4. ஆனவர் ; புகுந்துளார் ; அரச.

## வேறு

### அரக்கர் இருவரையும் இராவணன் பற்றுமினெனல்

2240. அற்றவர் கூறலு மாரழ லிற்ருய்
முற்றிய கோப முருங்க முனிந்தான்
இற்றது வோவிவர் சேவக மென்னுப்
பற்றுமி னென்றனன் வெம்மை பயின்ருன்.

அற்று அவர் கூறலும் - அவ்வாருன சொற்களை அந்தத் தூதுவர் பகரவும், வெம்மை பயின்ருன் - கடுமையிற் பழகியவன் ஆன இராவணன், ஆர் அழலிற்ருய் - நிறைந்த நெருப்பின் தன்மையைக் கொண்டதாய், முற்றிய கோபம் முருங்க முனிந்தான் - முதிர்ந்த சினத்தால் (தன் வசம்) தப்புமாறு மிகவும் வெகுண்டவனுய், 'இவர் சேவகம் இற்றதுவோ - இவர் வீரம் இத்தலைகயதோ', என்னு - என்று மொழிந்து, 'பற்றுமின்' (இவர்களைப்) பிடியுங்கள், என்றனன் - என்ருன். ஓ : வினு.

முற்றிய கோபம் என்னுது ஆரழலிற்ருய் என்று கூறியது அரக்கர் கோமானுடைய தாங்கற்கரிய சீற்றத்தைக் குறிக்க. இச் செய்யுட் சந்தத்துடன் சுந்தர. 1227-1233 செய்யுட்களை ஒப்பு நோக்குக. இற்று - இப்படிப்பட்டது; அது பகுதிப் பொருள் விகுதி எனக் கொள்க. சேவகம் : வீரம்; 'என்னெடுஞ் சேவகம் தோற்க' (யுத்த. 1946). 'வீரச் சேவகச் செய்கை' (யுத்த. 1240).

பி - ம். 1. அற்றதுணர்த்தலும்; அழலிற்காய்.
3. இற்றிது. 4

### கிங்கரர் அவ்விருவரையும் பற்றுதல்

2241. என்றலு மெய்தினர் கிங்கர ரென்பார்
பின்றலி லேரை வலிந்து பிடித்தார்
நின்றன ராயிடை நீல நிறத்தான்
கொன்றிடு வீரலிர் கொண்மினி தென்ருன்.

என்றலும் - என்று மொழிந்தவுடன், கிங்கரர்கள் - பணியாளர்கள், என்பார் - என்று கூறப்படுபவர். எய்தினர் - வந்து, பின்றலினேரை - பின் வாங்கிய அவர்களை, வலிந்து பிடித்தார் - வலியப் பற்றினர்; (அப்போது), நீல நிறத்தான் - நீலமேனியனான இராவணன், 'கொன்றிடுவீரலிர்' - இவர்களைக் கொல்ல வேண்டாம், இது கொண்மின் - (இப்போது) யான் கூறப் போவதை மனத்துட் கொள்ளுங்கள்', என்றான் - என்று மொழிந்தான்.

கிங்கரர் - எப்பொழுது எந்தப் பணியைக் குறிப்பிட்டாலும் வெகு விரைவிற் புரிபவர். ஆயிடை: அவ் + இடை என்ற பதம் பிரிப்பர்; பதிற்றுப் பத்துக் குறிப்புரை காண்க. நீலநிறத்தான் இராவணன்; 'நீலமா மணிநிற நிருதர் வேந்தனை, மூலநா சம் பெற முடிக்கு மெய்ம்பினாள்' (ஆரணிய. 227).

பி - ம். 2. பின்றலினேரை யுடன்று பிடிந்தே.

4. கொன்றிடுவிரேனக் கொல்லலிர்; கொன்றிடு வீரர் கேண்மினிது, கொன்றிடு விரலிர் கொண்மினிர். 5

## அவ்விருவரையும் மூக்கறுத்துப் பறைசாற்றி ஊர்க்குத் தெரிவிக்குமாறு இராவணன் கட்டளையிடுதல்

2242. ஏற்ற மினிச்செயல் வேறிலை யீர்விர்
நாற்ற நுகர்ந்துயர் நாசியை நாமக்
கோற்றரு திண்பணை கொட்டினிர் கொண்டூர்
சாற்றுமி னஞ்சின ரென்றுரை தந்தே.

'நாற்றம் நுகர்ந்து உயர் நாசியை ஈர்விர் - நாற்றத்தை உட்கொண்டு ஓங்கித் தோன்றுகின்ற இவர்களின் மூக்கினை அறுத்திடுவீர்; (பின்னர்) ஊர் கொண்டு - ஊர்க்குள் அழைத்துச் சென்று, அஞ்சினர் - (இவர்கள்) பயந்தவர்கள், என்று உரை தந்து - என்றுசொல்லி, நாமம் கோல் தரு - சிறந்த, கடிப்பினால் அடிக்கின்ற, திண்பணை கொட்டினிர் - உறுதியான பறையை அறைந்த வண்ணம், சாற்றுமின் - தெரிவியுங்கள்; இனி ஏற்றம் செயல் வேறு இலை - இனித் தக்க செயல் (இதனின்) வேறில்லை,' என்று உரை தந்து - என்று கட்டளையிட்டு. ஏ: அசை.

ஏற்றம் செயல் என்க. கோல்: பறையடிக்கும் தடி.

பி - ம். 1. யிர்ந்து' ஈர்ந்தவர்.

2. நுகர்ந்திடு ; ஈவிர்.

3. கோற்றெரு, கொட்டினர் ; கொண்டே.

4. சாற்றினர் ; என்றநலைந்தான். 6

## மாலி அச்செயலைத் தடுத்தல்

2243. அக்கண னேயயில் வாளினர் நேரா
மிக்குயர் நாசியை யீர விரைந்தார்
புக்கன ரப்பொழு திற்புகழ் தக்கோய்
தக்கில தென்றனன் மாலி தடுத்தான்

அக்கணனே - அப்போதே, (கிங்கரர்) நேரா - உடன்பட்டு, அயில் வாளினர் - கூரிய வாளினை யுடையவராய், மிக்குஉயர் நாசியை ஈர விரைந்தார் - மிகவும் எடுப்பான மூக்கினை அறுப்பதற்கு விரைந்து சென்றார்; அப்பொழுது-அச் சமயத்தில், மாலி - மாலி என்பவன், (இராவணனைப் பார்த்து), 'புகழ் தக்கோய் - புகழால் மேம்பட்டவனே ! தக்கிலது - (இச் செயல்), செய்யத் தக்கதன்று,' என்றனன் தடுத்தான் - என்று சொல்லித் தடை செய்தான்.

கணம்: கணன் போலி. ஈர்தல்: அறுத்தல்; 'கண்ணை யீர்கிலாக் கள்வனேன் யான்' (அயோத்தி. கங்கைப்: 44); தக்கிலது; 'தக்கிலதென்னும் பக்கம்' (கிட்கிந்தா. 312); அரக்கரிடத்தில் சில நற்பண்புகள் இல்லாமல் இல்லை. இங்கு மாலி தடுத்தது காண்க. மாலி: யுத்த. 898; குறிப்புக் காண்க. இவன் கடுமையான தவம் புரிந்தவன் என்றும், சூலியென்ற சிவபிரானும் இவனைக் காணில் அஞ்சுவன் என்றும் வீடணன் கூறுவன். (யுத்த. படைத்தலைவர். 35); மற்றும் படைத்தலைவர், 7, 21, 35; மூலபல. 52, 75-ம் காண்க.

பி - ம். 1. அரிவாளினர் ; ஆறேர், வாளால் வந்தார்.

3. புக்கனன். 7

## மாலி மூக்கை யரிதலாகா தென்பதற்கு நியாயங் காட்டுதல்

2244. அஞ்சம மஞ்சி யழிந்துள ராஞேர்
வெஞ்சமம் வேறலும் வென்றிய தின்ருய்த்
துஞ்சலு மென்றிவை தொல்லேய வன்ரே
தஞ்சென வாருள ராண்மை தகைந்தார்.

'அம் சமம் அஞ்சி அழிந்துளர் ஆயினர் - அழகிய போரில் பயந்து ஒருமுறை அழிந்தவர் ஆனோர், (பின்னர்) வெம் சமம் வேறலும் - கடுமையான போரில் வெல்லுதலும், வென்றியது இன்ருய் - வெற்றி என்பது இல்லாமல், துஞ்சலும் - மடிதலும், என்று இவை தொல்லேய அன்ரே - பழமையாக நடைபெற்று வருவதன்ரே? ஆண்மை தஞ்சு என தகைந்தார் ஆர் உளர் - வீரத்தைத் தஞ்சமாக (தம்மிடத்து)த் தடுத்து வைத்திருப்பவர் யாவர் உள்ளனர்? ஏ : தேற்றம்.

'ஒருமுறை போரில் பின் வாங்கியவர் பின்னும் போர்மேற் சென்று வெற்றி பெறுதலும் கூடும், ஆண்மையைப் பிறரிடம் செல்லாமல் தடுத்துத் தன்னிடமே நிலேயாக இருக்குமாறு செய்தல் எவர்க்கும் இயலாததொன்று, என்று மாலி கூறினன். 'வென்றவர் தோற்பர் தோற்ருேர் வெல்குவர் எவர்க்கும் மேலாய், நின்றவர் தாழ்வர் தாழ்ந்தோர் உயர்குவர் நெறியுமஃதே, என்றனர் அறிஞர் அன்றே' (யுத்த. 1347); துஞ்சல்: துயர் கொண்டு மடிதல். தகைதல் : தடுத்தல்; 'தருதல் : தகையாதல் மற்று' (கலித். 92:9).

பி - ம். 1. சமர்; ஆறல்.
2. வென்றலும், வென்றியரன்ரே, வென்றியதன்ரே, வென்றியதன்ருய், வென்றியதன்றே.
3. தொல்லேயவன்ரே.
4. தகைந்தாய், தகைந்தே. 8

2245. அந்தர மொன்று மறிந்திலே யன்றே
வந்தது நம்வயி னெத்தனே மன்னு
தந்திரம் வானவர் தானவ ரென்னும்
இந்திர னஞ்சின னென்னுதி யன்றே.

'மன்னு - அரசே! அந்தரம் ஒன்றும் அறிந்திலை - (நீ வேற்றுமை சிறிதும் தெரிந்தாயில்லை; வானவர் தானவர் என்னும் எத்தனை தந்திரம் - தேவர் தானவர் என்கின்ற எவ்வளவு படை, நம் வயின் வந்தது - நம்மிடத்து(ப் பொருதற்கு) வந்தது; (அதெல்லாம் முறியடிக்கப்பட்டு ஓட வில்லையா)? இந்திரன் அஞ்சினன் - இந்திரனும் பயந்தானே; எண்ணுதி - அதனை ஆலோசிப்பாயாக; அன்று: தேற்றம்; ஏ: அசையுமாம்.

அந்தரம்: வேற்றுமை. 'அந்தரம் தெரிதல் தேற்றார் அருங் கவிப் புலவர் அம்மா' (யுத்த. 781); 'அந்தரமுணரின்' (யுத்த. 1582); தந்திரம்; "தந்திரக் கடலை நீந்தி' (யுத்த. 1333); வானவர் தோற்றமை இங்குக் குறிக்கப் பெற்றது. இந்திரனும் வானவரில் ஒருவன் எனினும்; தனிச் சிறப்புப் பற்றி அவனைத் தனித்துக் கூறினார்' (ஒப்பு.) 'முனிவரும் வந்தார் அகத்தியரும் வந்தார்' என்ற இடத்துப் போல.

பி - ம். 2. வந்தன, வந்தனை எத்துணை.

3. நந்திர; ஏனும், ஏன்றும்.

4. இந்திரர் அஞ்சினர். 9

2246. வருண னடுங்கினன் வந்து வணங்கிக்
கருணை பெருந்துணை யும்முயிர் காலா
இருணிற வஞ்சக ரெங்குள ரெந்தாய்
பருணிதர் தண்டமி தன்று பகர்ந்தால்.

'வந்து வணங்கி - (இராமபிரானிடம்) வந்து பணிந்து, கருணை பெறும் துணையும் - அவனுடைய அருள் கிட்டுமட்டும், வருணன் உயிர் காலா நடுங்கினன் - வருணன் பெருமூச்செறிபவனாகி உடல் நடுக்குற்றான்; (அந்த இராமபிரானிடம் தேவர்களே அஞ்சும் போது), இருள் நிற வஞ்சகர் எங்கு உளர் - இருள் நிறம் கொண்ட வஞ்சகராகிய இராக்கதர் எங்கே இருப்பர்; (இராமபிரான் எதிர் நிற்க இயலாது), எந்தாய் - என் தந்தையே, பகர்ந்தால் - கூறுமிடத்து, இது - மூக்கினைத் துணிப்பது என்ற இச்செயல், பருணிதர் தண்டம் அன்று - அறிவாளிகள் செய்வதற்குரிய தண்டனை அன்று.

காலா - காலுதல்; செய்யா என்னும் வாய்பாடு. பருணிதா : 'பன்னெறி தோறுந் தோன்றும் பருணிதர்' (யுத்த. விடை கொடுத்த. 12). உயிர் - உயிர்ப்பு.

பி - ம். 1. உயிர் காலவான்.

3. இருணிறை; உய்ந்தார்.

4. பகர்ந்தார்; பகர்ந்தான். 10

2247. பத்தொரு நாலு பகுத்த பரப்பின்
அத்தனை வெள்ள மரக்க ரவிந்தார்
ஒத்தொரு மூவர் பிழைத்தன ருய்ந்தார்
வித்தக யாரினி வீரம் விளைப்பார்.

'பத்து ஒரு நாலு வெள்ளம் பகுத்த பரப்பின் - நாற்பது வெள்ளமாகப் பிரிக்கப்பெற்ற பரப்பினையுடைய, அத்தனை அரக்கர் அவிந்தார் - அத்தனை இராக்கதரும் இறந்துபட்டனர்; (அந் நாற்பது வெள்ளம் சேனையில்), ஒரு மூவர் - (புகைநிறக் கண்ணன் பெரும்பக்கன் இந்திரசித்து என்ற) மூவருந்தான், ஒத்து உய்ந்தார் உயிர் பொருந்திப் பிழைத்தனர்; வித்தக - சாமர்த்தியசாலியே! இனி - இனிமேல்; (இவர்களினும் மேலாக), வீரம் விளைப்பார் யார் - வீரம் காட்டற்கு எவர் இருக்கின்றனர்?.

பத்தொரு நாலு : 'பயிலும் காலம் பத்தொடு நாலும் படர் கானத்து' (யுத்த. பிரமாத்திர. 209); 'பத்து நாலும் பகலலவோ' (அயோத்தி. நகர்நீ. 22). வீரம் விளைப்பர் - வீரச் செய்கைகளைச் செய்வார்; 'வீரமே விளைப்பரேனும் நீதின்றி மீளவல்லான்' (யுத்த. 921). வித்தகம் - சமர்த்து; இங்குப் பலர் திரளாக மடிந்த போதும் தாம் மடியாது எதிர்த்துப் பிழைத்தமை என்க; 'வித்தக னொருவன்செய்த வினையமென்' (யுத்த. மகரக். 27).

பி - ம். 1. நான்கு.

2. இடைந்தார், அடைந்தார்.

3. பிரிந்தன, பிளந்தனர்.

4. ஆருளர். 11

2248. பாசமு மிற்றது பாதியின் மேலும்
நாசமு முற்றது நம்பி நடந்தாய்
பூசன் முகத்தொரு கான்முளை போத
நீசரை யீருதி யோநெடு நாசி.

'பாசமும் இற்றது - இலக்குவனைப் பிணித்த அரவக்கணையும் அறுபட்டுவிட்டது; பாதியின் மேலும் நாசமும் உற்றது - பாதிக்கு மேலாக (அரக்கர்படை) அழிவுற்றது; நம்பி - நம்பி! நடந்தாய் - (நீயும் ஒருமுறை யுத்தத்திற்குச்) சென்று திரும்பினை; பூசன் முகத்து - போர்முனையிலிருந்து, ஒரு - ஒப்பற்ற, கான் முளை போத - உன் மகன் வாளா திரும்ப, நீசரை - ஏழைப் பணியாட்களை, நெடு நாசி ஈருதியோ - நீண்ட மூக்கினை அறுக்கக் கடவையோ?

பாசம் - நாகபாசம்; நாசமும் உற்றது என்பதற்கு அரக்கர் படை என்ற எழுவாய் தருவிக்க. நாசமும்: இறந்தது தழுவிய எச்சவும்மை. நம்பி: அண்மைவிளி; ஆண்பாற் சிறப்புப்பெயர். பூசல் முகம் - போரரங்கு. கான்முளை - புதல்வன்; வமிசத்தில் உதித்தவன் என்பது உறுப்புப் பொருள். கால் - வமிசம்; 'இரவி கான்முளை' (கிட்கிந்தா. 667); 'சூரியன் கான்முளை' (கிட்கிந்தா. 684). நீசர் - இழிந்தவர்; இங்கே ஏவற்பணி புரிபவர். ஈர்தல்: 'கரபத்திரப் பத்தியினிர்ந்து வீழ்த்தும்' (ஆரணிய. 691). 'வெற்றியுறாது வெறுங் கையுடன் மீண்ட உன் மகனைக் கடிந்து நாசியை ஈர்தல் முறை; அதனைவிடுத்து இந்த எளியர் நாசியை அறுக்கப்புகுவது பொருந்துமோ' என்றபடி. ஒருவரை மானபங்கம் செய்வதற்கு அவருடைய மூக்கினை அறுத்தல் அக்கால வழக்கம்போலும்; கும்பகன்னன் மூக்குச் சுக்கிரீவனால் கடிபட்டதும், சூர்ப்பணகை நாசி இலக்குவனால் துணிபட்டதும் காண்க.

பிம். 2. நம்படை சாய்ந்து, நம்பி நடந்தான்.

3. பூசன் முடித்து; கார்முளை; போக, போகா,

4. வெட்டுதுமோ.

2249. வாழி யிலக்குவ னென்னின் மறுக்குற்
றாழி யரக்கர்தம் வாயி லடைப்பார்
ஏழு கடற்றுணை யோவினி நாசி
ஊழி யறுத்திடி னும்முல வாதால்.

'இலக்குவன் என்னின் - இலக்குவன் என்று சொன்ன அள விலேயே, மறுக்குற்று - மனக்கலக்கம் அடைந்து, ஆழி அரக்கர் தம் வாயில் அடைப்பார் - கடல்போன்று பரந்துநின்ற இராக்கதர் கள் தமது (மனை) வாயிலை மூடிக்கொள்வார்கள்; (ஆகவே, கோழை களாகிய அவர்கள் எல்லோருடைய மூக்கினையும் துணிக்க வேண் டும்; அங்ஙனம் ஆகில்), இனி - இனி; (அறுக்கப்பெறும்), நாசி - மூக்குகள், ஏழு கடல் துணையோ - ஏழுகடல் அளவுமட்டுமோ? (அவற்றினும் மிகுமல்லவோ,? அங்ஙனம்), அறுத்திடின் - துணிப்போமாகில், ஊழியும் உலவாது - ஊழிக்காலம்வரையில் துணித்துக்கொண்டிருப்பினும் (மூக்கெல்லாம்) அறுத்து மாளாது வாழி, ஆல் - அசைகள்.

அறுத்திடினும் என்றதில் உள்ள உம்மை ஊழி என்ற சொல்லுடன் இயைக்கப்பெற்றது. உலத்தல் - குறைதல்; 'உலவாக்காலம் தவமெய்தி' (திருவாச. திருச்சதகம். 54).

பி - ம். 1. என்ன, என்று.

4. அழியாதால் உலவாவால், ஒழியாதால். 13

2250. தூது நடந்தவ னைத்தொழு தந்நாள்
ஓது நெடுஞ்செரு வஞ்சி யுடைந்தார்
தீதிலர் நின்றவர் சேனையி னுள்ளார்
பாதியின் மேலுளர் நாசி படைத்தார்.

'ஓதும் நெடு செரு - (புகழ்ந்து) கூறப்படுகின்ற பெரும் போரில், அ நாள் - அக்காலத்தில், அஞ்சி - பயந்து, உடைந்தார் - தோல்வியுற்றவராய், தூது நடந்தவனை தொழுது - தூதாகவந்த அநுமனை வணங்கி, தீது இலர் - (இறப்புத் தவிர்ந்து) ஒரு கெடு தியுமின்றி, நின்றவர் - நின்றவராய், நாசி படைத்தார் - மூக்குட

ளிருப்பவராய், சேனையின் உள்ளார் - (இப்போது) நமது படையில் உள்ளவர், பாதியின் மேல் உளர் - பாதி அளவுக்கும் அதிகமாக உள்ளனர்; (அவர்கள் நாசிகளை எல்லாம் துணித்திருக்க வேண்டாவோ?).

தூது - அநுமன்; 'தீதிலராய் நமக்கன்பு செய்வரோ' (யுத்த. 378).

பி - ம். 1. அன்னார், அன்னன்.

3. நின்றுளர், நின்றனர்; நின்றார்.

4. பாதியினன்றுயர். 14

2251. விட்டிலை சீதையை யாமெனின் வீரர்
ஒட்டிய போருள தோவொரு நாளே
வெட்டுதி நாசியை வெந்தொழில் வல்லோர்
பட்டில ரென்றிலை யென்று பகர்ந்தான்.

'சீதையை விட்டிலையாம் எனின் - சீதையை விடாது சிறைப் படுத்தினால், வீரர் ஒட்டிய போர் ஒரு நாளே உளதோ - வீரர் சூளுறவு செய்தபடி (செய்த) யுத்தம் ஒரு நாளேனும் உண்டோ? வெம்தொழில் வல்லோர் பட்டிலர் - கடுமையான அமர்த் தொழிலில் வல்லவரான இராம இலக்குவரோ இறந்திலர்; (ஆகவே) நாசியை வெட்டுதி என்றிலை - (போர்க்குச் சென்றவர் அனைவோருடைய) மூக்குகளையும் அறுப்பாயென்று சொல்லினை யில்லை; (அவ்வாறு சொல்லுதல் அன்றோ முறை)', என்று பகர்ந் தான் - என்று மொழிந்தான்.

ஒன்று சீதையை உரியவர்பாற் சேர்த்திருக்க வேண்டும்; இன்றேல் சூளுறவின்படி போர் செய்திருத்தல் வேண்டும். போரில் வெற்றியோ இல்லை. இங்ஙனம் ஆகவும் இவர்கள் நாசியை வெட்டு வதால் என்னபயன் என்றான், இராவணனுக்கு மாமன் முறையின னமாலி. ஒட்டுதல்: பிரதிஞ்ஞை செய்தல்; 'ஒட்டிக் கொல்ல உணர்ந்து வெகுண்டான்' (யுத்த. 229); 'ஒட்டவுடனே யவனும்

வந்தவனை யுற்ருன்' (யுத்த. 848); ஒரு நாளே : ஒரு நாளேனும் 7 முதல் 15 வரை மாலிகூற்று.

பி - ம். 1. விர.

2. போரினிலாருளரொட்டார், நாளுளதோ வொருநாளே, நாளுளதே மொழியாமல்.

3. வெட்டிடு.

4. ஏனெனில், என்னகை, என்னிலை ; பகர்ந்தார். 15

## புகைநிறக் கண்ணனும் பெரும்பக்கனும் இராவணனிடம் கூறல்

2252. ஆறின னென்ப தறிந்தன ரன்னுர்
தேறினர் நின்றனர் சிந்தை தெளிந்தார்
சீறிய நெஞ்சினர் செங்கண ரொன்றே
கூறினர் தந்நிலை செய்கை குறித்தார்.

(மாலியின் சொற்களைச் செவியேற்ற இலங்காதிபன்), ஆறினன் என்பது அறிந்தனர் - சினம் தணிந்தான் என்பதை உணர்ந்தவராய், அன்னுர் - அந்தப் புகைநிறக் கண்ணன் பெரும்பக்கன் என்ற இருவரும், தேறினர் - தைரியமுற்று. சிந்தை தெளிந்தார் நின்றனர் - மனம் தெளிவடையப்பெற்று நின்று, சீறிய நெஞ்சினர் - வெகுண்ட உள்ளத்தினரும், செம்கணர் - (வெகுளியாற்) சிவந்த விழியினருமாகி, தம்நிலை செய்கை குறித்தார் - தம்முடைய நிலைமையையும் செயலையும் கருதி, ஒன்று கூறினர் - ஒன்று பகரலாயினர். இதனை மேல்வரும் மூன்று கவிகளிற் காண்க.

ஆறினன் - 'ஆறுவது சினம்' (ஔவை). அன்னுர் - புகைநிறக் கண்ணனும் பெரும்பக்கனும். சீறிய நெஞ்சும் செங்கணும் வெகுளியின் மெய்ப்பாடுகள். ஒன்றே : ஏகாரம் : தேற்றம். தந்நிலை செய்கை : உம்மைத் தொகை.

பி - ம். 1. பின்னரறிந்தனர், மன்னரறிந்திலன், என்னவறிந்தனர், என்னையறிந்தனர்.

2. தேறினனென்பது சிந்தை தெளிந்தார், தேறினரன்னது சிந்தையுணர்ந்தார் ; அன்றே, ஒன்றே.

4. கூறினரந்நிலை, கூறுவதிந்நிலை, கூறுவதந்நிலை, 16

இங்கு அதிகப்பாடல்கள் :—

மன்னவர் மன்னவ மற்றிது கேண்மோ
துன்னு மரக்கரின் வீரர் தொகைப்பட்
டுன்னிய நாற்பது வெள்ளமு முற்றுங்
கந்நர னம்பினி லாவி யழிந்தார். 1

மத்த மதக்கரி யோடு மணித்தேர்
தத்துறு வாசி தரைப்பில காலாள்
அத்தனை வெள்ளம் அளப்பில வெல்லாம்
வித்தக மானிடன் வாளியின் வீந்த. 2

2253. உன்மக னொல்கி யொதுங்கின னொன்றோ
மின்னகு வானிடை யேகி விரைந்தே
அன்னதின் மாயை யியற்றி யகன்றான்
இந்நக ரெய்தின னுய்ந்தன னெந்தாய்.

'எந்தாய் - என் தந்தை' போன்றவனே! உன் மகன் ஒல்கி ஒதுங்கினன் - உன் மகன் இந்திரசித்து தளர்ந்து விலகினான்; ஒன்றோ - இஃது ஒன்றுதானோ? மின் நகும் வானிடை விரைந்து ஏகி - மின்னல் ஒளி செய்கின்ற ஆகாயத்திலே விரைந்து போய், அன்னதின் - அங்கு, மாயை இயற்றி அகன்றான் - மாயை நீங்கிப் போய், இ நகர் எய்தினன்-இந்த நகரத்தை அடைந்தான், ஓகாரம்- எதிர்மறை.

பி - ம். 1. அஞ்சி ; அன்றோ

2. ஏக ; விரைந்தான்

3. அன்னது

4. இயற்றி யகன்றே, இயற்றிய தென்றான்.

2254. இப்பக லொன்றினி னுளையி னெல்லாம்
முப்பக ரீர்க்கில மாவி முடிப்போம்
வெப்பக லாவெரி வெந்தழல் வெந்த
செப்பகல் வெண்ணெயி னேன்மை தெரிந்தோய்.

'வெப்பு அகலா - வெம்மை நீங்கப்பெறாத, எரி - எரிகின்ற வெம்தழல் - கொதிக்கும் நெருப்பிலே; வெந்த செப்பு அகல் - வெந்த செப்பகலிலே பட்ட, வெண்ணெயின் - வெண்ணெய் போலாக்கவல்ல, நோன்மை தெரிந்தோய் - (எங்கள்) வலிமையை உணர்ந்தோனே ! இப்பகல் ஒன்றினில் - இப்பகல் ஒன்றிலும், நாளையின் - நாளையிலும், எல்லாம் - எல்லாம், ஆவி முடிபபோம் - உயிரை முடித்துக் கட்டுவோம் (அவ்வாறன்றி), முப்பகல் தீர்க்கிலம் - மூன்றும் பகல் கழியவிடோம்.

இன்று நாளைக்குள் எதிரிகளின் ஆவியை முடித்துவிடுவோம்; மூன்றும் நாள் வரையில் நீடிக்க விடோம் என்றனர். மேற்சொன்ன அரக்கர் இருவரும். செப்பு அகல் - செம்பினாற் செய்யப்பட்ட அகல். நோன்மை - வன்மை. 'நின்நோன்மையெல்லாம் ஒய்கின்றாய்' (யுத்த. 1892). 'நூறாயிரம் யாளியினோன்மை தெரிந்த சீயத்து' (யுத்த. 1955). இனி வெப்பகல் வெண்ணெயின் ஆவி முடிப்போம் எனினுமாம். ஆவி முடிப்போம் என்ற பொதுமையான் தங்கள் ஆவியை முடிப்போம் எனப் படுதலும் உய்த்துணர்க.

பி - ம். 1. அன்றெனில், அன்றியல் ; நாளையிதெல்லாம், நாளையினெல்லால்.
2. முப்பகை ; தீர்கிலம்.
3. வெந்தழி ; வந்த-
4. திரிந்தார்.

18

2255. விட்டனை யெம்மை விடுத்தினி வெம்போர்
பட்டன ரொன்று படுத்தன ரொன்றே
கெட்டன ரென்பது கேளலை யென்று
ஒட்டின ராவி முடிக்க வுவந்தார்.

விட்டனை - (எங்களைப்) பொருதற்கு அனுப்பினவனாய், விடுத்து - விடைதந்த பின்னர், இனி - இனி, வெம்போர் பட்டனர் ஒன்று - கடுமையான சமரில் (தாம) மடிந்தனர் என்பது ஒன்று; படுத்தனர் ஒன்று - (எதிரிகளைத்) தொலைத்தார் என்பது ஒன்று; (இவ்விரண்டினில் ஒன்றனையே கேட்பாய்: போரில்) கெட்டனர்

முறியடிக்கப்பட்டனர்; என்பது கேளலை - என்று கேட்கமாட்டாய் என்னு - என்று, ஆவி முடிக்க (தம்முடைய) உயிரை மாய்த்துக் கொள்ள, உவந்தார் - மகிழ்ந்தவராய், ஒட்டினுர் - சூளுறவு செய்தனர்.

விட்டனை : முற்றெச்சம்; போர் - போரில். தண்டிலே போனல் இரண்டிலே ஒன்று என்பது பழமொழியாதலின் 'பட்டனர் ஒன்று படுத்தனர் ஒன்று' எனப்பட்டது. கேளலை : அல் எதிர்மறை இடைநிலை. ஆவி முடிக்க உவந்தார்; 'குழாக்களிற் றரசர் குறித் தெழு கொலைக்களம், விழாக்களம் போல மெய்ம்மலி உவகையர், ஆண்மையுள்ளம் கேண்மையிற் றூரத்தலின், அழுந்துபடப் புல்லி விழுந்துகளம் படுநரும்.....புதுவதுவந்த மகளிர்க்கு, வதுவை சூட்டிய வரன் படர்ந்தோரே' (புறத்திரட்டு. அமர். 10). 'தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற், கொற்கத் துதவினு ஞகுமாற், பிற்பிற், பலர் புகழ் செல்வம் தருமால் பலர் தொழ, வானக வாழ்க் கையும் ஈயுமால் அன்னதோர், பேன்மை யிழப்பப் பழிவருவ செய்பவோ, தானேயும் போகு முயிர்க்கு' (தகடூர் யாத்திரை. புறத் திரட்டு). மற்றும் : சாவேறு என்ற ஒருவகை வீரர்களும் பண்டைத் தமிழகத்தில் உண்டு; இவர்கள் தம்முயிரைப் பொருட்படுத்தாது, போரில் இறக்க நேரின் இறப்பது, என்ற துணிவு கொண்டு போர்க்குச் செல்பவர். 'சாவேறெல்லாம் தனிவிசும்பேற' (தென் னிந்திய சாசனம் 145); ஜப்பான் தேயத்திற்கூட இத்தகைய படை யுண்டென்று கூறுவர். அதனை ஹரிகரி என்பர் .ஒட்டுதல்- சூளுறுதல். 'யாது மொழியாமல் ஒட்டி' (சீவக. 591).

பி - ம். 1. விட்டினி; விடுத்தனை; வெய்யோர்.

2. என்று.

3. கேளிவி, கேட்கலை.

4. உணர்ந்தார், உகந்தார். 19

2256. அன்னவர் தம்மொடு மையிரு வெள்ளம்
மின்னு படைக்கை யரக்கரை விட்டான்
சொன்ன தொகைக்கமை யானை சுடர்த்தேர்
துன்னு வயப்பரி யோடு தொகுத்தான்.

அன்னவர் தம்மொடும் - (இராவணன்) மேற்கூறிய இருவருடனும் மின்னு படைகை ஐயிரு வெள்ளம் அரக்கரை - ஒளி விடுகின்ற போர்க் கருவிகளை ஏந்திய பத்து வெள்ளம் இராக்கதரை, விட்டான் - அனுப்பி வைத்தான்; சொன்ன தொகைக்கு அமை - மேலே குறித்த காலாட் படைகளான அந்தப் படைத் தொகைக்கு ஏற்ற, யானை - யானைகளையும், சுடர் தேர் - ஒளி விடுகின்ற தேரையும், துன்னும் வயம் பரியோடு - பொருந்திய வெற்றி கொள்ள வல்ல குதிரைகளுடனே, தொகுத்தான் - கூட்டி அனுப்பினான். வயம்: வலியுமாம்.

பி - ம். 1. தாமொடும்.

4. மன்னும்வயப், துன்னவயப், துன்னியவப், வகுத்தான், தொகுத்தார்.

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

இப்படை யோடு மெழுந்திர வின்வாய்
வெப்புறு வன்கவி வீரர்க ளோதை
எப்புற முஞ்செவி யுற்றதை யெண்ணி
துப்புறு சிந்தையர் வீரர் தொடர்ந்தார்.

2257. நெய்யழல் வேள்வி நெடும்பகை நேர்விண்
தைவரு சூரிய சத்துரு வென்பான்
பெய்கழல் மாலி பிசாச னெனும்பேர்
வெய்யவன் வச்சிரம் வென்ற வெயிற்றான்.

நெய் அழல் - நெய் பெய்யப் பெற்று எரிகின்ற, நெடு வேள்வி - பெரிய வேள்விக்கு, பகை - விரோதியான, விண் தைவரும் சூரியன் நேர் சத்துரு - ஆகாயத்தில் உலவுகின்ற சூரியனுக்கு நேரான பகைவன், என்பான் - என்று சொல்லப்படும் யஞ்ஞ சத்துரு, பெய்கழல் மாலி - அணியப் பெற்ற வீர கண்டையினையுடைய மாலி, பிசாசன் எனும் பேர் வெய்யவன் - பிசாசன் எனும் நாமம் படைத்த தீயோன், வச்சிரம் வென்ற எயிற்றான் - வயிரத்தை வென்ற பற்களையுடையவன் ஆன வஜ்ஜிர தம்ஷ்ட்ரன்.

வேள்வி - இ பெயர் விகுதி, ஒரு நலனை விரும்பிச் செய்வது. இது காமியகன்மா. ஏனையவை நித்யம், நைமித்தகம் என்ப. 'அக்னிஷ்டோமம் ஸ்வர்க காமோ யஜேதா' என்ற சுருதி வாக்யம்

காண்க. வட சொற்களைக் கம்பநாடர் தமிழுக்கேற்ப மாற்றி யமைப்பர் என்பது முன்னரே காட்டப் பெற்றது. இந்நூல் நிலையப் பதிப்பான கிட்கிந்தா காண்டம்: 693 உரைக் குறிப்புக் காண்க. நெய்யழல் வேள்வி : 'நெய்யார் பெரு வேள்வி நிரப்பி' (யுத்த. சிதை களம்காண். 20); நெடும்பகை - நீண்ட கால விரோதம். 'என்னையே நோக்கி நானிந் நெடும்பகை தேடிக் கொண்டேன்' (யுத்த. இந்திரசித்து. 8); தைவருதல் - தீண்டுதல் அல்லது தடவு தல். 'விசும் புதை வரு வளியும்' (புறநா. 2); சூரிய சத்துரு - (ஒப்பு) பானுகோபன்; பெய்கழல்: வினைத்தொகை. மாலி: (யுத்த. 898, 899. 2244—2251); இராவணன் களங்காண் படலம் 14 காண்க.

பி - ம். 1. நெய்யெழில், நெய்யெரி, பகையோன், படைதேர், பகைதேர்.
2. என்றூர், என்றோர், எற்றல், ஒன்றே.
3. வச்சிரமென்ற. 21

2258. என்றவ ரோடு மெழுந்துல கேழும்
வென்றவ னேவலின் முன்னம் விரைந்தார்
சென்றன மால்கரி தேர்பரி செல்லக்
குன்றின மென்ன நடந்தனர் கொட்பால்.

என்றவரோடும் - என்றவருடனே, எழுந்து - எழுந்து, உலகு எழும் வென்றவன் - ஏழுலகங்களையும் வெற்றி கொண்டவனான, இராவணனுடைய, ஏவலின் - கட்டளைப்படி, முன்னம் விரைந்தார் - முன்னம் விசையுடன் சென்றவராய், மால்கரி தேர்பரி - பெரிய யானை தேர் குதிரை என்பவைகளும், சென்றன செல்ல - (உடன் போக), குன்றினம் என்ன கொட்பால் நடந்தனர் - மலையினம் போன்று வளைந்து வளைந்து நடந்தனர்.

உலகேழும் வென்றவன் இராவணன்: (சுந்தர. 442, 443, 448, 474, 746) விரைந்தார்: முற்றெச்சம். கரிதேர் பரி கூறிப் பின்னர் நடந்தனர் என்றதால், நடந்தவர் காலாட்படையினர் எனக. கொட்பு - சுழற்சி. இங்கே நடை, வேகத்தினைக்குறித்தது. கொட்பு

என்பதைப் பரியின் கதிக்கு அடைமொழியாக்குதலுமாம். 'கொட் புறுகலினப் பாய்மா' (பால. மிதிலை. 13). கொட்பால் - கொட்போடு.

பா-ம். 2. எவலின் ஏகி.

3. மாகரி.

4. குன்றினமாக, குன்றினுமுயரியர், நடந்தது கொட்ப, விரியர் கொட்பால். 22

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

தேர்நிரை சென்றது திண்கரி வெள்ளக்
கார்நிரை சென்றது கால்வய வாசித்
தார்நிரை சென்றது தாழ்வறு காலால்
பேர்நிரை சென்றது பேசுவர் யாரோ ?

2259. விண்ணை விழுங்கிய தூளிய விண்ணோர்
கண்ணை விழுங்கு தலிற்கரை காணார்
எண்ணை விழுங்கிய சேனையை யாரும்
பண்ணை விழுங்க வுணர்ந்திலர் பண்பால்.

விண்ணை விழுங்கிய தூளி - ஆகாயத்தையும் உட்கொண்ட அந்தப் புழுதியானது, அ விண்ணோர் - அந்த வானவருடைய, கண்ணை விழுங்குதலில் - கண்ணை மறைத்தலின், பண்ணை கரை காணார் - (அவர்கள் படைக் கடலின்) கரையைக் காணாதவராயினர், (இங்ஙனம் எல்லாவற்றையும் எளிதில் கண்ணுறக்கூடிய உயர்ந்த தலத்திலிருந்தும் தேவரேகண்டிலர் எனவே) எண்ணை விழுங்கிய சேனை பண்ணையை - எண்ணையும் கடந்த சேனையின் வகுப்பினை ; பண்பால் - முறையால், யாரும் - எவரும், விழுங்க உணர்ந்திலர் - முற்றும் அறியாதவராயினர்.

விழுங்குதல் என்ற சொல் நான்கு அடிகளிலும் வந்தது. சொற்பொருட் பின்வரு நிலையணி. இச்சொல் பல பொருள்களில் அமைக்கப்பெற்றமை காண்க. எண்ணை விழுங்குதல் - எண்ணிக்

கைக்கு' அடங்காமை. விழுங்க உணர்ந்திலர் - அடங்க உணர்தல் தோன்று என்க. பண் - அணிவகுப்பு; சேனைப் பண்ணையை என்க.

பி - ம். 1. தூளியின், தூளியர்.

2. எண்ணே, காறு, காணும்.

3. மண்ணை விழுங்கியெழுந்துயர் சேனே, மண்ணை விழுங்கிய சேனைவரும் போர், சேனையர் யாரும்.

4. மண்ணை, வானேர். 23

2260. கால்கிளர் தேரொடு கால்வரை யோடும்
மேல்கிளர் பல்கொடி வெண்டிரை விச
மால்கட லானது மாப்படை வாள்கள்
பால்கிளர் மீனிடை யாடிய பண்பால்.

கால்கிளர் தேரொடு - சக்கரத்துடன் ஒளிர்கின்ற தேர்களோடு, கால்வரை யோடும் - காலுடன் கூடிய மலைபோன்ற வேழங்களிடத்தும், மேல் கிளர் - மீது விளங்குகின்ற, பல்கொடி வெள் திரை வீச - பல கொடியாகிய வெள்ளிய அலைகள் வீச, வாள்கள் - வாளாயுதங்கள், மாபடை பால்கிளர் - பெரிய சேனையிடத்து ஒளிர்கின்ற, மீன் இடை ஆடிய பண்பால் - மீன்கள் போன்று உலவுகின்ற தன்மையால், மாபடை - பெரிய சேனை, மால் கடல் ஆனது - பெரிய கடல் போன்றமைந்தது.

கால் : சக்கரம். 'செல்வம் சகடக் கால் போல வரும்' (நாலடி. 2); 'கால் நெடுந்தோலுயர்' (யுத்த. 1059); கால்வரை : இல் பொருளுவமை. கொடியை வெள்ளிய அலையாகக் கூறினர். வாள்கள் மாப்படை பால்கிளர் என்றும் மாப்படை மால்கடலானது என்றும் தனித்தனிக் கூட்டுக.

பி - ம். 1. கார் வரையோடு.

3. மாமழை வானம்.

4. மின்னிடையோடிய. 24

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

2261. பேரி கலித்தன பேருல கைச்சூழ்
வாரி கலித்தன வாமென யானை
காரி கலிக்கட லோடு கலித்த
மாரி கலித்தென வாசி கலித்த.

பேர் உலகை சூழ்வாரி கலித்தன ஆம் என-பரந்த புவியினைச் சுற்றியுள்ள கடல் ஒலித்தனபோல, பேரி கலித்தன - பேரிகை பேரிகைகள் ஒலித்தன, யானை கார் இகலி கடலோடு கலித்த - யானை மேகத்துடன் போட்டியிட்டுக் கடலுடன் பிளிறி ஆரவாரித்தன; மாரி கலித்து என-மழை ஒலித்தாற் போன்று, வாசி கலித்த- குதிரைகள் கனைத்தன.

கலித்தது என என்பது கலித்தென எனவந்தது.

பி - ம். 1. பேருலகம்.

2. வரி, யானைக்.

3. காருறுமேறு கலித்தன ஒப்ப.

4. கலிப்ப, கலித்தன. 25

2262. சென்றன சென்ற சுவட்டொடு செல்லா
நின்று பிணங்கிய கல்வியி னில்லா
ஒன்றினை யொன்று தொடர்ந்தன வோடைக்
குன்று நடந்தன போர்க்கொலை யானை.

கொலையானை - கொலைத் தொழில் புரியும் யானைகள், சென்றன - சென்ற படைகள், சென்ற சுவடொடு - போன சுவட்டினில், செல்லா நின்று - செல்லாமல் நின்று, பிணங்கிய - பிணங்கினவும், கல்வியின் நில்லா - கல்விக்கு அடங்காதனவுமாகி, ஓடை குன்று நடந்தனபோல் - நெற்றிப்பட்டம் தரித்த மலை நடந்தனபோல, ஒன்றினை ஒன்று தொடர்ந்தன - ஒன்றினையொன்று பின்பற்றிச் சென்றன.

பிணங்குதல் - மாறுபடுதல். கல்வி - யானையைப் பழக்கும் உரைகள். 'வடமொழி பயிற்றிக் கல்லா விளைஞர் கவளம் கைப்ப' (முல்லைப். 35, 36); என்ற இடத்து 'வடமொழியை அடியிலே கல்லாத

இளைஞர், யானைப் பேச்சான வடமொழிகளைக் கற்றுப் பலகாற் சொல்லி' என்றது காண்க. யானைப் பேச்சான வடமொழிக ளாவன. 'அப்புது அப்புது, ஆது ஆது, ஐ ஐ என்பன. மற்றும் 'தங்கிய பயிர்த்தொழில்' (சீவக. 1834); என்ற இடத்தும் பயிராவன; பரி பரியென்பன முதலியன என்பதும் காணலாம். பயிர் யானையைத் தொழிற்படுத்தற்குரிய பேச்சுக்கள். 'விரவு மொழி பயிற்றும் பாக ரோதை என்பது; மலைபடு. 327; பெருங். 124-ம் காண்க. நில்லா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'கல்விப் பாகரிற்' (மணி.). ஓடை - யானையின் நெற்றிப் பட்டம். 'பொன்னோடைப் புகரணி நுதல்' (புறநா. 3); 'ஒன்னார் யானை யோடைப் பொன் கொண்டு' (புறநா. 126); இறுதியடியில் சீர் மோனை இன்றெனினும் அளவடி நான்கு கொண்ட கலி விருத்த மாதலின், இடையில் மோனை எழுத்து வந்ததென்க. முதலிரண் டடிகளிலும் ஒரூஉ மோனையும், மூன்றும் அடியில் கீழ்க்கதுவாய் மோனையும் வந்துள்ளமை காண்க. ஓடைக்குன்று: வெளிப்படை. பாயா வேங்கை, பறவாக் கொக்கு என்றாற்போன்று.

பி - ம். 1. சுவட்டினை, சுவட்டின்.

2. கவ்வையின், நில்லாது. 26

2263. மாக நெடுங்கரம் வானின் வழங்கா
மேக நெடும்புனல் வாரின மேன்மேற்
போக விலங்கின வுண்டன போலாங்
காக நெடுங்களி யானை களிப்பால்.

காகம் நெடு களியானை - காகங்கள் சூழப்பெற்ற மிக்க மத மயக்கம் செறிந்த யானைகள், களிப்பால் - களிப்பினாலே, மாகம் - வானம் வரையில், நெடுகரம் - நீண்டுள்ள (தமது) துதிக்கையை, வானின் வழங்கா - ஆகாயத்திலே புகுத்தி, மேகம் நெடு புனல் - வாரின - மேகத்திலுள்ள மிக்க நீரை முகந்தனவாய், மேல் மேல் போக விலங்கின - மேன்மேற் செல்லுதலைத் தவிர்ந்தனவாய், உண்டன - (அந்நீரைப்) பருகுவனவாயின.

மதம் பிடித்த யானைகளைக் காகங்கள் சூழ்ந்தது, அந்த வேழங்களால் கொல்லப்படும் உயிர்களின் தசையை உண்ணும்பொருட்டு என்க. 'காகப் பந்தரிற் கருமுகில்' (கந்த. பு.). வழங்கா : செய்யா என்னும் வாய்பாடு. போலாம் : ஒப்பில் போலி.

பி - ம். 1. மானின்.
2. இரும்புனல், விசி.
3. விலங்கினர், விண்ணவர், போநக், போலக், போவக். 27

2264. எரிந்தெழு பல்படை யின்னொளி வீரர்
அருங்கல மின்னொளி தேர்பரி யானை
பொருந்திய பண்ணொளி தாரொளி பொங்க
இரிந்தது பேரிரு ளெண்டிசை யெங்கும்.

எரிந்து எழு - விளங்கி எழுகின்ற, பல்படையின் ஒளி - பல போர்க்கருவிகளின் ஒளியும், வீரர் - வீரர்களின், அருகலம் மின் ஒளி - அரிய அணிகலங்கள் மின்னுகின்ற ஒளியும், தேர் பரியானை பொருந்திய பண் ஒளி - தேர் குதிரை யானைகட்கு அமைந்த அணிகளின் ஒளியும், தார் ஒலி-கிண்கிணி மாலைகளின் ஒளியும், பொங்க-மிகுத்தலின், எண் திசை எங்கும் பேர் இருள் இரிந்தது - எட்டுத் திக்குகளிலும் உள்ள பெரிய இருள் நிலைகெட்டு நீங்கிற்று.

படைகளின் ஒளி வீரர் அணிகளின் ஒலி, நால்வகைப் படைகளின் அணிகளின் ஒளி, தார் ஒளி என்ற ஒளியின் மிகையால் இருள் இரிந்தது என்க ; (ஒப்பு) : பெரியபு. கண்ணப்பர். 131.

பி - ம். 1. யாணர்.
2. நன்னிழல்.
3. தாரொலி.
4. இரிந்தன, தோறும். 28

2265. எய்திய சேனையை யீச னெதிர்ந்தான்
வெய்திவன் வந்தவன் மாயையின் வெற்றி
செய்தவ னேகோ றெரித்தி யிதென்றுன்
ஐயமில் வீடண னன்ன துரைத்தான்.

ஈசன் - சர்வைஸ்வரியனான ஸ்ரீ இராமபிரான், 'எய்திய சேனையை - (அங்ஙனம்) வந்த படையை, எதிர்ந்தான் - எதிரே கண்டு, வெய்து - உக்கிரமாக, இவண் வந்தவன் - இந்தச் சேனைக் கண் வந்துள்ளவன், மாயையின் - மாயையினால், வெற்றி செய்தவனே கொல் - வெற்றியை உண்டாக்கிக் கொண்டவனாகிய இந்திரசித்துதானோ? இது தெரித்தி - இதனை அறிவிப்பாயாக', என்றான் - என்று வினவினான்; ஐயம் இல் வீடணன் - சங்கையற அறிந்தவனாகிய வீடணன், அன்னது உரைத்தான் - அது குறித்து மொழியலானான்.

பி - ம். 2. வெய்திலில்; வந்நவன்; வெற்றம்

3. என்கொல்

4. எய்யென, ஐயனவ்; அன்றிது; உரைப்பான். 20

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஐயகேள் சிவன்கை வாள்கொண்
டளப்பறும் புவனங் காக்கும்
வெய்யவன் வெள்ளச் சேனைத்
தலைவரின் விழுமம் பெற்றோர்
கையுறுஞ் சேனை யோடும்
கடுகினர் கணக்கி லாதோர்
மொய்படைத் தலைவ ரென்றாங்
கவர்பெயர் மொழிய லுற்றான்.

வேறு

வீடணன் முக்கியமானவரை யெல்லாம்
இன்னார் இன்னாரென்று தெரிவித்தல்

2266. முழைக்குலச் சீயம் வெம்போர்
வேட்டது முனிந்த தென்னப்
புழைப்பிறை யெயிற்றுப் பேழ்வா
யிடிக்குலம் பொடிப்ப வார்த்துத்

தழற்பொறி வாளிப் புட்டில்
கட்டிவிற் றூங்கிச் சார்வான்
மழைக்குரற் றேரின் மேலான்
மாபெரும் பக்கன் மன்னோ.

'முழைகுலம் சீயம் - குகையின் உறைகின்ற சிறந்த சிங்கம், வெம்போர் வேட்டது-கொடிய போரினை விரும்பியதாய், முனிந்தது என்ன - சினம் கொண்டதொப்ப, பிறை எயிறு பேழ்வாய் புழை-பிறை போன்ற பற்களைக் கொண்ட பிளவுபட்ட வாய்த்துளையி னாலே, இடிகுலம் பொடிப்ப ஆர்த்து - இடித் தொகுதிகளும் தூளாகுமாறு ஒலி செய்து, தழல் பொறி வாளி புட்டில் கட்டி - தீப் பொறியை உமிழவல்ல அம்பறாத் தூணியை முதுகிற் கட்டிக் கொண்டு, வில்தாங்கி - வில்லை ஏந்திய வண்ணம், மழை குரல் தேரின் மேலான் - மேகத்தின் குரல்போன்ற குரலினையுடைய தேர் மீது ஏறி, சார்வான் - வருபவன், மாபெரும் பக்கன் - பெரும் பக்கன் என்னும் அரக்கன் ஆவான். மன் : ஓ, அசை.

முழை குலச்சீயம்; 'மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந் துறங்கும், சீரிய சிங்கம்' (திருப்பாவை. 25); 'முழையுறு சீய மன்னான்' (யுத்த. 888); பேழ்வாய்ப் புழை என இயைக்க. புட்டில்; 'புட்டிலொடு கோதைகள்' (யுத்த. இராமன் தேரேறு: 4); 'விற்றூங்கி வாளிப் பெரும் புட்டில் புறத்து விக்கி' (அயோத்தி. நகர் நீ: 118); தேர்க் குரலுக்கு மழைக்குரல் உவமை.

பா - ம். 1. மொய்ப்போர், மாப்போர்.

2. பொருகனிறென்ன.

3. தழைப்பொறி, தழைப்பொழி. 30

வேறு

2267. சிகைநிறக் கனல்பொழி தெறுகட் செக்கரான்
பகைநிறத் தவருயிர் பருகும் பண்பினன்
நகைநிறப் பெருங்கடை வாயை நக்குவான்
புகைநிறக் கண்ணவன் பொலம்பொற் றேரினன்.

'சிகை நிறம் கனல்பொழி - தீச்சுவாலையினாலே நிறம் பெற்ற நெருப்பினைக் கக்குகின்றனவும், தெறு - அழிக்கக் கூடியனவுமான, கண் - கண்கள், செக்கரான் - சிவப்பாக இருக்கப் பெற்றவனும், பகை நிறத்தவர் உயிர் பருகும் பண்பினன் - பகைத் தன்மையைக் கொண்டவரின் உயிரைக் குடிக்கும் தன்மையை யுடையவனும், நகை நிறம் - சிரிப்பினால் நிறம் பெற்ற, பெருகடை வாயை நக்குவான் - பெரிய கடைவாயை நக்குபவனுமான, பொன் தேரினன் - பொன்மயமான தேரில் இருப்பவன், புகைநிறம் கண்ணவன் - தூமி ராட்சன் என்பவன்.

சிகை : தீச்சுவாலை; செக்கரான் - சிவப்பு நிறமுள்ளவன். நகை-வெகுளி பற்றியது. கடைவாயை நக்குதலும் சினத்தின் மெய்ப்பாடு என்னலாம். வீராவேசத்தினால் வாய் புலர்ந்ததாக ஈரம் எழுமாறு நாக்கொண்டு நக்குதலுமாம். சிகைநிறக் கனல் : 'தீயினாற் செய்த கண்ணுடையானெஞ் சிகையினாற் றிசைதீய' (யுத்த. 1556).

பி - ம். 1. நிறத்தனல் ; தீயினன்.

2. பண்பினல்.

3. கடல் ; வாயில்.

4. கண்ணனப்.

31

2268. பிச்சரிற் றிகைத்தவன் பெற்றிப் பேச்சினன்
முச்சிரத் தயிலினன் முரித் தேரினன்
இச்சிர மும்மதே யெனவந் தெய்துவான்
வச்சிரத் தெயிற்றவன் மலையின் மேனியான்.

'பிச்சரில் திகைத்த-பித்தரை ஒப்ப திகைப்புக் கொண்ட, வல் பெற்றி பேச்சினன் - வலிய தன்மையுடைய சொற்களை யுடையவனும், மு சிரத்து அயிலினன் - முத்தலைச் சூலப்படையை யுடையவனும், மூரி தேரினன் - வலிய தேரினை யுடையவனும், மலையின் மேனியான் - மலை போன்ற மேனியை யுடையவனும், இசிரமும் அதே - இந்தத் தலையும் வச்சிரத்தைப் போன்றதே, என வந்து எய்துவான் - என வந்து அடைந்தவன், வச்சிரத்து எயிற்றவன் - வச்சிர தம்ஷ்ட்ரன் ஆவன்.

பிச்சரின்; 'பிச்சர் சொல்லுவ சொல்லினே' (யுத்த. 112); வன்பெற்றி; கடுமையான தன்மையுடைய பேச்சு, முச்சிரத்தயில்; சூலப்படை; (யுத்த. 497, 2048); வச்சிரத் தெயிற்றவன்; (யுத்த: 39; 497) உரைக் குறிப்புக் காண்க. 'இச்சிரம் உம்மதே' என்ற தொடர் இந்தத் தலையை நீர் கொள்ள முடியுமே என்று ஏளனமாகக் கூறியதுமாம்.

பி-ம். 1. நிகைத்தெனப் பெற்றிப் பேச்சினன், நிகைத்தனன் பெற்ற போரினன்; நிகைத்நவன் பெற்ற பேச்சினன்.

3. இச்சிரமுறுவதோ; என்பது, என்ன.

4. எயிற்றினன், மழையின். 32

2269. காலையு மனத்தையும் பிறகு காண்பதோர்
வாலுளைப் புரவியன் மடித்த வாயினன்
வேலையி னார்ப்பினன் விண்ணை மீக்கொளுஞ்
சூலமொன் றுடையவன் பிசாசன் றோன்றுவான்.

'காலையும்-காற்றையும், மனத்தையும் - மனத்தினையும், பிறகு காண்பது - பின்னிடச் செய்வதாகிய, ஓர் வால் உளை புரவியன் - ஒப்பற்ற குதிரையை யுடையவனும், மடித்த வாயினன் - மடித்த வாயுடன் கூடியவனும், வேலையின் ஆர்ப்பினன் - கடல் போன்ற ஆரவாரத்தை யுடையவனும், விண்ணை மீகொளும்-வானுலகத்தையும் கைப்படுத்தவல்ல, சூலம் ஒன்றுடையவன் - சூலமொன்று உடையவனாகி, தோன்றுவான் - காணப்படுபவன், பிசாசன் - பிசாசன் என்னும் பெயர் கொண்ட அரக்கன்.

காலையு மனத்தையும் பிறகு காணுதல்; 'வான் வழங்கியற்கை வளிபூட்டினையோ, மானுரு வாகவின் மனம்பூட்டினையோ' (அகநா. 384); 'பவனமென நனி பரவின பரிகளே' (வி. பா. 16-ஆம் போர்: 22); 'காலியற் கடுமா கடவுமதபாக' (குறுந். 250); 'காலியக் கன்ன கதழ்பரி கடைஇக்' மதுரைக் காஞ்சி. 440); மற்றும்; புறநா. 178, 197, 304, 369; பெருங். 1:38; 2:18. பிசாசன்; யுத்த. 498 காண்க. வாலுளை: 'வாலுளைப் புரவியொடு வையகமருள' (சிறு

பாண். 92); 'வாலுளைப் புரவியொடு வயக்களிறு முகந்துகொண்டு' (பெரும்பாண். 27); 'வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉம்' (பெரும்பாண் 320).

பி - ம். 2. புரவியின்.

4. தோன்றினன், தோளினன். 33

2270. சூரியன் பகைஞனச் சுடர்பொற் றேரினன்
நீரினு முழக்கின னெருப்பின் வெம்மையான்
சோரியுங் கனலியுஞ் சொரியுங் கண்ணினன்
ஆரிய வேள்வியின் பகைஞ னுமரோ.

'நீரினும் முழக்கினன் - கடலினும் மிக்க முழக்கத்தினை யுடையவனும், நெருப்பின் வெம்மையான் - அனலைக் காட்டிலும் வெப்பத்தை யுடையவனுமாய், அ சுடர் பொன் தேரினன் - அந்த ஒளிவிடுகின்ற பொற்றேரில் நிற்பவன், சூரியன் பகைஞன் - சூரிய சத்துரு என்பவன்; ஆரிய - சிரேட்டனே! சோரியும் கனலியும் சொரியும் கண்ணினன் - உதிரத்தையும் நெருப்பினையும் பொழிகின்ற விழிகளையுடைய அவன், வேள்வியின் பகைஞன் ஆம் - யஞ்ஞ சத்துரு வென்பவன் ஆகும். அரோ: ஈற்றசை.

சூரியன் பகைஞன்; யுத்த. 495 குறிப்புக் காண்க. நீர்: கடலுக்கு இலக்கணை. வேள்வியின் பகைஞன்: இது யஞ்ஞ சத்துரு என்ற வடமொழியின் தமிழாக்கம். சோரியும் சொரியும் என்ற இடத்து மோனை எதுகை நயம் காண்க.

பி - ம். 1. உந்துரிதத், முன்றுரகத், முன் தொடுத்த, முன்னுறுத்த.

2 நீர்தரு, நீரிரு, நிரக, நிர்மையான், கண்ணினன்,

4. கனல்களும். 34

சில பிரதிகளில் நான்காவதடி இரண்டாவதடியாக உள்ளது.

2271. சாலிவண் கதிர்நிகர் புரவித் தானையான்
மூலவெங் கொடுமையிற் றவத்தின் முற்றினன்
சூலியும் வெருக்கொளத் தேரில் தோன்றுவான்
மாலியென் றடிமுறை வணங்கிக் கூறினன்.

சாலி வண்கதிர் நிகர் - செந்நெற் பயிரின் செழிப்புப் பொருந்திய கதிரை ஒத்த, புரவி தானையான் - குதிரைச் சேனையை யுடையவனும், மூலம்வெம் கொடுமையின் - அநாதியா யுள்ள மிக்க கொடுமையினைக் கொண்ட, தவத்தின் முற்றினன் - தவத்தினால் முதிர்ந்தவனும் ஆகி, சூலியும் வெருகொள - சூலாயுதம் ஏந்திய சிவனும் அஞ்சுமாறு, தேரில் தோன்றுவான் - தேரில் காணப்படுபவன், மாலி - மாலி என்பவன்', என்று அடிமுறை வணங்கி கூறுவான் - என்று (இராமபிரானுடைய) திருவடிகளில் வணங்க வேண்டிய முறைப்படிப் பணிந்து, கூறி முடித்தான்.

சாலி - உயர்ந்த செந்நெல்; சாலி நெல்லின், (பொருந. 246) மென்முலைத் தாரை கொள்ளத் தழைப்பன சாலியே' (பால. நாட்டு : 25); மிக்க வருத்தமுற்றுத் தவம் இயற்றினன் என்பது இரண்டாம் அடியாற் போதரும், அரக்கர்கள் பெரு வரம் பெறுவதற்காகப் புரிந்த தவங்களை, உத்தரகாண்டம்: இராவணன் பிறப்புப் படலத்திற் காண்க. புண்ணிய பாவங்கள் அநாதி என்பது பற்றி, மூல வெங் கொடுமை எனப்பட்டது. (23, 24, 25, 26) சூலி: சிவபெருமான்; 'சூலி யின்னருட் டுறையின் முற்றினன்' (கிட்கிந்தா, 114); 'சூலியைப் பொருப்பினோடும் தூக்கிய விசயத் தோளாய்' (யுத்த. மாயாசீதைப் : 7); வெருக்கொள்ளுதல்; (யுத்த. 1317); 'வெருக் கொண்டோடிட வெம்படைக் காவலன்' (யுத்த. 1017).

பா - ம். 1. சாலியின்.
2. மூலி ; கொடுமையான்.
3. சூரியும்.
4. அடியிணை ; கூறுவான். 35

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

இன்னவ ராதியோ ரளப்பிலோ ரிவர்
உன்னருந் தொகைதெரிந் துரைக்கின் ஊழிநாள்
பின்னருஞ் செல்லுமென் றுழியப் பேசினன்
அன்னபோ ரரக்கரும் களத்தை யண்மினர்.

## அரக்க வானரர்களின் போர்

2272. ஆர்த்தெதிர் நடந்ததவ் வரியி னார்கலி
தீர்த்தனை வாழ்த்தியொத் திரண்டு சேனையும்
போர்த்தொழில் புரிந்தன புலவர் போக்கிலார்
வேர்த்துயிர் பதைத்தனர் நடுங்கி விம்மியே.

தீர்த்தனை வாழ்த்தி - தூய மூர்த்தியான இராமபிரானைப் போற்றி, அவ் அரியின் ஆர்கலி - அந்தக் குரங்குப் படைக்கடல், ஆர்த்து - ஆரவாரத்துடன், எதிர் நடந்தது - (அரக்கர் படையை எதிர்த்துச்) சென்றது; (பின்னர்), இரண்டு சேனையும் ஒத்து போர் தொழில் புரிந்தன - இரண்டு சேனையும் ஒருங்குகூடிப் போர்த் தொழில் செய்தன; புலவர் - தேவர்கள், போக்கு இலார் - (அந்தப் போரின் கடுமையைக் கண்ணுற்று விண்ணை நீங்கிச்) செல்ல இயலாதவராய், நடுங்கி விம்மி வேர்த்து உயிர் பதைத்தனர் - உடல் நடுங்கித் தேம்பி வியர்த்து உயிர் துடித்தனர். ஏ: அசை.

போக்கு: குற்றமுமாம். ஆர்கலி: அன் மொழித் தொகை. 'ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்'; தீர்த்தன் - தூய்மை மிக்கவனும் தன்னை அடைந்தோரையும் தூய்மையாக்குபவனும், இறைவனுடைய எண்குணங்களுள் தூய்மைக் குணமுடையனுதல் ஒன்றுதல் காண்க. யுத்த. 446 உரைக் குறிப்பும் காணலாம்.

பி - ம். 1. தானையுந்.
2. உற்று.
3. புரிந்தது, புரிந்தனர்.
4. விம்மவே, விம்மினர்.



2273. கல்லெறிந் தனகடை யுருமின் காரென
வில்லெறிந் தனகணை விசும்பின் மேகத்துச்
செல்லெறிந் தனவெனச் சிதறி வீழ்ந்தன
பல்லெறிந் தனதலை மலையின் பண்பென.

கடை - ஊழி முடிவில், உருமின் கார் என - இடியுடன் கூடிய மேகம் போன்று, கல் எறிந்தன - (குரங்குகள்) கல்லை வீசின;

வில் - (அதற்கு மாறாக) அரக்கர்கை விற்கள், கணை எறிந்தன - அம்புகளை விடுத்தன ; (அதனால்), விசும்பின் மேகத்து - ஆகாயத்தின் கண் இயங்கும் மேகத்தினின்று, செல் எறிந்தன என - இடி எறிந்தாற் போன்று, பல் எறிந்தன - பற்கள் உடையப் பெற்று, மலையின பண்பென - மலையின் தன்மையை ஒப்ப, தலை - குரங்குகளின் தலைகள் சிதறுண்டு வீழ்ந்தன.

'காரென வில் எறிந்தன பெயலுறழக் கணைசிதறி' (மதுரைக் காஞ்சி. 184). செல் - இடி ; 'உரப்பிற் றோன்றும் செல்லொலி' (யுத்த. பிரமாத்திர. 9). கணை - அரக்கர் அம்பு. தலை - குரங்கின் தலை.

பி - ம். 1. எறிந்தனர் ; உருமிற் ; காலென.

2. மேகத்த.

4. பண்பின, பண்ணைய. 37

2271. கடம்படு கரிபடக் கலின மாப்பட
இடம்படு சில்லியி னீர்த்த தேர்பட
உடம்படு மரக்கரை யனந்த னுச்சியிற்
படம்படு மெனப்படுங் கவியின் கற்பல.

கடம்படு - மதம்பட்ட, கரிபட - யானை மரிக்கவும், கலினம் மாபட - கல்லணை பூண்ட குதிரை இறந்து ஒழியவும், இடம்படு - விசாலமான, சில்லியின் ஈர்த்த தேர்பட - சக்கரத்தால் இழுத்துச் செல்லப் பெறுகின்ற, தேர்பட - தேர்கள் உடைந்தொழியவும், உடம்பு அடு அரக்கரை - உடம்புகள் தகர்க்கப்பெற்ற இராக்கதரை, அநந்தன் உச்சியில் படம்படும் என - ஆதிசேடன் தலையில் உள்ள படம் அழிந்துவிடும் என்னுமாறு, கவியின் பலகல்படும் - குரங்குகள் வீசிய பலவாகிய கற்கள் அழிக்கும்.

கடம் : யானை மதம் ; 'கடம்பொழி மதக்களிறு' (யுத்த. மூலபல : 17) ; கலினமா : குதிரை ; 'கலினமாவிலாழியும்' (யுத்த, மீட்சி : 340) ; இடம்படுதல் : அகன்று விரிதல் ; 'இடம்பட மெய்ஞ்ஞானம்

கற்பினும் என்றும், அடங்காதார் என்றும் அடங்கார்' (நாலடி. 116)
சில்லி : தேர் உருளை ; 'சில்லியந் தேர்மேல்' (யுத்த. மூலபல : 3) ;
படும் : படுத்தும் ; பிறவினைப் பொருளில் வந்த தன்வினை.

பி - ம். 1. கிரிபட ; புரவிக்கால்.

2. எழினித் தேர், எழிலிற்றேர், எழுனிபிற்.

4. எனப்படு ; கற்படை. 38

2275. கொலையொடுங் காநெடும் புயத்தின் குன்றொடும்
நிலைநெடுங் காலொடு நிமிர்ந்த வாலொடும்
மலையொடு மரத்தொடுங் கவியின் வன்னெடுந்
தலையொடும் போம்விசைத் தெறிந்த சக்கரம்.

விசைத்து எறிந்த சக்கரம் - (இராக்கதர்), விரைவாக வீசிய சக்கரம், கவியின் - குரங்குகளின், கொலை ஒடுங்கா நெடு புயத்தின் குன்றொடும் - கொலைத் தொழில் தளராத நீண்ட புய மலையுடனும், நெடுநிலை காலொடும் - நெடிய நிலையையுடைய பாதங்களுடனும், நிமிர்ந்த வாலொடும் - உயர்ந்த வாலுடனும், மலையொடும் மரத்தொடும் - மலையோடும் மரத்தோடும், வல்நெடு தலையொடும் போம் - வலிய நீண்ட தலையுடனும் செல்லும்.

சக்கரம் போம் என்க, மலையும் மரமும் மாற்றாரை எறியக் கருதிக் குரங்குகள் கைக்கொண்டவை. சக்கரம் ; ஆழிப்படை.

பி - ம். 1. கொலையொடுங் கரநெடும், புகறின்.

3. மார்பொடுந், மன்னெடுந்.

4. போர் ; எறியும். 39

2276. ஆண்டகைக் கவிக்குலத் தலைவ ராக்கையைக்
கீண்டன புவியினைக் கிழித்த மாதிரம்
தாண்டுவ குலப்பரி மனத்திற் றாவுவ
தூண்டினர் கைவிசைத் தெறிந்த தோமரம்.

மாதிரம் தாண்டுவ - திக்குகளைத் தாண்டுவனவும், மனத்தில் தாவுவ-மனத்தைப் போல் தாவுவனவுமான, குலம்பரி தூண்டினர்

கை-சாதிக் குதிரைகளை விரைந்து செலுத்திய குதிரை வீரரின் கைகள், விசைத்து எறிந்த தோமரம் - வேகமாக வீசிய தோமரம் என்னும் போர்க்கருவி, ஆண்தகை கவிகுலம் தலைவர் ஆக்கையை- ஆண்மைப் பண்புள்ள கவிக் கூட்டத்தின் தலைவர்களுடைய உடல் களை, கீண்டன - பிளந்தனவாய், புவியினை கிழித்த - தரையைக் கிழித்தன.

ஆண்டகை ; 'ஆண்டகைய ரவ்வயினடைந்தமை யறிந்தான்' (ஆரணிய. 153) ; 'கீண்டன ; 'திசைமுகன் செய்த முட்டை கிண்டிலது' (சுந்தர. 1277) ; 'சூருடலம் கீண்ட சுடர்வேலோய்' (கந்தர் கலி. 100) ; 'கீண்டு பொற்சுனை பல தோண்டுவதம்மா' (பண்டாரமும். 17) ; மனத்தில் தாவுவ ; 'மானுரு வாகநின் மனம் பூட்டினையோ' அகநா. 384).

பி - ம். 1. வீரராக்கைகள்.
2. புவியிடை ; மாத்திரம், மாக்கிரி, மாக்கரி.
3. வனத்திற்ருய்மிக.
4. நூண்டுவ ; எறியும், எறிந்த. 40

2277. சில்லியந் தேர்க்கொடி சிதையச் சாரதி
பல்லொடு நெடுந்தலை மடியப் பாதகர்
வில்லொடு கழுத்திறப் பகட்டை வீட்டுமால்
கல்லெனக் கவிக்குலம் வீசுங் கல்லரோ.

கல் என - கல் என்ற ஒலி எழுமாறு, கவிகுலம் வீசும் கல் - குரங்குக் கூட்டம் எறியும் கல்லானது, சில்லி அம்தேர் கொடி சிதைய - சக்கரத்தை யுடைய அழகிய தேர்களின் கொடிகள் அழி யவும், சாரதி - தேர்ப்பாகனுடைய, பல்லொடு - பற்களுடனே, நெடு தலை மடிய - நீண்ட தலை துணிபடவும், பாதகர் - கொடிய அரக்கருடைய, வில்லொடு கழுத்து இற - வில்லுடன் கழுத்து இற்றுப் போகவும் (செய்து), பகட்டை வீட்டும் - யானைகளையும் அழிக்கும். அரோ : ஈற்றசை. ஆல் : அசை.

சில்லி ; (யுத்த. 2274); சாரதி : வடசொல். பகடு : ஆண் யானை ; 'கடும்பகட்டி யானை நெடுந்தேரஞ்சி' (குறுந். 91); கல்லெனல் : ஒலிக் குறிப்பு ; 'கல்லென்ற ஒலியிற் சென்ற கரன் முதற் காளை வீரர்' (ஆரணிய. 617) ; கல்வீட்டும் என்க.

பா - ம். 1. தேர்கொடி பரிகள்.
2. பல்லுடை.
3. கழுந்தற.
41

2278. கரகமுந் தியமலை முழையிற் கட்செவி
உரகமுந் தினவென வொளிக்கு மொள்ளிலை
அரகமுந் தினநெடுங் கவியி னுக்கையில்
துரகமுந் தினரெடுத் தெரியுஞ் சூலமே.

துரகம் உந்தினர் - குதிரையைத் தூண்டிய அரக்கர், எடுத்து எறியும் - எடுத்து வீசுவனவான ஒள் இலை சூலம் - ஒள்ளிய இலை களையுடைய சூலப் படைகள், கரகம் உந்திய - ஆலங்கட்டி மழை வீழப் பெற்ற, மலை முழையில் - மலைக் குகைகளில், கண்செவி - கண்ணையே செவியாகவுடைய, உரகம் முந்தின என - நாகங்கள் விரைந்து புக்கன என்னுமாறு, நெடு கவியின் ஆக்கையில் - நீண்ட குரங்குகளின் உடலில், அரகம் முந்தின ஒளிக்கும் - (அவர்கள்) மரிக்குமாறு விரைவுடன் மறையும். ஏ : அசை.

கரகம் : ஆலங்கட்டி (பிங்) ; உந்துதல் : செலுத்துதல் ; கரகம் உந்திய, துரகம் உந்தினர் ; உரகம் முந்தின என்க. உரகம் : மார் பினாலேயே ஊர்வது என்று நாகத்திற்குக் காரணக் குறி. கட்செவி- பாம்பு கண்ணையே செவியாக வுடையது ; நாகத்திற்குச் செவி என்ற உறுப்பில்லை ; எனினும் இசை முதலியவற்றைத் தனது உடல் அசைவினாலேயே நுட்பமாகக் கேட்கும் என்பர் அறிஞர். 'பசுவேத்தி சிசுர்வேத்தி கானவேத்தி ரசம் பணி' என்றது காண்க. பசுவும் சிசுவும் படப்பணி தானும் இசை வசப்படூஉம் இயல்பின என்ப. உரகம் - நாகம் ; (யுத்த. 166).

பா - ம். 1. காகமுந்திய.
2. ஈவகம்.
3. ஆகமுந்தின, அரகமுந்துறு, ஆகமுந்துவ, ஆகமுந்துறு, தெடுங் கவிகள் ; கவித் தலைவர் ; மார்பினில்.
4. தூக ; விசைத்து ; தோமரம்.
42

2279. வால்பிடித் தடிக்கும்வா நரத்தை மால்கரி
கால்பிடித் தடிக்குமக் கரியி னைக்கவி
தோல்பிடித் தரக்கரை யெறியுஞ் சூர்முசு
வேல்பிடித் தெறிவரம் முசுவை வெங்கணர்.

மால்கரி - பெரிய யானை, வானரத்தை வால்பிடித்து அடிக்கும் - குரங்கினை வாலைப் பற்றி அடிக்கும்; அ கரியினை கவிகால் பிடித்து அடிக்கும் - அந்த யானையைக் குரங்கு காலைப் பிடித்துத் தூக்கி அடிக்கும்; சூர்முசு-அச்சத்தைச் செய்யும் குரங்கு, தோல் பிடித்து, யானைகளைக் கையாற் பிடித்து, அரக்கரை எறியும் - (அதனைக் கொண்டு) அரக்கரைத் தாக்கும்; அமுசுவை - அந்தக் குரங்கினை, வெங்கணர் வேல் பிடித்து எறிவர் - கடுமையான கண்ணினர் வேலைக் கையிற்கொண்டு தூக்கி வீசுவர்.

தோல் : யானை ; 'தோலோட்டிப் புகழ்செய் தெடுத்தவிறல்' (மதுரைக் காஞ்சி. 370 - 371); சூர்முசு : அச்சம் தரும் குரங்கு.

பி - ம். 2. கரிகளை.
3. கோல் ; பொறி, கோண்முசு. 43

2280. முற்படு கவிக்குல முடுக வீசிய
கற்படக் களம்படு மரக்கர் கார்க்கடல்
பற்படு தலைபடப் படுவ பாதகர்
விற்படு கணைபடக் குரங்கின் வேலையே.

முன்படு கவிகுலம் முடுக வீசிய - முன் செல்லுகின்ற குரங்குக் கூட்டம் விரையுமாறு எறிந்த, கல்பட - கற்கள் தாக்குவதால், அரக்கர் கார் கடல் - அரக்கரின் கரிய கடல்போன்ற சேனை, களம் படும் - போர்க்களத்திலே மரிக்கும்; பாதகர் - கொடியவரான அரக்கர், வில்படு - வில்லிலிருந்து தோன்றுகின்ற, கணைபட - சரங்கள் தைப்பதனல், குரங்கின் வேலை - குரங்குகளின் கடல் போன்ற படை, பல்பட - பற்களை யிளிக்கின்ற தலைகள் துணிந்திட, படுவ - உயிர் நீங்கப் பெறுவன ஆகும். ஏ : அசை.

முற்பட, முற்படுகிரிதனை யச்சது பொடி செய்த அதிதீரா; (திருப்புகழ்.); கடல் அரக்கர்க்குப் பெருக்கத்தாலும், உவர்

(யாவரும் வெறுக்கத்தக்க தன்மையராலும் உவமை என்க. பற்படு தன்மை நவிற்சி; விலங்குகட்கில்லாது மக்களுக்குள்ள ஓர் விசேடப் பண்பு சிரிப்பது; ஆயினும் குரங்குகளிடம் மட்டும் இந்த நகையைக் காணலாம்.

பி - ம். 1. முட்டி விசிய, முடுக விக்கிய.

2. களப்பட.

3. படுவர்.

4. குரக்கு. 44

## அரக்கரின் நால்வகைப் படை யடைந்த நிலை

2281. கிச்சுறு கிரிபடக் கிளர்பொற் றேர்நிரை
அச்சிறச் செல்கில வாடல் வாம்பரி
எச்சுறு துயரிடை யெய்த ஈத்துணு
முச்சிறு வாழ்க்கையின் மூண்டு ளோரென.

எச்சுஉறு துயர் இடை எய்த - (மனத்துக் கிளர்ச்சி) குன்றுதற்குக் காரணமான வறுமைத் துயர் நடுவில் வந்து பொருந்துவதால், ஈத்து உணு - பிறர்க்கு ஈந்து தாமும் உண்ணுமல், முச்சு இறு வாழ்க்கையின் மூண்டுளோர் என - மூச்சு முடிவடைகின்ற உலக வாழ்க்கையில் தலைப்பட்டோர் போன்று, கிச்சுஉறு கிரிபட - நெருப்பைக் கொண்ட மலைகள் தாக்குவதால், கிளர்பொன் தேர் நிரை - விளங்குகின்ற பொன் மயமான தேர்த்திரள், அச்சு இற - அச்சு இற்றுப் போக, ஆடல் வாம்பரி - வலிமை சான்ற தாவிச் செல்லும் குதிரைகள், செல்கில - (அத் தேரை) இழுத்துச் செல்ல இயலாதனவாயின.

கிச்சு - நெருப்பு ; 'கிச்சிடையிடு மெனக் கிளக்கின்ருர் சிலர்' (சுந்தர. 1045) ; இது ஒரு திசைச் சொல் ; சிச்சு என்று தெலுங்கிலும் கிச்சு என்று கன்னடத்திலும் இச் சொல் நெருப்பினைக் குறிக்கின்றது. மலைகளில் நெருப்பு, குறிஞ்சிக் கருப்பொருளாகிய மூங்கில்கள் தம்முள் தாக்குவதால் உண்டாவது என்க. அச்சு : உருள் 'நெடுந்தேர்க்கச்சாணி யன்னருடைத்து (குறள். 667) ; ஆடல் : அடல் நீண்டது ; ஆடல் : வெற்றியுமாம் ; செல்கில : கில்

ஆற்றல் உணர்த்தும் இடைநிலை. எய்த்து எச்சு என வந்தது. இடைப்போலி : எச்சுறு துயர்; எய்த்தற்குக் காரணமான வறுமைத் துன்பம். ஈந்து : ஈத்து என வலித்தது. 'ஈத்துவக்குமின்பம் அறியார் கொல்' (குறள். 228) ; 'ஈத்ததிரங்கான் ஈத்தொறு மகிழா னீத்தொறு மாவள்ளியன்' (பதிற்று.) ; மூச்சு முச்செனக் குறுகிற்று, 'முச்சிறு வாழ்க்கை' என்று பசிப்பிணியால் உயிர் நீங்குமோ என்று வருந்தக் கூடிய மிக எளிய வாழ்க்கை என்க. 'நல்ல உயிரும் நாற்பது நாட்கள்தான் நிற்கும்' என்ற பழமொழியும் காண்க.

பி - ம். 1. தேர்க்கிழை.
2. அர்கறச் ; மாப்பரி, மால்பரி.
3. எய்நி ; யிர்க்கொறு ஈத்தினம். 54
4. முச்சறு, முச்சுறு ; வாழ்க்கையைய.

2282. மீயவர் யாவரும் விளிய வெங்கரி
சேயிருங் குருதியில் திரிவ சேர்வில
நாயக ராளொடு மவிய நவ்விகள்
பாயொடு வேலையில் திரியும் பண்பின.

மீயவர் யாவரும் - (தம்) மீதிருப்பவரான எல்லோரும், விளிய - பகைவரின் போர்க் கருவிகளால் மரித்திட, வெம்கரி - கொடிய வேழங்கள் (தம்மீது கட்டிய கொடிகளுடனே), சே இரு குருதியில் - சிவந்த மிகுதியான உதிரப் பெருக்கில், திரிவ - திரிவனவாயும், சேர்வில - (அப்பாற்) சென்றடைய இயலாதனவாயும், நாயகர் ஆளொடும் அவிய - (கடற் கொள்ளைக்காரரால் தம்முடைய) மாலுமிகள் எல்லாம் தத்தம் ஏவல் மாக்களுடனே அழிந்திட, பாயொடு - பாய் மரத்துடன், வேலையில் திரியும் நவ்விகள் பண்பின - கடலில் அலைகின்ற மரக்கலங்களின் தன்மையினவாயின.

மரக்கலத்திற்கு யானையும், பாய்மரத்திற்கு அதன்மீது அமைந்திருந்த கொடியும் உவமை. நாயகர் - மீகாமர் ; ஆள் : அவனுடைய பணியாட்கள். நவ்வி : சிறு கப்பல் ; பாய் : பாய்மரம் ;

கடம்பொடு மீப்பாய் களையாது' (புறநா. '30); தன்மைத் தற் குறிப் பேற்றவணி. யானையின் அவலநிலை கூறப்பட்டது.

பி - ம். 1. அலைய.

2. சேயரும், சேயறும், சேர்கில, சோர்வில.

3. நாயகராரொடும்; ஆயதனுளொடும், ஆயதனுளெலாம்; விய; நல் விதம், அம்பிதம்; நவ்விதான்.

4. பண்பென, பான்மைபோல். 46

2283. படையொடு மேலவர் மடியப் பல்பரி
இடையிடை தாவெழுந் தழுந்து பண்பன
கடனெடுங் குருதிய கனலி காலுறு
வடவையை நிகர்த்தன வுதிர வாயன.

பல்பரி - பலவாகிய குதிரைகள், படையொடு - படைக்கல முதலியவற்றுடன் (நடத்தி வந்த), (தம்) மேலவர்-மேலே உள்ளவர் (பாகர்), மடிய - இறந்திட, கடல்நெடு குருதிய - கடல்போன்ற பெரும் உதிரத்தில் சிக்கியனவும், இடை இடை தா எழுந்து - நடுவே நடுவே தாவி எழுந்து, அழுந்து பண்பன - (அந்த வெள்ளத்தில்), அழுந்தும் தன்மையினவும், உதிரம் வாயன - இரத்தம் கக்கும் வாயினவுமாய், கனலி கால் உறு வடவையை நிகர்த்தன - நெருப்பை (வாயினுற்) கக்கும் தன்மையதான, வடவைத் தீயை நிகர்த்தன.

மேலவர் - குதிரை வீரர்கள்; பரி - குதிரை; பரிந்து செல்வது என்பது பொருள். வடவை - பெண் குதிரை வடிவாகக் கட லிடையே தங்கிக் கடல் நீர் அளவுமிக்கு உலகினை அழிக்காமல், அதனைச் சுவறச் செய்யும் ஓர் பெருந்தீ என்பர்; 'படர்நீர் வாய் மடுக்கு மாவடவை' (யுத்த. இராவணன் தேரேறு: 19); பின்னிரண் டடிக்கு; 'புரவி வாயுதிரம் கால்வன, வாயிடை யெரியுடை வடவை போன்றவே' (சுந்தர. 904); வடவை குதிரைக்கும் அதன் வாயி லிருந்து வெளிப்படும் உதிரம் அவ்வடவைக் குதிரையிலிருந்து வெளிப்படும் செந்தீக்கும் உவமை.

பி - ம். 2. இடையிடை தரவிழுந்த, இழிந்த; பண்ணன, பண்ணின.

3. கனலிகால்வுறு, கனலிற்காய்வுறு, கனலுங்கால்வன, வாயின. 47

2284. எயிற்றெடு நெடுந்தலை யிட்ட கல்லொடும்
வயிற்றிடைப் புகப்பல பகலும் வைகிய
பயிற்றிய ராயினுந் தெரிக்கும் பண்பிலார்
அயிர்ப்பர்தங் கணவரை யணுகி யந்நலார்.

எயிறெடு நெடுதலை - கோரப் பற்களுடன் கூடிய (தம் கணவன்மாரின்) பெரிய தலைகள், இட்ட கல்லொடும் - (குரக்கு வீரர்) எறிந்த மலையினால், வயிற்றிடை புக - (அக்கணவரின்) வயிற்றிற் புக்கவாக, பல பகலும் - பல நாட்களாக, வைகிய பயிற்றியராயினும் - (அவருடன் தங்கியிருந்த) பழக்கம் உள்ளவராயிருந்தும், தெரிக்கும் பண்பு இலார் - (அத் தலை இன்னாருடையது என்று), ஆராய்ந்து தெளிதற்கேற்ற (அறிவாகிய) பண்பு அற்றவரான, அந்நலார் - அவர் தம் மனைவியர், தம் கணவரை அணுகி அயிர்ப்பர் - தம் புருடன்மாரை நெருங்கி, (இது யார் உடலோ) என ஐயுறுவர்.

குரக்கு வீரர்கள் வீசிய மலைகள் அரக்கர்களின் வயிறுகளைத் துளைத்துக்கொண்டு உள்ளே பல நாட்களாகத் தங்கினமையின், அரக்கியர், தம் கணவர்களென்று அறியக்கூட வில்லை; இங்குக் கூறப்பெற்ற வீரர்கள் காலாட்கள். எயிறு - வளைந்த பற்கள்; பகலும் - பகற்போதன்று, பொதுவாகக் காலத்தைக் குறித்தது; 'பெரியவர்கட் செல்லாது வைகியவைகலும்' (நாலடி. 169); 'பழுதே பல பகலும் போயினவென் றஞ்சி, அழுதேன்' (இயற்பா. முதல் : 16); தெரிக்கும் பண்பிலார் அயிர்ப்பர்; (ஒப்பு.); இன்ப முடம்புகொண் டெய்துவர் காண்மினோ, வன்பி னுயிர் புரக்கு மாரணங்கு, தன் கணவ, னல்லாமையுட் கொள்ளும் அச்சம் பயந்ததே, புல்லார்வேன் மெய் சிதைத்த புண்' (பு. வெ. மா. தொல், புறத். 79); நலார்; பெண்டிர்; 'நல்லார் விழி போலிருந்தும்' (தஞ்சைவாணன்.); அயிர்த்தல் : ஐயுறுதல்; 'ஆரென்னலோடும் அனலென்ன அயிர்த் துயிர்த்தாள்' (பால. பூக்கொய். 18); 'தேவரோ வெனவயிர்க்கும்' (கிட்கிந்தா. 293).

பி - ம். 2. புக்கபல், வைகியே.
3. பயிற்சியர்.
4. அயிர்ப்ப.

வேறு

## அரக்கர்க்கும் வானரர்கட்கும் நிகழ்ந்த தொந்த யுத்தம்

2285. தூமக் கண்ணனு மனுமனு மெதிரெதிர் தொடர்ந்தார்
தாமத் தங்கதன் மாபெரும் பக்கனைத் தடுத்தான்
சேமத் திண்சிலை மாலியு நீலனுஞ் செறுத்தார்
வாமப் போர்வயப் பிசாசனும் பனசனு மலைந்தார்.

தூமம் கண்ணனும் - புகைநிறக் கண்ணனும், அநுமனும் - மாருதியும், எதிர் எதிர் தொடர்ந்தார் - நேருக்கு நேராகப் (போர் புரியத்) தொடங்கினர்கள், தாமத்து அங்கதன் - வெற்றி மாலை வேய்ந்த அங்கதன், மாபெரு பக்கனை தடுத்தான் - மகாப் பெரும் பக்கனைத் தடுத்தான்; சேமம் திண் சிலை மாலியும் - சேமமான (பாதுகாப்பாகவுள்ள) வலிய வில்லைத் தாங்கிய மாலியும், நீலனும் செறுத்தார் - நீலனும் சினந்து பொருதனர்; வாமம் போர் வயம் பிசாசனும் பனசனும் மலைந்தார் - அழகிய போர் புரியும் வெற்றியுள்ள பிசாசன் என்னும் அரக்கனும், பனசனும் - பனசன் என்ற குரக்கு வீரனும், மலைந்தார் - (தம்முட்) பொருதனர்.

சேமம் - க்ஷேமம் என்ற வட சொல்யின் சிதைவு. வாமம் - பிற குறிப்பு, பனசன்; 'மூன்று கண்ணிலனுயினும், மூன்றெயி லெரித் தோன், போன்று நின்றவன்' (யுத்த. இராவணன் தானை ; 32); யுத்த. 194 குறிப்பும் காண்க. மாலி; யுத்த. 898 - 900; படைத் தலைவர். 7, 21, 35; மூலபல. 75 காண்க. நீலன்; பால. திருவவ தார : 27.

பி - ம். 1. வலிப்.



2286. சூரியன்பெரும் பகைஞனுஞ் சூரியன் மகனும்
நேரெ திர்ந்தனர் நெருப்புடை வேள்வியின் பகையும்
ஆரி யன்றனித் தம்பியு மெதிரெதி ரடர்ந்தார்
வீர வச்சிரத் தெயிற்றனு மிடபனு மிடைந்நார்.

சூரியன் பெரு பகைஞனும் - சூரியனுடைய பெரிய எதிரியும், சூரியன் மகனும் - கதிரவனுடைய புதல்வனான சுக்கிரீவனும், நேர்

எதிர்ந்தனர் - எதிர் எதிராகப் பொருதனர்; ஆரியன் தனி தம்பியும் - இராமபிரானுடைய ஒப்பற்ற தம்பியான இலக்குவனும், நெருப்பு உடை வேள்வியின் பகையும் - தீ வளர்த்துச் செய்கின்ற யஞ்ஞ விரோதியும், ஆரியன் தன் தம்பியும் - இராமபிரானுடைய ஒப்பற்ற இளவலும், எதிர் எதிர் அடர்ந்தார் - எதிர் எதிராக நின்று போர் செய்தனர்; வீரம் வச்சிரத்து எயிற்றனும் - வீரம் செறிந்த வஜ்ஜிரம் போன்ற (வலிய) பற்களையுடைய வஜ்ரதம்ஷ்ட்ரனும், இடபனும் - இடபன் என்ற வாநர வீரனும், மிடைந்தார் - ஒருவர் ஒருவரைக் கிட்டிப் பொருதனர்.

சூரியன் மகனான சுக்கிரீவன் தன் தந்தைக்கு நேர் எதிரியை மலைந்தான் என்ற நயம் காண்க. நெருப்புடை என்பது, 'தூம்புடை நெடுங்கை வேழம் என்றாற் போன்று, வேள்விக்கு இயற்கை அடைமொழி; வேள்வி என்பது ஒன்றைப் பெற வேண்டும் என்று விரும்பிச் செய்வது. இது காமிய கர்மம் எனப்படும். 'அக்னிஷ்டோமம் ஸ்வர்க்க காமோ யஜேதா' என்றது காண்க. இ: பெயர் விகுதி; 'தவமும் வேள்வியும் விட்டது கண்டு நாம் விடாது வேட்குமோ' (யுத்த. 370); வேள்விப் பகைஞன்: யாகங்கள் செய்கின்ற காலத்தில் அரக்கர் அழித்தலை மேற்கொள்வது. தாடகைப் படலத்துக் காண்க. இடபன்: இவன் வயமத்தன் என்ற அரக்கனைப் பொருது கொன்றவன்; (யுத்த. அதிகாயன்: 228, 236) காண்க. நாகபாசப்: 56-ம் காண்க.

பி-ம். 2. நெருப்பிடை.

3. துணைத்தம்பி; அவரெதிரடந்தார், எதிரடர்ந்தனரால். 50

2287. வெங்கண் வெள்ளெயிற் றரக்கரிற் கவிக்குல வீரச்
சிங்க மன்னபோர் வீரரிற் றலைவராய்த் தெரிந்தார்
அங்க மர்க்களத் தொருவரோ டொருவர்சென் றடைந்தார்
பொங்கு வெஞ்செருத் தேவரு நடுக்குறப் பொருதார்.

வெம்கண் வெள் எயிறு அரக்கரில் - கொடிய விழிகளையும், வெண்ணிறமான (வளைந்த) பற்களையும் உடைய, அரக்கரில் - இராக்கதரிலும், கவிகுலம் - குரக்குக் குலத்தில் பிறந்து, வீரம் சிங்கம்

அன்ன போர்வீரரில் - வீரம் செறிந்த சிங்கம் ஒத்த, போரிற் சிறந்தவருள்ளும், தலைவராய் தெரிந்தார் மேம்பட்ட தலைவராயுள்ளவர், அங்கு அமர்களத்து - போர்க்களமாகிய அவ்விடத்து, ஒருவரோடு ஒருவர் சென்று அடைந்தார் - ஒருவரோடு ஒருவர் சென்று சேர்ந்தவராய், தேவரும் நடுக்குஉற - அமரர்களும் (அஞ்சி) நடுங்குமாறு, பொங்கு - மன உற்சாகம் கொண்டு புரியப்படுகின்ற, வெம்செரு - கடுமையான போரைப், பொருதார் - செய்தனர்.

இருதிறத்து வீரர்களும் தத்தம் குலத்தினருள் வன்மையும் தலைமையும் பெற்றவர்கள் என்க. அந்தப் பொருத வீரர்களுள் சமத்துவம் கூறப்பட்டது.

பி - ம். 1. விரர். தலைவரிற்

2. செறிந்தார்.

3. அடர்ந்தார். 51

## அரக்கர் சேனையின் அழிவு

2288. இன்ன காலையி னீரைந்து வெள்ளம்வந் தேற்ற
மின்னும் வெள்ளெயிற் றரக்கர்தஞ் சேனையில் வீரர்
அன்ன வெஞ்சமத் தாறுவெள் ளத்தையு மவித்தார்
சொன்ன நாலையு மிலக்குவன் பகழியாற் றொலைத்தான்.

இன்ன காலையில் - இங்ஙனம் நிகழ்ந்த போழ்தில், அன்ன வெம்சமத்து - அத்தகைய கொடிய போரில், வந்து ஏற்ற - வந்து எதிர்த்த, ஈரைந்து வெள்ளம் - பத்து வெள்ளம் என்ற எண்ணிக்கையுள்ள, மின்னும் வெள் எயிறு அரக்கர் தம் சேனையில் - ஒளி செய்கின்ற வெண்ணிறமான பற்களைக் கொண்ட இராக்கதருடைய சேனையில், ஆறு வெள்ளத்தையும் - ஆறு வெள்ளத்தையும், வீரர் அவித்தார் - வீரர் கொன்றொழித்தனர்; (எஞ்சி நின்ற), சொன்ன நாலையும் இலக்குவன் பகழியால் தொலைத்தான் - சொல்லப்பட்ட நாலு வெள்ளம் படையையும் இலக்குவன் தன் வாளிகளால்

அழித்தான். இரண்டாம் அடியில் வீரன் என்பது இராமபிரானைக் குறிப்பதாகக் கொண்டு உரை கூறுவோரும் உளர்.

பி-ம். 2. சேனையை; விரன்.

3. அருந்தான். 52

## அப்போது தோன்றிய இரத்தப் பெருக்கின் வருணனை

2289. உப்பு டைக்கடன் மடுத்தன வுதிரநீ ரோதம்
அப்பொ டொத்தன கடுத்தில வார்கலி முழுதுஞ்
செப்பு ருக்கெனத் தெரிந்தது மீன்குலஞ் செருக்கித்
துப்பொ டொத்தன முத்தினங் குன்றியிற் றோன்ற.

உப்புடை கடல் மடுத்தன உதிரம் நீர் ஓதம் - உப்பைத் தன் அகத்துக் கொண்டுள்ள கடலில் நிரம்பிய இரத்த நீர் வெள்ளம்; அப்பொடு ஒத்தன கடுத்தில - (கடற் புனலோடு) விரவினவாய்க் காணப்படவில்லை; ஆர்கலி முழுதும் - கடல் நீர் அனைத்தும், செப்பு உருக்கு என தெரிந்தது - செம்பினை உருக்கின உருக்கு நீர் போன்று, தெரிந்தது (செந்நிறமாகக்) காணப்பட்டது; முத்து இனம் - (அந்தக் கடலில் இருந்த, முத்துத் தொகுதிகள், குன்றியில் தோன்ற - குன்றுமணியை ஒத்து விளங்க, மீன்குலம் செருக்கி துப்பொடு ஒத்தன, - மீன் குலம் அடங்கலும் (இறைச்சியாகிய உணவு கிட்டினமையின்), களித்துப் பவழம் ஒத்துக் காணப் பெற்றன.

கடல் நீரினும் பொருகளத்து உற்ற உதிர நீர் அதிகம் என்று, இறந்தவர்களின் மிகுதி கூறப்பட்டது. கடல் நீரும் மீன்களும் முத்துக்களும் தமது இயற்கை நிறம் மாறப் பெற்றன என்றது வேற்றுருப்பெறல் அணி என்பர். உப்புக் கடல்: உப்புடைய முந்நீர். (சீவக. 280).

பி-ம். 1. மடுத்தது; குருதியினோதம்.

2. தடிந்தில, கடுக்கில.

3. திரிந்தன, திரிந்தது, தெரிந்தன.

4. தோன்றி; துவன்றி. 53

2290. தத்து நீர்க்கடன் முழுவதுங் குருதியாய்த் தயங்கச்
சித்தி ரக்குலப் பன்னிற மணிகளுஞ் சேந்த
ஒத்து வேற்றுருத் தெரியல வுயர்மதத் தோங்கல்
மத்த கத்துகு தரளமும் வளைசொரி முத்தும்.

தத்து நீர்கடல் முழுவதும் - (அலைகள்) தாவுகின்ற நீரைக் கொண்ட கடல் முழுவதும், குருதியாய் தயங்க - உதிரமாய் ஒளிர, சித்திரம் குலம் பல்நிற மணிகளும் - விசித்திரமான (வெவ்வேறு வகையான) தொகுதியாக உள்ள பல்வேறு நிறத்தைக் கொண்ட இரத்தினங்களும், சேந்த - செந்நிறமாயின; மதம் உயர் - மதத்தால் சிறந்த, ஓங்கல் மத்தகத்து உகு தரளமும் - (மலை போன்ற வேழங்களின் மத்தகத்தினின்று சிந்தும் முத்துக்களும், வளைசொரி முத்தும் - சங்குகளினின்று வெளிப்படுகின்ற முத்துக்களும், ஒத்து - (தம்முள்) ஒரு தன்மையனவாய், வேறு உரு தெரியல - (செந்நிற முற்று) வேறு நிறம் புலப்படாவாயின.

தத்துதல் - தாவுதல்; 'தத்தி வீழருவிகாலும்' (யுத்த. மீட்சிப்: 346); 'தத்திக் கரை புரளும் பரமானந்த சாகரத்தே' (கந்தரலங். 47); சேந்த - செந்நிற முற்றன; செந்நிறத்தால் முருகனுக்குச் சேந்தன் என்ற பெயருள்ளமை காண்க. மதத்து உயர் - மதநீர் விடுக்கும் எனினுமாம் மதத்தோங்கல் வெளிப்படை; பாயா வேங்கை, பறவாக் கொக்கு போன்று என்க. மதமலை என்றும் வழங்கும். ஈற்றடியில் இருவகைத் தரளங்கள் கூறப் பெற்றன. மற்றும் செஞ்சாலி, மேகம், வேய், கரும்பு, மன்றி முதலியவற்றிலும் முத்து உண்டென்பர். வளை - சங்கு; 'வளைபயில் கீழ்கடல் நின்றிட' (திருக்கோவை. 6); 'சேற்றவளை தன் கணவன் அருகிருப்பச் சினந்திருகிச், சூற்றவளை நீருழக்கும் துறைகெழு நீர் வளநாடா' (ஆரணிய. 340) இச் செய்யுட்கண் 'வேற்றுருப் பெறலணி காண்க.

பா - ம். 1. குருயிற்றழங்கி, குருதியாய்த்தழங்க.

2. பன்னெடு; சேர்ந்தது, சேர்ந்த.

3. வேறுரு, தெரிகில, தெரிக்கில.

4. இத்தகை மாலும், அத்தகை முற்றும்.



இக் கவி சில பிரதிகளில் இல்லை,

## சூரியோதய வருணனை

2291. அதிரும் வெஞ்செரு வன்னதொன் றமைகின்ற வளவிற்
கதிர வன்கொழுஞ் சேயொளிக் கற்றையங் கரத்தால்
எதிரும் வல்லிருட் கரியிறுத் தெழுமுறை மூழ்கி
உதிர வெள்ளத்து ளெழுந்தவ னுமென வுதித்தான்.

அதிரும் வெம்செரு அன்னது ஒன்று - முழங்குகின்ற அத்தகைய கடுமையான ஒரு போர்; அமைகின்ற அளவில் - நிகழும் போழ்தில், கதிரவன் - சூரியன், அம் கொழு சேய் ஒளி கற்றை கரத்தால் - கொழுவிய செந்நிற ஒளித் தொகுதியாகிய அழகிய கரத்தால், எதிரும் - எதிர்ப்பட்ட, வல் இருள் - வலிய இருட்டாகிய, கரி இறுத்து - யானையை அழியச் செய்து, எழு - எழும்போது, உதிர வெள்ளத்து மூழ்கி - இரத்தப் பெருக்கில் படிந்து, எழுந்தவனும் என உதித்தான் - எழுந்தவன் என்று கூறுமாறு உதயம் செய்தான்.

தற்குறிப்பேற்றவணி. உதிக்கின்ற சூரியன் செந்நிறமாகக் காணப் படுபவன் ஆகலின், 'மூழ்கி உதிர வெள்ளத்துள் எழுந்தவன் ஆம் என' எனப்பட்டது. ஒன்றைத் தொலைத்து நீராடுவது என்ற உலகவழக்குண்மையின், சூரியனும் தன் பகையான இருளை ஒழித்து நீராடியதாகக் கூறப்பட்டது. சூரியனுடைய ஒளித் தொகுதிகளை அதன் கரங்களாகக் கூறுவது கவி மரபு. எதிர்ந் ததைக் கரியென்று கூறி, சூரியனைச் சிங்கம் என்று கூறாமையின் ஏகதேச வுருவகம் என்க. இருளுக்குவன்மை அடர்த்தியும் மிகுதியு மாம். கரியிறுத்து உதிர வெள்ளத்து எழு முறை மூழ்கி எனக் கோடலுமாம்; 'பரசுராமன் இருபத்தோரு தலைமுறை அரசரைக் கொன்று அவர் குருதியில் முழுகி எழுந்தது போல' என்றது பழைய வுரைக் குறிப்பு.

பா-ம். 1. அதிர; அமைக்கின்ற.
3. எதிரிற், எதிர; எல்லிருட், பல்வகைக்; கரியறுத்து, சரிசெறுத்து, பகையறுத்து.
4. வெள்ளத்தின்; எழுந்தனன்.

## வெயில் பரத்தல்

2292. அரக்க ரென்றபே ரிருளினை யிராமனு மிரவி
துரக்க வெஞ்சுடர்க் கதிரவன் புறத்திருள் துரக்கப்
புரக்கும் வெய்யவ ரிருவரை யுடையன போல
நிரக்கு நல்லொளி பரந்தன வுலகெலா நிமிர.

அரக்கர் என்ற பேர் இருளினை - இராக்கதர் என்ற பெரிய இருட்டினை, இராமன் ஆம் இரவி துரக்க - இராமபிரான் என்ற கதிரவன் விரட்டா நிற்க, வெம் சுடர் கதிரவன் - வெப்பம் வாய்ந்த கதிர்களை யுடைய சூரியன், புறத்து இருள் துரக்க - வெளியிருளை அகற்றுவதாலே, புரக்கும் வெய்யவர் இருவரை உடையன போல - பாதுகாவல் செய்கின்ற இரண்டு சூரியர்கள் உடையன போன்று, நிரக்கும் நல் ஒளி - வரிசையாகத் தோன்றும் மிக்க ஒளி, உலகு எலாம் நிமிர பரந்தன - உலகம் முழுவதும் விரிந்து பரந்தன.

அரக்கரை இருளாகவும் இராமபிரானைக் கதிரோனாகவும் கூறினர். 'இருளுடைவைகலேம் இரவி தோன்றினாய்' (ஆரணிய. 133); 'பலர் புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு' (திருமுரு. 2); என்றது காண்க. (ஒப்பு) அரக்கரென் கடலிடை யாழ்கின்று ரொரு, மரக்கலம் பெற்றென மறுக்கம் நீங்கினர்' (ஆரணிய. 123); துரக்க; 'துரக்க நல்லறம் துறந்தனள் தூமொழி மடமான்' (அயோத்தி. மந்தரை: 78) இராமனும் இரவி அஞ்ஞானமாகிய இருளைப் போக்கு வனும் ஆவன்' ரவி என்ற வடசொல் 'ரவ்விற்கம் முதலா முக்குறி லும்' (நன்) எனறதற் கேற்ப இகரச்சுட்டு பெற்று வந்தது. இங்கே இருவகை இருளினையும் அவைகள் அகற்றப் பெற்றதையும் கூறினர். அரக்கராகிய இருளை அஞ்ஞான அந்தகாரம் என்றும், உலகிருளைப் புற இருட்டாகவும் கொள்க; (ஒப்பு) 'நீறணிந்தார் அகத்திருளும் நிறை கங்குற் புறத்திருளும், மாறவரும் பருவத்தே' (பெரிய பு.). இராமபிரானுக்கும் சூரியனுக்கும் புரத்தல் பொதுத் தன்மை, ஒருவன் அருளாற் புரப்பதும் மற்றொருவன் ஒளியாற் புரப்பதும் உயத்துணர்க. 'இராமபிரான் சூரிய வமிசத்தவன் ஆதலும் குறிக் கொள்க.

பி - ம். 1. அன்பதோர் ; இராமனைப் போரில், ஆமிந்து, ஆமருக்கன்.

2. தொலைக்க.

3. இருவரும் ஒருவரே.

4. நிரைக்கும் ; பரந்தென, பரந்தலிற். 56

## படுகளக் காட்சி

2293. நிலைகொள் பேரிரு ணீங்கலு நிலத்திடை நின்ற
மலையும் வேலையும் வரம்பில வயின்றொறும் பரந்து
தொலைவி றன்மைய தோன்றுவ போன்றன சோரி
அலைகொள் வேலையும் மரும்பிணக் குன்றமு மணவி.

நிலைகொள் பேர் இருள் நீங்கலும் - நிலைபெற்ற மிக்க இருள் அகலுதலும், அலைகொள் சோரி வேலையும் - அலையைக் கொண்ட உதிரக் கடலும், அருபிணம் குன்றம் - அரிய (யானைப்) பிணங்களாகிய மலைகளும், அணவி - ஒன்றாகப் பொருந்தி, நிலத்திடை நின்ற - தரையில் நின்ற, மலையும் வேலையும் - மலையும் கடலும், வரமபு இல - எல்லை யற்றனவாய், வயின்தொறும் பரந்து - இடங்கள் தோறும் பரவி, தொலைவில் தன்மைய தோன்றுவ போன்றன - ஒழியாத இயல்பினவாய்க் காணப்படுவன போன்றன.

உதய காலத்தில் கடலும் மலையும் தோன்றுவன போன்று உதிர வெள்ளமும் யானைகளும் காணப்பட்டன. உவமையணி. குன்றம் : யானைக்கு உவமவாகு பெயர். வருங்குன்ற மொன்றுரித்தோன் (திருக்கோவை. 15); 'நிலைகொள் பேர் இருள் : பிரளயம் வடிந்தது போல இருள் நிங்கின பின், படைத்த மலையும் கடலும் போன்றது பிணமும் குருதியும்' என்பது பழைய வுரை.

பி - ம். 2. பரந்த, வதிந்த வதிந்து.

3. தொலையுந் தன்மைய தோன்றுவ, தொலைவிலாதவை, தோன்றுவ, தொலைவில் தன்மையத் தொன்றுவ.

4. அருப்பிணக் குன்றமும் ; நிரம்ப, நிரம்பி, நிரப்பி, நிரவி. 57

2294. நிலந்த வாதசெந் நீரிடை நிணக்கொழுஞ் சேற்றில்
புலர்ந்த காலையிற் பொறிவரி யம்பெனுந் தும்பி
கலந்த தாமரைப் பெருவனங் கதிரவன் கரத்தால்
மலர்ந்த தாமெனப் பொலிந்தன வுலந்தவர் வதனம்.

புலர்ந்த காலையில் - விடியற் போதிலே, நிலம் தவாத செநீர் இடை - நிலத்தினின்று நீங்காத உதிரப் பெருக்கிலே, நிணம் கொழு சேற்றில் - கொழுப்பாகிய வளவிய சேற்றிடையே, பொறி வரி அம்பு எனும் தும்பி - புள்ளிகளையும் வரிகளையும் உடைய வாளிகளாகிய வண்டு, கலந்த - மொய்க்கப் பெற்ற, உலந்தவர் வதனம் - உயிர் இழந்தவர்களின் முகங்கள், தும்பி கலந்த தாமரை பெருவனம் - வண்டுகள் மொய்க்கப்பெற்ற தாமரையாகிய பெருங் காடு, கதிரவன் கரத்தால் - சூரியனுடைய கிரணங்களால், மலர்ந்தது ஆம் என பொலிந்தன - விரிந்து தோன்றுவது போன்று விளங்கின.

'பொறிவரிய சிறைவண்டு' (பெரிய திரு.) உவமையணி : இங்கு 'அம்பெனும் தும்பி' என்ற உருவகவணி அங்கமாயிற்று. தவாத: கெடாத: 'அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றும், தவா அப் பிறப்பீனும் வித்து.' (குறள். 31); செந்நீர் : உதிரம்; தும்பி : வண்டு ; 'நண்டும் தும்பியும் நான்கறிவினவே' (தொல். மரபி : 31); மலரும் பருவத்தரும்பான போதுகள் வண்டுகள் தீண்ட மலரும் என்ப. இங்குஅரக்கர்களின் வதனமான தாமரை, கதிரவன் கரத் தால் மலர்ந்தன எனப்பட்டது. அரக்கர்கள் நிறம் கருமை; அங்ஙனமாக, இங்கு அவர்களின் முகம் தாமரைக்குவமித்தது. பெருகிய உதிரத்தால் அவர்களின் முகம் சிவந்தது கொண்டு என்க. மற்றும் கருநிறமான வண்டு கலந்த தாமரைக்குக் கதிரவன் கரம் கலந்த தாமரைக்கு உவமை கூறியது கொண்டு, அரக்கர் முகம் கருஞாயிறு ஒன்றுண்டெனில் அது போன்றிருந்தது என்க. இராமபிரான் சுவேல மலையிற்றோன்றியது, கருஞாயிறு வடதிசை மலையொன்றில் கெட்ட அறிகுறியாகத் தோன்றியதற் குவமை யாக்கப்பட்டது காண்க. (யுத்த. இலங்கை காண் : 27).

பா - ம். 2. உலர்ந்தவர்.

இங்கு அதிகப்பாடல்:—

கொடும ரத்திடை யிராகவன் கோத்தவெம் பகழி
அடல ரக்கரென் றுரைத்திடும் கானக மடங்கக்
கடிகை யுற்றதில் களைந்தது கண்டுவிண் ணவர்கள்
விடிய லுற்றது நம்பெருந் துயரென வியந்தார்.

2295. தேரும் யானையும் புரவியும் விரவின தேவர்
ஊரு மானமு மேகமு முடுக்கள்தம் முலகும்
பேரு மானவெங் காலத்துக் கால்பொரப் பிணங்கிப்
பாரின் விழ்ந்தன போன்றன கிடந்தன பரந்து.

(போர்க் களத்தில்) தேரும் யானையும் புரவியும் விரவின - தேரும் வேழமும் குதிரையும் கலந்து கிடப்பவை, (உலகம்) பேரும் ஆன வெம் காலத்து - நிலை கெடுகின்ற, வெம் காலத்து - அந்த வெம்மை மிக்க போழ்தில், கால் பொர - காற்று அடித்து வீச, பிணங்கி - மாறுபட்டு, தேவர் ஊரும் மானமும்- அமரர்கள் ஏறிச் செலுத்தும் விமானமும், மேகமும் - மேகமும், உடுக்கள் தம் உலகும் - நட்சத்திர மண்டலமும், பாரின் வீழ்ந்தன போன்றன - பூமியில் வீழ்ந்தனவாய், பரந்து கிடந்தன - பரவலுற்றுக் கிடந்தன, போன்றன - காணப்பட்டன.

மானம்: விமானம். 'சாருமானத்தில் சந்திரன் தனிப்பதம் சரிக்கும்' (யுத்த. 136); 'பொலங்கிளர் மானந் தானே பொதுவறக் கொடுப்பேன்' (யுத்த. 1617); உடுக்கள் தம் உலகு - நட்சத்திர மண்டிலம்' கால்: ஊழிக்காற்று. பரந்து கிடந்தன என்க. தற்குறிப்பேற்றவணி.

பி-ம். 2. உடுக்களு முலகமு மலையும், மேகமு முடுக்களு முலகும்.
4. பாருள் விழ்ந்தன; பரந்தன கிடந்த, கிடந்தன பரந்த. 59

அரக்கியர் நிலை

2296. எல்லி சுற்றிய மதிநிகர் முகத்திய ரெரிவிழ்
அல்லி சுற்றிய கோதையர் களம்புகுந் தடைந்தார்
புல்லி முற்றிய வுயிரினர் பொருந்தினர் கிடந்தார்
வல்லி சுற்றிய மாமர நிகர்த்தனர் வயவர்.

எல்லி சுற்றிய - இரவில் உலவுகின்ற, மதி நிகர் முகத்தியர் - (முழுச்) சந்திரனை ஒத்த முகத்தினரும், எரி வீழ் - நெருப்பினை ஒத்த, அல்லி சுற்றிய கோதையர் - அகவிதழ்களைச் சுற்றி அணிந்துள்ள கூந்தலை யுடையவர்களும், களம் புகுந்து அடைந்தார் - போர்க்களத்துட் புகுந்து நின்றவருமான, அரக்கியரால், புல்லி - தழுவப்பெற்று, முற்றிய உயிரினர் - முடிந்த உயிரினையுடையவராய், (அந்தக் களத்திடைப்) பொருந்தினர் கிடந்தார் - பொருந்திக் கிடந்த, வயவர் இராக்கத வீரர், வல்லி சுற்றிய மாமரம் நிகர்த்தனர் - கொடியினாற் சுற்றப்பட்ட பெரிய மரங்களை ஒத்து விளங்கினர்.

எல்லி - இரவு. 'எல்லியும் பகலும் போலத்தழுவினர் எழுவிற் றோளார்' (யுத்த 426); எல்லியும் பகலுந் தோன்றுந் திமையவ ருலக மேய்க்கும்' (நைடத. நாட்டு: 26); 'எல்லியது காலையிது' (சீவக. 1877); இச்சொல் பகலையும் குறிக்கும். 'இரவோடெல்லியும் ஏத்து வார்' (தேவா. 344, 8); எரிவீழ் அல்லி - நெருப்பினையும் தன் நிறத்தால் வீழ்க்கும் அல்லி; அரக்கியர் தலைமயிர் செம்பட்ட மயிராதலின் 'செக்கர்வார் கூந்தல்' என இதனை அடுத்து வரும் செய்யுட் காண்க. அடை: பூவின் அகவிதழ், 'அல்லிமலர் புல்லும்' (பால. கோலங். 32). அல்லி: இங்கு மலர்க்காகி வந்தது. சினையாகுபெயர். முற்றிய உயிரினர்: வடமொழி நடை. பொருந்தினர்: முற்றெச்சம். தற்குறிப்பேற்றவணி. இது முதல் உடன் கட்டை யேறுவோர் பற்றிச் சில செய்யுட்கள்.

பி - ம். 2. வல்லி; கோதையின்.
3. பொருந்திட.
4. மராமரம். 60

2297. வணங்கு நுண்ணிடை மலைமுலைச் செக்கர்வார் கூந்தல்
அணங்கு வெள்ளெயிற் றரக்கியர் களத்துவந் தடைந்தார்
குணங்கொ ளுந்துணைக் கணவர்தம் பசுந்தலை கொடாது
பிணங்கு பேய்களைப் பிளந்தனர் தொடர்ந்தனர் பிடித்தார்.

வணங்கும் நுண் இடை - ஒசியும் இயல்பு வாய்ந்த நுட்பமான இடையினையும், மலை முலை - குன்றுகள் போன்ற தனங்களையும்,

செக்கர்வார் கூந்தல் - சிவந்த நீண்ட அளகத்தினையும், அணங்கு வெள் எயிறு - வருத்தும் தன்மை செறிந்த பற்களினையும், கொண்ட, களத்து வந்து அடைந்தார் - போர்க்களம் வந்து சேர்ந்த, அரக்கியர் - இராக்கத மகளிர், குணம் கொளும் துணை கணவர்தம் - அன்பு வைத்தலாகிய பண்பினைக்கொண்ட, (தம்) வாழ்க்கைத் துணையாக ஒளிர்ந்த கணவன் மாரின், பசும் தலை கொடாது (தாம் உண்டு களிப்பதற்காகத் தம் கரத்தில் வைத்துக் கொண்டிருந்த) உதிரத்தால் ஈரம் செறிந்த (கணவர்தம் தலைகளைத் தம்மிடம்) தாாமல், பிணங்கு - மாறுபட்ட பேய்களை, தொடர்ந்தனர் பிளந்தனர் பிடித்தார் - தொடர்ந்து பிளந்து கைப்பற்றினர்.

வணங்குதல் : வளைந்து ஒசிதல்: நுண்ணிடை - நுட்பமாய்க் கட்புலனாகாத இடை : 'இல்லை யுண்டென்ன நின்ற இடை' (பால. கோலங் : 12); என்றமை காண்க. வனமுலை என்ற ஒரு பாடம் உண்டு ; எனினும் நுண்ணிடை மேலும் மேலும் வருந்துதற்குக் காரணமான முலையாகலின், மலை முலை என்ற பாடம் தழுவப் பட்டது. மலை முலை என்பதைக் காலம் கரந்த பெயரெச்சமாக்கி இடையுடன் மலைகின்ற முலையெனினுமாம். உத்தமசாதி மகளிர்க்கு இடை சிறுத்திருத்தல்வேண்டும் என்று அங்க இலக்கண நூல் கூறும். 'நுதலடி நுசுப்பென மூவகைச் சிறுகி' (கலித்); என்றது காண்க. செக்கர் : சிவப்பு ; 'செக்கர் மேகத்துச் சிறுபிறை நுழைந்தன' (யுத்த. 219); குணம் கொளுந் துணைக்கணவர் : இங்கு வாழ்க்கைத் துணைவியர் மாட்டுக் கணவன்மார் காட்ட வேண்டிய அன்பாகிய பண்பு குறிக்கப் பெறுதல் காண்க. பசுந் தலை : உதிரம் வற்றாத தலை.

பி - ம். 1. வனமுலை ; வான்.

2. அமர்க்களத்து, அமர்க்களம்.

3. குணங்கடந்த.

4. பேய்களின் வாய்களைப் பிளந்தனர்; பிடித்தே, பிடிப்பார். 61

2298. சுடரும் வெள்வளைத் தோளிதன் கொழுநனைந் [தொடர்வாள்
உடரு மங்கமுங் கண்டுகோண் டொருவழி யுய்ப்பாள்
குடரு மீரலுங் கண்ணுமோர் குறுநரி கொள்ளத்
தொடர வாற்றல ளொடிதுயிர்த் தாருயிர் துறந்தாள்.

சுடரும் - ஒளிவிடுகின்ற, வெள்வளை தோளி - வெண்ணிற மான வளையைத் தரித்த தோள்களைக் கொண்ட ஓர் அரக்கி, தன் கொழுநனை தொடர்வாள் - தன் கணவனைக் கண்ணுறுமாறு செல் பவள், உடரும் அங்கமும் கண்டு (அவனுடைய) உடலும் அதன் பால் வேறு உறுப்புக்களும் (தனித்தனிக் கிடந்ததைப்) பார்த்து, கொண்டு - (அவற்றைத்) தாங்கிக்கொண்டு, ஒருவழி உய்ப்பாள் - ஓரிடத்திற் சேர்ப்பவளாய், (அக் கணவனுடைய), குடரும் ஈரலும் கண்ணும் ஓர் குறி நரி கொள்ள - குடலையும் ஈரலையும் கண்களையும் ஒரு குள்ளநரி கைக்கொண்டதாக, தொடர - (அதனைப் பின்) தொடர்தற்கு, ஆற்றலள் - வன்மையற்றவளாய், நெடிது உயிர்த்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு, ஆர்உயிர் துறந்தாள் - தனது அருமை யான உயிரை நீத்தாள்.

வெள்வளை - வெண்ணிறமான சங்கினை அறுத்துச் செய்த வளை. இந்தச் சங்கு வளை மகளிரைப் பேய்கள் முதலியன அணு காமல் காக்கும் என்ப. 'நீநத்தைப் போடவும் நானத்தைத் தேடவும் நித்தம் வரும், சீனத்துக் கப்பல் உளவோ' (தனிப்பா) உடர், குடர்: ஈற்றெழுத்துப் போலி; குறு நரி - குள்ள நரி; வளை சங்கு - அக்காலத்தில் சங்கினைக் கொண்டு செய்யப்பட்டன வாதலின் மகளிர் கையணி வளை எனப்பட்டது. 'செங்கட் குறு நரியோர் சிங்க வேற்றைச் செகுத்தாங்கு' (சீவக. 297); 'பேய்கள் கைகளை யுச்சிக்கூப்பி, அளித்தவை பாடி யாடக் குறுநரி நக்கு வேழம் விளித்தன' (சீவக. 804); ஈரல்: இதனை உள்ளீரல் என்றும் ஈருள் என்றும் வழங்குவர். நெடிதுயிர்த்து: 'நெடிது போது யிர்த்து நின்று' (பெரிய. பு. கண்ணப்ப: 106); ஆருயிர்: ஆருயிர் கொடுத்துக் காத்தார் எண்ணிலா வரசரம்மா' (யுத்த. 422); ஆற்றலள் : அல் எதிர்மறை இடைநிலை.

பி - ம். 1. கணவனை.

2. உடலும்; கைகளும்; உய்யான்.

3. குடலும்; ஈருளும்.



2299. பெரிய வாட்டடங் கண்ணியர் கணவர்தம் பெருந்தோள்
நரிக ளீர்த்தன வணங்கவு மிணங்கவு நல்கா
இரியல் போவன தொடர்ந்தய லினப்படை கிடந்த
அரிய நொந்தில ரலத்தகச் சீறடி யந்தோ.

பெரிய வாள் தட கண்ணியர் - பெரிய வாள்போன்ற அகன்ற விழிகளையுடைய அரக்கர் மகளிர், தம் கணவர் பெரு தோள் ஈர்த்தன நரிகள் - தமது கணவன்மாருடைய உயர்ந்த தோள்களை இழுத்துச்சென்றனவான நரிகள், வணங்கவும் - தாழ்ந்து கேட்கவும், இணங்கவும் - இணங்கும்படி கூறியும், நல்கா - கொடாமல், இரியல் போவன - ஓடுவனவற்றை, தொடர்ந்து - பின்பற்றிச் சென்று, அயல் - அருகில், கிடந்த - வீழ்ந்துகிடந்த, இனம் படை - தொகுதியான போர்க்கருவிகள், அரிய - அறுத்திடவும், அலத்தகம் சிறடி நொந்திலர் - செம்பஞ்சுக் குழம்பு தீற்றப்பெற்ற சிறிய அடிகள் வருந்தாராயினர்.

பெரிய வாள் தடம் கண்ணியர்: பெருமை என்பதனால் நீளமும், வாள் என்பதனால் ஒளியும், தட என்பதனால் அகலமும் கூறப்பட்டன. மங்காது கண்ணுக்கு நல்ல ஒளி வேண்டும்; 'ஒளிபடைத்த கண்ணினாய் வாவா' (அமரகவி பாரதி). வாட்டடங் கண்: 'வாட்டடங்கண் மாதே வளருதியோ' (திருவெம்பாவை. 1). ஈர்த்தல் - இழுத்தல்; 'முத்தீர்த்துப் பொன்திரட்டி' (கிட்கிந்தா. 740); 'நார்த்தொடுத் தீர்க்கிலென் நல்லோர் பழிக்கிலென்' (நாலடி. 26); 'இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த்தென் னென் புருக்கி' (திருவாச. ஏசறவு. 1). நல்கா: செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். இரியல் போதல்; ஆரணிய. 420 473. இனப்படை என்றதனால் வேல், வாள், ஈட்டி, தோமரம் முதலிய அனைத்தும் கொள்க. அலத்தகம் - செம்பஞ்சுக் குழம்பு; 'அலத்தகத் தளிர்க்கை நோவ'; 'அலத்தக மெழுதி'; 'அலத்தகக் குழம்பு' (சுந்தர. 201, 204, 247).

பி - ம். 1. கண்ணியோர்; கணவன்றன்.
2. நரியுமோரியும்; வணங்கிட; கவர்ந்தவா,
3. அயிலெனப்.
4. நேர்ந்திலர், நொந்தில, நொந்திலது; அயர்ந்தார், அயர்ந்தாள்: யிர்ந்து. 63

2300. நலங்கொ ளெஞ்சினர் தந்துணைக் கணவரை நாடி
விலங்க லன்னவான் பெரும்பிணக் குப்பையின் மேலோர்
அலங்க லோதிய ருந்துணை பிரிந்துநின் றயரும்
பொலங்கொண் மாமயில் வரையின்மேற் றிரிவன
[போன்றார்.

தம் துணை கணவரை நாடி - தம்முடைய வாழ்க்கைத் துணைவ ராகிய கணவரைத் தேடி, விலங்கல் அன்ன - மலைபோன்ற, வான் பெரு பிணம் குப்பையின் மேலோர் - ஓங்கிய பெரிய பிணக் குவியலின்மீது திரிபவரான, அலங்கல் ஓதியர் - மாலையணிந்த கூந்தலையுடைய, நலம் கொள் நெஞ்சினர் - நன்மையைக்கொண்ட உள்ளத்தினரான அரக்க மகளிர், அரு துணை பிரிந்து நின்று அயரும் - தமது அரிய துணைமயில்களைப் பிரிந்து தளர்கின்ற, பொலம் கொள் மா மயில் - அழகுசெறிந்த பெரிய மயில்கள், வரை யின் மேல் திரிவன போன்றார் - மலையின்மேல் திரிவனவற்றை நிகர்த்து விளங்கினார்.

நலங்கொள்: 'நலங்கொள் மைந்தனைத் தழுவினன் என்ப தென்' (அயோத்தி. மந்திர. 60); 'நலங்கொ டேவரில்' (கிட்கிந்தா. 336). விலங்கல் - மலை; பூமியின் குறுக்கே நிற்பது என்ப. ஓதி - பெண் மயில்; 'நரைத்த ஓதி' (வில்லி. பா. நிரைமீட்சி. 29). மயில் மகளிர்க்குச் சாயல் உவமை; 'பொலங்கொள் மாமணி வெள்ளியங் குன்றெனப் பொலிய' (சுந்தர. 1080); உவமையணி.

பி - ம். 1. துணைவரை, பெருந்துணை.
3. அயர்வின், அசுவும்.
4. மலையின்மேல்.

64

**2301.** **சிலவர் தம்பெருங் கணவர்தஞ் செருந்தொழிற் சினத்தாற்**
**பலரும் வாய்மடித் துயிர்துறந் தார்களைப் பார்த்தார்**
**அலைவில் வெள்ளெயிற் றுலிதழ் மறைத்துள தயலாள்**
**கலவி யின்குறி காண்டுமென் றுமெனக் கனன்றார்.**

சிலவர் - சில மகளிர், தம் பெரு கணவர் பலரும் - தம் பெருமை மிக்க கணவர் பலரும், தம் செரு தொழில் சினத்தால் - தம் போர்த் தொழிலிலே (கிளர்ந்த) வெகுளியால், வாய் மடித்து உயிர் துறந் தார்களை பார்த்தார் - வாய் மடித்தவண்ணம் உயிர் நீத்தவர்களைக் கண்டு; '(இவர்கள்), அலைவில் - அசைதல் இல்லாத, வெள் எயிற்றால் - வெண்ணிறமான பற்களினால், இதழ் மறைத்துளது - உதடுகளை மறைத்து நின்றது, அயலாள் - அயல் மாதரின், கலவி

யின் குறி காண்டும் என்று ஆம் - கலவிக்குறியினை (நாம்) கண்டு விடுவோம் என்ற எண்ணத்தினாற்போலும்', என - என நினைத்து, கனன்றார் - அவர்கள்மீது வெகுண்டார்.

வாய் மடித்தல்: வீரமெய்ப்பாடுகளில் ஒன்று; 'வாய்மடித் துருத்து நக்கான்' (சுந்தர. 985). இச்செய்யுட்கண் அவலத்தின் மிகுதி காண்க. தம் கணவர் இறந்துகிடக்க, அதனை உணராது தாம் தரத்தக்க இன்பத்தை அயல்மாதொருத்தி தரப்பெற்றதாக எண்ணிச் சினந்ததாகக் கூறிய அவலம் உணரத்தக்கது. அயல் மாதர்: பரத்தையர் என்க. பெருமை - பெருந்தன்மை. இதழிற் கலவியின் குறி அதரபானத்தால் நிகழ்வது; 'பாலொடு தேன் கலந்தற்றே டணிமொழி, வாலெயிறூறியநீர்' (குறள். 1121); வினிதே யணியிழை, வாலெயி றூறிய நீர்' (குறள். 64) என்றது காண்க.

பி - ம். 1. கணவர்கள்.
3. அலரும், அலகில்; மறைந்துளது.
4. காண்குவம் யாமென, காண்குதும் யாமென. 65

2302. நவைசெய் வன்றலை யிழந்தத மன்பரை நணுகி
அவச மெய்திட மடந்தைய ருருத்தெரிந் தறியார்
துவச மன்னதங் கூருகிர்ப் பெருங்குறி தோண்மேற்
கவச நீக்கினர் கண்டுகண் டாருயிர் கழித்தார்.

வல் தலை இழந்த - வலிய தலையைப் போரில் இழக்கப்பெற்ற வரும், நவை செய் - குற்றம்செய்யும் இயல்புடையவருமான, தம் அன்பரை - தம் கணவருடைய, உரு தெரிந்து அறியார் - உருவத் தைத் தெரிந்துணரமாட்டாதவராய், நணுகி-நெருங்கி, மடந்தையர் - பெண்கள், அவசம் எய்திட - தம்வயம் தவறப்பெற்று; (பின்னர் அவனுடைய), கவசம் நீக்கினர் - புயங்களின் மீதிருந்த கவசத்தை நீக்கி, தோள்மேல் - அவர்களின் தோள்மீது, துவசம் அன்ன தம் கூர் உகிர் பெரு குறி - கொடிகள்போன்று தாம் கூர்மையான நகங்களாற் செய்த பெருங்குறி, கண்டு கண்டு ஆர் உயிர் கழித் தார் - பார்த்துப் பார்த்துத் தங்கள் அருமையான உயிரைப் போக்கினர்.

மடந்தையர் கழித்தார் என்க. மடந்தையர் பேதையாதிப் பருவம் குறித்து வந்ததன்று, பொதுவாக மகளிரைக் குறித்து நின்றது. வல் தலை - வலிய தலை; அகம்பாவமும் கொடுமையும் நிறைந்த தலை எனினுமாம். அது நவைசெய் என்ற தொடரினுல் அறியப்படும்; 'நவைசெய் வன்றலை; கலவியிலூடி உதைக்குந் தோறும் தொண்டரைப்போல வணங்கும் வலியதலை' என்பது பழைய உரைக்குறிப்பு. பிறர்க்கு வன்மை செய்யினும் தம்மிடத்து அன்பிற் குறையாதவர் என்பார் தம் அன்பரை எனப்பட்டது; (ஒப்பு): 'மைந்தர்க்கு மைந்து மகளிர்க்குச் சாயலன்' (பதிற்றுப்.) அவசம்: ந+வசம் என்பது சமாசம்; 'அவசமாய்ச் சிந்தையழிந் தயலே நின்ருன்' (ஆரணிய. 99). துவசம் - கொடி; 'துவசமார் தொல்லமருட் டுன்னுரைச் செற்றும்' (ஆரணிய. 99). நகக் குறிகள் ஆடவர் பெண்டிருடைய கலவிக்காலத்துக் கூருகிரால் பலவடிவாகச் செய்யும் குறிகள்; 'விரிந்த கூர்உகிராலழி சாந்து' (பால. புனல் விளையாட்டுப் படலத்திருந்து தந்த மேற்கோட் கவியில், நீரினுல் பூசிய சாந்தழிய நகக்குறி வெளிப்பட அதனைக் கண்டு சினந்தார் எனப் பட்டது. இங்கு இறந்துபட்ட வீரர்களின் கவசத்தை நீக்கிய அளவில் அக்குறிகள் காணப்பட அவற்றைக்கண்டு மனமழிந்து உயிர் நீத்தார் என்று கூறப்பட்டது; 'உகிர்செய்த வடுவினுன்' (கலித். 72 : 11). அருமை + உயிர் = ஆருயிர். அருமை, பிரிந்தால் மீட்டும் பெறற்கருமை; 'கறந்தபால் முலைபுகா, கடைந்த வெண் ணெய் மோர்புகா' என்று வருவது காண்க. ஆருயிர் நீங்கப் பெற்ருர் என்னுது, வலிய உடன்கட்டை யேறுவதுபோன்று மரித்தனர் ஆகலின், கழித்தார் எனப்பட்டது. நீக்கினர், முற் றெச்சம். மகளிர் முதலில் தம் கணவர் என்று அறியக்கூட வில்லை; பின்னர் கவசத்தை நீக்கத்தாம் அவர்தம் தோளிற் செய்த நகக்குறி தோன்றவே, தம் கணவர் என்று அறிந்து, அவ னுடன் நடத்தும் இன்ப வாழ்க்கை அற்ற நிலையில் இறப்பதே துணிந்து உயிர் கழித்தார் என்க. பார்க்கும்தோறும் கிலேசம் மிகுமாதலின், 'கண்டு கண்டு' எனப்பட்டது; (ஒப்பு): 'நோக்கிய கண் ணிமையாமல் நோக்கி நோக்கி, நுண்ணியமென் புலவியிலே

நொந்து நொந்து, தேக்கியசெங் கனியிதழாரமுதுண் டுண்டு, சேர்த்திய கைநெகிழாமற் சேர்ந்து சேர்ந்து' (வில்லி. பா. அருச்.) என்று வந்தது காண்க.

பி - ம். 1. நவசெய் ; யிழந்தனர் ; நண்பரை.

2. எய்திய ; மங்கையர்.

4. பின்னர்க் ; நீங்கினர்க் ; கண்டுகண்டு ; அழிந்தார். 66

2303. மாரி யாக்கிய கண்ணியார் கணவர்தம் வயிரப்
போரி யாக்கைக ணாடியப் பொருகளம் புகுந்தார்
பேரி யாக்கையின் பிணப்பெருங் குன்றிடைப் பிறந்த
சோரி யாற்றிடை யழுந்தின ரின்னுயிர் துறந்தார்.

மாரி ஆக்கிய கண்ணியர் - மழை போன்று பெருகுகின்ற நீரை உண்டு பண்ணிய விழிகளையுடையவர்களான அரக்க மகளிர், கணவர்தம் - கணவன்மாருடைய, வயிரம் போர் யாக்கைகள் நாடி - வயிரம் போன்று வன்மை செறிந்ததும் போர் செய்து வீழ்ந்தது மான உடல்களைத் தேடி, அ - அந்த, பொருகளம் புகுந்தார் - யுத்த களத்திலே புக்காராய், பிணம் பெருங்குன்றிடை - பிணங்களாலாகிய பெரிய மலையினிடத்தே, (தம் கேள்வருடைய) பேர் யாக்கையில் பிறந்த - பெரிய சரீரத்தினின்றும் எழுந்த, சோரி ஆற்றிடை - இரத்த வெள்ளத்திலே, அழுந்தினர் - மூழ்கியவராய், இன் உயிர் துறந்தார் - (தங்கள) இனிய உயிரை விடுத்தார்கள்.

மாரி ஆக்கிய கண்ணியர் ; (ஒப்பு) ; மழைக்கண் என்பது காரணக் குறியை வகுத்தான். (சுந்தர. 335) ; 'விண்மாரி யென விருகண்மாரி பெய்யவே' (தாயு. சுகவாரி. 6); போரியாக் கையிற் பிறந்த்சோரி அம்மகளிர்கள் மூழ்குதற்கு அமையும் என்பார் சோரி ஆற்றிடை எனப்பட்டது. 'மார்பெனு மலை வழங்கருவி ஓசைச் சோரி என வந்துள்ளமை காண்க. இங்கு மகளிர் மேற்கொண்ட சாவு மூதானந்தம் எனப்படும். பு. வெ. மாலை : 262-ம் அதன் உதாரணச் செய்யுளும் காண்க 'என்னிலாரு மெனக்கினியாரிலை' (தேவா. 252 : 1) ; எனப்பட்டமையின் இன்னுயிர் என்று கூறினர்.

பி-ம். 1. போரிலாக்கைகள்.

2. நாடினர், நாடிய ; புக்கார்.

3. யாக்வகயை ; பெரும்பிணக்.

4. ஒழுக்கினர். 67

இங்கு அதிகப் பாடல் :—

வெற்றி வெம்படைத் தலைவரென் றுரைத்திடும் வெள்ளத்
துற்ற போர்வலி யரக்கர்கள் ஒருதனி முதல்வன்
கொற்ற வெஞ்சர மறுத்திட வளப்பிலர் குறைந்தார்
மற்றும் நின்றவருந் திசை தனித்தனி மலைந்தார்.

## வேறு

## தூமிராட்சன் போரில் பொருது இறந்தமை

2304. வகைநின்றுயர் தாணெடு மாருதியும்
புகையின்பொரு கண்ணவ னும்பொருவார்
மிகைசென்றிலர் பின்றிலர் வென்றிலரால்
சிகைசென்று நிரம்பிய தீயுமிழ்வார்.

வகை நின்று உயர் தாள - பொருத்தமாக உயர்ந்து நின்ற அடியினையுடைய, நெடு-பெரிய, மாருதியும் - (காற்றின் மகனான) அநுமனும், புகையின் பொரு கண்ணவனும்-புகையுடன் பொருகின்ற கண்ணனும், பொருவார்-போர் செய்பவராய், சிகைசென்று நிரம்பிய தீ உமிழ்வார் - கொழுந்துவிட்டு நிறைந்த நெருப்பினைக் கக்குபவராய், மிகை சென்றிலர் பின்றிலர் வென்றிலர் - மேற் செல்லவுமில்லை. பின் வாங்கவுமில்லை, (ஒருவர் ஒருவரை) வெற்றி கொண்டாரும் இல்லை ; ஆல் - அசை.

இருவரும் ஒத்த வீரம் உடையவர் என்பது மூன்றாவதடியால் விளங்கும். சிகை - அக்கினியின் கொழுந்து. இப்பாடல் முதல் இப் படலத்திறுதிவரையிற் காணப்படும் செய்யுட்கள் வஞ்சி விருத்

தங்கள். மற்றும் 'வகைநின் றுயர்தா ணெடுமா ருதியும்' எனக் கலி விருத்தங்களாகக் கோடலுமாம்.

பி-ம். 1. வகைநின்றிரு, வகையின்னுயிர், வகையின்றுயர்; தாளுயர்' தோளொடு.

2. புகை வெங்கணனும் பொருவார் பொரவே. 68

2305. ஐயஞ்சழல் வாளி யழற்கொடியோன்
மெய்யஞ்சனை கான்முளை மேனியின்மேல்
வையஞ்சிலை யாறு வழங்கினனுல்
மொய்யஞ்சன மேக முனிந்தனையான்.

அழல் கொடியோன் - நெருப்புப் போன்று தீயவன் ஆன தூமிராட்சன; மொய் அஞ்சன மேகம் முனிந்தனையான் - நெருங்கிய கருத்த மேகம் வெகுண்டதை யொத்தவனாகி, அழல் ஐ அஞ்சுவைவாளி - எரிகின்ற இருபத்தைந்து கூர்மையான சரங்களை, மெய் அஞ்சனை கான் முளை மேனியின் மேல் - உண்மையுள்ள அஞ்சனா தேவியின் புதல்வனான அநுமன் உடலின்மீது, வைதான் அம் சிலை ஆறு-வைத்துள்ள அழகிய வில்லின் ஏற்றி அதன் வழியாக, வழங்கினன்-எய்தான்; ஆல்: அசை.

அழல் ஐ அஞ்சுவை வாளி எனக் கொண்டு கூட்டிப் பொருள் தரப்பட்டது. அழற்கொடியோன் ஆதலின் அவன் எய்த வாளியும் அழல்வாளி யெனப்பட்டது. இனி ஆறு ஐ அஞ்சு அழல்வை வாளி எனக்கொண்டு நூற்றைம்பது வாளி எனினுமாம்; மெய் அஞ்சனை-கான்முளை; 'நீதியினின்றீர் வாய்மை யமைந்தீர்' (கிட்கிந்தா. 992). 'பொய்யொடும் பகைத்து நின்ற குணத்தினன்' (யுத்த. பிரமாத்திர: 136); 'மெய்ம்மையின் வேலி' (கிட்கிந்தா. 68) கான்முளை புதல்வன். வமிசம் வளரத் தோன்றியவன்; கால்: வமிசம்; 'பூசன் முகத்தொரு கான்முளை' (யுத்த. 2248); அஞ்சிலை ஆறு: எண்ணலங்காரம் காண்க. அஞ்சன மேகம்; 'அஞ்சன மேகமென்ன' (அயோத்தி. நகர்நீ. 165). முனிந்தது அனையான் என்பது முனிந் தனையான் என வந்தது.

பி-ம். 1. அயில்வாளி; அமர்க்.

3. வையஞ்சலி; வழங்கினரும். 69

2306. பாழிப்புய மம்புரு வப்படலும்
விழிக்கனி போற்புனல் வீசவெகுண்
டாழிப்பெருந் தேரை யழித்தனனால்
ஊழிப் பெயர்கார் நிகரொண் டிறலான்.

பாழிபுயம் - வலிய புயத்தின்கண், அம்பு உருவ படலும் - அம்பானது ஊடுருவுமாறு தைத்த அளவில், வீழிகனி போல் - வீழிக் கனி போன்ற (செந்நிறம் கொண்ட), புனல் - உதிரநீர், வீச - (உடலினின்று) வெளிப்பட, ஊழிப் பெயர் கார் நிகர் - ஊழிக் காலத்திலே உலாவுகின்ற மேகத்தை ஒத்த, ஒள் திறலான் - சிறப்பான திறலுடைய அநுமன், வெகுண்டு - சீறி, (அந்த அரக்கனுடைய) ஆழி பெரு தேரை அழித்தனன் - ஆழியைக் கொண்ட பெரிய தேரை அழித்தான். ஆல் - அசை.

பாழிப்புயம் ; 'பாழியம் பணைத்தோள்' (சுந்தர. 561); வீழக் கனி ; ஓர் செந்நிறக் கனி ; யுத்த 2051, குறிப்புப் பார்க்க. ஆழி - சக்கரம். பெயர் : பெயர்தல் முதனிலைத் தொழிற் பெயர்.

பி - ம். 1. அம்பு புகப்.

2. வீழ.

3. பொரு, பெரு.



2307. சில்லிப்பொரு தேர்சிதையச் சிலையோ
டெல்லிற்பொலி விண்ணின் விசைத்தெழுவான்
வில்லிற்ற திலக்குவன் வெங்கணையால்
புல்லித்தரை யிட்டன னேர்பொருவான்.

சில்லி பொரு தேர் சிதைய - சக்கரத்தைக் கொண்ட பொருதற்குத் தகுந்த தேர் அழிந்ததாக, சிலையோடு - (தன்) வில்லுடன், எல்லில் பொலி விண்ணின் - சூரியனுடன் ஒளிரும் ஆகாயத்தின் கண், விசைத்து எழுவான் - விரைந்து எழுந்தவனை 'புகைநிறக் கண்ணனுடைய வில்லானது, இலக்குவன் வெம்கணையால்,

இலக்குவனுடைய கடிய அர்பினல், இற்றது - முறிந்தது; நேர் பொருவான் - நேரே யுத்தம் செய்பவனாகிய, அநுமன் புல்லி, (அவனைத்) தழுவி, தரை இட்டனன் - தரையிலே வீழ்த்தான்.

சில்லி - சக்கரம்; யுத்த. மூலபல: 3.

பி - ம். 2. எல்லிப்; பொரு, பெரு; விசைந்து, 71

## புகைக்கண்ணன் இறத்தல்

2308. மலையிற்பெரி யானுடன் மண்ணிடையிட்
டுலறக்கட ருவிய கால்கொடுதைத்
தலையிற்றிரு கிப்பகு வாயனல்கால்
தலைகைக்கொ டெறிந்து தணிந்தனனால்.

(அநுமன்) :—மலையில் பெரியானுடன் - மலையினைக் காட்டிலும் பெருந் தோற்றமுடையவனான புகைநிறக் கண்ணனுடைய, உடல் மண் இடைஇட்டு - உடலைத் தரையிலிட்டு, கடல் தாவிய கால்கொடு - கடலைத் தாவிய காலைக்கொண்டு, உலற (அந்த அரக்கனுடைய ஆவி) வற்றுமாறு, உதைத்து - உதைத்து, பகுவாய் - பிளந்த வாயினாலே, அனல்கால் - தீயைக் கக்குகின்ற, தலை கைகொடுதிருகி - (அவன்) தலையைக்கையால் திருகி, அலையில் எறிந்து - கடலில் வீசி, தணிந்தனன் - (கோபம்) ஆறினான். ஆல் - அசை.

பகுவாய்; யுத்த. 1555; பகுவாய் வரா அல்: (அகம். 36) அலையில் எறிந்து என்க. அலை: சினையாகு பெயராகக் கடலைக் குறித்தது.

பி - ம். 2. உலைய.
3. அலையத்; பருகி.
4. வலை, மலை; தளித்தனனால். 72

## பெரும்பக்கன் அங்கதனோடு பொருன் இறத்தல்

2309. மாபக்கனு மங்கத னும்மலைவார்
தீபத்தி னெரிந்தெழு செங்கணினர்
கோபத்தினர் கொல்ல நினைந்தடர்வார்
தூபத்தி னுயிர்ப்பர் தொடர்ந்தனரால்,

மல்லவார்-போர் புரிபவரான, மாபக்கனும் அங்கதனும்-பெரும் பக்கனும் அங்கதனும், கோபத்தினர் தீபத்தின் எரிந்து எழு செம் கணினர்-சினம் மிக்கு விளக்குப் போன்று எரிந்து எழுகின்ற சிவந்த விழியை உடையவரும், தூபத்தின் உயிர்ப்பர் - தூபம் போல் புகை வெளிப்படுகின்ற பெருமூச்சினை உடையவருமாகி, கொல்ல நினைந்து - (ஒருவர் ஒருவரைக்) கொல்லக் கருதி, அடர் வார் - அடர்பவராய், தொடர்ந்தனர் - பின் தொடர்ந்தார்கள். ஆல் : அசை.

2-வது வரிக்கு; 'சுடரைச் சுடர் தூண்டு கண்ணன்'

பி-ம். 2. எரிந்திடு.
4. தொடங்கினர்கள்.



2310. ஐம்பத்தொரு வெங்கணை யங்கதன்மா
மொய்ம்பிற்புக வுய்த்தனன் மொய்தொழிலான்
வெம்பிக் களியோடு விளித்தெழுதிண்
கம்பக்கரி யுண்டை கடாயெனவே.

மொய் தொழிலான் - நெருங்கிப் போர் புரிகின்ற தொழிலை யுடையவனான பெரும்பக்கன், வெம்பி - வெகுண்டு, களியோடு - மத மயக்கத்துடன், விளித்து எழு - ஆர்ப்பரித்துக் கிளம்புகின்ற, திண் கம்பம் கரி - வலிய கட்டுத் தறியில் கட்டத்தக்க யானைமீது, உண்டை கடாய் எனவே - உண்டையை வீசியெறிந்தவர் போன்று, ஐம்பத்தொரு வெம்கணை - ஐம்பத்தோரு கடுமையான வாளிகளை, அங்கதன் - அங்கதனுடைய, மாமொய்ம்பில் - பெரிய தோள் களிலே, புக உய்த்தனன் - புகுமாறு செலுத்தினான்.

மொய்ம்பு - தோள்; 'மீளி மொய்ம்பினரும்' (ஆரணிய. 420); மொய் - போர்; 'மொய்கண்டார் திரை வேலையைமூடவே' (யுத்த. இராவணன் சோகப்: 30); விளித்தல் - உரக்கக் கூவுதல்; 'வீரத் திற மிது நன்றெனா வியவா மிக விளியா' (யுத்த. 1128); உண்டை; 'உண்டை வெங்கடுங்கணை' (யுத்த. இராவணன் வதை: 78); 'உண்டை நூறுபட்டு' (யுத்த. இராவணன் வதை: 108);

'உண்டை யுண்ட தனைத்தன் உள்ளத்துள் ளுவாள்' (அயோத்தி. மந்தரை: 11); 'கம்ப மதக்களியானை-(யுத்த. இந்திரசித்து 69) இக் கவி விற்பூட்டு.

2. மொய்த்.

3. விளிந்தெழு. 74

2311. ஊரோடு மடுத்தொளி யோனையுறுங்
காரோடு நிறக்கத நாகமனுன்
தேரோடு மெடுத்துயர் திண்கையினுற்
பாரோடு மடுத்தெறி பண்பிடையே.

ஊரொடு - ஊர்தல் தொழிலுடன், மடுத்து - பொருந்தி, ஒளியோனை உறும் - சூரியனை அடைகின்ற, காரோடு - மேகத்தின், நிறம் கதநாகம் அனுன் - நிறத்தையும் வெகுளியையும் கொண்ட இராகுகேதுக்களை ஒத்தவனை அங்கதன், உயர் திண் கையினுல் - (தன்னுடைய) நீண்ட உறுதியான கரங்களால், (பெரும்பக்கனைத்) தேரோடும் எடுத்து - தேருடன் உயர்த்தி, பாரோடும் மடுத்து - தரையிடை யிட்டு, எறி பண்பிடையே - எறிந்த நிலையிலே!— 'வழங்கினன்' எனவருங் கவியொடும் முடியும். ஏ: அசை.

ஊரோடு: ஊர்தல் தொழிலுடன்; இராகு சேதுக்கள் பாம்புகள் ஆகலின் ஊர்வனவற்றில் அடங்கும் ஒளிமிக்க நிலையிலேயே அந்நாகங்கள் சூரிய சந்திரர்களைப் பற்றுமாகலின் ஒளியோனை எனப்பட்டது. கதம்: கோபம். ,மதமுற்றின களியற்றில கதமா' (யுத்த. 1801). பாரோடு: பாரில்; வேற்றுமை. மயக்கம் இங்கு உவமைக்குவமை போந்துள்ளவாறு காண்க.

பா-ம். 4. எடுந்து, எடுத்தெறி. 75

2312. வில்லைச்செல வீசி விழுந்தழியும்
எல்லிற்பொலி நேரிடை நின்றிழியாச்
சொல்லிற்பிழை யாததொர் சூலமவன்
மல்லிற்பொலி மார்பின் வழங்கினனுல்.

(பெரும்பக்கன் தன்), வில்லை செலவீசி - வில்லை (அப்பாற்) செல்லுமாறு எறிந்து, எல்லில் பொலி - கதிரவனைப்போல் ஒளிர்

வதும், விழுந்து அழியும் - கீழ் வீழ்ந்து தொலைவதுமான, தேர் இடை நின்று இழியா - தேரிடத்தினின்று இறங்கி, சொல்லில் பிழையாதது ஓர் சூலம் - (முனிவர் இடும் சாபச்) சொல்போன்று தவறாது அழிக்கவல்ல, ஓர் சூலம் - ஒரு சூலப்படையை, அவன் மல்லில் பொலி மார்பின் வழங்கினன் - அவனுடையமற்போர் களில் நன்குவலிமையுடன் விளங்கும் மார்பின்மீது எறிந்தான். ஆல் - அசை.

இழியா : செய்யா என்னும் வாய்பாட்டு. உடன்பாட்டு வினையெச்சம். சொல் - அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் தத்தம் பயனை விளைக்கும் சாபச்சொல். 'சொல்லொக்கும் கடியவேகச் சுடுகரம்' (பால. தாடகை. 75); 'வைதெனக் கொல்லும் விற்கை மானுடர்' (யுத்த. 751); இதன் உரைக் குறிப்பும் காண்க. மல் : வலிமையுமாம் (பிங்).

பி - ம். 1. வெகுண்டடரா
2. பொரு
3. பிழையாதொரு. 76

2313. சூலம்மெனி னன்றிது தொல்லைவரும்
காலம்மென வுன்னு கருத்தினனாய்
ஞாலம்முடை யானது நாமறவோர்
ஆலம்முடை யம்பி னறுத்தனனால்.

ஞாலம் உடையான் - உலக நாதனான இராமபிரான் - (அந்தச் சூலத்தைக் குறித்து), 'இது சூலம் எனின் - இது (சாதாரண) சூலம் என்போம், எனின் - என்றால், அன்று ; தொல்லை வரும் காலம் - தொன்றுதொட்டு வருகின்ற (முடிவை உண்டுபண்ணும்) கால பாசத்தின் வடிவினது', என உன்னும் கருத்தினனாய்-என்று கருதிய நினைவுள்ளவனாய், அது நாம் அற - அது பேரும் இல்லையாம்படி, ஓர் ஆலம் உடை அம்பின் அறுத்தனன் - ஒரு விடம் தீற்றிய வாளிகொண்டு சேதித்தான். ஆல் - அசை.

தொல்லை : பழைமை ; தொல்லை நம் பிறவியெண்ணில் தொடு கடல் மணலு மாற்றா எல்லைய' (சீவக. 270); 'தொல்லையிரும் பிறவி சூழுந்தளை நீக்கி' (திருவாச. பாயிரம்.); ஞாலம் உடையான் :

கடவுள். உயிரனைத்தும் அவன் உடைமை என்ப. 'உடையானே பொறுத்ததோ வுன்னருமைத் திருமேனி' (திருவிளை. மண்சுமந்த. 79); 'நன்று நன்றிவ் வுலகுடை நாயகன், தன்துணைப் பெருந்தேவி தவத்தொழில்' (சுந்தர. 633). நாம் அற : நாம்; நாமம் என்றதன் விகாரம். 'நாயகன் பெருந்துயர்நாமற' யுத்த. மருத்து,109). ஆலம் - விடம்; 'ஆலம் பார்த்துண்டவன் போல்' (சுந்தர. 317). இதில் ஒவ்வோரடியிலும் விரித்தல் விகாரம்

பி - ம். 1. நின்றது, நன்றது

2. கருத்தினறு, கருத்தினறல்

4. ஆலம்முகவம்பின் 77

2314. உளந்தா னினையாதமு னுய்த்துகவாக்
கிளர்ந்தானை யிரண்டு கிழித்துணையாய்ப்
பிளந்தா னுலகேழினெ டேழுபெயர்ந்
தளந்தான்வலி நன்றென வங்கதனே.

'உலகு எழினெடு எழு - பதினான்கு புவனங்களையும், பெயர்ந்து-தன் (நிலையினின்றும்) நீங்கி, அளந்தான்-அளந்தவனான திருமாலின் அமிசமான இராமபிரானுடைய, வலி நன்று - திறல் நன்றாக உள்ளது', என - என்று புகழ்ந்துவிட்டு, அங்கதன் - வாலி புதல்வன், உளம் நினையாதமுன் - மனத்தினால் நினைப்பதற்கு முன்னரே, உய்த்து - (சூலப்படையை) வீசி, உகவா கிளர்ந்தானை - மகிழ்ந்து உள்ளக் கிளர்ச்சி கொண்டவனான பெரும்பக்கனை, துணை கிழியா-இரண்டு பிளவாக, பிளந்தான்-பிளந்துவிட்டான்; (இரண்டாகக் கிழித்தான்); ஏ : தான்; அசைகள்.

உகவா : செய்யா என்னும் வாய்பாட்டு. உடன்பாட்டு வினையெச்சம் துணை : இரண்டு; கிழி : கீள் அல்லது பிளவு. உலகை அளந்தது : மகாபலியினிடம் குறளனாகச் சென்று, மூவடி மண் வேண்டிப் பெற்றுப், பின் ஈரடியால் திருவிக்கிரமனாக உலகங்களை அளந்தது. 'நாலிரேனுடுலக மூன்று நடுக்குற வடிக்குநாகர், மேலின் மேனின்ற காறுஞ் சென்ற கோலத்தின் விண்டு, (காலினா

லளந்த வானமுகட்டையும் (சுந்தர. 35); 'ஓங்கி யுலகளந்த வுத்தமன் பேர்பாடி' (திருப்பாவை. 3); மற்றும் பால. வேள்விப் படலம். 34-37 காண்க. பெயர்ந்து: அடி பெயர்ந்து எனினுமாம்.

பி - ம். 1. உற்றுதவார்க்
2. களைந்தானை; துணையாய். 78

### மாலியும் நீலனும் பொருதல்

2315. மாமாலியு நீலனும் வானவர்தங்
கோமானொடு தானவர் கோனிகலே
ஆமாறு மலைந்தன ரென்றிமையோர்
பூமாரி பொழிந்து புகழ்ந்தனரால்.

'மாமாலியும் - பெருமை சான்ற மாலி என்ற அரக்கனும், நீலனும் - நீலன் என்ற குரக்கு வீரனும், வானவர் தம் கோமானொடு - தேவர்களின் தலைவனான இந்திரனோடு, தானவர் கோன் - தானவர் கோன் செய்த, இகலே - போரே, ஆ மாறு - உவமையாகுமாறு, மலைந்தனர் - பொருகின்றனர்', என்று - என்று, இமையோர் - தேவர்கள், பூமாரி பொழிந்து புகழ்ந்தனர் - மலர் மழை சொரிந்து புகழ்ந்தார்கள். ஆல் - அசை.

மா என்ற அடைமொழி அவனுடைய அளவிறந்த வீரத்தைக் காட்டும். யுத்த. மூலபல வதைப்படலம். 52, 75, 171 காண்க. மாலியும் நீலனும் பொருதமைக்கு இரணியனும் தேவாதிதேவன் ஆன நரசிங்கப் பெருமானும் பொருதபோர் உவமை. வானவர்தம் கோமான் : திருமாலின் அவதாரமான நரசிங்கப் பெருமான். தானவர் கோன்: இரணியன்; சிலர் விருத்திராசுரன் என்பர். 79

2316. கல்லொன்று கடாவிய காலையவன்
வில்லொன்றிரு கூறு விளைத்திடலும்
மல்லொன்றிய தோளினன் வாளிநெடும்
நில்லென்றிடை சென்று நெருக்கினனால்.

கல் ஒன்று கடாவிய காலை - மலையொன்றினைத் தூக்கி எறிந்த போழ்தில், (அது) அவன் - அந்த மாலியினுடைய, வில் ஒன்று -

வில் ஒன்றினை, இருகூறு விளைத்திடலும் - இரண்டு பகுதிகளாகச் செய்திடலும், மல் ஒன்றிய தோளினன் - வலிமை பொருந்திய தோளையுடையவனான மாலி, 'வாளினெடும் வந்து நில்-வாளேந்தி வந்து நிற்பாயாக"; என்று - என்று மொழிந்து, இடை சென்று - குறுக்கே போய், (நீலன் செலவைத் தடுத்து), நெருக்கினன் - அடர்த்தான். ஆல் : அசை.

கடாவி - செலுத்தி ; 'காற்றுறழ் கலின மான்றேர் கடிதினிற் கடாவி ; (யுத்த. 1111) ; மல் : வலிமை ; (பிங்.)

பி - ம். 1. கூறின் ; விழுந்துடலும் விளைந்திட்லும்
2. செல்லொன்றிய ; வாளோடு, தேரினனுய், தோளினனுய். 110

## குமுதன் இடையே வந்து மாலியின்தேரைப் பொடியாக்கல்

2317. அற்றத்தொழி லெய்தலு மக்கனனே
மற்றப்புற நின்றவன் வந்தணுகாக்
கொற்றக் குமுதன்னெரு குன்றுகொளா
எற்றப்பொரு தேர்பொடி யெய்தியதால்.

அற்று - அப்போது, அதொழில் எய்தலும் - அந்தத்தொழில் நடைபெறுகையில், அ கணனே - அந்தக் கணப்பொழுதிலேயே, மற்று புறம் நின்றவன் - பிறிதொரு புறத்திலே நின்றவனாகிய, கொற்றம் குமுதன் - வெற்றி பொருந்திய குமுதன் என்னும் வானர வீரன், ஒரு குன்று கொளா - ஒரு மலையை உயர்த்திக் கொண்டு, வந்து அணுகா - வந்து நெருங்கி, எற்ற - தாக்கிய அளவில், பொரு தேர் பொடி எய்தியது - போர் செய்தற்குரிய (மாலியின்) தேர் தூளாகியது. ஆல் : அசை.

எய்தலும் எய்தியது வன்ற சொல்நயம் காண்க. மற்று ; வினைமாற்றுப் பொருளில் வந்தது. 'மற்றறிவாம் நல்வினை' (நாலடி. 19) என்ற இடத்துப்போல ; 'வினைமாற்றசை நிலை பிறிதெனுமற்றே' (தொல். சொல்) என்றது காண்க. அணுகா

கொளா: செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சங்கள். கொற்றக்குமுதன் ; கிட்கிந்தா. 702 ; உரைக்குறிப்பும், நாகபாசப் படலம். 55ம் காண்க. 'குமுதனிட்ட குலவரை கூத்தரிற், றிமிதமிட்டுத்திரிய' (யுத்த. 657).

பி-ம். 4. ஏற்றி. 81

இங்கு அதிகப்பாடல் :—

தேர் போயழி வுற்றதெ னத்தெளியா
போர் மாலி பொருந்து தரைப்படமுன்
ஓர் மாமரம் நீலன் உரத்தொடு கொண்
டேர் மார்பிடை போக வெறிந்தனனால்.

## மாலியின் தோளை இலக்குவன் வெட்டிவிடுதல்

2318. தாளார்மர நீல னெறிந்ததனை
வாளான் மடிவித்து வலித்தடர்வான்
தோளாசற வாளி துரந்தனனால்
மீளாவினை நூறும் விடைக்கிளையான்.

நீலன் எறிந்ததாள் ஆர் மரம்தனை - நீலன் வீசிய அடிபருத்த மரத்தினை, வாளான் மடிவித்து - வாளினால் வெட்டியெறிந்து, வலித்து அடர்வான் - வலி காட்டிப் பொருபவனான மாலியின், தோள் - தோளின், ஆசு அற - மூட்டு விடும்படி, மீளாவினை நூறும் - போக்குதற்கரிய வினைகளை ஒழிப்பவனாகி, விடைக்கு இளையான் - இடபம் போன்ற இராமபிரானுடைய தம்பி இலக்குவன், வாளி துரந்தனன் - அம்பினைச் செலுத்தினான். ஆல் - அசை.

மரம்தனை என்று கூட்டுக. தாள் - மரத்தின் அடி ; 'தாளுண்ட நீரைத் தலையாலே தான் தருதலால்' (மூதுரை. 2) ; ஆசு அற - அடியோடும் எனினுமாம். ஆசு - பற்று. மீளாவினை நூறும் விடை என்றது இராமபிரானை ; எத்தகைய கரும வினைகளையும் பொடியாக்குபவன் என்பது பொருள். ஒப்பு. 'போதுநான் வினைக்கேடன் என்பாய் போல'(திருவாசக. ). 'நன்மையும் செல்வமும்' என்ற பாலகாண்டப் பாயிரச் செய்யுளைக் காண்க. 'இருவினையும், துப்புறநீத் தனைய சுடர்த் திருவடியாற் றுடைத்தாய்நீ'

(ஆரணிய. 61); விடை-சிவன் திரிபுரம் எரித்தகாலத்துத் திருமால் விடையாக இருந்தார் என்பது ஒரு வரலாறு.

பி-ம். 1. எடுத்தனதன், எறிந்தனதன்
2. வழித்து, வலிந்து. 82

## கையற்ற மாலியினுடன் பொருதல் தகாது என்று இலக்குவன் போய்விடுதல்

2319. மின்போன்மிளிர் வாளொடு தோள்விழவும்
தன்போர் தவிராத வனைச்சலியா
என்போலியர் போரெனி னன்றிதுவோர்
புன்போரென நின்றயல் போயினனால்.

மின்போல் மிளிர் வாளொடு - மின்னல் போன்று ஒளிரும் வாளுடனே, தோள் விழவும் - தோள் துணிபட்டு வீழவும். தன் போர் தவிராதவனை - தான் புரியும் போரினை நிறுத்தாத மாலியை (நோக்கி இலக்குவன்), 'என் போலியர் போர் எனின்-என் போன்றவருடன் செய்யும் போரோ என்றால், அன்று - அன்று'; இது ஓர் புல் போர் - இது ஓர் புல்லிய போராகும்' என-என்று மொழிந்து, சலியா - வெறுத்து, நின்று அயல் போயினன் - அங்கு நின்று அப்பால் சென்றான். ஆல் - அசை.

ஒளியினாலும் அசைவினாலும் பிறரை எறிதலாலும் வாளுக்கு மின்னல் உவமை. நன்று இது என்றும் பிரிக்கலாம்.

பி-ப். 3. இன்றிது. 83

## இலக்குவனைப் புகழ்ந்து வாநரவீரர் இராமபிரானிடம் கூறுதல்

2320. நீர்விரை யனுனெதிர் நேர்வரலும்
பேர்வீரனை வாசி பிடித்தவனை
யார்வீரதை யின்னசெய் தார்களெனப்
போர்வீர ருவந்து புகழ்ந்தனரால்.

(இலக்குவன்), நீர் வீரை அனான் - நீர் நிறைந்த கடல் வண்ணனான இராமபிரானுக்கு, நேர் வரலும் - எதிரே வருமளவில், போர் வீரர் - போர் வீரர்கள், பேர் வீரனை - பெரிய வீரனும், வாசி பிடித்தவனை - அம்பு பிடித்துள்ளவனுமான (அந்த இலக்குவனைக் குறித்து), 'யார் - எவர், இன்ன வீரதை செய்தார்கள் - இத் தன்மையான அறப்போரைப் புரிந்தார்கள்', என - என்று, புகழ்ந்தனர் - புகழ்ந்து கூறினார்கள்

வீரை - கடல்; 'வல்வீரைத் துயில்வானை' (யுத்த. 224); 'பொருவீரையும் பொருவீரையும் பொருதாலெனப் பொருதார்' (யுத்த. 108); வாசி: அம்பு: வாஜி என்ற வடசொல்லின் விகாரம். வீரதை: வீரப்பான்மை, 'தனிமணி வலிதிற்றந்த வீரதை' (யுத்த. 878); வீரதை: கையற்றவனோடும் பொருதல் தகாது என்று இலக்குவன் அப்பாற் சென்ற செயல்; (ஒப்பு): இங்குப் பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கால், ஊராண்மை மற்றத னெஃகு' (குறள். 773)ம் அதற்குப் பரிமேலழகர் வரைந் துள்ள உரையும் காண்க. தழிஞ்சியும் அது; 'ஒரு கை யுடைய தெறிவலோனிருகை சுமந்து வாழ்வேன்' (தொல். புறத்: 60); 'ஒரு தோள் கொடு பொருதல்' 'இரு தோள்களி னொரு தோள் முனியிகல் வாளியின் விழவும், ஒரு தோள் கொடு பொர நிற்பதோர் மதவாரணமொத்தான்' (வில்லி. பா. 13 ஆம் போர்: 123).

பி, ம். 1. நேர்வரவும்

3. விரமது

4. வீரனும் வந்து புகழ்ந்தனனால். 94

### வேள்விப் பகைஞனை இலக்குவன் மாய்த்தல்

2321. வேள்விப் பகையோடு வெகுண்டடருந்
தோள்வித்தக னங்கொர் சுடர்ழகணையால்
வாழ்வித்தனை யென்றவன் மார்பகலம்.
போழ்வித்தன னருயிர் போயினனால்.

வேள்வி பகையோடு - யஞ்ஞ சத்துருவுடனே, வெகுண்டு அடரும் - சினந்து போர் செய்கின்ற, தோள் வித்தகன் - புயவலிமை யுடையசாமர்த்தியசாலியான இளையகோ, 'வாழ்வித்தனை - வாழ் வித்தாய்'! என்று - என்று பகர்ந்து, அங்கு - அப்பொழுது, ஓர் - ஒரு, சுடர்கணையால் - ஒளிசெறிந்த அம்பினால், அவன் மார்பு அகலம் - அவன் மார்பின் பரப்பினை, போழ்வித்தனன் - பிளந்தான்; ஆர் உயிர் போயினன் - (அந்த யஞ்ஞ சத்துரு) அரிய உயிர் நீங்கப் பெற்றான். ஆல்: அசை.

வித்தகன்: சாமர்த்தியசாலி. 'பத்துடை யடியவர்க் கெளியன், பிறர்க்கரிய வித்தகன்' ( ); அகலத்துக்கே மார்பு என்ற பொருள் உண்டு. அப்பொருளை ஏற்பின் மார்பாகிய அகலம் என இருபெயரொட்டு ஆக்குக. மகிதலம், பூதலம் என்ற இடங் களிற்போல. வாழ்வித்தனை என்பது பிறகுறிப்பு. என் கையினால் இறக்கப்பெற்றாயாதலின், வாழ்வித்தனை யென்றான் எனினும் ஆம்; (ஒப்பு): 'பொன்றலி னிராம னம்பாற் பொன்றலே புகழுண் டன்றோ' ( ); 'யான்றவ முடைமையாலிவ் விறுதிவந் தடுத்தது யார்க்கும், சான்றென நின்றவீரன் தான்வந்து வீடு தந்தான்' ( ). என்பன காண்க.

பி-ம். 2. காழ்வித்தக முற்றகடுங்

4. போயினதால் 85

இங்கு அதிகப் பாடல்—

அப்போதழல் வேள்வியடற் பகைஞன்
வெப்பேறிய வெங்கனல் போலவெகுண்
டிப்போர் தருகென்றவிலக் குவன்மேல்
துப்பார்கணை மாரி சொரிந்தனனால்.

சொரிவெங்கணை மாரிதொலைத்திரதம்
பரியுந்திய பாகுபடுத் தவன்வெம்
பெருதிண்டிறல் போக விலக்குவனங்
கெரி வெங்கணை மாரி யிறைத்தனனால்.

2322. மல்லற்றட மார்பன் வடிக்கணையால்
எல்லுற்றுயர் வேள்வி யிரும்பகைஞன்
வில்லற்றது தோளொடு மேனிமிரும்
கல்லற்ற கழுத்தொடு கால்களொடும்.

மல்லல் தட மார்பன் - செழிப்பான அகன்ற மார்பினனான இலக்குவன், வடி கணையால் - கூரிய வாளியால், எல் உற்று - ஒளி செறிந்து, உயர் - தீவிட்டு எரிகின்ற, வேள்வி இருபகைஞன் - யாகத்தின் பெரிய விரோதியான (யஞ்ஞ சத்துருவின்), வில் அற்றது - வில் ஒடிந்தது ; தோளொடு - அவனுடைய தோள்களுட னும், கழுத்தொடு கால்களொடும் - கழுத்து கால்களுடனும், மேல் நிமிரும் கல் அற்ற - மேலே உயர்ந்து வரும் கற்களும் இல்லையாயின.

மல்லல் - செழிப்பு ; 'மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரிங்கென' சிலப். இறுதி வாழ்த்து); 'மல்லல் மறுகில்' (நள. 53). வடி - கூர்மை. அரக்கர்கள் கற்களை எறிந்து முனிவர் செய்யும் யாகங்களை அழிப்பது வழக்கம். அவன் இறந்துபட்டமையின், இனிக் கல் மழைக்கு இடமில்லை என்க.

பி - ம். 1. மல்லிற்றட மாரன்வயக், எல்லொத்துயர், எல்லிற்றுயர்
3. வில்லிற்றது தேரோடு, வில்லிற்றது தோளென ; மேனியிருங்
4. கல்லிற்ற.

66

சூரிய சத்துருவைச் சுக்கிரீவன் கொல்லுதல்

2323. தன்தாதையை முன்பு தடுத்தொருநாள்
வென்றானை விலங்கலின் மேனியனைப்
பின்றாத வலத்துயர் பெற்றியனைக்
கொன்றான் கவியின்குல மாளுடையான்.

தன் தாதையை - தன் தந்தையாகிய சூரியனை, முன்பு ஒருநாள் தடுத்து வென்றானை - முன்னர் ஒருநாள் தடைசெய்து வெற்றி கொண்டவனும், விலங்கலின் மேனியனை - மலைபோன்ற தேகம் உடையவனும், பின்றாத - பின்வாங்காத, வலத்து உயர் - வலிமை

யோடு உயர்ந்த, பெற்றியனை - தன்மையை உடையவனுமான சூரிய விரோதியை, கவியின் குலம் ஆளுடையான் - கவிக் குலத்தையெல்லாம் தன் கீழ்க் குடிகளாகப் பெற்றவனான சுக்கிரீவன் (செய்த போரிற்) கொன்றான்.

விலங்கல் - மலை, பின்றாத வலம் : ஒருவர்க்கும் பின்னடையாத வெற்றி. குலம் ஆளுடையான். 'என்னை முன்னாள் ஆளுடையான்' (திருக்கோ. 7) ; (ஒப்பு) 'கவிக்குல மவற்றிற் கெல்லாம், நாயகன் சுக்கிரீவன்' (கிட்கிந்தா. ). 87

### இடபனும் வச்சிரத்தெயிற்றனும் பொருதல்

2324. இடபன்றனி வெஞ்சம முற்றெதிரும்
விடவெங்க ணெயிற்றவன் விண்ணதிரக்
கடவுங்கதழ் தேர்கட வாளினொடும்
படவங்கொரு குன்று படர்த்தினனால்

இடபன் - இடபன் என்ற குரக்கு வீரன், தனி - ஒப்பற்ற, வெம் சமம் உற்று - கடுமையான போரைப் பொருந்தி, எதிரும் - எதிர்க்கின்றவனும், விடம் வெம் கண் - நஞ்சினைக் கக்குகின்ற கொடிய கண்ணை உடையவனும் ஆன, எயிற்றவன் - வஜ்ர தம்ஷ்ட்ரனுடைய, விண் அதிர கடவும் - ஆகாயம் அதிரும்படிச் செலுத்துகின்ற, கதழ் தேர்-விரைந்து செல்லும் இரதத்தை, கடவு ஆளினொடும் - அதனை ஓட்டும் பாகனுடன், பட - இறந்துபடுமாறு, ஒரு குன்று - ஒரு மலையை, படர்த்தினன் - செலுத்தினான். ஆல் : அசை.

இடபன் : (யுத்த. அதிகாயன். 236 ; நாகபாசப். 56 ; பிரமாத்திர. 177) காண்க.

பி - ம். 3. கேடவாளினொடும், வாளினொடும். 88

2325. திண்டோழி யச்சிலை விட்டொருதன்
தண்டோடு மிழிந்து தலத்தினனாய்
உண்டோவுயி ரென்ன உருத்துருமோ
டெண்டோளனு முட்கிட வெற்றினனால்.

திண் தேர் அழிய - (தன்) வலிய இரதம் குலையவும், சிலை விட்டு - தான் பிடித்திருந்த வில்லைக் கைவிட்டு, (அந்த வயிர எயிற்றன்), ஒரு - ஒப்பற்ற, தன் தண்டொடும் - தனது கதையுடனே, இழிந்து - தேரினின்று இறங்கி, தலத்தினனாய் - தரையில் நிற்பவனாகி, உருமோடு எண் தோளனும் - இடியும் எட்டுத் தோள்களையுடைய உருத்திர மூர்த்தியும், உட்கிட - அச்சுறுமாறு, உருத்து - வெகுண்டு, உயிர் உண்டோ என்ன - (கண்டவர் இனி இவனுக்கு) உயிரும் உளதாகுமோ என்னுமாறு, எற்றினன் - தாக்கினன். ஆல் : அசை.

எண்டோளன் : சிவபெருமான். 'எண்டோள் வீசிநின் றாடும் பிரான் றன்னைக், கண்காள் காண்மின்களோ' (அப்பர். திருவங்க மாலை); உட்கு : அச்சம். 'உருவுட்காகும்' (தொல். சொல். 300).

பி - ம். 1. ஒழிய
2. தண்டேரொடிழிந்து
3. உருத்திரனும். 88

## இடபனுக்கு அநுமன் துணையாதல்

2326 அடியுண்டவ னாவி யுலைந்தயர
இடியுண்ட மலைக்குவ டிற்றதுபோல்
முடியும்மெனு மெல்லையின் முந்தினனால்
நெடியன்குறி யன்னெனு நீர்மையினான்.

அடியுண்டவன் - அடிபட்டவனான இடபன், ஆவி உலைந்து அயர - உயிரானது வருந்தித் தளர, '(இவன்) இடி உண்ட மலை குவடு இற்றது போல் - இடியினால் தாக்கப்பட்ட மலைச் சிகரங்கள் முறிந்தது போன்று, முடியும்-ஒழிந்திடுவான்', எனும் எல்லையின் - என்னும் அளவில், நெடியன் குறியன் எனும் நீர்மையினான் - நெடியவனும் குறியவனும் என்று கூறும் தன்மையனான (அநுமன்) முந்தினன் - முற்பட்டான். ஆல் : அசை

அடியுண்டவன் இடபன். 'எனையர் தலைக ளெல்லாம் இடி யுண்ட மலையி னிட்டான்' (யுத்த மூலபல. 225); நெடியன் குறியன எனும் நீர்மையினன் : அநுமன். சுந்தரகாண்டம் காண்க.

பி - ம். 1. குலைந்தயரா, குலைந்தலையா
2. இற்றன
3. ஏவ்வையின் ; முற்றினனல். 90

## அநுமன் வச்சிரதம்ஷ்ட்ரனுடன் பொருது அவனைக் கொல்லுதல்

2327. கிடைத்தானிகல் மாருதி யைக்கிளர்வான்
அடைத்தானென மீதுய ராக்கையினைப்
படைத்தானை நெடும்புகழ் பைங்கழலான்
புடைத்தானவன் மார்பு பொடிச்சிதற.

கிடைத்தான் - வந்து கிட்டியவனும், கிளர்வான் அடைத்தான் என - ஒளிர்கின்ற வானத்தை யடைத்தவன் என்னும்படி, மீது உயர் மேலோங்கிய, யாக்கையினை படைத்தானை - உடலைப் பெற்றவனுமான, இகல் மாருதி - போரில் வல்ல அநுமனை, நெடு புகழ் - பரந்த கீர்த்தி பெற்ற, பைங்கழலான் - பசிய பொன்னினால் செய்த வீர கண்டாமணியைப் புனைந்தவனாகிய (வயிர எயிற்றன்), அவன் மார்பு பொடி சிதற - அவன் மார்பினின்று தீப்பொறிகள் சிதறுமாறு, புடைத்தான் - அடித்தான்.

கிடைத்தல்; கும்ப. 230. அநுமன் பேராக்கை விண் வெளியை அடைத்திருந்தது எனப்பட்டது. யாக்கை - ஆக்கை யென வந்தது; யாக்கை - எழுவகைத் தாதுக்களால் கட்டப் பட்டது என்று காரணக் குறி: 'யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர்' (நாலடி. 27); 'ஆக்கையாற் பயனென்' (அப்பர். திரு வங்கமாலை) 'ஆக்கைக்கே யிரைதேடி யலமந்து, காக்கைக்கே யிரை யாகிக் கழிவரே' (தேவா. 1203:5); நினைத்தவளவில், தான் தெரிந்த அட்டமா சித்தியாலும், பெற்ற வரத்தினாலும் பேருருவமோ சிற்றுருவமோ கொள்ளவல்லன் ஆதலின் ஆக்கை படைத்தானை

எனப்பட்டது. இராம இலக்குவர் முன்பும், பிராட்டியின் முன்பும் அவன் விசுவரூபம் கொண்டதும், குறளனாக நின்றமையும் காண்க; சுந்தர. 736, 1020. நெடும்புகழ்: நெடுமை பரப்பும் பெருமையும் மேற்று.

பி-ம். 2. மிடைத்தானென மீதுயர், விடைத்தானென மியுயர் : ஆல்கையனை.
4. அகன் மார்பு. 91

2328. எற்றிப்பெயர் வானை யிடக்கையினால்
பற்றிக்கிளர் தண்டு பறித்தெறியா
வெற்றிக்கிளர் கைக்கொடு மெய்வலிபோய்
முற்றத்தனிக் குத்த முடிந்தனனால்.

எற்றி பெயர்வானை - தாக்கிவிட்டுச் செல்பவனாகிய வயிர எயிற்றனை, இடகையினால் பற்றி - இடது கரத்தாற் பிடித்துக் கொண்டு, கிளர் - (போரில்) மூள்கின்ற, தண்டு பறித்து எறியா - கதாயுதத்தைப் பிடுங்கி வீசிவிட்டு; (அநுமன்) வெற்றி கிளர்கை கொடு - வெற்றியுடன் ஒளிர்கின்ற தன் கரத்தினால், மெய்வலி போய் - உடல் வன்மை எல்லாம் (ஓர் இடத்தில்) சென்று, முற்ற - முதிர, (மிக்க வன்மையுடன்), தனி குத்து குத்த - ஒப்பற்ற குத்துக் குத்திய அளவில், முடிந்தனன் - அவ்வரக்கன் (வயிர எயிற்றன்) ஒழிந்தான். ஆல்: அசை.

அநாயாசமாகத் தண்டைப் பறித்தான் என்பார் இடக்கையினால் எனப்பட்டது எறியா; செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். மெய்வலி போய் முற்ற என்றது தன்னுடைய வன்மை யெல்லாம் ஓரிடத்திற் கூட்டி என்றவாறு.

பி-ம். 3. மற்றைக் கிளர்; மைவலிமொய்.
4. முற்றி; முடித்தனனால். 92

இங்கு அதிகப் பாடல்கள் :—

முடிவுற்றனன் மாருதி மோதுதலால்
கொடுவச்சிர வெயிற்ற னெனுங்கொடியோன்
விடமொத்த பிசாசன் விறற்பனச
னெடுமுற் றிருவோரு முடன்றனரால்.

பொர மின்ற பணைப்புய வன்பனசன்
நிருதன் களமீது நெருக்கியதில்
பரிவெள்ள மளப்பில பட்டழியத்
தருவங்கை கொடே யெதிர் தாக்கினனால்.

### பிசாசன் செய்த பெரும்போர்

2329. காத்தோர்மரம் வீசுறு கைக்கதழ்வன்
போத்தோர்புலி போற்பன சன்புரளக்
கோத்தோட நெடுங்குரு திப்புனல்திண்
மாத்தோமர மார்பின் வழங்கினனால்.

(பிசாசன் என்னும் அரக்கன்), காத்து-(தன்னைப்) பாதுகாத்துக் கொண்டு, ஓர் மரம் வீசுறு கை கதழ் - ஒரு மரத்தை (எடுத்து) எறிகின்ற கைவேகத்தினையுடைய, ஓர் வல் புலி போத்து போல-ஒரு வலிய புலிப் போத்துப் போன்ற, பனசன் - பனசன் என்ற வானர வீரன், புரள - புரளவும், நெடுங் குருதி புனல் - மிக்க உதிர வெள்ளம், கோத்து ஓட - ஒன்று சேர்ந்து பாயவும், திண் - உறுதியான, மா தோமரம் - பெரிய தோமரம் என்னும் படையை, மார்பின் வழங்கினான் - மார்பில் எறிந்தான். ஆல் - அசை.

கதழ்வு - விரைவு. போத்து : 'பன்றிபுல்வாய் மரையே கவரி, என்றிவை யெல்லாம் போத்து எனப்படும்' (தொல். மரபி. ). படுமே என்றதனால் புலிப்போத்தும் கொள்க. 'புலிப் போத்தன்ன புல்லணற் காளை' (புறநா. ). பனசன் ; (யுத்த. 658) ; 'மூன்று கண்ணிலனாயினும் மூன்றெயி லெரித்தோன், போன்று நின்றவன் பனசன் ; (யுத்த. 830) ; மகரக் கண்ணன். 35 ; பிரமாத்திர. 121, 177 ; மீட்சி. 152ம் காண்க. தோமரம் : ஒருவகை யீட்டி.

பா - ம். 1. காத்தோமரம் ; கைக்கழுதன், கைக்கதமுன்.
3. தேத்தோட ; குருதித் திரைகள்.



அதிகப் பாடல் :—

பனசன் அயர் வுற்றொரு பாலடைய
நனிவெம் பரிதாவு நிசாசரன் வெங்
கனலென்ன வெகுண்டு கவிப் படையின்
இனமெங்கு மிரிந்திட வெய்தினனால்.

2330. கார்மேலின னோகடன் மேலினனோ
பார்மேலின னோபகன் மேலினனோ
யார்மேலின னோவின வென்றறியோம்
போர்மேலினன் வாசியெனும் பொறியான்.

போர் மேலினன் - போரை விரும்பிப் போந்தவனும், வாசி எனும் பொறியான் - குதிரை எனப்படும் யந்திரத்தைப் பெற்றவனு மான, அந்தப் பிசாசன், கார்மேலினனோ - மேகத்தின்மீது அமர்ந் துள்ளானோ? கடல் மேலினனோ - கடலின் மீதுள்ளானோ? பகல் மேலினனோ - வானத்துச் சூரியன் மீதுள்ளானோ? பார் மேலினனோ - (அல்லது) பூமியில்தான் இருக்கின்றானோ? யார் மேலினனோ - ஆர் மீதுதான் அமர்ந்துள்ளானோ? இன என்று அறியோம் - இன் னவை என்று சொல்ல (யாம்) அறியோம்.

இது கவிக் கூற்று. பலவிடங்களிலும் விரைந்து சுற்றிப் பலருடன் ஏககாலத்தில் பொருதான் பனசன் என்பது கருத்து. அபூர்வமான கதிகளையும் விரைவினையும் பற்றி, வாசியைப் பொறி என்றார். மேவுதல் : விரும்புதல்.

பி - ம். 1. கார்மேலானவோ.
3. எனவென்றறியாப்.
4. புரையான்.



இங்கு ஓர் அதிகப் பாடல்:—

விசைகண்டுயர் வானவர் விண்ணிரியக்
குசைதங்கிய கோளென வாசியுடன்
திசையெங்கணு நின்ற திரிந்துளதால்
பசைதங்கு களத்தொரு பாய்பரியே.

2331. நூருயிர கோடிகொ லன்றுகொலென்
ருருயிர வானவ ரும்மறிவில்
தேருவகை நீன்று திரிந்துளதாற்
பாருடு களத்தொரு பாய்பரியே.

ஆருயிரம் வானவர் - ஆருயிரம் அமரர்களும், 'நாருயிரம் கோடி கொல் - நாருயிரம் கோடிக் குதிரைகள் திரிகின்றனவோ? அன்று கொல் - அன்ரு?' என்று - என்று, அறிவில் தேரு வகை - அறிவினுல் அறிய முடியாத வண்ணம்; (விரைந்து) பாறு ஆடு களத்து பருந்துகள் வட்டமிடும் போர்களத்தே, ஒரு பாய்பரி - பாய்ந்து செல்லும் இயல்புள்ள (அந்தப்) பிசாசனுடைய ஒப்பற்ற குதிரை, திரிந்துளது - வட்டமிடுவதாகும். ஆல்: அசை.

பாறு - பருந்து; 'பாருடு களத்தொரு வன்பகலின்' (யுத்த. 209); ஆருயிர வானவர் என்று எண்ணிக் கூறியதன்று; பலவானவர் என்க.

பி - ம்: 1. நாருயிரம், கோருயிரம.

2. ஆருயுத. ஆருயிரம்.

4. வன்பரியே. 94

2332. கண்ணிற்கடு கும்மன னிற்கடுகும்
விண்ணிற்படர் காலின் மிகக்கடுகும்
உண்ணிற்கு மெனிற்புற னிற்குமுலாய்
மண்ணிற்றிரி யாத வயப்பரியே.

மண்ணில் திரியாத - பூமியில் திரிதலில்லாத (பிசாசனுடைய) வயம்பரி - வலிய குதிரை, கண்ணில் கடுகும். கண்ணின் பார்வையினும் விரைந்து செல்லும், மனனின் கடுகும் - மனத்தினும் வேகமாகச் செல்லும், விண்ணில் படர் - ஆகாயத்தில் பரவியுள்ள, காலின் மிக கடுகும் - காற்றினும் மிக விரைந்து ஓடும், உன்னிற்கும் எனில் - உள்ளே நிற்கின்றதென்னும்போதே, உலாய்புறம் நிற்கும் - உலாவிக்கொண்டு புறத்தே நிற்கும்.

பார்வை மனம் என்பவற்றைக் கடுகும் என்று சொல்லிக் காலின் மிகக் கடுகும் என்றது ஏனையவற்றினும் காற்றின் வேகம் அதிகமாதல் கருதி. பரி: குதிரை. பரிந்து பரிந்து செல்வது என்று காரணக்குறி.

அதிகப் பாடல்—

விசைகண்டுயர் வானவர் விண்ணிரியக்
குசைதங்கியகோளென வண்டமொடெண்
டிசையெங்கனும் நின்று திரிந்துளதால்
பசைதங்கு களத்தொரு பாய்பரியே.

பி - ம். 2. படுகாலின்

4. திரியாது. 86

2333. மாப்புண்டர வாசியின் வட்டணைமேல்
ஆப்புண்டவ னொத்தவ னுரயிலான்
பூப்புண்டர வாவி புறத்தகலக்
கோப்புண்டன வாநர வெங்குழுவே.

மாபுண்டர - பெரிய கழுகு போன்று செல்கின்ற, வாசியின் வட்டணை மேல் - குதிரையின் விரைந்த நடையிலே, ஆப்பு உண்டவன் ஒத்தவன் - (அதன்மீது) பிணிக்கப்பட்டவன் போன்றவனுன, பிசாசனுடைய, அருமை அயிலான் - அரிய வேலாயுதத்தினுல், பூ- பூமகள், புண் தர - புண்ணுண்டிருக்கவும், ஆவி - உயிர், புறத்து அகல - உடம்பினின்று வெளியேறவும், வெம் வாநர குழு கோப் புண்டன - கொடிய குரங்குக் கூட்டங்கள் (மடிந்து) குவிந்தன. ஏ : அசை.

புண்டரம் : கழுகு. கோப்புண்டன : ஒன்றன்பின் ஒன்ருக மடிந்து நிரம்பின. 87

2334. நூறும்மிரு நூறும் நொடிப்பளவின்
ஏறுந்நுதி வேலி னிறைப்பொழுதில்
சீறுங்கவி சேனை சிதைக்குமெனு
ஆறுந்திற லும்பரு மஞ்சினரால்.

'நொடிப்பு அளவின் இறைப்பொழுதில் - கைந்நொடிப் பொழுதும் ஓய்வின்றி, நூறும் இரு நூறும் சீறும் கவி சேனை - நூறும் இருநூறுமாகச் சினந்து செல்லும் குரங்குப் படையை. ஏறும் நுதிவேலின் - கூர்மை மிகுகின்ற நுனியினையுடைய வேல் கொண்டு, சிதைக்கும் - அழிக்கின்ருனே', எனு - என்று, ஆறும்

திறல் உம்பரும் அஞ்சினர் - தணிந்துள்ள வலியினரான தேவரும் பயங்கொண்டனர். ஆல் : அசை.

நொடிப்பளவு - கைந்நொடிக்கின்ற ஒரு மாத்திரை காலம்; 'உன்னல்காலே ஊறுத்தலரையே முறுக்கல் முக்கால், விடுத்தல் ஒன்றே' என்றது காண்க. ஏறும் - கூர்மை மிகும்; ஆறும் அஞ்சினர் என்பதில் முரண் காண்க; உம்பரும் எனவே ஏனையோர் அஞ்சுதல் சொல்லாமையே பெறப்படும்.

பா - ம். 2. ஏறும்திறல்; பரியுந்தி யிமைப்பொழுதில். 98

## இலக்குவன் காற்றுப் படையால் பிசாசனைக் கொல்லுதல்

2335. தோற்றும்முரு வொன்றென வேதுணியாக்
கூற்றின்கொலை யாலுழல் கொள்கையனை
ஏற்றுஞ்சிலை யாண்மை யிலக்குவன்வெங்
காற்றின்படை கொண்டு கடந்தனனால்.

தோற்றும் உரு ஒன்று - போர் புரியுமாறு தோன்றியுள்ள உருவம் ஒன்றே, என துணியா - என்று துணிந்து, கூற்றின் - யமனுக்குரிய, கொலையால் - கொலைத் தொழிலுடன் - (சாரிகை திரிந்து), உழல் - உலாவுகின்ற, கொள்கையனை - தன்மையுடையவனான பிசாசனை, ஏற்றும் - நாண் ஏற்றுகின்ற, சிலை ஆண்மை இலக்குவன் - வில்லேற்ற ஆண்மையை யுடைய இளையகோ, வெம் காற்றின் படைகொண்டு கடந்தனன் - கொடிய வாயுக்கணையால் வென்றான். ஆல் : அசை.

துணியா : செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். (ஒப்பு): தன்னைத்தான் அறியாத கண்ணபிரானைச் சகாதேவன் தன மனத்தாற் பிணித்தது போன்று (வில்லிபா. கிருட்டினன் தூது.). அரக்கன் பல் வேறுருக்கொண்டு திரிந்தபோதும், தன்னுடைய அறிவு வன்மையாலும் வில்லாற்றலினாலும் அவனுடைய உண்மை உருவை ஆராய்ந்து தெளிந்து பிசாசனை வென்றான் என்க. 'இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் தருளுவ தினியே' (திருவாச. பிடித்த : 3). என்றதும் காண்க.

பா - ம் 1. துணியபர்.
4. கரந்தனனும். 99

## பிசாசன் தலையற்ற பின்பும் கொலைத்தொழில் புரிதல்

2336. குலையப்பொரு சூல னெடுங்கொலையும்
உலைவுற்றில வுய்த்தலு மோய்விலனெண்
டலையற்றுக வுந்தரை யுற்றிலனால்
இலையப்பரி மேற்கொ ளிருக்கையினன்.

இலையம்பரி - இலயத்துக்கேற்ப அடிவைத்து நடக்கின்ற, பரி மேற்கொள் இருக்கையினன் - குதிரைமீது அமர்தலைக் கொண்ட பிசாசன், ஒள் தலையற்று உகவும் - ஒள்ளிய சிரம் துணியில்பட்டு விழுந்த பின்னரும், குலைய - (உயிர்) அழியும்படி, பொருசூலன் - போர் செய்கின்ற சூலப்படையை ஏந்தியவனாய், நெடு கொலையும் உலைவு உற்றிலன் - தான் மேற்கொண்ட கொலைத் தொழில் குறைதலில்லாமல் உய்த்தலும் - செலுத்துதலையும், ஓய்விலன் - ஒழியாதவனாகி, தரையுற்றிலன் - தரையில் வீழாதிருந்தனன். ஆல் : அசை.

இலையம் - இலயம், தாளம்.

பி - ம். 1. சூலநெடுங்.
2. ஓய்விலதோள் ஒலியதோள். 100

அதிகப் பாடல் :—

மற்றும் படை வீரர்கள் வந்தவெலாம்
உற்றங் கெதிரேறி யுடன்றமர்வாய்
விற்றங்கு மிலக்குவன் வெங்கணையால்
முற்றும் முடிவெய்தி முடிந்தனரால்.

## சீதாபிராட்டிக்கு நன்னிமித்தம் தோன்றுதலும் யமதூதரும் அரக்கத் தூதரும் தம்நகர் சேர்தலும்

2337. இன்றூதிய முண்டென வின்னகைபாற்
சென்றூதின தும்பிகள் தென்றிசையான்
வன்றூதரு மெய்தினர் வஞ்சனையான்
தன்றூதரு மெய்தினர் தந்நகர்வாய்.

இன் நகைபால் - இனிய பற்களை உடையவளான சீதாதேவியி னிடத்தில், இன்று ஊதியம் உண்டு என - இன்று இலாபம்

உள்ளது, என - என்று தெரிவிக்குமாறு, தும்பிகள் சென்று ஊதின - வண்டுகள் போய் ஊதின; தென் திசையான் - தென் திசைப் பாலகனாகிய யமனுடைய, வல் தூதரும் - வலிய தூதர் களும், (போரில் மாண்ட உயிர்களைக் கொண்டு) தம் நகர்வாய் எய்தினர் - தம்நகரைச்சென்று அடைந்தார்கள்; வஞ்சனையான் தன் தூதரும் - வஞ்சகனான இராவணனுடைய தூதரும், தம் நகர் வாய் எய்தினர் - தம் நகர் சென்று சேர்ந்தனர்.

தும்பி ஊதுகுழல்: (ஒப்பு) சுந்தர: 366; தந்நகர் வாய் என்ற தொடரை இரு தூதர்க்கும் ஏற்றுக. இன்னகை: பண்புத்தொகை யன்மொழி. சில பிரதிகளில் இந்தச்செய்யுளோடு இப்படலம் முடிகின்றது.

பி - ம். 1. இன்னசையாற்.
2. கூளிகள்.
4. ஏகினர்; தன்னெதிரே. 101

## இராவணனிடத்துச் சென்று தூதுவர் செய்தி யுரைத்தல்

2338. ஏகித்தனி மன்ன னிருந்துழிபுக்
கோகைப்பொரு ளின்றென வுள்ளழியா
வேகத்தடல் வீரர் விளிந்தவெலாஞ்
சோகத்தொ டிறைஞ்சினர் சொல்லினரால்.

(ஒற்றர்கள் தந்நகர்க்கு) ஏகி - போய், தனி மன்னன் - ஒப் பற்ற அரசனான இராவணன், இருந்துழி புக்கு - அமர்ந்திருந்த இடத்திற் புகுந்து, இறைஞ்சினர் - அவனை வணங்கி, ‘ஓகைப் பொருள் இன்று’ - மகிழ்ச்சி தரக்கூடிய செய்தி இல்லையே, என - என்று, உள் அழியா - மனம் வருந்தி, வேகத்து அடல் வீரர் - வேகத்துடன் வலிமையும் காட்டுகின்ற வீரர், விளிந்த எலாம் - இறந்த செய்திகள் அனைத்தும், சோகத்தொடு சொல்லினர் - மன வருத்தத்துடன் பகர்ந்தார்கள். ஆல்: அசை.

பி - ம். 2. கேளென வுற்றழிவாய்.
3. வேகக் கடல்; விளிந்தது. 102

படைத்தலைவர் வதைப்படலம் முற்றும்.

# 20. மகரக்கண்ணன் வதைப் படலம்

மகரக்கண்ணனை இராமபிரான் வதைத்தலைப் பற்றிக்
கூறும் படலம் என விரியும்

2339. சொன்னாரவர் சொற்செவி பாற்றொடர்வோன்
இன்னாத மனத்தி னிலங்கையர்கோன்
வெந்நாக வுயிர்ப்பினன் விம்மினனால்
அன்னானிலை கண்டய னின்றறைவான்.

சொன்னார் அவர் சொல் - (செய்தியைக்) கூறிய (அத்தூதரின்) சொல், செவிபால் தொடர்வோன் - காதுகளில் தொடரப் பெற்றவனாகி, இலங்கையர்கோன் - இராவணன், இன்னாத மனத்தின் - துயருற்ற உள்ளத்தோடு, வெம்நாகம் உயிர்ப்பினன் - கொடிய நாகம் போன்று பெருமூச்செறிபவனாகி, விம்மினன் - தேம்பி வருந்தினான்; அன்னான் நிலைகண்டு - அவன் நிலைமையைக் கண்ணுற்று (மகரக்கண்ணன்), அயல் நின்று அறைவான்-பக்கத்தேயிருந்து பகர்வான் ஆனான். ஆல் : அசை.

இன்னாத - இனிமை தராத. 'இன்னா தம்மவிவ் வுலகம், இனிய காண்கிதன் இயல்புணர்ந்தோரே' (புறநா. *194*) 'இன்மையின் இன்னாதுடைமை முறை செய்யா, மன்னவன் கோற்கீழ்ப் படின்' (குறள். *558*).

பி - ம். 1. செவியிற் ; றொடர்ந்தொன்று.

2. இன்னாக.

3. நாக முயிர்த்தென்.

## போர்க்குச் செல்ல மகரக்கண்ணன் இராவணனிடம் அநுமதி வேண்டுதல்

2340. முந்தேயென தாதையை மொய்யமர்வாய்
அந்தோ வுயிருண்டவ னுருயிர்மேல்
உந்தா யெனையாது முணர்ந்திலையோ
எந்தாயொரு நீயிடர் கூருதியோ.

'முந்தே-முன்னமே, என தாதையை-என்னுடைய தந்தையை, மொய் அமர்வாய்-படைகள் அடர்ந்த போரின்கண், அந்தோ-ஐயோ! உயிர் உண்டவன் ஆருயிர் மேல்-உயிரைப் பருகினவனுடைய அரிய உயிர்மீது, உந்தாய்-என்னைச் செலுத்தாமல் இருந்து விட்டனை; எந்தை-என் தந்தையே! எனையாதும் உணர்ந்திலையோ-என்னைச் சிறிதும் அறிந்திலையோ? ஒரு நீ-ஒப்பற்ற நீ, இடர் கூருதியோ-துன்பம் மிகவும் துய்க்கக் கடவையோ? ஓ இரண்டும்: வினா.'

தாதை-கரன்; இப் படலம் 16-ஆம் கவி காண்க. மொய் என்பதற்கு போர் என்ற பொருளும் உண்டு; வாய்: ஏழனுருபு. அந்தோ: இரக்கக் குறிப்பு. 'அந்தோ வென்பசியடங்கிற் றில்லையென அழுமாலோர் செய்' (குசேலோ. 1:71); உயிர் உண்டவன்; உண்டற்கரிய வல்லாப் பொருளை யுண்டது போலக் கூறும் மரபு வழுவமைதி. என் தந்தாய் என்றது எந்தாய் என வந்தது; மரூஉ என்ற இயல்பு வழக்கு. இராமபிரான் இவன் தந்தையான கரனைக் கொன்றது; 'பரமுருக்கிய பாவத்தி னுல்வலக், காமெனக் கரன் கண்டமுற்றுனரோ' (ஆரணிய. 546).

பி-ம். 1. தந்தையை.
4. எந்தாயினி.

2

2341. யானேசெல வெண்ணுவ னெய்தவவண்
டானேர்வது தீதெனவே தணிவேன்
வானேநில னேமுதன் மற்றுமெலாம்
கோனேயெனை வெல்வதோர் கொள்கையதோ.

'யானே-நானே (பொர்போர் புரியுமாறு) அவண்-அங்கு (களத்துக்கு), செல எண்ணுவன்-செல்லக் கருதியிருப்பேன்; தான்

எய்த நேர்வது இது - தானே செல்ல உடன்படுவது நன்றன்று, என்றே-எனவே, தணிவேன்-(அவ்வெண்ணத்தை விடுத்து) வேகம் குறைந்து நின்றேன், கோனே - அரசே! வானே நிலனே முதல் மற்றும் எலாம் - வானும் பூதலமும் முதலான மற்றும் யாவும், எனை வெல்வது ஓர் கொள்கையதோ-என்னை வெற்றிகொள்ளும் வன்மை பெற்றதோ? ஓ - எதிர்மறை,

இத்துணைநாள் போர் புரியச் செல்லாததற்குக் காரணம் ஒருவகையாகக் கூறினன். வீரர்கள் தீவிரத்தில் அரசன் உத்திரவின்றியே போர்க்குச் செல்வதும் உண்டு; இதனை வெட்சி இருவகைத்து: மன்னுறு தொழிலும் தன்னுறு தொழிலுமெனா; 'வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியும், சென்றிகன் முனையாதந்தன்று' என்ற பகுதிகளையும், அவற்றின் அடியிற் காணப்பெறும் உதாரணச் செய்யுட்களையும் காண்க. (பு. வெ. மா. வெட்சி. 1, 2). 'வானே நிலனே' ஏகாரம் எண்ணுப் பொருளில் வந்தது.

பி - ம். 1. செலவெய்துவ தென்னிலனல்; செலவென்னுவ னேவுதியேல், செல்......எய்தவவன், செல......எய்நுதலால்.

2. தானேயது நின்றுதடுப் பரிதாம், தானேர்வது நியதெனத் தணிவன், தானேவுதி நின்று தடுப்பரிதால். 3

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

இந்திரியத்தை யிகழ்ந்த வனந்தோ
மந்திர வெற்றி வழங்க வழங்கும்
இந்திர மற்றதெனக் கடிதீகொல்
வந்ததென் விற்றொழிலைக் கொலைமான.

வேறு

2342. அருந்துயர்க் கடலு ளாழு மம்மனை யழுத கண்ணள்
பெருந்திருக் கழித்த லாற்றுள் கணவனைக் கொன்று [பேர்ந்தோன்
கருந்தலைக் கலத்தி னல்லாற் கடனது கழியே னென்றுள்
பருந்தினுக் கினிய வேலா யின்னருள் பணித்தி யென்றான்.

'என் அம்மனை - என் தாய், அழுத கண்ணள் - புலம்பிய விழிகளை யுடையவளாய், அருதுயர் கடலுள் ஆழும் - (கடத்தற்கரிய)

துன்பத்தில் அமிழ்ந்திருக்கின்றாள்; கணவனை கொன்று பேர்ந் தோன் - புருடனைக் கொலை புரிந்து சென்றவனுடைய, கருதலை கலத்தின் அல்லால் - கரிய தலையாகிய பாத்திரத்திலே அல்லாமல், 'கடன் அது கழியேன்-இறந்தவனுக்கு ஆற்றவேண்டிய நீர்க்கடன் இக்கடன்களைச் செய்துதீரேன்' என்றாள்-என்றுகூறுவாளாய், பெரு திரு கழித்தல் ஆற்றாள் - (பெருமை சான்ற) திருமங்கலியத்தையும் நீக்கப் பொறாள்; பருந்தினுக்கு இனிய வேலாய் - (உணவளித் தலால்) பருந்துகளுக்கு இன்பம் செய்யும் வேற்படையை யுடைய வனே! இன்அருள் பணித்தி—நல்அருளுடன் என்னைப் (போருக் குச்) செல்லுமாறு கட்டளையிடுவாயாக', என்றான் - என்று வேண்டினான்.

அம்மனை - தாய்; பெருந்திருக் கழித்தல்: இதனைத் தாலி பெருக்குதல் என்று வழங்குவ. தொன்றுதொட்டுக் கணவனை இழந்தவர்கள், இறந்த பத்தா நாளில் செய்கின்ற ஓர் துக்ககரமான சடங்கு. 'மங்கல வணியை நீத்து' (கிட்கிந்தா. 603) என வருதல் காண்க. இல்வாழ்க்கையில் கணவனுக்கு உரியன செய்து நிற்றற் குப்பேர் அடையாளம் ஆதலின் பெருந்திரு எனப்பட்டது. இன்றும் திருமங்கலியம் தரிப்பதைத் திருப்பூட்டுதல் என்று வழங்குவார்; மகளிர் அணிகளுள் தலைசிறந்தது. இவ்வணியின் றேல் ஏனைய அணிகள் புனைதற்கில்லை. 'மங்கையர் கழுத்துக் கெல்லாம் தானணி யான போது தனக்கணியாது மாதோ' (பால. கோலங்: 7) என வருதல் காண்க. கருந்தலை-கரிய மயிருடன் கூடிய தலை; அரக்கர்க்குச் செம்பட்ட மயிராகலின் இங்கு வலிய தலை என்க. கருமை வன்மை என்று பொருள் தருவதைக் 'கருங்கைக் கொல்லன்' (புறநா. 21) என்ற இடத்துக் காண்க. பருந் தினுக்கினிய வேலாய்; பருந்துணப்பாட்டி யாக்கை படுத்த நாள்' (யுத்த. 944). என்றது காண்க. 'பாறு படுசிறகு கழுகு பகழி பட, நீறுபடுமிரத நிரையினுடறழுவி' (யுத்த. மூலபல. 164).

பி - ம். 1. கடலுளாழும்.

2. துறக்கலாற்றாள், கழித்திலாதாள்; பேர்ந்தார்.

3. தலத்தினல்லால், தரை வீழ்ந்தல்லால், களத்தினல்லால்; அருங்கடன் கழியேன்; கடன் கழியேனல்.

## இராவணன் அநுமதியளிக்க, மகரக்கண்ணன் பொருதற்குத் தேரேறுதல்

2343. அவ்வுரை மகரக் கண்ண
னறைதலு மரக்க னைய
செவ்விது சேறி சென்றுன்
பழம்பகை தீர்த்தி யென்றான்
வெவ்வழி யவனும் பெற்ற
விடையினன் றேர்மேற் கொண்டான்
வவ்விய வில்லன் போனான்
அமர்பெற்று வளர்ந்த தோளான்.

அவ்உரை - அந்த வார்த்தையை, மகரக் கண்ணன் அறைதலும் - மகரக்கண்ணன் பகர்ந்தவுடன், அரக்கன் - இராவணன், 'ஐய - ஐயனே ! செவ்விது - சிறந்தது ; சேறி - போர்க்குச் செல்க; சென்று உன் பழம் பகை தீர்த்தி - போய் உன் பழைய பகைமையை முடித்துக் கொள்வாயாக;' என்றான் - என்று சொன்னான்; வெம்வழி அவனும் - தீய வழியை மேற்கொண்டவனான அந்த மகரக் கண்ணனும்; பெற்றவிடையினன் - விடை பெற்றுக் கொண்டவனாகி, அமர் பெற்று - (தந்தையின் அநுமதியால்) போர் புரியும் வாய்ப்புப் பெற்று, வளர்ந்த தோளான் - வீங்கிய தோளையுடையவனும், வவ்விய வில்லன் - கைப்பற்றிய வில்லை யுடையவனுமாகி, தேர்மேல் கொண்டான் போனான் - தேர்மீது ஏறிச் சென்றான்.

செவ்விது : நல்ல காரியம் ; செல் + தி சேறி எனவரும். தந்தை முதற் பல பெயர்களையும் கொன்ற பகைவன் ஆதலின் பழம்பகை எனப்பட்டது. பெற்ற விடையினன், வவ்விய வில்லன் : வடமொழி நடை. வரம் : இங்கே அநுமதி. வெவ்வழி - தீயமார்க்கம்; யுத்த. இலங்கைகே. 13 ; நாகபாச. 227. அமர் பெற்று:'போரென்ன வீங்கும் பொருப்பன்ன தோள்' (பால. பூங்கொய் : 18); 'கிட்டிய தமரெனக் கிளர்ந்த தோளினன்' (கிட்கிந்தா).

பி - ம். 1. உரைத்தலும் ; அரக்கர் கோமான்.
2. செவ்வழி ; என்றான், இன்றான்.
4. வரம் பெற்று.

## மகரக்கண்ணன் தன்சேனையுடன் இராவணன் சேனையும் வரச்சொல்லுதல்

2344. தன்னுடைச் சேனை கோடி
யைந்துடன் றழுவத் தானை
மன்னுடைச் சேனை வெள்ளம்
நாலைந்து மழையிற் பொங்கிப்
பின்னுடைத் தாகப் பேரி
கடல்படப் பெயர்ந்த தூளி
பொன்னுடை புவனத் துச்சிக்
குச்சியும் புதையப் போனான்.

தன்னுடை சேனை - தன்னுடைய படை, ஐந்து கோடி உடன் தழுவ - ஐந்து கோடி உடன் அணைந்து வரவும், தானை மன்னுடை சேனை - தானை கொண்ட மன்னவனுடைய படை, நாலைந்து வெள்ளம் - இருபது வெள்ளம், மழையில் பொங்கி - மழைபோன்று பொங்கி, பின் உடைத்து ஆக - பின்பற்றி வரவும், பேரி கடல்பட - பேரிகை கடல் போன்று முழங்கவும், பெயர்ந்த தூளி - (அப்போது தரையினின்றும்) எழுந்த துகளால், புவனத்து பொன் உடை உச்சிக்கு உச்சியும் புதைய போனான் - புவனத்து அழகிய பூமுகட்டின் உச்சியும் மூடுமாறு சென்றான்.

இராவணன் ஆட்சியில் ஒவ்வொரு பெருவீரற்கும் தனித் தனிப் படை உண்டென்பது தன்னுடைத்தானை, மன்னுடைத் தானை என்று தனித்தனிக் கூறப்பட்டது கொண்டு உணரலாம். மழையில் பொங்கி: முழக்கத்தால் இடிமழை போன்று என்க. எழுந்த தூளியின் மிகுதி இறுதியடியாற் பெறப்படும்; (ஒப்பு): 'கதிகொண்ட சேனை நடவவெழுதுகள் ககனம் சுலாவி' (வி. பா. 16-ஆம் போர்75) என வருதல் காண்க. பொன்னுடைச் சிமையம்: மேருமலை; அதனுடைய மூன்று சிகரங்களில்ஒன்று திரிகூட மலையாதலின்; 'பொன்னுடைச் சிமயத்துச்சி எனப்பட்டது.'

பி - ம் 1. சேனை வெள்ளம்.
2. ஒரைந்து; மழைபோற்.
3. பேரிக்கடல்.
4. சிமையத் துச்சிக் குச்சியும்; போதிய.

2345. சோணிதக் கண்ண னேடுஞ் சிங்கனுந் துரகத் திண்டேர்த்
தாண்முதற் காவல் பூண்டு செல்கெனத் தக்க தென்னு
ஆண்முதற் ருனை யோடு மனைவரும் தொடரப் போனன்
நாண்முதற் றிங்க டன்னைத் தழுவிய வனைய நண்பான்.

'சோணிதம் கண்ணனேடும் - சோணிதாட்சனேடு, சிங்கனும்- சிங்கன் என்பவனும், துரகம் திண் தேர் - குதிரை பூட்டப்பெற்ற வலிய தேரினது, தாள் முதல் - சக்கரத்தின் பக்கத்தில், காவல் பூண்டு - காவலை மேற்கொண்டு, செல்க - செல்க', என - என்று, (இராவணன்) கட்டளையிட, 'தக்கது-பொருத்தமே', என்னு - என்று சம்மதித்து, ஆள் முதல் தானையோடும் - காலாள் முதலிய நால் வகைச்சேனையுடன், அனைவரும் தொடர-பலரும் பின்பற்றிச்செல்ல, நாள் முதல் திங்கள் தன்னை தழுவிய அனைய நண்பால்-நட்சத்திரம் முதலானவை சந்திரனைத் தழுவியதை ஒத்த நண்பினேடு, மகரக் கண்ணன், போனன் - சென்ருன்.

சோணிதம் : சிரோணிதம் என்ற வடசொல்லின் திரிபு. இரத் தம் போன்று சிவந்த கண்ணையுடையவன் என்று பொருள்படும். அரக்கர்க்குக்கண்கள் இயற்கையாகவே சிவப்பு நிறம். தாள் முதல்- சக்கரம். தேர்ச் சக்கரம் கெடாதபடி தேரின் இருபுறமும் காவல் காத்துச் செல்வது போர் மரபு. (ஒப்பு) பெரும்பாண் : 63 ; 'செல்க என' என்பது செல்கென என வந்தது. முந்துற்றுப் பொருபடை பதாதி என்ற காலாட் படையேயாகலின், ஆள் முதல் எனப் பட்டது. மகரக் கண்ணன் திங்கள், ஏனைய இருவரும் பலரும் நட்சத்திரங்கள் என்க.

பி - ம். 1. துரிதத், துருதத்.
3. ஆண்முகத், யாவரும், அனைவரும், வந்தார், வந்தான்.
4. தழுவிய மீனம், போன்ருர், நண்பர், நண்பான். 7

2346. பல்பெரும் பதாகைப் பத்தி மீமிசைத் தொடுத்த பந்தர்
செல்லவெங் கதிரொண் கற்றை முற்றவுந் [தெரியா வண்ணம்
தொல்வன யானை யங்கை விலாழிநீர்த் துவலை தூற்றச்
செல்வன கவியின் சேனை யமர்த்தொழிற் சிரமம் வீய்ந்த.

பல் பெரு பதாகை பத்தி - பலவான பெரிய பதாகை வரிசைகளாகிய, மீமிசை தொடுத்த பந்தர் - மிக்க உயர்ந்த இடத்துப் பந்தர், வெம் கதிர் ஒள்கற்றை - வெப்பமான கிரணங்களையுடைய கதிரவனது ஒள்ளிய கிரணத் தொகுதி, முற்றவும்-முழுவதும், தெரியாவண்ணம் - கண்ணுக்கு புலப்படாதபடி, செல்ல - செல்லவும், தொல் - பழமையான, வனயானை - காட்டு வேழங்களின், அம்கை - அழகிய கையினின்று, புறப்படுகின்ற, விலாழி நீர் துவலை- உமிழ் நீர்த்துளிகள் (எங்கும்), தூற்ற - எங்கும் துளிக்குமாறு, செல்வன - செல்வனவான அரக்கர் படையால், கவியின் சேனை அமர் தொழில் சிரமம் வீய்ந்த-குரக்குப் படையின் போர்த்தொழிற் களைப்பு மாறின.

பல் பெரும் பதாகைகள் பந்தர் போன்று நிழல் செய்தலின் கவியின் படை களைப்புத் தீர்ந்தன எனப்பட்டது. பதாகை : பெருங் கொடி. (யுத்த. முதற்போர். 16); பத்தி - வரிசை. ‘ நானுவித மணிப் பித்திப் பத்தி’ (சுந்தர.197); பந்தல்-பந்தர். ஈற்றுப்போலி. விலாழி: குதிரையின் வாய் நுரை என்பர். இங்கு உமிழ்நீர். வனம் - வனம் போன்ற பரந்த அரக்கர் சேனை. பதாகைப் பந்தல் நிழலியற்ற, யானை விலாழிநீர் குளிர்ச்சி செய்யக், குரக்குச் சேனை அயர்வாறிற்று என்க. அங்கை விலாழிநீர், வேழங்களின் கன்னகபோலங்களினின்று அழகிய துதிக்கை வழியாகப் பெருகும் மதநீர் எனினும் ஒன்றும். துவலை - நீர்த்துளி. ‘ துவலை மழை கரிய ’ (யுத்த. மூலபல. 159); சிரமம் - அயர்வு.

பி - ம். 1. பதாகைபற்றி, செற்றி.

2. ஒல்வன சுடரோன்கற்றை, முற்றவின் நிழலையித்த, முற்றவுந், தோற்ற வண்ணம், முற்றிய நிழலிய.

3. கொல்சின யானை, தொல்சின யானை, ஆழிநீர்த், தூற்றி சுற்ற.

4, செல்பெருஞ், தீர்ந்த. 8

2347. முழங்கின யானை வாசி யொலித்தன முரசின் பண்ணை
தழங்கின வயவ ரார்த்தா ரேன்பதோர் முறைமை தள்ள
வழங்கின பதலை யோதை யண்டத்தின் வாம்பின் காறும்
புழுங்கின வுயிர்க ளியாவுங் கால்புகப் புரையின் ருக.

'யானை முழங்கின - வேழங்கள் பிளிறின, வாசி ஒலித்தன - குதிரைகள் கனைத்தன, முரசின் பண்ணை தழங்கின - போர்முரசுகளின் தொகுதிகள் பேரொலி விளைத்தன, வயவர் ஆர்த்தார் - போர் வீரர்கள் ஆரவாரித்தார்கள்', என்பது ஓர் முறைமை தள்ள - என்கின்ற ஒருமுறை அடங்கும்படி, அண்டத்தின் வரம்பின் காறும் - அண்ட கோளத்தின் எல்லை வரையில், பதலை ஓதை வழங்கின - பதலை என்ற பறையின் ஓசை வழங்கின, (அதுகேட்டு) உயிர்கள் யாவும் - சீவராசிகள் அனைத்தும், கால்புக புரை இன்று ஆக - காற்று நுழைதற்கும் இடமின்றாக, புழுங்கின - வெம்பி வியர்த்தன,

யானை, குதிரை, காலாட்படைகள் கூறினர். தேர்ப்படை உபலக்கணத்தாற் கொள்க. பதலை - ஒருவகைப் பெரும் பறை. இதனை ஒரு கட்பறை என்பர். கால் - காற்று. ' கறங்கு கால்புகா' (சுந்தர. *118*).

பி - ம். 1. ஆனை, ஒலித்ததன், மொய்த்தன, முரசின் மும்மை.
2. ஆர்ப்பது, தன்ளி.
3. தழங்கின,. வரம்பு, தாறும், தானும்.
4. உயிர்கள் யாண்டும், இன்றுகி. 0

2348. வெய்தினி னுற்ற தானை முறைவிடா நூழில் வெம்போர்
செய்தன செருக்கிச் சென்று நெருக்கினர் தலைவர் சேர்ந்து
கையொடு கைகளுற்றுக் கலந்தன கல்லும் வில்லும்
எய்தன எறிந்த யானை ஈர்த்தன கோத்த சோரி.

வெய்தினின் உற்ற தானை - உக்கிரத்துடன் பொருந்திய (இராக்கதர்) படை, முறைவிடா - முறைவிடாமல், (ஓய்வின்றி), நூழில் வெம்போர் செய்தன - கொன்று குவித்தலையுடைய கடுமையான போரைப் புரிந்தன, தலைவர் செருக்கி சென்று - (இருதிறப் படைத் தலைவர்களும்) செருக்குடன் போய், சேர்ந்து நெருக்கினர் - ஒன்றாகச் சேர்ந்து அடர்த்தார்கள், (சேனைகள்), கையொடு கைகள் உற்று கலந்தன - கையொடு கைகள் பொருந்திக் கலந்தன, கல்லும் வில்லும் எய்தன எறிந்த - கல்லும் வில்லும் எய்தலும் வீசுதலும் செய்யப்பட்டன, கோத்த சோரி - (அப்போது) தொடர்ந்து பெருகிய உதிரம், யானை ஈர்த்தன - யானைகளையும் இழுத்துச் சென்றன.

நூழில் : கொன்று குவித்தல் என்ப. ‘ நூழில் செய்ய வாக்கிய செருவை நோக்கி ’ (யுத்த. 1988) ; நூழிலாட்டு : இது ஒரு புறப் பொருட்டுறை. ஒரு வீரன் பகைவருடைய சேனையைக் கெடும்படி தன் மார்பினைத் திறந்து வேலைப் பறித்து எறிதல் என்ப. (பு. வெ. 142) ; ‘ நூழிலாட்டி - கொன்று குவித்து. (சீவக. 762) ; (மதுரைக் காஞ்சி. 357, மலைபடு. 86, 87) சேர்ந்து நெருக்கினர் என்க. கல்லும் வில்லும் எய்தனவெறிந்த : எதிர் நிரனிறைப் பொருள் கொள்.

பி - ம். 1. விடநூழில். விடாநூழின்.

2. செய்தனர் செருக்கி, செருக்கில், நெருக்கின, செற்றிக், சாற்றிக், சேர்ந்தி.

3. கலந்தனர்.

4. எய்தன ரெறிந்தார், சோரி வெள்ளம். 10

2349. வானர வீரர்விட்ட மலைகளை
யரக்கர் வவ்வி
மீனொடு மேகஞ் சிந்த விசைத்தனர்
மீண்டும் வீசக்
கானகம் இடியுண் டென்னக் கவிக்குலம்
மடியுங் கவ்விப்
போனக நுகரும் பேய்கள் வாய்ப்புறம்
புடைப்பொ டார்ப்ப.

வானர வீரர் - குரக்கு வீரர்கள், விட்ட - வீசி எறிந்த, மலைகளை - மலைகளை, அரக்கர் - இராக்கதர்கள், வவ்வி - (தம் கரங்களால்) கவர்ந்து, மீனொடு மேகம் சிந்த - நட்சத்திரங்களுடன் மேகமும் சிதறுமாறு, மீண்டும் - திரும்பவும், விசைத்தனர் வீச - விரைந்தவராய் எறிய, (அதனால்), போனகம் கவ்வி நுகரும் பேய்கள் - (பிணங்களை) உணவாக வாயாற் கௌவித் துய்க்கும் பேய்க்கணங்கள், வாய்புறம் புடைப்பொடு ஆர்ப்ப - வாயின் புறத்திலே உணவு அடைக்கப்பெற்றதால் காணப்பட்ட புடைப்பொடு, ஆர்ப்ப - ஆரவாரிக்குமாறு, கவிகுலம் - குரங்குக் குழுக்கள், கானகம் - காட்டிடத்து, இடியுண்டு என்ன மடியும் - இடியினால் தாக்கப்பெற்றாற்போன்று மரித்து விழும்.

பேய்கள் மகிழ்ச்சிக் குரலுக்குக் காரணம் அவைகள் பெற்ற பேருணவு. குரங்குகள் அரக்கர்மீது எறிந்த மலைகளே பின்னர் அவற்றின் இறப்பிற்குக் காரணமாயின என்பது கூறப்பெற்றது. இடிஉண்ணுதல்: இடி விழப்பெறுதல், போனகம்: உணவு 'போனகத் தொழில் முற்றுதி போயென்றான்' (யுத்த. 1282): 'போனகந் துறந்த தையல்' (யுத்த. மீட்சி: 42); 'போனகமாக வமுது செய்யா விடிற் பூதலத்தே' (திருக்கருவை. கலித், அந்: 40). வாய்ப்புறம் அடக்கிக்கொண்டே பேய்கள் ஆர்த்தன எனப்பட்டது. அவற்றை விழுங்கும்போதே ஆரவாரிக்க வேண்டும் ஆர்வம் மிகுந்தமையின் சிலர் புடைப்பொடு ஆர்ப்ப எனப்பட்டது. இப்பொழுதும் சிலர் உண்ணும்போது வாயில் உணவிருக்கும்போதே பேச எழுவர்; அதுபோன்று என்க.

பி-ம். 1. விட்டு

2. இடிப்புண்டென்ன

3. மடியக்; புர. 11

2350. மைந்நிற வரக்கர் வன்கை வயிரவாள் வலியின் வாங்கி
மெய்ந்நிறத் தெறிந்து கொல்வர் வானர வீரர் வீரர்
கைந்நிறைத் தெடுத்த கல்லு மரனுந்தங் கரத்தின் வாங்கி
மொய்ந்நிறத் தெறிவ ரெற்றி முருக்குவ ரரக்கர் முன்பர்.

வானர வீரர்-குரக்கு வீரர்கள், மைநிறம் அரக்கர் வன்கை வயிரம்வாள் வலியின் வாங்கி-அஞ்சனமைபோன்ற நிறமுள்ள அரக்கரின் வலிய கையில் உள்ள வாட்படையை வலிந்து கைப்பற்றி, மெய் நிறத்து எறிந்து கொல்வர்-(அந்த இராக்கதருடைய) உடலின் மார்பிலே வீசியெறிந்து கொல்வார்கள்; அரக்கர் முன்பர்-அரக்கரில் வன்மை வாய்ந்தவர்கள், வீரர்-குரக்கு வீரர்களின், கை நிறைத்து எடுத்த-கரத்திலே நிறைய எடுத்த, கல்லும் மரனும்-கல்லையும் மரங்களையும், தம் கரத்தின் வாங்கி-தம் கையால் வாங்கி, (அந்த வானர வீரர்களின்), மொய் நிறத்து எறிவர்-வலியமார்பிலே வீசுவர்; எற்றி முருக்குவர்-மோதி அழிப்பர்.

முருக்குதல்: அழித்தல்: 'உடல் முருக்கியிட் டுண்குவென் என்றலும்' (யுத்த. மீட்சி: 33). முன்பர்: வலியர்; முன்பு: வலிமை.

பி - ம். 1. நிறத்து ; வன்மை, வண்மை ; உறையின்
2. கொல்ல ; விரக், தங்கள்
3. கைநிறந்து ; குன்றும்
4. எறிந்துபற்றி ; மொய்ம்பர். 12

## மகரக்கண்ணன் தன்தேரை இராமனிருக்குமிடம் நோக்கி ஓட்டுதல்

2351. வண்டுலா மலங்கன் மார்பன் மகரக்கண்
மழையே றென்னத்
திண்டிற லரக்கன் கொற்றப் பொற்றடஞ்
சில்லித் தேரைத்
தண்டலை மருத வைப்பிற் கங்கைநீர்
தழுவு நாட்டுக்
கொண்டன்மே லோட்டிச் சென்றான் குரக்கினப்
படையைக் கொன்றான்.

(இங்ஙனம் போர் நடைபெறுகையில்) வண்டு உலாம் அலங்கல் மார்பன் - வண்டுகள் சஞ்சரிக்கின்ற மாலையைத் தரித்த மார்பினை யுடையவனும், மகரம் கண்-மகரக்கண்ணையும், மழை ஏறு என்ன- இடியேற்றினை ஒத்த, திண் திறல் - மிக்கவன்மை படைத்தவனும், குரக்கு இனம் படையைக் கொன்றான் - வானரப் படைத்தொகுதி களைக் கொன்றவனுமான, அரக்கன் - இராக்கதன் (மகரக் கண்ணன்), (தன்னுடைய) கொற்றம் - வெற்றியமைந்த, பொன் தட சில்லி தேரை-பொன்னாலியன்ற பெரிய சக்கரம் உள்ள தேரினை, தண்டலை மருத வைப்பின்-சோலைகள் நிறைந்த மருத நிலத்தைத் தன்னகங்கொண்ட, கங்கை நீர் தழுவு நாட்டு கொண்டல் மேல் ஓட்டி சென்றான் - கங்கைப் புனல் பாயும்படியான மழைபோன்ற நிறமுள்ள இராமபிரான் மேல் ஓட்டிப்போனான்.

அலங்கல் : மாலை ; வண்டுகள் அதனை மொய்ப்பது அதனகத் துள் தேன் மாகந்தங்களைப் பருக என்க. மழை ஏறு - இடி ஏறு. தண்டலை : குளிர்ந்த இடம் ; சோலை என்ப. ‘தண்டலை மயில் களாட’ (பால. நாட்டு : 4); மருதம் : நானிலங்களில் ஒன்று.

வயலும் வயல் சார்ந்த இடம் என்பர். 'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும்படுமே' (தொல். அகத். 5). கங்கைநீர் தழுவும் நாட்டுக் கொண்டல்; பரதனுக் கென்று கோசல நாட்டை மனம் உவந்து இராமபிரான் அளித் தான் எனினும், பரதன் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை யாதலாலும், கோசல நாட்டில் மட்டுமன்றித் தன் மகனுக்கு அரசுரிமை விழைந்த கைகேசி பிறந்த நாடாகிய கேகய நாட்டினும் அரசுரிமை மூத்தவற்கே யாதல் பற்றியும், இராமபிரானை இங்ஙனம் கூறினர். 'வானோதாவுறு கோசல நாடுடை வள்ளல்' (யுத்த. 1210); என்றதும் காண்க. கேகய நாட்டிலும் அரசு, வங்கிசத் தில் மூத்தவர்க்கே உரியது என்பது 'மயிற் குலத்துரிமையை மநுமுதல் மரபை' (அயோத்தி. மந்தரை. 64); என்று கைகேசியின் கூற்றினாலேயே அறியலாம். மேலும் இராமபிரான் பரதனுடைய பிரதிநிதியாகவே வனத்திற்குச் சென்றதாக இராமபிரானே கூறு வதாக முதனூல் கூறும். கொண்டல்: உவமையாகுபெயர். இங்கு உருவினாலும் பண்பாலும் இராமபிரானுக்குவமை. 'அண்ட மிசைப் பொலிகொண்டல்' (மீனாட்சி பிள்ளைத். 8) என்று திருமால் கூறப்பெறுவது காண்க. 'கோதாவரியைச் சினங்கொண்டனன் கொண்டாலொப்பான்.

பி-ம். 1. உலா ; மரலை ; மகராக்கன் ; என்னும், அன்ன
3. தழுவ ; நாட்டார்
4. ஓடிச் ; பரப்பை ; கெபன்றே. 13

## இராமபிரானிடம் மகரக்கண்ணன் சொல்லத் தொடங்குதல்

2352. இந்திரன் பகைஞ னேகோ லென்பதோ
ரச்ச மெய்தித்
தந்திர மிரிந்து சிந்தப் படைப்பெருந்
தலைவர் தாக்கி
எந்திர மெறிந்த வென்ன வேவுண்டு
புரண்டா ரெய்திச்
சுந்தரத் தோளி னானை நோக்கிநின்
றினைய சொன்னான்.

'இந்திரன் பகைஞனே கொல் - இந்திரன் பகைவனேயோ (இந்திரசித்துத் தானோ)?' என்பது ஓர் அச்சம் எய்தி - என்பதாகிய ஒப்பற்ற அச்சம் அடைந்து, தந்திரம் இரிந்து சிந்த - வானர சேனை நிலைகுலைந்து சிதறவும், படைபெரு தலைவர் - (வானரப்) படைப் பெருந் தலைவர், எந்திரம் தாக்கி - எந்திரத்தால் தாக்கி, எறிந்த என்ன - எறியப்பட்டாற்போல, ஏ உண்டு புரண்டார் - அம்புகள்பட்டுப் புரளலானார்கள்; (மகரக்கண்ணனும்) சுந்தரம் தோளினானை - அழகிய தோள்களை உடையவனான இராமபிரானை, எய்தி - அடைந்து, நோக்கி நின்று இனைய சொன்னான் - (அவனைப் பார்த்து) பின்வரும் சொற்களைப் பகர்வானானான். இதனை அடுத்த கவியிற் காண்க.

இந்திரன் பகைஞன் - இந்திரசித்து; 'இந்திரன் பகைஞனு மிராமன் தம்பி, மந்திர வலியினால் மடிதல் வாய்மையால்' (யுத்த. 1301); தந்திரம்: சேனை; 'தந்திரக் கடலை நீந்தி' (யுத்த. 1333); 'தந்திரத் தலைவரோடுந் தமரொடும்' (யுத்த. மீட்சிப்: 352); எந்திரம் - விசைப்பொறி; 'எந்திரமனைய வாழ்க்கை யினிச் சில ருகந்தென்னென்றார்' (யுத்த. இந்திரசித்து. 46); 'எந்திரத்தடந் தேர்' (ஆரணிய. 542). கருப்பேந்திரம்: அயோத்தி. கங்கைப். 6. ஏவுண்டல்: வாளியால் தாக்கப்படுதல்; 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்று கூறப்படுதல் கொண்டு இராமபிரானுடைய தோளின் அழகை உணர்க. கொல்: ஐயப் பொருளில் வந்தது.

பி - ம். 1. கொல்லாம்.
2. அழிந்து.
3. எறிந்து, மறிந்த.
4. வில்லினனே.



## மகரக் கண்ணன் சூளுறவு

3253 என்னுடைத் தாதை தன்னை யின்னுயி ருண்டா யென்று
முன்னுடைத் தாய தீய முழுப்பகை மூவர்க் கின்றி
நின்விடத் தாய தன்றே யின்றது நிமிர்வ தென்றான்
பொன்னுடைத் தாதை வண்டு குடைந்துணும் பொலம்
[பொற் றூரான்.

பொன் உடை தாதை - பொன்னிறத்ததான மகரந்தத் தூளை வண்டு குடைந்து உணும் பொலம் பொன் தாரான் - வண்டுகள் துளைத்து உண்ணப்பெற்ற - மிகவும் அழகிய மாலையை அணிந்தவனாகிய மகரக் கண்ணன், (இராமபிரானை நோக்கி), 'என் உடை தாதை தன்னை இன் உயிர் உண்டாய் என்று - என்னுடைய தந்தையை இனிய உயிரைப் பருகினாய் என்பதனால், முன் உடைத்து ஆய தீய முழுப்பகை - முதற்கண் உண்டாகிய கொடிய பூர்ணமான விரோதம், மூவர்க்கு இன்றி - திரிமூர்த்திகளிடம் நிகழாமல், நின் இடத்து ஆயது அன்றே - உன்னிடம் உள்ளதன்றோ? அது இன்று நிமிர்வது - அந்தப் பகையைப் பொருது இன்று தலை நிமிர்ந்து நிற்பன், என்றான் - என்று புகன்றான்.

நான் பிரமன் திருமால் உருத்திரன் என்ற மூவரையும் வெல்லும் ஆற்றலுடையவன்; ஆயினும் அவர்களிடம் விரோதம் செய்யாது, உன்பாற் பகைமை கொண்டது, நீ என் தந்தையைக் கொன்றதனாலாகும் என்றான்; தந்தை : கரன்; அவனை இராமபிரான் வென்று கொன்றது; ஆரணிய. கரன் வதைப்படலத்துக் காண்க. முழுப்பகை : பரம்பரைப் பகையுமாம். மூவர் : படைத்தல் காத்தல் அழித்தல் தொழிலராகிய பிரமன் திருமால் உருத்திரன். பொலம் பொன் என்ற சொற்கள் பொன் என்றே பொருள்படும். 'பொலன் கொள்பாதம்' (யுத்த. 2150); நிமிர்தல் - ஆண்மை மாசுண்ட நிலையில் தலை நிமிர்ந்து ஏறுபோற் பீடு நடை கோடற்கில்லை. முதல்நாள் போரில் முறியுண்டு இராவணன் ஊர்க்குத் திரும்புங்கால் 'பூதலமென்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்கது' (யுத்த. 1213) முன்னர்க் குறிக்கப் பெற்றது.

பி - ம். 1. என்னும்.
2. மூவர்க்கன்றி.
3. நின்னுடைத்து,



## இராமபிரான் மகரக்கண்ணன் வார்த்தையைத் தக்கதே எனல்

2354. தீயவன் பகர்ந்த மாற்றஞ்
சேவகன் றெரியக் கேட்டான்
நீகரன் புதல்வன் கொல்லோ
நெடும்பகை நிமிர வந்தாய்

ஆயது கடனே யன்றோ
வான்பிறந் தமைந்தார்க் கைய
ஏயது சொன்ன யென்றா
னிசையினுக் கிசைந்த தோளான்.

இசையினுக்கு இசைந்த தோளான் - புகழ் தாங்குதற்குரிய புயவன்மையுள்ளவனும், சேவகன் - வீரனுமான இராமபிரான், தீயவன் பகர்ந்த மாற்றம் தெரிய கேட்டான் - கொடியவன் சொன்ன சொல்லை விளங்க கேட்டு, 'நெடுபகை நிமிர வந்தாய் - நெடிய பகையைத் தீர்க்க வந்தவனே! நீ கரன் புதல்வன் கொல் - நீ கரன் மகனோ? ஆண் பிறந்து அமைந்தார்க்கு ஆயது கடன் அன்றோ - வீரப்பான்மையுடன் பிறந்தவர்க்கு அங்ஙனம் பழிக்குப் பழி வாங்குவது கடமை யல்லவோ? ஏயது சொன்னாய் - பொருத்தமானதே கூறினாய்' என்றான் - என்று பகர்ந்தான். ஓ - வினா. ஏ - அசை.

மாற்றம் - சொல்; 'சொல்லுவ மதுர மாற்றம்' (யுத்த. 1625); ஆண் பிறந்தமைந்த: இச் செய்யுட் கருத்து; 'யுத்ததாதண்ட காரண்யே, பிதா ஹதவான்மம: மதக்ரதஸ்ஸ்வதர்ம ஸ்தம், திருஷ்டவாரோஷோபிவர்த்ததே' என்ற முதனூலிலும் காணலாம். 'இசையினுக்கிசைந்த தோளான்' 'தோன்றிற் புகழொடு தோன்றுக' (குறள். 236) என்றது காண்க.

பி - ம். 2. கொல்லாம், போலாம்.

3. ஆனது; அன்றே; திறன் மைந்தர்க்கெல்லாம்.



## மகரக்கண்ணனுக்கும் இராமபிரானுக்கும் போர் நிகழ்தல்

2355. உருமிடித் தென்ன வின்ன
னுலிபடுத் துன்னே டேய்ந்த
செருமுடித் தென்க ணின்ற
சினமுடித் தமைவெ னென்னக்
கருமுடித் தமைந்த மேகங்
கால்பிடித் தெழுந்த காலம்
பெருமுடிக் கிரியிற் பெய்யுந்
தாரைபோற் பகழி பெய்தான்.

'உரும் இடித்தன்ன - இடி இடித்தாற் போல, வில் நாண் ஒலி படுத்து - வில்லிலிருந்து குணத்வனியை எழுப்பி, உன்னோடு ஏய்ந்த - உன்னுடனே பொருந்திய, செரு முடித்து - போரினைச் செய்து முடித்து, என் கண் நின்ற சினம் முடித்து-என் மாட்டுள்ள சினத்தை ஒழித்து, அமைவென்-பின்னரே அமைதி பெறுவேன்', என்று - என்று பகர்ந்து, (மகரக் கண்ணன்) கருமுடித்து அமைந்த மேகம் - நீர்க் கருமை நிரம்பப் பெற்றுள்ள மேகம், எழுந்த காலம் - (விண்ணின் மீது) எழுந்த காலத்து, கால் பிடித்து - மழைக்கால் பற்றி, பெருமுடி கிரியில் - பெரிய சிகரங்களையுடைய மலைமீது, பெய்யும் தாரைபோல் - பொழியும் தாரைபோல், பகழி பெய்தான்-அம்புகளைச் சொரிந்தான்.

சினம் முடித்தல் - சினத்தைத் தீர்த்தல்; கால்பிடித்து-மழைக் கால் இறங்கி; 'மழைக்காலோதி பாலின் நிறமே பெறினும்' (தனிப். ஔவை). மூன்றுவது அடியாற் குறிக்கப்பட்டது சத்த மேகங்களும் காலிறங்கி ஒருசேரப் பொழியும் ஊழிக்காலம். இங்கு மலைச் சிகரம் இராமபிரானுக்குவமை. எத்துணை பெய்தாலும் மழை, மலைச் சிகரத்தினை என்ன செய்யக்கூடும். இராமபிரான் சலிப்பின்றி நின்றனன் என்பது கருத்து. கால்: காற்று எனினுமாம்.

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

அம்புயக் கண்ணன் கண்டத் தாயிரம் பகழி நாட்டித்
தம்பிதன் கவசமீதே யிரட்டிசா யாங்கள் தாக்கி
வெம்பிகல் அநுமன் மீதே வெங்கணை மாரி வித்தி
உம்பர்த முலக முற்றும் சரங்களாய் மூடி யுய்த்தான்.

பா - ம். 1. உன்னேடெந்தை.

2. முடிக்குவனின்று.

3. எழுந்த; கான்முடித்து, கார்பிடித்து.

4. கணைகள்.



2356. அம்புயக் கண்ணன் கண்டத் தாயிரம் பகழி நாட்டித்
தம்பிதன் கவச மீதே யிரட்டிச்சா யகங்கள் தாக்கி
வெம்பிக லனுமன் மீதே வெங்கணை மாரி வித்தி
உம்பர்த முலக முற்றுஞ் சரங்களாய் மூடி யுய்த்தான்.

(மகரக்கண்ணன்), அம்புயம் கண்ணன் கண்டத்து ஆயிரம் பகழி நாட்டி - செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களை யுடைய இராமபிரானது கழுத்தில் ஆயிரம் சரங்களை ஊன்றுமாறு விடுத்து, தம்பி தன் - (அவன்) தம்பியினுடைய, கவசம்மீது - கவசத்தின் மீது, இரட்டி சாயகங்கள் தாக்கி - இரண்டாயிரம் வாளிகள் கொண்டு எய்தும், வெம்பு இகல் அநுமன்மீது - பிறர் மனம் வெதும்புதற்குக் காரணமான வலிமையையுடைய அநுமன்மேல், வெம் கணை மாரி வித்தி - கொடிய அம்பு மழைகளை விதைத்தும், உம்பர் தம் உலகம் முற்றும் - வானவர்களின் உலகம் எல்லாம், சரங்களாய் மூடி உய்த்தான் - அம்பு மயமாகி மூடுமாறு, உய்த்தான் - செலுத்தினன். ஏ - அசை.

அம்புஜம் என்ற வடமொழி அம்புயம் என வந்தது; ஜலத்தில் உண்டாவது என்று பொருள்படும். இரட்டி: இருமடங்கு; 'அன்னதனை யறிந்தன்றோ வன்பிரட்டி கொண்டதுநான் அறிவிலேனே' (ஆரணிய. 351); ஆயிரத்தின் இரட்டி இரண்டாயிரம்; சாயகம் - அம்பு; 'தண்டு வாளயில் சக்கரம் சாயகம்' (யுத்த 104); 'சிலையின் முந்து சாயகக் கடுமையும்' (யுத்த. மீட்சி: 03); மாரனுக்குப் பஞ்ச சாயகன் என்று பெயர்.

இச் செய்யுள் பல பிரதிகளில் இல்லை.

2357. சொரிந்தன பகழி யெல்லாஞ்
சுடர்க்கடுங் கணைகள் தூவி
அரிந்தன னகற்றி மற்றை
யாண்டகை யலங்க லாகத்
தெரிந்தொரு பகழி பாய
வெய்தன னிராம னேவ
நெரிந்தெழு புருவத் தான்றன்
நிறத்துற்று நின்ற தன்றே.

சொரிந்தன பகழி எல்லாம் - (மகரக்கண்ணன்), பெய்த அம்புகள் அனைத்தும், சுடர் - ஒளியுள்ள, கடு கணைகள் தூவி - வெம்மையான அம்புகளை வாரியிறைத்து, அரிந்தனன் அகற்றி - துணித்துப் போக்கி, மற்றை - பின்பு, ஆண்தகை அலங்கல் ஆகத்து -

ஆண்மை செறிந்த அந்த மகரக்கண்ணனுடைய மாலை புனையப் பெற்ற மார்பிடத்து, ஒரு பகழி எரிந்து பாய - எரியுமாறு ஓர் அம்பினை, இராமன் எய்தனன் - இராமபிரான் விடுத்தான்; ஏவ - (அங்ஙனம்) விடுத்த அளவில், நெரிந்து எழு புருவத்தான் தன் - நெரிந்து எழுகின்ற புருவத்தினை யுடைய மகரக்கண்ணனுடைய மார்பில், நிறத்து உற்று நின்றது - (அந்த அம்பு அந்த அரக்கன்) மார்பில் தங்கி யிருந்தது. அன்று, ஏ - அசை.

நெரித்தல்: புருவத்தைச் சுருக்கி நிமிர்த்தல்; எரிந்து; எரிய என்று செய்ய என்னும் வாய்பாடாகக் கொள்க.

பி-ம். 2. அரிந்துகவசுற்றிமற்ற, அரிந்தன கைசுற்றி மாற்றி; அரக்கனது, ஆண்டவன்.
3. எரிந்ததோர் ஏவினன்.
4. நிறத்துற' 10

2358. ஏவுண்டு துளக்க மெய்தா
விரத்தகப் பரிதீ யீன்ற
பூவுண்ட கண்ணன் வாயிற்
புகையுண்ட துமிழ்வான் போல்வான்
தேவுண்ட கீர்த்தி யண்ணல்
திருவுண்ட கவசஞ் சேரத்
தூவுண்ட வயிர வாளி
யாயிரந் தூவி யார்த்தான்.

ஏ உண்டு - (இராமபிரானால்) அம்பு எய்யப்பெற்று, துளக்கம் எய்தா - அசைவு அடைந்து, இரத்தகம் பரிதி ஈன்ற - செந்நிற மான சூரியனைப் பெற்ற, பூ உண்ட - மலரை, (சூரியகாந்திப் பூவை)ப் போன்ற, கண்ணான் - விழிகளை யுடையவனும், உண்டது புகை - முன்பு உட்கொண்ட புகையினை, வாயில் உமிழ்வான் போல்வான் - வாயினால் உமிழ்கின்றவன் போல்பவனுமான மகரக்கண்ணன், தே உண்ட - தெய்வத் தன்மை செறிந்த, கீர்த்தி - புகழினைக் கொண்ட, அண்ணல் - பெருமையிற் சிறந்தவனான இராமபிரானுடைய, திரு உண்ட - அழகு வாய்ந்த, கவசம் சேர - கவசத்தைச் சேருமாறு, தூ உண்ட - ஊன் படியப் பெற்ற, வயிரம் வாளி ஆயிரம் தூவி ஆர்த்தான் - வச்சிரம் போல் உறுதியான ஆயிரம் அம்புகளை இறைத்து, ஆர்த்தான் - ஆரவாரித்தான்.

துளக்கம்; 'துளக்கமில் ஆற்றல் வீரர்' (யுத்த. பிரமாத்திர : 35); 'பூவுண்ட கண்ணன்' இங்கே உண்ட உவம வாசகம்; 'சேலுண்ட வுண்கணாரில் திரிகின்ற செங்காலன்னம்' (பால. நாட்டு : 13) என்ற இடத்துப் போல, தே : தெய்வத்தன்மை. பகைவர் உடலில் தோய்வதால் வாளி தூ உண்ட வாளி எனப்பட்டது.

பி - ம். 1. இலைத்தகைப், ஈர்த்நகைப்.

2. உமிழ்வ. 20

## இராமபிரான் மகரக்கண்ணனது வில் குதிரைக் குளம்புகள் சாரதியின் தலை இவற்றை அம்புகளாலறுத்தல்

2359. அன்னது கண்ட வானோ
ரதிசய முற்று ராழி
மன்னனு முறுவல் செய்து
வாயம்போ ராறு வாங்கிப்
பொன்னெடுந் தடந்தேர் பூண்ட
புரவியின் குரங்கள் போக்கி
வில்நடு வறுத்துப் பாகன்
தலையையு நிலத்து வீழ்த்தான்.

அன்னது கண்ட வானோர் அதிசயம் உற்றார் - அதனைக் கண்ணுற்ற அமரர் வியப்படைந்தனர்; ஆழி மன்னனும் - ஆணைச் சக்கரத்தையுடைய இராமபிரானும், முறுவல் செய்து - புன்னகை புரிந்து, வாய் அம்பு ஓர் ஆறு வாங்கி - கூர்மையான ஆறு சரங்களை எடுத்து, பொன் - அழகிய, நெடு தட தேர் பூண்ட - உயர்ந்த அகன்ற இரதத்திலே பூட்டப்பெற்ற, புரவியின் குரங்கள் போக்கி - குதிரைகளின் குளம்புகளை நீக்கி, வில் - (மகரக்கண்ணன் பிடித்திருந்த) வில்லினை, நடு அறுத்து - இடையிலே துணித்து, பாகன் தலையையும் நிலத்து வீழ்த்தான் - தேர்ப்பாகனுடைய சிரத்தையும் தரையில் தள்ளினான்.

அன்னது, மகரக்கண்ணன் ஆயிரம் அம்புகளை இறைத்தது. ஆழி - திருமாலின் பஞ்சாயுதங்களின் ஒன்றாகிய சுதரிசனமுமாம்; ஆழி சக்கவர்த்தித் திருமகன் ஆதலின் ஆணைச் சக்கரமும், திரு

மாலின் அமிசமாதலின் சதரிசனமும், தானான நிலையில் பெருமான் அறிதுயில் கொள்வது பற்றிக் கடலுமாம். முறுவல் - போர்க்களம் முறுவல் கொள்வது பெருமான் இயற்கை. 'செருக்களத்துற்ற போதும் சினவுண்மை தெரிந்ததில்லை' வாய் அம்பு - கூர்மையான சரம்; 'வாயம்பு மருமத்தெய்தல்' (கிட்கிந்தா. 312); குரம் - குதிரையின் ஒற்றைக் குளம்பு. பாகன் - தேர்ப்பாகன்.

பி - ம். 1. கண்டு.
2. எய்தி.
3. துரகதக், துரகத்தின், துரகங்கள். 21

## மகரக்கண்ணன் தவ வலிமை

2360. மார்பிடை நின்ற வாளி
வாயிடை வெயிலின் வாருஞ்
சோரியன் விசும்பி னூடோ
ரிமைப்பிடைத் தோன்று நின்றான்
காருரு மேறுங் காற்றுங்
கனலியுங் கடைநாள் வையம்
பேர்வுறு கால மென்னப்
பெருக்கினன் றவத்திற் பெற்றான்.

தவத்தில் பெற்றான் - தவத்தில் சித்தி பெற்றவனான அந்த மகரக்கண்ணன், மார்பிடை நின்ற வாளி - (தன் மார்பின்கண் தங்கிய சரத்தினால், வாயிடை - வாயிலிருந்து, வெயிலின வாரும் சோரியன் - வெயில்போன்ற நிறத்தோடும் பெருகுகின்ற உதிரத்தையுடையவனாய், ஓர் இமைப்பு இடை - ஓர் கண்ணிமைப் போதிற்குள்ளாக, விசும்பின் ஊடு - ஆகாயத்தில்,) தோன்று நின்றான் - காணப்படுபவனாய், கார் உரும் ஏறும் - மேகத்தில் உண்டான பேரிடியும், காற்றும் கனலியும் - காற்றும் நெருப்பும் என்ற இவற்றை, கடை நாள் - ஊழிக்காலத்தில், வையம் பேர்வுறு காலம் என்ன பெருக்கினன் - பூமி நிலைகுலையும் பேரூழிக்காலமே நேர்ந்ததோ என்னுமாறு, பெருக்கினான் - பெரிதும் உண்டு பண்ணினான்.

அம்பு மார்பிலே தைத்ததாக மார்பினின்று பெருகி வாய் வழியாக ஒழுகிற்று உதிரம் எனப்பட்டது. தோன்று நின்று - ஆநின்று நிகழ்கால இடைநிலை; இப்பொழுது வழக்கில் இல்லை. வையம் பேர்வுறுங் காலம் - பேரூழிக் காலம்; (ஒப்பு): 'பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு' (தேவா. 1199 : 7); 'வேண்டிய வேண்டி யாங் கெய்தலாற் செய்தவ, மீண்டு முயலப்படும்' (குறள். 265); ஆகலின் தவத்திற் பெற்றான் எனப்பட்டது.

பி - ம். 1. வெரிநின்.

2. சோரியின்; கண்டோர்; மறைந்து தோன்றான். 22

## மகரக்கண்ணன் செயலால் வாநரர்கள் நிலைகெட்டு ஓடுதல்

2361. உருமுறை யனந்தகோடி யுதிர்ந்தன வூழி நாளின்
இருமுறை காற்றுச் சீறி யெழுந்தது விரிந்த தெங்கும்
கருமுறை நிறைந்த மேகங் கான்றன கல்லின் மாரி
பொருமுறை மயங்கிச் சுற்று மிரியலிற் கவிகள் போன.

அனந்த கோடி உரும் முறை உதிர்ந்தன - எண்ணிறந்த கோடிக்கணக்கான இடிகள் முறையாக விழ்ந்தன; ஊழி நாளின் - கடையூழியிற்போன்று, முறை - முறையாக, இரு காற்று சீறி எழுந்தது எங்கும் விரிந்தது - பெருங்காற்று சீற்றத்துடன் கிளம்பி எல்லாப் பக்கங்களிலும் பரந்து வீசியது; கருமுறை நிறைந்த மேகம் - பெரிய நீர்த்துளிகள் நிறைந்த மேகம், கல்லின் மாரி கான்றன - கல் மழையைப் பெய்தன; கவிகள் - வாநரங்கள், பொருமுறை மயங்கி - பொருகின்ற பாணி மயங்கி, சுற்றும் இரியலில் போன - சுற்றிலும் நிலைகுலைந்து போயின.

அனந்தகோடி - வடசொற்றொடர்; இச் சொல்லை அடிக்கடிப் பயன்படுத்துவர் ஆசிரியர். 'மூல முலந்த வனந்தமே' (யுத்த. மூலபல: 129); 'ஐயிரு நூறுமல்ல வனந்தமா முகங்களம்மா' (மூலபல. 219). இருமை - பெருமை; 'இருந் தமிழே யுன்னாலிருந் தேன்' (டாக்டர், சாமிநாதையர் தனிப்பாடல்). கரும் உறை என்று பிரித்துக்கரிய நீர்த்துளி என்க; 'உறைகோடி ஒல்லாது

வானம் பெயல்' (குறள். 559); முறையாகக் கருநிறைந்த மேகம் எனினும் ஒன்றும்; முறையாகக் கருநிறைதலாவதை 'நெடுங் கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி, தானல்கா தாகிவிடின்' (குறள். 17) என்ற இடத்துக் காண்க. 'பகல் கான்றெழுதரு பல் கதிர்ப்பரிதி' (பெரும்பாண். 2); இந்த அடியின் குறிப்பில், 'கான்று என்றுமிடக்கர் அணி குறித்துப் பிறிதொரு பொருண் மேனிற்ற லின் மறைக்கப்படாது, தன் பொருள்மேல் நின்றுழி மறைக்கப் படும்' என்றது காண்க. கல்லின்மாரி - கல்லினாலாகிய மழை என்க. இரியல் - நிலைகுலைதல். (யுத்த. படைத்: 2299).

பி - ம். 2. காற்றும்; எழுந்தது; விழுந்த.
3. மேகமெங்கும்; கலந்தன, கலித்த.
4. சுற்றி. 23

## இராமபிரான் மகரக்கண்ணனுடைய ஆற்றற்குக் காரணம் கேட்க வீடணன் கூறுதல்

2362. போயின திசைக ளெங்கும்
புகையொடு நெருப்புப் போர்ப்பத்
தீயின மமையச் செல்லு
மாயமா மாரி சிந்த
ஆயிர கோடி மேலு
மவிந்தன கவிக ளையன்
மாயமோ வரமோ வென்றான்
வீடணன் வணங்கிச் சொல்வான்.

கவிகள் - குரங்குகள், போயின திசைகள் எங்கும் - (தாம்) ஓடிப்போன திக்குகளில் எல்லாம், புகையொடு நெருப்பு போர்ப்ப - புகையுடன் தீயும் கவிந்து கொள்ளவும், செல்லும் - மேகமும், தீ இனம் அமைய - நெருப்புத் தொகுதி தன்னிடம் பொருந்த, மாயம்மா மாரி சிந்த - மாயத் தன்மையுள்ள பெரிய மழையைப் பொழியவும், ஆயிரம் கோடி மேலும் அவிந்தன - ஆயிரம் கோடிக்கு மேலாக அழிந்தன; (அதுதனைக் கண்ணுற்ற) ஐயன் - இராம பிரான், 'மாயமோ - (இது) மாயத்தான் நிகழ்வதா? அல்லது (அரக்கன் மெய் யோத்தாற்றிய, வரமோ - வரத்தின் விளைவோ?' என்றான் - என்று கேட்க, வீடணன் வணங்கி சொல்வான் -

வீடணன் வணங்கிக் கூறுவான் ஆனான். அதனை அடுத்த கவியிற் காண்க.

செல் - மேகம்; 'தோள்கள் செல்லினைப் பழித்த வாளி' (யுத்த. மூலபல: 85); மாயமாம் மாரி எனினுமாம். அவிதல் - அழிதல்: 'ஐந்தவித்தானாற்றல்' (குறள். 25); 'அத்தனை வெள்ளமரக்கரவிந்தார்' (யுத்த. 2247),

பி - ம். 2. அனைய; கல்லின்மா.

4. சொல்வான். 24

**வீடணன் கூற இராமபிரான் இவற்றைப் போக்குவேனெனல்**

2363. நோற்றுடைத் தவத்தி னேன்மை
நோக்கினர் கருணை நோக்கிக்
காற்றுடைச் செல்வன் றானு
மழையுடைக் கடவு டானும்
மாற்றல ரீந்த தெய்வ
வரத்தினால் வந்த தென்றான்
நூற்றிதழ்க் கமலக் கண்ண
னகற்றுவெ னொடியி னென்றான்.

'காற்றுடை செல்வன் தானும் மழை உடை கடவுள் தானும் - வாயு தேவனும் வருண தேவனும், நோற்று உடை தவத்தின் நோன்மை - (இவன்) நோற்றுள்ள தவத்தின் வன்மையை, நோக்கினர் - ஆராய்ந்தவராய், கருணை நோக்கி - அருள் நோக்கம் கொண்டு, மாற்றலர் ஈந்த தெய்வ வரத்தினால் வந்தது - மறுக்க முடியாதவராய்த் தந்த தெய்வத் தன்மையுள்ள வரத்தினால், வந்தது - இது நிகழ்ந்துள்ளது' என்றான்-என்று வீடணன் சொன்னான்; (உடனே) நூறு இதழ் கமலம் கண்ணன் - நூறு இதழ்களையுடைய செந்தாமரை போன்ற கண்களையுடைய இராமபிரான், நொடியின் அகற்றுவென் - 'ஒரு மாத்திரை அளவில் (எல்லாவற்றையும்) அழித்துவிடுவேன்', என்றான் - என்று மொழிந்தான்.

நோற்றல்; 'தீவினை தீய நோற்றுத் தேவரிற் பெற்ற தென்றான்' (ஆரணிய. சூர்ப்ப: 260); காற்றுக்கிறையையும் மழைக் கடவுளான வருணனையும் கடவுளாகக் கூறுவது மரபு. மழையுடைக்

கடவுள் வருணன் ; 'வருணன் மேய பெருமண லுலகமும்' (தொல். அகத் : 5) என்பது காண்க. உயர்ந்தோர் தம்மினும் தாழ்ந் தோர்க்குத் தந்ததாகலின் 'ஈந்த' எனப்பட்டது. 'ஈதாகொடு' எனத் தொடங்கும் நன்னூல் சூத்திரம் காண்க. கமலக்கண்ணன்- இராமபிரான் ; 'ஒப்பதே முன்பு பின்பவ் வாசகம் உரைப்பக்கேட்ட, வப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்றதம்மா' (அயோத்தி. கைகேசி : 108).

பி - ம். 1. நோக்கக், நோக்கால்.

3. ஆற்றலாலிந்த, ஆற்றலிற்றிர்ந்தே ; அமைந்தது. 25

## இராமபிரான் வருணவாயுவாளிகளால் இடி முதலியவற்றைப் போக்குதல்

2364. காலவன் படையுந் தெய்வக்
கடலவன் படையுங் காலக்
கோலவன் சிலையிற் கோத்த
கொடுங்கணை யோடுங் கூட்டி
மேலவன் றுரத்த லோடும்
விசும்பினி னிரிந்து வெய்தின்
மாலிருங் கடலின் வீழ்ந்து
மறைந்தன மழையுங் காற்றும்.

மேலவன் - மேன்மை பெற்றவனாகிய இராமபிரான், காலவன்படையும் - காற்றுக்கதிதேவதையான வாயு தேவனுடைய வாளியும், தெய்வம் கடலவன் படையும்-கடல் தெய்வமாகிய வருண தேவனுடைய வாளியும், கால - வெளிப்படுமாறு, கோலம்வல் சிலையில்-அழகிய வலிய வில்லிடத்து, கோத்த கொடுகணையோடும் - தொடுத்த கொடிய அம்புடன், கூட்டி துரத்தலோடும் - கூட்டிச் செலுத்தியவுடனே, மழையும் காற்றும் - மழையும் காற்றும், பினின் இரிந்து - வானத்தினின்று, வெய்தின் இரிந்து - விரைந்து ஓடி, மால் இரு கடலின் - கரிய பெரிய கடலுள், மறைந்தன - வீழ்ந்துகரந்தன.

பி - ம். 1. கால்கொன்.

2. வெஞ்சிலையிற் ; கோத்துக்.

3. விசும்பினின்றெரிந்து, விசும்பினின்றிரிந்து. 26

## மகரக்கண்ணன் மாயையால் மறைந்துபொருதல்

2365. அத்துணை யரக்க னேக்கி
யந்தர வான மெல்லாம்
ஒத்ததன் னுருவே யாக்கித்
தான்மறைத் தொளித்துச் சூலப்
பத்திகள் கோடி கோடி
பரப்பின னதனைப் பார்த்த
வித்தக னொருவன் செய்த
வினையமென் னென்று சொன்னான்.

அத்துணை - அந்தத் தன்மையை, நோக்கி - பார்த்து, அரக்கன்ம - கரக்கண்ணன், அந்தர வானம் எல்லாம் - இடைவெளியாயுள்ள வானம் எல்லாம், ஒத்த தன் உருவே ஆக்கி - ஒத்த தன் உருவாக அமையுமாறு செய்து, தான் மறைந்து ஒளித்து - தான் மறைந்து ஒளித்து, சூலம் பத்திகள் - சூலவரிசைகளைக் கோடி கோடி பரப்பினன் - கோடிக் கணக்கில் நிறைத்தான்; அதனை பார்த்த - அதனைக் கண்ணுற்ற, வித்தகன் - பேரறிஞனை இராமபிரான், 'ஒருவன் செய்த வினையம் என் - ஒருவன் புரிந்த சூழ்ச்சி என்னே'! என்று சொன்னான் - என்று மொழிந்தான். இராமபிரான் கூறியதை இதனை அடுத்துள்ள கவியிற் காண்க.

வானமே தன்னுருவாகச் செய்து கொண்டு உண்மையுருவை மறைத்து மாயம் விளைத்துப் போர் செய்தமை பற்றி 'ஒருவன் செய்த வினையம் என்' என்று வியந்து கூறினன் இராமபிரான் என்க; 'வித்தகம் மறந்திலேன்யான்' (யுத்த. மீட்சி. 192); 'வித்தக னொருவன் சென்னி மிலைச்சிய தெனினும்' (யுத்த. திருமுடி. 40). வினையம் - சூழ்ச்சி; 'வினைய மீதல்லதில்லை விண்ணுநின் ஆட்சியாக்கி' (ஆரணிய. 274).

பி - ம். 1. அத்திறம்; அந்தரம்.
2. ஒந்தன; ஆகி; சூலம்.
3. பார்த்து.
4. செய்யும்.

### அதுகண்டு ஸ்ரீராமன் மனம்நோதல்

2366. மாயத்தால் வருத்தா னியாண்டும்
வரம்பிலா வுருவத் தானெத்
தேயத்தா னென்னு வண்ணங்
கரந்தனன் தெரிந்தி லாதான்
காயத்தா லினைய னென்று
நினையலாங் கருத்த னல்லன்
தீயொத்தான் றிறத்தி னென்னை
செயலெனச் சிந்தை நொந்தான்.

'மாயத்தால் - மாயையினால், வரம்பிலா உருவத்தான் - எல்லையில்லாத உருவத்தை, (மகரக்கண்ணன்) யாண்டும் வருத்தான் - எவ்விடத்தும் வருத்தவனாய், தான் எ தேயத்தான் - தான் எவ்விடத்துள்ளான், என்னு வண்ணம் - என்று அறிய முடியாதபடி, கரந்தனன் - ஒளிந்தான்; தெரிந்திலாதான் - (அவன்) கண்ணுக்குப் புலனாகாதுள்ளான்; காயத்தால் - உடலைக்கொண்டு, இனையன் - இத்தன்மையன், என்று - என, நினையலாம் கருத்தன் அல்லன் - நினையும் மன அறிவுக்கு உட்பட்டவன் அல்லன்; தீ ஒத்தான் திறத்தின் - நெருப்புப் போன்றவனான அந்த மகரக் கண்ணன் விஷயத்தில், செயல் என்னை - செய்ய வேண்டுவது யாது' என்று, சிந்தை நொந்தான் - மனக்கவலையால் வருந்தினன்.

யாண்டும்: 'யாண்டும் கழிப்பருங் கணக்கில் தீமை, வைகலும் புரிந்துளாரும்' (கிட்கிந்தா. 362); தேயத்தான் 'தேயத்தார் தேயம் சேறல்' (சுந்தர. 130). 'காயத்தாற் பெரியர் வீரம் கணக்கிலர்' (சுந்தர. 130). கருத்தன் அல்லன் - கருத்துக்குட்பட்டவன் அல்லன்.

பி - ம். 1. வரம்பிலா வுருவத்தானெத், வரம்பில்லா வுருவந்தானே.
2. என்று; தெரிந்திலானிக், தெரிந்திலாத
/ 3. காயத்தில்; இனையதென்று நீக்கலாங், இனையனென் நோக்கவாம்
4. தீயத்தான்; என்னே, ஒன்று; செய்தான்.

## இராமபிரான் மகரக்கண்ணனது உண்மையுருவை யநுமானித்துக் கணையால் வீழ்த்துதல்

2367. அம்பின்வா யாறு சோரு
மரக்கன்ற னருளில் யாக்கை
உம்பரிற் பரப்பித் தான்வே
றொளித்தன னென்ன வோர்வான்
செம்புனற் சுவடு நோக்கி
யதுநெறிசென்று தேவர்
தம்பிரான் பகழி தூண்டத்
தலையற்றுத் தலத்த னானன்.

'அம்பின் - (யான் விடுத்த) அம்பினால், வாய் ஆறு சோரும் - வாயினின்று (உதிர) ஆறு பெருகப் பெற்ற, அரக்கன் தன் அருளில் யாக்கை - அரக்கன் தன்னுடைய கருணை சிறிதும் இல்லாத உடலை, உம்பரில் பரப்பி - வானத்தில் விரித்தவனாய், தான் வேறு ஒளித்தனன் - தான் வேறாக ஒளிந்துள்ளானே' என்ன - ஓர்வான் - என்று உணர்கின்றவனாகி, தேவர் தம்பிரான் - தேவாதி தேவனான இராமபிரான், செம்புனல் சுவடு நோக்கி - ஓரிடத்தில் இரத்தம் சிந்தியிருந்தது கண்டு, அது நெறி சென்று - அந்த வழியே போய், பகழி தூண்ட - தன் அம்பினைச் செலுத்த, தலை யற்று தலத்தன் ஆனான் - தலை துணியப்பெற்று நிலத்தில் வீழ்ந்தான்.

அம்பின் வாய் ஆறு எனவே உதிரப்பெருக்கு என்க. 'இரக்க மென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்' (ஆரணிய. 129) ஆகலின் அருளில் யாக்கை எனப்பட்டது.

பி-ம். 1. அரக்கனதருளில், அரக்கன்றனளவில், ஆகத்தனளவிற்
2. பரந்தானக.
3. யிதுநெறியென்று.
4. தரையின் வீழ்ந்தான், தலத்தினானன்.

## அரக்கன் மரிக்க மாயை நீங்குதல்

2368. அயில்படைத் துருமிற் செல்லு
மம்பொடு மரக்கன் யாக்கை
புயல்படக் குருதி வீசிப்
படியிடைப் புரள்த லோடும்
வெயில்கெடுத் திருளை யீட்டுங்
காலத்தின் விளைவி னேடும்
துயில்கெடக் கனவு மாய்ந்தா
லொத்ததூஉ சூழ்ந்த மாயை.

அயில் படைத்து - கூர்மையுற்று, உருமில் செல்லும் அம்பொடு - இடிபோன்று விரைகின்ற வாளியுடன், (இராமபிரான் அம்பு விடுத்தவுடன்), அரக்கன யாக்கை புயல்பட - மகரக்கண்ணனுடைய உடல் புயலின் தன்மையைப் பொருந்த, குருதி வீசி - இரத்தத்தைக் கக்கிக்கொண்டு, படி இடை புரள்தலோடும் - தரையில் புரளத் தொடங்கிய போழ்தில், சூழ்ந்த - படர்ந்திருந்த மாயையானது, வெயில் கெடுத்து - வெயிலை அகற்றி, இருளை ஈட்டும் - இருளை மிகுதியாகக் கொண்டுள்ள, காலத்தின் விளைவினேடும் - இராப் போழ்தில் நிகழ்ச்சியுடனே, துயிலும் கெட - நித்திரையும் கெட்டு, கனவு மாய்ந்தால் ஒத்தது - கனவு நீங்குவது போன்றும் ஒழிந்தது.

படி - பூமி; 'படியின் மேல் விழுந்தான் பழி பார்க்கலான்' ஈட்டுதல் - மிகுதியாகச் சேர்த்தல். 'ஈட்டிய ஒண்பொருளை' (நாலடி. 280); 'ஈட்டிய வலியும் மேனுளியற்றிய தவமும்' (சுந்தர. 1118); மாய்தல் : மறைதல்.

பா - ம். 1. படுந்து, மடுத்து, ஆக்கை.
2. புயலுடைக் வீசப்.
3. வெயிலெடுத்து, படைத்து, விளைவையொத்த, விடிதலோடும்.
4. துயில்படக். ஒத்ததப், மாயம். 30

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

மற்றவ னிறத்த லோடும் மறைகளும் தேடிக் காணுக்
கொற்றவன் சரத்தின் மாரி கடையுக மழையின் கொள்ளப்
பற்றியங் கரக்கர் தானை வெள்ள மத்தனையும் பாரில்
அற்றவை யழிந்து சிந்த வறுத்தொரு கணத்தில் மாய்த்தான்.

## இரக்தாட்சனோடு நளன் பொருது அவன் தலையைத் தள்ளுதல்

2369. குருதியின் கண்ணன் வண்ணக்
கொடிநெடுந் தேரன் கோடைப்
பரிதியி னடுவட் டோன்றும்
பசுஞ்சுடர் மேகப் பண்பன்
எரிகணை சிந்திக் காலி
னெய்தினுன் றன்னோ டேற்ருன்
விரிகடற் றட்டான் கொல்லன்
வெஞ்சினத் தச்சன் வெய்யோன்.

வண்ணம் கொடி நெடு தேரன் - பல நிறக் கொடிகள் கட்டப் பெற்ற பெரிய தேரினையுடையவனும், கோடை பரிதியின் நடுவண் தோன்றும் பசும்சுடர் மேகம் பண்பன் - முதுவேனில் காலத்துக் கதிரவனிடத்தில் காணப்படும் பசிய ஒளியைக் கொண்ட மேகத்தின் தன்மையையுடையவனும் ஆகி, எரிகணை சிந்தி - நெருப்பைக் கக்கும் அம்புகளை இறைத்துக்கொண்டு, காலின் எய்தினன் தன்னோடு - காற்றையொப்ப விரைந்து வந்தவனை, குருதியின் கண்ணன் - இரத்தக்கண்ணன் எனும் சோணிதாட்சனுடன், விரிகடல் தட்டான் - பரந்த கடலைத் (அணைபோட்டு) தடுத்திட்டவனும், வெம் சினம் வெய்யோன் - கடுஞ்சினத்தினையுடைய கொடியவனாகிய நளன் என்னும், தச்சன் கொல்லன் - தச்சுத்தொழில் புரியும் நளன் என்பவன், ஏற்ருன் - எதிர்த்தான்.

குருதியின் கண்ணன்; ரக்தாட்சன் அல்லது சோணிதாக்ஷன் என்பதன் தமிழாக்கம். கோடைப் பருதியின் நடுவண் தோன்று பசுஞ்சுடர் மேகப் பண்பன்: ஓர் பொருத்தமான சிறந்த உவமை. மேகம் அரக்கன் என்ற கருநிறத்தினையும், பசுஞ்சுடர் கதிரிடைத் தோன்றும் குருதிக்கண்ணையும் குறித்து நின்றன. எரிகணை - அங்கி, அத்திரமுமாம். வேகத்திற்குக் காலினை உவமையாக்குவது மரபு. 'காற்று மன்ன கடுமையாய்' (சுந்தர.); இச்செய்யுளில் தட்டான் கொல்லன் தச்சன் என்ற பெயர்கள் நயம்பெற அமைந்துள்ளமை காண்க. தட்டல்: தட்டோரம்ம விவண் தட்டோரே' (புறநா. 18); தட்டான் - பொற்பணியாளன். கொல்லன் - இரும்புப் பணியாளன், தச்சன் - மரப் பணியாளன் என்ற வேறுபாடு காண்க. தட்டுதல்,

கொல்லுதல், தைத்தல் ஒன்ற தொழில்களில் யீடுபடும் பணியாளர் என்க.

பி - ம், 2. நடுவுட், பரஞ்சுடர் நயனப், பரஞ்சுடர் மேய,

3. கால்போலெதிர்ந்தவன். 31

2370. அன்றவ னுமவின்னு ணலங்கற்ரோ ளிலங்க வாங்கி
ஒன்றல பகழி மாரி யூழித்தீ யென்ன வுய்த்தான்
நின்றவ னெடிய தாங்கோர் தருவினு லகல நீக்கிச்
சென்றனன் கரியின் வாரிக் கெதிர்படர் சீய மன்னுன்.

அன்று - அத்தினத்தில், அவன் - அந்த அரக்கன், நாமம் வில் நாண் -(பகைவர்கட்குப்) பயம் விளைக்கின்ற வில்லின் நாணியை, அலங்கல் தோள் இலங்க வாங்கி - மாலையணிந்த தோள் என்னு மாறு வளைத்து, ஒன்றல - ஒன்றல்லாத (பலவான), பகழி மாரி - அம்பு மழையை) ஊழி தீ என உய்த்தான் - ஊழிக்காலத்துத் தீப் போன்று விடுத்தான், ஆங்கு நின்றவன் - அங்கே நின்றிருந் தவனுன நளன் எனனும் வாநர வீரன், நெடியது ஓர் தருவினுல் - நீண்ட ஓர் மரத்தினுல், அகல நீக்கி-(அவற்றை) அப்புறப்படுத்தி, கரியின் வாரிக்கு எதிர்படர் - யானை கட்டியிருக்கும் இடத்துக்கு எதிராகச் செல்லுகின்ற, சீயம் அன்னுன் - சிங்கத்தைப் போன்ற வன், சென்றனன் - போனுன்.

நாமம் - அச்சம். 'பேம்நாம் உருமென...... ஆவயின் நான்கும் அச்சக் கிளவி' (தொல். சொல். உரி 69); 'நாமத்திண் போர் முற்றிய' (யுத்த. வாநரர் களங். 14) ; வாரி : யானை கட்டும் தறி. சீயம் : சிங்கம் 'சிரித்ததோர் செங்கட் சீயம்' (யுத்த. 256); சீயம் தும்பியைத் தொடர் வதல்லாற் குரங்கினைத் தொடர்வதுண்டோ' (யுத்த. நிகும்பலை. 98)

பி - ம். 1. அன்றிடிபோலும், அவனுலும், குலுங்க.

3. கலக்கி, அடித்து.

4. பகழி மாரிக் கெதிர்படு, கரியின் வாரிக் கெதிர்பட்ட. 32

2371. கரத்தினிற் றிரியா நின்ற
மரத்தினைக் கண்ட மாகச்
சரத்தினிற் றுணித்து வீழ்த்த
தறுகணுன் றன்னை நோக்கி

உரத்தினைச் சுருக்கிப் பார்நின்
றோங்கினன் றன்னை யொப்பான்
சிரத்திலிற் குதித்தான் றேவர்
திசைமுகங் கிழிய வார்த்தார்.

கரத்தினில் திரியா நின்ற - கையிலே சுழல்கின்ற, மரத்தினை கண்டமாக - மரத்தைத் துண்டு படுமாறு, சரத்தினில் - அம்பினால், துணித்து வீழ்த்த - அறுத்துத் தள்ளிய; தறுகணன் தன்னை நோக்கி - அஞ்சாதவனான அரக்கனைப் பார்த்து; தன்னை ஒப்பான் - (வீரத்தில்) தன்னைத் தானே ஒப்பவனான நளன், உரத்தினை சுருக்கி - மார்பினை ஒடுக்கிக் கொண்டு, பார் நின்று ஓங்கினன் - பூமியில் நின்று உயர்ந்து, (அந்த அரக்கனுடைய) சிரத்தில் குதித்தான் - தலைமீது குதித்தான்; தேவர் திசை முகம் கிழிய ஆர்த்தார் - (அதுகண்டு) வானவர்கள் திக்குகளின் எல்லை கிழியும்படி ஆரவாரித்தார்கள்.

திரிதல் - சுழலுதல்; கண்டமாதல். 'கரமெனக் கரன் கண்ட முற்றனரோ.' (ஆரணிய. 646); 'தனுகண் மாகிருதர்' (யுத்த. மூலபல: 23) குரங்காதலின் பதுங்கிப் பாய்ந்தது என்க- ஓங்கினன் முற்றெச்சம்; ஓங்கிக் குதித்தான் என்க.

பா - ம். 1. கண்டமாக்கி.

3. உரத்தினிற் பாரின் ஒடுங்கினன்; மகுட மோங்கும், தன்னைத் தேரான்.

2372. எரியும்வெங் குன்றி னுப்ப
ரிந்திர வில்லிட் டென்னப்
பெரியவன் றலைமே னின்ற
பேரெழி லாளன் சோரி
சொரியவன் கண்ணின் மூக்கிற்
செவிகளின் மூளை தூங்க
நெறியவன் றலையைக் காலா
லுதைத்துமா நிலத்தி லிட்டான்.

எரியும் வெம்குன்றின் - எரிகின்ற கொடிய மலையின்மீது, உம்பர் இந்திர வில் இட்டு என்ன - விண்ணுலகத்தின் இந்திர வில்லை யிட்டாற்போன்று, பெரியவன்-பெருந் தோற்றமுள்ள அந்த அரக்கனுடைய, தலைமேல் நின்ற பேர் எழில் ஆளன் - தலைமேல்

நின்ற மிக்க அழகினையுடைய நளன், வன்கண்ணன் - வலிய கண்ணின் வழியாகவும், மூக்கின் செவிகளின் சோரி சொரிய - மூக்கு வழியாகவும் காதுகளின் வழியாகவும் உதிரம் வழிய, மூளை தூங்க - மூளை தொங்கும்படியாகவும், வன் தலையை - வலிய அந்த அரக்கனுடைய சிரத்தை, நெரிய - நுறுங்கும்படி, காலால் உதைத்து நிலத்தில் இட்டான் - காலால் உதைத்துத் தரையில் தள்ளினான்.

நளன் அந்த அரக்கன் சிரத்தின்மீது இருந்ததற்கு எரிகின்ற மலைமீது காணப்பட்ட உவமை. இந்திர வில் - மேக தனுசு; இதனை வானிடுவில் என்பர். (யுந்த. நாகபாச : 90); தூங்குதல் - தொங்குதல்; 'தூங்குசிறை வாவலுறை தொன்மரங்கள் என்ன' (சீவக. 498); 'தீஞ்சுவை நசைஇய தூங்குசிறை வாவல்' (பெருங். 1·52·71).

பி - ம். 1. எரியவன்; இந்திரன்.

3. வெங்கண்ணின்; தூங்கி. 34

2373. அங்கவ னுலத்த லோடு
மழற்கொழுந் தொழுகுங் கண்ணன்
சிங்கன்வெங் கணையன் வில்லன்
றாரணி தேரின் மேலான்
எங்கடா போதி யென்னு
வெய்தினெ னெதிரி லாத
பங்கமின் மேரு வாற்றற்
பனசன்வந் திடையிற் பாய்ந்தான்.

அங்கு - அப்போது, அவன் - அந்த அரக்கன், உலத்தலோடும் - மரித்தவுடன், அழல் கொழுந்து ஒழுகும் கண்ணன் - தீக்கொழுந்து வெளிப்படும் விழிகளையுடையவனாய், சிங்கன் - சிங்கனென்பவன், வெம்கணையன் - கொடிய வாளியை யுடையவனும், வில்லன் - வில்லினையுடையவனும், தார் அணி தேரின் மேலான் - கிண்கிணிகள் கட்டிய தேரின் மேலேறியவனுமாகி, 'எங்கடா போதி - எங்கடா போகின்றாய்,' என்னு - என்று (அதட்டிக் கொண்டே), எய்தினன் - வந்தான்; பங்கமில் - குற்றமற்ற, மேரு ஆற்றல் - மேருவைப் போன்ற திண்மை படைத்த, எதிர் இலாத - நிகரற்ற, பனசன் இடையில் வந்து பாய்ந்தான் - பனசன் என்ற வானர வீரன் நடுவே தாவிக் குதித்தான்.

பனசன் ; (யுத்த. 658) ; 'மூன்று கண்ணிலனுயினு மூன்றெயி லெரித்தோன் ; போன்று நின்றவன் பனசன்' (யுத்த. 830).

பி - ம். 1. உதைந்தலோடும்.

2. தாரணித்.

3. எய்தினன் தன்றேடெய்திப், தன்முனெய்திப். 35

2374. பாய்ந்தவன் றோளின் மார்பின்
பல்லங்க ணல்ல பண்போ
டேய்ந்தன வசனி போல
வையிரண் டழுந்த வெய்தான்
காய்ந்தனன் கனலி நெய்யாற்
கான்றது போலக் காந்தி
ஏய்ந்தெழு தேரி னேடு
மிமைப்பிடை யெடுத்துக் கொண்டான்.

பாய்ந்தவன் - பாய்ந்தவனான பனசனுடைய, தோளின் மார்பின் - தோளிலும் மார்பிலும், நல்ல பண்போடு ஏய்ந்தன பல்லங்கள் - நல்ல இயல்புடன் பொருந்திய பல்லம் என்னும் அம்புகள், ஐயிரண்டு - பத்தினை, (சிங்கன்), அசனிபோல - இடியொப்ப, அழுந்த எய்தான் - அழுந்தும்படி விடுத்தான் ; காய்ந்தனன் - வெகுண்டவனாகிய பனசன், கனலி - நெருப்பு, நெய்யாற் கனன்றது போல - நெய் சொரிவதால் (உக்கிரமாக) ஒளி விட்டெழுவது போல, காந்தி - கொதித்து, ஏய்ந்து எழு தேரினேடும் - பொருந்தி எழுந்து வருகின்ற தேரினுடன் (அவ்வரக்கனை), இமைப்பிடை - ஓர் கண்ணிமைப் பொழுதில், எடுத்துக்கொண்டான் - (கையில்) தூக்கிக்கொண்டான்.

பாய்ந்தவன் காய்ந்தனன் - வினையாலணையும் பெயர்கள். பல்லம் - ஒருவகை அம்பு ; (நாகபாச. 107) ; கனலி நெய்யாற் கனலுதல் ; 'காய் கனற்றலை நெய்சொரிந் தெனக்கதம் கனற்ற' (அயோத்தி. மந்தரை. 63).

பி - ம். 1. பார்ப்போடு.

2. ஆய்ந்தன ; என்ன ; எய்யக்.

3. காய்ந்தெழு, காய்ந்தெரி ; கனலின் ; நெய்யிற். 36

2375. தேரொடு மெடுத்த லோடு
நிலத்திடைக் குதித்த செங்கண்
மேருவிற் றோற்றத் தான்ற
னுச்சிமே லதனை வீசப்
பாரிடை விழுத லோடுந்
தானவ னும்பர் பாய்ச்
சோரியு முயிருஞ் சோரத்
துகைத்தனன் வயிரத் தோளான்.

தேரோடும் எடுத்தலோடும் - தேரொடும் (சிங்கனை) எடுத்த அளவில், செங்கண் - சிவந்த கண்களையும், மேருவின் தோற்றத் தான் தன் - மேரு மலைபோன்ற காட்சியை உடையவனுமான, நிலத்திடை குதித்த - பூமியில் குதித்த அந்தச் சிங்கனுடைய, உச்சிமேல் - தலைமீது, அதனை வீச - அந்தத் தேரை வீச, தானவன் - அவ்வரக்கன், பாரிடை விழுதலோடும் - பூமியில் வீழ்ந்த அளவில், உம்பர் பாய - மேலே பாய்ந்தவளவில், சோரியும் உயிரும் சோர - உதிரமும் உயிரும் தளரவும், வயிரம் தோளான் - வயிரம் போன்ற திண்மை வாய்ந்த அந்தப் பனசன், துகைத்தனன் - மிதித்துழக்கினன்.

தானவன் - சிங்கன், வயிரத்தோள். 'வயிரத்தோளை மெலிவித்தீர்' (யுத்த. 1577). சோர என்ற வினை உயிர் சோரி என்ற இரண்டிற்கும் அமைந்தது; சுந்தர. 332.

பி - ம். 1. குதிக்கச்; செம்பொன்.
2. விசிப்.
3. வீழ்ந்தலோடும்; அந்தரமவனும் பாய, மானவனம்பிற் பாய்ந்து, தானதன் மீது பாய்ந்து.



இங்கோர் அதிகப் பாடல்:—

மடித்தனன் சிங்க னென்னும்
மறந்தரு வயிரத் தோளான்
தொடர்ந்தன ரரக்கர் பின்னும்
தொடர்ந்தவர் தம்மை யெல்லாம்
கடந்தனர் கவியின் வீரர்
களத்திடைக் கணத்தின் மாய்த்தார்
நெடுந்திரைப் பரவை மீது
நிலைநந்தது குருதி நீத்தம்.

## அரக்கர் சேனையில் யாவரும் இறக்க, செய்தி சொல்லத் தூதர் இலங்கை சேர்தல்

2376. தராதல வேந்தன் மைந்தர் சரத்தினுங் கவியின் றானை
மராமர மலையென் றின்ன வழங்கவும் வளைந்த தானை
பராவருங் கோடி யைந்தும் வெள்ளநா லைந்தும் பட்ட
இராவணன் றூதர் போனார் படைக்கல மெடுத்தி லாதார்.

தராதல வேந்தன் மைந்தர் - சக்ரவர்த்தியின் திருக்குமாரர்களாகிய இராம இலக்குவரின், சரத்தினும் - வாளிகளாலும், கவியின் தானை - குரக்குப்படை, மராமரம் மலை என்று-மராமம் மலையென்று, இன்ன - இப்படிப்பட்டவற்றை, வழங்கவும் - கையாளுதலாலும், வளைந்ததானை - சூழ்ந்து நின்ற அரக்கர் படை, பராவு அரு- சொல்லற்கரிய, ஐந்து கோடியும் - ஐந்து கோடியும், நாலைந்து வெள்ளமும் - இருபது வெள்ளமும், பட்ட - இறந்து வீழ்ந்தன, படைக்கலம் எடுத்திலாதார் - போர்க் கருவிகளைத் தீண்டாது பிழைத்திருந்தவரான, இராவணன் தூதர் - இராவணன் தூதர்கள் போனார் - நிகழ்ந்தவற்றைச் சொல்லுதற்காக நகர்க்குச் சென்றனர்.

தராதலம் : 'தராதலத்திலுற்ற தமிழ்க் குற்றமெல்லாம்' (பால. பாயிரம்.); தராதல மகள் : (யுத்த. மீட்சி. 5); பராவரும் : 'பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும்' (அயோத்தி. மந்தரை. 47) படைக்கலம் எடுத்திலாதார் போனார் : எடுத்திருந்தால் அவர்களும் இறந்திருப்பார் என்பது குறிப்பு.

பி - ம். 1. மைந்தன்.
2. வழங்கலும், தானைப்.
3. வெள்ளம்பத்தும் ; பட்ட, பட்டிலாதார். 32

மகரக்கண்ணன் வதைப்படலம் முற்றும்

---

படைத்தலைவர் வதையில் மகரக்கண்ணன் வதையிலும் முதனூலுக்கும் கம்பர் காவியத்துக்கும் அதிக வேற்றுமையில்லை ; நராந்தகனை அங்கதனும், தேவாந்தகனை அநுமனும், மகோதரனை நீலனும், திரிசிரஸ்ஸை அநுமனும் கொல்கின்றனர். இவர்கள் வதையின் பின்னரே அதிகாயன்வதை முதனூலிற் கூறப்பட்டுள்ளது.

---

# செய்யுள் முதற் குறிப்பகராதி

## [ எண் — செய்யுள் எண் ]

ஏ

